அக்னிவேசரின்

# சரக ஸம்ஹிதை

## முதற் பகுதி



16

தமிழாக்கம்

எஸ்.என். ஸ்ரீராம தேசிகன்
கவுரவத் தனி அலுவலர்
மொழிபெயர்ப்பு (ஆயுர்வேதப்பிரிவு)
இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்

வெளியீடு
... மருத்துவம் மற்றும்
...பாபதி இயக்குநரகம்
...ருத்துவமனை, சென்னை-106

LB
N85·1
143281

அக்னிவேசரின்

# சரக ஸம்ஹிதை

முதற் பகுதி

தமிழாக்கம்

**எஸ். என். ஸ்ரீராமதேசிகன்**

கவுரவத் தனி அலுவலர்

மொழிபெயர்ப்பு (ஆயுர்வேதப் பிரிவு)

இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்குநரகம்




வெளியீடு :

**இந்திய மருத்துவம்**
மற்றும்
**ஓமியோபதி இயக்குநரகம்**

அண்ணா மருத்துவமனை, சென்னை-600 106

முதற்பதிப்பு — டிசம்பர், 1985
2000 பிரதிகள்


143281

பி. ஏ., எம். எஸ்.

ஆயுர்வேத பட்டப் படிப்பின்

நான்காம் ஆண்டு பாட நூல்

L B
N85.1

விலை : ரூ. 105-30

அச்சிட்டோர் :
டான்சி பிரஸ்,
தொழிற்பேட்டை,
கிண்டி, சென்னை-32.

புத்தகம் கிடைக்குமிடம் :
தமிழ்நாடு சித்த மருத்துவ வாரியம்,
அண்ணா மருத்துவ மனை வளாகம்
சென்னை-106.



இம்மொழி பெயர்ப்புப் பணியைத் துவக்கிவைத்து இந்நூல் வெளிவருவதற்கு மூலகாரணமாக இருந்து உதவிய கருணைக்கடல் புரட்சித்தலைவர் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் டாக்டர் எம்.ஜி.ஆர். அவர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**எஸ். என். ஸ்ரீராமதேசிகன்**

# முன்னுரை

## 1. ஆயுர்வேதத்தின் சிறப்பு

ஆயுளைப்பற்றியும் நீண்ட பிணியற்ற ஆயுளைப்பற்றியும் விளக்குவதால் இதற்கு ஆயுர்வேதமெனப் பெயர் வந்தது. பிணியைப் போக்குதல் ஆரோக்கிய நிலையில் உள்ளவர்கள் ஆரோக்கியத்தைக் காத்தல் என இவை ஆயுர்வேதத்தின் முக்கிய குறிக்கோளாகும். அதர்வவேதத்துடன் ஆயுர்வேதத்திற்கு நெருங்கிய தொடர்பு இருப்பதால் இதை அதர்வவேதத்தின் துணைவேதமென சரகர் சுச்ருதர் முதலிய ஆயுர்வேத ஆசாரியர்கள் கூறுகிறார்கள்.

காச்யபஸம்ஹிதையிலும் பிரம்மவைவர்த்த புராணத்திலும் ஆயுர்வேதம் ஐந்தாவது வேதமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. வேதம் என்ற சொல்லுக்கே ஆயுர்வேதம் என்றுதான் பொருள் என்ற அளவிற்கு ஆயுர்வேதத்தை உயர்த்துகிறார் ஓர் இடத்தில் ஸுச்ருதர். மந்திரம், தந்திரம், வேள்வி, தேவ பூஜை முதலிய சடங்குகளால் பிணிகளைத்தீர்த்த செய்தி வேதங்களில் குறிப்பிடப்பட்டுள்ளதாக இதுவரை அறிந்துள்ளோம். ஆனால் அதர்வ வேதத்தில் பிணி, அதைப் போக்கும் மூலிகைகள், அதைப்பயன்படுத்தும் முறை ஆகிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளதைப் பார்க்கும்போது மூலிகை மருந்துகளால் பிணிகளைப் போக்கும் ஆயுர்வேத மருத்துவ முறை வேதகாலத்திலேயே ஆரம்பமாகிவிட்டது என்பதை நம்மால் நன்கு உணர முடிகிறது. அதர்வவேதத்தில் மட்டுமின்றி எல்லா வேதங்களிலும் ஆயுர்வேதத்தின் செல்வாக்கு மலிந்து கிடப்பதை ஆராய்ச்சியாளர்கள் நன்கு உணர்வர்.

## 2. நான்கு வேதங்களிலும் ஆயுர்வேத செல்வாக்கு

### (அ) ரிக்வேதம்

வேதங்களில் அச்வினி குமாரர்கள் தேவமருத்துவர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர். ரிக் வேதத்தில் இவர்கள் ததீசி என்பவரின் தலையை வெட்டி அதற்குப்பதில் குதிரைத் தலையை ஒட்டி மறுபடியும் அதையும் நீக்கிப் பழைய தலையையே வைத்ததாகவும், ராஜகன்னிகையின் ஒடிந்த காலுக்குப் பதில் இரும்புக்காலை இணைத்துச் சரிசெய்ததாகவும், கட்சுவான் என்பவருக்குக் குருட்டுத் தன்மையையும், செவிட்டுத் தன்மையையும்

போக்கியதாகவும், பூஷா என்பவரின் உடைந்த பல்லை நீக்கிப் புதிதாகப் பல்லைக்கட்டிச் சரிசெய்ததாகவும், ச்யவனமகரிஷியின் முதுமையை நீக்கி இளமையையும் நீண்ட ஆயுளையும் அளித்ததாகவும், வத்ரிமதி என்பவருக்கு மலட்டுத் தன்மையை நீக்கி மகப்பேற்றை அளித்ததாகவும் வரலாறு காணப்படுகிறது. அதே ரிக் வேதத்தில் அபாலா என்பவரின் தோல் வியாதியையும், ஸ்ரோ்ணா என்பவருடைய நொண்டித்தனத்தையும், பராவ்ராஜா என்பவருடைய கண்பிணியையும் இந்திரன் போக்கியதாகச் செய்தி உள்ளது. இவையாவும் மந்திர தந்திர பலன்களன்றி, மருத்துவ முறையைக் கையாண்டு இச்சாதனைகளைப் புரிந்ததாகத்தான் நன்கு தெரியவருகிறது. ஏனெனில் பிணியைக்கூறி அதைப் போக்கும் மருந்தைக்கூறியிருப்பதால் மருத்துவம் செய்துதான் பிணியைத் தீர்த்தார்கள், அருளால்அல்ல என்பது நன்கு விளங்கவில்லையா! அங்கு அவ்விடங்களில் தங்கள் தவவலிமையால் இப்பிணிகளைப் போக்கியதாகக் காணவில்லை. இருந்தால் மற்ற இடங்களைப்போல் இங்கும் குறிப்பிடப் பட்டிருக்கும் அல்லவா? தவிர பிற பிராணிகளின் உருப்புகளைப்புகுத்திப் பிணியைப் போக்கும் **(Plastic Surgery)** என்ற விஞ்ஞான காலத்தில் செய்துவரும் மருத்துவம் ரிக்வேத காலத்தில் அச்வினி குமாரர்களால் முன்பே துவக்கிவைக்கப் பட்டது என்பதை அறியும் போது நவீன மருத்துவத்திற்கும் வேதம்தான் வழிகாட்டி என்று திட்டவட்டமாகக் கூறலாம்.

ரிக்வேதம், வாத பித்த கபம் எனப்படும் அடிப்படையான மூன்று தோஷங்களை ''திரிதாது'' என்ற சொல்லால் விளக்குவதைக் காணலாம். இந்த மூன்று தோஷம் என்ற முறை ஆயுர்வேதத்திற்கே உரியது. ஆகையால் இங்கு ''திரிதாது'' என்ற சொல் ஆயுர்வேதத்தைத்தான் குறிக்கிறது என்று உறுதியாகச் சொல்லலாம்.

### (ஆ) சுக்லயஜுர் வேதம்

சுக்லயஜுர் (தைத்திரீய ஸம்ஹிதா) வேதத்திலும் சில மருந்துகளைப்பயன்படுத்திக் குஷ்டம், இருதயரோகம் இவற்றைப் போக்குவதைக் குறிப்பிடுவதோடு பைத்தியம், காசம் போன்ற பிணிகளையும் மூன்று தோஷங்களையும் குறிப்பிடும் மந்திரங்களும் ஏராளமாக இருக்கின்றன.

### (இ) அதர்வ வேதம்

இதுதான் ஆயுர்வேத மருத்துவ முறை ஆரம்பமாவதற்கு மூலகரணம். இங்கு ஆயிரக்கணக்கான மந்திரங்கள் இதைப்

பறைசாற்றுகின்றன. இதில் பிணி, பிணியைப்போக்கும் மருந்துகள், மூலிகைகள், த்ரீதோஷ சித்தாந்தம், பிணிகளின் பெயர்கள், அவைகளின் உட்பிரிவுகள், அவைகளைப் போக்கும் மருந்துகள், உடல் உறுப்புக்கள், எட்டுவிதமான ஆயுர்வேதத்திற்கே தனித் தன்மையாக விளங்கும் மருத்துவ முறை ஆகியவைகள் வெகுவிஸ்தாரமாக விளக்கப்பட்டுள்ளன. சுருங்கச்சொல்னால் இவ்வேதம் ஆயுர்வேத மருத்துவமுறையை விளக்குவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்கலாம் என்று சொல்லத் தோன்றுகிறது.

## 3. வெளிநாடுகளில் ஆயுர்வேதம்

**கிரீஸ் (Greece) :-**

பல ஆயிரமாண்டுகளுக்கு முன்பே ஆயுர்வேத மருத்துவ முறை வெளிநாடுகளுக்குச் சென்று அங்கு அவர்களால் மதிக்கப் பட்டுக் கையாளப்பட்டும் வருகிறது என்பது காணக்கிடைக் கின்றது. சம்ஸ்கிருத இலக்கிய வரலாற்றை இயற்றிய கீரீத் **(Keite)** என்ற மேல்நாட்டவர், நம்நாட்டு ஆயுர்வேத முறைக்கும் அந்நாட்டில் இருந்த மருத்துவ முறைக்கும் உள்ள ஒற்றுமையை வெகுவாகக் குறிப்பிட்டிருக்கிறார். ஹிபாக்ரிடீஸ் **(Hippoprats)** என்ற கிரீஸ் நாட்டு மருத்துவர் எழுதிய மருத்துவ நூலைப்படித்தால் இரு நாட்டின் மருத்துவ முறையிலுள்ள ஒற்றுமை நன்கு புலனாகும். மூன்று தோஷம், பிணி, அதன் தோற்றம், அதற்குச் செய்யும் மருத்துவம் என இவைகளிலே இரு நாட்டு மருத்துவமுறைக்கும் உள்ள ஒற்றுமை நன்கு அங்கு விளக்கப்பட்டிருக்கிறது. சுச்ருதஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானம் 21-8ல் கூறப்பட்ட சந்திரன் கபத்திற்கும் சூரியன் பித்தத்திற்கும் வாயு வாதத்திற்குப் அதிபதிகள். இம் மூன்றினால் ஆக்கப்பட்டதுதான் உடல் என்ற கருத்தை கிரேக்க மருத்துவ நூலில் அப்படியே காணலாம். சரகர் சாரீரஸ்தானம் 2-31ல் மகாபூதம் நான்கு என்கிறார். சுச்ருதர் சாரீரஸ்தானம் 1-47ல் மகா பூதங்கள் ஐந்துஎன்கிறார். இந்தஐந்து பூதங்களைப் பற்றிய கருத்து வேற்றுமையை கீரீஸ் நாட்டு மருத்துவரும் அப்படியே ஏற்றுக்கொண்டுள்ளனர்.

*(1)* வாத பித்தகபங்களின் **சரியான**நிலைதான் ஆரோக்கியம். மாறுப்பட்டநிலைதான் பிணி. *(2)* மருந்து என்று ஆரோக்கியத் திற்காக மதுவைச் சிறிது அருந்தலாம். *(3)* பல் **வியா** திக்கும் பித்தம்தான் காரணம். *(4)* பருவ காலத்திற்கு ஏற்றவாறு பிணிகளின் ஏற்றத்தாழ்வு. *(5)* கண் அறுவைச்சிகிச்சை செய்

யும் பொழுது வலது கண்ணை இடது கையாலும் இடது கண்ணை வலது கையாலும் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும். இது போன்ற 36 விதமான மருத்துவ முறைகளில் ஆயுர்வேதத்திற்கும் கிரீஸ் நாட்டு வைத்தியத்திற்கும் உள்ள ஒற்றுமையை ஹிபாக்ரிடீஸ் என்பவர் விளக்கமாகக் கூறியுள்ளார்.

**சீனா (China) :-**

வேத காலம் தொடங்கி கலாசாரம் மருத்துவம் வாணிபம் இவற்றில் சீன நாட்டிற்கும் நமக்கும் ஒற்றுமை இருந்து வருவது சரித்திரம் அறிந்த உண்மை. பௌத்த மதப் பிரசாரத்திற்காக நம்மவர் சீனநாட்டிற்குச் சென்றது, நம்நாட்டுப்பல நூல்கள் அந்நாட்டில் பிரசாரத்தில் இருந்து வருவது, போன்ற உண்மைகளை சரித்திரம் பேசுகிறது. மகா பாரதத்தில் பட்டுத்துணி சீனாம் சுகம் (சீனப்பட்டு) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கௌடில்யரின் அர்த்தசாத்திரத்தில் சீன நாட்டிலிருந்து நம் நாட்டிற்கு வரும் பொருள்களுக்கு வரி விதிக்கும் முறை குறிப்பிடப்பட்டுள்ளது. இப்படி பல துறைகளில் அந்நாட்டுடன் ஒற்றுமை இருப்பது போல் மருத்துவ முறையிலும் ஒற்றுமை இருக்கிறது. ஆயிரக்கணக்கான ஜுரங்கள், நாடீபரீட்சை, பிணிகள், மஞ்சள், நெல்லிக்காய், சில மர இலைகள் என இவைகளைக் குறிப்பிடும் சீனநாட்டுப்பழமை நூலைப்பார்க்கும் போது இது நன்கு தெரிய வருகிறது. அத்துடன் சீனநாட்டிற்குச் செல்லும் பாதையில் காராசர் என்ற இடத்தில் கூர்ச்சபாஷா என்பது அங்குள்ளவர்களால் பேசப்பட்டு வருகிறது. அம்மொழியில் ஆயுர்வேத சொற்களுக்கும் அம்மொழியிலுள்ள சொற்களுக்கும் நூறு சதவிகிதம் உள்ள ஒற்றுமையைக் காணும் பொழுது அவ்வழியாகத்தான் ஆயுர்வேதம் சீனா சென்றிருக்க வேண்டும் என்றுசொல்லத் தோன்றுகிறது.

**ஈரான் (Iran) :-**

அந்நாட்டில் ஜண்டவெஸ்டா (Zendavesta) என்ற நான்கு பாகங்கள் கொண்ட மிகப்பழமையான நூலில் ஒரு பகுதி மருத்துவத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. அதில் சரமாவசீயன் என்ற ஒரு மருத்துவன் பிணிதீர தேவதையை வணங்கி சோம என்றொரு (தனது ஒளியால் ஆயிரக்கணக்கான மூலிகைகளைத் தரவல்ல) மூலிகையைப் பெற்றான். அது மூலிகைக்கு அரசன் என்று அங்கு பேசப்பட்டுள்ளது. அதே போல் சரகஸம்ஹிதை சிகிச்சாஸ்தானம் அத்தியாயம் ஒன்றில் சோமம் என்ற மூலிகை மூலிகைகளுக்கெல்லாம் அரசன். இது சந்திர ஒளியால் வளர்வதும் அது இல்லாதபோது குறைவதும்

வழக்கம்." என ஒரு பகுதி காணப்படுகிறது. இதனால் இரண்டு மருத்துவ முறைக்கும் உள்ள ஒற்றுமை நன்கு புலனாகிறது. அக்னி வழிபாடு, வேள்வி, சோமம் என்ற மூலிகையைப் புகழ்தல், அதை மூலிகைக்கு அரசன் எனக் கூறுவது, வேள்வியில் மூலிகைகளைப் பயன்படுத்தல் போன்ற பாரதீய மருத்துவப் பண்பாடு ஈரான் நாட்டு நூல்களிலும் அப்படியே பேசப் பட்டுப்பதைக் காணலாம்.

**தென்கிழக்கு ஆசியா (South East Asia) :-**

கம்போடியா, மலேஷியா, இந்தோனீஷியா, தாய்லாந்து, ஜாவா, சுமத்ரா முதலிய தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பல ஆயுர் வேத நூல்கள் அங்கே வட்டார மொழிகளில் மொழி பெயர்க்கப் பட்டு அச்சாகி வழக்கில் இருந்து வருகின்றன. அதே போல் பதினெட்டாவது நூற்றாண்டில் பர்மா பாஷையில் பழம்பெரும் ஆயுர்வேத முதல் நூலாகிய சுச்ருதம் மொழிபெயர்க்கப்பட்டு இம்மருத்துவமுறை அங்குள்ள மக்களைக் கவர்ந்துள்ளது குறிப் பிடத்தக்கது. இந்தியாவுடன் பல துறைகளில் தொடர்பு கொண்ட பர்மா ஆயுர்வேத மருத்துவத் துறையிலும் தொடர்புகொண்டிருப்பது தனிப்பெரும் சிறப்பு ஆகும். சுருங்கச் சொன்னால் நம்நாட்டை விட அங்குதான் மக்கள் ஆதரவும் முன்னேற்றமும் ஆயுர்வேதத்திற்கு இருந்துவருவது தெரியவருகிறது. நம் நாட்டில்இந்நூல் தமிழில் வெளிவருவதற்கு இதுவே முதல் முயற்சியாகும்.

**இலங்கை (Ceylon) :-**

பௌத்தவிகாரங்களில் ஆயுர்வேதம் தழைத்து ஓங்குவ தோடு அங்குள்ள புத்தபிக்ஷுகள் ஆயுர்வேத மருத்துவர்களாகவும் இருந்து வருகிறார்கள். இந்திய மருத்துவக்கல்லூரி கொழும்பு வில் அமைக்கப்பட்டு ஆயுர்வேதம், யூனானி, சித்தம் இவை கற்பிக்கப்பட்டு வருகின்றன. ஒரு அரசாங்கமே ஆயுர்வேதக் கல்லூரியை நடத்தி வருவதோடு பண்டாரநாயகா நினைவு ஆயுர்வேத ஆராய்ச்சிக் கூடம் ஒன்று அமைக்கப்பட்டிருப்பது அந் நாட்டில் அதற்குள்ள பெருமையையும் மக்களுடைய ஆதரவையும் எடுத்துக்காட்டுகிறது.

**நேபால் (Nepal) :-**

காட்மாண்டுவில் அரசாங்க ஆயுர்வேதக் கல்லூரி ஒன்றை அரசாங்கமே நிறுவி ஆயுர்வேதத்தை வளர்க்க முன்வந்துள்ளது. குருபரம்பரையாக அங்கு ஆயுர்வேதம் கற்பிக்கப்படுவதுடன் அங்

குள்ளமருத்துவர்கள் நமது நாட்டிலுள்ள மருத்துவர்களோடு தொடர்பு கொண்டு இம்முறையை வளர்த்து வருகிறார்கள்.

**திபெத்து (Tibet) :-**

இந்நாட்டில் கேஞ்ஜூர்தேஞ்ஜூர் என்ற இடங்களில் அந் நாட்டுமொழியில் மொழி பெயர்க்கப்பட்ட ஆயுர்வேத நூல்களில் அஷ்டாங்க ஹ்ருதயம் என்ற ஆயுர்வேத நூலின் வைடூரியம் என்ற உரையும் ஒன்றாகும். இங்கு நாகார்ஜூனன் எழுதிய பல ஆயுர்வேத நூல்கள் கிடைத்ததோடு அங்குள்ள மாணவர்கள் வாரணாசிக்கு வந்து கல்லூரியில் சேர்ந்து படித்து வருவதன் மூலம் இந்நாட்டு மருத்துவம் அங்கு செல்ல ஒரு வாய்ப்பு ஏற்பட்டு இருக்கிறதாகத் தெரிகிறது.

## 4. புத்தர் காலத்தில் புத்தர் கையாண்ட (பஞ்சகர்மா) ஆயுர்வேத முறை:-

வாந்திக்கும் பேதிக்கும் மருந்து உட்கொள்வது, மூக்கில் மருந்திடுதல், ஆசனவாய் வழியாக எண்ணெய் கஷாயங்களை உள்ளே செலுத்துதல், உடலிலுள்ள கெட்ட இரத்தங்களை கீரியோ அல்லது அட்டையைக் கொண்டோ எடுத்தல் என ஐவகைச் செயல்களால் வயிறு தலை உடலிலுள்ள எல்லாப் பகுதிகளி லிருந்தும் மலங்களை வெளிப்படுத்தித் தூய்மையாக்கும் (பஞ்சகர்மா) என்ற இம்மருத்துவ முறை ஆயுர்வேதத்தில் மிகமிக முக்கியமானது. வமனம், விரேசனம், நஸ்யம், வஸ்தி, ரக்தமோக்ஷணம் என்ற இந்த ஐவகையான முக்கியமான பஞ்சகர்மாக்களை பயன்படுத்துவதற்கு முன் உடலில் பல வழி களால் வியர்வை வரவழைத்தல் உடலில் எண்ணெய்பூசி எண்ணெய்ப்பசை உண்டாக்குதல் என்ற (ஸ்வேதம், ஸ்நேகம்) எனும் இருதுணைச் செயல்களையும் முன் கூட்டிச் செய்விக்க வேண்டும். இதன்பின் பஞ்சகர்ம முறை செய்வது வழக்கம். இவைகளைப் பயன்படுத்தி மருந்தின்றியே எல்லாப் பிணி களையும் போக்கிவிடலாம் என்பது ஆயுர்வேதத்தின் அடிப் படையான சித்தாந்தம். எல்லா ஆயுர்வேத நூல்களும் இதையே பறைசாற்றுகின்றன. மற்றவர்களைவிட சரகர் என்பவர் இதை விஸ்தாரமாக வெகு விரிவாக விளக்கி இதன்பல முறைகளையும் பலயுக்திகளையும் தனது நூலில் அலசி ஆராய்ந் திருக்கிறார்.

புத்தர்காலத்தில் இந்த பஞ்சகர்ம முறையால் புத்தபகவான் மற்றவர் பிணிபோக்க அவர்களுக்கு இதை எடுத்துரைத்ததோடு

தானும் இம்முறையைக் கையாண்டு பிணி நீங்கி பயன்பெற்றார் என "வினயபிடகா" என்னும் பௌத்த நூலால் அறியவருகிறது. இந்நூலில் வாத நோயால் துன்புறும் விளிந்தவாசன் என்பவருக்கு வியர்வையை உண்டாக்கும் சிகிச்சையைக்கூறி அவருடைய பிணியைத் தீர்த்து வைத்ததாக ஒரு கதையுள்ளது. இதே நூலில் வியர்வையுண்டாக்கும் ஸ்வேதகர்மா நான்கு விதமாகப் பிரிக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளது.

1. பூமியில் பள்ளம் தோண்டி அதில் நெருப்பினால் சூடாக்கித் தணலை நீக்கியபின் மணல், தழை ஆகியவற்றால் நிரப்பி எண்ணெய் பூசிய நோயாளியை இருக்கச் செய்து வியர்வையை வரவழைத்தல்.

2. வியர்வை வரவழைக்கக் கூடிய இலைகளில் நோயாளியைப் படுக்க வைத்தல்.

3. வெந்நீர்த் தொட்டியில் நோயாளியைக் குளிக்கச் செய்து வியர்வையை வரவழைத்தல்.

4. இலைக்கஷாயம் செய்து வியர்வை வரவழைத்தல் என, புகை நிறைந்த ஒரு அறையில் நோயாளியை இருக்கச் செய்து அதன் மூலம் வியர்வை வரவழைப்பதைக்கூறும் ஜேந்தாகஸ்வேதம் என்ற ஐந்தாவது வியர்வை முறையும் இங்கு கூறப்பட்டுள்ளது. இதே ஜேந்தாகஸ்வேதம் என்ற பெயரில் சரகர் தனது நூலில் கையாண்டிருக்கிறார். வாதரக்தநோயினால் துன்புரும் விளிந்தவாசனுக்குப் புத்தபகவான் கொம்பின் உதவியால் உடலிலிருந்து ரத்தத்தைக் கீரி வெளியேற்றும் ரத்தமோட்சணம் என்ற செயலை உபதேசித்த செய்தி ஒன்று இதேநூலில் காணப்படுகிறது. புத்தர்காலத்தில் நடந்த பல கதைகளைக்கூறும் "வைத்திய ஜீவகன்" என்ற நூலில் சாகேத நகரில் வாழ்ந்த செட்டியின் மனைவியின் தலைவலியை மூக்கில் நெய்யை மருந்தாக ஏற்றும் நஸ்யம் என்ற செயலால்போக்கினான் என்றும், பிரத்யோதன் என்ற உஜ்ஜயினி அரசனுக்கு நெய்யைப் பருகக் கொடுத்து வாந்தி எடுக்கச் செய்ததாகவும், அதேபோல் மன்னனது வேலைக்காரனுக்குமருந்துப் பொருள்களால் தயாரித்த கஷாயத்தைக் கொடுத்து வாந்தியெடுக்கச் செய்ததாகவும், இம்மாதிரி பற்பல கதைகள் கூறப்படுகின்றன. தலையிலுள்ள தோஷங்களை வெளிக்கொணர புத்தபகவானுக்கு ஜீவகன் என்றவன் மூக்கு வழியாக மருந்தைச் செலுத்தி வலியைப் போக்கியதாக இதே நூலில் உள்ளது. எனவே அக்காலத்தில் புத்த

பகவான் இந்த பஞ்சகர்மா என்னும் ஆயுர்வேத முறையைப் பிணிதீரத் தானும் கையாண்டு மற்றவருக்கும் எடுத்துரைத்தார் என்று புலனாகிறது. ஆயுர்வேத வைத்தியம் புத்தரையே கவர்ந்து விட்டது புத்த காலத்தில் பிரபலமாயிருந்த ஜீவகன் கதைகள் பிறகு சிலகாலம் மக்களிடையே நிலவி வந்திருக்கின்றன

## 5. ஆயுர்வேதம் தோன்றிய முறை

பிரம்மா லக்ஷம் சுலோகங்களைக்கொண்ட ஆயுர்வேத சாத்திரத்தை முதலில் இயற்றி தக்ஷப்பிரஜாபதிக்குஉபதேசித்தார். அவர் அச்வினீ குமாரர்களுக்கும் அவர்கள் இந்திரனுக்கும் உப தேசித்தனர். முறையே தேவலோகத்தில் விளங்கி வந்த ஆயுர்வேத சாத்திரத்தை பூலோக மக்களிடையேயும் பரப்பி அதன் மூலம் பிணியைப்போக்க வேண்டும் என்ற கருத்தோடு வசிஷ்டாதி முனிவர்கள் ஒன்று கூடி சிந்திக்கலாயினர். அதே சமயம் இந்திரனும் பூலோகத்திலுள்ள மக்களுக்கு இதைக் கிடைக்கு மாறு செய்து உதவ எண்ணினான். அவ்வாறு எண்ணங்கொண்ட இந்திரனிடம் அதே எண்ணத்தோடு வசிஷ்டாதி முனிவர்கள் பரத்வாஜர் என்பவரை அச்சாத்திரத்தைக் கற்றுவர அனுப் பினார்கள். தன்னை அணுகிய அம்முனிவருக்கு இந்திரன் பிணிக்குக் காரணம், பிணியின் இலக்கணம், பிணிதீர்க்க மருத்துவம் என்ற மூன்று பிரிவுகளைக் கொண்ட ஆயுர்வேத சாத்திரத்தைக் கற்பித்தார். கற்ற பரத்வாஜர் பூவுலகிற்கு வந்து ஆத்திரேய ஆங்கிரஸாதி முனிவர்களுக்கு உபதேசித்த தருளினார். அதைக் கற்றவர்களுள் ஒருவரான ஆத்திரேய புனர்வசு என்பவர் அக்னிவேசர்முதலான ஆறு மாணாக்கர் களுக்குக் கற்பிக்க, அதைக்கற்ற அக்னிவேசர் என்பவர் சுதந்திர மாக மருந்துமூலம் பிணியைப் போக்கும்உடல் மருத்துவத்தை முக்கியமாக எடுத்துக்கூறும் ஒரு சிறந்த நூலை ''அக்னிவேச ஸம்ஹிதை'' என்ற பெயரில் எட்டு ஸ்தானங்கள் கொண்டதாகச் செய்து முடித்தார். பின்னால் வந்த சரகர் என்பவர் இந் நூலிலிருந்து சிலவற்றை நீக்கியும் சிலவற்றைப்புகுத்தியும் புதிப்பித்த பிறகு இந்நூல் சரகஸம்ஹிதை என அவர் பெயராலேயே வழங்கப்பட்டு வருகிறது. சிகிச்சாஸ்தானத்தில் 17 அத்தியாயங்களும் கடைசியதான கல்பம் சித்தி என்ற இரண்டு ஸ்தானங்களும் கால வெள்ளத்தில் காணாமல் போக பிற்காலத்தில் த்ருடபலர் என்பவர் அப்பகுதிகளை (காணமற் போனவற்றை) இயற்றி இந்தச் சரகஸம்ஹிதை என்ற நூலுக்கு நிறைவு தந்து அதற்குப்பூரண உருவத்தை வடித்து தந்தார்.

பரத்வாஜர், ஆத்ரேயபுனர்வசு, சரகர், அக்னிவேசர், த்ருடபலர் என முறையே இவர்கள் ஐவருக்கும் இந்நூலில்பங்குஉண்டு. இந்த ஐவரின் கூட்டு முயற்சியால் உருவாக்கப்பட்ட பொக்கிஷம் இது.

## 6. ஆசிரியர்களின் காலம்

பரத்வாஜர் பிரம்மாவினுடைய கொள்பேரன், பிரம்மா வினுடைய மானஸபுத்திராகிய அத்ரியின் மகன் ஆத்ரேயர் என்பவர் என வரலாறு கூறுகிறது. புனர்வசு நக்ஷத்திரத்தில் தோன்றியபடியால் அவருடைய பெயர் ஆத்ரேய புனர்வசு என ஆயிற்று, வடமொழி இலக்கணக்கர்த்தாவாகிய பாணினி யினுடைய அஷ்டாத்தியாயிகணபாடங்களில் அக்னிவேசருடைய பெயர் காணப்படுவதால் பாணினி வாழ்ந்த கிறிஸ்து முன் 7-வது நூற்றாண்டு இவருடைய காலமாக இருக்கலாம் என்பது சிலருடைய கருத்து. சதபதப்பிராம்மணத்தில் இவருடைய பெயர்வருகிறது. அதேபோல் மகாபாரதத்தில் இவர் துரோணாசாரியருடைய குருவாகவும் பரத்வாஜருடைய சிஷ்ய ராகவும் பேசப்பட்டுள்ளார். இதனால் இவரை மகாபாரதத் திற்கு முன்பிருந்தவர் என்று சொல்ல வாய்ப்பிருக்கின்றது.

## 7. சரகர்

மேனாட்டு மருத்துவ முறையை வகுத்த ஹிபோகிரிடிஸ் என்பவர் சரகருடைய மருத்துவ முறையைப் பின்பற்றிப் பல சித்தாந்தங்களை வகுத்து இருக்கிறார் என ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். அதனால் கி.மு. 6-வது நூற்றாண்டில் வாழ்ந் தவர் இவர் எனத் தெரியவருகிறது. குஷான வமிசத்தில் தோன்றி பாஞ்சால நாட்டில் கபிஸ்தலம் என்கிற ஊரில் இவர் பிறந்தவர்என ஒரு குறிப்புள்ளது. கனிஷ்கருடைய ராஜ சபையில் இராஜவைத்தியராக இவர் இருந்து வந்ததாக சீன பாஷையிலுள்ள ''திரிபிடகம்'' என்ற பௌத்த நூலின் உரையில் பேசப்பட்டுள்ளது. கனிஷ்கருடைய காலமாகிய கி. பி. 1-2 நூற்றாண்டில் சரகரும் இருந்திருக்க வேண்டும் எனக்கூற வாய்ப்புள்ளது. கனிஷ்கர் என்பவர் பௌத்த மதத்தைச் சார்ந்தவர். சரகர் வைதிகமத்ததைச் சார்ந்தவர். மகாபாஷ்யமியற்றிய பதஞ்சலியும் சரகரும் ஒருவரே என ஒரு வாதம் உள்ளது. ஆனால் ஆராய்ச்சியாளர்களால் இதில் ஒரு முடிவிற்கும் வர முடியவில்லை. கபில பலருடைய புதல்வராகிய ''த்ருடபலர்'' பஞ்சாப் மாகாணத்தைச் சேர்ந்தவர். இவர் வாக்படருடைய பலவாக்கியங்களை உதாரணமாக எடுத்துக்

காட்டுவதால் கி.பி.3-4 நூற்றாண்டில் வாழ்ந்த வாக்படருடைய சமகாலத்திலேயோ பிற்காத்திலேயோ கி. பி. 5-6ல் நூற்றாண்டில் வாழ்ந்தவராக இருக்கலாம்.

## 8, சரகசம்ஹிதை

பலசம்ஹிதைகளுள் சரகஸம்ஹிதை ஸுச்ருதஸம்ஹிதை இரண்டும் முக்கியமானவைகள். உடற்சிகிச்சையை விளக்குவதில் இதுதான் முதன் முதலில் தோன்றிய நூலாகும். பிற்காலத்தில் இதைப்பின்பற்றி இதிலுள்ள கருத்தை ஆதாரமாகக் கொண்டுதான் உடல் மருத்துவத்தைப்பற்றி ஏராளமான நூல்கள் வெளிவந்துள்ளன. ''பிணியின் காரணங்களை அறிவதற்கு மாதவநிதானமும், சிகிச்சையின் சிறப்பை விளக்குவதற்கு சரகரின் சிகிச்சாஸ்தானமும், சூத்ரஸ்தானத்தின் பெருமையை அறிவதற்கு அஷ்டாங்கஸங்கிரகமும், உடற்கூற்றை அறிவதற்கு ஸுச்ருதத்தில் சாரிரஸ்தானமும், சிறந்தது'' என ஒரு பழமொழி கூறுகிறது. அதன்படி சரகருடைய திறமையையெல்லாம் அவருடைய சிகிச்சாஸ்தானத்தில் காண வாய்ப்புள்ளது.

1. உடற் சிகிச்சை. 2. குழந்தை மருத்துவம். 3. கிரகக் கோளாறினால் வரும் நோய்களுக்குச் சாந்திமுறை. 4. காது, கண், மூக்கு மருத்துவம். 5. அறுவைச் சிகிச்சை. 6. விஷ வைத்தியம். 7. முதுமை தோன்றாமைக்காகச் செய்யும் மருத்துவம். 8. சிற்றின்பத்தில் வலிமை வளர்க்கச் செய்யும் முறை என ஆயுர் வேதசாஸ்த்திரத்திற்குரிய எட்டுவிதமான உறுப்புகளின் விளக்கத்தை இங்கு விரிவாகக் காணலாம்.

ஆயுர்வேத மூல சித்தாந்தங்களை ஆராய்ச்சி முறையில் வாதத்திற்கேற்ப காரணங்களோடு முதலில் எடுத்துக் கூறியவர் சரகர். விஞ்ஞான முறையில் ஆயுர்வேத ஆராய்ச்சியைத் தோற்றுவித்தவர் இவர். நிலப்பாகுபாட்டையும் அதன் குணங்களையும் நோய்க்குக் காரணமாக எடுத்துக் காட்டியவர் இவரே. மூட நம்பிக்கையைத் துறந்து பௌதிக நோக்கோடு நோய்களைக் குணமாக்கும் முறையைக் காணவேண்டும் என்பதிலே இவர் அக்கறை கொண்டவர். ஞானம் விளங்கப் பல அறிஞர்களைக் குழுக்களாகச் சேர்த்து ஆராய்ச்சி முறையில் தங்கள் கருத்துகளைச் சொல்வதற்கு அவர்களுக்கு வாய்ப்பளித்துக் கடைசியில் ஒரு நேர்மையான (மூடநம்பிக்கையை விட்டு) முடிவைச் செய்ய வேண்டும் என்பதை ஆயுர்வேத சாஸ்திரத்தில் முதன் முதலாகக் கூறிய பெருமை இவரையே சாரும். அதையொட்டி புனர்வசு

ஆத்திரேயர் புலவர்குழுவுக்குத் தலைமை தாங்கி ஆராய்ச்சி முறையில் பல முனிவர்களின் வாதங்களைக்கேட்டு அவர் தீர்ப்பு அளித்து சரகஸம்ஹிதையில் பல இடங்களில் மருத்துவ நுணுக்கங்களைத் தீர்மானித்திருப்பதைக் காணலாம். ஒரு முனிவர் சொன்னார் என்பதை மாத்திரம் கொள்ளாமல் அதையும் ஆராய்ச்சி முறையில் காணும் முறை அக்காலத்திலேயே இருந்து வந்தது என்பது காணப்படுகிறது. பல மருத்துவர்களைக் கொண்ட ஒரு குழுவை அமைத்து அவர்களுடைய ஏகோபித்த திரண்ட கருத்தை வைத்து ஒரு பிரபுவிற்கு மருத்துவம் செய்யும் முறையை இன்று நாம் பார்க்கின்றோம். இது சரகர் காலத்தை நினைவூட்டுவதுபோல் அமைந்துள்ளது. நோய்களை நிர்ணயம் செய்வதற்கு மனிதனின் உடல் நிலையோடு அவனுடைய மனநிலையையும் ஆராய வேண்டுமென்பது இவருடைய கருத்து. நீண்டகாலம் வாழ மக்களுக்கு அன்றே இவர் பலயுக்திகளைக் கூறியிருக்கிறார். மருத்துவ முறையில் இயற்கைக்கு முதலிடம் தரவேண்டும் என்று அன்றே உறுதியாகக் கூறியவர் சரகர். இப்படிப் பல சிறப்புகளைக் கொண்ட இந்நூல் தற்கால மருத்துவ முறைக்கும் அக்கால மருத்துவ முறைக்கும் ஒரு ஒற்றுமைப்பாலமாக அமைந்துள்ளது.

சரகஸம்ஹிதை எட்டு ஸ்தானங்களைக் கொண்டது.

1. சூத்ரஸ்தானம். 2. நிதானஸ்தானம். 3. விமானஸ்தானம். 4. சாரீரஸ்தானம். 5. இந்திரியஸ்தானம். 6. சிகிச்சாஸ்தானம். 7. கல்பஸ்தானம். 8. சித்திஸ்தானம். சுமார் 10,000-சுலோகங்கள் கொண்டது இந்நூல்.

சக்ரபாணிதத்தர், ஹிந்து, ஸ்ரீகாந்த்தத்தர், சிவதர்சசேனர் போன்றவர்கள் இந்நூலுக்கு சம்ஸ்கிருதத்தில் உரை எழுதியுள்ளார்கள். இவற்றுள் சக்ரபாணிதத்தர் உரைதான் சிறந்ததென எல்லோரும் பின்பற்றி வருகின்றனர். வெகுவாக இந்தியமொழிகள் அனைத்திலும் இந்நூல் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. புரோபஸர் வில்சன் (Wilson) என்பவர் அரபி பாலிதின் மொழிகளில் கி.பி. எட்டாம் நூற்றாண்டிலேயே இந்நூல் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதைக் குறிப்பிட்டிருக்கிறார்.

## 9. நூலின் சாரம்

பருவ நிலைக்கேற்ப உணவுகளை அமைத்துக்கொண்டு, இயற்கையாக வரும் மல மூத்திராதி வேகங்களை அடக்காமல்,

உணவு நடத்தை பழக்க வழக்கங்களிலே ஒரு கொள்கையைக் கடைபிடித்து, உணவு வகைகளின் நன்மை தீமைகளை ஆராய்ந்து, தக்கவைகளைக் கையாண்டு, இயற்கைக்கு ஒத்த பஞ்ச கர்ம முறையைக் கையாண்டு, ஒருவன் வாழ்ந்து வந்தால் அவனை ஒரு பிணியும் அண்டாது. அவனுக்கு மருத்துவமும் தேவை யில்லை என ஆரோக்கிய வழி கூறி அத்துடன் இம்முறைகளைப் பின்பற்றாது பிணிக்கு இலக்கானவர்களுக்குச் சுலபமான மருத்துவ வழியையும் கூறுகிறது முதலாவது சூத்ரஸ்தானம்.

உணவு வகைகளில் குண தோஷங்களை நன்குணர்ந்து சரி யான முறையில் அவற்றைப் பயன்படுத்தினால் இன்பமாக வாழ லாம் என்பது ஆயுர்வேதத்தின் அடிப்படைக் கொள்கை ஆகும். இந்நூல் முழுவதின் கருத்தையும் திரட்டி ஒன்றாக நூலில் கோர்ப்பது போல் இங்கு தொகுத்துத்தருவதால் இது சூத்ர (நூல்) ஸ்தானம் எனப்பெயர் பெறுகிறது.

ஜ்வரம், குஷ்டம், இரத்த பித்தம், நீரிழிவு போன்ற பல நோய்கள் வரக் காரணம் யாது என்பதை மருத்துவம் செய் வதற்கு முன் மருத்துவன் அறிந்து இறங்கவேண்டுமென்பதை நிதானஸ்தானத்திலும் ••

இரஸம் தாதுக்கள் மருந்துகள் இவைகளின் விளக்கத்தை விமானஸ்தானத்திலும் உடலமைப்பு, உடற்கூறுகளின் தன்மை, மகப்பேற்றின் இரகசியம் ஆகிய மருத்துவம் செய்ய மருத்துவ னுக்குதேவையானவற்றை சாரீரஸ்தானத்திலும், நிறம் குரல் இவைகளின் மாற்றம், அபசகுனங்கள், கெட்ட சொப்பனங் கள், என மனிதனுக்கு ஏற்படும் மரண அறிகுறிகளை மருத்துவன் முன்கூட்டி அறிந்தால்தான் மருத்துவம் செய்ய அவசியம்தானா என்பதைத் தீர்மானிக்க முடியும். எனவே மரண அறிகுறி களைப்பற்றி இந்திரியஸ்தானத்திலும் முறையே கூறப்பட்டு இருப்பதைக்காணலாம். இந்த 5 ஸ்தானம்கொண்ட சரகஸம் ஹிதை முதற்பகுதியின் தமிழாக்கமாக இது அமைந்துள்ளது.

## 10. தமிழாக்கத்தின் நோக்கம்

மூல சம்ஸ்க்ருத நூலைத் தெளிவாய் எளிய நடையில் தமிழில் மொழி பெயர்த்துப் பத்திவாரியாகப் பிரித்து அவை களுக்கேற்பத் தலைப்புகளைத்தந்து அச்சிட்டிருப்பதால் பகுதி பகுதியாக நூலின் கருத்தை அறிய வாய்ப்புள்ளது. மூல சுலோகங் களின் எண்களைப் பின்பற்றி அதே வரிசையில் தமிழாக்கத்திலும் சுலோக எண்கள் தரப்பட்டுள்ளன. இங்கும் சந்தர்ப்பத்திற்

கேற்பப் பகுதிபகுதியாகப் பிரித்து எண்கள் தரப்பட்டிருப்பதால் குறிப்பிட்ட மூலத்தின் கருத்தை அறிய வாய்ப்பு உள்ளது.

சம்ஸ்கிருத சொற்களில் உள்ள மருந்து மூலிகைகளின் பெயர்களுக்குத் தகுந்த பொருத்தமான தமிழ்ப் பெயர்களை நன்கு ஆராய்ந்து தேடிப்பிடித்து இதில் பயன் படுத்தியுள்ளேன். பல ஆயுர்வேத வல்லுநர்கள், ஆயுர்வேத மருந்து தயாரிக்கும் கூடங்கள், பலநூலகங்கள், அகராதிகள், மரபு வைத்தியர்கள் என இவர்களை அணுகி மூலிகைகளின் தமிழ்ப்பெயர்களைக் கூடுமான வரை சரியான முறையில் உணர்ந்து இதில் பயன் படுத்தப் பெரு முயற்சி மேற்கொண்டுள்ளேன். இனிவரும் காலத்தில் சம்ஸ்கிருத வல்லுனர்களிடம் சென்று சம்ஸ் கிருதத்திலே உள்ள மருந்துகளின் பெயர்களைத் தெரிந்துகொள்ள கஷ்டப்படாமல் எளிதில் இந்நூலின் வாயிலாக நேரிடையாக மருந்து மூலிகைகளின் பெயர்களை அறிந்து தமிழர் கள் அனைவரும் மருத்துவம் செய்யவும் மருந்து செய்யவும் ஒரு வாய்ப்பு கிடைத்துள்ளது. இம்முறையில் அஷ்டாங்கஸங் கிரகம் என்ற முதலாம் ஆண்டுபாடநூலின் தமிழாக்கம் கடந்த ஆண்டு வெளியாகி விற்பனையாகின்றது.

## 11. தமிழாக்கத்தின் பயன்

இந்நூலில் முதல் ஐந்து ஸ்தானங்களைக் கொண்ட இம் முதற் பகுதி ஆயுர் வேதக்கல்லூரி **BA., M.S.** பட்டப்படிப்பு நான்காவது ஆண்டு பாட நூலாகவும் முக்கியமான ஆயுர்வேத நூல்களில் ஒன்றாகவும் அமைந்திருப்பதால் இதன் தமிழ் ஆக்கம் ஆயுர்வேதக்கல்லூரி மாணவர்களுக்குப் பயன்படுவதோடு மருத்துவம் செய்யவும் மருந்து செய்யவும் ஆவலோடு காத் திருக்கும் தமிழக மக்கள் அனைவர்களுக்கும் இது வழிகாட் டியாக அமையும் என்பதில் ஐயமில்லை. இந்நூல் தமிழில் முதன் முறையாக வெளிவருகிறது என்பதை மிக்க மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

பிணிகளின் பெயர்கள். மருந்து மூலிகைகளின் பெயர்கள். எண்வித வினா விடைகள். பிணிகளின் முற்குறிகள். மரண அறிகுறிகள். சுவைகள். தீமைபயக்கும் பொருட்கள். நன்மை பயக்கும் பொருட்கள். நன்மை பயப்பவையும் சிறந்தவையும். அத்தியாயப்பெயர்கள். தமிழிலும், வடமொழியிலும். அரும்பதச் சொற்கள்.

என நூலின் முதலில் சேர்க்கப்பட்டுள்ள இப்பகுதிகள் தமிழாக்கத்தைப் படித்து உணர உதவுவதோடு நூலின், ஸாராம்சத்தை அறியவும் உதவியாக இருக்கும் என எண்ணு கிறேன்.

ஓய்வுபெற்ற அண்ணா மருத்துவ மனை ஆயுர்வேதத் துறைத்தலைவர் **ஆர். சௌரிராஜன்,** சென்னை வெங்கடரமணா ஆயுர்வேதக்கல்லூரி முதல்வர் **கே. எஸ். விசுவநாத சர்மா** என்ற இரு ஆயுர்வேத வல்லுனர்களும் இத்தமிழாக்கம் முழு வதையும் படித்து ''**ஆயுர்வேத முறை தவறாமல்**'' நல்ல முறையில் மூலத்திற்கு ஒத்தாப்போல் இம்மொழிபெயர்ப்பு அமைந்துள்ளது'' என அளித்திருக்கும் நற்சான்று இந்நூலுக்கு மேலும் மெருகூட்டும் என எண்ணி மகிழ்கிறேன்.

## நன்றிநவிலல்

சம்ஸ்கிருதத்திலுள்ள ஆயுர்வேத நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து அதன் வாயிலாகத் தமிழக மக்கள் அனைவரும் ஆயுர்வேத முறையை அறிந்து மருத்துவம் செய்தும் மருந்து தயாரித்தும் பயன் பெறவேண்டுமென்கிற பரந்த நோக்கத்துடன் சென்னை இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி மருத்துவ இயக்குநரகத்தில் மொழிபெயர்ப்புப் பிரிவைத் துவக்கி அதில் என்னை கவுரவத்தனி அலுவலராக நியமித்து எனக்குப் பணி செய்யும் வாய்ப்பளித்த மக்கள் திலகம் கருணைக்கடல் **மாண்புமிகு தமிழக முதலமைச்சர் டாக்டர் எம். ஜி. ஆர்.** அவர்களுக்கு என் உளம்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதோடு என்றென்றும் என் இருதயத் தெய்வமாக எண்ணிப் போற்றுகிறேன்.

இவ்வறிய வாய்ப்பைப் பெற்ற தமிழக மக்கள் அனைவரும் கருணைக் கடலாம் **மாண்புமிகு தமிழக முதல்வரைக்** கருத்தில்கொண்டு பணிவன்புடன் கரம்கூப்பிக் களிப்புடன் போற்றுவார்கள் என்பதில் ஐயமில்லை.

இம்மொழிபெயர்ப்புப் பணிக்கும் இது அச்சாவதற்கும் தேவையான உதவிகளை எல்லாம்

உடனுக்குடன் செய்துத்தந்து இந்நூல் விரைவில் வெளிவர உதவிய நல்வாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு **டாக்டர் எச். வி. ஹாண்டே** அவர்களுக்கும், நல்வாழ்வுத்துறை ஆணையர் செயலர் திரு. **கோமேதகவேலு** அவர்களுக்கும் இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்குநர் திருமதி **குத்ஸியா காந்தி** அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றி உரித்ததாகுக.

இம்மொழிபெயர்ப்புப் பணியில் தேவையான விவரங்களையெல்லாம் சேகரித்து உதவிய புலவர்கள், உதவி ஆசிரியர், டாக்டர் இவர்களுக்கும் விரைவிலேயே அச்சிட்டு நூல் கிடைக்க உதவிய **டான்சி** நிறுவனத்தாருக்கும் அழகான முகப்புப் படம் வரைந்து தந்த சித்திராசிரியர் திரு. **சித்ரலேகா நாராயணசாமி** அவர்களுக்கும் எனது நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலின் இரண்டாம் பகுதி அச்சாகி விரைவில் வெளிவர இருக்கிறது என்பதையும் மிக மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

**எஸ். என். ஸ்ரீராமதேசிகன்.**
கவுரவத்தனி அலுவலர்

இந்திய மருத்துவம்
மற்றும் ஓமியோபதி
இயக்குநரகம்.
சென்னை-600 106.
தேதி: 12-12-85

# உள்ளுறை

# மொழிபெயர்ப்புப் பணிக்கு உதவிய பேரறிஞர்கள்

**டாக்டர் எஸ். வெங்கடராமன்**
ஆயுர்வேத சிரோமணி
வைத்திய விசாரத,
ஆயுர்வேத ஆசார்ய.

வித்துவான்
**நடாதூர் விஜயராகவாசாரியார்**
(பன்மொழிப் புலவர் - பரம்பரை முறையில் ஆயுர்வேத நூல் கற்றவர்)

பண்டிட் பைங்காநாடு
**ஆர். வெங்கட்ராம சாஸ்திரிகள்**
நியாய சிரோமணி
பிரவீண் பிரசாரக்

பேராசிரியர், நியாயரத்னம்
**கீழாத்தூர்**
**ஸ்ரீனிவாஸாச்சாரியார்**
நியாயசிரோமணி, ஹிந்தி விசாரத்

* * *

பதிப்பிற்கு உதவியவர்

**வித்துவான் வி. ஜி. ரங்காச்சாரியார்**
நியாய சிரோமணி
உதவி ஆசிரியர்

பழவேரி சக்ரவர்த்தி
**ஸ்ரீனிவாசன்**
வித்துவான்—சிரோமணி

* * *

மதிப்பீடு செய்த வல்லுநர்கள்

டாக்டர் **கே. எஸ். விசுவநாத சர்மா**
முதல்வர், வேங்கடரமணா ஆயுர்வேதக் கல்லூரி
மயிலாப்பூர், சென்னை - 600 004

டாக்டர் **ஆர். சௌரிராஜன்**
ஓய்வுபெற்ற ஆயுர்வேதத்துறைத் தலைவர்
அண்ணா மருத்துவமனை, சென்னை - 600 106

# ஆயுர்வேதத்தில் - அஷ்டாங்கங்கள்

1. **காய சிகிச்சை** — காயம் எனில் சடராக்னி அல்லது உமிழ்நீர் இவை உணவு செரிப்பதற்கு இன்றியமை யாதவை. நல்ல செரிமானம் இல்லாமையால் தோன்றும் நோய்கள் நீங்க உடலுக்குச் செய்யப் படும் சிகிச்சை என்பது பொருள்.

2. **சாலாக்யம்** — நுண்ணிய கருவிகள் மூலம் கண் காது மூக்கு தொண்டை ஆகிய உறுப்புக்களில் தோன்றும் நோய்களுக்கு அளிக்கப்படும் சிகிச்சை.

3. **சல்யாபஹர்த்ருகம்** —பலவகையான கத்தி முதலிய கருவி களைக் கொண்டு உடலில் புதைந்துள்ள வேறு பொருட்களை எடுத்தல், கட்டி முதலியவற்றை அறுத்து - சிகிச்சை புரிதல் (அறுவைச் சிகிச்சை)

4. **விஷகர வைரோதிகப் பிரசமனம்** — விஷம், இடுவிஷம் போன்றவற்றிற்குச் செய்யப்படும் சிகிச்சை.

5. **பூதவித்யா** — கெட்ட 'கைவினைகள் பேய் பிசாசு பில்லி சூனியம் முதலியவற்றிற்குச் செய்யப்படும் சிகிச்சை.

6. **கௌமாரப்ருத்யகம்** — குழந்தை மருத்துவம்.

7. **ரஸாயனம்** — வயதை நிலை நிறுத்துதல், ஆயுளை வளர்த்தல்; அறிவைப் பெருக்குதல், உடலை ஊட்ட மடையச் செய்தல் ஆகிய சிகிச்சை.

8. **வாஜீகரணம்** — ஆண்மையை வளர்த்தல், விந்துவை நன்னிலைப்படுத்தி மனத்தில் லிருப்பத்தை வளர்த் தல் ஆகிய சிகிச்சை முறை.

# இயற்கையாகவே மிக்க நன்மை பயக்கும் உணவுப் பொருட்கள்

| | | |
|---|---|---|
| 1. | ஊகுமுள் கொண்ட தானியங்களில் | — சிவப்புச்சம்பா |
| 2. | சமதானியங்களில் | — பயறு |
| 3. | நீர்களில் | — மழைநீர் |
| 4. | உப்புகளில் | — இந்துப்பு |
| 5. | கீரை வகைகளில் | — கீரைப்பாலை |
| 6. | மான் மாமிசங்களில் | — ஏணம் எனும் மானின் மாமிசம் |
| 7. | பறவைகளில் | — லாவகமெனும் பறவை |
| 8. | பொந்துகளில் வாழும் பிராணிகளில் | — உடும்பு |
| 9. | மீன்களில் | — ரோகிதம் |
| 10. | நெய் வகையில் | — பசுநெய் |
| 11. | பால் வகையில் | — பசும்பால் |
| 12. | தாவரவகை எண்ணெய்களில் | — நல்லெண்ணெய் |
| 13. | வசை என்னும் நிணநீர்களில் | — காட்டுப்பன்றியின் நிணநீர் |
| 14. | மீன் வகைகளில் | — சூலூகி எனும் மீன் வகை |
| 15. | நீர் வாழ் பறவைகளின் வசைகளில் | — வெள்ளை அன்னத்தின் வசை |
| 16. | கொத்தித் தின்னும் பறவைகளின் வசைகளில் | — கோழியின் நிணநீர் |
| 17. | தழைகளைப் புசிக்கும் பிராணிகளின் மேதசுகளில் | — ஆட்டுக் கொழுப்பு |
| 18. | கிழங்குகளில் | — இஞ்சி |
| 19. | பழங்களில் | — திராட்சை |
| 20. | கரும்பினால் தயாரிக்கப்படும் வகைகளில் | — சர்க்கரை |

மேலே கூறிய பொருட்கள் அனைத்தும் இயற்கையாகவே நன்மை பயப்பனவாகக் கருதப்படுகின்றன.

## நன்மை பயப்பவைகளில் சிறந்தவை

1. உயிரைத் தாங்கும் பொருட்களில் — சோறு
2. நீர்வேட்கை தணிப்பதில் — நீர்
3. களைப்பைப் போக்குவதில் — மது
4. உயிரூட்டும் பொருள்களில் — பால்
5. வளர்ச்சியைத்தரும் பொருட்களில் — புலால்
6. திருப்தி தருபவைகளில் — மாம்ஸரசம்
7. சுவையூட்டும் பொருட்களில் — உப்பு
8. இதயத்திற்கு இதமானதில் — புளிப்பு
9. வலிமையூட்டுவதில் — கோழி மாமிசம்
10. விந்து வளர்ச்சி செய்வதில் — முதலையின் வீரியம்
11. கப பித்தங்களைப் போக்குவதில் — தேன்
12. வாதபித்த நீக்கத்தில் — நெய்
13. வாதகப நீக்கத்தில் — எண்ணெய்
14. கபநீக்கச் செயல்களில் — வாந்தி எடுக்கச் செய்தல்
15. பித்த நீக்கச் செயல்களில் — பேதியாகச் செய்தல்
16. வாத நீக்கச் செயல்களில் — வஸ்திகர்மா
17. உடலை மென்மைப்படுத்துவதில் — வியர்ப்பிக்கும் முறை
18. உடலை உறுதியாக்குவதில் — உடற்பயிற்சி
19. ஆண்மை அழிப்பதில் — காரப்பொருள்
20. உணவில் விருப்பமின்மை உண்டாக்குவதில் — திந்துகப்பழம்
21. குரலைக்கெடுப்பது — விளாங்காய்
22. இதயத்திற்கு தீமை பயக்கும் பொருட்களில் — செம்மறியாட்டு நெய்
23. உடலுருக்கி நோயைப் போக்க — வெள்ளாட்டுப் பால்
24. தாய்பாலை வளர்ப்பதில் — வெள்ளாட்டுப் பால்
25. இரத்தநோய், இரத்தபித்தம் நீக்க — வெள்ளாட்டுப் பால்
26. பித்த கபங்களை வளர்ப்பது — செம்மறியாட்டுப் பால்
27. உறக்கத்தை அளிப்பது — எருமைப்பால்
28. கபத்தை வளர்ப்பது — நன்கு தோயாத மந்தகம் எனும் தயிர்
29. உடலை இளைக்கச் செய்வதில் — (கோதுமை) கவேதுகம்
30. வறட்சியை உண்டாக்குவதில் — காட்டுக் கேழ்வரகு
31. சிறுநீரை வளர்ப்பதில் — கரும்பு
32. மலத்தை வளர்ப்பதில் — யவதானியம்

33. வாத வளர்ச்சிப் பொருட்களில் — நாவல்
34. கப-பித்த வளர்ச்சிப் பொருட்களில் — எள்ளின் கல்கம்
35. புளிப்பு, பித்தங்களை உண்டாக்கும் பொருட்களில் — கொள்ளு
36. பித்த கபம் உண்டாக்கும் பொருட்களில் — உளுந்து
37. வாந்தி, ஆஸ்தாபநம் அநுவாஸனம் என்னும் வஸ்தி கர்மாக்களில் — மரக்காரக்காய்
38. பேதிக்குக் கொடுக்கும் பொருட்களில் — சிவதை வேர்
39. மென்மை பேதிக்குக் கொடுக்கும் பொருட்களில் — சரக்கொன்றை
40. கடுமை பேதிக்குக் கொடுக்கும் பொருட்களில் — கள்ளிப்பால்
41. சிரோவிரேசனத்தில் (நஸ்யவிதி) — நாயுருவி விதை
42. கிருமிகளை அழிப்பதில் — வாயுவிடங்கம்
43. நஞ்சுகளை நீக்குவதில் — வாகை விதை
44. குஷ்டநோய்களை நீக்குவதில் — கருங்காலி
45. வாதங்களை நீக்குவதில் — சித்தரத்தை
46. ஆயுளை நீடிப்பதில் — நெல்லிக்காய்
47. பலவகையாக உடலுக்கு நன்மையளிப்பதில் — கடுக்காய்
48. ஆண்மையையும், வாதத்தையும் நீக்குவதில் — ஆமணக்குவேர்
49. சடராக்னியைத் தூண்டுவதில் — கண்டந்திப்பிலி
50. செரிப்பிக்கும் ஆற்றல் வாய்ந்த பொருட்களில் — கண்டந்திப்பிலி
51. வயிற்றுப்புச நோய்களை நீக்குவதில் — கண்டந்திப்பிலி
52. ஆஸநவாய் வீக்கம் மூலம் வலி நீக்குவதில் — கொடிவேலி
53. விக்கல், மூச்சுத் திணறல், பக்க சூலை நீக்குவதில் — புஷ்கர மூலம்
54. மலக்கட்டு, செரிப்பித்தல் உண்டு பண்ணுதலில் — கோரைக்கிழங்கு
55. செரிமானம் உண்டு பண்ணுதல், வாந்தியை நிறுத்தல் பேதியை நிறுத்தல் இவைகளுக்கு — விளாமிச்சவேர்
56. மலக்கட்டு, உந்தித்தீதூண்டல், செரிமானம் இவைகளுக்கு — வெட்டிவேர்

57. மலக்கட்டு, இரத்தபித்த
நோய் நீங்க — நன்னாரி

58. மலக்கட்டு, வாதநீக்கம், உந்தித்
தீதூண்டல் கபநீக்கம் இரத்த
அழுத்த நீங்க — சீந்தில் கொடி

59. மலக்கட்டு, உந்தித்தீதூண்டல்,
வாத கபம் தணித்தல் இவற்றில் — வில்வம்

60. உந்தித்தீ தூண்டல், செரிமானம்
மலம் கட்டுதல் எல்லா தோஷங்
களையும் நீக்குவதில் — அதிவிடயம்

61. மலக்கட்டு, இரத்த பித்த நீக்கம்
இவற்றில் — நெய்தல்

62. பித்தம், கபம் இவைகளைத்
தணிப்பதில் — காஞ்சோரி

63. இரத்தபித்த மிக்க தொடர்பை
நீக்குவதில் — ஞாழல்

64. கபம், பித்தம், இரத்தம்
இவற்றைக் கட்டுபடுத்தி உலரச்
செய்வதில் — வெப்பாலைப் பட்டை

65. இரத்த பித்தத்தை தணிக்கும்
பொருட்களில் — குமிழம்பழம்

66. மலக்கட்டு, உந்தித்தீதூண்டல்,
வாதநீக்கம் ஆண்மை வளர்த்தல்
ஆகியவற்றில் — மூவிலை வேர்

67. ஆண்மையை வளர்த்து எல்லா
தோஷங்களையும் நீக்குவதில் — பால் முதுக்கன் கிழங்கு

68. மலத்தை கட்டி, உடல் வலிமையை
தந்து, வாதத்தை நீக்குவதில் — சிற்றாமுட்டி வேர்

69. கஷ்டப்பட்டு சிறுநீர் கழித்தல்,
வாத நீக்கம் இவற்றில் — நெருஞ்சில்

70. வாதகபங்களைச் சமப்படுத்தி
வாதகபங்களைத் தணியச் செய்வதில் — பெருங்காயம்

71. தோஷங்களை வெளிப்படுத்தி,
உந்தித்தீயைதூண்டி, வாத
கபங்களை நீக்கும் பொருட்களில் — புளிவஞ்சி

72. மலமிளக்கியும், சீரணத்தைப்
பெருக்கி, மூலநோயை நீக்கும்
பொருட்களில் — யவக்ஷாரம்

73. கிரஹணி நோயை நீக்குவதும்,
மூலத்தை போக்குவதும், மிக்க நெய்
பருகுவதால் தோன்றிய நோயை
நீக்குவதில் — மோர்

74. க்ரஹணிநோய், உடலுருக்கி, மூலநோய் இவற்றைப் போக்குவதில் — மாமிசத்தை தின்னும் உயிரினங்களின் மாமிசம்

75. உடலுக்கு ஊட்டமளிக்கும் பொருட்களில் — நெய், பால் பருகுவது

76. ஆண்மையை வளர்த்து உதாவர்த்தம் எனும் மேல்நோக்கிச்செல்லும் வாயுவை தடுத்து நிறுத்தும் பொருட்களில் — சமஅளவில் நெய், ஸத்து மாவு இவற்றை சேர்த்து உண்ணுதல்

77. பற்களுக்கு வலிமையூட்டுவதிலும் உணவில் சுவை உண்டுபண்ணுவதில் — எண்ணெய் கொப்புளித்தல்

78. துர்நாற்றத்தைப் போக்குவதும், எரிச்சலைத் தணிப்பதும் — சந்தனப்பூச்சு

79. தோல்நோய், வியர்வை இவற்றை நீக்கும் பொருட்களில் — வெட்டி வேர், விளாமிச்சவேர்

80. வாதத்தை போக்கும் எண்ணெய் குளி, பூச்சு இவைகளில் — கோஷ்டம்

81. கண்களுக்கு நன்மை பயப்பதும், விந்துவை வளர்ப்பதும் தலைமுடி, குரல், நிறம் இவற்றிற்கு நன்மை பயப்பதும் என இவற்றில் — அதிமதுரம்

82. உயிரூட்டம் தரும் பொருட்களில் — காற்று

83. அசீரணநோய், அசைவற்றுப் போதல், குளிர்ச்சி, வலி, நடுக்கம் ஆகியவற்றை நீக்கும் பொருட்களில் — நெருப்பு

84. வாதம் முதலியவை தேக்கிவைக்கும் பொருட்களில் — தண்ணீர்

85. நீர்வேட்கை, வாந்தி இவைகளைப் போக்குவதில் — மண்ணைச் சூடாக்கிக் கல்லைச் சூடாக்கித் தண்ணீரில் தணித்து எடுத்து வைக்கப்பட்ட நீர்

86. ஆற்றலை வளர்ப்பதில் — சீரண ஆற்றலுக்கு ஏற்ப உணவு உட்கொள்ளுதல், உடலுக்கு ஏற்றதான உணவும் செயலும் மேற்கொள்ளுதல்

87. ஆரோக்கியமானவைக்கு — தக்க காலத்தில் உணவு உட்கொள்ளல்

88. மனத்தை மகிழ்விக்க — மது

89. நன்கு சீரண ஆற்றலைத் தருவதில் — ஒரு வேளை உணவு உட்கொள்ளுதல்

90. நன்மையளிப்பது — அடக்கமும், சாந்தியும்

91. ஆயுளை வளர்ப்பது — சிற்றின்ப எண்ண மின்றி, புலன் அடக்கத்துடன், பிரம்மசரியம் மேற்கொள்ளுதல்.

92. ஆண்மை வளர்ப்பது — மன உறுதி

93. களைப்பைப் போக்குவதில் — குளித்தல்

94. மகிழ்ச்சியூட்டுவதில் — நகை

95. உடலை உலர்த்துவதில் — வருத்தம்

96. உடல் வளர்ச்சியில் — பற்றற்ற தன்மை

97. உறக்கம் தருபவையில் — நல்ல வளர்ச்சி

98. வலிமை தருவதில் — பலசுவைப் பொருட்களை உண்ணுதல்

99. உடன் நீக்க வேண்டியவற்றுள் — அசீரணம்

100. மென்மையான மருந்து சிகிச்சையில் — குழந்தைகள் உணவும் செயலும்

101. தொடர்ந்த சிகிச்சைமுறையில் — வயோதிகர்கள்

102. கடுமையான மருந்து, உடற்பயிற்சி புணர்ச்சி இவற்றைவிடவேண்டியவர்களுள்— கருவுற்ற பெண்

103. கருதரிக்கும்பொழுது — மன மகிழ்வு

104. சிகிச்சை செய்ய முடியாதது — ஸன்னிபாதம்

105. முரண் சிகிச்சையில் — ஆம சிகிச்சை

106. பஞ்ச கர்மாக்களில் — வஸ்தி கர்மா

107. மூலிகை விளையும் இடங்களில் — இமயமலை

108. ஆரோக்கியம் அளிக்கும் இடங்களில் — பாலைவனம்

109. மூலிகைகளில் — ஸோமலதை

110. மருத்துவ குணங்களில் — தக்கமுறையில் சிகிச்சை கையாளுதல்

111. ஆரோக்கிய அறிகுறிகளில் — தன்னம்பிக்கை

112. ஐயங்களைத் தீர்ப்பனவற்றுள் — மருத்துவர்கள் அடங்கிய கூட்டம்

| | | |
|---|---|---|
| 113. | சிகிச்சை முறைகளில் | — நூலறிவுடன் கூடிய ஊகம் |
| 114. | காலத்தை பற்றிய அறிவை பயன்படுத்துவதில் | — உயர்ந்த நேரான அறிவு |
| 115. | ஐயம் அகற்றும் செயல்களில் | — நல்ல பட்டறிவு |
| 116. | அச்சம் விளைவிப்பது | — ஆற்றல் இன்மை |
| 117. | அறிவை வளர்க்கும் செயல்களில் | — உடன்பயின்றவருடன் கற்ற நூல்களைப்பற்றி வாதம் புரிதல். |
| 118. | சாத்திர அறிவு பெறும் காரணங்களில் | — ஆசாரியன் |
| 119. | அழிவற்றவைகளில் | — ஆயுர்வேதம் |
| 120. | கடைபிடிக்க வேண்டியவை | — நல்லோர் நல்லுரை |
| 121. | நோய் தீரும் குறிகளில் | — வெறுப்பு அடையா திருத்தல் |
| 122. | எல்லா சுகங்களையும் தருவது | — சொல், செயல் மனம் அனைத்தையும் இறைவனிடம் அர்ப்பணித்தல். |

இவை யாவும் சிறந்தவையாகக் கூறப்பட்டன.

மேற்கூறிய 122 பொருட்களைப் பற்றி அறிந்து கொள்வது இன்றியமையாதது என விளக்கப்பட்டது.

# இயற்கையாகத் துன்பம் விளைவிக்கும் உணவுப் பொருட்கள்

1. ஊகுமுள் (சூக) தானியங்களில் — யவதானியம்
2. சமீதானியங்களில் — உளுந்து
3. நீர் வகைகளில் — மழைக்காலத்து ஆற்று நீர்
4. உப்புகளில் — சவுட்டு உப்பு
5. கீரை வகைகளில் — கடுகுக்கீரை
6. மாமிசங்களில் — பசு மாமிசம்
7. பறவைகளில் — சிறிய புறா
8. பொந்தில் வாழும் பிராணிகளில் — தவளை
9. மீன்களில் — சிலிசிமமென்னும் மீன்
10. நெய்களில் — செம்மறியாட்டு நெய்
11. பால்களில் — செம்மறியாட்டுப் பால்
12. தாவர எண்ணெய்களில் — குசும்ப எண்ணெய்
13. வசை என்னும் நிணநீர்களில் — எருமைக் கடாவின் வசைநீர்
14. மீன் வசைகளில் — கும்பீரம் எனும் மீனின் வசை
15. நீர் வாழ் பறவைகளின் வசைகளில்— நீர்காக்கையின் நிணநீர்
16. கொத்தித் தின்னும் பறவை வகையில் — சிட்டுகுருவியின் வசை
17. தழைகளைத் தின்னும் பிராணி களின் மேதஸில் — யானையின் கொழுப்பு
18. பழங்களில் — அசினி பலாப்பழம்
19. கிழங்குகளில் — முதிர்ந்த முள்ளங்கி
20. கரும்புப் பொருட்களில் — வெல்லப்பாகு

மேலே கூறப்பட்ட பொருட்கள் அனைத்தும் இயற்கையாகவே தீமை பயக்கும்.

# இயற்கையாகவே துன்பம் விளைவிப்பவை களில் வலிவுள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | அறிவு தைரியம் நினைவாற்றல் இவற்றை நீக்க | — கள்வெறி |
| 2. | அசீரணம் உண்டாக்கும் பொருட்களுள் | — மிகுதியாகப் புசித்தல் |
| 3. | நோயின் அறிகுறிகள் | — மலம், சிறுநீர் இவற்றின் வேகங்களை அடக்குதல் |
| 4. | உடலுருக்கி நோயை வளர்ப்பது | — பெண்களுடன் மிக்க தொடர்பு |
| 5. | அலித்தன்மை வளர்ப்பது | — விந்துவைத் தடை செய்தல் |
| 6. | உணவில் வெறுப்புண்டாக்குவதில் | — கசாப்புக் கடையைக் காணுதல் |
| 7. | ஆயுள்குறைவை உண்டாக்குவது | — உணவு புசியாமல் இருத்தல் |
| 8. | உடல் இளைக்க | — குறைந்த அளவு உணவு உட்கொள்ளுதல் |
| 9. | சடராக்கினியைத் தணிக்கச் செய்வதில் | — இயல்புக்கு முரணான உணவு புசித்தல் |
| 10. | குஷ்டம் போன்ற கொடிய நோய்கள் உண்டாவதற்குக் காரணம் | — மீன், பால் போன்ற முரணான வீரியமுள்ள பொருட்களை ஒரே சமயத்தில் புசித்தல் |
| 11. | தீமை பயப்பது | — தன் ஆற்றலுக்கு அதிகமாக உழைத்தல் |
| 12. | நோய் உண்டாக்குவது | — உணவு, உடல்பயிற்சிகளின் தவறான தொடர்பு |
| 13. | வறுமை உண்டாக்குவது | — மாதவிடாய் காலத்தில் புணர்தல் |
| 14. | ஆயுளைக் குறைப்பது | — மாற்றான் மனைவியைக் காமுறுதல் |
| 15. | ஆண்மையை அழிப்பது | — அமைதி இழந்த மனம் |
| 16. | உயிரைப்பறிப்பது | — ஆற்றலுக்கு அதிகமாகச் செயலாற்றல் |

| | | |
|---|---|---|
| 17. | நோயை வளர்ப்பது | — வருத்தம் கொள்ளுதல் |
| 18. | சோம்பலுக்கு | — மிகுந்த உறக்கம் |
| 19. | வலிமையை அழிப்பதில் | — ஒரே சுவையுள்ள பொருட்களை உண்ணுதல் |
| 20. | சீக்கிரம் வெளியே எடுக்க வேண்டியது | — உயிரற்ற கரு |
| 21. | நோய்களில் | — காய்ச்சல் |
| 22. | நீண்ட நோய்களில் | — குஷ்டம் |
| 23. | நோய் கூட்டங்களில் | — உடலுருக்கி நோய் |
| 24. | தொடர்ந்து தோன்றும் நோயில் | — நீரிழிவு நோய் |
| 25. | உடலுக்கு நன்மை அளிக்காத இடம் | — நீர்ப்பாங்கான இடம் |
| 26. | விடவேண்டியவற்றுள் | — கடவுள் இல்லை என்னும் நாத்திகம் |
| 27. | வருத்தம் தருவது | — பேராசை |
| 28. | சாவுக்குறிகளில் | — மருத்துவர் சொல் கேளாதிருத்தல் |
| 29. | நேரத்தை வீணாக்குவதில் | — சோம்பேறித்தனம் |
| 30. | எல்லாவகையான தீமைகளை உண்டாக்குவனவற்றுள் | — கெட்டவர்களிடம் தானம் பெறுதல் |

# நோய்களின் முற்குறிகள்

## 1. சுரத்தின் முற்குறிகள்

வாயில் அருவருப்பு உடல் பளு உணவில் அவாவின்மை கண்களில் கலக்கம் கண்களில் நீர் வடிதல் அதிகமான தூக்கம் எதிலும் நிலை கொள்ளாமை கொட்டாவி உடல் தளர்ச்சி நடுக்கம் ஓய்ச்சல் தலைச்சுற்றல் புலம்பல் கண்விழித்தல் மயிர் கூச்சல் பற்கள் கூசுதல் ஆகிய இவை சுரத்திற்கு முன் தோன்று கின்றன.

மேலும் ஒளி குளிர் காற்று வெயில் இவற்றில் விருப்பும் வெறுப்பும் அடிக்கடி மாறி மாறி யுண்டாகும். சுவையின்மை அசீரணம் வலிவுக்குறைவு உடல் வலி மனத்தளர்ச்சி சக்திக் குறைவு செயல்களில் தாமதம் சோம்பல் தன் வேலைகளிலும் ஈடுபாடின்மை ஆசான்களிடத்தில் பொறாமை குழந்தைகளிடம் வெறுப்பு தன் கடமைகளில் கவலையின்மை ஆகிய இவை ஏற் படும்.

மாலை அணிதல் பூச்சுப் பூசிக்கொள்ளுதல் உணவு இவற் றில் விருப்பமின்மையும் இனிப்புச் சுவைப் பொருட்களில் வெறுப் பும் புளிப்பு உப்பு உவர்ப்புச்சுவையுள்ள பொருட்களில் விருப்ப மும் உடலில் சூடு உண்டாவதற்கு முன் தோன்றக்கூடிய சுரத் தின் குறிகளாகும். சுரம் ஏற்பட்ட பிறகும் மேற்கூறியவை பின் தொடரும்.

## 2. இரத்த பித்தத்தின் முற்குறிகள்

உணவில் அவாவின்மை உண்டபின் மார்பிலும் வயிற்றிலும் எரிச்சல் நாற்றமுள்ள புளிப்பு ஏப்பம் அடிக்கடி வாந்தி பிற ருக்கு அருவருப்பைத் தோற்றுவிக்கும் வாந்தி குரல் மாற்றம் உடல் ஓய்ச்சல் உடல் முழுவதும் எரிச்சல் வாயிலிருந்து புகை வெளிவருவது போன்ற தோற்றம் இரும்பு இரத்தம் மீன் புலால் இவற்றின் வாடை வாயில் வீசுதல் உடல் உறுப்புக்கள் மலம் சிறுநீர் வியர்வை உமிழ்நீர் மூக்கில் உள்ள சளி வாய் காது கண் இவற்றில் உள்ள அழுக்கு முகப்பரு சிறுகட்டிகள் இவை இரத்த நிறமாகவும் பச்சை நிறமாகவும், மஞ்சள் நிறமாக வும் தோன்றுதல்.

உறுப்புக்களில் வேதனை அடிக்கடி கனவில் சிகப்பு நீலம் மஞ்சள் கருப்பு நிறமுள்ள ஒளிவீசும் பொருட்களைப் பார்த்தல் இரத்த பித்தத்தின் முற்குறிகளாகும்.

## 3. ஐந்து குன்மங்களின் முற்குறிகள்

உணவில் அவாவின்மை சுவையின்மை சீரணமின்மை சட ராக்கினியின் மாறுபாடுகள் உண்டவுடன் எரிச்சல் சீரணமாகும் தருணத்தில் காரணமின்றி வாந்தி ஏப்பம் இவை உண்டாகும்.

கீழ்நோக்கிச் செல்லும் வாயு சிறுநீர், மலம் இவற்றில் வேகம் ஏற்படுகிறது. அப்பொழுது மலம் வெளிவராது. சிறிதளவே வெளி வரும்.

கீழ்நோக்கிச் செல்லும் வாயு தடைபடுதல் உடலில் வலி பொருமல் இரைச்சல் மயிர் கூச்சல் மலம் இளகிப் போதல் இவை ஏற்படும்.

### 4. நீரிழிவின் முற்குறிகள்

தலை மயிரில்சடை வாயில் இனிப்பு கை கால்களில்உணர் வின்மை எரிச்சல் வாய் தாடை தொண்டை இவை உலர்தல் நீர்வேட்கை சோம்பல் உடலில் அதிக அழுக்கு உடல் துவாரங் களில் அழுக்கு சேருதல் உடல் முழுவதும் எரிச்சல் உடல்உறுப்புக் களில் உணர்வின்மை வண்டுகள் எலும்புகள் உடலிலும் சிறு நீரிலும் மொய்த்தல் சிறுநீரில் மற்ற தோஷங்கள் சேருதல் உடலில் மீன் வாடை வீசுதல் அதிக உறக்கம் சுறுசுறுப்பின்மை இவை நீரிழிவு நோயின் முற்குறிகள்.

### 5. குஷ்ட நோயின் முற்குறிகள்

வியர்வை வெளிவராதிருத்தல் அல்லது அதிகம் வியர்வை வெளிப்படுதல் குஷ்டம் தோன்றிய இடத்தில் சொரசொரப்பு அதிக மழமழப்பு நிறமாற்றம் அரிப்பு குத்தல் வலி உணர் வின்மை சுற்றிலும் எரிச்சல் நமநமப்பு மயிர்கூச்சல் தோலில் வறட்சி சூடாகத் தோன்றுதல் பளு வீக்கம் உடலில் அக்கி நோய் ஏற்படுதல் உடல் துவாரங்களில் அழுக்கு சேருதல் உடலில் கொப்புளம் ஏற்பட்டுப் பழுத்தல் நெருப்புசுடுதல் ஏதாவது பிராணிகள் கடித்தல் உறுப்புகள் முறிந்து போதல் காயம்படு தல் கீழே விழுதல் இவை ஏற்பட்டால் அதிக வேதனை ஏற்படும். சிறுபுண் உண்டானாலும் கெட்டுப்போய் விரைவில் குணமடை யாது.

### 6. உடல் உருக்கி நோயின் முற்குறிகள்

தலைப்பளு இருமல் சுவாசம் குரல் மாற்றம் கபவாந்தி இரத்தம் துப்புதல் இருவிலாப்பக்கங்களில் வேதனை தோள் பட்டைகளில் வலி காய்ச்சல் கழிச்சல் சுவையின்மை என்பன உடலுருக்கி நோயின் முற்குறிகள்.

மேலும் பசியின்மை வலிவுக்குறைவு இன்பத்தில் விருப்ப மின்மை இவை யாவும் பொதுவாக எல்லா குன்மங்களின் முற்குறி களாகும்.

### 7. பைத்தியத்தின் முற்குறிகள்

தலையில் ஒன்றுமில்லாதது போன்ற எண்ணம் கண்கள் கலங்குதல் செவிகளில் இரைச்சல் அதிகமான மேல் மூச்சு வாயி லிருந்து கபநீர் ஒழுகுதல் உணவில் விருப்பமின்மை சுவையின்மை சீரணமின்மை இதயத் துடிப்பு மனதை ஒருமுகப்படுத்துதல்

களைப்பு மோகம் மன எழுச்சி இவை காரணமில்லாமல் தோன்றுவது பித்துப் பிடித்தது போன்ற மனநிலை உடலில் குளிர்ச்சியான தழும்புகள் முகத்தில் தோன்றும் பக்கவாத நோயைப் போன்ற தோற்றம் கனவில் கலக்கம் அடைதல் நிலையற்றிருத்தல் கெட்ட உருவங்கள் இவற்றை அடிக்கடி காண்பது செக்கில் சவாரி செய்வது புயலில் சிக்கிச் சுழல்வது போன்ற தோற்றம் அழுக்கடைந்த நீரில் உள்ள சுழலில் மூழ்குதல் கண்களில் சுழற்சி இவற்றைக் கனவில் காண்பது போன்றவை தோஷங்களினால் உண்டாகும் பைத்தியத்தின் முற்குறிகளாகும்.

**8.** இடைவிடாமல் புருவங்களின் துடிப்பு அடிக்கடி கண்களின் நிலையற்ற ஓட்டம் ஓசையில்லாமலே செவிகளில் ஒலி கேட்பது தொடர்ச்சியாக வாயிலிருந்து நீரும் மூக்கிலிருந்து சளியும் ஒழுகுதல் உணவில் அவாவின்மை சுவையின்மை சீரணமின்மை இதயத்துடிப்பு வயிற்றில் ஒருவித ஓசை வலிவுக் குறைவு எலும்பில் உடைந்தது போன்ற வலி உடலைப் பிடித்து விடுவது போன்ற உணர்வு அறிவிழத்தல் கண் இருட்டடைதல் மூர்ச்சை மயக்கம் இவை அடிக்கடி தோன்றுதல் கனவில் மகிழ்தல் நடனமாடுதல் குத்துதல் துன்பப்படுதல் நடுங்குதல் விழுதல் போன்ற காட்சிகளைக் காணுதல் இவை காக்கைவலியின் முற்குறிகளாகும்.

## ஐம்பது வகையான மகாகஷாயங்களின் விளக்கம்

இந்நூலில் கூறப்பட்ட ஐம்பது வகையான மகாகஷாயங்களைப் பற்றிய விளக்கம்.

1. ஜீவனீயம் (உயிரை ஊட்டக் கூடியது)
2. பிரும்மணீயம் (உடலை வளர்க்கக்கூடியது)
3. லேகனீயம் (இளைக்கச் செய்வது)
4. பேதனீயம் (மலத்தைப் பிளக்கக்கூடியது)
5. ஸந்தானீயம் (பிளந்தவற்றைச் சேர்க்கக்கூடியது)
6. தீபனீயம் (சடராக்னியைத் தூண்டக்கூடியது)

என ஆறுவகைக் கஷாயக் கூட்டுகள்.

7. (அ) பல்யம் (வலிமை அளிக்கக்கூடியது)
8. (ஆ) வர்ண்யம் (நிறத்தைக் கொடுக்கக் கூடியது)
9. (இ) கண்ட்யம் (குரலை சுத்தப்படுத்தக்கூடியது)
10. ஹ்ருத்யம் (இதயத்திற்கு நன்மையளிக்கக் கூடியது)

என நான்கு வகைக் கஷாயக் கூட்டுகள்

11. த்ருப்திக்னம் (பசியை உண்டாக்கக் கூடியது)
12. அர்சோக்னம் (மூலநோயை நீக்கக் கூடியது)
13. குஷ்டக்னம் (குஷ்டநோயை நீக்குவது)
14. கண்டூக்னம் (அரிப்பைத் தணிக்கக் கூடியது)
15. க்ருமிக்னம் (கிருமிகளை அழிக்கக் கூடியது)
16. விஷக்னம் (நஞ்சை நீக்கக்கூடியது)

என ஆறுவகைக் கஷாய கூட்டுகள்

17. ஸ்தன்யஜனனம் (தாய்ப்பாலை வளர்க்கக்கூடியது)
18. ஸ்தன்ய சோதனம் (தாய்ப்பாலை தூய்மைப்படுத்துவது)
19. சுக்ரஜனனம் (விந்துவை வளர்க்கக்கூடியது)
20. சுக்ரசோதனம் (விந்துவை சுத்தப்படுத்துவது)

என நான்குவகை கஷாயக் கூட்டுகள்

21. ஸ்நேஹோபகம் (எண்ணெய் பசையைத் தோற்றுவிப்பவை)
22. ஸ்வேதோபகம் (வியர்வையை உண்டாக்கக் கூடியவை)
23. வமநோபகம் (வாந்தியை எடுக்கப் பயன்படுபவை)

24. விரேசநோபகம் (மலம் கழிக்கப் பயன்படுபவை)
25. ஆஸ்தாபநோபகம் (கஷாய வஸ்திக்குப் பயன்படுபவை)
26. அநுவாஸநோபகம் (எண்ணெய் வஸ்திக்குப் பயன்படுபவை)
27. சிரோவிரேசநோபகம் (தலையில் உள்ள தோஷங்களை வெளிப்படுத்துபவை)

இவ்விதம் ஏழுவகை கஷாயங்களின் கூட்டுகள்.

28. சர்திநிக்ரஹணம் (வாந்தியைத் தடுப்பவை)
29. த்ருஷ்ணா நிக்ரஹணம் (தாகத்தை அடக்கக்கூடியவை)
30. ஹிக்காநிக்ரஹணம் (விக்கலை அடக்கக்கூடியவை)

இம்மாதிரி மூவகைக் கஷாயங்களின் கூட்டுகள்.

31. புரீஷஸங்க்ரஹணீயம் (மலத்தைக் கட்டக் கூடியவை)
32. புரீஷவிரஜநீயம் (மலத்தைக் கழிக்கச் செய்பவை)
33. மூத்ரஸங்க்ரஹணீயம் (சிறுநீரைக் கட்டுபவை)
34. மூத்ரவிரஜநீயம் (சிறுநீரில் உள்ள கற்களை வெளிப்படுத்துபவை)
35. மூத்ரவிரேசனீயம் (சிறுநீரை வெளிப்படுத்துபவை)

இவ்விதம் ஐந்து வகை கஷாயங்களின் கூட்டுகள்.

36. காஸஹரம் (இருமலை நீக்கக்கூடியவை)
37. ச்வாஸஹரம் (இழுப்பைப் போக்கக்கூடியவை)
38. சோதஹரம் (வீக்கத்தைத் தணிக்கக் கூடியவை)
39. ஜ்வரஹரம் (காய்ச்சலை நீக்கக் கூடியவை)
40. ச்ரமஹரம் (களைப்பைப் போக்கக்கூடியவை)

என ஐந்து வித கஷாயக் கூட்டுகள்.

41. தாஹப்ரசமனம் (எரிச்சலைத் தணிக்கக்கூடியவை)
42. சீதப்ரசமனம் (குளிர்ச்சியைத் தணிக்கக் கூடியவை)
43. உதர்தப்ரசமனம் (உதர்தம் எனும் நோயைக் குணப்படுத்துபவை)
44. அங்கமர்தப்ரசமனம் (உடல் உறுப்புக்களின் வலியை நீக்கக் கூடியவை)
45. சூலப்ரசமனம் (குத்தல்வலியைப் போக்கக் கூடியவை)

இவ்விதம் ஐந்து வகை கஷாயக் கூட்டுகள்

46. சோணிதஸ்தாபநம் (இரத்தப் பெருக்கை நிறுத்துபவை)
47. வேதநாஸ்தாபநம் (வலியைத் தணிக்கக் கூடியவை)
48. ஸம்ஞாஸ்தாபனம் (நினைவை நிலைநிறுத்தக் கூடியவை)
49. ப்ரஜாஸ்தாபனம் (கருவை நிலைநிறுத்தி மக்கட்பேற்றை உண்டுபண்ணுபவை)
50. வயஸ்தாபநம் (ஆயுளை வளர்க்கவல்லவை)

என ஐந்து வகை கஷாய கூட்டுகள்

மேலே ஐம்பது வகையான மகாகஷாயங்கள் சுருக்கமாக விளக்கப்பட்டன.

# சுவைகள்

| சுவை | தோற்றமும் செயல்களும் தோற்றுவிக்கும் பெரும் பூதங்கள் | துணியும் தோஷங்கள் | சீற்றமடையும் தோஷங்கள் |
|---|---|---|---|
| 1. மதுரம் (இனிப்பு) | நீர்-நிலம் | வாத - பித்தம் | கபம் |
| 2. ஆம்லம் (புளிப்பு) | நிலம்-நெருப்பு | வாதம் | பித்தம்-கபம் |
| 3. லவணம் (உப்பு) | நீர்-நெருப்பு | வாதம் | பித்தம்-கபம் |
| 4. கடு (கார்ப்பு) | காற்று-நெருப்பு | கபம் | பித்தம்-வாதம் |
| 5. திக்தம் (கைப்பு) | காற்று-ஆகாயம் | பித்தம்-கபம் | வாதம் |
| 6. கஷாயம்(துவர்ப்பு) | காற்று-நிலம் | பித்தம்-கபம் | வாதம் |

# எண்வகை வினாக்கள் - விடைகள்

**1. பெண் பிறக்கக் காரணம் யாது ?**

விடை : சோணிதம் (பெண் விந்து) மிகுதியாயிருந்தால் பெண் பிறக்கும்.

**2. ஆண் குழந்தை பிறக்கக் காரணம் யாது ?**

விடை : சுக்ரம் (ஆண் விந்து) அதிகமாயிருந்தால் ஆண்குழந்தை பிறக்கும்.

**3. இரட்டைக் குழந்தை பிறக்கக் காரணம் யாது ?**

விடை : ஆண்-பெண் விந்துக்கள் இரண்டாகப் பிரிந்து கருப் பையில் சேர்ந்தால் இரட்டைக் குழந்தைகள் பிறக்கும்.

**4. இரட்டைக் குழந்தைகள் இரண்டும் ஆணாகப் பிறக்கக் காரணம் யாது ?**

விடை : ஆண்-பெண் விந்துக்கள் இரண்டாகப் பிரிந்து கருப்பை யில் சேரும்போது ஆண் விந்து அதிகமாயிருந்தால் இரு குழந்தைகளும் ஆணாகப் பிறக்கும்.

**5. இரட்டைக் குழந்தைகள் இரண்டும் பெண்ணாகப் பிறப்பது ஏன் ?**

விடை : ஆண்-பெண் விந்துக்கள் இரண்டாகப் பிரிந்து கருப் பையில் சேரும்போது பெண் விந்து அதிகமாயிருந் தால் இரண்டும் பெண்களாகப் பிறக்கும்.

**6. ஒரே கருவில் பல குழந்தைகள் தோன்றக் காரணம் யாது ?**

விடை : கருவில் சேரும் ஆண்-பெண் விந்துக்கள் வாததோஷத் தினால் எத்தனை பிரிவுகளாகின்றனவோ அத்தனை குழந்தைகள் பிறக்கும்.

**7. சில குழந்தைகள் காலம் கடந்து பிறப்பதேன் ?**

விடை : தாய் உண்ணும் உணவு கருவிற்கு முறைப்படி செல்லா விட்டாலும் அல்லது கருவுற்ற பின்பும் பெண் குறி யிலிருந்து பெருக்கு ஏற்பட்டாலும் கரு வளர்ச்சியடை யாமல் உலர்ந்துவிடுகிறது. இப்படிப்பட்ட நிலையில் தாமதமாக மகட்பேறு ஏற்படுகிறது.

**8. ஒரே பிரசவத்தில் பல குழந்தைகள் தோன்றி அவற்றில் ஒன்று வளர்ச்சி பெற்றும், மற்றவை இளைத்துமிருக்கக் காரணம் யாது?**

விடை : ஆண்-பெண் விந்துக்கள் பலவாறாகப் பிரியும்போது அவற்றிலுள்ள ஏற்றக் குறைவினால் வளர்ச்சியும் குறைவும் ஏற்படுகின்றன.

# மரண அறிகுறிகள்

1. இயற்கை நிறங்கள் பாதி உடலிலும், செயற்கை நிறங்கள் பாதி உடலிலும் இதுபோல் செயற்கை இயற்கை நிறங்கள் இடப்பக்கம், வலப்பக்கம், மேல்கீழ் உள்ளே, வெளியேயும் மாறுபட்டுக் காணப்படினும், நிறமாற்றம் முகத்திலும் வேறு இடங்களில் இருந்தாலும், வாட்டம், மகிழ்ச்சி, கடினத் தன்மை, எண்ணெய்ப்பசை ஆகியவை மாறி மாறி காணப் பட்டாலும் அவை மரண அறிகுறிகள்.

2. நோயாளியின் இயற்கையான குரலுக்கு மாறாக குரல் காரணமின்றித் தோன்றுவதும், மச்சம், மறு, வங்கு, பல வித கோடுகள் திடீரென உண்டாவதும் மரண அறிகுறிகள்.

3. நோயாளியின் உதடு கால் கை கண் சிறுநீர் மலம் நகம் இவற்றில் ஏற்படும் நிறமாற்றம் மரணக் குறியாகும்.

4. இரவும் பகலும் ஒருவனுடைய உடலில் பலவகையான மணம் வீசுமாயின் அவன் ஓராண்டுக்குள் இறப்பான்.

5. 1. எப்போதும் துடித்துக்கொண்டுள்ள உடலில் சிறு உறுப்புக்கள் துடிக்காதிருத்தல்.
   2. சூடாக உள்ள சில உறுப்புக்கள் குளிர்ச்சியடைதல்.
   3. மென்மையானவை கடினமாதல்.
   4. வழவழப்பானவை சொரசொரப்பாக ஆதல்.
   5. ஆண்குறி மிகவும் சுருங்கி இல்லாதது போலாதல்.
   6. பூட்டுக்கள் நழுவுதல் – விலகுதல் – இடம் மாறுதல்.
   7. மாமிசம், இரத்தம் சுண்டி விடுதல்.
   8. கடினத்தன்மை
   9. உடல் அசையாமை இவை காரணமின்றித் தோன்றுமாயின் இது பொதுவான மரணக் குறிகளாகும்.

**விரைவில் இறப்பவனின் அறிகுறிகள்**

உள்ளங்கால், முழங்கால், தொடை, இடை, வயிறு, விலாப் பக்கம், புட்டம், கை, கழுத்து, தாள்கள், உதடுகள், நெற்றி ஆகிய இடங்களில் வியர்த்தல், குளிர்ச்சியாதல், அசைவற்றும், கடினமாகவும் ஆதல், மாமிசம் இரத்தம் இழத்தல் என்பன மரண அறிகுறிகளாகும்.

**கண்களில் காணப்படும் மரண அறிகுறிகள்**

1. கண்கள் இயற்கையில் மாறுபட்டு அதிகமாக உள்ளடங்கியோ, வெளிவந்தோ, சுருங்கியோ, ஒன்று விரிந்து, மற்றொன்று சுருங்கியோ, மிகவும் கட்டு அவிழ்ந்தோ, மிகுதியாக கண் மூடித் திறந்தோ, எப்போதும் மூடிக்கொண்டு இருந்தும், எப்போதும் திறந்துகொண்டே இருந்தும், அதிகமாகக் கண் சிமிட்டியும், மயக்கப்பார்வை, விபரீதப் பார்வை, பார்வைக் குறைவு, கீரிக்குருடு, புறாக்குருடு, பொருட்கள் கறுமை, மஞ்சள், நீலம், மாநிறம், தாமிரம், பசுமை, மஞ்சள் கலந்த வெண்மை ஆகிய நிறங்களாகக் கண்களுக்குப் புலப்பட்டாலும் இவை மரண அறிகுறிகள்.

2. ஆகாயத்தை நிலத்தைப் போன்றும், நிலத்தை ஆகாயத்தைப் போன்றும் பொருள்களை தலைகீழாகவும் நேர்மாறாகவும் காண்பவன் மரணமடைவான்.

3. விழித்துக்கொண்டுள்ளபோது பிணங்கள், அரக்கர், பலவகை அற்புதங்களைக் காணல்.

4. நெருப்பை நீலமாகவும், ஒளியற்றதாகவும், கருப்பாகவும் காணுதல், மேகங்கள் இல்லாதபோது மின்னலையும், மேகங் களையும் காணுதல்.

5. சூரிய சந்திரர் கருப்பாடை அணிந்தவை போல் காணப் படுதல், கிரகணம் இல்லாக் காலங்களில் சூரிய சந்திர கிரக ணங்களைக் காணுதல்.

6. இரவில் சூரியன், பகலில் சந்திரன் இவற்றைக் காணல், நெருப்பின்றிப் புகை, ஒளியில்லா நெருப்பு இவைகளைக் காணுதல் என இவை யாவும் மரணக் குறிகளாகும்.

   1. நாய், ஒட்டகம், கழுதை ஆகியவற்றின் மீது அமர்ந்து செல்வதாகக் கனவு காணல் மரண அறிகுறி.

   2. பிணங்கள் சூழவிருந்து சிறுநீர் பருகுவது போன்ற கனவு காணல் மரண அறிகுறி.

   3. முறுக்கு, அப்பம், வடை போன்ற தின்பண்டங்கள் தின்பதுபோல் கனவு காண்பவன் வாந்தியால் மரண மடைவான்.

## குறிப்பிட்ட காலத்தில் மரணம் நேரக் காரணங்கள்

1. படுக்கையிலிருந்து எழுந்தவுடன் மூர்ச்சை அடைபவன், அடிக்கடி மயக்கம் அடைபவன், பிதற்றுபவன் ஏழு நாட்களில் இறப்பான்.

2. ஏறுமுக இறங்குமுக நோய்கள் ஒரே நேரத்தில் தோன்றித் துன்புறுத்த கிரகிணி நோய் ஏற்படுமானால் அவன் பதினைந்து நாட்களில் இறப்பான்.

3. உடல் மாமிசம் குன்றி எலும்பும் தோலுமாக இருப்பவன், உணவு வெறுத்து உடல் இளைத்துப் போகுபவன் ஒரு மாதத்தில் இறப்பான்.

4. தலைமயிர்களை பிடித்து இழுக்கும்போது வலி ஏற்படாமல் இருந்தால் நோயாளி மூன்று நாட்களிலும், நோயில்லாதவர் ஆறு நாட்களிலும் இறப்பர்.

5. நோயாளி துப்பிய எச்சில், மலம், விந்து, நீரில் மூழ்கி விடுமாயின் அவன் ஆயுள் முடிந்தது என அறிக.

6. பித்தம் சூட்டுடன் கலந்து நெற்றிப் பொட்டுக்களில் சேர்ந்து மூர்ச்சை அடையும் நோயாளி மூன்று இரவுக்குள் இறப்பான்.

7. வலிமை குன்றி நோய் வளர்ந்து உணவில் வெறுப்புகொண்ட நோயாளி மூன்று நாட்களில் இறப்பான்.

8. அடிவயிற்றில் அஷ்டீலா எனும் கட்டி தோன்றி மார்புப் பக்கம் ஏறி அதனால் இதயத்தில் பெருவலி ஏற்பட்டு, நீர் வேட்கை கொண்டவன் உடனே இறப்பான்.

10. ஒருவன் இட்ட பலியை காக்கை நாய் உண்ணாவிடின் அவன் ஓராண்டில் இறப்பான்.

11. அருந்ததி எனும் விண்மீனைக் காண இயலாதவன் ஓராண்டில் இறப்பான்.

12. தலையில் பிறைச்சந்திரன் போன்ற கோடு ஒன்றைச் செங்குத்தாகக் காண்பவன் ஆறு மாதங்களில் இறப்பான்.

13. நெற்றி, தலை, சிறுநீர்ப்பை ஆகிய இடங்களில் பிறைச்சந்திரன் போல் உருவம், நீல நிறமாகவும் கோணலானதுமான ரேகை இவை காணப்படின் ஒரு மாதத்தில் இறப்பான்.

# உடலிலுள்ள எலும்புகள்

| உறுப்புக்களின் பெயர்கள் | எண்ணிக்கை |
|---|---|
| 1. பற்கள் | 32 |
| 2. பற்களின் காப்புகள் (அடிப்பாகம்) | 32 |
| 3. நகங்கள் (கை, கால்கள் அனைத்திலும் சேர்ந்து) | 20 |
| 4. கைகள், கால் கணு எலும்புகள் | 60 |
| 5. விரல்கள் தொடங்கி மணிக்கட்டு வரை முடியும் குச்சி போன்ற எலும்புகள் | 20 |
| 6. சலாகாஸ்திகளுக்கு ஆதாரமாக கை, கால்கள் இரண்டிலுமுள்ள எலும்புகள் | 4 |
| 7. பாதத்தின் அடிப்படியிலுள்ள குதிகால் எலும்புகள் (பார்ஷிணி) | 2 |
| 8. கணுக்கால் எலும்புகள் | 4 |
| 9. கைமணிக்கட்டு எலும்புகள் | 2 |
| 10. முன்னங்கை எலும்புகள் (கட்டைவிரல் தவிர மற்றவை) (அரத்தி) உள்ளங்கை | 4 |
| 11. முட்டியின் எலும்புகள் (கணைக்கால்) | 4 |
| 12. முழங்கால் எலும்புகள் | 2 |
| 13. முழங்கால் மூட்டுகள் | 2 |
| 14. தொடை எலும்புகள் | 2 |
| 15. புய எலும்புகள் | 2 |
| 16. தோள், முன்புற, பின்புற எலும்புகள் | 2 |
| 17. தோளின் பலகை எலும்புகள் | 2 |
| 18. அக்ஷகம் | 2 |
| 19. ஜத்ரு(கழுத்து எலும்புகள்) | 2 |
| 20. தாலு (தாள்வாய் எலும்புகள்) | 2 |
| 21. பின்தட்டு இடுப்பு எலும்புகள் | 2 |
| 22. குறி எலும்பு | 1 |
| 23. முதுகுத் தண்டு எலும்புகள் | 45 |
| 24. கழுத்தெலும்புகள் | 15 |
| 25. மார்பு எலும்புகள் - முன்புற இணைப்புகள் | 12 |
| 26. விலா எலும்புகள் | 24 |
| 27. விலா பக்க எலும்புகளின் முன் இணைப்பு | 44 |
| 28. விலாச்சார் எலும்புகள் - பின் இணைப்புக்குழி | 24 |
| 29. தாடை - (உள்)எலும்பு (முகவாய்க்கட்டை எலும்பு) | 1 |
| 30. உள்தாடை பூட்டெலும்பு | 2 |
| 31. ஜத்ரு, தாடை, நெற்றிக்கூட்டெலும்பு | 1 |
| 32. கன்னத்தெலும்புகள் | 2 |
| 33. மண்டையோட்டு எலும்புகள் | 4 |
| ஆக மொத்தம் | 360 |

இவ்வாறு பற்கள், அவற்றின் ஈறுகள், நகங்கள் இவற்றுடன் சேர்த்து உடலிலுள்ள எலும்புகள் கணக்கிடப்பட்டுள்ளன.

## வாதத்தினால் தோன்றும் நோய்கள்

1. நகம் பிளத்தல்
2. உள்ளங்கால் உள்ளங்கை வெடித்தல்
3. கால்களில் குத்தல் வலி
4. கால்களில் தடுமாற்றம்
5. கால்கள் மரத்துப்போதல்
6. கணுக்கால் பிடிப்பு
7. ஆடுசதையில் இழுப்பு
8. நரம்புக் குடைச்சல்
9. முழங்காலில் வலி
10. மூட்டு நழுவுதல்
11. தொடை பருத்துப்போய் அசைவற்றுப் இருத்தல்
12. தொடையில் தளர்ச்சி
13. கால் முடமாதல்
14. மலக்குடல் வெளிவருதல்
15. ஆஸனவாய்க்கடுப்பு
16. விதை மேலே இழுத்துக் கொளல்
17. ஆண்குறி அசையாமை
18. தொடை இடுக்குகளில் வீக்கம்
19. பின்பாகத்தில் பிளப்பது போன்ற வலி
20. மலம் அதிகம் இளகுதல்
21. வாதம் மேல்நோக்கிச் செல்லுதல்
22. தாங்கித் தாங்கி நடத்தல்
23. முதுகெலும்பு வளைதல்
24. உடல் சுருங்குதல்
25. முள்ளந்தண்டில் பிடிப்பு
26. முதுகுப் பிடிப்பு
27. விலாப்பிடிப்பு
28. வயிற்றை சுருட்டிஇழுத்தல்
29. இதயம் இயங்காமை
30. இதயம் படபடத்தல்
31. இதயம் உராய்வது போன்ற வலி
32. மாரடைப்பு
33. மார்பில் குத்தல் வலி
34. கைகள் உலர்ந்து போதல்
35. கழுத்தை அசைக்க முடியாமை
36. கழுத்தின் இருபக்க நரம்புகள் அசையாமை
37. கழுத்தைப் பிளப்பது போன்ற வலி
38. தாடையில் பிளப்பது போன்ற வலி
39. உதட்டைப் பிளப்பது போன்ற வலி
40. தாடை அசைவற்றிருத்தல்
41. பற்களைப் பிளப்பது போன்ற வலி
42. பல் ஆடுதல்
43. பேச முடியாமை
44. குரலடைப்பு
45. பிதற்றல்
46. வாயில் துவர்ப்புச்சுவை
47. வாய் உலர்ந்து போதல்
48. சுவையறியாமை
49. நுகர்புலன் நுகராமை
50. காதுகளில் வலி
51. காது இரைச்சல்
52. பேரொலி மட்டும் கேட்டல்
53. காது செவிடாதல்
54. இமை அசையாமை
55. இமை சுருங்குதல்
56. கண் மறைப்பு
57. கண்களில் வலி

58. கண்கள் பிடுங்குவது போன்ற வலி
59. புருவம் உலருதல்
60. பொட்டில் பிளப்பது போன்ற வலி
61. நெற்றி பிளப்பது போன்ற வலி
62. தலைவலி
63. தலையில் தோல் வெடிப்பு
64. பக்கவாதம்
65. ஒருறுப்பு வாதம்
66. எல்லா உடல் வாதம்
67. நடுக்கவாதம்
68. உடல் விறைத்தல்
69. களைப்பு
70. மயக்கம்
71. நடுக்கம்
72. கொட்டாவி
73. அயர்வு
74. ஆர்வமின்மை
75. வறட்சி
76. சொரசொரப்பு
77. உடல்கருமை, செந்நிறமாதல்
78. உறக்கமின்மை
79. மனஅமைதி இழத்தல்
80. கடினத்தன்மை என்பன

## பித்தத்தினால் தோன்றும் நோய்கள்

1. நெருப்பின் அருகில் உள்ளது போன்ற எரிச்சல்
2. வியர்வை தோன்றாமல் உஷ்ணம் தோன்றுதல்
3. காட்டுத் தீ போன்ற எரிச்சல்
4. உடலுறுப்புகளில் எரிச்சல்
5. முகம், உதடு, அண்ணம் முதலியவற்றில் எரிச்சல்
6. உடலில் உள்ளே எரிச்சல்
7. தோல் எரிச்சல்
8. தோள்களில் எரிச்சல்
9. புகைந்த ஏப்பம்
10. புளிப்பு ஏப்பம்
11. கடும் சூடு
12. அதிகமாக வியர்த்தல்
13. உடலில் கெட்ட நாற்றம்
14. புலன்களின் வலிமை குறைதல்
15. இரத்தம் கடுமையாகி நீத்துப் போதல்
16. மாமிசம் கருத்து கெட்ட நாற்றம் வீசுதல்
17. தோல்—மாமிசம் பிளத்தல்
18. தோளின் உள் வெளிப் புறங்களில் வெடிப்பு
19. இரத்தகட்டி
20. இரத்தக் கொப்புளம்
21. தோலில் வட்டமான தடிப்பு
22. இரத்த பித்தம்
23. உடலும் மலமும் பசுமையாக மாறுதல்
24. உடல் மஞ்சளாதல்
25. இரத்தம் நீலநிறமாதல்
26. அக்குள், தோள் விலாக்களில் கொப்புளம்
27. மஞ்சள் காமாலை
28. வாயில் கசப்புச்சுவை
29. வாயில் இரத்த மணம்
30. வாயில் கெட்ட நாற்றம்
31. நீர் வேட்கை மிகுதல்

32. உணவில் திருப்தியின்மை
33, வாய்ப்புண்
34. தொண்டைப்புண்
35. கண்நோய்
36. ஆஸனவாயில் புண்
37. ஆண்குறியில் புண்
38. கண் இருண்டுபோதல்
39. இரத்தப் பெருக்கு
40. கண், சிறுநீர், மலம், பசுமை கலந்த மஞ்சள் நிறமாதல்.

## கபத்தினால் தோன்றும் நோய்கள்

1. எப்போதும் சாப்பிட்டது போன்ற உணர்ச்சி
2. மயக்கத்துடன் கூடிய சோம்பல்
3. மிக்க உறக்கம்
4. உடல் திமிர்தல்
5. உடல் பருத்து பளுவாதல்
6. செயலில் ஆர்வமின்மை
7. வாயில் இனிப்புச்சுவை
8. உமிழ்நீர் சுரத்தல்
9. அடிக்கடி கபம் வெளியாதல்
10. மலம் அதிகமாதல்
11. கபம் அதிகமாதல்
12. இதயத்தில் பூசியது போன்ற அடைப்பு
13. தொண்டையில் கபம் சுற்றுதல்
14. நரம்பு இரத்தக் குழாய்களில் நிறைந்திருப்பது போன்ற நிலை
15. கலகண்டம் எனும் கண்டமாலை
16. உடல் பருத்தல்
17. உடல் குளிர்ச்சி
18. மார்பில் அரிப்பு குத்தலுடன் வீக்கம்
19. உடல் வெளுத்தல்
20. கண், சிறுநீர், மலம் வெண்மை நிறமாதல்

# முக்கிய நோய்கள்

# சில மூலிகை - மருந்துகள்

# அத்தியாயப் பெயர்கள்

## (வடமொழியில்)

| அத்தியாய எண்கள் | வடமொழிப் பெயர்கள் | மொத்த ஸ்லோகங்கள் |
|---|---|---|
| **ஸூத்ரஸ்தானம்** | | |
| 1. | தீர்கம்ஜீவிதீயம் | 140 |
| 2. | அபாமார்க தண்டுலீயம் | 36 |
| 3. | ஆரக்வதீயம் | 30 |
| 4. | ஷட்விரேசனசதாச்ரிதீயம் | 59 |
| 5. | மாத்ராசிதீயம் | 111 |
| 6. | தஸ்யாசிதீயம் | 51 |
| 7. | நவேகான் தாரணீயம் | 63 |
| 8. | இந்திரியோபக்ரமணீயம் | 34 |
| 9. | குட்டாக சதுஷ்பாதம் | 28 |
| 10. | மஹா சதுஷ்பாதம் | 24 |
| 11. | திஸ்ரைஷணீயம் | 65 |
| 12. | வாதகலாகலீயம் | 17 |
| 13. | ஸ்நேஹாத்யாயம் | 100 |
| 14. | ஸ்வேதவிவரணம் | 74 |
| 15. | உபகல்பநீயம் | 25 |
| 16. | சிகித்ஸாப்ராப்ருதீயம் | 41 |
| 17. | கியந்த: சிரஸீயம் | 121 |
| 18. | த்ரிசோதீயம் | 63 |
| 19. | அஷ்டோதரீயம் | 9 |
| 20. | மஹாரோகாத்யாயம் | 25 |
| 21. | அஷ்டௌநிந்திதீயம் | 62 |
| 22. | லங்கன ப்ரஹ்மணீயம் | 34 |
| 23. | ஸந்தர்ப்பணீயம் | 40 |
| 24. | விதிசோணிதீயம் | 58 |

| | | | |
|---|---|---|---|
| 25. யக்ஞ:புருஷீயம் | .. | .. | 84 |
| 26. ஆத்ரேய பத்ர காப்பீயம் | .. | .. | 112 |
| 27. அந்நபானவிதி | .. | .. | 352 |
| 28. விவிதாசிதபீதீயம் | .. | .. | 48 |
| 29. தசப்ராணாயதநீயம் | .. | .. | 14 |
| 30. அர்த்தேதசமகாமூலீயம் | .. | .. | 90 |
| | | ஆகமொத்த ஸ்லோகங்கள் | 2020 |

**நிதானஸ்தானம்**

| | | | |
|---|---|---|---|
| 1. ஜ்வரநிதானம் | .. | .. | 44 |
| 2. ரக்தபித்த நிதானம் | .. | .. | 29 |
| 3. குல்மநிதானம் | .. | .. | 18 |
| 4. ப்ரமேஹநிதானம் | .. | .. | 55 |
| 5. குஷ்டநிதானம் | .. | .. | 16 |
| 6. சோஷநிதானம் | .. | .. | 16 |
| 7. உன்மாத நிதானம் | .. | .. | 24 |
| 8. அபஸ்மார நிதானம் | .. | .. | 44 |
| | | ஆகமொத்த ஸ்லோகங்கள் | 246 |

**விமானஸ்தானம்**

| | | | |
|---|---|---|---|
| 1. ரஸ விமானம் | .. | .. | 28 |
| 2. த்ரிவிதகுக்ஷீயம் | .. | .. | 19 |
| 3. ஜனபதோத்வம்ஸநீயம் | .. | .. | 52 |
| 4. த்ரிதரோக விசேஷ விஞ்ஞாநீயம் | | .. | 14 |
| 5. ஸ்ரோதோ விமானம் | .. | .. | 31 |
| 6. ரோகாநீகம் | .. | .. | 32 |
| 7. வியாதிதரூபீயம் | .. | .. | 22 |
| 8. ரோகபிஷக்ஜிதீயம் | .. | .. | 157 |
| | | ஆகமொத்த ஸ்லோகங்கள் | 355 |

**சாரீரஸ்தானம்**

| | |
|---|---|
| 1. கதிதாபுருஷீயம் .. .. | 156 |
| 2. அதுல்யகோத்ரீயம் .. .. | 48 |
| 3. குட்டீகா கர்பாவக்ராந்தி சாரீரம் .. .. | 45 |
| 4. மஹதீகர்பாவக்ராந்தி சாரீரம் .. .. | 45 |
| 5. புருஷவிசயம் .. .. | 26 |
| 6. சரீரவிசயம் .. .. | 34 |
| 7. சரீரஸங்க்யாசாரீரம் .. .. | 30 |
| 8. ஜாதிஸூத்ரீயம் .. .. | 69 |
| ஆக மொத்த ஸ்லோகங்கள் | 425 |

**இந்திரியஸ்தானம்**

| | |
|---|---|
| 1. வர்ணஸ்வரீயம் .. .. | 26 |
| 2. புஷ்பிதகம் இந்திரியம் .. .. | 23 |
| 3. பரிமர்சனீயம் இந்திரியம் .. .. | 7 |
| 4. இந்திரியாநீகம் இந்திரியம் .. .. | 27 |
| 5. பூர்வரூபியம் இந்திரியம் .. .. | 47 |
| 6. கதமாநிசரீரீயம் இந்திரியம் .. .. | 25 |
| 7. பன்னரூபீயம் இந்திரியம் .. .. | 32 |
| 8. அவாக்சிரஸீயம் இந்திரியம் .. .. | 27 |
| 9. யஸ்யச்யாவநிமித்தீயம் இந்திரியம் .. | 24 |
| 10. ஸத்யோமரணீயம் இந்திரியம் .. .. | 21 |
| 11. அணுஜ்யோதீயம் இந்திரியம் .. .. | 29 |
| 12. கோமயசூர்ணீயம் இந்திரியம் .. .. | 90 |
| ஆகமொத்த ஸ்லோகங்கள் | 377 |

# அத்தியாயப் பெயர்கள் (தமிழில்)

| அத்தியாய வரிசை எண்கள் | அத்தியாயங்களின் தமிழ்ப் பெயர்கள் | பக்க எண்கள் முதல் — வரை |
|---|---|---|

## 1. ஸூத்ரஸ்தானம்

## 2. நிதானஸ்தானம்



## 3. விமானஸ்தானம்

## 4. சாரீரஸ்தானம்



## 5. இந்திரியஸ்தானம்

# பொருளடக்கம்

## ஸூத்ரஸ்தானம்

### முதல் அத்தியாயம்—தீர்க்கஞ்ஜீவிதீயம் பக்கம்

முதல் அத்தியாயம் முற்றும்.

## இரண்டாவது அத்தியாயம்—அபாமார்க தண்டுலீயம்

பக்கம்



இரண்டாம் அத்தியாயம் முற்றும்

## மூன்றாவது அத்தியாயம்—ஆரக்வதீயம்



மூன்றாம் அத்தியாயம் முற்றும்

## நான்காவது அத்தியாயம்—ஷட்விரேசன சதாச்ரிதீயம்

நான்காம் அத்தியாயம் முற்றும்

## ஐந்தாவது அத்தியாயம்—மாத்ராசிதீயம்

பக்கம்



ஐந்தாம் அத்தியாயம் முற்றும்

## ஆறாவது அத்தியாயம்—தஸ்யாசிதீயம்



ஆறாம் அத்தியாயம் முற்றும்

## ஏழாவது அத்தியாயம்—ந வேகான் தாரணீயம்

பக்கம்

பக்கம்



ஏழாம் அத்தியாயம் முற்றும்

## எட்டாவது அத்தியாயம்—இந்திரியோபக்ரமணீயம்

எட்டாம் அத்தியாயம் முற்றும்

## ஒன்பதாவது அத்தியாயம்—குட்டாக சதுஷ்பாதம்



ஒன்பதாம் அத்தியாயம் முற்றும்

## பத்தாவது அத்தியாயம்—மகாச்துஷ்பாதம்

பக்கம்



பத்தாம் அத்தியாயம் முற்றும்

## பதினோராவது அத்தியாயம்—திஸ்ரைஷணீயம்

பக்கம்



பதினோறாம் அத்தியாயம் முறறும்

பக்கம்

பதிமூன்றாம் அத்தியாயம் முற்றும்

## பதினான்காவது அத்தியாயம்—ஸ்வேதாத்யாயம்

பதினான்காம் அத்தியாயம் முற்றும்

## பதினைந்தாவது அத்தியாயம்—உபகல்பநீயம்



பதினைந்தாம் அத்தியாயம் முற்றும்

## பதினாறாம் அத்தியாயம்—சிகித்ஸாப்ராப்ருதீயம்

பதினாறாம் அத்தியாயம் முற்றும்

## பதினேழாவது அத்தியாயம்—கியந்தசிரஸீயம்

பதினேழாம் அத்தியாயம் முற்றும்

## பதினெட்டாவது அத்தியாயம்—த்ரிசோபீயம்

பதினெட்டாம் அத்தியாயம் முற்றும்

## பத்தொன்பதாவது அத்தியாயம்—அஷ்டோதரீயம்

பத்தொன்பதாவது அத்தியாயம் முற்றும்

## இருபதாவது அத்தியாயம்—மகாரோகாத்யாயம்

இருபதாவது அத்தியாயம் முற்றும்

## இருபத்தோறாவது அத்தியாயம்—அஷ்டௌநிந்திதீயம்



இருபத்தோறாவது அத்தியாயம் முற்றும்

## இருபத்திரண்டாவது அத்தியாயம்—லங்கன ப்ரும்ஹணீயம்



இருபத்திரண்டாவது அத்தியாயம் முற்றும்

## இருபத்திமூன்றாவது அத்தியாயம்—ஸந்தர்ப்பணீயம்



இருபத்திமூன்றாவது அத்தியாயம் முற்றும்

## இருபத்திநான்காவது அத்தியாயம்—விதிசோணிதீயம்



இருபத்திநான்காவது அத்தியாயம் முற்றும்

## இருபத்தைந்தாம் அத்தியாயம்—யஜ்ஜபுருஷீயம்

இருபத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்

## இருபத்தாறாவது அத்தியாயம்—ஆத்ரேயபத்ர காப்யீயம்

## இருபத்தாறாவது அத்தியாயம் முற்றும்

## இருபத்தேழாம் அத்தியாயம்—அன்ன பான விதி

பக்கம்

இருபத்தேழாம் அத்தியாயம் முற்றும்

**இருபத்தெட்டாவது அத்தியாயம்—விவித அசித பீதீயம்**



இருபத்தெட்டாவது அத்தியாயம் முற்றும்

**இருபத்தொன்பதாவது அத்தியாயம்—தசப்ராணாயதநீயம்**



இருபத்தொன்பதாவது அத்தியாயம் முற்றும்

பக்கம்

## முப்பதாவது அத்தியாயம்—அர்த்தே தசமஹாமூலீயம்



முப்பதாம் அத்தியாயம் முற்றும்

**சரகஸம்ஹிதை—ஸூத்திரஸ்தானம் முற்றும்**

# சரகஸம்ஹிதை—நிதானஸ்தானம்

## முதல் அத்தியாயம்—ஜ்வர நிதானம்

முதல் அத்தியாயம் முற்றும்

## இரண்டாவது அத்தியாயம்—ரத்த பித்த நிதானம்



இரண்டாவது அத்தியாயம் முற்றும்

## மூன்றாவது அத்தியாயம்—குன்ம நிதானம்



மூன்றாவது அத்தியாயம் முற்றும்

## நான்காவது அத்தியாயம்—ப்ரமேஹநிதானம்

நான்காவது அத்தியாயம் முற்றும்

## ஐந்தாவது அத்தியாயம்—குஷ்ட நிதானம்



ஐந்தாவது அத்தியாயம் முற்றும்

பக்கம்

## ஆறாவது அத்தியாயம்—சோஷ நிதானம்



ஆறாவது அத்தியாயம் மூற்றும்

## ஏழாவது அத்தியாயம்—உன்மாத நிதானம்



ஏழாவது அத்தியாயம் முற்றும்

பக்கம்

## எட்டாவது அத்தியாயம்—அபஸ்மார நிதானம்



எட்டாவது அத்தியாயம் முற்றும்

**சரகஸம்ஹிதை நிதானஸ்தானம் முற்றும்**

# சரகஸம்ஹிதை—விமான ஸ்தானம்

## முதல் அத்தியாயம் — ரஸவிமானம்



முதல் அத்தியாயம் முற்றும்

பக்கம்

## இரண்டாவது அத்தியாயம்—த்ரிவித குக்ஷீயவிமானம்



இரண்டாவது அத்தியாயம் முற்றும்

## மூன்றாவது அத்தியாயம்—ஜனபதோத்வம்ஸனீய விமானம்



மூன்றாவது அத்தியாயம் முற்றும்

பக்கம்

## நான்காம் அத்தியாயம்—த்ரிவிதரோக விசேஷவிக்ஞானீயம்



நான்காம் அத்தியாயம் முற்றும்

## ஐந்தாம் அத்தியாயம்—ஸ்ரோதோவிமானம்

ஐந்தாம் அத்தியாயம் முற்றும்

## ஆறாம் அத்தியாயம்—ரோகாநீக விமானம்



ஆறாம் அத்தியாயம் முற்றும

பக்கம்

## ஏழாவது அத்தியாயம்—வியாதிதரூபீய விமானம்



ஏழாவது அத்தியாயம் முற்றும்

## எட்டாவது அத்தியாயம்—ரோகபிஷக்ஜிதீயம்

**எட்டாவது அத்தியாயம் முற்றும்**

**சரகஸம்ஹிதை விமானஸ்தானம் முற்றும்**

# சரகஸம்ஹிதை — சாரீரஸ்தானம்

## முதல் அத்தியாயம் — கதிதாபுருஷீயம்

பக்கம்

முதல் அத்தியாயம் முற்றும்

## இரண்டாவது அத்தியாயம் — அதுல்யகோத்ரீயம்

இரண்டாவது அத்தியாயம் முற்றும்

## மூன்றாவது அத்தியாயம் — குட்டிகாகர்ப்பாவக்ராந்தி



மூன்றாவது அத்தியாயம் முற்றும்

பக்கம்

## நான்காவது அத்தியாயம்—மஹாதீகர்ப்பாவக்ராந்தி

நான்காவது அத்தியாயம் முற்றும்

பக்கம்

## ஐந்தாவது அத்தியாயம் — புருஷவிசயம்



ஐந்தாவது அத்தியாயம் முற்றும்

## ஆறாவது அத்தியாயம் — சரீரவிசயம்

பக்கம்



ஆறாவது அத்தியாயம் முற்றும்

பக்கம்

எட்டாவது அத்தியாயம் முற்றும்

**சரகஸம்ஹிதை—சாரீரஸ்தானம் முற்றும்**

# சரகஸம்ஹிதை—இந்திரியஸ்தானம்

## முதலாம் அத்தியாயம்—வர்ணஸ்வரீயம் இந்திரியம்



முதல் அத்தியாயம் முற்றும்

## இரண்டாவது அத்தியாயம்—புஷ்பிதகம் இந்திரியம்



இரண்டாவது அத்தியாயம் முற்றும்

## மூன்றாவது அத்தியாயம்—பரிமர்சனீயம் இந்திரியம்



மூன்றாவது அத்தியாயம் முற்றும்

பக்கம்

## நான்காவது அத்தியாயம் — இந்திரியாநீகம் இந்திரியம்



நான்காவது அத்தியாயம் முற்றும்

## ஐந்தாவது அத்தியாயம் — பூர்வரூபீயம் இந்திரியம்



ஐந்தாவது அத்தியாயம் முற்றும்

## ஆறாவது அத்தியாயம் — கதமாநி சரீரீயம் இந்திரியம



ஆறாவது அத்தியாயம் முற்றும்

## ஏழாவது அத்தியாயம் — பந்நரூபீயம் இந்திரியம்

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றும்

**சரகஸம்ஹிதை — இந்திரியஸ்தானம் முற்றும்**



**சரகஸம்ஹிதை — முதற்பகுதி முற்றும்**

•

# சரக ஸம்ஹிதை



ஸ்தானங்கள்

1. ஸூத்ரஸ்தானம்
2. நிதானஸ்தானம்
3. விமானஸ்தானம்
4. சாரீரஸ்தானம்
5. இந்திரியஸ்தானம்

143281

LB

N85·1

# சரக ஸம்ஹிதை

•

## ஸூத்ரஸ்தானம்

௨

# சரகஸம்ஹிதை

## ஸூத்ரஸ்தானம்

### முதல் அத்தியாயம்

## *தீர்க்கஞ்ஜீவிதீயம்

'தீர்க்கஞ்ஜீவிதீயம்' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1—2

### 1. ஆயுர்வேத நூலைக் கற்பதற்காக பரத்வாஜ முனிவர் இந்திரனிடம் செல்லுதல்.

கடினமான தவத்தைச் செய்கின்ற பரத்வாஜ முனிவர், நீண்ட ஆயுளைத் தேடியவராக அண்டியவர்களைக் காப்பாற்றுவதைக் கடமையாகக் கொண்டவனும் அண்டியவர்களின் துன்பங்களைப் போக்கடிப்பவனுமான தேவர் கோமானான இந்திரனைச் சரணடைந்தார். 3

### 2. ஆயுர்வேதத்தைக் கற்ற, கற்பித்தவர்களின் வரிசை

நான்முகனிடமிருந்து முதலில் ஆயுர்வேதத்தை முழுவதையும் முறைப்படி தக்ஷபிரஜாபதி என்பவர் கற்றார். அதை அவர் அச்வினி தேவர்களுக்குக் கற்பித்தார். அச்வினி தேவர்களிடமிருந்து அதைத் தேவேந்திரன் கற்றுணர்ந்தான். தேவேந்திரனை மாமுனிவர்களால் தூண்டப்பட்ட பரத்வாஜமுனிவர் அணுகினார். 4—5

ஆயுள் முழுவதும், தவம், பட்டினி கிடத்தல், கற்றல், புலனடக்கம், நோன்பு இவற்றைக் கடைபிடித்து வரும் மாமுனிவர்களுக்கும், மற்ற மானிடர்களுக்கும் நோய்கள் வாழ்க்கைக்கு இடையூறாக உண்டானதைக் கண்டு உயிரினங்களின்மீது கருணை கொண்ட நற்செயல்களைச் செய்கின்ற மாமுனிவர்கள் இமய மலையில் ஓர் அழகான சோலையில் கூடினர். 6—7

---

*தீர்க்கஞ்ஜீவிதீயம் — நீண்ட வாழ்வு வாழ்வதற்கான வழிமுறைகளை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

அங்கிரசர், ஜமதக்னி, வசிஷ்டர், கச்யபர், பிருகு, ஆத்ரேயர், கௌதமர், ஸாங்கியர், புலத்தியர், நாரதர், அஸிதர், அகத்தியர், வாமதேவர், மார்க்கண்டேயர், ஆச்வலாயனர், பாரிக்ஷி, பிக்ஷு ஆத்ரேயர், பரத்வாஜர், கபிஞ்ஜலர், விசுவாமித்திரர், ஆச்வரதர், பார்கவர், சியவனர், அபிஜித், கார்க்கியர், சாண்டில்யர், கௌண்டின்யர், வார்க்ஷி, தேவலர், காலவர், ஸாங்கிருத்யர், வைஜவாபி, குசிகர், பாதராயணர், படிசர், சரலோமர், காம்பியர், காத்யாயனர், காங்காயனர், கைகசேயர், தௌம்யர், மரீசி, காச்யபர், சர்க்கராக்ஷர், ஹிரண்யாக்ஷர், லோகாக்ஷர், பைங்கி, சௌனகர், சாகுநேயர், மைத்ரேயர், மைமதாயின், வைகாநசர், வாலகில்யர், மேலும் மற்ற மாமுனிவர்கள் என இவர்கள் யாவரும் பிரும்மஞானம் (பிரும்மத்தைப் பற்றிய அறிவு) புலனடக்கம், கடமை இவற்றைச் செல்வமாக உடையவர்கள். கொழுந்துவிட்டெரியும் வேள்வித் தீயைப் போல் தவ ஒளியினால் விளங்குபவர்கள். அப்படிப்பட்ட முனிவர்கள் இமயமலையின் சாரலில் அமைதியாக அமர்ந்து உலக நன்மைக்காக கீழ்க்கண்ட பொருளைப் பற்றிப் பேசத் தொடங்கினார்கள். 8–14

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு வகையான உறுதிப்பேற்றிற்கு (புருஷார்த்தம்) ஆரோக்யமே சிறந்த காரணமாகும். நன்மையளிக்கக் கூடியதும் சிறந்ததுமான ஆரோக்கியமான வாழ்க்கையை நோய் அழித்து, மானிட உலகில் மிகுந்த இடையூறாகவும் தோன்றியுள்ளது. அந்நோயை நீக்குவதற்கான வழி யாது என்று அறிய முனிவர்கள் கூட்டம் தியானத்தில் ஆழ்ந்து, அகக்கண்ணால் இந்திரனே நமக்குப் புகலிடம் என அறிந்துகொண்டது. நாம் அவரைச் சரணடைந்தால் அந்தத் தேவர்களின் தலைவன் இவ்விடையூறுகளைத் தவிர்க்க வழி கூறுவான் என முடிவும் செய்தது. 15-17

இந்திரனிடம் இதைக் கேட்பதற்காக அவன் இருப்பிடத்திற்கு எவர் செல்வது என்ற கேள்வி எழவே முதன்முதலில் பரத்வாஜர் ''என்னை அங்கு அனுப்புங்கள்'' எனக் கூறினார். அதனால் மாமுனிவர்களின் கூட்டமும் பரத்வாஜரை இந்திரனிடம் அனுப்புவதற்குத் தீர்மானித்தது. 18–19

அவ்வாறே பரத்வாஜர் இந்திரனின் இருப்பிடம் சென்று தேவர்கள், முனிவர்கள் இவர்களின் கூட்டத்தின் நடுவில் அமர்ந்திருப்பவரும், நெருப்பைப் போல் விளங்குகின்றவரும், பலன் என்ற அசுரனைக் கொன்றவருமான இந்திரனைக் கண்டார்.

இந்திரனிடம் சென்று ''தங்களுக்கு வெற்றி உண்டாகட்டும்'' என்று ஆசி கூறி அறிவாளியான பரத்வாஜர், முனிவர்கள் கூறியதை வணக்கத்துடன் தெரிவித்தார்.

''எல்லா உயிரினங்களுக்கும் அச்சத்தை விளைவிக்கும் நோய்கள் உலகில் உண்டாயிருக்கின்றன. தேவர் தலைவனே! தகுந்த முறையில் அந்த நோய்களை நீக்க வழியை என்னிடம் கூறுங்கள்'' என வேண்டினார்.

அப்பொழுது பூஜிக்கத்தக்க இந்திரன் பரத்வாஜரைச் சிறந்த அறிவாளியாகக் கருதி சிறு சொற்கள் மூலமாக முழுமையான ஆயுர் வேதத்தைச் சுருக்கமாக உபதேசித்தருளினார். 20–23

### 3. ஆயுர்வேதத்தின் தோற்றுவாய்

நோய்கள் தோன்றுவதற்கான காரணம், நோய்களின் இலக்கணம், மூலிகைகளின் அறிவு என்ற மூன்று ஸூத்ரங்களில் அடங்கியதும், ஆரோக்கிய நிலையில் உள்ளவர்களுக்கும் பிணியாளர்களுக்கும் பயன்படக்கூடியதும், அழிவற்றதும், புண்ணியத்தை அளிக்கக்கூடியதுமான இந்த ஆயுர்வேதத்தை நான்முகன் முதலில் அறிந்தார்.

தோற்றமும் முடிவுமற்றதும், மூன்று ஸூத்ரங்களில் அடங்கியதுமான முழுமையான ஆயுர்வேதத்தை அறிவிற் சிறந்தவரான பரத்வாஜமுனிவர் ஒரே மனத்துடன் முறைப்படி விரைவில் கற்றுணர்ந்தார். 24–25

பரத்வாஜர் ஆயுர்வேத நூலின் அறிவைப்பெற்று அம்முறையைக் கடைபிடித்து இன்பமான நீண்ட ஆயுளைப் பெற்றார். பிறகு இந்திரனிடமிருந்து தாம் கற்றுணர்ந்த ஆயுர்வேதத்தை மற்ற முனிவர்களுக்கும் ஏற்றத்தாழ்வின்றி எடுத்துரைத்தார். 26

நீண்ட ஆயுளை விரும்புகிற முனிவர்களின் குழு, மக்களுக்கு நன்மையளிக்கக்கூடியதும், ஆயுளை வளர்க்கக்கூடியதுமான அந்த ஆயுர்வேதத்தை பரத்வாஜரிடமிருந்து பெற்றது. 27

ஆயுர்வேத நூலை நன்கு கற்றுணர்ந்த அம்மாமுனிவர்கள் தங்களுடைய அகக்கண்ணால் **ஸாமான்யம், விசேஷம், குணம், திரவியம், கர்ம, ஸமவாயம்** என இந்த ஆறு பொருட்களை முறைப்படி கண்டறிந்து ஆயுர்வேத நூலில் கூறியவற்றைக் கடைபிடித்து இன்ப வாழ்வையும் நீண்ட ஆயுளையும் பெற்றனர். 28–29

பரத்வாஜ முனிவரின் சீடரான, எல்லோரிடமும் அன்பு பாராட்டுகின்ற ஆத்ரேய புனர்வசு என்பவர், எல்லா உயிர்த் தொகுதிகளின் மீதும் கருணை உள்ளங்கொண்டு, புண்ணியத்தைத் தரும் ஆயுர்வேத நூலை **அக்னிவேசர், பேலர், ஜதூகர்ணர், பராசரர், ஹாரீதர், க்ஷாரபாணி** என ஆறு சீடர்களுக்கு உபதேசித்தார். அந்த ஆறு சீடர்களும் ஆத்ரேயரிடமிருந்து முறைப்படி ஆயுர்வேதத்தைக் கற்றுணர்ந்தனர். 30–31

அவர்களுள் சிறந்த அறிவாளியாகத் திகழ்ந்த அக்னிவேசர் என்பவர் முதன்முதலில் ஆயுர்வேத நூலை இயற்றினார். அவரைப் பின்பற்றி மற்ற பேலர் போன்ற சீடர்களும் தங்கள் தங்கள் பெயரில் ஆயுர்வேத நூல்களை இயற்றி முனிவர்கள் கூட்டத்துடன் கூடிய ஆத்ரேய முனிவருக்குத் தாங்கள் இயற்றிய நூல்களைப் படித்துக் காண்பித்தனர். 32–33

அவர்களின், புண்யத்தை அளிக்கக்கூடிய ஆயுர்வேத நூல்களைக் கேட்டு முனிவர்கள் மகிழ்ச்சியடைந்தனர். முறைப்படி இயற்றப்பட்டிருப்பதாகவும் ஒப்புக்கொண்டனர். பிறகு எல்லா உயிரினங்களிடமும் கருணை கொண்ட முனிவர்கள் ஆயுர்வேத நூல்களை இயற்றிய சீடர்களைப் புகழ்ந்து, ஒரே குரலில் ''நீங்கள் எல்லோரும் எல்லாப் பிராணிகளிடம் நல்லவிதமாக அன்பு கொண்டிருக்கிறீர்கள்'' என்று உரக்கக் கூறினர். 34–35

தேவர் உலகத்திலிருந்த தேவர்களுடன் கூடிய மாமுனிவர்கள் அந்த நல்ல புனிதமான சொற்களைக் கேட்டு மகிழ்ந்தனர். ஆகாயத்திலிருந்து அவர்கள் மகிழ்ச்சியால் கூறிய ''நன்று நன்று'' என்ற கம்பீரமான சொற்கள் மூவுலகிலும் எதிரொலித்தன. அப்பொழுது காற்று இனிமையாக வீசியது. திசைகள் யாவும் ஒளியினால் ஒளிர்ந்தன. நீருடன் கலந்த மலர்மாரி ஆகாயத்திலிருந்து பொழிந்தது. 36–38

பிறகு புண்யத்தைத் தரக்கூடிய ஆயுர்வேத நூலை இயற்றிய தன் பயனாய் அக்னிவேசர் போன்ற நூலாசிரியர்களின் உடலில், அறிவு, அருஞ்செய்கை, நினைவாற்றல், சமயோசிதஅறிவு, தைரியம், புகழ், பொறுமை, இரக்கம் என்றஎண்வகைப் பண்புகளுக்கு உரிய கடவுளர்கள் புகுந்து வசித்ததன் பயனாய் மேற்கூறிய பண்புகள் அவர்களிடம் பொலிவு பெற்றுத் திகழ்ந்தன. இவ்விதம் அம்முனிவர்களால் இயற்றப்பட்ட ஆயுர்வேத நூல்கள் மாமுனிவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு உயிரினங்களின் நலனைக் கருதி உலகில் நிலைபெற்றன. 39–40

## 4. ஆயுர்வேத நூலின் இலக்கணம்

ஆயுளின் ஆரோக்கிய நிலை, நோயுற்ற நிலை, இன்ப நிலை, துன்ப நிலை, ஆயுள், ஆயுளின் நன்மை, தீமை பயக்கும் செயல்கள், ஆயுளின் அளவு இவற்றை விளக்கும் நூல் ஆயுர்வேத நூல் எனக் கருதப்படும். 41

## 5. ஆயுளின் இலக்கணம்

உடல், உறுப்புக்கள், புலன்கள், மனம், ஆன்மா இவற்றின் சேர்க்கையை ஆயுள் எனக் கூறுகிறோம். தாரி, ஜீவிதம், நித்யகம், அநுபந்தம் என்ற மாற்றுப் பெயர்கள் இதற்கு உண்டு. 42

## 6. ஆயுர்வேதத்தின் சிறப்பு

நன்கு அறிந்தவர்கள் இந்த ஆயுர்வேதத்தை மிகவும் சிறந்தது எனக் கொண்டாடுகிறார்கள். இந்த ஆயுர்வேதம் மக்களுக்கு இம்மை, மறுமை இரண்டிலும் மிகவும் நன்மையை அளிக்கவல்லது. 43

ஆயுர்வேத நூலில் ஸாமான்யம், விசேஷம் என இரண்டு சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. திரவியம், குணம், கர்மம் இவற்றை எல்லாக் காலங்களிலும் வளர்க்கச் செய்வது ஸாமான்யம் எனப்படும். இவற்றின் குறைவுக்குக் காரணமானது விசேஷமாகும். இந்த இரண்டின் செயல்களினால் தோஷங்கள், தாதுக்கள், மலங்கள் இவற்றின் வளர்ச்சியும், குறைவும் ஏற்படுகின்றன. 44

பல பொருள்களின் பொதுத் தன்மையைக் கொண்டு ஒன்றேயென்ற அறிவை ஏற்படுத்தக்கூடியது ஸாமான்யம் என்றும், பல பொருள்களை வெவ்வேறாகப் பிரித்துக் காட்டும் அறிவை ஏற்படுத்துவது விசேஷம்என்றும் கருதப்படுகிறது. அதாவதுஸாமான்யம் என்பது ஸமானமான தன்மையைக் குறிப்பது, விசேஷம் என்பது பிரித்துக் காட்டுவது 45

## 7. ஆயுர்வேதத்திற்கு இருப்பிடம்

மனம், ஆன்மா, உடல் ஆகிய இவை மூன்று தூண்களைப் போன்றவை. இந்தச் சேர்க்கையால்தான் உலகம் நிலை பெற்றுள்ளது. இதில்தான் வினைப் பயனும் அறிவும் நிலைபெறுகின்றன. 46

ஆயுர்வேதத்தில் மனம், ஆன்மா, உடல் இவற்றின் சேர்க்கையையே ஆயுர்வேதம், புருஷன் என்கிறது. இந்த புருஷனே

ஆயுர்வேதத்திற்கு இருப்பிடமாகிறான். அவனுக்காகவே ஆயுர்வேதம் இயற்றப்படுகிறது. 47

## 8. பொருள்களின் விளக்கம்

ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் இவ்வைந்து பெரும் பூதங்கள், ஆன்மா, மனம், காலம், திசை என்ற நான்கு ஆக இந்த ஒன்பதும் திரவியம் (பொருள்) எனக் கூறப்படுகின்றன. அப்பொருள் உயிருள்ளது (சேதனம்), உயிரற்றது (அசேதனம்) என இருவகைப்படும். புலன்களுடன் சேர்ந்தவை உயிருள்ளவை. சேராதவை உயிரற்றவை. அதாவது புலன்களுடன் கூடிய மனிதன் மிருகம், பறவை போன்றவை சேதனம் என்றும், புலன்களற்ற கல், மண் போன்ற ஜடப்பொருட்கள் அசேதனம் என்றும் கூறப்படுகின்றன. (புலனுணர்வுடன் செயல்படும் மரம், செடி, கொடிகளும் உயிருள்ளவை எனக் கருதப்படுகிறது.) 48

## 9. குணங்களின் பிரிவு

பொதுவாகக் குணங்கள் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன,

### (அ) இந்திரிய குணங்கள் (புலன்களைச் சார்ந்தவை)

இவை ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என ஐவகைப்படும்.

### (ஆ) உடல் அல்லது பொருளைச் சார்ந்த குணங்கள்

குரு (பளு), லகு (இலேசு), சீதம் (குளிர்ச்சி), உஷ்ணம் (சூடு), ஸ்நிக்தம் (நைப்பு), ரூக்ஷம் (வறட்சி), மந்தம் (மெதுவானது), தீக்ஷ்ணம் (கடுமை), ஸ்திரம் (நிலைபேறு), ஸரம் (இளகுதல்), ம்ருது (மென்மை), கடினம் (கெட்டியானது), விசதம் (தெளிவானது), பிச்சலம் (பிசுபிசுப்பானது), கரம் (சொரசொரப்பு) மஸ்ருணம் (வழவழப்பானது), ஸ்தூலம் (பருமனானது), ஸூக்ஷ்மம் (நுட்பமானது), ஸாந்த்ரம் (நெருக்கமானது), திரவம் (பெருகும் தன்மையுள்ளது) என இந்த இருபதும் உடல் அல்லது பொருளைச் சார்ந்த குணங்களாம்.

### (இ) ஆன்மாவின் குணங்கள்

அறிவு, விருப்பம், வெறுப்பு, இன்பம், துன்பம், முயற்சி இந்த ஆறு குணங்களும் ஆன்மாவைச் சார்ந்தவை.

**(ஈ) பொதுவான குணங்கள்**

பரம் (வீடு பேறு) அபரம் (இவ்வுலக இன்பம்), யுக்தி (உபாயம்), ஸங்கியா (எண்ணிக்கை), ஸம்யோகம் (சேர்க்கை) விபாகம் (பிரிவு), ப்ருதக்த்வம் (தனித்தன்மை), பரிமாணம் (அளவு), ஸம்ஸ்காரம் (பக்குவ முறை), அப்யாஸம் (பயிற்சி) இந்தப் பத்தும் பொதுவான குணங்களாம்.

### 10. கர்மா (செயல்) வின் இலக்கணம்

முயற்சியினால் செயலில் ஈடுபடுவது கர்மா எனப்படும். 49

### 11. ஸமவாயத்தின் இலக்கணம் (பிரிக்க முடியாத முதற்காரணம்)

நிலத்தைச் சார்ந்த பொருள்களுடன் குணங்களின் பிரியாத தொடர்பு ஸமவாயம் எனப்படும். ஏனென்றால் பொருள்கள் குணங்களை விட்டு அகலாமையாலும், பொருட்கள் உள்ள இடத்தில் குணங்கள் இருப்பதாலும் இது அழிவற்றதெனக் கருதப்படும். 50

### 12. திரவியத்தின் இலக்கணம் (பொருட்கள்)

கர்மா, குணம் இவைகளுக்கு இருப்பிடமாகவும் அவ்விரண்டிற்கு ஸமவாயி காரணமாகவும் இருப்பது திரவியம் எனப்படும்.

### 13. குணங்களின் இலக்கணம்

[1]ஸமவாய ஸம்பந்தத்தின் ஆதாரமானதும் செயலற்றதும், காரணமானதும் குணம் எனப்படும். 51

### 14. கர்மாவின் இலக்கணம்

பொருட்களின் சேர்க்கைக்கும் பிரிவிற்கும் காரணமாகிப் பொருளை இருப்பிடமாகக் கொண்டு செய்கின்றசெயலைக்கர்மம் என்கிறோம். இந்தச் செயல் என்ற கர்மம் சேர்க்கைக்கும், பிரிவிற்கும் மற்றொரு காரணத்தை எதிர்பார்ப்பதில்லை. அதாவது செயல் செயலையே எதிர்பார்க்கிறது. 52

இவ்விதமாக உலகிலுள்ள எல்லாச் செயல்களுக்கும் காரணங்கள் விளக்கப்பட்டுள்ளன.

### 15. ஆயுர்வேதத்தின் பயன்

உடலிலுள்ள தாதுக்களைக் கோளாறடையச் செய்யாமலும், ஏற்றத்தாழ்வில்லாமலும் சமநிலையில் வைத்திருப்பது இந்த ஆயுர்

1. ஸமவாயஸம்பந்தம் – பண்பு-பண்பி முதலியவற்றின் பிரிக்க முடியாத தொடர்பு.

வேத நூலின் காரியமாகும். நூலின் பயனும் இதுவே. உடலை ஆரோக்கிய நிலைக்குக் கொண்டுவருவது இதன் காரியமும் பயனுமாகும். 53

## 16. நோய்கள் உண்டாவதற்கான மூவகைக் காரணங்கள்

உடல், மனம் இவற்றை இருப்பிடமாகக் கொண்ட நோய்கள் தோன்றுவதற்கு காலம், அறிவு, புலன்களுக்குப் புலப்படும் பொருட்கள் இவற்றின் அயோகம் (பயன்படுத்தாமலிருத்தல்) அதியோகம் (அளவுக்கு மீறி பயன்படுத்துதல்) மித்யாயோகம் (தகாத முறையில் பயன்படுத்துதல்) என்ற இம்மூன்றும் காரணங்களாகின்றன. சுருங்கச் சொல்லின் நோய்கள் தோன்றுவதற்கு இம் மூன்றுதான் காரணங்களாகின்றன. 54

## 17. நோய்களுக்கு இருப்பிடம்

உடல், மனம் இவ்விரண்டும் நோய்களுக்கு இருப்பிடமாக உள்ளவை. அதேபோல் ஆரோக்கியத்திற்கும், உடலும் மனமும் தான் இருப்பிடமாகும். அந்த ஆரோக்கியத்திற்கு காலம், அறிவு புலன்களின் பொருட்கள் இம்மூன்றையும் உடலுக்கு நலன் அளிக்கும் முறையில் பயன்படுத்துவது காரணமாகக் கருதப்படுகிறது. 55

## 18. நோய்களுக்கு இருப்பிடம் ஆன்மா அன்று

ஆன்மா மாற்றமில்லாதது, ஆன்மா உயர்ந்தது. அதை நோய் அணுகாது. நுட்பமானது. இன்ப துன்பமற்றது. ஆனால் அதே ஆன்மா,மனம், ஐம்பெரும்பூதங்கள் இவற்றின் குணங்கள்,புலன்கள் இவற்றுடன் சேரும்போது உடல் உயிரைப் பெறுவதற்கும் அறிவு பெறுவதற்கும் காரணமாகின்றது. அதாவது ஆத்மா உடல் இயங்குவதற்குக் காரணமாகின்றது. அது அழிவற்றது. இந்த உலகத்தைக் காணவல்லது. உடலின் எல்லாச் செயல்களையும் பார்க்கிறது. 56

## 19. உடல், மனம் இவற்றின் தோஷங்கள்

சுருக்கமாக வாதம், பித்தம், கபம் இம்மூன்றும் உடலைச் சார்ந்த தோஷங்களாகக் கூறப்படுகின்றன. ரஜஸ், தமஸ் இரண்டும் மனதைச் சார்ந்த தோஷங்களாம். 57

## 20. உடல் மனம் இவற்றில் உண்டாகும் நோய்களுக்கான மருத்துவச் சுருக்கம்

உடலில் உண்டாகும் நோய்கள் தெய்வத்தைப் பற்றிச் செய்யும் சடங்குகளாலும், ஊகித்தறிதல் என்ற நூல்முகத்தால் செயல்

படும் மருத்துவ முறைகளாலும் தணிகின்றன. மனதில் தோன்றும் நோய்களோ அறிவு, மெய்யறிவு, தைரியம், நினைவாற்றல், மனத்தை ஒரே நிலையிலிருத்துதல் இவற்றால் நீங்குகின்றன. 58

## 21. வாதத்தின் இலக்கணமும், இதைத் தவிர்க்கும் சிகிச்சையும்

வாதம் என்பது வறட்சி, குளிர்ச்சி, இலேசான தன்மை இவற்றையுடையது. நுட்பமானது. அசையும் தன்மையுடையது. தெளிவானது. சொரசொரப்பை உண்டாக்குவது.

இவற்றிற்கு எதிரிடையான குணமுள்ள பொருட்களைப் பயன்படுத்துவதால் வாதம் தணிகிறது. 59

## 22. பித்தத்தின் இலக்கணமும் சிகிச்சையும்

சிறிதளவு நைப்புத்தன்மையுடையது. உஷ்ணமானது. தீக்ஷ்ண குணமுள்ளது. பெருகும் தன்மையுடையது. இளகும் தன்மையுடையது. புளிப்பு, கார்ப்பு இச்சுவைகளைக் கொண்டது.

இவற்றிற்கு எதிரிடையான குணங்கள் உள்ள பொருட்களைப் பயன்படுத்துவதால் இந்தப் பித்தம் விரைவில் தணிகிறது. 60

## 23. கபத்தின் இலக்கணமும் சிகிச்சையும்

குரு குணமுள்ளது. குளிர்ச்சியானது. மிருதுவானது. நைப்புத் தன்மை உடையது. இனிப்புச் சுவை கொண்டது. கெட்டியானது. பிசுபிசுப்புத்தன்மை பெற்றது.

இவற்றிற்கு எதிரிடையான குணமுள்ள பொருட்களைப்பயன்படுத்துதலால் கபம் தணிகிறது. 61

## 24. நோய்கள் நீங்குவதற்கான வழிகள்

நோய் தோன்றுவதற்குக் காரணமான நோயாளி வசிக்குமிடம், அவன் உடல், அளவு, காலம் இவற்றிற்கு எதிரிடையான குணங்கள் உள்ள மருந்துகள் இவற்றால், தவிர்க்கக்கூடிய நோய்கள் நீங்குகின்றன. தவிர்க்க முடியாத பிணிகளுக்கு சிகிச்சை இங்குக் கூறப்படவில்லை. அதன் பிறகு பொருட்களுக்கு ஏற்றவாறு அவற்றின் குணங்கள், செயல்கள் இவை விவரிக்கப்படும். 62–63

## 25. சுவையின் இலக்கணம்

நாக்கினால் அறியக்கூடியதை சுவை (ரசம்) என்கிறோம். இந்தச் சுவைக்கு இருப்பிடம், பொருள், நீர், பூமி இம்மூன்று

மாகும். சுவை தோன்றுவதற்குக் காரணம், நீரும் பூமியுமாகும். குறிப்பிட்ட சுவை, ''இது இனிப்பானது, இது கார்ப்பானது'' என்று பிரித்து அறிவதற்கு காற்று, ஆகாயம், நெருப்பு இம் மூன்றும் காரணங்களாகும். 64

## 26. சுவையின் பிரிவுகள்

இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு என சுவை ஆறுவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 65

## 27. சுவைகளின் செயல்கள்

இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு இம்மூன்று சுவைகளும் வாத தோஷத்தை நீக்குகின்றன.

துவர்ப்பு, இனிப்பு, கைப்பு இம்மூன்று சுவைகளும் பித்த தோஷத்தைப் போக்குகின்றன.

துவர்ப்பு, கார்ப்பு, கைப்பு இம்மூன்று சுவைகளும் கப தோஷத்தை நீக்கவல்லவை.

துவர்ப்பு, புளிப்பு, உவர்ப்பு இம்மூன்று சுவைகளும் பித்தத்தையும், இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு இம்மூன்று சுவைகளும் கபத்தையும், கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு இம்மூன்று சுவைகளும் வாதத்தையும் சீற்றமடையச் செய்கின்றன. 66—67

## 28. மூவகைப் பொருட்கள்

சில மருந்துப் பொருட்கள் தோஷங்களைத் தணிக்கின்றன. சில மருந்துப் பொருட்கள் உடலிலுள்ள தாதுக்களைக் கேடடையச் செய்கின்றன.

மற்றும் சில பொருட்கள் உடலின் ஆரோக்கிய நிலையை நிலை நிறுத்துகின்றன.

இவ்விதம் மருந்துப் பொருட்கள் மூவகையாகப் பிரிக்கப்படுகின்றன. 68

இதே பொருட்கள் ஜங்கமம் (அசையும் பொருட்கள்) ஔத்பிதம், (நிலத்தைப் பிளந்துகொண்டு தோன்றுபவை) பார்த்திவம் (நிலத்தைச் சார்ந்தவை) என மூவகையாகவும் பிரிக்கப்படுகின்றன.

## 29. ஜங்கமம் (அசையும் பொருட்கள்)

தேன் வகை, பசுவின் பால், தயிர், நெய், பித்தம், நிணநீர், எலும்புக்குள் உள்ள சோறு, இரத்தம், மாமிசம், மலம், சிறுநீ

தோல், விந்து, எலும்பு, நரம்பு, கொம்பு, நகங்கள், குளம்புகள், தலைமயிர், மயிர்க்கால்கள், கோரோசனை இவை, அசையும் உயிர்வாழினங்களிடமிருந்து எடுக்கப்பட்டு சிகிச்சைக்குப் பயன் படுத்தப்படுகின்றன. 69–70

## 30. பார்த்திவம் (நிலத்தைச் சார்ந்தவை)

பொன்னும், வெள்ளி, செம்பு, வெள்ளீயம், சுத்தநாகம், இரும்பு இவ்வைந்தும், இவற்றின் மலங்கள், மணல், சுண்ணாம்பு, மனோசிலை, அரிதாளம், மணிகள், உப்பு, காவி, அஞ்சனக்கல் இவையும் நிலத்தைச் சார்ந்த மருந்துப் பொருட்கள் 71

## 31. ஔத்பிதம் (நிலத்தைப் பிளந்து கொண்டு தோன்றும் பொருட்கள்)

இப்பொருட்கள் வனஸ்பதி, வீருதம், வானஸ்பத்தியம், ஔஷதி என நால்வகைப்படும்.

பழங்கள் மட்டும் தென்படுவது வனஸ்பதி எனப்படும்.

மலரும், பழங்களும் தென்படுவது வானஸ்பத்யமாகும்.

பழம் பழுத்தபின் உலரக்கூடியது ஔஷதி எனப்படுகிறது.

கொடி உருவத்தில் பரவியிருப்பது வீருதம் எனப்படுகிறது. 72–73

## 32. நிலத்தைப் பிளந்து கொண்டு தோன்றும் மருந்துப் பொருட் களில் எடுத்துக் கொள்ளத் தகுந்தவை

வேர், பட்டை, வைரம் பாய்ந்த பகுதி, பிசின், தண்டு, சாறு, துளிர், க்ஷாரப் பொருட்கள், பால், பழம், மலர், சாம்பல், எண்ணெய், முட்கள், இலைகள், மொட்டுகள், கிழங்குகள், குருத்துகள் இந்தப் பதினெட்டும் நிலத்தைப் பிளந்துகொண்டு தோன்றும் மருந்துப் பொருட்களில் எடுத்துக்கொள்ளத் தகுந்த பொருட்களின் தொகுப்பாகும். 74

அவற்றில் வேர்கள் பதினாறு வகைப்படும். பத்தொன்பது பழ வகை. எண்ணெய் வகை நான்கு. உப்பு வகை ஐந்து, சிறுநீர் வகை எட்டு, பால்வகை எட்டு, சோதனத்திற்கு ஆறுவகை மரங் கள் இவற்றை இவ்வத்தியாயத்தில் புனர்வசு என்ற ஆத்ரேயர் கூறியுள்ளார். இப்பொருட்களை நோய்களில் பயன்படுத்தும் முறை அறிந்த மருத்துவன் ஆயுர்வேத சாத்திரத்தை நன்கு கற் றுணர்ந்தவனாகக் கருதப்படுகிறான். 75–77

## 33. பதினாறு வகை வேர்கள்

நாகதந்தி (வேலிப்பருத்தி), வசம்பு, கருஞ்சிவதை, வெண் சிவதை, சரக்கொன்றை, பாதரி, வெள்ளெருக்கு, எலிச்செவி, தும்மட்டி, வாலுளுவை, கோவை, கிலுகிலுப்பைச் செடி, கர்க் கடக சிருங்கி, காட்டு ஓமச்செடி, சேராங்கொட்டை, குமிழம் செடி இவ்விதம் பதினாறு வகை வேர்கள் எடுத்துக்கொள்ளத் தக்கவை.

அந்தப் பதினாறு வேர்களில் கிலுகிலுப்பை, கோவை, வசம்பு, இம்மூன்றின் வேர்களும் வாந்தி எடுக்கச் செய்யவும்,

வெள்ளெருக்கு, வாலுளுவை, இவ்விரண்டு வேர்களும் தலை யில் உள்ள தோஷங்களை வெளிப்படுத்தவும், மற்ற பதினொரு வேர்களும் பேதி ஆவதற்கும் பயன்படுகின்றன. இவ்விதம் வேர் களின் பெயர்களும் செயல்களும் கூறப்பட்டுள்ளன. 78–81

## 34. பயன்படும் பத்தொன்பது பழவகைகளும் அதன் செயல்களும்

சங்கச் செடி, வாய்விடங்கம், கசப்பு வெள்ளரி, மருக்காரம், நாயுருவி, பேய்ச்சுரை, தேவதாளி, நாகதாளி, நீரில் விளைகின்ற அதிமதுரம், நிலத்தில் விளைகின்ற அதிமதுரம், புங்கு, மணி புங்கு, செந்நிற நாயுருவி, கடுக்காய், அவுரி, கக்கரி, கம்பிப் பாலை, சரக்கொன்னை, வெட்பாலை இவற்றின் பழங்களும் நாயுருவி, பேய்ச்சுரை, தேவதாளி, நாகதாளி, மருக்காரக்காய், வெட்பாலை, கசப்பு வெள்ளரி, கக்கரி பழங்கள் வாந்தி எடுக்க வும், கஷாய வஸ்தி கொடுப்பதற்கும் பயன்படுகின்றன.

செந்நிற நாயுருவிப் பழம், மூக்கிலிடும் மருந்துக்கும், வாந்தி எடுப்பதற்கும் பயன்படுகின்றது. மீதியுள்ள சங்கச்செடி, வாய் விடங்கம், நீரில் விளையும் அதி மதுரம், நிலத்தில் விளையும் அதிமதுரம், புங்கு, மணிபுங்கு, கடுக்காய், அவுரி, கம்பிப்பாலை, சரக்கொன்றை இந்தப் பத்தின் பழங்கள் மலங்கழிக்கச் செய்யப் பயன்படுகின்றன. இவ்வாறு பத்தொன்பது பழங்களின் பெயர் களும், அவற்றின் செயல்களும் சொல்லப்பட்டன. 82–87

## 35. நான்கு வகை எண்ணெயும் அதன் பெயர்களும் செயல்களும்

நெய், எண்ணெய், வசை, எலும்புக்குள் உள்ள சோறு, இவை நான்கும் எண்ணெய்ப் பொருட்களாகும். இவை குடிப்பதற்கும், எண்ணெய்க் குளியலுக்கும், வஸ்திக்கும், மூக்கிலிடுவதற்கும் பயன் படுவதோடு, உடலுக்கு எண்ணெய்ப்பசையையும் கொடுத்து உயிர் வாழ்வதற்கான சக்தியையும் அளிக்கின்றன. பொலிவு, வலிவு,

வளர்ச்சி இவற்றை அளித்து சீற்றமடைந்த வாதம், பித்தம், கபம் என்ற தோஷங்களை நீக்குகின்றன. 88–89

## 36. ஐந்து வகை உப்புகளும் அவற்றின் பெயர்களும் செயல்களும்

கரியுப்பு, இந்துப்பு, அட்டுப்பு, உவர்மண்உப்பு, கடலுப்பு என உப்புக்கள் ஐவகைப்படும். இவ்வைந்து உப்புகளும், உடலுக்கு நைப்புத் தன்மையை அளிக்கின்றன. சூட்டைத் தோற்றுவிக்கின்றன. தீக்ஷ்ண குணமுடையவை. சடராக்னியைத் தூண்டிவிடுவதில் சிறந்தவை.

இவை மேற்பூச்சு பூசுவதற்கும், எண்ணெய் சிகிச்சையிலும், வியர்வை சிகிச்சையிலும், வஸ்தி எனும் ஆசனவாய் வழியாக மலங்களை வெளிப்படுத்தும் முறையிலும், வாந்தி மூலமாக மேல் பகுதியில் உள்ள தோஷங்களை அகற்றுவதற்கும் பயன்படுகின்றன.

கஷாய வஸ்தி, எண்ணெய் வஸ்தி, எண்ணெய்க் குளியல், உணவு, (நஸ்யம்) தலையில் உள்ள தோஷங்களை அகற்றுவது, அறுவைச் சிகிச்சை, வர்த்தி (திரி) தயாரித்தல், மை தயாரித்தல், புண்களின்மேல் தூவுதல், அசீரணம், வயிற்று உப்புசம், வாத தோஷம், குன்மம், வயிற்றில் வலி, பெருவயிறு இவற்றிற்கு ஐவகை உப்புகளும் பயன்படுத்தப்படுகின்றன. 90–93

## 37. எண்வகை சிறுநீர்களும் அவற்றின் பெயர்களும் செயல்களும்

செம்மறியாடு, வெள்ளாடு, பசு, எருமை, யானை, ஒட்டகம், குதிரை, கழுதை ஆகிய இந்த எட்டுப் பிராணிகளின் சிறுநீர்கள் முக்கியமானவை என இந்நூலில் கூறப்பட்டுள்ளன. 94–95

எல்லாவகைச் சிறுநீர்களும், உஷ்ண வீர்யம், தீக்ஷ்ண குணம் உள்ளவை. வறட்சியற்றவை. கார்ப்புச் சுவை, உவர்ப்புச் சுவையுடன் கூடியவை. உடலில் தேய்ப்பதற்கும், மேற்பூச்சுப் பூசுவதற்கும் பயன்படுத்தப்படுகின்றன.

கஷாய வஸ்தி, பேதிக்குக் கொடுத்தல், வியர்ப்பித்தல இவற்றில் உபயோகப்படுத்தப்படுகின்றன.

வயிற்று உப்புசம், நஞ்சுச் சிகிச்சை இவற்றில் பயன்படுகின்றன. பெருவயிறு நோய்களிலும், மூல நோய்களிலும், குன்மம், குஷ்டம், வெண்குஷ்டம், இந்நோய்களிலும் பயன்படுத்தப்படுகின்றன. ஒற்றடம் கொடுப்பதற்கும், ஊதுவதற்கும் பயன்படுத்தப்படுகின்றன.

சடராக்னியைத் தூண்டிவிடக் கூடியவை, நஞ்சை விலக்கு பவை. கிருமிகளை அழிப்பவை. சோகைநோய் உள்ளவர்களுக்குச் சிறந்தவை. நன்மை பயக்கக்கூடியவை. இந்தச் சிறுநீர்களைக் குடிப்பதால் கபதோஷம் தணிகிறது. வாதத்தை நேராகச் செய் கிறது. மலத்துவாரத்தின் வழியாகப் பித்தத்தை வெளிப்படுத்து கிறது. இவை சிறுநீர்களின் பொதுவான குணங்களாகச் சுருக்க மாக என்னால் (ஆத்ரேயரால்) கூறப்பட்டுள்ளது. 96–100

இந்தச் சிறுநீர் வகை பற்றி தனித்தனியாகக் கூறுவோம்:—

### 38. செம்மறியாட்டுச் சிறுநீரின் குணங்கள்

செம்மறியாட்டின் சிறுநீர், கைப்புச் சுவையுள்ளது. நைப்புத் தன்மையுடையது. பித்தத்திற்கு எதிரிடையானதல்ல.

### 39. வெள்ளாட்டின் சிறுநீரின் குணங்கள்

துவர்ப்பு, இனிப்புச் சுவையுள்ளது. பத்தியத்திற்கு உகந்தது. தோஷங்களை அகற்றுகின்றது.

### 40. பசுவின் சிறுநீரின் குணங்கள்

இது சிறிது இனிப்புச் சுவையுடன் கூடியது. சிறிதளவு தோஷங் களைப் போக்கக்கூடியது. கிருமிகளையும், குஷ்டநோய்களையும் போக்கக்கூடியது. அரிப்பைத் தணிக்கக்கூடியது.

பெருவயிறு நோயில் முறைப்படி இந்தச் சிறுநீரை அருந்தி னால் பயன் ஏற்படுகிறது.

### 41. எருமையின் சிறுநீரின் குணங்கள்

மூலநோய், வீக்கம், பெருவயிறு நோய் இவற்றை நீக்கும். க்ஷாரகுணமுடையது. மலமிளக்கி.

### 42. யானையின் சிறுநீரின் குணங்கள்

உவர்ப்புச் சுவையுள்ளது. கிருமிநோய், குஷ்டநோய் இவற் றிற்கு நல்லது.

### 43. ஒட்டகத்தின் சிறுநீர்

மலக்கட்டு, சிறுநீர்க்கட்டு இவற்றைப் போக்கும். நஞ்சு, கப தோஷத்தினால் தோன்றும் நோய்கள், மூலநோய் இவற்றிற்குச் சிறந்தது.

### 44. குதிரையின் சிறுநீர்

கைப்பு, கார்ப்புச் சுவையுடையது. குஷ்டம், இரணம், நஞ்சு இவற்றை நீக்கும் தன்மையுடையது.

## 45. கழுதையின் சிறுநீர்

கால் கை வலிப்பு, பைத்தியம், கிரக தோஷங்கள் இவற்றைப் போக்கும். இவ்விதம் எண்வகைச் சிறுநீர்களின் சக்தியைக்கொண்டு அவற்றின் குணங்களும் செயல்களும் விளக்கப்பட்டுள்ளன. *101—106*

## 46. எண்வகைப் பால்களின் பெயர்கள், குணங்கள், செயல்கள்

செம்மறியாடு, வெள்ளாடு, பசு, எருமை, ஒட்டகம், யானை, குதிரை, மகளிர் ஆகியோரின் பால்களின் குணங்கள், செயல்கள் கூறப்படுகின்றன. *107*

இனிப்புச்சுவை, நைப்புத்தன்மை, குளிர்ந்த வீர்யம், தாய்ப் பாலை வளர்த்தல் என இவை பெரும்பாலும் பாலின் பொது குணங்களாகும். இவை உற்சாகத்தை அளிக்கக்கூடியவை, உடலை வளர்ப்பவை, ஆண்மையை அளிக்கக்கூடியவை, நினைவாற்றலுக்கு வலிமை அளிப்பவை, பலத்தை வளர்ப்பவை, மனம் தன் செயலில் ஈடுபட வலிவை அளிப்பவை, வாழ்வதற்காக சக்தியை அளிப்பவை, களைப்பைப் போக்குபவை, சுவாசம், காசம் இவற்றை அழிப்பவை. இரத்தபித்த நோய்களைப் போக்குபவை. முறிந்தவற்றைச் சேர்க்கக்கூடியவை. எல்லா உயிரினங்கட்கும் ஒத்துக்கொள்ளக்கூடியவை. தோஷங்களைத் த்ணிப்பவை.வெளிப் படுத்துபவை. நாவறட்சியைப் போக்குபவை. சடராக்னியை வளர்ப்பவை, தாதுக்களின் வலிவற்றவனுக்கும், காயம்பட்டவனுக்கும் சிறந்தவை. சோகை நோய், அம்ல பித்தம் எனும் நோய், உடலுருக்கி நோய், குன்மம், பெருவயிறு, கழிச்சல், காய்ச்சல், எரிச்சல், குறிப்பாக வீக்கம், பெண்குறியில் தோன்றும் நோய்கள், விந்துவில் ஏற்படும் நோய்கள், சிறுநீர் நோய்கள், இரத்தப் போக்கு (பெரும்பாடு) மலக்கட்டு, வாத, பித்த நோய்கள் இவற்றிற்கெல்லாம் பால்கள் நன்மை பயக்கக்கூடியவை.

பால் மூக்கிலிடுவதற்கும், மேற்பூச்சு பூசுவதற்கும், அவகாஹ ஸ்வேதம் எனும் அமிழ்ந்து நீராடுவதற்கும், வாந்திஎடுப்பதற்கும், கஷாய வஸ்தியிலும், மலம் கழிக்கச் செய்வதிலும், எண்ணெய்ப் பசையுண்டாக்குவதிலும் எல்லாவற்றிலும் பயன்படுத்தப் படுகிறது. *108—112*

ஒவ்வொரு பாலின் குணங்களைத் தனித்தனியாக அன்ன பானாதிகம் எனும் அத்தியாயத்தில் மறுபடியும் முற்றிலும் கூறுகிறேன். *113*

## 47. தோஷங்களை வெளிப்படுத்தும் பாலுள்ள மூவகை மரங்கள்

பழங்களையும், வேர்களையும் முக்கியமாகக்கொண்ட மற்ற மரங்களைத் தவிர்த்து கள்ளி, எருக்கு, மலை அகத்தி இம்

மூன்று மரங்களின் செயல்களைத் தனித்தனியாக கீழே குறிப்பிடு கிறோம். 114

மலையகத்தி வாந்தி எடுக்கவும், கள்ளிப்பால் மலம் கழிக்கச் செய்யவும், எருக்கம்பால் வாந்தி பேதி இரண்டையும் உண்டு பண்ணவும் பயன்படுகின்றன. 115

புங்கு, முருங்கை, பாச்சோந்தி இந்த மூன்று மரங்களின் பட்டைகள் உடலில் உள்ள தோஷங்களை மலம்கழிக்கக் கொடுத்து நீக்குவதற்குப் பயன்படுகின்றன. 116

புங்கு, முருங்கை, இந்த மரங்களின் பட்டைகள் மலங்கழிக்கக் கொடுக்கப் பயன்படுத்தப்படுகின்றன. உடலில் தோன்றும் சிறு சிறு கொப்புளங்கள், வீக்கம், மூலநோய், சொறி, பெருங்கட்டி, கண்டமாலை என்னும் நோய், குஷ்டம், சிலந்திக்கட்டி இந் நோய்களில் தோஷங்களை நீக்குவதற்குப் பாச்சோத்தியின் பட்டை யைப் பயன்படுத்த வேண்டும். 117

மலை அகத்தி, எருக்கு, கள்ளி இவற்றின் பால்களையும், புங்கு, முருங்கை, பாச்சோத்தி இவற்றின் பட்டைகளையும் உடலில் உள்ள தோஷங்களை அகற்றுவதற்குப் பயன்படுத்த வேண்டும் என அறிவாளிகளான மருத்துவர் அறிந்துகொள்ளலாம். 118–119

இவ்வாறு பழங்கள், வேர்கள், எண்ணெய்கள், உப்புகள், சிறு நீர்கள், பால்கள், மூன்று மரங்களின் பால் பட்டைகள் இவை களின் உபயோகங்கள் கூறப்பட்டன.

காடுகளில் ஆடு மாடுகளை மேய்க்கும் இடையர்களும், மற்றும் அங்கு வாழ்பவர்களும் மருந்துகளின் பெயர்களையும் உருவங் களையும் அறிகின்றார்கள். 120

மருந்துப்பொருட்களின் பெயர்கள் அவற்றின் உருவங்கள் இவற்றை மட்டும் அறிவதனால் ஒருவன் மருந்துப் பொருட்களின் முழு அறிவைப் பெற்றிருக்கிறான் எனக் கூற முடியாது. 121

மருந்துப் பொருட்களின் உருவத்தை அறியாவிடினும் அதன் உபயோகத்தை அறிந்தவன் மருந்துப்பொருட்களின் தன்மையை அறிந்தவனாகக் கருதப்படுகின்றான். மருந்துப் பொருட்களின் பெயர், உருவம் பயன்படுத்தும் முறை இவற்றை முழுவதும் அறிந் தவனைப் பற்றி என்ன சொல்ல வேண்டும்? 122

ஒவ்வொரு நோயாளியின் உடலைப் பரிசோதித்து இடம், நோயாளியின் உடல், காலம் இவற்றிற்கு ஏற்றவாறு, இந்த

மருந்துப் பொருட்களைப் பயன்படுத்தும் முறை அறிந்த மருத்துவன், மருத்துவர்களில் சிறந்தவனாகப் போற்றப்படுகிறான். 123

முறைப்படி கொடுக்கப்படாத மருந்து, நஞ்சு, ஆயுதம், நெருப்பு, இடி இவற்றைப்போல் நோயாளியை மாய்த்துவிடும். முறைப்படி அறிந்து கொடுக்கப்பட்ட மருந்து அமுதத்திற்கு ஒப்பாகும். 124

மருந்தின் பெயர், உருவம், செயல் இம்மூன்றையும் அறியாது கொடுக்கப்படும் மருந்து அல்லது அறிந்தும் நன்முறையில் பயன்படுத்தாத மருந்து இவ்விரண்டும் தீங்கை விளைவிக்கக் கூடியவை. 125

கடுமையான நஞ்சும் முறைப்படி பயன்படுத்தப்பட்டால் உயர்ந்த மருந்தாகும். முறை தவறி கொடுக்கப்படும் நல்ல மருந்தும் கடுமையான நஞ்சாகிவிடும். 126

ஆகையினால் நல்வாழ்வையும், ஆரோக்கியத்தையும் விரும்பும் அறிவாளியான நோயாளி, மருந்தை நன்கு பயன்படுத்தத் தெரியாத மருத்துவனிடமிருந்து ஒருவித மருந்தையும் பெற்றுக் கொள்ளக்கூடாது. 127

ஒருவனுடைய தலையில் இடி விழுந்தாலும், இன்னும் வாழ வேண்டியிருந்தால் அவன் தப்பிப் பிழைத்துவிடலாம். ஆனால் அறிவில்லாத மருத்துவன் கொடுத்த மருந்து ஒருபொழுதும் நோயாளியின் ஆயுளை எஞ்சியிருக்கச் செய்யாது. அதாவது அவனைக் கொன்றுவிடும். 128

துன்பப்படுகிறவனும், படுக்கையில் விழுந்து கிடப்பவனும், மருத்துவரிடம் நம்பிக்கையுள்ளவனுமான நோயாளிக்கு தன்னைத் தானே அறிவாளியாக நினைத்து அறிவின்றி மருந்து கொடுப்பவனும், தர்மச் செயலற்ற, பாபியான, யமனுக்கு ஒப்பான அறிவில்லாத மருத்துவனுடன் பேசுபவனும் நரகத்தை அடைகிறான். 129–130

மருத்துவவேடம் பூண்டு தன்னை வந்தடைந்த நோயாளிகளிடமிருந்து சோறு, தண்ணீர், பணம் இவற்றை வாங்குவதைவிட, கொடிய பாம்பின் நஞ்சைக் குடித்து இறப்பதும், கொதிக்கும் உருக்கிய தாமிரத்தைக் குடித்து இறப்பதும், பழுக்கக் காய்ச்சிய இரும்பு உருண்டைகளை விழுங்கிவிடுவதுமே மேலானவையாகும். 131–132

ஆகையினால் மருத்துவனாக விரும்பும் அறிவாளி தன் குணமாகிற செல்வத்தை அடைவதிலேயே கண்ணுங்கருத்துமாக

இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அந்த மருத்துவன் மனிதர்களுக்கு உயிரை அளிக்கும் உண்மை மருத்துவனாக ஆக முடியும். 133

ஆரோக்கியத்தை அளிக்கும் மருந்துதான் மருந்தாகும். நோயாளிகளை நோயிலிருந்து விடுவிப்பவனே மருத்துவர்களில் சிறந்த மருத்துவனாவான். 134

தன் எல்லாச் செயல்களிலும் வெற்றி பெறுவதுதான் மருத்துவன் மருந்தை முறைப்படி பயன்படுத்தியுள்ளான் என்பதற்கு அறிகுறியாகும். அவன் வெற்றி பெறுவதைக் கொண்டு மருத்துவனை தேவையான குணங்கள் நிரம்பியவன் என அறிந்துகொள்ளலாம். 135

முடிவுரை :

நான்முகனிடமிருந்து பரத்வாஜர் வரை, ஆயுர்வேத சாத்திரம் வந்தவிதம், ஆயுர்வேதம் தோன்றுவதற்குக் காரணம், தான் பெற்ற ஆயுர்வேதத்தை பரத்வாஜர் பூவுலகில் பரவச் செய்த முறை, அக்னிவேசர் போன்ற மாமுனிவர்கள் ஆயுர்வேதத்தைச் சுருக்கமாக (ஸூத்ரமாக)ச் செய்து, அதை மற்ற முனிவர்களுக்குக் கூறியது, அவர்கள் அதை ஆமோதித்தது, ஆயுர் வேதத்தின் இலக்கண விளக்கம், காரண காரிய விளக்கம், ஆயுர்வேதத்தின் பயன், நோய்க்கான காரணங்கள், தோஷங்கள், சுருக்கமான மருந்துவகை, சுவைகள், அவற்றின் நிமித்த காரணம், பொருட்கள், மூவகையான மருந்துகளின் சுருக்கம், வேர்கள், பழங்கள், எண்ணெய்கள், உப்புகள், சிறுநீர்கள், பால்கள், பாலும் பட்டையும் சார்ந்த ஆறுவகை மரங்கள், அவற்றின் செயல்கள், பொருட்களின் சேர்க்கை, மருந்தை நன்முறையில் பயன்படுத்துவது, பயன்படுத்தாதது, குணங்கள், தீமைகள், அறிவில்லா மருத்துவர்களின் இகழ்ச்சி, மருத்துவரின் சிறந்த குணங்கள் இவை யாவும் ஆத்ரேய மாமுனிவரால் இந்த முதல் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன. 136–140

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையின் ஸூத்ரஸ்தானத்தில் "தீர்க்கஞ்ஜீவிதீயம்" எனும் முதல் அத்தியாயம் முற்றும்.

## இரண்டாவது அத்தியாயம்

# *அபாமார்க தண்டுலீயம்

முதல் அத்தியாயத்திற்குப் பிறகு 'அபாமார்க தண்டுலீயம்' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். *(1–2)*

### 1. தலையில் உள்ள தோஷங்களை நீக்கும் பொருட்கள்

நாயுருவியின் விதைகள், திப்பிலிகள், மிளகுகள், வாயுவிடங்கத்தின் விதைகள், முருங்கைவிதைகள், கடுகுகள், தனியாவிதைகள், கருஞ்சீரகம், ஓமம், உவகை விதைகள், ஏல அரிசிகள், அரேணுகத்தின் விதைகள், பேரேலத்தின் விதைகள், துளசிவிதைகள், அதிவிடயம், சிறிய துளசியின் விதைகள், கற்பூரத்துளசி விதைகள், வாகை விதைகள், பூண்டு, மரமஞ்சள், மஞ்சள், இந்துப்பு, கரியுப்பு, வாலுளுவை விதைகள், சுக்கு இவற்றைத் தலையில் உள்ள தோஷங்களை வெளிப்படுத்துவதற்குப் பயன்படுத்த வேண்டும். தலைபளு, தலைவலி, நாட்பட்ட ஜலதோஷம், ஒற்றைத் தலைவலி, கிருமி நோய்கள், காக்கைவலி, மனமறியாமை நோய், மூர்ச்சை இந்நோய்களை நீக்க மேற்கொண்ட பொருட்கள் பயன்படுத்தப்படுகின்றன. *(3–6)*

### 2. வாந்தி எடுக்கக் கொடுக்கும் பொருட்கள்

மருக்காரைக்காய், அதிமதுரம், வேம்பு, நாகதாளி, அரிசித் திப்பிலி, வெப்பாலை, சுரைச்செடி, ஏலவரிசி, பேய்ப்புடல், பெரிய கடலாடி, தேவதாளி இப்பொருட்களைக் கபம், பித்தம், இவற்றின் வளர்ச்சி, இரைப்பையில் தோன்றும் நோய்கள், இவற்றைப் போக்க மருத்துவன் நோயாளியின் உடலுக்குத் துன்பம் ஏற்படாத வகையில் வாந்தி கொடுக்கப் பயன்படுத்த வேண்டும். *(7–8)*

### 3. மலங்கழிக்கக் கொடுக்கும் பொருட்கள்

சீரணப்பையில் உள்ள தோஷங்களை நீக்குவதற்கு சிவதை, திரிபலா என்னும் கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்,

---

*அபாமார்க்கம்—நாயுருவி போன்ற விதைகளைப் பயன்படுத்தும் முறைகளை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

நேர்வாளம், அவுரி, பாதிரி, வசம்பு, கம்பிப்பாலை, தும்மட்டி, பால்சுரை, புங்கு, உவகை, திராக்ஷை, சரக்கொன்னை, த்ரவந்தி, வெண்நொச்சி இப்பொருட்களை பேதிக்குக் கொடுக்கப் பயன் படுத்தலாம். (9–10)

## 4. [1]கஷாயவஸ்திக்குப் பயன்படும் பொருட்கள்

பாதிரி, முன்னை, வில்வம், கொன்னை, குமிழ், மூவிலை, ஓரிலை, கண்டங்கத்தரி, சிற்றாமுட்டி, நெருஞ்சில், முள்ளங் கத்திரி, ஆமணக்கு, சாரடை, யவம் எனும் தானியத்தின் அரிசி, கொள்ளு, இலந்தை, சீந்தில்கொடி, மருக்காறைக்காய், புரசு, காவட்டம்புல், எண்ணெய்கள், உப்புகள் என இம்மருந்துப் பொருட்கள், மேல்நோக்கிச் செல்லும் வாதநோய், மலக்கட்டு இவற்றைப் போக்கக் கொடுக்கும் கஷாய வஸ்திக்குப் பயன்படு கின்றன. (11–13)

## 5. [2]எண்ணெய்வஸ்திக்குத் தேவையான பொருட்கள்

கஷாயவஸ்திக்குப் பயன்படும் பொருட்களையே வாதத்தை நீக்கக்கூடிய எண்ணெய் வஸ்திக்கும் பயன்படுத்த வேண்டும்.

இவ்விதம் இங்கு சுருக்கமாக பஞ்சகர்மவிதி[3] கூறப்பட்டது. (14)

## 6. பஞ்சகர்ம செய்வதற்குமுன் செய்ய வேண்டியவை

குவிந்திருக்கும் தோஷங்களை வெளிப்படுத்துவதற்கு முன்பு, முதலில் எண்ணெய் சிகிச்சை[4], வியர்வைச் சிகிச்சை[5] செய்வித்து அளவு, காலம் இவற்றைக் கவனித்து பஞ்சகர்ம என்ற செயலைச் செய்ய வேண்டும். (15)

---

(1) கஷாய வஸ்தி— மூலிகைப்பொருட்களினால் கஷாயம்செய்து வஸ்தியந்திரம், பீச்சாங்குழல் போன்ற கருவியினால் ஆசனத்துவாரத்தின் வழி யாக அதைச் செலுத்துவது.

(2) எண்ணெய் வஸ்தி— மூலிகைப் பொருட்களினால் தயாரித்த எண்ணெயைப் பீச்சாங்குழல் போன்ற கருவியினால் ஆசனத்துவாரத்தின் வழி யாகச் செலுத்துவது.

(3) பஞ்சகர்மா— சிரோவிரேசனம் (தலையில் உள்ள தோஷங் களை மருந்துப் பொருட்களால் வெளிப்படுத் துதல்) வாந்தி, பேதி, கஷாயவஸ்தி, எண் ணெய் வஸ்தி.

(4) எண்ணெய் சிகிச்சை— உடலில் எண்ணெய்ப் பசையுண்டாக் கும் முறை.

(5) வியர்வை சிகிச்சை—உடலில் வியர்வை உண்டாக்கும் சிகிச்சை.

மருந்துப் பொருட்களின் சேர்க்கை (யுக்தி) அவற்றின் அளவையும் காலத்தையும் பொறுத்திருக்கிறது. அதன் சேர்க்கையில் வெற்றி நிலைத்திருக்கிறது. மருந்துப் பொருட்களை அறிந்த மருத்துவனைக் காட்டிலும் மருந்துப் பொருட்களைச் சேர்க்கத் தகுந்த மருத்துவன் சிறந்தவனாகிறான். (16)

## 7. இருபத்தெட்டு வகைக் கஞ்சிகள்[1]

இதன் பிறகு பல நோய்களை நீக்குவதற்கு தனித்தனி மருந்துப் பொருட்களால் தயார் செய்யப்பட்ட கஞ்சியைப் பற்றி விளக்குவோம். (17)

### வயிற்று வலி நீக்கும் கஞ்சி 1.

அரிசித்திப்பிலி, கண்டந்திப்பிலி, செவியம், கொடிவேலிவேர், சுக்கு இப்பொருட்களால் தயாரிக்கப்பட்ட கஞ்சி வயிற்று வலியை நீக்கி சடராக்னியையும் வளர்க்கிறது. (18)

### சீரணம், மலக்கட்டு இவற்றிற்கான கஞ்சி 2.

விளாங்காய், வில்வம், புளியாரைக்கீரை, மோர், மாதுளை, இவற்றால் தயாரிக்கப்பட்ட கஞ்சி சீரணத்தை உண்டாக்கும் மலக் கட்டையும் உண்டாக்கும்.

### வாதத்தினால் ஏற்படும் கழிச்சலுக்குக் கஞ்சி 3.

சிறுபஞ்சமூலம் — ஓரிலை, மூவிலை, கண்டங்கத்திரி, முள்ளுக் கத்தரி, நெருஞ்சில் வேர் இவற்றால் தயாரிக்கப்பட்ட கஞ்சி, வாததோஷத்தினரால் ஏற்பட்ட கழிச்சலுக்கு நல்லது. (19)

### பித்தம், கபம் இவற்றால் ஏற்படும் கழிச்சலுக்கான கஞ்சி 4.

ஓரிலைவேர், சித்தாமுட்டி, வில்வம், மூவிலைவேர், புளிப்பு மாதுளை, இவற்றால் தயார் செய்த கஞ்சி பித்தம், கபம் இவற்றால் தோன்றும் கழிச்சலுக்கு நலமானது. (20)

### இரத்தக் கழிச்சலைத் தடுக்கும் கஞ்சி 5.

விலாமிச்சை வேர், நெய்தல், சுக்கு, மூவிலைவேர் இவற்றை வெள்ளாட்டுப்பால் அதில் பாதி அளவு தண்ணீர் இவற்றுடன் சேர்த்துத் தயாரித்த கஞ்சி ரத்தக்கழிச்சலை நீக்கும். (21)

---

(1) கஞ்சியின் விளக்கம்— பதினாறு மடங்கு தண்ணீரில் ஒரு மடங்கு மருந்துப் பொருட்களைப் போட்டு நாலில் ஒரு மடங்காகக் கொதிக்கவைத்து, அத்துடன் பொடித்த அரிசி முதலிய உணவுப் பொருட்களையும் சேர்த்துத் தயாரிக்கும் திரவ உணவு.

**அசீர்ண பேதிக்கான கஞ்சி 6.**

அதிவிடயம், சுக்கு, புளிப்புமாதுளை இவற்றால் தயாரித்த கஞ்சியை அசீர்ண பேதியைப் போக்கக் கொடுக்கலாம்.

**நீர்ச்சுருக்கைப் போக்கும் கஞ்சி 7.**

நெருஞ்சில், கண்டங்கத்தரி, இவற்றால் செய்த கஞ்சியில் தேன்பாகைக் கலந்து நீர்சுருக்கைப் போக்கக் கொடுக்கவேண்டும். (22)

**கிருமிகளை அகற்றும் கஞ்சி 8.**

வாய்விடங்கம், கண்டந்திப்பிலி, முருங்கை, மிளகு, வளையலுப்பு, மோர் இவற்றால் தயார்செய்த கஞ்சி கிருமிகளை அகற்றும். (23)

**நாவறட்சியைத் தணிக்கும் கஞ்சி 9.**

சிறுதிராட்சை, நன்னாரி, நெல்பொரி, அரிசித்திப்பிலி, சுக்கு இவற்றால் தயாரித்த கஞ்சியில் தேனைச் சேர்த்துப் பருகச் செய்தால் நாவறட்சி தணியும்.

**நஞ்சை நீக்கும் கஞ்சி 10.**

கார்போக அரிசியினால் செய்யப்பட்ட கஞ்சியைப் பருகச் செய்தால் நஞ்சு நீங்கிவிடும். தாகமும் தணியும். (24)

**உடலைப்பருக்கச் செய்யும் கஞ்சி 11.**

பன்றியின் மாமிசரசத்தில் தயாரித்த கஞ்சி உடலைப் பருக்கச் செய்யும்.

**உடலை இளைக்க வைக்கம் கஞ்சி 12.**

காட்டுக்கோதுமையை வறுத்துத் தயார் செய்த கஞ்சியில் தேன் கலந்து பருகச் செய்தால் உடல் இளைக்கும். (25)

**எண்ணெய்ப் பசையுண்டாக்கும் கஞ்சி 13.**

என் அதிகம் சேர்க்கப்பட்டுத் தயாரித்த கஞ்சியில் நெய்யும் உப்பும் கலந்து கொடுப்பதனால் உடலில் எண்ணெய்ப் பசை உண்டாகிறது.

**வறட்சியுண்டாக்கும் கஞ்சி 14.**

தர்ப்பையின் வேர், நெல்லிக்காய் இவற்றால் தயாரிக்கப்பட்ட கஷாயத்தினால் ச்யாமாகம் என்ற அரிசிக் கஞ்சி தயார் செய்து பருகச் செய்தால் உடலில் வறட்சித் தன்மை ஏற்படும். (26)

**இருமல், இழுப்பு இவற்றைப் போக்கும் கஞ்சி 15.**

[1]தசமூலப் பொருட்களின் கஷாயத்தினால் தயார் செய்த கஞ்சி இருமல், விக்கல், இழுப்பு, கபதோஷம் இவற்றைப் போக்கு கிறது.

**சீரணப்பையில் உள்ள வலியை நீக்கும் கஞ்சி 16.**

கள்ளில் நெய்யும் எண்ணெயும் சேர்த்துத் தயார் செய்த கஞ்சியைக் குடிக்கக் கொடுத்தால் சீரணப்பையில் உள்ள வலி நீங்கும். (27)

**மலம் கழிக்கக் கொடுக்கும் கஞ்சி 17.**

கீரை, இறைச்சி, எள்ளு, உளுந்து இவற்றால் தயார் செய்த கஞ்சி மலம் கழிக்கச் செய்யும்.

**மலம்கட்டுவதற்கான கஞ்சி 18.**

நாவல், மாங்கொட்டை, விளாம்பழம், காடி, வில்வம் இவற் றால் தயாரித்த கஞ்சி மலத்தைக் கட்டும். (28)

**மலத்தைப் பிளக்கும் கஞ்சி 19.**

க்ஷாரப்பொருட்கள், கொடிவேலி, பெருங்காயம், புளிவஞ்சி, இவற்றால் தயார் செய்த கஞ்சி மலத்தைப் பிளந்து வெளிப்படுத் தும்.

**வாதத்தைச் சீராக்கும் கஞ்சி 20.**

கடுக்காய், கண்டந்திப்பிலி, சுக்கு இவற்றால் தயாரிக்கப் பட்ட கஞ்சி வாதத்தைச் சீராக்கும். (29)

**நெய்யினால் தோன்றும் தீமைகளை நீக்கும் கஞ்சி 21.**

மோரினால் தயாரிக்கப்பட்ட கஞ்சியைப் பருகினால் நெய்யி னால் ஸ்நேகபானம் செய்யும்போது ஏற்படும் தீமைகள் விலகும்.

**எண்ணெயினால் ஏற்படும் தீங்கை நீக்கும் கஞ்சி 22.**

மோர், பிண்ணாக்கு இவற்றால் தயாரித்த கஞ்சி எண்ணெ யைக் குடிப்பதால் ஏற்படும் தீங்குகளைப் போக்கும் (30)

---

(1) தசமூலப்பொருட்கள் :-வில்வம், பெருவாகை, குமிழம், பாதரி, முன்னை, ஓரிலை, மூவிலை, கண்டங் கத்திரி, முள்ளங்கத்திரி, நெருஞ்சில், இவற்றின் வேர்கள்.

**முறைக்காய்ச்சலை நீக்கும் கஞ்சி 23.**

பசுவின் மாமிசரசத்தில் தயாரித்த கஞ்சியில் புளிப்பு மாதுள ரசத்தைக் கூட்டிக்கொடுத்தால் முறைக்காய்ச்சல் நீங்கும்.

**தொண்டை நோய்கள் நீக்கும் கஞ்சி 24.**

யவம் எனும் அரிசியில் நெய், எண்ணெய், அரிசித்திப்பிலி, நெல்லிக்காய் இவற்றைச்சேர்த்து தயார் செய்த கஞ்சி தொண்டை நோய்களைப் போக்கும். (31)

**விந்து வெளிவரும் வழியில் தோன்றும் வேதனை நீக்கும் கஞ்சி 25.**

கோழி மாமிசரசத்தில் தயாரித்த கஞ்சி விந்து வெளிவரும் வழியில் தோன்றும் வேதனையைப் போக்கும்.

**ஆண்மையை வளர்க்கும் கஞ்சி 26.**

உளுத்தம்பருப்பில் தயாரித்த கஞ்சியில் நெய்யும், பாலும் கலந்து பருகச் செய்தால் ஆண்மை வளரும். (32)

**வெறி (மதம்) அடக்கும் கஞ்சி 27.**

பசலைக்கீரை, தயிர் இவற்றால் தயார் செய்த கஞ்சி வெறியை அடக்கும்.

**பசியடக்கும் கஞ்சி 28.**

உடும்பு மாமிச ரசம், பால், நாயுருவி விதை இவற்றால் தயார் செய்த கஞ்சி பசியையடக்கவல்லது. (33)

இவ்வாறு இருபத்தெட்டுவகையான கஞ்சிகள் கூறப்பட்டன. பஞ்சகர்மச் சிகிச்சையைக் குறித்துச் சுருக்கமாக மருந்துகள் கூறப் பட்டன. (34)

முதலில் தீர்க்கஞ்ஜீவிதீயம் எனும் அத்தியாயத்தில் வேர்கள், பழங்கள் இவற்றை அறிந்துகொள்ள எந்த மருந்துப் பொருட்கள் விவரிக்கப்பட்டனவோ அதே மருந்துப்பொருட்கள், இந்த அத்தி யாயத்திலும், பஞ்சகர்ம விதி முறைக்காக மறுபடியும் விவரிக்கப் பட்டுள்ளன. (35)

**முடிவுரை**

நினைவாற்றல், நோய்களின் காரணம், மருந்துகளைப் பயன் படுத்தும் முறை, புலனடக்கம், சமயோசித அறிவு இவைகளைக் கொண்ட மருத்துவன், மருந்துகளைச் சேர்த்து சிகிச்சை செய் வதில் திறமைசாலியாகத் திகழ்கிறான். (36)

இத்துடன் அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரக முனிவ
ரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை ஸூத்ர
ஸ்தானத்தில் அபாமார்க தண்டுலீயம் எனும்
இரண்டாவது அத்தியாயம் முற்றும்.

## மூன்றாவது அத்தியாயம்

# *ஆரக்வதீயம்

'ஆரக்வதீயம்' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

1

### 1. குஷ்டநோயை நீக்குவதற்கான 15 வகையான மேற்பூச்சு மருந்துகள்

சரக்கொன்றை, தகரவிதை, புங்கு, ஆடாதொடை, சீந்திற் கொடி, மருக்காறைக்காய், மஞ்சள், மரமஞ்சள்.

2

வெண்சிவதை, தேவதாரு, கருங்காலி, வெண்கருங்காலி, வேம்பு, வாய்விடங்கம், அரளி.

3

பெருங்கோரைக்கிழங்கு, பூவரசின் இலை, பூண்டு, வாகை, அன்னபேதி, குக்கில், முருங்கை, ,

4

காட்டுத்துளசி, வெட்பாலை, ஏழிலம்பாலை, உவகை, கோஷ்டம், நித்தியமல்லியின் இலைகள். (தளிர்கள்)

5

வசம்பு, அரேணுகம், வெண்சிவதை, நீர்வாளம், சேராங் கொட்டை, பூங்காலி, அஞ்சனக்கல்.

6

மனோசிலை, அரிதாளம், ஒட்டடை, ஏலரிசி, அன்னபேதி, பாச்சோத்தி, மருது, கோரைக்கிழங்கு, குங்குலீயம் மேற்கண்ட ஒவ்வொரு தொகுப்புப் பொருட்களையும் தூள் செய்து, பசுவின் பித்தத்தில் ஊறவைத்து, அரைத்து அல்லது கடுகு எண்ணெயில் கலக்கி மேற்பூச்சுப் பூசச் செய்ய வேண்டும்.

---

ஆரக்வதம்— சரக்கொன்னை.

ஆரக்வதீயம் — சரக்கொன்னை போன்ற மூலிகைகளைப் பற்றி விளக்குகிறபடியால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

இப்படிச் செய்வதால், கடுமையான குஷ்டநோய்கள், புதிதான வெண்குஷ்டம், தலை சொட்டை, கிடபம் (ஒருவகைக் குஷ்ட நோய்) படைநோய், பவுத்திரம், மூலம், அபசி எனும் கட்டி, சொறி சிரங்கு, என்ற நோய்கள் நீங்குகின்றன. 3-7

7

கோஷ்டம், மஞ்சள், மரமஞ்சள், துளசி, பேய்ப்புடல்,வேம்பு, அமுக்கறாக்கிழங்கு, தேவதாரு, முருங்கை, கடுகு, நேபாள தனியா, தனியா, காட்டுக்கோரைக்கிழங்கு, குங்கிலியம் இப்பொருட்களை சமஅளவு எடுத்துத் தூள் செய்து மோரில் கலந்து வைத்து கொள்ள வேண்டும். பிறகு நோயாளியை எண்ணெய் குளிக்கச் செய்து மோரில் குழப்பிய பூச்சைப் பூச வேண்டும். அதனால், அந்த நோயாளிக்கு அரிப்பு, சிறுசிறுகட்டிகள், கொப்புளங்கள், குஷ்டங்கள், வீக்கங்கள், இவை தணிவடைகின்றன. 8-9

8

கோஷ்டம், சிந்திற்கொடி, மயில் துத்தம், மஞ்சள், மரமஞ்சள், அன்னபேதி, கம்பிப்பாலை, கோரைக்கிழங்கு, பாச்சோத்தி, கந்தகம், குங்கிலியம், வாய்விடங்கம், மனோசிலை, அரிதாளம், அரளி இவற்றைத் தூள் செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

பிறகு நோயாளியின் உடலில் எண்ணெய் தடவி அதன்மேல் இந்தப் பொடியைத் தூவ வேண்டும். அதனால் படை, அரிப்பு, கிடபம் எனும் குஷ்டநோய், சொறிசிரங்கு கருநிறமுள்ள குஷ்டம், இவை தணிவடைகின்றன. 10—11

9

மனோசிலை, அரிதாளம், மிளகு, எண்ணெய், எருக்கம்பால், இவை எல்லாவற்றையும் சேர்த்துப் பூசினால் குஷ்டநோய் நீங்கும்.

10

மயில் துத்தம், வாய்விடங்கம், மிளகு, கோஷ்டம், பாச்சோத்தி, மனோசிலை இவற்றைச் சேர்த்து அரைத்து உடலில் பூசினால் குஷ்டநோய் நீங்கும். 12

11

ரஸாஞ்சனம், தகரவிதை இரண்டையும் சம அளவில் எடுத்து விளாம்பழச் சாற்றில் கலந்து மேற்பூச்சுப் பூசினால் குஷ்டநோய் நீங்கும்.

12

புங்கம் விதை, தகரவிதை, கோஷ்டம், இவற்றின் பொடியை பசுவின் சிறுநீரில் அரைத்து உடற்பூச்சுப் பூசுவது குஷ்டத்திற்குச் சிறந்தது. 13

13

மஞ்சள், மரமஞ்சள், வெட்பாலைஅரிசி, புங்கம்விதை, நித்திய மல்லி இலை, அலரி வேர்பட்டை, அலரித் தண்டு, எள்ளுச் செடியால் செய்த க்ஷாரம் இவற்றை சம அளவில் எடுத்துப் பொடி செய்து பசுவின் சிறுநீரில் குழைத்து உடற்பூச்சுப் பூசினால் குஷ்ட நோய் நீங்கும். 14

14

மனோசிலை, வெட்பாலையின் பட்டை, கோஷ்டம், ஜடாமாம்சி, தகரவிதை, புங்கம் விதை, கோரைக்கிழங்கு, பூவரசம் பட்டை, அரளி வேர் இவற்றை ஒவ்வொரு தோலா எடுத்துப் பொடி செய்து யவம் எனும் அரிசியினால் செய்த காடி, 256 தோலா புரசை க்ஷார நீர் இவற்றில் கலந்து காய்ச்சிப் பூசுவதற்குத் தகுந்த நிலையில் இறக்கிச் சூடு தணிந்தபின் உடலில் பூசுவது குஷ்டநோய்க்குச் சிறந்தது. 15–16

15

கொன்றை இலைகளை அல்லது மணத்தக்காளி இலைகளை மோர்விட்டறைத்து, எண்ணெய்க் குளியல் செய்துகொண்ட நோயாளியின் உடலில் தேய்த்தால் குஷ்டநோய் அழியும்.

இவ்வாறே அரளி இலைகளையும் அரைத்துப் பயன்படுத்தலாம். 17

## 2. வாத நோய்களைப் போக்கும் பூச்சுக்கள்

1

இலந்தை, கொள்ளு, தேவதாரு, சித்தரத்தை, உளுந்து, ஆளிவிதை, எள்ளு, கடுகு, ஆமணக்கு விதை, கோஷ்டம், வசம்பு, சதகுப்பை, யவ அரிசியின் மாவு இவற்றைச் சமஅளவு எடுத்துத் தூள் செய்து, காடியில் குழைத்துச் சூடாக்கி மேற்பூச்சுப் பூசினால் வாததோஷத்தினால் உண்டான நோய்கள் நீங்கும். 18

2

நீர் நிலையில் வாழும் பிராணிகள், பறவைகள் இவற்றின் மாமிசம், மீனிறைச்சி இவற்றில் பெருங்காயம், மிளகு, இஞ்சி, சீரகம், மஞ்சள், தனியா, இவற்றைத் தூள்செய்து கலந்து சூடு செய்து மேற்பூச்சுப் பூசுவதினால் வாத தோஷங்களால் தோன்றும் நோய்கள் நீங்கும்.

3

தசமூலப்பொருட்கள், வாசனைப் பொருட்கள், இவற்றைத் தூள் செய்து, எண்ணெய், நெய், வசை, மஜ்ஜை இவற்றில் கலந்து சூடு செய்து மேற்பூச்சுப் பூசுவதால் வாத தோஷத்தினால் ஏற்படும் பிணிகள் அகலும். 19

4

யவதானிய அரிசியின் மாவு, யவக்ஷாரம் இவ்விரண்டையும் மோரில் குழப்பி, சூடாக்கி வயிற்றின் மேல் பூசினால் வயிற்றுவலி அகலும்.

5

கோஷ்டம், சதகுப்பை, வசம்பு, யவதானியம் இவற்றின் தூளை, எண்ணெய், காடி, இவற்றில் பக்குவம் செய்து சூடாக வயிற்றில் போட்டால் வாத தோஷத்தினால் உண்டாகும் நோய்கள் நீங்கும். 20

### 3. வாத இரத்த நோய்களை நீக்கும் மூவகைப் பூச்சுகள்

1

சதகுப்பை, சோம்பு, அதிமதுரம், இலுப்பை, சித்தாமுட்டி, முரள், நீர் கோரைக்கிழங்கு, நெய், பால்முதுக்கன் கிழங்கு, கற்கண்டு இவற்றைக் கலந்து செய்யப்பட்ட மருந்தின் பூச்சு வாத இரத்தத்தினால் தோன்றும் பிணிகளைப் போக்கும். 21

2

சித்தரத்தை, சீந்திற்கொடி, அதிமதுரம், சித்தாமுட்டி, பேராமுட்டி, ஜீவகம், ரிஷபகம் இப்பொருட்களை சம அளவில் எடுத்துப் பொடி செய்து, இத்தூளைவிட நான்கு பங்கு நெய், பதினாறு பங்கு பால் இவற்றில் கலந்துகொதிக்கவைத்து தேன் மெழுகையும் கூட்டி மேற்பூச்சுப் பூசுவதனால் வாத இரத்த தோஷத்தினால் தோன்றும் வேதனை அகலும். 22

3

கோதுமை மாவை வெள்ளாட்டின்பால், நெய் இவற்றுடன் கலந்து சூடாக்கி மேற்பூச்சுப் பூசினால் வாத இரத்தத்தினால் தோன்றும் வலி அமைதியுறும்.

### 4. தலைவலி நீக்கும் இருவகைப் பூச்சுகள்

1

தகரவிதை, கருநெய்தல், சந்தனம், கோஷ்டம் இவற்றின் தூளை நெய்யில் குழப்பிச் சூடாக்கி மேற்பூச்சுப் பூசினால் தலைவலி நீங்கும். 23

2

வெண்தாமரை, தேவதாரு, கோஷ்டம், அதிமதுரம், ஏலரிசி, செந்தாமரை, நெய்தல் இவற்றின் கிழங்குகள், அகில், பத்மகோஷ்டம், காட்டுக் கோரைக் கிழங்கு, இவை எல்லாவற்றையும்

ஒன்று சேர்த்து நெய்யுடன் கலந்து சூடாக்கி தலையில் பூசினால் தலைவலி நீங்கும். 24

## 5. விலாப்பக்கத்தின் வலி நீக்கும் பூச்சு

சித்தரத்தை, மஞ்சள், மரமஞ்சள், விலாமிச்சை வேர், சதகுப்பை, சோம்பு, தேவதாரு, கற்கண்டு, கீரைப்பாலை வேர், இவற்றைப் பொடி செய்து நெய்யிலும், எண்ணெயிலும் சேர்த்து சூடாக்கி விலாப்பக்கத்தில் பூசினால் அங்குள்ள வலி நீங்கும். 25

## 6. எரிச்சலை நீக்கும் பூச்சுகள்

*1*

பாசி, செந்தாமரைக்கிழங்கு, நெய்தல், பிரம்பு, சிறுநாகப்பூ, வெண்தாமரைத்தண்டு, விளாமிச்சை வேர், பாச்சோத்தி, ஞாழல் பூ, அகில், சந்தணம் இவற்றின் சூர்ணத்தை நெய்யில் கலந்து மேற்பூச்சுப் பூசினால் எரிச்சல் தணியும். 26

*2*

கற்கண்டு, மஞ்சேஷ்டி, நீர்வஞ்சிக்கொடி, பத்ம கோஷ்டம், அதிமதுரம், சிற்றேலம், தாமரைக்கிழங்கு, அருகம்புல், காஞ்சோரி வேர், தர்ப்பைவேர், நாணல்வேர், குருவேர், எரும்புல் இவற்றை நீரில் கலந்து அறைத்து மேற்பூச்சுப் பூசினால் எரிச்சல் அடங்கும். 27

## 7. குளிர்ச்சியை நீக்கும் பூச்சு

சிலாசத்து, ஏலரிசி, அகில், கோஷ்டம், கோரைக் கிழங்கு, தகரவிதை, லவங்கப்பட்டை, தேவதாரு, சித்தரத்தை;இவற்றைப் பொடி செய்து மேற்பூச்சுப் பூசினால் குளிர்ச்சி விரைவில் நீங்கும்.

## 8. நஞ்சு நீக்கும் பூச்சு

வாகை, கருநொச்சி, இவற்றின் மேற்பூச்சு விரைவில் நஞ்சை நீக்குகிறது. 28

## 9. வியர்வை நீங்கப் பூச்சு

வாகை, விலாமிச்சைவேர், சிறுநாகப்பூ, பாச்சோத்தி, இவற்றை அறைத்து மேற்பூச்சுப் பூசினால் தோலில் தோன்றும் நோயும், வியர்வையும் நீங்கும்.

## 10. கெட்ட நாற்றத்தைப் போக்கப் பூச்சு

இலவங்க மரத்தின் இலை, பாச்சோத்தி, கடுக்காய், சந்தணம், இவற்றை அரைத்து உடலில் பூசினால் கெட்ட நாற்றம் நீங்கும். 29

### முடிவுரை

இந்த ஆரக்வதீயம் எனும் அத்தியாயத்தில் சித்தர்கள், மாமுனிவர்கள் இவர்களால் போற்றப்பட்ட ஆத்ரேய முனிவர் உலக நன்மையின் பொருட்டு பலவகையான பிணிகளை நீக்கக்கூடிய முப்பத்திரண்டுவிதமான சூர்ணங்களின் பூச்சைப்பற்றி கூறியுள்ளார். 30

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
ஸூத்திரஸ்தானத்தில் 'ஆரக்வதீயம்'
எனும் மூன்றாவது அத்தியாயம்
முற்றும்.

## நான்காவது அத்தியாயம்

# *ஷட்விரேசன சதாச்ரிதீயம்

'ஷட்விரேசன சதாச்ரிதீயம்' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

இந்த நூலில் அறுநூறு வகையான மலம் கழிக்கச் செய்யும் பொருட்கள் கூறப்பட்டுள்ளன. இப்பொருட்களுக்கு இருப்பிடங்கள் ஆறு. ஐநூறுவகை கஷாயங்கள், கஷாயங்களுக்கான ஐந்து வகைக் காரணங்கள், கஷாயங்கள் தயாரிக்கும் ஐவகை முறை, ஐம்பதுவகை மகா கஷாயங்கள் இவை யாவும் இந்த அத்தியாயத்தில் சுருக்கமாக விளக்கப்படுகின்றன. 3

## 1. அறுநூறு வகை மலங்கழிக்கச் செய்யும் மருந்துகள்

அறுநூறு வகையான மலம் கழிக்கும் பொருட்கள் கூறப்பட்டுள்ளதை இங்கு சுருக்கமாக விளக்கி, விரிவாக கல்பஸ்தானத்தில் விளக்குவோம். அவற்றில் —

| | |
|---|---|
| மருக்காறைக்காயினால் தயாரிக்கப்படும் மருந்துகள் | 133 |
| தேவதாளி என்ற மரத்தின் பழங்களினால் தயாரிக்கப்படும் மருந்துகள் | 39 |
| சுரைக்கொடியிலிருந்து தயாரிக்கப்படும் மருந்துகள் | 45 |
| நாயுருவியிலிருந்து தயார் செய்யப்படும் மருந்துகள் | 60 |
| வெட்பாலையிலிருந்து தயாரிக்கப்படும் மருந்துகள் | 18 |
| காட்டுச்சுரையிலிருந்து தயாரிக்கப்படும் மருந்துகள் | 60 |
| கருஞ்சிவதை, வெண்சிவதை இவற்றிலிருந்து தயாரிக்கப்படும் பேதிக்கான மருந்துகள் | 110 |
| புளிவஞ்சியிலிருந்து தயாரிக்கப்படுபவை | 12 |
| பாச்சோத்தியினால் தயாரிக்கப்படுபவை | 16 |
| வாகை மரத்திலிருந்து தயாரிக்கப்படுபவை | 20 |
| காய் துராய், செங்கங்குப்பி இவற்றிலிருந்து தயாரிக்கப்படுபவை | 39 |
| நேர்வாளம், த்ரவந்தி (எலிச்செவி) இவற்றிலிருந்து தயாரிக்கப்படுபவை | 48 |
| | 600 |

---

* ஷட்விரேசன சதாச்ரிதீயம்— அறுநூறு வகையானமலம் கழிக்கத் தகுந்த பொருட்களைப் பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

ஆக அறுநூறு வகையான மலங்கழிக்கச் செய்யும் மருந்துகள். 4

## 2. ஆறு வகை மலங்கழிக்கும் பொருட்களின் இருப்பிடங்கள்

பால், வேர், பட்டை, இலை, மலர், பழம் இந்த ஆறும் மேற்கண்ட பொருட்களுக்கு இருப்பிடங்களாகும். 5

## 3. ஐவகைக் கஷாய காரணங்களும், அவை தயாரிக்கும் முறைகளும்

இனிப்புச் சுவையுள்ள கஷாயம், புளிப்புச் சுவையுள்ள கஷாயம், உவர்ப்புச் சுவையுள்ள கஷாயம், கைப்புச் சுவையுள்ள கஷாயம், துவர்ப்புச் சுவையுள்ள கஷாயம் என கஷாயம் ஐவகைப் படும். 6

## 4. கஷாயம் தயாரிக்கும் முறை ஐந்து

சுரசம், கல்கம், ச்ருதம், சீதம், பாண்டம் என கஷாயம் தயாரிக்கும் முறை ஐந்து வகைப்படும்.

## 5. சுரசத்தின் இலக்கணம்

மருந்துப் பொருட்களைக் கருவியினால் பிழிந்து எடுக்கப்படும் சாற்றுக்குச் சுரசம் எனப்பெயர்.

## 6. கல்கத்தின் இலக்கணம்

மருந்துப் பொருட்களில் பால் அல்லது நீர் போன்றவற்றைச் சேர்த்துக் கெட்டியாக அரைத்து உருண்டையாகத் தயாரிக்கும் பொருளுக்கு கல்கம் எனப்பெயர்.

## 7. ச்ருதத்தின் இலக்கணம்

மருந்துப்பொருட்களைத் தூளாக்கி பாண்டத்திலிட்டு நீர், அல்லது பால் போன்ற திரவப்பொருட்களைச் சேர்த்துக் கொதிக்க வைத்துத் தயார் செய்த பொருளை ச்ருதம் அல்லது க்வாதம் என மருத்துவர்கள் கூறுகின்றனர்.

## 8. சீதத்தின் இலக்கணம்

மருந்துப்பொருட்களைத் தூளாக்கிச் சுடுநீரில் போட்டு இரவு முழுவதும் ஊறவைத்து மறுநாள் காலையில் நன்கு கையினால் கசக்கிப் பிழிந்து வடிக்கட்டி வைத்துக்கொள்ளும் கஷாயத்திற்கு சீதம் எனப்பெயர்.

## 9. பாண்டத்தின் இலக்கணம்

மருந்துப் பொருட்களை இடித்துத் தூளாக்கிச் சுடுநீரில் இட்டு பிசைந்து வடிகட்டி எடுத்து வைத்துக்கொள்ளும் கஷாயத்திற்கு பாண்டம் எனப்பெயர்.

## 10. ஐவகைக் கஷாயங்களின் வலிவு

இந்த ஐவகைக் கஷாயங்களில் பாண்டத்தைவிடச் சீதமும், சீதத்தைவிட ச்ருதமும், ச்ருதத்தைவிட கல்கமும், கல்கத்தைவிட சுரசமும் ஒன்றைக்காட்டிலும் ஒன்று வலிவு பெற்றவை. ஆகையினால் இந்த ஐவகைக் கஷாயங்களை, நோய், நோயாளி இவர்களின் வலிவுக்கு ஏற்றவாறு பயன்படுத்தவேண்டும். ஏனென்றால் எல்லாவகைக் கஷாயங்களும் எல்லா நோய்களிலும் பயன்படக் கூடியவை அல்ல. 7

மேற்கூறப்பட்ட ஐம்பதுவகை மகாகஷாயங்களைப் பற்றி விளக்குவோம்.

## 11. ஐம்பது வகையான மகா கஷாயங்களின் சுருக்கமான விளக்கம்

(அ) **ஜீவனீயம்** (உயிரை ஊட்டக்கூடியது)
(ஆ) **பிரும்மணீயம்** (உடலை வளர்க்கக்கூடியது)
(இ) **லேகனீயம்** (இளைக்கச் செய்வது)
(ஈ) **பேதனீயம்** (மலத்தைப் பிளக்கக்கூடியது)
(உ) **ஸந்தானீயம்** (பிளந்தவற்றைச் சேர்க்கக்கூடியது)
(ஊ) **தீபனீயம்** (சடராக்னியைத் தூண்டக்கூடியது)

என ஆறுவகைக் கஷாயக் கூட்டுகள் உள்ளன.

மேலும்

(அ) **பல்யம்** (வலிவை அளிக்கக்கூடியது)
(ஆ) **வர்ண்யம்** (நிறத்தைக் கொடுக்கக்கூடியது)
(இ) **கண்ட்யம்** (குரலைச் சுத்தப்படுத்தக்கூடியது)
(ஈ) **ஹ்ருத்யம்** (இதயத்திற்கு நன்மையளிக்கக் கூடியது)

என நான்குவகைக் கஷாயக் கூட்டுகள்.

(அ) **த்ருப்திக்னம்** (பசியின்மையை அகற்றி பசியை உண்டாக்கக்கூடியது)
(ஆ) **அர்சோக்னம்** (மூலநோயை நீக்கக்கூடியது)
(இ) **குஷ்டக்னம்** (குஷ்டநோயை நீக்குவது)
(ஈ) **கண்டுக்னம்** (அரிப்பைத் தணிக்கக்கூடியது)
(உ) **க்ருமிக்னம்** (க்ருமிகளை அழிக்கக்கூடியது)
(ஊ) **விஷக்னம்** (நஞ்சை நீக்கக்கூடியது)

என ஆறுவகைக் கஷாயக் கூட்டுகள்.

(அ) **ஸ்தன்ய ஜனனம்** (தாய்ப்பாலை உண்டாக்கக் கூடியது)

(ஆ) ஸ்தன்ய சோதனம் (தாய்ப்பாலைத் தூய்மைப் படுத்துவது)

(இ) சுக்ர ஜனனம் (விந்துவை உண்டாக்கக்கூடியது)

(ஈ) சுக்ர சோதனம் (விந்துவைச் சுத்தப்படுத்துவது)

என நான்குவகைக் கஷாயக் கூட்டுகள்.

(அ) ஸ்நேஹோபகம் (எண்ணெய்ப்பசையைத் தோற்றுவிப்பவை)

(ஆ) ஸ்வேதோபகம் (வியர்வையை உண்டாக்கக் கூடியவை)

(இ) வமனோபகம் (வாந்தி எடுக்கப் பயன்படுபவை)

(ஈ) விரேசனோபகம் (மலம்கழிக்கப் பயன்படுபவை)

(உ) ஆஸ்தாபனோபகம் (கஷாய வஸ்திக்குப் பயன் படுபவை)

(ஊ) அனுவாஸனோபகம் (எண்ணெய் வஸ்திக்குப் பயன் படுபவை)

(எ) சிரோவிரேசனோபகம் (தலையில் உள்ள தோஷங்களை வெளிப்படுத்துபவை)

இவ்விதம் ஏழுவகைக் கஷாயங்களின் கூட்டுகள்.

(அ) சர்தி நிக்ரஹணம் (வாந்தியைத் தடுப்பவை)

(ஆ) த்ருஷ்ணா நிக்ரஹணம் (தாகத்தை அடக்கக்கூடியவை)

(இ) ஹிக்கா நிக்ரஹணம் (விக்கலை அடக்கக்கூடியவை)

இம்மாதிரி மூவகைக் கஷாயங்களின் கூட்டுகள்.

(அ) புரீஷ சங்க்ரஹணீயம் (மலத்தைக் கட்டக்கூடியவை)

(ஆ) புரீஷ விரஜனீயம் (மலத்தைக் கழிக்கச் செய்பவை)

(இ) மூத்ரஸங்க்ரஹணீயம் (சிறுநீரைக் கட்டுபவை)

(ஈ) மூத்ரவிரஜனீயம் (சிறுநீரில் உள்ள கற்களை வெளிப்படுத்துபவை)

(உ) மூத்ரவிரேசனீயம் (சிறுநீரை சுத்தப்படுத்தி வெளிப்படுத்துபவை)

இவ்விதம் ஐந்துவகைக் கஷாயங்களின் கூட்டுகள்.

(அ) காஸஹரம் (இருமலை நீக்கக்கூடியவை)

(ஆ) ச்வாஸஹரம் (இழுப்பைப் போக்கக் கூடியவை)

(இ) **சோதஹரம்** (வீக்கத்தைத் தணிக்கக் கூடியவை)

(ஈ) **ஜ்வரஹரம்** (காய்ச்சலை நீக்கக்கூடியவை)

(உ) **ச்ரமஹரம்** (களைப்பைப் போக்கக்கூடியவை)

என ஐந்துவகை கஷாயக் கூட்டுகள்

(அ) **தாஹப்ரசமனம்** (எரிச்சலைத் தணிக்கக் கூடியவை)

(ஆ) **சீதப்ரசமனம்** (குளிர்ச்சியைத் தணிக்கக் கூடியவை)

(இ) **[1]உதர்தப்ரசமனம்** (உதர்தம் எனும் நோயைக் குணப்படுத்துபவை)

(ஈ) **அங்கமர்தப்ரசமனம்** (உடல் உறுப்புக்களில் வலியை நீக்கக்கூடியவை)

(உ) **சூலப்ரசமனம்** (குத்தல் வலியைப் போக்கக் கூடியவை)

இவ்விதம் ஐந்து வகைக் கஷாயக் கூட்டுகள்.

(அ) **சோணித ஸ்தாபனம்** (இரத்தப்பெருக்கை நிறுத்துபவை)

(ஆ) **வேதநாஸ்தாபனம்** (வலியைத் தணிக்கக்கூடியவை)

(இ) **ஸம்ஞாஸ்தாபனம்** (நினைவை நிலை நிறுத்தக் கூடியவை)

(ஈ) **பிரஜாஸ்தாபனம்** (கருச்சிதைவை நிறுத்தி மக்கட் பேற்றை உண்டுபண்ணுபவை)

(உ) **வயஸ்தாபனம்** (ஆயுளை வளர்க்க வல்லவை)

என ஐந்துவகைக் கஷாயக் கூட்டுகள்.

இம்மாதிரி ஐம்பது வகை மகா கஷாயங்களின் இலக்கணம் உதாரணத்திற்காக விளக்கப்பட்டன. இந்த மஹா கஷாயங்களின் ஒவ்வொரு கூட்டிலும் பத்து பத்து கஷாயங்களை விளக்குவதால் இவைகளே ஐநூறு கஷாயங்களாக ஆகின்றன. 8

---

1 உதர்தம் — திடீரெனத் தோலில் அரிப்புடன் ஏற்படும் தடித்த சிறுசிறு தழும்பு போன்றவை (பூரான்கடி போன்றது)

## 12. மகா கஷாயங்கள்

### ஜீவனீயம் என்னும் பத்துப் பொருட்கள் கொண்ட மகா கஷாயங்கள் (1)

ஜீவகம், ரிஷபகம், மேதா, மஹாமேதா, காகோலி, க்ஷீர காகோலி, பயறு, உளுந்து, கீரைப்பாலை (அடபதியம்கிழங்கு) அதிமதுரம் இந்தப் பத்துப் பொருட்களும் ஜீவனீய மகாகஷாய கூட்டுப் பொருட்களாகும்.

இந்தக் கஷாயம் ஆயுளை வளர்க்கக் கூடியது.

### பிரும்மணீய மகா கஷாயம் (2)

பால்முதுக்கன் கிழங்கு, கண்டங்கத்திரி, (ராஜக்ஷவகம்) அமுக் கராக்கிழங்கு, காகோலி, க்ஷீரகாகோலி, வெண்சித்தாமுட்டி, மஞ்சள் சித்தாமுட்டி, காட்டுப்பருத்தி, முதுக்கங்கிழங்கு இந்த பத்துப் பொருட்களும் பிரும்மணீய மகாகஷாயக் கூட்டுப்பொருட் களாகும். இந்தக் கஷாயம் உடல்வளர்ச்சியை ஏற்படுத்தக்கூடியது.)

### லேகனீய மகா கஷாயம் (3)

கோரைக்கிழங்கு, கோஷ்டம், மஞ்சள், மரமஞ்சள், வசம்பு அதிவிடயம், கடுகரோகிணி, கொடிவேலி, புங்கு, வெண் வசம்பு இந்தப் பத்துப் பொருட்களும் லேகனீய மகா கஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் தோஷங்களை வெளிப்படுத்தி உடலை இளைக்கச் செய்யும்.

### பேதனீய மகா கஷாயம் (4)

சிவதை, எருக்கு, ஆமணக்கு, முன்னை, நிர்வாளம், கொடி வேலி, புங்கு, சங்கன் குப்பி, கடுகரோகிணி, மஞ்சள் நிற எருக்கு (பிருமதண்டு) இந்தப் பத்துப் பொருட்களும் பேதனீய மகா கஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் மலக் கட்டைப் போக்கும்.

### ஸந்தானீய மகா கஷாயம் (5)

அதிமதுரம், சிந்திற்கொடி, மூவிலை, பாதரி, மஞ்ஜஷ்டி, இலவம் பிசின், காட்டாத்திப்பூ, பாச்சோத்தி, ஞாழல், குமிழ் இந்தப் பத்துப் பொருட்களும் ஸந்தானீய மகாகஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் பிளந்த மலங்களைச் சேர்த்து பேதியை நிறுத்தவல்லது.

**தீபனீய மகா கஷாயம் (6)**

அரிசித்திப்பிலி, கண்டந்திப்பிலி, செவியம், கொடிவேலி, சுக்கு, புளிவஞ்சி, மிளகு, ஓமம், சேராங்கொட்டை, பெருங்காயம் இந்தப் பத்துப் பொருட்களும் தீபநீய மகா கஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இது சடராக்னியைத் தூண்டிவிடும்.

இம்மாதிரி ஆறு வகைக் கஷாயங்களின் தொகுப்பு

**13. பல்ய மகா கஷாயம் (1)**

காட்டு வெள்ளரி, பூனைக்காலி, தண்ணீர் முட்டான் கிழங்கு, காட்டு உளுந்து, பால் முதுக்கன் கிழங்கு, அமுக்கராக்கிழங்கு, ஓரிலை, கடுகரோகிணி, சித்தாமுட்டி, பேராமுட்டி, இந்த பத்துப் பொருட்களும் பல்ய மகாகஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் உடலுக்கு வலிமை அளிக்கும்.

**வர்ண்ய மகா கஷாயம் (2)**

வெண்சந்தனம், சிறுநாகப்பூ, பதிமுகம், விலாமிச்சை வேர், அதிமதுரம், மஞ்ஜஷ்டி, நன்னாரி, பால்முதுக்கன் கிழங்கு, வெள்ளை அருகம்புல், இந்தப் பத்துப் பொருட்களும் வர்ண்ய மகாகஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் உடலுக்கு நிறத்தை அளிக்கவல்லது.

**14. கண்ட்ய மகா கஷாயம்**

நன்னாரி, கரும்புவேர், அதிமதுரம், அரிசித்திப்பிலி, திராக்ஷை, முதுக்கன்கிழங்கு, குமிழம், சிறுபுள்ளடி, முள்ளங்கத்திரி, கண்டங்கத்திரி இந்தப் பத்துப் பொருட்களும் கண்ட்ய மகாகஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் குரல் வளத்தை அளிக்கக்கூடியது. 9

**15. ஹ்ருத்ய மகா கஷாயம்**

மா, எரிப்புமா, எலுமிச்சை, பெருங்களாக்காய், புளி, புளிவஞ்சி, இலந்தை, காட்டு இலந்தை, புளிப்பு மாதுளை, துரிஞ்சிக்காய் இந்தப் பத்துப் பொருட்களும் ஹ்ருத்யம் எனும் கஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் இதயத்திற்கு நன்மை அளிக்கக்கூடியது.

இவ்வாறு நான்குவகை கஷாயத் தொகுப்புக்கள் கூறப்பட்டன. 10

**16. த்ருப்திக்ன மகா கஷாயம்**

சுக்கு, செவியம், கொடிவேலி, வாய்விடங்கம், பெருங்குரும்பை, சிந்திற்கொடி, வசம்பு, கோரைக்கிழங்கு, அரிசித்

திப்பிலி, பேய்ப்புடல் இந்தப் பத்துப் பொருட்களும் த்ருப்திக்ன மகா கஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம், பசியை உண்டாக்கக்கூடியது. 11

## 17. அர்சோக்ன மகா கஷாயம்

வெட்பாலை, வில்வம், கொடிவேலி, சுக்கு, அதிவிடயம், கடுக்காய், காஞ்சோரி, மரமஞ்சள், வசம்பு, செவியம் இந்தப் பத்துப் பொருட்களும் அர்சோக்ன மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் மூலநோயை போக்கக் கூடியது. 12

## 18. குஷ்டக்ன மகா கஷாயம்

கருங்காலி, கடுக்காய், நெல்லிக்காய், மஞ்சள், சேராங் கொட்டை, ஏழிலம்பாலை, கொன்னை, அரளி, வாய்விடங்கம், ஜாதிமல்லித் துளிர் இந்தப் பத்துப் பொருட்களும் குஷ்டக்ன மகாகஷாயத்தின் கூட்டுப் பொருளாகும். இந்தக் கஷாயம் குஷ்ட நோயை நீக்கவல்லது. 13

## 19. கண்டுக்ன மகா கஷாயம்

சிவப்புச்சந்தனம், விலாமிச்சைவேர் (ஜடாமாம்சி), கொன்னை, புங்கு, வேம்பு, வெட்பாலை, கடுகு, அதிமதுரம், மரமஞ்சள், கோரைக்கிழங்கு இந்தப் பத்துப் பொருட்களும் கண்டுக்ன மகா கஷாயத்தின் கூட்டுப்பொருட்களாகும். இந்தக் கஷாயம் அரிப்பைப் போக்கும். 14

## 20. கிருமிக்ன மகா கஷாயம்

முருங்கை, மிளகு, கள்ளி, கேம்புகம், வாய்விடங்கம், நொச்சி, வாகை, நெருஞ்சில், எலிச்செவி, ஆடாதொடை இந்தப் பத்துப் பொருட்களும் க்ருமிக்ன மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் பூச்சிகளை அகற்றவல்லது. 15

## 21. விஷக்ன மகா கஷாயம்

மஞ்சள், மஞ்சஷ்டி, சித்தரத்தை, சிற்றேலம், கருஞ்சிவதை, சந்தனம், தேத்தாங்கொட்டை, வாகை, நொச்சி, நருவிலி இந்தப் பத்துப் பொருட்களும் விஷக்ன மகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இது நஞ்சை நீக்கவல்லது.

இத்துடன் ஆறுவகைக் கஷாயத் தொகுப்புக் கூறப்பட்டது. 16

**22. ஸ்தன்ய ஜனன மகா கஷாயம்**

விலாமிச்சை வேர், சம்பா தானியம், அறுபதாம் குறுவை, நீண்ட கணுவுள்ள கரும்பு, தர்ப்பை, நாணல், குருவிக்கரும்பு வேர், கரும்புல், செங்கரும்பு, காவட்டம்புல், இந்தப் பத்துப் பொருட்களும் ஸ்தன்ய ஜனன மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இது தாய்ப்பாலை உண்டுபண்ணும். 17

**23. ஸ்தன்ய சோதன மகா கஷாயம்**

வட்டத்திருப்பி, சுக்கு, தேவதாரு, கோரைக்கிழங்கு, பெருங் குரும்பை, சீந்திற்கொடி, வெட்பாலை அரிசி, நிலவேம்பு, கடுக ரோஹிணி, நன்னாரி, இந்தப் பத்துப் பொருட்களும் ஸ்தன்ய சோதன மகாகஷாயத்தின் கூட்டுப்பொருட்களாகும். இது தாய்ப் பாலைச் சுத்தப்படுத்தும். 18

**24. சுக்ர ஜனன மகா கஷாயம்**

ஜீவகம், ரிஷபகம், காகோலி, க்ஷீரகாகோலி, பயறு, உளுந்து, மேதா, தண்ணீர் முட்டாங்கிழங்கு, ஜடாமாம்சி, கர்க்கடக ச்ருங்கி இந்தப் பத்துப் பொருட்களும் சுக்ர ஜனன மகா கஷா யத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் விந்துவை உண்டுபண்ணக்கூடியது. 19

**25. சுக்ர சோதன மகா கஷாயம்**

கோஷ்டம், ஏலாவாலுகம், குமிழ், கடல் நுரை, கடம்ப மரத்தின் பிசின், கரும்பு, நாமக்கரும்பு, நீர்முள்ளி, சிவந்த கொக்கு மந்தாரைப் பூ, விலாமிச்சை வேர் இந்தப் பத்துப்பொருட் களும் சுக்ர சோதன மகா கஷாயத்தின் கூட்டுப்பொருட்களாகும். இந்தக் கஷாயம் விந்துவைச் சுத்தப்படுத்தும். 20

**26. ஸ்நேஹோபக மகா கஷாயம்**

சிற்றீச்சை, அதிமதுரம், சீந்திற்கொடி, மேதா, முறுக்கன் கிழங்கு, காகோலி, க்ஷீரகாகோலி, ஜீவகம், அடபதியன் கிழங்கு, ஓரிலை இந்தப் பத்துப் பொருட்களும் ஸ்நேஹோபக மகா கஷா யத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் எண் ணெய்ப் பசையை உண்டாக்கக் கூடியது. 21

**27. ஸ்வேதோபக மகா கஷாயம்**

முருங்கை, ஆமணக்கு, எருக்கு, சிவப்புச்சாரடை, வெளுப்புச் சாரடை, யவதானியம், எள்ளு, கொள்ளு, உளுந்து, இலந்தை இந்தப் பத்துப் பொருட்களும், ஸ்வேதோபக மகாகஷாயத்தின்

கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் வியர்வையைத் தோற்றுவிக்கும். 22

## 28. வமனோபக மகா கஷாயம்

தேன், அதிமதுரம், செந்நிற கொக்குமந்தாரை, கருநொச்சி, கடம்ப மரவேர், நீர்நொச்சி, கோவை, மூவிலை, எருக்கு நாயுருவி இந்தப் பத்துப் பொருட்களும் வமனோபக மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் வாந்தி எடுக்கப் பயன்படுகிறது. 23

## 29. விரேசனோபக மகா கஷாயம்

திராக்ஷை, குமிழ், சிற்றீச்சை, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், காட்டு இலந்தை, இலந்தை, கொடி இலந்தை, உவகை இந்தப் பத்துப் பொருட்களும் விரேசனோபக மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்கள். இந்தக் கஷாயம் மலம் கழிக்கப் பயன்படும். 24

## 30. ஆஸ்தாபனோபக மகா கஷாயம்

சிவதை, வில்வம், அரிசித்திப்பிலி, கோஷ்டம், கடுகு, வசம்பு, வெட்பாலை அரிசி, சதகுப்பை, அதிமதுரம், மருக்காறைக்காய் இந்தப் பத்துப் பொருட்களும் ஆஸ்தாபநோபக மகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் *கஷாய வஸ்தி கொடுக்கப் பயன்படுகிறது. 25

## 31. அநுவாஸநோபக மகா கஷாயம்

சித்தரத்தை, தேவதாரு, வில்வம், மருக்காறைக்காய், சதகுப்பை, வெள்ளைச் சாரடை, சிவப்புச் சாரடை, நெருஞ்சில், முன்னை, பெருவாகை இந்தப் பத்துப் பொருட்களும் அநுவாஸநோபக மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் எண்ணெய் வஸ்தி கொடுப்பதற்குப் பயன்படுகிறது. 26

## 32. சிரோவிரேசநோபக மகா கஷாயம்

வாலுளுவை, பெரிய கடலாடி, மிளகு, அரிசித்திப்பிலி, வாய்விடங்கம், முருங்கை, கடுகு, நாயுருவி அரிசி, கண்டங்கத்திரி, வாகை இந்தப் பத்துப் பொருட்களும், சிரோவிரேசநோபக மகா

---

*கஷாய வஸ்தி — மருந்துப் பொருட்களால் கஷாயம் தயார் செய்து, பீச்சாங்குழல் மூலமாக ஆசனத் துவாரத்தில் செலுத்துவது.

கஷாயத்தின் கூட்டுப் பொருட்கள். இந்தக் கஷாயம் தலையில் உள்ள தோஷங்களை வெளிப்படுத்தப் பயன்படுகிறது. 27

இவ்வாறு ஏழுவகை கஷாயத் தொகுப்புக் கூறப்பட்டது.

## 33. சர்தி நிக்ரஹ மகா கஷாயம்

நாவல், மா இவற்றின் துளிர், துரிஞ்சி, புளிப்பு இலந்தை, மாதுளை, யவதானியம், அறுபதாம் குருவை அரிசி, விலாமிச்சம் வேர், மண், நெல்பொரி இந்தப் பத்துப் பொருட்களும் சர்தி நிக்ரஹண மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இது வாந்தியை நிறுத்தக்கூடியது. 28

## 34. த்ருஷ்ணா நிக்ரஹ மகா கஷாயம்

சுக்கு, காஞ்சோரி, கோரைக்கிழங்கு, பர்ப்பாடகம், சந்தனம், நிலவேம்பு, சீந்திற்கொடி, வெட்டிவேர், தனியா, பேய்ப்புடல், இந்தப் பத்துப் பொருட்களும் த்ருஷ்ணா நிக்ரஹ மகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் நாவறட்சியைத் தணிக்கும். 29

## 35. ஹிக்கா நிக்ரஹண மகா கஷாயம்

பூலாங்கிழங்கு, புஷ்கரமூலம், இலந்தைவிதை, கண்டங்கத்தரி, முள்ளங்கத்திரி, சீந்திற்கொடி, கடுக்காய், அரிசித்திப்பிலி, காஞ்சோரி, கர்க்கடகச்ருங்கி இந்தப் பத்துப் பொருட்களும் ஹிக்கா நிக்ரஹண மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் விக்கலை நிறுத்தக்கூடியது. இவ்வாறு மூவகைக் கஷாயங்கள் கூறப்பட்டுள்ளன. 30

## 36. புரீஷ ஸங்க்ரஹணீய மகா கஷாயம்

ஞாழல், நன்னாரி, மாம்பருப்பு, பெருவாகை, பாச்சோத்தி, இலவம்பிசின், தொட்டால் சுருங்கி, காட்டாத்திப்பூ, சிறுதேக்கு, தாமரை கேஸரம், இந்தப் பத்துப் பொருட்களும் புரீஷஸங்க்ரகணீயம் எனும் மகாகஷாயத்தின் பொருட்களாகும். இந்தக் கஷாயம் மலத்தைக் கட்டக்கூடியது. 31

## 37. புரீஷ விரஜனீய மகா கஷாயம்

நாவல் பட்டை, குந்துருக்கன்பட்டை, பூலாங்கிழங்கு இலுப்பை, இலவம், ஜீவேஷ்டகம், வறுத்த மண், முதுக்கன் கிழங்கு, கருநெய்தல், எள்ளு இந்தப் பத்துப் பொருட்களும் புரீஷ விரஜநீய மகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் மலத்தை சுத்தப்படுத்துவதாகும். 32

### 38. மூத்ர ஸங்க்ரஹணீய மகா கஷாயம்

நாவல், மா, அத்தி, அரசு, ஆல், இத்தி, புரசு, சேராங் கொட்டை, மலையகத்தி, கருங்காலி இந்தப் பத்துப் பொருட் களும் மூத்ர ஸங்க்ரஹணீய மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட் களாகும். இந்தக் கஷாயம் சிறுநீர்ப் பெருக்கைக் கட்டும். 33

### 39. மூத்ர விரஜனீய மகா கஷாயம்

சிவப்புத்தாமரை, கருநெய்தல், தாமரை, அல்லி, செங்கழு நீர்ப்பூ, வெண்தாமரை, ரோஜா, அதிமதுரம், ஞாழல், காட் டாத்திப்பூ, இந்தப் பத்துப் பொருட்களும் மூத்ர விரஜநீய மகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும்.
இந்தக் கஷாயம் சிறுநீரைச் சுத்தப்படுத்தும். 34

### 40. மூத்ர விரேசனீய மகா கஷாயம்

புல்லுருவிச்செடி, நெருஞ்சில், மூக்கரட்டை, பெரிய கடலாடி, சிறுபீளை (கல்லூர் வஞ்சி) தர்ப்பை, நாணல், குருவிக்கரும்பு, அருகம்புல், அழிஞ்சல் இந்தப் பத்துப் பொருட்களும் மூத்ர விரே சனீய மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷா யம் சிறுநீரைப் பெருகச் செய்யும். 35

இவ்வாறு ஐவகை கஷாயத்தொகுப்புக் கூறப்பட்டது.

### 41. காஸஹர மகா கஷாயம்

திராக்ஷை, கடுக்காய், நெல்லிக்காய், அரிசித் திப்பிலி, காஞ் சோரி, கர்க்கடக சிருங்கி, கண்டங்கத்திரி, வெள்ளைச் சாரடை, சிவப்பு சாரடை, கீழாநெல்லி, இந்தப் பத்துப் பொருட்களும் காஸஹர மகாகஷாயக் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷா யம் இருமலைப் போக்கக்கூடியது. 36

### 42. சுவாஸஹர மகா கஷாயம்

பூலாங்கிழங்கு, புஷ்கர மூலம், புளிவஞ்சி, ஏலரிசி, பெருங் காயம், அகில், துளசி, கீழாநெல்லி, கீரைப்பாலை, காட்டுக் கோரைக் கிழங்கு இந்தப் பத்துப் பொருட்களும் சுவாஸ ஹர மகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் இழுப்பை நீக்கக் கூடியது. 37

### 43. சோதஹர மகா கஷாயம்

பாதரி, முன்னை, பெருவாகை, வில்வம், குமிழ், கண்டங் கத்திரி, முள்ளங்கத்தரி, ஓரிலை, மூவிலை, நெருஞ்சல் இந்தப்

பத்துப் பொருட்களும் சோதஹர மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் வீக்கத்தை நீக்கவல்லது. 38

**44. ஜ்வரஹர மகா கஷாயம்**

நன்னாரி, சர்க்கரை, வட்டத்திருப்பி, மஞ்ஜஷ்டி, திராக்ஷை, வாகை, சிற்றீச்சை, பேரீச்சைக்காய், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இந்தப் பத்துப் பொருட்களும் ஜ்வரஹரமகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் காய்ச் சலைப் போக்கக் கூடியது. 39

**45. ச்ரமஹர மகா கஷாயம்**

திராக்ஷை, பேரீச்சங்காய், முரள், இலந்தை, மாதுளை, பேயத்திப்பழம், பேரீச்சை, கரும்பு, யவதானியம், அறுபதாம் குருவை அரிசி இந்தப் பத்துப் பொருட்களும் ச்ரமஹர மகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் களைப் பைப் போக்கும். 40

இவ்வாறு ஐவகை கஷாயத்தொகுப்பு விளக்கப்பட்டது.

**46. தாஹப்ரசமன மகா கஷாயம்**

நெல்பொரி, சந்தனம், குமிழம்பழம், அதிமதுரம், சர்க்கரை, கருநெய்தல், விலாமிச்சை வேர், நன்னாரி, சீந்திற்கொடி, வெட்டி வேர் இந்தப் பத்துப் பொருட்களும் தாஹப்ரசமன மகாகஷாயத் தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் நீர்வேட்கை, எரிச்சல்களைத் தணிக்கக்கூடியது. 41

**47. சீதப்ரசமன மகா கஷாயம்**

தகரவிதை, அகில், தனியா, சுக்கு, ஓமம், வசம்பு, கண்டங் கத்தரி, முன்னை, பெருவாகை, அரிசித்திப்பிலி, இந்தப் பத்துப் பொருட்களும் சீதப்ரசமன மகா கஷாயத்தின் கூட்டுப் பொருள் களாகும். இந்தக் கஷாயம் குளிர்ச்சியைத் தணிக்கும். 42

**48. உதர்தப்ரசமன மகா கஷாயம்**

தும்பை (திந்துகம்). முரள், இலந்தை, கருங்காலி, வெண் கருங்காலி, ஏழிலம்பாலை, பெரிய மருதமரம், மருது, வேங்கை, கருவேலம் இந்தப் பத்துப் பொருட்களும் உதர்தப்ரசமன மகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் உதர் தம் எனும் நோயைப் போக்கும். 43

## 49. அங்கமர்த ப்ரசமன மகா கஷாயம்

பால் முதுக்கன் கிழங்கு, மூவிலை, முள்ளங்கத்தரி, கண்டங்கத்தரி, ஆமணக்கு, காகோலி, சந்தனம், விலாமிச்சைவேர், ஏலரிசி, அதிமதுரம் இந்தப் பத்துப் பொருட்களும் அங்க மர்த ப்ரசமன மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் உடல் உறுப்புகளில் தோன்றும் வேதனையைத் தணிக்கும். 44

## 50. சூலப்ரசமன மகா கஷாயம்

அரிசித்திப்பிலி, கண்டந்திப்பிலி, செவியம், கொடிவேலி, சுக்கு, மிளகு, ஓமம், குரோசானி ஓமம், சீரகம், கருணைக்கிழங்கு இந்தப் பத்துப் பொருட்களும் சூலப்ரசமன மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் வயிற்று நோயை நீக்கவல்லது. 45

## 51. சோணிதாஸ்தாபன மகா கஷாயம்

தேன், அதிமதுரம், சிவந்த சந்தனம், இலவம்பிசின், பூங்காவி, பாச்சோத்தி, ஞாழல், சர்க்கரை, நெல்பொரி இந்தப் பத்துப் பொருட்களும் சோணிதாஸ்தாபன மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் இரத்தப் பெருக்கை நிறுத்தக்கூடியது. 46

## 52. வேதனாஸ்தாபன மகா கஷாயம்

முரளமர வேர், குமிழ மர வேர், கடம்ப மர வேர், பத்ம கோஷ்டம்,(பதிமுகம்)சிறுநாகப்பூ, இலவம்பிசின், வாகை, நொச்சி, ஏலாவாலுகம், அசோகமரம் — இந்தப் பத்துப் பொருட்களும் வேதனாஸ்தாபன மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்த கஷாயம் வலியைப் போக்கும். 47

## 53. ஸம்ஞாஸ்தாபன மகா கஷாயம்

பெருங்காயம், வேம்பு, கருவேலம், வசம்பு, காட்டுக்கோரைக் கிழங்கு, வல்லாரை, ஜடாமாம்சி, கரு நொச்சி, குக்குலு, கடுகரோகிணி — இந்தப் பத்துப் பொருட்களும் ஸம்ஞாஸ்தாபன மகா கஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் மயக்கத்தை நீக்கும். 48

## 54. ப்ரஜாஸ்தாபன மகா கஷாயம்

ஏலரிசி, வல்லாரை, வெள்ளருகம்புல், நில அருகம்புல், நெல்லிக்காய், சீந்திற்கொடி, கடுக்காய், கடுகரோகிணி, சித்தாமுட்டி, ஞாழல் — இந்தப் பத்துப் பொருட்களும் ப்ரஜாஸ்தாபன

மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் மகப்பேற்றை உறுதிப்படுத்தும். 49

## 55. வயஸ்தாபன மகா கஷாயம்

சிந்திற்கொடி, கடுக்காய், நெல்லிக்காய், சித்தரத்தை, வெண் கண்டங்கத்தரி, அடபதியங்கிழங்கு (கீரைப்பாலை), தண்ணீர் முட்டாங்கிழங்கு, வல்லாரை, ஓரிலை, சாரணை – இந்தப் பத்துப் பொருட்களும் வயஸ்தாபன மகாகஷாயத்தின் கூட்டுப் பொருட்களாகும். இந்தக் கஷாயம் ஆயுளை நீடிக்கச் செய்யும் தன்மையுடையது. 50

இவ்விதம் 5வகை கஷாயத் தொகுப்புக் கூறப்பட்டது.

500 கஷாய வகைகளை 50 மகா கஷாயங்களாகச் சுருக்கி அவற்றின் விளக்கம், இலக்கணம் இங்கு எடுத்துக்காட்டாக விளக்கப்பட்டன. 51

கஷாயங்களைப்பற்றி மிக விளக்கமாகக் கூறுவதற்கு முடிவு இல்லை. அப்படிக் கூறுவதனால் குறைந்த அறிவுள்ள மருத்துவர்களுக்கு அறிவு ஏற்படாது. எனவே சுருக்கமாகவும் கூறப்படவில்லை. விளக்கமாகவும் கூறப்படவில்லை. இங்கு கூறப்பட்ட விதம், குறைந்த அறிவுள்ள மருத்துவர்களுக்கும் சிகிச்சை செய்வதற்குப் போதுமானது. அறிவாளிகள் மேற்கூறிய கஷாயங்களின் இலக்கணம், ஊகம், சேர்க்கை (பயன்படுத்தும் முறை) இவற்றைக் கொண்டு இங்கு கூறப்படாதவைகளையும் அறிந்துகொள்வதற்கு மேற்கண்ட கஷாய விவரம் போதுமானது. 52

இம்மாதிரிக் கூறிய ஆத்ரேய மாமுனிவரைப் பார்த்து அக்னிவேசர், 'ஐயன்மீர்! நீங்கள் மேற்கூறியபடி பார்த்தால் 500 வகை கஷாயங்களின் முடிவு ஏற்படவில்லை. ஏனென்றால் தனித் தனியாகக் கூறப்பட்ட கஷாயங்களில் உள்ள பொருள்களே மறுபடியும் அடிக்கடி கூறப்படுகின்றன' என வினவினார். 53

இவ்விதம் கேட்ட அக்னிவேசரைப் பார்த்து ஆத்ரேயர், 'அக்னிவேசரே! இது அறிவாளி கேட்கக்கூடிய கேள்வி அன்று. ஒரே பொருள் அதன் செயல்களை முன்னிட்டுப் பல பெயர்களைப் பெறுகின்றது. உதாரணமாக ஒரே மனிதன் பலவகைச் செயல்களைச் செய்வதில் திறமையுள்ளவனாகத் திகழ்கிறான். அதனால் எந்த எந்த சேயலைச் செய்கிறானோ அந்தச் செயலைச் செய்பவன் (கர்த்தா), கருவி, தொழில் இவற்றை ஒட்டித்தான் அழைக்கப்படுகிறான்.

அவ்வாறே மருந்துப் பொருட்களையும் அதன் தனித்தனி செயல்களைக் கொண்டு வேறு வேறு பெயர்களைப் பெறுகின்றன என அறிந்து கொள்ளவும். அதனால் எல்லாச் செயல்களையும் செய்யவல்ல, எல்லா குணங்களும் நிறைந்த ஒரே பொருள் கிடைக்குமானால் எந்த ஆசிரியர்தான் அந்தப் பொருளை விட்டு குறைவான குணத்தை உடைய பொருளை ஏற்றுக்கொள்ளும்படி சீடர்களுக்கு உபதேசிப்பார்? ஆசிரியர் உபதேசித்தாலும் கேட்பதற்குச் சீடர்கள் கிடைப்பார்களா? 54

முடிவுரை

இந்த அத்தியாயத்தில் அறுநூறு வகையான மலம் கழிக்கச் செய்யக்கூடிய மருந்துப் பொருட்கள், அவற்றைத் தயாரிக்கும் முறை அவற்றின் இருப்பிடம் இவை சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளன. 55

உவர்ப்புச் சுவையைத் தவிர மற்ற சுவைகளின் கூட்டு கஷாயம் என்று பெயர் பெறுகின்றது. ஆகையால் கஷாயங்களுக்கு இருப்பிடமும் ஐந்து விதமாக இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. 56

கஷாயங்கள் தயாரிக்கும் ஐந்து வகையும், 50 வகையான மகா கஷாயங்களும் கூறப்பட்டுள்ளன. 57

ஐந்நூறுவகை கஷாயங்கள் உதாரணத்திற்காக அதிக விளக்கமில்லாமலும், அதிகச் சுருக்கமாக இல்லாமலும் விளக்கப்பட்டுள்ளன. விளக்கத்திற்கு ஒரு எல்லையே கிடையாது. அதனால் குறைந்த அறிவுள்ள மருத்துவனுக்கு அறிவும் ஏற்படாது. குறைந்த அறிவுள்ள மருத்துவர்களுக்குச் சிகிச்சை முறைக்காகவும், அறிவாளிகளின் அறிவு வளர்ச்சிக்காகவும் 50 வகை கஷாயங்கள் உதாரணத்திற்காகக் கூறப்பட்டுள்ளன.

இந்த 500 வகை கஷாயங்களை உள்ளுக்கும், வெளியிலும் பயன்படுத்துவதற்கும், அவற்றைத் தயாரித்தல், சேர்த்தல், பயன்படுத்தல் என இவற்றில் திறமைசாலியாகத் திகழும் மருத்துவன் சிறந்த மருத்துவனாகக் கருதப்படுகிறான். 58–59

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையின் ஸூத்ர
ஸ்தானத்தில் 'ஷட்விரேசன சதாச்ரிதீயம்'
எனும் நான்காவது அத்தியாயம்
முற்றும்.

# ஐந்தாவது அத்தியாயம்

## *மாத்ராசிதீயம்

''மாத்ராசிதீயம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

### 1. உணவின் அளவு

மனிதன் அளவுடன் உணவு உ்ண்ண வேண்டும். உணவின் அளவு சடராக்னியின் வலிவைச் சார்ந்திருக்கிறது. 3

உணவின் எந்த அளவு உண்பவனின் உடலுக்குத் தீங்கு விளைவிக்காமல், உரிய நேரத்தில் சீரணமடைகிறதோ அந்த அளவே மனிதனின் உணவின் அளவாகும் என்பதை அனைவரும் உணரவேண்டும். 4

### 2. இயற்கையில் குரு—இலகு குணமுள்ள உணவின் அளவு

உணவுப் பொருட்களில் சம்பா அரிசி, அறுபதாம் குறுவை அரிசி, பயத்தம் பருப்பு, லாவகம், கபிஞ்சலம் எனும் பறவைகளின் மாமிசம், கருநிறமுள்ள மான், முயல், யாளி, ஸம்பரம் எனும் ஒருவகை மான் இவற்றின் மாமிசம் இவை போன்றஉணவுப் பொருட்கள், இயற்கையாகவே இலகுகுண்முள்ளதாயினும் அளவு தேவைப்படுகிறது. அளவோடுதான் எதையும் உண்ண வேண்டும்.

அதேபோல் மாவு, கரும்பு, பால் இவற்றின் மாறுபாடுகளான ரொட்டி, வெல்லம், தயிர், பால் ஏடு போன்றவை, எள்ளு, உளுந்து, நீர்ப் பாங்கான இடம், நீர் இவ்விரண்டு இடங்களிலும் வாழ்கின்ற உயிரினங்களின் புலால் போன்ற உணவுப் பொருட்கள் இயற்கையாகவே குரு குணமுள்ளனவாயினும் அளவுடன் தான் அவற்றைப் புசிக்க வேண்டும். 5

மேற்கூறிய உணவுப் பொருட்களின் குரு இலகு குணத்தை வைத்து அளவைக் கூறுவது சரியல்ல. இலகு குணமுள்ள உணவுப் பொருட்கள் யாவும் காற்று, நெருப்பு ஆகிய இரண்டு பூதங்களின் குணங்களை அதிகம் கொண்டவை. குரு குணமுள்ள உணவுப் பொருட்கள் யாவும், நிலம், நீர் இவ்விரண்டு பூதங்களின் அதிக குணங்களைக் கொண்டவை.

---

*மாத்ராசிதீயம் – அளவுடன் உணவு உண்பதைப் பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

இயற்கையில் குருகுணமுள்ள உணவுப் பொருட்கள் சடராக்னியின் வலிவைக் குறைத்து, அதிகமான தோஷங்களையும் தோற்றுவித்து, உடற்பயிற்சி செய்து சடராக்னி வளர்ச்சி பெற்றவர்களைத் தவிர மற்றவர்களுக்குத் தீங்கை விளைவிக்கின்றன. ஆகையினால் இயற்கையாகவே இலகு குணமுள்ள பொருட்கள் சடராக்னியைத் தூண்டிவிட்டுச் சிறிதளவே தோஷங்களைத் தோற்றுவிப்பதோடு, போதும் என்ற மன நிலையை உண்டு பண்ணுகின்றன. எனவே உணவின் அளவு, சடராக்னியைப் பொறுத்தது. அக்னியின் பலம் பொருட்களின் குரு, இலகு குணத்தைச் சார்ந்தது அன்று. 6

உணவுப் பொருட்களை உண்ண வேண்டிய முறை இது தான். இலகு குணமுள்ள பொருட்களை வயிறுநிரம்பப் புசிக்காமல் முக்கால் பாகம் உண்ண வேண்டும். குரு குணமுள்ள பொருட்களை அரை பாகம் உண்ண வேண்டும். இல்லையேல் சடராக்னியைக் குறைத்துவிடும். அளவுடன் உண்ணும் உணவு இயற்கையாக உடலிலுள்ளசடராக்னியைக் கெடுப்பதில்லை. மனிதனுடையடைய வலிவு, நிறம், இன்பம், ஆயுள் இவற்றையும் அளிக்கிறது. 7–8

உணவு உண்டபின் குரு குணமுள்ள மாவுப்பொருள், அரிசி, அவல் இவற்றை ஒரு பொழுதும் உண்ணக்கூடாது. பசி எடுத் அளவுடன்தான் உண்ண வேண்டும். 9

## 3. உண்ணத்தகாதவை

குரு குணமுள்ள உலர்ந்த மாமிசம், உலர்ந்த கீரை வகை தாமரைக்கிழங்கு, தாமரைத் தண்டு, மிகவும் மெலிந்த பிராணிகள், பறவைகள் இவற்றின் மாமிசம் இவைகளை எவ்வகையிலும் பயன்படுத்தக்கூடாது. 10

## 4. உண்ணத் தகுந்தவை

கூர்ச்சிகா, கிலாடம், பன்றி, பசு, எருமை, இவற்றின் மாமிசம், மீன், தயிர், உளுந்து, கொள்ளு, இவற்றைத் தொடர்ந்து பயன்படுத்தலாம். 11

அறுபதாம் குருவை அரிசி, சம்பா அரிசி, பயறு, இந்துப்பு நெல்லிக்காய், யவதானியம், சுத்தமான மழை நீர், பால், நெய், காற்றடர்ந்த இடங்களில் வாழும் பிராணிகளின் மாமிசம், தேன் இவற்றைத் தொடர்ந்து பயன்படுத்தலாம். 12

## 5. நல்வாழ்வுக்கான நல்லுரை

உடல் ஆரோக்கியத்திற்கு உகந்த பிணிகளைத் தோற்றுவிக்காத உணவுப் பொருட்களையே எக்காலமும் பயன்படுத்த வேண்டும். 13

## 6. ஆரோக்கியமாக வாழ கடைபிடிக்க வேண்டியவை

உடல் நலமுடன் வாழ, குறிப்பாகக் கண்களுக்கு மையிடுதல் எண்ணெய்க் குளியல் போன்றவற்றையும் அவற்றின் குணத்தைப் பற்றியும் இனி கூறுவோம். 14

## 7. கண்களுக்கு மையிடுதல்

நாள்தோறும் கண்களுக்கு நன்மை தரும் ஸௌவீரம் எனும் கண் மையையும், கண்களில் உள்ள கெட்ட நீரை வெளிப்படுத்த ஐந்து, அல்லது எட்டு நாட்களுக்கு ஒருமுறை ரஸாஞ்ஜனம் எனும் மையையும் தீட்டிக்கொள்ள வேண்டும். 15

கண்கள் ஒளிமயமானவை. அவற்றிற்குக் குறிப்பாகக் கபத்தினால் தீங்கு ஏற்படும். கண்களுக்குத் தெளிவை அளிக்கக்கூடியதும், கபத்தை நீக்கக்கூடியதுமான சிகிச்சையைச் செய்ய வேண்டும். 16

பகலில் கண்களுக்குக் கடுமையான கண்மையைத் தீட்டக் கூடாது. தீட்டினால் கபநீர் வெளிப்பட்டு வலிவிழந்த கண்கள், கதிரவனின் ஒளிபடுவதனால் பார்க்கும் சக்தியை இழந்து விடுகின்றன. எனவே கண்களுக்கு இரவில்தான் மைதீட்ட வேண்டும். 17

தங்கம் போன்ற தாதுப் பொருட்கள், இரத்தினங்கள், எண்ணெய், துணி, முதலியன புருசுமுதலியவற்றால் சுத்தம் அடைவனபோல் மனிதர்களின் கண்கள் மை, ஆச்யோதனம் போன்றவற்றால் சுத்தமடைந்து, மேகமற்ற ஆகாயத்தில் சந்திரனைப் போல் ஒளிவிடுகின்றன. 18–19

## 8. புகைபிடிக்கும் திரி (வர்த்தி) செய்யும் முறை

அரேணுகம், ஞாழல், கருஞ்சீரகம், சிறுநாகப்பூ, நகம், வெட்டிவேர், சந்தனம், பச்சிலை, (லவங்கப்பத்திரி) லவங்கப் பட்டை, ஏலரிசி, விலாமிச்சம் வேர், பதிமுகம், வாசனைப்புல் (நான்முகப்புல்), அதிமதுரம், ஜடாமாம்சி, குக்கில், அகில், சர்க்கரை, ஆல், அத்தி, அரசு, இத்தி, பாச்சோத்தி, இம்மரங்களின் தூய்மையான பட்டைகள், இலவங்கம், குங்குலீயம், கோரைக்கிழங்கு, கல்மதம், தாமரை, கருநெய்தல், திருவட்டப்பிசின்,

குந்துருகம், தூவியாங்கம் என இந்த மருந்துப் பொருட்களை மைய அரைத்து நாணல் குச்சியின்மேல் யவஅரிசி அளவு, கனமுள்ளதாகக் கட்டைவிரல் பருமனுக்குப் பூச வேண்டும். நாணல் குச்சி எட்டு அங்குல நீளம் உள்ளதாக இருக்க வேண்டும். பூசிய நாணற்குச்சியை நிழலில் உலர்த்தி, உலர்ந்த வர்த்தியை நெய், எண்ணெய் போன்றவற்றில் நனைத்துப் புகை பிடிக்கும் கருவியில் வைத்து தீயிட்டு மெதுவாகப் புகைபிடிக்க வேண்டும். இதற்கு [1]ப்ராயோசிக தூமம் எனப்பெயர். 20–25

### 9. எண்ணெய்ப் பசையுள்ள புகைவர்த்தி

வசை, நெய், தேன், மெழுகு, ஜீவனீயத் தொகுப்பில் கூறியுள்ள பத்துப் பொருட்கள் இவற்றை எல்லாம் சேர்த்து வர்த்தியாகச் செய்து புகைபிடிக்க வேண்டும். இதற்கு எண்ணெய்ப் பசையுள்ள புகைவர்த்தி எனப் பெயர்.

### 10. தலையில் உள்ள தோஷங்களை நீக்கும் வர்த்தி

வெண்கண்டங்கத்தரி, வாலுளுவை, அரிதாளம், மனோசிலை, அகில், பச்சிலை (லவங்கப்பத்திரி) போன்ற வாசனைப் பொருட்களை முறைப்படி வர்த்தியாகத் தயாரித்துப் புகை பிடித்தால் தலையில் உள்ள தோஷங்கள் வெளிப்படுகின்றன. 26–27

### 11. புகை பிடிப்பதின் பயன்

தலையில் பளு, தலைவலி, நாட்பட்ட ஜலதோஷம், ஒற்றைத் தலைவலி, காது வலி, கண் வலி, இருமல், விக்கல், சுவாசம், தொண்டைப்பிடிப்பு, பற்களின் வலிவுக் குறைவு, காது, மூக்கு, கண் இவற்றிலிருந்து கெட்ட நீர் பெருகுதல், மூக்கிலும், வாயிலும் தோன்றும் சீழ் நாற்றம், பல்வலி, ருசியின்மை, தாடை, தொண்டை இவற்றில் பிடிப்பு, அரிப்பு, கிருமிகள், முகத்தில் தோன்றும் வெளுப்பு, வாயிலிருந்து கப நீர் ஒழுகுதல், குரல் மாற்றம், [2]களசுண்டிகா, [3]உபஜிஹ்விகா என்ற தொண்டைக்குள்ளும் நாக்கின் பக்கங்களிலும் தோன்றும் நோய்கள், சொட்டை, செம்பட்டை முடி, முடியுதிர்தல், தும்மல், அதிகமான சோம்பல் மதிமயக்கம், மிக்க உறக்கம் என இப்பிணிகள் புகைபிடிப்பதால் தணிகின்றன.

---

1. ப்ராயோகிக தூமம் – பழக்கமாகப் புகைபிடிப்பது.
2. கள சுண்டிகா – உள் நாக்கு
3. உபஜிஹ்விகா – நாக்கின் கீழ்ப்பாகம்

முடி, தலையில் உள்ள கபால எலும்புகள், புலன்கள், குரல் இவற்றிற்கு மிக்க வலிவை அளிக்கிறது. 28—32

வாயினால் புகைபிடிப்பவனுக்கு கழுத்துக்கு மேல் தலையில் உண்டாகின்ற பலமான வாத தோஷப் பிணிகள், கபதோஷ நோய்கள் தோன்றா. 33

## 12. புகைபிடிக்கும் எண்வகைக்காலங்கள்

வாத—கபதோஷங்கள் சீற்றமடையும் எண்வகைக் காலங்களில் அவை சீற்றமடையாமலிருப்பதற்காக ப்ராயோகிகம் என்னும் புகைபிடிக்கும் வர்த்தியைப் பயன்படுத்த வேண்டும்.

குளித்தபின், உண்டபின், வாந்தி எடுத்தபின், பல் துலக்கிய பின், தும்மல் வந்தபின், மூக்கில் மருந்து இட்டபின், கண்களுக்கு மை தீட்டியபின், துயில் எழுந்தபின் என இக்காலங்களில் புலனடக்கமுள்ள மனிதன் புகைபிடிக்க வேண்டும்.

இவ்வாறு செய்வதனால் அவனுக்கு கழுத்துக்கு மேல் உள்ள உறுப்புக்களில் வாத—கபத்தினால் தோன்றக்கூடிய பிணிகள் நீங்குகின்றன.

ப்ராயோகிகம் என்னும் புகைவர்த்தியை மேற்கூறப்பட்ட ஒவ்வொரு காலத்திலும் மூன்று தடவை பிடிக்கவேண்டும். ஒவ்வொரு தடவையும் மூன்றுமுறை புகையை இழுத்து விடவேண்டும். 34—35

## 13. புகையின் வகை, கால அளவு ஆகியவற்றைக் கூறுதல்

புகை பிடிப்பதற்காக எட்டுவகைக் காலங்கள் கூறப்பட்டிருந்த போதிலும் அறிவாளி ஒரு நாளில் பிராயோகிகம் எனும் புகையை இருமுறையும், எண்ணெய்ப் பசையுள்ள புகையை ஒரு முறையும் விரேசனம் எனும் புகையை (தலையில் உள்ள தோஷங்களை வெளிப்படுத்துவதற்காகக் கொடுக்கப்படும் புகைச்சிகிச்சை) மூன்று அல்லது நான்கு முறையும் பிடிக்க வேண்டும். 36

## 14. புகை நன்றாகப் பிடித்ததன் இலக்கணம்

இதயம், தொண்டை, ஞானேந்திரியங்கள், (கண், காது மூக்கு, நாக்கு, மெய்) இவை தெளிவடையும். தலை இலேசாக இருக்கும். பரவியிருக்கும் வலிவான தோஷங்கள் தணிந்திருக்கும். இவை நன்கு புகைபிடித்ததின் இலக்கணமாகும். 37

## 15. முறை தவறியும், அளவுக்கு மீறியும் புகை பிடிப்பதனால் உண்டாகும் தீமைகள்

காது கேளாமை, பார்வையின்மை, ஊமைத்தனம், இரத்த பித்தம், தலைச்சுற்றல் என இந்தத் துன்பங்கள் எத்தகைய காலம் தவறிய காலத்திலும் அளவுக்கு மீறிப் புகை பிடிப்பதனால் ஏற்படு கின்றன. 38

## 16. முறை தவறி, அளவுக்கு மீறி புகைபிடிப்பதனால் ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சை

மேற்கண்ட நோய்களில் வாதம் சீற்றமடைந்து, பித்தமும் பின்பற்றியிருக்குமாகில், நைப்புத் தன்மையுள்ள மருந்துப் பொருட்களால் தயாரிக்கப்பட்ட நெய்யைப் பருகுவதோடு மூக்கில் மருந்திடும் சிகிச்சை, கண்களுக்கு மை தீட்டும் சிகிச்சை, தலையில் எண்ணெய் தேக்கி வைக்கும் தர்ப்பணம் எனும் சிகிச்சை ஆகியவற்றைச் செய்ய வேண்டும்.

மேற்கண்ட நோய்களில் இரத்த பித்தம் சீற்றமடைந்திருந் தால், குளிர்ச்சியாகவுள்ள மருந்துப் பொருட்களால் தயார் செய்யப்பட்ட நெய்யைப் பருகுதல், அதே பொருட்களால் தயார் செய்யப்பட்ட மூக்கிலிடும் மருந்துச் சிகிச்சை, கண்களுக்கு மை தீட்டுதல், தலையில் எண்ணெய் தேக்கி வைக்கும் சிகிச்சை ஆகிய இவற்றைச் செய்ய வேண்டும்.

கபமும் பித்தமும் சீற்றமடைந்திருந்தால் வறட்சியுண்டாக்கக் கூடிய மருந்துப் பொருட்களால் தயாரித்த நெய்யைப் பருகவும், மூக்கிலிடவும், மையாகத் தீட்டிக் கொள்ளவும், தலையில் எண் ணெய் தேக்கி வைக்கும் தர்ப்பணச் சிகிச்சைக்குப் பயன்படுத்தவும் வேண்டும். 39—40

## 17. புகைபிடிக்கும் சிகிச்சைக்குத் தகாதவர்கள்

வாந்திக்கும், பேதிக்கும் மருந்து உட்கொண்டவர், வஸ்தி சிகிச்சை செய்துகொண்டவர், இரத்த பித்த பிணியாளர், நஞ்சி னால் துன்பப்படுகிறவர், வருத்தமுடையவர், கருதரித்தவர், களைத்தவர், பைத்தியம் பிடித்தவர், ஆம தோஷம் உள்ளவர், பித்த தோஷத்தினால் துன்புறுகிறவர், கண்விழித்தவர், மூர்ச்சை, தலைசுற்றல், நாவறட்சி இவையுள்ளவர், வலிவற்றவர், மார்பில் உட்காயம் அடைந்தவர், இவர்கள் புகைபிடிக்கத் தகுதியற்ற வர்கள்.

கள், பால், எண்ணெய், தேன் இவற்றைப் பருகிய பின்னும், தயிர் கலந்த சோறு உண்டபின்னும் புகை பிடிக்கக்கூடாது.

வறண்ட உடல் அமைப்புள்ளவர், சினமுள்ளவர், இவர்கள் புகைபிடிக்கத் தகுதியற்றவர்கள்.

மேல்தாடை வறண்ட நிலையிலும், கண் பார்வை மறைவு நோயிலும் புகை பிடிக்கக்கூடாது.

தலையில் அடிபட்டவர், சங்ககம் எனும் நோயுள்ளவர் (பொட்டுக்களில் பொறுக்கமுடியாத வலியுள்ளவர்) ரோகிணி என்னும் தொண்டை நோயுள்ளவர், நீரிழிவு உள்ளவர், கள் வெறி பிடித்தவர், இவர்களும் புகை பிடிக்கலாகாது.

மேற்கூறப்பட்ட நோயுள்ளவர்களும், காலமில்லாக் காலத்தில் அறியாமையால் புகை பிடிப்பவர்களும், முறைதவறிப் புகை பிடிப்பதனால் ஏற்படும் நோய்களுக்கு உள்ளாவார்கள். 41–45

## 18. புகை பிடிக்கும் முறை

தலை, மூக்கு, கண்கள் இவற்றில் தோஷங்கள் இருந்து புகை பிடிக்கத் தகுதியுள்ளவன் மூக்கினாலும் தொண்டையில் தோஷமுள்ளவன் வாயினாலும் புகைபிடிக்க வேண்டும். மூக்கினால் புகை பிடித்த பிறகு புகையை வாயினால்தான் வெளியிட வேண்டும். புகைச் சுருளை வாயினால் குடித்தபின் மூக்கினால் வெளியிடக்கூடாது. இல்லையேல் நேராகச் செல்லாத அந்தப் புகை விரைவில் கண்களைக் கெடுத்துவிடுகிறது. 46–47

## 19. மூக்கினால் புகை பிடிக்கும் முறை

புலனடக்கமுள்ள மனிதன், உடல், உடல் உறுப்புக்கள், கண்கள் இவற்றை நேராக வைத்துக்கொண்டு புகை பிடிப்பதிலேயே மனதைச் செலுத்தி சுகமான இருக்கையில் அமர்ந்து மூக்கின் ஒரு துவாரத்தை அழுத்திக்கொண்டு மற்றொரு துவாரத்தின் வழியாக மூன்று முறை புகைபிடிக்க வேண்டும்.

## 20. புகை பிடிக்கும் கருவியின் அமைப்பு

விரேசனத்திற்காகப் (தலையில் உள்ள தோஷங்களை வெளிப்படுத்துவதற்கான புகைச் சிகிச்சை) பயன்படுத்தப்படும் புகை பிடிக்கும் கருவி, நோயாளியின் விரலைப்போல் இருபத்து நான்கு மடங்கு நீளம் உள்ளதாக இருக்க வேண்டும்.

எண்ணெய்ப் பசையுள்ள புகை பிடிப்பதற்கான கருவி நோயாளியின் விரலைப்போல் 32 மடங்கு நீளமுள்ளதாகவும், [1]பிராயோ

1. பிராயோகிகம் எனும் புகைபிடிப்பு பழக்கமாகப் புகை பிடிக்கும் முறை.

சிகம் என்னும் புகை பிடிப்பதற்கான கருவி நோயாளியின் விரலைப்போல் 36 மடங்கு நீளமுள்ளதாகவும் அமைய வேண்டும்.

அந்தக் கருவி மிருதுவாகவும், மூன்று பாகங்கள் கொண்ட அறைகளாகத் தடுத்ததாகவும், நுனிப்பகுதியில் உள்ள நடுத்துவாரம் இலந்தைக்கொட்டை புகும் அளவுக்கு துவாரம் அமைந்ததாகவும் இருக்க வேண்டும். இந்தக் கருவியைச் செய்வதற்கு வஸ்தி எனும் கருவியைச் செய்வதற்குப் பயன்படுத்தப்படும் தங்கம் போன்ற உலோகங்களையே பயன்படுத்த வேண்டும். இம்முறைதான் சிறந்ததெனக் கருதப்படுகிறது. 48–50

## 21. புகைக் பிடிக்கும் கருவியினால் புகை பிடிக்கும் பயன்

குறித்த காலத்தில் அளவுடன் பிடிக்கப்பட்ட புகைக் கருவியினுள் தூரத்திலிருந்து கிளம்பி, மூன்று அரைகளில் தடைபட்டு வேகம் குறைந்துவிடுவதனால் புலன்களுக்கு யாதொரு தீமையையும் விளைவிக்கிறதில்லை. 51

## 22. புகை பிடித்தல் நன்கு நிறைவேறியதன் இலக்கணம்

புகைபிடித்த பின்பு, மார்பு, தொண்டை, தலை இவை இலேசாகவும், கபம் இளகியுமிருந்தால் புகைபிடிப்பு நன்கு நிறைவேறியதாகக் கருதப்படுகிறது. 52

## 23. புகை பிடித்தல் நன்கு நிறைவேறாததின் இலக்கணம்

புகைபிடித்தபின், நோயாளியின் குரல் தெளிவாக இல்லாமலும், தொண்டையில் கபம் சிக்கிக்கொண்டும், தலையில் உணர்வின்மையும் ஏற்பட்டால் புகைபிடித்தல் நன்கு நிறைவேறவில்லை என அறிந்துகொள்ள வேண்டும். 53

## 24. அளவுக்கு மீறி புகை பிடிப்பதால் விளையும் தீங்குகள்

அளவுக்குமீறிப் புகைபிடிப்பதனால் தாடையின் உட்பகுதி, தொண்டை இவை உலர்ந்துபோதலும், இவற்றில் எரிச்சலும் உண்டாகும். தாகம் அதிகரிக்கும். உணர்வற்றிருக்கும் நிலை உண்டாகும். அதிக இரத்தப் பெருக்கு, அதிக தலை சுற்றல், மூர்ச்சை எல்லாப் புலன்களும் சூடுமிகுந்து தெளிவின்றித் தோன்றுதல் என இவை உண்டாகும். 54–55

## 25. அணு தைலத்தைப் பயன்படுத்தும் காலம்

வருடந்தோறும் மழை, சரத், வசந்தம் இக்காலங்களில் ஆகாயத்தில் மேகமூட்டமில்லாத தருணத்தில் அணு தைலத்தை மூக்கில் இட்டுக் கொள்ள வேண்டும்

இவ்வாறு குறித்த காலத்தில் முறைப்படி (நஸ்ய கர்ம) மூக்கின் துவாரம் வழியாக மருந்து செலுத்தும் முறையைக் கடைபிடிப்பவனுக்கு, கண்கள், மூக்கு, காது இவை கெடுவதில்லை.

முடி, தாடி செம்பட்டையாகவும், நரைத்தும் போவதில்லை. முடி உதிர்ந்து போகாமல் குறிப்பாக முடி வளர்கிறது.

மென்னிப் பிடிப்பு, தலைவலி, முகவாய் கட்டை ஒரு பக்கமாகக் கோணிப்போகுதல், தாடை பிடிப்பு, நாட்பட்ட ஜல தோஷம், ஒத்தைத் தலைவலி, தலை ஆட்டம் என இந்நோய்கள் தணிகின்றன.

தலையிலுள்ள இரத்தக் குழாய்கள், மூட்டுக்கள், நரம்புகள், நாடிகள் இவை அதிக வலிவு பெறுகின்றன.

முகம் தெளிவாயும், குரல் இனிமையாகவும் உறுதியாகவும், கம்பீரமாகவும் இருக்கும். புலன்கள் யாவும் தெளிந்தும், அதிகப் பலமுள்ளதாயுமிருக்கும்.

கழுத்துக்கு மேல் உள்ள உறுப்புகளில் ஏற்படக்கூடிய நோய்கள் யாவும் விரைவில் தோன்றுவதில்லை. முதுமையிலும் தலையில் முதுமையின் தோற்றம் தென்படுவதில்லை. 56–62

## 26. அணு தைலம் தயாரிக்கும் முறை

சந்தனம், அகில், பச்சிலை, மரமஞ்சள் பட்டை, அதிமதுரம், சித்தாமுட்டி, வெண்தாமரை, சிற்றேலம், வாய்விடங்கம், வில்வம் கருநெய்தல், வெட்டிவேர், விலாமிச்சைவேர், காட்டுக்கோரைக் கிழங்கு, லவங்கப்பட்டை, கோரைக்கிழங்கு, நன்னாரி, ஓரிலை, கிரைப்பாலை, மூவிலை, தேவதாரு, தண்ணீர்விட்டான் கிழங்கு, அரேணுகம், கண்டங்கத்திரி, முள்ளங்கத்திரி, சித்தரத்தை, தாமரையின் கேசரம் இவற்றைத் தூள் செய்து மழைக்காலத்தில் ஆகாயத்திலிருந்து விழுகின்ற தண்ணீரில் நூறுமடங்கு போட்டு, எண்ணெய்க்குப் பத்து மடங்கு கஷாயம் மீதியிருக்கும்படி சுண்டக் காய்ச்ச வேண்டும். அதாவது நூறில் பத்தில் ஒரு பாகமாகக் காய்ச்சி சூடு ஆறிய பிறகு துணியால் வடிகட்டி வைத்துக்கொள்ள வேண்டும்

அந்தக் கஷாயத்தில் பத்தில் ஒரு பங்கு எடுத்து அதில் அதே அளவுள்ள எண்ணெயைக் கலந்து, முறைப்படி தைலம் காய்ச்ச வேண்டும். இவ்வாறு ஒன்பது முறை காய்ச்சி, கடைசியாக பத்தாவது முறை காய்ச்சும்போது அந்த எண்ணெய்க்கு சமஅளவு ஆட்டுப் பாலைச் சேர்த்துக் காய்ச்ச வேண்டும். இதுதான் அணு

தைலம் தயாரிக்கும் முறையாகும். இவ்வாறு தயாரித்த அணு தைலம் நஸ்ய சிகிச்சையில் பயன்படுத்தப்படுகிறது. 63–67

## 27. அணு தைலத்தைப் பயன்படுத்தும் முறையும் அளவும்

அணு தைலத்தின் அளவு அரைப்பலம் (இரண்டு தோலா) ஆகும். முதலில் தலைக்கு எண்ணெய் சிகிச்சை செய்து நைப்புத் தன்மையை உண்டாக்கி வியர்வை சிகிச்சை செய்த பிறகு இரண்டு தோலா அணுதைலத்தைப் பஞ்சில் நனைத்து ஒருநாள் விட்டு மறுநாள் நாள் ஒன்றுக்கு மூன்று தடவை மூக்கில் இட்டு இவ்வாறு ஏழு நாட்கள் செய்துகொள்ள வேண்டும். 68–69

மூக்கில் அணுதைலத்தை விட்டுக் கொண்டபின் அதிகக் காற்றோட்டமில்லாத சூடான இடத்தில் தங்கி, சூடான நன்மை பயக்கும் உணவு வகைகளைப் புசித்து, புலனடக்கமுள்ளவனாக இருக்க வேண்டும். இந்த அணுதைலம் மூன்று தோஷங்களையும் போக்கும். புலன்களுக்கு வலிவை அளிக்கும்.

இந்த அணுதைலத்தை உகந்த காலத்தில் பயன்படுத்துதல் மேற்கூறப்பட்ட எல்லா குணங்களையும் அளிக்கவல்லது. 70—71

## 28. பல் துலக்கும் முறையும் பயனும்

உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு இச்சுவையுள்ள மரங்களின் குச்சிகளை நுனியில் நன்கு நசுக்கி பற்களின் ஈறின் மாமிசத்தில் படாமல் தினம் இரண்டுவேளையும் (காலை–மாலை) பல் துலக்க வேண்டும்.

பல் துலக்குவதனால் வாயினுள் உள்ள கெட்ட நாற்றம், சுவையின்மை, நாக்கு, பற்கள், வாய் இவற்றில் உள்ள அழுக்கு இவைநீங்குகின்றன. உணவில் சுவை ஏற்படுகிறது. விரைவில் பற்கள் சுத்தமாகின்றன. 72–73

## 29. பல் துலக்கத் தகுதியான குச்சிகள்

புங்கு, கருவேலம், எருக்கு, ஜாதி மல்லி, மருத மரம், வேங்கை போன்ற மற்ற மரங்களின் குச்சிகள் பல் துலக்கச் சிறந்தவை. 74

## 30. நாக்கு வழிக்கும் கருவிகள்

இக்கருவிகள் பொன், வெள்ளி, செம்பு, வெள்ளீயம் அல்லது பித்தளை என்ற உலோகங்களினால் செய்யப்பட்டு கூர்மையற்றவைகளும், வளையக்கூடியவைகளாகவும் இருத்தல் வேண்டும். 75

### 31. நாக்கு வழிப்பதன் பயன்

நாக்கின் ஓரத்திலும், அடிபாகத்திலும் உள்ள அழுக்கு மூச்சை உள்ளிழுப்பதற்கும் வெளிவிடுவதற்கும் தடையாக இருக்கிறது. வாயில் கெட்டநாற்றத்தை உண்டுபண்ணுகிறது. ஆகையால் நாக்கை வழிக்க வேண்டும். அப்படி வழிப்பதனால் அவை நீங்குகின்றன.

### 32. வாயில் அடக்கக் கூடிய பொருட்கள்

வாயைச் சுத்தமாக வைத்துக்கொள்ளவும், சுவையை அறியவும், வாயை மணமுள்ளதாக வைத்துக்கொள்ளவும் ஜாதிக்காய், கஸ்தூரி, பாக்கு, இலவங்கம், தக்கோலம், பச்சைக்கற்பூரம் மணமுள்ள மங்களகரமான வெற்றிலை, சிற்றேலம் இவற்றை வாயில் அடக்கிக்கொள்ள வேண்டும். 76—77

### 33. எண்ணெயினால் வாய் கொப்பளிப்பதன் பயன்

தாடைகளுக்கு வலிவு, குரலுக்கு பலம், முகத்தில் மாமிச வளர்ச்சி, நாக்கில் தூய்மை, சுவையறிவு, உணவில் அவா, வாய், தொண்டை இவை உலராமை, உதடுகளில் வெடிப்பின்மை, பற்கள் விழாமை, பற்களின் ஈருக்குவலிமை, பற்களில் வேதனையின்மை, புளிப்புப் பொருட்களினால் கூசலின்மை, மிக்க கடினமான பொருட்களைக் கடிப்பதில் திறமை இவை யாவும் எண்ணெயினால் வாய்க் கொப்பளிப்பதனால் ஏற்படும் நன்மைகள். 78—80

### 34. தலையில் எண்ணெய் வைத்துக் குளிப்பதன் பயன்

தினந்தோறும் தலையில் எண்ணெய் வைத்துக்கொண்டு நீராடுவதால் நைப்புத் தன்மை உண்டாகி, தலைவலி, சொட்டை, நரை, முடி உதிர்தல் இவை ஏற்படுவதில்லை.

குறிப்பாக மண்டை ஓட்டிற்கு வலிவை அளிக்கிறது. முடி கருத்து, நீண்டு வளரும். மயிர்க்கால்கள் உறுதியாகும். கழுத்துக்கு மேல் உள்ள புலன்கள் தெளிவாக இருக்கும். முகத்தின் தோல் பளபளப்பாக ஆகும். இன்பமான துயில் ஏற்படும். 81—83

### 35. நாள்தோறும் காதில் எண்ணெயிட்டுக் கொள்வதன் பயன்

வாத தோஷத்தினால் உண்டான காது சம்பந்தமான நோய்கள், மென்னிப் பிடிப்பு, தாடைப்பிடிப்பு இவை நீங்கும். மேலும் உரத்த ஒலியைக் கேட்கும் தன்மையில்லாமை, காது கேளாமை என இவை தினந்தோறும் காதில் எண்ணெய்ஊற்றிக் கொள்பவனுக்கு ஏற்படுவதில்லை. 84

## 36. எண்ணெய்க் குளியலின் பயன்

எண்ணெய் பூசிய (ஊறிய) குடம், எண்ணெயில் ஊறிய தோல், எண்ணெய் ஊற்றிய வண்டிச் சக்கரம் இவை பலம் உள்ளவைகளாகவும், சுமை சுமப்பதற்குத் தகுதியுள்ளவைகளாகவும் ஆவனபோல் உடலுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பது உடலுக்கு உறுதியையும், தோலுக்கு மழமழப்பையும் அளிக்கிறது. வாத தோஷத்தினால் தோன்றுகின்ற வேதனைகளைத் தணியச்செய்து, துன்பங்களைப் பொறுத்துக்கொள்ளும் தன்மையையும், உடற்பயிற்சிக்குத் தேவையான சக்தியையும் அளிக்கிறது. 85–86

தொடு உணர்ச்சியில் வாயு அதிகமாக இருக்கிறது. தொடு உணர்ச்சிக்குத் தோல் இருப்பிடமாகும். எண்ணெய் வாத தோஷத்தை நீக்குவதில்சிறந்தது. உடலுக்கு எண்ணெய்தேய்த்துக் குளிப்பது தோலுக்கு நன்மையை அளிக்கிறது. ஆகையால் நாள் தோறும் எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும்.

நாள்தோறும் எண்ணெய் தேய்த்துக் குளிப்பவனுடைய உடலில் காயம் ஏற்பட்டிடினும் கடுமையான உழைப்பிலும் அவனுடைய தோலில் மாறுபாடு ஏற்படுவதில்லை. நாள்தோறும் எண்ணெய் தேய்த்துக் குளிப்பவனுடைய சருமம் மிருதுவாகவும், பார்ப்பதற்கு அழகுள்ளதாகவும் ஆகிறது. வலிவு உள்ளதாகவும், முதுமையினும் அதன் இலக்கணம் முழுவதும் வெளிப்படாமல் சிறிதளவே தென்படுகிறது. 87–89

## 37. உள்ளங்கால்களில் எண்ணெய் தேய்த்துக் கொள்வதன் பயன்

உள்ளங்கால்களில் எண்ணெய் தேய்த்துக் கொள்வதனால் சொரசொரப்பு, அசைவற்றுப்போகும் நிலை, வறட்சி, களைப்பு, உணர்வின்மை, இவை உடனே நீங்குகின்றன. கால்களில் மெதுத் தன்மை, வலிவு, உறுதி, கண்பார்வைத் தெளிவு இவை ஏற்படுவதோடு வாத நோய்கள் தணிவடைகின்றன. அதனால் 'க்ருத்ரஸி', என்னும் காலில் தோன்றும் வாத நோய் தோன்றுவதில்லை. கால்களில் வெடிப்பு ஏற்படுவதில்லை. இரத்தக் குழாய்கள், நரம்புகள் இவை சுருங்குவதில்லை. 90–92

## 38. நீரால் உடலைக் கழுவுதல், ஈரத் துணியால் உடலை அழுத்தித் துடைத்தல் இவற்றின் நன்மை

உடலில் உள்ள கெட்ட நாற்றம், பளு, சோம்பல், அரிப்பு, அழுக்கு, சுவையின்மை, வியர்வையின் கெட்ட நாற்றம் இவை ஈரத்துணியால் உடலை அழுத்தித் துடைப்பதனால் நீங்கும். 93

## 39. நீராடுவதன் பயன்

நீராடுவதால் உடல் தூய்மை, ஆண்மை, நீண்ட ஆயுள் இவை ஏற்படுகின்றன. களைப்பு, அழுக்கு, வியர்வை இவை நீங்குகின்றன. உடல் வலிவு, ஓஜஸ் (ஒளி) இவை வளர்கின்றன. 94

## 40. தூய்மையான உடை அணிவதன் பயன்

தூய்மையான உடை அணிவதனால் அழகு, புகழ், ஆயுள் இவை வளர்கின்றன. இது அருவருப்பை அகற்றுகிறது. மன மகிழ்ச்சியை உண்டாக்குகிறது. நல்லோருடைய சபையில் மதிப்பைத் தருகிறது. 95

## 41. நறுமணம் வீசும் பொருட்கள் மலர்மாலைகள் அணிவதன் நன்மை

நீராடியபின் குங்குமப்பூ போன்ற மணம் வீசும் பொருட்களுடன் சேர்த்து அரைத்த சந்தனம் பூசிக் கொள்வதாலும், மலர் மாலை அணிவதாலும், ஆண்மை வளர்கிறது. அதாவது பெண்களிடம் ஆசையைத் தூண்டிவிடுகிறது. மணம் அதிகரிக்கிறது. ஆயுள் வளர்கிறது. அழகான தோற்றம் ஏற்படுகிறது. உடலுக்கு புஷ்டியையும், வளர்ச்சியையும் தருகின்றது. மனம் தெளிவடைகிறது. வறுமை அகலுகிறது. 96

## 42. இரத்தினம் போன்ற அணிகலன்கள் அணிவதால் ஏற்படும் பயன்

இரத்தினம் போன்ற அணிகலன்களை அணிவதனால் மனிதன் அதிர்ஷ்டசாலியாகத் திகழ்கிறான். மங்களச் செயல்களும், ஆயுளும் வளர்கின்றன. செல்வம் வந்தடைகிறது. வருத்தம் நீங்குகிறது. மனம் தெளிவடைகிறது. உடலில் அழகும், ஒளியும் வளர்கின்றன. 97

## 43. கால்கள், மலத்துவாரங்கள் இவற்றைச் சுத்தமாக வைத்துக் கொள்வதன் பயன்

கால்கள், மலத்துவாரங்கள் இவற்றை அடிக்கடி சுத்தமாக வைத்துக் கொள்வதனால் அறிவு, தூய்மை, வளர்ச்சியடைகின்றன. ஆயுள் வளர்ச்சியும் ஏற்படுகின்றது. வறுமை நீங்கிக் கலியின் தோஷம் அகலுகிறது. 98

### 44. முடி, மீசை, தாடி, நகம் இவற்றை நீக்குவதன் பயன்

தலையிலுள்ள முடி, மீசை, தாடி இவற்றிலுள்ள முடி, நகம் இவற்றை நீக்கி அழகுபடுத்திக் கொள்வதினால் உடல் வளர்ச்சி ஏற்படுகிறது. ஆண்மையை (பெண்களிடம் ஆசை) வளர்க்கிறது. ஆயுள் வளர்ச்சி அடைகிறது. தூய்மையும், நல்ல தோற்றமும் ஏற்படுகின்றன. 99

### 45. காலணி அணிவதன் பயன்

காலணி அணிவதனால் கண்கள், கால்கள் இவற்றின் தோலுக்கு நன்மை ஏற்படுகிறது. கால்களை துன்பம் ஏற்படாமல் பாதுகாக்கிறது. பலம், வீரம், இன்பம், ஆண்மை இவற்றை அளிக்கிறது. 100

### 46. குடை பிடித்துக் கொள்வதன் பயன்

குடைபிடித்துக் கொள்வதனால் வெயில், காற்று, மழை, தூசி, போன்ற துன்பங்களிலிருந்து பாதுகாப்பு ஏற்படுகிறது. வலிமை பெறுகிறது. பூத ப்ரேத பிசாசுகளிடமிருந்து காப்பாற்றப் படுகிறது. இது உடலை மறைத்து நன்மையளிக்கிறது. 101

### 47. கையில் தடியை வைத்துக் கொள்வதன் பயன்

கையில் தடியை வைத்துக்கொள்வதினால் நடுக்கத்தினால் தடுக்கிவிழாமல் காப்பாற்றுகிறது. எதிரிகளிடமிருந்து தன்னைக் காத்துக்கொள்ள உதவுகிறது. உடலுக்குப் பிடிப்பாக அமைகிறது. ஆண்மையை வளர்க்கிறது. அச்சத்தைப் போக்குகிறது. 102

### 48. ஆரோக்கியத்திற்கு ஊக்கம் தேவை

நகரக்காவலன் நகரைக் காப்பதில் ஊக்கமுள்ளவனாக இருப்பது போலவும், தேரை ஓட்டுபவன் தேரைக் காப்பதில் ஊக்கம் காட்டுவது போலவும், அறிவாளி தன் உடலைப் பேணுவதில் ஊக்கம் செலுத்துபவனாக இருக்க வேண்டும். 103

### 49. இன்ப வாழ்க்கை

செம்மையான வாழ்க்கை வாழ்வதற்கு அவற்றிற்கு ஒத்த செயல்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.

ஆயுர்வேத நூல் அல்லது அற நூல்களைக் கற்றறிந்தவன் அமைதியான இன்ப வாழ்வு வாழ்கிறான். 104

## முடிவுரை

இந்த மாத்ராசிதீயம் எனும் அத்தியாயத்தில் கீழ்க்கண்ட விஷயங்களைப்பற்றி விளக்கியுள்ளார்.

உணவின் அளவு, பொருட்கள், குரு, லகு குணமுள்ள பொருட்களின் அளவு, எப்பொழுதும் விலக்க வேண்டிய பொருட்கள், பயன்படுத்தக்கூடிய பொருட்கள், மை தீட்டுதல், புகை பிடிக்கும் திரி, மூன்றுவகை புகை பிடிக்கும் திரி (வர்த்தி)களின் தயாரிப்பு. புகை குடிப்பதின் பயன், அதன் காலம், அளவு, அதிகமாக அல்லது காலமற்ற காலத்தில் புகை பிடிப்பதனால் விளையும் தீமைகள், அவற்றின் இலக்கணம், மருத்துவம், புகைபிடிக்கத் தகாதவர்கள், புகை பிடிக்கும் முறை, புகை பிடிக்கும் கருவிக்கான பொருட்கள், புகை பிடிக்கும் வகைக்கு ஏற்றவாறு கருவி தயாரித்தல், மூக்கிவிடும் மருத்துவச் சிகிச்சை, அதன் பயன், பயன்படுத்தும் முறை, காலம், பல் துலக்கும் முறை, பலவகையான பல் துலக்கும் குச்சிகளின் குணங்கள், பல் துலக்கப் பயன்படும் குச்சிகள் உள்ள மரங்கள், வாய் கொப்பளிக்கத் தேவையான பொருட்கள், அவற்றின் பயன், எண்ணெயினால் வாய் கொப்பளித்தல், எண்ணெய் தேய்த்து நீராடுதல், காதுகளில் எண்ணெய் ஊற்றிக் கொள்ளுதல், உடல் முழுவதும் எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல், உள்ளங்கால்களில் எண்ணெய் தேய்த்தல், ஈரத்துணியால் உடலைத் துடைத்தல், நீராடுதல், தூய்மையான உடை அணிதல், சந்தனம் போன்ற மணம்வீசும் பொருட்களைப் பூசிக் கொள்ளுதல், இரத்தினங்களைப் பூணுதல், கால், மலத்துவாரங்கள் இவற்றைச் சுத்தமாக வைத்துக் கொள்ளுதல், முடி, நகம் இவற்றை நீக்குதல், காலணி, குடை, தடி இவற்றை வைத்துக் கொள்ளுதலினால் ஏற்படும் பயன், இவை யாவும் இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன. 105—111

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ர
ஸ்தானத்தில் மாத்ராசிதீயம் எனும்
ஐந்தாவது அத்தியாயம்
முற்றும்.

## ஆறாவது அத்தியாயம்

## *தஸ்யாசிதீயம்

தஸ்யாசிதியம் எனும் அத்யாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

### 1. பருவ காலத்திற்கு ஏற்றவாறு உண்பதனால் ஏற்படும் பயன்

ஒவ்வொரு மனிதனுக்கும் எந்தப்பருவத்தில் எத்தகைய உணவு, பழக்கவழக்கங்கள் உடல்பயிற்சி முதலியன உடலுக்கு வளர்ச்சி, வலிமை, நிறம் ஆகியவற்றை வளர்க்கின்றனவோ அத்தகைய உணவு, பழக்கவழக்கங்கள் அந்த மனிதனுக்கு அந்தப் பருவத்திற்கு ஏற்றவை. நன்மை அளிப்பவை. உடலுக்கு ஏற்றவைகளாகின்றன. 3

### 2. பருவங்களின் பிரிவுகள்

பருவங்களைக் கொண்டு வருடம் ஆறு பிரிவுகளாகப் பிரிக்கப் படுகிறது. இதில் சிசிர ருது, வஸந்த ருது, கிரிஷ்ம ருது, (மாசி பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி) இம்மூன்று பருவங்களில் கதிரவன் தென் திசையிலிருந்து வடதிசைநோக்கிச் செல்கிறான். அதனால் இப்பருவத்திற்கு உத்தராயணம் அல்லது ஆதான காலம் எனப்பெயர்.

வர்ஷருது, சரத் ருது, ஹேமந்த ருது (ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை) இம்மூன்று பர்வங்களில் தினகரன் தென்திசை நோக்கிச் செல்வதால் அதற்கு தக்ஷிணாயணம் அல்லது விஸர்க காலம் எனப் பெயர். 4

### 3. விஸர்கம், ஆதானம் இக்காலங்களின் விளக்கம்

விஸர்க காலத்தில் (தக்ஷிணாயணத்தில்) காற்று மிக்க வறட்சியாக வீசுவதில்லை.

---

* தஸ்யாசிநீயம் – முன் அத்தியாயத்தில் அளவுடன் உண்பதால் உடலுக்கு வலிவு உண்டாகும் வகை விளக்கப் பட்டது. அந்த அளவுடன் உண்ணும் உணவும் பருவத்திற்கு ஏற்ப அமைய வேண்டும் என இவ்வத்தியாயத்தில் விளக்கப்படுகிறது.

ஆதான காலத்தில் (உத்தராயணத்தில்) காற்று மிக வறட்சியாக வீசுகிறது. தக்ஷிணாயணத்தில் சந்திரன் முழு வலிவுடன் உலகம் முழுவதும் தன் ஒளியைப் பரப்பி இடைவிடாமல் உலகை திருப்திப்படுத்துவதால் இந்த விஸர்க காலம் ஸௌம்யம் (தண்மையானது) எனக் கூறப்படுகிறது.

ஆதானகாலம் (உத்தராய்ணம்) ஆக்னேயம் சூடானது எனவும் வழங்கப்படுகிறது. ஆதானம், விஸர்கம் இவ்விரண்டு காலங்களிலும் சூரியன், காற்று, சந்திரன் இம்மூன்றும் தம்தம் காலத்தின் இயல்பாலும், அவை செல்லும் வழிகளாலும், காலம், பர்வம், சுவை, தோஷம், உடல் வலிவு இவற்றின் இயல்பிற்குக் காரணமாகக் கருதப்படுகின்றன. 5

## 4. ஆதான காலத்தில் மனிதர்களின் வலிவு குறைவதற்குக் காரணம்

இக்காலத்தில் கதிரவன், தன் கிரணங்களால் உலகில் உள்ள எண்ணெய்ப் பசையை எடுத்துக்கொண்டு வறட்சியைத் தோற்றுவிக்கிறான். காற்று கடுமையான வறட்சியுடன் வீசுவதால் உலகில் உள்ள எண்ணெய்ப்பசை நீங்கி மிக்க வறட்சியுடன் உலகம் காணப்படுகிறது. ஆகையால் இந்தச் சிசிர், வஸந்த, கிரீஷ்ம என்ற பர்வங்களில் இயல்பாகவே வறட்சியான கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு எனும் இச்சுவைகள் முறையே மிக்க வறட்சியுடன் இருக்கின்றன. மனிதர்களுக்கு வலிவுக் குறைவையும் ஏற்படுத்துகின்றன. 6

## 5. விஸர்க காலத்தில் மனிதர்களின் வலிவு வளர்ச்சிக்குக் காரணம்

வர்ஷம், சரத், ஹேமந்தம் (ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை) இப்பருவங்களில் கதிரவன் தெற்குத் திசையை நோக்கிச் செல்கிறான். காலத்தின் இயல்பு, மேகம், காற்று, மழை இவற்றால் கதிரவனின் கடுமை குறைந்துவிடுகிறது. சந்திரன் முழு வலிவுபெற்றுத் திகழ்கிறான். ஆகாயத்திலிருந்து நீர் பூமியில் கீழே விழுவதனால் உலகின் வெப்பம் தணிகிறது. ஆகையால் இக்காலங்களில் வறட்சியற்ற புளிப்பு, உப்பு, இனிப்பு இச்சுவைகள் வலிவையும் பெறுகின்றன. மானிடர்களின் உடலில் வலிவு வளர்கின்றது. 7

### அதைப்பற்றிய செய்யுள்

விஸர்க காலத்தின் (தக்ஷிணாயனம்) தொடக்கத்திலும், ஆதான காலத்தின் (உத்தராயணம்) முடிவிலும், மனிதர்களிடம்

வலிவுக் குறைவு ஏற்படும். அதேபோல் இக்காலங்களின் நடுவில் நடுத்தரமான வலிவும், விஸர்ககாலத்தின் முடிவிலும் ஆதான காலத்தின் தொடக்கத்திலும் அதிக வலிவும் உண்டாகின்றன. 8

## 6. ஆறு பருவ காலங்களின் விளக்கம்

ஹேமந்த ருது (பனிக்காலம்) (மார்கழி-தை) இந்தப் பருவத்தில் குளிர்ச்சி அதிகமாயிருப்பதால் காற்றும் குளிர்ச்சியடைந்து விடுகிறது. அந்தக் குளிர்காற்று ஆரோக்கியமுள்ளவனுடைய உடலில் படுவதால் அவனுடைய சடராக்னி உள்ளடங்கி சடராக்னி வலிவுபெற்று, குரு குணமுள்ள உணவு வகைகளையும் சீரணிக்கும் சக்தியையும் பெறுகிறது. 9

வலிவுபெற்ற சடராக்னிக்கு ஏற்ற குரு குணமுள்ள உணவு வகை கிடைக்காதபொழுது அது உடலில் உள்ள முதலாவது தாதுவான ரசதாதுவை எரித்துவிடுவதால் குளிர்ந்த வாதம் பனிக்காலத்தில் சீற்றமடைகிறது. 10

பனிக்காலத்தில் எண்ணெய்ப் பசையுள்ள பொருட்கள், புளிப்பு, உப்புச் சுவையுள்ள பொருட்கள், அதிக கொழுப்புச் சத்துள்ள நீர்வாழ் பிராணிகளின் இறைச்சி, நீர்நிறைந்த, காற்றடர்ந்த இடங்களில் வாழும் உயிரினங்களின் மாமிசம் இவற்றைப் பயன்படுத்த வேண்டும். 11

பொந்துகளில் வசிக்கும் பிராணிகள், பிராணிகளைக் கொன்று தின்னும் பிராணிகள் இவற்றின் மாமிசத்தை தீயில் இட்டு உண்டு, அதற்குத் துணையாக கள், சீது என்னும் ஒருவகைக் கள், தேன் இவற்றை உட்கொள்ள வேண்டும் 12

இந்தப் பனிக் காலத்தில் பால், தயிர், பாலேடு போன்றவை, கரும்பினால் தயாரித்த வெல்லம், சர்க்கரை, கற்கண்டு போன்றவை, வசை, எண்ணெய், புது அரிசி, சுடுநீர் இவற்றைப் பயன்படுத்துவதால் ஆயுள் குறையாது. 13

ஹேமந்தருதுவில் (பனிக்காலத்தில்) எண்ணெய் தேய்த்து நீராடுதல், மருந்துப் பொருட்களை அறைத்து மேற்பூச்சுப் பூசிக் கொள்ளுதல், தலையில் எண்ணெய் வைத்துக் கொள்ளுதல், ஜெந்தாகம் எனும் வியர்வைச் சிகிச்சை செய்துகொள்ளுதல், வெயிலில் இருத்தல், உள்ளும் புறமும் சூடாக உள்ள வீட்டில் வசித்தல் மேல் உறையிட்ட வாகனம், படுக்கை, இருக்கை இவற்றில் அமர்தல், பருத்தியினாலான போர்வை, தோல், பட்டுத்துணி, கம்பளி, இவற்றைப் பரப்பி அதன்மேல் அமருதல், உடலில் கனமாயும் சூடாயுமுள்ள துணியை அணிதல், அகிற்கட்டையை அறைத்து உடலில் பூசிக்கொள்ளுதல், அகன்ற பருத்த மார்பகத்தையுடைய

அகிற்சந்தனம் பூசிய, மதத்தைத் தோற்றுவிக்கும் மாதை அணைத்துக்கொண்டு உறங்குதல், மனநிறைவு ஏற்படும்வரை மாதுடன் புணர்தல் இவையாவும் நன்மை பயப்பவை. 14–17

## 7. பனிக்காலத்தில் நீக்க வேண்டியவை

வாதத்தை உண்டுபண்ணக் கூடியதும், எளிதில் சீரணமாகக் கூடியதுமான உணவு வகைகளைத் தவிர்க்க வேண்டும். கனமான காற்று, குறைந்த அளவு உணவு, அதிகமான தண்ணீரில் சத்துமாவைக் குடித்தல் இவற்றையும் பனிக்காலத்தில் தவிர்க்க வேண்டும். 18

## 8. சிசிர ருதுவில் கடைபிடிக்க வேண்டியவை (இலையுதிர் காலம்)

பொதுவாக ஹேமந்தம் என்ற பனிக்காலமும், சிசிரம் என்ற இலையுதிர் காலமும் சமமானவை. ஆனால் இலையுதிர் காலத்தில் சிறிது மாறுபாடு உள்ளது. இப்பருவத்தில் உத்தராயணத்தில் இயல்பாக வறட்சி ஏற்படுகிறது. மேகம், காற்று, மழை இவற்றின் காரணமாக மிக்கக் குளிர்ச்சி உண்டாகிறது. சிசிர ருதுவில், ஹேமந்த ருதுவிற்குக் கூறப்பட்ட எல்லா முறைகளையும் பின்பற்ற வேண்டும். குறிப்பாகக் காற்றோட்டமில்லாத அதிக உஷ்ணமான வீட்டில் வசிக்க வேண்டும். 19–20

## 9, சிசிர ருதுவில் விலக்க வேண்டியவை (இலையுதிர் காலம்)

கார்ப்பு, கைப்பு, துவர்ப்புச் சுவையுள்ள பொருட்கள் வாதத்தைத் தோற்றுவிப்பவை, இலகு குணமுள்ளவை, குளிர்ச்சியானவை. ஆகையால் இம்மாதிரியான உணவு வகைகளையும் பருகும் பொருட்களையும் இலையுதிர் காலத்தில் விலக்க வேண்டும். 21

## 10. வஸந்த ருதுவில் கடைபிடிக்க வேண்டியவை (சித்திரை, வைகாசி)

பனிக் காலத்தில் குவிந்துள்ள கபம், வஸந்த ருதுவில் கதிரவனின் கிரணங்களால் உருகி, பெருகிச் சீற்றமடைந்து சடராக்னியைக் குறைத்துவிடுகிறது. அதனால் பலவகையான நோய்கள் ஏற்படுகின்றன. ஆகையால் அந்தக் குவிந்த கபத்தைப் போக்க வஸந்த ருதுவில் வாந்திக்குக் கொடுப்பது போன்ற [1]பஞ்சகர்ம சிகிச்சைகளைச் செய்விக்க வேண்டும். 22

1. **பஞ்சகர்மா** – **வமனம்** – வாந்திக்குக் கொடுத்தல்
**விரேசனம்** – மலம் கழிக்கக் கொடுத்தல்
**ஆஸ்தாபனம்** – கஷாய வஸ்தி கொடுத்தல்
**அநுவாஸனம்**–எண்ணெய் வஸ்தி கொடுத்தல்
**நஸ்யம்** – மூக்கில் மருந்திடும் சிகிச்சை

## 11. வஸந்த ருதுவில் தவிர்க்கவேண்டியவை (சித்திரை, வைகாசி)

வஸந்த ருதுவில் குரு குணமுள்ளதும், புளிப்பு, இனிப்புச் சுவையுள்ளதும், எண்ணெய்ப் பசையுள்ளதுமான உணவு வகைகளைத் தவிர்க்க வேண்டும். பகலில் தூங்கக்கூடாது. 23

## 12. வஸந்த பருவத்தில் கடைபிடிக்க வேண்டியவை (சித்திரை, வைகாசி)

இந்தப் பருவத்தில் உடற்பயிற்சி, மருந்துப் பொருட்களால் மேற்பூச்சுப் பூசிக்கொள்ளுதல், புகைபிடித்தல், வாய் கொப்பளித்தல், கண்களுக்கு மைதீட்டிக்கொள்ளுதல், சிறுநீர், மலம் இவற்றைக் கழித்தபின் இளஞ்சூடான சுடுநீரைப் பயன்படுத்துதல், சந்தனம், அகில் இவற்றை அரைத்துப் பூசிக் கொள்ளுதல், யவம் என்ற அரிசி, கோதுமை இவற்றை உணவுடன் சேர்த்துக்கொள்ளுதல், சரபம் என்னும் ஒருவகை மான், முயல், கருநிறமான், லாவம், கபிஞ்சலம் என்ற பறவைகளின் புலால், தீமையற்ற சீது என்ற ஒருவகைக் கள், அல்லது தேனில் தயாரித்த ஆஸவம் இவற்றைப் பருகுதல், இளம் பருவமுள்ள பெண்களுடன் கூடி, பூந்தோட்டத்தில் உலாவுதல் ஆகியவற்றைக் கடைபிடிக்க வேண்டும். 24—26

## 13. கிரீஷ்ம பருவத்தில் (வெயிற்காலம்) செய்ய வேண்டியவை

கிரீஷ்ம பருவத்தில் கதிரவன் தன் கடுமையான கிரணங்களால் உலகில் உள்ள எண்ணெய்ப் பசையை உலர்த்திவிடுகிறான். இப்பருவத்தில் இனிப்புச் சுவையுள்ளதும், குளிர்ச்சியுள்ளதுமான பருகும் பொருள், (திரவம்) நைப்புத் தன்மையுள்ள உணவு வகை இவற்றைப் பயன்படுத்த வேண்டும். சர்க்கரை கலந்த *மந்தம், காற்று, காடடர்ந்த இடங்களில் வாழும் பிராணிகள், பறவைகள் இவற்றின் மாமிச ரசம், நெய், பால், சம்பா அரிசி ஆகிய இவற்றைப் பயன்படுத்துவதால் உடலில் உள்ள இயற்கையான வலிவு குறைவதில்லை. 27—28

## 14. கிரீஷ்ம பருவத்தில் தவிர்க்க வேண்டியவை (ஆனி, ஆடி)

இப்பருவத்தில் கள் அருந்தக்கூடாது. குடிக்க வேண்டுமானால் சிறிதளவு குடிக்கலாம். அல்லது அதிக நீர் கலந்து குடிக்கலாம். உப்பு, புளிப்பு, கார்ப்புச் சுவையுள்ளதும் உஷ்ண வீர்யம் உள்ளதுமான பொருட்களை உண்ணக்கூடாது. உடற்பயிற்சியைத் தவிர்க்க வேண்டும். 29

---

*மந்தம் — நெய்யுடன் கலந்த சத்துமாவை குளிர்ந்த நீரில் இளகலாகக் கலந்த பொருள்.

## 15. கிரீஷ்ம பருவத்தில் பயன்படுத்தக் கூடியவை (ஆனி, ஆடி]

கிரீஷ்ம பருவத்தில் பகலில் குளிர்ந்த அறையிலும், இரவில் சந்திர கிரணங்களால் குளிர்ச்சியடைந்த காற்றோட்டமுள்ள திறந்த மாடியிலும் உடலில் சந்தனம் பூசிக்கொண்டு உறங்க வேண்டும்.

முத்து, மணி இவற்றால் ஒப்பனை செய்துகொண்டு சந்தனம் கலந்த குளிர்ந்த நீரினால் குளிர்ச்சியடைந்த விசிறியின் காற்றில் மிருதுவான கரங்களினால் தொடும் சுகத்தை அநுபவித்துக் கொண்டு இருக்கையில் அமர வேண்டும்.

மேலும் குளிர்ந்த மலர் தோட்டம், குளிர்ந்த நீர், குளிர்ந்த மலர்கள் இவற்றைக் கண்டும் தொட்டும் அனுபவிக்க வேண்டும். ஆனால் புணர்ச்சியைத் தடுக்கவேண்டும். 30—32

## 16. வர்ஷ ருதுவின் (மழைக்காலம்) நிகழ்ச்சி (ஆவணி, புரட்டாசி)

உத்தராயணத்தில் (தை முதல் ஆனி வரை) மனிதர்களின் உடல் வலிவு இயற்கையாகவே குறைந்திருக்கும். வலிவு குறைந்த உடலில் சடராக்னியின் வலிவும் குறைந்திருக்கும். வர்ஷருது (ஆவணி, புரட்டாசி) தொடங்கியவுடன். கெட்டுப்போன வாதம் முதலான தோஷங்களால் கேடடைந்த சடராக்னி மேலும் சக்தியை இழந்துவிடுகிறது. இந்தப் பருவத்தில் நிலத்திலிருந்து ஆவி வெளிவருதல், ஆகாயத்திலிருந்து மழை பெய்தல், நீர் விபாகத்தில் (உணவு மாறுபாடு அடையும் சமயம்) புளிப்புச்சுவை யாக மாறுபாடு அடைதல் ஆகிய இவற்றாலும் சடராக்னிக்கு மிக்க வலிவுக் குறைவு ஏற்படுகிறது. இதனால் வாதம் போன்ற தோஷங்கள் சீற்றலை அடைகின்றன. ஆகையால் வர்ஷ ருதுவில் (மழைக்காலத்தில்) பொதுவான எல்லாக் கட்டுப்பாடு முறைகளையும் கடைப்பிடிப்பது சிறந்ததாகும். 33—34

## 17. வர்ஷ ருது (மழைக்காலத்தில்) விலக்க வேண்டியவை (ஆவணி, புரட்டாசி)

இப்பருவத்தில் பகலில் உறங்குவது, பனியில் அமருவது அல்லது சுற்றுவது, ஆற்றுநீரில் ஸ்நானம் செய்தல், உடற்பயிற்சி, வெயிலில் அமருதல், புணர்ச்சி ஆகிய இவற்றை விலக்க வேண்டும். 35

மழைக்காலத்தில் பருகும் பொருட்கள், உண்ணும் பொருட்கள் இவற்றில் பெரும்பாலும் தேன் சேர்க்க வேண்டும். காற்று, மழை இவற்றால் சூழ்ந்த மிக்க குளிர்நாட்களில் புளிப்புச் சுவை,

உப்புச்சுவை, நைப்பு இவை நிறைந்த பொருட்களை அதிக அளவில் உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

இவை மழை காலத்தில் ஏற்படும் வாத தோஷத்தைத் தணிக்கும். சடராக்னியைக் காக்க விரும்பும் மனிதன் பழமையான யவ அரிசி, கோதுமை, சம்பா அரிசி இவற்றைப் பயன்படுத்தலாம்.

புலால் உண்பவன், மேற்கூறிய பொருட்களை காற்று, காடு அடர்ந்த இடங்களில் வாழும் பிராணிகள், பறவைகள் இவற்றின் மாமிச ரசத்துடன் சேர்த்தும்,

மரக்கறி உண்பவன், பச்சைப் பயறுக் கஞ்சியுடன் மேற்கூறிய பொருட்களைச் சேர்த்தும் உண்ண வேண்டும். *36—38*

மாத்விகாரிஷ்டத்தை சிறிதளவு தேன் அல்லது தண்ணீர் சேர்த்துப் பருகவும்.

மழைக்காலத்தில் ஆகாயத்திலிருந்து விழும் நீர், காய்ச்சி ஆற வைத்த நீர், கிணற்று நீர், ஏரியின் நீர் இவற்றைப் பருகுவது நலம்.

உடலைக் கழுவிக் கொள்ளுதல், அழுக்கு எடுக்கும் பொடி (சூர்ணம்)யைப் பூசிக்கொண்டு நீராடுதல், மணமுள்ள பொருட்களைப் பயன்படுத்துதல், நறுமணம் கமழும் அழகான மலர்மாலை அணிதல் ஆகிய இவை நன்மையை அளிப்பவை. இலேசானதும், தூய்மையானதுமான ஆடைகளை உடுத்தி ஈரமில்லாத உலர்ந்த இடத்தில் வசிக்க வேண்டும். *39—40*

### 18. சரத் ருதுவின் நிகழ்ச்சி (ஐப்பசி, கார்த்திகை)

மழைக்காலத்தில் குளுமை ஒத்துக்கொண்டவர்களுக்கு திடீர் என்று கதிரவனின் கிரணங்களின் சூடு ஏற்படுவதனால் குவிந்திருக்கிற பித்தம் பெரும்பாலும் சரத் ருதுவில் சீற்றலை அடைகிறது. *41*

### 19. சரத் ருதுவில் கடைபிடிக்க வேண்டியவை (ஐப்பசி, கார்த்திகை)

இனிப்புச்சுவை, இலகுகுணம், குளிர்ந்த வீர்யம், கைப்புச் சுவை, பித்தத்தைத் தணிக்கக்கூடிய உணவு வகைகள் இவைகளை அளவுடன் நன்கு பசி எடுத்தபின் புசிக்க வேண்டும்.

புலால் உண்ணும் பழக்கமுள்ளவர்கள், இக்காலத்தில் லாவகம் எனும் குருவி, கபிஞ்ஜலம் என்னும் பறவை, மான், செம்மறி யாடு, சரபம் என்ற ஒருவகை மான், முயல் இவற்றின் புலாலை புசிக்கலாம்.

பொதுவாக எல்லோரும், அரிசி, யவ அரிசி, கோதுமை, இவற்றையே பயன்படுத்த வேண்டும்.

குஷ்ட நோய் சிகிச்சையில் கூறிய 'திக்தகக்ருதம்' என்னும் நெய் பருகவேண்டும்.

மலம்கழிக்கச் செய்யும் சிகிச்சை, கெட்ட இரத்தக் குழாயைக் கீறி இரத்தம் எடுக்கும் சிகிச்சை இவற்றையும் மேற்கொள்ளவும்.

### 20. சரத் ருதுவில் தவிர்க்க வேண்டியவை (ஐப்பசி, கார்த்திகை)

வெயில், வசை, எண்ணெய், பனித்துளி, நீர்வாழும் பிராணிகளின் மாமிசம், காற்று, நீர் நிறைந்த இடங்களில் வாழும் பிராணிகளின் புலால், க்ஷாரம், தயிர், பகலில் உறக்கம், எதிர் காற்று இவற்றைத் தவிர்க்க வேண்டும். 42–45

### 21. ஹம்ஸோதக விளக்கம்

பகலில் கதிரவனின் ஒளியால் சூடாகி, இரவில் சந்திரனின் ஒளியால் குளிர்ந்து, காலத்தின் இயல்பால் பக்குவமாய், மாலையில் அகஸ்திய நக்ஷத்திரம் தோன்றியதன் மகிமையால் நஞ்சு அற்ற நீர் ஹம்ஸோதகம் என வழங்கப்படுகிறது. தூய்மையானதும் புனிதமானதுமான இந்த ஹம்ஸோதகம் என்ற நீரை சரத் ருதுவில் (ஐப்பசி, கார்த்திகை) நீராடியும், பருகியும், மூழ்கிக் குளித்தும் பயன்படுத்தினால் அமுதத்திற்கு ஒப்பான பயன் கிட்டுகிறது. 46–47

இந்த ருதுவில் மலர்ந்த மலர்மாலை, தூய்மையான ஆடை, மாலை மதியின் ஒளி இவற்றைப் பயன்படுத்துவது சிறந்ததாகக் கருதப்படுகிறது. 48

### 22. ஓக ஸாத்ம்யம்*

இவ்வாறு செயல், உணவு இவற்றைக் குறித்துப் பருவங்களுக்குத் தக்கவாறு விளக்கப்பட்டன.

இடைவிடாமல் கடைபிடிப்பதனால் உடலுக்கு ஒத்துக் கொள்ளுகிற உணவும் பழக்கவழக்கமும் ஓக ஸாத்ம்யம் எனக் கூறப்படுகின்றன. 49

*ஓகம் — உடல், ஸாத்ம்யம் — ஒத்துக்கொள்ளக் கூடியது.

## 23. ஸாத்ம்யம் ஒத்துக் கொள்ளுதல்

வசிக்குமிடம், அங்கு உண்டாகும் நோய், இவற்றிற்கு எதிரிடையான குணங்களையுடைய பழக்கவழக்கங்கள், உணவு வகைகள் இவற்றைக் குறிப்பிட்ட இடம், நோய் இவற்றை ஸாத்ம்யம் (ஒத்துக் கொள்ளுதல்) என்று கருதுகிறார்கள். 50

**முடிவுரை :**

இந்த தஸ்யாசிதீயம் எனும் பெயருடைய அத்தியாயத்தில் ஒவ்வொரு ருதுவில் (பருவத்தில்) மனிதர்கள் பயன்படுத்தக் கூடியவை, தவிர்க்க வேண்டியவை இவை காரணங்களுடன் விளக்கப் பட்டுள்ளன.

ஸாத்ம்யம் (ஒத்துக்கொள்ளக்கூடியது) என்பதன் விளக்கம் கூறப்பட்டுள்ளது. 51

இத்துடன் அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு
சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட
சரகஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானத்தில்
தஸ்யாசிதீயம் எனும் ஆறாவது
அத்தியாயம் முற்றும்.

## ஏழாவது அத்தியாயம்

## *நவேகான் தாரணீயம்

"'ந வேகான் தாரணீயம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

### 1. அடக்கக்கூடாத வேகங்கள்

சிறுநீர், மலம், விந்து, வாந்தி, தும்மல், ஏப்பம், கொட்டாவி இவை வெளிவருதல், பசி, தாகம், கண்ணீர், தூக்கம், களைப்பால் ஏற்படும் மேல்மூச்சு இவற்றின் வெளிவருதல் இவற்றை வேகம் என்கிறோம். இயற்கையாகவே வெளிவரும் அந்த வேகத்தை அறிவாளி தடைபடுத்தக் கூடாது. 3–4

வேகங்களைத் தடைப்படுத்துவதினால் தனித்தனியாக ஏற்படும் நோய்களையும், அதற்கான சிகிச்சைகளையும் தனித்தனியாகக் கூறும் வகையை என்னிடமிருந்து கேட்பாயாக. 5

### 2. சிறுநீர் அடக்குவதனால் ஏற்படும் நோய்கள்

சிறுநீர்ப்பை, ஆண்குறி இவற்றில் குத்தல் வலி, சிறுநீர் கடுப்பு, தலைவலி, வலி ஏற்படும்போது உடல் வளைந்து போதல், தொடை இடுக்குகளில் வீக்கம் இவை தானாக வருகிற சிறுநீரை அடக்குவதால் தோன்றும் நோய்களாகும். 6

### 3. மேற்கண்ட நோய்களுக்கான சிகிச்சை

வியர்வை சிகிச்சை, வாதம் தணிக்கும் பொருள்களுடன் சூடாக்கிய, நீர் நிரம்பிய தொட்டியில் அமிழ்ந்

---

* ந.வேகான் தாரணியம்– இயற்கையான மனித உடலில் தோன்றும் சிறுநீர், மலம், காற்று, சளி, போன்றவை உடலிலிருந்து வெளிப்படுவதற்கான – வேகங்களைத் தடுப்பதனால் தோன்றும் நோய்களையும் அவற்றிற்கான சிகிச்சைகளையும் இவ்வத்தியாயத்தில் விளக்கப்படுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

திருத்தல், எண்ணெய்த் தேய்த்துக் கொள்ளுதல், 1. அவபீடகம் எனும் நெய் பருகுதல், எண்ணெய் வஸ்தி, கஷாய வஸ்தி, 2. உத்தரவஸ்தி இம்முறைகளைக் கடைபிடித்தல் என்ற இவை மேற்கண்ட நோய்களுக்கான சிகிச்சையாகும். 7

## 4. மலத்தை அடக்குவதனால் ஏற்படும் நோய்கள்

இயற்கையாக வெளிவரும் மலத்தை அடக்குவதனால் சீரணப்பை, தலை இவற்றில் குத்தல் வலி ஏற்படும். கீழ்நோக்கிச் செல்லும் வாயு (அபான வாயு) மலம் இவை வெளிவரா. முழங்கால்களில் உள்ள ஆட்டுச் சதைகளில் முறுக்குவது போன்ற வலி உண்டாகும். வயிற்று உப்புசம் தோன்றும். 8

## 5. மலத்தை அடக்குவதனால் ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சை

வியர்வை சிகிச்சை, எண்ணெய்க் குளியல், தொட்டி நீரில் அமிழ்ந்திருத்தல், மலத்துவாரத்தில் திரி செலுத்துதல், வஸ்தி சிகிச்சை இவை மலத்தை அடக்குவதினால் ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சைகளாம். 9

## 6. விந்துவை அடக்குவத்னால் ஏற்படும் நோய்கள்

ஆண்குறியிலும், இரண்டு விதைகளிலும், குத்தல் வலி, உறுப்புகளில் உழச்சல், இதயத்தில் வேதனை, சிறுநீர் தடைபடுதல், இந்நோய்கள் விந்துவை அடக்குவ்தினால் தோன்றக் கூடியவை. 10

## 7. விந்துவை அடக்குவதனால் ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சை

வாதத்தைப் போக்கக்கூடிய எண்ணெய்க் குளியல், தொட்டி நீரில் அமிழ்ந்திருத்தல், கள் குடித்தல், கோழி மாமிசம் புசித்தல், சம்பா அரிசிச் சோறு உண்ணுதல், பால் பருகுதல், கஷாய வஸ்தி, புணர்ச்சி இவை விந்துவை அடக்குவதினால் ஏற்படும் நோய்களுக்குச் சிகிச்சைகளாகும். 11

---

1. அவபீடகம் – உணவு உண்பதற்கு முன்பும் உணவு சீரணமானபின்பும் உயர்ந்த அளவில் நெய் பருகுவது. இவ்வாறு நெய் பருகும் முறை அவபீடகம் எனப்படும்.

2. உத்தரவஸ்தி – ஆண்குறி வழியாக மருந்துகளைச் செலுத்தும் வஸ்தி.

## 8. கீழ்நோக்கிச் செல்லும் வாயு (அபான வாயு)வை அடக்குவதனால் ஏற்படும் பிணிகள்

மலம், சிறுநீர், வாதம் இவை தடைபடுதல், வயிற்று உப்புசம், வேதனை, சோர்வு, வயிற்றில் வாதத்தினால் ஏற்படும் மற்ற நோய்கள் என இவை கீழ்நோக்கிச் செல்லும் வாயுவை அடக்குவதனால் உண்டாகக்கூடிய துன்பங்களாகும். 12

## 9. கீழ்நோக்கிச் செல்லும் வாயுவை அடக்குவதனால் ஏற்படும் பிணிகளுக்கான சிகிச்சை

எண்ணெய்ச் சிகிச்சை, வியர்வைச் சிகிச்சை, திரிகள், வஸ்தி சிகிச்சை, வாதத்தை நேராகச் செலுத்தக்கூடிய உணவு, பருகும் பொருட்கள், இவை கீழ்நோக்கிச் செல்லும் வாதத்தை அடக்குவதனால் தோன்றும் நோய்களுக்கான மருத்துவமாகும். 13

## 10. வாந்தியை அடக்குவதனால் ஏற்படும் பிணிகள்

அரிப்பு, கொப்புளம், சுவையின்மை, வங்கு, வீக்கம், பாண்டு, காய்ச்சல், குஷ்டம், வெகுட்டல், விஸர்ப்பம் (அக்கி நோய்) இவை வாந்தியைத் தடைபடுத்துவதினால் ஏற்படுபவை. 14

## 11. வாந்தியை அடக்குவதனால் ஏற்படும் பிணிகளுக்கான சிகிச்சை

உணவைப் புசித்து வாந்தி எடுக்கச் செய்தல், புகை பிடித்தல், பட்டினி போடுதல், இரத்தம் வெளியெடுத்தல், வறட்சியான உணவு, நீர்வகை, உடற்பயிற்சி, மலம் கழிக்கச் செய்தல் இவை வாந்தியைத் தடைபடுத்துவதினால் தோன்றும் பிணிகளுக்குச் சிறந்தவை. 15

## 12. தும்மலை அடக்குவதனால் தோன்றும் நோய்கள்

மென்னிப் பிடிப்பு, (அசையாத நிலை) தலைவலி, முகவாய்க்கட்டை ஒரு பக்கமாகக் கோணிப்போகுதல், ஒத்தைத் தலைவலி, புலன்களுக்கு வலிவுக்குறைவு இவை தும்மலை அடக்குவதினால் தோன்றும் துன்பங்களாகும். 16

## 13. தும்மலை அடக்குவதனால் ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சை

கழுத்துக்கு மேல் உள்ள உறுப்புக்களுக்கு எண்ணெய்தேய்த்துக் குளியல், வியர்வை சிகிச்சை, புகைபிடித்தல், மூக்கில் மருந்திடுதல், வாதத்தை நீக்கும் உணவுவகை, உணவிற்குப் பின் நெய்

பருகுதல் ஆகிய இவை தும்மலை அடக்குவதினால் ஏற்படும் நோய்களுக்குப் பரிகாரமாகும். 17

## 14. ஏப்பத்தை அடக்குவதனால் ஏற்படும் நோய்கள்

விக்கல், சுவாசம், சுவையின்மை, நடுக்கம், இதயம், மார்பு, இவற்றில் பிடிப்பு, இவை ஏப்பத்தை அடக்குவதினால் ஏற்படும் நோய்களாகும்.

## 15. ஏப்பத்தை அடக்குவதனால் ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சை

விக்கலைத் தடுக்கச் செய்யும் சிகிச்சையை ஏப்பத்தைத் தடுப்பதினால் ஏற்படும் நோய்களுக்கும் கையாள வேண்டும். 18

## 16. கொட்டாவியைத் தடுப்பதனால் ஏற்படும் நோய்கள்

உடல் வளைந்து போதல், நடுக்கம், குறுகிப் போதல், உணர்வற்றுப் போதல், உடல் உறுப்புக்களில் நடுக்கம், உதறுதல் இவை கொட்டாவியைத் தடுப்பதனால் ஏற்படும் நோய்களாகும்.

## 17. கொட்டாவியைத் தடுப்பதனால் ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சை

வாதத்தைப் போக்கும் எல்லா மருந்துகளும் கொட்டாவியை அடக்குவதினால் ஏற்படும் நோய்களுக்கும் பயன்படுகின்றன. 19

## 18. பசியை அடக்குவதனால் ஏற்படும் பிணிகள்

உடல் இளைப்பு, வலிவுக்குறைவு, நிறமாற்றம், உடல் உழச்சல், சுவையின்மை, தலைச் சுற்றல் இவை பசியை அடக்குவதினால் ஏற்படும் பிணிகளாகும்.

## 19. பசியை அடக்குவதனால் ஏற்படும் பிணிகளுக்கான மருத்துவம்

எண்ணெய்ப் பசை, உஷ்ண வீர்யம், இலகு குணம் இவை உள்ள உணவுவகைகளைப் புசித்தல் பசியை அடக்குவதினால் ஏற்படும் பிணிகளுக்குச் சிகிச்சைகளாகும். 20

## 20. தாகத்தை அடக்குவதனால் ஏற்படும் நோய்கள்

தொண்டை, வாய் இவை உலர்ந்து போதல், காது கேளாமை, களைப்பு, சோர்வு, இதயத்தில் வேதனை இவை தாகத்தை அடக்குவதனால் ஏற்படும் நோய்கள்.

**21. தாகத்தை அடக்குவதனால் ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சை**

குளிர்ந்த, திருப்தி அளிக்கக்கூடியவற்றை அருந்தச் செய்வது தாகத்தை அடக்குவதினால் ஏற்படும் நோய்களுக்குச் சிகிச்சையாகும். 21

**22. கண்ணீரை அடக்குவதனால் ஏற்படும் நோய்கள்**

கடுமையான ஜலதோஷம், கண்நோய், இதய நோய், சுவையின்மை, தலைச்சுற்றல், இவை கண்ணீரை அடக்குவதினால் ஏற்படும் நோய்கள்.

**23. கண்ணீரை அடக்குவதனால் ஏற்படும் நோய்களுக்கான மருத்துவம்**

உறங்குதல், மனதிற்குகந்த இனிமையான கதைகள் கேட்டல், கள் குடித்தல் இவை கண்ணீரை அடக்குவதினால் தோன்றும் நோய்களுக்கான சிகிச்சை. 22

**24. தூக்கத்தை அடக்குவதனால் ஏற்படும் பிணிகள்**

கொட்டாவி விடுதல், உடல் உழச்சல், சோம்பல், தலைவலி, கண்களில் பளு இவை தூக்கத்தை அடக்குவதால் ஏற்படக்கூடிய பிணிகள்.

**25. தூக்கத்தை அடக்குவதனால் ஏற்படும் பிணிகளுக்கான சிகிச்சை**

உறங்குதல், உடலைப் பிடித்து விடுதல், இவை தூக்கத்தை அடக்குவதனால் ஏற்படும் பிணிகளுக்குச் சிகிச்சைகளாம். 23

**26. களைப்பினால் உண்டாகும் மேல்மூச்சை அடக்குவதனால் தோன்றும் பிணிகள்**

குன்மம், இதயநோய், மயக்கம், (ஸம்மோகம்) இவை களைப்பினால் உண்டாகும் மேல்மூச்சை அடக்குவதனால் உண்டாகும் பிணிகள்.

**27. களைப்பினால் உண்டாகும் மேல்மூச்சை அடக்குவதனால் தோன்றும் பிணிகளுக்கான சிகிச்சை**

களைப்பாறுதல், வாதத்தைப் போக்கக்கூடிய சிகிச்சை இவற்றை களைப்பினால் உண்டாகும் மேல்மூச்சை அடக்குவதினால் ஏற்படும் நோய்களுக்குச் செய்ய வேண்டும். 24

வேகங்களை அடக்குவதினால் தோன்றக்கூடிய மேற்கூறிய பிணிகள் தோன்றாமல் காக்க விரும்புகிற மனிதன் முற்கூறிய வேகங்களை அடக்கக்கூடாது. 25

## 28. எப்பொழுதும் அடக்கத்தக்க வேகங்கள்

மேல் உலகிலும், இவ்வுலகிலும், நல்வாழ்வை விரும்புகிறவன் இகழத்தக்க, துணிச்சலான மனம், சொல், செயல் இவற்றால் ஏற்படும் கீழ்க்கண்ட வேகங்களை எப்பொழுதும் அடக்க வேண்டும். 26

## 29. 1. மானசிக வேகம் (மனதில் ஏற்படும் எழுச்சிகள்)

பேராசை, வருத்தம், அச்சம், பொறாமை, அகங்காரம், வெட்கமின்மை, அளவு கடந்த அன்பு, பிறர் பொருள் மீது ஆசை வைத்தல் என இந்த உள்ளத்தில் உண்டாகும் வேகங்களை அறிவாளி, அடக்க வேண்டும். 27

## 30. 2. வாசிக வேகம் (சொல்லில் ஏற்படும் குற்றங்கள்)

கடினமாகப் பேசுதல், கோள் சொல்லுதல், பொய் பேசுதல், காலமில்லாக் காலத்தில் பேசுதல் போன்ற வேகங்களை அடக்க வேண்டும். 28

## 31. உடலின் வேகம் (உடலினால் ஏற்படும்குற்றங்கள்)

பிறரைத் துன்புறுத்தல், பிற பெண்டிர்களைக் கற்பழித்தல், களவாடுதல் போன்ற உடலால் ஏற்படும் வேகங்களை அடக்க வேண்டும். 29

## 32. மேற்கூறிய வேகங்களை அடக்குவதனால் ஏற்படும் பயன்

உள்ளம், சொல், உடல் இவற்றால் எவ்விதப் பாவச் செயலையும் செய்யாதவன் புனிதன் எனக் கருதப்படுகிறான்.

அவன் அறம், பொருள், இன்பம் இவற்றைப் பெற்று இன்ப வாழ்வு வாழ்கிறான்.

மேலும் வீடுபேறு (மோட்சம்) பெறுவதற்கான அறத்தைச் சேர்த்துக் கொள்கிறான். 30

---

1. மானசிக வேகம் — மனதில் ஏற்படும் எழுச்சிகள்.

2. வாசிக வேகம் — சொல்லில் ஏற்படும் குற்றங்கள்.

## 33. உடல் பயிற்சியின் இலக்கணம்

உடலுக்கு உறுதியையும், வலிவையும், வளர்ச்சியையும் கொடுக்கக்கூடிய உடற்செயல்கள் யாவும் உடற்பயிற்சி எனப் படும். அதை அளவுடன் செய்ய வேண்டும். 31

## 34. உடற்பயிற்சியினால் ஏற்படும் நன்மைகள்

இலேசான தன்மை, செயலில் திறமை, உறுதி, துன்பத்தைப் பொறுத்துக்கொள்ளும் தன்மை, தோஷங்களின் குறைவு, சடராக்னி வளர்ச்சி இவை உடற்பயிற்சியினால் ஏற்படும் நன்மைகளாம். 32

## 35. அளவுக்கு மீறி உடற்பயிற்சி செய்வதனால் ஏற்படும் தீமைகள்

களைப்பு, அழற்சி, தாகம், இரத்த பித்தம், இழுப்பு, இருமல், காய்ச்சல், வாந்தி இவை அளவுக்கு மீறி உடற்பயிற்சி செய்வதினால் ஏற்படக்கூடிய தீமைகள். 33

## 36. அதிகம் செய்யத் தகாத மற்ற செயல்கள்

தேவையான உடற்பயிற்சி, சிரிப்பு, அதிகம் உரையாற்றுதல், நெடுநேரம் பயணம், புணர்ச்சி, கண் விழித்தல் ஆகியவற்றையும் அறிவாளி அதிக அளவில் செய்யக்கூடாது. 34

## 37. செய்யத் தகாத மற்ற செயல்களை அதிகமாகச் செய்வதனால் ஏற்படும் தீமைகள்

மேற்கூறிய செயல்கள், வேறு மற்ற செயல்கள் இவற்றை அதிக அளவில் (தனது வலிவுக்கு மீறி) செய்வதினால் யானையை இழுக்க முயலும் சிங்கத்தைப்போல் உடனே இறக்கிறான். 35–36

## 38. நல்லதை நாடுவது, தீயதை விட்டு விடுவது இவற்றின் முறை

மனிதன் பழக்கப்படுத்திக் கொண்ட தீமை தரும் செயல்களை சிறிது சிறிதாக விலக்கிக்கொண்டு நல்லதை முறையே சேர்த்துக் கொள்ள வேண்டும் என்ற இதன் முறை இங்கு கூறப்படுகிறது.

விலக்குதல், சேர்த்துக் கொள்ளுதல் என்பது, தீங்கு தரும் செயல்களை முதல் நாள் மிகச் சிறிதளவு விலக்கி, அதற்குச் சம அளவு நல்லதைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு ஒரு

1. உடலின் வேகங்கள் – உடலினால் ஏற்படும் குற்றங்கள்.

நாள், இரண்டு நாள், அல்லது மூன்று நாள் இடைவெளி விட்டு இதைப் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். 37

இப்படியே சிறிது சிறிதாக தீதை நீக்கி நல்லதையே பயன் படுத்திக் கொள்கின்ற மனிதர்களை தீமை அண்டுகிறதில்லை. அப்பழக்கம் அவனை உறுதியாகவும் செய்கிறது. 38

## 39. பிறவி முதல் நோயற்றவர்களும், நோயுற்றவர்களும்

சிலர் பிறவி முதல் வாதம், பித்தம், கபம் இவை சம அளவு உள்ளவர்களாக இருக்கிறார்கள். சிலர் வாதம் அதிகமுள்ளவர் களாகவும், சிலர் பித்தம் அதிகமுள்ளவர்களாகவும், சிலர் கபம் அதிகம் உள்ளவர்களாகவும் காணப்படுகின்றனர். 39

வாத பித்த கபம் சமமாக உள்ளவர்கள் நோயற்றவர்கள் எனவும், மற்றவர்கள் (வாதம், பித்தம், கபம் சமமாக இல்லா லாதவர்கள்) எப்பொழுதும் நோயுள்ளவர்கள் என்றும் கருதப் படுகின்றனர்.

அதிக அளவில் தோஷம் உள்ளதைக் குறித்து உடல் இயல்பு குறிக்கப்படுகிறது. 40

அதிக அளவில் வாதம், பித்தம், கபம் உள்ளவர்கள் அந்த தோஷங்களுக்கு எதிரிடையானவற்றைப் பயன்படுத்துவது ஆரோக் கியத்திற்குச் சிறந்தது.

சமநிலையில் வாதம், பித்தம், கபம் என்ற 1. தாதுக்கள் உள்ளவர்கள் எல்லாச் சுவைகளையும் வழக்கப்படுத்திக் கொள் வது சிறந்தது. 41

## 40. மலம் வெளிவரும் வழிகள்

சிறுநீர் கழிக்கும் துவாரம், மலம் கழிக்கும் துவாரம் இரண் டும் உடலின் கீழ்ப் பகுதியில் உள்ளவை.

---

1. தாதுக்கள் – கேடு அடையாமல் இயற்கை நிலையில் இருக்கும் வாதம், பித்தம், கபம் இம்மூன்றும் தாதுக்கள் என அழைக்கப்படுகின்றன.

கேடடைந்த தாதுக்கள் தோஷங்கள் எனக் குறிப் பிடப்படுகின்றன.

கண்கள் இரண்டு, காதுகள் இரண்டு, மூக்கின் துவாரங்கள் இரண்டு, வாய் ஆக ஏழு துவாரங்கள் தலையில் உள்ளன. வியர்வையை வெளிப்படுத்தும் மயிர்க் கால்கள் ஆக இவையனைத்தும் மலங்கள் வெளிவருவதற்கு ஆன வழிகள் ஆகும். கேடடைந்து அதிக அளவில் மலங்கள் வெளிவருவதால் அவை வெளிவரும் துவாரங்களும் கேடடைகின்றன.

மலம் வெளிவரும் துவாரங்கள் பளுவாக இருந்தாலும் மலங்கள் தடைபட்டாலும், மலம் அதிக அளவில் தங்கியிருக்கிறது என்பதை அறிந்துகொள்ள வேண்டும். அதேபோல் மலம் வெளிவரும் துவாரங்கள் இலேசாக இருந்தாலும் மலம் அதிகமாக வெளிப்பட்டிருந்தாலும் மலம் குறைவாக உள்ளது என அறியவும் 42–43

## 41. மல வளர்ச்சி, குறைவு இவற்றால் உண்டாகும் நோய்களுக்கு மருத்துவம்

மல வளர்ச்சி, குறைவு இவற்றால் ஏற்படும் நோய்களின் தோஷங்கள் இலக்கணம் இவற்றையறிந்து நீக்கக்கூடிய நோய்களை காலம், அளவு இவற்றை யோசித்து நோய்க்குக் காரணம், நோய் இந்த இரண்டிற்கும் எதிரிடையானதான உணவு, பழக்க வழக்கங்களால் சிகிச்சை செய்ய வேண்டும். 44

## 42. ஆரோக்கிய வாழ்விற்குக் காரணம்

ஆரோக்ய வாழ்விற்கான முறைகளை எவ்விதத்திலும் கடைபிடிக்காதவர்களுக்கு மல வளர்ச்சி, குறைவு இவற்றால் தோன்றும் நோய்களும், மற்ற நோய்களும் ஏற்படுகின்றன. ஆகையால் ஆரோக்கியத்துடன் வாழ விரும்புபவர்கள் அதற்கான முறைகளைக் கடைபிடிக்க வேண்டும். 45

## 43. தோஷங்களை அகற்றுவதற்கான காலம்

குவிந்து கிடக்கும் கபதோஷத்தைச் சித்திரை மாதத்திலும், குவிந்துள்ள வாத தோஷத்தைப் புரட்டாசி மாதத்திலும், பித்த தோஷத்தை மார்கழி மாதத்திலும் வெளிப்படுத்த வேண்டும். 46

தோஷங்கள் நீங்கிய பின் எப்பொழுதும் எண்ணெய் சிகிச்சையினால் நைப்புத் தன்மையுண்டாக்கி வியர்வை சிகிச்சை செய்து தூய உடலை உடைய நோயாளிகளுக்கு முதலில் வாந்திக்கும், பிறகு பேதிக்கும் கொடுக்க வேண்டும். பிறகு கஷாய வஸ்தி, எண்ணெய் வஸ்தி இவற்றைச் செய்து, பிறகு மூக்கில் மருந்திடும்

சிகிச்சையை (நஸ்ய கர்ம) அறிவாளியான மருத்துவன் செய்ய வேண்டும். இதன்பின் காலத்தை அறிந்த மருத்துவன் முறைப் படி தகுந்தவாறு ரசாயன முறைகளையும், ஆண்மை வளர்ச்சிக் கான மருந்துகளையும் பயன்படுத்த வேண்டும். 47–48

இவ்வாறு மேற்கூறப்பட்ட முறைகளைக் கடைபிடிப்பத னால் வாதம், பித்தம், கபம், ரசம், இரத்தம் போன்ற தாதுக்கள் இயற்கை நிலையை அடைகின்றன. அதனால் தாதுக்களின் கோளாற்றால் ஏற்படுகின்ற நோய்கள் தோன்றுவதில்லை. தாதுக் கள் வளர்ச்சியடைகின்றன. காலமற்ற காலத்தில் முதுமை ஏற்படு வதில்லை. 49

தானாக வருகின்ற நோய்கள் ஏற்படாமலிருக்க முற்கூறிய முறைகள் காண்பிக்கப்பட்டன.

1. ஆகந்துகம், 2. மானசிகம் போன்ற நோய்கள் வராதிருக்க தனியாக வழி கூறப்படும். 50

## 44. எதிர்பாராதவிதமாகத் தோன்றும் நோய்களுக்குக் காரணம்

பிசாசுபிடித்துக்கொள்ளுதல் (பூதம்) நஞ்சு அருந்துதல், புயற் காற்று வீசுதல், நெருப்புப் பிடித்துக்கொள்ளுதல், அடிபடுதல் இவற்றால் ஏற்படுகின்ற நோய்களுக்கு ஆகந்துகம் எனப் பெயர். இவற்றிற்குக் காரணம் மதிக்குற்றமேயாகும். 51

பொறாமை, வருத்தம், அச்சம், சினம், மானம், வெறுப்பு இவை போன்ற மனக்கோளாறுகள் மானசிகம் எனப்படும். இவற் றிற்கும் காரணம் மதிக்குற்றமேயாகும். 52

## 45. ஆகந்துக நோய்கள் வராமல் தடுப்பதற்கான வழிகள்

மனக் கோளாறுகளை விலக்கி விடுதல், புலன்களைத் தன்வச மாக வைத்துக் கொள்ளுதல், நினைவாற்றலை நன்னிலையில் வைத்தல், தேசம், காலம், ஆத்ம ஞானம் இவற்றை நினைத்துப் பார்த்தல், நன்னடத்தையைக் கடைபிடித்தல் என இவையாவும் ஆகந்துக நோய்கள் வராமல் தடுக்கும் வழிகள். அறிவாளியான வன் நோய் உண்டாவதற்கு முன்பே தனக்கு நன்மை உண் டாக்கும் செயலைக் கடைபிடிக்க வேண்டும். 53–54

---

ஆகந்துகம் – எதிர்பாராத வகையில் உண்டாவது.

மானசிகம் – உள்ளத்தில் தோன்றுவது.

## 46. சான்றோர் வாக்கின் பயன்

நோய்கள் வராமல் தடுப்பதற்கும், வந்தநோய்கள் தணிவதற்கும் சான்றோர் வாக்கை அறிந்துகொண்டு பின்பற்றுதல் நலமாகும். 55

## 47. சேரத் தகாதவர்கள்

செயல், சொல், மனம் இவற்றால் பாவச் செயல்களை உடையவர்கள், கோள் சொல்கிறவர்கள், கலகத்தைத் தோற்றுவிப்பவர்கள், மர்மத்தைப் பிளக்கும் பரிகாசச் சொற்கள் சொல்கிறவர்கள், பேராசையுள்ளவர்கள், மற்றவர்களின் முன்னேற்றத்தைப் பொறுக்காதவர்கள், தீயவர்கள், பிறரைத் திட்டுவதிலேயே எப்பொழுதும் ஈடுபட்டவர்கள், உறுதியற்ற அறிவுடையவர்கள், பகைவனை அண்டிப் பிழைப்பவர்கள், கருணையற்றவர்கள், தர்மச் செயல்களை விட்டவர்கள் என இந்தக் கீழ்த்தரமான மனிதர்கள் சேரத் தகாதவர்களாக எண்ணப்படுவர். 56—57

## 48. சேரத் தகுந்தவர்கள்

அறிவு, கல்வி, வயது, நடத்தை, தைரியம், நினைவாற்றல், புலனடக்கம் இவை உள்ளவர்கள், முதியவர்களுக்குப் பணிவிடை செய்பவர்கள், முதியவர்கள், பிறருடைய மனக்கருத்தை அறிந்தவர்கள், உடல், மனம் இவற்றால் துன்பமற்றவர்கள், உள்ளங்கவர்பவர்கள், அமைதியான உள்ளம் உடையவர்கள், சொன்ன சொல் தவறாதவர்கள், எல்லா இனத்தவர்களுக்கும் பார்ப்பதாலும், சரிதத்தைக் கேட்பதாலும் புண்யத்தை உண்டாக்குகின்ற நல்லோர்கள் என இவர்கள் யாவரும் சேரத்தகுந்தவர்கள். 58—59

## 49. எப்பொழுதும் நல்லனவற்றையே பயன்படுத்த வேண்டும்

இம்மையிலும், மறுமையிலும், இன்பத்தை விரும்புகிற அறிவாளி உணவு, பழக்க வழக்கம், எல்லாவகைச் செயல்கள் இவற்றில் நன்மை தருபவற்றை முற்றிலும் செய்ய முயற்சிக்க வேண்டும். 60

## 50. தயிர் அருந்தும் முறை

இரவில் தயிர் பருகக்கூடாது. நெய், சர்க்கரை, பயத்தம் பருப்புக் கஞ்சி, நெல்லிக்கனியின் கஞ்சி, தேன் இவற்றைச் சேர்க்காமல் தயிர் அருந்தக்கூடாது. தயிரைச் சூடாக்கியும் அருந்தக்கூடாது. 61

## 51. முறை தவறி த்யிர் பருகுவதனால் ஏற்படும் தீமைகள்

தயிர் பருகுவதற்குக் கூறப்பட்ட முறைகளை விட்டுத் தன் விருப்பப்படி தயிர் அருந்துபவனுக்குக் காய்ச்சல், இரத்த பித்தம், அக்கி, குஷ்டம், பாண்டு, தலைச்சுற்றல், கடுமையான காமாலை நோய் இவை ஏற்படும். 62

### முடிவுரை

ஆத்ரேய மாமுனிவர் இந்த 'நவேகான் தாரயேத்' என்ற அத்தியாயத்தில் வேகங்கள், அவற்றை அடக்குவதினால் ஏற்படும் நோய்கள், அவற்றிற்கான சிகிச்சை, அடக்க வேண்டிய வேகங்கள், குறிப்பிட்டவர்களுக்கு நன்மை பயக்கக்கூடிய பொருட்கள், நன்மை பயக்காத பொருட்கள், தேவையான பொருட்களைப் பழக்கப்படுத்திக் கொள்ளுதல், தேவையற்ற பொருட்களை விட்டு விடுதல், அவற்றின் முறை உடல்நிலைக்கு ஏற்றவாறு பொருட் களைச் சேர்த்துக் கொள்ளுதல், மலங்கள் செல்லும் வழிகள், அவற்றில் தோன்றும் பிணிகளுக்கு மருத்துவம், நோய் உண்டாகா மலிருப்பதற்கான முறைகள், அப்படி உண்டானால் அவற்றைப் போக்கும் மருந்துகள், தம் நலனை விரும்புகின்றவர்களால் சேரத் தகுந்தவர்கள், சேரத் தகாதவர்கள் இவர்களைப் பற்றிய விவரம், தயிர் பருக வேண்டிய முறை இவை எல்லாம் வருணிக்கப்பட் டுள்ளன. 63

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரக மாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ர
ஸ்தானத்தில் நவேகான் தாரணீயம் எனும்
ஏழாம் அத்தியாயம் முற்றும்.

## எட்டாம் அத்தியாயம்

## *இந்திரியோபக்ரமணீயம்

''இந்திரியோபக்ரமணீயம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1-2

### 1. ஐந்து ஐந்துக்களின் விளக்கம்

(1) செவிப்புலன், மெய்ப்புலன், கட்புலன், சுவைப்புலன், நுகர்ப் புலன் என ஐந்தும் அறிவுப்புலன்கள்.

(2) முறையே அவ்வறிவுப் புலன்களால் அறியப்படும் பொருள் களாவன: ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் என்பன.

(3) இவ்வறிவுப் புலன்களின் இருப்பிடங்கள் செவி, மெய், கண், நாக்கு, மூக்கு என்பன.

(4) அவற்றின் பொருள்கள் ஒலி, தொடு உணர்வு, உருவம், சுவை, மணம் என்பன.

(5) அவ்வைந்து அறிவுப் பொருட்களின் அறிவுகள், ஒலியறிவு, தொடு உணர்வு, உருவ அறிவு, சுவையறிவு, மண அறிவு என்பன. 3

### 2. மனத்தின் இலக்கணம்

மனம் என்பது அறிவுப் புலன்களால் அறிய முடியாதது. இது உட்புலனாகும். இம்மனம் ஆன்மாவிற்கு கட்டுப்பட்டது. அதன் செயல்கள் அனைத்தும் ஆன்மாவைப் பொறுத்தது. அறிவுப் புலன்கள், தம்தம் பொருள்களை அறிய அடிப்படைக் காரணமாக ஆவது இதேயாகும். 4

*இந்திரியோபக்ரமணியம்— ஒருவனுடைய ஆரோக்கியம், அவனுடைய உணவு, நன்னடத்தை பழக்கவழக்கங்கள் இவற்றைப் பொறுத்துள்ளது. இவற்றை உடல் நலனுக்குப் பயன்படுத்தக் காரணமான புலன்களைப் பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

### 3. மனம் ஒன்றே

ஒரு மனிதனுடைய மனம், தம் பொருள்களாகிய சிந்தனை, ஊகம் முதலிய பல பொருட்களினாலும், கட்புலன் போன்ற அறிவுப் புலன்களின் பல்வேறு பொருள்களான உருவம் போன்ற வற்றாலும், விருப்பத்தாலும், ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற முக் குணங்களினாலும் பலவாகக் கருதப்படுகிறது.

ஆனால் உண்மையை ஆராய்ந்து பார்த்தால் அம் மனம் ஒன்றே. அணுவும்கூட, அது ஒன்றாகவும், அணுவாகவுமிருக்கும் காரணத்தினால்தான் ஒரே நேரத்தில் பல பொருட்களை ஏற்றுக் கொள்வதில்லை.

எனவே அறிவுப் புலன்கள் ஐந்துக்கும் ஒரே நேரத்தில் மனத் தின் தொடர்பு இல்லாமையால் எல்லாப் பொருட்களையும் ஒரே நேரத்தில் அறிய முடிவதில்லை. 5

மனிதனுடைய மனத்தில் மிகுதியாகவும், இடைவிடாமலும் இருக்கின்ற ஸத்வம் முதலிய குணங்களைக் கொண்டு அந்த குணத் தின் பெயரால் முனிவர்கள் அழைத்தார்கள். 6

மனதை முன்னிட்டுக் கொண்டுதான் புலன்கள் தங்களுக்குரிய பொருட்களை ஏற்றுக்கொள்வதில் திறமை உள்ளவைகளாக ஆகின்றன. 7

### 4. ஐந்து புலன்

கண், காது, மூக்கு, நாக்கு, மெய் என இவை ஐந்து புலன் கள். 8

### 5. ஐந்து புலப் பொருட்கள்

ஆகாயம், காற்று, ஒளி, நீர், நிலம் இவ்வைந்தும் முறையே ஐந்து புலன்களும் சார்ந்துள்ள பொருட்களாகும். 9

### 6. ஐந்து புலன்களின் இருப்பிடம்

இரண்டு கண்கள், இரண்டு காதுகள், மூக்கு துவாரங்கள் இரண்டு, நாக்கு, மெய் இவை ஐந்து புலன்களின் இருப்பிட மாகும். 10

### 7, ஐந்து புலன்களுக்குப் புலப்படுபவை

ஒலி, தொடு உணர்ச்சி, உருவம், சுவை, மணம் இவ்வைந்தும் ஐந்துபுலன்களுக்குப் புலப்படுபவை. 11

## 8. ஐந்து புலன்களின் அறிவு

ஐந்து புலன்களால் தோன்றும் அறிவுகள், மனம், ஆத்மா இவற்றின் சேர்க்கையினால் உண்டாகின்றன. அவை சில நிமிடங்களே இருக்கக்கூடியவை, நிலைத்து நிற்கக்கூடியவை என இருவகைப்படும். 12

இவ்விதம் ஐந்து ஐந்துகள் விளக்கப்பட்டுள்ளன.

## 9. [1]அத்யாத்ம திரவியங்கள், குணங்கள் இவற்றின் விளக்கம்

மனம், ஆன்மா, இவ்விரண்டும் அத்யாத்ம திரவியங்கள் (பொருட்ள்க), மனதிற்கு இலக்கான, பார்த்தல், கேட்டல், நுகர்தல், சுவையறிதல், தொடு உணர்ச்சி இவ்வைந்தும் அத்யாத்ம குணங்கள். இவைதான் மனிதர்களை நற்செய்கைகளிலும், தீய செயல்களிலும் ஈடுபடுத்துவதோடு தடுத்து நிறுத்தவும் செய்கின்றன.

இதேபோல் அத்யாத்ம திரவியமான ஆத்மாவைச் சார்ந்திருக்கும் செயல்களும் மனிதர்களை நற்செயல்களிலும், தீய செயல்களிலும் ஈடுபடுத்துவதுடன் தடுத்தும் நிறுத்துகின்றன. 13

## 10. அநுமானத்தினால் அறியக் கூடியவை

அநுமானத்தினால் (ஊகம்) அறியக்கூடிய எல்லாப் புலன்களின் பொருட்களும் ஐந்து மகா பூதங்களின் கூட்டுச் சேர்க்கையைப் பெற்றிருந்தபோதிலும், கண் ஐம்பெரும் பூதங்களில் ஒன்றான நெருப்பு எனும் பூதத்தை முக்கியமாகக் கொண்டது. காது ஆகாயத்தையும், மூக்கு நிலத்தையும், நாக்கு நீரையும், மெய் காற்றையும் முக்கியமாகக் கொண்டவை. ஒவ்வொரு ஐம்பெரும் பூதமும், ஒவ்வொரு புலனில் முக்கியமாக உள்ளது. அந்தப் புலன் எந்த எந்த ஐம்பெரும் பூதத்தினால் ஆக்கப்பட்டுள்ளதோ அந்த பூதத்தின் விஷயங்களை ஏற்றுக்கொள்கிறது. ஏனென்றால் இது அந்தந்தப் புலன்களின் இயற்கையாகும்.

விபு என்பதாலும் (விபு – ஆற்றல்) புலன்கள் தங்கள் விஷயங்களை ஏற்றுக்கொள்கின்றன. 14

---

1. அத்யாத்ம திரவியங்கள் – ஆத்மாவுடன் தொடர்புள்ள பொருட்கள்.

## 11. [1]அதியோகம், [2]அயோகம், [3]மித்யாயோகம், [4]ஸமயோகம் இவற்றில் புலன்களின் மாறுபாடு

புலன்களுடைய விஷயங்களுக்கு அதியோகம், அயோகம், மித்யாயோகம் ஏற்படுவதினால் மனமும், புலன்களும் கேடடைகின்றன. அறிவும் அழிந்துவிடுகிறது. புலன்களுடைய விஷயங்களுக்கு ஸமயோகத்தில் மனமும் புலன்களும் சம நிலையில் இருக்கின்றன. அறிவும் வளர்கிறது. 15

## 12. மனதினால் ஏற்கக் கூடியவை

சிந்தனை (யோசிப்பது) மனத்தின் செயலாகும். சிந்தனையில் மனமும், மனதில் புலனாகும் பொருளும் ஒரே நிலையிலிருந்தால் அது ஆரோக்கியத்திற்குக் காரணமாக ஆகிறது. இதுவே ஸமயோகமாகும்.

சிந்தனையில் மனத்துடன் அதியோகம், [5]ஹீனயோகம், மித்யாயோகம் இவை ஏற்பட்டால் மனநோய்கள் ஏற்படுகின்றன. எனவே மனதையும் புலன்கள் அனைத்தையும் நல்ல நிலையில் வைத்து தீமையிலிருந்து காப்பாற்ற முயற்சிக்க வேண்டும். உதாரணமாக, புலன்கள் ஏற்கக்கூடிய பொருள்கள் மூலமாக நன்கு ஆராய்ந்து செயல்களைத் தகுந்த முறையில் செய்ய வேண்டும். 16

மேலும் தவிர்க்கமுடியாதபோது புலன்களுக்குத் தகாத பொருள்களுடன் சேர்க்கை ஏற்பட்டால் இடம், காலம், ஆத்மா உடலில் உண்டாகும் மாறுதல் இவற்றிற்கு எதிரிடையான உணவு, செயல்வகைகளைப் பின்பற்ற வேண்டும். ஆதலால் நலனை விரும்பும் அனைவரும் எல்லாவற்றிலும் எப்பொழுதும் நினைவாற்

---

1. அதியோகம் – புலன்களுக்கு பொருட்களுடன் அதிக அளவில் தொடர்பு.
2. அயோகம் – புலன்களுக்கு பொருட்களுடன் தொடர்பு அற்றுப் போதல்.
3. மித்யாயோகம் – புலன்களுக்கு பொருட்களுடன் தாறு மாறாகத் தொடர்பு ஏற்படுதல்.
4. ஸமயோகம் – புலன்களுக்கு பொருட்களுடன் சமமான தொடர்பு.
5. ஹீனயோகம் – புலன்களுக்கு பொருட்களுடன் குறைந்த அளவில் தொடர்பு.

றலைக் கவனமாக வைத்துக்கொண்டு நன்னடத்தையைக் கடைபிடிக்க வேண்டும். 17

## 13. நன்னடத்தையைக் கடைபிடிப்பதனால் ஏற்படும் பயன்

நன்னடத்தையைக் கடைபிடிப்பதனால் ஒரே சமயத்தில் ஆரோக்கியம், புலன்களை வெற்றி பெறுதல் என இவ்விரண்டையும் மனிதன் அடைகிறான்.

அக்னிவேசனே, அந்த நன்னடத்தையை முழுமையாக் உபதேசிக்கிறோம். கேள்.

தேவர்கள், பசுக்கள், அந்தணர், ஆசிரியர், முதியவர், சித்தர், குலகுரு, அக்னி இவர்களை வழிபட வேண்டும். சிறந்த மூலிகைகளை வைத்துக்கொள்ள வேண்டும். காலை மாலை இரு வேளைகளிலும் நீராடி அன்றாடக் கடன்களை முடிக்க வேண்டும்.

மலத்துவாரங்களையும், கால்களையும் எப்பொழுதும் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். பதினைந்து நாட்களுக்கு மும்முறை முடி, மீசை, தாடி, உரோமம், நகம் இவற்றை நீக்க வேண்டும்.

நாள்தோறும் தூய ஆடை அணிந்து தெளிந்த உள்ளத்துடன் மணமுள்ள பொருட்களைப் பயன்படுத்தி அழகான தோற்றமுடையவனாகக் காட்சியளிக்க வேண்டும்.

ஒவ்வொரு நாளும் தலைமுடியை சீப்பினால் வாரி, தலை, காது, மூக்கு, கால் இவற்றில் எண்ணெய் தடவிக்கொண்டு பருவகாலத்தில் கூறியுள்ளபடி புகைபிடிக்க வேண்டும்.

தன்னை நாடி வருபவர்களிடம் முந்திக்கொண்டு பேசி, தெளிந்த முகமுடையவனாயிருக்க வேண்டும். பிறருக்கு விபத்து ஏற்பட்டால் அவரிடம் கருணை காட்ட வேண்டும். ஹோமம், வேள்வி இவற்றைச் செய்ய வேண்டும்.

தன் நிலைக்கேற்றவாறு தானம் செய்ய வேண்டும். நாற்சந்திகளை வணங்க வேண்டும். நாய், பறவை போன்ற பிராணிகளுக்கு உணவிட வேண்டும். எதிர்பாராமல் வீட்டிற்கு வரும் விருந்தாளிகளை உபசரிக்க வேண்டும். இறந்த முன்னோர்களுக்குச் சடங்கு செய்ய வேண்டும்.

காலத்திற்கேற்றவாறு நன்மை பயக்கக்கூடியதாகவும், இனிமையாகவும், அளவுடனும் பேசுதல், புலன்களை அடக்குதல், அறம் செய்வதில் ஈடுபாடு, பிறருடைய முன்னேற்றத்திற்குக்

காரணமானவற்றில் முழு முயற்சி எடுத்தல், ஆனால் அவற்றின் பயனில் ஆசைப்படாமை, கவலையின்மை, பயமின்மை, வெட்கம், அறிவு, உற்சாகம், திறமை, பொறுமை, தர்மசிந்தனை, கடவுள் நம்பிக்கை ஆகியவற்றைக் கடைபிடிக்க வேண்டும்.

வணக்கமுள்ளவர்கள், அறிவிற் சிறந்தவர்கள், கல்வி கற்றவர்கள், நற்குடியில் பிறந்தவர்கள், வயது முதிர்ந்தவர்கள், சித்தர்கள், குலகுருமார்கள் இவர்களை வணங்குபவர்களாக இருக்க வேண்டும்.

வழி நடக்கும்போது குடை, தடி, எடுத்து தலைப்பாகை சூட்டி, காலணி அணிந்து, நான்கு கை அளவு தூரம் பார்வையைச் செலுத்திக்கொண்டு நடக்க வேண்டும்.

கிழிந்த துணி, எலும்பு, முள், மலம், மயிர், உமி, கூழாங்கல், சாம்பல், மண்டை ஓடு, நீராடும் படித்துறை, பலியிடுமிடம் இவ்விடங்களை விட்டு விலகிச் செல்ல வேண்டும்.

உடல் தளர்ச்சி ஏற்படுமுன் உடற்பயிற்சியை நிறுத்திவிட வேண்டும். எல்லா உயிரினங்களிடத்தும் அன்பு செலுத்த வேண்டும். சினமுள்ளவனைப் பணிவினால் தெளிவடையச் செய்ய வேண்டும்.

பயந்தவர்களுக்கு ஆறுதல் அளித்து, ஏழை எளியவர்களுக்கு உதவி செய்து உண்மையான உறுதிமொழியுடையவனாகவும், அமைதியுள்ளவனாகவும் இருக்க வேண்டும். பிறருடைய கடுஞ்சொற்களைப் பொறுக்கும் மனோபாவத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

சினமடக்கி, அமைதியைக் கடைபிடித்து, ஆசை, வெறுப்பு இவற்றைத் தோற்றுவிக்கும் காரணங்களைத் தவிர்த்து நடக்க வேண்டும். 18

## 14. செய்யத் தகாதவை

பொய் பேசக்கூடாது. பிறர் பொருளையும், பதவியையும் அபகரிக்கக்கூடாது. பிற பெண்டிரை விரும்பக்கூடாது. மற்றவர் பொருட்களை அடைய விருப்பம் கொள்ளலாகாது. பகைமையை விரும்பக்கூடாது. பாவச் செயல்களில் ஈடுபடக்கூடாது. பாவச் செயல்களில் ஈடுபட்டவனிடமும் பாவச் செயல்களைச் செய்யக் கூடாது. பிறரிடமுள்ள குற்றங்களைக் கூறக்கூடாது. பிறருடைய ரகசியங்களை வெளிப்படுத்தாமல் இருத்தல் வேண்டும்.

தர்மச் செயலற்றவன், அரசனின் பகையாளி, பைத்தியம் பிடித்தவன், கீழ்த்தரமானவன், கருச் சிதைத்தவன், ஈனத் தொழில் புரிபவன், கொடுந்தொழில் புரிபவன் இவர்களுடன் அமரக்கூடாது.

வெறிபிடித்த குதிரை, யானை, முரட்டுக்காளை பூட்டிய அல்லது உடைந்த வண்டியில் ஏறக்கூடாது.

முழங்கால் அளவுள்ள கடினமான இருக்கையில் அமரக் கூடாது. விரிப்பு அற்றதும், தலையணையற்றதும், அகலமற்ற தும், மேடு பள்ளம் உள்ளதுமான படுக்கையில் படுக்கக் கூடாது.

மேடு பள்ளமுள்ள மலைச் சிகரங்களில் சுற்றித் திரியக்கூடாது. மரத்தின்மேல் ஏறக்கூடாது. பயங்கரமாகப் பெருகி ஓடும் நீரில் மூழ்கி நீராடக்கூடாது. நெருப்புப் பிடித்துள்ள இடத்தின் அருகில் செல்லக்கூடாது. வாய்விட்டு உரக்கச் சிரிக்கக்கூடாது. ஒலியுடன் கீழ்நோக்கிச் செல்லும் காற்றை வெளியிடக்கூடாது.

முகத்தை மூடாமல் கொட்டாவி விடுதல், தும்முதல், சிரித் தல் இவற்றைச் செய்யக்கூடாது. மூக்கை விரலால் குடையக் கூடாது. பற்களை நறநறவென்று கடிக்கக்கூடாது. நகங்களில் ஒலி எழுப்பக்கூடாது. கைகால் விரல்களைச் சொடுக்கக்கூடாது. தரையில் நகத்தினால் கீறக்கூடாது. பற்களைப் பற்களால் கடிக்கக் கூடாது. சட்டி ஓடுகளை உடைக்கக்கூடாது. வீணாக உடல் உறுப்புகளை முறுக்கி வளைக்கக்கூடாது.

ஒளிவீசும் பொருட்கள், மனதிற்குப் பிடித்தமில்லாதவை, தூய்மையற்றவை, கெட்டவை ஆகிய பொருட்களைப் பார்க்கக் கூடாது.

பிணத்தைப் பார்த்து ஹூம் என்று ஒலி எழுப்பக்கூடாது.

கிராமத்திலுள்ள முக்கியமான மரம், கொடி, குரு, மற்ற மரியாதைக்குரியவர்கள் இவர்கள் நிழலைத் தாண்டக்கூடாது.

கோயில், நாற்சந்தியில் உள்ள மரம், யாகசாலை, சத்திரம், சிறு தோட்டம், இடுகாடு, கொலைக்களம் இவற்றில் தங்கக் கூடாது.

பாழடைந்த வீடு, அடர்ந்த காடு இவற்றில் தனியாகச் செல்லக்கூடாது.

பாவச் செயல்களைச் செய்கின்ற பெண்டிர், நண்பன், வேலைக்காரன் இவர்களைத் தன்னிடம் வைத்துக்கொள்ளக் கூடாது.

நல்லோர்களுடன் பகைமை கொள்ளக்கூடாது. தாழ்ந்தவர்களிடம் பணிபுரியக்கூடாது.

நேர்மையற்ற செயல்களில் விருப்பம் கொள்ளக்கூடாது. கெட்ட மனிதர்களை அண்டிப் பிழைக்கக்கூடாது. மற்றவர்களுக்கு அச்சத்தை விளைவிக்கக்கூடாது.

மிகத்துணிச்சலான செயல், அதிகத் தூக்கம், மிகவும் கண் விழித்தல், அதிக நேரம் நீராடுதல், அதிகமான குடிதண்ணீரோ, கள்ளோ, உணவோ அருந்தக்கூடாது.

வெகுநேரம் முழங்கால்களைத் தூக்கியவாறு தலைகீழாக இருக்கக்கூடாது. உயிருக்கு துன்பம் விளைவிக்கும் பிராணிகள், கோரைப் பற்களுள்ள பிராணிகள், கொம்புள்ள பிராணிகள் இவற்றின் அருகில் செல்லக்கூடாது. எதிர்காற்று, வெயில், பனித்துளி, சுழற்காற்று இவற்றை விலக்கிவிடவேண்டும். சண்டையிடக் கூடாது. நிலைத்த மனமின்றி அக்னியை வழிபடக்கூடாது. பரிசுத்தமில்லாமல் நெருப்பை வழிபடக்கூடாது. நெருப்பைக் கீழே வைத்து உடலுக்கு சூடு உண்டாக்கிக் கொள்ளக்கூடாது.

களைப்பாற்றிக் கொள்ளாமல், முகம் கழுவாமல், ஆடையின்றி நீராடக்கூடாது. நீராடும்போது உடுத்திக்கொண்ட துணியால் தலை துவட்டிக்கொள்ளக்கூடாது.

கேசத்தின் நுனிப் பகுதியை கையினால் தட்டக்கூடாது. நீராடியபின் அதே ஈரத்துணியை மறுபடியும் உடுத்தக்கூடாது. ரத்னம், நெய், பூசைக்குரிய பொருள், மங்கலப் பொருள், மலர் போன்றவற்றைத் தொடாமல் வீட்டிலிருந்து வெளியில் கிளம்பக் கூடாது.

பூஜைக்கு உரிய தேவதை, குரு போன்ற மங்களப் பொருட்களை வலதுபக்கமாகவும், மங்களமில்லாப் பொருட்களை இடது பக்கமாகவும் வைத்து செல்லக்கூடாது. 19

## 15. உணவு உண்ணும் முறை

கையில் இரத்தினமணியாமல் நீராடாமல், கந்தல் துணி உடுத்திக்கொண்டு காயத்ரி போன்ற மந்திரங்களை உருப்போடாமல் ஹோமம் செய்யாமல், தேவதைகளுக்கு அர்ப்பணம் செய்யாமல், தாய் தந்தையர்களுக்கு அன்னமிடாமல், குருமார்கள், விருந்தாளிகள், தன்னைச் சார்ந்தவர்கள் இவர்களுக்கு உணவளிக்காமல், உணவருந்தக்கூடாது.

மணம் வீசும் பொருட்களைப் பூசிக்கொள்ளாமல், மலர் அணியாமல், கைகால்கள் முகம் சுத்தம் செய்துகொள்ளாமல் வாய் சுத்தம் இல்லாமல் வடக்கு முகமாகவோ, வேறு மனத்துடனோ உணவருந்த வேண்டாம்.

தன்னிடம் விருப்பம் கொள்ளாதவன், நற்பழக்கமற்றவன், தூய்மை அற்றவன், பசியுள்ள பணியாளன் இவர்களால் கொண்டு வரப்பட்ட உணவை உட்கொள்ளாதே.

சுத்தமில்லாப் பாத்திரங்களில், தூய்மையற்ற இடங்களில், காலமில்லாக் காலத்தில் ஜனக் கூட்டமுள்ள இடங்களில் உணவு உண்ணாதே.

ஹோமம் செய்யாமல், புரோக்ஷணம் செய்யாமல், புரோக்ஷணம் செய்யும் நீரினால் மந்திரம் சொல்லி வழிபடாமல் உண்ணக் கூடாது. அன்னத்தைப் பழித்துக்கொண்டு உண்ணக்கூடாது. அருவருப்புத் தரக்கூடியதும், எதிரியால் கொண்டுவரப்பட்டதுமான உணவை உண்ணக்கூடாது.

புலால், இஞ்சி, பச்சைக் கீரை வகை, உலர்ந்த காய்கறிகள், பழங்கள், தின்பண்டங்கள் இவற்றைத் தவிர மற்ற ஊசிப்போன பொருட்களை ஏற்கவேண்டாம்.

தயிர், தேன், உப்பு, சத்துமா, நெய் இவற்றைத் தவிர்த்து மற்ற உணவுப் பொருட்களை மிதமில்லாமல் உண்ணக்கூடாது. இரவில் தயிரையும், சத்துமாவை உப்பு, சர்க்கரை, தேன்போன்ற பொருட்களுடன் சேர்க்காமலும் புசிக்கலாகாது. இரவிலும், உணவு உண்ட பின்பும், அதிக அளவிலும், இரண்டுமுறை இடை இடையே நீர் பருகிக்கொண்டும், பற்களால் கடித்துக்கொண்டும் சத்துமாவைப் பயன்படுத்தல் நன்றன்று. 20

உடலைக் கோணலாக வைத்துக்கொண்டு தும்மல், உணவு உண்ணுதல், உறக்கம் இவற்றைச் செய்யக்கூடாது. மலம், சிறுநீர் இவற்றின் வேகங்கள் ஏற்பட்டபொழுது மற்ற செயல்களில் ஈடுபடுதல் சரியன்று.

## 16. மலம் கழிக்கக்கூடாத இடங்கள்

காற்று, நெருப்பு, நீர், சந்திரன், கதிரவன், அந்தணர், ஆசிரியர் போன்ற மதிப்பிற்குரியவர்களின் எதிரில் துப்பவும், மலம், சிறுநீர் கழிக்கவும் கூடாது.

நடுப்பாதை, ஜனநடமாட்டம் அதிகமுள்ள இடம் இவற்றிலும், உணவு உண்ணும் நேரத்திலும் சிறுநீர் கழிக்காதே.

ஜபம், ஹோமம், வேதம் ஓதுதல், பலி, மங்களச் சடங்குகள் இவை நடக்கும்பொழுது மூக்கைச் சிந்தவும், காரித் துப்பவும் கூடாது. 21

## 17. மகளிரிடம் நடந்து கொள்ள வேண்டிய முறை

மகளிரை அவமானப்படுத்தல், அவர்களிடம் அதிக நம்பிக்கை வைத்தல், அவர்களிடம் ரகசியத்தைச் சொல்வது, முழு அதிகாரத்தையும் அவர்களிடம் ஒப்படைத்தல் இவற்றைத் தவிர்க்க வேண்டும்.

மாதவிடாய் கண்டவள், நோயுள்ளவள், தூய்மையற்றவள், கெட்ட நடத்தையுடையவள், அருவருக்கத் தகுந்த உருவம், நடவடிக்கை உடையவள், புணர்ச்சியில் திறமையற்றவள், தனக்கு எதிரிடையான செயல்களை உடையவள், புணர்ச்சியில் விருப்பமற்றவள், வேறு ஆடவனை விரும்புகிறவள், பிற பெண்டிர் ஆகிய இவர்களுடன் புணருவதைத் தவிர்க்க வேண்டும்.

பிராணிகளின் இனம், பெண் குறி தவிர மற்ற உறுப்புகளில் புணருவது தவறு.

நிழலடர்ந்த மரத்தடி, திறந்த வெளி, நாற்சந்தி, சிறுதோட்டம், இடுகாடு, கொலைக்களம், நீரின் நடுப்பகுதி, மூலிகைப் பண்ணை, அந்தணர், ஆசிரியர், இவர்கள் வாழுமிடம், கோயில் ஆகிய இவ்விடங்களில் புணர்ச்சி செய்வதைத் தவிர்க்க வேண்டும்.

காலை, மாலை இரண்டு சந்திகள், பிரதமை, ஏகாதசி, அமாவாசை, பௌர்ணமி முதலிய திதிகளில் (நாட்கள்) மாதருடன் சேர வேண்டாம்.

புணருபவன் தூய்மையற்றவனாகவும் ஆண்மை சக்தி அளிக்கும் மருந்தை உண்ணாதவனாகவும், புணர்ச்சியில் தீர்மானமற்றவனாகவும் இருக்கக்கூடாது.

உணர்ச்சியற்ற நிலை, உண்ணாத நிலை, அதிகம் உண்ட நிலை, இவற்றில் உடலைத் தாறுமாறாக வைத்துக்கொண்டு, கலைந்து கிடக்கும் படுக்கையில், மலம், சிறுநீர், இவற்றின் வேகத்தை அடக்கிக்கொண்டும் புணரக்கூடாது.

களைப்பு, உடற்பயிற்சி, பட்டினி, சோர்வு இவற்றால் துன்புற்றவர்கள் புணரக்கூடாது.

திறந்த வெளியைப் புணர்ச்சிக்குப் பயன்படுத்தக்கூடாது. 22

## 18. மதிப்பிற்குரியவர்களை அவமானப்படுத்தக் கூடாது

நல்லவர்கள், ஆசிரியர்கள் இவர்களை இகழாமல், தூய்மை யற்ற 1. அபிசார கர்மா 2. மாரணம், 3. மோகனம், 4. உச்சா டனம் போன்ற செயல்கள் இவற்றைச் செய்யக்கூடாது. நாற் சந்தியிலுள்ள மரங்கள், தேவதைகள் இவற்றைப் பூஜிக்கக்கூடாது. இவ்விடங்களில் வேதமோதுதல் சரியன்று. 23

## 19. கற்றல், கற்பித்தல்—இவற்றிற்கான கட்டுப்பாடு

பருவமற்ற காலம், மின்னல் மின்னும் சமயம், பல்வேறு திக்கு களில் ஆபத்துக் குறிகள் தென்படும் சமயம், அருகில் நெருப்புப் பற்றிக்கொண்டபோது, பூகம்பம் ஏற்படும் சமயம், மிகப்பெரிய திருவிழா காலம், வானிலிருந்து கொள்ளிக்கட்டை விழும் சமயம், சூரிய, சந்திரகிரகணம் ஏற்படும் சமயம், அமாவாசை தினம், அன்று காலை மாலைச் சந்தி நேரம், ஆகிய காலங்களில் வேதம் ஓதுதல் கூடாது.

ஆசிரியரில்லாமலும், தன்னைவிடத் தாழ்ந்தவரிடமும் கல்வி கற்கலாகாது.

விகாரமான குரலில், முடிவில்லாமல், விரைவாகவோ, மிகத் தாமதமாகவோ, உரத்த குரலிலோ, தாழ்ந்த குரலிலோ வேதம் ஓதக்கூடாது. 24

## 20. சமுதாயத்தில் செய்யக்கூடாதவை

அதிக நேரத்தை வீணாக்காமல், கட்டுப்பாடுகளை மீறாமல், இரவில் செல்லக்கூடாத இடங்களில் அலையாமல், சந்தியா காலத் தில் உணவு உண்ணாமல் இருப்பது நலம்.

சந்தியா காலத்தில் வேதம் ஓதுதல், புணருதல், படுத்தல் ஆகியவை கூடாது. சிறுவன், முதியவர், பேராசைக்காரன், முரடன், துன்பவாழ்வு வாழ்கிறவன், அலி இவர்களுடன் நட்புக் கொள்வது நன்றன்று. கள் பருகுதல், சூதாடுதல், வேசி வீடு களுக்குச் செல்வது, ஆகியவற்றை விட்டுவிட வேண்டும். தம் இரகசியத்தையும், பிறர் ரகசியத்தையும் வெளியிடாமல், ஒரு வரையும் உதறித் தள்ளாமல், அகங்காரம் கொள்ளாமல் நடந்து கொள்வது நல்லது. தன் செயலில் கவனக் குறைவாக இருக்கா

1. அபிசாரகர்மா – மரணத்தைத் தோற்றுவிக்கும் செயல்
2. மாரணம் – கொல்வித்தல்
3. மோகனம் – மயக்கமடையச் செய்தல்
4. உச்சாடனம் – ஏவுதல்

மலும், பிறரை நிந்தனை செய்யாமலும், பொறாமைப்படா மலும், அந்தணர்களை வெறுக்காமலும், பசுவை அடிக்காமலும் இருப்பது நலம்.

முதியவர், ஆசிரியர், பஞ்சாயத்து சபை, அரசசபை இவ் விடங்களில் மறுத்துப் பேசாமல், நடந்து கொள்வதோடு உற் றார், அன்பு செலுத்துகிறவர், ஆபத்துக் காலத்தில் உதவி செய் கிறவர், தன் இரகசியத்தை அறிந்தவர் இவர்களை வீட்டிலிருந் தும் சபையிலிருந்தும் வெளியேற்றுவது நன்றன்று. 25

## 21. மனக்கட்டுப்பாடு

தைரியத்தை இழத்தல், தன் சக்திக்கு அப்பாற்பட்டவனாக இருத்தல், தன்னை அண்டினவர்களிடத்தில் இரக்கம் காட்டாம லிருத்தல், தன்னைச் சார்ந்தவர்களிடத்தில் நம்பிக்கை அற்றவ னாக நடத்தல், தான் மட்டும் இன்பம் பெற வேண்டும் என்ற எண்ணம், பிறருக்குத் துன்பம் விளைவிக்கும் செயல், எல்லோரை யும் நம்புதல், எல்லோரிடமும் சந்தேகப்படுதல், எப்பொழுதும் ஆழ்ந்த சிந்தனை ஆகியவற்றை அறவே விட்டுவிட வேண்டும். குறித்த காலத்தில் கடமையைச் செய்ய வேண்டும்.

நன்கு ஆராயாமல் ஒரு செயலிலும் இறங்கல், புலன்களுக்குக் கட்டுப்பட்டவனாக இருத்தல், குழப்பமுள்ள மனம் உடையவனாக இங்குமங்கும் திரிதல், அறிவுக்கும் புலன்களுக்கும் அதிக வேலை கொடுத்தல், செயல்களைத் தாமதப்படுத்தல், சினம், மகிழ்ச்சி இவற்றிற்குக் கட்டுப்பட்டு செயலில் இறங்கல், ஆழ்ந்த வருத்தத் தில் மூழ்கியிருத்தல், வெற்றியில் மகிழ்ச்சியும், தோல்வியில், வருத்தமும் கொள்ளல் ஆகியவற்றைத் தவிர்க்க வேண்டும். இயற்கையின் இயல்பை அடிக்கடி நினைத்துப் பார்த்து மகிழ வேண்டும். நல்ல காரணங்களினால் நற்பயனும், கெட்ட காரணங் களினால் கெட்ட பயனும் ஏற்படுவதை அறிந்து, காரணத்திற்கு ஏற்றவாறு செயலைத் தொடங்கி மகிழ வேண்டும்.

செய்த காரியம் முடிந்துவிட்டது என்ற நம்பிக்கையுடன் இருக்காமல், வீர்யத்தை இழக்காமல், இகழ்ச்சியை நினைத்துப் பார்க்காமல் நடந்துகொள்ள வேண்டும். 26—27

## 22. ஹோமம் செய்யும் முறை

உடல் சுத்தியற்றவன், உயர்ந்த பசுவின் நெய், அக்ஷதை. (மஞ்சள், அல்லது குங்குமம் கலந்த அரிசி), எள்ளு, தர்ப்பை, சடுகு இவற்றால் ஹோமம் செய்யலாகாது.

நன்மையைக் கருதுபவன் கீழ்க்கண்ட ஆசிர்வாத மந்திரங்களால் ஒவ்வொரு நாளும், ஹோமம் செய்வது நலம்.

### மந்திரங்களின் பொருள்

1. அக்னிபகவான் என் உடலிலிருந்து விலகாமல் இருக்க வேண்டும்.

2. வாயு(காற்று) தேவதை என் உயிரை உறுதியாகப் பற்றிக் கொள்ளட்டும்.

3. விஷ்ணு எனும் தேவதை என்னிடத்தில் வலிமையை வழங்கட்டும்.

4. இந்திரன் எனும் தேவதை என்னிடத்தில் பராக்கிரமத்தை நிலைநிறுத்தட்டும்.

5. மங்களத்தை அளிக்கும் நீருக்கு ஆட்சி செலுத்தும் வருணன் என்னிடம் கலக்கட்டும்.

இந்தப் பொருள்கள் அடங்கிய மந்திரங்களை ஜபித்து, ''ஆபோஹிஷ்டா'' என்னும் மந்திரத்தினால் நீரைத் தொட்டு இரண்டுமுறை, இரண்டு உதடுகளையும் துடைத்துக்கொண்டு, 1. ஆசமனீயம் செய்ய வேண்டும். பிறகு கால்களைச் சுத்தம் செய்து கொண்டு தலையில் உள்ள துவாரங்களான இரண்டு கண்கள், இரண்டு மூக்கு துவாரங்கள், இரண்டு காதுகள், ஒரு வாய் தன் இதயம், தலை இவற்றில் வரிசையாக நீரைத் தெளித்துக்கொள்ள வேண்டும். 28

2. பிரும்மசர்யம் (புலனடக்கத்துடனிருத்தல்) அறிவு, நட்பு, ஈகை, கருணை, மகிழ்ச்சி, அன்பு பாராட்டுதல், அமைதி என இக் காரியங்களில் ஈடுபாடு உடையவனாயிருக்க வேண்டும். 29

### முடிவுரை

இந்திரியோபக்ரமணீயம் எனும் அத்தியாயத்தில் ஐந்து ஐந்துகள், மனதின் இலக்கணம், ஆரோக்கிய நிலைக்குக் காரணமான புலன்களின் ஸமயோகம், நோய்களுக்குக் காரணமான புலன்களின் அதியோகம், ஹீனயோகம், மித்யாயோகம் விளக்கப்பட்டுள்ளன.

---

1. ஆசமனீயம் — மந்திரம் கூறி உள்ளங்கையில் நீரை வைத்து மூன்றுமுறை பருகுதல்.

2. பிரும்மசரியம் — சிற்றின்பங்களில் மனத்தைச் செலுத்தாமல் புலனடங்கியவனாதல்.

முழுமையான நன்மொழிகள் விளக்கப்பட்டுள்ளன. இந்த நன்மொழிகளை நன்கு கடைபிடிப்பவன், நூறு ஆண்டுகள் நோயற்று வாழ்கிறான். அவன் ஆயுள் குறைவதில்லை.

அதேபோல் நன்மக்கள், நல்லோர்கள் இவர்களால் புகழப் பட்டு இவ்வுலகில் தன் புகழைப்பரப்பி, அறம், பொருள் இவற்றை அடைந்து, உயிரினங்களுக்கு நன்மையைச் செய்வதனால் எல்லோருக்கும் உற்றவளாக ஆகிவிடுகிறான்.

இதேபோல் இறந்தபின், புண்ணியம் செய்தவர்கள் அடையக் கூடிய சுவர்க்கம் போன்றவற்றை அடைகிறான். ஆகையால் எல்லா மனிதர்களும் எப்பொழுதும் நன்மொழிகளைக் கடை பிடிக்க வேண்டும். அதனால் அவர்கள் புண்ய உலகை அடை கிறார்கள்.

இங்கு எடுத்துக்காட்டாத நன்மொழிகளையும் கடைப்பிடிக்க வேண்டும் என்று ஆத்ரேயர் கூறுகிறார்.

அக்னிவேச மாமுனிவரால் இயற்றப்பட்டு சரக
மாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரக
ஸம்ஹிதையில் ஸூத்திரஸ்தானத்தில்
இத்திரியோபக்ரமணீயம் எனும்
எட்டாவது அத்தியாயம்
முற்றும்.

## ஒன்பதாவது அத்தியாயம்

## *குட்டாக சதுஷ்பாதம்

''குட்டாக சதுஷ்பாதம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விவரிப்போம். 1–2

### 1. மருத்துவத்தின் நான்கு பாதங்கள்

1. குணமுள்ள மருத்துவர், 2. குணமுள்ள மூலிகைகள், 3. குணமுள்ள பணியாளர், 4. குணமுள்ள நோயாளி என இந்நால்வரையும் நோய் விலகுவதற்குக் காரணங்களாக அறிந்து கொள்ள வேண்டும். 3

### 2. நோய், நோயின்மை இவற்றின் இலக்கணம்

தாதுக்களின் மாறுபாடுகள் நோய்கள் எனப்படுகின்றன. தாதுக்கள் நடுநிலைமையிலிருப்பது ஆரோக்கியமாகும். ஆரோக்கியம் இன்ப வாழ்விற்குக் காரணம். துன்பத்திற்குக் காரணம் நோய். 4

### 3. சிகிச்சையின் இலக்கணம்

கோளாறடைந்த தாதுக்களைச் சரியான நிலைக்குக் கொண்டு வர மருத்துவன் போன்றவர்களின் ஒருங்கிணைந்த செயல் சிகிச்சை எனப்படும். 5

### 4. மருத்துவனின் குணங்கள்

1. ஆயுர்வேத சாத்திரத்தை நன்கு கற்றிடுதல்,
2. நோயாளி, மருந்து தயாரிப்பு, மருந்தைப் பயன்படுத்துதல் என இவற்றைப் பலமுறை நேரில் கண்டறிதல்,
3. திறமைசாலியாக இருத்தல், அதாவது சமயத்திற்கு ஏற்றவாறு அறிவைப் பயன்படுத்துவதில் திறமை,

---

* குட்டாக சதுஷ்பாதம் – குட்டாகம் என்றால் சுருக்கம் என்பது பொருள். சிகிச்சைக்கு முக்கியமான நான்கு பாதங்களைப் பற்றிச் சுருக்கமாகக் கூறப்படுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

4. தூய்மையாக இருத்தல்,

என இந்நான்கும் மருத்துவனின் சிறந்த குணங்களாக எண்ணப்படுகின்றன. 6

## 5. சிறந்த மூலிகைகளின் குணங்கள்

1. போதுமான அளவு கிடைக்கக் கூடியதாயிருத்தல்.
2. நோய்களைத் தீர்ப்பதில் திறமையுடனிருத்தல்.
3. ஒரே மூலிகை பலவிதமாக சுரசம், கல்கம், சூர்ணம், லேஹ்யம் போன்றவை எல்லாவற்றிற்கும் பயன்படுதல்.
4. சுவை, குணம், வீர்யம், விபாகம் இந்தக் குணங்களுடன் கூடியிருத்தல் என இந்நான்கும் சிறந்த மூலிகைகளின் குணங்களாகும். 7

## 6. பணியாளரின் குணங்கள்

1. பணிவிடை செய்யும் முறையை அறிந்திருத்தல்
2. திறமையுடன் கூடியிருத்தல்
3. எஜமானனிடமும் பணியாளனிடமும் அன்புடனிருத்தல்.
4. தூய்மையுடனிருத்தல் என இந்நான்கும் பணியாளரின் குணங்களாகும். 8

## 7. நோயாளியின் குணங்கள்

1. நினைவாற்றல்
2. மருத்துவனின் கட்டளையைப் பின்பற்றுதல்
3. பயமற்ற தன்மை
4. நோய் அதனால் ஏற்படும் துன்பங்கள், இவற்றை நன்கு எடுத்துக்கூறும் திறமை இந்நான்கும் நோயாளியின் குணங்களாம். 9

## 8. மருத்துவனின் இன்றியமையாமை

பதினாறு குணங்களுடன் கூடிய சிகிச்சையில் நான்கு பாதங்கள் (மருத்துவன், நோய், பணியாள், நோயாளி) சிகிச்சை வெற்றி பெறுவதில் முக்கியக் காரணங்களாகின்றன. இந்நால்வருள் மருத்துவன் மூலிகையை நன்கு அறிந்து, பணியாளனை அடக்கி, நோயாளியின் நோய்க்குத் தகுந்தவாறு மருந்துகளை அளித்து உதவுவதால் மருத்துவனே சிறந்தவனாகக் கூறப்படுகிறான். 10

சமையற்காரருக்கு சமையல் வேலையில் பாண்டம், விறகு, நெருப்பு இவை காரணங்கள். போரில் வெற்றிகொள்ள விரும்பு கிற படைத்தலைவனின் வெற்றிக்கு நிலம், படை, ஆயுதங்கள் காரணங்களாகின்றன. அதேபோல் மருத்துவனின் சிகிச்சையின் வெற்றிக்கு நோயாளி, மூலிகை பணியாளன் இவர்கள் காரண மாகின்றனர். ஆகையினால் சிகிச்சையில் முக்கியக் காரணமாக விளங்குபவன் மருத்துவனாகிறான். 11–12

மண், தடி, சக்கரம், நூல், இந்நான்கு சாதனங்களுமிருந் தாலும் குயவன் இல்லாமல் குடம் உருவாகாது. அதுபோல் சிகிச்சையின் மூன்று பாதங்களான மூலிகை, பணியாளன், நோயாளி இவர்கள் இருந்தும் மருத்துவர் இல்லாவிட்டால் ஆரோக்கியம் கிட்டாது. 13

மூலிகை, பணியாள், நோயாளி என்று சிகிச்சைக்கான மூன்று பாதங்கள் இருப்பதனால் கந்தர்வ நகரத்தைப் போல் சில நோய் கள் மறைந்துவிடுகின்றன. உடனே சிகிச்சை செய்ய வேண்டிய மற்றும் சில நோய்கள் மூன்று பாதங்களிருந்தும் வளர்ந்துகொண்டு இருக்கின்றன. அதற்குக்காரணம் முன் வியாதியில் மருத்துவன் சிறந்தவனாக இருக்கிறான். பின்நிலையில் மருத்துவன் அறியா தவனாக இருக்கிறான் என்பதாகும். 14

## 9. தகுதியில்லா மருத்துவரிடம் சிகிச்சை செய்து கொள்ளக் கூடாது.

அறிவில்லாத மருத்துவனிடம் சிகிச்சை செய்துகொள்வதைக் காட்டிலும் தன் ஆத்மாவை நெருப்பில் அர்ப்பணித்து விடுவது நலமாகும். அறிவில்லாத மருத்துவனிடம் சிகிச்சை செய்துகொள் வது கண் தெரியாதவன் பயத்தினால் நடுக்கமுற்று, கையினால் அல்லது கையில் உள்ள தடியினால் தட்டுத் தடுமாறிச் செல்வ தற்கும், பெருங்காற்றினால் தத்தளிக்கும் ஓடம், நீரில் சஞ்சல மான நிலையில் நிற்பதற்கும் ஒப்பாகும். 15–16

மருத்துவ அறிவில்லாத தன்னை மருத்துவனாகக் கருதும் ஒருவன் குறிப்பிட்ட ஆயுள் உள்ள நோயாளியின் நோயை அதிர்ஷ்டவசத்தால் போக்கிவிடுகிறான். ஆனால் அதே மருத்து வன் நீண்ட ஆயுள் உள்ள பல நோயாளிகளை விரைவில் கொன்று விடுகின்றான். 17

## 10. சிறந்த மருத்துவரின் இலக்கணம்

ஆயுர்வேத சாத்திரத்தைக் கற்பதில் ஈடுபாடு, ஆயுர்வேத சாத்திரத்தின் பொருளை நன்கு அறிவதில் ஊக்கம், ஆராய்ச்சித் திறன், வேறு இடத்தில் நடப்பதை அடிக்கடி பார்த்து அறிந்து கொள்வது என்ற நான்கு செயல்களிலும் எப்பொழுதும் ஈடுபட்டிருக்கும் மருத்துவனே ப்ராணாபிஸரன் (செல்லும் உயிரைத் திருப்பி எடுத்து வருபவன்) என்ற பெயர் பெறுகிறான். 18

## 11. அரச மருத்துவரின் இலக்கணம்

நோய் உண்டாவதற்குக் காரணம், நோயின் இலக்கணம், நோய் தணிவதற்கான வழிகள், நோய் தோன்றாமைக்கான முயற்சி, இந்நான்கு விஷயங்களைப் பற்றிய அறிவு உடைய சிறந்த மருத்துவன் அரசனுக்குச் சிகிச்சை செய்யத் தகுதியுடையவனாகிறான். 19

ஆயுதம், சாத்திரம் நீர் இவற்றின் குணதோஷங்கள், அவை இருக்கும் பாத்திரங்களுக்கு ஏற்றவாறு அமைகின்றன. ஆயுர்வேதமும் ஒரு சாத்திரம். அது கற்பனையின் அறிவைப் பொறுத்தது. ஆகையினால் அதைக் கற்பதற்குமுன் தன் அறிவைத் தெளிவாக்கிக் கொள்ள வேண்டும். 20

## 12. சிறந்த மருத்துவரின் ஆறு குணங்கள்

ஆயுர்வேத சாத்திரத்தின் முழு அறிவு, ஊகித்து அறிதல், மற்ற சாத்திர அறிவு, நினைவாற்றல், சிகிச்சையில் ஈடுபாடு, சிகிச்சை செய்தல் என இக்குணங்கள் உடைய மருத்துவனால் நீக்க முடியாத நோய் ஒன்றுமில்லை. 21

ஆயுர்வேத சாத்திர அறிவு, தெளிந்த அறிவு, சிகிச்சை செய்வதை அடிக்கடி பார்த்தல், செயலில் பழக்கம், சிகிச்சையில் வெற்றி பெறுதல், சிறந்த ஆசிரியர்களுடன் சேர்க்கை என இந்த ஆறு குணங்களுள் ஒரு குணமிருந்தாலும் மருத்துவன் என்ற பெயர் பெறத் தகுதியுள்ளவனாகின்றான். 22

கல்வி போன்ற எல்லாக் குணங்களும் நிரம்பிய மருத்துவன் உண்மையில் மருத்துவன் என்ற சொல்லைப் பயனுள்ளதாகச் செய்துகொண்டு உயிரினங்களுக்கு நன்மைபயக்கக் கூடியவனாக ஆகிறான். 23

பொருட்களை வெளிப்படுத்துவதற்கு ஆயுர்வேத சாத்திரம் விளக்கின் ஒளிபோல் திகழ்கிறது. தெளிந்த அறிவு ஆத்மாவின் கண் போன்றது. இந்தத் தெளிந்த அறிவு சாத்திரமாகிய விளக்கு

இவ்விரண்டையும் கைக்கொண்டு சிகிச்சை செய்பவனுக்குப் பிழையே ஏற்படாது. 24

சிகிச்சையின் மூன்று பாதங்களும் மருத்துவனை அண்டியிருப்பதால் மருத்துவன் கல்வி, ஊகித்தறிதல் போன்ற குணங்களை அடைவதற்கு முயல வேண்டும். 25

உயிரினங்கள் எல்லாவற்றிலும் நட்பு, நோயுள்ளவர்களிடம் கருணை, நீக்கக்கூடிய நோயுள்ளவர்களிடம் அன்பு, நீக்கமுடியாத நோயுள்ளவர்களிடம் கவனமற்றிருப்பது என இவை மருத்துவர்களின் நடைமுறையாகும். 26

## முடிவுரை

இந்தக் 'குட்டாக சதுஷ்பாதம்' எனும் இவ்வத்தியாயத்தில் நோயை நீக்குவதில் சிகிச்சையின் நான்கு பாதங்களின் முக்கியத்துவம், நான்கு பாதங்களின் நான்கு நான்கு குணங்கள், அந்த நான்கு பாதங்களிலும் மருத்துவனின் முக்கியத்துவம், மருத்துவனிடம் இருக்க வேண்டிய குணங்கள், அதனால் ஏற்படும் பயன், மருத்துவனின் அறிவு, அவனுடைய நான்குவிதமான நடைமுறை அறிவு இவை விளக்கப்பட்டுள்ளன. 27-28

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப் பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானத்தில் குட்டாக சதுஷ்பாதம் எனும் ஒன்பதாவது அத்தியாயம் முற்றும்.




LB
N85·1

## பத்தாவது அத்தியாயம்

## *மகா சதுஷ்பாதம்

''மகா சதுஷ்பாதம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

பதினாறு குணங்களுடன் கூடிய நான்கு பாதங்கள் கொண்டது மருத்துவம் என்பது மருத்துவரின் கொள்கை. முன் அத்தியாயத்தில் கூறப்பட்ட பதினாறு குணங்களுடன் கூடிய அந்தச் சிகிச்சையை நிலைமைக்கு ஏற்றவாறு பயன்படுத்தும் மருத்துவர் ஆரோக்யத்தை அளிக்கிறார் எனப் பகவான் ஆத்ரேயரால் கூறப்பட்டது. 3

### 1. மைத்திரேயரின் வினா

பகவான் ஆத்ரேயரின் சொல்லைக் கேட்ட மைத்ரேயர் கீழ்க் கண்டவாறு கூறினார்.

சிகிச்சைக்கான எல்லாப் பொருள்கள், பணியாள், புலனடக்கம் என எல்லாமுள்ள சில நோயாளிகள் திறமைசாலியான மருத்துவரால் சிகிச்சை செய்யப்பட்டு நோயிலிருந்து விடுபடுகிறார்கள். ஆனால் சிகிச்சைக்கான எல்லாப் பொருள்கள், குணங்களுடன் கூடி நான்கு பாதங்கள் என இவை இருந்தும், திறமைசாலியான மருத்துவரால் சிகிச்சை செய்தும், சில நோயாளிகள் இறந்து விடுகின்றனர் என்பதைக் கண்ணால் பார்க்கின்றோம். எனவே நீங்கள் கூறுவது சரியல்ல. ஆதலால் சிகிச்சை ஆரோக்கியத்திற்குக் காரணமாகாது.

பள்ளத்திலோ அல்லது ஒரு குளத்திலோ சிறிதளவு நீர் விடுவதாலோ, பெருகி ஓடுகின்ற ஆற்றிலோ அல்லது மணற்குவியலிலோ ஒரு பிடிமண் போடுவதாலோ ஒரு பயனுமில்லை. அது போல் இறக்கும் தருவாயில் உள்ள நோயாளிக்கும் வலிவுள்ள

---

* மகா சதுஷ்பாதம்– முன் அத்தியாயத்தில் நோயைப் போக்கக் கூடிய சிகிச்சையின் நான்கு பாதங்கள் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளன. அவற்றையே முன் அத்தியாயத்தைவிட விரிவாக இவ்வத்தியாயத்தில் விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெற்றது.

தோஷங்களுடன் கூடிய நோயாளிக்கும் சிறிதளவு மருந்து கொடுப்பதனால் ஒரு பலனும் ஏற்படாது.

மேலும் சில நோயாளிகள் சிகிச்சைக்குத் தேவையான பொருள்கள், பணியாள், புலனடக்கம் இவை போன்றவை இல்லாமலேயே திறமையற்ற மருத்துவனால் சிகிச்சை செய்யப்பட்டு ஆரோக்கியமுள்ளவர்களாக ஆகிறார்கள்.

மேலும் சில நோயாளிகள் சிகிச்சைக்கான சாதனங்கள், பணியாள், புலனடக்கம் இவையில்லாதவர் திறமையற்ற மருத்துவனால் சிகிச்சை செய்யப்பட்டும் இறந்துவிடுகிறார்கள்.

அதாவது எல்லாப் பாதங்களுடன் கூடிச் சிகிச்சை செய்தும் சிலர் ஆரோக்கியமடைகிறார்கள். சிலர் சிகிச்சை செய்தும் இறந்துவிடுகிறார்கள்.

அதேபோல் சிகிச்சை செய்யாவிடினும் சிலர் ஆரோக்கியமடைகின்றனர். சிகிச்சை செய்யாவிடில் சிலர் இறக்கிறார்கள். எனவே மருந்து கொடுப்பதிலும் மருந்து கொடுக்காமலிருப்பதிலும் வேறுபாடு காணப்படவில்லையே. ஆகையால் நோயாளி உயிர்வாழ்வதற்கும், இறப்பதற்கும் சிகிச்சை காரணமில்லை, எனக் கருதப்படுகிறது என்றார் மைத்ரேயர். 4

## 2. ஆத்திரேயரின் விடை

ஆசாரிய ஆத்திரேயர் கூறினார். மைத்ரேய, தாங்கள் தவறாக நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்.

பதினாறு குணங்களுடன் கூடிய சிகிச்சையினால் மருத்துவம் செய்தாலும் நோயாளி இறந்துவிடுகிறான் என்று கூறுகிறீர்.

மருந்தினால் நீங்கக்கூடிய நோய்களில் மருந்து கொடுப்பது வீணாக ஆகாது. மேலும் 16 குணங்களுடன் சிகிச்சையில்லாமலேயே நோயிலிருந்து விடுபடுகிற நோயாளியின் சிகிச்சையில் குணங்களுடன் கூடிய சிகிச்சைக்குத் தேவையுமில்லை என்பதும் சரியல்ல. ஏனென்றால் ஒருவன் வழுக்கிக் கீழேவிழுந்துவிட்டால் அவன் தானே எழுந்துநிற்பதில் திறமையுள்ளவனாயிருக்கலாம் ஆனால் வேறு ஒருவன், தன் வலிவைக் கொடுத்து கையைப் பிடித்துக் தூக்கிவிட்டால், கீழே விழுந்தவன் விரைவில் கஷ்டப்படாமல் எழுந்துவிடுகிறானல்லவா ?

அதுபோல் நோயாளியின் நோய் தீர்க்கக்கூடியதாயிருந்தால் முழுமையான சிகிச்சை பெற்று எளிதாக முழு ஆரோக்கியத்தை அடைகிறான்.

முழுமையான சிகிச்சை பெறும் நோயாளிகளும் இறப்பதன் காரணம், எல்லா நோய்களும் சிகிச்சைக்குக் கட்டுப்படுவதில்லை சிகிச்சைக்குக் கட்டுப்படும் நோய்களோ சிகிச்சை செய்யாமல் நீங்குவதில்லை. இதுதான் ரகசியம்

தீராத நோய்களுக்கு மருந்து பயனளிக்காதாகையால் அறிவாளியான மருத்துவன் இறக்கும் தருவாயில் உள்ள நோயாளியை காப்பதில் திறமையற்றவனாக ஆகிறான்.

சிகிச்சை செய்யும்பொழுது நன்கு சோதித்தபின் சிகிச்சையில் ஈடுபடும் மருத்துவனே திறமைசாலியாகிறான்

வில்லாளியினுடைய குறி தொலைவில் இல்லாமலும், குறியின் உருவம் பெரிதாக இருந்தாலும் அவன் குறியை அடிப்பதில் தவறாமல் வெற்றி பெறுகிறான். அதேபோல் தேவையான குணங்களுடன் கூடிய மருத்துவன் சிகிச்சைக்கான எல்லாப் பொருள்களையும் பெற்று நோயாளியின் நோய் தீர்க்கக்கூடியது, தீர்க்கக் கூடாதது என்பதைச் சோதித்துப் பிறகு சிகிச்சையைத் தொடங்கினால் நோயைத் தீர்ப்பதில் அவன் தோல்வி அடைவதில்லை

இதனால் சிகிச்சைசெய்தல், சிகிச்சை செய்யாதிருத்தல் இரண்டிலும் வேறுபாடு இல்லை என்று நீ கூறியது சரியல்ல என்கிறார் ஆத்ரேயர் 5

தோஷமுள்ள நோயாளிக்கு தோஷமில்லாத மருந்தைக் கொடுக்கும் சிகிச்சையும், உடல் இளைத்தவனுக்கு 1 பிரும்ஹண சிகிச்சையும், (பருக்கச் செய்யும் சிகிச்சை) மெலிந்தவனுக்கும் வலிவற்றவனுக்கும் 2 தர்ப்பண சிகிச்சையும் (வலிவை அளிக்கும் சிகிச்சை), பருமன் உள்ளவனுக்கும், கொழுப்பு அதிகம் உள்ளவனுக்கும் 3 அபதர்ப்பணம் எனும் சிகிச்சையும் (கொழுப்பைக் கரைக்கும் சிகிச்சை) சூட்டினால் துன்புறுகிறவனுக்கு குளிர்ச்சி தரக்கூடிய மருந்துகளினாலும், குளிர்ச்சியினால் உண்டான நோய்களுக்கு சூடு அளிக்கக்கூடிய மருந்துகளினாலும் சிகிச்சையும் செய்கிறோம்.

சிகிச்சை செய்யும்பொழுது குறைந்து போன தாதுக்களை நிரப்புகிறோம். அதிகம் வளர்ந்த தாதுக்களைக் குறைக்கிறோம்.

நோயின் மூலகாரணத்திற்கு எதிரிடையான சிகிச்சை செய்து நோயாளியை ஆரோக்கிய நிலைக்குக் கொண்டு வருகிறோம்.

சிகிச்சையினால் மக்கள் பலன் பெறுவதைக் காணும்பொழுது

1. பிரும்ஹணம் – பருக்கச் செய்யும் சிகிச்சை.
2. தர்ப்பணம் – வலிவை அளிக்கும் சிகிச்சை.
3. அபதர்ப்பணம் – கொழுப்பைக் குறைக்கும் சிகிச்சை..

ஆயுர்வேத மருந்துகள், நிச்சயமாகப் பயன்தரக்கூடியவை என்பது புலனாகிறது 6

### 3. போக்கக்கூடிய, போக்க முடியாத நோய்கள் பற்றி

குறிப்பிட்ட நோய், போக்க வல்லது, போக்க முடியாதது என்ற முறையை அறிந்து, மருத்துவன் கவனத்துடன் தகுந்த சமயத்தில் சிகிச்சை செய்ய ஆரம்பித்தால் அவன் தன் செயலில் வெற்றி பெறுவது திண்ணம்

போக்க முடியாத நோய்க்கு மருத்துவம் செய்ய முன்வரும் மருத்துவன், பொருள், கல்வி, புகழ் இவற்றை இழந்துவிடுவதுடன் இகழ்ச்சிக்கும் உரியவன் ஆகிறான்

நோயாளிகளும் இந்த மருத்துவனை விட்டுச் சென்று விடுகின்றனர். 7–8

### 4. போக்கக்கூடிய, போக்க முடியாத நோய்களின் பிரிவுகள்

எளிதில் போக்கக்கூடியது, கஷ்டப்பட்டு போக்கக்கூடியது என போக்கக்கூடிய நோய்கள் இருவகைப்படும். 1. யாப்யம் (காலம் கடத்தக்கூடியது), 2. அநுபக்ரமம் (சிகிச்சைக்குக் கட்டுப்படாதது) எனப் போக்கக்கூடாத நோய்களும் இருவகைப்படும்.

மேலும் தீர்க்கக்கூடிய நோய்கள், 1. அற்பஉபாயஸாத்யம் (மிக எளிதில் தீர்க்கக்கூடியது). 2. மத்ய உபாய ஸாத்யம் (நடுத்தர சாதனங்களால் தீர்க்கக்கூடியது 3. உத்க்ருஷ்ட உபாய ஸாத்யம் (மிகவும் கஷ்டத்துடன் போக்கக்கூடியது) என மூவகைப்படும்.

நிச்சயமாகத் தீர்க்க முடியாத நோய்களுக்கு உட்பிரிவே கிடையாது. 9–10

### 5. எளிதில் தீர்க்கக்கூடிய நோய்களின் இலக்கணம்

நோய் தோன்றுவதற்குக் காரணங்கள், முற்குறிகள், குறிகள் இவை குறைந்த அளவில் இருந்து, சமமாக இல்லாத 1தோஷ 2தூஷ்யங்கள், சமநிலையற்ற தோஷங்கள், நோயாளியின் உடலுக்கு ஏற்றவாறு இல்லாதவை, பருவ கால குணங்களுக்குச் சமமில்லாதவை, நோயாளியின் உடல், அவன் வசிக்குமிடம், இரண்

---

1. தோஷங்கள் – கேடடைந்த வாத கபங்கள்.

2. தூஷ்யங்கள் – கேடடைந்த இரசம், இரத்தம், மாமிசம், கொழுப்பு, எலும்பு, மஜ்ஜை, விந்து இவை தூஷ்யங்கள் எனப்படும்.

டும் சமமாக இல்லாதவை சிகிச்சையில் துன்பத்தை ஏற்படுத்தாதவை.

மேலும் உடலில் நோய் தோன்றுவதற்கான மூன்று வழிகளில் ஏதாவது ஒருவழியைப் பற்றிய நோய், அதிகநாட்கள் கடக்காமல் அண்மையில் தோன்றிய நோய், ஒரே தோஷத்தினால் உண்டாகும் நோய், எல்லாவித மருந்துகளையும் பொறுத்துக்கொள்ளக்கூடிய உடலமைப்பு உள்ள நோயாளி நான்கு பாதங்களுடன் கூடிய சிகிச்சை செய்ய வாய்ப்பு என இவை உள்ள இந்நோய்கள் எளிதில் குணமடையக்கூடியவையாகும். 11–13

## 6. கஷ்டப்பட்டு நீக்கக்கூடிய நோய்கள்

நோய் உண்டாவதற்குக் காரணம், முற்குறிகள், குறிகள் இவை நடுத்தர வலிவுள்ளவைகளாகவோ, காலம், இயற்கை, தூஷ்யங்கள் இவற்றில் ஏதாவது ஒன்று, நோய்கள் உண்டாவதற்குச் சமமான தோஷங்கள் உடையதாயிருந்தால் அந்நோய்கள் கஷ்டப்பட்டு நீக்கக் கூடியவை.

மேலும் சூலுற்றவள், முதியவர், சிறுவர் இவர்களிடம் உள்ள அதிகத் துன்பத்தைத் தராத நோய்கள், அறுவைச் சிகிச்சை, க்ஷார சிகிச்சை, சுடும் சிகிச்சை இவற்றிற்குத் தகுதியான நோய்கள், புதியதல்லாதவை, மர்ம ஸ்தானங்கள் போன்று எளிதில் சிகிச்சை செய்ய முடியாத இடத்தில் தோன்றியவை உண்டான நோய் உடலின்கீழ்பாகத்திலோ, அங்கு உள்ள உறுப்புகளிலோ, 1கோஷ்டத்திலோ, மர்ம ஸ்தானத்திலோ, எலும்புகளிலோ, பூட்டுகளிலோ இவற்றில் ஏதாவது ஓரிடத்தில் தோன்றியவை. சிகிச்சைக்குரிய நான்கு பாதங்கள் பெறாத நோயாளி இரண்டு நோய் வழிகள். நோய் உடலில் பரவக்கூடிய இரண்டு வழிகளில் உண்டான நோய்கள் மிக்க நாட்படாதவை. இரண்டு தோஷச் சேர்க்கையினால் ஏற்பட்டவை என இந்நோய்கள் கஷ்டப்பட்டு சிகிச்சை செய்து போக்கக்கூடியவை. 14–16

## 7. காலங் கடத்தக்கூடிய நோய்கள்

ஆயுட்காலம் மிகுதியிருந்து, கட்டுப்பாடான உணவு, பழக்க வழக்கங்கள் இவற்றைக் கடைபிடிப்பதால் நோய் சிறிது நீங்கி மறுபடியும் சிறு காரணத்தினால் விரைவில் பயங்கரமாக மாறு

1. கோஷ்டம் – இதயம், நுரையீரல், உணவுப்பை, சீரணப்பை, கல்லீரல், மண்ணீரல், பித்த நீர்ப்பை, பெருங்குடல், மூத்திரக்குண்டிக்காய் இவ்வளவு அடங்கியுள்ள இடம்.

பவை, தாதுக்களில் தோஷங்கள் ஊடுருவிப் பாய்ந்து காணப்படும் நோய்கள், பல தாதுக்கள், பரவியிருப்பவை, 1மர்ம ஸ்தானங்களிலும், பூட்டுக்களிலும் தோன்றியிருப்பவை, தொடர்ந்து இருக்கக்கூடியவை, நீண்ட நாட்களாக உள்ளவை, இரண்டு தோஷங்களின் கூட்டினால் தோன்றித் தீர்க்க முடியாதவை. என இந் நோய்கள் காலம் கடத்தக்கூடிய நோய்களாம். 17–18

## 8. புறக்கணிக்கக்கூடிய நோய்கள்

2ஸன்னிபாதத்தினால் (மூன்று தோஷங்களின் கூட்டுச் சேர்க்கையினால்) ஏற்பட்ட நோய்கள், முறைப்படி மருத்துவம்செய்தும் தீராத நோய்கள், எல்லா வழிகளிலும், உறுப்புக்களிலும் பரவிய நோய்கள், அடிக்கடி ஆசை, வெறுப்பு, மூர்ச்சை இவற்றைத் தோற்றுவிக்கும் நோய்கள், புலன்களின் வலிமை அழிக்கக்கூடிய நோய்கள், வலிவற்றவனுக்கு துன்பம் தரக்கூடிய நோய்கள், மரணக்குறி தோன்றிய நோய்கள் இவை புறக்கணிக்கக்கூடிய பட்டியலில் சேர்ந்தவைகளாம். 19–20

## 9. பரிசோதனைக்குப் பின் மருத்துவம்

அறிவாளியான மருத்துவன், நோய்களைத் தீர்க்கக்கூடியது, தீர்க்கக்கூடாதது, காலம் கடத்தக்கூடியது, புறக்கணிக்கக்கூடியது என்ற பாகுபாட்டை முதலில் நன்கு பரிசோதித்து பிறகு தீர்க்கக்கூடிய நோய்களுக்குச் சிகிச்சையைத் தொடங்க வேண்டும். 21

ஆயுர்வேத சாத்திரத்தில் நிபுணரும், தீர்க்கக்கூடிய, தீர்க்கக்கூடாத நோய்களின் வேற்றுமைகளை நன்கு அறிந்தவருமான மருத்துவர் மைத்ரேயரைப்போல் பொய்யான அறிவை கற்பனை செய்து வளர்த்துக்கொள்ளமாட்டார். 22

## முடிவுரை

இந்த மகா சதுஷ்பாதம் எனும் அத்தியாயத்தில் மருந்து, நான்கு பாதங்களின் குணங்கள், மருந்தின் மகத்துவம், ஆத்ரேய மைத்ரேயர்களுடைய கருத்துப் பரிமாற்றம், இவர்களுடைய

---

1. மர்ம ஸ்தானம் — உயிர் நிலை.

2. ஸன்னிபாதம் — மூன்று தோஷங்களின் கூட்டுச் சேர்க்கையால் ஏற்படும் நோய்.

அசைக்க முடியாத முடிவு, நோய்களில் தீர்க்கக்கூடியவை, எளிதில் தீர்க்கக்கூடியவை, போன்ற நான்கு பிரிவுகள், தீர்க்கக்கூடிய, தீர்க்கக்கூடாத நோய்களின் இலக்கணம் போன்றவை கூறப்பட்டன. இவற்றை ஆதாரமாகக் கொண்டுதான் சிகிச்சை செய்ய வேண்டும். 23–24

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரக
மாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரக
ஸம்ஹிதையில் ஸூத்ர ஸ்தானத்தில்
மகா சதுஷ்பாதம் எனும்
பத்தாவது அத்தியாயம்
முற்றும்.

## பதினோராவது அத்தியாயம்

## *திஸ்ரைஷணீயம்

''திஸ்ரைஷணீயம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேயமாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

### 1. ஃஃ மூவகை விருப்பங்கள்

மனம், அறிவு, ஆண்மை, வீரம் இவை நல்ல நிலையில் இருந்தும், இம்மை, மறுமைகளில் நன்மையை விரும்புகிற மனிதர்களுக்கு மூவகை விருப்பங்கள் தேடிப் பெறத்தக்கவைகளாக உள்ளன. அவை :- உயிர் வாழ்தல், பொருளீட்டல், மறுமையில் இன்பம் என்பன. 3

### 2. உயிர் வாழ்வதில் விருப்பம் (பிராணேஷணா)

உயிர் நீங்கியபின் மனிதனுக்கு உலகில் ஒன்றும் கிடையாது. எல்லாவற்றையும் இழந்தவனாகிறான். எனவே மூன்று விருப்பங்களில் உயிர் வாழ்வதில் விருப்பம் என்பது முதல் இடம் பெறுகிறது. அவ்வித உயிரைக் காக்க ஆரோக்கிய நிலையில் உள்ளவன் ஆரோக்கியத்திற்குத் தேவையான முறைகளைப் பின்பற்ற வேண்டும். நோயாளி நோயைப் போக்குவதில் கவனக் குறைவாக இருக்கக்கூடாது. இவ்விரண்டைப்பற்றியும் முன் அத்தியாயங்களில் கூறப்பட்டன. இனி மேலும் கூறுவோம்.

---

* திஸ்ரைஷணீயம் – ஏஷணா : விருப்பங்கள், திஸ்ர – மூன்று (1) உயிர் வாழ்வதில் விருப்பம், (2) பொருளீட்டுவதில் விருப்பம், (3) மேலுலகத்தை அடைவதற்கான தருமகாரியங்களில் விருப்பம், இம்மூன்று விருப்பங்களையும் விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

ஃஃமூவகை விருப்பங்கள் – பிராண ஏஷணா – உயிர் வாழ்வதில் விருப்பம்
தன ஏஷணா – பொருளீட்டுவதில் விருப்பம்
பரலோக ஏஷணா – மேலுலகை அடைவதற்கான நற்காரியங்களில் விருப்பம்.

முன்பு சொல்லப்பட்ட, சொல்லப்போகின்ற முறைகளை நன்கு கடைபிடித்துக்கொண்டு உயிரைக் காப்பாற்றிக் கொள்வதனால் நீண்ட ஆயுள் கிட்டுகிறது. இதனால் உயிர் வாழ்வதில் விருப்பம் விளக்கப்பட்டது. 4

## 3. பொருளீட்டுவதில் விருப்பம் (தன ஏஷணா)

இரண்டாவதாக பொருளீட்டுவதில் விருப்பம் இடம் பெறுகிறது. உயிர்வாழப் பொருள் தேவைப்படுவதால் பொருளை அடைவதற்கான வழிகளைத் தேட வேண்டியுள்ளது.

நீண்ட ஆயுள் வாழ்கின்றவனுக்கு வாழ்க்கைக்குத் தேவையான சாதனங்கள் (பொருட்கள்) இல்லையேல் இதைவிட பாவப் பயன் வேறு ஒன்றுமில்லை. வாழ்க்கைக்குத் தேவையான பொருட்கள் இல்லாவிடில் இதைக் காட்டிலும் வேறு துன்பங்கள் கிடையா. எனவே பொருளீட்டுவதற்கான வழிகளை அடைய முயற்சி செய்ய வேண்டும்.

இப்பொழுது இங்கு பொருளீட்டுவதற்கான சாதனங்களையும், வழிகளையும் குறிப்பிடுகிறோம்.

1. கிருஷி – (விவசாயம்), 2. பாசுபால்யம் (பிராணிகளை வளர்ப்பது) 3. வாணிஜ்யம் (வியாபாரம் செய்வது) 4. ராஜோபஸேவா (அரசனிடம் ஊழியம்புரிதல்) இவற்றையும் மற்றும் பெரியோர்களால் பழிக்கப்படாத வாழ்நாள் முழுவதும் பொருட்களைத் தரக்கூடிய செயல்களையும் செய்ய முயல வேண்டும். அதனால் மனிதன் புகழுடன் நீண்ட வாழ்க்கை வாழ்கிறான்.

இவ்வாறு இரண்டாவதான பொருளீட்டுவதில் விருப்பம் விளக்கப்பட்டுள்ளது. 5

## 4. மேலுலகில் விருப்பம் (பரலோக ஏஷணா)

நீண்ட ஆயுள், பொருளீட்டுதல் இவ்விரண்டிற்குப்பின் மூன்றாவதாக மேலுலகில் விருப்பம் என்பது இடம் பெறுகிறது.

ஆனால் மேலுலகம் எனும் விஷயத்தில் ஐயம் ஏற்படுகிறது. நாம் இறந்தபின் மறுபிறப்பை அடைகிறோமா இல்லையா ?

---

1. க்ருஷி – விவசாயம்
2. பாசுபால்யம் – பிராணிகளை வளர்ப்பது.
3. வாணிஜ்யம் – வியாபாரம் செய்வது.
4. ராஜோபஸேவா – அரசனிடம் ஊழியம்புரிதல்.

இந்த ஐயம் ஏன் ஏற்படுகிறது என்பதற்குப் பதிலை ஆசாரியர் கூறுகிறார்.

சிலர் நாத்திக வாதத்தை ஏற்றுக்கொண்டு புலன்களால் அறிவதையே (ப்ரத்யக்ஷம்) 1. பிரமாணமாக (அளவை) ஒப்புக்கொள்கின்றனர். மறுபிறப்பு புலன்களுக்குப் புலப்படாததால் அதை ஏற்றுக் கொள்வதில்லை.

மற்றும் சிலர் ஆஸ்திக வாதத்தை ஏற்று சாத்திரங்களைப் பிரமாணமாகக் கொண்டு மறுபிறப்பை ஒப்புக்கொள்கின்றனர்.

மேலும் வேதங்களில் மறுபிறவியுண்டெனப்படுவதுபோல் மறுபிறவியில்லையென்றும் முரணான கருத்துக்கள் காணக் கிடைக்கின்றன.

அது வருமாறு : சிலர் பிறப்பிற்குக் காரணம் பெற்றோர்கள் என்றும், மற்றும் சிலர் இயற்கையே காரணம் என்றும், சிலர் ஐச்வரியம் முதலான விசேஷ குணங்கள் கொண்ட ஆத்மாதான் காரணம் என்றும், ''பரம்'' காரணம் என்றும், சிலர் தற்செயலாக ஏற்படுவது பிறப்பு என்றும் கூறுவதால் பரலோகம் இல்லை என்றாகிறது. ஆகவே முடிவான கருத்தை உணரமுடிவதில்லை. அதனால் மறுபிறப்பு உண்டா இல்லையா என்ற ஐயம் ஏற்படுவது இயல்பே. 6

## 5. மேலுலகம் உண்டு என்பதற்கான விளக்கம்

பரலோகம் (மேலுலகம்) மறுபிறப்பு இவற்றைப் பற்றி ஆராயப் புகுமுன் அறிவாளி நாஸ்திக வாதத்தையும், ஐயப்பாட்டையும் முதலில் விட்டுவிட வேண்டும்.

காட்சியளவையால் அறியக்கூடிய பொருட்கள் மிகக் குறைவானவை. அவ்வாறு இன்றி வேறுவழியில் அறியக்கூடியவை கூடாதவை அளவிலாதவை. அவற்றை ஆகமம் (வேதம்), அனுமாநம் (கருதல்) யூகம் (உபாயம்) இவற்றைக் கொண்டு ஒப்புக்கொள்கிறோம்.

காட்சி ஒன்றே அளவை என்றால் எந்தப் புலனால் ப்ரத்யக்ஷம் ஏற்படுகிறதோ அந்தப் புலன் புலன்களுக்குப் புலனாகாதது அல்லவா ? 7

## 6. காட்சியளவைக்கு (பிரத்யக்ஷப் பிரமாணத்திற்கு) இடையூறான காரணங்கள்

புலன்களுக்குப் புலப்படும் பொருட்கள் மிக்க அருகில் இருந்தாலும், மிகத் தொலைவிலிருந்தாலும், மறைக்கப்பட்டிருந்தா

---

1. பிரமாணம் – அளவை

லும், புலன்களின் வலிவு குறைந்தாலும், மனம் ஈடுபடாத தனாலும், ஒரேவிதமான பல பொருட்கள் இருப்பதாலும், மற்ற பொருட்களினால் மூடப்பட்டிருந்தாலும், மிகவும் நுண்ணியதாக இருந்தாலும், அவை புலன்களுக்குப் புலனாவதில்லை. 8

எனவே (காட்சி) பிரத்யக்ஷ பிரமாணத்தை மட்டும் ஒப்புக் கொள்பவன் சிந்திக்காமல், ஆராயாமல், கூறுகிறான் என்றே கொள்ள வேண்டும்.

அதாவது பிரத்யக்ஷம் (காட்சி) என்ற ஒரே பிரமாணம்தான் உண்டு. மற்ற பிரமாணங்கள் இல்லை என்று கூறுவது சரியல்ல.

மேலும் வேதத்தில் மறுபிறப்பைப் பற்றிக் கூறப்படுவதால் மறுபிறப்பில்லை என்பதற்கு ஆதாரமாக வேதத்தைக் கொள்ள முடியாது.

## 7. மறுபிறப்பிற்கு பெற்றோர்கள் காரணமல்ல

தாய் தந்தையரின் ஆத்மா குழந்தையினிடத்தில் புகுகிறது என்று ஒப்புக்கொண்டால், அதை இரண்டுவிதமாகக் கூறலாம். தாய் தந்தையரின் முழுமையான ஆத்மா குழந்தையினிடம் செல் கிறது என்பது ஒன்று. தாய்தந்தையரின் ஆத்மாவின் ஒரு பகுதி மட்டும் குழந்தையினிடம் செல்கிறது என்பது மற்றொன்று. முழுமையான ஆத்மா குழந்தையினிடம் செல்கிறது எனக்கொண் டால், தாய் தந்தையருக்கு மரணம் ஏற்பட வேண்டும். அப்படி ஏற்படுவதில்லை. எனவே இந்த வாதமும் சரியல்ல.

ஆத்மாவின் ஒரு பகுதிதான் குழந்தையினிடம் செல்கிறது என்பதும் சரியல்ல. ஆத்மாவின் பகுதி என்பதால் ஆத்மாவின் பாகத்தைக் குறிப்பிட வேண்டும். ஆத்மாவோ பகுதியற்றது. முழுமையானது. சூக்ஷ்மமானதும்கூட. அதனால் ஆத்மாவின் ஒரு பகுதிதான் செல்கிறது என்பதும் சரியல்ல. 9–10

புத்தியும் மனமும் ஆத்மாவைப்போல் நுட்பமானது. அவயவ மற்றது. எனவே தாய் தந்தையர்களின் புத்தியும் மனமும் குழந்தை யினிடத்தில் புகுந்துகொள்கிறது என்பதும் சரியல்ல. ஏனென் றால், பிறப்பு ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் என்று நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

தாய் தந்தையர்கள் படைப்புக்குக் காரணம் என்று கூறினால், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம், என்ற வகையைச் சார்ந்த பிராணிகள்

தாய் தந்தையர்களால் ஏற்பட வேண்டும். அவ்வாறு நடப்ப தில்லை.

எனவே முன்வினைக்கு உடன்பட்டு ஆத்மாவின் தூண்டுதலி னால் தாய் தந்தையர்களின் உடலிலிருந்து சுக்ரம், சோணிதம், வெளிப்பட்டு கருப்பையில் சென்று படைப்பைத் தொடங்குகிறது எனக் கூற வேண்டும்.

அதாவது படைப்பு முன்வினைக்கு ஏற்றவாறு உண்டாகிறது. பிறவியைப் பற்றி நிற்கிறது. ஆகையால் அந்த முன்வினையை யும், மறுபிறப்பு இரண்டையும் ஒப்புக்கொண்டதாக ஆகிறது. 11

## 8. பிறப்பிற்கு ஸ்வபாவம் (இயற்கை) காரணம் அல்ல

பிறப்பிற்கு இயற்கைதான் காரணம் எனச் சிலர் கருதுகின்ற னர். அது தவறு என்பதை இச்செய்யுளில் சுட்டிக் காட்டியுள்ளார்.

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், ஆன்மா ஆகிய ஆறு தாதுக்களுக்கும் தனித்தனி இலக்கணங்கள் உள்ளன. அவை அந் தந்த தாதுக்களின் இயல்பாகும்.

ஐம்பெரும் பூதங்கள் என்பது சடப்பொருள்கள் (உயிரற்ற பொருட்கள்), உயிரற்ற இந்த ஐம்பெரும் பூதங்களுக்கு ஆன்மா வின் சேர்க்கையினால் சைதன்யம் (உயிர்) ஏற்படுகிறது. இப் பொருட்களிலிருந்து ஆன்மா பிரிந்தால் அவை சடப்பொருட் களாக (உயிரற்ற) நிற்கின்றன. சடப்பொருட்களுடன் ஆன்மா வின் சேர்க்கைக்கும், பிரிவுக்கும் காரணமாக இயற்கை (ஸ்வபாவம்) என்பதைக் கூறினால் இந்த ஐம்பெரும்பூதங்கள் உயி ருள்ளதாகவோ, உயிரற்றதாகவோ இருக்குமே தவிர உயிருள்ளது உயிரற்றதாகவோ, உயிரற்றது உயிருள்ளதாகவோ மாறாது. ஆகை யால் பிறப்பிற்கு இயற்கை காரணமில்லை. முன்வினைதான் காரணமாகிறது. முன்வினைக்கு வசப்பட்டு ஆத்மா அந்த ஐம் பெரும் பூதங்களுடன் சேரும்பொழுது அவை உயிருள்ளதாக மாறி

---

1. ஜராயுஜம் — கருவறையில் பிறப்பது, ஆடு, மாடு, மனிதன் முதலியவை.
2. அண்டஜம்— முட்டையில் வளர்ந்து பிறப்பது. பறவை, பாம்பு போன்றவை.
3. ஸ்வேதஜம்— புழுக்கத்தால் பிறப்பவை. தேள், கம்பளிப்பூச்சி போன்றவை.
4. உத்பிஜ்ஜம்— பூமியைப் பிளந்து பிறப்பவை. பூ, நாகம், செடி, கொடி, மரம் போன்றவை.

பிறப்பை அடைகின்றன. அதேபோல் கர்மாவிற்கு வசப்பட்டு ஆத்மா உயிரற்ற பொருளை விட்டுப் பிரிகின்றது.

முற்பிறப்பின் வினைப்பயனாக ஆத்மாவிற்கு பூதங்களுடன் சரீரத்தை உயிருடன் படைக்க சேர்க்கை பிறப்பு; அதன் பிரிவு மரணம் என்பதுதான் திரண்ட கருத்து. 12

## 9. பிறப்பிற்குக் காரணம் பரமாத்மாவே

ஆன்மாவிற்குப் பிறப்பு கிடையாது. பிறரால் தோற்று விக்கப்படாதவரும், பிறப்பற்றவருமான பரமாத்மா காரணம் எனக் கூறினால் அது சம்மதமே. 13

## 10. பிறப்பிற்குக் காரணம் தற்செயல் அல்ல

எல்லாம் தற்செயலாக நடைபெறுகின்றன என்று கூறுபவர் கள் 1. யத்ருச்சாவாதிகள். அவர்கள் மதத்தில் சோதனை சோதனைக்குரிய பொருள், கர்த்தா (செய்பவன்) காரணம், தேவதை, ரிஷி, ஸித்தர்கள், கர்மா, கர்மாவின் பயன், ஆத்மா போன்றவை ஒன்றும் கிடையாது.

ஆதலால் ஒரு பிரமாணத்தையும் ஏற்றுக்கொள்ளாத யத்ருச் சாவாதிகள் என்கிற நாஸ்திகர்களின் கொள்கை எல்லாப் பாவங் களுக்கும் மேலான பாவமாகும். 14–15

## 11. அறிவு எனும் விளக்கினால் சோதனை

தகுதியற்ற, அறமில்லாத அறிவைப் புறக்கணித்துச் சான் றோர்களின் (அறிவுரை) அறிவாகிற விளக்கினால் எல்லாவற்றை யும் உள்ளபடியே அறிஞன் அறிந்துகொள்ள வேண்டும். 16

## 12. நான்கு வகை பிரமாணங்கள் (அளவை)

ஐம்பெரும் பூதங்களாகிய இவ்வுலகில் எல்லாப் பொருட் களும் ஸத் (உள்ள பொருள்) அஸத் (இல்லாத பொருள்) என இருவகையாகப் பிரிக்கப்படுகின்றன. இவ்விருவகைப் பொருளை யும் ஆராய நான்கு வழிகள் உள்ளன. 1. ஆப்தோபதேசம் (சான் றோர் வாக்கு) 2. ப்ரத்யக்ஷம் – (காட்சி) புலன்களால் அறிவது 3. அனுமானம் (கருதல்) 4. யுக்தி (உபாயம்) என. 17

---

1. யதிருச்சாவாதி – எல்லாம் இயற்கையாகவே ஏற்படுகிறது என்று கூறுபவன்.

## 13. சான்றோர்களின் இலக்கணம்

தவம், ஞானம் இவற்றின் வலிவினால் ரஜஸ், தமஸ் என்ற இரண்டு தீயகுணங்களிலிருந்து விடுபட்டு, இறந்தகாலம், நிகழ் காலம், வருங்காலம் என்ற முக்காலத்தைப் பற்றிய கலக்கமற்ற தெளிவுமயமான அறிவு பெற்றவர்களே சான்றோர்கள் எனப்படு கின்றனர். இவர்கள் சிஷ்டர்கள் (நல்ல ஒழுக்கம் உடையவர்கள்) விபுத்தர் (நல்ல அறிவு படைத்தவர்கள்) என்றும் அழைக்கப்படு கின்றனர். இவர்களுடைய சொற்கள் அல்லது அறிவுரை ஐய மின்றி உண்மையாகவே இருக்கும்.

ரஜஸ், தமஸ் என்ற தீய குணமற்ற அவர்கள் எப்பொழுதும் உண்மையே பேசுகிறார்கள். 18–19

## 14. [1]ப்ரத்யக்ஷத்தின் இலக்கணம்

ஆத்மா, புலன்கள், மனம், பொருள், ஒலி, தொடு உணர்ச்சி, ரூபம், சுவை, மணம் இவற்றின் சேர்க்கையினால் தெளிவாக நேரிடையாகத் தோன்றும் அறிவை ப்ரத்யக்ஷம் என்கிறோம். 20

## 15. [2]அனுமானத்தின் இலக்கணம்

முன்பு தெரிந்து இப்பொழுது தெரியாத ஒரு விஷயத்தை காரணத்தைக்கொண்டு ஊகித்து அறிந்துகொள்ளுதல் அனுமானம் எனப்படும். அது நிகழ்கால அனுமானம், இறந்தகாலஅனுமானம் வருங்கால அனுமானம் என மூவகைப்படும்.

ஓர் இடத்திலிருந்து புகை வெளிவருதல் அங்கு நெருப்பு மறைந்திருக்கிறது என்று அறிதல் நிகழ்கால அநுமானமாகும்.

கருத் தரித்தவளைப் பார்த்து முன்பு ஆண் பெண் சேர்க்கை நிகழ்ந்தது என்று அறிந்துகொள்வது கடந்தகால அனுமான மாகும்.

விதையைக் கொண்டு அதன் பயன் இவ்வாறு இருக்கும் என்று ஊகித்து அறிந்துகொள்வது எதிர்கால அனுமானமாகும்.

எதிர்கால அனுமானத்திற்கு பொருளான விதையையே (விதை யைப் பார்த்து இதற்கு ஈடாகப் பழம் சிறந்தது) இறந்தகால அனுமானத்திற்கும் அறிவாளிகள் பயன்படுத்துகின்றனர். 21–22

---

1. ப்ரத்யக்ஷம்— காட்சி அளவை.

2. அனுமானம்— காரணத்தினால் ஊகித்து உணர்தல்.

## 16. யுக்தியின் (உபாயம்) உதாரணங்கள்

நீர், உழவு, விதை, பருவம் இவற்றின் சேர்க்கையினால் நெல் போன்ற தானியங்கள் உண்டாகின்றன. அதேபோல் ஐம்பெரும் பூதங்கள் ஆன்மா இவற்றின் சேர்க்கையினால் கரு உண்டாகிறது.

மத்யம் – கீழே வைக்கப்படும் கட்டை,

மந்தனம் – கடைதல்,

மந்தான – மேலே வைக்கப்படும் கட்டையின் சுழற்சி.

இம்மூன்றின் சேர்க்கையினால் நெருப்பு உண்டாகிறது. அதுபோல் வழியறிந்த மருத்துவன், மருந்து, பணியாளன், நோயாளி என்ற சிகிச்சையின் நான்கு பாதங்களிருந்தால் நோய் குணமடைகிறது. 23–24

## 17. யுக்தியின் இலக்கணம்

தெரிந்த பொருளின் காரிய காரணத் தன்மையின் தோற்றத்தைப்பற்றிய அறிவு ஏற்பட்டபின் பல காரணங்களின் சேர்க்கையினால் ஏற்படும் அறியாத பொருளின் தோற்றத்தை அறிந்து கொள்ளும் அறிவு யுக்தி எனப்படுகிறது.

இந்த யுக்தி இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற முக்காலங்களிலும் பயன்படுகிறது. இதனால் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும் கிடைக்கிறது. 25

[1]நான்குவகைச் சோதனைமுறைகள்தான் உண்டு வேறு இல்லை. இவை மூலமாகத்தான் ஸத், அஸத் இவற்றின்சோதனை செய்யப்படுகிறது. இந்த நான்கு சோதனைகள் மூலம் மறுபிறப்பு உண்டு என்பது தீர்மானிக்கப்படுகிறது. 26

## 18. சான்றோர் வாக்கு எனும் பிரமாணத்தினால் (அளவை) மறுபிறப்பு தீர்மானிப்பது

சான்றோர்கள் மூலம் அறிவுப் புலன்களால் கண்டறிந்த (ஆகமத்தை) சாஸ்திரத்தை வேதம் என்கிறோம். வேதத்தின் கருத்துக்கு மாறாக இல்லாத, நற்பழக்கமுள்ளவர்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட, உலக நன்மைக்காகச் சிறந்தவர்களால் செய்யப் பட்ட சாஸ்திரங்களையும் வேதம் என்கிறோம். சான்றோர்களால் இயற்றப்பட்ட சாத்திர வாசகங்களைக் கற்பதனால் கீழ்க்கண் டவை அறியப்படுகின்றன.

1. நான்கு வகை சாதனைகள்– சான்றோர் வாக்கு, ப்ரத்யக்ஷம் அனுமானம், யுக்தி.

தானம் (ஈகை), தவம், வேள்வி புரிதல், உண்மை பேசுதல், அகிம்சையைக் கடைபிடித்தல், புலனடக்கத்துடனிருத்தல் என இவை முன்னேற்றத்தையும், மேன்மையையும் (மோக்ஷம்) அளிக்கின்றன. அல்லது சுவர்க்கத்தையும் மோக்ஷத்தையும் அளிக்கின்றன. 27

ரஜோ குண, தமோ குணமற்ற மகரிஷிகள் இயற்றிய தர்ம சாஸ்திரத்தினாலும், மனதில் தோன்றும் தோஷங்கள் விலக வில்லையேல் அவர்களுக்காக மோக்ஷத்தின் உபதேசம் செய்யப்பட வில்லை. 28

தானம், புண்ணியம் போன்ற தர்மச் செயல்களில் ஈடுபட்ட வர்கள், அச்சம், ஆசை, வெறுப்பு, பேராசை, மோகம், அகங்காரம் இந்த தோஷமற்றவர்கள் பிரும்மஞானத்தை அறிவதில் ஈடுபட்டவர்கள், நல்லவர்கள் கடைபிடிக்க வேண்டிய வேள்வி போன்ற செயல்களை அறிந்தவர்கள், ஆராய்ச்சி செய்யும் சக்தி பெற்ற மனமுள்ளவர்கள் அவர்கள். முன்னோர்களான மகரிஷிகள் அவர்களுக்கும் முன்னோர்கள் என இவர்கள் எல்லோரும் தங்கள் திவ்ய ஞானத்தில் (அறிவும்க்கண்களால்) மறுபிறப்பு ஏற்படுவதைக் காண அதை நமக்கு உபதேசித்தருளினர். எனவே சான்றோர் வாக்கு என்ற பிரமாணத்தினால் மறுபிறப்பு உண்டு என்று தீர்மானிக்கப்படுகிறது. 29

## 19. பிரத்யக்ஷ பிரமாணத்தினால் மறுபிறப்பு தீர்மானிப்பது

கீழ்க்கண்டவற்றால் மறுபிறப்பிற்கு பிரத்யக்ஷமும் பிரமாணமாகிறது என அறியலாம்.

தாய் தந்தையர்களைப் போல் குழந்தைகளில்லாமை, ஒரே தாய் தந்தையர்களுக்குப் பிறந்த குழந்தைகளிடத்தில் நிறம், குரல் உருவம், மனம், அறிவு, அதிர்ஷ்டம் இவற்றில் மாறுபாடு, உயர்ந்த தாழ்ந்த குடியில் பிறத்தல், அடிமை, ஆண்டானாக ஆகுதல், இன்ப துன்ப வாழ்க்கை நடத்தல், நீண்டஆயுள், குறைந்த ஆயுள் என்ற பாகுபாடு, இவ்வுலகில் செய்த செயலுக்கு பயன் ஏற்படுதல், கற்றுக் கொடுக்காமலே பிறந்த குழந்தைகள் அழுவது, பால் குடித்தல், சிரித்தல், பயப்படுதல் போன்ற செயல்கள், சாமுத்திரிகா லக்ஷணப்படி கர்பத்திலேயே சிசுவின் கைகளில் காணும் ரேகைகள், உடலில் மச்சங்கள், இருவர் ஒரே சமயத்தில் ஒரே செயலை ஒரேவிதமாகத் தொடங்கினாலும் பயனில் மாறுபாடு, ஒரு செயலில் அறிவு ஈடுபடுதல், மற்றொன்றில் ஈடுபடாதிருத்தல், முன்பிறவியின் நினைவு, பிறப்பு, இறப்பு, ஒரே சமயத்

தில் இருவரைப் பார்த்தால் ஒருவரிடம் அன்பும், மற்றவரிடம் வெறுப்பும் ஏற்படுதல் என இம்மாதிரியான மாறுபட்ட செயல் களைக் கண்ணால் பார்க்கும்போது இவற்றிற்கெல்லாம் மறு பிறப்புத்தான் காரணமாகும் எனத் தீர்மானிக்கிறோம். ஆகை யால் மறுபிறப்பு உண்டு என பிரத்யக்ஷ பிரமாணத்தாலும் அறிய லாம். 30

## 20. அனுமான பிரமாணத்தினால் மறுபிறப்பு தீர்மானிப்பது

1. அனுமானிப்பதற்கு காட்சி அளவை (ப்ரத்யக்ஷம்) தேவைப் படுகிறது. இந்தக் கண்ணால் பார்க்கும் அறிவை ஆதாரமாகக் கொண்டுதான் அனுமானிக்கப்படுகிறது. கர்மம் (செயல்) இரு வகைப்படும் 2. ஸாமான்ய கர்மா (பொதுவான செயல்) 3. ஆநு பந்திக கர்மா (தொடர்ந்து வரும் செயல்) ஸாமான்யகர்மாவின் பயன் வாழ்ந்திருக்கும்போது ஒவ்வொரு நாளும் அனுபவிக்கப்படு கிறது. மற்றொன்று ஆநுபந்திக கர்மா.

முன்பிறவியில் தான் செய்த விலக்கத்தகாத, அழிவற்ற தெய் வம் என்று பெயருடைய கர்மாவுக்கு ஆநுபந்திக கர்மா எனப் பெயர். விகாரமான குழந்தை பிறப்பதுபோலானது அதன் பய னாகும்.

இவ்வித அனுமானத்தினால் பரலோகம், மறுபிறவி இரண்டும் உண்டென்று அறியலாம். இவ்விரண்டையும் உறுதிப்படுத்துவதற் காக இரண்டு உதாரணங்கள் தருகின்றோம்.

1) பழத்தைக் கொண்டு விதையை அனுமானித்துக்கொள்வது போல உயர்குடிப்பிறப்பு, தாழ்குடிப் பிறப்பு இவற்றைப் பார்த்து முன்பிறவியில் செய்த நல்ல, தீய செயல்களை அனுமானிக்கி றோம். அதனால் முன்பிறவி உண்டு என்று புலனாகிறது.

2) விதையைப் பார்த்து வரப்போகும்பழத்தை அனுமானித்துக் கொள்வதுபோல் இந்த உடலால் செய்யப்பட்ட நல்ல, தீய செயல் களினால் எதிர்காலத்தில் மறுபிறப்பை அனுமானிக்கிறோம். அத னால் மறுபிறவி, உண்டு என்று தெரிய வருகிறது. 31

---

1. அனுமானிப்பது – ஊகிப்பது
2. ஸாமான்ய கர்மா – பொதுவான செயல்
3. ஆனுபந்திக கர்மா – தொடர்ந்து வரும் செயல்.

## 21. உபாயத்தினால் மறுபிறவி அறிதல்

மறுபிறவி உண்டு என்பதற்கான உபாயம் கூறப்படுகிறது. ஐம்பெரும் பூதங்கள், ஆன்மா இவற்றின் கூட்டுச் சேர்க்கையினால் கரு தரிக்கிறது. செய்கிறவன் கருவி இரண்டின் சேர்க்கையினால் செயல் ஏற்படுகிறது. செய்த செயலுக்குப் பயனும் உண்டாகிறது. செய்யாத செயலுக்குப் பயனில்லை. விதை இல்லாமல் முளை ஏற்படுவதில்லை. ஒரு விதையிலிருந்து மற்றொரு முளை ஏற்படாது. செயலுக்குத் தக்கவாறு பயன் ஏற்படுகிறது. இதனால் மறுபிறவி உண்டு என்பது அறியப்படுகிறது. 32

## 22. கடைபிடிக்க வேண்டிய அற முறைகள்

சான்றோர் வாக்கு, நேரில் பார்த்து அறிதல், ஊகம், உபாயம் என நான்குவகைப் பிரமாணங்களினால் (அளவை) மறுபிறப்புண்டு எனத் தீர்மானித்தபின் அறவழிகளில் கவனம் செலுத்த வேண்டும்.

அற முறைகளுக்கான செயல்கள் யாவை என்ற வினாவிற்கு விடைதருகிறார் நூலாசிரியர்.

முதலாவதான (பருவம்) பிரும்மசர்ய ஆச்ரமத்தில் குருவுக்குப் பணிவிடை, வேதம் ஓதுதல், பிரும்மசரிய விரதத்தைக் காத்தல் என இவற்றில் நன்கு கவனம் செலுத்த வேண்டும்.

இரண்டாவதான இல்லறத்தில் ஈடுபடுதல், மகப்பேற்றைத் தோற்றுவித்தல், பணியாட்களைக் காத்தல், விருந்தாளிகளைப் பேணுதல், தானம் செய்தல், பிறர் பொருளின் மீது பற்றற்றிருத்தல் என இச்செயல்களில் கவனமாயிருத்தல் வேண்டும்.

மூன்றாவதான வானப்பிரஸ்தத்தில், தவம், பிறருடைய குணங்களில் குற்றம் பாராமை, துன்பமளிக்கும் உடல், சொல், மனம் இவற்றின் செயல்களில் கருத்துடன் இருத்தல் என இச்செயல்களில் அக்கரை கொள்ள வேண்டும்.

நான்காவதான உடல், புலன்கள், மனத்தின் செயல்கள், அறிவு, தன் ஆன்மா இவற்றை சோதனை செய்வது, மனதை ஸமாதியில் ஈடுபடச் செய்து இவற்றில் கவனமாக இருக்க வேண்டும்.

நல்லோரால் இகழப்படாததும், சுவர்க்கத்தை அளிக்கக் கூடியதும், செல்வம், வளர்ச்சி இவற்றைத் தரவல்ல, மற்ற அறச் செயல்களையும் தொடங்க வேண்டும். அவ்வாறு செய்கிறவன்

இவ்வுலகில் புகழையும், மேலுலகில் சுவர்க்கத்தையும் அடைகிறான்.

இவ்வாறு மூன்றாவதான பரலோகைஷணா விளக்கப்பட்டது. 33

## 23. ஏழு வகையான மூன்றுகள்

1. மூன்று தூண்கள் (பிடிப்புகள்) (உபஸ்தம்பம்)
2. மூவகை பலம்
3. நோய் தோன்றுவதற்கான மூன்று காரணங்கள்
4. மூவகை நோய்கள்
5. நோய்களின் மூன்று வழிகள்
6. மூவகை மருத்துவர்கள்
7. மூவகை மருந்துகள் 34

## 24. மூன்று உபஸ்தம்பங்கள் (பிடிப்புகள்)

உணவு, தூக்கம், 1. பிரும்மசர்யம் இவை மூன்றும் உடலுக்கு தூண்கள்போல் அமைந்துள்ளன. இவற்றை முறைப்படி கடைபிடித்தால் இவ்வுடல் உறுதிப்பட்டு, ஒவ்வாத பொருட்களைப் பயன்படுத்தாததால் பலம், நிறம், வளர்ச்சி இவற்றால் வளர்க்கப்பட்டு ஆயுட்காலம் வரை பின்தொடர்கின்றன. ஒவ்வாத பொருட்கள் மேலே விளக்கப்பட்டுள்ளன. 35

## 25. மூவகை பலம் (வலிவு)

2. ஸஹஜம், 3. காலஜம், 4. யுக்திக்ருதம் எனப் பலம் மூவகைப்படும்.

உடல், மனம் இவற்றில் இயற்கையாக (பிறவியிலேயே) ஏற்படும் பலத்திற்கு ஸஹஜ பலம் என்பது பெயர்.

பருவகாலங்களின் பிரிவுக்கு ஏற்றவாறும், பாலபருவம்,

---

1. பிரும்மசர்யம் — புலனடக்கம்
2. ஸஹஜம் — உடல், மனம் இவற்றில் இயற்கையாக ஏற்படும் பலம்.
3. காலஜம் — பருவங்களின் பிரிவு, பாலபருவம், இளமை, முதுமை இவற்றிற்கு ஏற்றவாறு ஏற்படும் பலம்.
4. யுக்திக்ருதபலம் — வலிவு தரும் உணவினாலும், உடற்பயிற்சியினாலும் ஏற்படும் பலம்.

இளமை, முதுமை இவற்றிற்கு ஏற்றவாறும் ஏற்படும் பலம் காலஜ பலம்.

வலிவு தரும் உணவினாலும், உடற்பயிற்சியினாலும் ஏற்படும் பலம் யுக்திக்ருத பலம் என்பதாகும். 36

## 26. நோய் உண்டாவதற்கான மூன்று காரணங்கள்

நோய் உண்டாவதற்கு மூன்று காரணங்கள்.

1. புலன்களுக்கு தமக்குரிய பொருட்களுடன் அதிக அளவில் தொடர்பு ஏற்படுவது. (அதியோகம்)

2. புலன்களுக்கு தமக்குரிய பொருட்களுடன் முற்றிலும் தொடர்பு ஏற்படாதிருத்தல் அல்லது (அயோகம்)

3. தமக்குப் பொருந்தாப் பொருட்களுடன் புலன்களுக்குத் தொடர்பு ஏற்படுதல் அல்லது தமக்குரிய பொருட்களுடன் தவறானதொடர்பு கொள்வது (மித்யாயோகம்) எனப்படும்.

இதேபோல் கர்மத்தின் அதியோகம், அயோகம், மித்யாயோகம், காலத்தின் அதியோகம், அயோகம், மித்யா யோகம், என இவைகளும் நோய்களுக்குக் காரணமாகின்றன.

## 27. கண் என்ற புலனின் 1. அதியோகம், 2. அயோகம், 3. மித்யாயோகம்

மிகுந்த ஒளிவீசும் சூரியன், நெருப்பு போன்ற காட்சிகளை அதிக அளவில் பார்த்தல். உருவங்களுக்கு கட்புலனுடன்கூட அதிகத் தொடர்பு ஏற்படுதல் இவை கண் புலனுக்கு அதியோகமாகும்.

கண்ணால் உருவங்களை முற்றிலும் பார்க்காமலிருத்தல், சிறிதளவு பார்த்தல் இரண்டும் ரூபத்தின் அயோகமாகும்.

புலன்களுக்கு வெகு அருகில் பொருட்களிருத்தல், மிகவும் தொலைவில் இருத்தல் போல் தோற்றம், கடினமான, பயங்கரமான, ஆச்சரியமான, வெறுக்கத்தக்க, அருவருக்கத்தக்க, விகாரமான, விரட்டக்கூடிய, விரைவில் அச்சத்தை தோற்றுவிக்கக்

---

1. அதியோகம் – புலன்களுக்கு பொருட்களுடன் அதிகத் தொடர்பு கொள்ளுதல்.
2. அயோகம் – முற்றிலும் தொடர்பு அற்றிருப்பது.
3. மித்யாயோகம் – தவறான முறையில் தொடர்பு கொள்வது.

கூடிய உருவங்களைப் பார்ப்பதுதான் கண் என்ற புலனுக்கு ரூபம் என்ற பொருள்களுடன் உண்டாகும் மித்யாயோகம் ஆகும்.

## 28. செவிப்புலனின் அதியோக, அயோக, மித்யாயோகங்கள்

இடி போன்ற உரத்த ஒலி, நகாரா போன்றவற்றின் ஒலி, உரத்த அழுகுரல் இவற்றைக் கேட்பது செவிப்புலனின் அதியோக மாகும். காதுகளாலே ஒலியை முற்றிலும் கேளாமலிருப்பது அதன் அயோகம். கடினமான சொற்கள், அன்பார்ந்த பொருள்களின் அழிவைத் தெரியப்படுத்தல், மரணத்தை அறிவித்தல், அவமானத் தையும், அச்சத்தையும் உண்டுபண்ணக்கூடிய ஒலியைக் கேட்டல் ஆகியவை செவிப்புலனின் மித்யாயோகமாகும்.

## 29. மூக்கின் அதியோகம், அயோக மித்யாயோகங்கள்

மிக்க விறுவிறுப்பானதும், க்ரூரமானதும், அழுகியதுமான பொருட்களின் வாசனையை அதிக அளவில் நுகர்வது மூக்கின் அதியோகமாகும்.

முற்றிலும் மணத்தை நுகராமலிருத்தல் அதன் அயோக மாகும். கெட்ட மணம், மனதிற்குப் பிடித்தமில்லாத தூய்மையற்ற பொருட்கள், நஞ்சு கலந்த காற்று, பிண நாற்றம் போன்றவற்றை நுகர்வது மூக்கின் மித்யாயோகமாகும்.

## 30. சுவைப்புலனின் அதியோக, அயோக மித்யாயோகங்கள்

சுவைகளை அளவுக்கு மீறி அறிதல், நாக்கின் அதியோகம், முற்றிலும் சுவையைச் சுவைக்காமலிருத்தல் அயோகம், விமான ஸ்தானத்தில் முதல் அத்தியாயத்தில் எவ்வித உணவு முறைகள் கூறப்பட உள்ளனவோ அவற்றில் ''ராசி'' (அளவு) என்பதைத் தவிர்த்து ஏழுவிதமான முறைகளுக்குப் புறம்பான சுவைகளுடன் நாக்கிற்கு ஏற்படும் சேர்க்கை மித்யா யோகம் எனப்படும்.

## 31. தொடு உணர்ச்சியின் அதியோகம், அயோகம், மித்யா யோகங்கள்

மிக்கக் குளிர்ச்சி, மிக்க உஷ்ணம் ஏற்படுத்தக்கூடிய வகையில் நீராட்டம், எண்ணெய் தேய்த்துக் குளித்தல், பூசுதல் இவற் றுடன் தொடு உணர்ச்சிக்கு அதிகமான சேர்க்கை ஏற்படுவது அதி யோகமாகும்.

இவற்றுடன் முற்றிலும் தொடர்பற்றுபோதல் அயோகமாகும்.

மிக்கக் குளிர்ச்சி, மிக்க உஷ்ணம் தரக்கூடிய நீராட்டம், எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல், பூசுதல் இவற்றை முறை

தவறிப் பயன்படுத்துவதுடன், ஏற்றத்தாழ்வான இடங்களிலிருத்தல், அடிபடுதல், தூய்மை அற்ற பொருள்களைத் தொடுதல், பூதம், பிணம், நோய் உண்டாக்கக்கூடிய ஜீவ அணுக்களுடன் தொடர்பு என இவ்வாறு தொடு உணர்ச்சிக்கு ஏற்படும் தொடர்பு மித்யாயோகம் எனப்படும். 37

1. **தொடு உணர்ச்சி** ஒன்றுதான் எல்லாப் புலன்களிலும் பரவியிருக்கிறது. மனதுடன் தோலுக்கு உள்ள தொடர்பு 2. **மைவாயம்** எனப்படும். அணுவான மனதும், தோலும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டிருக்கின்றன. அது 3. **அநுபசயம்** எனக் கருதப்படுகிறது. அது ஐந்துவகையாகவும், மூவகையாகவும் பிரிக்கப்படுகிறது. இதை 4. **அஸாத்ம்ய இந்திரியார்த்த ஸம்யோகம்** எனக் கூறுகின்றனர். 5. **ஸாத்ம்யம்** என்ற சொல்லை உபசயம் எனும் கருத்தில் பயன்படுத்துகின்றனர். 38

## 32. கர்மாவின் அதியோகம், அயோகம், மித்யாயோகம்

சொல், மனது, உடல் இவற்றின் செயல் கர்மா என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. இம்மூன்றை அளவுக்கு மீறி அதிகமாகச் செயலில் ஈடுபடுத்தல், கர்மாவின் அதியோகம் எனப்படும். முற்றிலும் செயலில் ஈடுபடுத்தாமை அயோகமாகும். தானாக இயங்குகின்ற மலம், சிறுநீர் போன்றவற்றின் வேகங்களை அடக்குதல், தானாக இயங்காத மலம், சிறுநீர் இவற்றின் வேகங்களை பலாத்காரமாக வெளிக்கொண்டு வருதல், தாறுமாறாக இடறி விழுதல், நடத்தல், விழுதல், உறுப்புகளைக் கண்டபடி பயன்படுத்தல், தூய்மையற்ற பொருட்களை உறுப்புக்களில் பூசிக் கொள்ளுதல், சொரிந்துகொள்ளுதல், அடிபடுதல், பிடித்து விடுதல், உள்ளே இழுத்து வெளிவிடும் மூச்சை அடக்குதல், உடலை வருத்தக்கூடிய செயல்கள், கள் குடித்தல், வெயிலில் அலைதல் போன்ற செயல்கள் உடலின் மித்யா யோகமாகும்.

---

1. தொடு உணர்ச்சி – மெய்ப்புலனில் ஏற்படும் ஒருவகை அறிவு.
2. ஸமவாயஸம்பந்தம்– பிரிக்க முடியாததொரு சேர்க்கை.
3. அனுபசயம் – ஒவ்வாமை
4. அஸாத்ம்ய இந்திரியார்த்த ஸம்யோகம் – புலன்களை ஒவ்வாத முறையில் பயன்படுத்துவது.
5. ஸாத்ம்யம் – உடலோடு ஒத்துக் கொள்ளுதல்.

கோள் சொல்லுதல், பொய் பேசுதல், காரணமின்றி சண்டையிடுதல், அன்பற்ற, தொடர்பற்ற, எதிரிடையான, கொடூரமான சொற்களைக் கூறுதல் இவை சொல்லின் மித்யாயோகமாகும்.

அச்சம், துயரம், சினம், பேராசை, மோகம், அகங்காரம், பொறாமை, தவறாகக் காணுதல் போன்றவை மனதின் மித்யாயோகமாகும். 39

இவ்வாறு சுருக்கமாகக் கூறிய அதியோகம், அயோகம் இவற்றைத் தவிர்த்து, சொல், மனம், உடல் இவற்றால் செய்யப்படுகிற நன்மையற்ற செயல்கள் என இங்குக் கூறப்படாதவைகளும் மித்யாயோகமாகும். 40

அதியோகம், அயோகம், மித்யாயோகம் என்ற மூன்றுவகைப் பிரிவுகள், சொல், மனது, உடல் இவற்றால் செய்யப்படுகிற மூவகைச் செயல்கள் இவற்றை 1. பிரக்ஞாபராதம் என்று அறிந்து கொள்க. 41

## 33. காலத்தின் அதியோக, அயோக, மித்யாயோகங்கள்

குளிர்ச்சி, வெயில், மழை இவற்றை முறையே கொண்ட 2. ஹேமந்தம், 3. கிரீஷ்மம், 4. வர்ஷா என்ற மூன்று பருவங்களைக் கொண்டது ஒரு வருடமாகும். (ஆயுர்வேத சாத்திரப்படி) இது காலம் எனக் குறிப்பிடப்படுகிறது.

குறிப்பிட்ட பருவங்களில் தம்தம் இருக்கவேண்டிய குணங்களைக் காட்டிலும் அதிக அளவில் அவற்றைக் காண்பது காலத்தின் அதியோகமாகும்.

குறிப்பிட்ட பருவங்களில் இருக்கவேண்டிய குணங்களைக் காட்டிலும், குறைந்த அளவில் அவற்றைக் காண்பது காலத்தின் அயோகமாகும்.

குறிப்பிட்ட பருவங்களுக்குச் சம்பந்தமில்லாத குணங்களைக் காண்பது காலத்தின் மித்யாயோகமாகும். காலத்தை பரிணாமம் எனும் சொல்லால் அழைக்கிறோம். 42

---

1. பிரக்ஞாபராதம்– மதிக்குற்றத்தால் செய்யப்படும் தவறுகள்.
2. ஹேமந்தம் – மார்கழி, தை.
3. கிரீஷ்மம் – ஆனி, ஆடி.
4. வர்ஷா – ஆவணி, புரட்டாசி.

## 34. நோய்க்கும், நோயற்ற வாழ்வுக்கும் காரணம்

அஸாத்ம்ய இந்திரியார்த்த ஸம்யோகம், ப்ரக்ஞாபராதம், பரிணாமம், அதியோகம், அயோகம், மித்யாயோகம் என்பவை நோய்களுண்டாவதற்குக் காரணங்கள். ஸமயோகம் ஆரோக்கியத்திற்குக் காரணமாகிறது. 43

பொருள்களின் இருத்தலும், இன்மையும் [1]ஸமயோகம், அயோகம், அதியோகம், மித்யாயோகம் என்ற இந்நான்கினாலேயே அறியப்படுகின்றன. ஒரு பொருள் தன் நிலையில் இருப்பதற்கும், அழிவதற்கும், பொருளின் சேர்க்கையோ, பிரிவோ காரணமாகிறது. எடுத்துக்காட்டாக ஒரு மரத்தின் வளர்ச்சிக்கு நிரம்பத் தண்ணீர் ஊற்றுதல், உரமிடுதல் போன்ற காரணச் சேர்க்கையே காரணமாகும்.

அதேபோல் மரத்தின் அழிவிற்குத் தண்ணீர் ஊற்றாமை, வெயிலின் கொடுமை, இடிவிழுதல் ஆகியவை காரணமாகின்றன. மரத்தின் இருக்கைக்கும், இல்லாமைக்கும் காரணங்கள் யுக்திகளைச் சார்ந்தவை ஆகும். 44

## 35. மூவகை நோய்கள்

நோய்கள் [2]நிஜம், [3]ஆகந்துகம், [4]மானஸம் என மூவகைப்படும்.

உடலில் உள்ள வாதம், பித்தம், கபம் என்ற தோஷங்களின் மாறுபாட்டால் தோன்றும் நோய் நிஜம் எனக் கூறப்படுகிறது.

பூதம், பிரேதம், நஞ்சு கலந்த காற்றின் சேர்க்கை, நெருப்பினால் எரிந்து போதல், ஆயுதங்கள் போன்றவற்றால் அடிபடுதல் இவற்றால் தோன்றும் நோய் ஆகந்துகம் எனப்படும்.

---

1. ஸமயோகம் – தாதுக்களின் ஏற்ற தாழ்வு இல்லாத சேர்க்கை.
2. நிஜம் – உடலைச் சார்ந்தது. உடலில் தானாகத் தோன்றுவது.
3. ஆகந்துகம் – எதிர்பாராத வகையில் வெளியிலிருந்து வந்து சேர்பவை.
4. மானஸம் – மனதுக்குள்ளேயே தோன்றக்கூடியவை.

மனதிற்குப் பிடித்தமான பொருட்களை அடையாமை, பிடித்தமில்லாத பொருட்களை அடைதல் இவற்றால் உண்டாகும் நோய் மானஸிகம் எனப்படும். 45

## 36- மனதில் தோன்றும் நோய்களுக்கான மருத்துவம்

மனதில் தோன்றும் நோய்களால் நொந்து போனவர்களும், தன் அறிவினால் நன்மை, தீமைகளை அளிக்கக்கூடியவற்றை நன்கு ஆராய்ந்து, தீமை பயக்கக்கூடியவற்றை விட்டு, நன்மை பயப்பனவற்றைக் கடைப்பிடிக்க முயற்சிக்க வேண்டும். இவ்வுலகில் அறம், பொருள், இன்பம் இம்மூன்றைத்தவிர உலகில் மனதிற்கு இன்பத்தையோ, துன்பத்தையோ தரக்கூடியது வேறு ஒன்றும் கிடையாது.

ஆயுர்வேதம், இலக்கண நூல், யோக நூல் ஆகியவற்றை நன்கறிந்த உயர்ந்த மனிதர்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டும்.

மேலும், ஆத்மா, நாடு, குலம், காலம், பலம் இவற்றைப் பற்றிய அறிவே இவற்றைப் பெறுவதற்குக் காரணமாகின்றது. 46

## இக்கருத்தை விளக்கும் செய்யுள்

மனநோய் கொண்டவனுக்கு அறம், பொருள், இன்பம் இம்மூன்றையும் ஆராய்ந்து கடைப்பிடிப்பதுதான் மருந்தாகும். மனநோயைப் போக்கிக் கொள்ள விரும்பும் மனிதன் ஆயுர்வேதம், இலக்கணம், யோகம் போன்ற நூல்களைக் கற்றறிந்த அறிஞர்களுடன் பழகுதல் வேண்டும். மேலும், ஆன்மா, நாடு, குலம், காலம், பலம், சக்தி இவற்றைப் பற்றிய அறிவைப் பெறுவதற்கு மிகுந்த முயற்சியுள்ளவனாக ஆக வேண்டும். 47

## 37. நோய் உண்டாகும் மூவிடங்கள்

சாகா, மர்ம அஸ்தி சந்திகள், கோஷ்டம் இம்மூன்றும் உடலில் நோய்கள் உண்டாகும் இடங்களாகும்.

இரத்தம், மாமிசம், மேதஸ், எலும்புகள், மஜ்ஜை, சுக்ரம் (விந்து) வாத பித்த கபம் என்ற மூன்று தாதுக்கள், தோல் இவை சாகா என்ற சொல்லால் அழைக்கப்படுகின்றன. இவை நோய் தோன்றும் வெளிப்படையான இடங்கள்.

சிறுநீர்ப்பை, இதயம், தலை, தொண்டை, தொப்பிள், ஆஸனவாய் போன்ற மர்மமான இடங்கள், எலும்புகளின் மூட்டுகள், எலும்புகள் ஒன்று சேருமிடங்கள், அவற்றில் அமைந்திருக்கும்

நரம்புகள், நாடிகள் இவை நோய் தோன்றும் மத்யம மார்க்கம் [1]மஹாஸ்ரோதம், [2]சரீரமத்யம் [3]மகாநிம்னம், [4]ஆம, [5]பக்வாசயம் இவை கோஷ்டம் என்பதைக் குறிக்கும் வெவ்வேறு சொற்களாகும். இவை நோய் தோன்றும் உள்ளடங்கிய இடம். 48

## 38. [6]வெளிமார்கத்தில் தோன்றும் நோய்கள்

கண்ட மாலை, சிறுகட்டிகள், ஊமைக்கட்டிகள், பிளவை, தோலில் ஏற்படும் முள் போன்ற சொறசொறப்பு, மாமிசவளர்ச்சி, உடலில் தோன்றும் உளுந்து போன்ற புள்ளிகள், குஷ்டம், வங்கு, போன்ற நோய், தோலில் தோன்றும் நோய்கள், அக்கி, வீக்கம், குன்மம், மூலநோய், பெரிய கட்டிகள் போன்றவைகள் [7]சாகையில் தோன்றும் நோய்கள்.

## 39. [8]மர்ம ஸ்தானங்களில் ஏற்படும் நோய்கள்

பாரிச வாயு, பாதி உடலில் ஏற்படும் பிடிப்பு, தன் நிலை இழந்து கீழே விழுதல், முகம் கோணிப்போதல், உடல் உருக்கி நோய், எலும்புருக்கி நோய், எலும்பு மூட்டுகளில் குத்தல், வலி, ஆசனவாய் நழுவிப்போதல், கழுத்துமேல் உள்ள உறுப்புக்களில் தோன்றும் நோய், இதய நோய், நீர்ப்பையில் தோன்றும் நோய் என இவை [9]மத்ய மார்க்கத்தில் தோன்றூம் நோய்களாகும்.

## 40. [10]கோஷ்டத்தில் தோன்றும் நோய்கள்

காய்ச்சல், கழிச்சல், வாந்தி, அலஸகம் எனும் அசீர்ணநோய், காலரா, இருமல், இழுப்பு, விக்கல், வயிற்று உப்புசம், வயிற்றுக்

---

1. மகாஸ்ரோதம்– தொண்டையிலிருந்து மலத்துவாரம் வரை செல்லும் வழி.
2. சரீரமத்யம் – உடலின் நடுப்பகுதி.
3. மகா நிம்னம் – வயிற்றில் உள்ள ஆழமான குழி.
4. ஆம – இரைப்பை.
5. பக்வாசயம் – சீரணப்பை இவ்விரண்டும் கொண்ட பகுதி.
6. வெளிமார்க்கம் – தோல் இரத்தம் முதலியன.
7. சாகை ,,
8. மர்மஸ்தானம் – உயிர் நிலை
9. மத்ய மார்க்கம்– உடலின் நடுப்பகுதி.
10. கோஷ்டம் – உணவுப்பை, சீரணப்பை, பித்தப்பை, கல்லீரல், மண்ணீரல், பெருங்குடல், சிறுகுடல், நுரையீரல், இதயம், மூத்திரக் குண்டிக்காய், சிறுநீர்ப்பை, மலப்பை இவை அடங்கியுள்ள இடம்.

குள் தோன்றும் நோய்கள், மண்ணீரலில் தோன்றும் நோய்கள் இவை உட்புறமாகத் தோன்றும் நோய்களாம்.

அக்கி, வீக்கம், குன்மம், மூலநோய், பெருங்கட்டிகள் போன்றவை கோஷ்டத்தில் ஏற்படக்கூடியவை. 49

## 41. மூவகை மருத்துவர்கள்

மருத்துவ வேடம் பூண்டவர்கள் (பிஷக் சத்ம சரர்கள்), புகழ் வாய்ந்த மருத்துவர்களின் பெயர்களைக் கூறிக்கொண்டு தன்னை மருத்துவனாகக் கருதுபவன் (ஸித்தஸாதிதர்), மருத்துவ நூலில் கூறியுள்ள மருத்துவனுக்குத் தேவையான குணங்களுடன் கூடியவன் (வைத்ய குணயுக்தன்) என இவ்வாறு உலகில் மூவகை மருத்துவர்கள் உள்ளனர். 50

## 42. மருத்துவ வேடம் பூண்டவர்களின் இலக்கணம் [1](சத்மசரன்)

மருத்துவர்கள் பயன்படுத்தும் பாத்திரங்கள், மூலிகைகள், நூல்கள், சொல் திறமை, மருத்துவன் சோதிப்பது போன்று நடிப்பது இவற்றைக்கொண்டு மருத்துவன் எனப் பெயர் பெறும் அறிவில்லாதவன் சத்மசரன் எனப்படுகிறான். 51

## 43. [2]ஸித்தஸாதிதனின் இலக்கணம்

செல்வம், புகழ், அறிவு, ஸித்தர்களின் சேர்க்கை இவை அற்றவர்கள் மேற்கண்டவை உள்ளவர்களின் பெயர்களைக் கூறிக்கொண்டு தங்களை மருத்துவராகக் கருதுபவர்கள் ஸித்தஸாதிதர்கள் எனப் பெயர் பெறுகின்றனர். 52

## 44. மருத்துவர்களுக்குரிய குணங்களுடன் கூடிய மருத்துவர்களின் இலக்கணம் [3](வைத்திய குணயுக்தன்)

ஆயுர்வேத நூலில் கூறியபடி மருந்து, மூலிகைகள் இவற்றைப் பயன்படுத்தும் முறையை நன்கறிந்தவர்கள், நூலறிவு உள்ளவர்கள், ஆயுர்வேத சாத்திரத்தின் நுட்பமறிந்தவர்கள், சிகிச்சை செய்து பன்முறை வெற்றி பெற்றவர்கள், இன்பமளிக்கக்கூடியவர்கள் இப்படிப்பட்ட மருத்துவர்களை ஜீவிதாபிஸரர்கள் (உயிரைத்

---

1. சத்மசரன் – மருத்துவ வேடம் பூண்டவன்.
2. ஸித்தஸாதிதன் – புகழ்பெற்ற மருத்துவர்களின் பெயரைக் கொண்டு பிழைப்பவன்.
3. வைத்திய குணயுக்தன் – ஆயுர்வேத நூலில் உள்ள மருத்துவனுக்குரிய குணங்களுடன் கூடியவன்.

திருப்பிக் கொணர்பவர்கள்) எனப்படுகின்றனர். அவர்களிடம் தான் மருத்துவம் செய்யும் ஆற்றல் உள்ளது. 53

## 45. மூவகை சிகிச்சைகள்

[1]**தைவவ்யபாச்ரயம்,** [2]**யுக்திவ்யபாச்ரயம்,** [3]**ஸத்வாவஜயம்** என சிகிச்சை மூவகைப்படும்.

மந்திரம், மருந்து, மணி அணிதல், மங்களச் சடங்கு, தேவதைகள் அல்லது பூதங்களுக்குப் பலியிடுதல், ஹோமம், கட்டுப்பாடு, கழிவுச்சடங்குகள், பட்டினியிருத்தல், ஆசி வழங்குதல், பெரியோர்களை வணங்குதல் போன்றவை. தெய்வத்தைச் சார்ந்த சிகிச்சை. (தைவவ்யபாச்ரயம்).

யுக்திவ்யபாச்ரயம் (கூட்டுப் பொருளைச் சார்ந்தது) உணவு, மருந்துப் பொருட்கள் இவற்றைப் பயன்படுத்திச் செய்யும் சிகிச்சை யுக்தியைச் சார்ந்த சிகிச்சையாகும்.

ஸத்வாவஜயம் (மனக்கட்டுப்பாடு) — நன்மை பயக்காத விஷயங்களிலிருந்து மனதை அடக்குதல் ஸத்வாவஜயம் எனப்படும். 54

உடலில் உள்ள தோஷங்கள் சீற்றமடைவதனால் உடலையே இருப்பிடமாகக் கொண்டு தோன்றும் நோய்களுக்குப் பெரும்பாலும் மூவகைச் சிகிச்சைகளைப் பயன்படுத்துகின்றனர். அவை [4]**அந்தః பரிமார்ஜனம்** உள்ளுறுப்புகளில் தோன்றும் நோய்களை சுத்தம் செய்தல், [5]**பஹிః பரிமார்ஜனம்** வெளி உறுப்புகளில்தோன்றும் நோய்களைச் சுத்தம் செய்தல், [6]**சஸ்திர ப்ரணிதானம்** அறுவைச் சிகிச்சை முறை என்பன.

---

1. தைவவ்யபாச்ரயம்— தேவதைகளைச் சார்ந்தது.
2. யுக்திவ்யபாச்ரயம் — மருந்து, உணவு, செயல் இவற்றைக் கொண்டு மருத்துவமுறைகளில் யுக்தியைக் கடைப்பிடித்தல்.
3. ஸத்வாவஜயம் — மனக்கட்டுப்பாடு
4. அந்த:பரிமார்ஜனம்— உள்ளுறுப்புக்களில் தோன்றும் நோய்களைச் சுத்தப்படுத்துதல்.
5. பஹிః பரிமார்ஜனம்— வெளி உறுப்புகளில் தோன்றும் நோய்களைச் சுத்தப்படுத்துதல்.
6. சஸ்திரப்ரணிதானம்— அறுவை சிகிச்சை.

## 46. அந்தஃ பரிமார்ஜனத்தின் விளக்கம்

கெட்ட உணவை உண்பதனால் உடலின் உள்ளுறுப்புக்களில் தோன்றும் நோய்களுக்கு உள்ளுக்கு மருந்து கொடுத்து நீக்கும் சிகிச்சை அந்த: பரிமார்ஜனம் எனப்படுகிறது.

## 47. பஹிஃ பரிமார்ஜனத்தின் விளக்கம்

வெளிப்புறத்தில் உள்ள தோலில் ஏற்படுகிற நோய்களுக்கு எண்ணெய்க்குளியல், வியர்ப்பித்தல், மேற்பூச்சுப்பூசுதல், ஊற்றுதல், பிடித்து விடுதல், போன்ற சிகிச்சைமுறை பஹி: பரிமார்ஜனம் என்பதாகும்.

## 48. சஸ்திர ப்ரணிதானத்தின் விளக்கம்

வெட்டுதல், பிளத்தல், குத்துதல், சிறுதல், சுரண்டல், பிடுங்கல், துளைத்தல், தைத்தல், நுழைத்தல், க்ஷாரப் பொருட்களை இடுதல், அட்டைப் பூச்சியை செயல்படுத்துதல் இவை போன்ற செயல்கள் அறுவைச் சிகிச்சை எனப்படும். 55

அறிவாளியான நோயாளி நோய் ஏற்பட்டவுடன் வெளிப்புறத்தில் மருந்தைப் பயன்படுத்தியோ, உள்ளுக்குச் செலுத்தியோ, அறுவைச் சிகிச்சை செய்தோ தன் நோயை நீக்கி நன்மை பெறுகிறான். 56

அறிவிலி தனக்கு ஏற்பட்ட எதிரிகளை அறியாததுபோல அறிவிலியான நோயாளி அறியாமையாலோ, கவனக் குறைவாலோ தனக்குத் தோன்றிய நோய்களை அறிந்துகொள்வதில்லை. 57

அறிவிலியால் அறியப்படாத அந்த நோய் முதலில் சிறிதாகத் தொடங்கிப் பிறகு பெரிதாக ஆகி முற்றிவிடுகிறது. முற்றிய அந் நோய், நோயாளியின் ஆயுளையும், வலிவையும் அழித்துவிடுகிறது. 58

அறிவில்லாதவன் தனக்கு ஏற்பட்ட முற்றினநோய் தன்னைத் துன்புறுத்தாதவரை சிகிச்சை செய்ய முற்படுவதில்லை. துன்புறுத்தத் தொடங்கியவுடன் அதைப் போக்க முயற்சிக்கிறான். பிறகு தன் பிள்ளைகள் மனைவி, உறவினர் இவர்களை வரவழைத்து எவ்விதத்திலும் யாராவது ஒரு மருத்துவனைஅழைத்துக் கொண்டு வாருங்கள் என்கிறான். 59-60

இவ்வித முற்றின நோயால் துன்பப்படுகிறவனும், வலிவற்றவனும், இளைத்தவனும், புலன்கள் தளர்ச்சியடைந்தவனும், எளி

யவனும், ஆயுள் குறுகியவனுமான நோயாளியை எவன் காப்பாற்றுவான் ?

அதாவது சிறந்த மருத்துவனாலும் தளர்ந்த உடலுடைய நோயாளியைக் காப்பாற்ற முடியாது. 61

வாலில் கயிற்றைக் கட்டிப் பலமுள்ளவனால் இழுத்தபோதும், உடும்பு என்ற பிராணி, தான் பிடித்த இடத்தை விடுவதில்லை. அதுபோல உடலில் முற்றிப்போன, நோய் சிறந்த மருத்துவனாலே சிகிச்சை செய்யப்பட்டும், உடலை விட்டு நீங்குவதில்லை. நோயாளி உயிர் இழந்துவிடுகிறான். 62

ஆகையால் நோய் தோன்றுவதற்கு முன்னால் அல்லது நோயின் தொடக்க நிலையிலேயே தன் நன்மையை விரும்பும் நோயாளி, சிறந்த மருந்துகள் மூலமாகச் சிகிச்சை செய்துகொள்ள வேண்டும். 63

## முடிவுரை

திஸ்ரைஷணீயம் எனும் இவ்வத்தியாயத்தில், மூவகை விருப்பங்கள், மூவகைப் பிடிப்புகள், மூவகை வலிவு, நோய்க்கான மூவகைக் காரணங்கள், மூவகை நோய்கள், மூவகை வழிகள், மூவகை மருத்துவர்கள், மூவகை மருத்துவம் இவ்விதம் எட்டு வகையான மூன்றுகள் விளக்கப்பட்டுள்ளன. இந்த எட்டு வகை மூன்றில் ஆயுர்வேத சாத்திரத்தின் எல்லா விஷயங்களும் அடங்கியுள்ளன. 64–65

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு, சரக
மாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரக
ஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானத்தில்
திஸ்ரைஷணீயம் எனும் 11-வது
அத்தியாயம் முற்றும்

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# *வாதகலாகலீயம்

ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி வாதகலாகலீயம் எனும் அத்தியாயத்தை விளக்கிக் கூறுவோம். (1–2)

### 1. வாயுவைப்பற்றி பேரறிஞர்களாகிய முனிவர்களின் வினாக்கள்

வாயுவின் குணதோஷங்களைப் பற்றி நன்கு அறிய விரும்பும் மாமுனிவர் பலர் குழுமி ஒன்றாக அமர்ந்து ஒருவரோடொருவர் வினவுவாராயினர்.

வாயுவின் குணங்கள் யாவை? வாயு சீற்றமடையக் காரணம் என்ன? வாயுவின் சீற்றம் எங்ஙனம் தணியும்? உருவற்ற ஒரு நிலையில் நில்லாது திரியும் வாயுவை சீற்றமடையச் செய்பவை யாவை? அத்தகைய வாயுவின் சீற்றத்தைத் தணியச் செய்பவை யாவை? வாயு சீற்றமுற்று உடலின் உள்ளேயும் வெளியேயும் திரியும்போது அதன் செயல்கள் யாவை? வாயு சீற்றமில்லாது உடலின் உள்ளேயும் வெளியேயும் சுழலும்போது அதன் செயல்கள் யாவை? என்பன. (3)

### 2. ஸாங்கிருத்தியாயனராகிய குசரின் கருத்து

ஸாங்கிருத்யாயனராகிய குசர் பின்வருமாறு கூறலானார். வாதத்தின் குணங்களாவன: வறட்சி, இலேசானதன்மை, குளிர்ச்சி, எதையும் உலர்த்தி கடினத்தன்மை அடையச் செய்தல், சொரசொரப்பு, தெளிவு அல்லது உடலின் நுண்ணிய துவாரங்களிலும் புகும் ஆற்றல் என்பன. (4)

---

*வாதம்–வாயு, கலா–குணம்,

அகலா–தோஷம் – வாயுவின் குண தோஷங்களை விளக்கும் பகுதியாதலின் இவ்வத்தியாயம் இவ்வாறு பெயர் பெற்றது.

கலாகலா–மிக நுண்ணிய பகுதி – வாயுவின் நுண்ணிதின் நுண்ணிய பகுதிகளைக் கூறுவதால் இவ்வாறு பெயர் பெற்றது.

**3. குமாரசிரர் எனும் பரத்வாஜர் கூற்று**

மேலே கூறப்பட்ட வாயுவில் அறுவகைக் குணங்களும் உள்ளன என்பது மிகவும் பொருத்தம். வறட்சி முதலிய அறுவகைக் குணங்கள், அக்குணங்களுடன் கூடிய பொருட்கள், அறுவகைக் குணங்களின் ஆதிக்கமுள்ள செயல்கள் இவற்றின் அடிக்கடி சேர்க்கையால் வாயு சீற்றமடைகிறது. சமமான குணங்களைக் கொண்ட பொருட்கள் குணங்களின் ஆதிக்கமுள்ள செயல்கள் இவற்றின் அடிக்கடி சேர்க்கையே தாதுக்களின் வளர்ச்சிக்கான காரணம் ஆகும். (5)

**4. காங்காயனர் எனும் பாஹ்லீக மருத்துவரின் கொள்கை**

இதனைக் கேட்ட காங்காயனர் ஆகிய பாஹ்லீக தேசத்து மருத்துவர் கூறினார். தாங்கள் கூறியபடி வாயுவின் சீற்றத்திற்கு வறட்சி முதலிய குணங்களுடன் கூடிய பொருட்களே காரணம் ஆகும். இதற்கு முரணான வழவழப்பு, எண்ணெய்ப்பசை, குருத்தன்மை போன்ற குணங்களுடன் கூடிய பொருட்களும், அத்தகைய குணங்களின் ஆதிக்கம் பெற்ற செயல்களும் வாயுவின் சீற்றத்தணிவிற்குக் காரணங்கள் ஆகும். தாதுவின் சீற்றத்திற்குக் காரணமான குணங்களுக்கு முரணான குணங்கள் சீற்றத்தணிவிற்குக் காரணங்களாகும் என்பதாம். (6)

**5. படிசர் தாமார்கவரின் உரை**

மற்றவரின் வாதத்தைக் கேட்டு 'படிசர் தாமார்கவர்' எனும் அறிஞர், தாங்கள் கூறியபடி வாயுவின் சீற்றத்திற்குக் காரணங்களை உணர்ந்தோம், நுண்ணியதும், எப்போதும் செல்லும் தன்மை உடைய வாயுவைச் சீற்றமடையச் செய்வதும், சீற்றத்தை தணிக்கச் செய்வதுமானவற்றை விளக்குவோம். வாதத்தைச் சீற்றமடையச் செய்யும் வறட்சி, இலேசானதன்மை, கடினத்தன்மை, தண்மை, சொரசொரப்புத்தன்மை, தெளிவுடனும் அல்லது நுண்ணிதிற்புகும் தன்மை ஆகிய குணங்களைக் கொண்ட உணவு, செயல் இவற்றால் வாதம் மேலிட்ட உடல் வாயுவின் இருப்பிடமாகி அது சீற்றமடைகிறது. வறட்சி முதலான குணங்கள், அத்தகைய பொருட்கள் வாதம் மேலிட்ட உடலில் வாதத்தை சீற்றமடையச் செய்கின்றன. அதுபோல வழவழப்பு, எண்ணெய்ப் பசையுடைமை, குருத்தன்மை, வெம்மை, மென்மை, பிசுபிசுப்பு ஆகிய குணங்கள், அக்குணங்களை உடைய பொருட்கள் இவற்றால் வாயுவின் சீற்றம் தணிகிறது. (7)

## 6. இராஜரிஷி வாயோர்விதரின் கோட்பாடு

உள்ளது உள்ளவாறு எடுத்தியம்பிய முனிவர் படிசரின் சொற்கோவைகளைக் கேட்டு ''வாயோர்விதர்'' தாங்கள் கூறியவை உண்மையானவை, ஏற்றுக்கொள்ளத்தக்கவை.

உடலுக்கு உள்ளேயும் வெளியேயும் சீற்றமடைந்தும், அடையாமலும் எப்போதும் உள்ள வாயு, உடலின் உள்ளே உலவிக் கொண்டு இருக்கும்போது அதன் செயல்கள் யாவை? வெளியே திரியும்போது அதன் செயல்கள் யாவை? என்பனவற்றைக் 1) காட்சி, கருதல் (அனுமானம்), சொல் ஆகிய அளவைகளைக் கொண்டு நிறுவி, வாயுபகவானை வணங்கி வழிபட்டு இயன்றளவு விளக்குவேன்.

## 7. வாயுவின் பிரிவுகளும் செயல்களும்

வாயு, உடலின் நரம்பு, இரத்தக் குழாய் முதலிய தந்த்ரங்களையும், இதயமாகிய யந்திரத்தையும் இயக்கும் இது. (2) பிராணன், உதானன், ஸமானன், வியானன், அபானம் என்று ஐவகை பிரிவுகள் கொண்டது. உடலின் பல்வேறு செயல்களை நரம்புகளில் நுழைந்து செய்விக்கும். மனத்தை அடக்கும், தூண்டவும் செய்யும். செயற்புலன்கள், அறிவுப்புலன்கள் அவ்வவற்றின் செயல்களுக்குக் காரணம் ஆகும். அறிவுப் புலன்களின் பொருள்களாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் இவற்றைச் எடுத்துச்செல்லும் உடலின் எல்லா தாதுக்களையும் அவற்றுக்குரிய நிலையில் பிரித்து வைக்கும். பிரிந்த உடற்கூறுகளை ஒன்று சேர்க்கும், சொல்லை உண்டாக்கும். தொடு உணர்வு, ஒலி இவற்றின் இருப்பிடம், செவிப்புலன், தொடு உணர்ப்புலன் இவற்றின் காரணம். மகிழ்ச்சிக்கும் ஆர்வத்திற்கும் பிறப்பிடம், நெருப்பிற்குக் காற்று —அதாவது நெருப்பின் செயலான பாசக பித்தத்தைத் தூண்டும், பித்த

---

(1) காட்சி அளவை—பிரத்யட்சம்
கருதல்—அநுமானம்
சொல் அளவை—சப்தபிரமாணம்.

(2) தலை—பிராணன்
குதம்—அபாநம்
மார்பு—உதானம்
தொப்புள்—ஸமானன்
இதயம்—உடல் முழுவதும்—வ்யானம்

பேசுதல், உண்டல், கைகால், கண் இதயம் முதலியவற்றின் இயக்கங்கள் காட்சியளவையாலும், மனத்தின் இயக்கம், உணர்வு, புலன்களுடன் இணைதல் முதலியன கருதல் எனும் அனுமான அளவையாலும், கருவில் உறுப்புகளுக்கு உருக் கொடுத்தல் முதலியன சான்றோர் வாக்காகிய சொல் அளவையாலும் அறியப்படும்.

கபதோஷங்களைக் குறைக்கும், வியர்வை, சிறுநீர், மலம்இவற்றை வெளியேற்றும். ஆண் பெண் விந்துகளில் சேர்க்கையால் ஓர் அணுவைப் பலவாகப் பிளக்கும்—சேர்க்கும், கருவில் உருக்களை ஆக்கும், ஆயுளுக்கு நம்பிக்கையூட்டி ஆதாரமாக இருக்கும். இவை சீற்றமுறாத வாயுவின் செயல்கள்.

## 8. சீற்றமடைந்த வாயுவின் செயல்கள்

உடலைப் பலவகை நோய்களால் துன்புறச் செய்தல் —வலிமை, நிறம், இன்பம், ஆயுள் இவற்றைக் கெடுத்தல், மனத்தை அலக்கழித்தல், புலன்களின் இயல்பை அழித்தல், கருவைச் சிதைத்தல், கருவில் மாற்றத்தை உண்டாக்குதல், மகப்பேறுக்குக் காலதாமதத்தை உண்டாக்குதல், பயம், வருத்தம், மயக்கம், ஏழைமை, பிதற்றல் இவற்றை உண்டாக்குதல். மூச்சுத்திணறலை உண்டாக்கி உயிரையே இழக்கச் செய்தல் என இவை சீற்றமடைந்த வாயுவின் செயல்கள்.

## 9. வெளியே உலவும் சீற்றமடையாத இயற்கையான வாயுவின் செயல்கள்

உலகில் சுழலும் நன்னிலையில் உள்ள வாயுவின் செயல்கள் நிலத்தைத் தாங்குதல் நெருப்பை எரிவித்தல், கதிரவன், மதி, விண்மீன்கள், கோள்கள் (கிரகங்கள்) இவற்றைத் தம்தம் செயல்களைச் செய்வித்தல், முகில்களை உண்டாக்குதல், வானிலிருந்து நீரைப் பொழிவித்தல், ஆறுகளில் நீர்பெருகுவித்தல், அவ்வப் பருவங்களில் மலர், கனிகளைத் தோற்றுவித்தல், நிலத்தைப் பிளந்து தோன்றும் மரம் போன்றவற்றைச் செழிக்கச் செய்தல், ஆறுபருவங்களைப் பகுத்தல், பலவகைக் கனிமரங்களை வகைப் படுத்திப் பிரித்தல், தாதுக்களின் அளவு, தோற்றம் இவற்றை நன்னிலைப்படுத்தல், விதைகளில் முளைகளைத் தோற்றுவித்தல், பயிர்த்தொழில் வளமுறச் செய்தல், துன்பம் நீக்குதல், மாற்றமடைந்த பொருள்களின் மாற்றத்தை நீக்குதல் என இவை வெளியே உள்ள வாயுவின் செயல்கள்.

## 10. சீற்றமுற்ற வெளி வாயுவின் செயல்கள்

மலைகளின் சிகரங்களைப் பிளத்தல், மரங்களின் வேர்களைக் களைதல், கடலைக் கொந்தளிக்கச் செய்தல், ஆறுகளின் செல்வழியை மாற்றுதல், நீர் ஊற்றுக்களை மேல்நோக்கி வடியச் செய்தல், நில நடுக்கமுண்டாக்குதல், மேகங்களில் இடியைத் தோற்றுவித்தல் பனிமழை பெய்வித்தல், மேகமின்றி இடியுண்டாக்குதல், தூசு, மணல், மீன், தவளை, பாம்பு, காரங்கள், இரத்தம், கல்,

இடி இவற்றை வானிலிருந்து பொழியுமாறு செய்தல், அறுவகைப் பருவங்களையும் கொடியதாக மாற்றுதல், பயிர் பலிதமாகாமை, தொற்றுநோய் பரவுதல், உள்ள பொருள்களை இல்லாமையாக்குதல், யுகப்பிரளயத்தை உண்டாக்கும் மேகம், சூரியன், நெருப்பு, காற்று இவற்றைப் படைத்தல், என இவை சீற்றமடைந்த வெளி வாயுவின் செயல்கள்.

## 11. வாயுவின் பொது இயல்புகள்

கடவுளாகிய அழிவற்ற வாயு உலகின் தோற்றத்திற்கும் அழிவிற்கும் காரணம். உயிரினங்களின் வாழ்விற்கும், சாவிற்கும் அடிப்படை, இன்பதுன்பங்களின் பிரமன். சாவுக்கடவுளாகிய இயமனும் அதுவே. உலகை இயக்குவது வாயு. பிராணிகளின் தலைவன். படைப்புத் தொழில் புரியும் விசுவகர்மன், அது உலகையே உருவமாகக் கொண்டது. எல்லா இடங்களிலும் செல்லுமாற்றல் பெற்றது. எல்லாச் செயல்களையும் செய்யவல்லது. உள்ள பொருள்களில் அணுவானது. எங்கும் நிறைந்தது. காத்தற்கடவுளாகிய திருமாலும் அஃதே. மூவுலகிலும் பரவி இருப்பது. ஆதலின் வாயுவே கடவுள். 8

## 12. மரீசிமுனிவரின் வினா

வாயோர்விதரின் உரையமுதைச் செவியுற்று மாமுனிவராகிய மரீசி கூறலானார். ''இப்போது நடைபெறும் இந்த ஆய்வு மருத்துவ சாத்திரத்தைப் பற்றியது. ஆயினும் வாயுவைப் பற்றிக் கூறப்பட்ட குணங்கள் செயல்கள் முதலியவற்றால் ஏற்படக்கூடிய பயன் யாது? பொருள்களைப் பற்றிய சாத்திரத்தில் இவை போன்ற ஆராய்ச்சி பொருத்தம் உடையதாகும். பயனும் உண்டு. நடைபெறும் இந்த ஆய்வு மருத்துவத்திற்கு மட்டும் தொடர்புடையதன்றோ'' என்பதாம். 9

## 13. வாயோர்விதரின் விடை

மரீசி முனிவரின் வினாவைக் கேட்டு வாயோர்விதர் அளித்த விடை வருமாறு :- மருத்துவர்கள், வாயுவின் மிக்க வலிமை, கடினத்தன்மை, விரைவாகச் செயலாற்றும் தன்மை, திடீர் மாற்றங்களை உண்டாக்கும் வலிமை இவற்றை அறிந்துகொள்ள வேண்டும். எவ்வாறு திடீரென வாயுவின் சீற்றத்தால் ஏற்படும் நோய்களிலிருந்து நோயாளியைக் காக்க இயலும். வாயுவைப் பற்றியும் அதன் ஆற்றலைப் பற்றியும் உணராதவரால் நோயாளியை முன்னெச்சரிக்கையாக வாயுத் தொல்லையிலிருந்து விடுவிக்க இயலாது. தவிர வாயுவின் குணங்கள் செயல்கள் புகழ்ச்சி மக்களின் ஆரோக்கியத்தை வளர்க்கும், வலிமை நிறம் இவற்ற

வளமடையச் செய்யும். உடற்காந்தியைக் கூட்டும் என்பன போன்ற பொருளுள்ள உரைகளை வாயுவைப்பற்றி நன்கு உணர்ந்த மருத்துவனால் வருமுன் காப்பு என்னும் அறிவைத்தர இயலும் 10

## 14. பித்தத்தைப்பற்றி மரீசியின் கொள்கை

''உடலில் நெருப்பு (சூடு) பித்தத்திலிருந்துகொண்டு சீற்ற முற்றும் சீற்றமுறாமலும் நன்மை தீமைகளைச் செய்கிறது. எடுத்துக்காட்டாக செரித்தல், செரியாமை, பார்வை-பார்வையின்மை, உடலில் சரியான சூடு-சரியில்லாமை, இயற்கை நிறம்—செயற்கை நிறம், ஆற்றல் — ஆற்றலின்மை, பயம்—பயமின்மை, கோபம்—கோபமின்மை மகிழ்ச்சி—மகிழ்ச்சியின்மை, தெளிவு—தெளிவின்மை ஆகியவை நெருப்பில் உள்ள பித்தத்தின் சீற்றம் சீற்றமின்மை இவற்றால் தோன்றுவன'' என்று மரீசிமுனிவர் கூறினார். 11

## 15. காப்பியர் கபத்தின் இயல்புபற்றிக் கூறல்

மரீசியின் கூற்றைக்கேட்ட காப்பியர் எனும் அறிஞர் கூறியவை :- ''உடலில் ஜலத்தின் அதிதேவதையான ஸோமன் கபத்தில் இருந்து சீற்றமடைந்தும் அடையாமலும் நன்மை தீமைகளைச் செய்கிறது. எடுத்துக்காட்டாக உறுதி—உறுதியின்மை, வளர்ச்சி-குறைதல், மெலிவு-பருமன், ஆர்வம்-சோம்பல், ஆண்மை-அலித்தன்மை அறிவு—அறியாமை, தெளிவு—மயக்கம் இவை போன்ற இரட்டைகளைக் கபம் சீற்றமுற்றும் சீற்றமுறாமலும் உண்டாக்குகின்றது.'' 12

## 16. தலைவர் புனர்வசு ஆத்ரேயரின் தலைமை உரை

முனிவர் காப்பியரின் உரைக்கோவையைக் கேட்ட ஆத்ரேயர் கூறியவை:-

நீவிர் அனைவரும் வாதம், பித்தம், கபம் ஆகியவற்றைப் பற்றி பொதுப்படையாகக் கூறாமல் மிகவும் சிறப்பாக எடுத்துக் கூறினீர்கள். இம்மூன்றும் தம்தம் நிலைகளில் நன்றாக அமைந்து மக்களின் புலன்களை வலியுறச்செய்கின்றன. வலிமை, நிறம், இன்பம் இவற்றுடன் கூடிய நீண்ட ஆயுளை அளிக்கின்றன. இம்மை மறுமைகளில் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப்பேறுகளை உண்டாக்குகின்றன.

சீற்றமுற்ற வாத, பித்த, கபங்கள் பெருந்தீமைகளை உண்டாக்குகின்றன. அழிவுகாலத்தில் தன்னிலைதவறிய பருவ காலங்களான குளிர், வேனில், மழை ஆகிய மூன்று பருவங்கள் உலகுக்கு ஊறுவிளைவிப்பனபோல் உடலில் பலவகைத் தீமைகளைத் தோற்றுவிக்கின்றன. 13

### 17. குழுவின் ஒப்புதலும் மகிழ்ச்சியும்

குழுமியுள்ள பேரறிஞர்களாகிய முனிவர் பலரும் புனர்வசு ஆத்ரேயரின் பொருள் பொதிந்த பேருரையைக் கேட்டு அதனை வரவேற்று மகிழ்ந்தனர். *14*

இந்திரனுடைய உரையைக் கேட்டு தேவர்கள் மகிழ்வது போன்று எல்லா முனிவர்களும் ஆத்ரேயரின் உரையைக் கேட்டு ஒப்புதல் அளித்து மகிழ்ந்தனர். *15*

### முடிவுரை

முடிவாக வாயுவின் [1]அறுகுணங்கள், [2]இரு காரணங்கள், பல செயல்கள், சீற்றமுறுதல்—சீற்றமுறாமை எனும் பிரிவினால் வாத பித்த கபங்களின் இரண்டிரண்டு செயல்கள், இவற்றைப் பற்றி முனிவர்களின் கொள்கைகள் ஆத்திரேயரின் முடிவுரை ஆகிய வற்றை நன்கு விளக்கினோம். *16–17*

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் சோதிக் கப்பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானத்தில் வாதகலா கலீயம் எனும் பன்னிரண்டாம் அத்தியாயம்
முற்றும்

---

1. வறட்சி, இலேசான தன்மை, தண்மை சொரசொரப்புத் தன்மை, நுண்ணியல்பு அசைவு என்பன ஆறு குணங்கள்.
2. சீற்றமுறச் செய்யும் காரணங்கள், சீற்றமடைந்த தோஷங் களை சமநிலைக்குக் கொண்டுவரச்செய்யும் காரணங்கள் என்பன இரு காரணங்கள்.

## பதின்மூன்றாவது அத்தியாயம்

## *ஸ்நேகாத்யாயம்

''ஸ்நேகாத்யாயம்'' எனும் 13-வது அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

### 1 அக்னிவேசரின் வினா?

முக்கால முணர்ந்த முனிவர் குழுவின் நடுவில் அமர்ந்திருக்கும் உலகப் புகழ்பெற்ற ஆத்ரேய மாமுனிவரிடம் அக்னிவேசர் தம் ஐயங்களை உலக நன்மைக்காகக் கேட்டார். 3

1. எண்ணெய்ப் பசையுள்ள பொருட்களின் பிறப்பிடங்கள் யாவை ?
2. எண்ணெய்ப்பசைப் பொருட்கள் எத்தனை வகைப்படும் ?
3. தனித்தனியாக அவற்றின் குணங்கள் யாவை ?
4. எந்த எந்த எண்ணெயை எவ்வப்பொழுது பருகுவது ?
5. எந்தெந்த எண்ணெயுடன் எந்தெந்த துணைப்பொருட்கள் (அனுபானம்) உடன் பருகுவதற்குப் பயன்படுபவை ?
6. எண்ணெய்களின் கூட்டுச் சேர்க்கையின் செய்முறைகள் யாவை ?
7. எண்ணெயைப் பருகவேண்டிய காலங்கள் யாவை ?
8. பருகவேண்டிய எண்ணெயின் அளவு யாது ?
9. எந்தெந்த நோய்களில் எந்தெந்த அளவில் எந்த எந்த எண்ணெய் வகைகளைக் கொடுக்க வேண்டும் ?
10. எந்த எண்ணெய்வகை எந்த நோயாளிக்கு நன்மை பயக்க வல்லது ?
11. எண்ணெய்வகை சிகிச்சைக்குச் சிறந்த காலம் எது ?
12. எண்ணெய்ச் சிகிச்சைக்குத் தகுந்தவர்கள் யாவர் ?

---

*ஸ்நேகாத்யாயம் — எண்ணெய்ப்பசை கொழுப்புச்சத்து வகைகளைப் பற்றிக் கூறப்படுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது

13. எண்ணெய்ச் சிகிச்சைக்குத் தகாதவர்கள் யாவர் ?
14 நன்கு நிறைவேறிய எண்ணெய்ச் சிகிச்சையின் இலக்கணங்கள் யாவை ?
15 நன்கு நிறைவேறாத எண்ணெய்ச் சிகிச்சையின் இலக்கணங்கள் யாவை ?
16. அதிக அளவில் நிறைவேறிய எண்ணெய்ச் சிகிச்சையின் இலக்கணங்கள் யாவை ?
17. எண்ணெய் குடிப்பதற்கு முன்பு செய்ய வேண்டியது என்ன ?
18. எண்ணெய் குடித்தபின் கடைபிடிக்க வேண்டியது என்ன ?
19. பருகிய எண்ணெய் சீரணித்தபின் கடைபிடிக்க வேண்டிய நன்மை, தீமை பயக்கும் உணவுப் பழக்கவழக்கங்கள் யாவை?
20. மிருதுவான மலக்குடல் என்பது யாது ?
21. கடினமான மலக்குடல் எது ?
22. முறை தவறி எண்ணெய் பருகுவதால் தோன்றும் தீமைகள் யாவை ?
23. அத்தீமைகளைப் போக்கும் முறைகள் யாவை ?
24. குடலில் உள்ள தோஷங்களைத் தணிப்பதற்கும், வெளிப் படுத்துவதற்கும், அச்சபேயா எனும் கூட்டுச் சேராஎண்ணெய் வகை குடிப்பதற்கும் கையாளப்படும் முறைகள் யாவை ?
25. எந்தெந்த நோய்களில், அறுசுவைகளின் கூட்டுச் சேர்க்கை யால் தயாரித்த எண்ணெயைப் பருக வேண்டும் ?

எண்ணெயைப் பற்றி நன்கு அறிந்த தங்களிடமிருந்து மேற் கண்டவற்றை அறிந்துகொள்ள விரும்புகிறேன் எனக் கேட்டார் அக்னிவேசர். 4–8

பிறகு ஐயப்பாடுகளைப் போக்கும் ஆத்ரேயர் பதில் உரைத் தார். நல்லவனே ! எண்ணெய்வகைப் பொருளுக்கு [1]ஸ்தாவரம், [2]ஜங்கமம் என்ற இரண்டு பிறப்பிடங்கள் உண்டு. 9

## 2. ஸ்தாவர எண்ணெயின் பிறப்பிடங்கள்

எள்ளு, முரளம் விதை, பிஸ்தா விதை, தான்றிக்காய், நேர் வாளம், கடுக்காய், ஆமணக்கு விதை, இலுப்பை விதை, கடுகு, குசும்ப விதை, வில்வம், சேராங்கொட்டை, முள்ளங்கி விதை,

1. ஸ்தாவரம்– அசையாப் பொருட்கள்.
2. ஜங்கமம் – அசையும் பொருட்கள்.

ஆளிவிதை, எலுமிச்சை, அக்ரோட் விதை, புங்கன் விதை, முருங்கைவிதை இவை ஸ்தாவர எண்ணெயின் பிறப்பிடங்கள் 10

## 3. ஜங்கம எண்ணெயின் பிறப்பிடங்கள்

மீன்கள், மிருகங்கள், பறவைகள் இவை ஜங்கம எண்ணெயின் பிறப்பிடங்கள். இவற்றின் பால், தயிர், நெய், இறைச்சி, [1]வஸை, [2]மஜ்ஜை இவை ஜங்கம எண்ணெய்வகைகளாகக் கூறப்படுகின்றன. 11

## 4. எள் எண்ணெய், ஆமணக்கு எண்ணெய் இவற்றின் சிறப்பு

ஸ்தாவர எண்ணெய்களுக்குள் எள் எண்ணெய் உடல் வலிவுக்கும், எண்ணெய்ப்பசை உண்டாக்குவதற்கும் சிறந்தது. ஆமணக்கு எண்ணெய் மலம்கழிக்கச் சிறந்தது.

## 5. ஆமணக்கு எண்ணெயின் குணங்கள்

கார்ப்புச்சுவை, உஷ்ண வீர்யம், குருகுணம் இவற்றையுடையது. வாதம், கபம் இவற்றை நீக்கவல்லது. துவர்ப்பு, இனிப்பு, கைப்பு இச்சுவையுள்ள பொருட்களுடன் ஆமணக்கு எண்ணெயைச் சேர்த்துக் கொடுத்தால் பித்தத்தை அழிக்கும். 12

## 6. நெய்யின் சிறப்பு

எண்ணெய்ப் பொருட்களில் நெய், எள் எண்ணெய், வஸை, மஜ்ஜை இந்நான்கும் சிறந்தவை. இந்நான்கிலும் நெய் எல்லாப் பொருட்களுடனும் ஒத்துப்போவதனால் சிறந்தது. 13

## 7. நெய்யின் குணங்கள்

நெய் பித்தத்தையும், வாதத்தையும் போக்கும். ரஸதாது, விந்து, [3]**ஒஜஸ்** இவற்றிற்கு நன்மையளிக்கக்கூடியது. எரிச்சலைத் தணிக்கக்கூடியது. உடலுக்கு மிருதுத்தன்மையை அளிக்கவல்லது. குரல், நிறம் இவற்றைத் தெளிவாக்கக் கூடியது. 14

## 8. எண்ணெயின் குணங்கள்

வாதத்தைப் போக்கும். கபத்தை வளர்க்காது. வலிவைத் தரும், தோலுக்கு நன்மை பயக்கும். உஷ்ண வீர்யமுள்ளது. உடலை உறுதிப்படுத்தும். கருப்பையைச் சுத்தப்படுத்தும். இவை எண்ணெயின் குணங்களாம். 15

---

1. வஸை — மாமிச ரஸம்.
2. மஜ்ஜை — எலும்புக்குள் உள்ள சோறு.
3. ஓஜஸ் — உடலில் உள்ள எல்லாத் தாதுக்களின் சாரம். எண்ணெய்ப் பசையுடையது. குளிர்ந்த குணம், உடலுக்கு உறமும் ஒளியும் தருவது.

## 9. வஸையின் குணங்கள் (மாமிச ரசம்)

இரஸம் (புண்), முறிவு, அடிபடுதல், நழுவுதல் இவற்றைப் போக்குவதிலும், கருப்பை, பெண்குறி, காது, தலை, இவற்றின் வலியைப் போக்குவதிலும், வீரத்தன்மையின் வளர்ச்சியிலும், உடலில் எண்ணெய்ப் பசையுண்டாக்குவதிலும், உடற்பயிற்சிக்கு இது சிறந்தது. 16

## 10. மஜ்ஜையின் குணங்கள்

வலிவு, விந்து, ரஸதாது, கபம் [1]**மேதஸ்,** மஜ்ஜை இவற்றின் வளர்ச்சியை அளிக்கவல்லது. குறிப்பாக எலும்புக்கு வலிவை அளித்து, எண்ணெய்ப் பசையை உண்டாக்கும். 17

## 11. நெய் முதலியவற்றைப் பருகும் காலம்

1. [2]**சரத்ருது**வில் நெய்யையும், [3]**வசந்தருது**வில் வஸை, மஜ்ஜை இரண்டையும், [4]**பிராவிருட்** காலத்தில் எண்ணெயையும் பருகவேண்டும். மனிதன் மிக்க உஷ்ணம், மிக்கக் குளிர்ச்சி இல்லாத காலங்களில் எண்ணெயைப் பருக வேண்டும். 18

## 12. எண்ணெய் பருகுவதற்கான காலமும், தகுதியும்

வாதம், பித்தம் இவை அதிகம் உள்ளவன், வெயிற்காலத்தில் இரவில் எண்ணெய் பருக வேண்டும். கபம் அதிகமுள்ளவன், குளிர் காலத்தில் மேகமூட்டமில்லாத நேரத்தில் பகலில் கதிரவன் ஒளியில் எண்ணெய் பருக வேண்டும். 19

## 13. முறை தவறி எண்ணெய் பருகுவதால் தோன்றும் தீமைகள்

வாதம் அல்லது பித்தம் அதிகம் உள்ளவனால் மிக்க வெயிற் காலத்தில் பகலில் பருகிய எண்ணெய், மூர்ச்சை, நாவறட்சி, பைத்தியம், காமாலை, இந்நோய்களைத் தூண்டிவிடும். 20

---

1. மேதஸ் — கொழுப்பு.
2. சரத்ருது — ஆயுர்வேத சாத்திரப்படி மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, என்ற நான்கு மாதங்கள்.
3. வஸந்த ருது— ஆனி, ஆடி, ஆவணி புரட்டாசி என்ற நான்கு மாதங்கள்.
4. பிராவிருட் — ஐப்பசி, கார்த்திகை. இப்பருவகால பாகுபாடு சோதிடசாஸ்திரத்துக்குப் பொருந்தாது.

கபம் அதிகமுள்ளவனால் குளிர்காலத்தில் இரவில் பருகிய எண்ணெய், சீரணிக்காமல் வயிற்று உப்புசம், சுவையின்மை, வயிற்றுவலி, சோகை (பாண்டு) இவற்றைத் தோற்றுவிக்கிறது. 21

## 14. அனுபானம் (உடன் பருகும் பொருள்)

நெய் பருகியபின் வெந்நீரும், எண்ணெய் பருகினபின் கஞ்சியும் (யூஷம்) வஸை, மஜ்ஜை இரண்டையும் குடித்தபின் [1]**மண்டமும்**, அனுபானமாக அருந்த வேண்டும். கஞ்சியும் மண்டமும் கிடைக்காவிடில் சுடுநீர் பருகலாம். 22

## 15. கூட்டுச் சேரும் எண்ணெய் பொருட்களுடன் சேர்க்கக்கூடிய கூட்டுப் பொருட்கள்

அன்னம் (சோறு), [2]**விலேபி**, புலாலின் ரசம், புலால், பால், தயிர், கஞ்சி வகை, பருப்புவகை, கீரை வகை, [3]**யூஷம்**, [4]**காம்பலிகம்**, [5]**கடம்**, ஸத்துமாவு, எள்ளுகல்கம், கள், நக்கிப் பருகும் பொருட்கள், தின்பண்டங்கள், எண்ணெய்க் குளியல், [6]**வஸ்தி**, [7]**உத்தரவஸ்தி**, வாய் கொப்பளித்தல், செவிகளில் எண்ணெய் ஊற்றுதல், மூக்கில் எண்ணெய் விடுதல், காதுகள், கண்கள் இவற்றில் எண்ணெய் கட்டுதல் என்னும் முறைக்கும் கூட்டுச் சேர்ந்த எண்ணெய் முறையில் உடலில் எண்ணெய்ப் பசை உண்டாக்க உபயோகப்படுத்தப்படுகின்றன.

## 16. அச்சபேயா (கூட்டுச்சேரா எண்ணெய்ப் பருகும்முறை)

தசைகளின் கூட்டுச் சேரா எண்ணெய்க்கு அச்சபேயா எனப்பெயர். மேலே கூறியபடி பிற பொருள்களுடன் கூட்டுச்சேராததால் உடலில் எண்ணெய்ப்பசை உண்டாக்குவதில் முதன்மையானதாலும் இதற்கு இப்பெயர் வந்தது. 23–26

---

1. மண்டம் — அரிசியில்லாக் கஞ்சி
2. விலேபி — நீரும், அரிசியும் ஒரே அளவில் வைத்துச் செய்யப்படும் கஞ்சி.
3. யூஷம் — கெட்டியான கஞ்சி
4. காம்பலிகம் — எள் சேராத ஒருவகைக் கஞ்சி.
5. கடம் — ஒரு வகை பொருள். கீரை காய்கறிகளுடன் தயாரிக்கப்பட்ட ஒரு கஞ்சி.
6. வஸ்தி – ஆசனவாய் வழியாக உடலுக்குள் மருந்தைச் செலுத்துவது.
7. உத்திரவஸ்தி — ஆண், பெண் குறிகளின் மூலம் சிறுநீர்ப் பைக்குள் மருந்தைச் செலுத்துவது.

ஆறுச்சுவைகளும் ஒன்று சேர்ந்து, அல்லது தனித்தனியாக ஆறு சுவைகளும் சேர்ந்து எண்ணெய் 63 வகையாகப் பிரிக்கப்படு கின்றது. கூட்டுச்சேராத தனியாக உள்ள எண்ணெய் ஒன்று. ஆக எண்ணெயின் பிரிவுகள் 64. இந்த முறையை அறிந்த மருத்துவன், உடல், பருவம், நோய், நோயாளி இவற்றிற்குத் தக்கவாறு மேற் கண்ட எண்ணெய் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 27–28

## 17. எண்ணெயின் மூவகை அளவு

உயர்ந்த அளவு, நடுத்தர அளவு, குறைந்த அளவு என எண்ணெயின் அளவு மூவகைப்படும்.

ஒரு நாளில் (பகல், இரவு) 8 யாமத்தில் சீரணிக்கக்கூடிய எண்ணெயின் அளவு உயர்ந்த அளவாகும். ஒரு பகலுக்குள் 4 யாமத்தில் சீரணிக்கக்கூடிய எண்ணெயின் அளவு நடுத்தர அளவாகும். அரைப் பகலில் 2 யாமத்தில் சீரணிக்கக்கூடிய எண்ணெயின் அளவு குறைந்த அளவாகும். 29

இவ்வாறு பருகவேண்டிய எண்ணெயின் அளவு மூவகையாக விளக்கப்பட்டுள்ளது. அவரவர்களுக்கேற்றவாறு எண்ணெய் கொடுக்க வேண்டிய அளவு பின்பு விளக்கப்படும். 30

## 18. உயர்ந்த அளவுக்குத் தகுதியுள்ளவர்கள்

நாள்தோறும் எண்ணெயை உபயோகிப்பவர், அதிக அளவில் பயன்படுத்துபவர்கள், பசி, தாகம், இவற்றைப் பொறுத்துக் கொள்ளக்கூடியவர்கள் ஆவார். மிக்க வலிவுள்ள சடராக்னி யுடையவர்கள், மிக்க வலிவுள்ளவர்கள், குன்ம நோயுடையவர் கள், பாம்பு கடித்தவர்கள், விஸர்ப்பம் எனும் அக்கி நோய் உள்ள வர்கள், பித்துப் பிடித்தவர்கள், நீர்ச் சுருக்கு உள்ளவர்கள், மிகவும் கட்டிப்போன மலம் உடையவர்கள் என இவர்கள் உயர்ந்த அளவில் எண்ணெய் பருக வேண்டும்.

## 19. உயர்ந்த அளவில் எண்ணெய் பருகுவதின் பயன்

நல்முறையில் பயன்படுத்தப்பட்ட உயர்ந்த அளவு எண்ணெய் விரைவில் நோயைத் தணிக்கிறது. உடலிலுள்ள நுட்பமான எல்லா இடங்களிலும் பரவுகிறது. தோஷங்களை நீக்குகிறது. உடல் வலிவைத் தருகிறது. உடல், புலன்கள், மனம் இவற்றிற்கு புத் துயிர் அளிக்கிறது. 31–34

## 20. நடுத்தர அளவில் எண்ணெய் பருகுவதற்குத் தகுந்தவர்கள்

தலையில் சிறு சிறு சிரங்குகள் உடையவர்கள், பெரிய கொப்புளங்கள் உடையவர்கள், சிறுகட்டிகள், அரிப்பு, 'பாமா' எனும் குஷ்டநோய், இவற்றால் துன்புறுகிறவர்கள், குஷ்ட நோய், நீரழிவு, வாதரத்தம் இந்நோய் உள்ளவர்கள், அதிகம் உணவு உண்ணாதவர்கள், மிருதுவான மலக்குடல் உள்ளவர்கள், நடுத்தர வலிவுள்ளவர்கள் என இவர்கள் நடுத்தர அளவில் எண்ணெய் பருகத் தகுந்தவர்கள். 35–36

## 21. நடுத்தர அளவில் எண்ணெய் பருகுவதன் பயன்

நடுத்தர அளவில் எண்ணெய்ப் பருகுவதால் அதிகமாகத் திங்குகள் ஏற்படாது. வலிவையும் அதிகம் அழிக்காது. எளிதில் எண்ணெய்ப் பசையை உண்டாக்குகிறது. தோஷங்களை சுத்தப் படுத்தப் பயன்படுகிறது. 37

## 22. குறைந்த அளவில் எண்ணெய் பருகத் தகுந்தவர்கள்

முதியவர்கள், சிறுவர்கள், மிருதுவான உடலமைப்புடையவர் கள், எப்பொழுதும் இன்ப வாழ்வு வாழ்கிறவர்கள் மலக்குடல் காலியாக உள்ளபோது துன்பப்படுகிறவர்கள், சடராக்னியின் வலிவு குன்றியவர்கள், காய்ச்சல், கழிச்சல், இருமல் இவற்றால் பல நாட்களாகத் துன்புறுகிறவர்கள், வலிவு குறைந்தவர்கள் என இவர்கள் குறைந்த அளவில் எண்ணெய் பருகத் தகுந்தவர் கள். 38–39

## 23. குறைந்த அளவில் எண்ணெய் பருகுவதன் பயன்

குறைந்த அளவில் எண்ணெய் பருகுவதற்குக் கட்டுப்பாடுகள் ஒன்றும் கிடையாது. இது உடலுக்கு எண்ணெய்ப் பசையையும், வலிவையும் அளிக்கிறது. ஆண்மையை அளிக்கிறது. வலிவைக் கொடுக்கிறது. வெகுகாலம் வரை, துன்பங்களைக் கொடுப்ப தில்லை. நீடித்திருக்கிறது. 40

## 24. நெய் பருகத் தகுதியுள்ளவர்கள்

இயற்கையில் வாத பித்த உடலமைப்புள்ளவர், வாத பித்த நோயுள்ளவர், கண்கள் நன்கு பார்வையுடன் இருக்க விரும்புகிற வர், மார்பிலடிபட்டவர், வலிவு குறைந்தவர், முதியவர், சிறுவர், மாதர்கள், நீண்ட ஆயுளை விரும்புகிறவர், வலிவு, நிறம், குரல் இவற்றை விரும்புகிறவர், உடல் வளர்ச்சியை விரும்புகிறவர், மக்கட்பேற்றை விரும்புகிறவர், இளமையை விரும்புகிறவர், காந்தி, ஓஜஸ், நினைவாற்றல், திறமை, சடராக்னி வலிவு,

அறிவு, புலன்கள் இவற்றிற்கு வலிவை விரும்புகிறவர், எரிச்சல், ஆயுதம், நஞ்சு, தீ இவற்றால் துன்பப்படுகிறவர் என இவர்கள் நெய் பருகத் தகுதியுள்ளவர்கள். 41–43

## 25. எண்ணெய் குடிக்கத் தகுதியுள்ளவர்கள்

மிக்க வளர்ச்சி பெற்ற கபம், கொழுப்பு உடையவர்கள், அசைகிற பருத்த தொண்டை, வயிறு உடையவர்கள், வாத நோயினால் துன்புறுகிறவர், இயற்கையில் வாத உடல் அமைப்புள்ளவர், வலிவு, இளைப்பு, எளிமை, கெட்டித்தன்மை, உறுதி, எண்ணெய்ப் பசை, வழவழப்பு, தோலில் மிருதுத்தன்மை இவற்றை உடலில் விரும்புகிறவர், குடலில் கிருமி உள்ளவர், கடின மலக்குடல் உடையவர், புரையோடிய ரஸத்தினால் துன்புறுகிறவர், எண்ணெய் குடித்துப் பழகியவர் என இவர்கள் குளிர் காலத்தில் எண்ணெய் பருகலாம். 44–46

## 26. [1]வசை குடிக்கத் தகுதியுள்ளவர்கள்

காற்று, வெயில் இவற்றினால் வருந்தியவர்கள், வறட்சித்தன்மை பெற்றவர்கள், சுமை, வழிநடப்பு இவற்றால் இளைத்தவர்கள், வற்றிப்போன விந்து, இரத்தம் இவற்றையுடையவர்கள், குறைந்த கபம், கொழுப்பு உடையவர்கள், எலும்புகள், மூட்டுகள், ரத்தக் குழாய்கள், நரம்புகள், மர்மங்கள், கோஷ்டம், இவற்றில் பொறுக்க முடியாத வலி உள்ளவர், வாதம் வலிவு பெற்றவர்கள் உடல் துவாரங்களில் வாதம் சூழ்ந்துள்ளவர், அதிக சடராக்னி வலிவு பெற்றவர், வசை குடித்துப் பழக்கப்பட்டவர், தேவையுள்ள எண்ணெய்ப் பசையுள்ளவர் என இவர்கள் வசை குடிக்கத் தகுந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். 47–49

## 27. [2]மஜ்ஜை குடிக்கத் தகுதியுள்ளவர்கள்

சடராக்னி வலிவுள்ளவர், உடல் உழைப்பைப் பொறுத்துக் கொள்பவர், அதிகம் உண்பவர், எண்ணெய் குடித்துப் பழக்கமுள்ளவர், வாத நோயினால் துன்புற்றவர், கல் குடல் உடையவர், நைப்புத்தன்மை தேவையுள்ளவர் என இவர் மஜ்ஜை குடிக்கத் தகுந்தவர்கள்.

இதுவரை அவரவர்களுக்குத் தேவையான எண்ணெய் பற்றிக் கூறப்பட்டது. 50

---

1. வசை – மாமிசத்தில் உண்டாகும் ரஸம்.
2. மஜ்ஜை – எலும்புக்குள் உள்ள சோறு.

## 28. எண்ணெயின் கால அளவு

எண்ணெய்ப் பசை உண்டாவதற்கான காலம் அதிக அளவு ஏழு நாட்களும், குறைந்த அளவு மூன்று நாட்களுமாம். 51

## 29. எண்ணெய்ப் பசை உண்டாக்கத் தகுந்தவர்கள்

வியர்வைச் சிகிச்சைக்குத் தகுந்தவர்கள், வாந்தி எடுக்கவும், மலம் கழிக்கவும் மருந்து கொடுக்கத் தகுந்தவர்கள், வறட்சித் தன்மையுள்ளவர்கள், வாதநோய் உள்ளவர்கள், உடற்பயிற்சி செய்கிறவர்கள், மது குடிப்பவர்கள், பெண்களுடன் சேருபவர்கள், கவலையுள்ளவர்கள் என இவர்கள் எண்ணெய்ப்பசை உண்டாக்கிக் கொள்ளத் தகுந்தவர்கள். 52

## 30. எண்ணெப் பசைக்குத் தகாதவர்கள்

[1]**ஸம்சோதனம்** செய்யாமல் வறட்சித் தன்மையுண்டாக்கும் சிகிச்சைக்குத் தகுந்தவர்கள். சோதனைச்சிகிச்சை செய்யத் தகாதவர், கபம், கொழுப்பு இவை அதிகம் வளர்ச்சி பெற்றவர்கள், வாய் மலத்துவாரம் இவற்றில் கபம் ஒழுகிக்கொண்டிருப்பவர், எப்பொழுதும் குறைவான சடராக்னியுள்ளவர்கள், நாவறட்சி, மூர்ச்சை உடையவர், கருவுள்ளவள், தாடை உலர்ந்தவர், உணவில் வெறுப்புள்ளவர், வாந்தி எடுப்பவர், வயிற்றுநோய், அசீர்ணத்தால் ஏற்படும் நோய், இடுவிஷம் இவற்றால் துன்புறுகிறவர், வலிவுக் குறைவுள்ளவர், களைப்புள்ளவர், எண்ணெய் குடித்துக் களைத்தவர், மதம் பிடித்தவர், மூக்கிலிடும் மருந்துச் சிகிச்சை, வஸ்தி சிகிச்சை இவற்றைப் பெற்றவர் என இவர்கள் எண்ணெய்ப்பசை ஏற்படுத்திக் கொள்ளத்தகாதவர்கள். அப்படி அவர்களுக்கு எண்ணெய்ப்பசை உண்டாக்கினாலும் கடுமையான நோய்கள்தான் தோன்றும். 53–56

## 31. எண்ணெய்ப் பசை உண்டாகாமையின் இலக்கணம்

மலம் இறுகிப் போதல், வறட்சி, வாதம் நேராகச் செல்லாமை, சடராக்னிக் குறைவு, உடலில் சொரசொரப்புடன் கூடிய வறட்சி இவை எண்ணெய்ப்பசை உண்டாகாமையின் இலக்கணமாகும். 57

## 32. எண்ணெய்ப் பசை ஏற்பட்டதின் இலக்கணம்

வாதம் நேராகச் செல்லும். சடராக்னி ஒளிரும். மலம் எண்ணெய்ப் பசையுடன் கூடி, இளவலாகவும் இருக்கும். உடல்

---

1. ஸம்சோதனம் —வாந்திக்கும், பேதிக்கும் கொடுத்து தோஷங்களை வெளிப்படுத்துவது.

உறுப்புகள் மிருதுவாகவும், எண்ணெய்ப் பசையுடன் கூடியதாக வும் ஆகின்றன. 58

## 33. அளவுக்கு மீறி எண்ணெய்ப் பசை உண்டானதின் இலக்கணம்

உடலில் வெளுப்பு, பளு, சுறுசுறுப்பின்மை, மலம் சீரண மடையாமை, தூக்கம், சுவையின்மை, குமட்டல் இவை அளவுக்கு மீறி எண்ணெய்ப்பசை உண்டானதின் இலக்கணமாகும். 59

## 34. எண்ணெய் பருகுவதற்கு முன் செய்ய வேண்டியவை

எண்ணெய் பருகுவதற்கு முதல் நாள் இரவு உண்ணும் உணவு சூடாகவும், தளர்ந்ததாகவும், கபத்தை உண்டாக்காததாகவும், அதிக எண்ணெய்ப்பசை அற்றதாகவும், ஒத்துக்கொள்ளக்கூடிா தாகவும் அமைதல் வேண்டும். அளவுடன் கூடியதாகவும் இருத்தல் வேண்டும். 60

## 35. தோஷங்களை தணிப்பதற்கும் வெளிப்படுத்துவதற்கும், எண்ணெய் குடிக்கும் காலம்

**[1]ஸம்சமனம்**, **[2]ஸம்சோதனம்** உடலில் உள்ள தோஷங் களைத் தணிப்பதற்கு எண்ணெய் பருகுபவர், பசி எடுத்தவுடன் உணவு உண்ணும் நேரத்தில் பருக வேண்டும். தோஷங்களை வெளிப்படுத்துவதற்கு எண்ணெய் பருகுபவன், முதல் நாள் இரவு உணவு சிரணித்தபின் பருக வேண்டும். 61

## 36. எண்ணெய் குடித்தபின் செய்ய வேண்டியவை

எண்ணெய் குடித்தவன், மறுபடியும் எண்ணெய் குடிக்க விரும்புபவன், எப்பொழுதும் சுடுநீரையே பயன்படுத்தி புலனடக் கம் உள்ளவனாகவும் இரவில் தூங்குபவனாகவும் இருக்க வேண் டும். தானாக வெளிவரும் மலம், சிறுநீர், வாதம், ஏப்பம் இவற்றை அடக்கக்கூடாது. உடற்பயிற்சி, உரக்கப் பேசுதல், சின மடைதல், வருந்துதல், குளிர்ச்சி, வெயில் இவற்றைத் தவிர்க்க வேண்டும். காற்றோட்டமில்லாத இடத்தில் இருக்கவும் படுக்க வும் வேண்டும். இம்முறைகளைக் கடைபிடிக்காவிட்டால் கடுமை யான நோய்கள் தோன்றும். 62–64

---

1. ஸம்சமனம் — தோஷங்களைத் தணிப்பது.
2. ஸம்சோதனம் — தோஷங்களை வெளிப்படுத்துவது.

## 37. மிருதுவான, கடினமான மலக்குடலின் இலக்கணம்

கூட்டுச் சேரா எண்ணெய் பருகுவதினால் மூன்று நாட்களில் எண்ணெய்ப் பசையுண்டாக்கும் மலக்குடல், மிருது மலக்குடல் எனப்படும்.

ஏழு நாட்களில் எண்ணெய்ப் பசையுண்டாகும் மலக்குடல், கடின மலக்குடல் ஆகும்.

வெல்லம், கரும்புச்சாறு, மோர், பால், கடைந்த தயிர், பாயசம், [1]**க்ருசரம்**, நெய், குமிழம்பழம், கடுக்காய், நெல்லிக் காய், தானிக்காய், (திரிபலா) இவற்றின் ரசம், திராக்ஷை ரசம், ஊகைப் பழத்தின் ரசம், சுடுநீர், புதுக்கள் இவற்றைப் பருகுவ தனால் [2]**மிருது கோஷ்டம்** உள்ளவனுக்கு மலப்போக்கு ஏற் படும். 65-67

கடினமான மலக்குடல் உள்ளவனுடைய [3]**கிரஹணி** என்ற உறுப்பில் வாதம் மிகவும் வலிவு பெற்றிருந்தால் மேற்கூறப்பட்ட மிருதுவான மலக்குடல் உள்ளவனுக்குக் கூறப்பட்ட பொருட் களினால் மலம் வெளிவருவதில்லை. 68

மிருதுவான மலக்குடல் உடையவனின் கிரஹணி என்ற உறுப் பில் பித்தம் மிகவும் வலிவு பெற்றிருந்தால், சிறிதளவே கபம் இருப்பதாலும், வாதம் வலிவு அற்றதாக இருப்பதாலும் எளிதில் மலம் வெளிவரச் செய்வதாகும். 69

## 38. எண்ணெய் குடிப்பதினால் ஏற்படும் நாவறட்சிக்கான சிகிச்சை

கிரஹணி என்னும் உறுப்பில் பித்தம் வலிவு பெற்றிருப்ப தாலும், சடராக்னி மிகவும் வலிமை பெற்றிருப்பதாலும் பருகிய எண்ணெய், சடராக்னியின் வலிவினால் விரைவில் சீரணித்து விடுகிறது. அதனால் ஓஜஸ் எனும் தாதுவை வெளிப்படுத்தி கடுமையான நாவறட்சியை உண்டாக்குகிறது.

எண்ணெயினால் சடராக்னி வலிவு பெற்றிருக்கும்போது குரு குணமுள்ள உணவு அந்த சடராக்னியைத் தணிப்பதற்குச் சக்தி யற்றதாக ஆகிறது. குளிர்ந்த நீராலும் அதைத் தணிக்க முடிவ தில்லை. ஆகையினால் எரிச்சல் உண்டாகிறது. அறையில் அடை பட்ட பாம்பு தன் நஞ்சாகிற நெருப்பினால் தானாக அழிந்து

1. க்ருசரம் — அரிசி, பயிறு, உளுந்து, எள் இவற்றினால் தயா ரித்த கஞ்சி.
2. மிருதுகோஷ்டம் — எளிதில் மலம் கழிக்கச் செய்யும் குடல்.
3. கிரஹணி—ஒருவகை அஜீர்ண நோய். சிறுகுடல் சீராக இல்லா மல் உண்டாகும் கழிச்சல் நோய்.

விடுவதுபோல் அந்த எரிச்சலில் மனிதன் தானாக அழிந்துவிடுகிறான். 70–72

எண்ணெய் சீரணமாகாத காரணமாக நாவறட்சி ஏற்பட்டால் மருத்துவன் வாந்தி எடுக்க மருந்து கொடுக்க வேண்டும். அப்படியும் அடங்காவிடில் குளிர்ந்த நீரையும், வறட்சியான உணவையும் கொடுத்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 73

## 39. தவறான வகையில் எண்ணெயைப் பயன்படுத்துவதால் ஏற்படும் தீமைகள்

தனிப்பித்தத்தினால் ஏற்பட்ட நோயிலும், குறிப்பாக ஆமதோஷத்துடன் கூடிய பித்தத்தினால் ஏற்பட்ட நோயிலும் கூட்டுச் சேராத நெய் பருகக்கூடாது. அப்படிப் பருகினால் அது உடல் முழுதும் பரவி நிறத்தை மஞ்சளாக மாற்றுவதுடன் அறிவிழப்பையும் தோற்றுவித்துக் கொன்றுவிடுகிறது. 74

எண்ணெயைத் தவறான முறையில் பயன்படுத்தினால்,சோம்பல், வயிற்றுப் பிரட்டல், வயிற்று உப்புசம், காய்ச்சல், அசைவற்றுப் போதல், மதியிழப்பு, குஷ்ட நோய்கள், அரிப்பு,வெளுப்பு, வீக்கம், மூலநோய், சுவையின்மை, நாவறட்சி, பெரு வயிறு, கிரகிணீ தோஷங்கள், உடலில் மதமதப்பு, சொல் தடைபடுதல், வயிற்று வலி, அசீர்ண நோய்கள் என இவை ஏற்படுகின்றன. 75–76

## 40. எண்ணெயைத் தவறான முறையில் பயன்படுத்துவதனால் ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சை

தவறான முறையில் எண்ணெய் பருகுவதனால் தோன்றும் எல்லா நோய்களிலும், வாந்தி, வியர்வை இவற்றை நோயாளி, நோய் இவற்றின் வலிவை அறிந்து உகந்த காலத்தில் மலம் கழிக்கக் கொடுக்க வேண்டும்.

மோரினால் தயாரித்த அரிஷ்டம், வறட்சியான உணவு, பருகும் பொருள், சிறுநீர்கள், திரிபுலா இவற்றைப் பயன்படுத்த வேண்டும். 77–78

## 41. முறைதவறி எண்ணெய் பருகுவதனால் ஏற்படும் தீமைகளுக்கு காரணம்

காலம் தவறி, நோய் அல்லது நோயாளிக்கு ஒத்துக்கொள்ளாத, அளவின்றி எண்ணெயைப் பருகுவது, எண்ணெய் பருகுவதற்குக் கூறப்பட்ட முறைகளைப் பின்பற்றாமை, அளவுக்கு மீறிப் பயன்படுத்தல் என இவை தீமைகளுக்குக் காரணங்களாகும். 79

எண்ணெய் குடித்தபின் மூன்று நாட்கள் நோயாளி இளைப்பாற வேண்டும். அந்நாட்களில், எண்ணெய்ப் பசையுள்ள, திரவமான, சூடான கஞ்சிகளையும் மாமிச ரசம் கலந்த சோற்றையும் உண்டு மறுநாள் மலம் கழிக்க மருந்து குடிக்க வேண்டும். 80

எண்ணெய் குடித்தபின் ஒருநாள் இடைவெளிக்குப்பின் முன் போலத் தீவிரமானதும், சூடானதுமான மாமிச ரசம் கலந்த சோற்றை உண்டு வாந்தி செய்ய மருந்து எடுத்துக்கொள்ள வேண்டும்.

நோயைத் தணிக்கும் எண்ணெயைப் பருகியபின் மலம் கழிப்பதற்கான மருந்தை உண்டபோது கடைபிடிக்கும் முறைகளைக் கடைபிடிக்க வேண்டும். 81

## 42. கூட்டுச் சேரும் எண்ணெய் பருகத் தகுந்தவர்கள்

எண்ணெயில் வெறுப்புள்ளவன், எப்பொழுதும் எண்ணெய் பருகுபவன், மிருதுவான மலக்குடல் உடையவன், துன்பத்தைப் பொறுக்க முடியாதவன், தினந்தோறும் கள் குடிப்பவன், என இவர்கள் கூட்டுச் சேரும் எண்ணெய் பருகத் தகுந்தவர்கள். 82

## 43. கூட்டுச் சேர்க்கும் முறை

லாவம், தித்திரி, மயில், அன்னப்பறவை, பன்றி, கோழி, பசு, வெள்ளாடு, செம்மறியாடு, மீன் இவற்றின் மாமிச ரசத்துடன் எண்ணெயைக் கலந்து கொடுப்பது நன்மை தரக்கூடியது. 83

யவ அரிசி, இலந்தை, கொள்ளு, நெய், எண்ணெய், வசை, மஜ்ஜை, வெல்லம், சர்க்கரை, புளிப்பு மாதுளம்பழம், தயிர், சுக்கு, மிளகு, திப்பிலி இவை மாமிச ரசத்துடன் சேர்க்கக்கூடிய பொருட்களாகும். 84

உணவுக்கு முன் எண்ணெய்ப் பொருட்களான, நெய், எண்ணெய், வசை, மஜ்ஜை இவற்றுடன் சேர்ந்த கிச்சிடி எனும் ஒருவகைத் தின்பண்டத்தை எள்எண்ணெயுடன் சேர்த்து உண்டால் உடலில் எண்ணெய்ப் பசை அதிகம் ஏற்படும். உணவு உண்டபின் அதிகம் எண்ணை கலந்த [1]**திலகாம்பலிகம்** எனும் ஒருவகை தின்பண்டத்தை உட்கொண்டால் விரைவில் உடலில் எண்ணெய்ப் பசை உண்டாகும். 85

வறண்ட உடல் அமைப்புள்ளவன், சுராக்கள்ளுடன், தேன் பாகு, சுக்கு, எள் எண்ணெய் இவற்றைச் சேர்த்துப் பருகி இவை

---

1. திலகாம்பலிகம் — எள்ளு சேர்த்துத் தயார் செய்த ஒருவகைக் கஞ்சி.

சீரணமான பின் வறுத்த மாமிசத்துடன் உணவு உண்பதால் எண்ணெய்ப்பசை உண்டாகும். 86

வாதம் அதிகம் உள்ளவன், கள்ளுடன் [1]மண்டம், எண்ணெய், வசை, மஜ்ஜை இவற்றுடன் கலந்தோ அல்லது பாலுடன் தேன்பாகைக்கலந்தோ பருகினால் விரைவில் எண்ணெய்ப் பசை உண்டாகும். 87

கறந்த சூடான பாலுடன் எண்ணெயும், சர்க்கரையும் கலந்து சாப்பிட்டாலும் அல்லது தயிர் ஏடுடன் தேன்பாகைக் கலந்து உண்டாலும், மனித உடலில் எண்ணெய்ப் பசை உண்டாகும். 88

[2]**பாஞ்சப்ரஸ்ருதிகி** என்ற கஞ்சியில் உளுந்து அதிகம் சேர்த்துப் பாலில் தயார் செய்த பாயஸத்தையும், எண்ணெயையும் கலந்து பருகினால் விரைவில் உடலில் எண்ணெய்ப்பசை உண்டாகும். 89

## 44. பாஞ்சப்ரஸ்ருதிகி என்ற கஞ்சியின் விளக்கம்

நெய், எண்ணெய், வசை, மஜ்ஜை, அரிசி இவை ஒவ்வொன்றையும் இரண்டு (ப்ரஸ்ருதிகி) இரண்டு பலஅளவு எடுத்துக் கஞ்சி தயார்செய்து எண்ணெய்ப்பசை தேவைப்படுகிறவன் அருந்தலாம். 90

## 45. எண்ணெய்ப் பசையுண்டாக்க சேர்க்கத் தகாத பொருட்கள்

குஷ்டம், வீக்கம், நீரிழிவு, இந்நோய்களால் பீடிக்கப்பட்டவர்கள், கிராமம், நீர்ப்பாங்கான இடம், நீர் இவற்றில் வாழுகின்ற உயிரினங்களின் மாமிசம், வெல்லம், தயிர், பால், எள்ளு இவற்றை எண்ணெய்ப்பசை உண்டாக்குவதற்குப் பயன்படுத்தக் கூடாது. 91

## 46. சேர்க்கத் தகுந்த பொருட்கள்

குஷ்டம், வீக்கம், நீரிழிவு இந்நோயுள்ளவர்கள், அரிசித் திப்பிலி, கடுக்காய் அல்லது கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இவற்றைக்கொண்டு தயாரித்த எண்ணெயை, எண்ணெய்ப் பசை உண்டாக்கப் பருக வேண்டும். 92

திராக்ஷ, நெல்லிக்காய், இவற்றைக்கொண்டு மருத்துவனால் தயாரிக்கப்பட்ட கஞ்சியில் புளிப்புத்தயிர், சுக்கு, மிளகு, திப்பிலி, இவற்றின் பொடியைச் சேர்த்து மருத்துவரால் தயாரிக்கப்பட்ட

---

1. மண்டம் — தெளிவான கஞ்சி.
2. பாஞ்சப்ரஸ்ருதிகி — ஐந்து பொருள்களைச் சம அளவில் எடுத்துத் தயார் செய்த கஞ்சி.

எண்ணெய் கலந்து பருகினால் விரைவில் உடலில் எண்ணெய்ப் பசை உண்டாகும். 93

யவ அரிசி, இலந்தை, கொள்ளு இவற்றால் தயார் செய்த கஷாயத்தில் யவக்ஷாரம், கள், தயிர், பால், நெய் இவற்றைக் கலந்த நெய்யை, எண்ணெய்ப்பசை உண்டாக்குவதற்குப் பயன் படுத்தலாம். 94

எண்ணெய், மஜ்ஜை, வசை, நெய் இந்நான்கையும் சேர்த்து, இலந்தை, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் (த்ரிபலா) இவற்றால் தயாரிக்கப்பட்ட கஷாயத்தைப் பெண்குறி, ஆண்குறி இவற்றில் உண்டாகும் நோய்களுக்குப் பயன்படுத்தலாம்.

உலர்ந்த துணியைத் தண்ணீரில் எவ்வளவு நனைத்தாலும் தனக்குத் தேவையான தண்ணீரை மட்டும் அது ஏற்றுக்கொள் கிறது. மீதியுள்ள நீர் வெளியே சென்றுவிடுகிறது. அதேபோல் அதிக அளவில், எண்ணெய் பருகினால் எவ்வளவு எண்ணெயைச் சடராக்னியால் சீரணிக்க முடியுமோ அந்த எண்ணெயைத்தான் சீரணிக்கிறது. மீதி எண்ணெயைச் சீரணம் செய்யாமல் மலத் துவாரத்தின் வழியாக வாயு வெளியேற்றி விடுகிறது.

ஒருமண் குவியலின்மேல் வேகமாகத் தெளித்த நீர்க் குவியலை முழுவதும் நனைக்காமல் விரைவில் வெளிச்சென்று விடுகிறது. அதுபோல் விரைவில் பருகப்பட்ட எண்ணெய் உடல் முழுவதும் எண்ணெய்ப் பசையை உண்டாக்காமல் சிறிதளவே எண்ணெய்ப் பசையை உண்டாக்கி வெளியேறி விடுகிறது. 95—97

## 47. உப்புக் கலந்த எண்ணெயின் குணங்கள்

உப்பில் இளகச் செய்யும் தன்மை [1](அபிஷ்யந்தி), வறட்சியற்ற தன்மை [2](அரூக்ஷம்), நுட்பமான பகுதிகளிலும் ஊடுருவிச் செல் லும் தன்மை [3](ஸூக்ஷ்மம்), உஷ்ண வீரியம் விரைவில் உடல் எங்கும் பரவும் தன்மை [4](வியவாயி) என இக்குணங்கள் இருப்ப தால் உப்புடன் கலந்த எண்ணெய் விரைவில் எண்ணெய்ப் பசையை உண்டாக்குகிறது. 98

---

1. அபிஷ்யந்தி — உப்பில் இளகச் செய்யும் தன்மை.
2. அரூக்ஷம் — வறட்சியற்ற தன்மை.
3. ஸூக்ஷ்மம் — நுட்பமான பகுதிகளிலும் ஊடுருவிச்செல்லும் தன்மை.
4. வியவாயி — உஷ்ண வீரியம், விரைவில் உடல் எங்கும் பரவும் தன்மை.

## 48. எண்ணெய் சிகிச்சை, வியர்வை சிகிச்சை இவற்றின் முறை

முதலில் எண்ணெய்ச்சிகிச்சை செய்தபின் வியர்வை சிகிச்சை செய்ய வேண்டும். இவ்விரண்டு சிகிச்சைகளும் செய்தபின் ஸம்சோதனம், ஸம்சமனம் இவற்றைச் செய்ய வேண்டும். 99

### முடிவுரை

இந்த ஸ்நேகவிதி எனும் அத்தியாயத்தில் எண்ணெய்கள்' எண்ணெய் முறைகள், எண்ணெயினால் ஏற்படும் தீமைகள், அவற்றிற்கான சிகிச்சை, கேள்விக்குத் தக்கவாறு சந்திரபாகருடைய மகனான ஆத்ரேயரின் பதில் இவை விளக்கப்பட்டுள்ளன. 100

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரக மாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை ஸூத்ர
ஸ்தானத்தில் ஸ்நேஹாத்யாயம் எனும்
13—வது அத்தியாயம்
முற்றும்

# பதினான்காவது அத்தியாயம்

## *ஸ்வேதாத்யாயம்

ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி ஸ்வேதாத்யாயத்தை விவரித்துக் கூறுவோம். (1—2)

ஒற்றடங்களை முறைப்படி செய்வதால் வாத கபத்தினால் ஏற்படும் நோய்கள் தணியும். எனவே அத்தகைய ஸ்வேதவிதி பற்றி விளக்குவோம். (3)

### 1. ஒற்றட சிகிச்சையின் சிறப்பு

முதலில் எண்ணெய்ச்சிகிச்சை செய்து பிறகு ஒற்றடச்சிகிச்சை செய்வித்தால் உடலில் உள்ள வாயுவின் சீற்றம் தணிந்து மலம், சிறுநீர், விந்து இவை எத்தகைய தொல்லையின்றி வெளிப்படும். (4)

நன்கு உலர்ந்த உயிரற்ற கட்டையும் எண்ணெய் தடவப் பெற்று ஒற்றடம் கொடுக்கப்படுமாயின் வளையும், எனில் உயிருள்ள மனிதர்களைப் பற்றிக் கூறவேண்டியது யாது உளது? (5)

நோய், பருவம், தனிப்பட்ட மனிதர்கள், வருந்தும் நோயுற்ற உடல் இவற்றிற்குத் தக்கவாறு ஒற்றடத்தை நன்கு ஆராய்ந்து பார்த்து பிறகுதான் செய்விக்க வேண்டும். ஆராயாமல் அதிகச் சூடாகவும், மிகவும் மென்மையானதுமான ஒற்றடத்தைத் தரக் கூடாது. தேசம், நேரம், மருந்து இவற்றை ஆராய்ந்துதக்க இடத்தில் தகுந்தவாறு கொடுக்கப்படும் ஒற்றடம் பயனுள்ளதாக அமையும். (6)

நோயினால், உடல் குளிர்ச்சியாகி, உடலிலுள்ள சூடு மயிர்க்கால் வழியாக வெளியாகாதபோதும் அல்லது குளிர்ச்சியால் உடல் செயலற்றுப் போனபோதும் ஒற்றடம் மிகவும் இன்றியமையாதது. நோய் கடுமையானதாயின் ஒற்றடமும் வலிமையுடையதாகவும்,

---

*ஸ்வேதாத்யாயம் — ஒற்றடத்தின் வழியாக நோய் குணமாக்கப் படுவது. ஸ்வேதம்—ஒற்றடம். ஒற்றடம் கொடுக்கும் முறை. அதன்வகைகள் முதலியன விளக்கப்படுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெற்றது.

வலிமை குறைவான நோயில் வலிமை குறைந்த ஒற்றடமும், நடுத்தரமான நோயில் நடுத்தரமான ஒற்றடமும் செய்விக்க வேண்டும்.

வாத கப நோய்களில், எண்ணெய்ப்பசையும், வறட்சி குணமுள்ள ஒற்றடத்தையும் செய்விக்க வேண்டும். வாத நோயில் எண்ணெய்ப்பசை குணமுள்ள ஒற்றடமும், கபநோயில் வறட்சி குணமுள்ள ஒற்றடமும் கொடுக்க வேண்டும். (7–8)

வாதம் இரைப்பையில் உள்ளபோது முதலில் வறட்சி குணமுடைய ஒற்றடத்தைக் கொடுத்துவிட்டுப் பிறகு எண்ணெய்ப்பசையுடைய ஒற்றடத்தைக் கொடுக்க வேண்டும். இரைப்பை என்பது கபத்தின் இருப்பிடம். அதுபோல சீரணப்பையில் கபம் சேர்ந்துள்ளபோது முதலில் எண்ணெய்ப்பசை குணமுள்ள ஒற்றடத்தைக் கொடுத்துவிட்டுப் பிறகு வறட்சி குணமுள்ள ஒற்றடத்தைத் தர வேண்டும். (9)

## 2. ஒற்றடத்தை தாங்காத உறுப்புகள்

மனிதனின் விதைகள், இதயம், கண்கள் இவற்றில் ஒற்றடம் கொடுக்கக்கூடாது. கட்டாயம் வந்தபோதும் மென்மையான ஒற்றடத்தையே தர வேண்டும். அதுபோல தொடை இடுக்கு எலும்பு மூட்டுகளில் ஒற்றடம் கொடுக்கவேண்டுமாயின் நடுத்தரமான ஒற்றடத்தையே தரவேண்டும். பிறஉறுப்புகளில் நேரத்திற்கும் நோய்க்கும் தக்கபடி கொடுக்கலாம். (10)

## 3. கண்ணிலும் இதயத்திலும் ஒற்றடம் கொடுக்கும் முறை

தூய்மையான ஆடை, கோதுமை மாவு, தாமரை இலை, தாமரை போன்ற மென்மையான கரு நெய்தல், பலாசம் முதலிய இலைகளால் கண்களை மூடிவிட்டுத் தலையிலும் பக்கங்களிலும் ஒற்றடம் கொடுக்கலாம்.

தண்மையான முத்துமாலைகள், குளிர்ந்த பாத்திரங்கள், தண்ணீரில் நனைந்த ஒருவகைத் தாமரை, கை இவற்றை இதயத்தின் மீது வைத்து மறைத்துவிட்டுப் பிறகு இதயத்தின் பக்கங்களில் ஒற்றடம் கொடுக்க வேண்டும். (11–12)

## 4. ஒற்றடம் கொடுக்க வேண்டிய கால அளவு

உடலில் குளிர்ச்சி, வலி, அசைவற்ற நிலை, உடற்பளு, ஆகியவை மாறி இயற்கையான நிலை வந்து வியர்வை துளிர்க்கின்றபோது ஒற்றடம் கொடுப்பதை நிறுத்திவிட வேண்டும்.

## 5. அளவுக்கு மிகுதியாக ஒற்றடத்தினால் உண்டாகும் தீமைகள்

பித்தத்தின் சீற்றம், நினைவிழத்தல், உடலில் தளர்ச்சி, நீர் வேட்கை, எரிச்சல், வியர்வை, உறுப்புகள் வலிமை இழத்தல் என

இவை ஒற்றடம் மிகுதியாகக் கொடுப்பதால் உண்டாகும் தீமைகள். (13–14)

அளவுக்கு அதிகமாக இத்தகைய ஒற்றடம் கொடுக்கப்பட்டவருக்கு ஆறாவது அத்தியாயத்தில் கூறப்பட்ட வேனிற்காலத்தில் செய்ய வேண்டிய முறைகளைப் பின்பற்ற வேண்டும். அதாவது, இனிமை, தண்மை, எண்ணெய்ப்பசை ஆகிய குணங்களை உண்டாக்கும் செயல்களைச் செய்ய வேண்டும். (15)

## 6. ஒற்றடம் கொடுக்கத் தகாதவர்

நாள்தோறும் மருந்து (கஷாயம்) உட்கொள்பவர், கள் பருகுபவர், கருவுற்றவர், [1]இரத்தபித்த நோயுள்ளவர், பித்தம்மேலிட்டவர், பித்தபேதி நோயுடையவர், உடல்வறட்சி பெற்றவர், சர்க்கரை நோயுள்ளவர், ஆசனவாய் நழுவியவர், அங்கு புண்ணுடையவர்,. நஞ்சினாலும் கள்ளினாலும் நோயடைந்தவர், களைத்தவர், நினைவிழந்தவர், பருமனானவர், பித்தமேகம் உடையவர், நீர்வேட்கை உடையவர், பசித்தவர், சினமுள்ளவர், வருத்தமுற்றவர், காமாலை நோயுடையவர், பெருவயிறு நோய் பெற்றவர், அடிபட்டவர், [2]வாதரத்த நோயுள்ளவர், வலிமையற்றவர், மிக மெலிந்தவர், குறைந்த உடற்காந்தி உடையவர், திமிரம் என்ற கண்ணோய் உடையவர் என இவர்களுக்கு மருத்துவர் ஒற்றடச் சிகிச்சை செய்விக்கக்கூடாது. (16–19)

## 7. ஒற்றட சிகிச்சைக்கு தக்கவர்

முற்றின தடுமன் (ஜலதோஷம்), இருமல், விக்கல், பெருமூச்சு, உடல்பாரம், காதுவலி, கழுத்தின் இரு பக்கங்களிலுமுள்ள நரம்புத்தசைகள் அசைவற்றிருத்தல், தலைநோய், குரல் மாற்றம், தொண்டைப்பிடிப்பு, முகங்கோணுதல், ஒருறுப்புவாதம், அனைத்துறுப்பு வாதம், அல்லது ஒரு பக்க வாதம், கைகால் அல்லது உடல் வளைந்து போதல், வயிற்று நோய், வயிற்று உப்புசம், மல சிறுநீர்ச் சிக்கல்கள், விந்து கட்டிப்போதல், அடிக்கடி கொட்டாவி விடுதல், அல்லது [3]பஹிராயாமம் எனும் நோய், பக்கச் சூலை, பின்புறம் வலி, இடுப்புவலி, வயிற்று இழுப்பு, வீக்கம், [4]க்ருத்ரஸ், நடக்கமுடியாமல் கால்களில் குத்தல் வலி,

---

1. இரத்த பித்தம் – உடலின் பல பாகங்களில் இரத்தக்கசிவு உண்டாகும் நோய்
2. வாத ரத்தம் – வாதத்தினால் கால்கள் வீங்கி நோயுற்றவர்.
3. பஹிராயாமம் – உடல் பின்புறமாக வளைதலாகிய வாத நோய்.
4. க்ருத்ரஸ் – கால்கள் நடக்க முடியாமல் குத்தல் வலி.

நீர்சுருக்கு, விதை வீக்கம், உடல்வலி, [1]ஊருஸ்தம்பம் முழங்கால் முட்டி, பாதம் இவைகளில் வலி, வீக்கம், கைகால் களில் வரும் நோய், அசீரணநோய், குளிர்ச்சி, நடுக்கம், கணுக் கால் பிடிப்பு, ஆகிய, [2]வாதகண்டகம் உடல் சுருங்குதல், உடல் விரிதல், வலி, மரத்துப்போதல், உறுப்புகள் அசைவற்றிருத்தல் உடல் பளு, உடல் மரத்துப் போதல் ஆகிய நோய்கள் உடையவர் ஒற்றடச்சிகிச்சைக்குத் தக்கவராவர். (20–24)

## 8. [3]பிண்டஸ்வேத ஒற்றட முறை

எள்ளு, உளுந்து, கொள்ளு, புளி, நெய், எண்ணெய், மாமி சம் கலந்த சோறு, அரிசி, கோதுமை யவம் இவற்றுடன் பாலி னால் செய்யப்பட்ட பொருள், மாமிசம் இவற்றையோ ஓரிரண்டு பொருட்களையோ உருண்டையாகச் செய்து அதனால் கொடுக்கப் படும் ஒற்றடம் பிண்ட ஒற்றடம் அல்லது பிண்டஸ்வேதம் என வழங்கப்படும். (25)

## 9. கப நோயுற்றவருக்கு ஏற்ற ஒற்றடம்

பசு, கழுதை, ஒட்டகம், பன்றி, குதிரை இவற்றின் சாணங் களைச் சூடாக்கியோ, உமி, யவதானியமாவு, மணல், மண், கற் பொடி, உலர்ந்த சாணம், இரும்புப்பொடி இவற்றைச் சூடாக் கியோ கப நோயாளிக்கு ஒற்றடம் கொடுக்க வேண்டும். முன்பு கூறிய பிண்ட ஒற்றடத்தை வாத நோயாளிக்குக் கொடுக்க வேண் டும். [4]ப்ரஸ்தரஸ்வேத ஒற்றடத்திலும் நோய்க்குத் தக்கவாறு இதே பொருள்களையே பயன்படுத்தலாம். (26–27)

பூமியின் உள்ளே உள்ள அறையில், ஜெந்தாகத்தில், சூடான அறையில், புகையில்லாமல் நெருப்பினால் சூடாக்கப்பட்ட இடத் தில் நன்றாக எண்ணெய் தேய்த்து உடல்பிடித்து விடப்பட்டவன் நன்கு வியர்த்து இன்பமடைவான். (28)

## 10. [5]நாடிஸ்வேத முறை

கிராம மிருகங்கள், நீர்மிக்க இடங்களில் உள்ள பிராணி, நீர் வாழ்பிராணி இவற்றின் மாமிசங்கள், பால், ஆட்டுத்தலை, பன்றி

---

1. ஊருஸ்தம்பம்–தொடை கம்பம் போல் பருத்து அசைவற்றி ருத்தல்.
2. வாதகண்டம் – கணுக்கால் பிடிப்பு
3. பிண்டஸ்வேதம் – மருந்துப் பொருள்களை உருண்டையாகத் துணியில் கட்டி சூடாக்கி ஒற்றடம் கொடுப் பது.
4. ப்ரஸ்தரஸ்வேதம் – கருங்கல்லைச் சூடாக காய்ச்சி கொடுக் கப்படும் ஒற்றடம்.
5. நாடீஸ்வேதம் – குழாய் வழியாக ஆவியைச் செலுத்தி ஒற் றடம் கொடுக்கும் முறை.

யின் உடலின் நடுப்பகுதியில் உள்ள இரத்தம், பித்தம், எண்ணெய் பசையுள்ள ஆமணக்கு விதை, எள்ளு, அரிசி இவை அனைத்தையும் ஒரு பெரிய பாத்திரத்தில் இட்டு வேகவைத்து அப்பாத்திரத்தின் மேல்பாகத்தில் செருகப்பட்ட ஒரு குழாயின்மூலம் ஆவியைச் செலுத்தி அந்த ஆவி உடலில் படுமாறு கொடுக்கப்படும்ஒற்றடம் நாடீஸ்வேதம் அல்லது குழாய் வழி ஒற்றடம் எனக் கூறப்படும். இந்த ஒற்றடச்சிகிச்சை வாத நோய்க்குக் கொடுப்பது. (29-30)

கபநோய்களுக்கு பின்வருமாறு நாடீஸ்வேதத்தைத் தரவேண்டும். மாவிலங்கை, சீந்தல்கொடி, ஆமணக்கு, முருங்கைப்பட்டை, முள்ளங்கி, கடுகுஇலை, வசம்பு, மூங்கில் இலை, புங்கம்பட்டை, எருக்கு இலை, முள்முருங்கை, முள்குறிஞ்சி, சாதி மல்லிகை இலை, வெண்துளசி, கருந்துளசி, இவற்றின் இலைகளைப் பாத்திரத்தில் இட்டு நன்றாகக் காய்ச்சி கஷாயமாக்கிக் குழாய் வழியாக அதன் ஆவியை உடலில் செலுத்த வேண்டும். (31-32)

## 11. வாத கப நோய்களுக்குக் கூறப்பட்ட நாடீஸ்வேத முறை

[1]இருபஞ்சமூலங்கள் கள், தயிர் இவற்றின் தெளிவு, பசுவின் சிறுநீர், புளிப்புப் பொருள்கள், இவற்றில், நெய் எண்ணெய் போன்றவற்றைச் சேர்த்து கஷாயமாக்கி ஆவியைக் குழாய் வழியாக நோயாளியின் உடலின்மீது செலுத்த வேண்டும். (33)

மேலே கூறப்பட்ட கஷாயங்களைப் பெரிய தொட்டியில் நிரப்பி, கை பொறுக்கும் சூடுள்ள அந்தக் கஷாயத்துடன் கூடிய பெரிய தொட்டியில் நோயாளியை அமரவைத்தோ இதுபோல நெய், பால், எண்ணெய்த் தொட்டிகளை அமைத்தோ ஒற்றடச் சிகிச்சை செய்யலாம். (34)

## 12. [2]உபநாஹஸ்வேதம்

கோதுமை, யவதானியம் (பார்லி) இவற்றின் மாவை, புளிப்புப் பொருட்களுடன் கலந்து கள்தெளிவு, இந்துப்பு, இவற்றை எண்

(1) இருபஞ்சமூலம் – சிறுபஞ்சமூலம் – சிறுமல்லி, பெருமல்லி, சிறுவழுதுளை, கண்டங்கத்திரி, நெருஞ்சில், வில்வம், குமிழ், பெருவாகை, பாதிரி, முன்னை இவையனைத்தும் இரு பஞ்ச மூலம் எனப்படும்.

(2) உபநாஹஸ்வேதம்– பல மருந்துப் பொருள்களை புளிப்புப் பொருட்களுடன் கலந்து எள் எண்ணெய் சேர்த்துத் தரப்படும் ஒற்றடம் உபநாஹஸ்வேதம். அல்லது கட்டுப் போடுதலும் உபநாஹஸ்வேதம்.

ணெயுடன் கலந்து உருண்டையாக்கிச் சூடாகக் கொடுக்கப்படுவது உபநாஹஸ்வேதம். (35)

நறுமணப்பொருட்கள், கள்தெளிவு, கீரைப்பாலை, சதகுப்பை, ஆளிவிதை, கோஷ்டம் இவற்றை எண்ணெயுடன் கலந்து உபநாஹஸ்வேதம் எனும் ஒற்றடம் கொடுக்க வேண்டும்.

மயிருடன் கூடிய உஷ்ண வீர்யமுள்ள நாற்றமற்ற தோலினால் கட்டுப்போடவும், அத்தகைய தோல் கிடைக்காவிடில் பட்டு அல்லது கம்பளிப் போர்வை அல்லது பருத்தித் துணியைப் பயன்படுத்தலாம். (36–37)

## 13. உபநாஹஸ்வேதத்தின் கால அளவு

இரவில் கட்டப்பட்டதைப் பகலிலும், பகலில் கட்டப்பட்டதை இரவிலும் அவிழ்த்துவிடவேண்டும். இல்லையெனில் எரிச்சல் தோன்றும். இத்தகைய சிகிச்சையைக் குளிர்காலத்தில் செய்தல் நலம். (38)

## 14. ஒற்றட சிகிச்சையின் வகைகள்

ஸங்கரம், ப்ரஸ்தரம், நாடீ, பரிஷேகம், அவகாஹனம், ஜேந்தாகம், அச்மகநம், கர்ஷூ, குடீ, பூ, கும்பீகம், கூபம், ஹோலாகம் என்று ஸ்வேதங்கள் பதின்மூன்று வகைப்படும். முறைப்படி எல்லாவற்றையும் இனி விளக்குவோம். (39-40)

### (அ) [1]ஸங்கரஸ்வேதம்

சூடாக்கப்பட்ட மருந்துப்பொருட்களை ஒரு துணியில் சுற்றியோ அல்லது ஆடையில் சுற்றாமல் உருண்டையாக உருட்டி சூடாக்கியோ ஒற்றடம் கொடுக்கலாம். இதனையே ஸங்கரஸ்வேதம் என்பர். (41)

### (ஆ) [2]ப்ரஸ்தரஸ்வேதம்

முதலில் நோயாளியின் உடலில் எண்ணெயைப் பூசிப் பிறகு ஊகுமுள் போன்ற துணியுள்ள நெல், சமீதானியம், இவற்றை

---

1. ஸங்கரம் – மருந்துப் பொருட்களை ஆடையில் சுற்றியோ சுற்றாமலோ கொடுக்கும் ஒற்றடம் ஸங்கரம்.

2. ப்ரஸ்தரஸ்வேதம் – மருந்துப் பொருட்களைச் சூடாக்கி நிலத்திலோ கல்லின்மீதோ பரப்பிவிட்டு கம்பளியால் மூடி நோயாளியைப் படுக்க வைத்து வியர்வை உண்டாக்குவது.

நன்கு வேகவைத்து அல்லது [1]வேஸவாரம் (எலும்பில்லாத மாமிசம்) பாலினாலான கஞ்சி, களி ஆகியவற்றைச் செய்து நோயாளியின் உடல் அமைப்புக்கு ஏற்றவாறு நிலத்தின்மீது பரப்பி அதன்மீது பட்டு அல்லது கம்பளி விரிப்பால் அல்லது சிவப்பு, வெள்ளை ஆமணக்கு இலையால், அல்லது எருக்க இலைகளால் மூடி அதன் மீது நோயாளியைப் படுக்கச் செய்யவும். இதுவே ப்ரஸ்தரஸ்வேதம் எனப்படும் (கீழே தரப்பட்ட பொருள்கள் சூடாக இருத்தல் இன்றியமையாதன) (42)

## (இ) [2]நாடீஸ்வேதம்

ஒற்றடம் கொடுக்கும் பொருட்களின் வேர், இலை, பழம், மொட்டு, முதலியவற்றையும் உஷ்ணவீர்யமுள்ள மிருகம், பறவை முதலியவற்றின் மாமிசம், தலை, கால், இவற்றையும், தக்கபடி புளிப்பு, உப்பு, எண்ணெய் இவற்றுடன் கலந்து சிறுநீர், பால், நீர் ஆகியவற்றைச் சேர்த்து பாத்திரத்தில் ஊற்றி மேல்கூறியபொருட்களையும் இட்டு வேகவைத்து அந்தப் பாத்திரத்தின் வாயை நன்றாக மூடி அதில் ஒரு குழாயைச் செருகி அதன்வழியாக வரும் ஆவியை நோயாளியின் உடலில் படுமாறு செய்யவேண்டும்.

அந்தக் குழாய், நாணல்தண்டு, மூங்கில் இலை, துவாரமுள்ள ஒருவகை புல்தண்டு, புங்கன், எருக்க இலை, இவற்றுள் ஏதாவது ஒன்றினால் அல்லது வேறு வகையாகவாவது செய்ததாக அமைய வேண்டும். அது யானையின் துதிக்கையின் நுனிப்பகுதி போல் பருமனுள்ளதாகவும் ஒரு மார்பு அளவு நீளமுள்ளதாகவோ அல்லது அரை மார்பு அளவு, அதாவது ஒரு கஜ நீளமுள்ளதாகவோ இருக்க வேண்டும். பாத்திரத்தின் வாயிலிருந்து குழாய் பருத்தும் செல்லச் செல்ல சிறுத்தும் இருக்கவேண்டும். இதற்கு ஏற்றவாறு பாத்திரத்தின் மூடியில் துவாரங்கள் அமைய வேண்டும். வாதத்தைப் போக்கும் இலைகளால் பாத்திரத்தின் பக்கங்கள், ஆவி வெளியே செல்லாதவாறு மூடப்பட்டிருக்க வேண்டும். பாத்திரத்திலிருந்து இரண்டு மூன்று துவாரங்களில் குழாய்களைச் செருகி அவற்றின் வழியாக ஆவி ஒற்றடம் தருதல் நலம். ஆவி ஒற்றடம் தருமுன் நோயாளியின் உடலில் எண்ணெய் பூசி அதைப் பசையுள்ளதாக ஆக்கவேண்டும். நோயாளியின் உடலில் ஆவியைச்

---

1. வேஸவாரம் – எலும்பில்லா மாமிசம், மிளகாய், மிளகு, இஞ்சி, கற்கண்டு, நெய் இவற்றில் செய்யப்பட்ட ஒருவகைப் பொருள்.

2. நாடீஸ்வேதம் – குழாய் வழி ஆவியைச் செலுத்தி ஒற்றடம் தருவது.

செலுத்தும்போது குழாய் இரண்டு மூன்று மடிப்பு உள்ளதாக இருக்கவேண்டும். இல்லையெனில் குழாய் வழியாக வரும் ஆவி மிகச் சூடுள்ளதாக நோயாளியின் உடலை சுட்டுவிடும். இதனையே நாடீஸ்வேதம் அல்லது குழாய்வழிச் செலுத்தும் ஆவி ஒற்றடம் என்பர். (43)

### (ஈ) [1]பரிஷேகஸ்வேதம்

நோயாளியின் உடலில் வாதத்தைப் போக்கும் எண்ணெய் முதலியவற்றைப் பூசி அதன்மீது ஓராடையைச் சுற்றவும். வாதத்தைப் போக்கும் வேர்கள், பழங்கள், மொட்டுகள் இவற்றால் ஆன கஷாயத்தை கைபொறுக்கும் அளவு சூடாக்கி அதனைக் குழாய் பொருந்தியுள்ள அல்லது பலவகைத் துவாரமுள்ள பாத்திரத்தில் இட்டு எண்ணெய் தடவி ஆடையால் மூடிய நோயாளியின் உடலில் ஊற்ற வேண்டும். இதையே பரிஷேகஸ்வேதம் என்பர். (44)

### (உ) [2]அவகாஹஸ்வேதம்

வாய் அகலமான ஒரு பாத்திரத்தில் வாதத்தைப் போக்கும் மருந்துப் பொருட்களால் ஆன கஷாயத்தை அல்லது பால், எண்ணெய், நெய், மாமிசரசம், வெந்நீர் இவற்றில் ஏதேனும் ஒன்றை நிரப்பி அதில் நோயாளியை அமரச் செய்ய வேண்டும். இதுவே அவகாஹஸ்வேதம் எனப்படும். (45)

### (ஊ) [3]ஜேந்தாகஸ்வேதம்

ஜேந்தாகஸ்வேதம் செய்ய விரும்புபவர் முதலில் நிலத்தை நன்கு சோதித்துப் பார்க்கவேண்டும். நோயாளி இருக்கும் இடத்திலிருந்து கிழக்கு அல்லது வடக்குத் திசையில் நல்ல வளமுள்ள தூய்மையான இடத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அந்நிலத்தின் மண் கருப்பு அல்லது பொன்னிறமானதாகவும் இனியதாகவும்

---

1. பரிஷேகஸ்வேதம் — குடத்தில் துளைகள் செய்து மருந்து கஷாயத்தைச் சூடாக்கி அதன் வழியாக நோயாளியின் உடலில் செலுத்துவது.
2. அவகாஹஸ்வேதம் — மருந்துப் பொருட்கள் நிறைந்த தொட்டியில் நோயாளியை அமர்த்துவது.
3. ஜேந்தாகஸ்வேதம் — தனிப்பட்ட சூடான தனி அறையில் நோயாளியை இருத்தி வியர்விப்பது.

இருக்க ஏரி, குளம் போன்ற நீர்நிலையின் கரையில் உள்ளதாக வும் பார்த்து, நீர்நிலையின் தெற்கு மேற்குக் கரையில் மற்றொரு சிறிய குட்டை உள்ள இடமாகத் தேர்ந்தெடுக்கவேண்டும். நிலம் மேடு பள்ளம் இன்றியும் ஒரே சீராகவும் இருப்பதைக் கவனித்து அங்கு வட்டமான ஒரு கட்டடத்தைக் கட்டவும். அது நீரிலிருந்து ஏழு அல்லது எட்டுமுழத் தொலைவில் இருக்கவேண்டும். வீட்டின் வாயில் நீர்நிலையைப் பார்க்குமாறு அமைக்க வேண்டும்.

அந்த மாளிகை, அகலம், உயரம், நீளம் ஆகிய அளவுகளில் பதினாறுமுழமாகவும், மண்ணினால் கட்டப்பட்டதாகவும், காற் றுக்காக பல சன்னல்கள் கொண்டதாகவும் இருக்க வேண்டும். இந்த மாளிகையின் உள்ளே கதவுவரை ஒரு கையளவு உயரம் அகலம் உள்ள ஓர் இருக்கையை அமைக்கவேண்டும். இந்த வட்ட மாளிகையின் நடுவில் மண்ணிலாலான அடுப்பு ஒன்றை அமைக்கவும். அதன் அளவு உயரம் அகலம் நான்கு முழங் களும் நீளம் தனிப்பட்ட மனிதர்களின் தேவைப்படியும் அமைய வேண்டும். அதுவும் வட்டமானதாகப் பந்து வடிவத்தில் இருத்தல் வேண்டும். அதனில் நுண்ணிய துவாரங்கள் பல பொருந்தியிருத் தல் வேண்டும். கம்பத்தைப் போன்ற அந்த அடுப்பிற்கு ஒரு மூடியையும் அமைத்து அந்த அடுப்பில் கீருங்காலி, மருத மரங் களின் விறகுகளை நிரப்பி எரியூட்ட வேண்டும். விறகுகள் நன்கு எரிந்ததையும், எரிந்துவிட்டதையும், புகையில்லாமல்இருப்பதையும் அறை நெருப்பின் சூட்டினால் சூடேறி இருப்பதையும் ஸ்வேத சிகிச்சைக்குத் தக்க உஷ்ணத்துடன் இது உள்ளது என்பதை மருத் துவர் அறிந்து நோயாளிக்கு வாதத்தைப் போக்கும் எண்ணெய் பூசித் துணியால் மூடி அவ்வறைக்கு அழைத்துச் செல்லவும். உள்ளே நுழைந்தவுடன் அவரிடம், ''அன்பரே! நன்மைக்காகவும், ஆரோக்கியத்தின் பொருட்டும் செல்லுங்கள். உள்ளே நுழைந்து இருக்கையின் மீது ஏறித் திரும்பித் திரும்பிப் படுத்து சுகமாக இருங்கள். அதிகமான சூட்டினால் மூர்ச்சை அடைந்தாலும் உயிருள்ளவரை இருக்கையை விட்டு எழாதீர்! எழுந்தாலும் உங்களால் கதவுவரை வரமுடியாது. இவ்வாறு இருக்கையைவிட்டு எழுவது உம் உயிருக்கே உலையாக முடியலாம்.''

''நீங்கள் பயந்து அந்த இருக்கையிலிருந்து இறங்கி வந்தால் வாயிலில் வந்தஉடன் உடலெங்கும் வியர்வை பெருகி நினை விழந்து நீங்கள் உயிர் துறப்பீர். ஆகையால் எவ்வகையிலும் அந்த இருக்கையை விட்டு எழக்கூடாது. உங்கள் உடல் சரியாகி விட்டது. கபம் விலகிவிட்டது. உடல் வியர்த்து அடங்கிவிட்டது, உடலின் மயிர்க்கால்கள் திறந்து உள்ளன. உடல் பளு நீங்கி இலே

சாக ஆய்விட்டது என்று நீர் உணர்ந்தால் அப்போது உடலின் பலவகைச் சிக்கல்கள், தூக்கம், வலி, பளு இவையனைத்தும் நீங்கி உடல் இலேசாக ஆய்விடும். அப்போது மெள்ள மெள்ள இருக்கையிலிருந்து எழுந்து வாயில் பக்கம் வரவும். வெளியே வந்தவுடன் கண்களின் ஓய்விற்காகக் குளிர்ந்தநீரைக் கையால் தொடக்கூடாது. சூடும், உடல்வருத்தமும் நீங்கியவுடன் ஒரு முகூர்த்த நேரம் கைபொறுக்கும் அளவு சூடுள்ள வெந்நீரில் நீராடி உடலுக்குப் பொருத்தமான உணவை உண்ண வேண்டும்'' என்று கூறவும் இதனையே ஜேந்தாகஸ்வேதம் என்பர். (46–50)

### (எ) [1]அச்மகனஸ்வேதம்

நோயாளி படுத்துக்கொள்ளத்தக்க அளவுள்ள ஒரு கல்லை வாதத்தைப் போக்கும் கட்டைகளைக் கொண்டு நெருப்பு மூட்டி சூடாக்கிப் பிறகு தணலைஎல்லாம் நீக்கிவிட்டு வெந்நீரால் கழுவி விடப்பட்ட அக்கல்லின் மீது பட்டாடை அல்லது கம்பளியை விரித்துப் பிறகு வாதத்தை நீக்கும் எண்ணெய் பூசி நோயாளியை குரு என்னும் மான்தோல், பட்டாடை வேறுவகையான ஆடை இவற்றால் மூடிப் படுக்கவைக்க வேண்டும். அப்போது மிகவும் இன்பமாக வியர்வை துளிர்க்கும். இதனையே அச்மகனஸ்வேதம் என்பர். (51–54)

### (ஏ) [2]கர்ஷூஸ்வேதம்

அறிஞனான மருத்துவன் நோயாளியின் படுக்கையின்கீழ் ஒரு பக்கம் திறந்த வாயுடைய சிறிய குடத்தை அமைத்து அதனுள் புகையில்லாத தணலை நிரப்பி அதன்மீது விரிக்கப்பட்ட படுக்கையில் படுத்துள்ள நோயாளி வியர்த்து இன்பமடைவான். இதனையே கர்ஷூஸ்வேதம் என்பர். (55)

### (ஐ) [3]குடீஸ்வேதம்

அதிக உயரமற்ற அதிக நீளமற்ற மிக்க அகலமும் இல்லாத வட்டவடிவமான பருமனான சுவர்களுடன் கூடிய ஓர் அறையை

---

1. அச்மகனஸ்வேதம் – சூடாக்கிய கற்பலகையில் நோயாளியை இருத்தி வியர்ப்பிப்பது.
2. கர்ஷூஸ்வேதம் – பானையில் தீமூட்டிப் படுக்கை அடியில் வைத்து நோயாளியைப் படுக்கச் செய்து வியர்ப்பிப்பது.
3. குடீஸ்வேதம் – தனிக் குடிசையில் கும்மட்டிகளை அமைத்து நோயாளியை வியர்ப்பிப்பது.

நிறுவ வேண்டும். அங்கு நறுமணப் பொருள்களை நன்கு பயன் படுத்தி அவ்வறை நறுமணம் கமழ்வதாகச் செய்ய வேண்டும். அவ்வறையின் நடுவில் மருத்துவன் ஒரு படுக்கையை அமைத்து மான்தோல், பட்டாடை, தர்பையினாலான விரிப்பு, கம்பளி, சோலகமெனும் மயிர்களால் ஆன விரிப்பு ஆகியவற்றைப் படுக்கை யின் மீது விரிக்க வேண்டும். அறையில் எல்லாப் பக்கங்களிலும் புகையில்லாத தணல் நிறைந்த குமட்டிகளை வைத்து எண்ணெ யைத் தடவி நோயாளியைப் படுக்கையில் படுக்கச் செய்ய வேண் டும். அப்போது மிகவும் இன்பமாக நோயாளியின் உடலில் வியர்வை துளிர்க்கும். இதனை குடீஸ்வேதம் என்பர். (56–58)

## (ஒ) [1]பூஸ்வேதம்

அச்மகனஸ்வேதத்தைப் போன்றதே பூஸ்வேதம். அச்மகனஸ் வேதத்தில் கல் சூடேற்றப்பட்டு நோயாளிக்கு வியர்வை உண் டாக்கப்படுகிறது. காற்றில்லாத தூய்மையான இடத்தில் நிலத்தைச் சூடேற்றி நோயாளியைப் படுக்க வைத்து வியர்வை உண்டாக்குவது பூஸ்வேதம் ஆகும். (59)

## (ஓ) [2]கும்பீஸ்வேதம்

முதலில் வாதத்தைப் போக்கும் கஷாயங்களால் குடத்தில் பாதியோ, நான்கில் மூன்று பங்கோ நிரப்பி நிலத்தடியில் புதைத்து அதன்மீது நோயாளிக்கு படுக்கை அல்லது இருக்கையோ அமைத்து அதன்மீது மென்மையான ஆடையால் மூடி எண்ணெய் பூசப் பெற்ற நோயாளியைக் கம்பளம் முதலியவற்றால் போர்த்தி அமர்த்தியோ படுக்கவோ வைக்கவேண்டும். பிறகு குடத்தில் நன்றாகக் காய்ச்சப்பட்ட இரும்புத் துண்டுகளையோ கல்துண்டு களையோ போட வேண்டும். அதிலிருந்து வெளிவரும் ஆவியால் நோயாளி இன்பமாக வியர்த்துச் சுகமடைவான். இதனையே கும்பீஸ்வேதம் என்று கூறுவர். (60–62)

## (ஔ) [3]கூபஸ்வேதம்

முதலில் காற்றில்லாத நல்ல நிலத்தில் படுக்கத் தகுந்த நீளம் அகலம் உள்ள இரண்டு மடங்கு ஆழமுள்ள பள்ளம் (கிணறு)

---

(1) பூஸ்வேதம் – நிலத்தில் சூடுண்டாக்கி நோயாளியைப் படுக்க வைத்து வியர்விப்பது.

(2) கும்பீஸ்வேதம்– குடத்தில் தீயிட்டு அதன்மூலம் வியர்ப் பிப்பது.

(3) கூபஸ்வேதம் – பள்ளம்வெட்டி அதில் கூறப்பட்ட முறை யில் எரியூட்டிப் படுக்கையில் நோயாளியைக் கிடத்தி வியர்ப்பிப்பது.

ஒன்று தயார் செய்து அதனைத் தூய்மைப்படுத்தி அதில் யானை, குதிரை, பசு, கழுதை, ஒட்டகம் இவற்றின் உலர்ந்த சாணத்தைக் கொட்டி அதில் எரியூட்ட வேண்டும். புகை நீங்கிய பிறகு அதன் மீது படுக்கையை விரித்து நோயாளியின் உடலில் எண்ணெய் பூசி அதன்மீது படுக்கச் செய்யவும். அதனால் இன்பமாக வியர்த்து நோயாளி சுகமடைவான். இதனை கூபஸ்வேதம் என்று கூறுவர். (63–64)

### (க) [1]ஹோலாகஸ்வேதம்

யானை முதலிய பிராணிகளின் உலர்ந்த சாணங்களைப் படுக்கையளவு குவித்துப் பரப்பி அதில் எரியூட்டி நன்றாக எரிந்து புகை நீங்கிய பிறகு அதன்மீது ஒரு பாயை விரித்து வாதத்தை நீக்கும் எண்ணெய் பூசப்பட்ட நோயாளியின்மீது கம்பளம் முதலியவற்றைப் போர்த்தி அதில் படுக்கச் செய்ய வேண்டும். அதனால் நோயாளி நன்கு வியர்த்து இன்பமடைவான். இதுவே ஹோலாகஸ்வேதம் என்று கூறப்படும். இவ்வாறு நெருப்பின் தொடர்ச்சியினால் பதின்மூன்றுவிதமான ஸ்வேதங்கள் முனிவரால் கூறப்பட்டன. (65–67)

## 15. நெருப்பின் தொடர்பின்றி வியர்வை உண்டாக்கும் முறை

உடற்பயிற்சி, சூடான வீட்டில் தங்குதல், தடிமனான போர்வையை அணிதல், பசியோடிருத்தல், அதிகம் கட்குடித்தல், பயம், கோபம், மருந்துப் பொருட்களைப் பொடியாக்கி உடலின்மீது பூசுதல், மற்போர் செய்தல், வெயிலில் இருத்தல் ஆகியனவற்றால் நெருப்பின் தொடர்பின்றி வியர்வை உண்டாக்குவதாகும். (68–69)

ஓர் உறுப்பைப்பற்றியது, முழு உடலைப்பற்றியது என ஸ்வேதம் இருவகைப்படும். வறட்சி, வழவழப்பு (எண்ணெய்ப்பசை) ஆகிய மாறுபாட்டால் மீண்டும் இருவகைப்படும். இவ்வாறு ஸ்வேதத்தில் மூன்று இரட்டைகள் கூறப்பட்டன. அதாவது (1) நெருப்பு தொடர்பு, நெருப்பின் தொடர்பின்மை (2) உடலுறுப்பு ஸ்வேதம் – உடல்முழுவதும் ஸ்வேதம் (3) வறட்சிஸ்வேதம். வழவழப்பு ஸ்வேதம்என்பன. எண்ணெய்ப்பசை (வழவழப்பு) ஸ்வேதம் செய்தபிறகு நோயாளி மருத்துவரால் கூறப்பட்ட உணவையே உட்கொள்ள வேண்டும். உடலில் வியர்வை உண்டானவுடன்

---

1. ஹோலாகஸ்வேதம் – கூறப்பட்ட எரிபொருள்களால் சூடாக்கிய இடத்தில் பாயில் படுக்க வைத்து நோயாளிக்கு ஸ்வேதம் தருவது.

உடற்பயிற்சி செய்வதை விட்டுவிட வேண்டும். மருத்துவர் கூறும் முறைகளைப் பின்பற்ற வேண்டும். (70–71)

**முடிவுரை**

இதுகாறும் கூறியவற்றால் ஸ்வேதத்தினால் உண்டாகும் நன்மை, எவருக்கு எந்தவகை ஸ்வேதம் நன்மை பயக்கும், எவருக்குத் தீமையைத் தரும், எந்த இடத்தில் எந்த ஸ்வேதம் செய்யத் தக்கது, உயர்ந்தஸ்வேதம், மிகுதியான ஒற்றடத்தினால் ஏற்படும் தீமைகள், அதன் இலக்கணங்கள் அதிகமாக வியர்த்தவனுக்குத் தக்க மருந்துகள், ஸ்வேதத்திற்கு தக்கவர், தகாதவர், ஒற்றடத்திற்கு தேவையான மருந்துப் பொருட்கள், செய்முறை, பதின்மூன்று வகையான ஸ்வேதங்கள் நெருப்பின் தொடர்பின்றிச் செய்யப்படும் பத்துவகையான ஒற்றடமுறை சுருக்கமாக ஆறு வகையான வியர்ப்பிக்கும்முறை இவையனைத்தும் விளக்கப்பட்டன. (72–74)

இவ்வாறு இந்த அத்தியாயத்தில் ஸ்வேதவிதி பற்றிக்கூற வேண்டிய அனைத்தையும் புனர்வஸூ ஆத்ரேயர் கூறிவிட்டார். சீடர்கள் அவர் கூறியதைப் பின்பற்றி அதன்படி நடக்க வேண்டும்.

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் சோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையின் ஸூத்ரஸ்தானத்தில் ஸ்வேதாதிகாரம் எனும் பதினான்காம் அத்தியாயம் முற்றும்.

## பதினைந்தாவது அத்தியாயம்

## *உபகல்பநீயம்

''உபகல்பநீயம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

### 1. பொருட்களின் சேமிப்பு

அரசன், அரசனைப் போன்றவன், செல்வந்தன், எல்லாப் பொருள்களையும் சேகரிக்கக்கூடியவன் என இவர்களுக்கு, வாந்தி, பேதி இவற்றிற்குச் சிகிச்சை செய்ய விரும்பும் மருத்துவன், சிகிச்சையைத் தொடங்குவதற்கு முன்பாக அதற்குத் தேவையான பொருட்களைச் சேகரித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

வாந்தியும், பேதியும் மருந்து கொடுத்து நன்கு நிறைவேற்றப் பட்டிருந்தால் அந்தச் சேகரித்த பொருட்களை மற்ற செயல்களில் பயன்படுத்தலாம். இல்லையேல் துன்பங்கள் ஏற்படுமாயின் அவற்றைப் போக்கச் சேகரித்த பொருட்கள் பயன்படும். துன்பங்கள் தோன்றியவுடன் பொருட்கள் கிடைக்குமிடம் அருகிலிருந்தாலும் அவை எளிதாக உடனே கிடைக்கும் என்று சொல்ல முடியாதல்லவா ? 3

அக்னிவேசர் : ஐயன்மீர்! சிறந்த வைத்தியன் ''முற்றிலும் பயனை அளிக்கக்கூடிய சிகிச்சையைத்தான் முதலில் தொடங்க வேண்டும். எல்லாச் செயல்களின் வெற்றி என்பது நன்கு செயலாற்றப்படுவதைப் பொறுத்திருக்கும். தகுதியற்ற முறையில் செயலைத் தொடங்குவது துன்பங்களுக்குக் காரணமாகின்றன. செயல்களைச் சரியான முறையில் தொடங்கினால் வெற்றியும், சரியான முறையில் தொடங்காவிட்டால் தோல்வியும் ஏற்படுவது என்பது நடைமுறைக்கு ஒவ்வாதது என்று கூறினால் அறிவு, அறி

---

*உபகல்பநீயம் — சேகரித்து வைக்க வேண்டியவை, அதாவது நோய்களைத் தணிப்பதற்கான மருத்துவக் கருவிகள், மருந்துப் பொருட்கள் இவற்றைச் சேகரித்து வைக்க வேண்டியதைப் பற்றிக் கூறுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

வில்லாமை, இரண்டும் ஒன்றே என்று ஒப்புக்கொள்ள நேரிடும். அதனால் நன்மருத்துவன் சிகிச்சை, என்றும் தோல்வி காணாது. ஆபத்திற்கு இடமே கிடையாது.

ஆகையால் சிகிச்சை தொடங்குவதற்குமுன் தேவையான பொருட்களைச் சேகரித்து வைத்துக்கொள்ள வேண்டும் என்று கூறுவது சரியல்ல. 4

ஆத்ரேய புனர்வசு : அக்னிவேசரே ! துன்பங்கள் ஏற்படாமல் மருந்துகளை நன்முறையில் பயன்படுத்திச் சிகிச்சை செய்து வெற்றி பெறுவது என்பது எங்களாலோ அல்லது எங்களைப் போன்றவர்களாலோதான் முடியும். சிகிச்சையை நன்முறையில் பயன்படுத்தும் திறமையும் உபதேசிக்கும் திறமையும் எங்களைப் போன்றவர்களிடம்தான் உள்ளன. முறைப்படி உபதேசிப்பதற்கும், அதை நினைவில் வைத்துக்கொள்வதற்கும் ஆர்வமுடையவர் இந்நாட்களில் ஒருவருமில்லை. எங்கள் உபதேசத்தை நினைவிற்கொண்டு அதைப் பயன்படுத்தவோ, அல்லது சிகிச்சை முறையில் கொண்டுவரவோ ஒருவருமில்லை.

ஏனென்றால் தோஷம், மருந்து, இடம், காலம், வலிவு, உடல், உணவு, ஸாத்மியம், மனம், இயற்கைநிலை, வயதின் பல நிலைகள் ஆகியவை மிக நுட்பமானவை. அவற்றை கருத்தில் வைத்துக் கொண்டு சிகிச்சை புரியும் அறிவாளிகளுக்கே குழப்பம் ஏற்படுகிறதென்றால், குறைந்த அறிவுள்ளவர்களைப் பற்றிக் கூறுவானேன்? ஆகையால் சிகிச்சை தொடங்குவதற்கு முன்னால் அதற்குத் தேவையான பொருட்களைச் சேகரித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

மருந்துகளை நன்கு பயன்படுத்தும் முறையையும், சரியாகப் பயன்படுத்தாததால் விளையக்கூடிய தீமைகளைப் போக்குவது பற்றியும், உத்தர பாகத்தில் (பின்பகுதி) ஸித்திஸ்தானத்தில் கூறுவோம். 5

## 2. சேகரிக்க வேண்டிய பொருட்கள் (மருத்துவ மனை)

இப்பொழுது சேகரிக்க வேண்டிய பலவகையான பொருட்களைச் சுருக்கமாகக் கூறுவோம். கட்டிடக் கலையை நன்கு அறிந்தவன் மூலம் முதலில் ஒரு சிறந்த கட்டடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். அந்தக் கட்டடம் உறுதியாகவும், காற்றோட்டமுள்ள இடத்தில் அமைந்ததாகவும், காற்று வருவதற்காக ஒரு அமைப்பு உள்ளதாகவும் இருக்க வேண்டும். அந்த வீடு நோயாளி, உலவுவதற்கு வசதியாக அமைவதோடு மலைச்சாரலில்

அமைக்கப்பட்டதாக இருக்கக்கூடாது. வெயில், நீர், தூசி இவைகளுக்கு இடமளிக்காமல் மனதிற்கு அருவறுப்பைத் தரும், ஒலி, தொடுஉணர்வு, உருவம், சுவை, மணம் இவைகளின்றி நீர்நிறைந்த் தொட்டியுடன் அவ்வீடு அமையவேண்டும். தேவையானபொழுது பயன்படுத்துவதற்கு உரல், உலக்கை இவற்றைத் தவிர கழிப்பிடம், நீராடுமிடம், சமையலறை, இவை தனித்தனியாக தகுந்த இடத்தில் அமைந்திருக்க வேண்டும். 6

### 3. மருத்துவ மனையில் இருக்க வேண்டிய பணியாளர்களும், பொருட்களும்

நற்குணம், தூய்மை, நன்னடத்தை, நோயாளிகளிடம் அன்பு, செயலாற்றுவதில் சமயோசித அறிவு, செயலாற்றும் திறன், பணிவிடை செய்வதில் திறமை, சிகிச்சையிலும், மற்ற எல்லாச் செயல்களிலும் ஈடுபாடு, சொற்படி நடத்தல், என இவை நிரம்பிய பணியாட்கள் அந்த மருத்துவமனையில் நியமிக்கப்பட வேண்டும்.

சமையற்கலையில் வல்லமை, குளிப்பாட்டுவதில் திறமை, உடல் பிடிப்பதில் திறமை, நோயாளிகளை எழுப்பி, அமர்த்தி, படுக்கச் செய்யும் திறமை, மருந்தை அரைத்துச் செய்யும் ஆற்றல் என இத்திறமை கொண்டவர்களை பணியாட்களாக அமர்த்த வேண்டும்.

குறிப்பிட்ட வேலையில் அமர்த்தப்பட்டவனை வேறு வேலையில் ஈடுபடுத்தினாலும் மறுக்காமல் அதைச் செய்பவர்களாகப் பணியாளர்கள் தம்மைப் பழக்கப்படுத்திக்கொள்ள வேண்டும்.

பாடகர், வாத்தியம் இசைப்பவர், துதிப்பாடகர், செய்யுள் படிப்பவர், கதை புனைபவர், கதை சொல்பவர், இதிகாசம், புராணம் இவற்றை அறிந்தவர், எதிராளியின் உள்ளத்தை அறிபவர், சொற்படி நடப்பவர் இடம், காலம் இவற்றை அறிந்தவர் என இவர்கள் மருத்துவ சபையின் உறுப்பினராக நியமிக்கத் தகுதியுள்ளவர்கள்.

காடை என்ற பறவை, கௌதாரி, முயல், மான், கிளைமான், காட்டு ஆடு, பெருவயிறு படைத்த பிராணி, செம்மறியாடு, அதிகம் பால் தரக்கூடியதும், நற்குணம் படைத்ததும், நோயற்றதும், கன்றுடன் கூடியதும், சிறந்த புற்களைக் கொண்டு வேயப்பட்டதும், பருகுவதற்கு நீர் முதலிய வசதி உடையதும் ஆன தொழுவத்தில் வாழ்வதுமான பசுக்கள் என இவைகளை மருத்துவ மனையில் வைத்திருக்க வேண்டும்.

நீர் பருகுவதற்கான சிறு பாத்திரங்கள், ஆசமனம் செய்வதற்கான கிண்டி, மண்ணாலான மடக்குகள், மண் குடங்கள், வெண்கலப் பானைகள், கடாய், பெரிய குடங்கள், சிறு குடங்கள், நீர்க்குவளை, வாணலி, துடுப்பு, பாய், மூடிகள், எண்ணெய் காய்ச்சுவதற்கான பாத்திரங்கள், மத்து, தோல், துணி, நூல், பஞ்சு, ஆட்டு ரோமம் இவற்றையும், மற்றும் நோயாளிக்கான படுக்கை, இருக்கை, இவற்றின் அருகே பிடியுள்ள நீர்க்குவளை, எச்சில் துப்பும் பாத்திரம், கட்டிலின் மேல்விரிப்பு, போர்வை, தலையணைகள் இவைகளையும் தயாராகச் சேர்த்து வைத்திருக்க வேண்டும்.

படுக்க, அமர, எண்ணெய்ப் பசை உண்டாக்க, வியர்வை தோற்றுவிக்க, எண்ணெய் குளிக்க, தேய்த்துக்கொள்ள, மேற்பூச்சுப் பூசிக்கொள்ள, நீர் ஊற்ற, வாந்தி எடுக்க, மலம் கழிக்க, கஷாய வஸ்தி, எண்ணெய் வஸ்தி, சிரோவிரேசனம் (மூக்கில் மருந்திடுதல்) சிறுநீர் கழிக்க இவற்றிற்குப் பயன்படும் கருவிகளும் மருத்துவமனையில் தேவைப்படும்.

மருந்து அரைப்பதற்கும், கலப்பதற்கும் பயன்படும் சுத்தமான பாத்திரங்கள், நாற்புறமும் வழவழப்பாகவும், நடுவிலே சொரசொரப்பாகவும் உள்ளதும் கலுவம், அறுவைச்சிகிச்சைக்குத் தேவையான கத்தி போன்ற கருவிகள், துணைக்கருவிகள், புகை பிடிக்கும் கருவி, வஸ்தி, உத்தர வஸ்தி செய்வதற்கான கருவிகள், துடைப்பம், தராசு, அளக்கும் குவளைகள், நெய், எண்ணெய், வஸை, மஜ்ஜை, சிறிய ஈக்களினால் சேகரிக்கப்பட்ட தேன், தேன் பாகு, உப்பு, விறகு, நீர், தேன், சீது, ஸுரா, ஸௌவீரகம், துஷோதகம், மைரேயம், மேதகம் என்ற கள்வகைகள், தயிர், தயிர்த் தெளிவு, மோர், தான்யாம்லம், சிறுநீர்கள் இவற்றையும், மற்றும் சம்பா அரிசி, அறுபதாம் குறுவை அரிசி, பயத்தம் பருப்பு, உளுத்தம் பருப்பு, யவ அரிசி, எள்ளு, கொள்ளு, இலந்தை, சிற்றீச்சை, குமிழம்பழம், ஈச்சம்பழம், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், இவற்றையும் மருந்து தயாரிப்பதற்காகவும், உணவுக்காகவும் சேகரித்து வைத்தல் நலம்.

எண்ணெய்ப் பசை உண்டாக்குவதற்கும், வியர்வை உண்டாக்குவதற்கும், தேவையான பலவகைப் பொருட்கள், வாந்திக்கும், பேதிக்கும் கொடுப்பதற்குத் தேவையான பொருட்கள், மலக்கட்டு, சடராக்னி வளர்ச்சி, சிரணிக்க, நோய்களைத் தணிக்க, வாதத்தை நீக்க, இது போன்றவற்றிற்கு ஸூத்ரஸ்தானம் நான்காவது அத்தியாயத்தில் கூறப்பட்ட மருந்துகள் என அனைத்தையும் சேகரித்து வைக்கவும்.

மேலும் வாந்தி பேதி முறை தவறுதலால் ஏற்படும் துன்பங்களுக்கு ஏற்றவாறு சிகிச்சைக்குத் தேவையான பொருட்கள் பத்திய முறைக்குத் தேவைப்படும் பொருட்கள் என இவைகளும் சேகரித்து வைக்க வேண்டிய பொருள்களாகும். 7

## 4. வாந்தி எடுக்க மருந்து கொ[illegible]ப்ப[illegible]ற்கு முன் செய்ய வேண்டியவை

மருத்துவமனை தயார் செய்து, அதற்குத் தேவையான பொருட்களையும் சேகரித்தபின், நூலில் கூறியுள்ளபடி, நோய், நோயாளி இவற்றிற்குத் தக்கவாறு எண்ணெய்ப் பசை உண்டாக்கும் சிகிச்சை, வியர்வை உண்டாக்கும் சிகிச்சை இவற்றைச் செய்யும்பொழுது நோயாளிக்கு மனதைச் சார்ந்தோ அல்லது உடலைச் சார்ந்தோ கடுமையான நோய்கள் உடனடியாகத் தோன்றினால் அவற்றை நீக்க முதலில் சிகிச்சை செய்ய வேண்டும். நோய்கள் குணமடையும் வரையிலும் மறுபடியும் அந்நோய்கள் திரும்பி வராமல் இருக்கும் வகையிலும் மேற்கண்ட சிகிச்சையைத் தொடரலாம். 8

## 5. வாந்தி எடுக்கச் செய்யும் முறை

மனம், உடல் இவற்றைச் சார்ந்த நோய்கள் குணமடைந்தபின், எண்ணெய் சிகிச்சை, வியர்வைச் சிகிச்சை செய்துகொண்டவன், தெளிந்த மனமுடையவன், இரவில் நன்கு தூங்கியவன், முன்பு உண்ட உணவு சீரணமடைந்தவன், தலைக்குக் குளித்தவன், உடலில் மணம் வீசும் பொருட்களைப் பூசிக் கொண்டவன், மாலை அணிந்தவன், புத்தாடை உடுத்தியவன், தேவதை, நெருப்பு, அந்தணர், ஆசிரியர், முதியவர், மருத்துவர் இவர்களைப் பூஜித்தவன் என இவர்கள் நலனையளிக்கக்கூடிய நக்ஷத்திரம், திதி, கரணம், முகூர்த்தம் இவற்றுடன் கூடிய நன்னாளில் அந்தணர்களை மங்களச் சொற்கள் கூறச் செய்து, மந்திரங்களால் ஜபிக்கப்பட்ட தேன், அதிமதுரம், இந்துப்பு, தேன்பாகு' இவற்றுடன் சேர்த்து மலக்காரக்காயினால் தயாரித்த கஷாயத்தை அளவுடன் பருகச் செய்ய வேண்டும். 9

## 6. வாந்தி மருந்தின் அளவு

மலக்காரக்காயின் கஷாய அளவும், ஸம்சோதனத்திற்கான எல்லா மருந்துகளின் அளவும், ஒவ்வொரு மனிதனின் பலம், மலக்குடல் இவற்றைச் சார்ந்ததாகும். உள்ளிருக்கும் தோஷங்களை வெளிப்படுத்துவதன் மூலம், நோயை நீக்கி அதியோகம்,

அயோகம் இவற்றை தோற்றுவிக்காமலே இருக்கும் மருந்தின் அளவுதான் அவன் அருந்த வேண்டிய மருந்தின் அளவாகும். 10

## 7. வாந்திக்கு மருந்து பருகியபின் செய்ய வேண்டியவை

வாந்திக்கு மருந்து குடித்த இரண்டு நாழிகை நேரம் கழித்த பிறகு அவனுடைய உடலிலிருந்து வியர்வை வெளிவரத் தொடங்கினால் தோஷங்கள் இளகிக்கொண்டு வருகின்றன எனவும், மயிர்க்கூச்சல் ஏற்பட்டால் தோஷங்கள் தன் இடங்களிலிருந்து நகர்ந்து விட்டன என்றும் அறியலாம். வயிற்றில் உப்புசம் ஏற்பட்டால் தோஷங்கள் வயிற்றிற்கு வந்துவிட்டன என்றும் மனக்குமட்டல், வாயில் நீர்சுரப்பு இவை ஏற்பட்டால் தோஷங்கள் மேல்நோக்கி வந்துவிட்டன எனவும் அறிந்துகொள்ளவும்.

நோயாளியை முழங்கால்வரை உயரமுள்ளதும், நல்ல மேல் விரிப்பை உடையதும், போர்வை, தலையணை பிடிப்புள்ளதுமான இருக்கையில் அமரச்செய்து அருகில் வாந்தி எடுப்பதற்குத் தேவையான பாத்திரம் வைத்து, அவன் நெற்றியையும், இரு பக்கங்களையும் பிடித்துக் கொள்ளவும். தொப்புளை அழுத்துவதற்கும், முதுகைக் கீழிருந்து மேலாகப் பிடித்து விடுவதற்கும், வெட்கமற்ற, நோயாளியின் மனதிற்குகந்த நண்பர்களை தனித் தனியாக நியமிக்க வேண்டும். 11

செய்த ஏற்பாடுகளை நோயாளிக்கு அறிவித்து, உதடு, தாடை, தொண்டை இவற்றைத் திறந்து, அதிகம் துன்பப்படாமல், கழுத்தையும், உடலையும் மேலே உயர்த்தி, கொஞ்சம் குனிந்து தானாக வருகிற வாந்தியை வெளிப்படுத்த வழிவகுக்க வேண்டும்.

இருந்தும் வாந்தி வெளிவராவிட்டால் நகங்கள் களைந்த இரண்டு விரல்கள், அல்லது கருநெய்தல், ஆம்பல், செங்கழுநீர், இவற்றின் தண்டு இவற்றில் ஏதாவது ஒன்றை வாயில் செலுத்தி வாந்தி சுகமாக எடுக்க வழிசெய்ய வேண்டும். நோயாளியும் அவ்வாறே செய்ய வேண்டும்.

மருத்துவன் பாத்திரத்தில் நோயாளி வாந்தி எடுத்ததை உற்றுநோக்கி, யோகம், அயோகம், அதியோகம் இவற்றின் வேகத்தைக் கண்டுகொள்ள முடியும்.

வேகத்தின் இலக்கணத்தை அறிந்த மருத்துவன் தான் அவற்றிற்கு ஏற்றவாறு சிகிச்சை செய்யத் தகுதி பெறுகிறான். எனவே நோயாளி வாந்தி எடுத்ததை மருத்துவன் நன்கு கவனிக்க வேண்டும். 12

### 8. வாந்தியின் அயோகம், யோகம், அதியோகம் இவற்றின் இலக்கணம்

வாந்தியின் அயோகம், யோகம், அதியோகம் இவற்றின் வேகத்தை நன்கு அறிந்துகொள்ள அதன் இலக்கணம் மேலே கூறப்படுகிறது.

### 9. வாந்தியின் அயோக இலக்கணம்

ஏதாவது ஒரு காரணத்தினால் வாந்தி வராமலிருத்தல், பருகிய மருந்து அப்படியே வெளிவருதல், தடைபட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக வருதல் என இவை வாந்தியின் அயோக இலக்கணமாகும்.

### 10. வாந்தியின் யோக இலக்கணம்

குறிப்பிட்ட நேரத்தில் வாந்தி எடுத்தல், அதிகம் துன்பம் ஏற்படாதிருத்தல் முறையாகக் கபம், பித்தம், வாதம் இவற்றை வெளிக்கொண்டு வருதல், வேகம் தானாகவே தணிதல் என இவை வாந்தி நன்றாக நிறைவேறியதின் இலக்கணமாகும். எடுத்த வாந்தியின் அளவை வைத்து யோகத்தின், தீக்ஷ்ணம், மிருது, நடுத்தரம் என மூவகையையும் அறியலாம்.

### 11. வாந்தியின் அதியோக இலக்கணம்

வாந்தி எடுக்கும்பொழுது, நுரை, பலநிறமுள்ள இரத்தம் இவை வெளிவந்தால் அது வாந்தியின் அதியோகத்தின் இலக்கணமாகும்.

### 12. வாந்தியின் அயோகம், அதியோகம் இவற்றால் ஏற்படும் தீமைகள்

வயிற்று உப்புசம், கத்தரிப்பதுபோல் வயிற்று வலி, உமிழ்நீர் ஒழுகுதல், இதயத்துடிப்பு, உறுப்புகளின் பிடிப்பு, நல்ல இரத்தம் வெளிவருதல், மருந்து வெளிவருதல், உடல் அசையாமை, சோர்வு இவை வாந்தியின் அதியோகம், அயோகம் இவற்றினால் தோன்றக் கூடிய தீமைகளாம். 13

### 13. வாந்தி எடுத்த பின் செய்ய வேண்டியவை

நன்றாக வாந்தி எடுத்தபின் நோயாளியை, கை, கால், முகம் இவற்றை நன்கு கழுவச் செய்து, ஒரு முகூர்த்தநேரம் ஓய்வு எடுக்கச்செய்து, எண்ணெய்ப்பசை, தோஷங்களை வெளிப்படுத்தல், தோஷங்களைத் தணிக்கச் செய்தல் என இம் மூன்றுவகை புகைபிடிப்பதில் ஏதாவது ஒன்றைச் செய்வித்து, மறுமுறை கை, கால், முகம் இவற்றைக் கழுவச் செய்ய வேண்டும். 14

பிறகு அவனை காற்றோட்டமில்லாத வீட்டில் தங்க வைத்து கீழ்க்கண்டவாறு கூற வேண்டும்.

''உரக்கப் பேசுதல், அதிகம் உணவு உண்ணுதல், அதிகநேரம் நிற்றல், அதிகம் அலைதல், கோபம், வருத்தம், அதிகக் குளிர்ச்சி, வெயில், பனி, புயல், வாகனம் ஏறுதல், புணர்ச்சி, கண் விழித்தல், பகலில் உறங்குதல், தகாத உணவு, அசீரண உணவு, ஒவ்வாத உணவு, காலமில்லாக் காலத்தில் உண்ணுதல், குறைவான உணவு, அதிக உணவு, குரு குணமுள்ள உணவு, குறிப்பிடப்படாத வேளையில் உண்ணும் உணவு, என இவற்றைத் தவிர்க்க வேண்டும். சிறுநீர், மலம் முதலிய வேகத்தைத் தடுத்தல், வராத வேகத்தை வரவழைத்தல் என இவற்றை மனதாலும் நினைக்காமல் நாளைக் கழிக்க வேண்டும்'' என்று அறிவுரை கூறி அவனையும் அப்படியே நடக்கச் சொல்ல வேண்டும். 15

## 14. வாந்திக்குப் பின் கடைபிடிக்க வேண்டிய பத்திய முறைகள்

வாந்தி எடுத்த அன்று மாலை அல்லது மறுநாள் பொறுக்கும் படியான சுடுநீரில் நீராடச் செய்து பழைமையான சிவப்புச்சம்பா அரிசியினால் தயாரிக்கப்பட்ட, நன்கு பக்குவமான, தெளிவுள்ள கஞ்சியை சடராக்னியின் வலிவுக்குத் தக்கவாறு பருகச் செய்ய வேண்டும். இரண்டாவது, மூன்றாவது நாட்களில் உணவு உண்ணும் காலத்தில் பருகச் செய்ய வேண்டும். நான்காவது நாள் அவ்வாறு தயாரித்த கெட்டியான கஞ்சியை உப்பு, எண்ணெய் சேர்க்காமலோ அல்லது சிறிதளவு சேர்த்தோ, அநுபானமாகச் சுடுநீரோடு கலந்து கொடுக்க வேண்டும். ஐந்தாவது ஆறாவது நாட்களில் உணவு உண்ணும் காலத்தில் நான்கு பலம் அரிசியில் தயாரித்த சோற்றைச் சிறிதளவு எண்ணெய், உப்புக் கலந்து தயாரித்த பயிற்றம்பருப்புக் கஞ்சியில் கலந்து அநுபானமாகச் சுடுநீரோடு கலந்து அளிக்க வேண்டும்.

எட்டாவது ஒன்பதாவது நாட்களில் உணவு உண்ணும் நேரத்திலும், பத்தாவது நாளில் உண்ணும் வேளையிலும், காடை, கௌதாரி போன்ற பறவைகளின் ஏதாவது ஒன்றின் மாமிசத்தை நீர், உப்பு இவற்றுடன் கலந்து அனுபானமாகச் சுடுநீருடனும், பதினொன்று, பன்னிரண்டாவது நாட்களில் உணவு உண்ணும் காலத்திலும் அருந்தச் செய்ய வேண்டும். பன்னிரண்டாவது நாட்களுக்குப் பின் சிறிது சிறிதாக இயற்கையான உணவைச் சேர்த்து ஏழு நாட்களுக்குப்பின் முழு உணவைக் கொடுக்கலாம். 16

## 15. மலம் கழிக்க மருந்து கொடுக்கும் முறை

வாந்தி எடுக்கச் செய்தபின், எண்ணெய் சிகிச்சை, வியர்வை சிகிச்சை செய்துகொண்டு, ஆரோக்கிய நிலையைப் பெற்று, மனம் தெளிவுற்று, இரவில் நன்கு உறங்கி, முன்னாள் உண்ட உணவு சீரணமானவனுக்கு ஹோமம், பலி, மங்களம், ஜபம், கழிவுச்சடங்கு இவற்றைச் செய்வித்து, திதி, நக்ஷத்திரம், கரணம், முகூர்த்தம் கூடிய நன்னாளில் அந்தணர்களை மங்களச் சொற்கள் கூறச் செய்து, தோஷம், மருந்து, இடம், காலம், வலிவு, உடல், உணவு, ஒவ்வுதல், மனம், இயற்கை, வயது இவற்றின் நிலைகளையும், நோய்களையும் நன்கு பரிசோதித்துப் பார்த்து, சிவதை வேரின் கல்கத்தை தான்றிக்காய் அளவு திரவத்தில் கலந்து பருகக் கொடுக்க வேண்டும்.

நன்றாக மலம் கழிக்கப்பட்டதை அறிந்தபின் புகை பிடிப்பதைத் தவிர்த்து, வாந்திக்குக் கூறிய பத்திய முறைகளை, வலிவு, நிறம், இயற்கை நிலை இவை ஏற்படும்வரை பின்பற்ற வேண்டும்.

நோயாளி பலம், நிறம் இவற்றைப் பெற்று, மனம் தெளிந்திருப்பதை, முன்னாள் இரவு நன்கு உறங்கியதையும், முன்னாள் உண்ட உணவு சீரணித்ததையும் அறிந்து, தலை குளிக்கச் செய்து, உடல் முழுவதும் சந்தனம் பூசச் செய்து, அழகான மலர் மாலை அணிவித்து, புத்தாடை இவைகளை அணிந்து, தகுதிக்கேற்றவாறு அணிகலன்களை அணிவித்து, நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் காட்டியபின் தன் விருப்பப்படி இருக்கச் சொல்ல வேண்டும். 17

இவ்வத்தியாயத்தில் கூறிய வாந்தி, பேதிக்குக் கொடுக்கும் முறையை, அரசன் அல்லது அரசன் போன்றவர்கள், செல்வந்தர்கள் இவர்கள் கடைபிடிக்கத் தகுதியுள்ளவர்கள். 18

கிடைக்கக்கூடாத பொருட்களைச் சேர்த்து வைக்காமல் கிடைத்த பொருளைக் கொண்டு வறுமையில் உழல்பவனும், ஆபத்தான நிலையில் வாந்திக்கும் பேதிக்கும் எடுத்துக் கொள்ளலாம். எல்லோருக்கும் எல்லாப் பொருட்களும் கிடைப்பது அரிது. வறுமையுள்ளவர்களுக்குக் கடுமையான நோய்கள் வராமல் இருக்கும் என்று கூற முடியாது. ஆகையால் கிடைத்த மருந்துபொருள், உடை, உணவு இவற்றைச் சேர்த்துப் பயன்படுத்தலாம். 19–21

வாந்திக்கும், பேதிக்கும் மருந்து உட்கொள்வதினால் உடலில் உள்ள வாதம், பித்தம், கபம், சிறுநீர், மலம் போன்ற தோஷங்கள் வெளியேறுகின்றன. நோய்கள் நீங்கி, வலிவு, நிறம், தெளிவு இவற்றைப் பெறுகிறான். நீண்ட ஆயுள் வாழ்கிறான். 22

அரசர்கள், செல்வந்தர்கள் இவர்களுக்கு வாந்தி பேதிக்குக் கொடுக்கும்முறை, அவற்றிற்குத் தேவையான பொருட்களைச் சேகரித்து வைத்தல், அவற்றைப் பயன்படுத்தும்முறை, அளவு, யோகம், அதியோகம், அயோகம் இவற்றின் இலக்கணம், உடலில் தோன்றும் தோஷங்கள், துன்பங்கள், வாந்தி பேதிக்கு மருந்து எடுத்துக் கொண்டவர்கள் பயன்படுத்தக் கூடியவை, பயன்படுத்தக் கூடாதவை இவை எல்லாவற்றையும் இந்த உபகல்பநீயம் என்னும் அத்தியாயத்தில் பகவான் புனர்வசு ஆத்ரேயர் கூறியுள்ளார். 23–25

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரக
மாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
ஸூத்ரஸ்தானத்தில் உபகல்பநீயம் எனும்
பதினைந்தாவது அத்தியாயம் முற்றும்.

## பதினாறாம் அத்தியாயம்

## *சிகித்ஸா ப்ராப்ருதீயம்

ஆத்ரேயமாமுனிவர் கூறியபடி 'சிகித்ஸா ப்ராப்ருதீயம்' எனும் அத்தியாயத்தை விவரித்து உரைப்போம். (1—2)

### 1. நல்ல, கெட்ட மருத்துவர்களின் மருத்துவப் பயன்கள்

மருத்துவத்துறையில் கைதேர்ந்து சாத்திர அறிவும் பெற்ற மருத்துவன் சிகிச்சையில் ஈடுபட்டு நோயாளிக்குப் பேதிக்கும், வாந்திக்கும் மருந்துகளைக் கொடுக்க நோயாளியும் சிகிச்சைகளின் விளைவாக மருந்துகளில் [1]நல்ல தொடர்பினால் சிறந்த ஆரோக்கியத்தைப் பெறுகிறான்.

மருத்துவத்துறையில் நல்ல புலமை இன்றி தன்னைத் தானே சிறந்த மருத்துவன் எனத் தற்புகழ்ச்சியான மாற்றங்களைப்பேசும் அறிவிலி நோயாளிக்கு வாந்தி பேதிக்கு மருந்துகளைக் கொடுக்க அது [2]மிக்க தொடர்பு, அல்லது [3]தொடர்பின்மை ஆகியவற்றால் நோயாளிக்கு துன்பத்தையே கொடுக்கின்றது. (நல்ல தொடர்பு ஆரோக்கியத்திற்கும், மிக்க தொடர்பு, தொடர்பின்மை முதலியன ஆரோக்கியமின்மைக்கும் காரணங்களாம்.) (3—4)

### 2. சிறந்த முறையில் பேதிக்குக் கொடுப்பதால் ஏற்படும் நன்மைகள்

உடல் தளர்ச்சி, உடல் லேசாதல், வாட்டம், நோய்குறைதல், உணவில் விருப்பம், இதயம் நிறம் தூய்மையாதல், பசி,

---

*சிகித்ஸாப்ராப்ருதீயம் — தேவையான கருவிகளுடன் அறிஞரான மருத்துவன் நோயாளியின் நோயில் கவனம் செலுத்திச் செய்ய வேண்டிய சிகிச்சைகளை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெற்றது.

(1) நல்ல தொடர்பு — ஸம்யோகம்

(2) மிக்க தொடர்பு — அதியோகம்

(3) தொடர்பின்மை — அயோகம்

நீர்வேட்கை, சரியான நிலையிலிருத்தல், தக்க நேரத்தில் மலம் சிறுநீர் கழிப்பு, அறிவு, புலன்கள், மனம் இவை தூய்மையாக இருத்தல், வாயு கீழ்நோக்கிச் செல்லுதல், சீரணம் நன்கு ஆதல் ஆகியவை நன்முறையில் பேதிக்கு மருந்து கொடுப்பதால் ஏற்படும் நன்மைகள். (5–6)

### 3. முறைகெட்டு பேதிக்கு மருந்து கொடுப்பதால் உண்டாகும் தீமைகள்

வாயில் நீர் ஊறுதல், இதயம் பளுவாதல், கப பித்தங்கள் வெளிப்படுவன போன்ற ஐயப்பாடு, வயிற்று உப்புசம், உணவில் விருப்பமின்மை, வாந்தி, உடல் பளு, முழங்கால் முட்டி தளர்ச்சி, சோம்பல், உடல் மரத்துப் போதல், தடுமன் (ஜலதோஷம்) கீழுள்ள வாயு நன்முறையில் வெளியாகாமை என இவை முறை கெட்டுப் பேதிக்கு மருந்து கொடுப்பதால் ஏற்படும் தீமைகள் (7–8)

### 4. பேதி மருந்தின் மிக்க தொடர்பால் ஏற்படும் தீமைகள்

மலம், பித்தம், கபம், வாதம் இவ்வ முறைப்படி வெளியாகி, பிறகு கொழுப்பு மாமிசம் இவற்றின் நீர் போன்று இரத்தம் வெளியாகும். கபம், பித்தம் இவை கலப்பின்றி நீர்வெளிப்படும்; அல்லது இரத்தம் கருமை நிறமாகப் பெருகும். இதனால் நினைவின்மை, நீர்வேட்கைமிகுதல், வாயுவின் சீற்றம் ஆகியவை பேதி மருந்தின் மிக்க தொடர்பால் உண்டாவன. (9–10)

வாந்தி மருந்தின் மிக்க தொடர்பினாலும்.இதே தீமைகள் ஏற்படும். ஆனால் மேல்நோக்கிச் செல்லும் வாயுவின் சீற்றத்தால் உண்டாகும் நோய்கள், சொல் தடைபடுதல் எனக் கூடுதலாக இவையும் உண்டாகும். (11)

ஆகையால் சிகிச்சை முறைகளை நன்கு உணர்ந்த மருத்துவர்களையே நோயுற்றவர் அணுக வேண்டும். சிறந்த மருத்துவர்களே அவரவர்களுக்குத் தக்கபடி எண்ணெய் ஒற்றடச்சிகிச்சையுடன் வாந்தி, பேதி மருந்து முறைகளையும் கையாண்டு நோயாளியின் ஆயுள், ஆரோக்கியம் இவற்றைக் காக்கின்றனர். (12)

### 5. நன்கு *ஸம்சோதனம் செய்ய வேண்டிய நோய்கள்

உண்ட உணவு செரியாமை, உணவில் விருப்பமின்மை, உடல் பருமன், சோகை, உடல் பளுவாதல், தளர்ச்சி, சிறுகட்டி,

---

* ஸம்சோதனம் — வாந்திக்குக் கொடுத்தோ, பேதிக்குக் கொடுத்தோ தோஷங்களை வெளிக் கொணருதல்.

கொப்புளம், அரிப்பு எதிலும் விருப்பமின்மை, உடல் சோம்பல், களைப்பு, வலிமையின்மை, கெட்ட நாற்றம், செயலில் ஆர்வ மின்மை, கப பித்தங்களினால் வாந்திக்கு வருவது போன்ற ஐயம், தூக்கமின்மை, மிகுதித் தூக்கம், மனம் எதிலும் பற்றின்றி எதிலும் சோம்பியிருத்தல், அலித்தன்மை, அறிவு இழத்தல், கெட்ட கனவு, ஊட்டமுள்ள உணவு வகைகளை உட்கொண்டபோதி லும் வலிமை, நிறக்குறைவுகள் தோன்றுதல் என இந்த அடை யாளங்கள் பல தோஷங்கள் இருப்பதை அறிவிப்பன. இத் தகைய மனிதனுக்கு ஸம்சோதனம் செய்வதால் நன்மை பயக்கும். அது தோஷத்திற்கும் வலிமைக்கும் தக்கபடி மேல்நோக்கு முறை, கீழ்நோக்கு முறை அல்லது இரண்டையுமே செய்ய வேண்டும். *(13–16)*

## 6. ஸம்சோதனத்தினால் உண்டாகும் பயன்கள்

உள்ளுறுப்புக்கள் தூய்மையாக உள்ளவனின் செரிக்கும் ஆற்றல் வளர்ச்சியடையும். எல்லா நோய்களும் தணியும். மாந்த ரின் இயற்கை நிலை தொடரும். புலன்கள், மணம், அறிவு, நிறம், இவை தெளிவடையும். வலிமை, உடல் வளர்ச்சி, மகப்பேறு, ஆண்மை இவை தோன்றும். முதுமை விரைவில் வந்தடையாது. நோயின்றி நீண்டநாள் வாழலாம். ஆகையால் மனிதன் தக்க நேரத்தில் வாந்தி பேதிக்கு உடல்நிலைக்குத் தக்கவாறு மருந்து எடுத்துக் கொள்ள வேண்டும். *(17–19)*

## 7. ஸம்சோதனத்தின் சிறப்பு

பட்டினி, சீரணம் இவைகளினால் உடலிலுள்ள தோஷங்கள் நீங்குகின்றன. அந்த தோஷங்கள் சிலபோது சீற்றமுறுகின்றன. ஆனால் ஸம்சோதனத்தினால் நீக்கப்பட்ட தோஷங்களோ மீண்டும் ஒருபொழுதும் தோன்றுவனவல்ல. வேர்கள் களையப்படாத நோயாகிற மரம் மீண்டும் துளிர்விட்டு வளரும். ஆதலின் நோய் களை வேருடன் களைய வேண்டும். அப்போதுதான் அவை மீண்டும் தோன்றி துன்பத்தைச் செய்யாமல் இருக்கும். *(20–21)*

## 8. மருந்தினால் இளைத்தவர்கள் வளமுறும் முறை

வாந்தி பேதி மருந்துகளை மிகுதியாகப் பருகி உடல் இளைத் தவர் நல்ல ஊட்டமளிக்கக்கூடிய உணவு வகைகளைஉட்கொண்டே உடலை வலிவுள்ளதாகச் செய்ய வேண்டும். நெய், மாமிசரசம், பால், மனதிற்குகந்த பொருட்கள், காய்கறிகளாலான கஞ்சி போன்ற பொருட்கள் இவற்றால் உடலை வளர்ச்சியடையச்

செய்ய வேண்டும். தவிர எண்ணெய் குளி, மணப்பொருட்களை தேய்த்துக் குளித்தல் 1 அநுவாஸன 2 நிரூஹவஸ்தி முறைகளைக் கையாளுதல் இவற்றால் நோயாளி இன்பமடைவான். அவன் ஆயுளும் வளரும். *(22–23)*

## 9. வாந்திபேதி மருந்தின் மிக்க தொடர்புக்கான சிகிச்சை

வாந்தி பேதிக்காக மருந்து மிகுதியாக எடுத்துக்கொண்டவர்க்கு நெய் சிறந்த பானமாகக் கூறப்படுகிறது. அல்லது இனிமை குணமுள்ள பொருட்களால் தயார் செய்யப்பட்ட எண்ணெயைக் கொண்டு எண்ணெய் வஸ்தி செய்ய வேண்டும்.

வாந்திபேதி மருந்துத் தொடர்பின்மை உள்ளவர்களுக்கு எண்ணெய் பூசி ஒற்றடச்சிகிச்சையும் செய்து பிறகு நேரம், உடல் வலிமை, அளவு இவற்றை மனத்தில்கொண்டு மருத்துவர் ஸம்சோதனம் செய்ய வேண்டும். முன்பு கூறப்பட்ட உணவு, பானம் முறைகள் இவற்றையும் மனத்தில் கொள்ள வேண்டும். *(24–25)*

ஒற்றடம், ஸம்சோதனம், முதலிய சிகிச்சை முறைக்கேட்டால் ஏற்படும் நோய்களைப் போக்கும் முறை ஸித்திஸ்தானத்தில் கூறப்படும். *(26)*

உணவு, நடவடிக்கை முதலிய கோளாறுகளினால் உடலில் உள்ள தாதுக்கோளாறுகள் தோன்றுகின்றன. அதுபோல உணவு முதலியவற்றின் சரியான தன்மையால் உடல் தாதுக்களும் சமநிலையை அடைகின்றன. அதாவது காரணக் கோளாறுகளால் தாதுக் கோளாறும், காரணச் சமநிலையால் தாதுச் சமநிலையும் ஏற்படுகின்றன என்பது பொருள். இவற்றிற்கு அழிவு என்பது இயற்கையாகவே ஏற்படுகிறது. உலகில் உள்ள பொருட்கள் எல்லாம் தோன்றியும் அழிந்தும்விடும் இயல்புடையன. இவ்வுலகில் உள்ள எல்லாப் பொருள்களும் தோன்றுவதற்குக் காரணங்கள் உள்ளன. ஆனால் அப்பொருள்களின் அழிவிற்குக் காரணம் கிடையாது. காரணமின்மையே அதன் அழிவுக்குக் காரணம் என்பது ஒரு சிலரின் கருத்து. *(27–28)*

## 10. அக்னிவேசரின் வினா

ஆசிரியர் கூறிய மொழிகளைக்கேட்டு அக்னிவேசர், ''ஐயா, உடலிலுள்ள தாதுக்கள் கோளாறடைந்தபிறகு சிகிச்சையில் ஈடு

---

*(1)* அநுவாஸன வஸ்தி – எண்ணெய் வஸ்தி.

*(2)* நிரூஹவஸ்தி – கஷாயவஸ்தி.

பட்டுள்ள மருத்துவர் செய்ய வேண்டியது யாது? மருத்துவர் எவ்விதக் கோளாறடைந்த தாதுக்களை மருந்துகள் கொடுத்து சமநிலைக்குக் கொண்டுவரலாம்? அதற்கான சிகிச்சை முறை யாது? எப்படி அந்தச் சிகிச்சையைச் செய்ய வேண்டும்'' என்று தம் ஆசிரியராகிய ஆத்ரேயரை வினவினார். (29–30)

## 11. புனர்வசு ஆத்ரேயரின் மறுமொழி

தம் சீடனாகிய அக்னிவேசரின் வினாக்களைக் கேட்டு ஆசார்ய ஆத்ரேயர் பின்வருமாறு கூறினார். ''அன்ப! நம்முன்னோர் களாகிய முனிவர்களால் கண்டுபிடிக்கப்பட்ட சில உண்மைகளைக் கூறுவேன், கேட்பாயாக. உலகில் உள்ள பொருள்களின் அழிவுக் குக் காரணம் இல்லாததால்தான் காரணம் என்ன என்று கூறப் படவில்லை. எடுத்துக்காட்டாக நிமிடம், யாமம், நாழிகை, நாள், மாதம், பருவம் எனப் பலபிரிவுகளை உடைய காலம் அழிவுள் ளது. அதன் அழிவிற்குக் காரணம் என்ன? எனில் இல்லை யென்றே கூறவேண்டும். அழிவின் காரணம் எவருக்கும் தெரி யாது? அதுபோல பொருட்களின் அழிவிற்கும் காரணம் இல்லை என்றே உணரவேண்டும். காரணமில்லாமையே அழிவின் காரணம் என்று கூறுவதும் பொருந்தாது. கடந்த காலத்தில் பொருள்நிலை மாற்றமடைந்தால் நிகழ்காலத்திலும் அந்நிலை தொடரும். கடந்தகால நிலையை அனைவரும் அழிவு என்பர். உண்மையை ஆராய்ந்து பார்த்தால் அதற்குஅழிவு ஏற்படவில்லை. அது மாற் றுருவம் பெறுகிறது. ஆகையால் சிகிச்சை செய்வதும் அவ்வாறே ஆகும். அதாவது உலகில் பொருள்கள் தாமாகவே வேறு காரண மின்றியே அழிகின்றன. உடல் தாதுக்களின் சமநிலை கெட்டு விடுமானால் அதற்கு வேறு சிகிச்சையே தேவையில்லை. தாமா கவே அந்தத் தாதுக்களின் சமநிலை ஏற்பட்டுவிடும். (31–33)

உடல் தாதுக்கள் எத்தகைய செயல்களைச் செய்வதால் சம நிலையை அடைகின்றனவோ அந்தச் செயல்களை மாற்றுச் சிகிச்சை என்று கூறுவர். அச்சிகிச்சையில் செய்யப்படும் செயல் மருத்துவரின் பணியாகும். எத்தகைய செயல்களினால் உடல் தாதுக்கள் கோளாறு அடையாவோ, கோளாறடைந்த தாதுக் களும் சமநிலை அடையுமோ இத்தகைய பணிகளுக்காகத்தான் சிகிச்சை செய்யப்படுகின்றன. (34–35)

உடல் தாதுக்களின் கோளாறுகளுக்குக் காரணமான பொருள் கள், செயல்கள் என இவற்றைக்கைவிட்டு, தாதுக்களை சம

நிலைப்படுத்தும் பொருள்கள், செயல்கள் இவற்றை மேற்கொள்வதாலும் உடல் தாதுக்கள் கோளாறு நீங்கி சமநிலை அடைகின்றன. (36)

சமநிலை தோற்றுவிக்கும் காரணங்களால் தாதுக்களை சமநிலை அடையுமாறு செய்யும் நன்மருத்துவன் நோயாளிக்கு ஆயுளையும் சுகத்தையும் அளிப்பவன். அறம், பொருள், இன்பம் ஆகியவற்றிற்கும் இம்மை மறுமை ஆகிய இரண்டிற்கும், ஆரோக்கிய வாழ்வே காரணம். அத்தகைய ஆரோக்கியத்தை அளிப்பவன் மருத்துவன். ஆதலின் மருத்துவன் மக்களின் இன்ப வாழ்வு, ஆயுள் இவற்றை அளிப்பவனாவான். (37–38)

## முடிவுரை

இதுகாறும் கூறியவற்றால் சிகிச்சையில் ஈடுபட்ட மருத்துவரின் பண்பு, கெட்ட மருத்துவரால் ஏற்படும் தீமைகள், மருந்துகளின் தொடர்பின்மை, மிக்க தொடர்பு இவற்றின் இலக்கணங்கள், ஸம்சோதனத்தின் நன்மைகள், சிகிச்சையின் வெற்றிதோல்வி பற்றிய சுருக்கம், சிகிச்சையின் தொடர்பான உத்தி, எதற்காக மருத்துவர் சிகிச்சை செய்கிறார் ஆகியன்வ இவ்வத்தியாயத்தில் விளக்கப்பட்டன. (39–41)

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் சோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானத்தில் சிகித்ஸாப்ராப்ருதீயம் எனும் பதினாறாம் அத்தியாயம் முற்றும்.

## பதினேழாம் அத்தியாயம்

## *கியந்த சிரஸீயம்

ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி கியந்தசிரஸீயம் என்னும் அத்தியாயத்தை நாம் விளக்கிக் கூறுவோம். *(1–2)*

### 1. நோய்களைப்பற்றி அக்னிவேசரின் வினா

மனிதர்களின் தலையில் எவ்வகையான நோய்கள் உள்ளன? இதயத்தில் எத்தனைவகை நோய்கள் உண்டு? வாத, கப, பித்த வேறுபாடுகளினால் இவற்றின் பிரிவுகள், அத்தோஷங்களின் கூறுகளின் வேறுபாடுகளினால் தோன்றும் நோய்கள் எத்தனை வகைகளாகின்றன? க்ஷயம் என்பது எத்தனை வகைப்படும்? கட்டிகள் எத்தனை வகைப்படும்? தோஷங்களின் போக்கு எத்தனை வகைப்படும்? என்று உடலிலுள்ள தோஷங்களைத் தீர்க்கவல்ல தன் ஆசிரியராகிய புனர்வசுவைப் பார்த்து அக்னிவேசர்கேட்கலானார். தம் சீடனாகிய அக்னிவேசரின் வினாக்களைக் கேட்டு ஆசிரியர் பின்வருமாறு பதில் அளித்தார். *(3–5)*

### 2. ஆசிரியரின் மறுமொழி

அன்ப! நீ வினவிய வினாக்களுக்கு ஏற்ற விடையை விரிவாக எடுத்தியம்புகின்றேன், கேட்பாயாக. தலையில் தோன்றும் நோய்கள் ஐந்து, இதயத்தில் உண்டாகும் நோய்கள் ஐந்து, வாத, பித்த கப தோஷங்களின் மாறுபாடுகளின் பிரிவுப்படி அறுபத்திரண்டு விதமான நோய்கள் உள்ளன. பதினெட்டு வகையான க்ஷயநோய்கள் உண்டு. சர்க்கரை அல்லது நீரிழிவு நோயினால் ஏழுவகையான கட்டிகள் உண்டாகின்றன. தோஷங்களின் போக்கு மூன்று வகைப்படும். இவையனைத்தையும் இனி விளக்கமாகக் கேட்பாயாக. *(6–8)*

### 3. தலையில் தோன்றும் நோய்களின் காரணம்

மலம், சிறுநீர் வேகங்களை அடக்குதல், பகல்தூக்கம், இரவில் கண்விழித்தல், திமிர், உரக்கப்பேசுதல், குளிர், கீழ்க்காற்று,

---

* கியந்தசிரஸீயம் – தலையில் தோன்றும் நோய்களைப் பற்றியும், அவற்றின் வகைகள், கூறுகள் முதலியவைபற்றியும், விரிவாகக் கூறுவதால் இவ்வத்தியாயம் இவ்வாறு பெயர் பெறுகிறது.

மிகுதிப் புணர்ச்சி, பொருத்தமில்லா மணத்தை நுகர்தல், தூசு, புகை, பனி, வெயில், குருத்தன்மை, புளிப்பான காய்கறிகளை உண்பது, மிக்க தண்மையான நீரைக்குடித்தல், தலையில் அடி படுதல், அசீரணநோய்கள், அழுகை, கண்ணீரை அடக்குதல், மேகங்கள் தோன்றுதல், மனவருத்தம், இடம், நேரம் இவற்றின் மாற்றங்கள், என இவற்றால் வாத பித்த கபதோஷங்கள் சீற்ற மடைந்து, தலையிலுள்ள இரத்தம் கெட்டுப் பலவிதமான நோய் கள் தோன்றுகின்றன. (9–12)

## 4. தலையின் சிறப்பு

தலை என்பது மக்களின் பிராணங்களின் உறைவிடம். எல்லாப் புலன்களின் இயக்கங்களின் காரணம். உறுப்புக்களில் உயர்ந்தது. (13)

## 4 அ. வாதத்தினால் தோன்றும் தலை நோய்கள்

பாதித் தலையில் அல்லது தலைமுழுவதும் வலி, முற்றின தடுமன், முகநோய்கள், மூக்கு நோய்கள், கண்நோய்கள், காது நோய்கள், தலைசுற்றல், அர்திதம் எனும் முகம் கோணுதல், தலை நடுக்கம், கழுத்து அசையாதிருத்தல், மந்யாஸ்தம்பம், என கழுத்தின் இரண்டு பக்கங்களிலும் உள்ள இரத்தக் குழாய் அசை வற்றிருத்தல், தாடை பிடிப்பு மற்றும் பலவிதமான வாத மாற் றங்களாலும், கிருமிகளாலும் தோன்றும் தலை நோய்கள் பல உள. இவற்றுள் முனிவர்களால் சுருக்கமாக ஐந்துவிதமான தலை நோய்கள் கூறப்பட்டன. அந்த நோய்களின் காரணங்களையும் இலக்கணங்களையும் கூறுவோம். அவற்றைக் கேட்பாயாக. (14–15)

## 5. வாதத் தலை நோய்களுக்குக் காரணம்

உரக்கப் பேசுதல், மிக்க பேச்சு, கட்குடி, இரவு கண் விழித் தல், குளிர்காற்று, மிக்க புணர்ச்சி, உடற்பயிற்சி, மலம் சிறுநீர் முதலிய வேகங்களை அடக்குதல், பட்டினி, அடிபட்டுக் காய மடைதல், மிக்க வாந்திக்கு பேதிக்கு மருந்து கொடுத்து அது அதிக மாவது, அதனால் உண்டான மாற்றங்கள், கண்ணீர், வருத்தம், பயம், திடுக்கிடுதல், பளு சுமத்தல், வழி நடத்தல், முதலியவற் றால் மிகுதியான இளைப்பு இவற்றால் தலையில் உள்ள வாதம் தலையிலுள்ள குழாய்களில் புகுந்து சீற்றமடைந்து அப்போது அத னால் பெருவலி தோன்றுகிறது. இரண்டு பொட்டுகளிலும் வலி, காதில் இரைச்சல், கண்களில் பிடுங்குவது போன்ற வலி, கழுத்துப் பின்புறம் வலி, புருவங்களிடையே, நெற்றி இவற்றில் வலி, தலை

யில் எரிச்சல், தலை சுற்றுதல், தலையில் உள்ள மூட்டுகள் திறப்பன போன்ற வலி, தலையிலுள்ள நாடிகள் துடித்தல், தலையைத் தாங்கும் நரம்புகளில் அசைவற்ற நிலை என இவை தோன்றும். (16–20)

வாதத் தலைநோயினால் துன்புறும்போது நோயாளி எண்ணெய்ப்பசை, உஷ்ண வீரியமுள்ள பொருள்களை மேற்கொள்ள வேண்டும். (21)

### 6. பித்தத் தலை நோய்க்குக் காரணங்கள்

கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, க்ஷாரம் சுவையுள்ள பொருள்களை உண்பது, கட்குடி, கோபம், வெயில், நெருப்புச்சூடு இவற்றால் தலையிலுள்ள பித்தம் சீற்றமுற்றுத் தலையில் வலியை உண்டாக்குகின்றது. அப்போது தலையில் எரிச்சலுடன் வலி உண்டாகிறது. அது குளிர்ச்சியான பொருள்களை உண்பதால் தணியும், பித்த தோஷத்தால் நோய் தோன்றும்போது கண்களில் எரிச்சலும் நீர்வேட்கையும், தலைசுற்றலும், உடல் வியர்த்தலும் உண்டாகும். (22–23)

### 7. கபத்தினால் தோன்றும் தலை நோய்கள்

மிகுதியாகச் சோம்பலுற்று உட்கார்ந்துகொண்டே இருத்தல், மிக்க தூக்கம், எண்ணெய்ப்பசை, குருத்தன்மையுள்ள பொருள்களை மிகுதியாக உட்கொள்ளுதல் இவற்றால் கபம் சீற்றமுற்று தலைநோய்களைத் தோற்றுவிக்கின்றது. அதனால் தலையில் குறைந்த வலி, எப்போதும் தூக்கம் வருவது போன்ற நிலை, தலைபாரம், எதிலும் மனஈடுபாடு இன்மை, சோம்பி இருத்தல், உணவு பிடிக்காமை ஆகியவை தோன்றும். (24–25)

### 8. மூன்று தோஷங்களால் தோன்றிய தலை நோய்களின் இலக்கணம்

வாதத்தினால் வலி, தலைச்சுற்றலும், பித்தத்தினால் எரிச்சல், திமிர், நீர்வேட்கையும், கபத்தினால் உடல் பளு, சோம்பலும் ஒருங்கே தோன்றுவதே முத்தோஷங்களால் வரும் தலைநோயின் இலக்கணங்களாகும். (26)

### . கிருமிகளால் உண்டாகும் தலை நோய்கள்

தோஷம் மிகுந்தவனுக்கு எள்ளு, பால், வெல்லம், செரிக்காத தனமையுள்ள பொருள்கள், கெட்ட நாற்றம், பழகிய உணவு, உடலுக்குத் தீமை விளைவிக்கும் கலப்படஉணவு இவை

களை உட்கொள்வதாலும் தலையிலுள்ள இரத்தம், கபம், மாமிசம் இவற்றில் சோர்வு ஏற்படுகிறது. நோயாளியின் தலையில் தலைவலி கிருமிகள் தோன்றுகின்றன. அக்கிருமிகளால் பயங்கரமான கூறுகளைக் கொண்ட தலைநோய்கள் தோன்றி அத்தலை நோய்களால் தலையில் வெட்டுவது போன்றவலி, அரிப்பு, வீக்கம், கெட்ட நாற்றம் இவை தோன்றும். கிருமிகளின் தொடர்பால் தலைநோய் உள்ளவர்களை கிருமிகளின் இலக்கணங்களைக் கண்டும் மருத்துவர் அறிய வேண்டும். (27–29)

## 10. வாதத்தினால் தோன்றும் இதய நோய்கள்

வருத்தம், பட்டினி, உடற்பயிற்சி, உலர்ந்த பொருட்கள், வறட்சிப் பொருட்கள், குறைவான உணவைப் புசித்தல் என இவற்றால் வாயு இதயத்தில் தங்கி மிக்க வலியை உண்டாக்குகின்றது. அப்போது இதய நடுக்கம், இதயம் சுருட்டி இழுப்பது போன்ற வலி, செயலற்ற தன்மை, மயக்கம், ஒன்றுமே இல்லாமை போன்ற நிலை, படபடப்பு போன்றவை தோன்றும். இதயம் வாதத்தால் தகைப்பட்ட நிலையில் உண்ட உணவு செரிக்கும்போது மிக்க வலி ஏற்படும். (30–31)

## 11. பித்தத்தினால் தோன்றும் இதய நோய்கள்

சூடு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, க்ஷாரம், செரிக்காத பொருட்கள் இவற்றை உண்பதாலும், கட்குடியாலும், கோபம், வெயில் இவற்றாலும் இதயத்தில் பித்தம் சீற்றமடைந்துநோயைத் தோற்றுவிக்கும். அப்போது இதயத்தில் எரிச்சல், வாயில் கசப்பு, புளிப்பு கைப்புச் சுவையுள்ள ஏப்பம் தோன்றும். சோர்வு, நீர் வேட்கை, நினைவிழத்தல், தலைசுற்றல், உடல் வியர்த்தல் இவை தோன்றும். இவை பித்தத்தினால் இதயநோய் தோற்றத்தின் இலக்கணங்கள். (32–33)

## 12. கபத்தினால் ஏற்படும் இதய நோய்கள்

மிக்க உணவு, குருத்தன்மை, எண்ணெய்ப்பசையுள்ளபொருள்களை உண்ணுதல், எதைப்பற்றியும் சிந்தியாமல் மேற்போக்காக இருத்தல், சோம்பேறித்தனம், மிக்க உறக்கம் இவற்றால் கபத்தின் காரணமாகத் தோன்றும் இதயநோய்கள் உண்டாகின்றன. இந்நோயின்போது இதயம் தூங்கியது போன்றும், கனத்தும், பளுவாகவும், உணரப்படும். சோம்பல், உணவில் நாட்டமின்மை, இதயம் கல்லால் அழுத்தப்பட்டது போன்ற உணர்வு ஆகியவை இதன் இலக்கணங்கள். (34–35)

## 13. மூன்று தோஷங்களின் சேர்க்கையால் ஏற்படும் [1]இதய நோய்கள்

மூன்றுதோஷங்களின் காரணங்களும் இலக்கணங்களும் ஒருங்கே சேர்ந்து வருங்கால் மூன்று தோஷங்களினால் ஸந்நிபாத இதய நோய் தோன்றும். இந்த நோய் தோன்றியபோது, எள்ளு, காரம், வெல்லம் முதலிய பொருட்களை உட்கொள்பவன் தீவினைகள் உடையவன். அவனுடைய இதயத்தில் ஒரு முடிச்சு தோன்றி இதயத்தின் ஒரு பகுதியில் ரஸதாது நலிவடைந்து சோர்ந்துவிடும். அச்சோர்வினால் கிருமிகள் தோன்றும். கிருமிகள் இங்கும் அங்கும் சுற்றிப் பரவிக்கொண்டே இருக்கும். அப்போது இதயத்தில் ஊசியால் குத்தியது போன்ற வலியும், கத்தியால் வெட்டுவது போன்ற வலியும் உண்டாகும். அரிப்பும், பெருவலியும் கிருமிகளால் தோன்றிய இதய நோயாளியின் அடையாளங்கள், இத்தகைய கொடிய இலக்கணமுள்ள இதய நோயையும் அறிஞனான மருத்துவன் அதன் கொடுமையையும் நன்குஉணர்ந்து மருத்துவத்தைக் கைவிட வேண்டும். அல்லது விரைவில் ஏற்ற சிகிச்சையை மேற்கொள்ள வேண்டும். இந்த நோய் நோயாளியை விரைவிலேயே கொல்லவல்லது. (36—40)

## 14. அறுபத்திரண்டு வகையான தோஷங்களின் சேர்க்கை

ஒரே நேரத்தில் வாத பித்த கபங்களாகிய மூன்று தோஷங்களும் சீற்றமடைந்து ஸந்நிபாதம் என்ற பெயருடன் பதிமூன்று வகைப்படும். அவை வருமாறு :-

(அ) இரண்டு தோஷங்கள் சீற்றமுற்று ஒரு தோஷம் மிக்க சீற்றமடைவதால் மூன்று வகை.

(1) வாத பித்தம்—வளர்ச்சியுற்றுக் கபம் மிக்க வளர்ச்சியடைதல்.

(2) பித்தம் கபம் வளர்ச்சியுற்று வாதம் மிக்க வளர்ச்சியடைதல்

(3) கபம் வாதம் வளர்ச்சியுற்று பித்தம் மிக்க வளர்ச்சியடைதல்.

(ஆ) ஒரு தோஷம் வளர்ச்சியுற்று இரண்டு தோஷங்கள் மிகுதியாக வளர்ச்சியடைவதால் மூன்று வகை.

---

1 மூன்று தோஷங்களின் சேர்க்கையால் உண்டாகும் இதயநோய் ஸந்நிபாத இதய நோய் எனப்படும்.

(4) வாதம் வளர்ந்து பித்த கபங்கள் மிகுதியாக வளர்ச்சியடைதல்

(5) பித்தம் வளர்ந்து வாத கபம் மிகுதியாக வளர்ச்சியடைதல்.

(6) கபம் வளர்ந்து வாத பித்தம் மிகுதியாக வளர்ச்சியடைதல்.

(இ) தோஷங்கள் ஒவ்வொன்றும் ஒன்றைவிட மற்றொன்று மிகுதியாக வளர்ச்சியடைதல்

(7) வாதம் வளர்ச்சியடைதல் பித்தம் மிகு வளர்ச்சியடைதல் கபம் நனிமிகு வளர்ச்சியடைதல்

(8) வாதம் வளர்ச்சியடைதல் கபம் மிகு வளர்ச்சியடைதல் பித்தம் நனிமிகு வளர்ச்சியடைதல்

(9) பித்தம் வளர்ச்சியடைதல், கபம் மிகு வளர்ச்சியடைதல் வாதம் தனிமிகு வளர்ச்சியடைதல்.

(10) பித்தம் வளர்ச்சியடைதல், வாதம் மிகு வளர்ச்சியடைதல் கபம் நனிமிகு வளர்ச்சியடைதல்.

(11) கபம் வளர்ச்சியடைதல் வாதம் மிகு வளர்ச்சியடைதல் பித்தம் நனிமிகு வளர்ச்சியடைதல்

(12) கபம் வளர்ச்சியடைதல் பித்தம் மிகு வளர்ச்சியடைதல் வாதம் நனிமிகு வளர்ச்சியடைதல்

(ஈ) எல்லா தோஷங்களும் ஒரே நிலையில் வளருதல்

(13) வாதம் பித்தம் கபம் ஒரே நிலையில் வளருதல்.

ஒரே நேரத்தில் சீற்றமடைந்த இரண்டு தோஷங்களின் சேர்க்கை ஒன்பது வகைப்படும்.

(உ) ஒரு தோஷம் மிகுதிச் சீற்றமடைந்து ஆறுவகை மாற்றமடைதல்.

(14) பித்தம் வளர்ச்சியடைதல் வாதம் மிகு வளர்ச்சியுறுதல்

(15) பித்தம் வளர்ச்சியடைதல் கபம் மிகு வளர்ச்சியுறுதல்

(16) வாதம் வளர்ச்சியடைதல் கபம் மிகு வளர்ச்சியுறுதல்

(17) வாதம் வளர்ச்சியடைதல் பித்தம் மிகு வளர்ச்சியுறுதல்

(18) கபம் வளர்ச்சியடைதல் பித்தம் மிகு வளர்ச்சியுறுதல்

(19) கபம் வளர்ச்சியடைதல் வாதம் மிகு வளர்ச்சியுறுதல்.

(ஊ) இரண்டு தோஷங்கள் ஒரே நிலையில் வளர்ச்சியுறுதல்

(20) வாத பித்தம் ஒரே நிலையில் வளர்தல்

(21) பித்தம் கபம் ஒரே நிலையில் வளர்தல்

(22) கப வாதங்கள் ஒரே நிலையில் வளர்ச்சியடைதல்

(எ) ஒரே ஒரு தோஷத்தின் வளர்ச்சியினால் ஏற்படும் பிரிவுகள் மூன்று

(23) வாதம் வளர்ச்சியடைதல்

(24) பித்தம் வளர்ச்சியடைதல்

(25) கபம் வளர்ச்சியடைதல்

தோஷங்கள் வளர்ச்சியடைவதால் அவை இருபத்தைந்து வகையாக ஏற்படுவது போன்று தோஷக்குறைவுகளினாலும் இருபத்தைந்து வகையாக ஆகிறது. ஆக வளர்ச்சியினால் 25ம், குறைவினால் 25ம் மொத்தம் ஐம்பது வகைப்படும்.

வேறு பன்னிரண்டு வகைகள் தோஷங்களின் வளர்ச்சி குறைவு ஆகிய இரண்டின் சேர்க்கையைப் பொறுத்தது.

(51) வாதம் வளர்ச்சி, பித்தம் இயல்பு – கபம் குறைவு.

(52) பித்தம் வளர்ச்சி, கபம் இயல்பு – வாதம் குறைவு.

(53) கபம் வளர்ச்சி, பித்தம் இயல்பு – வாதம் குறைவு

(54) வாதம் வளர்ச்சி, கபம் இயல்பு – பித்தம் குறைவு

(55) பித்தம் வளர்ச்சி, வாதம் இயல்பு – கபம் குறைவு

(56) கபம் வளர்ச்சி, வாதம் இயல்பு – பித்தம் குறைவு

இரண்டு தோஷங்கள் வளர்ச்சியடைவதும் ஒருதோஷம் குறைவதும்

(57) வாத பித்தம் வளர்ச்சி – கபம் குறைவு

(58) பித்த கபம் வளர்ச்சி–வாதம் குறைவு

(59) கபவாதம் வளர்ச்சி–பித்தம் குறைவு

ஒரு தோஷம் வளர்ந்து மற்றவை குறைவை அடைதல்

(60) வாதம் வளர்ச்சி பித்த கபம் குறைதல்

(61) பித்தம் வளர்ச்சி வாத கபம் குறைதல்

(62) கபம் வளர்ச்சி வாத பித்தம் குறைதல் (41–44)

கபம் வாட்டமுற்று பித்தம் இயல்பான நிலையில் இருக்க வாதம் பித்தத்தை அதன் இடத்திலிருந்து எடுத்துச்சென்று உட

வில் பல இடங்களிலும் பரவும். வாயு பித்தத்துடன் சுற்றும்போது அந்தந்த உறுப்புக்களில் வெட்டுவது போன்ற வலியும் எரிச்சலும் தலைசுற்றலும் வலிமைக் குறைவும் உண்டாகும்.

பித்தம் வாட்டமுற்று கபம் சமநிலையில் இருக்க வாயு கபத்தை உடலின் பல உறுப்புகளிலும் எடுத்துச் செல்லும். அப்போது அவ்விடங்களில் குத்தல் வலி, குளிர்ச்சி, அசைவின்மை, பளு இவை ஏற்படும்.

கபம் வாட்டமுற்று சமநிலையில் உள்ள வாதத்தின் நுண்ணிய வழிகளைப் பித்தம் தடுத்துவிடும். அப்போது உடலில் எரிச்சலும் வலியும் தோன்றும்.

வாதம் வாட்டமுற்றுச் சமநிலையில் உள்ள கபத்தின் வழியை பித்தம் தடுக்க அப்போது சோம்பல், உடல்பளு, காய்ச்சல் இவை உண்டாகும்.

பித்தம் வாட்டமுற்று இயல்பாக உள்ள வாதத்தைக் கபம் தடுக்க அப்போது குளிர்ச்சி, உடல்பளு, காய்ச்சல் இவை ஏற்படும்.

வாயு வாட்டமுற்று, இயல்பாக உள்ள பித்தத்தைக் கபம் தடுத்துவிட அப்போது சடராக்னிக்குறைவு, தலைவலி, தூக்கம், சோம்பல், பிதற்றல், இதய நோய், உடல்பளு, நகம், கண், சிறுநீர் மஞ்சள் நிறமாதல், கப பித்த நீர்களைக் காறித் துப்புதல் இவை ஏற்படும். (45–52)

உடலில் வாதம் வாட்டமுறக் கபம் பித்தத்துடன் சேர்ந்தால் உணவில் விருப்பமின்மை, செரியாமை, விட்டுவிட்டு வரும் காய்ச்சல், உடல் பளு, இதயத்துடிப்பு, வாயில் நீர் ஊறுதல், உடல் வலி, சோகை, திமிர், மலக்கழிப்பில் மாற்றம், சடராக்னிக் குறைவு இவை ஏற்படும்.

பித்தம் குறைந்து கப வாயுக்கள் சேர்ந்து, உடல் அசைவின்மை, குளிர்ச்சி, வலி, உடல்பளு, சடராக்னிக் குறைவு, உணவில் பகைமை, நடுக்கம், நகம் முதலியவற்றில் வெளுப்பு, உடலில் கடினத்தன்மை ஆகியவை ஏற்படும்.

கபம் வாட்டமுற்று வாயு பித்தங்கள் சேர்ந்து சீற்றமடைந்து விளைவிப்பதைச் சுருக்கமாகக் கூறுவோம். தலைசுற்றல், உடலைப் பிழிவது போல வலி, குத்தல், வலி, எரிச்சல், எலும்புகள் உடைதல், நடுக்கம், உடல்வலி, உடல் உலர்ந்து போதல், இதயம்குமுறுதல் ஆகியவை உண்டாகும்.

வாத பித்தங்கள் இரண்டும் வாட்டமுறக் கபம் இரத்தக் குழாய்களைத் தடுத்துச் செயலாற்றாமை, நினைவிழத்தல், சொல் தடை இவற்றைச் செய்யும். வாத கபங்கள் வாட்டமுறப் பித்தம் உடலின் ஒளியைக் கெடுத்து வாட்டம், புலன்களின் வலிமைக் குறைவு, உடல் வலிமைக்குறைவு, நீர்வேட்கை, நினைவிழத்தல், உடல் செயலாற்ற இயலாமை ஆகியவற்றைச் செய்கிறது.

பித்த கபங்கள் வாட்டமுற வாயு இதயத்தைத் தகைத்து துன்புறுத்தி நினைவிழத்தல், நடுக்கம் இவற்றை உண்டாக்கு கிறது. (53–61)

தோஷங்கள் வளர்ச்சியடைந்து தம் தம் இலக்கணங்களை வெளிப்படுத்தும். தோஷங்கள் வாட்டமுற்றபோது தம் இலக் கணங்களை இழக்கின்றன. இயல்பான நிலையில் உள்ள தோஷம் தம் செயல்களைச் செய்கின்றது. (62)

வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்று தோஷங்கள் ரஸம் முதலிய ஏழு தாதுக்கள், மலங்கள், ஓஜஸ் என்பவைகளுக்கு வாட் டம் என்பது உண்டு. இவற்றுள் வாதம் முதலிய தோஷங்களின் பதினெட்டு வகையான வாட்டத்தின் இலக்கணங்கள் கூறப்பட் டன.

## 15. ரஸக்குறைவு

ரஸக்குறைவு ஏற்பட்டால் நோயாளி அமைதி இழப்பான். உரத்த ஒலியைப் பொறுக்க முடியாது. இதயம் படபடக்கும். இதயத்தில் வலி, நிற்கக்கூட வலிமையின்மை, களைத்துப்போதல், மனக்குழப்பம், கண்களில் இருள்மூட்டம் இவை ஏற்படும். இரத்தக் குறைவினால் தோல் கடினமாகவும், பிளந்தும், வறட்சியுடைய தாகவும் ஆகும். மாமிசக்குறைவினால் இடை, கழுத்து, வயிறு இவை உலர்ந்து போய்விடும். (63–65)

## 16. கொழுப்புக் குறைவு.

கொழுப்பின் குறைவினால் மூட்டுகளில்சொடுக்கல், வாட்டம், கண்களில் களைப்பு, உடல் இளைத்தல், வயிறு தோல் சுருங்கிப் போதல் ஆகிய இவை ஏற்படும். (66)

## 17. எலும்பின் வாட்டம்

எலும்பின் வாட்டம் ஏற்படின் தலை மயிர், உடல் ரோமம் உதிர்ந்து போதல், நகம் வீழ்தல், தாடி உதிர்தல், பற்கள் விழு தல், தலைசுற்றல், மூட்டுக்கள் தளர்ச்சி, ஆகிய இவை ஏற்படும்.

எலும்பின் உள்ளே உள்ள சோறு (மஜ்ஜை) குறைந்தால் எலும்புகள் உடைந்து போவன போன்ற நிலை, வலிமைக்குறைவு, உடல் அளவுக்கதிகமாக இலேசாதல், எப்போதும் வாத நோய் களின் தொல்லை ஆகியவை ஏற்படும். (67)

## 18. விந்துக்குறைவு

விந்துக்குறைவு ஏற்படின் வலிமைக்குறைவு, முகம் உலர்ந்து போதல், உடல் வெளுத்துப் போதல், உடலுறுப்புகள் அசை வற்றுப்போதல், களைப்பு, அலித்தன்மை, விந்து வெளியாகாமை ஆகியவை உண்டாகும். (68)

## 19. மலக்குறைவு

மலக்குறைவு ஏற்பட்டால் வாயுத்தொல்லை மிகுதியாகும். இதனால் வறட்சி ஏற்பட்டு உடலின் வயிற்றுப் பகுதியில் வாயு குறுக்கும் நெடுக்குமாகச் சுற்றும். பிறகு மேல்நோக்கிச் செல்லும். (69)

சிறுநீர்க் குறைவு ஏற்பட்டால் மிகுந்த தொல்லையுடன் சிறு நீர் கழித்தல், சிறுநீர் நிறமாற்றம், நீர்வேட்கை, வாய் உலர்தல் ஆகியவை தோன்றும். (70)

## 20. பிற மலங்கள் குறைவு

வேறுவேறு வியர்வை போன்ற மலங்கள் குறைந்து போவ தனால் வழி அடைத்துவிட்டது போன்றநிலையும்; இலேசான தன்மையும் உடலெல்லாம் உலர்ந்துவிட்டது போன்ற எண்ண மும் ஏற்படும். (71)

## 21. ஓஜஸ் குறைவு

ஓஜஸ் எனும் காந்தி குறைவு படுவதால், பயம், வலிமைக் குறைவு, எப்போதும் குழம்பியிருத்தல் புலன்களின் வலிமை யிழப்பு, உடல் ஒளி குன்றுதல், வறட்சி, உடல் இளைத்துப் போதல் ஆகியவை தோன்றும். (72)

தூய்மையான இரத்தம் சிறிதளவு பித்தத்துடன் இதயத்தில் தங்கியிருக்கும். உடலின் ஓஜஸ் என்று அதுவே கூறப்படும் இந்த ஓஜஸ் என்பது அழிந்துபோனால் மனிதனும் அழிந்து போவான். (73)

## 22. தாதுக் குறைவுகளுக்குக் காரணம்

அதிக உடற்பயிற்சி, பட்டினி, கவலை, வறட்சி, சிறிதளவே உணவு கொள்ளுதல், காற்று வெயிலில் திரிதல், பயம், வருத்தம், வறட்சிப் பொருட்களை உட்கொள்ளுதல், கண் விழித்தல், கபம்,

இரத்தம், விந்து மிகுதியாக வெளியாதல், இருமல், பேய்பிசாசுத் தொல்லை என இவற்றால் தாதுக்களின் அழிவு அல்லது குறைவு ஏற்படுகிறது. (74–75)

குருத்தன்மை, எண்ணெய்ப்பசை, புளிப்பு, உவர்ப்புப் பொருட்களை மிகுதியாக உட்கொள்ளுதல், புதிய புதிய உணவு வகைகளைப் புசித்தல், புதிய குடிவகைகளைக் குடித்தல், மிகு உறக்கம், வேலையின்றி அமர்ந்திருத்தல், உடற்பயிற்சி செய்யாமை, கவலைப்படாதிருத்தல், ஸம்சோதனம் என்னும் சிகிச்சையை மேற்கொள்ளாமை, ஆகிய காரணங்களால் கபம், பித்தம், கொழுப்பு, மாமிசம், இவை வளர்ச்சி அடைகின்றன. வாயு அவற்றால் சூழப்பட்டு ஓஜஸ் எனும் தாதுவை வஸ்தி எனும் சிறு நீர்ப்பையை அடைவிக்கிறது. அப்போது தீர்க்க இயலாத [1]மது மேகம் என்னும் சர்க்கரை நோய் உண்டாகிறது. (76–78)

அந்தச் சர்க்கரை நோய் (மதுமேகம்) முதலில் வாத பித்த கபம் இவற்றின் இலக்கணங்களைக் காண்பித்து பிறகு க்ஷயம் எனும் உடலுருக்கி நோயைத் தோற்றுவிக்கும். (79)

## 23. சர்க்கரை நோயின் தீமைகள்

இந்த மதுமேகம் எனும் சர்க்கரை நோயைக் கவனிக்காமல் விட்டுவிட்டால் ஏழுவகையான மிகக்கொடிய கட்டிகள் மாமிசம் நிறைந்துள்ள உடற்பகுதியில், மறைவிடங்களில், மூட்டுகளில் தோன்றும். அவற்றிற்கு [2]சராவிகா, [3]கச்சபிகா [4]ஜாலநீ [5]ஸர்ஷபீ [6]அலஜீ [7]விநதா [8]வித்ரதி என்று பெயர்கள் கூறப்படும்.

விளிம்புகள் உயர்ந்தும் நடுப்பகுதி தாழ்ந்துமிருக்கும், கருமை நிறமுள்ளது, பெருவலியையும் பிசுபிசுப்பும் கொண்டது, வாணலியை உருவத்தில் ஒத்திருக்கும் பிளவை சராவிகா என்று கூறப் படும். (80–82)

---

1. மதுமேகம் — சர்க்கரை நோய்.
2. சராவிகா — வாணலி போன்ற உருவ அமைப்புள்ளது.
3. கச்சபிகா — ஆமையோட்டைப் போன்ற உருக்கொண்டது
4. ஜாலநீ — சல்லடைக் கண் போன்றது
5. ஸர்ஷபீ — கடுகு போன்றது
6. அலஜீ — ஊமைக்கட்டி அல்லது ராஜப்பிளவை
7. விநதா — உருவத்தில் பெரிதானவை
8. வித்ரதி — ஆழமான பிளவை

கடினமாயும், பிளப்பது போன்ற வலியுடையதும், மிகவும் கம்பீரமாயும், பல இடங்களுக்கும் பரவி வழவழப்பான ஆமையின் முதுகுபோல் மேற்பகுதியுடன் கூடியது எதுவோ அதுவே கச்ச பிகா என்று வழங்கப்படும். (83)

அகலமாய் பல கண்கள் கொண்ட எண்ணெய்ப்பசை போன்ற பெருக்கு உள்ள ஆழமான வெட்டுவது போன்ற பெருந்துன்பம் தரக்கூடிய நரம்புவலை போன்ற தோற்றமுடைய பிளவையானது ஜாலிநீ எனப்படும். (84)

பெரியதன்று; ஆனால் விரைவில் பழுக்கவல்லது. துன்பம் மிகுதி; அதே சமயம் கடுகுகள் போல் சிறுகொப்புளங்கள் நிரம்பிய தோற்றமுள்ளது. இப்படிப்பட்ட கட்டி ஸர்ஷபீ எனக் கூறப்படும். (85)

அலஜீ என்ற பிளவானது தோலில் எரிச்சல், நீர்வேட்கை, மயக்கம், காய்ச்சல் இவற்றை உண்டாக்கும். பரவும் தன்மை கொண்ட நெருப்பைப்போல் எரிச்சல் உண்டாகும். (86)

கடினமான பெருவலி தரவல்ல, களைப்புண்டாக்கி முதுகு அல்லது வயிற்றில் வெளிப்படக்கூடிய உருவத்தில் பெரிய கருத்த நிறமுடைய பிளவையானது விநதா என்று வழங்கப்படும். (87)

## 24. வித்ரதியின் பிரிவு

வெளியே தோன்றுதல், உள்ளே தோன்றுதல் என்னும் வேறு பாட்டினால் வித்ரதி என்பது இரண்டு வகைப்படும். வெளியே தோன்றும் வித்ரதிக்கு தோல், தசைகள், மாமிசம் இவை இருப் பிடம். இது பெருவலியைத் தரும். தோற்றத்தில் நாரினைப் போல் காணப்படும்.

பழைய சோறு, எரிச்சலும் வறட்சியுமுள்ள காய்ந்து போன பொருட்களை உட்கொள்ளுதல், மிக்க உணவு கொள்ளுதல், உடல் நலத்துக்கு முரணானதும், செரிக்கத் தகாததுமான உணவுப் பொருட்களை உண்ணுதல், ஊசிப்போன கேடடைந்த பொருட் கள், பொருந்தாத உணவு (அஸாத்ம்யம்) இவற்றை உண்ணுதல், பழிக்கப்பட்ட உணவு, மிகுகட்குடி, பலவகை வேகங்களை அடக்கு தல், கடின உழைப்பு, ஒவ்வாத அதிகமான உடற்பயிற்சி, படுக்கை, மிகுபாரத்தைச் சுமத்தல், தொலைவழி நடத்தல், மிக்க புணர்ச்சி, ஆகியவற்றினால் உடலின் உள்ளே உள்ள மாமிசம் இரத்தம் இவற்றில் மலங்கள் கலந்துவிடுகின்றன. அப்போது உடலின் உள்ளே பெரிய கடினமான முடிச்சு தோன்றுகிறது. அந்த முடிச்சு

அதாவது கட்டி, இதயம், கணையம், ஈரல், மண்ணீரல், வயிறு சிறுநீரகங்கள், தொப்புள், தொடை இடுக்குகள், சிறுநீர்ப்பை ஆகிய இடங்களில் தோன்றிக் கொடிய துன்பத்தைத் தரும். அந்த கட்டி கெட்ட ரத்தம் மிகுதியாக உள்ளதால் விரைவிலேயே பழுத்துவிடும். இவ்வாறு எரிச்சலை உண்டுபண்ணுவதால் அதற்கு வித்ரதி என்று பெயர். (88–95)

## 25. வித்ரதியின் பிற பிரிவுகளும் கூறுகளும்

குத்துவது போன்றும் வெட்டுவது போன்றும் உள்ள பெரு வலி, தலைசுற்றல், வயிற்று உப்புசம், இரைச்சல், துடித்தல் போன்ற உணர்வு, பரவும் தன்மை என இத்தகைய கூறுகள் கொண்டது வாதத்தின் தொடர்பால் உண்டான வித்ரதியாகும்.

நீர்வேட்கை, எரிச்சல், மயக்கம், திமிர், காய்ச்சல் இவை பித்தவித்ரதியில் ஏற்படும்.

கொட்டாவி, வாந்தி எடுக்க வேண்டும் போல் எண்ணம், உணவில் விருப்பமின்மை, அசைவற்றநிலை, குளிர்ச்சி இவை கப வித்ரதியில் உண்டாகும்.

எல்லாவிதமான வித்ரதிகளிலும் பெருவலி ஏற்படும். நன்கு காய்ச்சப்பட்ட கத்தியால் வெட்டுவது போன்றும் அல்லது நெருப்பினால் எரிப்பது போன்றும் வலி தோன்றும். இக்கட்டி பழுத்த நிலையில் தேள் கொட்டுவது போன்ற குத்தல்வலி உண்டாகும்.

வாத வித்ரதியில் குறைவாக, வறட்சியாக சிவப்பு நிறமான பெருக்கு தோன்றும். பித்த வித்ரதியில் எள்ளு, உளுந்து, கொள்ளு இவற்றின் கஷாயம் போன்று பெருக்குத் தோன்றும்.

கபவித்ரதியில் வெண்மையாக பிசுபிசுப்பாக, தடிப்பாக, நிரம்பப் பெருக்கு ஏற்படும்.

ஸந்நிபாத வித்ரதியில் மூவகை தோஷங்களின் கூறுகளும் காணப்படும். (96–100)

இனி இந்த வித்ரதி என்னும் கட்டிகளின் சிகிச்சையினால் தீர்க்கும் தன்மை – தீர்க்கமுடியாத தன்மை என இவற்றை நன்கு அறிவதற்காக இட வேறுபாடுகளைக் கொண்டு இலக்கணங்களைக் கூறுவோம்.

இதயத்தில் வித்ரதி எனும் கட்டி தோன்றினால் இதயம் படபடத்தல், நினைவிழத்தல், பெருமூச்சு, இருமுதல், ஆகிய தொல்லைகள் உண்டாகும்.

கணையத்தில் இது தோன்றினால் நீர்வேட்கை, வாய் உலர்தல், தொண்டையடைப்பு, ஆகியவை ஏற்படும்.

ஈரலில் வித்ரதி வந்தபோது பெருமூச்சும், மண்ணீரலில் வித்ரதி தோன்றியபோது மூச்சடைப்பும், வயிற்றில் இருபக்கங்களிலும் வலியும், வயிற்றில் நடுவில் பின்புறம் தோள் பக்கங்களில் வலி இவைகளும் சிறு நீரகங்களில் ஏற்பட்டபோது இரண்டு பக்கங்களிலும் முதுகு, வயிறு, அதிகவலி, இடுப்புப் பிடிப்பும் உண்டாகும்.

தொப்புளில் ஏற்பட்டால் விக்கலும், தொடை இடுக்குகளில் தோன்றினால் தொடையின் அசைவு கெட்டு எலும்புகளில் வலியும் ஏற்படும்.

சிறுநீர்ப்பையில் தோன்றினால் — கஷ்டப்பட்டு சிறுநீர்க் கழிப்பும் மலமூத்திரங்களில் மிகவும் பொறுக்க முடியாத நாற்றமும் ஏற்படும். *(101)*

தொப்புளுக்கு மேற்பகுதிகளில் உட்பாகத்தில் வித்ரதிதோன்றி நன்கு பழுத்துக் கட்டியாக மாறி உடைந்துவிட்டால் அப்போது வாய்வழியாகப் பெருக்கும், தொப்புளுக்குக் கீழே உடலின் உட்பகுதியில் வித்ரதி ஏற்பட்டுப் பழுத்து உடைந்தால் ஆசன வாயின் வழியாகப் பெருக்கும் ஏற்படும். *(102)*

இந்த வித்ரதிகளில் இதயம், தொப்புள், சிறுநீர்ப்பை ஆகிய இடங்களில் தோன்றிய வித்ரதி முத்தோஷ சேர்க்கையால் ஏற்பட்ட வித்ரதி என்ற இரண்டும் நன்கு பழுத்து மனிதர்களின் மரணத்தை உண்டாக்குவன.

வேறு வித்ரதிகள் நல்ல அறிஞனான மருத்துவர்களின் கவனமாக விரைவாகச் செய்யப்படும் சிகிச்சைகளினால் தீர்க்கக்கூடியன. ஆகையால் உயிர்களைக் கவரும் காரணத்தால் கத்தி, பாம்பு, மின்னல், நெருப்பு போன்று இவை வித்ரதியாகின்றன. அவற்றை எண்ணெய்க்குடி, விரேசனம் எனும் மூக்கில் மருந்து விடுதல் ஆகிய சிகிச்சைகளை விரைவில் மேற்கொள்ள வேண்டும். உள்ளே தோன்றும் வித்ரதி கட்டிகளுக்கு குன்மரோகத்திற்குச் செய்யப்படும் சிகிச்சையைப் பின்பற்ற வேண்டும். *(103)*

சர்க்கரை நோய் இல்லாமலேயே மேதஸ் என்னும் கொழுப்பு கேடடைந்து வித்ரதி எனும் கட்டியைத் தோற்றுவிக்கின்றது. இந்தக் கட்டியின் தன்மை அது உருவாகும்வரை கண்களுக்குப் புலப்படுவதில்லை. *(104)*

சராவிகா, கச்சபிகா, ஜாலிநீ எனும் மூன்றுவகைக் கட்டிகளும் மிகவும் பொறுக்க முடியாத வேதனையைத் தருபவை. கபம் கொழுப்பு மேலிட்ட உடலில் இத்தகைய கட்டிகள் முழுவலிமையுடன் தோன்றுகின்றன. (105)

ஸர்ஷபீ, அலஜீ, விநதா, வெளிவித்ரதி ஆகிய கட்டிகள் பித்த மேலீட்டால் தோன்றிச் சிகிச்சையால் தீர்க்கக்கூடியவை. கொழுப்பு குறைந்த உடலில் இக்கட்டிகள் தோன்றும். (106)

சர்க்கரை நோயால் துன்புறுகிறவனின் இதயம், கழுத்து, ஆசனவாய், கைகள், மார்பகம், மூட்டுக்கள், கால்கள் இவற்றில் கட்டிகள் தோன்றினால் நோயாளி பிழைக்கமாட்டான். (107)

இவை தவிர வேறுசில கட்டிகளும் உள. அவை சிவப்பு, மஞ்சள், கருப்பு, வெண்மை கலந்த சிவப்பு, பழுப்பு, வெண்மை, தூய வெண்மை, சாம்பல்நிறம் எண்ணெய்ப்பசையுடன் கூடிய கருப்பு நிறமுள்ளவை, சில மென்மையானவை, சில கடினமானவை, சில பருமனாகவும், சில சிறியனவாகவும் சில குறைந்த வேகமுள்ளதாகவும், சில வேகமுள்ளதாகவும், சில குறைந்த வலிவுள்ளதாகவும், சில மிக்க வலி கொடுப்பதாகவும் இருக்கும். (108–109)

வாதம் முதலிய தோஷங்களின் அடிப்படையை உணர்ந்து வாதம், பித்தம், கபம், ஸந்நிபாதம் இவற்றால் இது உண்டாயிற்று என்று கூறவேண்டும். தொல்லை தருவதற்கு முன்பே விரைவாகச் சிகிச்சையைத் தொடங்க வேண்டும். (110)

நீர்வேட்கை, மேல்மூச்சு, மாமீச அழுகல், நினைவிழத்தல், விக்கல், திமிர், காய்ச்சல், அக்கி, முக்கிய உறுப்புகளின் செயலற்ற நிலை ஆகிய துன்பங்கள் கட்டிகளினால் உண்டாகுபவை. (111)

## 26. தோஷங்களின் பலவகையான இயக்கங்கள்

குறைதல், சமநிலையில் இருத்தல், வளர்தல் எனத் தோஷங்களுக்கு மூன்றுவகையான இயக்கங்கள் உண்டு. இப்படியே மேல்நோக்கிச் செல்லுதல், கீழ்நோக்கிச் செல்லுதல், குறுக்காகச் செல்லுதல் என மூவிதமான ஒரு இயக்கம் உண்டு. இதைத்தவிர தோஷங்களுக்கு மற்றொரு மூவகை இயக்கமும் அவற்றின் இயங்கும் முறையைப் பொறுத்துக் கூறப்படும்.

1. கோஷ்டம் எனும் தொண்டைக்குக் கீழே தொப்புளுக்கு மேலே உள்ள இடங்களில் இயங்குதல் (கோஷ்டகதி)
2. இரத்தம் செல்லும் வழியே இயங்குதல் (சாகாகதி).

3. மறைவிடம் இதயம் முதலிய எலும்பு, மூட்டுகளில் இயங்குதல் (மர்மாஸ்திஸந்திகதி) எனத் தோஷங்களின் மூவகை இயக்கங்கள் கூறப்பட்டுள்ளன. (112–113)

பித்தம், கபம், வாதம் ஆகிய தோஷங்கள் ஒவ்வொன்றின் மழைக்காலம் முதலிய ஆறு பருவங்களிலும் முறையே சேமிப்பு, சீற்றம், தணிதல் ஆகியவை தோன்றுகின்றன. அதாவது மழைக் காலத்தில் பித்தத்தின் சேமிப்பும் (ஆவணி–புரட்டாசி) சரத் ருதுவில் (ஐப்பசி–கார்த்திகை) பித்தத்தின் சீற்றமும், ஹேமந்த ருதுவில் (மார்கழி–தை) பித்தத்தின் தணிதல், சிசிரருதுவில் (மாசி-பங்குனி) கபத்தின் சேமிப்பும், வஸந்தத்தில் (சித்திரை–வைகாசி) கபத்தின் சீற்றம், க்ரீஷ்ம ருதுவில் (ஆனி–ஆடி) கபத்தின் தணிதல், க்ரீஷ்மருதுவில் (ஆனி–ஆடி) வாதத்தின் சேமிப்பும், வர்ஷருதுவில் (ஆவணி–புரட்டாசி) சீற்றமும், சரத்ருதுவில் (ஐப்பசி–கார்த்திகை) தணிதலும் ஏற்படுகின்றன. (114)

வாதபித்த கப தோஷங்களின் சேமிப்பு, சீற்றம், தணிதல் ஆகிய மூவகை இயக்கமும் பருவத்தைப் பொறுத்தவை. பருவத்தைப் பொறுத்த இந்த இயக்கமும், இயல்பு–மாற்றம் என்னும் பிரிவால் இரண்டு வகைப்படும். (115)

## 27. பித்தத்தின் செயல்

இயல்பாக உள்ள பித்தத்தினால் சூடு தோன்றி உண்ட உணவு செரிக்கிறது. அந்தப் பித்தம் சீற்றமடைந்து பல நோய்களைத் தோற்றுவிக்கின்றது. (116)

## 28. கபத்தின் செயல்

இயல்பாக உள்ள கபம் உடலில் வலிமை, காந்தி (ஓஜஸ்) என்று கூறப்படுகிறது. சீற்றமடைந்து அது மலம் என்று வழங்கப் படுகிறது. (117)

## 29. வாதத்தின் செயல்

இயல்பாக உள்ள வாதத்தினால்தான் பிராணிகளின் உடலில் அசைவு ஏற்படுகிறது. இந்த வாயுதான் பிராணிகளின் உயிர் என்று கூறப்படுகிறது. சீற்றமடைந்த வாயு பல நோய்களை உண்டாக்குகிறது. உயிரையும் போக்குகின்றது. (118)

நோய் உருவில் பகைவன் எப்போதும் மக்களின் அருகிலேயே உள்ளான். அதனால் அறிவாளி நன்மை தீமைகளைப் பகுத்துணர்ந்து ஆயுளைக் காப்பதில் எப்போதும் முயற்சியுள்ளவனாக இருக்க வேண்டும். (119)

முடிவுரை.

இந்த அத்தியாயத்தில் தலை நோய்கள், இதய நோய்கள், நோய்களின் பிரிவுகள், தோஷக்குறைவு நோய்களின் வகைகள்' பலவகையான பிளவைகள் (கட்டிகள்) தோஷங்களின் இயக்கம் இவையனைத்தையும் மருத்துவர்களின் மருத்துவ அறிவிற்காக வும் மக்களின் நன்மைக்காகவும் மதிப்பிற்குரிய ஆத்ரேய மாமுனிவர் விவரித்துக் கூறினார். *(120–121)*

*அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமுனிவரால் சோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையின் ஸூத்ரஸ்தானத்தில் ''கியந்த சிரஸீயம்'' எனும் பதினேழாம் அத்தியாயம் முற்றும்*

## பதினெட்டாம் அத்தியாயம்

## *த்ரிசோபீயம்

ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி ''த்ரிசோபீயம்'' எனும் அத்தியாயத்தை விவரித்து உரைப்போம். (1–2)

### 1. ஆகந்துக வீக்கத்தின் காரணங்கள்

வாதம், பித்தம், கபம் இவற்றின் காரணமாக மூன்று வகை வீக்கங்கள் உள. அவை (1) நிஜம், (2) ஆகந்துகம் என்னும் வேறுபாடுகளினால் மீண்டும் இருவகைப்படும்.

அவற்றுள் ஆகந்துகமாகிய வீக்கம் பின்வரும் வெளிக்காரணங்களால் தோன்றும். வெட்டுதல், பிளத்தல், நொறுங்குதல், தூளாகுதல், மிக்க நொருக்குதல், பிய்த்தல், அடித்தல், கொல்லுதல், கட்டுதல், முடிச்சின்றி சுற்றிக் கொள்ளுதல் (பாம்பு சுற்றுதல்) குத்துதல், துன்புறுத்தல் முதலியன. மேலும் சேராங்கொட்டை மரத்தின் மலர், பழம், சாறுகள், பூனைக்காலி, கம்பளிப்பூச்சி போன்றவைகளின் ரோமம், நஞ்சுபொருந்திய இலை, கொடி, புதர் இவற்றின் தொடர்பு, விஷப்பிராணிகளின் வியர்வை, ஊறுதல், சிறுநீர் உமிழ்தல் விஷப்பிராணிகளின் அல்லது நஞ்சற்ற மிருகங்களின் கோரைப்பல், பல், கொம்பு, நகங்கள் இவற்றின் தொடர்பாலும், கடல், நஞ்சுக்காற்று, பனி, நெருப்பு இவை உடல்மீது படுவதாலும் வீக்கங்கள் தோன்றுகின்றன. (3–4)

இந்த வீக்கம் தோஷகோபத்தால் தோன்றும் நிஜமான வீக்கங்களில் ஏற்படும் இலக்கணங்களுக்கு எதிர்பாராத புறக்காரணங்களால் தோன்றும் ஆகந்துக இலக்கணங்களைவிட சற்று மாறுபட்டதாகத் தோன்றும். இலக்கணங்களால் அதனதன் காரணங்களுக்கு ஏற்ப முதலில் புலப்படுகின்றன. காயத்திற்கான கட்டு,

---

*த்ரிசோபீயம் – வாதம், கபம், பித்தம் எனும் மூன்று வகைத் தோஷங்களால் உண்டாகும் பலவகை வீக்கங்களை விவரித்துக் கூறுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறும்.

(1) நிஜம் – உட்காரணங்களால் தோன்றுபவை.

(2) ஆகந்துகம் – வெளிக்காரணங்களால் உண்டாகுபவை

மந்திரம், நச்சுப்போக்கு மருந்துப் பூச்சு, களிம்பு தடவுதல், ஒற்றடம்தருதல் ஆகிய சிகிச்சை முறைகளால் வெளிக்காரணங்களால் தோன்றிய வீக்கம்தணிகின்றது. (5)

## 2. உட்காரணங்களால் தோன்றும் வீக்கம்

உட்காரணங்களால் தோன்றும் வீக்கம், வாந்திக்கும், பேதிக்கும் கொடுத்தல், எண்ணெய் கஷாயவஸ்திகள், [1]சிரோவிரேசனம் எனும் மூக்கில் மருந்திடுதல்முதலிய சிகிச்சைகளை முறைப்படி செய்யாமையாலும் அவற்றின் [2]பொய் தொடர்பாலும் பத்திய முறைகளைச் சரியாகக் கடைப்பிடிக்காததாலும் ஏற்படுகிறது. தவிர, வாந்தி, வயிற்றுப்பொருமல், வாந்திபேதி, மூச்சு, இருமல், கழிச்சல், இளைப்பு, சோகை, மகோதரம் போன்ற வயிற்று நோய்கள், காய்ச்சல், பவுத்திரம், மூலநோய் இவற்றால் மிகவும் உடல் இளைப்பதாலும், குஷ்டம், அரிப்பு, கட்டிகள் இவற்றாலும், வாந்தி, தும்மல், ஏப்பம், விந்து, மலம், சிறுநீர் இவற்றின் வேகங்களை அடக்குவதாலும், [3]ஐவகைச் சிகிச்சைகள் முறைப்படி செய்யாததால் தோன்றிய நோய்கள், பட்டினியிருத்தல், வழிநடத்தல், இவற்றால் இளைத்தவர்க்கும், திடீரென மிக்க குருத்தன்மை, புளிப்பு, உவர்ப்புச் சுவைகள் உடைய உணவுப் பொருட்கள், மாவுப்பொருட்கள், பழங்கள், காய்கறிகள்,பானங்கள், பலவகை கள்வகைகள், நன்கு தோயாத தயிர், முளைத்த புதியவால் உள்ள நெல்வகை, சமீதானியம், நீர்ப்பாங்கான இடத்தில் வாழும் பிராணிகள், நீர்வாழ் பிராணிகள் இவற்றின் மாமிசம் இவற்றை உண்பதாலும் மண், சேறு, கல் இவற்றை உட்கொள்வதாலும், உப்பை மிகுதியாக உண்பதாலும், கருவின் பளுவை தாங்கஇயலாது துன்புறுவதாலும், கருச்சிதைவு இவற்றாலும் மகப்பேறுக்குப் பிறகு நன்முறையில் ஊட்டப் பொருட்களை அளிக்காமையாலும் வாதபித்த கபங்களாகிய தோஷங்கள் சீற்றமடைந்து வீக்கம் தோன்றுகிறது. இவை பொதுவான காரணங்களாகும். (6)

---

(1) சிரோவிரேசனம் — மூக்கில் மருந்திடுதல்.

(2) பொய்தொடர்பு — மித்யாயோகம்.

(3) ஐவகை சிகிச்சைகள் — வாந்தி, பேதி, எண்ணெய் வஸ்தி, கஷாய வஸ்தி, சிரோவிரேசனம் என்னும் ஐவகை கிகிச்சைகள்.

### 3. சிறப்புக் காரணங்கள் (வாத வீக்கம்)

**வீக்கத்தின் சிறப்புக் காரணங்கள் பின்வருமாறு :—**

குளிர்ச்சி, வறட்சி, இலேசு, தெளிவு, ஆகிய குண முள்ள பொருட்களை மிகுதியாக உட்கொள்வதாலும், உழைப்பு,பட்டினி இவற்றால் இளைத்தவர்க்கும், [1]க்ஷபணம் என்னும் இளைத்த லாலும் வாதம் சீற்றமடைந்து தோல், மாமிசம், இரத்தம் இவற் றில் தகைந்து நின்று வீக்கத்தை உண்டாக்குகிறது. வாத சீற்றத் தால் தோன்றிய வீக்கம் விரைவில் வெளிப்பட்டு விரைவிலேயே தணிந்துவிடும். அது கருப்பு சிவப்பு நிறமுள்ளதாகவும் இயற்கை நிறமாகவும் இங்குமங்கும் இடம் மாறியவாறும் துடிப்பதாகவும் இருக்கும். இந்த வீக்கத்தால் தோலும் அதன்மீதுள்ள ரோமங் களும் கடினமாகவும் சொரசொரப்பாகவும் ஆகிவிடும். வெட்டு வது, பிளப்பது, நசுக்கப்படுவது, ஊசியால் குத்துவது போன்றும் வலி ஏற்படும். எறும்பு ஊறுவதைப் போன்ற உணர்ச்சி தோன் றும். கடுகை அரைத்துப் பூசியது போன்று எரிச்சல் ஏற்படும். சில போது அது குறையும். சில நேரம் பரவி வளர்ச்சியடையும், வாத வீக்கத்தின் இலக்கணங்கள் இவையாகும். *(7—8)*

### 4. பித்த வீக்கம்

சூடு, விறுவிறுப்பு, கசப்பு, காரம், புளிப்பு, உப்பு குணமுள்ள பொருட்கள், எளிதில் செரிக்காத பொருள்கள் இவற்றை உண்பது, நெருப்பு, வெயில் இவற்றின் சூட்டைப் பொறுத்துக்கொண்டு சுற்றுவது ஆகியவற்றால் பித்தம் சீற்றமடைந்து தோல், மாமிசம், இரத்தம் இவற்றைத் தகைத்து அடைந்து அவற்றைக் கெடுத்து வீக்கத்தைத் தோற்றுவிக்கின்றது. இதுவும் விரைவில் தோன்றி தணியக்கூடியது. இது கருமை, மஞ்சள், நீலம், தாமிரநிறம் ஆகிய நிறமுடையதாக இருக்கும். தொடும்போது சூடாகவும், மென்மையாகவும் இருக்கும். வீக்கத்தின் மீதுள்ள ரோமங்கள் பழுப்பு அல்லது தாமிர நிறமாகக் காணப்படும். மிக்க எரிச்சலும் பொறுக்க முடியாத வலியும் ஏற்பட்டு புகை தோன்றுவதுபோல் இருக்கும். நெருப்புப் போன்று சூடுபரவி இருக்கும். வியர்க்கும். நலிந்திருக்கும். அழுத்தமாகத் தொடுதலும், சூடும் தாங்காது. இத்தகைய இலக்கணங்களைக் கொண்டது பித்த வீக்கம்.

*(9—10)*

### 5. கப வீக்கம்

குருத்தன்மை, இனிப்பு, குளிர்ச்சி, எண்ணெய்ப்பசை குண முள்ள பொருட்களை உட்கொள்வதாலும், மிகுதியான உறக்கத்

---

(1) க்ஷபணம் — வமனம் முதலிய ஐவகைசிகிச்சையால் இளைத்தல்

தாலும், அளவுக்குத் தேவையான உடற்பயிற்சி செய்யாததாலும் கபம் சீற்றமடைந்து தோல், மாமிசம், இரத்தம் இவற்றை யடைந்து அவற்றைக்கெடுத்து வீக்கத்தை உண்டாக்குகிறது. அது தாமதமாகவே வெளிப்பட்டு தாமதமாகவே தணியும். வெண்மை, தூயவெண்மை, பளு, எண்ணெய்ப்பசை, வழவழப்பு, கடினத் தன்மை இவற்றைக் கொண்டது. ஒரே இடத்தில் நிலைத்திருக் கும். அதன் மீதுள்ள ரோமத்தின் நுனி வெண்மை நிறமுள்ள தாகக் காட்சியளிக்கும். அழுத்தமாகத் தொடுவதையும் வெப்பத் தையும் தாங்கும். இத்தகைய இலக்கணங்கள் கொண்டது சுப வீக்கம். *(11–12)*

## 6. வீக்கங்களின் பிரிவுகள்

இரண்டிரண்டு தோஷங்களின் காரணங்கள் இலக்கணங்கள், இவற்றால் வாதபித்தத்தால் தோன்றுபவை, வாத கபங்களால் தோன்றுபவை, பித்த கபங்களால் உண்டாகுபவை என மூன்று வகையான வீக்கங்கள் ஆகின்றன. இவ்வாறே மூன்று தோஷங் களின் காரணங்கள் இலக்கணம் இவற்றால் சேர்ந்த ஸந்நிபாத வீக்கம் என்ற ஒன்றும் உண்டு. ஆக மொத்தம் வீக்கங்கள் ஏழு வகையாக ஆகின்றன.'

இவ்வாறு இயல்பான காரணங்களால் நிஜம், ஆகந்துகம், என்ற வீக்கங்கள் இரண்டு வகையாகவும் மீண்டும் வாதம், பித்தம் கபம் ஆகிய வேறுபாடுகளால் மூன்று வகையாகவும் வாதபித்த வீக்கம், வாதகபவீக்கம், பித்தகப வீக்கம், ஸந்நிபாதவீக்கம் என்னும் வேறுபாடுகளால் மீண்டும் நான்குவிதமாகவும் இவ்வாறு ஏழுவகையாக வீக்கங்கள் பிரிக்கப்பட்டன. ஆகந்துகவீக்கம் என் பதைச் சேர்த்து எட்டுவகையாகவும் கூறப்படும். பொதுவான தன்மையான வீக்கம் என்று பார்க்கும்போது வீக்கம் என்பது ஒன்றே என்று அறியப்படுகிறது. *(13–15)*

## 7. வாத, பித்த, கப வீக்கங்களின் அறிகுறிகள்

வாத வீக்கம் கொண்ட உடல் உணர்வற்றுப் போகும். பொறுக்க முடியாத வலி மூட்டுகளில் உண்டாகும். அழுத்திப் பார்த்தவுடன் பள்ளமாகி அழுத்தாதபொழுது பழைய நிலையை அடைந்து வீக்கமடைந்த பகுதி சிவப்பு நிறமுள்ளதாகக் காணப் படும். இரவில் வீக்கம் குறையும், எண்ணெயைச் சூடாக்கி ஒற் றடம் கொடுப்பதாலும் நன்குபிடித்து விடுவதாலும் வீக்கம் மறை யும். இவையே வாத வீக்க அறிகுறியும் சிகிச்சையும் ஆகும். *(16–17)*

நீர்வேட்கை காய்ச்சலால் மிகுதியாதல், அதன் வீக்கமுள்ள இடத்தில் பொறுக்க முடியாத வலி, எரிச்சல், மிகுதியாக வியர்த்தல், நலிதல், கெட்ட நாற்றம், கண், வாய், தோல் மஞ்சளாக ஆதல் முதலியன ஏற்படும். முதலில் வீக்கம் உடலின் நடுப்பகுதியில் தொடங்கி தோல் மென்மையாகும். நோயாளிக்கு கழிச்சல் ஏற்படும். இவை பித்த வீக்கத்தின் அறிகுறிகள்.

வீக்கமுள்ள இடம் குளிர்ந்து இருக்கும். அது வேறு இடங்களுக்குப் பரவாது. அரிப்பு ஏற்படும். வெண்ணிறமானது. வீக்கத்தை அழுத்தி நிறுத்தியவுடன் பழைய நிலைக்கு வராமல் பள்ளமாகவே இருக்கும். இவை கப வீக்கத்தின் அறிகுறிகள். தவிர வீக்கத்தைக் கத்தியால் அறுத்தாலும், தருப்பையினால் குத்தினாலும் இரத்தம் வெளியாகாது. சிறிது நேரத்திற்குப் பிறகுச் சிறிதளவு ஊன்நீர்ப் பெருக்கு ஏற்படும். இவை கபவீக்கத்தின் அறிகுறிகளே.

வாதபித்த கபங்களில் இரண்டு தோஷங்களின் சேர்க்கையால் ஏற்பட்டதை அவ்வக்காரணங்கள், இலக்கணங்கள் இவற்றின் வழியாக உணரலாம். மூன்று தோஷங்களின் சேர்க்கைக்குக் காரணம் இலக்கணம் ஒன்று சேர்ந்து காணப்பட்டால் அது ஸந்நிபாத வீக்கமாகும். *(18–22)*

ஆண்களுக்கு கால்களில் வீக்கம் தோன்றி உடல் முழுவதும் பரவினாலும், பெண்களுக்கு முகத்தில்தொடங்கி உடல் முழுவதும் பரவினாலும் அது மிகவும் தீர்க்கமுடியாததாகும். *(23)*

ஆண், பெண்கள் இருபாலருக்கும் மறைவிடங்களில் வீக்கம் தோன்றினால் அது எளிதில் தீர்க்கக்கூடியதன்று. அதிலும் பிற தொல்லைகளும் சேர்ந்துவிட்டால் தீர்க்கஇயலாதது என்றே கூறிவிடலாம். *(24)*

## 8. வீக்கத்திற்குப்பின் தொல்லை விளைவிப்பன

வாந்தி, பெருமூச்சு, உணவில் விருப்பமின்மை, நீர்வேட்கை, காய்ச்சல், பேதி வலிமை குன்றுதல் ஆகிய இவை வீக்க நோய்க்கு தொல்லை விளைவிப்பன. *(25)*

## 9. [1]உபஜிஹ்விகா அடிநாக்கு வீக்கம்

கபம் சீற்றமடைந்து நாவின் அடிப்பாகத்தில் சேர்ந்திருப்பின் அவனுக்கு உபஜிஹ்விகா எனும் வீக்கம் தோன்றும். *(26)*

---

*(1)* உபஜிஹ்விகா – கபத்தினால் நாக்கின் அடிப்பாகம் வீங்குதல்

**10. கலசுண்டிகா** - உள்நாக்கு வீக்கம்

கபம் சீற்றமுற்று அது தொண்டையில் தங்குமாகில் அங்கு வீக்கம் தோன்றும். அதற்கு 'கலசுண்டிகா' என்று பெயர். (27)

**11. [1]கலகண்டம்** - கண்டமாலை

கபம் சீற்றமடைந்து ஒருவனுடைய தொண்டையின் கழுத்தின் வெளிப்புறத்தில் தங்கினால் அங்கு விரைவில் வீக்கம் தோன்றும். அது கலகண்டம்' என்று வழங்கப்படும். (28)

**12. [2]கலக்ரஹம்** - தொண்டையடைப்பு

கபம் சீற்றமடைந்து தொண்டையின் உள்ளே தங்கியிருக்கும் போது உள்ளே வீக்கம் ஏற்படும். அது 'கலக்ரஹம்' அல்லது தொண்டைப்பிடிப்பு என வழங்கப்படும். (29)

**3. [3]விஸர்ப்பம்** - சிவப்பு நிறமான உடல் வீக்கம், (அக்கி)

பித்தம் சீற்றமடைந்து தோலிலும் இரத்தத்துடனும் கலந்து தோலில் பரவி சிவப்பு நிறமான வீக்கம் தோற்றுவிக்கும். அது விஸர்ப்பம் எனப்படும்.

பித்தம் சீற்றமடைந்து இரத்தத்துடன் தோலில் தங்கி சிவப்புநிறமான வீக்கம் காணப்படும். அது [4]பிடகா எனப்படும்.

**14. சரும நோய்களின் காரணம்**

பித்தம் சீற்றமடைந்து இரத்தத்துடன் கலந்து உலர்ந்து எள் போன்ற மச்சம், மறு, சிவப்பு மச்சம், வங்கு நீலமச்சம் (நீலிகா) போன்ற தோல் நோய்கள் தோன்றும். (30-32)

சீற்றமடைந்த பித்தம் நெற்றிப்பொட்டுகளில் தங்கி வீக்கத்தை தோற்றுவிக்கும். அதற்கு ([5]) சங்ககம் என்று பெயர். அது கடுமையான வலியை உண்டுபண்ணும். (33)

---

1. கலகண்டம் — கபத்தின் சீற்றத்தால் தொண்டையின் வெளியே தோன்றும் வீக்கம். கண்டமாலை
2. கலக்ரஹம் — கபத்தின் சீற்றத்தால் தொண்டைப்பிடிப்பு.
3. விஸர்ப்பம் — பித்தம் சீற்றமுற்று உடலில் சிவப்பு நிறமாகத் தோன்றும் வீக்கம். (அக்கி)
4. பிடகா — கட்டி
5. சங்ககம் — பித்தத்தினால் தோன்றும் நெற்றிப் பொட்டு வீக்கம்.

### 15. கர்ணமூல வீக்கம்

பித்தம் சீற்றமடைந்து காதுகளின் அடிப்பாகத்தில் தங்கி வீக்கத்தைத் தோற்றுவிக்கும். இந்த வீக்கம் காய்ச்சலின் இறுதி நேரத்தில் வெளிப்படும். இது தீர்க்க முடியாதது. தோன்றியவர்க்கு மரணத்தை உண்டாக்கும். *(34)*

### 16. மண்ணீரல் வளர்ச்சி

வாயு சீற்றமடைந்து ஒருவருடைய மண்ணீரலில் சேர்ந்தால் இரண்டு விலாப்பக்கங்களிலும் அடிவயிற்றிலும் பொறுக்க முடியாத வலி ஏற்படும். இதனால் மண்ணீரலும் விரிந்துவிடும். *(35)*

### 16. அ குன்மக்கட்டி

சீற்றமடைந்த வாதம் அடிவயிற்றில் குன்மத்தின் நிலைகளில் வந்து தங்கி பெருவலியை உண்டாக்கி வீக்கமாகி மாறி இறுதியில் குன்மம் என்னும் கட்டியாய் உருவெடுக்கும். *(36)*

### 17. விதை வீக்கம்

சீற்றமுற்ற வாயு தொடை இடுக்குகளிலிருந்து பரவி விதைகளை அடைந்து தங்கி அதனால் வலியும் விதை வீக்கமும் ஏற்படும். இது விருத்தி எனப்படும். *(37)*

### 18. பெருவயிறு *(மகோதாம்)*

வாயு சீற்றமுற்று தோலிலும் மாமிசத்திலும் நடுவில் கலந்து வயிற்றில் வீக்கம் தோன்றும். இதுவே வயிற்றுவீக்க நோய் அல்லது பெருவயிறு வீக்கம் எனப்படும். *(38)*

### 19. ஆநாஹம் *(மலச்சிக்கல்)*

சீற்றமடைந்த வாயு வயிற்றில் தங்கி மேல்நோக்கியோ, கீழ்நோக்கியோ செல்லாமல் இருந்தால் ஆநாஹம் எனப்படும். வயிற்று உப்புசம் என்றும் பெயர் பெறும். *(39)*

அதிமாமிசம், [1]அர்புதம் என்று தனித்தனியாகக் கூறப்படினும் பொதுவான இலக்கணத்தினால் அவற்றையும் வீக்கத்திலேயே சேர்க்கலாம். *(40)*

### 20. ரோகிணீ நோய்

வாதம், கபம், பித்தம் ஆகிய மூன்று தோஷங்களும் ஒரே நேரத்தில் சீற்றமடைந்து நாக்கின் அடிப்பகுதியில் தங்கினால்

---

*(1)* அர்புதம் — புரைகுழல்

பொறுக்க முடியாத எரிச்சல் ஏற்படும். பெரிய அளவு வீக்கமும் தோன்றும். பலவிதமான வலிகளும் ஏற்படும். மாந்தர்க்கு விரைவில் அழிவை உண்டாக்கவல்ல இந்த நோயை ரோகிணி என வழங்குவர். இந்நோயுற்றவரின் ஆயுள் மூன்று நாட்களே எனக்கூறுவர். ஆனால் நன்முறையில் தக்க நேரத்தில் சிகிச்சையைத் தொடங்கிச் செய்தால் மனிதன் இந்நோயிலிருந்து மீள முடியும். (41–43)

இதுபோன்ற கொடிய வேறு பல நோய்களும் உள்ளன. அவற்றையும் நன்முறைச் சிகிச்சைகளினால் தீர்க்க முடியும். நன் முயற்சிகளைச் செய்து சிகிச்சைகளைத் தக்க நேரத்தில் மேற் கொள்ளாவிடினும் அல்லது முறைதவறிய முயற்சி சிகிச்சைகளாலும் அவை நோயாளியைக் கொன்றுவிடும். (44)

எளிதான நோய்கள் பல உள. அவை சிகிச்சை செய்தாலும் சிகிச்சை செய்யாவிடினும் தீர்க்கக்கூடியனவையே. பல கடினமான நோய்கள் உள்ளன. அவை சிகிச்சையாலும் தீர்க்க இயலாதவை. அவற்றின் பெயர்களும் மருத்துவர்களால் அறியப்படாதவை. சிகிச்சை செய்தும் முற்றும் நீங்காமல் தொடர்ந்து தொல்லை தருவன அவை (யாப்யம்) எனப்படும். (45–46)

இத்தகைய நோய்கள் எத்தகைய சிகிச்சைகள் செய்தும் பயனின்றி நோயாளியின் மரணத்திற்குக் காரணமாகின்றன. வேறு பல நோய்களும் உள்ளன. அவை நல்ல அறிஞுனான திறமையுள்ள மருத்துவரின் சிகிச்சைகளாலும் தீர்க்க இயலாதவைகள் ஆகின்றன.

அறிவில்லாத மருத்துவர்களே தீர்க்கமுடியாத அந்நோய்களுக்குச் சிகிச்சை செய்ய முயல்வர். நல்லறிஞரான மருத்துவர் அந்நோய்க்கு சிகிச்சைகளைப் புரிவதில் முயற்சியை மேற்கொள்ள மாட்டார். (47)

## 21. நோய்களின் பிரிவு

நோய்கள், சிகிச்சையால் தீர்க்கக்கூடியவை. தீர்க்க இயலாதவை என இரண்டு வகைப்படும். மீண்டும் எளிய நோய்கள், கடினமான நோய்கள் என இரண்டு வகை. ஆகமொத்தம் நோய்களை நான்கு வகையாகப் பிரிக்கலாம். (48)

அந்நோய்கள் வலி, நிறம், காரணம், இடம், தோற்றம் இவற்றால் கணக்கிலடங்காதவைகளாகும். ஆயினும் ஓரளவு அவற்றைப்

பாகுபாடு செய்து முறைப்படுத்த சில இன்றியமையாத நோய்களின் சுருக்கம் கீழே கொடுக்கப்பட்டது. வேறு நோய்களையும் அவற்றின் இயல்புகள் ஆகியவற்றைக்கொண்டு அவற்றின் மாற்றங்களின் இயல்பு, ஒற்றுமை இவற்றை ஆய்வு செய்து அதற்கு ஏற்ப மருத்துவர் சிகிச்சைகளைக் கூறவேண்டும். *(49–50)*

## 22. நோய்களின் ஆய்வும் சிகிச்சையும்

மருத்துவர் குறிப்பிட்ட நோய்க்கு ஏற்ற பெயரைக் கூறமுடியவில்லை எனில் அதற்காக வெட்கப்படவேண்டியதில்லை. எல்லா நோய்களுக்கும் ஏற்ற நோயின் பெயரைக் குறிப்பிடுவதால் மாறுபடாத நிலை கொண்டது என்று கூறுவது இயலாத காரியமாகும். ஒரு தோஷம் சீற்றமடைந்து வெவ்வேறு காரணங்களால் வெவ்வேறான இடங்களை அடைந்து பல நோய்களைத் தோற்றுவிக்கின்றன. இதனால் நோயின் இயல்பு, இடங்கள், சிறப்புக் காரணம் இவற்றை உணர்ந்து மருத்துவர் சிகிச்சை புரிய வேண்டும்.

நோயின் இயற்கையான தோஷநிலை, உடலில் நோய் தோன்றும் இடங்கள், நோயின் பல இலக்கணங்கள் ஆகிய மூன்று வகைகளையும் நன்குணர்ந்து சிகிச்சையைத் தொடங்கும் மருத்துவர் சிகிச்சையில் கலக்கமடையார். *(51–54)*

உயிர் வாழ் பிராணிகளின் உடலில் வாத, பித்தம், கபம் என்னும் இம்மூன்றும் என்றும் நிலைத்து நிற்பன. ஆனால் இவை சமநிலையில் உள்ளனவா? மாறுபட்ட நிலையில் உள்ளனவா என்பனவற்றை அறிவாளியான மருத்துவன் ஆய்வு செய்து அறிய வேண்டும். *(55)*

## 23. வாத பித்த கபங்களின் செயல்கள்

உடலில் வாதம் சமநிலையில் இருந்தால் ஆர்வம், மூச்சு நன்கமைதல், செயல், தாதுக்களின் சமநிலை, மலம், சிறுநீர் நன்கு வெளியாதல் இவை உண்டாகும். பார்வை, செரித்தல், உடற்சூடு, பசி, நீர்வேட்கை, உடலில் மென்மை, ஒளி, தெளிவு, கொழுப்பு இவை நன்முறையில் அமைந்திருத்தல் சமநிலையில் உள்ள பித்தத்தின் செயல்கள்.

எண்ணெய்ப்பசை, கட்டமைப்பு, நிலையான தன்மை, குருவாதல், ஆண்மை, வலிமை, பொறுமை, தைரியம், பேராசையின்மை இவை, சமநிலையில் உள்ள கபத்தின் செயல்கள்.

வாதம், பித்தம், கபம் ஆகியவற்றில் குறைவு ஏற்பட்டால் மேலே கூறப்பட்ட குணங்களுக்கு குறைவு உண்டாகும். முரணான செயல்கள், பண்புகள் வளர்ச்சியடையும். (56–59)

வாத பித்த கப தோஷங்களின் இயல்புச்சிறப்பின் தோற்றம், அவற்றின் வளர்ச்சியின் அடையாளமாகும். ஆதலின் தோஷங்களின் இயல்புக்குறைவு, அல்லது வளர்ச்சி இவற்றை மருத்துவர் நன்கு சோதிக்க வேண்டும். (60)

**முடிவுரை**

வேண்டுதல் வேண்டாமை இன்றி, அறியாமையகற்றி அறிவுச் சுடர் படர்ந்து, அகந்தை அகற்றி, ஆசிரியர் புனர்வசு ஆத்ரேயர் ''த்ரிசோபீயம்'' எனும் இவ்வத்தியாயத்தில், வீக்கங்களின் எண்கள், காரணம், வீக்கக்குறிகள், அதன் மாற்றங்கள், அவற்றின் பிரிவுகள், அவற்றின் தோற்றம், தீர்க்கும் தீர்க்கமுடியாத தன்மைகள், மருத்துவர் சுருக்கமாக அறிந்துகொள்ள வேண்டிய நோய்பற்றிய முந்நிலைகள், ஒவ்வொன்றின் செயல்கள், தோஷங்களின் குறைவு வளர்ச்சியின் இலக்கணங்கள் ஆகியவற்றை விளக்கினார். (61–63)

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் சோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானத்தில் த்ரிசோபீயம் எனும் பதினெட்டாம் அத்தியாயம் முற்றும்.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

# *அஷ்டோதரீயம்

''அஷ்டோதரீயம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1—2

### 1. நோய் வகைகள்

1. எண்வகை பெருவயிறுகள்
2. எண்வகை சிறுநீர்க் கட்டுகள்
3. எண்வகை தாய்ப்பால் தோஷங்கள்
4. எண்வகை விந்து தோஷங்கள்
5. ஏழுவகை குஷ்டங்கள்
6. ஏழுவகை சிறுகட்டிகள்
7. ஏழுவகை அக்கிகள்போன்று தோலில் பரவும் நோய்கள்
8. ஆறுவகை மலக்கழிச்சல்கள்
9. ஆறுவகை[1] உதாவர்த்தங்கள்
10. ஐவகை குன்மங்கள்
11. ஐவகை மண்ணீரல் தோஷங்கள்
12. ஐவகை இருமல்கள்
13. ஐவகை இழுப்புகள்
14. ஐவகை விக்கல்கள்
15. ஐவகை நாவறட்சிகள்
16. ஐவகை வாந்திகள்
17. ஐவகை சுவையின்மை
18. ஐவகை தலையில் தோன்றும் நோய்கள்
19. ஐவகை இதய நோய்கள்
20. ஐவகை பாண்டு நோய்கள்
21. ஐவகைப் பைத்தியங்கள்
22. நால்வகை காக்காய் வலிப்புகள்
23. நால்வகைக்கண் நோய்கள்
24. நால்வகைக்காதுநோய்கள்
25. நால்வகை[2]ப்ரதிச்யாயங்கள்

---

*அஷ்டோதரீயம்— எண் வகையான வயிற்றில் தோன்றும் நோய்கள் முதலாக பலவகை நோய்களைப் பற்றி விவரிப்பதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

1. உதாவர்த்தம்— கீழ்நோக்கிச் செல்லும் வாயு தடைபட்டு மேல்நோக்கிச் செல்வது.

2. ப்ரதிச்யாயம் — நாட்பட்ட ஜலதோஷம்.

26. நால்வகை வாயில் தோன்றும் நோய்கள்
27. நால்வகை கிரகிணி தோஷங்கள்
28. நால்வகை மத நோய்கள்
29. நால்வகை மூர்ச்சைகள்
30. நால்வகை உடலுருக்கி நோய்கள்
31. நால்வகை அலித்தன்மை
32. மூவகை வீக்கங்கள்
33. மூவகை வெண்குஷ்டங்கள்
34. மூவகை இரத்தபித்தங்கள்
35. இருவகை காய்ச்சல்கள்
36. இருவகைக் காயங்கள்
37. இருவகை [1]ஆயாமங்கள்
38. இருவகை [2]க்ருத்ரஸிகள்
39. இருவகைக் காமாலை
40. இருவகை[3]ஆமதோஷங்கள்
41. இருவகை வாத ரத்தங்கள்
42. இருவகை மூலநோய்கள்
43. [4]ஊருஸ்தம்பம்
44. [5]ஸன்யாசம்
45. மகாரோகம்
46. இருபதுவகை கிருமிகள்
47. இருபதுவகை நீரிழிவுகள்
48. இருபதுவகை பெண்குறியில் தோன்றும் நோய்கள்

இவ்வாறு நாற்பத்தெட்டு நோய்கள் இங்கு கூறப்பட்டுள்ளன.

## 2. 48 வகை நோய்களின் விளக்கம்

### 1. எண்வகை பெருவயிறுகள்

1. வாத தோஷத்தினால் தோன்றும் பெரு வயிறு.
2. பித்த தோஷத்தினால் தோன்றும் பெரு வயிறு.
3. கப தோஷத்தினால் தோன்றும் பெரு வயிறு.
4. மூன்று தோஷங்களினாலும் சேர்ந்து தோன்றும் பெரு வயிறு.
5. மண்ணீரல் கெடுவதனால் ஏற்படும் பெருவயிறு.
6. மலம் தடைபடுவதனால் தோன்றும் பெருவயிறு.
7. குடலில் துவாரம் ஏற்படுவதால் தோன்றும் பெருவயிறு.
8. வயிற்றில் நீர்கட்டிப் போவதனால் ஏற்படும் பெருவயிறு.

ஆக எண்வகைப் பெருவயிறுகள்.

---

1. ஆயாமம் — உடலின் முன் அல்லது பின்பக்கம் வளைந்து போதல்
2. க்ருத்ரஸி — ஒருவகை வாத நோய்.
3. ஆமதோஷம் — உணவு சீரணிக்காததால் தோன்றும் தோஷம்
4. ஊருஸ்தம்பம்— தொடை தூண்போல் வீங்கிப் போதல்.
5. ஸன்யாசம் — ஒருவகை மூர்ச்சை.

## 2. எண்வகை சிறுநீர் கட்டுகள்

1. வாத தோஷத்தினால் ஏற்படக்கூடியது.
2. பித்த தோஷத்தினால் ஏற்படக்கூடியது.
3. கப தோஷத்தினால் ஏற்படக்கூடியது
4. மூன்று தோஷங்களின் சேர்க்கையால் ஏற்படக்கூடியது.
5. கல் அடைப்பதினால் ஏற்படக்கூடியது.
6. மணல் போன்ற உப்புகள் சேருவதனால் ஏற்படக்கூடியது.
7. விந்து கட்டிப்போய் தடைபடுவதனால் ஏற்படக்கூடியது.
8. இரத்தம் உறைந்து போவதனால் ஏற்படக்கூடியது.

இவ்விதம் சிறுநீர் கட்டுகள் எண் வகைப்படும்.

## 3. தாய்ப்பாலின் தோஷங்கள்

1. நிறமாற்றம்
2. கெட்ட நாற்றம்
3. சுவையின்மை
4. பிசுபிசுப்புத்தன்மை
5. நுரையுடன் கூடியிருத்தல்
6. வறட்சி
7. பளு
8. மிக்க எண்ணெய்ப்பசை உடையது.

இவ்விதம் தாய்ப்பாலின் தோஷங்கள் எண்வகைப்படும்.

## 4. விந்துவின் தோஷங்கள்

1. இலேசானது
2. வறண்டது
3. நுரையுடன் கூடியது
4. வெளுப்பற்றது
5. துர்நாற்றமுடையது
6. அதிக பிசுபிசுப்புடையது
7. மற்ற தாதுக்களுடன் கலந்துள்ளது.
8. உயிர் அணுக்கள் அற்றது.

இவ்விதம் விந்துவின் தோஷங்கள் எண் வகைப்படும்.

## 5. ஏழு வகைக் குஷ்டங்கள்

1. கபாலம் (மண் ஓட்டின் நிறம் போன்றது)
2. உதும்பரம் (அத்திப்பழ நிறம் போன்றது)
3. மண்டலம் (வட்டம் வட்டமாகக் காணப்படுதல்)
4. ரிஷ்யஜிஹ்வம் (மானின் நாக்குப் போன்றது)
5. புண்டரீகம் (தாமரை மலர் போன்ற நிறமுள்ளது)
6. சித்மம் (தேமல்)

7. காகணம் (குன்றிமணியின் நிறம் போன்றது)

இவ்விதம் குஷ்டம் ஏழு வகைப்படும்.

## 6. ஏழு வகை நீரிழிவு நோய்க் கட்டிகள்

1. சராவிகம் (மண் மடக்கைக் கவிழ்த்து வைத்தது போன்ற உருவம் உள்ள கட்டி)
2. கச்சபிகம் (ஆமை போன்ற கட்டி)
3. ஜாலினீ (சல்லடைக்கண் போன்ற கட்டி)
4. ஸர்ஷபம் (கடுகு போன்ற கட்டி)
5. அலஜி (ஊமைக்கட்டி)
6. விநதா (ஒரு வகை கட்டி)
7. வித்ரதி (பெரிய கட்டி)

ஆக சிறுகட்டிகள் ஏழுவகைப்படும்.

## 7. ஏழுவகை அக்கிகள் ([1]விசர்ப்பம்)

1. வாத தோஷத்தினால் தோன்றக்கூடியது.
2. பித்த தோஷத்தினால் தோன்றக் கூடியது
3. கப தோஷத்தினால் தோன்றக்கூடியது
4. அக்னி விசர்ப்பம் (நெருப்புப் போன்ற நிறமும், நெருப்புச் சூட்டால் ஏற்படும் எரிச்சல் போன்ற எரிச்சலும் உண்டாவது)
5. கர்தம விசர்ப்பம் (சேற்றின் நிறமுடைய அழுகிய தோலுடையது)
6. கிரந்தி விசர்ப்பம் (முடிச்சு முடிச்சாகத் தோன்றுவது)
7. வாதம், பித்தம், கபம் என்ற மூவகை தோஷங்களும் ஒன்று சேர்ந்து தோன்றக்கூடியது.

ஆக ஏழுவகை அக்கிகள்.

## 8. ஆறு வகை கழிச்சல்கள் (அதிசாரம்)

1. வாத தோஷத்தினால் உண்டாகக் கூடியது.
2. பித்த தோஷத்தினால் ஏற்படக்கூடியது
3. கப தோஷத்தினால் தோன்றக்கூடியது.
4. மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து உண்டாகக் கூடியது.
5. அச்சத்தினால் (பயம்) தோன்றக்கூடியது.
6. வருத்தத்தினால் தோன்றக்கூடியது.

ஆக கழிச்சல் ஆறுவகைப்படும்.

---

1. விசர்ப்பம் – அக்கி போன்ற தோலில் பரவும் நோய்.

## 9. ஆறு வகை உதாவர்த்தங்கள்

1. வாதத்தினால் ஏற்படக்கூடியது.
2. சிறுநீர் கட்டிப்போவதால் தோன்றக்கூடியது.
3. மலக்கட்டினால் தோன்றக் கூடியது.
4. விந்து தடைபடுவதினால் தோன்றக்கூடியது.
5. வாந்தியை அடக்குவதினால் தோன்றக்கூடியது
6. தும்மலை அடக்குவதினால் தோன்றக்கூடியது.

ஆக உதாவர்த்தம் ஆறுவகைப்படும்.

## 10. ஐவகை குன்மங்கள்

1. வாதத்தினால் தோன்றக்கூடியது.
2. பித்தத்தினால் தோன்றக் கூடியது.
3. கபத்தினால் தோன்றக்கூடியது.
4. மூன்று தோஷங்களும் ஒன்றுசேர்ந்து தோன்றக் கூடியது.
5. இரத்தம் உரைந்து போவதினால் தோன்றக்கூடியது.

ஆக குன்மம் ஐவகைப்படும்.

## 11. மண்ணீரலில் தோன்றும் ஐவகை தோஷங்கள்

1. வாத தோஷத்தினால் தோன்றக்கூடியது
2. பித்தத்தினால் தோன்றக்கூடியது
3. கபத்தினால் தோன்றக்கூடியது.
4. மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து தோன்றக் கூடியது.
5. இரத்தம் உரைந்து போவதினால் தோன்றக்கூடியது.

என மண்ணீரலில் தோன்றும் நோய்கள் ஐவகைப்படும்.

## 12. ஐவகை இருமல்கள்

1. வாத தோஷத்தினால் ஏற்படக்கூடியது.
2. பித்த தோஷத்தினால் ஏற்படக்கூடியது
3. கப தோஷத்தினால் ஏற்படக்கூடியது.
4. காயம் படுவதினால் ஏற்படக்கூடியது
5. தாதுக்கள் குறைந்து போவதினால் ஏற்படக்கூடியது.

ஆக இருமல்கள் ஐவகைப்படும்.

## 13. ஐவகை இழுப்புகள்

1. [1]மகா சுவாசம்
2. [2]ஊர்த்துவ சுவாசம்
3. [3]சின்ன சுவாசம்
4. [4]தமக சுவாசம்
5. [5]க்ஷுத்ர சுவாசம்

என இழுப்பு ஐவகைப்படும்.

## 14. ஐவகை விக்கல்கள்

1. மகாவிக்கல்
2. [6]**கம்பீர** விக்கல்
3. [7]**வ்யபேத** விக்கல்
4. [8]**க்ஷுத்ரா** என்ற விக்கல்
5. [9]**அன்னஜா** என்ற விக்கல்

ஆக ஐவகை விக்கல்கள்

## 15. ஐவகை நாவறட்சிகள்

1. வாதத்தினால் ஏற்படக் கூடியது
2. பித்தத்தினால் தோன்றக் கூடியது.
3. ஆமதோஷத்தினால் ஏற்படக்கூடியது.
4. க்ஷய நோயினால் (எலும் (புருக்கி) தோன்றக் கூடியது.
5. [10]**உபசர்கத்தினால்** ஏற்படக் கூடியது.

ஆக நாவறட்சிகள் ஐவகைப்படும்

## 16. ஐவகை வாந்திகள்

1. அருவருக்கத்தக்க பொருட்களைக் காண்பதினால் உண்டாகக் கூடியது.

---

1. மகா சுவாசம் — பெருமூச்சு
2. ஊர்த்துவ சுவாசம் — மேல்மூச்சு.
3. சின்ன சுவாசம் — விட்டுவிட்டு ஏற்படும் மூச்சு
4. தமக சுவாசம் — இழுப்பு (ஆஸ்மா)
5. க்ஷுத்ர சுவாசம் — சாதாரண மூச்சு.
6. **கம்பீர** விக்கல் — அடி வயிற்றில் உண்டாகும் விக்கல்.
7. **வ்யபேத** விக்கல் — ஒரே முறையில் இரண்டு தடவை ஏற்படும் விக்கல்.
8. **க்ஷுத்ரா** என்ற விக்கல் — சாதாரண விக்கல்
9. **அன்னஜா** என்ற விக்கல் — உணவு அருந்தியவுடன் ஏற்படும் விக்கல்.
10. **உபசர்கம்** — கழிவுப் பொருளின் வெளியேற்றத்தாலும், பல நோய்களின் சிக்கலினாலும் ஏற்படும் தாகம்.

2. வாத தோஷத்தினால் தோன்றக் கூடியது.
3. பித்ததோஷத்தினால் தோன்றக்கூடியது.
4. கப தோஷத்தினால் தோன்றக்கூடியது.
5. மூன்று தோஷங்களும் ஒன்றாகச் சேர்ந்து உண்டாகக்கூடியது.
ஆக வாந்திகள் ஐவகைப்படும்.

## 17. ஐவகை சுவையின்மை

1. வாததோஷம்
2. பித்ததோஷம்
3. கப தோஷம்
4. மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து உண்டாவது.
5. உணவில் வெறுப்பு.

எனச் சுவையின்மை ஐவகைப்படும்

## 18. ஐவகை தலை நோய்கள்

1. வாத தோஷத்தினால் தோன்றுவது.
2. பித்த தோஷத்தினால் தோன்றுவது.
3. கப தோஷத்தினால் தோன்றுவது.
4. மூன்று தோஷங்களினாலும் தோன்றுவது
5. கிருமியால் தோன்றுவது.

ஆக தலைநோய்கள் ஐவகைப்படும்.

## 19. ஐவகை இதய நோய்கள்

1. வாத தோஷத்தினால் தோன்றுவது.
2. பித்த தோஷத்தினால் தோன்றுவது.
3. கப தோஷத்தினால் தோன்றுவது.
4. மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து தோற்றுவிப்பது.
5. கிருமியால் தோன்றுவது.

என இதய நோய்கள் ஐவகைப்படும்.

## 20. ஐவகை பாண்டு நோய்கள் (சோகை)

1. வாத தோஷத்தினால் உண்டாவது.
2. பித்த தோஷத்தினால் உண்டாவது.
3. கப தோஷத்தினால் உண்டாவது.
4. மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து உண்டாவது.
5. மண் உண்பதனால் உண்டாவது.

எனப் பாண்டுநோய் ஐவகைப்படும்.

## 21. உன்மாதம் (பைத்தியம்)

1. வாத தோஷத்தினால் ஏற்படுவது.
2. பித்த தோஷத்தினால் ஏற்படுவது.

3. கப தோஷத்தினால் ஏற்படுவது.
4. மூன்று தோஷங்களும் ஒன்று சேருவதனால் ஏற்படுவது.
5. அதிர்ச்சி எதிர்பாராத வெளிக்காரணங்களால் உண்டாவது.
என பைத்தியம் ஐவகைப்படும்.

## 22. நால்வகை காக்கை வலிப்புகள்

1. வாத தோஷத்தினால் தோன்றுவது
2. பித்த தோஷத்தினால் தோன்றுவது.
3. கப தோஷத்தினால் தோன்றுவது
4. மூன்று தோஷங்களும் ஒன்றுசேர்ந்து தோன்றுவது.

ஆக காக்கை வலிப்பு நால்வகைப்படும்.

## 23. நால்வகைக் கண் நோய்கள்

1. வாத தோஷத்தினால் உண்டாவது.
2. பித்த தோஷத்தினால் உண்டாவது.
3. கப தோஷத்தினால் உண்டாவது
4. மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து உண்டாவது.

என கண்நோய் நால்வகைப்படும்.

## 24. நால்வகைக் காது நோய்

1. வாத தோஷத்தினால் உண்டாவது.
2. பித்த தோஷத்தினால் உண்டாவது.
3. கப தோஷத்தினால் உண்டாவது.
4. மூன்று தோஷங்களும் ஒன்றுசேர்ந்து உண்டாவது.

என காதுநோய் நால்வகைப்படும்.

## 25. நான்கு வகை முற்றின ஜலதோஷம் (ப்ரதிச்யாயம்)

1. வாத தோஷத்தினால் உண்டாவது.
2. பித்த தோஷத்தினால் உண்டாவது.
3. கப தோஷத்தினால் உண்டாவது.
4. மூன்று தோஷங்களும் ஒன்றுசேர்ந்து உண்டாவது.

என முற்றின ஜலதோஷம் நால்வகைப்படும்.

## 26. வாயில் தோன்றும் நால்வகை நோய்கள்

1. வாத தோஷத்தினால் ஏற்படக்கூடியவை.
2. பித்த தோஷத்தினால் ஏற்படக்கூடியவை.

3. கப தோஷத்தினால் ஏற்படக்கூடியவை.
4. மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து ஏற்படக்கூடியவை.

என வாயில் தோன்றும் நோய்கள் நால்வகைப்படும்.

## 27. நால்வகை கிரஹணி நோய்கள்

1. வாத தோஷத்தினால் வரக்கூடியவை.
2. பித்த தோஷத்தினால் வரக்கூடியவை
3. கப தோஷத்தினால் வரக்கூடியவை
4. முத்தோஷக் கூட்டால் வரக்கூடியவை

என கிரஹணி நால்வகைப்படும்.

## 28. நால்வகை மூர்ச்சைகள் (மயக்கம்)

1. வாத தோஷத்தினால் உண்டானவை.
2. பித்த தோஷத்தினால் உண்டானவை.
3. கப தோஷத்தினால் உண்டானவை.
4. முத்தோஷக் கூட்டால் உண்டானவை.

என மூர்ச்சைகள் நால்வகைப்படும்.

## 29. நால்வகை மதங்கள் (வெறி)

1. வாத தோஷத்தினால் தோன்றியவை.
2. பித்த தோஷத்தினால் தோன்றியவை.
3. கப தோஷத்தினால் தோன்றியவை.
4. முத்தோஷக் கூட்டால் தோன்றியவை.

என மதம் நால்வகைப்படும்.

## 30. நால்வகை உடல் உருக்கும் நோய் (சோஷம்)

1 அளவுமீறித் தன் வலிவுக்கு அப்பாற்பட்ட செயலில் ஈடுபடுவதனால் தோன்றுபவை.

2 சிறுநீர், மலம் போன்றவற்றின் வேகத்தை அடக்குவதனால் தோன்றுபவை.

3 தாதுக்களின் குறைபாடினால் ஏற்படக்கூடியவை.

4 தகாத காலங்களில் தவறான உணவு உண்பதனால் தோன்றுபவை.

என இவை நான்கும் உடல்உருக்கி நோய்க்குக் காரணங்களாகும்.

## 31. நால்வகை அலித்தன்மை

1 விதையில் அடிபடுவது
2 ஆண்குறி வலிவு இழந்து விடுவது
3 முதுமை
4 விந்து குறைபாடு

என நான்கும் அலித்தன்மை ஏற்படக் காரணங்களாகின்றன.

## 32. மூவகை வீக்கம்

1 வாத தோஷத்தினால் ஏற்படுவது.
2 பித்த தோஷத்தினால் ஏற்படுவது.
3 கப தோஷத்தினால் ஏற்படுவது.

என வீக்கம் மூவகைப்படும்.

## 33. மூவகை வெண்குஷ்டம்.

1 இரத்த நிறம்,
2 செம்பு நிறம்,
3 வெண் நிறம்,

என வெண்குஷ்டம் மூவகைப்படும்

## 34. மூவகை இரத்த பித்தம்.

1. மேல்நோக்கி வாய், மூக்கு, காது, கண் இவற்றின் வழியாக இரத்தம் வெளியில் வருவது.
2. கீழ்நோக்கி ஆண்குறி, பெண்குறி, ஆசனவாய் இவற்றின் வழியாக இரத்தம் வெளிவருவது.
3. வாய் ஆசனவாய் இரண்டின் வழியாகவும், இரத்தம் வெளி வருவது.

என இரத்தபித்தம் மூவகைப்படும்.

## 35. இருவகைக் காய்ச்சல்

1. ஒன்று உஷ்ணத்தினால் ஏற்படக்கூடியது. இது குளிர்ச்சியை விரும்பக்கூடியது.
2. மற்றொன்று குளிர்ச்சியினால் ஏற்படக்கூடியது. இது உஷ்ணத்தை விரும்பக்கூடியது.

எனக் காய்ச்சல் இருவகைப்படும்

## 36. இருவகை காயங்கள் (இரணம்)

1. ஒன்று தோஷங்கள் சீற்றம் பெற்றுத் தோன்றக்கூடியது.
2. மற்றொன்று வெளிக் காரணங்களால் தோன்றக்கூடியது.

எனக் காயங்கள் இருவகைப்படும்.

### 37. இருவகை ஆயாமங்கள் (வளையச் செய்தல்)

1. உடலை முன்புறமாக வளையச் செய்வது ஒருவகை.
2. உடலைப் பின்புறமாக வளையச் செய்வது மற்றொருவகை.

என ஆயாமங்கள் இருவகைப்படும்.

### 38. இருவகைக் கிருத்ரஸி (தாங்கித் தாங்கி நடக்கும் வாத தோஷம்)

1. வாத தோஷத்தினால் உண்டாவது ஒன்று.
2. வாதம், கபம் இரண்டினாலும் உண்டாவது மற்றொன்று.

என கிருத்ரஸி இருவகைப்படும்.

### 39. இருவகைக் காமாலை

1. வயிற்றின் உள் உறுப்புக்களில் தோன்றுவது ஒருவகை.
2. இரத்தம், மாமிசம், தோல் போன்றவைகளில் ஊடுருவிப் பரவித் தோன்றுபவை மற்றொன்று.

என காமாலை இருவகைப்படும்.

### 40. இருவித ஆமம் (ஆசீரணத்தால் தோன்றுபவை)

1. அலசகம்
2. விஷூசிகா (காலரா)

இவை இரண்டும் ஆமதோஷத்தினால் ஏற்படக்கூடியவை.

### 41. இருவித வாத இரத்தம்

1. கம்பீரம் (உடலில் ஆழ்ந்து ஊடுருவி வரக்கூடியது)
2. உத்தானம் (மேலாக வரக்கூடியது)

இந்த இருவகை வாதங்களும், வாதமும் இரத்தமும் ஒன்று சேர்ந்து ஏற்படக்கூடியவை.

### 42. இருவகை மூல நோய்

1. இரத்தக்கசிவு அற்ற மூல நோய்.
2. இரத்தக் கசிவுள்ள மூலநோய்.

என மூலநோய் இருவகைப்படும்.

### 43. ஊருஸ்தம்பம் (தொடை தூண்போல் பருத்து விடுவது)

தொடைகள் இரண்டும் தூண்போல் பருத்து அசையாமல் இருப்பது. ஆமதோஷ ரசத்தினால் மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து ஒரே சமயத்தில் சீற்றலைப் பெறுவதால் உண்டாகும் நோய் இது ஒன்றேயாகும்.

## 44. சன்யாசம் (மதி இழப்பு)

மூன்று தோஷங்களும் ஒன்றுசேர்ந்து ஒரே சமயத்தில் சீற்றலைப் பெற்று, மனம், உடல் இவற்றை இருப்பிடமாகக்கொண்டு இந்நோய் உண்டாகிறது.

## 45. மகாகதம்

ஒரு பொருளை உள்ளபடியே அறிந்துகொள்ளும் தன்மையில்லாத நிலைக்கு மகாகதம் எனப்பெயர். இது ஒரே வகையானது.

## 46. இருபது வகை கிருமிகள்

1. யூகா (பேன்)
2. பிபீலிகா (சீலைப்பேன்)

இவ்விரண்டும் உடலின்மேல் உறுப்புக்களில் உள்ள மலத்தில் தோன்றுபவை.

(தலையில் உள்ள ரோமங்களை அழிக்கக்கூடியவை)

1. கேசாதம்
2. லோமாதம்
3. லோமத்வீபம்
4. ஸௌரஸம்,
5. ஔதும்பரம்,
6. ஜந்து மாதரம்

இந்த ஆறுவகை கிருமிகளும், இரத்தத்தில் தோன்றக் கூடியவை.

1. அந்தராதம்
2. உதராவேஷ்டம்
3. ஹ்ருதயாதம்
4. சுரு
5. தர்ப்ப புஷ்பம்
6. ஸௌகந்திகம்
7. மகாகுதம்

இந்த ஏழுவகைக் கிருமிகள் கபத்தினால் உண்டாகக்கூடியவை.

1. கருகேருகம்
2. மகேருகம்
3. லேலிஹம்
4. ஸசூலகம்
5. ஸௌஸுராதம்

என இவ்வைந்து கிருமிகளும், மலத்தில் தோன்றக் கூடியவை. ஆக கிருமி வகைகள் இருபது வகைப்படும்.

## 47. இருபது வகை நீரிழிவு நோய்கள்

1. உதகமேஹம் — (நீர்போல் சிறுநீர் இறங்குதல்)
2. இக்ஷுமேஹம் — (கரும்புச்சாறு போன்ற சிறுநீர் போதல்)
3. ஸாந்த்ரமேஹம் — (பிசுபிசுப்பாக சிறுநீர் இறங்குதல்)
4. ஸாந்த்ரப்ரஸாத மேஹம் — (பிசுபிசுப்பாகவும், தெளிவாகவும் சிறு நீர் இறங்குதல்)
5. சுக்லமேஹம் — (நல்ல வெளுப்பாகச் சிறுநீர் இறங்குதல்)
6. சுக்ரமேஹம் — (விந்துவுடன்சேர்ந்து சிறுநீர் இறங்குதல்
7. சீதமேஹம் — (மிகக் குளுமையாகச் சிறுநீர் இறங்குதல்)
8. சனைர்மேஹம் — (சொட்டுச் சொட்டாகச் சிறுநீர் இறங்குதல்)
9. ஸிகதாமேஹம் — (மணல் கலந்தாற்போல் சிறுநீர் இறங்குதல்)
10. லாலாமேஹம் — (நூல்போல் சிறுநீர் இறங்குதல்)

— இவை பத்தும் கப தோஷத்தினால் தோன்றும் நீரிழிவுகள்—

1. க்ஷாரமேஹம் — (க்ஷாரப் பொருட்கள் கலந்த நீர் போல் சிறுநீர் இறங்குதல்)
2. காலமேஹம் — (கருநிறமாகச் சிறுநீர் இறங்குதல்)
3. நீலமேஹம் — (நீலநிறமாகச் சிறுநீர் இறங்குதல்)
4. லோஹித மேஹம் — (இரத்த நிறமாக சிறுநீர் இறங்குதல்)
5. மஞ்ஜிஷ்டாமேஹம்—(மஞ்சேஷ்டி எனும் மூலிகையின் நிறம் போல் சிறுநீர் இறங்குதல்)
6. ஹரித்ராமேஹம் — (மஞ்சள் நிறம்போல் சிறுநீர் இறங்குதல்)

இவை ஆறும் பித்த தோஷத்தினால் தோன்றக்கூடிய நீரிழிவு நோய்கள்.

1. வஸாமேஹம் — (வஸை போன்று சிறுநீர் இறங்குதல்)
2. மஜ்ஜாமேஹம் — (மஜ்ஜை போன்று சிறுநீர் இறங்குதல்)
3. ஹஸ்திமேஹம் — (யானையின் சிறுநீர் போன்று சிறுநீர் கழிதல்)
4. மதுமேஹம் — (சர்க்கரை நீரழிவு)

இவை நான்கும் வாத தோஷத்தினால் உண்டான நீரழிவுகள் ஆக இருபது வகை நீரிழிவுகள் கூறப்பட்டுள்ளன.

## 48. பெண் குறியில் தோன்றும் இருபது வகை நோய்கள்

1. வாத தோஷத்தினால் உண்டாகக் கூடியது.
2. பித்த தோஷத்தினால் உண்டாகக்கூடியது.

3. கப தோஷத்தினால் உண்டாகக் கூடியது.
4. முத்தோஷக் கூட்டால் உண்டாகக்கூடியது.

வாதம், பித்தம், கபம் என இம்மூன்று தோஷங்கள், ரசம், இரத்தம் போன்ற தூஷ்யங்கள் இவற்றின் சேர்க்கை, இயற்கை இவற்றால் தோன்றக்கூடிய பதினாறுவகைப் பெண்குறி நோய்கள் கீழே விளக்கப்படுகின்றன.

1. இரத்த யோனி — (எரிச்சலுடன் அதிக இரத்தப் பெருக்கு உள்ளது)
2. அரஜஸ்கா — (மாதவிடாய் போக்கு அற்றது)
3. அசரணா — (புணர்ச்சித் தொடக்கத்தில் உணர்ச்சி உண்டாகி மறைதல்)
4. அதிசரணா — (நீண்டநேரம் புணர்ச்சியாலும் உணர்ச்சி இல்லாமை)
5. பிராக்சரணா — புருஷனுக்கு முன்பே உணர்ச்சி அடைவது
6. உபப்லுதா — எப்போதும் வேதனை உடையவள்
7. பரிப்லுதா — புணர்ச்சியின்போது வேதனை உடையது)
8. உதாவர்த்தினீ — மாதவிடாயின்போது உதிரம் வலியுடனும் நுரையுடனும் தோன்றுதல்)
9. கர்சினீ — கடினமான முளை உடையது
10. புத்ரக்னீ — ஒவ்வொரு முறையிலும் கருச்சிதைவு உண்டாகுதல்)
11. அந்தர்முகீ — உள்ளடங்கி நன்கு வளர்ச்சியடையாத பெண்குறி உடையது)
12. ஸூசீமுகி — ஊசிமுனை போன்றது
13. சுஷ்கா — வறட்சியானது
14. வாமினீ — உட்செல்லும் விந்து வெளிவருதல்
15. ஷண்டயோனி — கருத்தரிக்காதது
16. மஹாயோனி — மிகப்பெரியது, விரிந்து பிடிப்பற்றது.

ஆக பெண்குறியில் தோன்றும் இருபதுநோய்கள் விளக்கப்பட்டன. மேற்கண்ட நோய்கள் யாவும் முறைப்படி கூறப்பட்டுள்ளன. 4

நோய்கள் யாவும் வாதம், பித்தம், கபம் இம்மூன்று தோஷங்களினால்தான் ஏற்படுகின்றன. வேறு காரணம் ஒன்றுமில்லை. பறவை நாள் முழுவதும் பல இடங்களில் சுற்றித் திரிந்து பல இடங்களைக் கடந்து சென்றாலும், தன் நிழலை அவை ஒரு நாளும் தாண்டுவதில்லை. அதேபோல் நோய்கள் அந்தந்த்

தாதுவின் கோளாறுகளால் ஏற்படும், வாதம், பித்தம், கபம் இந்த மூன்றும் தோஷங்களை மீறுவதில்லை.

(அதாவது எல்லா நோய்களுக்கும் இந்த மூன்று தோஷங்கள் தான் காரணம். வேறு ஒன்றுமில்லை என்பது கருத்து.)

வாதம், பித்தம், கபம் இவற்றை இடம், இலக்கணம், காரணம் இவற்றால் கண்டுகொண்டு, நோய்கள் யாவும்தோஷங்களால் ஏற்பட்டு இருந்தபோதிலும் அந்த தோஷங்களின் பெயர்களையே குறிப்பிட்டிருக்கிறார்கள் அறிவாளிகள். 5

உடலில் தோன்றுகின்ற பிணிகள் யாவும் வாதம், பித்தம், கபம் இம்மூன்று தாதுக்களின் கோளாறினால் உண்டாகின்றன. அந்நோய்களுக்கு, வாதம், பித்தம், கபம் இம்மூன்றைத் தவிர்த்து வேறு காரணம் கிடையாது.

ஆனால் எதிர்பாராத வகையில் உண்டாகின்ற நோய்களோ வென்றால் (ஆகந்துகம்) அவற்றைக்காட்டிலும் மாறுபட்டவை. 6

எதிர்பாராமல் வரும் நோய்கள், தோஷங்களால் தோன்றும் நோய்களுடன் தொடர்பு கொள்கின்றன. அதேபோல் தோஷங்களால் வளர்ச்சி பெற்ற நோய்கள் எதிர்பாராத காரணங்களால் தோன்றும் நோய்களுடன் தொடர்பு கொள்கின்றன.

ஆகையால் முதலில் நோய் எதனால் தோன்றியது? பிறகு அது எத்துடன் தொடர்பு கொண்டுள்ளது என்பதை நன்கு ஆராய்ந்து பின் சிகிச்சையைத் தொடங்க வேண்டும். 7

**முடிவுரை**

இருபது இருபதாக மூவகை நோய்கள்.
மூன்று மூன்றாக மூவகை நோய்கள்.
இரண்டு இரண்டாக எண்வகை நோய்கள்.
நான்கு நான்காக பத்துவகை நோய்கள்.
ஐந்து ஐந்தாக பன்னிரண்டு வகை நோய்கள்.
எட்டு எட்டாக நான்கு வகை நோய்கள்.
ஆறு ஆறாக இரண்டுவகை நோய்கள்.
ஏழு ஏழாக மூவகை நோய்கள்.

இவ்வாறு அஷ்டோதரீயம் எனும் இவ்வத்தியாயத்தில் நோய்கள் பிரிக்கப்பட்டுள்ளன. 8—9

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரக மாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரக ஸம்ஹிதையில்
ஸூத்ரஸ்தானத்தில் அஷ்டோதரீயம் எனும்
பத்தொன்பதாம் அத்தியாயம்
முற்றும்.

## இருபதாம் அத்தியாயம்

## *மகாரோகாத்தியாயம்

ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி மகாரோகாத்தியாயத்தை விளக்கிக் கூறுவோம். (1–2)

### 1. நோயின் வகைகள்

வாதம், பித்தம், கபம், வெளிக்காரணம் (ஆகந்துகம்) ஆகியவற்றால் உண்டாகும் நோய்கள் நான்கு வகைப்படும். நோய் என்னும் பொதுத்தன்மையைக் கொண்டு காணும்போது நான்கு வகை நோய்களும் ஒன்றே என்று உணரப்படும்.

இந்நோய்கள் உட்காரணங்களால் தோன்றியவை (நிஜம்), வெளிக்காரணங்களால் தோன்றியவை (ஆகந்துகம்) என்னும் வேறுபாடுகளினால் இரண்டு வகைப்படும். இந்நோய்களின்தோற்றம் :இரண்டு. அவை உடல், மனம் என்பன. அவை வாதம் போன்று நெருங்கியகாரணம், தூஷ்யங்களாகியரஸங்கள், தோன்றுமிடம், இலக்கணங்கள், வெளிக்காரணங்கள் ஆகிய வேறுபாடுகளினால் எண்ணில்லாதன. அத்தன்மையைப் பொறுத்து இந்நோய்களும் எண்ணிலடங்காதவையாகின்றன. (3–4)

### 2. வெளிக்காரண நோய்களின் காரணம்

ஆகந்துக நோய்களின் காரணங்கள் பின்வருமாறு:- நகம், பல் விழுதல், பகைவர்களின் செய்வினை, ஏவல், பில்லி, சூனியம் முதலியன. பெரியோர்களின் சாபம், பிசாசு பேய் பிடித்தல், அடிபடுதல், குத்துதல், கட்டுப்போடுதல், சுற்றிக்கொள்ளுதல், துன்புறுத்தல், கயிறுகளால் கட்டப்படுதல், எரித்தல், கத்தி முதலியவற்றால் தாக்குதல், இடிவிழுதல், முதலியன.

### 3. உட்காரண நோய்க்குக் காரணம்

நிஜம் என்னும் நோய்க்குக்காரணம் வாத, பித்த, கபங்களின் இயல்பு மாறிய நிலையே யாகும்.

---

* மகாரோகாத்தியாயம் — பொதுவாக மூவகை தோஷங்களால் உண்டாகும் நோய்களைத் தவிர எஞ்சியுள்ள வேறு சில நோய்களையும் பெரிய நோய்கள் என விளக்குவதால் இவ்வாறு பெயர் வந்தது.

ஆகந்துகம், நிஜம் ஆகிய இரண்டு நோய்களுக்குப் பொதுவான காரணம் பின்வருமாறு (1) அஸாத்ம்ய இந்திரியார்த்த ஸம்யோகம் (பொருந்தாப் புலன்கள் பொருட்கள் தொடர்பு), (2) ப்ரஜ்ஞாபராதம் (அறிவு மயக்கம்) (3) பரிணாமம் (காலமாற்றம்) என்பன. (5)

இந்த நான்கு வகைான நோய்களும் வளர்ச்சியடைந்து ஒவ்வொன்றின் கூறுகளையும் பெறுகின்றன. ஒன்றோடொன்று சேர்ந்திருந்தும் தனித்தன்மையை விடாததால் எந்த ஐயப்பாட்டிற்கும் இடம் கொடுப்பதில்லை. (6)

## 4. நிஜ, ஆகந்துக நோய்களின் வேறுபாடு

ஆகந்துக நோய் முதலில் வலியுடன் வெளிப்பட்டுப் பிறகு வாத, பித்த, கப தோஷங்களின் முரணான மாற்றங்கள் உண்டாகின்றன. நிஜமென்னும் நோயில் வாத பித்த கப தோஷங்கள் முரணான மாற்றங்களின் நிலையை அடைந்து, பிறகு நோய் தோன்றுகின்றது. பிறகு வலியும் உண்டாகிறது. அந்த வாத பித்த கபதோஷங்களின் இருப்பிடங்களை இனி உரைப்போம் (7)

## 5. உடலில் மூவகை தோஷங்களின் இருப்பிடம்

சிறுநீர்ப்பை, ஆசனவாய், இடுப்பு, கால்கள், எலும்புகள், மலப்பை என் இவை வாதத்தின் இருப்பிடங்கள். அவற்றிலும் மலப்பை வாதத்தின் சிறப்பிடமாகும்.

வியர்வை, ரஸம், நிணநீர், இரைப்பை ஆகியவை பித்தத்தின் இருப்பிடங்கள். இவற்றுள் இரைப்பை பித்தத்தின் சிறப்பிடமாகும். (இங்கு இரைப்பையின் கீழ்ப்பகுதி பித்த இருப்பிடமாகும்).

மார்பு, தலை, கழுத்து, மூட்டுகள், இரைப்பையின்மேல்பகுதி, கொழுப்பு ஆகியவை கபத்தின் இருப்பிடங்கள். அவற்றுள் மார்பு கபத்தின் சிறப்பிடம் ஆகும்.

(8)

---

(1) அஸாத்ம்ய-இந்த்ரியார்த்தஸம்யோகம் } புலன்களின் பொருத்தமில்லாப் புலன் பொருள் தொடர்பு.

(2) ப்ரஜ்ஞாபராதம் — அறிவு மயக்கத்தால் ஏற்படும்

(3) பரிணாமம் — குற்றம் கால மாற்றம்.

### 6. சீற்றமடைந்த தோஷங்களினால் தோன்றும் நோய்கள்

உடல் முழுவதிலும் செல்லும் இந்த தோஷங்கள் சீற்றமுற்றும். சீற்றமடையாமலும் நன்மை தீமைகளைச் செய்கின்றன. இயல்பாக உள்ள தோஷங்கள் நன்மைகளையும், உடலில் வளர்ச்சி, வலிமை, நிறம், தெளிவு முதலியவற்றையும் உண்டாக்குகின்றன. மாற்றமடைந்த அவை பல தீமைகளைச் செய்கின்றன. (9)

சீற்றமுற்ற வாத பித்த கபங்களால், தனியாகவோ ஒன்று சேர்ந்தோ பொதுவாகத் தோன்றிய நோய்கள் ஸாமான்யஜம் என்றும், பிறதோஷம் கலப்பின்றி சீற்றமுற்ற வாத பித்த கபங்களின் சேர்க்கையால் தோன்றிய நோய்கள் நாநாத்மஜம் என்றும் இவை இரண்டு வகைப்படும். ஸாமான்யஜம் எனும் நோய்பற்றி அஷ்டோதரீயம் எனும் அத்தியாயத்தில் விளக்கினோம். இரண்டாவதான நாநாத்மஜ நோயைப்பற்றி இங்கு விளக்குவோம். வாத மாற்றத்தால் ஏற்படும் நோய்கள் எண்பது, பித்தத்தால் ஏற்படுபவை நாற்பது. கபத்தால் ஏற்படுபவை இருபது. (10)

### 7. வாதத்தினால் தோன்றும் நோய்கள்

1. நகம் பிளத்தல்
2. உள்ளங்கால் உள்ளங்கை வெடித்தல்
3. கால்களில் குத்தல் வலி
4. கால்களில் தடுமாற்றம்
5. கால்கள் மரத்துப் போதல்
6. கணுக்கால் பிடிப்பு, கணுக்கால் முரடுகட்டுதல்
7. ஆடுசதையில் இழுப்பு
8. நரம்புக் குடைச்சல்
9. முழங்காலில் வலி
10. மூட்டு நழுவுதல்
11. தொடை பருத்துப்போய் வலியுடன் அசைவற்றிருத்தல்
12. தொடையில் தளர்ச்சி
13. கால் முடமாதல்
14. மலக்குடல் வெளிவருதல்
15. ஆசனவாய்க் கடுப்பு
16. விதை மேலே இழுத்துக் கொளல்
17. ஆண்குறி அசையாமை
18. தொடை இடுக்குகளில் வீக்கம்
19. பின்பாகத்தில் பிளப்பது போன்ற வலி
20. மலம் அதிகம் இளகுதல்
21. வாதம் மேல்நோக்கிச்செல்லுதல்
22. தாங்கித் தாங்கி நடத்தல்
23. முதுகெலும்பு வளைதல்
24. உடல் சுருங்குதல்
25. முள்ளந்தண்டில் பிடிப்பு
26. முதுகுப் பிடிப்பு
27. விலாப் பிடிப்பு
28. வயிற்றைச் சுருட்டி இழுத்தல்
29. இதயம் இயங்காமை
30. இதயம் படபடத்தல்

31. இதயம் உராய்வது போன்ற வலி
32. மாரடைப்பு
33. மார்பில் குத்தல் வலி
34. கைகள் உலர்ந்து போதல்
35. கழுத்தில் இருபக்க நரம்புகள் அசையாமை
36. கழுத்து அசையாமை
37. கழுத்தைப் பிளப்பது போன்ற வலி
38. தாடையைப் பிளப்பது போன்ற வலி
39. உதட்டைப் பிளப்பது போன்ற வலி
40. தாடை அசைவற்றிருத்தல்
41. பற்களைப் பிளப்பது போன்ற வலி
42. பல் ஆடுதல்
43. பேசமுடியாமை
44. குரல் அடைப்பு
45. பிதற்றல்
46. வாயில் துவர்ப்புச்சுவை
47. வாய் உலர்ந்துபோதல்
48. சுவையறியாமை
49. நுகர்புலன் நுகராமை
50. காதுகளில் வலி
51. காதுகளில் இறைச்சல்
52. பேரொலி மட்டும் கேட்டல்
53. காது செவிடாதல்
54. இமை அசையாமை
55. இமை சுருங்குதல்
56. கண் மறைப்பு
57. கண்களில் வலி
58. கண்களில் பிடுங்குவது போன்ற வலி
59. புருவம் உயருதல்
60. பொட்டில் பிளப்பது போன்ற வலி
61. நெற்றி பிளப்பதுபோன்ற வலி
62. தலைவலி
63. தலையில் மயிர்க்கால்களில் வெடிப்பு
64. முகவாய்கோணிப்போதல்
65. ஒருறுப்பு வாதம்
66. உடல் வாதம்
67. நடுக்குவாதம்
68. உடல் விரைத்தல்
69. களைப்பு
70. மயக்கம்
71. நடுக்கம்
72. கொட்டாவி
73. அயர்வு
74. ஆர்வமின்மை
75. வறட்சி
76. சொரசொரப்பு
77. உடல் கருமை, செந்நிறமாதல்
78. உறக்கமின்மை
79. மனஅமைதி இழத்தல்
80. கடினத்தன்மை என்பன

வாத நோய்கள் கணக்கிலடங்காதவை. இங்கு அப்பலவகை நோய்களில் இன்றியமையாத நோய்களையே கூறியுள்ளோம். இந்த வாத நோய்களிலும், கூறப்படாத வாத நோய்களிலும் வாதத்தின் இயல்பானதும் மாற்றமடைந்ததுமான நிலையில் உண்டாகும் செயல், இலக்கணம், கூறுகள் ஆகியவற்றை நன்றாக ஆராய்ந்து ஐயம் அகற்றி அறிஞனான மருத்துவன் வாத நோய்களை அறிய முற்பட வேண்டும். மாற்றமடைந்த வாயு தன்னிலையில் எந்த இடத்தில் உள்ளதோ அங்கு பல நோய்களைத் தோற்றுவிக்கும். ஆகையால் நல்ல மருத்துவன் வாயுவின் இயல்புகளை, நடைமுறைகளை நன்கு அறிய முயல வேண்டும்.

### 8. வாயுவின் இலக்கணங்கள்

வறட்சி, இலேசான தன்மை, தெளிவு, குளிர்ச்சி, அசையும் தன்மை, நுண்மை இவை வாதத்தின் பண்புகளாகும். இப்பண்புகளையொத்தே வாயுவின் செயல்களும் அமையும். உடலில்மாற்றமடைந்த வாயு எந்த உறுப்புகளில் செல்கிறதோ அந்த உறுப்புகளில் வாயுவின் செயலும் இலக்கணமும் வெளிப்படும். டரபரப் புணர்ச்சி, நழுவுதல், விரிதல், தடைப்படுதல், பிரித்தல், வலிவின்மை, மகிழ்ச்சி, நீர்வேட்கை, நடுக்கம், வட்டஅசைவு, அசைவு, குத்தல்வலி, வெட்டுதல் போன்ற வலி, செயலாற்றல் முதலியன. சொரசொரப்பு, கடினத்தன்மை, ஈரப்பசையின்மை, நுண்மை, சிவப்பு, துவர்ப்புச்சுவை, வாயில் சுவை அறியாமை, வாய் உலர்தல், வலி, தூக்கம், மரத்துப்போதல், அசைவற்றநிலை, சுருக்கம், இவை வாயுவின் செயல்கள். இவை வாத நோயின் இலக்சணம் என்று மருத்துவர் அறியவேண்டும். *(12)*

### 9. வாத நோய்களுக்கான சிகிச்சை முறை

இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, எண்ணெய்ப்பசை, உஷ்ணவீர்யமுள்ள பொருட்கள் வழியாக வாதத்திற்குச் சிகிச்சை செய்யவேண்டும். ஒற்றடம், எண்ணெய்க்குடி, வஸ்தி சிகிச்சை, மூக்கு வழியாகச் செய்யும் மருத்துவம், எண்ணெய்ப்பசை, உஷ்ணவீர்யமுள்ள பொருட்களை உணவாக அளித்தல், எண்ணெய்க்குளி, பற்று போடுதல், மருந்து பொருள்களாலான கஷாயங்களைக் கொண்டும், இவற்றுடன் நனைத்தல், அளவு நேரம், இவற்றையும் நன்கு சிந்தித்து வாயுவிற்குச் சிகிச்சை செய்யலாம். எல்லா சிகிச்சைகளிலும் எண்ணெய் வஸ்தி, கஷாய வஸ்திகள் கட்டாயம் செய்ய வேண்டியதாகக் கருதப்படுகின்றன. இந்த வஸ்தி சிகிச்சைகளால் மலப்பையில் உள்ள மாற்றமடைந்த வாயு வேருடன் அழிகிறது. வாயு வேரறுக்கப்பட்டவுடன் வாதநோய்கள் தாமா

கவே தணிகின்றன. மரத்தின் வேர் அறுபட்டவுடன் கிளைகள், இலைகள், மலர்கள் முதலியவை அழிந்து போகின்றன. அதுபோல் மாற்றமடைந்த வாயு வேருடன் களையப்பட்டவுடன் அதனால் உண்டான வாத நோய்கள் தாமாகவே அழிகின்றன. *(13)*

### 10. நாற்பது வகையான பித்த நோய்கள்

பித்த நோய்கள் நாற்பது வகைப்படும். அவற்றை இனி விளக்குவோம்.

1. நெருப்பின் அருகில் உள்ளது போன்ற எரிச்சல்
2. வியர்வை தோன்றாமல் உஷ்ணம் தோன்றுதல்
3. காட்டுத்தீ போன்ற எரிச்சல்
4. உடலுறுப்புகள்ில் எரிச்சல்
5. முகம், உதடு, அண்ணம் முதலியவற்றில் எரிச்சல்
6. உடலின் உள்ளே எரிச்சல்
7. தோல் எரிச்சல்
8. தோள்களில் எரிச்சல்
9. புகைந்த ஏப்பம்
10. புளிப்பு ஏப்பம்
11. கடும் சூடு
12. அதிகமாக வியர்த்தல்
13. உடலில் கெட்ட நாற்றம்
14. புலன்களின் வலிமை குறைதல்
15. இரத்தம் கடுமையாகி நீத்துப்போதல்
16. மாமிசம் கறுத்துக் கெட்ட நாற்றம் வீசுதல்
17. தோல்—மாமிசம் பிளத்தல்
18. தோலின் உள்வெளிப்புறங்களில் வெடிப்பு
19. இரத்தக் கட்டி
20. இரத்தக் கொப்புளம்
21. தோலில் வட்டமான தடிப்பு
22. இரத்த பித்தம்
23. உடலும் மலமும் பலவகையாக மாறுதல்
24. உடல் மஞ்சளாதல்
25. இரத்தம் நீலநிறமாதல்
26. அக்குள், தோள் விலாக்களில் கொப்புளம்
27. மஞ்சள் காமாலை
28. வாயில் கைப்புச்சுவை
29. வாயில் இரத்த மணம்
30. வாயில் கெட்டநாற்றம்
31. நீர் வேட்கை மிகுதல்
32. உணவில் திருப்தி இன்மை
33. வாய்ப்புண்
34. தொண்டைப்புண்
35. கண்நோய்
36. ஆஸநவாயில் புண்
37. ஆண்குறியில் புண்
38. கண் இருண்டுபோதல்
39. இரத்தப் பெருக்கு
40. கண், சிறுநீர், மலம் பசுமை கலந்த மஞ்சள் நிறமாதல் என்பன.

குணக்கூற்ற பித்த நோய்களில் முக்கியமானவை இங்கு கூறப் பட்டன. (14)

இங்கு கூறாதவை உள்பட எல்லா பித்த நோய்களின் இலக் கணம், கூறுகள், மாற்றங்கள், செயல்கள் ஆகியவற்றை நன்கு ஆராய்ந்து அறிஞர்களாகிய மருத்துவர்கள் ஐயப்பாட்டுக்கு இட மின்றி நோய்கள் பித்தத்தினால் தோன்றியவை என அறி வார்கள்.

உஷ்ண வீர்யம், விறுவிறுப்பு, இலேசான தன்மை, சிறிதளவு எண்ணெய்ப்பசை, வெள்ளை, சிகப்பு நிறங்கள்; தவிர வேறு நிறங் கள் உடைமை, கெட்ட நாற்றம், கார்ப்பு, புளிப்புச்சுவைகள் என இவை பித்தத்தின் இயல்பாகிய பண்புகள். இதைப் போன்ற இதன் செயல்களும் உண்டாகின்றன. பித்தம் சீற்றமடைந்து உறுப்புகளில் சென்று அங்கு எரிச்சல், சூடு, பாகம், வியர்வை, ஈரப்பசை, அரிப்பு, பெருக்கு, சிவப்பு, நல்நிறம், சுவை, மணம், இவற்றைத் தோற்றுவிக்கும். இவை பித்தத்தின் செயல்களாகும். இவற்றைக் கொண்டு அறிவாளியாகிய மருத்துவன் பித்த நோயைப் புரிந்துகொள்ளலாம். 15

பித்த நோய்க்கு இனிமை, கைப்பு, துவர்ப்பு, குளிர்ச்சி ஆகிய பொருள்கள் மூலமாகச் செய்யும் சிகிச்சை பயன்தரும். பித்தத் தைத் தணிக்க எண்ணெய் குடியாம் பேதிக்கு மருந்துகொடுத்தல், மேற்பூச்சு, மருந்துப் பொருட்களைக் கஷாயமாக்கி ஊற்றுதல், எண்ணெய் பூசி பிடித்துவிடுதல், மருந்துப் பொருள்கள் கொண்ட தொட்டியில் அமரவைத்தல் போன்ற சிகிச்சையை, மருத்துவன், அளவு, நேரம், இவற்றைச் சிந்தித்துச் செயல்பட வேண்டும். பித்தத்தைப் போக்கும் சிகிச்சையில் பேதிக்கு மருந்து அளித்தல் அனைத்திலும் சிறந்தது என்று கருதுகின்றனர்.

அந்த மருந்து இரைப்பையில் நுழைந்து கேடடைந்த பித் தத்தை அடியோடு வேரறுத்துவிடுகிறது. அதனால் உடலில் தோன்றிய பித்தநோய், நெருப்பு அகற்றப்பட்டவுடன் நெருப்பு இருந்த இடம் குளிர்ச்சி அடைவதுபோல், பித்த நோய்கள் தணிந்துவிடுகின்றன. 16

இனி கபநோய்கள் இருபதையும் விளக்குவோம்.

1. எப்போதும் சாப்பிட்டது போன்ற உணர்ச்சி
2. மயக்கத்துடன் கூடிய சோம்பல்
3. மிக்க உறக்கம்
4. உடல் திமிர்தல்

5. உடல் பருத்து பளுவாதல்
6. செயலில் ஆர்வமின்மை
7. வாயில் இனிப்புச்சுவை
8. உமிழ்நீர் சுரத்தல்
9. அடிக்கடி கபம் வெளியாதல்
10. மலம் அதிகமாதல்
11. கபம் அதிகமாதல்
12. இதயத்தில் பூசியது போன்ற அடைப்பு
13. தொண்டையில் கபம் சுற்றுதல்
14. நரம்பு இரத்தக்குழாய்களில் நிறைந்திருப்பது போன்ற நிலை
15. கலகண்டம் எனும் நோய்
16. உடல் பருத்தல்
17. உடல் குளிர்ச்சி
18. மார்பில் அரிப்பு குத்தலுடன் வீக்கம்.
19. உடல் வெளுத்தல்.
20. கண், சிறுநீர், மலம் வெண்மை நிறமாதல் என்பன. (17)

எண்ணிலடங்காத கபநோய்களில் இன்றியமையாத இருபது வகைகள் மட்டும் இங்கு கூறப்பட்டன. கூறியவை, கூறாதவை ஆகிய அனைத்திலும் கபத்தின் இயல்பு, இலக்கணம், இவை சீற்றமடைந்தபோது அதன் செயல்கள் இவற்றை நன்கு ஆராய்ந்து அறிஞனான மருத்துவன் கபநோய்களை ஐயமின்றி நன்கு உறுதி செய்யவேண்டும்.

குளிர்ச்சி, குருத்தன்மை, இனிமை, வழவழப்புத்தன்மை இவை கபத்தின் இயல்புகள். இதைப்போன்றே இதன் செயல்கள் இலக்கணங்கள் அமைகின்றன. இது உடல் உறுப்புகளில் நுழைந்து அங்கு வெண்மை, குளிர்ச்சி, அரிப்பு, நிலையான தன்மை, பளு, எண்ணெய்ப்பசை, அசைவின்மை, உறக்கம், ஈரத்தன்மை, குழகுழப்பு, தடை, இனிமை, தாமதமாகச் செயலாற்றுதல் ஆகிய கபத்தின் செயல்களை தோற்றுவிக்கின்றது. இத்தகைய இலக்கணங்களைக் கொண்டு கபநோய்களை மருத்துவர் உறுதிப்படுத்த வேண்டும். (18)

கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு, விறுவிறுப்பு, வறட்சி, உஷ்ண வீரியம், இவற்றுடன் கூடிய பொருள்களைக் கொண்டு சிகிச்சையைத் தொடங்க வேண்டும். வியர்வைச் சிகிச்சை, வாந்திக்குக் கொடுத்தல், மூக்கில் மருந்திடுதல், உடற்பயிற்சி முதலியவற்றைக் கையாண்டு மருந்தின் அளவு, நேரம் இவற்றை நன்கு ஆலோசித்து

சிகிச்சை புரியவேண்டும். கபத்தைத் தீர்க்கும் சிகிச்சைகளில் வாந்திக்கு மருந்து கொடுத்தலே சிறந்தது என மருத்துவர் கருது கின்றனர். இந்த மருந்து, கபத்தின் இருப்பிடமான இரைப்பை யின் மேல்பாகத்தை அடைந்து கபத்தை வேருடன் அறுத்துவிடு கிறது. வயல்களின் வரப்புகளை வெட்டிவிட்டால் வயலிலுள்ள நீர் அனைத்தும் வெளியேறிவிடுகிறது. வயலில் உள்ள பயிர்கள் உலர்ந்து போகின்றன. அதுபோல் கபம் வேரறுக்கப்பட்டவுடன் கபநோய்களும் தாமாகவே தணிகின்றன. (19)

முதலில் நோயை ஆய்வு செய்து, பிறகு மருந்துப் பொருட் களைச் சோதித்து இவை இரண்டையும் நன்கு முடிவு செய்து, பிறகுதான் சிகிச்சையைத் தொடங்க வேண்டும். (20)

மருந்துகளைப் பற்றிய நல்ல அறிவு பெற்றிருந்தும் நோயைப் பற்றி நன்கு அறியாமல் சிகிச்சையைத் தொடங்கும் மருத்துவ னுக்குச் சிகிச்சையில் வெற்றி என்பது தைவவசமாகவே ஏற்படும். வெற்றியை உறுதியாக அறுதியிட்டுக் கூற இயலாது. (21)

நோயை நன்முறையில் ஆராய்ந்தறிந்து பலவகையான மருந்து களையும் நன்கு உணர்ந்த மருத்துவன் இடம், நேரம் இவற்றிற்கு ஏற்பச் சிகிச்சையைச் செய்தால் அவனுக்கு வெற்றி உறுதியாகும். (22)

**முடிவுரை**

இதுகாறும், கூறியவற்றால் நோய்களின் சுருக்கம், இயல்பு, இடம், நேரம், மாற்றம் பலவகைக் காரணங்கள், தனித்தனியான காரணங்கள், நோய்களின் தொடர்பு, நோய்களின் இருப்பிடம் பலவகை நோய்கள், ஒவ்வொரு நோய்க்கும் தனிப்பட்ட காரணங்கள், பலவகை நோய்களுக்கான சிகிச்சை முறைகள் இன்னோரன்ன பற்பல பொருள்களின் உண்மையை நன்குஉணர்ந்த பெரியோர் புனர்வசு எனும் ஆத்திரேயர் விளக்கியுள்ளார். (23–25)

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரக மாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையின்
ஸூத்ரஸ்தானத்தில் மகாரோகாத்யாயம்
எனும் இருபதாம் அத்தியாயம்
முற்றும்.

## இருபத்தோறாவது அத்தியாயம்

## *அஷ்டௌ நிந்திதீயம்

இனி பகவான் ஆத்திரேயர் விவரித்தபடி ''அஷ்டௌ நிந்தி தீயம்'' எனும் இருபத்தோறாவது அத்தியாயத்தை விவரிப் போம். (1–2)

உடலைச் சேர்ந்த எண்வகையான நிந்தனைக்குரிய உருவமுள் ளவர்கள் உளர். மிகவும் உயரமானவன், மிகவும் குள்ளமான வன், உரோமம் அதிகமாக உள்ளவன், உரோமமே இல்லாதவன், மிகவும் கருப்பாக உள்ளவன், மிக்க வெளுப்பாயுள்ளவன், மிகவும் பருமனாக உள்ளவன், மிக்க இளைத்துள்ளவன் என இந்த எண் வகையானவரும் நிந்தனைக்குரிய புருடர்களாவர். 3

மிக்க பருமனாக இருப்பவனுக்கும் மிக்க இளைத்துள்ளவனுக் கும் உள்ள நிந்தனைக்குரிய குற்றங்களைக் கூறுவோம் :-

### 1. மிக்க பருமனாக இருப்பதன் குற்றமும் காரணமும்

மிகவும் பருமனாக இருப்பவனுக்கு ஆயுள் குறைதல், சுறு சுறுப்பின்மை, உடலுறவை மிக்க சிரமத்தின் பேரில் செய்தல், வலிவின்மை, துர்நாற்றம், வேர்வை அதிகமாதல், பசி மிதமின்றி இருத்தல், தாகம் அதிகமாகயெடுத்தல் என இந்த எண்வகை தோஷங்கள் இருக்கும்.

அதிகமாகப் புசித்தல், குருகுணமும், இனிப்புச்சுவையும், சீத வீரியமும், எண்ணெய்ப் பசையும் கொண்ட பொருட்களைப் புசித் தல், உடற்பயிற்சி செய்யாமை, உடலுறவு கொள்ளாமை, பகல் தூக்கம், எப்போதும் மகிழ்ச்சியுடனிருத்தல், ஆலோசனை செய் யாமலிருத்தல், தனக்குக்காரணமான வித்தின் சுபாவம் என இக் காரணங்களால் மிக்க பருமனான நிலை ஏற்படும்.

[1]மேதஸ்ஸுடன் கூடிய இந்தப் பருத்தவனுக்கு மேதஸே அதிகமாக வளர்ந்து, மற்ற தாதுக்கள் இந்த அளவில் வளராமை யால் ஆயுள் குறைவடையும். உடலுறுப்புகள் தளர்வதாலும்,

---

*அஷ்டௌநிந்திதீயம் – நிந்தனைக்குரிய எண்வகை உடலமைப்பு கொண்டவர்களைப் பற்றிய அத்தியா யம்.

(1) மேதஸ் – கொழுப்பு

மென்மையினாலும், மேதஸின் குருத்தன்மையினாலும் பருத்த வனுக்கு சுறுசுறுப்பில்லாமை ஏற்படும். ஆண் விந்து அதிகமில் லாமையாலும், மேதஸ்ஸினால் வழி தடைப்படுவதாலும் உட லுறவை மிக்க கஷ்டப்பட்டுச் செய்ய வேண்டிவரும்.

தாதுக்கள் சமமாக இல்லாமையால் சோர்வு உண்டாகும். மேதஸ் கெடுவதாலும் அதன் சுபாவத்தாலும் வேர்வையுண்டாகிக் கொண்டிருப்பதனாலும் துர்நாற்றம் உண்டாகும்.

மேதஸ் கபத்துடன் கலந்துவிடுவதாலும் (1) விஷ்யந்தமெனும் குணம் கொண்டிருப்பதாலும், பலவாக இருப்பதாலும், உடற் பயிற்சியைத் தாங்கும் சக்தி இல்லாமையாலும், வேர்வை அதிக மாக உண்டாகும். சடராக்னி தீட்சணமாக இருப்பதாலும் வயிற்றில் வாயு அதிகமாக இருப்பதாலும் தாகமும் அதிகமாக பசியும் தாகமும் இருக்கும். (4)

மிகப் பருமனாக இருப்பவனின் இரத்தக் குழாய்கள் மேதஸி னால் சூழப்பட்டிருப்பதால் வாதம் வயிற்றில் அதிகமாகச் சுற்றி வந்து, சடராக்னியை வளரச் செய்யும். உணவை உலரச் செய்யும். அதனால் அவன் உணவை விரைவில் சீரணித்துக்கொண்டு அதிக உணவைக் கோருவான்.

உணவை தேவைப்படும்போது உண்ணாமல், கொடிய சில மாற்றங்களை அடைவான். சடராக்னியும், வாதமும் அதிகத் துன்பத்தை விளைவிக்கும். காட்டுத் தீயைப்போல் இந்தப் பருத்த உடலையுடையவனைத் தகிக்கச் செய்யும்.

மேதஸ் அதிகமாக வளர்ச்சியடைந்தபோது, வாதம் முத லான தோஷங்கள் உடனே கொடிய நோய்களைத் தோற்றுவித்து உயிரை அழித்துவிடும்.

மேதஸ்ஸும், மாமிசமும், அதிகமாக வளர்ந்திருப்பதால் ஆடுகின்ற பின்தட்டையும், வயிற்றையும் ஸ்தனங்களையும் கொண்டு உடற்பருமனுக்கு ஏற்ற வலிவையும், உற்சாகத்தையும் இழந்த மனிதன் மிகப் பருமனானவன் எனக் கூறப்படுவான்.

இவ்வாறு மிகப்பருமனுடைய தீங்கிற்கான காரணங்களையும் இலக்கணங்களையும் பற்றிக் கூறப்பட்டது. மிகவும் இளைத் தவனைப் பற்றிக் கூற வேண்டியவற்றைக் கூறுவோம். (5—10)

---

(1) விஷ்யந்தம் — நீர்க் கசிவினால் தளர்ந்து பெருகுதல்.

## 2. மிக்க இளைப்பின் காரணங்களும்-இலக்கணங்களும்

கடுமையான வறட்சியான அன்ன—பானங்களைப் புசித்தல், லங்கனம் (புசியாமை), சிறிதளவே புசித்தல், வாந்தியெடுக்கச் செய்தல் முதலியவற்றின் அதியோகம் (அதிகமாகப் பயன்படுத்து தல்) துன்பம், வேகங்களையும், தூக்கத்தையும் தடுத்து நிறுத்து தல், தைலங்களைப் பூசிக்கொள்ளாமலே உடல் தேய்த்தலையும் குளித்தலையும் பழக்கப்படுத்துதல், தனக்குக் காரணமான வித்தின் (பீஜம்) சுபாவம், கிழத்தனம், நோய் இவற்றினால் துன்புறுத்தப்படுதல், கோப சுபாவம் என இவற்றினால் மிக்க இளைப்பு உண்டாகும்.

உடற்பயிற்சி, மிகவும் திருட்தியாகப் புசித்தல், பசி, தாகம், மிக்க வலிவான மருந்து, அதிகக் குளிர்ச்சி, அதிகச் சூடு, அதிக உடலுறவு என இவைகளை அதிகமாக இளைத்தவன் தாங்கமாட்டான்.

மிக்க இளைத்தவனுக்கு, ப்லீஹம்(1) (மண்ணீரல் நோய்) காசம், க்ஷயம், சுவாசம், குல்மம், (2) அர்சஸ் எனும் மூல நோய் கிரஹிணியையொட்டிய நோய்கள் என இவை அனேகமாகத் தோன்றும்.

இளைத்த பின்தட்டுகள், வயிறு, கழுத்து, அடர்ந்த நாடிகள், சருமம், எலும்புகள் மட்டும் மிகுந்திருப்பதுபோல் காணப்படுபவனும், தடித்த முட்டிகளைக் கொண்டவனுமான மனிதன் மிக்க இளைத்தவனெனக் கூறப்படுவான். (11–15)

மிக்க பருமனானவரும் மிக்க இளைத்தவரும் என்றென்றும் நோயாளிகளாகவே இருப்பர். மிக்க பருத்தவரை (3) கர்ஷண மென்னும் சிகிச்சையினாலும், மிக்க இளைத்தவரை (4) ப்ரும்ஹணச் சிகிச்சையினாலும் எப்பொழுதும் உபசரிக்க வேண்டும்.

---

(1) ப்லீஹம் — மண்ணீரலில் தோன்றும் நோய்

(2) அர்சஸ் — மூலநோய்

(3) கர்ஷணம் — உடலிலுள்ள தோஷங்களை வெளிப்படுத்த லங்கனம், வமனம், விரேசனம் எனும்சிகிச்சை செய்தல்.

(4) ப்ரும்ஹணம்— உடலுக்கு வலிவையும் புஷ்டியையும் தரும் சிகிச்சை முறை.

பருமனும் இளைப்பும் சமமான காரணங்களைக் கொண்டிருக்கும். ஆயினும் பருமனைக்காட்டிலும் இளைப்பு சிறிது உயர்ந்ததாகக் கருதப்படும். நோய் இளைத்தவனைக் காட்டிலும் தடித்தவனையே அதிக அளவில் துன்புறுத்தும். *(16–17)*

### 3. நற்புருஷனின் இலக்கணம்

சமமான உடற்பருமனைக் கொண்டவனும், சமமான உடலின் சேர்க்கையைக் கொண்டவனுமான மனிதன், திடமான புலன்களைப் பெற்றிருப்பதால் நோய்களின் வலிவால் தாக்கப்படமாட்டான்.

இத்தகைய குணங்களுடன் கூடி பசிதாகங்களையும், வெயிலையும், குளிரையும், உடற்பயிற்சியையும் பொறுத்துக் கொள்பவனும் சமான சடராக்னி கொண்டு, சீரான சீரணசக்தி கொள்பவனுமான மனிதன் சமமான தசைவளர்ச்சியுள்ள புருஷன் எனப்படுவான். *(18–19)*

### 4. பருத்தவனுக்கும் இளைத்தவனுக்கும் செய்யும் பணிவிடைகள்

பருத்தவனுக்கு இளைப்பதற்காக, குருகுணம் கொண்டதும், இளைக்கச் செய்வதுமான பணிவிடைகளைச் செய்ய வேண்டும். இளைத்தவனுக்கு வலிவுண்டாவதற்காக லகுகுணமுள்ளவைகளும், புஷ்டியைத் தரவல்லதுமான பணிவிடைகளைச் செய்ய வேண்டும். *(20)*

### 5. பருத்தவனுக்கு செய்யத்தகும் பணிவிடைகள்

வாதம், கபம், மேதஸ் இவற்றை அழிக்கக்கூடிய அன்னபானங்கள் நன்மையளிப்பவை. வறட்சியாகவும், சூடாகவும், விறுவிறுப்புடனும் உள்ள பொருட்களைப் பயன்படுத்தி வஸ்திசிகிச்சை செய்ய வேண்டும். எண்ணெயைப் பூசாமலே உடலைப் பிடித்து விடுதல் வேண்டும்.

சீந்திற்கொடி, கோரைக்கிழங்கு இவ்வகைளையும் (1) த்ரிபலா, மோர், அரிஷ்டங்கள் இவற்றையும் தேனையும் உட்கொள்ளலாம்.

வாயுவிடங்கம், சுக்கு, யவக்ஷாரம், கருப்பிரும்புப் பொடி, தேன், யவதானியம், நெல்லிக்காய், என்பவைகளைப் பயன்படுத்தினால் சிறந்ததாக இருக்கும்.

---

(1) த்ரிபலா — கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்.

(1)வில்வாதி பஞ்சமூலம் என்னும் ஐந்து வேர்களைத் தேனுடனும், சிலாசித்தை அக்னிமந்தரஸத்துடனும் (முன்னை ரசம்) சேர்த்துக் கொடுப்பது சிறந்தது.

பிரசாதிகா (சாமதானியம்) ஞாழல், சர்மைநெல், சிறுயவ தானியம், யவதானியம், சோளம், கேழ்வரகு, பயறு, சொள்ளு, பச்சைப்பயிறு, துவரை, புடல், நெல்லிக்காய் என்பவற்றை உணவுக்காகக் கொடுக்க வேண்டும். தேனுடன் கூடிய தண்ணீரை அனுபானமாகவும் மேதஸ், மாமிசம், கபம் என்பவைகளைக் குறைக்கும் அரிஷ்டங்களைப் பருமன் நீங்குவதற்காகவும் தக்க வகையில் துணைப்பானமாகத் தரலாம். பருமனை நீக்க விரும்பு கிறவன் கண்விழித்தல், உடலுறவு, தேகப்பயிற்சி ஆலோசனை எனுமவற்றை முறையே வளர்த்துக்கொள்ள வேண்டும். (21—28)

## 6. இளைத்தவனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகள்

தூக்கம், மகிழ்ச்சி, சுகமளிக்கும் படுக்கை, மனத்திருப்தி, மன அமைதி இவைகள் இளைத்தவனுக்குச் செய்ய வேண்டிய நடைமுறைகள். ஆலோசனை, உடலுறவு, உடற்பயிற்சி இவை களைச் செய்யலாகாது. மனத்திற்குப் பிடித்தவைகளைப் பார்க்க வேண்டும். புது அரிசிச்சோறு, புதிதாகத் தயார் செய்த மது இவற்றை அருந்தலாம். கிராமத்து ஜந்துக்களுடையவும், (2) அனூப ஜந்துக்களுடையவும், நீர்வாழ் உயிரினங்களுடையவுமான மாம்சங்கள், பக்குவம் செய்த மாமிசங்கள் இவற்றைப் பயன் படுத்தலாம். தயிர், நெய், பால், கரும்பு, சம்பா தானியம், பயறு, கோதுமை, வெல்லத்தால் செய்யப்பட்ட பொருட்கள் இவற்றை உபயோகிக்கலாம். எண்ணெய்ப் பசையும், இனிப்புச் சுவையும் கொண்ட பொருட்களுடன் கூடிய வஸ்திகளைப் பயன்படுத்த வேண்டும். எப்பொழுதும் எண்ணெய் தேய்த்துக் குளித்தல், எண்ணெய்பூசி தேய்த்துப் பிடித்துவிடுதல், குளித்தல், வாசனைப் பொருட்களையும் பூமாலைகளையும் அணிதல், வெள்ளைத் துணி களையணிதல், இவை சிறந்தன. தோஷங்களைத் தக்க காலத்தில் வெளிப்படுத்த வேண்டும். (3) ரஸாயனங்களும் (4) விருஷ்யங்களு மான மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும். இவை மிக்க

---

(1) வில்வாதிபஞ்சமூலம் — வில்வம், பெருவாகை, குமிழம் பாதிரி, முன்னை இவற்றின் வேர்கள்

(2) ஆனூபம் — நீர்ப்பாங்கான இடத்தில் தோன்றியது.

(3) ரஸாயனம் — உடலுக்கு வலிவளித்து கிழத்தனம் வராமல் காக்கும் மருந்து

(4) விருஷ்யம் — உடலுறவைத் தூண்டும் மருந்து.

இளைப்பை நீக்கி, உடற்பருமனைத் தோற்றுவிக்கும். செய்ய வேண்டியவைகளைப்பற்றிக் கவலைப்படாமலிருத்தல், திருப்தியாகப் புசித்தல், நன்கு தூங்குதல், இவற்றால் உடல் புஷ்டியடைந்து மனிதன் பன்றிபோல் பருத்துவிடுவான். *(29–34)*

### 7. தூக்கம் உண்டாகும் வழிமுறை

மனம் களைப்புற்று மற்ற புலன்களும் களைப்படைந்து அவை பொருள்களை உணர்ந்துவிட்டுப் பிரிந்தபோது மனிதன் தூக்க நிலையை அடைவான். *(35)*

### 8. தூக்கத்தின் நன்மைகள்

இன்பம்-துன்பம்; பருமன் - இளைப்பு; வலிவு-வலிவின்மை; விந்து வளர்ச்சி-அலித்தன்மை; அறிவு-அறிவின்மை; உயிர் வாழ்தல்—இறத்தல் என இவையனைத்தும் தூக்கத்தையே ஆதாரமாகக் கொண்டவை. உறக்கத்தைக் காலமல்லாக் காலத்தில் மேற்கொண்டாலும், அதிகமாகக் கொண்டாலும், முற்றிலும் மேற்கொள்ளாமலிருந்தாலும், ஊழிக்காலத்து இரவைப்போல் இன்பத்தையும், ஆயுளையும், கிடைக்கவொட்டாமல் தொலைவிலிருக்கச் செய்துவிடும்.

தக்க முறையில் கிடைத்த உண்மையறிவு யோகிகளுக்கு யோக சித்தியைத் தோற்றுவிப்பதுபோல், நல்லமுறையில் திரும்பவும் கிடைத்த உறக்கமும் மக்களுக்கு இன்பத்தையும், ஆயுளையும் உண்டாக்கும். *(36–38)*

### 9. பகலுறக்கத்திற்குத் தக்கவர்கள்

சங்கீதம், கல்வி, மது, பெண்ணுறவு, வேலைகள், பளுவைத் தூக்குதல், வழி நடத்தல் என்னுமிவற்றால், இளைத்தவன், அசீர்ண நோயுள்ளவர், காயமடைந்தவர், இளைத்தவர், முதியவர், சிறியோர், பலமில்லாதவர், தாகம், பேதி, சூலநோய் இவற்றால் துன்புறுபவர், களைப்பு விக்கல் உள்ளவர், கீழே விழுந்தவர், தாக்கப்பட்டவர், பயித்தியம் பிடித்தவர், வாகனப்பயணங்களாலும் தூங்காமல் விழித்திருப்பதாலும் களைப்பு கொண்டவர், கோபம், துன்பம், அச்சம் இவற்றுடன் கூடியவர், பகலில் உறங்கும் பழக்கமுள்ளவர், தகுதியானவர் என இவர்களனைவரும் பகல் நேரத்தில் தூங்குவதை எப்பொழுதும் மேற்கொள்ளலாம்.

அவ்வாறு செய்தால் தாதுக்களில் சமநிலையும் வலிவும் உண்டாகும். கபம் வளர்ந்து உடலுறுப்புகளுக்கு ஊட்டத்தை உண்டாக்கும். ஆயுளுக்கு நிலையான தன்மை உண்டாகும்.

கோடைகாலத்தில், காலத்தின் தன்மையையொட்டி, வறட்சியாக உள்ளவர்களுக்கு வாதம் வளர்ந்து இரவுநேரம் குறைவாக இருப்பதால் பகலுறக்கம் நன்மையாக இருக்கும். *(39–43)*

## 10. பகலுறக்கத்திற்குத் தகாதவர்கள்

கோடைகாலம் தவிர மற்ற காலங்களில் பகலில் உறங்கினால், கபமும் பித்தமும் சீற்றமடையும். மற்ற காலங்களில் பகலுறக்கம் நன்மை தருவதாக இருக்கும்.

மேதஸ் (கொழுப்பு) அதிகமாக உள்ளவர், எண்ணெய்களை அதிகமாகப் பயன்படுத்துபவர், வளர்ந்தகபமுள்ளவர், கபநோயுள்ளவர், [1]தூஷீவிஷத்தினால் துன்பப்படுபவர், என இவர்கள் எந்த நிலையிலும் பகலுறக்கம் கொள்ளக்கூடாது.

தீமையளிக்கும் பகலுறக்கத்தைச் செய்தால், [2]ஹலீமகம் (காமாலை), சிரச்சூலை (தலைக்குத்தல்வலி), அசைவின்மை, உடல் பளுவாக இருத்தல், உடல்வலி, அக்னிமந்தம் (பசிமந்தித்தல்) இதயம் பூசப்பட்டது போலிருத்தல், சோபம் (சாதாரண வீக்கம்), அரோசகம் (விருப்பமின்மை) ஹ்ருல்லாஸமென்னும் இதயப் படபடப்பு, [3]பீநஸம். ஒற்றைத் தலைவலி, கோடம் என்னும் ஒருவகைப்படை, சிறங்குகள், கட்டி, தினவு, சோம்பல், இருமல், கழுத்து நோய்கள், ஞர்பக சக்தியும் அறிவும் குறைதல், இரத்த நாளங்களில் தடை, காய்ச்சல், புலன்களின் சுறுசுறுப்புக் குறைதல், விஷத்தின் வேகம் தொடங்குதல் என இவை உண்டாகும்.

எனவே உறக்கத்தினாலுண்டாகும் நன்மை தீமைகளைத் தெரிந்துகொண்டு இன்பம் உண்டாகும்படி உறங்க வேண்டும். *(44–49)*

---

(1) தூஷீவிஷம் — விஷகுணமுள்ள சில பொருட்கள், மற்றவற்றின் சேர்க்கையால் வெயில் காற்று மழை இவற்றால் தாக்கப்பட்டமையாலும், மிகப் பழைமையானதாலும் உடனடியாக உயிரைப் போக்காமல் உடலில் தோஷங்களைச் சீற்றமடையச்செய்து, வேறுநோய்களைத்தோற்றுவித்து, உயிருக்கு ஆபத்தை உண்டாக்குவது.

(2) ஹலீமகம் — உடல் மஞ்சள்நிறமாகி, பசியின்மையும், உடல் வலியும் தோன்றினால் அது ஹலீமகம் எனப்படும்.

(3) பீநஸம் — மூக்கில் எப்பொழுதும் சீழ், சளி வருதல்.

இரவில் கண்விழித்தல் வறட்சியையும், பகலுறக்கம், எண்ணெய்ப் பசையையும் தோற்றுவிக்கும். உட்கார்ந்து தூங்குதல் வறட்சியையோ எண்ணெய்ப்பசையையோ தோற்றுவிக்காது. (50)

உடல் வளர்ச்சிக்கு உணவைப்போல் இன்பமான உறக்கமும் காரணமாக இருக்கும். உடல் பருமனுக்கும் இளைப்பிற்கும் உறக்கமும் உணவுமே இன்றியமையாதவையாகின்றன. (51)

### 11. உறக்கத்தை விரைவில் தோற்றுவிப்பது

எண்ணெய் தேய்த்துக்குளித்தல், உடல் பிடித்தல், குளித்தல், கிராமத்துப் பிராணிகள், நீர்வாழ் பிராணிகள் இவற்றின் மாமிச ரசம், சம்பாஅரிசிச்சோறு, தயிர், பால், எண்ணெய், மது, மனத் திருப்தி, மனதிற்கு அனுகூலமான நறுமணங்கள், அத்தகைய ஓசைகள், உடலைப் பிடித்துவிடுதல், கண்களுக்கு இன்பமளிக்கும் மைகளைப் பயன்படுத்துதல், தலைமீதும், முகத்தின் மீதும் அனுகூலமான பூச்சுக்களைப் பூசிக்கொள்ளுதல், நன்கு பரப்பப்பட்ட படுக்கை, சுகமளிக்கும் வீடு, தகுந்த காலம் என இவ்வயனைத்தும் உறக்கத்தை உடனே உண்டாக்கும். அந்த அந்தக் காரணங்களை யொட்டி, நின்றுபோன உறக்கத்தை உடனே தோற்றுவிக்கும். (52–54)

### 12. உறக்கம் போவதற்கான காரணங்கள்

பேதிக்கான செயல்கள், மூக்கில் மருந்திடுதல், வாந்திக்கு மருந்து எடுத்துக் கொள்ளுதல், அச்சம், வருத்தம், சினம், புகை பிடித்தல், உடற்பயிற்சி, இரத்தத்தை விடுவித்தல், புசியாமை, சுகமளிக்காத படுக்கை, அதிகமான சத்துவகுணம், தமோகுணத்தை வெற்றி கொள்ளுதல் என இவை அதிகமாகத் தோன்றி தீமையளிக்கவல்ல உறக்கத்தைப் போக்கவல்லவை, மற்றும் வேலையில் ஊக்கம், முதுமை, நோய், உடல் இயல்பு, வாதச் சீற்றம், இவையும் உறக்கம் உண்டாகாமைக்கு காரணங்களாக இருக்கும். (55–57)

### 13. உறக்க வகைகள்

தமோ குணம், கபம் இவற்றால் மனம் உடல் இவற்றின் களைப்பு, காலம் முதலிய ஆகந்துக (எதிர்பாராமல் வந்த) காரணங்களின் நோய், இரவின் இயல்பு என இவைகளாலும் உறக்கமுண்டாகும்.

அவற்றில் இரவின் இயல்பாலுண்டாகும் உறக்கம் உயிரினங்களை வளர்ச்சியடையச் செய்யும். தமோகுணத்தினாலுண்டாகும் உறக்கம் பாவத்திற்குக் காரணமாகும். மற்ற உறக்கங்கள் நோய்களாகக் கருதப்படும். (58–59)

**முடிவுரை**

பழிக்கப்பட்ட மனிதர்கள், அவர்களில் மிகவும் பழிக்கும்படி யான இருவகை மனிதர்கள், அவ்வாறு நிந்திக்கப்படுவதற்குக் காரணங்கள், அவ்விருவரின் தோஷங்கள், சிகிச்சை இவை இவ் வத்தியாயத்தில் கூறப்பட்டன.

மற்றும் உறக்கம் யாருக்கு எப்பொழுது நன்மையளிக்கும், யாருக்கு எப்போது தீமை விளைவிக்கும், உறக்கம் அதிகமாகத் தோன்றும்போதும், தோன்றாமலிருக்கும்போதும் எவற்றைச் செய்யவேண்டும், நல்லுறக்கம் எவற்றினாலுண்டாகும், என்ன மகிமை கொண்டது போன்றவை எல்லாம் ஆத்திரேயரால் முழு தும் விளக்கப்பட்டது. *(60–62)*

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரக மாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ர ஸ்தானத்தில் 'அஷ்டௌ நிந்திதீயம்' எனும் இருபத்தியோராம் அத்தியாயம் முற்றும்.

•

# இருபத்திரண்டாவது அத்தியாயம்

## * லங்கன ப்ரும்ஹணீயம்

இனி ஆத்திரேய பகவான் கூறிய வகையில் ''லங்கன ப்ரும்ஹணீயம்'' எனும் அத்தியாயத்தை விளக்குவோம். *(1—2)*

### 1. மருத்துவ-இலக்கணம்

''லங்கனம், [1]ப்ரும்ஹணம், [2]ரூக்ஷணம், [3]ஸ்நேஹனம், [4]ஸ்வேதனம், [5]ஸ்தம்பனம் என்பவைகளைப் பற்றி நன்கறிந்தவேன மருத்துவன்'' என ஆத்திரேயர் கூறினார்.

இவ்வாறு கூறிய ஆத்திரேயரைக் குறித்து அக்னிவேசர் கீழ்க் கண்ட வகையில் வினவினார் :-

ஆத்திரேய பகவானே!

(1) லங்கனமென்றால் என்ன ? லங்கனத்தைச் செய்விக்கத் தக்கவர் யார் ?

(2) ப்ரும்ஹணமென்றால் என்ன ? அதைச் செய்விக்கத் தக்கவர் யார் ?

(3) ரூக்ஷணமென்பது என்ன ? அதைச் செய்விக்கத் தக்கவர் யார் ?

(4) ஸ்நேஹநம் என்பது எது ? அதைச் செய்விக்கத் தக்கவர் யார்?

(5) ஸ்வேதனம் என்றால் என்ன ? அதைச் செய்விக்கத்தக்கவர் யார் ?

(6) ஸ்தம்பனம் என்றால் என்ன ? அதைச் செய்விக்கத்தக்கவர் யார் ?

---

*லங்கன ப்ரும்ஹணீயம் — இலங்கனம்-இளைக்கச் செய்தல், ப்ரும்ஹணம் — பருக்கச் செய்தல் போன்ற அறுவகைச் சிகிச்சைகளைப் பற்றி விவரிப்பதால் இவ்வத்தியாயம் இப் பெயர் பெறும்.

(1) ப்ரும்ஹணம் — பருக்கச் செய்தல்
(2) ரூக்ஷணம் — வறட்சி உண்டாக்குதல்
(3) ஸ்நேஹனம் — எண்ணெய்ப்பசை உண்டாக்குதல்
(4) ஸ்வேதனம் — வியர்வை உண்டாக்குதல்
(5) ஸ்தம்பனம் — அசையாமல் நிறுத்தல்.

லங்கனம் முதலான இந்த ஆறு விஷயங்களைப் பற்றியதான [1]ஸம்யக்யோகம் [2]அயோகம் [3]அதியோகம் இவைகளால் தோன்றும் அறிகுறிகளைச் சுருக்கமாகக் கூறியருள வேண்டும் என வினவினார்.

அக்னிவேசரின் இவ்வினாவைக் கேட்டு ஆத்திரேயர் கீழ்க் கண்ட வகையில் பதிலுரைத்தார். *(3–8)*

## 2. லங்கனம் முதலியவைகளைப்பற்றிய விளக்கம்

உடலுக்கு லேசான தன்மையை உண்டாக்குவது லங்கனமாகும்.

உடலுக்கு ஊட்டத்தை ஏற்படுத்துவது ப்ரும்ஹணம் எனப்படும்.

உடலுக்கு வறட்சியையும் சொரசொரப்புத் தன்மையையும் தோற்றுவிப்பது ரூக்ஷணம் எனப்படும்.

எண்ணெய்ப்பசை, உருகும் தன்மை, மென்மை, ஈரப்பசை இவைகளை உடலில் தோற்றுவிப்பது ஸ்நேஹனம் எனப்படும்.

கட்டமைப்பு, பளு, குளிர்ச்சி இவைகளைப் போக்கி, வேர்வையைத் தோற்றுவித்தல் ஸ்வேதனமாகும்.

நகரும் இயல்பையும், அசையும் இயல்பையும், லேசான இயல்பையும் கொண்ட பொருளை அசையாமற் செய்தல் ஸ்தம்பனம் எனப்படும். *(9–11)*

## 3. அறுவகைத் திரவியங்களின் இலக்கணங்கள்

[4]லகு, [5]உஷ்ணம், [6]தீக்ஷ்ணம் [7]விசதம் [8]ரூக்ஷம், [9]ஸூக்ஷ்மம், [10]கரம் [11]ஸரம் [12]கடினம் எனும் இக்குணங்களைக் கொண்ட பொருட்கள் அனேகமாக லங்கனத் திரவியங்களாக இருக்கும்.

---

(1) ஸம்யக்யோகம் — முறைப்படி செய்த சிகிச்சை நன்கு நிறைவேறுதல்.
(2) அயோகம் — சிகிச்சை நிறைவேறாமை
(3) அதியோகம் — அளவு மீறிய சிகிச்சை
(4) லகு — லேசானது — விரைவில் சீரணிக்கக்கூடியது.
(5) உஷ்ணம் — சூட்டைத் தோற்றுவிப்பது.
(6) தீக்ஷ்ணம் — கூர்மையான தன்மை
(7) விசதம் — தூய்மையானது
(8) ரூக்ஷம் — வறட்சி.
(9) ஸூக்ஷ்மம் — நுண்ணியது
(10) கரம் — சொரசொரப்பானது
(11) ஸரம் — நெகிழச் செய்வது
(12) கடினம் — உரமானது

[1]குரு, [2]சீதம் [3]மிருது [4]ஸ்நிக்தம் [5]கனம் [6]ஸத்துவம் [7]பிச்சிலம் [8]மந்தம் [9]ஸ்திரம் [10]ச்லக்ஷ்ணம் எனும் இக்குணங்கள் கொண்டவை பொதுவாக ப்ரும்மணத் திரவியங்கள்.

ரூக்ஷம், லகு, கரம், தீக்ஷ்ணம், உஷ்ணம், ஸ்திரம், விசதம், கடினம் எனும் குணங்கள் உள்ளவை பொதுவாக ரூக்ஷத்திரவியங்கள்.

[11]திரவம், ஸூக்ஷ்மம், ஸரம், ஸ்நிக்தம், பிச்சலம், குரு, சீதம், மந்தம், மிருது எனும் இக்குணங்கள் உள்ள திரவியங்கள் அனேகமாக ஸ்நேஹனத் திரவியங்கள் எனப்படும்.

உஷ்ணம், தீக்ஷ்ணம், ஸரம், ஸ்நிக்தம், ரூக்ஷம், ஸூக்ஷ்மம், திரவம், ஸ்திரம், குரு எனும் குணங்களைப் பொதுவாகக்கொண்ட பொருட்கள் ஸ்வேதனத்திரவியங்கள்.

சீதம், மந்தம், மிருது, ச்லக்ஷ்ணம், ரூக்ஷம், ஸூக்ஷ்மம், திரவம், ஸ்திரம், லகு என இக்குணங்களுள்ள திரவியங்கள் ஸ்தம்பனத் திரவியங்கள் எனப்படும்.

## 4. இலங்கனத்தின் பிரிவுகள்

வாந்தி எடுத்தல், மலங்கழித்தல், ஆஸ்தாபன வஸ்தி, நாசியின் வழியாக மருந்து செலுத்தும் முறை (நஸ்யகர்ம), தாகத்தை அடக்குதல், காற்றைப் பயன்படுத்துதல், வெயிலை உபயோகித்தல், சீரணிக்கச் செய்யும் மருந்துகளைப் பயன்படுத்தல், உண்ணாமை, உடற்பயிற்சி ஆக இப்பத்தும் லங்கனச் சிகிச்சை எனப்படும். *(12–18)*

---

(1) குரு — பளுவானது (எளிதில் சீரணமாகாதது)
(2) சீதம் — குளிர்ச்சியானது
(3) மிருது — மென்மையானது
(4) ஸ்நிக்தம் — எண்ணெய்ப்பசையுள்ளது
(5) கனம் — பளுவானது
(6) ஸ்த்தூலம் — பருமனானது
(7) பிச்சிலம் — பிசுபிசுப்பானது
(8) மந்தம் — மெதுவானது
(9) ஸ்த்திரம் — நிலையானது
(10) ச்லக்ஷ்ணம் — மழமழப்பானது
(11) திரவம் — பெருகக்கூடியது.

**5. இலங்கனம் செய்துகொள்ளத் தகுதியுள்ளவர்**

கபம், பித்தம், இரத்ததோஷம், மலம் இவை அதிகமாக உள்ளவர் வாதத்தினால் விடப்பட்டவர், உடல் பருத்தவர், வலிவுள்ளவர் என இவரனைவரும் சோதனையுருவான இலங்கனத்தைச் செய்துகொள்ளத் தகுதியுற்றவராவர்.

கப—பித்தங்களால் தோன்றிய நடுத்தரப் பலமுள்ள நோயுள்ளவர் வாந்தி, பேதி, மார்புவலி, வாந்திபேதி, அலஸகம் என்னும் வாதநோய், காய்ச்சல், விபந்தம் (மலச்சிக்கல்) குருத்தன்மை (உடல் பளு), ஏப்பம், ஒக்காளம், ருசியின்மை முதலிய நடுத்தர வலிவு கொண்டவைகளான நோய்களையுடையவர்கள் முதலில் பொதுவாக பாசனச்சிகிச்சையை செய்துகொள்ளத் தகுதி பெறுகிறார்கள்.

அற்பவலிவைக் கொண்ட மேற்கூறிய நோய்கள் உள்ளவர்கள் தாகத்தைத் தடுத்து நிறுத்தி அதிகம் நீர் குடிக்காமலிருத்தல், பட்டினியிருத்தல் முதலியவற்றைக் கையாள வேண்டும்.

நடுத்தரமான வலிவு கொண்டிருக்கும் போது வலிவானவர்கட்குத் தோன்றும் நோய்களைப் போக்க தேகப் பயிற்சி, வெயில், காற்று இவைகளைப் பயன்படுத்தல் வேண்டும்.

நோய் அற்ப வலிவு கொண்டிருக்கும்போது, பசி, தாகம், வெயில், காற்று, தேகப்பயிற்சி முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டுமென்று கூறவேண்டியதில்லையன்றோ!

சருமதோஷம் [1]பிரமேகம் என்னும் நோய், எண்ணெய்ப் பசை, அபிஷ்யந்தம் எனும் தோஷம், ப்ரும்மணமெனும் உடலூட்டம் இவைகளைக் கொண்டவர் குளிர் காலத்தில் இலங்கனத்தைப் பயன்படுத்தலாம்.

மற்றும் குளிர்காலத்தில் வாத நோயுள்ளவர்களும் இலங்கனத்தை ஏற்றுப் பயன்பெறலாம். *(19—24)*

**6. ப்ரும்ஹணம் செய்துகொள்ளத் தகுதி பெற்றவர்**

நஞ்சு பூசிய அம்பு முதலியவைகளால் தாக்கப்படாத, நோயுறாத, நடுவயதிலுள்ள, உடலுக்கு ஒத்துக்கொள்ளும் (ஸாத்மியமான) இடத்தில் சுற்றுவனவுமான மிருகங்கள், மீன்கள், பறவைகள், இவற்றின் இறைச்சிகள் பிரும்மணத் திரவியங்களாகும்.

---

(1) பிரமேகம் — அளவு மீறிச் சிறுநீர் பலவாறாக வெளிப்படுதல்.

உடலிளைத்தவர், காயமுற்றவர், வலிவு குறைந்தவர், முதியோர், வலிவற்றவர், எப்பொழுதும் வழி நடப்போர், பெண்களையும் மதுக்களையும் எப்பொழுதும் பயன்படுத்துவோர் என இத்தகையவர் பிரும்மணத்தைப் பின்பற்றத்தக்கவர்கள்.

கோடை காலத்தில் பிரும்மணத்தை அனைவருக்கும் செய்விக்கலாம். [1]சோஷம் [2]அர்சஸ் [3]கிரஹணி என்ற நோய்களால் இளைத்தவர்களுக்கு, மாமிசம் புசிக்கும் பிராணிகளின் இலகு குணமுள்ள இறைச்சியை பிரும்மணச்சிகிச்சைக்குத் தர வேண்டும்.

ஸ்நானம், உடற்பூச்சு, தூக்கம், இனிப்புச் சுவையுள்ள பொருட்கள், எண்ணெய்ப் பசையுள்ள பொருட்கள், சர்க்கரை பால், நெய் எனுமிவை அனைவருக்கும் பிரும்மணத்தை தோற்றுவிக்கும்.

காரம், கசப்பு, துவர்ப்பு என்ற சுவையுள்ள பொருட்களைப் பயன்படுத்தல், கட்டுதிட்டமில்லாமல் பெண்களைப் புணருதல் கடுகுப்பொடி, எள்ளுப்பொடி, மோர் இவைகளையும், கள்வகை முதலியவைகளையும் பயன்படுத்தல் இவை ரூக்ஷணங்களாக இருக்கும். (25–29)

## 7. ரூக்ஷணம் செய்துகொள்ளத் தக்கவர்

தோஷம் மிகுந்து இளகியிருத்தல் [4]அபிஷ்யந்தம் அதிக தோஷங்கள், மர்மஸ்தானங்களில் நோய்கள், [5]ஊருஸ்தம்பம் என்ற நோயுடன் கூடியவர்கள் ரூக்ஷண சிகிச்சை செய்துகொள்ளத் தக்கவராவர்.

## 8. [6]ஸ்நேஹனம், [7]ஸ்வேதனம் எனும் சிகிச்சைக்குத் தக்கவர்

எண்ணெய், எண்ணெய்ப் பசை இவைகளைச் செய்துகொள்ளத் தக்கவர்களைப்பற்றி ஸ்நேஹ அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்பட்டது.

---

(1) சோஷம் — பெண்சேர்க்கை முதலியவைகளால் உடல் உலர்தல்.
(2) அர்சஸ் — மூலநோய்
(3) கிரஹணி — இரைப்பையில் சீரணம் கெட்டுப்போய் உண்டாகும் மலப்போக்கு நோய்.
(4) அபிஷ்யந்தம் — தோஷங்களின் கோளாறுகளால் இளகுதல்
(5) ஊருஸ்தம்பம் — தொடைகளில் உண்டாகும் வாத நோய்
(6) ஸ்நேஹனம் — எண்ணெய்ப்பசையுண்டாக்குதல்
(7) ஸ்வேதனம் — வேர்வையுண்டாக்குதல்

அதேபோல் வேர்வைகள், வேர்வையுண்டாக்கத் தக்கவர் இவைகளைப் பற்றிய ஸ்வேத அத்தியாயத்தில் விரிவாகக் கூறப் படுகிறது.

திரவம், நுண்மை, நிலையானதன்மை, குளுமை, இனிப்பு, கசப்பு, உவர்ப்பு எனும் சுவைகளைக் கொண்டவை ஸ்தம்பனங் களாக இருக்கும்.

## 9. ஸ்தம்பனம் செய்துகொள்ள ஏற்றவர்கள்

பித்தச் சீற்றமுள்ளவர், (க்ஷார) கார உப்பினாலும், தீயினாலும் பொசுக்கப்பட்டவர், வாந்தி, அதிகமலப்போக்கு (அதிசாரம்) இவைகளால் துன்பப்படுபவர், நஞ்சினால் துன்புற்றவர், வேர்வைச் சிகிச்சையின் அதியோகத்தால் துன்புறுபவர் என இவர்களும், இத்தகைய நிலையிலுள்ள மற்றவர்களும் ஸ்தம்பனச் சிகிச் சைக்குத் தக்கவராவர். *(30–33)*

## 10. உடலை இலேசாக்குதல் (இலங்கனம்) முதலியவற்றின் நல்ல அறிகுறிகள்

அபானவாயு (ஆசனவாய் வழியாக வெளிவரும் காற்று), சிறுநீர், மலம் இவை நன்றாக வெளியாதல், உடல் லேசாக இருத்தல், இதயம், ஏப்பம், தொண்டை, வாய் இவை சுத்தமாதல், சோம்பல், ஓய்ச்சல் நீக்கல், வேர்வையுண்டாதல், சுவையுண்டாதல், பசிதாகங்கள் பொறுக்க முடியாமை, மனம் துன்பமில்லாதிருத்தல் எனும் இவ்வறிகுறிகளைக் கொண்டு இலங்கனச் சிகிச்சை தக்க முறையில் அளிக்கப்பட்டது என்பதை அறிய வேண்டும்.

விரல் கணுக்களில் வலி, உடல் வலி, இருமல், வாய் உலர்தல், பசியின்மை, சுவையின்மை, நீர் வேட்கை, காதுகளும் கண்களும் வலிவிழத்தல், மனத்தில் அதிகக் கலக்கம், வாதம் மேல்நோக்கிச் செல்லுதல், மனதில் இருள் சூழ்ந்தது போன்ற எண்ணம், உடல் வலிவும், சடராக்னியின் வலிவும் அழிதல் எனும் இந்த அறிகுறி களைக்கொண்டு இலங்கனச் சிகிச்சை அதிக அளவில் அளிக்கப் பட்டதை நன்கு அறியலாம்.. *34–37*

வலிவும் ஊட்டமும் தோன்றி இளைப்பு நீங்குவதனால் ப்ரும் ழணச் சிகிச்சை நல்ல முறையில் அளிக்கப்பட்டது என்பதை அறிய வேண்டும்.

உடல் தடித்திருப்பதை வைத்து ப்ரும்மண சிகிச்சை அதிக மாகச் செய்யப்பட்டது என்பதை அறிய வேண்டும்.

[1]ரூக்ஷணச் சிகிச்சை (வறட்சி) தக்க அளவில் நடந்தபோதிலும் [2]ஸம்யக்கிருத [3]அதிக்ருதமான லங்கனச் சிகிச்சையின் அறிகுறிகளே காணப்படும்.

குறிப்பிட்ட நோய் நீங்கி வலிவுண்டானால் ஸ்தம்பனம் சரியாக அளிக்கப்பட்டது என அறிய வேண்டும்.

சியாவவர்ணம் (வெண்மை கலந்த கருமை) தோன்றுதல், உடல் அசைவின்மை, வாதம் மேல்நோக்கிச் செல்லுதல், தாடை பிகுவாயிருத்தல், இதயமும், மலமும் கட்டுப்படுதல் எனும் இவ்வறிகுறிகளைக் கொண்டு [4]ஸ்தம்பனம் அதிக அளவில் செய்யப்பட்டதென அறிய வேண்டும். *(38–40)*

இலங்கனம் முதலான சிகிச்சைகள் தக்க முறையில் செய்யப்பட்டபோது காணப்படும் அறிகுறிகளைப் பற்றி சுருக்கமாகக் கூறப்பட்டது. இவற்றால் தோற்றுவிக்கப்படும் தோஷங்கள் நீங்குதலோ, வளர்ச்சியடைதலோ சுருக்கமான அறிகுறிகளாகக் கருதப்படும்.

நோய்கள் அனைத்துக்கும் பொருத்தமான அறுவகைச் சிகிச்சைகள் கூறப்பட்டன. இவைகளை அளவையும் காலத்தையும் ஒட்டி பயன்படுத்தினால் சிகிச்சையால் நீங்கும் நோய்களுக்குப் பயன் உள்ள சிகிச்சை முறைகளாக இருக்கும்.

தோஷங்களின் பலவகையான சேர்க்கையால் அவற்றின் சிகிச்சைகளும் பலவகையானவை.

ஆனால் வாதம் முதலானவை மூன்றாக இருப்பதை மீற முடியாததுபோல இந்த சிகிச்சை முறையும் ஆறு என்பதை அதிகமாக்காமல், சிகிச்சை செய்யக்கூடிய நோய்களுக்கு அளவு, காலம் இவற்றின்படி உபயோகிக்க அது பயனளிப்பதாகும். *(41–43)*

**முடிவுரை**

இவ்வத்தியாயத்தில் ஆறுவகையான உபக்ரமங்களும் கேள்விக்குத் தக்கபடி ஆத்திரேயரால் விளக்கப்பட்டன. இவற்றையொட்டிச் சிகிச்சை நடைபெற வேண்டும்.

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானத்தில்
லங்கன—ப்ரும்மணீயம் எனும்
இருபத்திரண்டாம் அத்தியாயம்
முற்றும்.

---

(1) ரூக்ஷணம் — வறட்சியானது
(2) ஸம்யக்கிருதம் — நன்கு செய்யப்பட்ட சிகிச்சை
(3) அதிகிருதம் — அதிகமாகச் செய்யப்பட்ட சிகிச்சை
(4) ஸ்தம்பனம் — தடுத்து நிறுத்துதல்

# இருபத்துமூன்றாவது அத்தியாயம்

## *ஸந்தர்ப்பணீயம்

அதன் பிறகு ஆத்திரேய பகவான் கூறிய முறையில் ''ஸந்தர்ப்பணீயம்'' எனும் அத்தியாயத்தை விளக்குவோம். (1–2)

### 1. ஸந்தர்ப்பணத்தால் தோன்றும் நோய்கள்

ஸ்நிக்தம் எனும் எண்ணெய்ப்பசை, இனிப்புச் சுவை, குரு எனும் குணம், பிச்சிலம் எனும் பிசுபிசுப்புத்தனம் இக்குணங்களைக் கொண்ட பொருட்கள், புது அரிசியினால் சமைத்தசோறு, புதிதாகத் தயாரித்த மது வகைகள், தண்ணீர்ப்பாங்கான இடத்து பிராணிகளின் மாமிசங்கள், நீர்வாழ்ப் பிராணிகளின் இறைச்சிகள், பால் தயிர் போன்ற ஆவின் திரவப் பொருட்கள், வெல்லத்தினாலும், மாவினாலும் தயாரித்த பொருட்கள் எனுமிவற்றை அதிகமாகப் பயன்படுத்துவதாலும், உடற்பயிற்சி செய்யாமை, பகலுறக்கம், படுக்கை மீதும், இருக்கை மீதும் எப்பொழுதும் ஒய்வெடுத்தல், இவற்றினாலும் அதிகமாக [1]ஸந்தர்ப்பணம் (மகிழ்வூட்டல்-வலிவு) உண்டாகும். இதற்குத் தக்கமுறையில் சிகிச்சை செய்யாவிடில், பிரமேஹம் எனும் நீரிழிவு நோய், தினவு, சொறி, சிரங்கு, கட்டிகள், பாண்டுநோய், காய்ச்சல், குட்டநோய், உணவு சீரணிக்காத ஆமமெனும் நோய், சிறுநீர் நன்கு வெளியாகாமல் எரிச்சல் வலியுடன் வருவதெனும் மூத்திரகிருச்சிரமெனும் நோய், விருப்பமின்மை, சோம்பல், அலித்தன்மை, அதிகப்பருமன், சோம்பல், உடல் பளு, புலன்களும், இரத்தக்குழாய்களும் பூசப்பட்டவைபோலிருத்தல், மயக்கம், வேறு நினைவுடனிருத்தல் சோபமெனும் சாதாரண வீக்கம் போன்ற நோய்களும், இதைப் போன்ற மற்ற நோய்களும் விரைவில் உண்டாகும். (3–7

### 2. ஸந்தர்ப்பணத்தால் தோன்றிய நோய்களின் சிகிச்சை

ஸந்தர்ப்பணத்தால் தோன்றும் நோய்களில், வாந்தி எடுத்தல் மலம் கழித்தல், ரத்தத்தை வெளியிடுதல், உடற்பயிற்சி,

---

*ஸந்தர்ப்பணீயம் – உடலுக்கும், உள்ளத்திற்கும், வலிவையும் உவகையையும் உண்டுபண்ணும் செயல் ஸந்தர்ப்பணம் எனப்படும். அதைப்பற்றிய அத்தியாயம் இப்பெயர் பெறும்.

1. ஸந்தர்ப்பணம் – உடலுக்கும் உள்ளத்திற்கும் உவகை அளிக்கும் செயல்.

உண்ணாமை, புகைபிடித்தல், வேர்வை உண்டாக்குதல் என்ற முறை நன்மையளிக்கும். கடுக்காயைத் தேனுடன் கலந்து உட்கொள்வதுடன் வறட்சியான உணவுகளைப் புசிக்க வேண்டும்.

தினவுகளையும் சொறிகளையும் போக்கடிக்கப் பொடிகளையும் பூச்சுகளையும் பயன்படுத்த வேண்டும்.

[1]திரிபலா, கொன்றை, வட்டத்திருப்பி, ஏழிலைப்பாலை வத்ஸகம் (வெட்பாலை) கோரைக்கிழங்கு, வேம்பு, மலங்காரக்காய், இவைகளைக் கஷாயமாகக் காய்ச்சி அளவையும் காலத்தையும் ஒட்டி அருந்தி வந்தால் பிரமேகம் முதலான ஸந்தர்ப்பணத்தாலுண்டான நோய்கள் தவறாமல் நீங்கும். கோரைக்கிழங்குகள், கொன்றை, வட்டத்திருப்பி, திரிபலா, தேவதாரு, கண்டங்கத்திரி, கருங்காலி, வேம்பு, மஞ்சள், மரமஞ்சள், லவங்கப்பட்டை, வெட்பாலை எனும் இவற்றின் கஷாயத்தை,தோஷத்தையொட்டி காலைதோறும் அருந்திவந்தால் ஸந்தர்ப்பணத்தால் தோன்றிய நோய்களனைத்தும் நீங்கும். *(8–13)*

கோரைக்கிழங்கு முதலான இந்தப் பொருட்களை உத்வர்த்தனங்கள் (எண்ணெய் இல்லாமலே மேல்பூச்சுகள்) குளியலில் பயன்படுத்தினாலும், எண்ணெய்களுடன் சேர்த்துப் பயன்படுத்தினாலும் தோல் நோய்கள் தணியும்.

செங்கல்வ கோஷ்ட்டம், கோமேதகம், பெருங்காயம், கவுதாரிப் (கிரௌஞ்சம்)பட்சியின் எலும்பு, [2]திரிகடுகம், வசம்பு, ஆடாதொடை, ஏலரிசி, கண்டங்கத்திரி, ஓமம், கல்லூர்வஞ்சி எனுமிவைகளை மோருடனோ, தயிர்த் தெளிவுடனோ, நாவல் பழச்சாற்றுடனோ கலந்து குடித்தால் மூத்திரக்ருச்ரம் என்னும் சிறுநீர் நோயும் பிரமேகமெனும் நீரிழிவு நோயும் நீங்கும்.*(14–16)*

மோர், கடுக்காய், திரிபலா இவற்றின் உபயோகத்தாலும், அரிஷ்டங்களைப் பயன்படுத்துவதாலும் பிரமேகமெனும் நீரிழிவு நோய் நீங்கும்.

திரிகடுகம், திரிபலா, தேன், வாயுவிடங்கம், ஓமம் எனுமிவற்றின் பொடி, சத்துமாவு, நெய் இவற்றை கிருஷ்ணாகரு (கருங்காலி கஷாயத்துடன்) கலந்து குழப்பி அருந்த வேண்டும். *(17–18)*

---

(1) திரிபலா — கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இம்மூன்றின் கூட்டு.

(2) திரிகடுகம்— சுக்கு, மிளகு, திப்பிலி.

திரிகடுகம், வாயுவிடங்கம், முருங்கவிதை, திரிபலா, கடுக ரோகிணி, கண்டங்கத்திரி, முள்ளங்கத்திரி, மஞ்சள், மரமஞ்சள், வட்டத்திருப்பி, அதிவிடயம், ஓரிலை, பெருங்காயம், சரக் கொன்னை, கொடிவேலி, ஓமம், தனியா, சௌவர்ச்சலமெனும் உப்பு, கருஞ்சீரகம், கொட்டைக் கரந்தை இவற்றைப் பொடி செய்து, அப்பொடியையும் எண்ணெய், நெய், தேன் இவைகளை யும் சமபாகங்களாகக் கலந்து அதில் பதினாறு பாகங்கள் சத்துமா வைச் சேர்த்து தயாரித்த ஸந்தர்ப்பணம் எனும் பெயருள்ள இந்த மருந்தை அருந்த வேண்டும். 19–21

அவ்வாறு செய்வதால், சந்தர்ப்பணத்தாலுண்டாகும் பிர மேகங்கள், மூடவாதங்கள், குஷ்டங்கள், அர்சஸ் எனும் நோய், காமாலை, ப்லீஹமெனும் நோய், பாண்டுநோய், சோபமெனும் நோய், மூத்திரகிருச்சிரமென்னும் நீர்ச்சுருக்கு நோய், அரோ சகம், மார்புவலி, காசநோய், இழுப்பு, இருமல், நெஞ்சுப்பிடிப்பு, கிருமிநோய், கிரஹணி நோய், வெள்ளைகுட்டம், மிகப்பருமன் இவையனைத்தும் நீங்குகின்றன.

மற்றும் சடராக்னி, நினைவாற்றல், அறிவு, இவை வளர்ச்சி பெறும். உடற்பயிற்சியைச் செய்து சீரணமான பிறகே மறுபடி யவசோற்றையும், கோதுமைச் சோற்றையும் புசித்து வந்தால் ஸந்தர்ப்பணத்தாலுண்டாகும் நோய்கள் நீங்க, பருமனும் நீங்கும்.

இவ்வாறு ஸந்தர்ப்பணத்தால் தோன்றும் நோய்கள் நீங்க, அபதர்ப்பண சிகிச்சை முறை கூறப்பட்டது. இளைக்கவைத்தல் எனும் அபதர்ப்பணம் என்னும் நோய்களையும் அவற்றிற்கான சிகிச்சைகளையும் இனிக் கூறுவோம். 22-24

### 3, *அபதர்ப்பண நோய்கள்

உடல் வலிவு, சடராக்னி வலிவு, உடல்நிறம் ஓஜஸ் என்னும் மினுமினுப்பு, விந்து, மாமிசம் இவைகள் குறைதல், இரும லுடன் கூடிய காய்ச்சல், பக்கச்சூலை, ருசியின்மை, செவிப் புலனின் வலிவு குன்றுதல், பைத்தியம், புலம்பல், இதய வலி, மலமும் சிறுநீரும் கட்டுப்படுதல், முழங்கால், தொடை த்ரிகம் எனும் முக்கூட்டுப் பகுதிகளில் குத்தல் வலி, கணுக்காலிலும், எலும்பு மூட்டுகளிலும் பிளப்பது போன்ற நோய் என இவைகளும் இவை போன்ற மற்ற வாத நோய்களும், மேல்நோக்கு வாதம் (ஊர்த்வவாதம்) முதலான நோய்களும் அதிகமான அபதர்ப்பணத் தால் உண்டாகும். 25–26

*அபதர்ப்பணம் – உடலை இளைக்கச் செய்யும் சிகிச்சை

அந்த நோய்களுக்கு உடனே குணம் தரவல்ல அல்லது அடிக்கடி பயன்படுத்துவதால் நன்மை தரவல்ல 'ஸந்தர்ப்டண' மருந்துகளைக் கொடுக்க வேண்டும். (27–30)

எதிர்பாராமல் திடீரென்று உடலிளைப்புக் கண்டவன் தர்ப்பணச் சிகிச்சையால் உடனே வலிவை அடைவான். நீடித்துப்பலம் குன்றி இளைத்திருப்பவனுக்கு உடல், சடராக்னி, தோஷங்கள், மருந்துகள், அளவு, காலம் என்பவற்றை அறிந்து ஸந்தர்ப்பண சிகிச்சையை மெள்ள மெள்ள நீடித்து அளிக்கவேண்டும். (31–32)

## 4. தர்ப்பண யோகங்கள்

அபதர்ப்பணச் சிகிச்சையால் இளைத்தவனுக்கு மாமிசரசம், பால், நெய், ஸ்நானம், வஸ்திகள், எண்ணெய்க்குளியல் என்பவைகளும் தர்ப்பணத்தை உண்டாக்கும். இத்தகைய மற்ற தர்ப்பணங்களும் நன்மையளிப்பவை.

இருமல், காய்ச்சல் இவைகளுடன் கூடியவர்கள், இளைத்தவர்கள், மூத்ரக்ருச்ரம் என்னும் சிறுநீர் நோயுள்ளவர்கள், தாகமுள்ளவர்கள், மேலெழும் வாதமுள்ளவர்கள் எனும் இவர்களுக்கு நன்மை பயக்கும் தர்ப்பணத்தைக் கூறுவோம்.

சர்க்கரை, அரிசித்திப்பிலி, எண்ணெய், நெய், தேன் இவைகளைச் சமபாகமாகவும், சத்துமாவை இவற்றிற்கு இரட்டிப்பாகவும் எடுத்துத் தயாரித்த [1]'மந்த்தம்' எனும் மேற்கூறிய நோயாளிகளுக்குச் சிறப்பாக இருக்கும். வீரிய வளர்ச்சியை உண்டாக்கும்.

சத்துமாவு, கள், தேன், சர்க்கரை இவற்றை தர்ப்பணமாக பயன்படுத்துவதால் வாதம், மலம், சிறுநீர், கபம், பித்தம் இவை அனுகூலமான போக்கைக் கொண்டிருக்கும்.

கரும்புப்பாகு, சத்துமாவு, நெய், தயிர் மீதான தேட்டநீர், புளிப்புக்காடி எனும் இவைகளை தர்ப்பணமாகப் பயன்படுத்தினால் சிறுநீர்க்கடுப்பு நோய், உதாவர்த்தமெனும் நோய் இவை நீங்கும்.

கர்ஜூரிக்காய், சிறுதிராட்சைப்பழம், டளி, புளிப்புமாதுளைப் பழம், சிற்றீச்சம்பழம், நெல்லிப்பழம் இவற்றுடன் கூடிய மந்த்தம் எனும் மருந்து கட்குடியினால் உண்டான நோய்களைப் போக்கும். 33-38

---

1. மந்த்தம் அவசியமான மருந்துப்பொருட்களை 1க்கு நான்கு மடங்கு தண்ணீர் சேர்த்து ஒரு மட்பாண்டத்தில் ஊற்றிக் கடைவது மந்த்தம் எனப்படும்.

இனிப்பாகவும், புளிப்பாகவும் உள்ள பொருட்களால் தயார் செய்த மந்த்தத்தில் எண்ணெய் கலந்தோ, சலக்காயலோ நீருடனோ, வறட்சியாகவோ பயன்படுத்தினால் உடனே ஸந்தர்ப் பணமுண்டாகும். மற்றும் ஒருநிலைப்பாட்டையும் நிறத்தையும் வலிவையும் உண்டாக்கும். *(39)*

**முடிவுரை**

சந்தர்ப்பணத்தால் உண்டாகும்நோய்,அவற்றிந்சானசிகிச்ஸச, அபதர்ப்பணத்தினால் உண்டாகும் நோய், அவற்றின் சிகிச்ஸை என இவைகள் இந்த ஸந்தர்ப்பணீயாத்தியாயத்தில் விவரிக்சப் பட்டன. *(40)*

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரக மாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரசஸம்ஹிதையில்
ஸூத்திரஸ்தானத்தில் ஸந்தர்ப்பணீயமெனும்
இருபத்துமூன்றாவது அத்தியாயம்
முற்றும்.

## இருபத்துநான்காவது அத்தியாயம்

# *விதிசோணிதீயம்

இனி பகவான் ஆத்திரேயர் கூறிய ''விதிசோணிதீயம்'' எனும் அத்தியாயத்தை விளக்குவோம். *(1–2)*

தேசம், காலம், உறைவிடம் இவைகளைப் பற்றிய உடலுக் கொவ்வும் முறை இதுவரையில் கூறப்பட்டது. அத்தகைய உணவு, நன்னடத்தை இவற்றின் முறைகளை நன்கு பின்பற்றி வந்தால், இரத்தம் சுத்தமாக இருக்கும். *(3)*

### 1. சுத்தமான இரத்தத்தின் பயன்

சுத்தமான இரத்தம் உயிரினங்களுக்கு வலிமை, நிறம், இன்பம், ஆயுள் இவற்றைத் தரும். இரத்தத்தின் தூய்மையையொட்டியே உயிரினங்களின் நல்வாழ்க்கை அமைகிறது. *(4)*

### 2. இரத்தம் கெடுவதற்கான காரணங்கள்

கெட்டுப்போன, மிக்க விறுவிறுப்பான, உஷ்ணவீரியமுள்ள மதுக்களையும் அவைபோன்ற மற்ற பானங்களையும் அருந்துதல், மிக்க உவர்ப்பு, எரிப்பு, புளிப்பு, காரம் எனும் சுவைகளைக் கொண்ட பொருட்களைப் புசித்தல், கொள், உளுந்து, காராமணி, எள், எண்ணெய் இவைகளை மிகுதியாய்ப் புசித்தல், கிழங்குகள், (பிண்டாலு) முள்ளங்கி முதலியவற்றையும், எல்லா வகையான கீரை வகைகள் இவற்றைப் புசித்தல், எப்போதும் நீர், நீர்ப்பாங்கான இடம், பொந்து, இவற்றில் வாழும் உயிரினங்கள், குத்தித்தின்னும் (ப்ரஸஹ) பிராணிகள் இவைகளுடைய இறைச்சிகளைப் புசித்தல்,

தயிர், புளித்த ஏடு, சுக்தம் எனும் காடி, சுரை, சௌவீரமெனும் கள்வகைகளையும் ஒன்றுக்கொன்று எதிரிடையான, கெட்டுப் போன, கெட்டநாற்றம் கொண்ட பொருட்களையும் பயன் படுத்தல்,

---

*விதிசோணிதீயம்— விதி என்றால் உணவு முறை, நன்னடத்தை என்பனவாம். சோணிதம் என்பது இரத்தத்தை குறிக்கும். இவைகளைப் பற்றி விளக்கும் அத்தியாயமானதால் இப்பெயர் பெறும்.

திரவமான, எண்ணெய்ப் பசையுள்ள, பளுவான பொருட்களை அளவுக்கு மேலாகப் புசித்தல், பகலுறக்கம் கொள்ளல், கோபம், வெயில், நெருப்பு இவைகளை அதிக அளவில் அடைதல், வாந்தியின் வேகத்தைத் தடுத்து நிறுத்தல், தக்க நேரத்தில் தோஷத்தை வெளியிடாமல் இருத்தல், ஓய்வு, தாக்குதல், துன்பம் இவற்றை அடைதல்,

சீரணமாகாதபோது புசித்தல், இலையுதிர்காலத்தில் (சாத்) இயற்கை எனப் பல காரணங்களால் இரத்தம் கெட்டுவிடும். அதனால் இரத்தத் தொடர்பான பலவகை நோய்கள் தோன்றும். (5–10)

## 3. இரத்தம் கெடுவதால் தோன்றும் நோய்கள்

வாய்பூத்தல், கண்கள்சிவத்தல், மூக்கும் வாயும் கெட்டநாற்றம் கொண்டிருத்தல், குன்மம், உபகுசம் என்னும் முகத்திலுண்டாகும் நோய், விஸர்ப்பம் (அக்கி) முதலியன, இரத்தபித்தம், ப்ரமீலகம் (மயக்க நிலை), சீழ்க்கட்டி (வித்ரதி), ரத்தமேகம் (இரத்தம் கலந்த சிறுநீர்), பெரும்பாடு (பிரதரம்), வாதரக்தம், நிறமாற்றம், பசியின்மை, (அக்னி மந்தம்) நீர்வேட்கை, உடல்பளுவாதல் அதிகத்தாபம், அதிக வலிமைக்குறைவு, ருசியின்மை, தலைவலி, அன்னபானங்களை உட்கொண்டால் எரிச்சல், கசப்பாகவும், புளிப்பாகவும் உள்ள ஏப்பம், அசதி, அதிகமான கோபம், மதி மயக்கம், வாய் உப்புக்கரிப்புடனிருத்தல், அதிக வேர்வை, உடல் நாற்றம், மதம், நடுக்கம், குரல் கம்முதல், சுறுசுறுப்பின்மை, அதிக தூக்கம், இருள் கவிந்தது போலிருத்தல், தினவு, சொறி, சிறங்கு, குட்டம் என இம்மாதிரியான நோய்கள் தோன்றும். சிகிச்சைக்கு கட்டுப்படும் நோய்கள் அதாவது சீதவீரியம், உஷ்ண வீரியம், ஸ்நிக்த குணம், ரூக்ஷகுணம் மற்றும் இத்தகைய வேறு குணங்களைக் கொண்ட சிகிச்சையாலும் நோய் தணியாதிருந்தால் அத்தகைய நோய்கள் இரத்தத்தால் தோன்றியவை என்று அறிய வேண்டும். (11-17)

## 4. இரத்தத்தினால் உண்டாகும் நோய்களுக்குச் சாதாரண சிகிச்சை

இரத்தம் கெட்டுத் தோன்றிய நோய்களுக்கு இரத்த பித்த நோய்க்குரிய சிகிச்சையையே செய்ய வேண்டும். மற்றும், மலங் கழிக்கச் செய்தல், உணவைக் கட்டுப்படுத்தல், பட்டினி (லங்கணச் சிகிச்சை), இரத்தத்தை வெளிப்படுத்துதல் இவற்றையும், வலிவு, தோஷம் இவற்றின் அளவையொட்டி, இரத்தம் தூய்மையடையும்வரை நோயுண்டான இடத்தையொட்டியாவது இரத்தத்தை வெளிப்படுத்தும் செயலைச் செய்ய வேண்டும். (18–19)

### 5. வாதம் முதலானவற்றால் கெட்ட இரத்தத்தின் அறிகுறிகள்

வாதத்தினால் கெட்ட இரத்தம் சிவந்து பரவலாய், நுரையுடன் கூடி லேசாகவும் இருக்கும்.

பித்தத்தால் கெட்ட இரத்தம் மஞ்சளாகவும், கருப்பாகவும் இருக்கும். அது சூடாக இருப்பதால் வெகு நேரத்திற்குப் பிறகே கெட்டியாகும்.

கபத்தினால் கெட்ட இரத்தம் சிறிது வெளுத்து குழகுழப்பாய், நார்களைப்போல் மந்தமாகவும் இருக்கும்.

இரண்டிரண்டு தோஷங்களால் கெட்ட இரத்தம் இரண்டிரண்டு தோஷங்களின் அறிகுறிகளைக் கொண்டு இருக்கும்.

மூன்று தோஷங்களால் கெட்ட இரத்தம் மூன்று தோஷங்களின் அறிகுறிகளைக் கொண்டிருக்கும். (20–21)

### 6. சுத்தமான இரத்தத்தின் அறிகுறிகள்

பொன், மின்மினிப்புழு, தாமரை மலர், செம்பஞ்சுக்குழம்பு, குன்றி மணி இவற்றின் நிறம் கொண்ட இரத்தத்தைச் சுத்தமானதென்று அறிய வேண்டும். (22)

### 7. இரத்தத்தை வெளியேற்றியபின் செய்ய வேண்டியவை

இரத்தத்தை வெளியேற்றியபின் அதிகச் சூடு, அல்லது குளிர்ச்சி, லகுகுணம் (சடராக்னியை வளர்க்கும் தன்மை) இவைகளைக் கொண்ட அன்னபானங்களை அருந்த வேண்டும். அச்சமயத்தில் இரத்தம் முதலிய தாதுக்கள் நிலையாக இரா. எனவே சடராக்னியை முக்கியமாகக் காக்க வேண்டும். (23)

### 8. சுத்தமான இரத்தமுள்ளவனின் அறிகுறி

உடலின் ஒளியும், புலன்களும் தெளிவாக இருத்தல், புலன்களுக்கு பொருட்களில் விருப்பம், சடராக்னி, மலக்கழிப்புமுதலிய வேகங்கள் நல்ல முறையில் இருத்தல், இன்பம், ஊட்டம், வலிவு, இவை குன்றாமல் இருத்தல் இவ்வடையாளங்களுடன் கூடிய மனிதனைச் சுத்த ரத்தம் உடையவன் என அறிய வேண்டும். (24)

### 9. இரத்தக்குழாய் முதலானவை கெடுவதால் தோன்றும் நோய்கள்

தகாத உணவு உட்கொள்பவர், ரஜஸ், தமஸ் என்னும் மனக்குற்றமுள்ளவர் ஆகியவர்க்கு, இரத்தம், ரசம், ஸம்ஜ்ஞா என்னும் இவை பாய்ந்தோடும் குழாய்களைச் சீற்றமுற்ற தோஷங்கள் தனியாகவோ, சேர்ந்தோ அடைத்து அவற்றைக் கெடுத்து

[1]மதம், மூர்ச்சை சந்நியாஸம் எனும் நோய்களைத் தோற்றுவிக்கும்.

இந்நோய்களில் ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று முறையே காரணம், லக்ஷணம், சிகிச்சை என்பவற்றால் மிக்க வலிவுகொண்டவைகளாக இருக்கும். (25–27)

## 10. மதம் என்னும் நோயின் அறிகுறிகள்

வாதம், வலிவிழந்த இதயத்தை அடைந்து, மனத்தைக் கலக்கி, அறிவு மயக்கத்தை தோற்றுவிக்கும். இதேபோல் பித்தம், கபம் எனும் இவையிரண்டும் மனதைக் கலக்கி, அறிவுக்கு மயக்கத்தை உண்டாக்கும்.

வெவ்வேறு தோஷங்களால் உண்டாகும் தனிப்பட்ட அறிகுறிகளைப்பற்றி விளக்குவோம். விளங்காமல் விரைவாகப் பேசுதல், சஞ்சலமான தடைப்படுகின்ற செயல்களைக் கொண்டிருத்தல், வறட்சி, கருப்பு, சிவப்பு நிறத்துடன் கூடிய உடலமைப்பு எனும் இந்த அடையாளங்களுடன் கூடிய மனிதனை வாதத்தால் உண்டான மதம் கொண்டவன் என அறிதல் வேண்டும்.

சினம், கடினமான பேச்சு, அடிப்பதிலும், சண்டையிடுதலிலும் விருப்பம், சிவப்பு, மஞ்சள், கருப்பு நிறமுள்ள உருவம் எனும் இந்த அறிகுறிகள் கொண்ட மனிதனைப் பித்தத்தினாலான மதம் கொண்டவனென அறிய வேண்டும்.

சம்பந்தமில்லாத மிதமான பேச்சு, செயலில் பின்னடைதல், சோம்பல், வெளுப்பு வண்ணம், எப்பொழுதும் வேறு ஞாபகம் என இந்த அறிகுறிகளைக் கொண்டவனை கபத்தினாலுண்டான மதம் கொண்டவனென அறிய வேண்டும்.

மூன்று தோஷங்களால் தோன்றிய மதத்தில் அவ்வற்றிற்கு உரிய அறிகுறிகள் அனைத்தும் இருக்கும்.

மதுவினால் தோன்றும் மதம்போல், தோஷச் சேர்க்கையால் தோன்றும் மதம் விரைவிலுண்டாகி விரைவிலேயே தணியும். கள், நஞ்சு, இரத்தம் இவற்றால் உண்டாகும் மதங்களனைத்தும் வாதம், பித்தம், கபம் ஸன்னிபாதம் இவற்றில் ஏதாவது ஒன்றில்லாமல் தோன்ற முடியாது. (28–34)

## 11. மயக்கத்தின் அறிகுறிகள்

ஆகாயத்தை நீலமாகவோ, கருப்பாகவோ, கரும் சிவப்பாகவோ பார்த்து மயங்கித் தெளிவடைதல், நடுக்கம், உடல்வலி,

1. மதம் – வெறி

மார்பில் வலி, இளைத்தல், உடலில் கருநிறம், சிவப்பு நிறம் என இவ்வறிகுறிகளும் வாதத்தினால் தோன்றிய மயக்கத்தில் காணப் படும்.

ஆகாயத்தை சிவப்பு, பச்சை, மஞ்சள் நிறத்தில் பார்த்து மயங்கி உடல் வேர்த்து மறுபடியும் தன்னறிவு கொள்ளுதல், தாகம், அதிகமான தாபம், சிவப்பு, மஞ்சள் நிறத்தாலான கலக் கத்துடன் கூடிய கண்களைக் கொண்டிருத்தல், மலம் அதிகமாக வெளிவருதல், மஞ்சளான உடலின் நிறம் எனும் இவ் வறிகுறிகள் பித்தத்தினால் தோன்றிய மூர்ச்சை நோயில் காணப் படும்.

ஆகாயத்தை மேகவண்ணத்துடன் கொண்டதாகவோ, இருண்ட மேகத்தால் சூழப்பட்டதைப் போலோ பார்த்து மோகத்தை அடைந்து மறுபடியும் வெகு காலத்திற்குப் பிறகு சுய நிலை பெறுதல், உடல் தடிப்பான துணிகளாலோ, நனைந்த தோலினாலோ சுற்றப்பட்டது போலிருத்தல், வாயில் நீர் ஊறு தல், குமட்டல் எனும் இந்த அறிகுறிகள் கபத்தினாலுண்டான மூர்ச்சை நோயில் காணப்படும்.

மூன்று தோஷங்களாலும் உண்டான மூர்ச்சை நோயில் மூன்று தோஷங்களின் அறிகுறிகள் இருக்கும். மற்றும் இது அபஸ்மாரம் என்னும் நோயில் தோன்றும் பயங்கரமான அறிகுறிகள் மட்டு மின்றி மற்ற அறிகுறிகளுடன் கூடி உயிரை உடனே நீக்கிவிடும்.

மதத்திலும் மூர்ச்சையிலும் தோஷங்கள் வேகங்களைத் தோற்றுவித்தபிறகு தாமாகவே தணிந்துவிடும். சந்நியாஸமென் னும் நோய் மருந்து ஏதும் இல்லாமலேயே தணியாது.

(35–41)

## 12. *சந்நியாஸமென்னும் நோயின் அறிகுறிகளும் சிகிச்சையும்

நன்கு வளர்ந்த தோஷங்கள், இதயத்தைச் சார்ந்திருந்து வாக்கு உடல் மனம் இவற்றின் செயல்களைத் தடுத்து, வலிவு குன்றிய மனிதனை அசையாதபடி செய்யும். இதுவே சந்நியாஸ நோய் எனப்படும்.

இதனால் அசையாத தடிபோல் வளையாமல் இறந்தவனைப் போல் தோற்றம் அளிப்பவருக்கும் பயனளிக்கக்கூடிய செயல் களைச் செய்யாவிடில் விரைவில் மரணம் நேரிடும்.

---

*சந்நியாஸம் — வாதமாவது, பித்தமாவது வளர்ந்து சந்நிபாதத் தால் உண்டாகும் ஒருவகை மூர்ச்சை நோய்.

ஆழமாக உள்ள தண்ணீரில் மூழ்கும் பாத்திரத்தை அடியில் போகவிடாமல் தடுத்துக் காப்பதுபோல் சந்நியாஸமெனும் நோயால் வருந்துபவனை உடனே சிகிச்சை செய்து காப்பாற்ற வேண்டும்.

கண்ணில் மை தீட்டுதல், [1]அவபீடன மருந்தை மூக்கிலிடு தல், புகைபிடித்தல், புகைகள், [2]ப்ரதமன முறையில் மூக்கில் மருந்திடுதல், ஊசிகளால் குத்துதல், ஆயுதங்களைக் கொண்டு சுடுதல், நகத்தின் இடுக்கில் குத்தி துன்பத்தை விளைவித்தல், பூனைக்காலி இலைகளால் உடலைத் தேய்த்தல், தலைமயிர் களையும், உடல் உரோமங்களையும் இழுத்தல், பற்களால் கடித்தல், உடலைத் தேய்த்தல் என இச்சிகிச்சையால் உடனே தெளிவை ஏற்படுத்த வேண்டும்.

தீட்சணமாகவும், அதிகக் காரத்துடன் கூடிய பலவகையான கள் வகைகளை அந்த நோயாளியின் வாயில் முயன்று ஊற்றி வர வேண்டும்.

சுக்குடன் கலந்த மாதுளை ரசம், கள், புளிப்புக்காடி, பெருங் காயம், திரிகடுகம் இவற்றுடன் கூடிய சௌவீரமெனும் மதுவைக் கொடுக்க வேண்டும்.

இவ்வாறு உணர்வு உண்டாகும்வரை செய்து பிறகு இவனுக்கு இலகுகுணமுள்ள உணவைத் தரவேண்டும்.

மற்றும் வியப்பையுண்டாக்குவதும், உணர்வை வளர்ப்பதும் மனதுக்குப் பிடித்ததுமான கதைகள், உள்ளத்தைக் களிக்கச்செய் யும் பாட்டுகள், வாத்தியங்கள், ஓசைகள், விசித்திரப்பொருட்கள் இவைகளால் மகிழ்வூட்ட வேண்டும்.

மற்றும் மலங்கழியச் செய்தல், வாந்தியெடுக்கச் செய்தல், புகைபிடித்தல், மைதீட்டுதல், (கவலகிரகமெனும்) வாய் கொப் பளித்தல், இரத்தத்தை வெளிப்படுத்தல், உடற்பயிற்சி, உடலைத் தேய்த்தல் எனுமிவைகளால் சிகிச்சை புரிந்து மனத்தை மோகக் காரணங்களிலிருந்து காக்க வேண்டும். *(42–51)*

### 13. மூர்ச்சை, மதம் இவற்றின் சிகிச்சை

மூர்ச்சை எனும் நோயுள்ளவனுக்கும், மதநோயுள்ளவனுக் கும், ஸ்நேஹ-ஸ்வேதங்கள் அதாவது முறையே எண்ணெய் தேய்த் தல், வேர்வையுண்டாக்குதல் எனும் சிகிச்சைகளையும், தோஷத்

(1) அவபீடனம் – பச்சிலைகளைப் பிழிந்து அவற்றின் சாறு களால் செய்யப்படும் மூக்கில் விடும் சிகிச்சை.

(2) ப்ரதமனம் – வாயால் ஊதி உள்ளே செலுத்தல்.

திற்கும் வலிவுக்கும் தக்கபடி [1]ஐவகைக் கருமங்களைச் செய்விக்க வேண்டும்.

இருபத்தெட்டு வகைகளான பொருட்களின், கல்கத்தால் தயாரிக்கப்பட்ட கல்யாண கிருதம், மஹாதிக்தகக்ருதம், திக்த ஷட்பலகிருதம் இவற்றைக் கொடுக்க வேண்டும்.

நெய், தேன், சர்க்கரை, இவற்றுடன் கூடிய திரிபலா, சிலாசத்து, பாலுடன் திப்பிலி, சித்திரமூலம் போன்ற ரஸாயன யோகங்கள், பானையில் பத்து ஆண்டுகள் வைத்துப் பழகிய நெய் இவைகளைப் பயன்படுத்த வேண்டும்.

இரத்தத்தை முறைப்படி வெளிப்படுத்தி நல்ல சாத்திரங் களைப் படித்துப் பெரியோர்களை வழிபடுவதால் மதம், மூர்ச்சை எனும் நோய்கள் நீங்கும். *(52–58)*

### முடிவுரை

சுக்தம், சுத்தமில்லாத இரத்தத்தின் லட்சணம், அதற்குக் காரணம், இரத்த தோஷங்களால் உண்டாகும் நோய்கள், அவற் றிற்குச் சிகிச்சைகள், மதம், மூர்ச்சை சந்நியாஸம் இவற்றிற்குக் காரணங்கள், அறிகுறிகள், சிகிச்சைகள் என இவையனைத்தும் விதிசோணிதீயம் எனும் இந்த அத்தியாயத்தில் கூறப்பட் டன.

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் சோதிக் கப்பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானத்தில் ''விதிசோணிதீயம்'' எனும் இருபத்து நான்காம் அத்தியாயம் முற்றும்.

---

(3) ஐவகை கருமங்கள் — (பஞ்சகர்ம)—வமனம், விரேசனம், நிரூஹவஸ்தி, அநுவாஸனவஸ்தி, நஸ்யம் என்பவை.

# இருபத்தைந்தாவது அத்தியாயம்

## *யஜ்ஜப்புருஷீயம்

பகவான் ஆத்திரேய முனிவர் கூறிய வகையில் இனி ''யஜ்ஜப்புருஷீயம்' எனும் அத்தியாயத்தை விளக்குவோம். *(1–2)*

### 1. புலனியக்கம் உள்ள உடல், நோய் இவை பற்றிய விளக்கம்

தருமமே உருவான ஆத்திரேய பகவானின் முன்னிலையில் கூடியிருந்த முனிவர்களிடையே ஆன்மா, புலன்கள், மனம், புலப் பொருட்கள் எனும் இவற்றின் தொகுப்பாகிய புருஷனும், இந்த புருஷனுக்கு உண்டாகும் நோய்களும் முதலில் எவ்வாறு தோன்றின ? என்று விவாதம் தொடங்குகிறது. *(3–4)*

### 2. காசி அரசன் வாமகனின் வினா

அப்பொழுது வாமகன் எனும் காசிநாட்டரசன் முனிவர் பெருமக்களை நெருங்கி, வணங்கி, பேரருள் செறிந்த இந்த வார்த்தைகளைக் கூறினான். அதாவது :- ''மனிதன் (புருஷன்) எதைக் கொண்டு பிறக்கிறானோ அதனாலேயே நோய்களும் பிறக்கின்றனவா இல்லையா ?

இவ்வாறு காசிராஜன் கேட்க, ஆத்திரேயர் முனிவர்களை நோக்கி, பெருமதிப்புக்குரியீரே, அளவு கடந்த ஞானமும், விஞ்ஞானமும் பெற்று ஐயப்பாடு சிறிதும் இல்லாத தாங்களே காசிராஜனின் ஐயத்தை நீக்கத்தக்கவர்கள் என்றார். *(5–7)*

அப்போது முதலில் பாரீக்ஷி என்னும் மௌனத்கல்ய முனிவர், கீழ்க்கண்டவாறு கூறலானார்: ''புருஷன் ஆன்மாவினால் பிறப்பான். நோய்களும் ஆன்மாவினால் பிறக்கும். இவ்விரண்டிற்கும் ஆன்மாவே காரணமாகும். இவ்வான்மா செயலைப் புரிகின்றது.

---

*யஜ்ஜப்புருஷீயம் – ஆயுர்வேதத்தில் புருஷன் என்பது ஐம்பெரும் பூதங்கள், ஆன்மா இவைகளின் கூட்டு எனப்படும். ஆதலின் புருஷனாகிய உடலும், நோயும் எவ்வாறு தோன்றுகின்றன என்பனவற்றை விளக்குவதால் இவ்வாறு பெயர் பெற்றது.

மற்றும் செயலில் பயனையும் அனுபவிக்கின்றது. ஆன்மாவின்றி இன்பதுன்பங்கள் விளையா'' என்று கூறி முடித்தார். (8–9)

இதைக்கேட்ட சரலோமா என்பவர் அது சரியல்ல; துன்பத்தை வெறுக்கும் ஆன்மாவானது துன்பத்தை விளைவிக்கும் நோய்கள் தனக்குண்டாகும்படி செய்துகொள்ளாது. எனவே நோய்க்கு ஆன்மா காரணமாக முடியாது. சத்துவம் எனும் மனமே ரஜசு, தமஸ் எனும் குணங்கள் பரவப்பெற்று, உடலும் நோய்களும் தோன்றுவதற்குக் காரணமாகும் என்றார். (10–11)

அது சரியல்ல, என்று வாயோர்விதர் மறுத்துக் கூறினார். உடலில்லாமல், உடலுடன் தொடர்புகொண்ட நோய்களும் மனமும் இருக்க முடியாது. எனவே மனமொன்றே காரணமாக இருப்பதற்கில்லை. உயிரினங்களும், எல்லா நோய்களும் ரசத்தால் தோன்றுபவை. நீரினாலேதான் ரசங்கள் பிறக்கும். எனவே புருஷனும், நோய்களும் தோன்றுவதற்கு நீரே காரணமாகும் எனக் கூறினார். (12–13)

அவ்வாறல்ல, என்று ஹிரண்யாக்ஷரென்பவர் பகர்ந்தார். ''ஆன்மாவும் புலன்களுக்கெட்டாத மனமும் ரசத்தினால் தோன்றா. ஒலி முதலியவைகளால் தோன்றும் நோய்களும் உள்ளன. எனவே ரசங்கள் காரணமாக இருக்க முடியாது. ஐவகைப் பூதங்கள், ஆன்மா எனும் இந்த ஆறு தாதுக்களால் புருஷன் உண்டாகிறான். அந்த ஆறு தாதுக்களால்தான் நோய்களும் தோன்றுகின்றன. 'புருஷன் அறுவகைத் தாதுக்களால் தோன்றுகிறான்' என்று முன்னோர்களான சாங்கிய மதத்தவர்களும் கூறியுள்ளார்கள் என்றார். (14–15)

'அவ்வாறல்ல', என்று சௌனகரென்பவர் கூறியதாவது :- தாய் தந்தையரில்லாமல் அறுவகை தாதுக்களால் மட்டும் ஏதும் உண்டாகாது. எனவே அறுவகை தாதுக்கள் மட்டும் காரணமாகா. மனிதர்களால் மனிதர்களும், பசுக்களால் பசுக்களும் குதிரைகளால் குதிரைகளும் பிறக்கின்றன. தாய் தந்தையர்களைச் சேர்ந்த பிரமேகம் முதலான நோய்களும் மக்களுக்குத் தோன்றுகின்றன. ஆகவே தாய் தந்தையர்களே காரணமாவார்கள் என்றார். (16–17)

அது அப்படியல்ல, என்று பத்திரகாப்பியரென்பவர் தொடங்கிக் கூறியதாவது :- குருடனால் குருடன் பிறப்பதில்லை, முதன் முதலாகத் தாய் தந்தையர் பிறப்பதற்குக் காரணம் உன் மதத்தில் காணப்படவில்லை. எனவே, தாய் தந்தையர் காரணமாக

முடியாது. வினையின் காரணமாகப் பிராணி பிறக்கிறது. அதன் நோய்களும் கருமமெனும் வினையால் தோன்றுகின்றன. முன் பிறப்பில் செய்த வினையில்லாமல் மனிதனோ (புருஷனோ) அவனுக்குண்டாகும் நோய்களோ தோன்றமுடியாது என்று கூறினார். *(18–19)*

பரத்துவாஜரோ, அது தவறு. வினைக்குமுன்பாக கர்த்தா (செய்பவன்) இருக்க வேண்டும். எந்த வினையால் மனிதன் (புருஷன்) பிறவி எடுக்கிறானோ அந்த வினை முன்பு யாரா லாவது செய்யப்பட்டிருக்க வேண்டும்.

எனவே வினை காரணமாகமுடியாது, நிலம், நீர், வாயு, தேயு என இந்நான்கும், கடினத்தன்மை, திரவத்தன்மை, அசை யும் தன்மை, சூடு எனும் நான்கு குணங்களும் முறையே இயற்கை யாகவே தோன்றுவனபோல், புருஷனும், நோய்களும், இயற்கை யாகவே தோன்றுகின்றன என்று பறைந்தார். *(20–21)*

### 3. காங்காயனர் கொள்கை

காங்காயனரென்பவர், அப்படியல்ல என்று மறுத்தார். ''இயற்கையாகவே பாவப் பொருட்கள் யாவும் தோன்று வதோ தோன்றாமலிருப்பதோ நடக்குமானால் யாகம் முதலிய செயல்கள் பயனற்றனவாகிவிடும். எனவே சுபாவம் (இயற்கை) காரணமாக முடியாது. எல்லையற்ற சங்கல்பம் கொண்ட, பிரும்ம தேவனின் மகனான பிரஜாபதி என்பவர் சேதனாசேதன உருவம் கொண்ட இன்ப துன்பங்களே தோன்றுவதற்குக் காரணமாக இருக்கும் என்றார். *(22–23)*

### 4. பிக்ஷு முனிவரின் மறுப்பு

அது அப்படியல்ல என்று பிக்ஷு எனும் ஆத்திரேயர் மறுத்துக் கூறியதாவது :- ''மக்களின் மேன்மையைக் கோரும் பிரஜாபதி, தன்னால் படைக்கப் படுபவர்களுக்குத் துன்பங்களை ஒரு கொடி யவன்போல் தோற்றுவிக்கமாட்டார். எனவே பிரஜாபதி என் பவர் கூறியதும் இல்லை. மனிதன் காலத்தால் பிறக் கிறான். அவனுக்குத் தோன்றும் நோய்களும் காலத்தால் பிறக் கின்றன. இவ்வுலகமனைத்தும் காலத்தின் பிடியிலிருக்கும். எனவே எல்லாவற்றிற்கும் காலமே காரணமாக இருக்கும் என்றார். *(24–25)*

### 5. புனர்வசு ஆத்ரேயரின் அறிவுரை

இவ்வாறு கூறுகின்ற முனிவர்களை நோக்கி ஆத்திரேயராகிய புனர்வசு கீழ்க்கண்டவாறு உரைத்தார். இவ்வாறு வாதிக்கவேண்

டாம். ஒரு பட்சத்தைச் சார்ந்து வாதித்தால் உண்மையை அறிய முடியாது.

வாதத்தையும், பிரதிவாதத்தையும் முடிவாக நினைத்து வாதிப்பவர்கள், எண்ணெய்ச் செக்கு மரத்தின்மீது அமர்ந்தவன் சுற்றிச்சுற்றி வந்து முடிவை அடையாமல் தவிப்பதுபோல், உண்மையான முடிவைப் பெற முடியாது.

ஆகவே வாதங்களின் மோதல்களை விடுத்து முடிவான அறிவைப்பற்றிச் சிந்தியுங்கள், தமோ குணம் போகாவிடில் அறிய வேண்டிய பொருளில் அறிவு ஏற்படாது.

எந்தப் பொருட்களின் செழுமை மனிதனைத் தோற்று விக்குமோ அந்தப் பொருட்களின் அழிவே பற்பல நோய்களைத் தோற்றுவிக்கும். *(26–29)*

## 6. வாமகரின் வினா

ஆத்திரேயரின் இந்த அறிவுரைகளைக் கேட்டு காசிமன்ன னாம் வாமகர் ஆத்திரேயரை நோக்கி மற்றொருமுறை பகர்ந் தார். ''சுவாமி, செல்வத்தினால்தோன்றும் மனிதனுக்கும், ஆபத் தினால் தோன்றும் நோய்களின் வளர்ச்சிக்கும் காரணம் யாது ? என்று வினவினார்.

நன்மை பயக்கும் உணவே மனித வளர்ச்சிக்குக் காரணம். தீய உணவே நோய்களுக்குக் காரணம் என்று வாமகனை நோக்கி ஆத்திரேயர் பதிலுரைத்தார். *(30–31)*

## 7. அக்னிவேசரின் வினா

இவ்வாறு உரைத்த ஆத்திரேயரை நோக்கி அக்நிவேசர் கூறு கிறார்—சுவாமீ! நன்மை பயக்கும் உணவு வகைகளும், தீமையளிக் கும் உணவுப் பொருட்ளும் அளவு, காலம், சேர்க்கை(தயாரிப்பு) தேசம், உடல், தோஷம், புருஷன் என்பனவற்றின் வெவ்வேறு நிலையையொட்டி எதிரிடைக் குணங்களைத் தோற்றுவிக்கின்றன.

எனவே நல்ல உணவுகள், தீய உணவுகள் இவற்றின் சரியான அறிகுறியை எவ்வாறு அறியமுடியும் ? என்று கேட்க,

## 8. ஆத்ரேயர் மறுமொழி

அதற்கு ஆத்திரேயர் கீழ்க்கண்டவாறு பதிலுரைத்தார் — அக்னிவேசா ! சமமாக உள்ள சரீரத்தாதுக்களை இயற்கை நிலையில் இருத்துளதும் ஏற்றத்தாழ்வுடன் இருப்பவைகளையும் சமமாகச் செய்வதுமான உணவுப்பொருட்களே நன்மை பயக்கும் உணவுப் பொருளென அறிக.

இதற்கு எதிரிடையானவற்றைத் தீய உணவுப்பொருள் என்றறிய வேண்டும். இதுவே நன்மை, தீமையான உணவுகளின் சரியான அறிகுறியாகும். (32—33)

இவ்வாறு உரைத்த ஆத்திரேயரை நோக்கி அக்னிவேசர் கூறியதாவது:- ''சுவாமீ! மேற்கண்டவாறு கூறிய கருத்துக்களை மருத்துவர்கள் அனைவரும் அறியமுடியாது.'' என்று வினவ ஆத்திரேயர் இவ்வாறு பதில் கூறுகிறார். அக்னிவேசா! குணங்கள், திரவியங்களின் இயல்பு, செயல் உறுப்புக்கள் என இவைகளால் உணவின் உண்மை, அளவு இவைகளை அறிந்தவர்கள் முன் கூறிய விஷயத்தை அறிய விருப்பம்கொள்ளுவர்.

பலவகையான மருத்துவர்களும் விஷயத்தை அறியும்வண்ணம் அளவு முதலியவற்றை எடுத்துக்கூறி அதை விளக்கினோம். சுவைகளில் பலவகையான மாற்றுக்கருத்துகள் உள. உணவு கொள்ளும் முறைகளை இலக்கணங்களோடும் உறுப்புகளோடும் விவரிப்போம். (34—35)

உண்ணப்படுதல் என்னும் தன்மையால் உணவு ஒரே வகைப் படும். அசையாத் தன்மையுடையது, அசையும் தன்மையுடையது என்றும் அதுவே இருவகையாக இருக்கும்.

மேலும் பிற்காலத்தில் நன்மை பயக்கவல்லது, தீமையைப் பயக்கவல்லது என இருவகையான பெருமையை அது பெற்றிருக்கும்.

அருந்துதல், புசித்தல், மெல்லுதல், நக்குதல் என்னும் நால் வகையாகவும், சுவைப்பிரிவுகளையொட்டி அறுவகையாகவும் மேலும் பிரிக்கப்படும்.

மேலும் குரு, லகு, குளிர்ச்சி, சூடு, எண்ணெய்ப்பசை, வறட்சி, மந்தம், தெளிவு, விறுவிறுப்பு, நிலையானதன்மை, அசைவு, மென்மை, கடினத்தன்மை, பருமன், பிசுபிசுப்பு, வழ வழப்பு, சொரசொரப்பு, நுண்மை, நெருக்கம், பெருகும் தன்மை, எனும் குணங்களைக் கொண்டு அது இருபது வகையாகப் பிரிக்கப் படும்.

திரவியங்கள், அவற்றின் சேர்க்கைகள், ஸம்ஸ்காரம் இவைகளனைத்தும் எண்ணில் அடங்காத பிரிவுகளைக் கொண்டிருக்கும்.

உணவின் எந்த எந்த மாற்றுப்பகுதிகள் அதிக அளவில் இயற்கையாகவே மனிதர்களுக்கு நன்மையளிப்பவையாகவும், தீமையளிப்பனவாகவும் ஆகின்றனவோ அவற்றைப்பற்றி தொடர்ந்து விளக்குவோம். (36)

## 9. இயற்கையாகவே மிக்க நன்மையான உணவுப்பொருட்கள்

சூகதானியங்களென்னும் ஊகுமுள் கொண்ட தானியங்களில் சிவப்புச்சம்பா, சமீதானியங்களில் பயறு, நீர்களில் மழை நீர், உப்புகளில் சைந்தர்வ உப்பு, கீரை வகைகளிலே கீரைப் பாலை, மான் மாமிசங்களில் ஏணம் எனும் மானின் மாமிசம், பறவைகளில் லாவகமெனும் பறவை, பொந்துகளில் வாழும் பிராணிகளில் உடும்பு, மீன்களில் ரோகிதம் எனும் மீனும், நெய் வகைகளில் பசுநெய்யும், பால்வகைகளில் பசும்பால், தாவரவகை எண்ணெய்களில் நல்லெண்ணெய், நீர்ப்பாங்கு நாட்டில் வசிக்கும் மிருகங்களின் வகைகளில் பன்றி வசையும், மீன் வசை களில் சுலூகி எனும் மீன்வசை, நீர்வாழ் பறவை வசைகளில் வெள்ளை அன்னத்தின் வசையும், கொத்தித் தின்னும் பறவை வசைகளில் கோழியின் நிணநீர், தழைகளைப் புசிக்கும் பிராணிகளின் மேதசுகளில் ஆட்டுக்கொழுப்பு, கிழங்குகளில் இஞ் சியும், பழங்களில் திராட்சையும், கரும்பினால் தயாரிக்கப்படும் வகைகளில் சர்க்கரை என இவை யாவும் பத்தியத்திற்குச் சிறந் தவை. இவ்வாறு இயற்கையாகவே நன்மை பயக்கும் சிறந்த உணவு வகைகளாகக் கூறப்பட்டன. (37)

## 10. இயற்கையாகவே துன்பம் விளைவிக்கும் உணவுப்பொருட்கள்

சூக தானியங்களில் யவதானியம், உளுந்து, நீர்வகை களில் மழைக்காலத்து ஆற்றுநீர், உப்புகளில் சவுட்டு உப்பு, கீரை வகைகளில் கடுகுக்கீரை, மிருக மாமிசங்களில் பசு மாமிசம், பறவைகளில் சிறிய புறா, பொந்தில் வாழும் பிராணிகளில் தவளை, மீன்களில் சிலசிமமெனும் மீன், நெய்களில் செம்மறி யாட்டுநெய், பால்களில் செம்மறியாட்டுப் பால், தாவர எண் ணெய்களில் குசும்ப எண்ணெய், நீர்ப்பாங்கு நிலத்து மிருகங் களில் (வசை) நிணநீர்களில் எருமைக் கடாவின் வசைநீர், மீன் களின் வசைகளில் கும்பீரம் எனும் மீனின் வசை, நீர்வாழ்பறவை களின் வசைகளில் நீர்காக்கைகளின் நிணநீர், கொத்தித் தின்னும் பறவைகளில் சிட்டுக்குருவியின் வசையும், தழைகளைத் தின்னும் பிராணிகளின் மேதஸில் யானையின் கொழுப்பும், பழங்களில் ஆசினிப் பலாப்பழம், கிழங்குகளில் முதிர்ந்த முள்ளங்கி, கரும்புப் பொருட்களில் வெல்லப்பாகும் நன்மை பயக்காதவை. இவ்வாறு இயல்பாக உடலுக்கு நன்மை பயக்காத பொருட்களின் விளக்கங் கள் கூறப்பட்டன.

## 11. நன்மை பயப்பவையும் சிறந்தவையும்

நன்மை பயப்பதும், தீமை பயப்பதுமாகிய உணவு வகைகளைப்பற்றி விவரித்தபிறகு வஸ்தி முதலிய செயல்கள், மருந்துகள் ஆகியவற்றில் உயர்ந்ததும் தாழ்ந்ததுமாகிய பொருள்களை விளக்குவோம்.

உயிரைத் தாங்கும் பொருட்களில் சோறு, நீர்வேட்கையைத் தணிப்பதில் நீர், களைப்பைப் போக்குவதில் மது, உயிரூட்டும் பொருள்களில் பால், வளர்ச்சியைத் தரும் பொருட்களில் புலால், திருப்தி தருவனவற்றுள் மாமிசரசம், சுவையூட்டும் பொருட்களில் உப்பு, இதயத்திற்கு இதமானவற்றில் புளிப்பும் சிறந்தவையாகும்.

வலிமையூட்டுவதில் கோழி மாமிசம், விந்து வளர்ச்சி செய்வதில் முதலையின் வீரியம், கப பித்தங்களைப் போக்குவதில் தேன், வாதபித்த நீக்கத்தில் நெல், வாத கப நீக்கத்தில் எண்ணெய், கபநீக்கச் செயல்களில் வாந்தி, பித்தநீக்கச் செயல்களில் பேதிக்குக் கொடுத்தல், வாதநீக்கச் செயல்களில் வஸ்திகர்மா, உடலை மென்மைப்படுத்துவதில் வியர்ப்பிக்கும் முறை, உடலை உறுதியாக்குவதில் உடற்பயிற்சி, ஆண்மை அழிப்பதில் காரப் பொருள், உணவில் விருப்பமின்மையை உண்டாக்குவதில் திந்துகப் பழமும் மிகவும் முக்கியமானவை. குரலைக் கெடுப்பதில் விளாங்காய், இதயத்திற்குத் தீமை பயக்கும் பொருள்களில் செம்மறியாட்டு நெய்யும் முக்கியமானவை. உடலுருக்கி நோயைப்போக்குவதிலும், தாய்ப்பாலுக்கீடாய் ஒத்துப்போவதிலும் இரத்தநோய், இரத்தபித்தம் ஆகியவற்றை நீக்குவதிலும் வெள்ளாட்டுப்பால் மிகவும் சிறந்தது. பித்த கபங்களை வளர்ப்பதில் செம்மறியாட்டுப் பால், உறக்கத்தை அளிப்பதில் எருமைப்பால், கபத்தை வளர்ப்பதில் நன்கு தோயாத தயிர், உடலை இளைக்கச் செய்வதில் கவேது எனும் ''ஹர்கடுவா'' தானியம், வறட்சியை உண்டாக்குவதில் காட்டுக் கேழ்வரகு, உத்தாலகம் எனும் தானியம், சிறுநீரை வளர்ப்பதில் கரும்பு, மலத்தை வளர்க்கும் பொருட்களில் யவ தானியம், வாத வளர்ச்சிப் பொருட்களில் நாவல், கபம், பித்த வளர்ச்சிப் பொருட்களில் எள்ளின் கல்கம், புளிப்பேப்பம் திகட்டல்களை உண்டாக்கும் அமலபித்தம் எனும் நோயை நீக்கும் பொருட்களில் கொள்ளு, பித்த கபம் உண்டாக்கும் பொருட்களில் உளுந்து, வாந்தி, ஆஸ்தாபநம், அநுவாஸநம் என்னும் வஸ்தி கர்மாக்களில் மலங்காரக்காயும் முக்கியமானவைகளாகக் கருதப்படுகின்றன. உயர்ந்த பேதிக்குக் கொடுக்கும் பொருட்களில் சிவதைவேர், மென்மையான பேதிக்குக் கொடுப்திபல் சரக்கொன்

றையும், கடுமையான பேதிக்குக் கொடுக்கும் பொருட்களில் கள்ளிப்பாலும் சிறந்தவைகள்.

சிரோவிரேசனத்தில் (நஸ்யவிதி) நாயுருவி விதை, க்ருமிகளை யழிப்பதில் வாயுவிடங்கம், நஞ்சுகளை நீக்குவதில் வாகைவிதை, குஷ்டநோய்களை நீக்குவதில் கருங்காலி, வாதங்களை நீக்குவதில் சித்தரத்தை, ஆயுளை நீடிப்பதில் நெல்லிக்காய், பலவகையாக உடலுக்கு நன்மையளிப்பதில் கடுக்காய், ஆண்மை, வாதம் இவை களை நீக்குவதில் ஆமணக்குவேர், சடராக்கியைத் தூண்டுவதில் செரிப்பிக்கும் ஆற்றல் வாய்ந்த பொருட்களில் வயிற்றுப்புசநோய் களை நீக்குவதில் கண்டதிப்பிலி, சடராக்னியைத் தூண்டுவதில் ஆசனவாய், வலி, வீக்கம் மூலம் இவைகளை நீக்குவதில் கொடி வேலி, விக்கல், மூச்சுத் திணறல், பக்கச்சூலை ஆகியவற்றை நீக்கு வதில் புஷ்கரமூலம், மலக்கட்டு செரிபித்தல் உண்டுபண்ணுதலில், கோரைக்கிழங்கு [1]புண் ஆற்றுதல், செரிமானம் உண்டுபண்ணு தல், வாந்தி நிறுத்தம், அதிசாரம் எனும் பேதி நிறுத்தம் இவை களுக்கு விலாமிச்சிவேர், மலக்கட்டு உந்தித்தீதுண்டல், செரி மானம் இவற்றில் வெட்டிவேர், மூலக்கட்டு, உந்தித் தீதூண்டல், இரத்தபித்த நோய் நீக்கம் இவற்றில் நன்னாரியும் சிறந்தவை. மலக்கட்டு, வாதநீக்கம், உந்தித்தீதூண்டல், கபநீக்கம் இரத்த அழுத்த நீக்கம் இவைகளைச் செய்வதில் சீந்தில் கொடியும், மலக் கட்டு, உந்தித்தீதூண்டல், வாத, கபம் தணிதல்இவற்றில்வில்வம், உந்தித்தீதூண்டல், செரிமானம் மலம் கட்டுதல் எல்லா தோஷங் களையும் நீக்குதல் ஆகியவற்றிற்கு அதிவிடயமும் சிறந்தவை.

மலக்கட்டு இரத்த பித்த நீக்கம் இவற்றில் நெய்தல், தாமரை, போன்றவற்றின் கேசரங்கள், பித்தம், கபம் இவைகளைத் தணிப் பதில் காஞ்சோரியும், இரத்தபித்தமிகைத்தொடர்பை நீக்குவதில் ஞாழலும் சிறந்தவை.

கபம், பித்தம், இரத்தம் இவற்றைக் கட்டுப்படுத்தி உலரச் செய்வதில் வெப்பாலைப்பட்டை சிறந்தது.

இரத்தத்தைக் கட்டுப்படுத்தியும் இரத்த பித்தத்தைத் தணிக் கும் பொருட்களில் குமிழம்பழம், மலக்கட்டு, வாதநீக்கம், உந்தித் தீதூண்டல், ஆண்மை வளர்த்தல் ஆகியவற்றில் மூவிலைவேர், ஆண்மையை வளர்த்து எல்லாத் தோஷங்களையும் நீக்குவதில் பால் முதுக்கன் கிழங்கு, மலத்தைக் கட்டி, உடல் வலிமையைத் தந்து வாதத்தை நீக்குவதில் சிற்றாமுட்டிவேர், கஷ்டப்பட்டுச்

---

(1) புண் ஆற்றுதல் – நிர்வாபணம்.

சிறுநீர் கடுப்பு, வாத நீக்கம் இவற்றில் நெருஞ்சிலும் தலை சிறந்தவை. தோஷங்களை வெளிப்படுத்தி உந்துத்தீயைத் தூண் டல், வாதங்களைச் சமப்படுத்தி வாதகபங்களைத் தணியச் செய் வதில் பெருங்காயமும், தோஷங்களை வெளிப்படுத்தி உந்திதீயை தூண்டி வாதங்களை சமப்படுத்தி வாதகபங்களை நீக்கும்பொருட் களில் புளிவஞ்சியும், மலமிளக்கியும், சீரணத்தைப் பெருக்கி, மூல நோயை நீக்கும் பொருட்களில் யவக்ஷாரமும், கிரஹணிநோயை நீக்குவதும், வீக்கத்துடனான மூலத்தைப்போக்குவதும், மிக்கநெய் பருகுவதால் தோன்றிய நோயை நீக்குவதில் மோர் அருந்தும் பழக்கமும், க்ரஹணிநோய், உடலுருக்கி, மூலநோய் இவற்றைப் போக்கும் மாமிசங்களில் மாமிசத்தைத் தின்னும் உயிரினங்களின் மாமிசமும்,உடலுக்கு ஊட்டமளிக்கும் பொருட்களில் நெய், பால் பருகுவதும், ஆண்மையை வளர்த்து உதாவர்த்தம் எனும் மேல் நோக்கிச் செல்லும் வாயுவைத் தடுத்து நிறுத்தும் பொருட்களில் சமஅளவில் நெய்-மாவு இவற்றைச் சேர்த்து உண்ணுதல், பற் களுக்கு வலிமையூட்டுவதிலும் உணவில் சுவை உண்டுபண்ணும் பொருட்களில் எண்ணெய் கொப்பளித்தலும், எரிச்சலை நீக்கும் பூச்சுக்களில் சந்தனப்பூச்சும், தண்மையை நீக்கும் பூச்சு களில் சித்தரத்தை அகரு ஆகியவற்றின் பூச்சும், எரிச்சல், தோல் நோய், வியர்வை இவற்றை நீக்கும் பொருட்களில் வெட்டிவேர், விளாமிச்சிவேர் ஆகியவும், வாதத்தைப் போக்கும் எண்ணெய்க் குளி, பூச்சு இவைகளில் கோஷ்டமும், கண்களுக்கு நன்மை பயப்ப தும், விந்துவை வளர்ப்பதும், தலைமுடி, குரல், நிறம் இவற்றிற்கு நன்மை பயக்குவதிலும் எதிலும் தோஷத்தொடர்பை வில்க்கு வதும், இரணத்தை ஆற்றுவதுமான பொருட்களில் அதிமதுரம் உயர்ந்தது.இது மலத்தை இளக்கும், காயத்தை ஆற்றும். ப்ராண னில் உயிரூட்டம் தரும் பொருட்களில் காற்றும், அசீரணநோய், அசை வற்றுப்போதல், குளிர்ச்சி, வலி, நடுக்கம் ஆகியவற்றை நீக்கும் பொருட்களில் நெருப்பும் முக்கியமானவையாகக் கருதப் படுகின்றன. (38)

வாதத்தை தேக்கி வைக்கும் பொருட்களில் தண்ணீரும், நீர் வேட்கை, வாந்தி இவைகளைப் போக்குவதில் மண்ணைச்சூடாக்கி கல்லைச் சூடாக்கி தண்ணீரில் நனைத்து வைக்கப்பட்ட நீரும், அசீரணம் உண்டாக்கும் பொருட்களில் மிகுதியாகப் புசித்தலும்— செரிக்கும் ஆற்றலை வளர்ப்பதில் சீரண ஆற்றலுக்கு ஏற்ப உணவு கொள்ளுதல், ஏற்றுக்கொள்ளத்தக்க செயல் நடவடிக்கை உணவு பழக்கங்களில் உடலுக்கு ஏற்றதான உணவும் செயலும்,

ஆரோக்யமளிப்பதில் தக்க காலத்தில் உணவு உட்கொள்ளல், உணவுப் பண்புகளில் மனத்திற்குப் பிடித்தமான தன்மையும், நோய் உண்டாக்குவனவற்றில் மலம், சிறுநீர், முதலிய வேகங் களை அடக்குதலும், மனத்தை மகிழ்விப்பதில் மதுவும், அறிவு, தைரியம், நினைவாற்றல் இவற்றை நீக்குவதில் கள்வெறியும், நன்கு சீரண ஆற்றலைத் தருவதில் ஒருவேளை உணவு உட்கொள் ளுதலும், உடலுருக்கி நோயை வளர்ப்பதில் பெண்களின் மிக்க தொடர்பும், அனைத்தையும் வளர்ப்பதில் விந்துவைத் தடை செய்தலும், உணவில் வெறுப்புண்டாக்குவதில் கசாப்புக் கடை யைக் காணுதல், ஆயுள் குறைவை உண்டாக்குவதில் உணவைப் புசியாமல் பட்டினி இருத்தல், உடல் இளைக்கச் செய்வதில் தக்க காலத்தில் உணவு உட்கொள்ளாமை, சிரகிணி நோய் உண்டாக்கு வதில் அசீரணத்தில் உணவு உட்கொள்ளல், சடராக்னியைத் தணிக்கச்செய்வதில், இயல்புக்கு முரணான உணவைப் புசித்தல், குஷ்டம் போன்ற கொடிய நோய்களை உண்டாக்குவதில், மீன், பால் போன்ற முரணான வீரியமுள்ள பொருட்களை ஒரே சமயத் தில் புசித்தல், நன்மையளிப்பனவற்றில் சாந்தியும், எல்லாவிதத் தீமை பயப்பனவற்றுள் தன் ஆற்றலுக்கு அதிகமாக உழைத்தலும், நோயை உண்டாக்குவனவற்றுள் உணவு உடல் பயிற்சிகளில் தவறான தொடர்பும், வறுமை உண்டாக்குவனவற்றுள் மாத விடாய் நேரத்தில் புணர்தலும், ஆயுளை வளர்ப்பனவற்றுள் சிற் றின்ப எண்ணமின்றி புலனடக்கமாகிய பிரம்மசரியமும், ஆயுளைக் குறைப்பனவற்றுள் மாற்றான் மனைவியைக் காமுறுதலும், உறுதிப்பேறுகளை அளிப்பவனற்றுள் மன உறுதியும், ஆண்மையை அழிப்பனவற்றுள் அமைதியிழந்த மனமும், உயிரைப்பறிப்பயன வற்றுள் ஆற்றலுக்கு அதிகமாகச் செயலாற்றலும், நோயை வளர்ப்பனவற்றுள் வருத்தமும் மிகவும் முக்கியமானவையாகக் கூறப்பட்டுள்ளன.

களைப்பைப் போக்குவதில் குளித்தலும், மகிழ்ச்சியூட்டுவதில் நகையும், உடலை உலர்த்துவதில் வருத்தமும், உடல் வளர்ச்சியில் பற்றற்ற தன்மையும், சோம்பலுக்கு மிகு உறக்கமும், வலிமை தருவதில் பலவகைப் பொருட்களை உண்ணலும், வலிமை அழிப்ப தில் ஒரே சுவைப்பொருளை உண்பதும், எடுக்க முடியாதனவற் றுள் கருவைச் சிதைத்து எடுத்தலும், உடன் நீக்கவேண்டியவற்றுள் அசீரணமும், மென்மையான மருந்துச் சிகிச்சையில் குழந்தை களும், தொடர்ந்த சிகிச்சை முறையில் வயோதிகர்களும், கடுமை யான மருந்து, உடற் பயிற்சி, ஆண் தொடர்பு இவற்றைவிட வேண்டியவர்களில் கருவுற்ற பெண், கருத்தரிக்கும்போது மன

மகிழ்வுடன் இருத்தல், சிகிச்சை செய்ய முடியாதவற்றில் ஸந்நி பாதம், முரண் சிகிச்சையில் ஆம சிகிச்சையும், நோய்களில் காய்ச் சலும், நீண்ட நோய்களில் குஷ்டமும், நோய் கூட்டங்களில் உட லுருக்கி நோயும், மீண்டும் தோன்றும் நோய்களில் முக்கியமாக நீரிழிவு நோயும், முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. துணைக்கருவிகளில் அட்டையும், பஞ்சகர்மாக்களில் வஸ்தி கர்மா வும், மூலிகை விளையும்இடங்களில் இமயமலையும், ஆரோக்கியம் அளிக்கும் இடங்களில் பாலைவனமும், மூலிகைகளில் ஸோமலதை யும், உடலுக்கு நன்மையளிக்காத இடங்களில் நீர்ப்பாங்கான இடங்களும், நோயாளியின் குணங்களில் மருத்துவன் சொற்பேச்சு கேட்டலும், சிகிச்சை உறுப்புகளில் மருத்துவனும், விடவேண்டிய வற்றுள் கடவுள் இல்லை என உரைக்கும் நாத்திகனும், வருத்தம் தருவனவற்றுள் பேராசையும், சாவுக்குறிகளில் மருத்துவர் சொற் பேச்சுக் கேளாதிருத்தல், வருத்தமடைபவனுக்குரிய இலக்கணங் களில் நிலையில்லாத் தன்மை, மருத்துவ குணங்களில் தக்க முறை யில் சிகிச்சை முறைகளைக் கையாளுதல், ஆரோக்கிய அறிகுறி களில் தன்னம்பிக்கையும், ஐயங்களைத் தீர்ப்பனவற்றுள் மருத்து வர் கூட்டமும் (சிகிச்சை முறைகளில் வரும் எல்லா ஐயங்களையும் நீக்குதல்), மூலிகைகளில் நல்லறிவும், சிகிச்சை முறைகளில் நூலறி வுடன் கூடிய ஊகமும், காலத்தைப் பற்றிய அறிவைப் பயன் படுத்துவதில் உயர்ந்த நேரான அறிவும், நேரத்தை வீணாக்கு வதில் சோம்பேறித்தனமும், ஐயமகற்றும் செயல்களில் நல்ல பட் டறிவும், அச்சம் விளைவிப்பதில் ஆற்றல் இன்மையும், அறிவு வளர்க்கும் செயல்களில் உடன்பயின்றவருடன் கற்ற நூல்களைப் பற்றி வாதம்புரிதல், சாத்திர அறிவு பெறும் காரணங்களில் ஆசாரி யனும், அழிவற்றவைகளில் ஆயுர்வேதமும், கடைப்பிடிக்கவேண் டியவற்றுள் நல்லோர் நல்லுரையும், எல்லாவகையான தீமை களை உண்டாக்குவனவற்றுள் கெட்டவர்களிடமிருந்து தானம் பெறுதலும், எல்லா சுகங்களைத் தருவனவற்றுள் சொல், செயல், மனம் அனைத்தையும் இறைவனிடம் அர்ப்பணித்தலும் சிறந் தவையாகக் கூறப்பட்டன.

இவ்வாறு நூற்று ஐம்பத்திரண்டு முக்கியமான மிகச் சிறந்த பொருட்கள் பற்றி விளக்கப்பட்டது. நோய் தீர்க்கும் பணியில் இந்த இன்றியமையாத 152 பொருட்களைப்பற்றி அறிந்துகொள் வது இன்றியமையாதது என இவை விளக்கப்பட்டன. *(39–41)*

இவற்றுள் ஒரே விதமான செயல்களைப் புரியும் பொருள்கள் சிறந்ததானவற்றின் இலக்கணம், இன்றியமையாமை, செயலாற் றல், அதன் குண உறவுகள் ஆகியவையும் விளக்கப்பட்டன. 42

வாதம், பித்தம், கபம் இவற்றைத் தணிப்பனவற்றுள் நன்மை பயப்பதும், முக்கியமானதும், நோய் தீர்ப்பதுமான பொருள்களின் விளக்கம் தரப்பட்டது. அறிவாளியான மருத்துவன் இவையனைத்தையும் நினைவில் கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். இவ்வாறு செய்வதால் மருத்துவன் அறம், பொருள், இன்ப முப்பேறுகளையும் நன்முறையில் அடைகின்றான். எந்தப்பொருள் உடலுக்கு ஏற்றதாயும் (ஸாத்மியம்) மனதிற்குப் பிடித்ததாயும் கூறப்பட்டுள்ளதோ அந்தப் பொருள் நன்மை பயக்கும் (பத்யம்) பொருள் எனப்படும். எது உடலுக்கு ஒவ்வாது மனத்திற்கும் பிடிக்காமல் இருக்குமோ அது தீமைபயக்கும் (அபத்யம்) பொருள் எனப்படும். அத்தகைய தீய பொருட்களைக் கண்ணாலும் காணக் கூடாது. (43–45)

அளவு, நேரம், செயல், இடம், உடல், தோஷம், குணம் ஆகியவற்றின் தொடர்பால் தீமை பயக்கும் பொருள்கள் பத்யமாகவும் நன்மை பயப்பவை அபத்யமாகவும் ஆகிவிடுகின்றன. சான்றாகப் பத்யமான நெய்யின் அதிகஅளவு, வஸந்தம், ஒவ்வாப் பொருளுடன் தொடர்பு, நீர்ப்பாங்கான இடம், பருமனான உடல், கபதோஷம் இவற்றில் அபத்யமாகிறது. அபத்யமான நஞ்சு அளவினால் நன்மை பயக்கிறது. அதனால் எல்லாப் பொருட்களின் இயல்புகளை அளவு முதலியவற்றைச் சிந்தித்து சீர்தூக்கிச் செயல்படுத்த வேண்டும். சிகிச்சையில் வெற்றியை விரும்பும் மருத்துவர் இந்தப் பொருட்களையெல்லாம் நன்கு ஆய்வு செய்து சிகிச்சைகளைப்புரிய வேண்டும். (46–47)

### 12. அக்னிவேசரின் வினா

ஆத்ரேய மாமுனிவரின் இந்த நிறைவுள்ள நல்லுரையைக் கேட்டு அக்னிவேசர் பின்வருமாறு வினவலானார்.

அய்யா, எந்தப் பொருட்களை அறிய விரும்பினோமோ அவையனைத்தையும் தாங்கள் கருணை கூர்ந்து கூறினீர்கள். இப்போது ஆஸவங்களின் இயல்புகளை, இலக்கணங்களை விரிவாகக் கேட்க விரும்புகிறோம். கருணை கூர்ந்து அவற்றையும் தாங்கள் விரிவாக விளக்க, நாங்கள் கேட்க விரும்புகிறோம் என்று கேட்டார். (48)

### ஆத்ரேயரின் மறுமொழி – ஆஸவங்களின் விளக்கம்

அக்னிவேசரின் வினாவைக் கேட்டு ஆத்ரேயர் மறுமொழி கூறலானார்.

அக்னிவேச!

தானியம், பழம், வேர், சாறு, பூ, கட்டை, இலை, பட்டை ஆகிய இந்த எட்டுப் பொருட்களால் ஆஸவங்கள் செய்யப்படுகின்றன. ஒன்பதாவது பொருள் சர்க்கரை ஆகும். இந்தப் பொருட்களின் சேர்க்கையால் எண்ணிலடங்காத ஆஸவங்கள் செய்ய இயலும். அவற்றுள் எண்பத்து நான்குவகை ஆஸவங்கள் சிறந்தவை, நன்மை பயப்பன எனக் கூறப்படுகின்றன.

இந்த ஆஸவங்களில், ஸுராஸவம், ஸௌவீரக ஆஸவம், துஷோதக ஆஸவம், மைரேய ஆஸவம், மேதக ஆஸவம், தான்யாம்லம் ஆகிய இந்த ஆறு ஆஸவங்களும் தானியங்களிலிருந்து உண்டாகுபவை. *ம்ருத்வீகாஸவம், சர்ஜூரம், காச்மர்யம், தன்வனம், ராஜாதனம், திருணசூன்யம், பருஷக, அபயா, ஆமலகம், மிருகலிண்டிகா, ஜாம்பவம், கபித்தம், குவலம், பதரம், கர்கந்து, பீலு, ப்ரியால, பநஸ, ந்யக்ரோதம், அச்வத்தம், ப்லக்ஷம், கபீதநம், உதும்பரம், அஜமோத, சிருங்காடக, சங்கினீ என்னும் ஆஸவங்கள் மேலே கூறப்பட்ட 26 ஆஸவங்கள், பழங்களிலிருந்து செய்யப்பட்டவை.

---

| | | |
|---|---|---|
| *ம்ருத்வீகம் | — | இலந்தைத் திராட்சை |
| கர்ஜூரம் | — | பேரீச்சை |
| காச்மர்யம் | — | குமிழம்பழம் |
| ராஜாதனம் | — | பழமுள்ளிப்பாலை |
| த்ருணசூன்யம் | — | தாழைப்பழம் |
| பருஷகம் | — | சிற்றீச்சை |
| அபயம் | — | கடுக்காய் |
| ஆமலகம் | — | நெல்லிக்காய் |
| மிருகலிண்டிகா | — | விபீதகம் என்பர் |
| ஜாம்பவம் | — | நாவல் |
| கபித்தம் | — | விளாம்பழம் |
| ப்லக்ஷம் | — | இஞ்சி |
| குவலம் | — | நரிஇலந்தை |
| ப்ரியாலம் | — | முரளம்பழம் |
| காபீதநம் | — | பெரு இலந்தை |
| பீலு | — | உவகைப்பழம் |
| பநஸம் | — | பலா |
| ந்யக்ரோத | — | ஆலமரம் |
| அச்வத்தம் | — | அரசு |
| கபீதநம் | — | காட்டுவாழை |
| வஞ்சலம் | — | நீர்வஞ்சி |
| சங்கினீ | — | சங்கப்பழம் |

விதாரிகந்தா (பால்முதுக்கன்கிழங்கு), அச்வகந்தா (அமுக்க ராங் கிழங்கு) க்ருஷ்ணகந்தா (இலவம்), சதாவரி (தண்ணீர் விட்டான் கிழங்கு), ச்யாமா (கருஞ்சிவதை), த்ரிவ்ருத் (சிவதை) தந்தீ, த்ரவந்தி (எலியாலி) பில்வம், உருபூக (ஆமணக்கு) சித்ரமூலம் (கொடிவேலி) ஆக இந்தப் பதினொன்று ஆஸவங்களும் வேர்களிலிருந்து செய்யப்படுகின்றன. சாலம், பிர யங்கு (ஞாழல்), அச்வகர்ண (மருதம்), சந்தனம், ஸ்யந்தனம் (தினிசி), கதிரம் (கருங்காலி), கதரம் (வெண்கருங்காலி), ஸப்த பர்ண (ஏழிலைப்பாலை) அர்ஜுன (வெண்மருது) அஸந(வேங்கை) அரிமேதம் (கருவேலம்), திந்துகம், கினிஹி (நாயுருவி) சமீ (வன்னி), சுக்தி (ஒருவகை இலந்தை), சிம்சுபா, சிரீஷ (காட்டுவகை) வஞ் சலம் (நீர்வஞ்சி) தன்வனம் (தனுகு) மதூகம் (இலுப்பை) எனும் இருபது ஆஸவங்களும் மரங்களின் சாற்றிலிருந்து செய்யப்படு கின்றன.

தமம் (சிவப்பு எட்டிதழ் தாமரை) உத்பலம் (கருநெய்தல்) நலினம் (வெண்தாமரை) குமுதம் (இரவில் மலரும் மலர்) ஸௌகந் திகம், புண்டரீகம் (வெண்தாமரை நூறிதழ் கொண்டது) சதபத் ரம் (சிவப்பான நூறிதழ் கொண்டது) மதூகம் (இலுப்பை) ப்ரி யங்கு, தாதகீ ஆகிய மலர்களிலிருந்து பத்து வகையான ஆஸவங் கள் செய்யப்படுகின்றன.

கரும்பு வகைகளிலிருந்து நான்கு வகையான ஆஸவங்கள் செய் யப்படுகின்றன. பேய்க்கரும்பு, தாடகபத்ராஸவங்கள் இரண்டும் இலைகளிலிருந்து செய்யப்படுகின்றன. தில்வகம், லோத்ரம், ஏலா வாலுகம் க்ரமுகம் (பாக்கு) ஆகிய நான்கு ஆஸவங்கள் பட்டை களிலிருந்து செய்யப்படுகின்றன. சர்க்கரையிலிருந்து சர்க்கரை ஆஸவம் செய்யப்படுகிறது. இந்த ஆஸவங்கள் அதன் மூலப் பொருட்களில் பரவி இருந்து மறைந்து வெளிப்படுவதால் ஆஸவங் கள் எனப்பட்டன. இவ்வாறு ஆஸவங்கள் எண்பத்து நான்கு வகைப்படுகின்றன. குறிப்பிட்ட பொருட்களின் சேர்க்கை, பிரிவு, செய்முறை, பாதுகாப்பு, ஆகியவற்றால் ஆஸவங்கள் பற்பல காரணங்களால் பற்பல குணங்கள் உடையவை ஆகின்றன.

சேர்க்கை, பாதுகாவல், இடம், நேரம், அளவு ஆகியவற்றை நன்கு ஆய்வுசெய்து ஆஸவங்களைப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு பற்பல ஆஸவங்கள் பற்பல பொருட்களிலிருந்து செய் யும் முறையை ஓரளவு விளக்கினோம். *(49)*

**முடிவுரை**

யஜ்ஜப்புருஷீயம் எனும் இவ்வத்தியாயத்தில் மனம், உடல், உந்துத்தீ, வலிமை ஊட்டுபவை, தூக்கமின்மை, வருத்தம், உண வில் விருப்பமின்மையை அகற்றுபவை, மகிழ்ச்சியூட்டுபவை, 84 வகை ஆஸவங்கள் இவை விளக்கப்பட்டன. உடல்பாதுகாப்புக்குப் பல வகை உணவு வகை, பலவகை உபாயங்கள் ஆகியவற்றையும் ஆத்ரேயமுனிவர் விளக்கினார்.

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
சோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
ஸூத்ரஸ்தானத்தில் யஜ்ஜப்புருஷீயம் எனும்
இருபத்தைந்தாம் அத்தியாயம்
முற்றும்.

## இருபத்தாறாவது அத்தியாயம்

## *ஆத்ரேய பத்ரகாப்யீயம்

ஆத்ரேய பத்ரகாப்யீயம் எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் விவரித்தபடி விளக்குவோம். 1–2

### 1. மாமுனிவர்களின் அவை

மிக்க அழகு வாய்ந்த சைத்ர ரதம் எனும் கானகத்தில் உலவ எண்ணி, ஆயுர்வேத சாத்திரத்தில் சிறந்தவர்களும், வயதில் முதிர்ந்தவர்களும், புலனடக்கமுள்ளவர்களுமான ஆத்ரேயர், பத்ர காப்யர், சாகுந்தேயர், முத்கலகோத்திரத்தில் தோன்றிய பூர்ணா க்ஷர், குசிக வம்சத்தில் தோன்றிய கௌசிகர் எனும் ஹிரண் யாக்ஷர், குற்றமற்ற கும்ரர சிரஸ் என்ற பரத்வாஜர், அறிவாளி களுள் சிறந்தவரும் அரசனுமான வாயோர்விதர், விதேஹ நாட் டைச் சேர்ந்த அரசனான நிமி, பேரறிவாளரான படிசர், பால் ஹீக நாட்டின் சிறந்த மருத்துவரும், அந்நாட்டைச் சேர்ந்தவரு மான காங்காயநர் என இவர்கள் ஒன்று கூடினர். அக்கானகத்தில் ஒன்றுகூடிய அறிஞர்களான மாமுனிவர்களின் கூட்டத்தில் சுவை யின் மூலமாக உணவைத் தீர்மானிப்பதுபற்றி சுவையான பேச்சுத் தொடங்கியது. 3–7

### 2. பத்ரகாப்யரின் 'சுவை ஒன்றே' என்ற வாதம்

சுவை (ரஸம்) ஒன்றே. ஐந்து அறிவுப் புலன்களால் அறியக் கூடிய பொருட்களான ஒலி, தொடு உணர்ச்சி, உருவம், சுவை, மணம் என இவற்றுள் ஒன்றான சுவை நாக்கினால் மாத்திரம் அறியக்கூடியது. அந்தச் சுவை நீரைக்காட்டிலும் வேறல்ல, என அறிஞர்கள் கருதுகிறார்கள். ஆகையால் சுவை ஒன்றே என்பது அவர் கருத்து.

---

* ஆத்ரேயபத்ரகாப்யீயம் – ஆத்ரேயர், பத்ரகாப்பியர் போன்ற மாமுனிவர்கள் கூடி, சுவையைப்பற்றி ஆலோசிப்பதால் இவ் வத்தியாயம் இப்பெயர் பெறும்.

### 3. இருவகை சுவை

சாகுந்தேயர் என்ற அந்தணர் 1. சேதநீயம், 2. உபசமனீயம் எனச் சுவை இருவகைப்படும் என்றார்.

### 4. மூவகை சுவை

மௌத்கல்ய கோத்ரத்தில் தோன்றிய பூர்ணாக்ஷர், சேதநீயம், உபசமநீயம், ஸாதாரணம் எனச் சுவை மூவகைப்படும் என்கிறார்.

### 5. நால்வகை சுவை

ஸ்வாதுஹிதம் — இனிப்புடன் நலனையளிப்பது.
ஸ்வாது அஹிதம் — இனிப்புடன் நலனையளிக்காதது.
அஸ்வாதுஹிதம் — இனிப்பின்றி நலனையளிப்பது.
அஸ்வாதுஅஹிதம் — இனிப்பின்றி நலனையளிக்காதது.

எனச் சுவை நால்வகைப்படும் என்கிறார் கௌசிகர் என்ற ஹிரன்யாக்ஷர்.

### 6. ஐவகை சுவை

பௌமம — நிலத்தைச் சார்ந்தது.
ஜலீய — நீரைச் சார்ந்தது.
ஆக்னேய — நெருப்பைச் சார்ந்தது.
வாயவ்ய — காற்றைச் சார்ந்தது.
ஆகாசிய — ஆகாயத்தைச் சார்ந்தது.

எனச் சுவை ஐவகைப்படும் என குமாரசிரா என்ற பரத்வாஜர் கருதுகிறார்.

### 7. அறுவகை சுவை

குரு, லகு, சீதம், உஷ்ணம், ஸ்நிக்தம், ரூக்ஷம் எனச் சுவை ஆறுவகைப்படும் என வாயோர்விதர் என்பவர் கருதுகின்றார்.

### 8. ஏழுவகை சுவை

மதுரம் — இனிப்பு
அம்லம் — புளிப்பு
லவணம் — உப்பு
கடு — கார்ப்பு

---

1. சேதநீயம் — உடலிலுள்ள தோஷங்களைத் தாதுக்களினின்றும் பிளந்து வெளிப்படுத்துவது.
2. உபசமநீயம் — உடலிலுள்ள தோஷங்களை அதன்குண வீர்யங்களைக் குறைத்து உடலிலேயே தணிக்கச் செய்தல்.

திக்தம் — கைப்பு
கஷாயம் — துவர்ப்பு
க்ஷாரம் — எரிப்புப்பொருள்

எனச் சுவை ஏழுவகைப்படும் என மிதிலைநாட்டு மன்னன் நிமி கூறுகிறார்.

## 9. எண்வகைச் சுவை

மதுரம் — இனிப்பு
அம்லம் — புளிப்பு
லவணம் — உப்பு
கடு — கார்ப்பு
திக்தம் — கைப்பு
கஷாயம் — துவர்ப்பு
க்ஷாரம் — எரிப்புப் பொருள்
அவ்யக்தம் — தெளிவற்றது

எனச் சுவை எண்வகைப்படும் என தாமார்க்சவபடிசர் என்பவர் கருதுகின்றார்.

## 10. கணக்கற்ற சுவை

சுவைகளுக்கு இருப்பிடமான பொருட்கள், குணங்கள், செயல்கள், சுவைகளின் வேறுபாடு இவை கணக்கற்றவை. ஆதலால் சுவைகளும் கணக்கற்றவை என பாஹ்லீகநாட்டின் சிறந்த மருத்துவரான காங்காயனர் கருதுகின்றார்.

## 11. ஆத்ரேயரின் தீர்ப்பு

மதுரம் — இனிப்பு, அம்லம்—புளிப்பு, லவணம்—உப்பு, கடு—கார்ப்பு, திக்தம் — கைப்பு, கஷாயம் — துவர்ப்பு எனச் சுவை ஆறுதான் என மதிப்பிற்குரிய புனர்வசு என்ற ஆத்ரேயர் தீர்ப்புக் கூறினார்.

## 12. சுவை ஒன்றே என்பதற்கு மறுப்பு

இனிப்பு, புளிப்பு, உப்பு, கார்ப்பு, கசப்பு, துவர்ப்பு என்று சுவைகள் ஆறுமாத்திரமே. ஆறுசுவைகளின் தோற்றத்திற்குக் காரணம் நீர் (சுவையும் நீரும் ஒன்றல்ல. காரணமும், காரியமும் ஒன்றாக முடியாது. காரியம் சுவை. காரணம் நீர். ஆகையால் சுவை ஒன்றல்ல. ஆனால் நீர்ச் சுவைக்குக் காரணம் என்று விளக்கம் தந்தார்.

### 13. சுவை இரண்டே, மூன்றே என்பதற்கு மறுப்பு

சேதனம், உபசமனம் இரண்டும் சுவையின் செயல்கள். இந்த இரண்டு செயல்களின் சேர்க்கைதான் ஸாதாரணம்.

### 14. சுவை நால்வகைப்படும் என்பதற்கு மறுப்பு

ஸ்வாது – இனிப்பு, அஸ்வாது இனிப்பற்றது. இவை இரண்டும், சுவையை உண்பதினால் அறிவது. ஹிதம் – நன்மை அஹிதம் – தீமை இவ்விரண்டும் அந்தச் சுவையின் செயல்களால் ஏற்படும் நிலைகள் – பயன்.

### 15. சுவை ஐந்தே என்பதற்கு மறுப்பு

ஐம்பெரும் பூதங்களின் மாறுபட்ட நிலை பொருட்கள் (திரவியங்களின்) உறைவிடம் ஆகின்றன. அ ந் த ப் பொருட்கள், இயற்கை, செயற்கை, சேர்க்கை, இடம், காலம் இவற்றிற்கு உட்பட்டு தன் தன் செயல்களைச் செய்கின்றன.

### 16. சுவை ஆறே என்பதற்கு மறுப்பு

குரு, லகு, குளிர்ச்சி, உஷ்ணம், நைப்புத்தன்மை, வறட்சி இவை ஆறும், சுவை அல்ல. சுவைகளுக்கு இருப்பிடமான பொருட்களின் குணங்கள். ஆகையால் குரு, லகு போன்றவை ஆறுசுவைகள் என்பது ஏற்கத் தக்கதல்ல.

### 17. சுவை ஏழுவகை என்பதன் மறுப்பு

க்ஷாரம் என்பது எரிப்புப்பொருள். அது சுவையல்ல. அது பலவகை சுவைப்பொருட்களால் செய்யப்பட்டது. அது உப்பு, கார்ப்பு அதிகம் உள்ளது. பலவகைச் சுவைகளுடன் கூடியது. பல புலன்களின் பொருட்களாலானது. அதன் செயல்கள் புலனால் அறியக்கூடியது. (8)

### 18. சுவை எண்வகை என்பதற்கு மறுப்பு

அவ்யக்த ரசம் என்பது – தெளிவற்ற சுவை. இது சுவைகளுக்கெல்லாம் இயற்கையான இருப்பிடமான நீரில் இருக்கிறது. அல்லது துணைச் சுவையாகப் பொருட்களில் உள்ளது. ஆகையால் மேற்கூறிய ஏழுசுவைகளையும் அவ்யக்த ரசத்தையும் சுவையாக ஏற்றுக்கொள்வதற்கு இல்லை.

### 19. சுவை கணக்கற்றவை என்பதற்கு மறுப்பு

சுவைகளின் உறைவிடம் குணம், செயல், மேன்மை மாறுபாட்டினால் சுவைகளின் எண்ணிக்கை எண்ணற்றவைகளாக ஆகின்றன என்று கூறுவது சரியல்ல. ஏனென்றால் இனிப்பு,

புளிப்பு, உப்பு, கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு என ஆறு சுவைகளுள் ஒவ்வொன்றும், அதன் உறைவிடம், குணம், செயல் மேன்மை இவற்றின் மாறுபாட்டின் காரணமாகச் செயல்படுகின்றது. இத்தகைய மாறுபாடுகள் எண்ணிலடங்கா. ஆனால் சுவைக்கு வேறுபாடு உண்டாவதில்லை. ஒரு சுவை மற்றொரு சுவையுடன் அதிக அளவில் சேருவதனால் சுவைகள் உண்டானாலும், அவற்றின் குணம், செயல் இவை எண்ணிக்கையில் அதிகமாவ தில்லை. (அதாவது முக்கியமான சுவைதான் தெளிவாக வெளித் தோன்றும்) முக்கியமில்லாத சுவை வெளி வருவதில்லை. ஆகையால் ஒன்றுக்கொன்று சேர்ந்த அவற்றின் செயல்களைப் பற்றி அறிவாளிகள் கூறுவதில்லை. இதனால் சுவைகள் கணக்கற் றவை என்பது ஏற்கத்தக்கதல்ல. எனவே ஒன்றுக்கொன்று சேராத ஆறு சுவைகளுக்கும் தனியாக இலக்கணம் கூறுவோம். 9

## 20. பொருட்கள் யாவும் ஐம்பெரும் பூதங்களால் ஆனவை

(அடுத்ததாகச் சில பொருட்களை விளக்குவோம். (காரணம், காரியம், எனப் பொருட்கள் இருவகைப்படும். ஆயுர்வேத நூலில் காரியப் பொருட்கள்தான் அதிகம் பயன்படுகின்றன. சிலபொருட் கள் என்பதற்கு காரியப் பொருட்கள் என்று பொருள். எல்லாக் காரியப் பொருட்களும் ஐம்பெரும் பூதங்களால் ஆனவை எனக் கருதப்படுகிறது. அந்தப் பொருட்கள் 1. சேதனம் (உயிர்உள்ளது) 2. அசேதனம் (உயிர் அற்றது) என இருவகைப்படும். ஒலி, தொடு உணர்ச்சி, உருவம், சுவை, மணம், என்ற ஐந்தும், குரு முதல் தொடங்கி திரவம் வரையில் உள்ள இருபதும் அந்தப் பொருட் களின் குணங்களாகும்.

அந்தக் காரியப் பொருட்களின் செயல், வாந்தி எடுக்கச் செய் வது முதல் மலம்கழிக்கச் செய்வது, எண்ணெய் வஸ்தி, கஷாய வஸ்தி, சிரோவிரேசனம் என ஐந்து வகைப்படும். 10

## 21. நிலத்தைச் சார்ந்த பொருட்களின் இலக்கணம்

குரு, சொர, சொரப்பு, கெட்டி, மிருது, உறுதி, தெளிவு, நெருக்கம், பருமன், மணம் என இக்குணங்கள் அதிக அளவில் உள்ளவை நிலத்தைச் சார்ந்த பொருட்களாகும். இவை உடலில் வளர்ச்சி, உறுதி, பளு, நிலைத்தல் என இச்செயல்களைச் செய்கின்றன.

---

1. சேதனம் — உயிர் உள்ளது.
2. அசேதனம் — உயிரற்றது.

## 22. நீரைச் சார்ந்த பொருட்களின் இலக்கணம்

பெருகுதல், நைப்பு, குளிர்ச்சி, இலேசான தன்மை, மிருது, பிசுபிசுப்பு, நீர்மை என இக்குணங்கள் அதிக அளவில் உள்ளவை. நீரைச் சார்ந்த பொருட்கள் ஈரம் உண்டாகுதல், எண்ணெய்ப் பசை, சேர்க்கை, விஷ்யந்தம், மிருதுத்தன்மை, மகிழ்ச்சி இவை நீரைச் சேர்ந்த பொருட்களின் செயல்களாகும்.

## 23. நெருப்பைச் சார்ந்த பொருட்களின் இலக்கணம் (தேஜஸ்)

3. உஷ்ணம், 4. தீக்ஷ்ணம், 5. சூக்ஷ்மம், இலேசான தன்மை, வறட்சி, தெளிவு, உருவம் என இக்குணங்கள் அதிகஅளவில் நெருப்பைச் சார்ந்த பொருட்களில் உள்ளன. எரிச்சல், சீர்ணம், ஒளி, வெயில், நிறம், இவை நெருப்பைச் சார்ந்த பொருட்களின் செயல்களாகும்.

## 24. காற்றைச் சார்ந்த பொருட்களின் இலக்கணம்

இலேசான தன்மை, குளிர்ச்சி, வறட்சி, அசைவு, தெளிவு, நுட்பம், தொடு உணர்ச்சி, இக்குணங்கள் அதிக அளவில் காற்றைச் சார்ந்த பொருட்களில் உள்ளன. வறட்சி, சோர்வு, அசைதல், தூய்மை, இலேசான தன்மை இவை காற்றைச் சார்ந்த பொருட்களின் செயல்களாகும்.

## 25. ஆகாயத்தைச் சார்ந்த பொருட்களின் இலக்கணம்

மிருது, இலேசான தன்மை, நுட்பம், வழவழப்பு, ஒலி என இக்குணங்கள் ஆகாயத்தைச் சார்ந்த பொருட்களில் அதிகஅளவில் உள்ளன.

மிருதுத்தன்மை, இடைவெளி ஏற்படுதல், இலேசான தன்மை இவை ஆகாயத்தைச் சார்ந்த பொருட்களின் செயல்களாகும். 11

இந்த உபதேசத்தினால் மருந்துக்குப் பயன்படாத பொருட்களே உலகில் இல்லை எனலாம். இந்தப் பொருட்கள், சேர்க்கை, பயன் இவற்றைக்கொண்டு பயன்படுகின்றன. 12

## 26. பொருட்களின் செயல் முறை

பொருட்கள் தன்னிடம் உள்ள குணங்களின்சிறப்பினால்தான் செயல்களைச் செய்கின்றன என்பதில்லை. பொருட்களின் சிறப்பு,

---

3. உஷ்ணம் — சூடு
4. தீக்ஷ்ணம் — விறுவிறுப்பு
5. சூக்ஷ்மம் — நுட்பம்

குணங்களின் சிறப்பு, பொருள், குணம், இவ்விரண்டின் சேர்க்கையின் சிறப்பு இவற்றினால்தான் செயல்களைச் செய்கின்றன.

பொருட்கள் வேறு வேறு காலத்தில் பலவகையாக உறைவிடங்களை அடைந்து தனிப்பட்ட, சேர்க்கை, பயன், இவற்றிற்கு ஏற்றவாறு எந்தச் செயலைச் செய்கிறதோ அது சர்மா (செயல்) எனப்படுகிறது. எதனால் செய்யப்படுகிறதோ, அது வீர்யம் என்றும், எங்கு செய்யப்படுகிறதோ அது நிலம் (அதிகரணம்) என்றும், எப்பொழுது செய்யப்படுகிறதோ அது காலம் என்றும், எவ்விதம் செய்யப்படுகிறதோ அது உபாயம் என்றும், செயல்களினால் கிடைப்பதைப் பயன் என்றும் கூறுகின்றனர். 13

## 27. பொருட்களின் சுவைக்கு ஏற்றவாறு தோன்றும் 63 சுவைகள்

பொருள், இடம், காலம் இவற்றின் சிறப்பினால் சுவைகள் 63 வகையாகப் பிரிக்கப்படுகின்றன. அதைப் பற்றி விளக்குவோம். 14

### (அ) இரண்டு சுவைகளின் சேர்க்கையினால் தோன்றும் பொருட்களின் எண் 15

1. இனிப்பும் புளிப்பும்
2. இனிப்பும் உப்பும்
3. இனிப்பும் காரமும்
4. இனிப்பும் கைப்பும்
5. இனிப்பும் துவர்ப்பும்
6. புளிப்பும் உப்பும்
7. புளிப்பும் காரமும்
8. புளிப்பும் கைப்பும்
9. புளிப்பும் துவர்ப்பும்
10. உப்பும் காரமும்
11. உப்பும் கைப்பும்
12. உப்பும் துவர்ப்பும்
13. காரமும் கைப்பும்
14. காரமும் துவர்ப்பும்
15. கைப்பும் துவர்ப்பும்

ஆக இரண்டு சுவைகள் சேர்ந்த பொருட்கள் பதினைந்தாகக் காணப்படுகின்றன. இனிப்புச் சுவை மற்ற சுவைகளுடன் சேர்ந்து இரண்டு சுவையுள்ளதாக மாறுபடுகின்றன.

### (ஆ) மூன்று சுவைகள் சேர்ந்த பொருட்கள் 20

1. இனிப்பு புளிப்பு உப்பு
2. இனிப்பு புளிப்பு காரம்
3. இனிப்பு புளிப்பு கைப்பு
4. இனிப்பு புளிப்பு துவர்ப்பு
5. இனிப்பு உப்பு காரம்
6. இனிப்பு உப்பு கைப்பு
7. இனிப்பு உப்பு துவர்ப்பு
8. இனிப்பு காரம் கைப்பு
9. இனிப்பு காரம் துவர்ப்பு
10. இனிப்பு கைப்பு துவர்ப்பு
11. புளிப்பு உப்பு காரம்
12. புளிப்பு உப்பு கைப்பு
13. புளிப்பு உப்பு துவர்ப்பு
14. புளிப்பு காரம் கைப்பு
15. புளிப்பு காரம் துவர்ப்பு
16. புளிப்பு கைப்பு துவர்ப்பு
17. உப்பு காரம் கைப்பு
18. உப்பு காரம் துவர்ப்பு
19. உப்பு கைப்பு துவர்ப்பு
20. காரம், கைப்பு துவர்ப்பு

இவ்விதம் மூன்று சுவைகள் சேர்ந்த பொருட்கள் இருபது ஆகும்.

**28. நான்கு சுவைகள் சேர்ந்த பொருட்கள் 15**

1. இனிப்பு, புளிப்பு, உப்பு, காரம்.
2. இனிப்பு, புளிப்பு, உப்பு, கைப்பு.
3. இனிப்பு, புளிப்பு, உப்பு, துவர்ப்பு.
4. இனிப்பு, புளிப்பு, காரம், கைப்பு.
5. இனிப்பு, புளிப்பு, காரம், துவர்ப்பு.
6. இனிப்பு, புளிப்பு, கைப்பு, துவர்ப்பு.
7. இனிப்பு, உப்பு, காரம், கைப்பு.
8. இனிப்பு, உப்பு, காரம், துவர்ப்பு.
9. இனிப்பு, உப்பு, கைப்பு, துவர்ப்பு.
10. இனிப்பு, காரம், கைப்பு, துவர்ப்பு.
11. புளிப்பு, உப்பு, காரம், கைப்பு.
12. புளிப்பு, உப்பு, காரம், துவர்ப்பு.
13. புளிப்பு, உப்பு, கைப்பு, துவர்ப்பு.
14. புளிப்பு, காரம், கைப்பு, துவர்ப்பு.
15. உப்பு, காரம், கைப்பு, துவர்ப்பு.

இவ்விதம் நான்கு சுவைகள் சேர்ந்த பொருட்கள் பதினைந்தாகும்.

**29. ஐந்து சுவைகள் சேர்ந்த பொருட்கள் ஆறு**

1. இனிப்பு, புளிப்பு, உப்பு, காரம், கைப்பு.
2. இனிப்பு, புளிப்பு, உப்பு, காரம், துவர்ப்பு.
3. இனிப்பு, புளிப்பு, உப்பு, கைப்பு, துவர்ப்பு.
4. இனிப்பு, புளிப்பு, காரம், கைப்பு, துவர்ப்பு.
5. இனிப்பு, உப்பு, காரம், கைப்பு, துவர்ப்பு.
6. புளிப்பு, உப்பு, காரம், கைப்பு, துவர்ப்பு.

இவ்விதம் ஐந்து சுவைகள் சேர்ந்த பொருட்கள் ஆறு ஆகும்.

**30. ஒரே சுவையுள்ள பொருட்கள் ஆறு**

1. இனிப்புச் சுவையுள்ள பொருள்.
2. புளிப்புச் சுவையுள்ள பொருள்.
3. உப்புச் சுவையுள்ள பொருள்.
4. காரச் சுவையுள்ள பொருள்.
5. கைப்புச் சுவையுள்ள பொருள்.
6. துவர்ப்புச் சுவையுள்ள பொருள்.

இவ்விதம் ஒரே சுவையுள்ள பொருட்கள் ஆறு.

## 31. ஆறு சுவைகளும் சேர்ந்த பொருள் ஒன்று

இனிப்பு, புளிப்பு, உப்பு, காரம், கைப்பு, துவர்ப்பு இச்சுவைகள் ஆறும் ஒன்று சேர்ந்த பொருள் ஒன்று. ஆகச் சுவைகளின் எண்ணிக்கை அறுபத்து மூன்று.

| | |
|---|---|
| இரண்டு சுவைகளின் சேர்க்கையினால் தோன்றும் பொருட்கள் | 15 |
| மூன்று சுவைகளினால் தோன்றும் பொருட்கள் | 20 |
| நான்கு சுவைகளின் சேர்க்கையினால் தோன்றும் பொருட்கள் | 15 |
| ஐந்து சுவைகள் சேர்ந்த பொருட்கள் | 6 |
| ஆறு சுவையுள்ள பொருட்கள் | 1 |
| ஒரே சுவையுள்ள பொருட்கள் | 6 |
| | 63 |

இவ்விதம் சுவைகளின் எண்ணிக்கையைக் கொண்டு பொருட்களின் எண்ணிக்கை 63 என்று கூறப்பட்டது. ஆனால் இதே பொருட்களின், சுவை, துணைச்சுவை, இவற்றின் சேர்க்கையினால் 63 என்ற எண்ணிக்கை (சுவையின் ஏற்றக்குறைவினால்) கணக்கற்றதாக ஆகிவிடும். 15—23

சுவைகளின் சேர்க்கை 57 வகைதான்; ஆனால் மருத்துவர் நோயாளியின் சிகிச்சைக்கு ஏற்றவாறு தனித்தனியே 6 சுவைகளைச் சேர்த்து 63 பிரிவுகளாகப் பிரித்துள்ளார்கள். 24

சிகிச்சையில் வெற்றிபெற விரும்பும் மருத்துவன் தோஷங்களையும், மருந்துகளையும் கவனித்துச் சில இடங்களில் தனிச் சுவையுள்ள பொருட்களையோ, சில இடங்களில் பல சுவைகளை கொண்ட பொருட்களையோ பயன்படுத்த வேண்டும். அறிவாளியான மருத்துவர்கள், நோய்களுக்கு ஏற்றவாறு இரண்டு அல்லது பல பொருட்களின் சேர்க்கையினால் பலசுவை அல்லது ஒரே சுவையைப் பயன்படுத்துகின்றனர். 25—26

சுவைகளின் வேறுபாடுகளையும், தோஷங்களின் வேறுபாடுகளையும் நன்கு அறிந்த மருத்துவன், நோயின் காரணம், இலக்கணம், சிகிச்சை இவற்றை அறிவதில் ஒருபொழுதும் தோல்வி அடைவது இல்லை. 27

## 32. சுவை, துணைச்சுவை இவற்றின் இலக்கணம்

உலர்ந்த பொருளைச் சுவைக்கும்பொழுது நாக்கினால் முதலில் அறியப்படும் சுவைக்கு அப்பொருளின் சுவை என்றும், சுவைத்த

பின் கடைசியில் ஏற்படும் ரசம் துணைச்சுவை என்றும் கூறப்படும். சுவை ஆறுவகைதான். ஏழாவது சுவை என்று ஒன்று கிடையாது. 28

## 33. குணங்களின் எண்ணிக்கை

1. பரம், 2. அபரம், 3. யுக்தி, 4. ஸங்கியா, 5. ஸம்யோகம், 6. விபாகம், 7. ப்ருதக்த்வம், 8. பரிமாணம், 9. ஸம்ஸ்காரம் 10. அப்யாஸம் இவை குணங்களாகும். இவை சிகிச்சையில் வெற்றி பெறுவதற்குத் தேவையானவை. இவற்றின் முறையே இலக்கணங்களைக் கூறுவோம். 29—30

## 34. குணங்களின் இலக்கணம்

பரம் என்றால் முக்கியமானது. அபரம் என்பது முக்கிய மில்லாதது. இவ்விரண்டும் இடம், காலம், வயது, அளவு, சீரணம், வீர்யம், சுவை முதலியவற்றின் பாகுபாட்டில் பயன்படுத்தப்படு கின்றன.

ஒரு பொருளை மற்றொரு பொருளுடன் உகந்த இடத்தில் சேர்ப்பது யுக்தி எனப்படும்.

ஸங்கியா என்பது எண்ணிக்கையாகும். பொருட்கள் ஒன்று சேர்வது ஸம்யோகம். அது த்வந்த கர்மஜம், ஸர்வகர்மஜம், ஏக கர்மஜம் என மூவகைப்படும். (த்வந்த கர்மஜம் என்றால் இரண்டு ஒன்றாகச் சேருவது. உதாரணம் சண்டையிடும் இரண்டு ஆடுகள். ஸர்வ கர்மஜம் என்பது பல பொருட்கள் ஒன்று சேருவது, உதாரணம் பானையில் உளுந்தைப் போடும்போது பல ஒன்றாகச் சேருவது. ஏக கர்மஜம் என்பது ஒன்று மற்றொன்றுடன் சேருதல்.

---

| | | |
|---|---|---|
| 1. | பரம் | — முக்கியமானது |
| 2. | அபரம் | — முக்கியமில்லாதது. |
| 3. | யுக்தி | — பொருள்களை உகந்தவகையில் சேர்ப்பது. |
| 4. | ஸங்கியா | — எண்ணிக்கை. |
| 5. | ஸம்யோகம் | — பொருட்கள் ஒன்று சேர்வது. |
| 6. | விபாகம் | — பிரிவது. |
| 7. | ப்ருதக்த்வம் | — இந்தப் பொருள் மற்ற பொருளைவிட வேறுபட்டது என்ற அறிவு. |
| 8. | பரிமாணம் | — பொருட்களின் அளவு. |
| 9. | ஸம்ஸ்காரம் | — நன்கு செய்யப்படுகிறது எனப்பொருள் |
| 10. | அப்யாஸம் | — ஒரு பொருளையோ அல்லது ஒரு செயலையோ அடிக்கடி பழக்கத்திற்குக்கொண்டு வருதல். |

உதாரணம் காகம் கிளையில் அமருவது ; ஸம்யோகம் செயல் எனப்படும். அது அவ்வாறு நிலைத்திருக்கிறதில்லை. விபாகம் என்பது பிரிப்பது. இதற்கு வியோகம் (பிரிவது) என்ற மற்றொரு பெயரும் உண்டு.

இந்தப் பொருள் மற்ற பொருளைவிட வேறுபட்டது என்ற அறிவு ப்ருதக்த்வம் எனப்படும். (மத்தும் குடமும் தனித்தனி இலக்கணங்களைப் பெற்றிருப்பதால் தனித்தனிப் பொருள்கள் பசுக்களில் பசுத்தன்மை ஒன்றாக இருந்தாலும் இது கருநிற முள்ளது, சிவப்பு நிறமுள்ளது எனப் பலவாறாகப் பிரிக்கப்படுவ தால் நிறத்தை வைத்து அது பலவகையாக ஆகிறது. ஆகையால் எங்கு ஒருமைப்பாடு இல்லையோ இலக்கணத்தில் வேறுபாடு உண்டோ அவை பலவகையாக உள்ளன: அது ப்ருதக்த்வம் எனப் படும்.

பரிமாணம் என்பது பொருட்களின் அளவாகும். இது மானம் (அளவை) என்றும் கூறப்படுகிறது. ஸம்ஸ்காரம் என்றால் ஒரு செயல் நன்கு செய்யப்படுகிறது. எனப் பொருள். இதற்குக்கரணம் என்ற பெயரும் உண்டு. (அதனால் அச்செயலில் பயன்படுத்தப் படும் பொருளுக்குச் சிறப்புத்தன்மை ஏற்படுகிறது.)

ஒரு பொருளையோ அல்லது ஒரு செயலையோ அடிக்கடி பழக்கத்திற்குக் கொண்டு வருதல் அப்யாஸம் எனப்படும். இதற்கு சலனம், (ஸததக்ரியா) (எப்பொழுதும் செயலில் ஈடுபடுத்தல்) என மற்றொரு பெயரும் உண்டு.

இவ்விதம் அதனதன் குணத்திற்கு ஏற்றவாறு பரம், அபரம் முதலானவற்றின் (குணங்கள்) விளக்கப்பட்டுள்ளன. இந்தக்குணங் களை அறியாமல் உரிய முறையில் சிகிச்சையில் நன்கு ஈடுபட முடியாது. 30–35

ஒரு குணத்தில் மற்றொரு குணம் இருக்க முடியாது. குணம் பொருளைத்தான் இருப்பிடமாகக் கொண்டிருக்கும். ஆதலால் ரஸத்தின் குணங்கள் என்று சொல்லும் இடங்களில் ரஸத்தின் (சுவையின்) இருப்பிடமான பொருட்களின் குணங்கள் என்று மருத்துவர் அறிந்துகொள்ள வேண்டும். தனித்தனி ஆசிரியர்களின் கருத்து வேறுபட்டாலும், ரசத்தின் குணங்கள் என்று குறிப்பிடு மிடங்களில் எல்லாம் ரசத்தின் இருப்பிடமான பொருட்களின் குணங்களைக் குறிப்பிடுவதாகப் பொருள் கொள்ள வேண்டும். 36

ஆகையால் மருத்துவன் மேற்கண்ட கருத்துக்களைக் கேட்டு அல்லது நோய்களைக் கண்டு சூழ்நிலை, இடம், காலம், இவற் றின் மாறுபாடுகளை அறிந்துகொண்டு நூலாசிரியர்களின் கருத்

துக்களையும், அவர்கள் கூறும் வழிகளையும் அறிந்து கருத்தைத் தீர்மானிக்க வேண்டும். 37

**35. ஆறு சுவைகளின் தோற்றம்**

ஐம்பெரும் பூதங்களினின்றும் தோன்றும் சுவைகள் எவ்விதம் ஆறுவகையாக ஆகிறது என்பதை விளக்குவோம்.

**36. ஆகாயத்திலிருந்து தோன்றும் நீரும் அதன் சுவையும்**

ஆகாயத்திலிருந்து கிடைக்கும் நீர், தெளிவும், இயற்கையாகவே குளிர்ச்சியும், இலேசான தன்மையும், தெளிவற்ற சுவையும் கொண்டிருக்கும். இப்படிப்பட்ட நீர் ஐம்பெரும் பூதங்களில் குணங்களுடன் கூடி அசையும் பொருள். அசையாப் பொருள்களின் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கிறது. அவற்றிலிருந்து ஆறு சுவைகள் வெளிப்படுகின்றன. இந்த ஆறு சுவைகளும் நிலம், நீர் என்ற பூதங்களின் குணத்தை அதிகமாகப் பெற்றமையால் இனிப்புச்சுவை உண்டாகிறது.

நிலம், நெருப்பு இவற்றின் அதிகத்தன்மையினால் புளிப்புச் சுவையும், நீர், நெருப்பு இவற்றின் அதிகத் தன்மையினால் உப்புச் சுவையும், காற்று, நெருப்பு இவற்றின் அதிகத் தன்மையால் காரம் என்ற சுவையும், காற்று, ஆகாயம் இவற்றின் அதிகத் தன்மையினால் கைப்புச் சுவையும், காற்று, நிலம் இவற்றின் அதிகத் தன்மையினால் துவர்ப்புச் சுவையும் உண்டாகின்றன. 38–39

இவ்விதம் அறுவகைச் சுவைகள் ஏற்படுகின்றன. ஐம்பெரும் பூதங்களின் ஏற்றத் தாழ்வு இவற்றின் தோற்றத்தின் காரணமாகின்றது.

அசையும் பொருள் அசையாப்பொருட்களில் ஐம்பெரும் பூதங்களின் ஏற்றத்தாழ்வினால், வெளுப்பு, கறுப்பு என்ற நிறங்களும், உருவ வேறுபாடும் ஏற்படுவனபோல் அந்தந்தச் சுவைகளின் தோற்றமும் ஏற்படுகிறது. ஆறு பருவங்களுக்கு ஏற்றவாறு ஐம்பெரும் பூதங்களின் ஏற்றத்தாழ்வு காண்பது இயற்கை. 40

காற்று லேசான தன்மையையும், மேல்நோக்கிச் செல்லும் தன்மையையும் பெற்றிருப்பதாலும், நெருப்பு மேல்நோக்கி எரியும்தன்மை பெற்றிருப்பதாலும், நெருப்பு, காற்று இவைகளை அதிக அளவில் உள்ள சுவைப் பொருட்களும் மேல்நோக்கிச் செல்லும் தன்மையைப் பெறுகின்றன.

நிலம், குருகுணம் (பளு) இதனைக் கொண்டும், நீர் கீழ் நோக்கிச் செல்லும் தன்மையைக் கொண்டும் இருப்பதால் இவ்

விரண்டு பூதங்களும் அதிக அளவில் கலந்துள்ள சுவைப் பொருட்கள் கீழ்நோக்கிச் செல்லும் தன்மையைப் பெறுகின்றன. மேல் நோக்கிச் செல்லக்கூடிய பொருட்கள், கீழ்நோக்கிச் செல்லும் பொருட்கள் இரண்டும் ஒன்று சேர்ந்தால் அவை இருவகைச் செயல்களையும் செய்யும் தகுதி பெறுகின்றன. 41

இந்த ஆறுசுவைகளுள் ஒவ்வொரு சுவையுள்ள பொருள்களின் குணம், செயல் இவற்றை விளக்குவோம்.

## 37. இனிப்புச் சுவையின் குணங்களும் செயல்களும்

ஆறுசுவைகளில் இனிப்புச் சுவையுள்ள பொருள் உடல்நலனை வளர்ப்பதற்கு ஒத்துக்கொள்வதால் இரசம், இரத்தம், மாமிசம், கொழுப்பு, எலும்பு, ஓஜஸ், விந்து இவற்றை வளர்க்கிறது. ஆயுள் வளர்ச்சிக்கு உதவுகிறது. அறிவுப் புலன்களை தெளிவுபடுத்துகிறது. உடலுக்கு வலிவையும், நிறத்தையும் அளிக்கிறது. அதிக அளவில் உள்ள பித்தம், நஞ்சு, வாதம் இவற்றை நீக்குகிறது. நாவறட்சி, எரிச்சல் இவற்றைத் தணிக்கிறது. தோல், முடி, தொண்டை இவற்றிற்கு நலனையளிக்கிறது. உடலுக்கு வலிவு, தெளிவு இவற்றைத் தந்து உயிரூட்டவல்லது. உடலுக்கும், மனதிற்கும் நிறைவை அளிப்பதோடு, உடலைப் பருக்கச் செய்து, உறுதியையும் தருகிறது. உடலிலுள்ள தாதுக்களின் குறைவை ஈடுபாடு செய்து, பிளந்த காயங்களை ஒன்று சேர்த்து, மூக்கு, வாய், தொண்டை, உதடு, நாக்கு இவற்றிற்கு மகிழ்ச்சி ஏற்படுத்துகிறது. எரிச்சல், மயக்கம் இவற்றைத் தணித்து, வண்டுகளுக்கும் எறும்புகளுக்கும் மிக்கப் பிடித்தமாக ஆகிறது. இவை இனிப்புச் சுவையின் செயல்கள். நைப்பு, குளிர்ச்சி, குரு இவை இனிப்புச் சுவையின் குணங்கள்.

## 38. இனிப்புச் சுவையை அதிகம் பயன்படுத்துவதால் ஏற்படும் தீமைகள்

மேற்கண்ட குணங்களை உடைய இனிப்புச் சுவையைத் தனியாக அதிகம் பயன்படுத்தினால் உடல் பருமன் அதிகம், மிருதுத் தன்மை, (உறுதியின்மை), சோம்பல், அதிக உறக்கம், உடல்பளு, உணவில் அவாவின்மை, சடராக்னிக் குறைவு, வாய், தொண்டை இவற்றில் அதிக மாமிச வளர்ச்சி, இழுப்பு, இருமல், கடுமையாகத் தொண்டையில் கபம் சேருதல், அலசகம் எனும் அசிரண நோய், குளிர் காய்ச்சல், வயிற்று உப்புசம், வாயில் இனிப்புச் சுவை, வாந்தி, அறிவு, குரல் இவற்றின் அழிவு, கலகண்டம் என்ற தொண்டைக்குள் தோன்றும் நோய், கண்டமாலை, யானைக்கால் நோய், தொண்டை வீக்கம், சிறுநீர்ப்பை,

ரத்தக் குழாய்கள் இவற்றில் பாதிப்பு, தொண்டையில் குழ குழப்பு, கண் தொல்லை, கபம் போன்ற நோய்கள் தோன்றும்.

**39. புளிப்புச் சுவையின் குணங்களும் செயல்களும்**

புளிப்புச்சுவை உணவில் சுவையைக் கூட்டுகிறது. சடராக்னியைத் தூண்டிவிடுகிறது. உடலுக்கு வலிவை அளிப்பதுடன் பருக்கவும் செய்கிறது. மனதைச் செயலில் ஈடுபடுத்துகிறது. புலன்களை உறுதிப்படுத்துவதுடன் வலிவையும் வளர்க்கிறது. வாதத்தை அது செல்லவேண்டிய வழிகளில் செலுத்துவதுடன் உள்ளத்திற்கு உவகை ஊட்டுகிறது. உமிழ்நீரைப் பெருகச் செய்து, உண்ட உணவை (இரைப்பைக்கு) உள்ளே எடுத்துச் செல்கிறது. உணவை இளகச் செய்வதுடன் அதைச் சீரணமடையவும் செய்கிறது. மகிழ்ச்சியை ஊட்டுகிறது. இவை புளிப்புச் சுவையின் செயல்களாகும். லகு குணம், உஷ்ண வீர்யம், நைப்புத்தன்மை இவை புளிப்புச் சுவையின் குணங்களாகும்.

**40. புளிப்புச் சுவையை அதிகம் பயன்படுத்துவதால் ஏற்படும் தீமைகள்**

புளிப்புச் சுவையைத் தனியாக அதிக அளவில் பயன்படுத்துவதினால், பற்கூச்சம், நாவறட்சி, கண்கள் மூடிப்போதல், மயிர் கூச்சல், கபத்தை இளகச் செய்தல், பித்தத்தை அதிகப்படுத்தல், இரத்தம் கெடுதல், மாமிசத்தில் எரிச்சல், உடல் தளர்ச்சி, தாதுக்கள் குறைந்து, அடிபட்டு, இளைத்து, வலிவு குறைந்து உள்ளவனுக்கு வீக்கத்தைத் தோற்றுவித்தல் போன்ற தீமைகள் ஏற்படும்.

மேலும் அடிபட்ட காயம், அடிபட்ட, பற்களால் கடிபட்ட, நெருப்பினால் சுடப்பட்ட, எலும்பு முறிந்த புண்கள், வீக்கம், மூட்டு நழுவுதல், நஞ்சுள்ள பிராணிகளின் சிறுநீரால் தாக்கப்பட்ட, விஷமுள்ள பிராணிகளால் உராயப்பட்ட, உடல் நசுக்கப்பட்ட, கத்தி போன்ற கருவிகளால் வெட்டப்பட்ட, பிளக்கப்பட்ட, அடிபட்டு நொறுங்கிய எலும்பு, கூர்மையான கருவியால் தொளைக்கப்பட்ட என இத்தகைய இரணங்கள், புளிப்புச்சுவையில் தீயின் தன்மை அதிகமிருப்பதால் சீழ்பிடித்துவிடுகிறது. தொண்டை, மார்பு, இதயம் இவற்றில் எரிச்சல் தோன்றுகிறது.

**41. உப்புச் சுவையின் குணங்களும் செயல்களும்**

உப்புச்சுவை, உணவைச் சீரணிக்கச் செய்தல், நீர்கசியாது தளர்த்துதல், சடராக்னியைத் தூண்டிவிடுதல், உறுப்புக்களை நழுவச் செய்தல், அறுத்தல், உடைத்தல், எரிச்சல் உண்டுபண்ணுதல், இளகச் செய்தல், மூட்டுக்கள் பிரிந்துவிடுவதுபோல் வளர்ச்சி

யை உண்டுபண்ணி தாதுக்களிலிருந்து கீழ்நோக்கிச் செல்லுதல், இடைவெளியை ஏற்படுத்துதல், வாத தோஷத்தை நீக்குதல், கட்டைத் தளர்த்துதல், மலக்கட்டை உடைத்தல் குவிந்திருக்கும் தோஷ தூஷ்யங்களைப் பிரித்துவிடுதல் போன்ற செயல்களை தோற்றுவிக்கின்றது. இது மற்ற சுவைகளுக்கு எதிரிடையானது. வாயிலிருந்து உமிழ்நீரை ஒழுகச் செய்கிறது. கபத்தை இளகச் செய்கிறது. உடலில் மேல்பகுதி கீழ்ப்பகுதி இவற்றில் உள்ள வழி களைச் சுத்தப்படுத்துகிறது. உடலிலுள்ள எல்லா உறுப்புக்களை யும் மிருதுவாக்குகிறது. உணவிற்கு சுவை கூட்டுகிறது. உணவுக்கு மிகவும் பயன்படுவது என இவை உப்புச் சுவையின் செயல்களா கும். மிக்க குரு குணமல்லாதது, நைப்புத் தன்மையும், உஷ்ண வீர்யமும் இதன் குணங்களாகும்.

## 42. உப்புச் சுவையை அதிக அளவில் பயன்படுத்துவதால் ஏற்படும் விளைவுகள்

உப்புச் சுவை மேற்கண்ட குணங்களுடன் கூடியிருந்தபோதி லும் அதை அதிக அளவில் தனியாகப் பயன்படுத்துவதனால் பித்தத்தை சீற்றமடையச் செய்தல், இரத்தத்தைப் பெருக்குதல், நாவறட்சி, மயக்கம், உடலில் சூடு, தோலைப் பிளத்தல், மாமிசத்தை அரித்து பிரியச்செய்தல், குஷ்டரோகத்தில் மாமிசத் தைத் தின்றுவிடுதல், நஞ்சை வளர்த்தல், கொப்புளங்களை உடைக்கச் செய்தல், பற்களை உதிரச் செய்தல், ஆண்மையை அழித்தல், புலன்களின் வலிவைத் தடைப்படுத்துதல், தோலில் சுருக்கம் விழுதல், இளமையில் நரையைத் தோற்றுவித்தல், தலை யில் ரோமம் உதிர்தல் போன்ற தீமைகள் ஏற்படுகின்றன.

இது மேலும் இரத்த பித்தம், அம்ல பித்தம், அக்கி, வாத ரத்தம், விசர்ச்சிகா, சொட்டை விழுதல் போன்ற நோய்களைத் தோற்றுவிக்கிறது.

## 43. கார்ப்புச் சுவையின் குணங்களும், செயல்களும்

கார்ப்புச்சுவை (வாயில் நீர்சுரக்கச் செய்து) வாயைச் சுத்தம் செய்கிறது, சடராக்னியைத் தூண்டிவிடுகிறது. உண்ட உணவை சுண்டச் செய்கிறது. மூக்கிலிருந்து சளியை ஒழுகச் செய்கிறது. கண்ணீர் வடியச் செய்கிறது. அறிவுப் புலன்களை தம்தம் செயல் களில் ஈடுபடுத்துகிறது. அலசகம் என்னும் நோய், வீக்கம், உடல் பருமன், தோலில் தடிப்பு இவற்றைத் தோற்றுவிக்கிறது.

கபம், எண்ணெய்ப்பசை, வியர்வை, பிசுபிசுப்பு, அழுக்கு இவற்றைப் போக்குகிறது. உணவில் சுவையைக் கூட்டுகிறது. அரிப்பை நீக்குகிறது. காயங்களை ஆற்றுகிறது. கிருமிகளை அழிக்

கிறது. கெட்ட மாமிசத்தைச் சுரண்டி வெளித் தள்ளுகிறது. ரத்தக்கட்டைப் பிரித்துவிடுகிறது. மூட்டுப்பிடிப்பைத் தளர்த்தி, உடலில் உள்ள துவாரங்களை விரியச் செய்து, கப தோஷத்தைத் தணிக்கிறது. இவை கார்ப்புச் சுவையின் செயல்களாகும். லகு, வறட்சி இவற்றுடன் உஷ்ண வீர்யமும் இதன் குணங்களாகும்.

## 44. கார்ப்புச் சுவையை அதிக அளவில் தனியாகப் பயன்படுத்துவதால் ஏற்படும் தீமைகள்

இந்தக் குணங்கள் கொண்ட கார்ப்புச் சுவையைத் தனியாக அதிக அளவில் பயன்படுத்தினால், அது சீரணத்தின் முடிவில் உணவை கார்ப்புச் சுவையாக மாற்றி ஆண்மையை அழிக்கிறது.

தனது சுவை, வீர்யம் இவற்றின் சிறப்புத்தன்மையினால் மதிமயக்கத்தை உண்டாக்கி, உடலில் சோர்வு, தளர்ச்சி, இளைப்பு மூர்ச்சை, வளைத்தல், உணர்வின்மை இவற்றைத் தோற்றுவித்து, தலைச்சுற்றல், தொண்டையில் எரிச்சல், உடற்சூடு இவற்றையும் அளிக்கிறது. வலிவை அழிக்கிறது. நாவறட்சியை ஏற்படுத்துகிறது. மேலும் அது காற்று, நெருப்பு இவற்றின் தன்மையை அதிக அளவில் பெற்றிருப்பதால் உடலில் மயக்கம், எரிச்சல், நடுக்கம், ஊசி குத்துவது பிளப்பது போன்ற 'வேதனையைத் தோற்றுவித்து, கால், கை, விலாப்பக்கங்கள், பின்பாகம் போன்ற உறுப்புக்களில் வாதநோய்களைத் தோற்றுவிக்கிறது.

## 45. கைப்புச் (கசப்பு) சுவையின் குணங்களும் செயல்களும்

இச்சுவை அதனை அருந்தும்பொழுது அருவருப்பைத் தோற்றுவித்தாலும் நாக்கில் சுவையின்மையைப் போக்குகிறது. நஞ்சின் வேகத்தைப் போக்கி, கிருமிகளை அழித்து, மயக்கம், அரிப்பு, குஷ்டம், நாவறட்சி, இவற்றைத் தணித்து, தோலையும், மாமிசத்தையும் உறுதிப்படுத்தி, காய்ச்சலை நீக்கி, சடராக்னியைத் தூண்டிவிடுவதுடன் சீரணத்தையும் அளிக்கிறது. தாய்ப் பாலைத் தூய்மைப்படுத்தி, கரைத்து, உடலின் பிசுபிசுப்பு, கொழுப்பு, வசை, மஜ்ஜை, நிணநீர், சீழ், வியர்வை, சிறுநீர், மலம், பித்தம், கபம் இவற்றைச் சுண்டவும் செய்கிறது. இவை கைப்புச் சுவையின் செயல்களாகும்.

வறட்சி, குளிர்ச்சி, லகு இவை இச்சுவையின் குணங்களாகும்.

## 46. கைப்புச் சுவையை அதிக அளவில் பயன்படுத்துவதால் ஏற்படும் தீமைகள்

இக்குணங்களைக் கொண்டு வறட்சி, சொரசொரப்பு, தெளிவு இவற்றைப் பெற்ற இச்சுவையை அதிக அளவில் தனியாகப் பயன்

படுத்தினால், ரஸதாது, இரத்தம், மாமிசம், கொழுப்பு, எலும்பு, எலும்புக்குள் உள்ள சோறு (மஜ்ஜை),விந்து இவை வரண்டுவிடும். உடலில் உள்ள துவாரங்களை (ஸ்ரோதஸ்) சொரசொரப்பு உடையதாகவும், வலிவை இழந்ததாகவும், உடலை இளைத்ததாகவும் செய்கிறது. மனதிற்கு சோர்வு, மோகம், மயக்கம், வாயை உலரச் செய்தல் போன்றவற்றுடன் மற்ற வாத நோய்களையும் உண்டு பண்ணுகிறது.

## 47. துவர்ப்பு (கஷாயச்) சுவையின் குணங்களும் செயல்களும்

தோஷங்களைச் சமனப்படுத்தல், மலத்தைக் கட்டுதல், பிளப்பைச் சேர்த்து வைத்தல், ரஸங்களை அமுக்குதல், காயங்களை ஆற்றுதல், உலரச் செய்தல், கட்டுதல், கபம், பித்தம், இரத்தத்தில் உள்ள தோஷங்களைத் தணித்தல், உடலில் உள்ள பிசுபிசுப்பைப் போக்குதல் போன்றவை இச்சுவையின் செயல்களாகும்.

இது வறட்சி, குளிர்ச்சி, லகு இக்குணங்களை உடையது.

## 48. துவர்ப்புச் சுவையை அதிகம் பயன்படுத்துவதால் ஏற்படும் தீமைகள்

இச்சுவை இக்குணங்களைப் பெற்றிருந்தாலும் அதிக அளவில் தனியாகப் பயன்படுத்தினால் வாயை உலர்த்துதல், இதயத்தில் வேதனை, வயிற்றில் உப்புசம், பேசும் சக்தியைக் குறைத்தல், உடலில் உள்ள துவாரங்களை அடைத்தல், உடலில் கருநீல நிறத்தை உண்டுபண்ணுதல், ஆண்மையை அழித்தல், வயிற்றில் உணவைத் தேக்கி சீரணிக்கச் செய்தல், கீழ்நோக்கிச் செல்லும் வாயு, சிறுநீர், மலம், விந்து இவற்றைத் தடைபடுத்துதல், உடலை இளைக்கச் செய்தல், மனதிற்குச் சோர்வை அளித்தல், நாவறட்சி, உடலிற்கு சடத்தன்மை ஏற்படுத்துதல், இவை போன்ற தீமைகளை அது உண்டாக்குகிறது.

மேலும் இச்சுவை, சொர சொரப்பு, தெளிவு, வறட்சி இவற்றைப் பெற்றிருப்பதால் பக்கவாதம், தாடைப்பிடிப்பு, மூர்ச்சையற்று விடுதல் (அபதாநகம்), முகம் கோணிப் போதல் போன்ற வாத நோய்களையும் தோற்றுவிக்கிறது. 43

இவ்விதம் ஆறு சுவைகளை தனித்தனியாகவோ, ஒன்று சேர்த்தோ, அளவுடன் நன்முறையில் பயன்படுத்தினால் உடலுக்கு நன்மை உண்டாகும். அளவில்லாமல் முறைதவறிப் பயன்படுத்தினால் தீங்குகள் ஏற்படுகின்றன. ஆகையால் அறிவாளியான

மருத்துவன் உடலுக்கு நன்மை பயக்க, அளவுடன் மேற்கண்ட சுவைகளை நன்முறையில் பயன்படுத்த வேண்டும். 44

## 49. சுவையின் மூலம் பொருட்களின் வீர்யத்தைக் கண்டறிதல்

சுவையிலும் பாகத்திலும் இனிப்புச் சுவையாக மாறும் பொருள், சீதவீர்யம் உள்ளது.

சுவையிலும் பாகத்திலும் புளிப்புச் சுவையாக மாறும்பொருள் உஷ்ணவீர்யமுள்ளது.

சுவையிலும் பாகத்திலும் கார்ப்புச்சுவையாக மாறும் பொருளும் உஷ்ண வீர்யமுள்ளது. 45

வீர்யத்திலும் பாகத்திலும் மாறுதலடையாத பொருட்களின் சுருக்கம் சொல்லப்பட்டது. அவற்றைச் சுவையினால் அறிந்து கொள்ள வேண்டும்.

வீர்யத்திலும் விபாகத்திலும் மாறுபட்டுள்ள பொருட்களைப் பற்றி மேலே கூறப்படும். 46

உதாரணமாகப் பால், நெய் இவற்றில் உள்ள இனிப்புச் சுவை, விபாகத்தில் இனிப்புச் சுவையாகவும் வீர்யத்தில் சீத வீர்ய முள்ளதாகவும் உள்ளது. அதேபோல் செவ்யம், கொடிவேலி இவற்றில் உள்ள கார்ப்புச்சுவை, விபாகத்தில் கார்ப்புச் சுவை யாகவும், உஷ்ண வீர்யமுள்ளதாகவும் உள்ளது. இவ்வாறு வீர்யத் திலும், விபாகத்திலும் வேற்றுமையில்லாத பொருட்களையும் சுவையைக் கொண்டு மருத்துவன் அறிந்துகொள்ள வேண்டும். 47

## 50. எதிரிடையான வீர்யமுள்ள பொருட்கள்

சில இனிப்புச் சுவையுள்ள பொருட்களில் உஷ்ண வீர்ய முள்ளவை. உண்மையில் இனிப்புச் சுவையுள்ள பொருட்கள் சீத வீர்யமுள்ளவைகளாகத்தான் இருக்க வேண்டும். உதாரணமாக நீரில் வாழும் சில பிராணிகள் நீர்ப்பாங்கான இடத்தில், வாழும் பிராணிகள் இவற்றின் மாமிசம் இனிப்புச் சுவையுடையது. உஷ்ண வீர்யமுள்ளது. ஆகையால் இனிப்புச் சுவையுள்ள அந்த மாமிசம் பித்தத்தைத் தணிப்பதற்குப் பதில் பித்தத்தை அதிகப்படுத்து கிறது.

இதேபோல் சில துவர்ப்பு, கைப்புச் சுவையுள்ள பொருட்கள் உஷ்ண வீர்யமுள்ளவையாக உள்ளன. உதாரணமாக மஹாபஞ்ச மூலப் பொருட்கள்.

இந்துப்பு, கடல் உப்பைப்போல் அவ்வளவு உஷ்ண வீர்யம் உடையதல்ல. நெல்லிக்காய் புளிப்புச்சுவை உடையபோதிலும்,

உஷ்ண வீர்யம் உடையதல்ல. எருக்கு, அகில், சீந்திற்கொடி இவை கைப்புச் சுவையுடையபோதிலும் உஷ்ணவீர்யமுள்ளவை. 48–49

சில புளிப்புச் சுவையுள்ள பொருட்கள் மலத்தைக் கட்டக் கூடியவை. மற்றும் சில புளிப்புச் சுவையுள்ள பொருட்கள் மலத்தைப் பிளந்து வெளிப்படுத்துபவை. உதாரணமாக :- விளாம் பழம் மலத்தைக் கட்டும். நெல்லிக்கனி மலத்தை வெளிப்படுத்தும். 50

கார்ப்புச் சுவையுள்ள பொருள்கள் ஆண்மையை அளிப்ப தில்லை. ஆனால் கார்ப்புச் சுவையுள்ள அரிசித் திப்பிலி, சுக்கு இவ்விரண்டும் ஆண்மையை அளிக்கின்றன. 51

துவர்ப்புச் சுவையுள்ள பொருட்கள், மலத்தைக் கட்டுகின் றன. குளிர்ச்சியுள்ளவை. ஆனால் துவர்ப்புச் சுவையும், குளிர்ச்சி யுமுள்ள கடுக்காய் மலத்தை கட்டுவது இல்லை. ஆகையால் சுவ்வையைக் கொண்டே பொருட்களின் குணங்களை அறிந்து கொள்ள முடியாது.

ஒரே சுவையுள்ள வேறு வேறு பொருட்களில் குணங்களின் வேறுபாடு காணப்படுகிறது. 52

## 51. சுவைகளின் சிறப்பு

வறட்சித்தன்மையை அளிக்கும் பொருட்களில் துவர்ப்புச் சுவை மற்ற சுவைகளைவிட மேலோங்கி நிற்கும். கார்ப்புச் சுவை நடுத்தரமாகவும், கைப்புச்சுவை குறைவாகவும் இருக்கும்.

உஷ்ண குணமுள்ள பொருட்களில் உப்புச்சுவை மற்ற சுவை களைவிட மேலாகவும், புளிப்புச்சுவை நடுத்தரமாகவும், கார்ப்புச் சுவை குறைவாகவும் இருக்கும்.

எண்ணெய்ப் பசையுண்டாக்கும் பொருட்களில் இனிப்புச் சுவை மேலாகவும், புளிப்புச்சுவை நடுத்தரமாகவும், உப்புச்சுவை குறைவாகவும் இருக்கும்.

சீத வீர்யமுள்ள பொருட்களில் இனிப்புச்சுவை மேலாகவும், துவர்ப்புச்சுவை நடுத்தரமாகவும், கைப்புச்சுவை குறைவாகவும் உள்ளது.

குரு குணமுள்ள பொருட்களில் மேலானது இனிப்புச்சுவை. நடுத்தரமானது துவர்ப்புச்சுவை. குறைவானது உப்புச்சுவை.

லகு குணமுள்ள பொருட்களில் கைப்புச்சுவை மேலானது. கார்ப்புச்சுவை நடுத்தரமானது. புளிப்புச்சுவை குறைவானது.

சில ஆசிரியர்கள் உப்புச்சுவையைக் குறைவான லகு குணமுள்ளதாக எண்ணுகின்றனர். ஆனால் லகு, குரு குணமுள்ள பொருட்களிலும் உப்புச்சுவை குறைவாக உள்ளது என்பது அக்னிவேசரின் கருத்தாகும். 53–56

## 52. [1]விபாகத்தின் இலக்கணம்

விபாகத்தின் இலக்கணம் இதன்பின் கூறப்படுகிறது. கார்ப்பு கைப்பு, துவர்ப்பு, இம்மூன்று சுவையுள்ள பொருட்கள் பெரும்பாலும் விபாகத்தில் கார்ப்புச்சுவையாக மாறுபாடு அடைகின்றன.

புளிப்புச்சுவை விபாகத்தில் புளிப்புச்சுவையாகவே இருக்கிறது.

இனிப்பு, உப்பு இரண்டு சுவைகளும் விபாகத்தில் இனிப்புச் சுவையாக மாறுகின்றன. 57–58

## 53. சுவை மாறுபாடுகளின் செயல்கள்

நைப்புத்தன்மை பெற்று, இனிப்பு, உப்பு, புளிப்பு, இம்மூன்று சுவையுள்ள பொருட்கள், கீழ்நோக்கிச் செல்லும் வாயு, சிறுநீர், மலம் இவற்றை எளிதாக வெளிப்படுத்துகின்றன. 59

வறட்சித்தன்மை பெற்று கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு இம்மூன்று சுவையுள்ள பொருட்கள் கீழ்நோக்கிச் செல்லும் மலம், சிறுநீர், விந்து இவற்றைக் கஷ்டப்பட்டு வெளிப்படுத்துகின்றன. 60

விபாகத்தில் கார்ப்புச் சுவையாக மாறுபாடடையும் பொருட்கள் விந்துவை அழிக்கின்றன. மலம், சிறுநீரை தடைப் படுத்துகின்றன. வாத தோஷத்தை அதிகரிக்கச் செய்கின்றன.

விபாகத்தில் இனிப்புச்சுவையாக மாறும் பொருள் மலம், சிறுநீர் இவற்றை வெளிப்படுத்தி, கபத்தையும், விந்துவையும் வளர்க்கிறது. 61

விபாகத்தில் புளிப்புச் சுவையாக மாறும் பொருள் பித்தத்தை அதிகரிக்கச் செய்கிறது. மலம், சிறுநீர் இவற்றை வெளிப்படுத்துகிறது. விந்துவை அழிக்கிறது.

இச்சுவைகளில் விபாகத்தில் இனிப்புச் சுவையாக மாறும் பொருள் குரு குணமுள்ளது.

---

1. **விபாகம்** – சீரணமாகும்பொழுது சடராக்னியின் சேர்க்கையால் முடிவில் ஏற்படும் சுவை மாறுபாடு.

விபாகத்தில் கார்ப்புச் சுவையாக மாறும் பொருள் புளிப்புச் சுவையாக மாறும் பொருள் இவ்விரண்டும் லகு குண முள்ளவை. 62

பொருட்களில் உள்ள குணங்களின் ஏற்றத்தாழ்வைக்கொண்டு விபாகத்தில் அதிகம், நடுத்தரம், குறைவு என இவற்றை அறிந்து கொள்ள வேண்டும். 63

## 54. வீர்யத்தின் பிரிவுகள்

சிலர் 1. மிருது, 2. தீக்ஷ்ணம், 3. குரு, 4. லகு, 5. ஸ்நிக்தம், 6. ரூக்ஷம், 7. உஷ்ணம், 8. சீதம் என எண்வகையாக வீர்யத் தைப் பிரிக்கின்றனர். மற்றும் சிலர் சீதம், உஷ்ணம் என்ற இரண்டே பிரிவுகளாக வீரியத்தைப் பிரிக்கின்றனர். எந்தச்செயல், எந்தச் சக்தியின் மூலமாக இயங்குகின்றதோ அது வீர்யம் எனப் படும். ஒரு பொருளும் வீர்யமில்லாமல் செய்யப்படுவதில்லை. செயல்கள் யாவும் வீர்யத்தினாலேயே இயங்குகின்றன. 64–65

பொருட்களை நாக்கில் சுவைக்கும்பொழுது சுவை அறியப் படுகிறது. செயலின் முடிவில் விபாகம் அறியப்படுகிறது. பொருட் களை நாக்கில் சுவைப்பது முதல், பொருட்கள் உடலில் நிலை பெறும் வரை வீரியம் அறியப்படுகிறது. 66

## 55. [9]பிரபாவத்தின் இலக்கணம்

பொருட்களில் ரஸம், வீர்யம், விபாகம் என இம்மூன்றும் ஒரேவிதமாக அமைந்திருந்தும் ஒன்றுக்கொன்று செயலில் வேற்று மையைத் தோற்றுவிப்பது பிரபாவம் எனப்படும். 67

கார்ப்புச்சுவையுள்ள கொடிவேலி விபாகத்தில் கார்ப்புச்சுவை யுள்ளதாகவும், உஷ்ண வீர்யம் உள்ளதாகவும் இருக்கிறது. இது மலத்தைக் கட்டுகிறது.

ஆனால் கார்ப்புச்சுவையுள்ள நீர்வாளம் விபாகத்தில் கார்ப்புச் சுவையும், உஷ்ண வீர்யம் கொண்டதாக இருந்தும் மலத்தை வெளிப்படுத்துகிறது. இது நீர்வாளத்தின் தனிச்சிறப்புச் செயலாகும். 68

ஒரு நஞ்சு மற்றொரு நஞ்சைப் போக்குவது அதன் சிறந்த செய லாகும். (பிரபாவம்)

---

1. மிருது – மெதுவானது.
2. தீக்ஷ்ணம் – கடுமை.
3. குரு – பளு.
4. லகு – லேசானது.
5. ஸ்நிக்தம் – எண்ணெய்ப் பசையுள்ளது
6. ரூக்ஷம் – வறட்சி.
7. உஷ்ணம் – சூடு.
8. சீதம் – குளிர்ச்சி.

9 பிரபாவம் – தனிச் சிறப்புச் செயல்.

உடலின் மேல்பாகத்திலும், கீழ்பாகத்திலும் தோஷங்களை வெளிப்படுத்தல் (வாந்தி–பேதி மூலமாக வெளிப்படுதல்) அந்தப் பொருட்களின் சிறந்த செயலாகும். 69

மணிகளை அணிவதனால் ஏற்படும் பலவகைச் செயல்கள் அந்த மணிகளின் சிறந்த செயல், பிரபாவமாகும்.

பிரபாவம் என்பது அந்தப் பொருளுக்குரிய விவரிக்க முடியாத ஒரு சக்தி.

இம்மாதிரி விபாகம், வீரியம், பிரபாவம் இவற்றின் விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. 70

## 56. பொருட்களின் செயல்முறைகள்

சில பொருட்கள் சுவையினாலும்,

சில பொருட்கள் வீர்யத்தினாலும்,

சில பொருட்கள் குணத்தினாலும்,

சில பொருட்கள் விபாகத்தினாலும்,

சில பொருட்கள் பிரபாவத்தினாலும்

தம் தம் செயல்களை ஆற்றுகின்றன. 71

பொருட்களில் ரஸம், வீர்யம், விபாகம், பிரபாவம் இவற்றின் வலிவு ஸமமாக இருந்தபோதிலும், ரசத்தின் வலிவை விபாகம் வென்றுவிடுகிறது. ரஸம், விபாகம் இவ்விரண்டின் வலிவைவீர்யம் அழித்துவிடுகிறது. ரஸம், வீர்யம், விபாகம் இம்மூன்றின் வலிவையும் பிரபாவம் விஞ்சிவிடுகிறது. இது அவற்றின் இயற்கைச் செயலாகும். 72

## 57. ஆறு சுவைகளையும் அறியும் முறை

### 1. இனிப்புச் சுவையின் இலக்கணம்

ஆறு சுவைகளையும் அறியும் முறையைப் பிறகு விளக்குவோம்.

புலன்களுக்குத் தெளிவு அளித்தல், எண்ணெய்ப்பசை, மகிழ்ச்சியுண்டாக்குதல், உடலில் மிருதுத் தன்மையை ஏற்படுத்துதல் போன்ற செயல்களினால் இனிப்புச்சுவை அறியப்படுகிறது. அச்சுவை வாயில் இருக்கும்பொழுது விரைவில் பரவி விடுகிறது, வாய் பூசியதுபோல் தோன்றுகிறது. 73–74

## 2, புளிப்புச் சுவை

இது உண்டவுடன் பற்களைக் கூசச்செய்கிறது. வாயிலிருந்து உமிழ்நீரை பெருகச் செய்கிறது. வியர்வையை உண்டாக்குகிறது. உமிழ்நீர்ப் பெருக்கால் வாயை நன்கு சுத்தம் செய்து சுவைகளை நன்கு அறியச் செய்கிறது. வாயிலும், தொண்டையிலும் எரிச்சலை உண்டாக்குகிறது. இந்த அடையாளங்களைக் கொண்டு புளிப்புச் சுவையை அறிந்துகொள்ளலாம். 75

## 3. உப்புச் சுவை

உப்புச்சுவையுள்ள பொருட்களை உண்டவுடன் அது வாயில் உமிழ்நீரை விரைவில் சுரக்கச் செய்கிறது. குழகுழப்பை உண்டாக்குகிறது. உமிழ்நீரை ஒழுகச் செய்கிறது. வாயில் மிருதுத் தன்மையை உண்டாக்குகிறது. வாயில் எரிச்சலை உண்டுபண்ணுகிறது.

இவ்வடையாளங்களால் உப்புச்சுவை அறியப்படுகிறது. 76

## 4. கார்ப்புச் சுவை

எந்தச் சுவையுள்ள பொருளை வாயில் போட்டவுடன் நாக்கில் விறுவிறுப்பும், உடலில் ஊசிகுத்துவது போன்ற உணர்வும், வாய், மூக்கு, கண் இவற்றில் எரிச்சலும், நீர் வடிதலும் ஏற்படுகிறதோ அச்சுவை கார்ப்புச் சுவையாகும். 77

## 5. கைப்புச் சுவை

இச்சுவையுள்ள பொருட்களை வாயில் போட்டவுடன் நாக்கு உணரும் தன்மையை இழந்துவிடுகிறது. சுவைக்கும் தன்மை ஏற்படுவதில்லை. வாயில் தெளிவும், நீர்சுண்டிப்போகும் தன்மையும் ஏற்படுகிறது. தூய்மை துவங்குகிறது. இதுவே கைப்புச் சுவையாகும். 78

## 6. துவர்ப்புச் சுவை

நாக்கில் பட்டவுடன் தெளிவு, இறுக்கிப் பிடித்தல், மரத்துப் போதல், தொண்டை அடைப்பது போன்ற உணர்வு, மூட்டுகளை தளரச் செய்தல் போன்ற செயல்கள் ஏற்படின் அதைத் துவர்ப்புச் சுவை என அறியலாம். 79

இவ்வாறு உரையாற்றிய மதிப்பிற்குரிய ஆத்ரேயரைப்பார்த்து அக்னிவேசர் கூறினார்.

பொருள், குணம், செயல் இவற்றை விளக்கும் இவ்விடத்தில் உண்மையாகவும், பொருளுடன் கூடியதும் விளக்கமாயுள்ள

வீரியங்களைத் தங்களிடமிருந்து அறிந்துகொண்டோம். மேலும் ஒன்றுக்கொன்று எதிரிடையான பொருட்களின் இலக்கணத்தை சுருக்கமாகக் கேட்க விரும்புகிறோம். 80

இவ்வாறு கூறிய அக்னிவேசரைக் குறித்து ஆத்ரேயர் கூறினார் :

உடலில் உள்ள தாதுக்களின் எதிரிடையான குணங்கள் உள்ள பொருட்கள் உடலில் உள்ள தாதுக்களுக்கு எதிரிடையாக ஆகின்றன. இப்பொருட்களில் சில ஒன்றுக்கொன்று குணத்திலும், சில சேர்க்கையினாலும், மற்றும் சில வேறு குணங்களை ஏற்றுக் கொள்வதினாலும், மற்றும் சில இடம், காலம், அளவு இவற்றாலும் (எதிரிடையாகவும்) மேலும் சில இயற்கையாகவே எதிரிடையாகவும் ஆகின்றன. 81

இப்பொருட்களில் பெரும்பாலும் உணவுக்குப் பயன்பட்டு ஒன்றுக்கொன்று முறணான சில பொருட்களை விளக்குவோம்.

பாலும், மீனும் சுவையிலும் விபாகத்திலும் இனிப்புச் சுவையுடையவை. மிக்க கபத்தை உண்டுபண்ணக் கூடியவை. பால் சீதவீர்யமுள்ளது. மீன் உஷ்ண வீர்யமுள்ளது. இவ்விரண்டும் வீர்யத்தில் ஒன்றுக்கொன்று எதிரிடையான வீர்யத்தைப் பெற்றிருப்பதால் இவ்விரண்டையும் சேர்த்து உண்ணக்கூடாது. உண்டால் ஒன்றுக்கொன்று எதிரிடையான வீர்யத்தினால் ரத்தத்தைக் கெடுக்கின்றன. மிக்கநெகிழ்ச்சியும் பிசுபிசுப்புத் தன்மையுமுடையதால் (அபிஷ்யந்தி) கபத்தை உண்டுபண்ண், உடலிலுள்ள தோஷ தாதுக்கள் செல்லும் வழிகளைத் தடைப்படுத்துகின்றன. 82

ஆத்ரேயருடைய உரையைக் கேட்ட பத்ரகாப்பியர் என்ற மாமுனிவர் சிலிசிமம் என்ற ஒருவகை மீனைத் தவிர மற்ற மீன்களைப் பாலுடன் உண்ணலாம் என்றார்.

அந்தச் சிலிசிமம் என்ற மீன் பெரிய பெரிய செதில்களை உடையது. சிவந்த கண்களும், உடல் முழுவதும் சிவந்த கோடுகளையும் உடையது. ரோகிதம் என்ற மீனின் உருவம் போன்றது. அது பெரும்பாலும் நீரின்கீழ் நிலத்தில் சஞ்சரிப்பது. அந்தமீனைப் பாலுடன் உண்டால் உறுதியான ரத்தக்குழாயைத் தடை செய்தல், சிறுநீர் மலம் இவற்றைத் தடுத்தல் போன்ற நோய்களில் ஏதாவது ஒரு நோய் தோன்றும். அல்லது மரணம் ஏற்படும், (ஆதலால் சிலிசிமம் என்ற மீனைத் தவிர மற்ற மீன்களைப் பாலுடன் உண்ணலாம் என்பது அவர் கருத்து.) 83


143281

பத்ரகாப்பியருடைய வார்த்தையைக் கேட்ட ஆத்ரேயர் கூறினார். பொதுவாக எல்லா மீன்களையுமே பாலுடன் சேர்த்து உண்ணக்கூடாது. குறிப்பாக சிலிசிமம் என்ற மீனை அறவேயுண்ணக்கூடாது. அந்த மீன், மிகுந்த கபத்தையும் நன்றாக அறியும்படியான பயமான குறிகளையுடைய மேற்கண்ட நோய்களையும், ஆமவிஷத்தையும் உடனடியாகத் தோற்றுவிப்பதே இதற்குக் காரணம்.

மேலும் கிராமத்தில் வாழ்பவை, நீரில் வாபழ்வை, நீர்ப்பாங்கானஇடத்தில் வாழ்பவை. இப்பிராணிகளின் மாமிசத்தைத்தேன், எள்ளு, வெல்லம், பால், உளுந்து, முள்ளங்கி, தாமரை வளையம், முளை கண்ட தானியவகை ஆகிய இவற்றுடன் ஒன்று சேர்த்து உண்ணக்கூடாது. அப்படி உண்டால், செவ்ட்டுத்தன்மை பார்வை பழுது, நடுக்கம், மரத்துப்போதல், தெளிவற்ற பேச்சு, மூக்கினால் பேசுதல் போன்ற நோய்களை அது தோற்றுவிக்கும். அல்லது மரணத்தை விளைவிக்கும்.

கடுகு எண்ணெயில் தயார் செய்த புஷ்கரமூலம் (மேட்டுத் தாமரைக்கிழங்கு) ரோகிணி என்றபேய்ச்சுரை இலை, புறாவின் மாமிசம் இவற்றைக் கடுகெண்ணையில் வருத்துத் தேனுடனும், பாலுடனும் சேர்த்து உண்ணக்கூடாது. உண்டால் ரத்ததோஷத்தினால் வரும் கண்நோய், ரத்தக்குழாய் விரிவடைதல், காக்காய் வலிப்பு, பொட்டு வலி, தொண்டைவீக்க நோய் (கலசண்டம்), தொண்டைக்குள் ஏற்படும் ரோகிணி எனும் தாள்வீக்கநோய் இவற்றில் ஏதாவது ஒன்று ஏற்படும். அல்லது இறக்க நேரிடும்.

முள்ளங்கி, பூண்டு, கருமுறுங்கை, வெண்துளசி, காட்டுத் துளசி, கருந்துளசி, இவற்றைத் தின்றபின் பால் அருந்தினால் குஷ்டநோய் உண்டாகும்.

தேன், பால் இவற்றுடன் மூங்கில் குருத்தையும், அயனிபலாவையும் சாப்பிட்டால் மரணம் ஏற்படும். அல்லது வலிவு, நிறம், ஒளி, வீர்யம் இவை அழிந்துவிடும். அல்லது கடுமையான நோய், அல்லது அலித்தன்மை ஏற்படும்.

ஒன்றுக்கொன்று எதிரிடையான பழுத்த அயனிபலா (காட்டுப் பலா), உளுத்தம்பருப்பு, வெல்லம், நெய் இவற்றைக் கலந்து சாப்பிடக்கூடாது.

மாங்காய், புளிப்பு மா, துரிஞ்சிக்காய், அயனிபலா, களாக்காய், வாழைப்பழம், கடாரங்காய், இலந்தைப்பழம், மாவின் பிஞ்சு, புளிப்பு நார்த்தங்காய், நாவற்பழம், விளாங்காய், புளியம் பழம், அக்ரோட்' வேறு தீவில் விளைந்த புளி, பலாப்பழம்,

தேங்காய், புளிப்பு மாதுளை, நெல்லிக்காய், போன்றவற்றையும் மற்ற புளிப்புப் பொருட்களையும் சாறாகவோ சாறுடன் கூடிய தாகவோ அல்லது உலர்ந்ததாகவோ பாலுடன் சேர்த்து உண்ணக் கூடாது. அதற்குக் காரணம், பாலுடன் மற்ற புளிப்புப் பொருட் களை கலந்தால் எதிரிடையான குணங்களையுடையதாகவே யாகும்.

தினை, காட்டுக் கேழ்வரகு, காட்டுப் பயறு, கொள்ளு, உளுந்து, மொச்சை இவற்றையும் பாலுடன் சேர்த்து உண்ணக் கூடாது. இப்பொருட்கள் பாலுக்கு எதிரிடையானவை.

குசும்பக்கீரை, சர்க்கரையினால் தயாரிக்கப்பட்ட ஒருவகைக் காடி, மைரேயம் என்ற ஆஸவம், தேன் இவை ஒன்றுக்கொன்று எதிரிடையானவை. ஆகையால் இவற்றைச் சேர்த்து உண்ணக் கூடாது. உண்டால் அது வாதத்தை மிக்க சீற்றமடையச் செய் யும்.

ஹாரித்ரகம் என்ற பறவை மாமிசம், கடுகு எண்ணெய் இவை இரண்டும் எதிரிடையான குணங்கள் கொண்டதால், இதன் மாமிசத்தைக் கடுகு எண்ணெயில் பக்குவம் செய்து உண்ணக் கூடாது. உண்டால் பித்தம் மிகவும் சீற்றமடையும்.

பாயசம், சத்துமா இரண்டும் ஒன்றுக்கொன்று எதிரிடையான தால், பாயசம் பருகியபின் ஸத்துமாவை நீரில் கரைத்துப் பருகக் கூடாது. மீறிப் பருகினால் அது கபத்தை மிக்க சீற்றமடையச் செய்யும்.

எள்ளுக் கல்கத்தில் தயார் செய்த பசலைக் கீரையை உண்ப தனால் அதிகக் கழிச்சல் ஏற்படும்.

வாருணி என்ற புளிப்புக்காடி, காராமணி இவற்றிற்குக் கொக்கு மாமிசம் எதிரிடையானது.

கொக்கு மாமிசத்தைப் பன்றியின் வஸையில் வதக்கிச் சாப் பிட்டால் உடனே மரணம் ஏற்படும்.

காரீயப்பாத்திரத்தில் ஆமணக்கு விறகால் எரிக்கப்பட்ட நெருப்பில் தயார் செய்த மயில் மாமிசத்தை, அதே நெருப்பில் ஆமணக்கு எண்ணெயில் பக்குவம் செய்த மயில் மாமிசத்தையும் உண்டால் உடனே மரணம் ஏற்படும்.

மரமஞ்சள் விறகினால் எரிக்கப்பட்ட நெருப்பில் தயார்செய்த ஹாரித்ரகம் என்ற பறவையின் மாமிசத்தை உண்டால் உடன் இறக்க நேரிடும்.

சாம்பல் அல்லது மணலுடன் கலந்துள்ள ஹாரித்ரம் என்ற மாமிசத்தைத் தேனுடன் சேர்த்து உண்டால் உடன் மரணம் நேரும்.

மீன் வறுத்த எண்ணெயில் அரிசித்திப்பிலியையும், மணத் தக்காளியையும் பக்குவம் செய்து உண்டாலும், மணத்தக்காளி யுடன், தேனைக் கலந்து சாப்பிட்டாலும் உடன் இறக்க நேரிடும்.

சூடாக்கப்பட்ட தேன் இறப்பிற்குக் காரணமாகிறது. மிக்க சூட்டினால் துன்புறுகிறவன் தேனைப் பருகினால் மரணம் ஏற் படும்.

சம அளவுள்ள தேனும் நெய்யும், சம அளவுள்ள தேனும் மழை நீரும், ஒரே அளவுள்ள தாமரை விதையும் தேனும் பருக, உட லுக்குத் தீங்கு ஏற்படும்.

தேனைப் பருகியபின் சுடுநீர் பருகுதல், சேராங்கொட்டை யையும் சுடுநீரையும் ஒன்றாகப் பருகுதல், மோரில் பக்குவம் செய்யப்பட்ட கம்பிப்பாலை என்ற பொருளையும், ஓர் இரவு தங்கிய மணத்தக்காளிக் கீரையையும், நெருப்பில் வாட்டிய பாஸம் (ராஜாளி)என்ற பறவையின் மாமிசத்தையும் உண்ணுதல் என இவைகளால் உடலுக்குத் தீங்கு ஏற்படும். இவை ஒன்றுக் கொன்று எதிரிடையானவை.

இவ்வாறு உணவு பழக்க வழக்கங்களைப் பற்றி நீர்கேட்ட கேள்விக்குப் பதில் கூறப்பட்டது. 84

## 58. தீமை விளைவிக்கக் கூடிய உணவின் இலக்கணம்

எந்த உணவுப் பொருட்கள் உடலில் உள்ள தோஷங்களை தன்னிடத்திலிருந்து கிளப்பிவிட்டு வெளிப்படுத்துகிறதில்லையோ அந்தப் பொருட்கள் உடலுக்குத் தீமை விளைவிக்கக்கூடியவை. 85

மேலும் எந்தப் பொருட்கள் தேசம் காலம், சடராக்னி, அளவு, ஒவ்வுதல், வாயு போன்ற தோஷங்கள், ஸம்ஸ்காரம், வீர்யம், மலக்குடல், (கோஷ்டம்) நிலைமை, முறை, பரிஹாரம், உபசாரம், பாகம், ஸம்யோகம், விருத்தம், இதய விருத்தம், ஸம்பத் (சோகை) விருத்தம், விதிவிருத்தம் இவைகளும் உடலுக்கு நன்மை பயப்பவை அல்ல. 86–87

### 1. தேச விருத்தம்

பாலைவனத்தில், வறட்சியும்—தீக்ஷ்ண குணமுள்ள பொருட் களைப் பயன்படுத்தலும், நீர்ப்பாங்கான இடத்தில் நெருப்புத்

தன்மை, குளிர்ச்சி பொருந்திய மூலிகைகளைப் பயன்படுத்தலும் தேச விருத்தம் எனப்படும். 88

## 2. கால விருத்தம்

குளிர் காலத்தில் குளிர்ச்சி, வறட்சி போன்ற குணமுள்ள உணவுப்பொருட்களை உண்பதும், வெயிற்காலத்தில், கார்ப்புச் சுவை உள்ள, சூட்டை உண்டாக்கக்கூடிய உணவுப் பொருட்கள், மருந்துப் பொருட்கள் இவைகளைப் பயன்படுத்துவதும் கால விருத்தம் எனப்படும்.

## 3. அக்னி விருத்தம்

நான்கு வகையான சடராக்னியின் நிலைக்குத் தகுந்தவாறு உணவுப் பொருட்களை உண்ணாமலிருப்பது அக்னி விருத்த மாகும்.

## 4. மாத்ரா விருத்தம்

தேனையும், நெய்யையும் சம அளவில் சேர்த்துப் பருகுவது மாத்ராவிருத்தமாகும்.

## 5. [1]ஸாத்ம்ய விருத்தம்

கார்ப்புச்சுவை, உஷ்ண வீர்யமுள்ள பொருட்களை உட்கொண்டு பழக்கப்படுத்திக் கொண்டவன், இனிப்புச் சுவையும், குளிர்ச்சி தரக்கூடிய பொருளைப் பயன்படுத்துவது ஸாத்ம்ய விருத்தமாகும்.

## 6. தோஷ விருத்தம்

வாதம், பித்தம், கபம் இம்மூன்று தோஷங்களுக்கும் ஸமமான குணங்களை அதிகமாகப் பயன்படுத்துவதும் பழக்கத்திற்கு எதிரிடையான உணவு, மருந்து, செயல்கள் இவற்றை உடனடியாகப் பயன்படுத்துவதும் தோஷ விருத்தமாகும்.

## 7. ஸம்ஸ்கார விருத்தம்

ஆமணக்குக் குச்சியில் மயில் மாமிசத்தைச் செருகி நெருப்பில் வாட்டினால் அது விஷமாக மாறுவதுபோல், நன்கு பக்குவப் படுத்தப்படாத உணவுப்பொருள் நஞ்சாக மாறுவது ஸம்ஸ்கார விருத்தமாகும். 89–92

---

1, ஸாத்ம்யவிருத்தம் – பொருள்களின் அதனதன் இயற்கை குணங்கள் பூரணமாகப் பொருந்தாமை.

8. வீர்ய விருத்தம்

சீத வீர்யமுள்ள பொருட்களை உஷ்ண வீரியமுள்ள பொருட்களுடன் சேர்த்துப் பயன்படுத்துவது வீர்ய விருத்தமாகும். 93

9. கோஷ்ட விருத்தம்

கடினமான மலக்குடல் உடையவனுக்கு குறைந்த அளவ்ல், குறைந்த வீர்யமுள்ள மலத்தை வெளிப்படுத்தாத மருந்தைப் பயன்படுத்தலும், மிருதுவான மலக்குடல் உடையவனுக்கு, அதிக அளவில், அதிக வீர்யமுள்ள மலத்தை வெளிப்படுத்தும் மருந்தைப் பயன்படுத்தலும் கோஷ்டவிருத்தமாகும். 94

10. அவஸ்தா விருத்தம்

உழைப்பு, புணர்ச்சி, உடற்பயிற்சி இவற்றில் ஈடுபட்டுள்ளவர்கள், வாதத்தைச் சீற்றமடையச் செய்யும் பொருட்களைப் பயன்படுத்தலும், அதிகநேரம் உறங்குபவன், சோம்பேறி இவர்களுக்கு கபத்தைச் சீற்றமடையச் செய்யும் பொருட்களைப் பயன்படுத்தலும் அவஸ்தா விருத்தமாகும். 95–96

11. கிரம விருத்தம் (செய்முறை முரண்)

உண்பதற்குமுன் மலம், சிறுநீர் இவற்றைக் கழிக்காமலும் பசி எடுக்காத நிலையில் உண்பதும், அதிகமாகப் பசி எடுக்கும் நிலையிலும் உண்ணாமலிருப்பதும் கிரமவிருத்தமாகும்.

12. பரிகார விருத்தம்

பன்றி போன்ற பிராணிகளுடைய மாமிசத்தை உண்டபின் சூடான பொருட்களை உண்பது பரிகார விருத்தமாகும்.

13. உபசார விருத்தம்

நெய் போன்ற எண்ணெய் வகைகளைப் பருகி குளிர்ந்த பொருட்களையும், நீரையும் பருகுவது உபசார விருத்தமாகும்.

14. பாக விருத்தம்

கெட்ட விறகுகளால் தயாரித்த, அரை வேக்காடு உள்ள, அதிகமாக வெந்த, தீய்ந்துபோன உணவை உண்பது பாகவிருத்தமாகும்.

15. ஸம்யோக விருத்தம்

புளிப்புச் சுவையுள்ள பொருட்களைப் பாலுடன் சேர்த்துப் பருகுவது ஸம்யோக விருத்தமாகும்.

**16. இதய விருத்தம்**

மனதிற்குப் பிடித்தமில்லாத பொருட்களை உண்பது இதய விருத்தமாகும்.

**17. ஸம்பத் விருத்தம் (பொருளின் இயற்கைக் குணங்கள் பூரண மாகப் பொருந்தியிராதது)**

ரஸம் (சாறு) உண்டாகாத பொருட்கள், ரசக்கேடு அடைந்த பொருட்கள், சாறு சுண்டிய பொருட்கள், இவை போன்றவற்றை உண்பது ஸம்பத்விருத்தமாகும். 97–101

**18. விதி விருத்தம்**

ஒரே உணவை அதிகமாக உண்ணல், உண்ணாமலிருத்தல் விதி விருத்தமாகும்.

**19. அன்ன விருத்தம்**

மேற்கண்டவாறு பொருந்தாத ஏதாவது ஒரு வகையில் உணவு உண்பது உடலுக்கு ஒவ்வாத வகையிலும், மிகக் குறைந்த அளவிலும், பசி அதிகமாக எடுக்கும்வரை உண்ணாமலிருப்பதும், பசியில்லாதபோது உண்பதும் அன்ன விருத்தமாகும்.

எண்ணெய்ப்பசை (ஸ்நேக) சிகிச்சை நன்கு செய்துகொண்டவர்களுக்கும், நன்கு உடற்பயிற்சி செய்து உடல்வலிவு பெற்றவர்களுக்கும் மேற்கூறிய எதிரிடை உணவுவகைகள் பலமற்றுச் செயலாற்றாமற் போகும்.

**20. பொதுவாக விருத்தமான உணவு வகைகளை உட்கொள்வதில் தோன்றும் நோய்கள்**

அலித்தன்மை, பார்வையிழத்தல், விஸர்ப்பம் (அக்கி), நீர்ப் பீலிகை, கொப்புளம், மூளைக்கோளாறு, பகந்தரம் (பவுத்திரம்), மூர்ச்சை, வெறி (மதம்) மிதமிஞ்சிய உணர்ச்சி வேகம், வயிற்றில் உப்புசம், தொண்டைநோய், சோகை(பாண்டு), ஆமவிஷம், வெண்குஷ்டம், குஷ்டம், கிரஹிணி, இளைத்தல், இரத்தபித்தம், காய்ச்சல், கடுமையான ஜலதோஷம், (பீனசம்) மகப்பேறு இல்லாமை, இறப்பு, இவை உண்டாவதற்கு விருத்தமான உணவு உண்பதே காரணமெனக் கருதுகின்றனர். 102–103

**21. விருத்தமான உணவை உட்கொள்வதால் தோன்றும் நோய் - மருத்துவம்**

ஒன்றுக்கொன்று முரணான உணவு வகைகளை உண்டதினால் உண்டாகும் நோய்களுக்கும், மற்ற பிணிகளுக்கும் சிகிச்சைகள் கூறப்படுகின்றன.

மருந்து கொடுத்து வாந்தி எடுக்கச் செய்வது, மலம் கழிக்கக் கொடுப்பது, நோய்களுக்குத் தக்கவாறு எதிரிடையான குணங்களைக் கொண்ட மருந்துகளைக் கொடுத்து, தணிக்கச் செய்வது, இந்நோய்கள் வராமல் விருத்தமான பொருட்களை முதலிலேயே சிறிதுசிறிதாக உண்டு நோய் வராமல் உடலைப் பழக்கப்படுத்திக் கொள்வது, மற்றும் பொருத்தமான தடுப்புப் பொருள்களையும் உபயோகித்தல் என இவைகளே சிகிச்சை முறைகளாகும். 104

### இதைப் பற்றிய செய்யுள்

விருத்தமான உணவு வகைகளை உண்பதினால் தோன்றும் நோய்கள், மலம் கழிக்கச் செய்வதாலும், வாந்தி எடுக்கச் செய்வதாலும், மருந்து உட்கொள்வதாலும், நோய்கள் வராமல் தடுப்பு மருந்துகளை முதலிலேயே உடலில் பழக்கப்படுத்திக் கொள்வதாலும், நன்மையையே பயக்கவல்ல உணவு முறையைக் கடைபிடிப்பதாலும் நீங்குகின்றன. 105

## 22. விருத்தமான உணவு சில சமயங்களில் பயனற்றுப் போதல்

விருத்தமான உணவைப் பழக்கப்படுத்திக் கொள்ளுதல், அதை மிக்க குறைந்த அளவில் உண்ணுதல், சடராக்னி மிக்க தீக்ஷ்ணமாக இருத்தல், இளம்பருவம், எண்ணெய்ப்பசை, உடற்பயிற்சி, வலிவு இவற்றால் விருத்தமான உணவும் சிலசமயம் தீங்கை விளைவிப்பதில்லை. வீணாகிவிடுகிறது. 106

### முடிவுரை

சுவைகளைப் பற்றி முடிவு செய்வதில் முனிவர்களுடைய கருத்துக்கள், பொருட்களின் குணம், செயல், சுவையை இருப்பிடமாகக் கொண்ட பொருட்களின் எண்ணிக்கை, சுவைகளின் எண்ணிக்கைக்குக் காரணம், சுவை, துணைச்சுவை இவற்றின் இலக்கணம், பரம் போன்ற இருபது குணங்களின் இலக்கணம், ஐம்பெரும் பூதங்களால் உண்டாகும் ஆறுசுவைகளுக்குக் காரணம், எந்தெந்த குணங்களைச் சார்ந்த பொருட்கள் மேல்நோக்கிச் செல்பவை, கீழ்நோக்கிச் செல்பவை இவற்றின் விளக்கம், ஆறு சுவைகளின் பிரிவு, பொருட்களின் குணம், செயல், அவற்றின் பொதுவான தன்மை, அவற்றின் விதிவிலக்கு, குருகுணம் போன்றவற்றைக் கொண்டு சுவைகளுடைய மேலான, நடுத்தரமான, தாழ்ந்த என்ற முப்பிரிவுகள், விபாகம், பிரபாவம், இவற்றின் இலக்கணம், வீர்யத்தின் எண்ணிக்கையின் தீர்வு, சுவைப்பதினால் உண்டாகும் ஆறுசுவைகளின் தனித்தனி இலக்கணம், எந்தெந்தப்

பொருட்கள் எதனால் எவற்றுடன் எதிரிடையானவை, அவை செய்யும் தீமைச் செயல்கள், விருத்தமான உணவுப் பொருட்களை உண்பதினால் தோன்றும் நோய்கள், அவற்றிற்கு மருத்துவம் இவை யாவும் ஆத்ரேய பத்ரகாப்யீயம் எனும் இவ்வத்தியாயத்தில் ஆத்ரேய மாமுனிவர் கூறியுள்ளார். 107–112

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
ஸூத்திரஸ்தானத்தில் ஆத்ரேய
பத்ரகாப்யீயம் எனும் 26-வது
அத்தியாயம் முற்றும்

# இருபத்தேழாம் அத்தியாயம்

## *அன்னபான விதி

'ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி அன்னபான விதி எனும் அத்தியாயத்தை விவரித்துரைப்போம். 1–2

### 1. உணவுப் பானங்களின் சிறப்பு

மனத்துக்குகந்த நிறம், மணம், சுவை, தொடு உணர்வு இவற்றுடன் கூடிய நன்முறையில் செய்யப்பட்ட உணவு, பானம் இவை உயிர்வாழினங்களின் உயிர் என சான்றோர் கூறியுள்ளனர். கண்கூடாகக் காணின், நல்ல உணவும் பானமுமே சடராக்னியின் எரிபொருளாக அமைகின்றன. மக்களின் உயிரைத் தாங்கி நிற்கும் மனஉறுதிக்கு அடிப்படையாகவும் உள்ளன. தக்க முறையில் உட்கொண்ட உணவும் பானமும் உடலில் பலவகை தாதுக்களை வலிமையடையச் செய்கின்றன. நன்னிறத்தைத் தோற்றுவித்து, அறிவு செயற்புலன்களைத் தெளிவடையச் செய்கின்றன. முறை தவறி முரணான முறையில் உட் கொள்ளப்பட்ட உணவும் பானமும் தீமையை விளைவிக்கின்றன. 3

அக்னிவேச ! உணவு பானம் இவற்றின் நன்மை, தீமைகளை அறிந்துகொள்வதற்காக உணவு பானங்களைப்பற்றி முழுமையாக விளக்கியுரைப்போம்.

### 2. உணவுப் பொருள்களின் இயல்பும் செயலும்

இயற்கையாகத் தண்ணீர் ஈரப்பதத்தை உண்டாக்குகின்றது. உப்புக் கசிந்து இளகும் தன்மையைச் செய்கிறது. காரப்பொருள் செரிக்கும்படி செய்கிறது. தேன் பிரிந்துள்ள தோல், மாம்ஸம் இரத்தம் கொழுப்பு முதலியவற்றைச் சேர்த்து வைக்கின்றது. நெய் எண்ணெய்ப் பசையைத் தோற்றுவிக்கும். பால் உயிரூட்டு

---

* அன்னபான விதி – உண்ணும் உணவு, பருகும் நீர் முதலியவற்றின் நன்மை தீமைகளைப்பற்றி விளக்கும் பகுதியாதலின் இவ்வாறு பெயர் பெற்றது.

கிறது ; மாமிசம் வளர்ச்சியடைவிக்கிறது. சுவை மகிழ்ச்சியூட்டு கிறது. மதுவகை தளர்ச்சியடைந்த மாம்ஸம் முதலியவற்றை வளரச் செய்கிறது. சீது எனும் ஆஸவம் உடலை இளைக்கச் செய் கிறது. திராக்ஷாஸவம் பசித்தீயைத் தூண்டி உணவில் ஈடுபாட்டை உண்டாக்குகிறது. தேன்பாகு (வாதபித்த கபங்களை) பிரிந்துள்ள வற்றை ஒன்று சேர்க்கிறது. தயிர் வீக்கத்தை உண்டாக்கும். எள்ளுகல்கம் மகிழ்ச்சியை நீக்கும். உளுத்தம்பருப்பு ரசம் அதிக மலத்தைத் தோற்றுவிக்கும். காரப்பொருள் பார்வையையும், விந்துவையும் அழிக்கவல்லது. மாதுளை, நெல்லிக்காய் தவிர மற்ற புளிப்புப் பொருட்கள் பித்தத்தை உண்டாக்குவன. தேன், பழைய சம்பாநெல், அறுபதாம் குறுவை, பார்லி, கோதுமை தவிர மற்ற இனிப்புப் பொருள்கள் கபத்தை வளர்ப்பன. மூங்கில் குருத்து, சீந்தில், பேய்ப்புடல் தவிர மற்ற கைப்புப் பொருட்கள் ஆண்மையை நீக்கும். வாததோஷத்தையும் உண்டாக்குவன. கண்டந்திப்பிலி, சுக்கு இவற்றைத் தவிர மற்ற துவர்ப்புப் சுவை யுள்ள பொருட்கள் ஆண்மையை அழித்து வாத தோஷத்தையும் உண்டாக்குவன. 4

## 3. உணவுப் பொருள்களின் பிரிவுகள்

இதற்குப்பிறகு உணவுப் பொருள்களின் பலவகைகளை இனி விளக்குவோம். உணவும், பானமும் பன்னிரண்டு வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவற்றின் சுவை, வீரியம், மாற்றம், ஆதிக் கம் ஆகியவற்றை உரைப்போம்.

| | |
|---|---|
| 1. சூக தானியம் | 7. மதுவகை |
| 2. சமீதானியம் | 8. நீர் |
| 3. மாமிசம் | 9. பாலும் பால்செய் பொருட்களும் |
| 4. காய் வகைகள் | 10. கரும்புச்சாறுவகை |
| 5. பழங்கள் | 11. செய்யப்பட்ட உணவு |
| 6. கீரை வகைகள் | 12. உணவுக்குச் சுவைமணம் சேர்க்க உதவும் வகைகள் |

(உணவுக்கு உதவியான எண்ணெய், காயம், உப்பு முதலியன) 5–7

### (1) சூக தானியம்

சிவப்புச்சம்பா, பெருஞ்சம்பா, கலமம், சகுனாஹ்ருதம், சூர்ணகம், தீர்கசூகம், வெள்ளைச்சம்பா, பாண்டுகம், லாங்குலம், ஸுகந்திகம், லோஹவால, சாரிவம், ப்ரமோதகம், பதங்கம், தப

நீயம் இவற்றைத் தவிர சிறந்த சம்பா தானிய வகைகள் அனைத்தும் சீதவீரியம், சுவையிலும் பாகத்திலும் இனிப்பு, வாத தோஷத்தை குறைவாக உண்டுபண்ணுபவை, மலத்தைக் கட்டுவன, மலத்தைக் கொஞ்சமாக உண்டாக்குவன. எண்ணெய்ப்பசை உண்டாக்குபவை, உடலை வளர்ப்பன, விந்து, சிறுநீரை வளர்ச்சியடையச் செய்வன. இவை சிறந்த சம்பா தானியங்களின் பண்புகள். இச்சம்பா தானியங்களில் சிவப்புச் சம்பா தானியம் சிறந்ததாகக் கூறப்படுகிறது. நீர்வேட்கை, வாத பித்த கப தோஷங்களைப் போக்குபவை, சிவப்புச் சம்பாவைவிடப் பெருஞ சம்பாவும் பெருஞ்சம்பாவைவிடக் கலமம் என்னும் சம்பாவும் பண்பில் குறைந்தவை. இதுபோன்றே முதலில் உள்ளதை விடப் பின்பு கூறப்படுபவை குணத்தில் தாழ்ந்தவை என அறிய வேண்டும். 8–11

யவகம், ஹாயனம், பாம்சு, குளநெல், நைடதகம் இந்த நெல் வகைகள், நன்மை தீமைகள் இவற்றில் முதலில் கூறியதைவிடப் பின்பு கூறுபவை தாழ்ந்தவை என உணர வேண்டும். 12

அறுபதாம் குறுவை, குள்ர்ச்சி வீரியம், எண்ணெய்ப்பசை உடையது, குருவானது. முத்தோஷங்களையும் நீக்கவல்லது. உடலை நிலைநிறுத்துவ்து, இதிலும் வெண்மை அறுபதாம்குறுவை சிறந்தது. கருமை அறுபதாம் குறுவை அடுத்தபடி தாழ்ந்தது.

வரகு, உத்தாலகம், சீநம், உஜ்வலம், தர்துரம், கந்தலம், குருவிந்தம் ஆகிய தானியங்கள், அறுபதாம் குறுவையைவிடக் குணத்தில் தாழ்ந்தவை. 13–14

வ்ரீஹீ எனும் தானியம் இனிப்புச் சுவையும், மாற்றத்தில் புளிப்புச் சுவையும் கொண்டது. பித்தத்தை வளர்ப்பது. குருவானது, பாடலம் எனும் தானியம் மிக்க சிறுநீரை உண்டாக்கும்; மலத்தைப் பெருக்கும்; சூட்டை வெளிப்படுத்தும்; முத்தோஷங்களையும் சீற்றமடையச் செய்யும். 15

கேழ்வரகு, சியாமாகம், துவர்ப்பு, இனிப்புச் சுவையும், இலகுவானவை, வாதத்தை உண்டாக்குவன. கப பித்தங்களை நீக்குவன. சீதவீரியம், மலச்சிக்கலை உண்டாக்குபவை, வறட்சித் தன்மை பொருந்தியவை. 16

ஹஸ்திச்யாமாகம், நீவாரம் எனும் காட்டு நெல், தோயபர்ணீ கவேதுகம், பாசாதிகம், ஜலச்யாமாகம், சிவப்பு சியாமாகம், அநுச்யாமாகம், முகுந்தம், ஜின்டீ, கர்முடீ, சருகா, வரகு, சிவிகம், உத்கடம், கம்பு இவை அனைத்தின் குணமும் ச்யாமாக தானியத்தைப் போன்றதேயாம். 17–18

**யவதானியம் (பார்லி)**

வறட்சி, சீதவீரியம், குரு, இனிமை குணங்களைக் கொண்டது. வாதத்தை வளர்ப்பது. வலிமையை உண்டாக்குவது, உடலை நிலைநிறுத்துவது. துவர்ப்புச்சுவை, கப தோஷத்தை நீக்குவதாகும். 19

**மூங்கிலரிசி**

வறட்சி, துவர்ப்பு, இனிப்புச் சுவைகளுடன் கூடியது. கப பித்தங்களை நீக்குவதும், கொழுப்பை அகற்றுவதும், கிருமிகளை அழிப்பதும், நஞ்சை நீக்குவதும், உடலுக்கு வலிமை கூட்டுவதும் ஆகும். 20

**கோதுமை**

தளர்ந்த உடலின் தளர்ச்சியை நீக்குகிறது, வாதத்தைப் போக்குகிறது, இனிப்புச்சுவை, சீதவீரியம், கொண்டது, உயிரூட்டுகிறது. உடலைப் பருக்கச் செய்கிறது. ஆண்மையை வளர்க்கிறது. எண்ணெய்ப்பசையுடையது, குருவானது, உடலை நிலை பெறச் செய்கிறது.

நாந்திமுகீ, மதூலிகாஎனும் கோதுமையின் வகைகள், இனிப்புச்சுவை, எண்ணெய்ப்பசை, சீதவீரியமும் உடையவை. இவ்வாறு சூச தானிய வர்க்கம் கூறப்பட்டது.

## 2. [1] சமீதானிய வகை (பருப்பு வகைகள்)

**பாசிப்பயறு**

எல்லா வகையான பருப்புக்களில் பயத்தம் பருப்பு மிகவும் சிறந்தது. துவர்ப்பு, இனிப்புச்சுவையுடன், வறட்சி, சீதவீரியம் கொண்டது. மாற்றத்தில் கார்ப்புச்சுவையுடன் இலகுவாக உள்ளது. தெளிவை உண்டாக்குகிறது. கப பித்தங்களை நீக்குகிறது. இத்தகைய பண்புகள் கொண்டது பாசிப்பயிறு.

**உளுந்து**

ஆண்மையை அளித்து, வாதத்தை நீக்கி, எண்ணெய்ப்பசை, உஷ்ண வீரியம், இனிப்புச்சுவை, குரு, வலிமை இவைகளைத் தர வல்லது. மிக்க மலத்தைப் பெருக்கும், விந்துவை வளர்க்கும்.

1. சமீதானியம் – பொட்டுள்ள தானியம்,

### மொச்சை

நிலையற்ற தன்மை கொண்டு, நாவிற்குப்பிடித்தமாக இருந்து கபம், சுக்ரம், புளிப்பு, பித்தம் இவற்றை நீக்குகிறது. உளுந்தைப் போல் இயல்பிலும் மாற்றத்திலும் இனிப்புச் சுவையுண்டு. வறட்சித்தன்மை கொண்டது.வாதத்தை உண்டாக்கும்.துவர்ப்புச் சுவையும், தெளிவும், குருத்தன்மையும் கொண்டுள்ளது. 21–25

### கொள்ளு

உஷ்ண வீரியம், துவர்ப்புச்சுவை கொண்டு மாற்றத்தில் புளிப்பு, கபம், விந்து, வாதம் இவற்றை நீக்கி, மலத்தைக் கட்டும். இருமல், விக்கல், மூச்சுநோய், மூலநோய் இவற்றிற்கு நன்மை தரவல்லது கொள்ளு.

### மகுஷ்டம் (காட்டுப்பயறு)

இயல்பிலும், மாற்றத்திலும் இனிப்புச்சுவை இருக்கும். மலத்தைக் கட்டும், வறட்சி, சீதவீரியம் கொண்டிருக்கும். இரத்த பித்த நோய், காய்ச்சல் முதலியவற்றில் நன்மை தரவல்லது நரிப்பயிறு எனும் மகுஷ்டம்.

### கடலை

கடலை, நரிப்பயிறு, கேசரிப்பருப்பு, பட்டாணி இவை இலகுவானவை, சீதவீரியம், இனிப்புச்சுவை, துவர்ப்புச்சுவை உள்ளவை, வறட்சிகரமானவை, பித்த கப நோய்களில் கஞ்சியாகவும், மேற்பூச்சாகவும் பயன்படுகின்றன. இவற்றுள் நரிப்பயிறு மலக்கட்டு செய்வதும், கலாயம் எனும் கடலை வாதத்தை உண்டாக்கவல்லதும் ஆகும். 26–28

### எள்ளு

எண்ணெய்ப்பசை, உஷ்ண வீரியம், இனிப்பு, விறுவிறுப்பு, துவர்ப்பு, கார்ப்பு ஆகியவைகளுடன் விளங்குகிறது. உடல்தோலை அழகுபடுத்தும், தலைமுடியை வளர்க்கும், வலிமை தரும். வாதத்தை நீக்கும். கபம், பித்தம் ஆகியவற்றை உண்டாக்கும். 29–30

### [1]சிம்பிதானியம்

பலவகையான சிம்பி தானியங்களும் குருவானவை, இனிப்புச் சுவை, சீதவீரியம்கொண்டு, வலிமையைக் குறைப்பவை. வறட்சித்

---

1. சிம்பி தானியங்கள் – இரண்டாகப் பிளக்கக்கூடிய தானியங்கள்.

தன்மையுடன், எண்ணெய்ப்பசை உடையது. வலிமையுள்ளவர்களால் உட்கொள்ளத்தக்கவை. வறட்சி, துவர்ப்புள்ள இந்தச் சிம்பிதானியங்கள் வயிற்றில் வாயுவைச் சீற்றமடையச் செய்கின்றன. ஆண்மை அல்லது வலிமையை அளிக்கத் தகுதியற்றவை, கண் பார்வையைத் தர இயலாதவை, தாமதமாக செரிக்கக்கூடியவை.

**2. [1]துவரை**

கபத்தையும், பித்தத்தையும் போக்கவல்லது. வாதத்தை உண்டாக்கக்கூடியது.

கார்போக அரிசி வாத கபங்களை நீக்கவல்லது. தகரவிதையிலும் இதேகுணம் உண்டு, அவை வாத பித்தங்களை உண்டாக்குபவை.

சட்டிப்பயறு, பூனைக்காலி விதைகளிலும் உளுந்தைப் போன்றே குணங்கள் உள்ளன.

இவ்வாறு புனர்வசு ஆத்ரேய முனிவரால் சமீதானியவகை எனும் இரண்டாம் பகுதி விளக்கப்பட்டது. 31–34

### 3. புலால் வகை

**1. [2]பிரசஹங்கள்**

பசு, கழுதை, கோவறுக்கழுதை, குதிரை, வரிப்புலி, சிங்கம், கரடி, குரங்கு, ஓநாய், புலி, தரக்ஷு எனும் புலி, (வேங்கை) மயிர் மலிந்த ஓநாய், பூனை, எலி, குள்ளநரி, நரி, கழுகு, நாய், காட்டுக்குருவி, காக்கை, சசக்னி, சாம்பல் பறவை, ஜாமப் பறவை, தூமிகா எனும் குருவி, குரரம் எனும் குருவி என்பவை பிரஸஹ வகையைச் சேர்ந்த விலங்குகளும், பறவைகளும் ஆம். 35–36

**2. பொந்தில் வாழ்பவை**

வெண்மையான, கருப்பான, அழகான பின்புறம் கொண்ட காகுலம், எனும் பாம்புகள், காகுலீமிருகம், குசீகம், சிலலடம், தவளை, கோதை, சல்லகம், கண்டகம், கதலீ, கீரி, ச்வாவத் இவை பொந்தில் வாழ்பவை ஆகும். 37–38

---

1. துவரை, கார்போக அரிசி, சட்டிப்பயிறு, தகர விதை முதலியன சமீதானிய வகைகளில் சேராவிடினும், உருவப் பண்பு ஒற்றுமை கருதிக் கூறப்பட்டன.
2. பிரசஹங்கள் – தமக்குத் தேவையான உணவை வலியச் சென்று பெறுபவை.

### 3. நீர்ப்பாங்கான இடத்தில் வாழ்பவை

காட்டுப்பன்றி, மான், கட்கம், எருமை, சவயம் எனும் மிருகம் (பசு போன்றது) யானை, நியங்கு எனும் மான்கள், பன்றி இவை நீர்ப்பாங்கான நிலத்தில் (சதுப்புநிலம்) வாழும் விலங்குகள். 39

### 4. நீர்வாழ் உயிரினங்கள்

ஆமை, நண்டு, மீன், சிம்சுமாரம், திமிங்கலம், முத்துப்பூச்சி, சங்குப்புழு, உத்ரம், கும்பீரம், சுலுகி, முதலை முதலிய உயிரினங்கள் நீர்வாழினங்களாகும். 40

அன்னம், கிரௌஞ்சம், கொக்கு, பலாகர (கருமை கலந்த வெண்மை நிறமுடைய இறக்கைகள் கொண்டது) காரண்டவம், ப்லவம், சராரி, புஷ்கரம், கேஸரி, மானதுண்டகம், மிருணால கண்டம், நீர்க்காக்கை, கலஹம்ஸம், காக துண்டகம், உத்குரோசம், புண்டரீகம், மேகராவம் (சாதகப் பறவை), நீர்க்கோழி ஆரா, நந்திமுகீ, வாடீ, ஸமுகர், ஸஹசார், ரோகிணி, காமகால், ஸாரஸம், இரத்த சீர்ஷகம், சக்ரவாகம் ஆகிய இவை நீர் வாழ் பறவைகள். 41–44

### 5. காட்டில் வாழும் விலங்குகள்

ப்ருஷத் எனும் மான், எட்டுக்கால் உடையதும், ஒட்டகம்போன்றதும் பெரிய கொம்புடையதுமான சரபம், ராம எனும் இமய மலையில் வாழும் பெரிய மான், ச்வதம்ஷ்ட்ர (நான்கு கோரைப் பற்களுடையவை), மிருகமாத்ருகா, முயல், மான், உரணம் எனும் காட்டாடு, கோகர்ணம், கோட்டகாரகம் எனும் குலைக்கும் மான், சாருஷ்கம், ஹரிணம் (சிவப்புமான்) சம்பரம், கருமையான வாலுடைய மான், ருஷ்யம் எனும் கஸ்தூரி மான், ஏணம் எனும் கருப்பு மான், வரபோதம் இவை காட்டில் வாழும் மான் வகைகள். 45–46

### 1. [1]விஷ்கிரப் பறவைகள் - முதற் பிரிவு

லாவம், வர்தீரகம், கபிஞ்ஜலம், வார்திகம், சகோரம், உபசக்ரம், குக்குபம், ரக்தவர்த்மா.

**இரண்டாம் பிரிவு** – வர்த்தகம், வர்திகா, பர்ஹி(மயில்), தித்திரி (கிளி), குக்குடம் (கோழி), சங்கம், ஸாரபாதம், இந்திரபா, கோனர்த்தம் (மலைக்கிளி)

1. விஷ்கிரம் – சிதறிய தானியங்களைப் பொறுக்கித் தின்பவை.

கிரிவர்த்தக, கரதர, அசுகர, வாரத என்பவை இரண்டாம் பிரிவைச் சேர்ந்த விஷ்கிரப் பறவைகள். 47–49

2. [1]பிரதுதப் பறவைகள்

சதபத்ரம் (மரங்கொத்தி), ப்ருங்க ராஜ, கோயஷ்டி, ஜிவஞ்ஜீவிகா (மைனா), கைராதம் (கொலையாளிப் பறவை), கோகிலம் (குயில்), அத்யூஹம் (புல்புல் பறவை), சோபாபுத்ர, ப்ரியாத்மஜா, லட்டா, லட்டாஷ், பப்ரு, வடஹா, டிண்டிமானகம், பாடீ, துந்துபி, பாக்காரா, லோஹப்ருஷ்ட, குலிங்கக, கபோதம் (புறா), சுக(பச்சைக்கிளி), சாரங்க, சிராதீ, கங்கு, யஷ்டிகா, கலவிங்கம், சாரிகா, சடகம் (குருவி), அங்காரசூடகம், பாராவதம் (ஒருவகைப் புறா), பாண்டிலிகா (வெள்ளைப்புறா.) இவை ப்ரதுதங்களான பறவைகள். 50–52

3. எட்டு வகை விலங்குகள்

தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களை பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்பவைகளான பிரஸஹங்கள், பொந்தில் வாழ்பவை, நீர்ப்பாங்கான நிலத்தில் வாழ்பவை, நீரில் வாழ்பவை, நீரில் திரிபவை, நிலத்தில் வாழ்பவை, காட்டில் வாழ்பவை, சிதறிஅடித்துப் பொறுக்கித் தின்பவை, தானியங்களை அலகுகளால் கொத்திப் பிளந்து தின்பவை என எட்டு வகைப்படும். அதையொட்டி புலால் வகையும் எட்டு வகையாகும். 53–55

4. புலாலின் இயல்புகள்

பிரஸஹங்கள், பொந்தில் வாழ்பவை, நீரில் வாழ்பவை, நீரில் திரிபவை என இப்பிராணிகளின் புலால் குரு, உஷ்ண வீரியம், எண்ணெய்ப்பசை, இனிப்பு, வலிமை, வளர்ச்சி, விந்து வளர்ப்பு, வாயுவை நீக்கும் தன்மை, கபம், பித்தம் வளர்ப்பது ஆகிய குணமுடையது. இது உடற்பயிற்சி, செய்பவருக்கும், நல்ல செரிமானம் உள்ளவர்க்கும் நன்மை அளிக்கவல்லது. 56–58

நாள்பட்ட மூலநோய், மலச்சிக்கல், பேதி முதலிய நோய்களால் வருந்தும், புலால் புசிக்கும் பழக்கமுள்ளவர்களுக்கு மருத்துவர் ப்ரஸஹம் எனும் பிராணிகளின் புலாலைப் புசிக்கும்படி கூறலாம்.

லாவம் முதலிய விஷ்கிரத்தைச் சேர்ந்தவை, ப்ரதுதம் எனும் வகையைச் சேர்ந்தவை. காட்டு விலங்குகள் இவற்றின் புலால்,

1. ப்ரதுதம் — அலகுகளால் தானியங்களைப் பிளந்து தின்பவை.

இலகு, சீதவீரியம், இனிப்புச்சுவை, துவர்ப்புச்சுவைகொண்டு மக்களுக்கு நன்மை பயக்கின்றன. பித்தம் சீற்றமுற்று, வாதம் நடுநிலையில் இருந்து கபம் குறைந்து உள்ளவருக்கும், மூன்று தோஷங்களும் சேர்ந்து ஸன்னிபாத நிலையிலுள்ளவர்களுக்கும் மேல்கூறப்பட்ட பிராணிகளின் புலால் மிகச் சிறந்தது. வந்ததகம் முதலிய விஷ்கிரப் பறவைகளின் மாமிசம் பிரஸஹம் எனும் பிராணிகளின் புலாலைவிடக் குறைந்த குணமுடையது. 56–60

## 5. வெள்ளாடு, செம்மறியாட்டு மாமிசம்

வெள்ளாட்டின் மாமிசம் அதிகச் சீதம், அதிகக் குரு, அதிக எண்ணெய்ப்பசை இவைகளைக் கொண்டிராததால் அது வாத பித்த கப தோஷங்களை சீற்றமடையச் செய்யாது. மேலும் மனித மாம்ஸாதி தாதுக்களின் குணங்களுடன் ஒத்திருப்பதால் மக்களின் உடலையும், தாதுக்களையும் சமநிலைப்படுத்தி வளர்க்கிறது. இரத்த நாளங்களில் தடையை ஏற்படுத்தாது. அத்துடன் உடலை வளர்ச்சியடையவும் செய்கிறது.

செம்மறியாட்டு மாமிசம், இனிப்புச் சுவையும், சீதவீர்ய முடையது. குருவானது, உடலை வளர்ச்சியடையச் செய்கிறது. எனவே அவைகளை எட்டு வகைகளில் சேர்க்க இயலாது. வெள்ளாடு, செம்மறியாடுகள் சிலபோது நீர்ப்பாங்கான இடத்தில் வாழ்கின்றன. சிலபோது வாழ்வதில்லை. இவ்வாறு இரண்டும் கலந்திருப்பதால் எட்டு வகையான பிராணிகளின் வகையில் இவற்றைச் சேர்க்க இயலாது. ஆயினும் மாமிசங்கள் உடலுக்குகந்த தயாரிப்பு ஆதலால் தனியாகக் கூறப்பட்டன.

பொதுவாகக் கூறப்பட்ட மாமிச வகைகளில் சில பண்புகளினால் வேறுபட்டிருப்பதால் தனித்தனியாகச் சிறப்புக்கள் கூறப்படுகின்றன. 61–63

## 9. மயில் மாமிசம்

இது கண்பார்வை, காது கேட்டல், அறிவுக்கூர்மை, சடராக்னி இவற்றை வளர்க்கும், வயதை நிலைநிறுத்தும், இதனால் உடல் நிறம் நன்கமையும், குரல் இனிமையாகும். ஆயுள் வளர்ச்சியடையும். இது வலிமையைத் தரவல்லது. வாயுவை நீக்கக் கூடியது, மாமிசத்தை வளர்ப்பது, விந்துவை உண்டாக்குவது, இத்தகைய சிறப்புப் பொருந்தியது மயிலின் மாமிசம். 64–65

## 7. அன்னத்தின் மாமிசம்

குரு குணம், உஷ்ண வீரியம், இனிப்புச் சுவையுடன் குரலையும், நிறத்தையும், வலிமையையும் அளித்து, உடல் வளர்ச்சியை

அளிக்கிறது. விந்துவைத் தோற்றுவித்து, வாதத்தைப் போக்க வல்லது அன்னத்தின் மாமிசம். 66

### 8. கோழி மாமிசம்

எண்ணெய்ப்பசை, உஷ்ணவீரியம், ஆண்மை, உடல் வளர்ச்சி, வலிமை, குரல் இவற்றை வளர்ப்பதுடன் வாதத்தை நீக்கி, வியர்வையை உண்டாக்குகிறது கோழி மாமிசம்.

### 9. நீர்ப்பாங்கான இடங்களில் வாழ்பவற்றின் மாமிசங்கள்

அதிக குருகுணமோ, அதிக உஷ்ணவீரியமோ, அதிக இனிப்புச் சுவை உடையனவோ இல்லை. நீரில்லாத இடத்திலும் – நீர்ப் பாங்கான இடத்திலும் வாழ்வதால் இத்தகைய பண்புகள் கூறப் பட்டன. தித்திரி எனும் குருவியின் மாமிசம் வாதச் சீற்றமுள்ள ஸந்திபாத தோஷத்தைத் தீர்க்கவல்லது.

### 10. கபிஞ்ஜலத்தின் மாமிசம் (காடை)

சிறிது வாத தோஷம்கொண்டு, பித்த, கப, இரத்த நோய் களுக்கு நன்மையளித்து, சீதவீரியம், இனிப்புச்சுவை இலகு குணத் துடன் விளங்குகிறது இம்மாமிசம்.

### 11. லாவா என்னும் பறவையின் மாமிசம் (கௌதாரி)

துவர்ப்பு, இனிப்புச்சுவை, இலகு குணம், சடராக்னியை வளர்க்கும் தன்மை இத்தன்மையுடன் கூடி, முத்தோஷத்தால் உண்டாகும் ஸந்திபாதத்தைத் தணிக்கும். உண்ட பிறகு செரி மானத்தில் கார்ப்புச் சுவை ஏற்படும். 67–69

### 12. உடும்பின் மாமிசம்

துவர்ப்புச் சுவையும், கார்ப்புச் சுவையும், செரிமானத்தில் இனிப்பும் கொண்டது. இது வாத பித்த தோஷங்களைப் போக் கும். உடலைப் பருக்கச் செய்யும். வலிமையை வளர்க்கும். 70

### 13. முள்ளம்பன்றி மாமிசம்

இது இனிப்பு, புளிப்புச் சுவையுடன் கூடியது. செரிமானத்தில் கார்ப்புச் சுவையைத் தோற்றுவிக்கும். வாத, பித்த, கப தோஷங் களை நீக்கும். இருமல், சுவாச நோய்களுக்கு நன்மை பயக்க வல்லது. 71

---

1. கபிஞ்ஜலம் – காடை
2. லாவா – கௌதாரி.

**14. புறாவின் மாமிசம்**

வீட்டுப் புறாவின் மாமிசம் துவர்ப்பு, இனிப்புச் சுவை, சீத வீரியத்துடன் கூடியிருக்கும். இரத்த பித்தத்தை நீக்கும். உண்ட பின் மாற்றத்தில் இனிப்புச் சுவையை அளிக்கும். காட்டுப் புறாவின் மாமிசம் வீட்டுப் புறாவின் மாமிசத்தைவிட இலகு குணம் கொண்டிருக்கும். சீதவீரியமுடையது. மலத்தைக் கட்டும். சிறிது சிறுநீரை உண்டாக்கும். 72–73

**15. கிளியின் மாமிசம்**

இது துவர்ப்புச் சுவையுடன் கூடி செரிமானத்தில் புளிப்பு, வறட்சி, சீதவீரியமும் கொண்டதாக இருக்கும். இருமல், பலவகையான க்ஷயநோய்களுக்கு நன்மையளிக்கும். மலக்கட்டை உண்டாக்கும். இலகு குணம் கொண்டு சடராக்னியைத் தூண்டும். 74

**16. குருவி மாமிசம்**

இனிப்புச்சுவை, எண்ணெய்ப்பசை, வலிமை – விந்து வளர்ச்சி முத்தோஷங்களால் ஏற்பட்ட ஸந்திபாதத்தைத் தணித்தல். வாயு தோஷத்தைத் தணித்தல் என இவை இதன் குணங்களாகும். 75

**17. முயல் மாமிசம்**

இது துவர்ப்பு, தெளிவு ஆகிய சுவைகளும், சீத வீரியமும், செரிமானத்தில் கார்ப்பும், இலேசான தன்மையும் கொண்டிருக்கும். வாயுதோஷம் குறைவுற்று முத்தோஷங்களும் சேர்ந்து ஸந்திபாதம் ஏற்பட்டபோது இது மிகவும் சிறந்தது. நன்மைதரவல்லது. 76

**18. கருப்பு மானின் மாமிசம்**

இது இனிப்புச் சுவை, செரிமானத்தில் கார்ப்புச் சுவையும் கொண்டு, வாத பித்த கப தோஷங்களைத் தணியச் செய்கின்றது. இலகுத் தன்மையுடன் கூடி சிறுநீர், மலங்களைக் கட்டும். சீதவீரியமும் கொண்டிருக்கும். 77

**19. பன்றி மாமிசம்**

எண்ணெய்ப் பசையுடன் உடலை வளர்த்து, ஆண்மையை அளிக்கும். உடல் களைப்பைப் போக்கும். வாத தோஷத்தை நீக்கும். வலிமையை உண்டாக்கும். சுவையை அளிக்கும். வியர்வையை தோற்றுவிக்கும். குருத்தன்மை கொண்டிருக்கும். 78

20. பசு மாமிசம்

வாதம் மேலிட்டுக் கப பித்தங்கள் குறைந்துள்ள சமயம், நாட்பட்ட தடுமன் எனும் ஜலதோஷத்தில் கட்டுப்பாடின்றி வரும் காய்ச்சல், வறட்டு இருமல், களைப்பு, மிக்கப் பசி, மிகவும் அதிகமான சடராக்னி, க்ஷயநோய் ஆகியவற்றில் நன்மையளிக்கவல்லது இம்மாமிசம். 79

21. எருமை மாமிசம்

எண்ணெய்ப்பசை, உஷ்ண வீரியம், இனிப்புச்சுவை, ஆண்மையை வளர்த்தல், உடலை வளர்த்தல், உடல் வலிமை உண்டாக்குதல் உடலைப் பருக்கச் செய்தல், ஆர்வத்தையளித்தல், நல்ல உறக்கத்தை உண்டாக்குதல் என இக்குணங்களுடன் இம் மாமிசம் கூடியிருக்கும். 80

22. மீன் மாமிசம்

குருத்தன்மை, உஷ்ண வீரியம், இனிப்புச்சுவை ஆகியவை கொண்டு, வலிமையை அளித்து, உடலை வளர்த்து, வாத தோஷத்தை நீக்கி, எண்ணெய்ப்பசை அளித்து, ஆண்மையை வளர்த்து, பல தீமைகளையும் தோற்றுவிக்கும். 81

23. சிகப்பு மீன் மாமிசம் (ரோஉறிதம்)

வேல்பாசி, இளம்புல் இவற்றை உட்கொள்ளும். இம்மீனின் மாமிசம் சடராக்னியைத் தூண்டி, எளிதில் செரிக்கச் செய்து மிக்க வலிமையையும் அளிக்கும். 82

24. ஆமை மாமிசம்

இது வலிமையைத் தரும். வாத தோஷத்தை நீக்கும், ஆண்மையை வளர்க்கும், கண்பார்வையைக் கூர்மையாக்கும், உடலை வலிமை உடையதாக்கும், நல்ல அறிவு, நினைவாற்றல் இவற்றை வளர்க்கும், உடலுக்கு நன்மை அளிக்கும். உடல் இளைப்பைப் போக்கும். 83

25. கட்கம் எனும் மானின் மாமிசம்

பசையாலும், குருத்தன்மையாலும் ரஸ தாது செல்லும் நரம்புகளை அடைத்து, உடலுக்கு ஊட்டத்தைத் தந்து வலிமை அளிப்பது. இனிமையானது. எண்ணெய்ப்பசை உடையது. உடலை வளர்த்து, நல்ல நிறத்தை அளித்து, களைப்பைப் போக்கி, வாதத்தை நீக்கும். 84

**26. முட்டைகளின் பண்புகள்**

அரசு அன்னம், சகோரம், கோழி, மயில், குருவிகள் இவற்றின் முட்டைகள் விந்துக் குறைவு, இருமல், இதய நோய்,காயம் இவற்றைப் போக்கி, நன்மையை அளிப்பன. இனிமையாய், எரிச்சலை அளிக்காமல் உடனுக்குடன் வலிமை ஊட்டுகின்றன. 85–86

**மாமிசத்தின் சிறப்பு**

உடலை வளர்க்கும் பொருள்களில் மாமிசத்தைப்போல் சிறந்தது வேறில்லை. இவ்வாறு மாமிசவகை எனும் மூன்றாம் பகுதி விளக்கப்பட்டது. 87

புலால்வகை முற்றும்.

## 4. கீரைவகைகள்

வட்டத்திருப்பி, தூதுவளை, பூலாங்கிழங்கு, வாஸ்துகம் என்ற செடி, ஆரச்செடி இவற்றின் கீரை மலத்தைக் கட்டுவதுடன் மூவகை தோஷங்களையும் போக்கடிக்க வல்லது.

ஆனால் வாஸ்துகக் கீரை மலத்தை இளகச் செய்யும்.

**1. மணத்தக்காளிக்கீரை**

இது மூவகை தோஷங்களைத் தணிக்கும். ஆண்மையை வளர்க்கும். முதுமையையும், நோய்களையும் நீக்கும். குஷ்டத்தைப் போக்கும். மலத்தைப் பிளக்கும். இந்தக் கீரை வீர்யத்தில் மிக்க உஷ்ணமும், குளிர்ச்சியும் உடையதல்ல.

**2. கருங்கடுகுக்கீரை**

மூவகை தோஷங்களையும் தணிக்கவல்லது. இலகு குணமுள்ளது. மலத்தையும், சிறுநீரையும் கட்டக்கூடியது. குறிப்பாக கிரஹனி எனும் நோய், மூலநோய் உள்ளவர்களுக்கு மிகவும் உகந்தது.

**3. கருவேப்பிலை**

சுவையில் கார்ப்பு, சடராக்னியைத் தூண்டுவது, இடு விஷம், வீக்கம் இவற்றைப் போக்கவல்லது. 88–91

**4. காலாயம்**

எனும் கீரை, இலகு குணமுடையது. உஷ்ணவீர்யமுடையது. வாதத்தை வளர்க்கக்கூடியது. வறட்சியைத் தோற்றுவிப்பது.

5. புளியாரைக்கீரை

சடராக்னியைத் தூண்டிவிடுவது. உஷ்ண வீர்யமுள்ளது. மலம், சிறுநீர் இவற்றைக் கட்டக்கூடியது. கபம், வாதம் இவ்விரண்டு தோஷங்களையும் நீக்கவல்லது. கிரஹணி, மூலநோய் இரண்டிற்கும் நன்மை அளிக்கக்கூடியது.

6. பசலைக்கீரை

சுவையிலும், பாகத்திலும் இனிப்புச் சுவையுள்ளது. மலத்தை பிளக்கக்கூடியது. கபத்தை வளர்க்கவல்லது. ஆண்மையை வளர்க்கக்கூடியது. நைப்புத் தன்மையுள்ளது. சீத வீர்யமுடையது. வெறியை (மதம்) அழிக்கக்கூடியது. 92–93

7. சிறுகீரை (தண்டுலீயகம்)

வறட்சித் தன்மையுடையது. வெறி, எல்லா வகையான நஞ்சையும் நீக்கவல்லது. இரத்த பித்த நோயுள்ளவனுக்குச் சிறந்தது. சுவையிலும் பாகத்திலும் இனிப்புச்சுவையுடையது. சீத வீர்யமுள்ளது.

8. வல்லாரை

மூங்கிற் குருத்து, வட்டத்திருப்பி, பேய்ப்புடல், பாகல், கார்போக அரிசி, புடல், கடுகரோகிணி, ஆடாதொடைச் செடியின் பூக்கள், **காகஜங்கா** எனும் கீரை, **கேம்புகம்** எனும் கீரை, சாரடை, மின்கள்ளிக்கீரை, கொண்டைக்கடலைக் கீரை, வெண்டை, சுத்திரி, செஞ்சந்தனம், ஒருவகைக் கசப்புப்புடல், சிறுபாகல், வேம்பு, பர்ப்பாடகம், இவற்றின் கீரைகள், ஆகியவை கபத்தையும், பித்தத்தையும் போக்கும். கைப்புச் சுவையையுடையவை. சீத வீர்யமுள்ளவை. விபாகத்தில் கார்ப்புச்சுவையாக மாறுபவை.

உளுந்து, பயறு போன்ற பருப்புள்ள எல்லாவகைக் கீரை, சிறுதேக்கு, சிவந்த சிறிய வாஸ்துக்கீரை, தும்பைச்செடி, எல்லாக் கிழங்கு வகைகளின் கீரை, **குடிஞ்சரம்** எனும் கீரை. சணல் செடியின் பூ. இலவமரத்தின் பூ, வெண்நொச்சி, வல்லாரை, பெரிய உளுந்து, செந்நிறநொச்சியின் பூ, ஊமத்தைப்பூ, **சஞ்சுபர்ணி** என்ற செடியின் மலர், ஜிவந்தி என்ற செடியின் பூ, **லோட்டாகம்** எனும் செடியின் பூ, **பாரங்க்யா** எனும் செடியின் பூ, **மாரிஷம்** எனும் கீரை, கலம்பக் கீரை, **நாலிகா** எனும் கீரை, கடுகுக்கீரை, குசும்பக்கீரை, நிலவாகை, **லக்ஷ்மணா** எனும் கீரை, தகரச் செடி, தாமரைத் தண்டு, காட்டுத் துளசி, புளியாரை, யவதானியச் செடி, பூசனி, கார்போக அரிசிச் செடியின் இலை, **யாதுகம்** எனும் செடி, **சாலகல்யாணி** எனும் செடி, மூவிலை, பெருங்குறும்பைச்

செடி இவற்றின் கீரை என இவை யாவும் குருகுணமுள்ளவை, வறட்சித் தன்மை உடையவை. பெரும்பாலும் கஷ்டப்பட்டுச் சீரணமாகக்கூடியவை. இனிப்புச் சுவையுடையன. சீத வீர்யம் பெற்று மலத்தைப் பிளக்கக் கூடியவை. இந்தக் கீரை வகைகளை வேக வைத்துத் தண்ணீரை வடித்து, அதிகமான எண்ணெயில் வதக்கி உண்பது சிறந்தது. 94–103

சணல், சிவப்பு நொச்சி, வெண்நொச்சி, இலவம் இவற்றின் பூ மலத்தைக் கட்டும். குறிப்பாக இரத்த பித்த நோய்க்குச் சிறந்தது.

ஆல், அத்தி, அரசு, இத்தி, தாமரை இவற்றின் துளிர்கள் துவர்ப்புச் சுவையுள்ளவை. மலம், சிறுநீர் இவற்றைக் கட்டுவதுடன் சீதவீர்யம் கொண்டு, பித்த தோஷத்தினால் உண்டாகும் கழிச்சலுக்குச் சிறந்தவை.

சீந்திற் கொடியின் இலையைத் தின்பதால் வளர்ச்சி பெற்ற வாதநோய் நீங்குகிறது.

சிறுகீரை, கொடிவேலி இவற்றின் இலையைத் தின்பதால் வளர்ந்த கபநோய் நீங்குகிறது.

யானைத்திப்பிலி, வெண்ணிறமுள்ள வில்வ மரம், சாதாரண வில்வமரம், இவற்றின் இலைகள் வாதநோயைப் போக்கடிக்கின்றன.

சிவதை, தண்ணீர் விட்டாங்கிழங்கு, சித்தாமுட்டி, ஜீவந்தி, பச்சிலை, இலவம் இவற்றின் இலைகள், வாத பித்த நோய்களைக் கண்டிக்கின்றன.

கலப்பைக்கீரை, சிவப்பு ஆமணக்கு இலை இவை இலகு குணமுள்ளவை. மலத்தை வெளிப்படுத்துவதுடன் கைப்புச் சுவையுள்ளவை.

எள்ளு, நொச்சி, வெண்மையான ஆமணக்கு இவற்றின் இலை வாதத்தை உண்டுபண்ணக் கூடியது. சார்ப்பு, கைப்பு, புளிப்பு, இச்சுவைகளையுடையது. மலம், சிறுநீர் இவற்றை கீழ் நோக்கிச் செலுத்துகிறது.

குசும்பக்கீரை, வறட்சித் தன்மையுடையது. புளிப்புச் சுவையுள்ளது. உஷ்ணவீர்யமுடையது. கபத்தைப் போக்குவதுடன் பித்தத்தை அதிகப்படுத்துகிறது. 104–109

வெள்ளரி, கக்கரி இவை இனிப்புச் சுவையுடையவை. குரு குணம் உள்ளவை. மலத்தைக் கூட்டக்கூடியவை. சீதவீர்யமுள் ளவை. வாய்ரகு சுவையூட்டக் கூடியவை. வறட்சித தன்மையுடை யவை.

குறிப்பாக வெள்ளரி சிறுநீரை அதிகம் வெளிப்படுத்துகிறது.

பழுத்த கக்கரி உடல் எரிச்சல், நாவறட்சி, சோர்வு இவற்றைப் போக்கும். 110–111

**சுரைக்கீரைகள்** மலத்தைப் பிளக்கக் கூடியவை. வறட்சித் தன்மை, குருகுணம், சீதவீர்யம் உடையவை.

சிறிய வெள்ளரி, பெரிய வெள்ளரி இரண்டும் மேற்கண்ட குணங்கள் உடையவை.

முற்றிய பூசணிக்காய் க்ஷார குணமுடையது. இனிப்புச்சுவை யும், புளிப்புச் சுவையுமுடையது. இலகு குணமுள்ளது. மலத்தை யும், சிறுநீரையும் வெளிப்படுத்தக்கூடியது. எல்லா தோஷங்களை யும் போக்கடிக்கக்கூடியது.

8. **கேலூடம், கதம்பம், நதிமாஷகம், ஐந்துகம்** இவற்றின் கீரை கள் தெளிவுபடுத்தக்கூடியவை. குருகுணம், சீத வீர்யமுடை யவை. கபத்தை உண்டுபண்ணக் கூடியவை. 112–114

9. **கருநெய்தலின்** இலைகள், உவர்ப்புச் சுவையுள்ளவை. இரத்த பித்த நோயை நீக்கக்கூடியவை. பனங்குருத்து மார்புக்குள் அடிபட்டு இரத்தம் உறைந்து போவதனால் ஏற்படும் நோய்க ளை போக்குகிறது.

10. **பேரீச்சம்பழம், பனம்பழத்தில்** உள்ள சதைப்பகுதி இரண் டும் இரத்த பித்தம், க்ஷயநோய் இவற்றைப்போக்கும்.

11. **அல்லிக்கிழங்கு,** வெண்தாமரைக்கிழங்கு, செந்தா மரைக்கிழங்கு, கொட்டிக்கிழங்கு, சிருங்காடகக்கிழங்கு, தாமரை விதை இவை குருகுணமுள்ளவை. மலத்தைக் கட்டக்கூடியவை. குளிர்ச்சியானவை.

12. **நீலோத்பல மலர்,** தண்டு, பழம் இவை குளிர்ச்சி யானவை. இனிப்பு துவர்ப்புச் சுவையுள்ளவை. கபத்தையும், வாதத்தையும் சீற்றமடையச் செய்யக் கூடியவை. 115–117

13. **நிலத்தாமரை விதை,** சிறிதளவு மலத்தைக் கட்டும். இரத்த பித்த நோயைப் போக்கும். இது சுவையிலும், பாகத்தி லும் இனிப்புச் சுவையுடையது.

**14.** **முஞ்சக்கிழங்கு** (முஞ்ஜாதக) வலிவை வளர்க்க கூடியது. குளிர்ச்சியானது. குருகுணமும், நைப்புத்தன்மையும் உடையது. ஊட்டத்தையும், பருமனையும் அளிக்கவல்லது. வாத–பித்த தோஷங்களை நீக்குகிறது. இனிப்புச் சுவையுள்ளது. ஆண்மையை அளிப்பதில் சிறந்தது.

**15.** **பால் முதுக்கன் கிழங்கு** ஆயுளை வளர்க்கும். உடலைப் பெருக்கச் செய்யும். ஆண்மையை அளிக்கும். தொண்டைக்கு நன்மையளிக்கும். முதுமையையும், நோயையும் போக்கும். வலிவையளிக்கும். சிறுநீரைப் பெருக்கும். சுவையில் இனிப்பும், சீதவீர்யமும் கொண்டிருக்கும். *118–120*

**16** **புளியாரைக்கிழங்கு** கிரஹணி நோய் மூலநோய் இவற்றிற்கு நல்லது. இலகு குணமுள்ளது. மிக்க உஷ்ணமல்ல. கப–வாத தோஷங்களைப் போக்குகிறது. மலத்தைக் கட்டக்கூடியது. மதாத்யயம் என்னும் வெறி நோய்க்குச் சிறந்தது.

**17.** **கடுகுக்கீரை** மூவகை தோஷங்களையும் தோற்றுவிக்கும். மலத்தைக் கட்டும். சிறுநீரைத் தடுத்துத்தடுத்து வெளிப்படுத்தும்.

**18.** **சேப்பங்கிழங்குக்கீரை** கடுகுக்கீரையைப் போன்று மூவகை தோஷங்களையும் தோற்றுவிப்பதுடன் மலத்தையும் சிறுநீரையும் கட்டும். சேப்பங்கிழங்கு வாய்க்குச் சுவையாக இருக்கும்.

பாம்பு உருவம் போன்ற நாய்க்குடையைத் தவிர மற்ற **நாய்குடை வகைகள்** சீதவீர்யமுள்ளவை. கடுமையான ஜலதோஷத்தை உண்டுபண்ணும். இனிப்புச் சுவையுள்ளவை. குருகுணமுள்ளவை.

இவ்விதம் இலை, கிழங்கு, கனி இவற்றிற்கு இருப்பிடமான கீரைவகை என்னும் நான்காவதான சாகவர்கம் முடிவுறும்.
*121–124*

## 5. பல வர்க்கம் (கனிவகை)

### 1. திராட்சைப்பழம்

திராட்சைப்பழம் நாவறட்சி, காய்ச்சல், இழுப்பு, இரத்த பித்தம், மார்பின் உட்பாகத்தில் அடிபட்ட காயம், காச நோய், வாதம்–பித்தம், மேல்நோக்கிச் செல்லும் வாயு, குரல் மாற்றம், மதாத்யயம் என்ற வெறிநோய், வாயில் கசப்புச்சுவை, தோன்றுதல், வாய் உலர்ந்து போதல், இருமல் என இவற்றை **விரைவில்**

போக்குகிறது. உடலில் உள்ள தாதுக்களை வளர்க்கிறது. ஆண்மையை அளிக்கிறது. சுவையில் இனிப்பும், நைப்புத் தன்மையும், குளிர்ந்த வீர்யமும் உள்ளது. 125–126

**2. பேரீச்சம்பழம்**

பேரீச்சம்பழம் இனிப்புச் சுவையுடையது. உடலில் உள்ள தாதுக்களை வளர்க்கச் செய்கிறது. ஆண்மையை வளர்ப்பது, குரு குணமும் சீதவீர்யமும் கொண்டது. காசநோய், அடிபடுதல், எரிச்சல், வாதம்–பித்தம் இவற்றிற்கு நன்மை பயக்கவல்லது. 127

**3. பேயத்திப்பழம்**

பேயத்திப்பழம் உடலுக்கு வலிவை அளிக்கக்கூடியது. தாதுக்களுக்கு வலிவை அளிக்கவல்லது. குருகுணம் உள்ளது. உணவு சீரணமாகாமல் குடலிலேயே தடைபடுத்துவது, சீதவீர்யமுள்ளது.

**4. ஈச்சம்பழமும், இலுப்பைப்பழமும்**

ஈச்சம்பழமும், இலுப்பைப் பழமும் வாத–பித்தத்திற்கு சிறந்தன. 128

**5. எரிப்பு மாம்பழம்**

எரிப்பு மாம்பழம் இனிப்புச் சுவையுடையது. தாதுக்களுக்கு வலிவை அளிக்க வல்லது. பலத்தை அளித்து, ஊட்டமளித்து, குருகுணமுடன் கூடியுள்ளது. சிறிதளவு எண்ணெய்ப் பசையை உண்டாக்குவதுடன் கபத்தை வளர்க்கும். சீத வீர்யத்துடன் ஆண்மையை அதிகரிக்கும். உணவைக் குடலில் தடைபடுத்தி சீரணத்தை உண்டாக்கும். 129

**6. பனம் பழமும், முற்றின தேங்காயும்**

நன்கு பழுத்த பனம்பழமும், முற்றின தேங்காயும், தாதுக்களை வளர்ப்பவை. நைப்புத்தன்மையுடையவை. சீத வீர்யமும், வலிவை அதிகரிக்கும் தன்மையும், இனிப்புச்சுவையும் கொண்டிருக்கும். 130

**7. நார்த்தம் பழம் (பவ்யம்)**

இனிப்பு, புளிப்பு, துவர்ப்புச் சுவையுடன் உணவைக் குடலில் தடைப்படுத்தி சீரணிக்கச் செய்து, குரு குணமும், சீத வீரியமும் கொண்டு, பித்தத்தையும், கபத்தையும் வளர்த்து, மலத்தைக் கட்டி வாயைத் தூய்மையாக்கும். 131

புளிப்புச் சுவையுள்ள ஈச்சம்பழம், திராட்சைப்பழம், இலந்தைப் பழம், ஆல்பகோடா பழம், கொடி இலந்தை, அயனிபழம் இவை பித்தத்தையும், கபத்தையும் சீற்றமடையச் செய்கின்றன. 132

## 8. பழுத்த ஆல்பகோடா பழம்

பழுத்த ஆல்பகோடா பழம் மிக்க உஷ்ணமல்ல. குருகுணம் வாய்ந்தது. பெரும்பாலும் இனிப்புச்சுவையுடன் விரும்பித் தின்னக்கூடியது. தாதுக்களை வளர்த்து, விரைவில் சீரணமாக்கி, தோஷத்தை அதிக அளவில் உண்டுபண்ணுகின்றன. 133

## 9. ஆக்ரோட் பழம்

ஆக்ரோட்பழம் இனிப்பு, புளிப்பு என இருவகைப்படும். இனிப்புச் சுவையுள்ளது. சீதவீர்யமும், சுவையில் இனிப்புள்ளது. குருகுணமும் கொண்டிருக்கும்.

புளிப்புச் சுவையுள்ள பழம் உஷ்ண வீர்யத்துடன் சுவையூட்டுவதுடன் அதிகமுள்ள சடராக்னியைக் குறைக்கும். 134

## 10. பெருங்குமிழம் பழம்

பெரும்குமிழம்பழம், நார்த்தம்பழத்தைக் காட்டிலும் குறைவான குணமுள்ளது.

## 11. தூதம்

எனினும் புளிப்புச்சுவையுள்ள பழம். ஈச்சம்பழத்தைவிட குணத்தில் குறைவானது. 135

## 12. கருத்த விளாம்பழம்

கருத்த விளாம்பழம் உவர்ப்புச் சுவையும், இனிப்புச்சுவையும் கொண்டது. வாதத்தை வளர்க்கும். குருகுணம் கொண்டிருக்கும். சீதவீர்யத்துடன் கூடியிருக்கும்.

## 13. விளாங்காய்

விளாங்காய் குரலைக் கெடுத்து, நஞ்சை நீக்கும். மலக்கட்டை தோற்றுவிக்கும். வாதத்தை அதிகரிக்கும். 136

## 14. பழுத்த விளாம்பழம்

பழுத்த விளாம்பழம் இனிப்பு, புளிப்பு, துவர்ப்புச் சுவைகளைப் பெற்றிருப்பதாலும், நறுமணம் பெற்றிருப்பதாலும் சுவையை அளிக்கிறது. தோஷங்களைக் கண்டிக்கிறது. நஞ்சு நீக்குகிறது. மலக்கட்டை ஏற்படுத்துகிறது. குருகுணமுள்ளது. 137

### 15. வில்வப்பழம்

பழுத்த வில்வப்பழம், எளிதில் சீரணமாகாது. தோஷங்களை அதிகரிக்கச் செய்கிறது. கெட்ட நாற்றத்தையும், வாதத்தையும் உண்டுபண்ணும்.

### 16. வில்வப்பிஞ்சு

வில்வப்பிஞ்சு நைப்புத் தன்மையுள்ளது. உஷ்ண வீர்யமுள்ளது. க்ஷார குணம் வாய்ந்தது. சடராக்னியை வளர்ப்பது. கபத்தையும், வாதத்தையும் நீக்கும். 138

### 17. மாங்காய்

மாங்காய் இரத்த பித்த நோயை உண்டுபண்ணும். பித்தத்தை வளர்க்கும்.

### 18. மாம்பழம்

மாம்பழம், வாதத்தைப் போக்கும். மாமிசம், விந்து, வலிவு, இவற்றை அதிகரிக்கும். 139

### 19. நாவற்பழம்

நாவற்பழம், துவர்ப்பும், இனிப்புச் சுவையும் கொண்டது. குருகுணமுள்ளது. உணவை தகைக்கச் செய்து சீரணத்தை உண்டு பண்ணும். சிதவீர்யத்துடன் கபத்தையும், பித்தத்தையும் போக்கும். மலத்தைக் கட்டும். மிக்க வாதத்தை உண்டுபண்ணும். 140

### 20. இலந்தைப் பழம்

இலந்தைப்பழம் இனிப்புச் சுவையுடையது. நைப்புத்தன்மையுடையது. மலமிளக்கி, வாத—பித்தத்தை அகற்றும் தன்மையுடையது.

### 21. உலர்ந்த இலந்தைப்பழம்

உலர்ந்த இலந்தைப்பழம், கபத்தையும், வாதத்தையும் போக்கும். பித்தத்திற்கு எதிரிடையானதல்ல. 141

### 22. ஆப்பிள் பழம்

ஆப்பிள்பழம் துவர்ப்பு, இனிப்புச் சுவையுள்ளது. சீத வீர்யமுள்ளது. மலத்தைக் கட்டும்.

### 23. பேய்பீர்க்கு; கோவை, தோதனம், மருதம்

இவற்றின் பழங்கள் இனிப்பும், சிறிதளவு துவர்ப்புச் சுவையுமுடையன. சீதவீர்யமுள்ளவை. பித்தத்தையும், கபத்தையும் போக்கும்.

**24. பலா, கிரிணி, வாழை**

இவற்றின் பழங்கள் இனிப்புச் சுவையுடன் சிறிதளவு துவர்ப்புச் சுவையுமுள்ளவை. எண்ணெய்ப் பசையுள்ளவை. சீத வீர்யமுடையவை. குரு குணமுள்ளவை. 142–144

**25. நிலாக்கொடிப்பழம்**

நிலக்கொடிப்பழம், துவர்ப்புச் சுவையுடையது. தெளிந்த குணம், நறுமணம் கொண்டிருப்பதனால் சுவையளிக்கவல்லது. இதையுண்டபின் வேறு பொருட்களை உண்டால் சுவை அதிகமாகும். இதயத்திற்கு நன்மையளிக்கும். வாதத்தை வளர்க்கும். 145

**26. கடம்பை, சதகுப்பை, உவகை, தாழை, விகங்கதம், அரிநெல்லி**

இவற்றின் பழங்கள் தோஷங்களை நீக்குகின்றன. இடு விஷத்தைப் போக்குகின்றன.

**27. மணிப்புங்கம்பழம்**

மணிப்புங்கம்பழம் துவர்ப்புச் சுவையும், இனிப்புச் சுவையும் கொண்டது. எண்ணெய்ப் பசையுள்ளது. உஷ்ண வீர்யமுடையது. கபத்தையும், வாதத்தையும் போக்கும். 146

**28. திந்துகம் ( பனச்சி)**

திந்துகம் என்ற பழம் கபத்தையும், பித்தத்தையும், போக்கும். துவர்ப்பு, இனிப்புச்சுவை கொண்டது. இலகு குணமுள்ளது.

**29. நெல்லிப்பழம்**

நெல்லிப் பழத்தில் உப்புச் சுவையைத் தவிர மற்ற சுவைகள் எல்லாம் உள்ளன. 147

**30. தான்றிப்பழம்**

தான்றிப்பழம் வறட்சித் தன்மையளிப்பது. இனிப்பு, துவர்ப்பு, புளிப்புச் சுவையுடையது. கபத்தையும், பித்தத்தையும் போக்குவதில் சிறந்தது. ரஸதாது, இரத்தம், மாமிசம், கொழுப்பு இவற்றால் தோன்றும் நோய்களை நீக்குகிறது. 148

**31. மாதுளம்பழம், புளிப்பு மாதுளம்பழம்**

குரல் கம்மல், கிளப்பி விடப்பட்ட கபத்தையும், பித்தத்தினால் ஏற்படும் நோயையும் போக்கடிக்கிறது. துவர்ப்பு, இனிப்புச் சுவையுள்ளது. வாதத்தை நீக்குகிறது. மலக்கட்டை ஏற்படுத்துகிறது. சடராக்னியைத் தூண்டிவிடுகிறது. எண்ணெய்ப் பசை

யுடன் உஷ்ண வீர்யமுள்ளது. இதயத்திற்கு நன்மையளிப்பது. கபத்திற்கும், பித்தத்திற்கும் எதிரிடையானதல்ல. *149–150*

வறட்சித்தன்மையையும், புளிப்புச் சுவையுள்ள மாதுளம்பழம் பித்தத்தையும், வாதத்தையும் சீற்றமடையச் செய்யும். இனிப்புச் சுவையுள்ள மாதுளம்பழம் பித்தத்தைப் போக்க வல்லது.மாதுளம் பழங்களில் முதலில் கூறப்பட்ட புளிப்பு மாதுளம்பழம் சிறந்தது.

### 32. கோகம் எனும் புளிப்புப்பழம் (மரப்புளி)

கோகம் எனும் புளிப்புப் பழம் மலத்தைக் கட்டும். வறட்சித் தன்மையும், உஷ்ணவீர்யமும் உடையது. வாத–பித்த தோஷங் களுக்கு சிறந்தது. *151*

### 33. பழுத்த புளியம்பழம்

பழுத்த புளியம்பழம் மரப்புளியைக் காட்டிலும் குணங்களில் சிறிதளவு குறைவானது.

### 34. புளிவஞ்சி

புளிவஞ்சி குணத்தில் புளியம்பழத்தை ஒத்தது. மலத்தைப் பிளக்கக்கூடியது. *152*

### 35. துறிஞ்சிப்பூவிதழ்

துறிஞ்சிப் பூவிதழ், வயிற்றுவலி, சுவையின்மை, மலக்கட்டு, சடராக்னிக் குறைவு, கள் குடிப்பதனால் ஏற்படும் தடுமாற்றம், விக்கல், இழுப்பு, இருமல், வாந்தி, மலச்சிக்கலினால் தோன்றும் தொல்லை. வாத–பித்த தோஷத்தினால் ஏற்படும் நோய்கள் ஆகியவைகளுக்கு நன்மையளிக்கக்கூடியது. இலகு குணமுடையது. இந்த துருஞ்சிப் பூவிதழைத் தவிர துறிஞ்சியின் மற்ற பகுதி கள் மேற்கூறியவற்றிற்கு எதிரிடையானவை. *153–154*

### 36. கிச்சிலிக்கிழங்கு

தோல் நீக்கப்பட்ட கிச்சிலிக்கிழங்கு உணவிற்குச் சுவையூட்டு கிறது. சடராக்னியைத் தூண்டிவிடுகிறது. இதயத்திற்கு நன்மை யளிக்கிறது. நறுமணமுள்ளது. கப–வாத தோஷங்களை நீக்க வல்லது. இழுப்பு, விக்கல், மூலநோய் இவற்றிற்குச் சிறந்தது. 155

### 37. நார்த்தம்பழம்

நார்த்தம்பழம் இனிப்பும், சிறிதளவு புளிப்புச் சுவையுமுடை யது. இதயத்திற்கு நன்மை பயப்பது. உணவிற்குச் சுவையூட்டு கிறது. எளிதில் சீரணமாகாதது. வாத தோஷத்தைத் தணிக்கும். குருகுணமுள்ளது. *156*

### 38. வாதாம்பருப்பு, அவிஷுகம், அக்ரோட்பழம், பிஸ்தாப்பருப்பு, அழிஞ்சல்

இவைகள் குருகுணமுடையவை. உஷ்ண வீர்யமுடையவை. எண்ணெய்ப்பசையுடன் கூடியவை. இனிப்புச் சுவையுள்ளவை. வலிவை அளிக்கக்கூடியவை. வாத தோஷத்தைத் தணிக்கக் கூடியவை. உடலில் உள்ள தாதுக்களுக்கு வலிவை அளிக்கக்கூடியவை. ஆண்மையை அதிகரிக்கச் செய்பவை. கப பித்தத்தை அதிகப்படுத்துபவை.

### 39. முரளம்பழம்

பாதாம்பழம் போன்றவற்றில் உள்ள உஷ்ண குணத்தைத் தவிர அவற்றிற்குள்ள மற்ற குணங்களும் இதில் உள்ளன. 157–158

### 40. நருவிலிபழம்

இது கபத்தை வளர்க்கக் கூடியது. சுவையில் இனிப்பும், சீத வீர்யமும், குருகுணமும் கொண்டது.

### 41. அழிஞ்சல்பழம்

இது கபத்தை வளர்ப்பது. குருகுணமுடையது. உணவைத் தகைக்கச் செய்து, சீரணிக்கச் செய்கிறது. அதிகமான சடராக்னியால் தோன்றும் நோயைப் போக்கும். 159

### 42. வன்னிமரப்பழம்

இது குருகுணமும், உஷ்ணவீர்யமும் உடையது. இனிப்புச் சுவை, வறட்சித்தன்மை உடையது. தலைமுடியை அழிக்கும்.

### 43. புங்கம்பழம்

இது உணவைத் தகைக்கச் செய்கிறது. வாத–கபத்திற்கு எதிரிடையானதல்ல. 160

### 44. எரிப்புமாம்பழம், எலுமிச்சம்பழம், களாப்பழம், கிடாரங்காய் பழம்

இவை புளிப்புச் சுவையுடையவை. இரத்த பித்த நோயைத் தோற்றுவிப்பவை. 161

### 45. கத்தரிப்பழம்

கத்தரிப்பழம் வாதத்தைப் போக்கும். சடராக்னியைத்தூண்டிவிடும். உவர்ப்பு, கைப்புச் சுவையுடையது.

**46. பர்ப்பாடகப்பழம்**

இது வாதத்தை வளர்க்கும். கபத்தையும், பித்தத்தையும் போக்கும். 162

**47. அக்ஷகீபழம்**

இது பித்தத்தையும், கபத்தையும் போக்கவல்லது. புளிப்புச் சுவை கொண்டது. வாதத்தை வளர்க்கக்கூடியது.

**48. அரசம்பழம், அத்திப்பழம், இத்திப்பழம், ஆலம்பழம்**

இவற்றின் பழங்கள் இனிப்புச்சுவை கொண்டவை. பாகத்தில் புளிப்புச் சுவையாக மாறுபவை. பித்தத்தையும், கபத்தையும் போக்குபவை. துவர்ப்பு, இனிப்பு, புளிப்பு இச்சுவைகளையும் கொண்டவை. வாதத்தை வளர்ப்பதுடன் குரு குணமுள்ளவை. 163–164

49. சேராங்கொட்டை

நெருப்புப் போன்ற சூடு கொண்டது. அதன் தோலும், கதுப்பும் (சதை) இனிப்புச் சுவையுடையது. குளிர்ச்சியானது.

இவ்விதம் பெரும்பாலும் பயன்படக்கூடிய பழவகைகளின் ஐந்தாவது பிரிவு முற்றும். 165

**6. ஹரித வர்க்கம் (பச்சைக்காய்கறி, ஊறுகாய் வகை)**

**1. இஞ்சியும், சுக்கும்**

இவை உணவிற்குச் சுவையூட்டி, சடராக்னியைத் தூண்டி, ஆண்மையை வளர்த்து, தனது சாற்றினால் வாத—கபத்தினால் ஏற்படக்கூடிய மலக்கட்டைப் போக்குகின்றன. 166

**2. எலுமிச்சை**

இது உணவிற்கு ருசி அளிக்கிறது. சடராக்னியைத் தூண்டுகிறது. தீக்ஷ்ண குணமுள்ளது. நறுமணம் கொண்டது. வாயைத் தூய்மைப்படுத்துகிறது. கபம், வாதம் இவற்றைப் போக்குகிறது. கிருமியை அழிக்கிறது. உண்ட உணவைச் சீரணிக்கச் செய்கிறது. 167

**3. இளம் முள்ளங்கி**

இது எல்லா வகையான தோஷங்களையும் போக்கடிக்கிறது. எண்ணெயில் பக்குவம் செய்த முள்ளங்கிக்கீரை வாதத்தைவிலக்குகிறது. முற்றின முள்ளங்கி மூவகை தோஷங்களையும் உண்டு பண்ணும். உலர்ந்த முள்ளங்கி வாதத்தையும், கபத்தையும் அழிக்கும். 168

**4. துளசி**

இது விக்கல் இருமல், நஞ்சினால் ஏற்படும் நோய். இழுப்பு, விலாப்பக்கங்களில் வலி இவற்றைப் போக்கும். பித்தத்தைத் தோற்றுவிக்கும். கபத்தையும், வாதத்தையும் நீக்கும். உடலில் உள்ள கெட்ட நாற்றத்தை அகற்றும். 169

ஓமம், சிறுதுளசி, முருங்கை, சதகுப்பை, சடுகு இவை இதயத்திற்கு நன்மையளிப்பவை. உணவிற்குச் சுவை ஊட்டுபவை. பித்தத்தை சீற்றமடையச் செய்பவை. 170

பெருங்கருணைக்கிழங்கு, நீர்திப்பிலி, நேபாள நாட்டின் தனியா, சுக்கு, இவை தீக்ஷ்ண குணம் உஷ்ண வீர்யம், உவர்ப்புச் சுவை, வறட்சித் தன்மை இவைகளைக் கொண்டு கப—வாத தோஷத்தையும் போக்குகின்றன. 171

**5. படர்புல்**

இது ஆண்மையை அழித்து, உவர்ப்புச்சுவை, வறட்சித்தன்மை, உஷ்ண வீர்யம் கொண்டு, வாயைத் தூய்மை செய்யக்கூடியது.

**6. கருஞ்சீரகம்**

இது கப—வாத தோஷங்களைப் போக்கும். சிறுநீர்ப்பையில் நோயினால் உண்டாகும் வலியை நீக்கும். 172

**7. தனியா**

ஓமம், கருந்துளசி, இவை உணவிற்குச் சுவையூட்டுகின்றன. வாய் நாற்றத்தைப் போக்கி, நறுமணத்தை அளிக்கின்றன. அதிக உவர்ப்புச் சுவையற்றவை. வாதம், பித்தம், கபம் இவற்றைச் சீற்றமடையச் செய்கின்றன. 173

**8. வெள்ளை வெங்காயம்**

இது மலத்தைக் கட்டும். தீக்ஷ்ண குணமுள்ளது. வாதம் கபம், மூலநோய் இவற்றிற்குச் சிறந்தது.

இயற்கையில் பித்த உடலைக் கொண்டவனுக்கும், வியர்வை உண்டாக்குவதற்கும், உணவிற்கும் பயன்படுத்தலாம். 174

**9. வெங்காயம்**

இது கபத்தை வளர்க்கும். வாதத்தைப் போக்கும். பித்தத்தை விலக்காது உணவில் பயன்படக்கூடியது. வலிவையும், ஆண்மையையும் அதிகரிக்கச் செய்யும். உணவிற்குச் சுவையளிக்கவல்லது. 175

**10. உள்ளிப்பூண்டு**

கிருமிநோய், குஷ்டம், வெண்குஷ்டம், வாத நோய், வயிற்றுக் கட்டிநோய் (குல்மம்) இவற்றை நீக்கும். எண்ணெய்ப் பசையும், உஷ்ணவீர்யமும் கொண்டது. ஆண்மையை வளர்க்கும். உவர்ப்புச் சுவையும், குரு குணமும் கொண்டிருக்கும். 176

இந்த ஹரிதவர்க்கத்தில் (பச்சைக் காய்கறி, ஊறுகாய்-வகை) கூறப்பட்ட பழங்களில் உலர்ந்தவை கபத்தையும், வாதத்தையும் கண்டிக்கக் கூடியவை.

இவ்வாறு ஹரித வர்க்கம் என்ற ஆறாவது பகுதி முற்றிற்று. 177

## 7. மத்ய வர்க்கம் (மது வகை)

பொதுவாக எல்லாவகை மதுக்களும் இயற்கையாக புளிப்புச் சுவையும், உஷ்ணவீர்யமும் உடையவை. பாகத்தில் புளிப்புச்சுவையாக மாறும் தன்மை கொண்டிருக்கும். இவற்றில் சிறந்த குணமுள்ள கள்ளைப் பற்றி விளக்கப்படுகிறது. 178

**1. ஸுரா என்னும் ஒரு வகை மது**

இது இளைத்தவர்களுக்கும், சிறுநீர் தடைப்பட்டவர்களுக்கும், கிரஹணி என்றநோய், மூலநோய் உடையவர்களுக்கும் மிக்க சிறந்தது. வாதத்தை அழிக்கக் கூடியது.

தாய்ப்பால், இரத்தம் குறைந்தவர்களுக்கும் இது மேலானது. 179

**2. மதிரா என்னும் ஒரு வகை மது**

இது விக்கல், இழுப்பு, முற்றின ஜலதோஷம், இருமல், மலக்கட்டு, உணவில் சுவையின்மை, வாந்தி, வயிற்று உப்புசம், குடலில் வாயு தடைபடுதல் இவற்றிற்கு நல்லது. வாதத்தைக் கண்டிக்க வல்லது. 180

**3. ஜகலா என்னும் மதுவண்டல்**

இது வயிற்று வலி, சீதபேதி, வயிற்றில் இரைச்சல், கபம், வாதம், மூலநோய் இவற்றிற்குச் சிறந்தது. மலத்தைக் கட்டும். வறட்சித் தன்மையும், உஷ்ண வீர்யமும் கொண்டது. வீக்கத்தைப் போக்கும். உணவைச் சீரணிக்கச் செய்யும். 181

4. [1]அரிஷ்டம்

இது உடல் உருக்கி நோய், மூலநோய், கிரஹணி எனும் நோய், சோகை, சுவையின்மை, காய்ச்சல், கபத்தினால் தோன்றும் பல வகை நோய்கள் இவற்றை நீக்குகிறது. உணவிற்குச் சுவை கூட்டு வதுடன் சடராக்னியைத் தூண்டி விடுகிறது. 182

**சார்க்கரம்** *(சர்க்கரையினால் தயார் செய்த ஆஸவம்)*

வாய்க்குச் சுவையானது. குறைந்த அளவில் வெறி உண்டு பண்ணும். நறுமணம் உண்டாக்கும். வஸ்தி எனும் சிறுநீர்ப் பையில் தோன்றும் பிணிகளைப் போக்கும். உணவுப் பொருட் களை சீரணிக்கச் செய்யும். சீரணித்தபின் இதயத்திற்கும் நிறத் திற்கும் நன்மை பயக்கும். 183

1. [2]பக்வரசசீது *(கொதிக்கவைத்த கரும்புச்சாறினால் செய்யப்படும் மது வகை)*

இது உணவிற்குச் சுவையளிப்பது. சடராக்னியைத் தூண்டு வது. இதயத்திற்கு நன்மையளிப்பது. வற்றிப்போதல், வீக்கம், மூலநோய், இவற்றிற்குச் சிறந்தது. எண்ணெய், கபம் இவற்றால் தோன்றும் நோய்களைப் போக்க வல்லது. 184

2. சீதா ரஸிகம் *(கொதிக்காத கரும்புச் சாறினால் செய்யப்படும் மது)*

இது உணவுப் பொருட்களைச் சீரணிக்கச் செய்து. மலக் கட்டை நீக்கி, குரல், நிறம் இவற்றைத் தூய்மைப்படுத்தி, கரைக் கும் தன்மைகொண்டு, வீக்கம், நீர்ப்பீலிகை, மூலம் இந்த நோய் களுக்கு நன்மை பயக்கும். 185

3. கௌடம் *(வெல்லத்தினால் தயார் செய்த ஒரு வகை மது)*

இது மலத்தையும், கீழ்நோக்கிச் செல்லும் வாதத்தையும் பிளந்து வெளியில் கொண்டு தள்ளும். உடலுக்கு மகிழ்ச்சியைத் தரும். சடராக்னியைத் தூண்டும்.

4. அக்ஷகீ *(தானிக்காயினால் தயார் செய்த மது)*

சோகை, இரணம் இவற்றிற்கு நல்லது. சடராக்னியைத் தூண்டக்கூடியது. 186

---

1. அரிஷ்டம் — மூலிகைகளை கஷாயமாகச் செய்து பாண்டத்தில் இட்டு தரையில் குறிப்பிட்ட காலம் புதைத்து வைத்துத் தயாரிக்கும் கள்.

2. பக்வரஸ சீது — நன்கு சமைத்த இனிய சுவையுள்ள மூலிகைகளாலும், திரவப் பொருட்களாலும் பக்குவம் செய்யப்படுகின்ற ஒருவகை மது.

**5. ஸுராஸவம் என்ற மது**

இது கடுமையான வெறி உண்டுபண்ணக்கூடியது. வாத தோஷத்தை நீக்குவதுடன் வாய்க்குச் சுவையானது.

**6. மதூகாஸவம் - (இலுப்பைப் பூவில் தயார் செய்த மது)**

இது தோஷங்களைப் பிளக்கக்கூடியது. தீக்ஷ்ணகுணமுடையது.

**7. மைரேயம் எனும் மது (ஸுரா என்ற மதுவையும் ஆஸவத்தையும் ஒன்று சேர்த்து தயாரிக்கப்படும் மது)**

இது இனிப்பானது. குருகுணமுள்ளது. 187

**8. தாதகீ (காட்டாத்திப் பூவினால் தயாரித்த மது)**

இது ஹ்ருதயத்திற்கு நன்மையளிப்பது. வறட்சித் தன்மையுடையது. உணவுக்குச் சுவையூட்டுவது. சடராக்னியைத் தூண்டுவது.

**9. ம்ருத்வீக இக்ஷுரஸாஸவம் (திராக்ஷை, கரும்பு இவற்றின் ரஸத்தினால் தயாரித்த கள்)**

இவை இலுப்பைப் பூவினால் தயார் செய்யப்பட்ட மதுவிற்கு ஒத்த குணமுள்ளவை. ஆனால் அவ்வளவு உஷ்ணமல்ல. 188

**10. மது (தேனில் தயாரித்த மது)**

இது உணவுக்கு ருசி அளிக்கக்கூடியது. சடராக்னியைத் தூண்டுவது. இதயத்திற்கு வலிவு அளிப்பது. பலத்தைக் கொடுப்பது. பித்தத்திற்கு எதிரியல்ல. மலக்கட்டு, கபத்தினால் தோன்றும் நோய்கள் இவற்றைப் போக்குவது. இலகு குணமுள்ளது. வாதத்தைச் சிறிதளவு வளர்க்கக்கூடியது. 189

**11. யவக்ருதஸுரா (யவதானியத்தினால் செய்யப்பட்ட வண்டலுடன் கூடிய கள்)**

வறட்சித்தன்மை, உஷ்ண வீரியம் கொண்டது. வாத-பித்தத்தை வளர்க்கும். குருகுணமுள்ளது. உணவைத் தகைக்கச் செய்து சீரணிக்கச் செய்கிறது.

**12. மதூலிகா (கோதுமையால் தயாரித்த கள்)**

இது கபத்தை வளர்க்கும். 190

**13. ஸௌவீரகம், துஷோதகம் (மது வகை)**

இவ்விரண்டும் சடராக்னியைத் தூண்டுவதுடன் உணவைச் சீரணிக்கச் செய்பவை. இதயநோய், சோகை, கிருமி நோய்

இவற்றை நீக்குபவை. கிரஹிணி, மூலநோய் இவற்றிற்குச் சிறந்தவை. மலத்தைப் பிளப்பவை. 191

## 14. அம்லகாஞ்சிகம் (புளிப்புக்காடி)

இதைத் துணியில் நனைத்து உடலில் போடுவதால் எரிச்சலும், காய்ச்சலும் நீங்கும். பருகுவதனால் வாத—கபம் விலகும். மலக்கட்டு நீங்கும். மலம் சிறுநீர் இவற்றை வெளிப்படுத்தும். சடராக்னியை வளர்க்கும். 192

## 15. புதிய மது

பெரும்பாலும் புதிய கள் குருகுணம் உள்ளது. வாதம், பித்தம் கபம் இவற்றைத் தூண்டிவிடக்கூடியது.

## 16. பழைய மது

இது உடலில் உள்ள துவாரங்களைச் சுத்தப்படுத்துகிறது. சடராக்னியைத் தூண்டுவது. இலகு குணமுடையது. உணவிற்குச் சுவை ஊட்டவல்லது. 193

## 17. முறைப்படி கள் பருகுவதின் பயன்

முறைப்படி அளவுடன் கள் அருந்துவதனால் மகிழ்ச்சி, மன நிறைவு ஏற்படும். அச்சம், வருத்தம், களைப்பு இவை நீங்கும். வீரியத்தைப் பெருக்கும். சமயோசித அறிவு, திருப்தி, உடல் வளர்ச்சி, வலிவு இவை தோன்றும். நற்குணமுடையவனால் முறைப்படி அருந்திய மது அமுதத்திற்கு ஈடாக ஆகிறது.

இத்துடன் மதுவகை என்ற ஏழாவது பிரிவு முற்றிற்று.

194–195

# 8. நீரின் வகை

## 1. ஜலவர்க்கம் (நீரின் வகை)

ஆகாயத்திலிருந்து மழையாக வரும் எல்லா வகையான நீரும் ஒரேவிதமாகத்தான் வருகிறது. கீழே விழுந்த நீர் இடம், காலம் இவற்றிற்கு ஏற்றவாறு குணம், தோஷங்களைப் பெறுகிறது.

196

ஆகாயத்திலிருந்து விழும் நீர் நேரம் தவறாது சென்றுகொண்டிருக்கும், சந்திரன், சூரியன், காற்று இவற்றின் சேர்க்கையாலும் அருகில் உள்ள பூமிக்கு ஏற்றவாறும் குளிர்ச்சி, உஷ்ணம், எண்ணெய்ப்பசை, வறட்சித்தன்மை ஆகிய குணங்களுடன் கூடியதாக ஆகிறது. 197

**2. மழைநீரின் இயற்கை குணம்**

இது சீத வீர்யம், தூய்மை, நலன், சுவை, தெளிவு, இலகு என்ற ஆறு குணங்களைக் கொண்டது. இயற்கையாகவே சிறப்பு வாய்ந்தது.

**3. நிலத்திற்கு ஏற்றவாறு நீரின் சுவை**

ஆகாயத்திலிருந்து நிலத்தில் விழுந்த நீர் இருப்பிடத்தை எதிர்பார்க்கிறது. அதாவது எவ்வகையான நிலத்தில் விழுகிறதோ அல்லது தங்குகிறதோ அந்த நிலத்திற்கு ஏற்றவாறு குணத்தைப் பெறுகிறது. 198

வெண்மையான மண் உடைய நிலத்தில் விழும் அல்லது தேங்கி நிற்கும் நீர் துவர்ப்புச்சுவையுடனும், வெண்மை கலந்த பச்சை நிறமுள்ள நிலத்தில் விழும் நீர் கைப்புச் சுவையுடனும், பொன் நிறமுள்ள நிலத்தில் விழுந்த நீர் க்ஷார குணமுடனும், உவர்மண் நிலத்தில் விழும் நீர் உப்புச் சுவையுடனும், மலையில் விழுந்து பெருகிவரும் நீர் உவர்ப்புச் சுவையுடனும், கரு நிறமுள்ள தரையில் தங்கும் நீர் இனிப்புச் சுவையுடனும் கூடியிருக்கும். இதனால் நிலநீருக்கு ஆறுவகைக் குணங்கள் உண்டு என்பது தெளிவாகிறது. 199

ஐந்த்ரம் என்ற நீர், காரம் என்ற ஆலங்கட்டி நீர், பனிநீர் இம்மூன்றும் தெளிவற்ற சுவையுடையவை. 200

இந்திரனால் விடப்பட்டு ஆகாயத்திலிருந்து விழுந்த நீரை வெள்ளி, தங்கம் போன்ற சுத்தமான பாத்திரங்களில் சேர்த்து வைத்த நீரை அறிஞர்கள் ஐந்திரம் என்றழைக்கிறார்கள். இது நீருக்குள் சிறந்தது. அரசர்கள் பருகுவதற்குத் தகுதியானது. 201

எல்லா வகையான உயர்ந்த நீரும் சிறிதளவு துவர்ப்புச் சுவையும், இனிப்புச்சுவையும் கொண்டவை. நுட்பமானவை, தெளிவானவை, இலகு குணமுடையவை. வறட்சியையும், கபத்தையும் தோற்றுவிக்கக்கூடியவை. 202

**4. பருவத்திற்கு ஏற்றவாறு மழை நீரின் குணம்**

மழைக்காலத்தில் புதிய நீர் இனிப்புச் சுவையும், குருகுணமும் உடையது. கபத்தைத் தோற்றுவிக்கும். (வர்ஷ ருது – ஆவணி, புரட்டாசி)

சரத் ருதுவில் (ஐப்பசி–கார்த்திகை) கிடைக்கும் மழைநீர் மெல்லியதாய் இலகு குணமுள்ளதாய், கபத்தை உண்டாக்கக் கூடியதாய் இருக்கும்.

அழகான உடற்கட்டுள்ளவர்களுக்கும், எண்ணெய்ப் பசையுள்ள உணவை உண்பவர்களுக்கும் மென்று தின்னக் கூடியது, தின்பண்டங்கள், நக்கிக்குடிப்பது பருகுவது என்ற நால்வகை உணவிற்கும் சிறந்தது. 203–204

பனிக்காலத்தில் (சிசிர ருது மாசி, பங்குனி,) புதிய நீர் எண்ணெய்ப்பசை உள்ளது. ஆண்மையை வளர்க்கும். வலிவை அளிக்கும். குருகுணமுள்ளது.

சரத் (மாரி) காலத்தில் கிடைக்கும் புதிய நீர், பனிக்காலத்தில் கிடைக்கும் நீரைக்காட்டிலும் மிக்க லகு குணமுள்ளது. கபத்தையும், வாதத்தையும் போக்க வல்லது.

வஸந்த பருவத்தில் (சித்திரை – வைகாசி) கிடைக்கும் மழைநீர் துவர்ப்புச் சுவையும், இனிப்புச் சுவையும் கொண்டது. வறட்சித்தன்மையுள்ளது.

கிரீஷ்ம (கோடை—ஆனி, ஆடி) காலத்தில் கிடைக்கும் நீர் கபத்தைத் தோற்றுவிக்காது. இதில் ஐயமில்லை. 205–206

இவ்விதம் ஒவ்வொரு பருவத்திலும் கிடைக்கக்கூடிய மழைநீரின் குணங்கள் தனித்தனியாகக் கூறப்பட்டுள்ளன.

பருவக்காலத்தில் கிடைக்கும் மழைநீர் தோஷங்களைத் தோற்றுவிக்கும் என்பதில் ஐயமில்லை. 207

அரசர், அரசருக்கு ஈடான செல்வந்தர், எல்லா குணங்களும் நிரம்பியவர், அழகான உடற்கட்டுடையவர் என இவர்கள் சரத் ருதுவில் (ஐப்பசி, கார்த்திகை) கிடைக்கும் மழைநீரைச் சேர்த்து வைத்து குறிப்பாகப் பருக வேண்டும். 208

**5. ஆற்று நீரின் குணங்கள்**

இமயமலையிலிருந்து பெருகிய ஆறுகளின் கரைகளில் தேவர்கள், முனிவர்கள் வசிக்கிறார்கள். ஆதலால் அந்த ஆறுகள் பரிசுத்தமானவை. புண்ணியத்தை அளிப்பவை. அந்த ஆற்று நீரின் நடுவில் உள்ள கற்பாறைத்துண்டுகளால் சிதறித் தட்டுத் தடுமாறிச் செல்கின்றன. சிதறிய அந்நீர் எல்லாப் பிராணிகளுக்கும் நன்மை பயக்கக்கூடியது. 209

மலைய மலையிலிருந்து பெருகும் ஆறுகளில் கற்றுண்டுகளும், மணலும் பெருகுகின்றன. ஆதலால் அந்த நீர் தெளிவாகவும், அமிர்தத்திற்கு ஈடாகவும் சுவையுள்ளதாகவும் ஆகிறது. 210

மேற்குத் திசை நோக்கிச் செல்லும் ஆறுகளின் நீர் நன்மை பயக்கும். தெளிவாகயிருக்கும். கிழக்குக் கடலில் கலக்கும் ஆறுகளின் நீர் மெள்ள மெள்ளப் பெருகுகின்றது. குரு குணமுள்ளது. 211

பாரியாத்ரிகம் என்ற மலை, விந்திய மலை, ஸஹ்யம் என்ற பெயருள்ள மலை இவற்றிலிருந்து பெருகும் ஆறுகளின் நீர் தலை நோய், இதய நோய், குஷ்ட நோய், யானைக்கால் இவற்றை உண்டாக்குவதற்குக் காரணமாகின்றது.

மழைக்காலத்தில் மட்டும் நீர் பெருகும். 212

### 6. ஆற்று நீரின் தீய குணம்

பெரும்பாலும் மழைக்காலத்தில் ஆற்றின் நீர் புழு, பாம்பு, எலி இவற்றின் மலத்தினால் கேடடைந்து பெருகுகின்றது. ஆகையால் அந்நீரைப் பருகுவதனால் எல்லா தோஷங்களும் சீற்றமடைகின்றன. 213

நடைபாதை, கிணறு, குளம், பூமியைப் பிளந்துகொண்டு வரும் ஊற்று, ஏரி, இவற்றின் நீர், நீர்ப்பாங்கான இடம், மலை, காடு இவற்றிற்கு ஏற்ற குணமுடையதாக இருக்கிறது. 214

### 7. தீமை விளைவிக்கும் நீர்

பிசுக்குள்ளதும், புழுக்கள் நிரம்பியதும், இலை, டாசி, சேறு இவற்றால் கேடடைந்ததும், நிறமற்றதும், கேடடைந்த சுவையுடன் கூடியதும் வடிகட்ட முடியாததும், கெட்ட நாற்றமுடையதுமான நீர் நன்மை பயக்காது. 215

### 8. கடல் நீரின் குணம்

வருண பகவானுக்கு இருப்பிடமான கடலின் நீர் கெட்ட நாற்றமுடையதும், மூவகை தோஷங்களைத் தோற்றுவிப்பதும், உப்புச் சுவையுடன் கூடியதுமாகக் காணப்படும்.

இவ்விதம் எட்டாவது ஜல வர்க்கம் (நீர்வகை) முடிவாகக் கூறப்பட்டது.

## 9. கோரஸ ஸவர்க்கம்
## (பசுவினிடமிருந்து கிடைக்கும் பொருட்களின் வகை)

### 1. பசும்பாலின் குணம்

பசுவின்பால், சுவை, சீதவீரியம், மிருதுத்தன்மை, எண்ணெய்ப் பசை, கெட்டித்தன்மை, கொழ கொழப்பு, பிசுபிசுப்பு, தெளிவு, மந்தம் என்ற பத்துக் குணங்களை உடையது. 216

இப்பசுவின் பால் ஓஜஸ் எனும் தாதுவின் குணத்திற்கு ஒத்திருப்பதால் ஓஜஸை வளர்க்கிறது. இது உயிரூட்டும் பொருட்களில் மிகச் சிறந்தது. நோயையும், முதுமையையும் போக்க வல்லது. 217–218

## 2. எருமைப்பாலின் குணம்

எருமைப்பால் பசுவின் பாலைக் காட்டிலும் மிக்க குருகுணமுள்ளது. மிக்கக் குளிர்ச்சியானது. வெண்ணெய் அதிகமுள்ளது. தூக்கம் வராதவர்களுக்கும் சடராக்னி அதிகம் உள்ளவர்களுக்கும் நன்மை பயப்பது. 219

## 3. ஒட்டகப் பாலின் குணம்

இது வறட்சித் தன்மையுள்ளது. உஷ்ண வீர்யமுடையது. சிறிதளவு உப்புச் சுவையும், இலகு குணமும் கொண்டது. வாத—பித்த நோய், வயிற்று உப்புசம், கிருமி நோய், வீக்கம், நீர்ப் பீலிகை, மூலநோய் இவற்றைப் போக்கவல்லது. 220

## 4. ஒற்றைக் குளம்புள்ள பிராணிகளின் பாலின் குணம்

எல்லா ஒற்றைக் குளம்புள்ள பிராணிகளின் பால், வலிவை அளிக்கும். உடலுக்கு உறுதியை அளிக்காது. உஷ்ணவீர்யமுடையது. புளிப்பு, உப்புச்சுவையுடன் கூடியது. வறட்சித் தன்மையுடையது. ரத்தம் போன்ற தாதுக்கள், தோல் இவற்றில் வாதத்தினால் தோன்றும் நோய்களைப் போக்கும். லகு குணமுடையது. 221

## 5. வெள்ளாட்டின் பாலின் குணம்

இது துவர்ப்பு, இனிப்புச் சுவையுடையது. சீத வீர்யமுள்ளது. மலக்கட்டை ஏற்படுத்தும். இலகு குணமுள்ளது. இரத்த பித்த நோய், கழிச்சல், காசநோய், இருமல், காய்ச்சல் இவற்றைப் போக்கும். 222

## 6. செம்மறியாட்டுப் பாலின் குணம்

இது விக்கல், இழுப்பு இவற்றை உண்டாக்கும். உஷ்ண வீர்யமுடையது. பித்தத்தையும், கபத்தையும் வளர்க்கும்.

## 7. யானைப் பாலின் குணம்

இது வலிவை அளிக்கும். குரு குணமுள்ளது. உடலை உறுதிப்படுத்துவதில் சிறந்தது. 223

---

1. ஓஜஸ் — உடலில் உள்ள எல்லா தாதுக்களின் சிறந்த சாரம்.

**8. தாய்ப்பாலின் குணம்**

இது உடலுக்கு உயிர் ஊட்டவல்லது. உடலைப் பருக்கச் செய்யும். உடலுடன் ஒத்துப்போவது. எண்ணெய்ப்பசை உண்டாக்கும். இரத்தபித்த நோயில் மூக்கிலிடுவதற்கும், (நஸ்யம்) கண் வலியில் தர்ப்பணச்சிகிச்சை செய்வதற்கும் பயன்படும். 224

**9. தயிரின் குணங்கள்**

தயிர் உணவிற்குச் சுவையூட்டும். சடராக்னியைத் தூண்டும். ஆண்மையை வளர்க்கும். உடலில் எண்ணெய்ப் பசையை உண்டாக்கும். வலிவை அளிக்கும். பாகத்தில் புளிப்புச் சுவையாக மாறும். உஷ்ண வீர்யமுள்ளது. வாத தோஷத்தை நீக்கும். நலனளிக்கும். உடலைப் பருக்கச் செய்யும்.

முற்றின ஜலதோஷம், கழிச்சல், குளிர் காய்ச்சல், மலேரியாக் காய்ச்சல், சுவையின்மை, சிறுநீர்க் கடுப்பு, உடல் இளைப்பு இவற்றிற்குத் தயிர் சிறந்த பொருளாகும். 225–226

**10. தயிர் பருகத் தகாத காலம்**

பெரும்பாலும் சரத் (ஐப்பசி, கார்த்திகை), கிரீஷ்ம (ஆனி, ஆடி), வஸந்த (சித்திரை, வைகாசி) பருவங்களில் தயிர் அருந்தக் கூடாது. இரத்த பித்த நோயுள்ளவர், கபதோஷத்தினால் தோன்றும் நோயுடையவர் இவர்கள் தயிர் பருகக் கூடாது. 227

**11. தோய்ந்த தயிரும், தோயாத் தயிரும்**

''மந்தகம்'' எனும் நன்கு தோயாத தயிர் வாத–பித்த–கபத்தைச் சீற்றமடையச் செய்கிறது.

''ததி'' எனும் நன்கு தோய்ந்த தயிர் வாதத்தைப் போக்கும்.

**12. ''ஸரம்'' எனும் தயிரின் ஏடு**

இது விந்துவை வளர்க்கும்.

**13. ''மஸ்து'' எனும் தயிரின் தெளிந்த நீர்**

தயிரின் தெளிந்த நீர், கப, வாத தோஷங்களை அகற்றுவதுடன் உடலில் உள்ள துவாரங்களைத் தூய்மைப்படுத்துகிறது. 228

**14. மோரின் குணம்**

வீக்கம், மூலநோய், கிரகிணிநோய், சிறு நீரடைப்பு, நீர்ப் பீலிகை, சுவையின்மை, எண்ணெய் பருகுவதனால் ஏற்படும்

---

1. தர்ப்பணச் சிகிச்சை — ஊட்டம் அளிக்கும் சிகிச்சை.

தீமைகள், பாண்டு நோய், இடுவிஷம் இவற்றைப்போக்க மோரை அருந்தலாம். 229

## 15. வெண்ணெயின் குணம்

புதிதாகக் கடைந்தெடுத்த வெண்ணெய் மலக்கட்டு, சடராக்னியைத் தூண்டுதல், இதயத்திற்கு நன்மையளித்தல் என இவற்றைச் செய்யும்.

கிரகிணி நோய், மூலநோய், முகம் ஒரு பக்கமாசக் கோணிப் போதல், சுவையின்மை இவற்றைப் போக்குகிறது. 230

## 16. நெய்யின் பொதுவான குணம்

பொதுவாக நெய், நினைவாற்றல், அறிவு, சடராக்னி, விந்து, ஓஜஸ், கபம், கொழுப்பு இவற்றை வளர்க்கக்கூடியது. வாத—பித்தம், நஞ்சு இவற்றால் தோன்றும் நோய்கள், பைத்தியம், உடல்உருக்கி நோய், காய்ச்சல் இவற்றை நீக்கும். எண்ணெய் வகைக்குள் சிறந்தது. சீத வீர்யமுடையது. சுவையிலும், பாகத்திலும் இனிப்புச் சுவையுள்ளது. இதைப் பல வகை மூலிகைப் பொருட்களுடன் முறைப்படி சேர்ப்பதனால் அப் பொருட்களில் உள்ள ஆயிரக்கணக்கான குணங்கள் இதற்கு ஏற் படுகிறது. எனவே நெய் ஆயிரக்கணக்கான செயல்களைச் செய்ய வல்லது. 231—232

## 17. பழைய நெய்யின் குணம்

பத்து வருட காலம் நன்கு காக்கப்பட்ட நெய் பழைய நெய் எனக் கூறப்படுகிறது.

அது வெறி, காக்காய் வலிப்பு, மூர்ச்சை, உடலுருக்கி நோய், பைத்தியம், இடுவிஷம், காய்ச்சல், பெண்குறியில் உண்டாகும் நோய், காதுவலி, தலைவலி இவற்றைப் போக்கவல்லது.

வெள்ளாடு, செம்மறியாடு, எருமை இவற்றின் நெய், அப் பிராணிகளின் பாலிலுள்ள குணங்களை அடைகிறது. 233

## 18. பீயூஷம், மோரடம், பலவகை கிலாடங்கள்

என இவை சடராக்னி பலமுள்ளவர்கட்கும் உறக்கமற்றவர் களுக்கும் நலனளிப்பதோடு, குருகுணமுடன் கூடியிருக்கும். உட லுக்கு வலிவு அளித்து, வீர்யத்தை வளர்த்து, உடலுக்கு பருமனை தோற்றுவித்து, வாத நோய்களை அகற்ற வல்லவை. 234—235

## 19. மோர் வண்டல்

இது தெளிவாய், குருகுணமுள்ளதாய், வறட்சித்தன்மை யுடன் கூடி மலக்கட்டை உண்டுபண்ணும். இவ்விதம் கோரஸம் (பசுவைச் சார்ந்தவை) என்ற பிரிவு விளக்கப்பட்டது.

236

## 10. கரும்பு வகை

### 1. பற்களால் கடித்துத் தின்னும் கரும்பின் குணங்கள்

இது ஆண்மையை வளர்த்து, சீதவீர்யம் கொண்டு, மல மிளக்கி, எண்ணெய்ப் பசை உண்டாக்கி, உடலைப் பருக்கச் செய்து, இனிப்புச் சுவையுடன் கபத்தை வளர்க்கும்.

யந்திரத்தில் பிழிந்த ரசம் எரிச்சலை உண்டாக்கும். 237

(பௌண்ட்ரகம்) நாமக்கரும்பு சீதவீர்யமுள்ளது. தெளிவானது. இனிப்புச்சுவையுடையது. ஆதலால் எல்லாக் கரும்புகளிலும் சிறந்தது. (வம்சகம்) மூங்கில் கரும்பு இரண்டாம் தரமானது. 238

### 2. வெல்லத்தின் குணம்

பொதுவாக எல்லா வகையான கரும்புகளிலிருந்து தயாரிக்கப்படும் வெல்லம், அதிக அளவில் கிருமி, மஜ்ஜை, இரத்தம், கொழுப்பு, மாமிசம் இவற்றை உண்டாக்கும். கரும்புச் சாற்றை நான்கில் ஒரு பங்காகக் காய்ச்சியது. மூன்றில் ஒரு பங்காகக் காய்ச்சியது, இரண்டில் ஒரு பங்காகக் காய்ச்சியது, என மூன்று வகைப்படும். கரும்புச் சாற்றினால் ஆன வெல்லம் (க்ஷுத்ரம்) மட்டமானது. இரண்டில் ஒரு பங்காகக் காய்ச்சியதைக் காட்டிலும் மூன்றில் ஒரு பங்காகக் காய்ச்சியது குரு குணமுள்ளது. மூன்றில் ஒரு பங்காகக் காய்ச்சியதைவிட நான்கில் ஒரு பங்காகக் காய்ச்சியது அதிக குரு குணமுள்ளது. சுத்தமான வெல்லம் குறைவான தீமையை ஏற்படுத்தும். 239

சுத்தமாகத் தயாரிக்கப்பட்ட வெல்லத்தைக் காட்டிலும், பழுப்பு நிறக்கற்கண்டு, சாதாரணக் கற்கண்டு, சர்க்கரை இவை முறையே ஒன்றைவிட ஒன்று சுத்தமானவை. மேலானவை, ஒன்றைவிட ஒன்று சீத வீர்யமுள்ளவை. 240

### 3. சர்க்கரையின் குணங்கள்

வெல்லத்தினால் தயாரிக்கப்பட்ட சர்க்கரை ஆண்மையை வளர்க்கும். மார்பில் அடிபட்டுப் பலமிழந்தவனுக்கு நலனளிக்கும். எண்ணெய்ப் பசையுடன் கூடியிருக்கும்.

மூங்கில் கரும்பினால் தயாரிக்கப்பட்ட சர்க்கரை (யாஸ சர்க்கரை) துவர்ப்பு, இனிப்பு, கைப்புச் சுவைகளைக் கொண்டது. சீத வீர்யம் உள்ளது. 241

**4. தேனில் தயாரித்த சர்க்கரை** — வறட்சித் தன்மையுள்ளது. வாந்தி பேதியை நிறுத்தக்கூடியது. கட்டிப்போன கபத்தையும், மலத்தையும் பிளந்து வெளிப்படுத்தக்கூடியது.

பொதுவாக எல்லா சர்க்கரையும், நாவறட்சி, ரத்த பித்தம், உடல் எரிச்சல் இந்நோய்களுக்குச் சிறந்தது. 242

### 5. தேனின் வகைகள்

**மாக்ஷிகம்** (பெரிய ஈக்களினால் தயாரிக்கப்பட்டது).

**ப்ராமரம்** (வண்டுகளினால் தயாரிக்கப்பட்டது)

**க்ஷௌத்ரம்** ( சிறிய தேனீக்களால் தயாரிக்கப்பட்டது)

**பௌத்திகம்** (மஞ்சள் நிறமுள்ள ஈக்களால் தயாரிக்கப்பட்டது)

எனத் தேன் நால்வகைப்படும். அவற்றில் மாக்ஷிகம் என்ற தேன் சிறந்தது. ப்ராமரம் என்ற தேன் குறிப்பாகக் குருகுணமுள்ளது. 243

மாக்ஷிகம் என்ற தேன் எண்ணெய் நிறமும், பௌத்திகம் என்ற தேன் நெய் நிறமும், க்ஷௌத்ரம் என்ற தேன் பொன் நிறமும், ப்ராமரம் என்ற தேன் வெளுப்பு நிறமும் கொண்டிருக்கும். 244

### 6. தேனின் பொது குணங்கள்

எல்லா வகையான தேனும் வாதத்தை வளர்க்கும். குருகுணமுள்ளது. சீத வீர்யமுடையது. இரத்த பித்தம், கபம் இவற்றால் தோன்றும் நோய்களைப் போக்கும்.

பிளந்த பொருளைச் சேர்க்கக்கூடியது. இறுகிப்போன தோஷங்களைப் பிளக்கும். வறட்சித்தன்மையுடனும், உவர்ப்புடனும் இனிப்புச் சுவையுடனும் கூடியிருக்கும். 245

சூடாக்கப்பட்ட தேனைப் பருகினால் மரணம் ஏற்படும்.

சூடாக்கப்படாத தேன், பலவகைப்பட்ட நஞ்சுள்ள மலர்களிலிருந்து தயாரிக்கப்படுவதால், உஷ்ண உடல் உடையவனுக்கு அது மரணத்தை உண்டாக்கும். இது குரு குணம், வறட்சித்தன்மை, துவர்ப்புச்சுவை, சீதவீர்யம் இக்குணங்களைப் பெற்றிருப்பதால் குறைந்த அளவில் பருகுவது நல்லது. 246

தேன் பருகுவதால் ஏற்படும் அசீர்ண நோயைக் காட்டிலும் துன்பத்தைத் தரும் வேறு நோய் கிடையாது. ஏனென்றால் அது சிகிச்சைக்குக் கட்டுப்படாது. விஷத்தைப் பருகுவதால் உடன்

மரணம் ஏற்படுவதுபோல் இந்தத் தேனைப் பருகுவதனால் தோன்றும் அசீரண நோயும் உடனே மரணத்தை விளைவிக்கிறது. 247

பொதுவாக அசீரண நோய்க்கு உஷ்ண சிகிச்சை செய்ய வேண்டும். ஆனால் தேனினால் ஏற்பட்ட அசீர்ணநோய்க்கு உஷ்ண சிகிச்சை எதிரிடையானது. ஆகையால் தேனால் தோன்றும் அசீர்ணம் கடுமையாய், நஞ்சைப்போல் மரணத்தை உடனே விளைவிக்கும். 248

தேன் பலவகைப் பொருட்களால் ஆக்கப்படுவதால் சேர்க்கும் பொருட்களின் குணத்தை அது பெறுகிறது.

இத்துடன் கரும்பு வகை என்ற பத்தாவது பிரிவு முற்றும். 249

## 11. சமைக்கப்பட்ட பொருள் வகை

### 1. [1]பேயா (ஒருவகைக் கஞ்சி)

இது பசி, நாவறட்சி, சோர்வு, வலிவுக்குறைவு, வயிற்றுக்குள் தோன்றும் நோய், காய்ச்சல் இவற்றைப் போக்கும். வியர்வையை உண்டாக்கும். சடராக்னியைத் தூண்டிவிடும். கீழ்நோக்கிச் செல்லும் வாதத்தையும், மலத்தையும் சரிப்படுத்தும். 250

### 2. [2]விலேபி (மற்றொரு வகைக் கஞ்சி)

இது திருப்தியை அளிக்கக்கூடியது. மலத்தைக் கட்டக்கூடியது. இலகு குணமுள்ளது. இதயத்திற்கு நன்மை பயப்பது.

### 3. [3]மண்டம் என்ற கஞ்சி

இது சடராக்னியைத் தூண்டி விடுவதுடன் வாத தோஷத்தை நேராகச் செய்கிறது. உடலில் உள்ள துவாரங்களை மிருதுவாக்குகிறது. வியர்வையை உண்டாக்குகிறது.

சடராக்னியைத் தூண்டுவதுடன் லகு குணம் உடையதால் லங்கன சிகிச்சையை முறைப்படி ஏற்றுக்கொண்டவர்கள், மலம் நன்றாக வெளியாகும் பழக்கமுள்ளவர்கள், எண்ணெய் சீரணமானவர்கள், நாவறட்சி உள்ளவர்கள் என இவர்களுக்கு உயிர் ஊட்டக்கூடியது. 251–252

1. பேயா – ஒரு பலம் உணவுப் பொருளைப் பொடி செய்து 64 பலம் நீரில் பக்குவம் செய்து அரைப்பங்கு குறையும் படி காய்ச்சிய நீரான கஞ்சி.
2. விலேபி – அரிசி முதலிய பொருளை நான்கு மடங்கு நீர் சேர்த்துக் கெட்டியாகத் தயாரிக்கும் கஞ்சி.
3. மண்டம் – விலேபியை விடக் கெட்டியான கஞ்சி.

**4. லாஜபேயா (நெல் பொரியில் தயாரித்த கஞ்சி)**

இது குரல் கம்மியவர்களுக்கு களைப்பைப் போக்கவல்லது.
253

**5. லாஜமண்டம் (நெல் பொரியில் தயாரித்த கெட்டியான கஞ்சி)**

இது நாவறட்சி, கழிச்சல், இவற்றைத் தணிக்கும். உடலிலுள்ள தாதுக்களை நேராகச் செய்யும். நன்மையையளிக்கும். சடராக்னியைத் தூண்டிவிடும். எரிச்சல், மூர்ச்சை இவற்றைப் போக்கும்.

முறைப்படி தயாரிக்கப்பட்ட லாஜ மண்டம் எனும் கஞ்சியை சடராக்னி குறைந்தவர்களுக்கும், சடராக்னி தாறுமாறாக உள்ளவர்களுக்கும், சிறுவர்கள், முதியவர்கள், பெண்கள் அழகான உடல் அமைப்புள்ளவர்கள் இவர்களுக்கும் கொடுப்பது நல்லது.
254–255

**6. நெல் பொரியில் தயாரித்த சத்துமாவு**

அரிசித்திப்பிலி, சுக்கு, நெல்பொரி, புளிப்புமாதுளை இவற்றால் தயார் செய்த நெல் பொரி சத்துமாவு பசி, தாகத்தைப் போக்கும். வாந்தி முதலான சிகிச்சை செய்து கொண்டவர்களுக்கு உடலுக்கு ஏற்றது. மலத்தை வெளிப்படுத்தும். துவர்ப்பு,இனிப்புச் சுவையுடன் கூடி, சீதவீர்யம் கொண்டது. 256

அரிசியை நன்கு கழுவி, வேகவைத்து, கஞ்சி வடித்த சோறு இலகு குணமுள்ளது.

அரிசியை வறுத்துச் சமைத்த சோற்றை இடுவிஷம், கபத்தால் தோன்றும் நோய்கள் இவற்றிற்குக் கொடுக்க வேண்டும்.

நன்றாகக் கழுவாமல், நன்கு வேகவைக்காமல், கஞ்சியை வடிகட்டாமல் செய்த குளிர்ந்த சோறு குருகுணமுள்ளது.
257–258

மாமிசம், கீரைவகை, கொழுப்பு, எண்ணெய், நெய், எலும்புக்குள் உள்ள சோறு (மஜ்ஜை) பழவகை, சமைக்கப்பட்ட சோறு, வலிவை அளிக்கக்கூடியது. உடலுக்கு புஷ்டியை அளிக்கும். இதயத்திற்கு நன்மை பயக்கும். குருகுணம் உள்ளது. உடலைப் பருமனாக்கும். இதேபோல் உளுந்து, எள்ளு, பால், பயறு இவற்றால் சமைத்தசோறும் மேற்கண்ட குணங்களைக் கொண்டிருக்கும்.
259

மொச்சைக் கொட்டையால் தயாரித்த சோறு, குருகுண முள்ளது. வறட்சியை அளிக்கக்கூடியது. வாதத்தை வளர்க்கக் கூடியது. மலம் கழிக்கச் செய்வது. 260

பருப்பு வகைகள், கோதுமை, யவ அரிசி இவற்றை வேக வைத்துத் தயாரித்த தின்பண்டங்கள், அந்த அந்தப் பொருட் களின் குரு லகு குணம் சேர்க்கப்பட்ட பொருட்களில் குணத்திற்கு ஏற்றவாறு மருத்துவன் அறிந்துகொள்ள வேண்டும். 261

உப்பு, எண்ணெய், மசாலாப் பொருட்கள் இவற்றில் தயா ரித்த கஞ்சி (க்ருதயூஷம்) இவையில்லாமல் தயாரித்த கஞ்சி (அக் ருதயூஷம்) மெல்லிய, கெட்டியான மாமிச ரசம், புளிப்புச் சுவை சேர்த்த பருப்பு, புளிப்புச் சுவை சேர்க்காத பருப்பு இவை ஒன்றுக் கொன்று மேன்மேலும் குருகுணமுள்ளவை. 262

## 7. சத்துமாக்களின் பொது குணம்

இவை வாதத்தை வளர்ப்பவை, வறட்சித்தன்மையுடையவை. மலத்தை அதிகரிக்கச் செய்பவை. தோஷங்களை நேராகச் செலுத் துபவை. உடலுக்கு வலிவை அளிப்பவை. உண்டவுடன் உடனே வலிவை அளிப்பவை. 263

சம்பா அரிசியினால் தயாரித்த சத்துமாவு இனிப்புச்சுவை, லகுகுணம், சீதவீர்யம் உடையது. மலத்தைக் கட்டக்கூடியது. இரத்த பித்தம், நாவறட்சி, வாந்தி, காய்ச்சல் இந்நோய்களைப் போக்கும். 264

யவ அரிசியினால் தயார் செய்த வடை, யவ அரிசியினால் தயார் செய்த மண்டம், வாட்யம் எனும் மண்டம், இம்மூன்றும் மேல்நோக்கிச் செல்லும் வாயு (உதாவர்த்தம்) முற்றின ஜல தோஷம், இருமல், நீரழிவு, தொண்டைக்கட்டு இவற்றைப் போக் கும். 265

நெல் பொரியினால் தயார் செய்த தின்பண்டங்கள் பெரும் பாலும், கரைக்கக்கூடிய தன்மை வாய்ந்தவை.

எண்ணெய்ப்பசையற்றிருப்பதால் உடலுக்கு புஷ்டியைத் தரு பவை. உணவைத் தகைக்கச் செய்யும் தன்மை பெற்றிருப்பதால் எளிதில் சீரணமாகக்கூடியவை. 266

முளையுள்ள மற்ற தானியங்கள், கோதுமை மாவுடன் வெல் லம், சர்க்கரை, இனிப்புச் சுவையுள்ள பொருட்கள் கலந்து நெய் யில் தயார் செய்து ஜீராவில் நனைத்த தின்பண்டங்கள், வடை

கள், அரிசி மாவினால் தயாரித்த தின்பண்டங்கள், இவை எளிதில் சீரணமாகாதவை. மேலும் வலிவை அளிப்பதில் சிறந்தவை. 267

பழம், மாமிசம், வஸை, கீரைவகை, எள்ளு, தேன், இவற்றால் தயார் செய்த தின்பண்டங்கள் ஆண்மையை வளர்ப்பவை. வலிவை அளிப்பவை. குருகுணமுள்ளவை. உடலைப் பருக்கச் செய்பவை. 268

8. [1]வேசவாரம்

என்ற தின்பண்டம், குரு குணமுள்ளது. எண்ணெய்ப்பசையுடன் கூடியது. வலிவு, புஷ்டி இவற்றை அதிகரிக்கச் செய்கிறது.

பால், கரும்புச்சாறு இவற்றில் தயாரித்த தின்பண்டங்கள் குரு குணமுள்ளவை. புஷ்டியை அளிப்பவை. ஆண்மையை அதிகரிக்கக் கூடியவை. 269

வெல்லம், எள்ளு, பால், தேன், சர்க்கரை இவற்றால் செய்த தின்பண்டங்கள் ஆண்மையை வளர்ப்பதுடன் வலிவை அளிக்கும். மிக்க குருகுணம் உள்ளவை. 270

கோதுமை மாவில் நெய், எண்ணெய் இவற்றைச் சேர்த்து நெய் அல்லது எண்ணெயில் தயாரித்த பலவகையான தின்பண்டங்கள் மிக்க குருகுணமுள்ளவை. புஷ்டி, ஆண்மை இவற்றை அளிப்பதுடன் இதயத்திற்கு நன்மை தருபவை. 271

கோதுமை, அரிசி மாவினால் செய்த அப்பம் பூரி அப்பளாம், வடை போன்ற தின்பண்டங்கள் பக்குவம் செய்வதினால் எளிதில் சீரணமாகக்கூடியவை. இவற்றை நன்கு அறிந்து இந்தப் பொருட்களை மருத்துவர் கையாள வேண்டும். 272

வறுக்காத அவல் எளிதில் சீரணமாகாது. ஆகையால் வறுத்து சிறிதளவே உண்ணவேண்டும்.

---

1. வேசவாரம் — எலும்பில்லாத மாமிசத்தை வேகவைத்து அறைத்து அரிசித்திப்பிலி, சுக்கு, மிளகு, வெல்லம், நெய் இவற்றுடன் கலந்து தயாரிக்கும் தின்பண்டம்.

2. குருகுணம் — எளிதில் சீரணமாகாதது.

யவதானியத்தில் தயாரிக்கப்பட்ட அவல் குடலில் தகைக்கச் செய்து சீரணத்தை உண்டுபண்ணுகிறது. யவதானியத்தில் தயாரித்த வறுக்காத அவல் மலத்தை இளக்கும். 273

பயத்தம் பருப்பு போன்ற பருப்புப் பொருட்களால் தயாரிக்கப்பட்ட தின்பண்டங்கள் வாதத்தை வளர்க்கும், வறட்சியையும், குளிர்ச்சியையும் அளிக்கக்கூடியவை. அவற்றை உவர்ப்புச்சுவை உள்ள பொருட்கள், எண்ணெய், உப்பு இவற்றுடன் சேர்த்துக் குறைந்த அளவில் உண்ண வேண்டும். 274

இளஞ்சூட்டினால் தயாரிக்கப்பட்டதும், பெரிதாகவும், கடினமாகவும் உள்ள தின்பண்டங்கள் எளிதில் சீரணமாகாதவை. காந்திப்போன தின்பண்டங்கள் புஷ்டியையும், வலிவையும் அளிப்பவை. 275

எளிதில் சீரணமாகக்கூடிய தின்பண்டங்கள், சீரணமாகாத தின்பண்டங்கள் எனப் பாகுபாட்டைப் பொருட்களின் சேர்க்கை, பக்குவம், அளவு இவற்றைக் கொண்டு தெரிந்துகொள்ள வேண்டும். 276

பக்குவம் செய்ததும், செய்யாததும், பிசுபிசுப்புள்ளதும், வறுக்கப்பட்டதுமான பலவகைப் பொருட்களால் தயாரித்த தின்பண்டத்திற்கு விமர்தகம் எனப்பெயர். இது குருகுணமுள்ளது. இதயத்திற்கு நலனளிப்பது. ஆண்மையை வளர்க்கக்கூடியது. வலிவுள்ளவர்களுக்குச் சிறந்தது. 277

பாலேடு உடலைப் பருக்கச் செய்து ஆண்மையை வளர்த்து, எண்ணெய்ப் பசையைத் தோற்றுவித்து, உணவிற்குச் சுவையூட்டக் கூடியது.

வெல்லத்துடன் கலந்த தயிர் உடலுக்கு எண்ணெய்ப் பசையை உண்டாக்கும். புஷ்டியை அளிக்கும். இதயத்திற்கு நன்மை பயக்கும். வாத தோஷத்தைப் போக்கும். 278

### 9. பானகத்தின் குணங்கள்

திராக்ஷை, பேரிச்சங்காய், இலந்தை, சிற்றீச்சை, தேன், கரும்பு இவற்றால் தயாரித்த பொருட்கள், இவற்றால் தயாரிக்கப்பட்ட பானகம், எளிதில் சீரணமாகாதவை, குடலைத் தகைக்கச் செய்து சீரணத்தை ஏற்படுத்தக் கூடியவை. 279

இந்தப் பானக வகைகளின் குணம், செயல் இவற்றை அவற்றுடன் சேர்க்கப்படும், கார்ப்பு(கடு)புளிப்புச் சுவையுள்ள பொருட்களின் சேர்க்கை, அளவு, குணம் இவற்றைக் கொண்டு அறிந்து கொள்ள வேண்டும். 280

### 10. ராக ஷாடவம் என்ற பானக வகை

இவை கார்ப்பு (கடு), புளிப்பு, இனிப்பு, உப்புச்சுவை கொண்டவை. லகு குணம் உள்ளவை. வாய்க்குச் சுவையளிப்பவை இதயத்திற்கு நன்மை பயப்பவை. சடராக்னியைத் தூண்டுவதுடன் உணவிற்குச் சுவையூட்டுபவை. 281

### 11. மாங்காய், நெல்லிக்காய் சட்டினி

இவை எண்ணெய்ப் பசையுடன் இனிப்புச்சுவை, குருகுணம் இவற்றுடன் கூடி உடலைப் பருக்கச் செய்கின்றன. வலிவை அளிக்கின்றன. உணவிற்குச் சுவை ஊட்டி, புஷ்டியைத் தருகின்றன. 282

இந்தச் சட்டினியின் குணம், செயல் இவற்றை இத்துடன் சேர்க்கப்படும் பொருட்களின் சேர்க்கை, பக்குவம், அளவு இவற்றைக் கொண்டு அறிய வேண்டும். 283

### 12. புளிப்புக்காடியின் குணம் ([1]சுக்தம்)

இது இரத்த பித்தம், கபம் இவற்றைக் கிளறிவிடக் கூடியது. வாதத்தை நேராகச் செய்கிறது.

கிழங்கு, வேர், பழம் இவற்றை இந்தக் காடியுடன் சேர்த்தால் ஆஸுதம் எனப்பெயர் பெறுகிறது. அதன் குணமும், புளிப்புக்காடியைப் போன்றதேயாகும். 284

[2]ஆஸுதம், [3]கிண்டாகி, [4]காலாமிலம் என்ற காடி வகை உணவுக்குச் சுவையூட்டுபவை. லகுகுணமுள்ளவை.

க்ருதான்னவர்க்கம் என்ற பதினோராவது வர்க்கம் முடிவுற்றது.

---

1. சுக்தம் எனும் காடி — மோர்த் தெளிவு போன்றவற்றை மண் பாண்டத்திலிட்டு அதில் வெல்லம், தேன், காடி இவற்றைச் சேர்த்து மூன்று நாட்கள் நெற்குவியலில் புதைத்து வைக்கப்படும் பொருள் சுக்தம் எனப்படும். இதற்கு சுக்ரம் என்ற பெயரும் உண்டு.
2. ஆஸுதம் — சுக்தம் என்ற காடியுடன் கிழங்கு, வேர், பழம் இவற்றை அதிக அளவில் சேர்த்து முன்போல் சேகரிப்பது.
3. சிண்டாகி — வேர், கிழங்கு, நீர் இவற்றுடன் கடுகைச் சேர்த்துத் தயாரிப்பது அல்லது கடுகுச் சாற்றில் சம்பா அரிசி, அறுபதாம் குருவை அரிசி இவற்றைச் சேர்த்துத் தயாரிக்கப்படும் காடி.
4. காலாமிலம் — வெகுகாலம் பூமியில் புதைத்து வைக்கப்பட்ட ஒருவகைக் காடி.

## 12. உணவிற்சேர்த்து பயன்படும் பொருட்கள்

### 1. எள் எண்ணெயின் பொதுவான குணங்கள்

இதன் துணைச் சுவை கார்ப்பு, இனிப்பு (ஸூக்ஷ்மம்) உஷ்ண வீர்யம் உடையது. உடல் முழுவதும் பரவியபின் சீர்ணமாகக் கூடியது. உடலில் உள்ள மிக்க நுட்பமான துவாரங்களிலும் ஊடுருவிச் செல்லக்கூடியது. பித்தத்தை வளர்ப்பது. மலத்தையும் சிறுநீரையும் கட்டக் கூடியது. கபத்தை வளர்க்காது. வாதத்தைப் போக்கும். மருந்துகளில் மிகச் சிறந்தது. வலிவை அளிப்பது. தோலுக்கு நல்லது. அறிவு, சடராக்னி இவற்றை வளர்ப்பது. எள் எண்ணெய் மற்ற பொருட்களுடன் சேர்ந்து பக்குவம் செய்யப் படுவதனால் எல்லா நோய்களையும் போக்கவல்லது. 285—287

முற்காலத்தில் எள் எண்ணெயைப் பயன்படுத்தி உபயோகித்த தனால் அசுரத் தலைவர்கள் முதுமையும், நோயும் அற்று உழைப் பினால் தோன்றும் களைப்பைப் போக்கிக் கொண்டார்கள். போரில் மிகுந்த பலசாலியாகவும் திகழ்ந்தார்கள். 288

### 2. ஆமணக்கு எண்ணெயின் குணம்

இது இனிப்புச் சுவையுடையது. குருகுணம் உள்ளது. கபத்தை வளர்த்து, வாதரத்தம், குன்மம், இதயநோய், நாட்பட்ட காய்ச் சல் இவற்றைப் போக்குவதில் சிறந்தது. 289

### 3. கடுகு எண்ணெய்

கார்ப்புச்சுவை (கடு) உஷ்ண வீர்யமுடையது. ரத்தத்தை யும், பித்தத்தையும் கெடுக்கும். கபம், விந்து, வாதம் இவற்றை நீக்கும். தினவு, கொப்புளம் இவற்றைப் போக்கவல்லது. 290

### 4. முரள விதையின் எண்ணெய்

இது இனிப்புச் சுவையுடையது. குரு குணம் பெற்றது. கபத்தை வளர்க்கும். அதிகச் சூட்டைத் தோற்றுவிக்காததனால் வாதம்—பித்தம் என்ற இரண்டு தோஷங்களின் சேர்க்கையினால் ஏற்படும் நோய்க்குச் சிறந்தது. 291

### 5. ஆளிவிதை எண்ணெய்

இனிப்பு, புளிப்புச் சுவை உள்ளது. விபாகத்தில் கார்ப்புச் சுவை (கடு)யாக மாறுகிறது. உஷ்ணவீர்யமுள்ளது. வாத தோஷத் திற்குச் சிறந்தது. இரத்த—பித்தத்தைச் சீற்றமடையச் செய்யும். 292

### 6. குசும்ப எண்ணெய்

இது உஷ்ண வீர்யமுள்ளது. விபாகத்தில் கார்ப்பு (கடு)ச் சுவையாக மாறுகிறது. குருகுணமுள்ளது. எரிச்சலை உண்டு பண்ணக் கூடியது. குறிப்பாக எல்லா வகை தோஷங்களையும் சீற்றமடையச் செய்யும். 293

### 7. இங்கு கூறப்பட்டாத எண்ணெய்களின் குணச் சுருக்கம்

உணவுக்குப் பயன்படக்கூடிய மேற்கூறிய எண்ணெய்களைத் தவிர்த்து மற்ற கனிகளிலிருந்து கிடைக்கக்கூடிய எண்ணெய்கள், அந்தந்தப் பழங்களின் குணம், செயல் இவற்றிற்கு ஏற்றவாறு குணத்தையும் செயலையும் பெறுகின்றன. 294

### 8. [1]வஸை, [2]மஜ்ஜை இவற்றின் குணங்கள்

இனிப்புச் சுவையுடையவை. உடலைப் பருக்கச் செய்பவை. ஆண்மையை அளிப்பதுடன் வலிவையும் கொடுப்பவை. இவற்றின் சீதவீர்யம், உஷ்ண வீர்யம் இரண்டும் அந்தந்தப் பிராணிகளின் உடலமைப்பைச் சார்ந்தவை. 295

### 9. சுக்கின் குணம்

சிறிதளவு எண்ணெய்ப் பசையுள்ளது. சடராக்னியைத் தூண்டுவதுடன் ஆண்மையை வளர்க்கும். உஷ்ண வீர்யமுள்ளது. வாத—கபத்தைப் போக்கும். விபாகத்தில் இனிப்புச்சுவையாக மாறுகிறது. இதயத்திற்கு நன்மை பயப்பது. உணவிற்குச் சுவையூட்டக் கூடியது. 296

### 10. அரிசித்திப்பிலியின் குணம்

உலராத அரிசித்திப்பிலி இனிப்புச்சுவை, குருகுணம், எண்ணெய்ப்பசை இவற்றையுடையது.

உலர்ந்த அரிசித்திப்பிலி கப—வாதத்தைப் போக்கும். கார்ப்புச் சுவை (கடு)யுள்ளது. உஷ்ண வீர்யமும், ஆண்மையை வளர்க்கும் தன்மையும் கொண்டது. 297

### 11. மிளகின் குணம்

இது மிக்க உஷ்ணப் பொருளல்ல. ஆண்மையை வளர்க்காது. இலகு குணமுள்ளது. உணவிற்குச் சுவையளிப்பது. பிளக்கும் தன்மையும் உலர்த்தும் தன்மையும் பெற்றிருப்பதால் சடராக்னியைத் தூண்டிவிட்டு கப—வாதத்தைப் போக்கும். 298

---

1. வஸை — சுத்தமான மாமிசத்திலிருந்து எடுக்கப்படும் ரஸம்
2. மஜ்ஜை — எலும்புக்குள் இருக்கும் சோறு.

## 12. பெருங்காயத்தின் குணம்

இது வாதம், கபம் இவற்றால் தோன்றும் மலச்சட்டை நீக்கும். கார்ப்புச்சுவையுடையது. உஷ்ண வீர்யமுள்ளது. சடராக்னியைத் தூண்டி விடுவதுடன் இலகு குணமுடையது. வயிற்று நோயைத் தணிக்கும். சீரணத்தை ஏற்படுத்தி உணவிற்கு சுவையூட்டும். 299

## 13. இந்துப்பின் குணம்

இது உணவிற்குச் சுவையளிப்பது. சடராக்னியைத் தூண்ட வல்லது. ஆண்மையை வளர்ப்பது. கண்களுக்குச் சிறந்தது. எரிச்சலைத் தோற்றுவிக்காது. மூவகை தோஷங்களையும் போக்கும். சிறிதளவு இனிப்புச்சுவையுடையது. உப்புகளுள் சிறந்தது. 300

## 14. ஸௌவர்ச்சலம் என்ற உப்பு

நுட்பத்தன்மை, உஷ்ணவீரியம், இலகு குணம், நறுமணம் இவற்றைப் பெற்றிருப்பதால் இது உணவிற்குச் சுவை அளிக்கிறது. மலக்கட்டை நீக்கும். இதயத்திற்கு நன்மையளித்து ஏப்பத்தைத் தூய்மைப்படுத்தும். 301

## 15. பிடம் என்ற உப்பு

தீக்ஷ்ணகுணம், உஷ்ணவீர்யம், [1]வ்யவாயி இக்குணங்களைப் பெற்றிருப்பதால் சடராக்னியைத் தூண்டுவதுடன், வயிற்று வலியைப் போக்கும். மேல்நோக்கியும் கீழ்நோக்கியும் செல்லும் வாதத்தை நேர்மையாகச் செலுத்தும். 302

## 16. ஔத்பிதம் என்ற உப்பு

சுவையில் கைப்பு, கார்ப்பு (கடு), க்ஷாரம், தீக்ஷ்ணம் என்ற சுவைகளுடன் கூடியது. உடலைத் தளரச் செய்கிறது.

## 17. கறுப்பு உப்பு

இது மணமற்றது. ஸௌவர்ச்சலம் என்ற உப்புக்கு உள்ள குணங்கள் யாவும் இதற்கும் உண்டு. 303

**18. கடல்உப்பு** இது சிறிதளவு இனிப்புச் சுவையுடையது.

---

1. வ்யவாயி – முதலில் உடல் முழுவதும் பரவி, பிறகு எது சீரணமாகிறதோ அது வ்யவாயி எனப்படும். அபினி, கஞ்சா போன்றவை.

## 19. பாம்சுஜம் (கீழ்க்கடலில் உண்டாகும் உப்பு)

இது சுவையில் கார்ப்பு (கடு)த்தன்மை கொண்டது. பொதுவாக எல்லாவகை உப்புகளும் உணவிற்குச் சுவையூட்டி, உணவை சீரணிக்கச் செய்து, தோஷங்களை வெளிப்படுத்தி வாதத்தைத் தணியச் செய்யும். 304

## 20. யவ க்ஷாரத்தின் குணங்கள்

இது இதயநோய், பாண்டு (சோகை), க்ரகிணி, மண்ணீரலில் தோன்றும் நோய், வயிற்று உப்புசம், தொண்டைப் பிடிப்பு, இருமல், கபதோஷத்தினால் தோன்றும் மூலநோய்கள் இவற்றைப் போக்கும். 305

## 21. எல்லா வகை க்ஷாரங்களின் குணங்கள்

இவை தீக்ஷ்ணகுணம், உஷ்ண வீர்யம், இலகு குணம்இவற்றை யுடையவை. வறட்சியையும், குழகுழப்பையும் உண்டாக்கி, உணவைச் சீரணிக்கச் செய்து, பிளக்கும் தன்மை கொண்டு, எரிச்சலைத் தோற்றுவித்து, சடராக்னியைத் தூண்டிவிட்டு, உடைக்கும் தன்மையுடன் நெருப்புக்குள்ள குணங்களைக்கொண்டு விளங்குகின்றன. 306

சதகுப்பை, கருஞ்சீரகம் (காரவீ), ஓமம் (குஞ்சிகா) குரோசானி ஓமம், தனியா, நேபாள தனியா இவை யாவும் உணவிற்குச் சுவை ஊட்டக்கூடியவை. சடராக்னியைத் தூண்டுபவை. வாதம், கபம், கெட்ட நாற்றம் இவற்றைப் போக்கக்கூடியவை. 307

உணவிற்குப் பயன்படும் பொருட்கள் இவை என்று உறுதியாகக் கூறமுடியாது.

உணவில் சேர்ந்து பயன்படும் பொருட்களைப் பற்றிய
பன்னிரண்டாவது பிரிவு முற்றும். 308

ஊகைமுள் உள்ள தானியங்கள், பருப்பு தானியங்கள் இவை ஓராண்டுக்குப்பின் சிறந்ததாகக் கருதப்படுகின்றன. பொதுவாக நாட்பட்ட தானியங்கள் வறட்சித் தன்மையுடையவை.

பெரும்பாலும் புதிதான தானியங்கள் குரு குணமுள்ளவை. 309

வெகுவிரைவில் விளையக்கூடிய தானியங்கள் யாவும் மிக்க இலகு குணமுள்ளவை. தோல் நீக்கி வறுத்த பருப்பு வகைகள் இலகு குணமுள்ளவை. விரைவில் சீரணத்தை உண்டாக்குகின்றன. 310

## 22. புசிக்கத்தகாத புலால் வகை

தானாக இறந்ததும், இளைத்ததும், அதிகக் கொழுப்புள்ளதும், வயது முதிர்ந்ததும், இளமையானதும், அம்பு முதலியவற்றில் தோய்ந்த நஞ்சினால் இறந்ததும், கண்ணிற்குத் தெரியாமல் இறந்ததும், பாம்பு முதலிய கொடிய பிராணிகளால் கொல்லப்பட்டதுமான பிராணிகளின் புலாலை உண்ணக்கூடாது. இவையல்லாத மற்ற பிராணிகளுடைய புலால் உடலுக்கு நன்மையை அளிக்கும். உடலைப் பருக்கச் செய்யும். வலிவை அளிக்கும். 311

## 23. புலால் ரசத்தின் குணங்கள்

இது எல்லாப் பிராணிகளுக்கும் இன்பம் தரத்தக்கது. இதயத்திற்கு மிகச்சிறந்தது.

உலர்ந்த உடலுள்ளவர்கள் பிணி, நீங்கியவர்கள் இயற்கையிலேயே இளைத்தவர்கள், ஆண்மை குறைந்தவர்கள், வலிவு நிறம் இவற்றை விரும்புகிறவர்கள் என இவர்களுக்கு புலால் ரசம் அமுதத்திற்கு ஒப்பானது. 312–313

நோய்க்குத் தக்கவாறு அருந்திய புலாலின் ரசம் நோயைத் தணிக்கச் செய்யும். மேலும் மாமிசரசம், குரலுக்கு நல்லது. வலிவை அளிக்கும். வயது, அறிவு, புலன்கள், ஆயுள் இவற்றை அளிக்கவல்லது. 314

நாள்தோறும் உடற்பயிற்சி செய்கிறவர்கள், தினந்தோறும் புணருபவர்கள், அன்றாடம் கள் குடிப்பவர்கள் என இவர்கள் தினந்தோறும் மாமிச ரசத்தைப் பருகி வந்தால் நோய் அவர்களை அணுகாது. வலிவும் குறையாது. 315

## 24. தவிர்க்க வேண்டிய கீரைவகைகள்

பூச்சிகள் அரித்ததும், காற்று, வெயில் இவற்றால் ஸலிவிழந்து சுண்டியதும், உலர்ந்ததும், நாட்பட்டதும், காலமில்லாக் காலத்தில் முளைத்ததும், எண்ணெய் வகையில் தயாரிக்கப்படாததும், வேகவைத்த நீர் வடிகட்டாததுமான கீரை வகைகளை உண்ணக்கூடாது. 316

## 25. பயன்படுத்தக்கூடாத பழங்கள்

நாட்பட்டதும், பழுக்காததும், வம்பலானதும், புழுக்கள் நிறைந்ததும், விஷமுள்ள பிராணிகள் தின்றதும், பனி, வெயில் இவற்றால் வீணானதும், தகாத கால தேசத்தில் உண்டானதும், அழுகியதும் ஆன பழவகைகளை உண்ணக்கூடாது. 317

கீரை வகைகளில் உண்ணக் கூடாதவற்றைப்போல பச்சைக் கறிகாய்களிலும் அவ்விதமானவைகளை புசிக்கக்கூடாது. கீரை வகைகளுக்குக் கூறப்பட்ட பக்குவமுறை கறிகாய்களுக்குப் பொருந்தாது.

மது, நீர், பால், தயிர் இவற்றைப் பயன்படுத்துதல் விலக்கம் இவற்றைப்பற்றி அந்தந்தப் பிரிவில் (வர்க்கம்) முடிவு செய்யப்பட்டது. 318

## 26. அருந்தும் துணைக்குடி நீர்ப் பொருட்கள்

உணவிற்குப்பின் துணைக் குடிநீர் பொருட்களாகப் பயன்படுத்துபவை உண்ணும் பொருட்களுக்கு எதிரிடையான குணமும் தாதுக்களுக்கு எதிரிடையில்லாத குணமும் கொண்டு இருக்க வேண்டும். 319

எண்பத்து நான்கு வகையான [1]ஆஸவங்கள் ஸூத்ரஸ்தானம் இருபத்தைந்தாவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன.

பருகத் தகுந்த, பருகத்தகாத நீரின் விளக்கமும் அளிக்கப்பட்டுள்ளது. அதை நன்கு ஆராய்ந்து நன்மை பயக்கக் கூடியவற்றைத் துணைக் குடிநீர் பொருட்களாக தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். 320

வாதத்திற்கு எண்ணெய்ப் பசை, உஷ்ண வீர்யம் உள்ள துணைக் குடிநீர் பொருட்களையும்,

பித்தத்திற்கு இனிப்புச்சுவை, சீதவீர்யமுள்ள துணைக் குடிநீர்ப் பொருளையும்,

கபத்திற்கு வறட்சித் தன்மை, உஷ்ண வீர்யமுள்ள துணைக் குடிநீர்ப் பொருட்களையும் பயன்படுத்த வேண்டும்.

உடலுருக்கி நோய்க்கு மாமிச ரசத்தைத் துணைக் குடிநீர்ப் பொருளாகப் பயன்படுத்துவது சிறந்தது. 321

பட்டினி, களைப்பு, வழிநடத்தல், சோர்வு, அதிகம் உரையாற்றுதல், அதிகப் புணர்ச்சி, காற்று, வெயில், உழைப்பு இவற்றால் வாட்டம் உற்றவர்களுக்கு பாலைத் துணைக்குடிநீர்ப் பொருளாகப் பயன்படுத்துவது அமுதத்திற்கு ஒப்பானது. 322

---

1. ஆஸவம் – மருந்துப் பொருட்களையும், நீரையும் காய்ச்சாமல், மருந்துப் பொருட்களை நீரில் அப்படியே சேர்த்துப் பக்குவம் செய்யப்படும் திரவம் ஆஸவம் எனப்படும்.

இளைத்தவர்களுக்கு வலுவூட்ட, கள் சிறந்த துணைப்பொருளாகும்.

பருமன் உள்ளவர் இளைப்பதற்காகத் தேனும் நீரும் கலந்து பருகுவது துணைப்பொருளாகும். 323

சடராக்னி குறைந்தவர்கள், உறக்கமற்றவர்கள், சோம்பேறித்தனம், வருத்தம், அச்சம், களைப்பு இவற்றால் வாடியவர்கள், கள், மாமிசம் புசிக்கும் பழக்கமுள்ளவர்கள் என இவர்களுக்கு மது துணைப்பொருளாகக் கொடுப்பது சிறந்தது. 324

## 27. துணைக்குடிநீர்ப் பொருட்களினால் ஏற்படும் பயன் (துணைக்குடிநீர்ப் பொருள்=அனுபானம்)

திருப்தி, மகிழ்ச்சி, உற்சாகம், பருக்கச் செய்தல், போதும் என்ற மனப்பான்மை, உண்ட உணவை உணவுப் பையிலிருந்து எளிதாகக் கீழே எடுத்துச் செல்லுதல், கெட்டிப்பட்ட உணவைத் துண்டு துண்டாக்குவது, மிருதுத்தன்மையை உண்டாக்குதல், குழகுழப்பைத் தோற்றுவித்தல், சீரணிக்கச் செய்தல், கடினமான உணவுப் பொருட்களை எளிதில் சீரணிக்கச் செய்தல், உணவை உடல் முழுவதும் விரைவில் பரவச் செய்தல் என இவை துணைக்குடிநீர்ப் பொருட்களைப் பயன்படுத்துவதால் ஏற்படும் பயன்களாகும். 325

### இதைப்பற்றிய செய்யுள்

துணைக்குடிநீர்ப் பொருளை முறைப்படி பயன்படுத்துவதனால் மனிதனுக்கு விரைவில் மகிழ்ச்சியும், நன்மையும் ஏற்படுகின்றன. எளிதில் சீரணம் ஏற்படுகிறது. ஆயுளுக்கும் வலிவுக்கும் சிறந்தது. 326

## 28. உணவுக்குப்பின் நீர் அருந்தத் தகாதவர்கள்

கழுத்துக்கு மேல்உள்ள உறுப்புகளில் வாத தோஷத்தினால் தோன்றிய நோயுடையவர்கள், விக்கல் இழுப்பு இருமல் இந் நோயுடையவர்கள், பாடகர்கள் பேச்சாளர்கள் இடைவிடாமல் படிப்பவர்கள் மார்பில் அடிபட்டவர்கள் என இவர்கள் உணவுக்குப்பின் நீர் அருந்தக்கூடாது. அப்படிப் பருகினால் அது தொண்டைக்கும் மார்புக்கும் இடையில் தங்கி உணவினால் உண்டான எண்ணெய்ப் பசையை அழித்து மறுபடியும் கெடுதலை உண்டாக்கும். 327–328

இங்கு அநேகமாகப் பழக்கத்தில் உள்ள உணவுப் பொருட்கள் பருகும் பொருட்கள் இவற்றின் ஒரு பகுதி மட்டும் விளக்கப்பட்டுள்ளது. ஏனென்றால் உலகில் உள்ள எல்லா உணவுப் பொருட்களின் பெயர்களைக் குறிப்பிடுவது முடியாத ஒன்று. 329

உலகில் உள்ள பொருட்கள் யாவும் மருந்துப் பொருட்களாகப் பயன்படுவதால் இங்கு கூறப்படாத உணவுப் பொருட்களின் குணங்கள் செயல்களைப்பற்றி ஆங்காங்குள்ள மனிதர்கள் மூலமாக அறிந்துகொள்ள வேண்டும். 330

## 29. சோதனைக்குரியவை

உண்ணுதல், பருகுதல் இவற்றைப் பற்றி விளக்கும் இவ்விடத்தில் 'தேச'மெனும் பிராணிகள் வாழுமிடம், பிராணிகளின் உடல் உறுப்புகள், இயற்கை, தாதுக்கள், செயல்கள், ஆண், பெண் என்ற பிரிவு, உருவம், செயல்முறை, பக்குவம், அளவு இவற்றைப் பற்றி ஆராய்ச்சி செய்யப்படுகிறது. 331

## 30. தேசமெனும் பிராணிகள் வாழும் இடத்தைப் பற்றிய சோதனை

நீர்ப்பாங்கான இடம் நீர் இவற்றில் தோன்றி வாழ்ந்து கெட்டியான உணவுப் பொருட்களை உண்ணும் பிராணிகளின் மாமிசம் குருகுணம் கொண்டு எளிதில் சீரணமாகாது. 332

மெல்லிய பொருட்களை உண்டு, ஆசாயத்திலும் காடுகளிலும் தோன்றி, வாழும் பிராணிகளின் மாமிசம் இலகு குணமுள்ளது. எளிதில் சீரணமாகக் கூடியது. 333

## 31. உடல் உறுப்புக்களின் சோதனை

தொடை, தலை, கழுத்து போன்றவை உடலின் உறுப்புகளாகும். தொடை, மாமிசத்தைவிட கழுத்து மாமிசம், கழுத்து மாமிசத்தைவிட மார்பு வயிறு இவற்றின் மாமிசம் அவற்றைக் காட்டிலும் தலை மாமிசம் குருகுணத்தில் சிறந்தது.

இவற்றின் மாமிசத்தைக் காட்டிலும், விதைகள், தோல், ஆண்குறி, இடுப்பு, சிறுநீரகங்கள், கல்லீரல், ஆசனவாய், உடலின் நடுப்பகுதியிலுள்ள மாமிசம், எலும்பு இவை ஒன்றுக்கொன்று மேன்மேலும் மிக்க குரு குணமுள்ளவை. 334–335

## 32. இயற்கை சோதனை

இயற்கையாகவே பயறு, காடை கௌதாரி என்ற பறவைகளின் மாமிசம் இவை இலகு குணமுள்ளவை.

உளுந்து, பன்றி எருமை இவற்றின் மாமிசம் இவை இயற்கையில் குரு குணம் உள்ளவை. 336

## 33. தாதுக்களின் சோதனை

இரத்தம், மாமிசம், மேதஸ், எலும்பு, மஜ்ஜை, விந்து இந்த தாதுக்களின் மாமிசம் ஒன்றைவிட மற்றொன்று மேன்மேலும் குருகுணமுள்ளது.

## 34. செயல்களின் சோதனை

உழைக்காத பிராணிகளின் மாமிசத்தைவிட உழைக்கும் பிராணிகளின் மாமிசம் லகு குணத்தால் சிறந்தது. 337

## 35. ஆண் - பெண் பற்றிய சோதனை

ஒரே இனத்தைச் சார்ந்த பிராணிகளில் ஆண் இனத்தின் மாமிசம் குரு குணமுள்ளது. பெண் இனத்தின் மாமிசம் இலகு குணமுள்ளது.

ஒரே இனத்தைச் சார்ந்த பிராணிகளுள் பெரிய உருவம் கொண்ட பிராணிகளின் மாமிசம் குரு குணமுள்ளது. மெலிந்த உருவமுள்ள பிராணிகளின் மாமிசம் இலகு குணமுள்ளது. 338

## 36. செய்முறை பக்குவத்தின் சோதனை

செய்முறை பக்குவத்தினால் லகுகுணமுள்ள பொருட்கள் குரு குணம் உள்ளவைகளாகவும், குருகுணமுள்ள பொருட்கள் லகு குணமுள்ள பொருட்களாகவும் மாறுகின்றன. உதாரணமாக நெல் இயற்கையாகக் குருகுணமுள்ளது. அதனால் செய்யப்பட்ட நெல் பொரி லகுகுணமுள்ளது. நெல்பொறியினால் செய்த சத்துமா லகுகுண்முள்ளதாக இருப்பினும் அந்த மாவால் செய்முறைப் படி பக்குவம் செய்த உருண்டை குருகுணமுள்ளதாக மாறுகிறது. 339

## 37. அளவின் சோதனை

இயற்கையாகக் குருகுணமுள்ள பொருட்கள் குறைந்த அளவில் உண்பதனால் லகு குணம் கொண்டதாகவும், இயற்கையாக லகு குணமுள்ள பொருட்களை அதிக அளவில் உண்பதால் குரு குண முள்ளதாகவும் அவை மாறுகின்றன. 340

இவ்விதம் பொருட்களின் லகு, குரு இக்குணங்கள் அளவிற்கு ஏற்றவாறு கூறப்பட்டுள்ளன. ஆகையால் உலகில் இயற்கையாகவோ, பக்குவத்திலாலோ குருகுணமுள்ள பொருட்களைக்

குறைவாகவும், அதேபோல் லகுகுணமுள்ள பொருட்களைக் குறைத்தும் உண்ண வேண்டும். உணவுப் பொருட்கள் யாவும் அளவைச் சார்ந்தும் அளவு சடராக்னியைப் பொருத்தும் இருக்கின்றன. 341

பலம், ஆரோக்கியம், ஆயுள், உயிர் இவை சடராக்னியைச் சார்ந்தவை. உணவு, பருகும் நீர் என்கிற விறகினால் அந்தச் சடராக்னி எரிக்கப்படுகிறது. உணவு, பருகும் நீர் என்ற விறகுகள் கிடைக்காவிடில் சடராக்னி அணைந்துவிடுகிறது. 342

வலிவு குறைந்த உடலுள்ளவர்கள், உழைக்காதவர்கள், உடல் நிலை குன்றியவர்கள், மிருதுவான உடல் அமைப்புக் கொண்டவர்கள், இன்பவாழ்வு வாழ்பவர்கள் என இவர்களைப் பற்றித்தான் குருகுணம், லகுகுணம் என்பவற்றைக் கவனிக்க வேண்டும். 343

சடராக்னி வளர்ச்சியுடையவர்கள், கடினப்பொருட்களை உண்பவர்கள், அதிக உடல் உழைப்புள்ளவர்கள், பெரும்வயிறு படைத்தவர்கள் என இவர்களுக்கு குருகுணம் லகுகுணம் என்பதைப் பற்றி கவனிக்கத் தேவையில்லை. 344

அளவு காலம் இவற்றை நன்கு ஆராய்ந்து, கவனமாக ஒவ்வொரு நாளும், நன்மை பயக்கக்கூடிய உணவு பருகும் நீர் என்ற ஸமித்துக்களால் சடராக்னியில் ஹோமம் செய்ய வேண்டும். 345

சடராக்னியில் தினந்தோறும் நன்மை பயக்கும் உணவுப் பொருட்களால் ஹோமம் செய்கிறவன் (அதாவது உணவு உட்கொள்பவன்) ஒவ்வொரு நாளும் பிரும்மதேவனைக் குறித்து ஜபம் செய்தவனாகவும் தானம் செய்தவனாகவும் ஆகிறான்.

இவ்விதம் நன்மை தரக்கூடிய வழியைப் பின்பற்றுகிறவர்கள், உணவுப் பொருட்கள் ஒத்துக் கொள்வதை அறிந்தவர்கள் என இவர்களை முன்பிறவியின் பாவச் செயல் இருந்தாலன்று ஒருவிதமான நோயும் அண்டாது. 346–347

புலனடக்கத்துடன் நன்மை பயக்கும் இதமான உணவு உண்பவர்கள், இவர்கள் சான்றோர்களால் புகழப்பட்டு நோயற்றவர்களாக முப்பத்தாறு ஆயிரம் நாட்கள் அதாவது நூறு ஆண்டுகள் வரை வாழ்ந்திருக்கிறார்கள். 348

## 38. உணவின் புகழ்ச்சி

உயிரினங்களுக்கு உணவு உயிர் போன்றது. ஆகையினால் லகம் உணவை நோக்கி ஓடுகிறது. நிறம், தெளிவு, இனிமை

டான குரல், வாழ்க்கை, சமயோசித அறிவு, இன்பம், மகிழ்ச்சி, வலிவு, நினைவாற்றல் இவை எல்லாம் உணவில்தான் நிலைத்து நிற்கின்றன.

இவ்வுலக வாழ்க்கைக்கும், சுவர்க்கத்திற்கும், வீடுபேறு அடைவதற்கும் தேவையானவை உணவையே சார்ந்திருக்கின்றன. 349–350

**முடிவுரை**

இந்த அன்னபானவிதி என்ற அத்தியாயத்தில் முறையே, உணவு, பருகும் நீர் இவற்றின் குணங்கள், முக்கியப் பொருட்களான பன்னிரண்டு பொருட்களின் வர்க்கங்கள் (பிரிவுகள்) குணங்களுடன் கூடிய துணைப் பொருட்கள், குரு, லகு குணங்களின் சுருக்கம், குறிப்பாக சோதனைக்குரிய இடம், உறுப்புகள் போன்றவற்றின் விளக்கம் கூறப்பட்டுள்ளன. 351-352

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
ஸூத்ரஸ்தானத்தில் அன்னபான விதி எனும்
இருபத்தேழாவது அத்தியாயம்
முற்றும்

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

## *விவித அசித பீதீயம்

ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி 'விவித அசித பீதியம்' எனும் அத்தியாயத்தை விவரித்து உரைப்போம். (1—2)

உடலுக்கு நன்மையளிக்கும் பலவகையான உணவுப் பொருட்கள், குடிக்கும் பானம், நாக்கினால் நக்கிச் சுவைக்கும் பொருட்கள், கடித்து உண்ணும் பொருட்கள் ஆகியவை சடராக்கினியின் சூட்டினால் தக்கபடி செரித்து தக்க நேரத்தில், காலம்போல் நிலையற்ற ரசம், இரத்தம், மாமிசம் முதலியவை ஆகி நிறைவுள்ள தாதுக்களாக ஆகின்றன. இதனால் உடலின் நிறைவுள்ள தாதுக்கள் வாயு, சூடு இவை உலவும் துவாரங்களைத் தடைப்படுத்தாமல் உடலுக்கு வலிமை, நிறம், இன்பம், வளர்ச்சி இவற்றை உண்டுபண்ணி ஆயுளையும் வளர்க்கின்றன. உணவால் வலிமையடைந்த தாதுக்கள் தாதுக்களின் உருவங்களைப் பெறுகின்றன. தம்தம் இயல்புக்கு ஏற்ப தம் உணவினை ஏற்று இயல்புக்கு ஏற்றவாறு உடலுக்கு ஆரோக்கியத்தை உண்டாக்குகின்றன. (3)

உண்ட உணவு செரித்தபிறகு அது இரண்டாகப் பிரிகிறது. அதன் சிறந்த ஸாரமான பகுதி ரஸம் என்று வழங்கப்படுகிறது. எஞ்சியுள்ள மற்றொரு பகுதி மலம் என்று கூறப்படும். அந்த மலத்திலிருந்து சிறுநீர், வியர்வை, மலம், வாதம், பித்தம், கபம் ஆகியவை உண்டாகின்றன. தவிர காது, கண், வாய், மயிர்க்கால்கள் ஆகியவற்றின் மலங்களும், தலைமுடி, மீசை, உடல் ரோமம், நகம் ஆகியவையும் அந்த மலத்தின் கூறுகளிலிருந்தே வளர்ச்சியடைகின்றன.

---

*விவித அசித பீதீயம் — பலவகையான உணவு வகைகள், பானம், நக்கித் தின்பவை, கடித்துத் தின்பவை முதலியவற்றால் தோன்றும் நோய்களைப் பற்றியும், சிகிச்சை முறைகளையும் கூறுவதால் இவ்வாறு பெயர் பெற்றது. அசிதம் — உணவு.

## 1. உணவின் சிறப்பு

உணவின் சிறந்த பகுதியாக ரஸம் உடலை வளர்ச்சியடையச் செய்கிறது. அந்த ரஸத்தால் இரத்தம், மாமிசம், கொழுப்பு, எலும்பு, எலும்புச்சோறு, விந்து, ஓஜஸ் என்னும் காந்தி ஆகியவை தோன்றி ஐந்து அறிவுப்புலன்களின் வளர்ச்சிக்கும் மூலப் பொருள்கள், தாதுக்களில் வலிமை, உடலின் மூட்டுக்களின் கட்டமைப்பு எண்ணெய்ப்பசை, உறுதி ஆகியவையும் உண்டாகின்றன. இந்த நிறைவுள்ள தாதுக்கள் இரண்டாகப் பகுக்கப்படுகின்றன. ஒன்று ப்ரஸாதம் எனும் பெயருள்ளவை, மற்றொன்று மலம் என்னும் பெயருள்ளவை. இவை இரண்டும் ஸாரமாகிய ரஸத்தாலும், உடலைக் காக்கும் மலங்களாலும் வளர்ச்சி அடைந்து தம் அளவுப்படி செயல்படுகின்றன.

வயது உடல் இவற்றிற்கு ஏற்ப ரஸம் மலம் ஆகிய இரண்டும் தம்தம் அளவைகளில் இருந்து தம் இருப்பிடமாகிய உடலின் பல வகையான தாதுக்களை சமநிலைப்படுத்தி உடலைக் காக்கின்றன. இவ்வாறு சிறப்புக் காரணங்களால் ப்ரஸாதம் எனப்படும் ரஸம், உணவின் காரணமாகத் தோன்றும் வளர்ச்சி, வாட்டம் இவற்றை சமநிலைப் படுத்துகின்றது. இந்த ரஸமே மக்களின் ஆரோக்கிய வாழ்வுக்குக் காரணமாகும். ரஸம் தாதுக்களை சமநிலைப்படுத்துவது போல மலமும் மலங்களை (கழிவுகளை) சமநிலைப்படுத்துகிறது. சரியான அளவுப்படி வெளியாகும் மலம் (வாதம், பித்தம், கபம்)கூட சூடு, குளிர்ச்சி முதலிய குணங்களால் மாற்றங்களடைந்து தாதுக்களையும் சமநிலையில் உள்ளனவாக ஆக்குகின்றன. அல்லது தம் அளவுப்படி மிகுதியாகவோ குறைவாகவோ ஆகி சூடு, குளிர்ச்சிப் பொருட்களால் சிகிச்சை செய்யப்பட்டு தாம் சமநிலை அடைந்து தாதுக்களையும் சமநிலைப்படுத்துகின்றன. (4)

இந்த மலம், ப்ரஸாதம் எனும் பெயருள்ள தாதுக்களின் இருப்பிடம், வழி ஆகியவை. தமக்கு உதவியாகவுள்ள தாதுக்களின் வழியாக நிறைவையும் வளர்ச்சியையும் அடைகின்றன. இப்படியே உடலும் உணவு, பானங்கள், நாக்கினால் நக்கிச் சுவைப்பவை, கடித்துத் தின்பவை ஆகிய பொருள்களின் வழியாக வளர்ச்சியடைகின்றது. உடலில் நோய்களும் தகாத உணவு, பானம் முதலிய உணவுப்பொருள்களினால்தான் தோன்றுகின்றன. அவ்வாறே பொருத்தமான உணவுப்பொருள்களை உண்பதால் ஆரோக்கியமும், பொருத்தமில்லா உணவுப் பொருள்களை உண்பதால் ஆரோக்கியக் குறைவும் உண்டாகின்றன. (5)

## 2. அக்னிவேசரின் வினா

இவ்வாறு கூறிய ஆத்ரேயரைப்பார்த்து அக்னிவேசர் கூறினார் ''மதிப்பிற்குரிய அய்யா, உடலுக்கு நன்மை தரக்கூடிய நல்ல உணவுப்பொருள்களை உபயோகிக்கும் மக்களும் நோயினால் துன்புறுகிறவர்களாக உள்ளனர். நோயற்றவர்களாகவும் உள்ளனர். அதுபோல உடலுக்கு நன்மையளிக்காத உணவுப் பொருள்களை உட்கொள்பவர் நோயில்லாதவர்களாகவும் பலம் பொருந்தியவர்களாகவும் உள்ளனர். நோயுற்றவர்களாகவும் உள்ளனர். என்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். ஆகையால் நன்மை தீமை பயக்கவல்ல உணவுப் பொருள்களைப் பயன்படுத்துவதால் நன்மைதீமை விளையும் என்பதை எங்ஙனம் உணர இயலும்? கருணை கூர்ந்து விளக்குங்கள்'' என்று கேட்டார்.

## 3. புனர்வசு ஆத்ரேயரின் மறுமொழி

அக்னிவேசா ! நன்மை பயக்கும் உணவினைப் பயன்படுத்தும் மக்களின் உடலில் உணவின் வாயிலாக வரும் நோய்கள் தோன்றுவதில்லை. உடலுக்கு நன்மை பயக்கும் உணவு என்பதால் எல்லா நோய்களையும் நீக்கிவிட இயலாது. உணவின் தூய்மையைத் தவிரப் பல காரணங்கள் அதற்கு உள்ளன. காலத்தின் கோளாறு, அறிவு மயக்கம், காலமாற்றம் தவிர பொருத்தமில்லா ஒலி, தொடு உணர்வு, உருவம், சுவை, மணம் என இவைகளால் நன்மை பயக்கும் உணவினைப் பயன்படுத்துபவர்க்கும் தீமைகள் ஏற்பட வழி உண்டாகும். அதாவது இவைகளும் உணவைப்போல் நோயின் காரணங்கள் ஆகின்றன. நன்மை பயக்கும் உணவுப் பொருள்களைப் பயன்படுத்துபவரும் நோயற்றவர்களாகக் காணப்படுவர். தீமை பயக்கும் தீய உணவுப் பொருட்களைப் பயன்படுத்துபவர்களும் அப்போது நோயுற்றவர்களாகக் காணப்படவில்லையெனில், தீமைதரத்தக்க பொருட்களின் தீயதன்மைகள் ஒரேவிதமான பலமுள்ள தோஷங்கள் அல்ல என்பதேகாரணம். எல்லாத் தோஷங்களும் சமவலிமை உடையவை என்றோ நோயைப் பொறுக்கும் ஆற்றலைக் கொண்டு ஆராய்ந்தால், உடல் எல்லாம் ஒரேவிதமான நோயைத் தாங்கும் ஆற்றல் உடையவை என்றோ கூறமுடியாது. தீமை பயக்கும் உணவு, இருக்கும் இடம், நேரம், சேர்க்கை, ஆற்றல், அளவு, இவற்றின் மிக்க சேர்க்கையால் மேலும் தீமைகள் சேர்கின்றன. அவற்றால் உடலின் தோஷங்களும் சீற்றமுறுகின்றன. அந்தத் தோஷமே பல காரணங்களால் சீற்றமடைந்து, ஒன்றுக்கொன்று பகையான சிகிச்சைகளுக்கு இலக்காகி, ஆழமாக வேர்விட்டு, உயிரின் இருப்பிடத்தைத் தாக்கி மிக்க துன்பத்தை உண்டாக்கும். விரைவில் பரவும் தன்மை உடையதாகவும் ஆகிறது.

மிகப்பருமனாகவும், மிகமெலிந்தும் உள்ளவர்களின் உடல்கள் இரத்தம், மாமிசம் எலும்பு முதலியன வலிமை குன்றி, பொருத்த மில்லா உணவின் காரணத்தால் குறைந்த உணவு மேற்கொள்ளுவ தாலும் வலிமை இழந்து ஆர்வம் குன்றி, நோய்களைப் பொறுப்ப தில் ஆற்றல் இல்லாதவைகளாகின்றன. இதற்கு மாறான உடல் நிலைகள் நோய்களைப் பொறுக்கும் ஆற்றலுள்ளவை. இவர் களுக்கே நன்மை பயக்காத உணவு தோஷமுள்ள உடல்கள் இவை களில் தனிப்பட்ட உடல்தன்மையால் நோய்களும் மென்மை யானவை கடினமானவை விரைவில் செயலாற்றவல்லவை தாமத மாகச் செயலாற்றவல்லவை என்பனவாக உண்டாகின்றன. அக்னி வேசா! வாத பித்த கபதோஷங்கள் குறிப்பிட்ட இடங்களில் சீற்றமுற்று சிற்சில நோய்களைத் தோற்றுவிக்கின்றன. (6–7)

ரஸம் முதலிய இடங்களில் சீற்றமடைந்த தோஷங்கள் எங்கு எந்த நோயை உண்டாக்குகின்றன என்பதை இனி விளக்குவோம். (8)

### 4. ரஸதோஷத்தால் உண்டாகும் நோய்கள்

ரஸம் என்னும் தாதுவின் தோஷத்தால் ஆர்வமின்மை, உணவில் விருப்பமின்மை, வாயில் சுவையின்மை, சுவையறி யாமை, ஓக்காளம், இதயப் படபடப்பு, உடல்பளு, சோம்பல், உடல்வலி, காய்ச்சல், கண் இருண்டு போதல், சோகை, வியர்வை அடைபடுதல், அலித்தன்மை, உடல் அசைவற்றிருத்தல், மெலிவு, சீரணக்குறைவு, தலைமுடி நரைத்தல், தோலில் சுருக்கம் ஆகிய நோய்கள் தோன்றும். (9–10)

### 5. இரத்த தோஷத்தால் தோன்றும் நோய்கள்

தொழு நோய், அக்கி, கட்டி, இரத்தபித்தம், இரத்தப் பெருக்கு, ஆண்குறி, ஆஸனவாய், வாய் இவற்றில் புண், மண்ணீரல் நோய், குன்மம், வித்ரதி எனும் பிளவை, நீல மச்சம், காமாலை, வங்கு, மறு, சிறுமச்சங்கள், படை, தோல் வெடிப்பு, வெண்குஷ்டம், சொரிசிரங்கு, கொப்புளம், இரத்த கொப்புளம் (வட்டமாக இருக்கும்) இவை ரத்த தோஷத்தால் உண்டாகும் நோய்கள். (11–12)

### 6. மாமிச தோஷத்தால் தோன்றும் நோய்கள்

மாமிசதோஷத்தால் மாமிச வளர்ச்சி, புரைகுழல், மூல நோய், கழுத்தைச்சுற்றி வீக்கம், உள்நாக்கு வீக்கம், மாமிசம் அழுகிப்போதல், அலஜி எனும் பிளவை, தொண்டைப்பிடிப்பு, கண்டமாலை, அடிநாக்கு வீக்கம் ஆகிய நோய்கள் ஏற்படும்.

### 7. கொழுப்பு தோஷத்தால் ஏற்படும் நோய்கள்

மாமிசதோஷத்தால் ஏற்படும் நோய்களும் நீரிழிவு நோய் உண்டாகும் முற்குறிகளும் உண்டாவதோடு கொழுப்பு தோஷத்தால் ஏற்படும் நோய்கள் பற்றி ''அஷ்டௌநிந்திதீய'' அத்தியாயத்திலும் நீரிழிவு ரோகத்தின் முன்னிலையிலும் கூறப்பட்டது. *(13–14)*

### 8. எலும்பு தோஷத்தால் உண்டாகும் நோய்கள்

எலும்புத் தாதுவின் தோஷத்தால் எலும்பு மிகு வளர்ச்சி, அதிகப் பல் வளர்ச்சி, பல் உடைதல், எலும்பு முறிதல், பல்வலி' எலும்புவலி, நிறமாற்றம் ஏற்படும். தலைமுடி, உடல் ரோமம் நகம், மீசை இவற்றில் பல மாற்றங்களும் ஏற்படும். *(15–16)*

### 9. எலும்புச்சோறு (மஜ்ஜை) தோஷத்தால் உண்டாகும் நோய்கள்

எலும்புச் சோறு தோஷத்தால் மூட்டுவலி, தலைசுற்றல், நினைவிழத்தல், கண்ணிருண்டு போதல், மூட்டுகளில் பருமனான வேர்களுடன் கூடிய கட்டிகள் ஆகியவை தோன்றும். *(17)*

### 10. விந்து தோஷத்தால் ஏற்படும் நோய்கள்

விந்து தோஷத்தால் அலித்தன்மை, புணர்ச்சியில் விருப்பமின்மை, மகப்பேறு இல்லாமை, அப்படி இருந்தாலும் கோயுற்ற அல்லது அலியான ஆயுள் குறைந்த பழிக்கத்தக்க உருவமைப்புடன் கூடிய மகப்பேறு,கருத்தரியாமை, கருச்சிதைவு, குறைக்கரு தோன்றுதல் ஆகியவை ஏற்படும். விந்து தோஷம் தன்னைத் துன்புறுத்துவதுடன் தன் சந்தானத்தையும் மனைவியையும் துன்புறுத்தும். *(18–19)*

### 11. சீற்றமடைந்த தாது தோஷங்களின் செயல்கள்

சீற்றமடைந்த தோஷங்கள் புலன்களை அடைந்து அவற்றின் ஆற்றலையே அழித்துவிடும்.

இந்த தோஷங்கள் சீற்றமடைந்து, நரம்பு, இரத்தக் குழாய், நாடிகள் இவற்றை அடைந்து மக்கள் உடலில் விறைப்பு, சுருக்கம், தலை கால்களைச் சுண்டி இழுத்தல், நரம்புச் சுருட்டல், துடிப்பு, மரத்துப்போதல் ஆகியவைகளைத் தோற்றுவிக்கும். *(20–21)*

இந்த தோஷங்கள் மலங்களை அடைந்து மலச்சிக்கல், மிக்க மலம் வெளிப்படுதல் ஆகிய நோய்களை உண்டுபண்ணும். *(22)*

நன்மைபயக்காத பானங்கள், நச்கிச்சுவைப்பவை, கடித்துத் தின்பவை முதலிய பலவகையான உணவு வகைகளால் மக்களின் உடல்களில் இந்த நோய்கள் தோன்றுகின்றன. (23)

தன் உடலில் தோஷங்களின் சீற்றத்தை விரும்பாதவன் நன்மை பயக்கும் உணவுவகைகளையே உட்கொள்ள வேண்டும். அத்தகைய உணவு வகைகளை உட்கொள்வதால் உணவு மூலம் தோன்றும் நோய்கள் ஒருகாலும் ஏற்படா. (24)

## 12. ரஸம் முதலிய தோஷங்களால் தோன்றும் நோய்களின் சிகிச்சை

ரஸதோஷ நோய்களுக்குப் பட்டினி போடுவதே சிறந்த சிகிச்சையாகும். இரத்ததோஷ நோய்களுக்கு 'விவித சோணிதாத்யாய'த்தில் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாண்டு இரத்த தோஷ நோய்களை வெல்ல வேண்டும். (25)

மாமிச தோஷ நோய்களுக்குச் செய்யும் வாந்திக்கும், பேதிக்கும் மருந்து கொடுத்தலாகிய வமனவிரேசன சிகிச்சை, சஸ்திர சிகிச்சை, காரப்பொருள் கொடுக்கும் சிகிச்சை சூடுபோடுதல் ஆகிய சிகிச்சைகள் நன்மை பயப்பன.

கொழுப்பு தோஷ நோய்களுக்கு 'அஷ்டௌ நிந்திதீய' அத்தியாயத்தில் சிகிச்சைகள் கூறப்பட்டன.

எலும்புதோஷ நோய்களுக்கு வாந்திக்கு பேதிக்கு மருந்தளித்தல், தலையில் எண்ணெய் தேக்குதல், எண்ணெய்க்குளி, வியர்வைச் சிகிச்சை ஆகிய ஐந்து செயல்களோடு பால், நெய், கைப்புச் சுவையுள்ள மருந்துப் பொருள்களைக் கொண்டும் வஸ்தி சிகிச்சை செய்ய வேண்டும்.

எலும்புச்சோறு விந்து தோஷங்களால் ஏற்பட்ட நோய்களுக்கு இனிமை கைப்பு மருந்துகளைக் கொண்டு சிகிச்சை செய்வதோடு நன்மை பயக்கும் உணவு, அளவான புணர்ச்சி, உடற்பயிற்சி, தக்க நேரங்களில் இரண்டு வகையான ஸம்சோதனம் ஆகியவற்றையும் பின்பற்றலாம்.

புலன்களினால் தோன்றிய நோய்களுக்கு 'த்ரிமர்மீயம்' எனும் அத்தியாயத்தில் சிகிச்சைமுறை விளக்கப்பட்டுள்ளது.

நரம்பு, இரத்தக்குழாய், நாடிகள் இவற்றின் தோஷத்தால் தோன்றிய நோய்களுக்கு 'வாதவ்யாதி சிகிச்சாத்தியாய'த்தில் கூறப்போகும் சிகிச்சை முறையைப் பின்பற்றலாம். மலத்தினால் ஏற்படும் நோய்களுக்கு, ''ந வேகான் தாரணீயாத்யாயத்தில்''

சிகிச்சைமுறைகளைக் கூறியுள்ளோம். இதுபோன்று வெவ்வேறு இடங்களில் சிகிச்சைமுறைகள் கூறப்பட்டுள்ளன. *(26—30)*

நன்மை தரத்தக்க செயல்களைச் செய்யாமை, உடற்பயிற்சியின்மை, ஒவ்வாத முறையில் உடற்பயிற்சி செய்தல், சூட்டின் கடுமை, வாயுவின் வேகம் ஆகியவற்றால் தோஷம் வயிற்றிலிருந்து சாகைகள் இதயம் முதலிய இடங்களுக்குச் சென்று வலிமை பெறும் வரை தாமதமாகச் செயல்படும். எப்போதும் அது எல்லா இடங்களிலும் சீற்றமடையாமல் காரணங்களை எதிர்பார்த்துச் சீற்றமடைந்து பல நோய்களை உண்டாக்குகின்றது. *(31—32)*

வளர்ச்சியடைந்த அந்த தோஷம் திரவமாகச் செயல்படுவதாலும் செல்லும் வழி தடையகற்றித் தூய்மைப்படுவதாலும் பல மருந்துகளை உட்கொள்வதாலும் சீற்றம் தணிந்து அது தன் கிளைகளைவிட்டு மீண்டும் மலமகன்று வயிற்றை (உடலின் நடுப் பகுதியை) அடைந்துவிடுகின்றது. *(33)*

## 13. மக்களுக்கு நல்லுரை

வாழ்க்கையின் இன்பத்தை விரும்புபவர் நோய்கள் தோன்றாமலே இருக்கவும் தோன்றிய நோய்களை நீக்கவும் சாத்திரங்களில் கூறிய முறைகளைப் பின்பற்ற வேண்டும்.

இவ்வுலகில் உயிர்வாழ் பிராணிகள் அனைத்தும் தம் நலத்திற்காகவே எல்லாச் செயல்களையும் செய்கின்றன. ஆனால் அவ்வுயிர்களில் சில நல்லவழிகளிலும் சில தீய வழிகளிலும் செல்வதற்குக் காரணம் நல்லறிவு, அறியாமை என்பனவே ஆகும். *(34—35)*

நல்லறிவு படைத்தவன் தம் பகுத்தறிவைப் பயன்படுத்தி நன்மை தரத்தக்கவற்றைக் கடைபிடிக்கிறான். ரஜோகுணம், மயக்கம் சூழ்ந்தவர் தாம் விரும்பியதைக் கடைப்பிடிக்கின்றனர்.

(இவ்வுலகில் நன்மைதரவல்லது, விரும்பப்படுவது எனும் பிரிவினால் இரண்டுவகைப் பொருள்கள் உண்டு. விரும்பப்படாவிடினும் தனக்கு நல்லதையே செய்வது நன்மை தரவல்ல பொருள் என்றும், தமக்கு நன்மை செய்யாவிடினும் மனத்திற்குப் பிடித்ததாக இருப்பது விரும்பப்படும் பொருள் என்றும் கூறப்படும்.)

நல்ல அறிவாளியான மனிதனை சாத்திரம், அறிவு, நினைவாற்றல், உறுதி, மனஞ்சலியாமை, நன்மைகளையே செய்தல், சொல்தூய்மை, புலனடக்கம், ஆண்மை, ஆகிய பண்புகள் வந்தடைகின்றன. ஆனால் ரஜோ குணம் மயக்கம் சூழ்ந்த மனிதனை

இப்பண்புகள் அடைவதில்லை. இதனால் உடலைப் பற்றியும் மனத்தைப் பற்றியும் பற்பல நோய்கள் தோன்றுகின்றன. (36–38)

அறிவு மயக்கத்தால் ஐம்புலன்களும் பொருந்தாப் பொருள் களை அடைகின்றன. சிறுநீர் மலம் முதலிய வேகங்கள் அடக்கப் படுகின்றன. தவறான சாகசச் செயல்கள் செய்யப்படுகின்றன.

தாற்காலிக இன்பம் பயப்பனவற்றையே அறிவு மயக்கமுள்ள வர் மனம் விரும்பி நாடுவர். நல்லறிவுபடைத்த நல்லோர் அவற்றை விரும்பி நாடமாட்டார்கள். (39–40)

இவ்வுடல் உணவினாலானது. ஆதலின் அறிஞன் நன்கு ஆராய்ந்து நன்மை தரத்தக்க உணவுப்பொருட்களையே ஏற்றுக் கொண்டு ஆசையாலோ அறிவு மயக்கத்தாலோ நன்மை தராத உணவுவகைகளை ஒதுக்கித்தள்ள வேண்டும். (41)

உணவு வகைகளைப்பற்றி விமானஸ்தானத்தில் கூறப்போகும் எட்டுமுறைகளைப் பின்பற்றி நடக்க வேண்டும். அவைதாம் இன்ப துன்பங்களின் அடிப்படைக்காரணங்கள். ஆதலின் உணவு உட் கொள்ளும் முன் அதனை நன்றாக ஆய்வு செய்து பயன்படுத்த வேண்டும். (42)

நல்ல பகுத்தறிவு பெற்ற மனிதன் தீமை தரத்தக்க உணவு வகைகளை அகற்றிவிட வேண்டும். சான்றோர்கள் அத்தகைய மனிதரை மிகவும் போற்றத்தக்கவராகக் கருதுவர். அவ்வாறு உணவுமுறைகளைக் கையாள்வதால் இவன் அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து முடித்தவனாவான். (43)

நல்ல உணவு உட்கொண்டும் சில வேறு காரணங்களால் நோய்கள் தோன்றித் துன்புறலாம். அது தவிர்க்க முடியாதது. ஆனால் அறிவாளி அதைப்பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. (44)

**முடிவுரை**

இதுகாறும் கூறியவற்றால், உணவினால் உடலும் நோய்களும் தோன்றுதல், உணவே, உடலுக்கும் மனத்திற்கும் நன்மை தீமை தரக்கூடியது, நன்மையினால் இன்பம், தீமையினால் துன்பம், துன்பங்களைப் பொறுக்கவல்ல உடல், பொறுக்க இயலாத உடல், தாதுக்களில் தோன்றும் பலவகை நோய்கள், சிகிச்சைமுறை, தோஷங்கள் உடலின் நடுப்பகுதியை அடைதல், கிளைகளை அடைதல், அறிஞர் அறியாதவர்களின் செயல்கள், ஆரோக்கிய முள்ளவர், நோயாளிகளுக்கு நல்லுரை ஆகியவற்றை உணர்ந் தோம். (45-48)

அக்னிவேசரால் இயற்றப்பட்டுசரகமாமுனிவரால் சோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை ஸூத்ரஸ்தானத்தில் ''விவித அசிதபீதீயம்'' எனும் இருபத்தெட்டாம் அத்தியாயம் முற்றும்.

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

## *தசப்ராணாயதநீயம்

ஆத்ரேய முனிவர் கூறியபடி தசப்ராணாயதநீயம் எனும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுவோம். (1–2)

### 1. உயிரின் இருப்பிடம்

உடலில் உயிர் தங்கியிருக்கும் இடம் பத்து. அவையாவன : நெற்றி, பொட்டுகள், தலை, இதயம், சிறுநீரகம், கழுத்து, இரத்தம், விந்து, ஓஜஸ், ஆஸனவாய் என்பன. (3)

உயிரின் இருப்பிடங்கள் பத்து, புலன்கள் இவற்றின் அறிவு, உயிர், நோய், நோய்க்காரணம் இவற்றைப்பற்றி நன்குணர்ந்த மருத்துவர் உயிர்காப்பவர் எனப்படுவார். (4)

### 2. மருத்துவரின் பிரிவு (ஆத்ரேயரின் கருத்து)

அக்னிவேசா ! சில மருத்துவர் நோயாளியின் நோய்களை அழித்து அவர்தம் உயிர்களைக் காப்பவர், சிலர் நோயாளிகளின் உயிர்களைக்கொன்று நோய்களைக் காப்பவர் என்று மருத்துவர் இரண்டு வகைப்படுவர். (5)

### 3. அக்னிவேசரின் வினா

இவ்வாறு கூறும் ஆத்ரேயரைப் பார்த்து ''அய்யா, அத்தகைய மருத்துவர்களை நாம் எவ்வாறு அறியமுடியும் ?'' என்று வினவினார் அக்னிவேசர்.

அக்னிவேசரின் வினாவிற்கு ஆத்ரேயர் பின்வருமாறு பதிலளித்தார்.

### 4. நோயையழித்து உயிர் காப்பவர்

நல்ல குலத்தில் தோன்றியவர், பட்டறிவு மிக்கவர், நூலறிவும் செயலறிவும் பெற்றவர், ஆற்றலுள்ளவர், தூய்மையும் கைராசியும் உடையவர், புலனடக்கம் பெற்றவர், எல்லாக் கருவி

---

* தசப்ராணாயதநீயம் — பத்து வகையான உயிர்களின் இருப்பிடம் பற்றி கூறப்படும் அத்தியாயமாதலின் இவ்வாறு பெயர் பெற்றது.

களையும் உடையவர், உறுதியான புலன்களைப் பெற்றவர், இயற்கையை நன்குணர்ந்தவர், தக்க நேரத்தில் செய்ய வேண்டிய வற்றை நன்குணர்ந்தவர் என இத்தகைய மருத்துவரை நோய் அழித்து உயிர் காப்பவர் என்கிறோம்.

அத்தகைய மருத்துவர் உடலைப் பற்றிய முழு அறிவும் பெற்று உடலை அழிக்கும் நோய்கள் பொருள்கள் இவைபற்றிய அறிவை யும் பெற்றவர்கள்,உடலை உண்டாக்கும் பொருள்களைப் பற்றிய அறிவு வாய்ந்தவர், இயற்கையான அறிவும் இயற்கை மாற்றங் களின் அறிவும் ஐயப்பாட்டிற்கு இடமின்றிக் கசடறக்கற்று அத னால் ஐயமகன்றுள்ளார்கள். எளிதில் தீர்க்கக்கூடியவை, கஷ்டப் பட்டு தீர்க்கக்கூடியவை, சிகிச்சைக்குப்பிறகும் தொடர்ந்திருப் பவை, தீர்க்க முடியாதவை என நான்குவித நோய்களின் கார ணம், முன்னிலை, உருவம், துன்பம், தணிதல் ஆகியவற்றின் ஆழ்ந்த புலமைபெற்று காரணம், இலக்கணம், மருந்து எனும் ஆயுர்வேத ஸூத்ரச் சுருக்கத்தையும் அதன் விரிவையும் நன்கு உணர்ந்தவர். *(1)* தைவவ்யபாச்ரயம், *(2)* யுக்திவ்யபாச்ரயம், *(3)* ஸத்வாவஜயம் எனும் மூன்று விதமாகப் பிரிந்த மருந்துக் கூட்டங்களைப் பற்றி விரிவாகக் கூறும் ஆற்றல் மிக்கவர்.முப் பத்துமூன்று வகையான வேர்கள், பழங்கள், நான்கு வகையான எண்ணெய்வகைகள், ஐந்து வகையான உப்புகள், எட்டுவகை சிறுநீர்கள், எட்டுவகைப்பால், பால் முக்கியமானமரங்கள், தோல் முக்கியமான மரங்கள் ஆறு வகைகள், சிரோவிரேசனம், ஸ்நே ஹம், ஸ்வேதம், வமனம், விரேசனம் ஆகிய ஐந்து வகையான செயல்கள், இதற்கான மருந்துக் கூட்டங்கள் இருபத்தெட்டு வகை யான கஞ்சிகள், முப்பத்திரண்டு வகையான சூரணங்கள், களிம்பு கள், அறுநூறு வகையான பேதிக்குக் கொடுத்தல், ஐந்நூறு வகையான கஷாயங்கள், உடல் ஆரோக்கியத்துக்கான உணவு, பானம், கட்டுப்பாடு, இருப்பிடம், சுற்றுதல், படுக்கை, இருக்கை, அளவு, பொருட்கள், மை வகைகள், புகைபிடித்தல், மூக்குமருந்து இடுதல் (நஸ்யம்), எண்ணெய்க்குளி, உடல்பிடித்து விடுதல், வேகங்களை அடக்குதல், அடக்காமை, உடற்பயிற்சி, புலன் பொருள் பொருத்தம், பொருட்களின் ஆய்வு, நோய் சிகிச்சை முதலிய எல்லாவகைச் செயல்களிலும் பேராற்றல் பொருந்திய வர்.

---

*(1)* தைவவ்யபாச்ரயம் – தைவத்தைச் சார்ந்தது.

*(2)* யுக்திவ்யபாச்ரயம் – பகுத்தறிவினால் அறியப்பட்ட உத்தி யைச் சார்ந்தது.

*(3)* சத்வாவஜயம் – மனத்தின் எண்ணத்தைச் சார்ந்தது.

பதினாறு உட்பிரிவுகளுடன் கூடிய நான்கு வகையான சிகிச்சை முறை, மூன்றுவகையான விருப்பங்கள், வாதங்களின் கூறுகளைப் பற்றியும் ஐயப்பாட்டிற்கு இடமின்றி நல்லறிவு பெற்று, நான்கு வகை எண்ணெய்கள், இருபத்துநான்கு வகையான எண்ணெய் களின்செயல்முறை 'உபகல்பநீய' அத்தியாயத்தில் கூறிய 64 வகை யான மருந்துப் பொருள்களை பலசுவை, பல வீரியமுள்ளவை ஆகியவற்றை நிறுவியவர்கள். பலவிதமான ஸ்நேஹவிதி எனும் எண்ணெய்க் குளிமுறை, ஒற்றடச் சிகிச்சை, வாந்திக்கு பேதிக்கு மருந்து மேற்கொள்ளல் ஆகிய முறைகளில் கைதேர்ந்தவர்.

தலைநோய் முதலிய பல்வேறு வகை நோய்கள், நோய்ச் சுருக்கம், தோஷம், தாதுக்களின் குறைவு, கட்டிகள், வித்ரதி, மூவகை வீக்கங்கள், வீக்கத்தின் பல வகைகள், நாற்பத்தெட்டு வகையான நோயின் நிலைக்களன்கள், நாற்பது வகையான பித்த நோய்கள், இருபது வகையான கபநோய்கள், எண்பது வகை யான வாதநோய்கள், மிகு பருமன், மிகு மெலிவு, உடல்களைப் படைத்தல், அவ்வாறு இருக்க காரணங்கள், இலக்கணம், சிகிச்சை முறை, உறக்கம், உறக்கமின்மை, மிகு உறக்கம் இவற்றின் நன்மை தீமைகள், காரணம், சிகிச்சை முயற்சி, பட்டினி போடு தல் முதலிய அறுவகை சிகிச்சைகள், (1) ஸந்தர்ப்பணம் (2) அப தர்ப்பணம் ஆகியவற்றால் தோன்றிய நோய்களின் இயல்பு, உருவை அழிக்கும் இரத்த நோய்கள், திமிர், நினைவாற்றல் குறைதல், நினைவிழத்தல் இவற்றின் காரணம், இலக்கணம், சிகிச்சை, உணவு மேற்கொள்வதில் கட்டுப்பாட்டுடன் கூடிய பேரறிவு, இயல்பாக நன்மை பயக்கும் உணவு, உணவால் உண் டாகும் நோய்கள், அவற்றைத் தவிர மற்ற நோய்கள் தோன்றக் காரணம், எண்பத்து நான்கு வகையான ஆஸவங்களின் பண்பு களைப்பற்றிய அறிவு, சுவை, துணைச்சுவைகளைப்பற்றிய முடிவு, அவற்றின் பிரிவுகள், தீமை விளைவிக்கும் உணவு வகைகள், உணவு, பானம் இவற்றைப்பற்றிய பன்னிரண்டு வகைகளைப் பற்றிய முடிவுகள், உணவு, பானம், இவற்றின் சிறப்பு, உடன் குடித்தலின் குணங்கள், அதைப்பற்றிய முறைகள், பலபொருள் களின் குரு இலகு தன்மைகள், உணவுத் தொடர்பான பல பொருள்களின் நன்மை தீமைகள், அவற்றைப் பயன்படுத்துவ தால் ஏற்படும் விளைவுகள், ரஸம் முதலிய தாதுக்களை பற்றிய நோய்கள், சிகிச்சை, உயிர்களின் பத்துவகையான இருப்பிடங்கள், 'தசமூலீயம்' எனும் முப்பதாம் அத்தியாயத்தில் கூறப்போகும்

---

(1)ஸந்தர்ப்பணம் உடலைப் பருக்க வைக்கும் சிகிச்சை முறை

(2)அபதர்ப்பணம் — உடலை இளைக்க வைக்கும் சிகிச்சை முறை

பொருள்களைத் தெளிதல். இப்படி நூல்களின் கொள்கை, இலக்கணம், உள்ளவாறு உணர்தல், செயல்படுதல் போன்றவற்றின் நல்லறிவு, நூலில் கற்றவற்றை நேர்முகமாகச் செய்து பார்த்தல், செயல், நேரம், கருத்தா, கருவி ஆகியவற்றைக் கையாள்வதில் கைதேர்ந்தவர். இவ்வாறு ஸூத்ரஸ்தானத்தில் கூறிய எல்லாப்பொருள்களையும் கற்றுத் தேர்ந்து நல்ல நினைவாற்றல், கூர்ந்தமதி, சாஸ்திரக் கல்வியால் பண்பட்ட உத்தி, நல்ல அறிவு இவை அனைத்தும் நிறைந்து நல்லொழுக்கம் நற்பண்புகள் பூண்டு எல்லாமக்களையும் உயிரினங்களையும் மனமாற நேசித்து சர்ச்சைக்கு இடமில்லாதவனாக அனைவராலும் விரும்பப்பெற்று மக்களுக்குத் தாயாகவும் தந்தையாகவும், உடன்பிறப்பாகவும் உற்றார் உறவினராகவும் எண்ணத்தை வளர்த்து அவர்கள் நன்மை நாடி தனக்கென வாழாமல் அவர்க்காக வாழ்பவர்தான் நோயழித்து உயிர் காக்கும் மருத்துவர் ஆவார். அவரே நன் மருத்துவர் ஆவார் என்று நன்மருத்துவரைப் பற்றி அக்னிவேசரிடம் புனர்வசு ஆத்ரேயர் கூறினார். (6—7)

மேலே கூறப்பட்ட பண்புகளுக்கு நேர்முரணான பண்புகள் கொண்டவர் உயிரை அழித்து நோயைக் காக்கும் மருத்துவர் ஆவார். அவர்கள் மருத்துவவேடம்பூண்டு திரிபவர். மக்களுக்கு முள் போன்றவர். சமுதாயத்திற்குத் தீமையையே செய்பவர். மன்னர்களின் கவனக்குறைவால் நாட்டில் நடமாடி வருபவர்கள். மிகக்கொடியவர்கள்.

## 5. உயிரை அழித்து நோய் காப்பவர்

இத்தகைய போலி மருத்துவர்களின் சிறப்பியல்களை இனிக் காண்போம். அவர்கள் தன் வாழ்க்கைக்கு வழியைத் தேடியவாறு மருத்துவ வேடம் பூண்டு தெருக்களில் சுற்றிவருவார்கள். எவரேனும் நோயுற்றுள்ளதாகக் கேட்டவுடன் அவர்கள் அவனிருப்பிடத்தைச் சூழ்ந்து தன்னைப்பற்றிய புகழுரைகளை அவன் காதில் விழுமாறு உரக்கப் பேசுவார்கள். நோயாளியை வேறு மருத்துவர் கவனித்து வந்தால் அவரைப்பற்றி குற்றங் குறைகளை அடிக்கடி கூறுவர்.

தன்னுடைய போலி நடத்தையால் போலிப்பேச்சால் நோயாளியின் நண்பர்களைக் கவர்வார். அவர்களை முகத்துக்கு முன்பு புகழ்ச்சியாகப் பேசி பின்பு கோளுரைப்பர். தாம் செய்த தொழிலுக்கு ஊதியத்தை விரும்பாதவர்போல் பெயரளவுக்கு ஏதாவது கொடுத்தால் போதும் என்றவாறு குறிப்பிடுவர். தம் முயற்சியில்

வெற்றிகண்டு நோயாளிக்கு மருத்துவம் செய்யத் தொடங்கிய வுடன் தம்மைத்தாமே பெருமையாக இறுமாப்புடன் பார்த்துக் கொள்வர். நோயாளியைக் கவனமாகப் பார்ப்பதுபோல் தன் அறியாமையை மறைக்க நடிப்பார்கள். நோயின் காரணத்தைக் காணமுடியாமல் நோய் தீர்க்க முடியாதபோது நோயாளி மருந்தைச் சரியாக ஏற்கவில்லை நல்ல கவனிப்பு இல்லை தன்னைக் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளவில்லை என்பது போன்ற நொண்டிச் சாக்குகளைக் கூறுவர். நோய்முற்றி நோயாளி இறந்துவிட்டால் அந்த இடத்தைவிட்டு எவர் கண்ணி லும் படாமல் வேறோர் இடத்திற்கு ஓடிவிடுவர். சாதாரண மக்கள் கூட்டத்தில் தம்மைப்பற்றி தம் திறமையைப் பற்றி ஆற்றலைப் பற்றி போலியாகப் பேசி வருவர். தைரியமுள்ள வனைப்பற்றி தைரியம் இழந்தவன் என்றும் கூறுவர். வழி நடப்ப வர் காட்டு வழியைத் தவிர்ப்பது போன்று புலவர்களின் சேர்க் கையை விரும்ப மாட்டார்கள். தொலைவிலேயே அதனைத் தவிர்த்துவிடுவர். ஏதாவது தாம் அறிந்த அரிதான ஒரு சிகிச்சை முறையைத் தக்க நேரத்திலும் நேரமில்லாத நேரத்திலும் அடிக் கடி கூறியவாறு இருப்பர். சிறந்த மருத்துவருடன் உரையாட, நூலைப்பற்றிய ஆய்வுரைகள் நடத்த விரும்பமாட்டார்கள். எவ ரேனும் நூல்களைப் பற்றி உரையாட வந்த போதும் யமனைக் கண்டவர்போல் அஞ்சி ஒளிவர். இவர்களுக்கு ஆசிரியரோ, சீடர் களோ, உடன் பயின்றவர்களோ, ஒரு சாலை மாணாக்கரோ, உடன் விவாதம் செய்தவரோ உள்ளார் என எவருக்கும் தெரி யாது.

*(8—9)*

வேட்டைக்காரன் பறவைகளை வலையில் வீழ்த்த காட்டில் மறைந்து வாழ்வதுபோல இவர்கள் மருத்துவ உருவத்தில் நோயாளியைத் தம் வலையில் வீழ்த்தச் சுற்றிவருகின்றனர். நூலறிவு, பட்டறிவு, நேரம், அளவு, இடம் ஆகியவைபற்றிய அறிவு ஏதுமின்றி உயிர் பரிக்கும் யமனின் தூதுவனாக மருத்துவ வேடம் பூண்டு வரும் இவர்களைக் கண்டவுடன் கைவிட்டுவிட வேண்டும்.

*(10—11)*

வயிற்றுப்பிழைப்புத் தேடி மருத்துவ வேடம் பூண்டு திரியும் இந்தத் துஷ்டர்களை அறிஞர்களாகிய நோயாளிகள் தொலைவி லேயே கைவிட்டுவிடவேண்டும். காற்றைப் புசிக்கும் ஸர்ப்பத்தைப் போன்றவர்கள் இவர்கள். பாம்பின் காற்று உடலில் பட்டால்

நஞ்சு தோன்றி உயிரிழக்க நேரிடும். அதுபோல் அருகிலுள்ள இவர்களுடைய பார்வை பட்டவுடன் நோயாளிக்குத் தீமை ஏற்படும். (12)

நூலறிவு பெற்று ஆயுர்வேத சாத்திரத்தை முழுவம் உணர்ந்து நன்மனம் படைத்து மருத்துவத்துறையில் வல்லமைபெற்று கைராசியுள்ள புலனடக்கம் வாய்ந்த நன் மருத்துவர்களுக்கு வணக்கம். (13)

**முடிவுரை**

இந்த அத்தியாயத்தில் ஸூத்ரஸ்தானத்தின் முழுச்சுருக்கம், இருவகை மருத்துவர்கள், உயிர்களுக்குப் பத்துவிதமான இருப்பிடங்கள் ஆகியவை விளக்கப்பட்டன. (14)

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையின் ஸூத்ரஸ்தானத்தில் தசப்ராணாயதநீயம் எனும் இருபத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்.

## முப்பதாம் அத்தியாயம்

## "அர்த்தே தசமஹாமூலீயம்"

ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி அர்த்தே தசமஹாமூலீயம் எனும் அத்தியாயத்தை நாம் விவரித்துக் கூறுவோம். *(1–2)*

### 1. இதயத்தின் சிறப்பு

வடமொழியில் ஆயுர்வேத வைத்தியமுறையில் மஹத், ஹ்ருதயம், அர்த்தம் என்பவை ஒரே பொருளை விளக்கும் பல சொற்கள். இந்த இதயத்திலிருந்து பத்து இரத்தக் குழாய்கள் செல்லுகின்றன. இவை மகா மூலங்கள் என்றும் மகா பலங்கள் என்றும் கூறப்படுகின்றன. *(3)*

இரண்டு கைகள், இரண்டு கால்கள், தலை, உடலின் நடுப்பகுதி என இவை உடலின் ஆறு உறுப்புகள் ஆகும். செவி, மெய், கண், நாக்கு, மூக்கு ஆகிய ஐந்தும் அறிவுப் புலன்கள். ஒளி, ஊறு, ஒலி, சுவை, நாற்றம் ஆகிய ஐந்தும் புலப்பொருட்கள். குணத்துடன் கூடிய ஆன்மா மனம் சிந்திக்கும் ஆற்றல் ஆகிய இவை இதயத்தை அண்டியுள்ளன. வீட்டின் மேற்கூரையைத் தாங்கி நிற்கும் தூலம்போல மேல் கூறப்பட்ட அங்கங்கள் அறிவுப்புலன்கள் புலப்பொருட்கள் ஆகிய பொருட்களைத் தாங்கி நிற்கும் தூணாக இதயம் அமைந்துள்ளது. சான்றோர்கள் இதயத்தைப் பற்றி அவ்வாறே கூறுகின்றனர். அந்த இதயத்திற்குச் சிறிது சிதைவு ஏற்பட்டால் அதனால் உடல் முழுவதிலும் சுரணையற்றுப் போதலாகிய மயக்கம் ஏற்பட்டுவிடும். அந்த இதயத்திற்குப் பெருஞ்சிதைவு உண்டாயின் மரணமே ஏற்படும். மெய் செவி முதலிய அறிவுப்புலன்களால் உண்டான அறிவைச் சுமக்கும் ஆற்றல் இதயத்தினிடமே உள்ளது. *(4–6)*

அறிவாற்றல் என்பதைச் சுமக்கும் ஓஜஸ் எனும் தாதுவும், உணர்வும் இதயத்தையே இருப்பிடமாகக் கொண்டுள்ளன. இதனால்தான் மருத்துவர்கள்இந்த இதயத்தை மஹத் என்றும், அர்த்தம் என்றும் பொருள் பொதிந்த மொழியால் போற்றுகின்றனர். *(7)*

---

*அர்த்தே தசமஹாமூலீயம்—அர்த்தம் என்றால் இதயம். இதயத்திலிருந்து செல்லும் பத்து இரத்த நாடிகளைப் பற்றி விளக்கும் அத்தியாயம் ஆதலின் இவ்வாறு பெயர் பெற்றது.

இந்த இதயமே அந்தப் பெரிய பத்து இரத்த தமனிகளின் அடிப்படையாக (மூலமாக) இருப்பதால் அந்தத் தமனிகளை மகா மூலங்கள் என்று வழங்குகின்றனர். இந்தப் பத்து தமனிகளும் [1]ஓஜஸ் எனும் தாதுவைப் பெருகச் செய்து முழு உடலில் சுற்றிக் கொண்டு அந்த ஓஜஸ்ஸைத் தாங்கி நிற்கின்றன. இதனால்தான் அவற்றைத் [2]தமனிகள் என்கிறோம். அந்த ஓஜஸ் எனும் தாது வினால்தான் உடல் நன்கு காக்கப்பட்டு உயிரூட்டப்படுகிறது. இந்த ஓஜஸ் இல்லையெனில் மனிதன் பிழைத்திருக்க இயலாது. *(8–9)*

## 2. ஓஜஸின் சிறப்பு

ஓஜஸ் முதலில் கர்ப்பத்தின் சாரமாக இருந்தது. அது கர்ப் பத்தை உண்டாக்கும் ரஸத்துக்கும் ஸாரமாக அமைந்துள்ளது, இந்த ஓஜஸ்தான் உடலை இயக்குவதற்காக இதயத்தில் முதலில் நுழைகிறது. ஓஜஸ் அழிந்தால் உடலும் அழிந்து போகும். ஓஜஸ் தான் இதயத்தில் இருந்துகொண்டு உடலை இயக்குகிறது. அல்லது சுமக்கிறது. இதுவே உடலின் வலிமை. உடலும் பிராணமும் இதையே அண்டி இருக்கின்றன. உடலைச் சுமக்கும் ரஸம், எண்ணெய்ப்பசை முதலிய அனைத்தும் ஓஜஸையே அண்டி யுள்ளன. அந்த ஓஜஸ்ஸின் இருப்பிடம் இதயம். *(10–11)*

ஓஜஸ் என்னும் தாதுவை எடுத்துச் செல்லும் தமனிகள் பல நன்மைகளைச் செய்கின்றன. தமனிகள் எண்ணால் பத்தாயினும் இதயத்தையே அடைந்து பல கிளைகளாகப் பிரிந்து உடலெங்கும் பரவி எண்ணிலடங்காதவைகளாக ஆகின்றன. அவை விரிந்து சுருண்டும் துடிப்புள்ளமையின் தமனிகள் என்றும், மற்ற தாதுக் களை வளர்க்கும் ரசத்தைச் சுரப்பதால் ஸ்ரோதஸ் என்றும் சில பொருட்களை ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்கு இரத்தம் வழியாக எடுத்துச் செல்வதால் ஸிரைகள் என்றும் கூறப்படுகின் றன. *(12)*

இதயம், ஓஜஸ்ஸை எடுத்துச் செல்லும் தமனிகள், சிறந்த ஓஜஸ் இவற்றை நன்றாகப் பாதுகாக்க விரும்புபவன் மனத்திற்குத் துன்பத்தை உண்டாக்கக் காரணமானவற்றை நன்கு ஆய்வு செய்து கைவிடவேண்டும். *(13)*

---

(1) ஓஜஸ் என்பது இருவகைப்படும். ஒன்று அஞ்சலி, இரு கை அளவு உள்ளது. மற்றொன்று இதயத்தில் மட்டும் இருப் பது, எட்டுச் சொட்டு அளவு கொண்டது.

(2) தமனி – நல்ல ரத்தக் குழாய்கள்.

இதயத்திற்குப் பிடித்தமான பொருள், ஓஜஸ்ஸை வளர்க்கும் இதமான பொருள், தமனிகள் ஸ்ரோதங்கள் இவற்றிற்கு தெளி வூட்டுபவை ஆகியவற்றை மேற்கொள்ள வேண்டும். புலனடக்கம் ஆன்ம அறிவு ஆகியவற்றைக் சட்டாயமாகக் கைக்கொள்ள வேண் டும். (14)

## 3. பலவற்றில் ஒன்று

உடற்காப்பிற்கு உரிய பல வழிசள் உள. அவற்றுள்பிராணனை வளர்க்கும் வழி மிகச் சிறந்தது. வலிவை வளர்க்கும் வழிகள் பல வற்றுள் சிறந்த ஒரு வழியும், உடலைப் பருக்கச் செய்யும் வழி களில் ஒன்றும், ஆனந்தமளிப்பவைகளில் ஒன்றும் மகிழ்ச்சியூட்டும் வழிகளில் ஒன்றும் எல்லாவகையான நன்னெறிகளும் சிறந்தன வாகும். பிராணனை வளர்க்கும் வழிசளில் கொல்லாமை மிகமிகச் சிறந்தது. விந்துவை வளர்ப்பது வலிமை வளர்க்கும் வழிகளில் சிறந்தது. கல்வியில் சிறந்து விளங்குவது உடலை ஊட்டம் அடையச் செய்யும் வழிகளில் சிறந்தது, புலன்களை அடக்குதல் ஆனந்தமடைவிக்கும் வழிகளில் சிறந்தது. ஆன்ம அறிவை வளர்த் தல் மகிழ்வூட்டும் வழிகளில் சிறந்தது. சிற்றின்பத்தைத் துறத்த லாகிய (1) பிரம்மசரியம் எல்லா நன்னெறிகளிலும் சிறந்தது என ஆயுர்வேத அறிஞர்கள் கருதுகின்றனர். (15)

## 4. ஆயுர்வேத அறிஞர்கள்

ஸ்தானம், அத்யாயம், கேள்விகளின் பிரிவு, சொற்கள், சொற்பொருள்கள், பொருளின் பகுதி ஆகியவற்றை நன்முறையில் கசடறக்கற்று சிறந்த வகையில் விரிவுரை செய்பவர் ஆயுர்வேத அறிஞர்களாவர். எவ்வாறு சாத்திரங்கள், வாக்கியங்கள், பொருள் கள், கூறுகள் இவைகள் அமையுமாறு கூறப்பட்டுள்ளன என்பது கேள்வி.

முனிவர்களால் இயற்றப்பட்ட இந்த சாத்திரம் தந்திர மாகும். பல பொருள்களைப் பற்றியும் முழுமையாக அவர் கள் கேட்ட பாடமுறைப்படி கூறப்படுவது வாக்கியங்கள் என்ப தாகும். அறிவால் நன்கு ஆராய்ந்து பொருள்களின் உண்மையைச் சொற்களால் பிரித்தும் சேர்த்தும் ப்ரதிக்ஞை(காரணம்), எடுத்துக் காட்டு ஆகையால், இது இவ்வாறு என்பதாகிய உபநயம், முடிவு கொள்ளுதல் ஆகிய நிகமநம் என்றும் உத்திகளாலும் *மூவகை

(1) பிரம்மசரியம் — சிற்றின்பங்களில் மனத்தைச் செலுத்தாமல் புலனடங்கியவனாதல்.

*மூவகை மாணவர்கள்— உயர்ந்தவர்கள், நடுத்தரமானவர், தாழ்ந் தவர்.
உயர்ந்தவர் — அன்னம் போன்றவர்,
நடுத்தரமானவர் — ஆடுகளைப் போன்றவர்.
தாழ்ந்தவர் — பன்னாடை போன்றவர்.

யான மாணவர்களின் அறிவுக் கூர்மைக்காக கூறப்படுவது சொற் பொருள்படி எனவும் சாத்திரங்களில் மூழ்கிய சான்றோர்களின் ஆழ்ந்த கருத்துகளின் தன்மையை விளக்கவுரைகள் வாயிலாகக் கூறுவது பொருள்களின் கூறுக்ள் எனவும் கூறப்படுகின்றன. *(16-19)*

## 5. ஆயுர்வேதம் பற்றிய வினாக்கள்

இங்கு இவ்வாறு வினாக்கள் எழுகின்றன.

ருக், ஸாம, யஜுஸ், அதர்வம் ஆகிய நான்கு வகையான வேதங்களில் ஆயுர்வேத அறிஞர்கள் எந்த வேதத்தை உபதேசிக் கின்றனர். ஆயுள் என்றால் என்ன ? ஏன் ஆயுர்வேதம் என்று வழங்கப்படுகிறது ? ஆயுர்வேதம் எதற்காக ? இந்த ஆயுர்வேதம் நிலையானதா ? நிலையற்றதா ? இதன் உறுப்புகள் யாவை ? இதனைப் படிக்கத்தக்கவர் எவர்? அவர்கள் ஏன் படிக்க வேண்டும் என்பன. *(20)*

## 6. வினாக்களுக்குரிய விடைகள்

மருத்துவரின் இத்தகைய வினாக்களுக்கு பின்வரும் மறு மொழிகள் கூறப்பட்டன.

நான்கு வகையான வேதங்களில் அதர்வவேதத்திலேயே ஆர்வம் காட்ட வேண்டும். அதர்வவேதத்தில் தான் மக்கள் கடைப்பிடிக்க வேண்டிய நன்னெறிகள், பலியிடுதல், மங்களச் செயல், வேள்வி, கட்டுப்பாடு, கழிவிரக்கம், பட்டினியிருத்தல், மந்திரங்கள் முதலியவற்றைக் கொண்டு சிகிச்சை முறைகள் வகுக்கப்பட்டுள்ளன. சிகிச்சையும் ஆயுளுக்கு நன்மைக்காகவே கூறப்பட்டுள்ளது. இவ்வாறு வேதத்தை உபதேசித்து ஆயுளைப் பற்றியும் கூறப்படுகிறது. ஆயுள், சேதநாவிருத்தி, ஜீவநம், அநுபந்தம், தாரி என்பவை ஒரே பொருளைக் கூறும் பல சொற் கள் ஆகும். ஆயுர்வேதம் எனும் சொல் ஆயுளைப்பற்றி அறிவித் தல் எனப் பொருள் கொண்டது. அது எவ்வாறு எனில் தன் இலக்கணத்தாலேயே. ஆயுளின் இலக்கணமாவது ஸுகாயுள், துக்காயுள், ஹிதஆயுள், அஹித ஆயுள், ஆயுளின் அளவை, ஆயுளின் அளவை இன்மை என்பன. ஆயுளை வளர்க்கும் பொருட் கள், பண்புகள், செயல்கள், ஆயுளை வளர்க்காத பொருட்கள், பண்புகள் செயல்கள் ஆகியவற்றின் உண்மையான அறிவைக் கொடுப்பது ஆயுர்வேதம். ஆயுர்வேதத்தில் ஆயுளை வளர்க்கின்ற தும் ஆயுளைக் குறைக்கின்றதுமான பொருள், குணம், கர்மம் இவற்றைப்பற்றிக் கூறப்படுகின்றது. *(21–23)*

இந்த அத்தியாயத்தில் ஆயுளைப்பற்றி சேதநாநுவ்ருத்தி முத லாக உள்ளது உள்ளவாறு கூறப்பட்டது. முன் அத்தியாயத்திலும் விளக்கப்பட்டது.

### 7. ஸுகாயுள், துக்காயுள்

ஸுகாயுள் என்பதன் விளக்கம் வருமாறு :-

உடலில் உள்ள நோய்கள் சற்றும் தாக்கமல் வாலிப வயதுப் பெற்று உடலில் நன்முறையில் வலிமை, ஆண்மை, நற்செயல், வீரச்செயல் ஆகியவை பொருந்தி, பகுத்தறிவு ஆன்மறிவு புலன் கள் புலன்களின் பொருள்கள் ஆகியவற்றின் ஆற்றல் நன்கு அமைந்து, எல்லாம் நிறைந்து பலவகையான இன்பங்களைத் துய்க்கும் வாய்ப்புப்பெற்று, எடுத்த செயல்கள் இனிது தொடங்கப் பட்டு நன்கு நிறைவேறி எங்கும் எப்போதும் தடையின்றிச் செல்ல வல்ல தன்மையுடையவனின் ஆயுள் ஸுகாயுள் என்றும் இதற்கு முரணானது துக்காயுள் எனவும் கூறப்படும்.

### 8. ஹித ஆயுளும், அஹித ஆயுளும்

பிற உயிர்களுக்கு நன்மை விரும்பி மாற்றான் பொருளை வெறுத்து உண்மையே பேசி மனவடக்கம் பெற்று ஆராய்ந்து செயலாற்றி வழுவகற்றி அறம் பொருள் இன்பமாகிய முப்பேறு களையும் ஒன்றையொன்று தாக்காமல் கடைபிடித்து மதிப்பிற் குரிய பெரியோர்களை வணங்கி வழிபட்டு பணிவிடைபுரிந்து உலக அறிவு, ஆன்ம அறிவு, மனவடக்கம் ஆகியவை பெற்ற சான்றோர் களைப் பின்பற்றி வெகுளி, பொறாமை, மதம் அகற்றி தன் மானத்தைப் பெற்று பலவகையான தன்னிடமுள்ள பலவற்றை யும் கரவாமல் பிறர்க்கீந்து தவம் மெய்யறிவு மனவடக்கம் இவற்றை எப்போதும் கட்டுப்படுத்தி, ஆன்ம அறிவு பெற்று இம்மை மறுமை பயன்களை நன்கு கூர்ந்து கவனித்து நல்ல நினை வாற்றல் பெற்று இவ்வாறு உள்ளவனின் ஆயுள் ஹிதாயுள் என்றும் இதற்கு முரணானது அஹிதாயுள் எனவும் கூறப்படும். (24)

### 9. ஆயுளின் அளவு

ஆயுளின் அளவு பற்றிக் கூறுவோம் :-

புலன்களின் பொருளாகிய ஒலி, தொடுஉணர்வு முதலியவை, புலன்கள் மனம் அறிவு செயல் ஆகியவற்றின் மாற்றங்கள் ஆகிய இவற்றின் இலக்கணங்களால் ஆயுளின் அளவுஅறியப்படு கிறது. இவற்றில் திடீரென மாற்றம் ஏற்படுமாயின் ஒரு கணத் தில் ஒரு நாழிகையில் ஒரு நாளில், மூன்று நாட்களில், ஐந்து நாட்களில், ஏழு நாட்களில், பத்து நாட்களில், பன்னிரண்டு நாட்களில், பதினைந்து நாட்களில், ஒரு மாதத்தில் அல்லது ஆறு மாதங்களில் அல்லது ஓராண்டில் மனிதன் இயற்கையின் நிலை அடைவான். இயற்கையின் நிலையாவது செயலற்றுப் போதல்

அதாவது இறத்தல். இயற்கை அடைதல், செயலிழத்தல், இறத்தல், நிலையற்றுப் போதல் என்பன ஒரு பொருளை விளக்கும் பல சொற்கள். இதுவே ஆயுளின் அளவாகும். இதற்கு முரணானது ஆயுளின் அளவின்மை.

## 10. ஆயுர்வேதம் நிலையானது

இந்திரியஸ்தானத்தில் அரிஷ்டாதிகாரத்தில் உடல், இயற்கை, இலக்கணம் கூறுமுகத்தால் ஆயுர்வேதத்தின் ஆயுளின் அளவு கூறப்பட்டது. (25)

இதன் பயன் ஆரோக்கியமானவனின் ஆரோக்கியத்தைக்காப்பது, நோயாளியின் நோயை நீக்குவதுமேயாகும். (26)

அந்த ஆயுர்வேதம் நிலையானது. இதற்கு மூன்று காரணங்கள். தொடக்கமற்றது (அநாதியானது), தன்னிலைபெற்ற இலக்கணங்களை உடைமை, விளக்கப்பொருட்கள், இயல்பின் அழிவற்றதன்மை ஆகிய மூன்று காரணங்களால் ஆயுர்வேத சாத்திரம் நிலையானது. எப்போதும் ஆயுளின் தொடர்ச்சியோ ஆயுளைப் பற்றிய அறிவின் தொடர்ச்சியோ நிலையானது இல்லை என்பது இல்லை. அதாவது ஆயுளின் தொடர்ச்சி, அதைப்பற்றிய அறிவின் தொடர்ச்சி இவையும் அநாதியானவை. இதனால் அவையும் அழிவற்றவை. ஆயுர்வேதங்களை அறிபவனும் அழிவற்றவன். அதாவது ஆயுள், ஆயுர்வேதம் அதைப்பற்றிய அறிவு அவைப்பற்றிய அறிவை உடையவன் ஆகியவரும் நிலையானவரே. அநாதியான ஸுகம் துக்கம் ஆகியவை பொருள்களின் காரணம் இலக்கணம் இவற்றின் ஒன்றோடொன்றின் தொடர்பினால் ஏற்படுபவை. இந்தப் பொருள்களின் சுருக்கம் நன்கு ஊகிக்கப்படுகிறது.

ஆயுர்வேதம் நிலையானது என்பதற்கு மற்றும் காரணங்கள் கூறப்படுகின்றன. அவை :- பொருள்களின் இயல்பு. குரு, இலகு, சீதம், உஷ்ணம், எண்ணெய்ப்பசை, வறட்சி ஆகியவற்றின் பொதுவான சிறப்பியல்புகளால் வளர்ச்சியும் குறைவும் உண்டாகின்றன. முதல் அத்தியாயத்தில் ஸாமான்யத்தினால் பொருள்களின் வளர்ச்சியும், விசேஷத்தால் குறைவும் ஏற்படுகின்றன என்று கூறப்பட்டது. குருவான பொருள்களை அடிக்கடி பயன்படுத்துவதால் குருத்தன்மையின் வளர்ச்சியும் இலகுவின் குறைவும் ஏற்படுகின்றன. இதுபோல வறட்சி, எண்ணெய்ப்பசை முதலிய பண்புகள் கொண்ட பொருட்களைப்பற்றியும் அறிதல் நலம். இதனால் பொருட்களின் இயல்பு நிலையானது. நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எனும் ஐம்பெரும் பூதங்கள் தொடர்புகொண்ட பொருட்களிலும் தம் இலக்கணங்களின்படி நிலம் முதலிய பூதங்

களின் குணம் நிலையாகக் காணப்படுகின்றது. பொருள்களின் சுவை முதலியன நிலையற்றவை. ஆயினும் எந்தப் பொருளில் நெருப்பு அல்லது நீர் தொடர்பான குணம் முக்கியமானதோ அது எப்போதும் அழிவதில்லை. இதனால் பொருள்களின் இயல்பு நிலையானது என்பது நன்கு விளங்குகின்றது.

ஆயுர்வேதம் முதலில் இல்லாமல் இருந்து பிறகு தோன்றிற்று என்று கூற இயலாது. முதலில் பிரும்மனுக்கு ஆயுர்வேதத்தைப் பற்றிய அறிவு உண்டாயிற்று. பிறகு அவர் இந்திரனுக்கு அதை உபதேசித்தார். இப்படித்தான் ஆயுர்வேதத்தின் தோற்றுவாய் கூறப்படுகிறது. இதனால் ஆயுர்வேதம் அழிவுள்ளது என்று கூற முடியாது. ப்ரும்மன் அறிந்தான் என்பதால் அதற்கு முன்பே அது இருந்திருக்க வேண்டும். அப்போதுதான் பிருமன் அதனை அறிந்திருக்க முடியும் என்பது தெளிவு. ஒரு சிலர் ஆயுர்வேதம் இயல்பாகவே நிலையானது என்கின்றனர். சான்றாக நெருப்பில் சுடும் நீரின் தண்மையும் பெருகும் தன்மையும் இயல்பானவை போல குருவான பொருள்களைப் பயன்படுத்துவதால் குருவின் வளர்ச்சியும் இலகுவின் குறைவும் ஏற்படும் என்பன போன்றவையும் இயல்பிலேயே நிலைத்துள்ளன. இன்னோரன்ன காரணங்களால் ஆயுர்வேத சர்த்திரம் நிலையானது, தன்நிலை பெற்றது என்பவை நன்கு புலனாகின்றன. (27)

## 11. ஆயுர்வேதத்தின் உறுப்புகள்

ஆயுர்வேதத்தின் உறுப்புகள் எட்டு :

(1) காயசிகிச்சை — காயம் எனில் நெருப்பு அல்லது உமிழ்நீர். இது உணவு செரிப்பதற்குஇன்றியமையாதது. நல்ல செரிமானம் இல்லாமையால் தோன்றும் நோய்களுக்குச் செய்யப்படும் சிகிச்சை என்பது பொருள். அதாவது உடலுக்குச் செய்யப்படும் சிகிச்சை.

(2) சாலாக்யம் — நுண்ணிய கருவிகள் மூலம் கண், காது, மூக்கு தொண்டை ஆகிய இடங்களில் தோன்றும் நோய்களுக்கு அளிக்கப்படும் சிகிச்சை.

(3) சல்யாபஹர்த்ருகம் — பலவகையான கத்தி முதலிய கருவிகளைக் கொண்டு உடலில் புதைந்துள்ள வேறுபொருட்களை எடுத்தல், கட்டி முதலியவற்றைஅறுத்து சிகிச்சைபுரிதல்.

(4) விஷ கர வைரோதிக
தந்த்ரம் – விஷம் இடுவிஷம் போன்றவற்றிற்குச் செய்யப்படும் சிகிச்சை.

(5) பூதவித்யா – கெட்ட கைவினைகள், பேய், பிசாசு, பில்லி, சூனியம் முதலியவற்றிற்குச் செய்யப்படும் சிகிச்சை.

(6) கௌமாரப்ருத்யகம்—குழந்தை மருத்துவம்

(7) ரஸாயனம் – வயதை நிலைநிறுத்தல், ஆயுளை வளர்த்தல் அறிவைப் பெருக்குதல், உடலை ஊட்டமடையச் செய்தல், ஆகிய சிகிச்சை.

(8) வாஜீகரணம் – ஆண்மையை வளர்த்தல், விந்துவை நன்னிலைப்படுத்தி மனத்தில் விருப்பத்தை வளர்த்துவருதலாகிய சிகிச்சை முறை என்பன.

ஆயுர்வேதத்தை அந்தணர், அரசர், வணிகர் ஆகியோர் கற்க வேண்டும். அவர்களில் உயிர்களின் மீது கருணையினால் அந்தணர்களும், மக்களைக் காப்பாற்ற அரசர்களும், பிழைப்பதற்காக வணிகர்களும், பொதுவாக அறம் பொருள் இன்பத்திற்காக மற்றவர்களும் இந்த ஆயுர்வேதத்தைக் கற்க வேண்டும்.

ஆன்ம உணர்வினர், நன்னெறியில் நிற்பவர், தருமமனம் படைத்தவர், தாய், தந்தை, உடன்பிறந்தார், உறவினர், ஆசிரியர் இவர்களுக்கு உற்ற நோய் தீர முழுமுயற்சியுடன் பாடுபட வேண்டும். ஆயுர்வேத நூலில் கூறப்பட்ட ஆன்ம அறிவை அறிதல், கற்பித்தல், சிந்தித்தல், செயல்படுதல், ஆகியவை இவனுடைய உயர்ந்த தருமம் ஆகும்.

செல்வந்தர் அரசர் முதலியோர்க்குச் சிகிச்சை செய்து நல்ல உணவு முதலியன பெறுவதற்காகப் பொருளைப் பெறுதல், தன்னைச் சேர்ந்தவர்களைக் காப்பாற்றுதல், தன்னால் ஏற்றுக் கொள்ளப்பட்டவர்களின் நோய்களை நீக்கி அவர்களை நலமடையச் செய்தல் ஆகியவை தலையாய கடமை, அதுவே பொருளும் ஆகும். ஆயுர்வேத நூலில் கூறப்பட்ட சிகிச்சைகளைச் செய்வதால் புலவர்களிடையே புகழ் ஏற்பட்டுப் பெரிய பெரிய மனிதர்களையும் தன்வயப்படுத்துதல், தன்னைப் போன்றவர்களிடையே பெருமதிப்பை அடைதல், தன்னால் நேசிக்கப்பட்டவர்களுக்கு நன்மைகளைச் செய்து மகிழ்ச்சியடைதல் இன்பம் ஆகும். இவ்

வாறு ஆயுர்வேதத்தைக் கற்பதால் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று உறுதிப்பேறுகளும் கட்டாயம் கிடைக்கும். இவ்வாறு கேட்ட வினாக்களுக்கு மறுமொழிகள் கூறப்பட்டன. *(28 – 29)*

## 12. மருத்துவ ஆய்வுக்கு எட்டுவகை வினாக்கள்

மருத்துவரால் முதலில் கேட்கப்பட வேண்டிய வினாக்கள் எட்டு. அவை 1. சாத்திரம் என்றால் என்ன? 2. சாத்திரப் பொருள்கள் யாவை? 3. ஸ்தானம் என்றால் என்ன? 4. ஸ்தானங்களின் பொருள்கள் யாவை? 5. அத்தியாயங்கள் என்பவை யாவை? 6. அத்தியாயப் பொருள்கள் யாவை? 7. அத்தியாய வினாக்கள் யாவை? 8. கேள்விகளின் பொருள்கள் யாவை? ஆகிய கேள்விகளைக் கேட்க வேண்டும்.

அவ்வாறு கேட்ட கேள்விகளுக்கு சொற்கள், சொற்பொருள்கள், பொருள் கூறு ஆகியவை நன்கு விளங்க முழுமையாக மறுமொழி கூறவேண்டும். *(30)*

ஆயுர்வேத சாத்திரம் என்றால் என்ன என்பதற்கு விடை – ஆயுர்வேதம், சாகை, வித்தை, ஸூத்ரம், ஞானம், சாத்திரம் என்பன ஒரு பொருளைத்தரும் பல சொற்கள். *(31)*

ஆயுர்வேதம் பற்றி முன்பு இலக்கணங்களுடன் நன்கு விளக்கப்பட்டது. அதே பொருள் இடத்திற்கு ஏற்றவாறு மீண்டும் சரீரம், விருத்தி, ஹேது (காரணம்) நோய், கர்ம (செயல்) காரியம், காலம், கர்த்தா, கரணம், விதி, விநிச்சயம் என்று பத்தாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அந்தப்பிரிவுகள் அனைத்தும் நூலில் விளக்கப்படுகின்றன. *(32)*

இந்த சாத்திரத்தில் எட்டு ஸ்தானங்கள் உள்ளன. ஸூத்ரம், நிதானம், விமானம், சாரீரம், இந்திரியம், சிகிச்சை, கல்பம், ஸித்தி என்பன. *(33)*

அவற்றுள் ஸூத்ரஸ்தானம் முப்பது அத்தியாயங்கள் கொண்டது. எட்டு அத்தியாயங்கள் கொண்டது நிதானஸ்தானம். விமானம் எட்டு, சாரீரம் எட்டு. இந்திரியஸ்தானம் பன்னிரண்டு அத்தியாயங்கள். சிகிச்சாஸ்தானம் முப்பது, பன்னிரெண்டு கல்பம், பன்னிரண்டு ஸித்திஸ்தானம் என்பன. *(34)*

ஸூத்ரஸ்தானம், சிகிச்சாஸ்தானம் ஆகிய இரண்டும் முப்பது அத்தியாயங்கள் கொண்டன. நிதானஸ்தானம், விமான ஸ்தானம், சாரீரஸ்தானம் ஆகிய மூன்றும் எட்டு அத்தியாயங்கள்

கொண்டவை. இந்திரியஸ்தானம், கல்பஸ்தானம், ஸித்திஸ்தானம் மூன்றும் பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்டவை எனக் கூறி நூல் முடிக்கப்பட்டது. (35)

அந்தந்த ஸ்தானங்களில் அவ்வவற்றிற்கு உரிய ஸ்தானப் பொருள்கள் கூறப்படும். முறைப்படி இயற்றப்பட்ட நூற்றிருபது அத்தியாயங்களைப் பற்றியும் இனி கேட்பாயாக. (36)

### (அ) பேஷஜாச்ரயம் எனும் அத்யாயங்கள்

தீர்கஞ்ஜீவிதீயம், அபாமார்க தண்டுலீயம், ஆரக்வதீயம் ஷட்விரேசன சதாச்ரீதீயம் எனும் நான்கு அத்தியாயங்களில் மூலிகைகளைப்பற்றிக் கூறப்பட்டன. (37)

### (ஆ) ஸ்வாஸ்த்யவ்ருத்திகம்

மாத்ராசிதீயம், தஸ்யாசிதீயம், நவேகாந்தாரணீயம், இந்த்ரியோபக்ரமணீயம் எனும் நான்கு அத்தியாயங்களில் ஆரோக்ய பாதுகாப்புபற்றிக் கூறப்பட்டன. (38)

### (இ) நைர்தேசிகம்

குட்டாக சதுஷ்பாதம், மஹாசதுஷ்பாதம், திஸ்ரைஷணீயம் வாதகலாகலீயம் எனும் நான்கு அத்தியாயங்களிலும் செய்யத்தக்கவை செய்யத்தகாதவை பற்றிக் கூறப்பட்டன. (39)

### (ஈ) உபகல்பநீயம்

ஸ்நேஹாத்யாயம், ஸ்வேதாத்யாயம், உபகல்பநீயம், சிகித்ஸா ப்ராப்ருதீயம் எனும் நான்கு அத்தியாயங்களில் மருந்து செயல்முறை பற்றிக் கூறப்பட்டன. (40)

### (உ) ரோகாத்யாயம்

கியந்தஃ சிரஸீயம், த்ரிசோபீயம், அஷ்டோதரீயம், மஹாரோகாத்யாயம் ஆகிய இந்நான்கு அத்தியாயங்களில் பலவகை நோய்கள் பற்றிக் கூறப்பட்டன. (41)

### (ஊ) யோஜனாசதுஷ்கம்

அஷ்டௌ நிந்தநீயம், லங்கன ப்ருஹ்மணீயம், ஸந்தர்ப்பணீயம், விதிசோணிதீயம் எனும் நான்கு அத்தியாயங்களில் மருந்துகளைப் பயன்படுத்தும் முறை கூறப்பட்டது. (42)

### (எ) அந்நபான சதுஷ்கம்

யஜ்ஜஃ புருஷீயம், ஆத்ரேய பத்ரகாப்யீயம், அன்னபானவிதி, விவிதாசிதபீதீயம் எனும் நான்கு அத்தியாயங்களில் உணவுப் பொருட்களைப் பற்றிக் கூறப்பட்டன. (43)

### (ஏ) மருத்துவரைப் பற்றியவை

தசப்ராணாயதநீயம், அர்த்தே தசமஹாமூலீயம் எனும் இந்த இரண்டு அத்தியாயங்களில் மருத்துவர்கள் பற்றியும் ப்ராணன் உடல் இவை பற்றியும் கூறப்பட்டன. (44)

### ஸூத்ரஸ்தான அத்தியாயச் சுருக்கம் (1)

மருந்துகள், ஆரோக்கியம் செய்யத்தக்கவை செய்யத்தகாதவை எனக் குறிப்பிடுதல், மருந்து, செய்முறை, நோய், சிகிச்சை முறை, ஆகிய ஆறும் நன்நான்குகளாக கூறப்பட்டன. ஏழாவதாக உணவு, பருகுதல் பற்றி நன்கு உரைக்கப்பட்டது. மிஞ்சிய இரண்டு அத்தியாயங்களின் சுருக்கம் நூல் சுருக்கம் கூறும் வாயிலாக உரைக்கப்பட்டது. சாத்திரத்தின் தலைபோன்ற ஸூத்ரஸ்தானம் இவ்வாறு முப்பது அத்தியாயங்களில் நிறைவு செய்யப்பட்டது. (45–46)

இவ்வாறு ஸூத்ரஸ்தானத்தில் மிகவும் இன்றியமையாத பொருள்கள் பொருந்திய நாற்பருவங்களின் சுருக்கம் கூறப்பட்டது. இதில் எல்லாப் பொருள்களையும் சுருங்கக்கூறி விளங்க வைத்தலாகிய ஸூத்திர உருவத்தில் விளக்கப்பட்டமையின் இந்த ஸ்தானத்திற்கு ஸூத்ரஸ்தானம் எனும் பெயர் வழங்கப்பட்டது. (47)

### நிதானஸ்தான அத்தியாயப் பெயர்கள் (2)

நிதானஸ்தானத்தில் ஜ்வரநிதானம், ரத்தபித்த நிதானம், குன்மநிதானம், ப்ரமேஹநிதானம், குஷ்டநிதானம், சோஷநிதானம், உன்மாத நிதானம், அபஸ்மாரநிதானம் எனும் எட்டு அத்தியாயங்கள் விளக்கப்பட்டன. (48)

### விமானஸ்தான அத்தியாயப் பெயர்கள் (3)

ரஸவிமானம், த்ரிவிதகுக்ஷீயம், ஜனபதோத்வம்ஸநீயம், த்ரிவித ரோகவிசேஷ விஞ்ஞானீயம், ச்ரோதோ விமானம், ரோகாநீக விமானம், வ்யாதிரூபீய விமானம், ரோகபிஷக்ஜிதீய விமானம் எனும் எட்டு அத்தியாயங்கள் முனிவர் ஆத்ரேயரால் விளக்கப்பட்டன. (49–50)

### சாரீரஸ்தான அத்தியாயப் பெயர்கள் (4)

கதிதாபுருஷீயம், அதுல்யகோத்ரீயம், குட்டிகாகர்பாவக்ரந்திதீ, மஹதீகர்பாவக்ராந்தி, புருஷவிசயம், சரீரவிசயம், சரீரஸங்க்யா, ஜாதிஸூத்ரீயம் எனும் எட்டு அத்தியாயங்கள் சாரீரஸ்தானத்தில் ஆத்ரேய முனிவரால் விளக்கப்பட்டன. (51–53)

**இந்திரியஸ்தானம் அத்தியாயப் பெயர்கள் (5)**

வர்ணஸ்வரீயம், புஷ்பிதகம் இந்திரியம், பரிமர்சனீயம், இந்திரியாநீகம், பௌர்வருபிகம், கதமாநிசரீரீயம், பன்னரூபீயம், அவாக்கிரஸீயம், யஸ்யச்யாவநிமித்தீயம், ஸத்யோமரணீயம், அணுஜ்யோதீயம், கோமயசூர்ணீயம் எனும் பன்னிரண்டு அத்யாயங்கள் இந்திரியஸ்தானத்தில் விளக்கப்பட்டன. *(54–56)*

**சிகிச்சாஸ்தான அத்தியாயப் பெயர்கள் (6)**

சிகிச்சாஸ்தானத்தில் அபயாமலகீயம், ப்ராணகாமீயம், கரப்பிரசிதிகம், ஆயுர்வேத ஸமுத்தாநீயம் என நான்கு ரஸாயன பாதங்கள் உள்ளன. *(57)*

ஸம்ப்யோககரமூலீயம், ஆஸிக்த க்ஷீரீயம், மாஷபர்ணப்ருதீயம், புமான் ஜாத பலாதிகம் எனும் நான்கு வாஜீகரணபாதங்கள் உள. *(58)*

இந்த ரஸாயன பாதம் வாஜீகரணபாதம் எனும் இவற்றின் நன்னான்கு பாதங்களும் (எட்டு பாதங்களும்) இரண்டு அத்தியாயங்களாகக் கூறப்படுகின்றன. (ஆக சிகிச்சா ஸ்தானத்தில் முப்பத்தாறுஅத்தியாயங்கள் உள்ளன என்று கூறவேண்டும்.) *(59)*

ஜ்வரசிகித்ஸிதம், ரத்தபித்த சிகித்ஸிதம், குல்மசிகித்ஸிதம் ப்ரமேஹ சிகித்ஸிதம், குஷ்ட சிகித்ஸிதம், சோஷசிகித்ஸிதம், உன்மாத சிகித்ஸிதம், அபஸ்மார சிகித்ஸிதம், க்ஷதக்ஷீண சிகித்ஸிதம், சோத சிகித்ஸிதம், உதரரோக சிகித்ஸிதம், அர்ச சிகித்ஸிதம், அதிஸார சிகித்ஸிதம், விஸர்ப்ப சிகித்ஸிதம், மதாத்யய சிகிச்ஸிதம், த்விவ்ரணீசிகித்ஸிதம், க்சஉறணீரோக சிகித்ஸிதம், பாண்டு விகித்ஸிதம், ச்வாஸ சிகித்ஸிதம், காச சிகித்ஸிதம், சர்தி சிகித்ஸிதம், த்ருஷ்ணா சிகித்ஸிதம், விஷ சிகித்ஸிதம், த்ரிமர்மீய சிகித்ஸிதம், ஊருஸ்ஸிதம், சிகிஸ்ஸிதம், வாதவ்யா திசிகித்ஸிதம், வாதரத்த சிகித்ஸிதம், யோநிவ்யாபத சிகித்ஸிதம், ஆக முப்பது அத்யாயங்கள் உள. இவற்றோடு சிகித்ஸாஸ்தானம் நிறைவு பெறுகிறது. *(60–63)*

**கல்பஸ்தான அத்தியாயப் பெயர்கள் (7)**

மதனகல்பம், ஜீமூதகல்பம், இக்ஷ்வாகு கல்பம், தாமார்கவ கல்பம், வத்ஸக கல்பம், க்ருதவேதன கல்பம், ச்யாமாத்ரிவிருத் கல்பம், சதுரங்குலகல்பம், தில்வககல்பம், ஸுதாகல்பம், ஸப்தலா சங்கினீ கல்பம், தந்தீத்ரவந்தீ கல்பம், எனப்பன்னிரண்டு அத்யாயங்கள் கல்பஸ்தானத்தில் உள; இவற்றோடு கல்பஸ்தானம் நிறைவடைகிறது. *(64–65)*

**ஸித்திஸ்தான அத்தியாயப் பெயர்கள் (8)**

கல்பனாஸித்தி, பஞ்சகர்மீய ஸித்தி, ஸூத்ரீயஸித்தி ஸ்நேஹவ்யபதிகா ஸித்தி, நேத்யாரஸிவ்பதிகா ஸித்தி, வமன விரேசன வ்யாபத் ஸித்தி, வஸ்திவ்யாடாதிகா ஸித்தி.ப்ராஸ்ருத யோகிகா ஸித்தி, த்ரிமர்மீய ஸித்தி, வஸ்தி ஸித்தி, பலமாத்ரா ஸித்தி, உத்தர ஸித்தி என பன்னிரண்டு அத்தி யாயங்களுடன் ஸித்தி ஸ்தானம் முடிவடைகிறது. (66–68)

**வினாவின் இலக்கணம்**

ஒவ்வொரு ஸ்தானத்திலும் அத்தியாயத்திலும் ஸ்தானப் பொருள் அத்தியாயப்பொருள் கூறப்படும். அந்தந்த அத்தியா யம் ஸ்தானம் ஆகியவற்றின் பொருளுக்கு ஏற்ப ஸ்தானப் பொரு ளும் அத்தியாயப் பொருளும் கூறவேண்டும். எங்காவது ஏதாவது அத்தியாயப் பொருளில் முன்பின் இருப்பினும் ஏதாவது குறை ஏற்படினும் அறிவாளியான மருத்துவன் தன் அறிவுக்கேற்ப ஆராய்ந்து ஸ்தானப்பொருள், அத்தியாயப்பொருள் ஆகியவற் றைக் கூறவேண்டும். சாத்திரமரபுப்படி தக்க இடத்தில் தக்கவாறு கேட்கப்படுவதுதான் கேள்வியாகும்.

சாத்திர மரபு குன்றாமல் யுக்திகளுடன் வினாக்களை நன்கு ஆராய்ந்து அதற்கு ஏற்ப சாத்திர மரபுப்படி விடைகளைக் கூற வேண்டும். (69)

எல்லாப் பொருள்களையும் தன்னுள் வைத்துக் காப்பதால் தந்த்ரம் என்றும் பலவகைப் பொருள்களையும் தன்னுள் நிலை பெற்றிருக்குமாறு வைத்திருப்பதால் ஸ்தானம் என்றும் குறிப் பிட்ட பொருளைப் பற்றி விளக்கப்படுவதால் அத்தியாயம் என் றும் பெயர்கள் கூறப்படுகின்றன. (70)

இவ்வாறு எட்டு வினாக்களுக்கும் கேட்டபடி பலவகையான யுக்திகளுடன் ஆராய்ந்து முழுமையாக விடைகள் கூறப்பட்டன. இவ்வாறு முறைப்படி சாத்திரச் சுருக்கம் விளக்கப்பட்டது. (71)

பல மக்கள் இங்குமங்குமாக இரண்டொரு பொருள்களைக் கற்றுக்கொண்டு தம்மை அறிஞராக மதித்துக் கோபப்படுகின்ற னர். குருவீ அலகினால் ஒரு இலையைத் தூக்கி இங்குமங்கும் திருப்பி வைத்துப் பறந்து செல்லும். அது போன்றே இந்த அறி விலிகள் ஏதாவது ஒரு நூலின் ஒரு பகுதியைக் கற்று கர்வப்பட்டு தம்மை மருத்துவ மேதை எனக் கூறிக்கொண்டு செல்வர். அவர்

களைக் கண்டால் முதலில் இந்த எட்டு வினாக்களையும் கேட்க வேண்டும். இதனால் உண்மை அல்லது போலிப் பேச்சு பேசுவதிலும் ஒருவருக்கொருவர் பரீட்சை செய்வதிலும் அந்த அறிவிலிகளின் உண்மையான உருவம்) அதாவது ஆயுர்வேதத்தில் அவர்கள் அறிவு எத்தகையது என்பது நன்கு புலப்பட்டுவிடும். அதாவது உண்மையாக ஆயுர்வேத சாத்திரத்தை உணர்ந்தவர்களால்தான் அந்த எட்டு வினாக்களுக்கும் விடை அளிக்க இயலும். ஒரு பகுதியை உணர்ந்தவர் இந்த எட்டு வினாக்களைக் கேட்ட உடன் வில்லின் நாணொலியைக் கேட்ட குருவிபோல் பறந்து போய் விடுவர். *(72–73)*

வலிமையற்ற பசுக்கள் கூட்டத்தில் வலிமையான ஒரு பசு தன்னை ஓநாயாக நினைத்து வெறியாட்டம் போடும். ஆனால் அங்கு ஒரு ஓநாய் வந்தபோது அந்த வலிமையான ஓநாயாக எண்ணி வெறியாட்டம் ஆடிய பசுவும் பசுவாகவே ஆகிவிடுகிறது. அவ்வாறே அறிவிலிகளின் இடையே தற்புகழ்ச்சி பேசிவரும் மூடனும் தன்னை அறிஞனாகவும் பெரியவனாகவும் எண்ணிவருபவன் நல்ல அறிஞனைக் கண்டவுடன் அந்தப் பசுவைப் போன்றே தன் வாயை மூடிக்கொண்டு ஓடிவிடுகிறான். *(74–77)*

ரோமங்களில் மறைந்துள்ள கீரிபோல நூலறிவு இல்லாத அறிவிலி கீழான இனத்தில் பிறந்தவன் தன்னை உயர்ந்தவனாக மேல்பிறப்பு உள்ளவனாக கூறிவருபவன், தன்இனத்தைப் பற்றிப் பேசியவுடன் வாளாவிருப்பது போல அறிஞர்களுடன் வாதம் ஏற்படும்போது தன் நிலை வெளியாகிவிடுமோ என அஞ்சி வாளாவிருப்பான். *(78)*

சிறிதளவு படிப்பிருப்பினும் நல்லொழுக்கமுள்ளவராயின் அத்தகைய மருத்துவருடன் பகைமை கொள்ளக்கூடாது. மேலே கூறப்பட்ட எட்டு வினாக்களைக் கேட்டு அவர்களை தோற்கச் செய்வது கூடாது. ஆனால் மூடர், கர்வம் பிடித்தவர், தன்னைத்தானே பண்டிதனாக எண்ணி வருபவர், சபலசித்தமுடையவர், பாஷண்டிகள் இவர்களிடம் எட்டு வினாக்களைக் கேட்டு அவர்கள்சர்வத்தை அடக்கவேண்டும். *(79)*

பொதுவாக நல்லவர்கள் புன்முறுவலுடன் பணிவாகவும் நேர்மையான நடத்தையுடனும் எண்ணிப் பேசுபவராவர். மெய்யறிவு பெறுவதற்காக தான் எனும் அகங்காரத்தை மேற்கொள்ளார். சிற்றறிவுடன் நல்லொழுக்கமின்றித்திரியும் அறிவிலிகளுடன் விவாதம் செய்யமாட்டார்கள். எல்லா உயிர்களிடம் இரக்கமும், மெய்யறிவு பெறுவதில் பேரார்வமும் உடையவர் அவர்கள்

செய்யும் புரட்டு மிக்க அறிவிலிகளுடன் உரையாடுவது, வாதப் போர் புரிவது ஆகியவற்றை விரும்பமாட்டார்கள். அவர்களை விட்டு விலகி வாழ்வதையே விரும்புவர். (80–81)

பொய்யான பழிக்கத்தக்க கொள்கைகளை ஏற்கும் பாஷண்டி கள், கடின இயல்புடையவர், கோளுரைப்பவர் என இவர்கள் இந்த சாத்திரத்தால் எந்தப் பயனையும் பெறமாட்டார்கள். அதாவது தீயவர்கள் இந்த சாத்திரத்தைப் பயில இயலாது. இதனால் யமபாசக் கயிற்றைக் கண்டு அஞ்சுவதுபோல அந்த சாத்திரங்களைப் பழிக்கும்கயவர்களைத் தொலைவிலேயே விட் டொழிக்க வேண்டும். (82–83)

மன அடக்கமும் நூலறிவும் ஆன்ம அறிவும் நிறைந்த மருத்து வர்கள் நம்மால் வழிப்படத்தக்கவர். இவ்வுலகில் எல்லாத் துன்பங் களும் அறிவின்மையாலும், எல்லா இன்பங்களும் மெய்யறிவாலும் உண்டாகின்றன. (84–85)

கண்பார்வை கெட்டவர்களுக்குச் சதிரவனின் கதிர்களினால் எத்தகைய பயனும் இல்லாதது போல அறிவிலிகளுக்கு விலை மதிப்பில்லாத இந்த ஆயுர்வேத சாத்திரத்தால் சிறிதும் பயன் இல்லை. இந்த ஆயுர்வேத சாத்திரம் பரந்த பொருள்களைக் கொண்டது. தெளியாத பல பொருள்களையும் தெளியவைப்பது ஆகும் இச்சாத்திரம். (86)

**முடிவுரை**

இந்த அர்த்தே தசமூலீயம் எனும் அத்தியாயத்தில் மகா தசமூலங்களின் பெயர்கள், ஸ்தானம், ஆறு அங்கங்கள், ஆயுர்வேத அறிஞர்களின் இயல்புகள், ஏழு எட்டு கேள்விகளின் ஆராய்வு, அறுவகைப் பொருள்கள், ஆயுர்வேதத்தின் ஒரு பகுதி உணர்ந் தவர், அத்தியாயச் சுருக்கம், ஸ்தானச் சுருக்கம், சாத்திரப் பொருள் ஆகியவை விளக்கப்பட்டன. (87–89)

பூக்களைத் தொடுக்க நூல்போல் ஆயுர்வேத சாத்திரத்தின் சுருக்கத்தை இந்த ஸூத்ரஸ்தானத்தில் ஆத்ரேய புனர்வஸு இணைத்துள்ளார். அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகரால் சோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் ஸூத்ரஸ்தானம் நிறைவுறு கிறது. 90

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை ஸூத்ரஸ்தானத்தில் அர்த்தே
தசமகாமூலீயம் எனும் முப்பதாம் அத்தியாயம் முற்றும்.

# [1]நிதானஸ்தானம்

## முதல் அத்தியாயம்

## [2]ஜ்வர நிதானம்

சரகஸம்ஹிதையில் [3]ஜ்வர நிதானம் எனும் முதல் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். (1–2)

ஆயுர்வேத நூலில் ஹேது, நிமித்தம், ஆயதனம், கர்த்தா, காரணம், பிரத்யயம், ஸமுத்தானம், நிதானம் என இவை ஒரே பொருளைக் குறிப்பிடும் சொற்களாகும்.

அவற்றுள் நிதானம் என்பது 1. புலன்களுக்கு ஒவ்வாத பொருட்களுடன் புலன்கள் தொடர்பு கொள்ளுதல் 2. மதிக் குற்றத்தினால் ஏற்படும் செய்கைகள், 3. கால மாறுபாட்டினால் ஏற்படும் தீமைகள் என மூன்று வகைப்படும். 3

### 1. முக்காரணங்களால் ஏற்படும் பிணிகள்

ஆக்நேயம், ஸௌம்யம், வாயவ்யம் என்று கூறப்படும் நோய்களும் மூவகைப்படும். இவை முறையே பித்தம், கபம், வாதம் இம்மூன்றினாலும் தோன்றுகின்றன. (இவை மூன்றும் உடலில் உண்டாகக்கூடிய நோய்களுக்குக் காரணமாகின்றன) உள்ளத்தில் உண்டாகும் நோயும் ராஜசம், தாமசம் என்ற தோஷங்களைப் பொறுத்து இருவகைப்படும். 4

### 2. நோய்க்கு மாறு பெயர்கள்

வியாதி, ஆமயம், கதம், ஆதங்கம், யக்ஷ்மா, ஜ்வரம், விகாரம், ரோகம் என்ற இச்சொற்கள் யாவும் பிணி என்ற ஒரே பொருளில் பயன்படுத்தப்படுகின்றன. 5

### 3. பிணியைத் தெரிந்து கொள்ளும் வழிகள்

நிதானம், பூர்வ ரூபம், லிங்கம், உபசயம், ஸம்பிராப்தி என இந்த ஐந்து வழிகளால் நோய் தோன்றுதலை அறிந்து கொள்ளலாம். 6

---

1. நிதானம் — நோய்கள் தோன்றுவதற்குக் காரணம்.
2. ஜ்வர நிதானம்— காய்ச்சல் தோன்றுவதற்கான காரணங்களை விளக்குவதால் இவ்வத்தியாயம் ஜ்வரநிதானம் எனப்பெயர் பெறுகிறது.
3. ஜ்வரம் — காய்ச்சல்.

### 4. நிதான இலக்கணம்

நிதானம் என்றால் காரணம் எனப்பொருள். இது முன்பு ஸூத்ரஸ்தானத்தில் கூறப்பட்டுள்ளது. நோய் உண்டாவதற்கான காரணத்தை நிதானம் என்கிறோம். 7

### 5. பூர்வரூப இலக்கணம்

நோய் உண்டாவதற்கு முன் காணும் குறிகளை பூர்வரூபம் என்கிறோம். 8

### 6. லிங்க இலக்கணம்

நோய் வெளிப்படுதலின் குறிகளை ரூபம் அல்லது நோயின் இலக்கணம் என்கிறோம். இதற்கு லிங்கம், ஆக்ருதி, லக்ஷணம், சின்னம், ஸம்ஸ்தானம், வியஞ்ஜனம், ரூபம் என மாற்றுப் பெயர்களும் உண்டு. 9

### 7. உபசய இலக்கணம்

நோய், நோய்க்குக் காரணம், அதன் எதிரிடையான குணங்களையோ அக்குணங்களால் ஏற்படக்கூடிய மாறுதல்களையோ உண்டாக்கி நோயைத் தணிக்கும் மருந்து, உணவு, நடவடிக்கை என இவை உடலுக்கு நன்மையளிக்கக்கூடியனவாயிருந்தால் அவற்றை உடலுக்கு ஒத்துக்கொள்ளுதல் அல்லது உபசயம் என்றும் கூறுகிறோம். 10

### 8. ஸம்பிராப்தி இல்க்கணம்

நோய் தோன்றிய வகை, சீற்றமடைந்த தோஷங்கள் உடலில் பரவி நோயைத் தோற்றுவிக்கும் முறை அளவு ஆகியவற்றை அறிதல் ஸம்பிராப்தி எனப்படும்.

ஜாதி, ஆகதி என்ற மறுபெயர்களும் ஸம்பிராப்திக்கு உண்டு. 11

### 9. ஸம்பிராப்தியின் உட்பிரிவுகள்

ஸங்கியா, பிராதான்யம், விதி, விகல்பம், பலம், காலம் என்ற பிரிவுகளாக ஸம்பிராப்தி என்பது பிரிக்கப்படுகிறது.

#### (அ) [1]ஸங்கியை

எட்டு வகைக காய்ச்சல், ஐவகை குன்மம், ஏழுவகைக் குஷ்டம் என்று நோய்கள் பிரிக்கப்படும். கணக்கை ஸங்கியை என்ற சொல்லால் குறிப்பிடுகிறோம்.

#### (ஆ) பிராதான்யம்

தோஷங்களுடைய ஏற்றத் தாழ்வான சேர்க்கையைக்கொண்டு பிராதான்யத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

---

1. ஸங்கியை — கணக்கு.

### (இ) தோஷப் பாகுபாடு

(இ) இரண்டு தோஷங்களுக்கிடையே உள்ள பாகுபாட்டை 'தர' என்ற சொல்லாலும், மூன்று தோஷங்களுக்கிடையே ஏற்படும் பாகுபாட்டை 'தம' என்ற சொல்லாலும் குறிப்பிடுகிறோம்.

### (ஈ) விதி

பிணியை இயற்கையாகத் தோன்றியவை, வெளிக்காரணங்களால் தோன்றியவை என இரண்டு வகையாகவும், வாத பித்த கபங்களை வைத்து மூவகையாகவும், போக்கத்தக்கது, போக்கத் தகாதது எளிதில் நீக்கக்கூடியது, கடும் முயற்சியினால் நீக்கக் கூடியது என்பதை வைத்து நான்கு வகையாகவும் பிரிக்கலாம்.

### (உ) விகல்பம்

தோஷங்களின் சேர்க்கையில் தோன்றும் ஒவ்வொரு தோஷத்தின் அளவின் தன்மையை விளக்கிக்கூறுவது விகல்பமாகும்.

### (ஊ) பலம், காலம் இவற்றின் இலக்கணம்

வசந்தம் முதலான பருவங்கள், நாள், உணவு உட்கொள்ளும் நேரம் என்று குறிப்பிட்ட காலத்தில் தோன்றும் தோஷத்தால் வரும் நோய் வகையைக் கொண்டு, அந்நோய்களுக்கு பலம் காலம் இவற்றை முடிவு செய்யும் முறை பல கால ஸம்பிராப்தி எனப்பெயர் பெறும். (12)

அறிவாளியான மருத்துவன் ''நிதானம்'' போன்ற ஐந்து இலக்கணங்களால் பிணியை முறைப்படி ஆராய்ந்து அறிய வேண்டும். (13)

இவ்வாறு சுருக்கமாக நிதான வகைகள் விளக்கப்பட்டன. பிறகு விரிவாகவும் ஏற்றத்தாழ்வு பற்றியும் விளக்குவோம்.

### (எ) நிதானஸ்தானத்தில் கூறப்பட்டவை

முறையே பேராசை, வஞ்சகம், சினம் இவற்றால் தோன்றும் எண்வகையான நோய்களை நிதானம் தொடங்கி வரிசையாக விவரிப்போம். (14)

நோய்களின் வளர்ச்சியை ஒட்டி அவற்றின் சிகிச்சை முறை சுருக்கமாக இங்கு கூறப்படினும் பிறகு சிகிச்சை எனும் பகுதியில் நோய்களுக்கு தக்கவாறு அதைப் பேசுவோம். (15)

உடலில் தோன்றும் நோய்களுள் முதலாவதாகக் கருதப்படும் காய்ச்சலைப்பற்றி முதலில் கூறப்படுகிறது. (16)

## 10. எண்வகைக் காய்ச்சலும் அவற்றின் காரணங்களும்

*1. வாதம், 2. பித்தம், 3. கபம், 4. வாத-பித்தங்கள். 5. வாத-கபங்கள், 6. பித்தகபங்கள் 7. வாத-பித்த-கபங்கள், 8. எதிர்பாராத காரணம் என எட்டுவகையான காரணங்களி னால் காய்ச்சல் உண்டாகிறது.* (17)

அவைகளுக்குத் தேவையான நிதானம், முற்குறி, இலச்சணம், [1]உபசயம் [2]ஸம்பிராப்தி ஆகிய இவற்றின் சிறப்புகளை விளக்குவோம். (18)

## 11. வாதத்தின் சீற்றத்திற்குக் காரணம்

வறட்சி, இலகு குணமுள்ள பொருட்கள் குளிர்ச்சியுள்ள பொருட்கள் இவற்றைப் பயன்படுத்துதல், உடல் உழைப்பு, வாந்தி, பேதி, [3]கஷாய வஸ்தி [4]சிரோவிரேசனம் இவற்றை அதிகம் பயன்படுத்துதல், சிறுநீர் மலம் இவற்றின் வேகத்தை அடக்குதல், பட்டினி கிடத்தல், அடிபடுதல், புணர்ச்சி, மன எழுச்சி, வருத்தம், அதிகம் இரத்தம் வெளியேறுதல், இரவில் கண் விழித்தல், உடலை மேலும் கீழும் குறுக்காகவும் வளைத்தல் ஆகிய இவற்றை அதிகம் கடைபிடிப்பதனால் வாதம் சீற்றமடை கிறது. (19)

## 12. சீற்றமடைந்த வாதத்தின் செயல்கள்

சீற்றமடைந்த வாதம் இரைப்பையில் சென்று அங்குள்ள சடராக்னியுடன் கலந்து, முதலாவதான ரசம் எனும் தாதுவுடன் கலந்து, ரசம் வியர்வை இவற்றை உடலில் பரப்பும் நாளங் களின் துவாரங்களை அடைத்து, உணவை சீரணிக்கச் செய்யும் இடத்தில் சடராக்னியின் ஆற்றலைக் குறைத்து, சீரணமாகிற இடத்திலிருந்து சடராக்னியை உடலின் வெளிப்பகுதிகளிலே கொண்டு வந்து உடல் முழுவதும் சூட்டை வெளிப்படுத்தி காய்ச் சலைத் தோற்றுவிக்கிறது. (20)

---

(1)உபசயம் — நோயாளிக்கு நன்மையளிக்கும் உணவு, மருந்து, நடைமுறைஇவற்றைக்கொண்டு நோய் தணிவதன் மூலம் நோயை அறிவது.

(2)ஸம்பிராப்தி — சீற்றமடையும் தோஷங்கள் உடலில் பரவி, நோயை உருவாக்கும் நிலை.

(3)கஷாய வஸ்தி — வஸ்தி கொடுக்கும் கருவியினால் ஆசனத் துவார மூலமாக கஷாயத்தைச் செலுத்திக் குடலைக் கழுவும் முறை.

(4)சிரோவிரேசனம் — தலையில் உள்ள தோஷங்களை நஸ்யம் எனும் மூக்கிலிடும் மருந்துகளால் நீக்குவது.

13. வாதச் சுரத்தின் அறிகுறிகளும், அதனால் ஏற்படும் துன்பங்களும்

சுரம் அதிகரிக்கும்போதும், குறையும்போதும், உடலில் உள்ள சூடு ஒரே நிலையில் இருக்காது. உடல் சூடு மிகுதியாகவும், குறைவாகவும் மாறி மாறி இருக்கும். உணவு சீரணமாகும் கடைசி நேரத்தில், மாலை விடியற்காலம் மழைக்காலம் இச்சமயங்களில் சுரம் தோன்றலாம். அல்லது அதிகமாகவும் ஆகலாம்.

நகங்கள், கண்கள், முகம், சிறுநீர், மலம், தோல் ஆகிய இவை சிவந்து வரண்டு போகும். உடலுறுப்புகளில் தோஷங்கள் அடிக்கடி ஓடுவது போலவும் நிற்பது போலவும் ஓர் உணர்வு வாயுவினால் உண்டாகும்.

கால்களில் உணர்ச்சியின்மை, ஆட்டுச்சதை முறுக்குவது போன்றிருத்தல், முழங்காலும் மற்ற உறுப்புக்களின் மூட்டுக்களும் தளர்ச்சியடைதல், இரண்டு தொடைகளும் அசைவற்றுப் போதல், வலிவுக்குறைவு போன்றவை அதன் அடையாளங்கள்.

இடுப்பு முதுகு தோள்பட்டை தோள் மார்பு இவற்றில் உடைப்பது போன்றும், பிடித்து விடுதல் போன்றும், மத்தால் கடைவது போன்றும், மேலும் வலிப்பது போன்றும், முறிப்பது போன்றும், ஊசியால் குத்துவது போன்றும் உணர்வு, தொடை வலிவின்மை, தாடை நெகிழுதல், உடல் துடித்தல், செவிகளில் ஓசை, பொட்டுக்களில் ஊசி குத்துவது போன்ற வலி ஆகியவை உண்டாகும்.

வாயில் துவர்ப்பு, நாக்கில் அருவருப்பு, முகம் தாடையின் உட்புறம் தொண்டை இவற்றில் வறட்சி, தாகம், இதயப்பிடிப்பு, வரட்டு இருமல், வரட்டு வாந்தி, தும்மல், ஏப்பம் தடைபடுதல், எல்லாச் சுவைகளிலும் வெறுப்பு, சுவையின்மை, துப்புதல், அசீர்ணம், மனக்கவலை, அதிகமான கொட்டாவி, உடல்கூனுதல், நடுக்கம், சோர்வு, தலைச்சுற்றல், உளறுதல், தூக்கமின்மை, மயிர்கூச்சல், பல்கூசுதல், சூடு வெயில் இவற்றின்மீது விருப்பம் ஆகியவைகளும் உண்டாகலாம்.

வாதத்திற்கு எதிரிடையான சூடும் வழவழப்பும் உள்ள பொருட்களினால் நோய் குணமடைதலும், இதேபோல் வாயுவுக்கு ஒத்ததான வறட்சி குளிர்ச்சியான பொருள் இவற்றால் உடலுக்கு சுகம் ஏற்படாமல் நோய் மிகைப்படுதலும் வாதச் சுரத்தின் அறிகுறிகளாகும். (21)

## 14. பித்தச் சீற்றத்தின் அறிகுறிகள்

சூடு, புளிப்பு உப்பு [1]க்ஷாரம் உவர்ப்புச் சுவையுள்ள பொருட்களை உண்ணுவது, அசீர்ணத்தைத் தோற்றுவிக்கும் பொருட்களை மிதமிஞ்சிப் பயன்படுத்துதல், அதிகமான சூடு வெயில் நெருப்பு கொதிப்பு களைப்பு கோபம் காலம் தவறி உண்ணுதல், அதிகம் அல்லது குறைந்த அளவு உணவு உண்ணுதல் ஆகியவற்றால் பித்தம் சீற்றமடைகிறது. (22)

சீற்றம் அடைந்த பித்தம் இரைப்பையில் உள்ள பித்தத்தை அதிகப்படுத்தி, சீரணமடைந்த உணவினின்றும் முதன்முதலில் தோன்றும் ரசதாதுவுடன் கலந்து, வியர்வையும் ரசதாது பரவுகின்ற துவாரங்களையும் அடைத்து, அதன் திரவகுணத்தினால் சடராக்னியைத் தணிக்கச் செய்து சீரணிக்கும் இடத்தில் உள்ள உஷ்ணத்தை வெளிக்கிளப்பி விடுகிறது. அதனால் பித்தம் தன்னுடைய சுயசக்தியைப் பெற்று உடல் முழுவதும் பரவி, துன்புறுத்திப் பித்த சுரத்தைத் தோற்றுவிக்கிறது.

## 15. பித்தச் சுரத்தின் அறிகுறிகள்

உடலில் ஒரே நேரத்தில் கடுமையான சுரம் உண்டாகி வேகம் அதிகரிக்கும். உணவு சீரணிக்கும் போதும், நடுப்பகலிலும், சரத்ருதுவிலும் (ஐப்பசி, கார்த்திகை) நள்ளிரவிலும், சித்திரை வைகாசி மாதங்களிலும் சுரம் தோன்றி, குறிப்பாகக் கடுமையான நிலையை அடையும். வாயில் காரஉணர்ச்சி, மூக்கு வாய் தொண்டை உதடுகள் தாடையின் உட்பகுதி இவற்றில் அழற்சி ஏற்படும். தாகம், தலைச்சுற்றல், மதம், மூர்ச்சை, பித்த நீர் உண்டாதல், வாந்தி, பேதி, உணவில் வெறுப்பு, உடல் ஓய்ச்சல், வியர்வை, வாய் பிதற்றல், உடலில் செந்நிறக் கொப்புளங்கள் ஆகிய இவை ஏற்படும்.

கண் நகம் முகம் சிறுநீர் உடல் தோல் இவை மஞ்சள் நிறமாக மாறும். உடற்சூடும் கடுமையாகும். அதிக எரிச்சல் தோன்றும். குளிர்ச்சிப் பொருட்களில் விருப்பம் ஏற்படும்.

நிதானத்தில் கூறியுள்ள பொருட்களை உபயோகிப்பதால் பிணி வளர்ச்சியடைதல், அதற்கு எதிரிடையான குளிர்ச்சி தரும் பொருட்களைப் பயன்படுத்துவதனால் உடலுக்கு சுகமின்றி பிணி குணமடைதல் என இக்குறிகள் பித்தத்தினால் தோன்றும் சுரத்தின் அறிகுறிகளாம். (23–24)

---

(1)க்ஷாரம் – உவர்ப்பும், உப்பும் மிகுதியாக உள்ள உடலைக் கெல்லும் சக்திவாய்ந்த பொருள்.

## 16. கபம் சீற்றமடையக் காரணம்

பசையுள்ள உணவுகள், குருகுணமுள்ளதும் இனிப்புச் சுவை யுள்ளதும் குளிர்ந்ததும் ஈரப் பிசுக்குள்ளதுமான பொருட்கள், புளிப்பு, உப்பு, பகலில் உறங்குதல், களிப்படைதல், உடற்பயிற்சி, கபத்தை வளர்க்கின்ற உணவுப் பொருட்களை மிதமிஞ்சி உண்பது ஆகியவற்றால் கபம் சீற்றமடைகிறது. (25)

## 17. சீற்றமடைந்த கபத்தின் செயல்கள்

இரைப்பையில் கபம் சீற்றமடையும்போது அங்குள்ள சடராக்னியுடன் கலந்து உணவிலிருந்து முதலில் பக்குவமாகும் ரச தாதுவுடன் சேர்ந்து ரசத்தையும் வியர்வையையும் பரப்பும்நாளங்களை அடைந்து அக்னியின் பலத்தைக் குறைத்துவிடுகிறது.

[1]சடராக்னி தணிந்தபின் சீரணத்தை அளிக்கும் சக்தி படைத்த [2]பாசகாக்னியின் சூட்டை அதன் இடத்திலிருந்து வெளிப்படுத்தி துன்புறுத்தி உடல் முழுவதும் பரவி காய்ச்சலைத் தோற்றுவிக்கிறது. (26)

## 18. கபச் சுரத்தின் அறிகுறிகள்

ஒரே சமயத்தில் உடல் முழுவதும் காய்ச்சல் பரவி குறிப்பாக உணவுண்டவுடனே முற்பகல், இரவின் தொடக்கம், வசந்த ருது இவற்றில் சுரம் தோன்றும்; அல்லது அதிகரிக்கும்.

உடலில் பாரம், உணவில் விருப்பமின்மை, கபம் வெளிப்படுதல், இனிப்புச் சுவை தோன்றல், மனப்பிரட்டல், இதயத்தில் கபம் தருவது போன்றதோர் உணர்வு, உடல் மறத்துப்போதல், வாந்தி, சடராக்னிக் குறைவு, மிகுதியான உறக்கம், உடல் அசை வற்றுப்போதல், சோம்பல், சுவாசம், இருமல், ஜலதோஷம், குளிர்ச்சி ஆகிய இவை தோன்றும்.

கண் நகம் முகம் சிறுநீர் மலம் உடல் தோல் இவைவெளுத்துப் போய் வெண் தழும்புகள் அதிகம் ஏற்பட்டு சூடான பொருள் களில் விருப்பமும் அதிகரிக்கும்.

மேலும் நிதானத்தில் கூறியபடி கபத்தை அதிகமாக்கும். உணவுப் பொருட்களைப் பயன்படுத்துவதால் சுகம் குறைதல், இவற்றிற்கு எதிரிடையான வறட்சி உஷ்ணம் உடைய பொருட்

(1) சடராக்னி

(2) பாசகாக்னி உணவைச் சீரணிக்கச் செய்யும் ஒருவிதத் தீ.

களால் சுரம் தோன்றுதல், சுரம் குணமாதல் ஆகிய இவை கபத்தினால் உண்டாகும் சுரத்தின் அறிகுறிகள். (27)

## 19. இரண்டு தோஷங்களின் சேர்க்கையினால் அல்லது மூன்று தோஷங்களின் சேர்க்கையினால் தோன்றும் சுரத்திற்குக் காரணம்

தகாத உணவை உட்கொள்ளல், உணவு உட்கொள்ளாமை, உணவை மாறி மாறி உட்கொளல், பருவங்களின் மாறுபாடு, பருவக்கோளாறு, தகாத மணமுள்ள பொருட்களை நுகர்தல், நஞ்சு கலந்த நீரைப் பருகுதல், இடு விஷம், மலையருகில் வசித்தல், எண்ணெய்ச் சிகிச்சை, வியர்வை சிகிச்சை, வாந்தி பேதிக்கான சிகிச்சை, [1]கஷாய வஸ்தி, [2]எண்ணெய் வஸ்தி, [3]சிரோவிரேசனம் இவற்றைத் தவறான முறையில் தேவைக்குத் தக்கவாறு இல்லாமல் செயல்படுத்தல், விரோதமான பத்திய முறைகள், காலமில்லாக் காலத்தில் பெண்களுக்கு ஏற்படும் பிரசவம், அல்லது பிரசவ சமயத்தில் பத்தியமில்லா உணவுகளை உட்கொள்ளல், மேற்கூறிய வாத பித்த கபங்களின் சீற்றத்திற்குக் காரணங்களின் சேர்க்கை ஆகிய இவையனைத்தாலும் இரண்டு தோஷங்கள் சீற்றமடைகின்றன. மூன்றுதோஷங்களையும் சீற்றமடையச் செய்கிற காரணங்களின் சேர்க்கையால் மூன்று தோஷங்களும் ஒரே சமயத்தில் சீற்றமடைகின்றன. பிறகு சீற்றமடைந்த தோஷங்கள் சுரத்தைத் தோற்றுவிக்கின்றன. (28)

## 20. இரண்டு தோஷங்களின் சேர்க்கையினால் தோன்றும் சுரத்தின் அறிகுறிகள்

சீற்றமடைந்த தோஷங்கள் இரண்டு தோஷங்களினால் ஏற்படும் சுரத்தையோ அல்லது மூன்று தோஷங்களினால் ஏற்படும்

---

(1) கஷாய வஸ்தி – ஏதேனும் ஒரு கருவியினால் ஆசனத் துவாரத்தின் வழியாகக் கஷாயத்தைச் செலுத்துவது.

(2) எண்ணெய்வஸ்தி – ஏதேனும் ஒரு கருவியினால் ஆசனத் துவாரத்தின் வழியாக எண்ணெயைச் செலுத்துவது.

(3) சிரோவிரேசனம் – தலையில் உள்ள தோஷங்களை மூக்கிவிடும் மருந்தினால் நீக்குவது.

சுரத்தையோ தோற்றுவிக்கின்றன. இருதோஷங்கள் சீற்றமடைந்து இரட்டை தோஷங்களினாலான சுரத்தைத் தோற்றுவிக்கின்றன.

மூன்று தோஷங்கள் சீற்றமடைந்தால் ஸந்நிபாதம் எனும் சுரம் உண்டாகிறது. (29)

## 21. எதிர்பாராது திடீரென்று வரும் சுரம்

உடலில் அடி முதலிய தாக்குதல், காமம், கோபம், எதிரிகளை அழிக்கச் செய்யும் [1]அபிசாரம் என்ற ஏவல் வேள்வி, பிறரிடும் சாபம் இவற்றால் எதிர்பாராத சுரம் ஏற்படுகிறது. இத்தகைய திடீர் சுரம் தோஷ சீற்றங்களின் குறிகளை உண்டாக்காமல் துன்பத்தை உண்டு பண்ணுகிறது.

இதையும் சேர்த்து சுரம் எட்டு வகையாகும். திடீர் சுரம் முதலில், தான் வெளிப்பட்டு பிறகு வாதம், பித்தம், கபம் இவற்றின் இலக்கணங்களும் கலந்துவிடுகின்றன. திடீர் சுரத்தில் முதலில் நோய் உண்டாகி பிறகு வாதம் முதலான தோஷங்கள் சீற்றமடைகின்றன.

அடி முதலிய தாக்குதலினால் ஏற்படும் திடீர் சுரம் வாத தோஷத்தினால் கேடடைந்த ரத்தத்தை இருப்பிடமாகக் கொண்டும், காமம் கோபம் போன்றவற்றால் ஏற்படும் திடீர் சுரம், வாதம் பித்தம் இவற்றை இருப்பிடமாகக் கொண்டும், எதிரிகளை அழிக்கச் செய்யும் அபிசாரிக வேள்வியினால் ஏற்படும் சுரம், பிறரிடும் சாபத்தினால் தோன்றும் சுரம் இரண்டும் வாதம், பித்தம், கபம் மூன்று தோஷங்களை இருப்பிடமாகக் கொண்டும் ஏற்படுகின்றன. (30)

இந்தத் திடீர் சுரத்திற்குத் தனிப்பட்ட குறிகள், சிகிச்சை, காரணம் போன்றவை தனியாக இருப்பதனால் ஏழுவகை சுரங்களைக் காட்டிலும் இது தனிப்பட்டது என அறிய வேண்டும். இந்தச் சுரம் பொதுவான சிகிச்சையினால் நீங்கி விடுகிறது.

ஆதலால் சுரம் எட்டு வகையெனக் கூறப்பட்டுள்ளது. (31)

## 22. வேறுவகையான சுரங்களின் பிரிவு

சூட்டினால் வரும் சுரம் ஒரே வகை. தோஷங்கள் சீற்றமடைவதால் உண்டாகும் சுரம் (நிஜம்) என்றும், எதிர்பாராதது அடிபடுதல் முதலியவற்றால் ஏற்படும் சுரம் (ஆகந்துகம்) என்றும் இரண்டு வகையாக அதைப் பிரிக்கின்றனர்.

---

(1) அபிசாரம் — பகைவனை அழிக்கச் செய்யும் வேள்வி.

தோஷங்களின் பிரிவுகளால் நிஜம் என்ற சுரமும் [1]இரு வகை [2]மூவகை [3]நான்கு வகை [4]ஏழுவகை என மருத்துவர் சிலர் கூறுகின்றனர். (32)

## 23. சுரத்தின் முற்குறிகள்

வாயில் அருவருப்பு, உடல் பளு, உணவில் அவாவின்மை, கண்களில் கலக்கம், கண்களில் நீர் வடிதல், அதிகமான தூக்கம், எதிலும் நிலை கொள்ளாமை, கொட்டாவி, உடல் வளைத்து முறுக்குதல், நடுக்கம், ஒய்ச்சல், தலைச்சுற்றல், புலம்பல், கண் விழித்தல், மயிர் கூச்சல், பற்கள் கூசுதல் ஆகிய இவை சுரத்திற்கு முன் தோன்றும் குறிகள்.

மேலும் ஒலி, குளிர், காற்று, வெயில் இவற்றில் விருப்பும் வெறுப்பும் அடிக்கடி மாறி மாறியுண்டாகும். சுவையின்மை, அசிரணம், வலிவுக்குறைவு உடல்வலி, மனத்தளர்ச்சி, சக்திக் குறைவு, செயல்களில் தாமதம், சோம்பல், தன் வேலைகளிலும் ஈடுபாடின்மை, ஆசான்களின் ஆணைகளில் வெறுப்பு, குழந்தை களிடம் வெறுப்பு, தன் கடமைகளில் கவலையின்மை ஆகிய இவை ஏற்படும். மேலும் மாலை அணிதல், பூச்சுப் பூசிக் கொள்ளுதல், உணவு இவற்றில் விருப்பமின்மையும், இனிப்புச்சுவைப் பொருட் களில் வெறுப்பும், புளிப்பு உப்பு கார்ப்புச் சுவையுள்ள பொருட் களில் விருப்பமும், உடலில் சூடு உண்டாவதற்கு முன் தோன்றக் கூடிய சுரத்தின் குறிகளாகும். சுரம் ஏற்பட்ட பிறகும் மேற் கூறிய குறிகள் தொடரும். (33)

இவ்வாறு சுரத்தின் முற்குறிகள் தனியாகவும், சுருக்கமாக வும் விளக்கமாகவும் கூறப்பட்டன. (34)

---

(1) இருவகை – சூடு, குளிர்ச்சி இவற்றில் விருப்பம் ஏற்படுவதன் மூலம் இருவகைப்படும்.

(2) மூவகை – வாதம், பித்தம், கபம் என்பதன் பிரிவினால் மூவகையாகும்.

(3) நான்கு வகை – வாதம், பித்தம், கபம், சன்னிபாதம் என நான்கு வகையாகும்.

(4) ஏழுவகை – வாதம், பித்தம், கபம், வாதபித்தம், வாதகபம், பித்தகபம், ஸன்னிபாதம் என்று ஏழுவகையாகவும் கூறுவர்.

## 24. சுரத்தின் தோற்றம்

சுரம் மகேசுவரனுடைய கோபத்தினால் உண்டானது. உயிரினங்களின் உயிரையும் அழிக்கவல்லது. அது, உடல் புலன்கள் மனம் இவற்றிற்குத் துன்பத்தைத் தரும். மதி, சக்தி, நிறம், மகிழ்ச்சி, உற்சாகம் இவற்றைப் போக்கடிக்கும். களைப்பு, ஓய்ச்சல், மயக்கம் இவற்றை உண்டாக்கும். உணவில் வெறுப்பைத் தோற்றுவிக்கும்.

உடலில் சூட்டைத் தோற்றுவித்து தாதுக்களை எரித்து உடலை உருக்குவதனால் இதற்கு சுரம் என்ற பெயர் ஏற்பட்டது. பிணிகளில் இதைப்போல் கடுமையானதும், பலவித இன்னல்களைத் தருவதும் சிகிச்சைக்குக் கட்டுப்படாததும் வேறு எந்த நோயிலும் இல்லை. சுரம் எல்லா நோய்களுக்கும் அரசன்போல் விளங்குகிறது. அது உயிரினங்களுக்குத் தோன்றும்போது பற்பலப் பெயர்களைப் பெறுகின்றது. உயிரினங்கள் யாவும் சுரத்துடன் தோன்றி சுரத்துடனேயே மடிகின்றன.

இந்த சுரம் மிக்க மதி மயக்கத்தைத் தோற்றுவிக்கிறது. இதனால் தாக்குண்ட மனிதன் முற்பிறவிகளின் நினைவுகளை இழந்து விடுகின்றான். சுரம்தான் முடிவில் எல்லாப் பிராணிகளுடைய உயிரையும் எடுத்துச் செல்கிறது. (35)

## 25. காய்ச்சலின் முற்குறிகள் தோன்றும்போது செய்ய வேண்டிய மருத்துவம்

காய்ச்சல் முதலில் இரைப்பையில் இருந்து உண்டாவதால் முற்குறிகள் தோன்றியவுடன் நன்மை பயப்பதும் எளிதில் சீரணமாகக் கூடியதுமான உணவை உட்கொள்ள வேண்டும். அல்லது பட்டினியிருத்தல் மேலானது.

பிறகு கஷாயம் குடித்தல், எண்ணெய் சிகிச்சை, வியர்வை சிகிச்சை, மேற்பூச்சு இடுதல், சுடுநீர் ஊற்றுதல் அதன்பிறகு பற்றுப்போடுதல், வாந்தி, பேதி, கஷாயவஸ்தி, எண்ணெய் வஸ்தி, நோயை தணிக்கச் செய்யும் சிகிச்சை, மூக்கில் மருந்திடும் சிகிச்சை, வெப்பம், புகைபிடித்தல், மையிடுதல், பால் கலந்த உணவு அருந்துதல் ஆகிய இவற்றைத் தக்கவாறு பயன்படுத்த வேண்டும். (36)

## 26. நாட்பட்ட காய்ச்சலுக்குச் சிகிச்சை

எல்லா வகையான நாட்பட்ட காய்ச்சலிலும், தோஷங்களின் அறிகுறிகளுக்கு ஏற்றதான பொருட்களால் தயாரிக்கப்பட்ட நெய்யைப் பருகுவது மிக நல்லது. நெய்யில் எண்ணெய்ப் பசை

உள்ளதால் அது வாதத்தைத் தணிக்கிறது. கபத்தைத் தணிக்கும் பொருட்களால் தயாரிக்கப்பட்ட நெய் கபத்தைத் தணிக்கிறது. நெய் குளிர்ச்சித் தன்மை பெற்றிருப்பதனால் பித்தத்தையும், சூட்டையும் தணிக்கச் செய்கிறது.

ஆகையால் நெருப்புப் பற்றிய பொருட்களில் நீரை ஊற்றினால் அணைந்துவிடுவதுபோல் எல்லாவகையான நாட்பட்ட காய்ச்சல்களும் நெய் அருந்துவதால் தணிந்துவிடுகின்றன. (37)

## இதைப் பற்றிய செய்யுட்கள்

''நெருப்புப் பற்றி எரிகின்ற வீடு நீரை ஊற்றுவதினால், அணைந்துவிடுவதுபோல் நாட்பட்ட காய்ச்சலில் நெய் அருந்துவது காய்ச்சலைத் தணியச் செய்கிறது.''

''நெய்யில் எண்ணெய்ப் பசை இருப்பதனால் வாதத்தைத் தணிக்கிறது. குளிர்ச்சி எனும் குணத்தினால் பித்தத்தை தணிக்கிறது. நெய்யும் கபமும் ஒரே குணம் உடையதாக இருந்தாலும் கபத்தைத் தணிக்கும் பொருட்களால் செய்யப்பட்ட நெய் கபத்தினால் உண்டாகும் காய்ச்சலைத் தணிக்கிறது.''

''தான் சேரும் பொருட்களில் குணங்களை ஏற்றுக்கொண்டு, தன் குணத்தையும் இழக்காமலிருக்கும் தன்மை நெய்யைத் தவிர மற்ற எந்தப் பொருட்களுக்கும் கிடையாது. எனவே மற்ற எண்ணெய்ப் பசையுள்ள பொருட்களைவிட நெய் மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது. (38–40)

உரைநடையில் கூறியவற்றையே மறுபடியும் செய்யுள் நடையில் கூறுவது தவறு அல்ல. செய்யுள் நடை மிக எளிதில் அறியவும் நினைவில் வைத்துக் கொள்ளவும் பயன்படுவதால் கூறியவற்றைத் திருப்பிக் கூறுதல் என்ற குற்றமில்லை.''

**முடிவுரை**

சுரநிதானம் எனும் இவ்வத்தியாயத்தில் காய்ச்சலுக்கான மூன்று காரணங்கள், நோயைக் கண்டுபிடிக்கும் ஐந்து முறைகள் ஐந்துவகையான நோயின் அறிகுறிகள், ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள், அவற்றின் சுருக்கம், எண்வகைக் காய்ச்சல், காய்ச்சலுக்கான அருகில் உள்ள காரணங்கள், தொலைவில்

உள்ள காரணங்கள், முற்குறிகள், குறிகள், சுருக்கமான மருத்துவ முறை என்ற இவற்றை எல்லாம் உணர்ந்து தாபம் நீங்கிய ஆத்ரேய மாமுனிவர் வணக்கத்துடன் கூடிய தன் சீடனான அக்னிவேசனுக்கு இந்த நிதான ஸ்தானத்தில் உபதேசித்தருளினார்.

(41–44)

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு
சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட
சரகஸம்ஹிதையில் நிதானஸ்தானத்தில்
ஜ்வரநிதானம் எனும் முதல்
அத்தியாயம் முற்றும்.

## இரண்டாவது அத்தியாயம்

## *ரத்தபித்த நிதானம்

இரத்தபித்த நிதானம் எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். (1–2)

இயற்கையான பித்தம், லோஹித பித்தம் எனும் பெயர் பெறுகிறது. அதைப்பற்றி விளக்குவோம். (3)

யவதானியம், கேழ்வரகு, வரகு இவற்றை உணவில் அதிகம் சேர்த்து உண்பது, மிக்க உஷ்ணவீர்யமும் தீக்ஷ்ணகுணமும் உள்ள உணவு வகைகளைப் புசித்தல், மொச்சை உளுந்து கொள்ளு பருப்புவகை [1]க்ஷாரப்பொருட்கள் இவற்றை அதிக அளவில் உபயோகித்தல், தயிர் தயிர்த்தெளிவு மோர் நீர்கலவாத மோர் புளிப்பான மோர் காடி இவற்றைப் பயன்படுத்தல், பன்றி எருமை செம்மறியாடு மீன் பசு இவற்றின் புலாலை உண்பது, பிண்ணாக்கு, கிழங்கு வகை, உலர்ந்த காய்கறிகள், இவற்றைப் பயன்படுத்துதல் முள்ளங்கி கடுகு பூண்டு புங்கு முருங்கை கலியாண முருங்கை படர்புல் துளசி காட்டுத் துளசி கருந்துளசி சிறுகீரை கரும்புல் பெரும்பயறு கற்பூரத் துளசி இவற்றைப் பயன்படுத்துதல், கள் ஸௌவீரம் [2]துஷோதகம் மைரேயம் மேதகம் மதூலகம் சுக்தம் என்ற புளிப்புக் கள்வகை,

இலந்தை பேரிலந்தை புளிப்புச்சுவை அதிகமுள்ள பொருட்கள் இவற்றை உணவுடன் சேர்த்துப் பருகுதல், பெருமளவு மாவுப் பண்டங்களை உண்பது, வெயிலில் காய்தல், காய்ச்சாத பாலை பல தடவை மிகுதியாகப் பருகுதல், ரௌஹிணீகம் என்ற மீனைப்

---

*ரத்த பித்தம் – பித்தம் வேக்காடு அடைந்து அதனால் இரத்தம் அழன்று உடலில் உள்ள ஏதேனும் ஒரு வழியால் அந்த தோஷம் வெளியாதல். இதைப்பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

(1) க்ஷாரப்பொருட்கள் –கார்ப்பும் உப்பும் அதிகமாக உள்ளதும், உடலைக் கெல்லும் சக்தியுடையதுமான பொருட்கள்.

(2) துஷோதகம் – காடி என்றும் தான்யாம்லம் என்றும் பெயர்கள் உண்டு.

பாலுடன் கலந்து உண்பது, காட்டுப்புறாவின் புலாலை கடுகு எண்ணெயில் க்ஷாரப்பொருட்களுடன் பக்குவம் செய்து உண்பது வெயிலில் அலைந்தபின் கொள்ளு பிண்ணாக்கு நாவற்பழம் எலுமிச்சம்பழம் இவற்றைக் காடியில் பக்குவம் செய்து உண்பது, அல்லது பாலுடன் கலந்து உண்பது ஆகியவற்றால் பித்தம் சீற்ற மடைகிறது. இரத்தமும் தன் அளவில் அதிகமாகிறது. அதிகரித்த பித்தம் சீற்றமடைந்து உடல் முழுவதும் பரவுகிறது. பிறகு கல் லீரல் மண்ணீரல் இவற்றில் உண்டாகும் இரத்தத்தை எடுத்துச் செல்லும் நாடித் துவாரங்களின் முகத்தை இரத்தத்தில் கலந் திருக்கும் பசையினாலும், குருகுணத்தினாலும் தடுத்துவிடுகிறது. அதே பித்தம் இரத்தத்தையும் கெடுத்துவிடுகிறது. (4)

இரத்தத்தின் சேர்க்கையினாலும், இரத்தத்தைக் கெடுப்ப தாலும், இரத்தத்தின் மணம், நிறம் இவற்றைப் பெற் றிருப்பதாலும் இது லோஹித பித்தம் (ரத்த பித்தம்) எனப் பெயர் பெறுகிறது. (5)

### (1) ரத்தபித்தத்தின் முற்குறிகள்

உணவில் அவாவின்மை, உண்டபின் மார்பிலும் வயிற்றிலும் எரிச்சல், நாற்றமுள்ள புளிப்பு ஏப்பம், அடிக்கடி வாந்தி, பிறருக்கு அருவருப்பைத் தோற்றுவிக்கும் வாந்தி, குரல் மாற்றம், உடல் ஓய்ச்சல், உடல் முழுவதும் எரிச்சல், வாயிலிருந்து புகை வெளி வருவது போன்ற உணர்ச்சி, இரும்பு, இரத்தம், மீன், புலால் இவற்றின் வாடை வாயில் வீசுதல், உடல் உறுப்புகள், மலம், சிறுநீர், வியர்வை, உமிழ்நீர், மூக்கில் உள்ள சளி, வாய், காது, கண் இவற்றில் உள்ள அழுக்கு, முகப்பரு, சிறுகட்டிகள் இவை இரத்தநிறமாகவும் பச்சை நிறமாகவும் மஞ்சள் நிறமாகவும் தோன்றும்.

உறுப்புகளின் வேதனை, அடிக்கடி கனவில் சிகப்பு, நீலம், மஞ்சள், கருப்பு நிறமுள்ள ஒளிவீசும் பொருட்களைப் பார்த்தல், இரத்தபித்தத்தின் முற்குறிகளாகும். (6)

### (2) இரத்த பித்தத்தில் ஏற்படும் தொல்லைகள்

வலிவுக்குறைவு, சுவையின்மை, உண்ட உணவு நன்கு சீரண மாகாமை, சுவாசம், இருமல், காய்ச்சல், கழிச்சல், வீக்கம் உடல் உருக்குதல், பாண்டுநோய், குரல்மாற்றம் ஆகிய இந்நோய்கள் இரத்த பித்தத்தைத் தொடர்ந்து ஏற்படும். (7)

### (3) இரத்த பித்தத்தின் இருவழிகள்

மேல்நோக்கிச் செல்லுதல், கீழ்நோக்கிச் செல்லுதல் என இரத்த பித்தத்திற்கு இரண்டு வழிகள் உண்டு.

அதிகக் கபம் உள்ளவனுக்கு கபத்தின் சேர்க்கையினால், காது, கண், மூக்கு வாய் இவற்றின் வழியாக இரத்த பித்தம் மேல் நோக்கி வெளிப்படுகிறது.

அதிக வாதம் உள்ளவனுக்கு வாதத்தின் சேர்க்கையினால் சிறுநீர், மலம், வெளிவரும் துவாரங்கள் வழியாக கீழ்நோக்கி வெளிவருகிறது.

பெருமளவில் வாதமும், கபமும் உள்ளவனுக்கு வாத—கபங்களின் சேர்க்கையினால் மேல்நோக்கியும் கீழ்நோக்கியும் இரண்டு வழிகளாலும் மற்ற உடலில் உள்ள துவாரங்கள் மூலமாகவும் இரத்த பித்தம் வெளிப்படுகிறது. *(8)*

மலம் கழிக்கச் செய்யும் சிகிச்சை செய்வதனாலும் இதற்கு பயன்படுவதற்கு பல மருந்துகள் இருப்பதாலும் மேல்நோக்கிச் செல்லும் இரத்த பித்தம் எளிதில் சிகிச்சைக்கு அடங்கக்கூடியது.

வாந்தியெடுக்கச் செய்யும் சிகிச்சை செய்யவேண்டியதாலும் இதற்கு பயன்படக்கூடிய மருந்துகள் குறைவாக இருப்பதாலும் கீழ்நோக்கிச் செல்லும் இரத்த பித்தம் சிகிச்சையினால் குணமாகாமல் காலம் கடத்தக்கூடியதாகும்.

வாந்தி சிகிச்சை, பேதி சிகிச்சை இவற்றிற்குத் தகுதியற்றதாலும் இந்நோய்க்கு உகந்த அவ்வாறு பயன்படக்கூடிய மருந்துகள் இல்லாமையாலும் மேல்நோக்கிச் செல்லுதல் கீழ் நோக்கிச் செல்லுதல் என்ற இரண்டு வழிகளிலும் செல்லும் இரத்த பித்தம் சிகிச்சைக்கு கட்டுப்படாது. *(9)*

### (4) இரத்த பித்தம் தோன்றக் காரணம்

முன்பு தக்ஷன் வேள்வியை அழித்த சிவபெருமானின் சீற்றத்தில் உண்டான தீ பிராணிகளின் உடலில் பரவி காய்ச்சலாகமாறி பிறகு இரத்த பித்தம் தோன்றியது. அந்த இரத்த பித்தம் மானிடருள் பரவி கடுமையான நெருப்பைப்போல உடலை எரித்து விடுகிறது. *(10)*

காட்டுத்தீபோல் விரைவில் பரவி உடலை அழிக்கக்கூடிய இந்த இரத்த பித்தத்தைத் தணிக்க மருத்துவர் விரைவில் முயற்சிக்க வேண்டும்.

அளவு, இடம், காலம் இவற்றைக் கவனித்து [1]ஸந்தர்ப்பணம் உடலுக்கு ஊட்டமும் மனதிற்கு திருப்தியளிக்கும் சிகிச்சை [2]அபதர்ப்பணம் லங்கன சிகிச்சை, மிருது, இனிப்பு, குளுமை, கைப்பு, துவர்ப்பு, இச்சுவையுள்ள தின்பண்டங்கள், மேற்பூச்சு உடலின்மேல் ஊற்றுதல், மூழ்குதல், தொடுதல், வாந்தி அல்லது பேதி சிகிச்சை ஆகிய இவற்றால் இரத்த பித்தத்தைத் தணிக்கச் செய்யவேண்டும். (11)

## இதைப்பற்றிய செய்யுட்கள்

''மேல்நோக்கிச் செல்லும் இரத்த பித்தம், மலம் கழிக்கச் செய்யும் சிகிச்சைக்குத் தகுதியுற்றதாலும் பலவித மருந்துகளைப் பெற்றிருப்பதாலும் சிகிச்சைக்குக் கட்டுப்பட்டது.''

''பித்தத்தை நீக்குவதற்கு மலம் கழிக்கச் செய்வது சிறந்த மருந்தாகும்.''

''பித்தத்துடன் சேர்ந்திருக்கும் கபத்திற்கு மலம் கழிக்கச் செய்வது ஏற்றதாகும்.''

''மேல்நோக்கிச் செல்லும் இரத்த பித்தத்தில் இனிப்புச் சுவையுள்ள மருந்து ஒத்துப்போவதால் இது சிகிச்சைக்குக் கட்டுப்பட்டது.'' (12–14)

''கீழ்நோக்கிச் செல்லும் இரத்த பித்தம், வாந்தி சிகிச்சைக்குத் தகுதியற்றதாலும் அதற்கு மருந்துகள் மிகக் குறைவாக இருப்பதாலும், உணவுக் கட்டுப்பாட்டினாலும், சிகிச்சையினாலும் குணமாகாமல் காலம் கடத்தக்கூடியது. பித்தத்தைத் தணிப்பதற்கு வாந்தி எடுக்கக் கொடுப்பது சிறந்ததல்ல. பித்தத்துடன் சேர்ந்திருக்கும் வாதத்தைத் தணிப்பதற்கு வாந்திக்கு மருந்து கொடுப்பது சிறந்ததல்ல.''

துவர்ப்பு, கைப்புச் சுவையுள்ள பொருட்கள் கீழ் நோக்கிச் செல்லும் இரத்த பித்தத்திற்கு ஒத்துக்கொள்வதில்லை. எளிதில் குணப்படுத்த இயலாது. ஆகையினால் கீழ்நோக்கிச் செல்லும் இரத்த பித்தம் காலம் கடத்தக்கூடியதாகக் கருதப்படுகிறது.'' (15–17)

---

(1) ஸந்தர்ப்பணம் – உடலுக்கும் மனதிற்கும் திருப்தியை உண்டு பண்ணுவது.

(2) அபதர்ப்பணம் – உடல் இளைப்பைத் தரக்கூடிய சிகிச்சை.

மேல்நோக்கிச் செல்லுதல் கீழ்நோக்கிச் செல்லுதல் என்ற இரண்டு வழிகளாலும் செல்லும் இரத்த பித்தத்தில் கபம், பித்தம், இரத்தம் ஆகிய மூன்று தோஷங்களையும் தூய்மைப்படுத்துவதற்கும் இரத்தம் பித்தம் வெளிப்படும் வழிகளில் வேகத்திற்கு எதிரிடையான செயல்படும் மருந்துகள் இல்லாததினாலும் இது சிகிச்சைக்கு உட்பட்டதல்ல.

இரத்தபித்தத்தில்தோஷங்களை அகற்ற எதிரிடையான முறைகளைப் பற்றி மேல்நோக்கிச் செல்லும் இரத்த பித்தத்திற்கு மலம் கழிக்கச் செய்யும் சிகிச்சையும், கீழ்நோக்கிச் செல்லும் இரத்த பித்தத்திற்கு வாந்தி எடுக்கச் செய்யும் சிகிச்சையும் செய்வது முறை.

ஆனால் இரண்டு வழிகளிலும் செல்லும் இரத்த பித்தத்திற்கு இம்முறையைப் பின்பற்ற முடியாது. மேலும் இந்த இரத்த பித்தத்தை தணிக்கச் செய்யும் மருந்துகளும் கிடையாது.

கூட்டுச் சேர்ந்திருக்கும் தோஷங்கள் எல்லாவற்றையும் தணிக்கச் செய்வதற்கு மருந்து கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு இரத்தபித்தம் செல்லும் மூவழிகள் கூறப்பட்டுள்ளன.

*(18–20)*

பணிவிடை செய்பவர் இல்லாமையாலும் சிகிச்சைக்குத் தேவையான பொருட்கள் இல்லாததாலும் நோயாளியின் பயத்தினாலும் ஒத்துழைப்புக் குறைவினாலும் மருத்துவரின் கவனக் குறைவினாலும் சிகிச்சையினால் தீரக்கூடிய நோய்களும் தீராதனவாக ஆகிவிடுகின்றன.

நோய்க்குத் தகுந்த சிகிச்சை செய்யாததாலும் சில நோய்கள் சிகிச்சைக்குக் கட்டுப்படாமல் போய்விடுகின்றன.

சிகிச்சைக்குக் கட்டுப்பட்டது காலம் கடத்துவது கட்டுப் படாதது என இரத்தபித்தம் மூவகைப்படும். அவற்றில் கட்டுப் படாதது என்பது ஒன்று.

இரத்த பித்த நோயில் வெளிவரும் இரத்தம், கருப்பு அல்லது நீலம் அல்லது வான்வில்லைப் போன்ற நிறம், துணியில் பட்ட கறை போகாமலிருத்தல் என இவை கட்டுப்படாத இரத்தபித்தத்திற்குள்ள குறிகளாகும்.

### (5) கட்டுப்படாத இரத்த பித்தத்தின் இலக்கணம்

இரத்தபித்தத்தில் வெளிவரும் இரத்தம், கெட்ட நாற்றம் கொண்டு அதிகம் வெளிவருவதாலும், எல்லாவித உபத்ரவங் களோடு கூடியதாயுமிருந்தால் வலிவு, மாமிசம் குறைவுபட்டா லும் அந்த இரத்த பித்தம் சிகிச்சைக்குக் கட்டுப்படாதது.

இரத்தபித்தம் உள்ள பிணியாளியின் பார்வையில் எல்லாப் பொருட்களும் வானவில் போன்றும் செந்நிறமாகவும் தென்பட் டால் அவனுடைய நோய் சிகிச்சைக்குக் கட்டுப்படாதது என் பதில் சந்தேகமில்லை. *(21–26)*

ஆகையால் சிகிச்சைக்கு கட்டுப்படாத இரத்த பித்தப் பிணி யாளியை விட்டுவிட வேண்டும். காலம் கடத்தக்கூடிய சிகிச்சை சையைக்கொண்டு காலம் கடத்தல் சிகிச்சைக்குக் கட்டுப்படும் இரத்த பித்தத்தை கவனமாகக் குணப்படுத்துவது மருத்துவரின் கடமையாகும். *(27)*

**முடிவுரை**

நிதானஸ்தானத்தில் உள்ள இரத்த பித்தம் எனும் அத்தியா யத்தில் மோகமற்றவரும் ரஜோ குணமற்றவரும், பேராசையை ஒழித்தவரும், குற்றமற்றவரும், அகங்காரம், மதம் அவாஇவற்றை வென்றவருமான புனர்வசு மாமுனிவர் இரத்தபித்தத்தின் கார ணம் பெயர்க்காரணம், முற்குறிகள், தொல்லைகள், வழிகள், தோஷங்களின் சேர்க்கை, கட்டுப்பட்டது கட்டுப்படாதது என்ப வற்றிக்கான காரணம் ஆகிய எல்லாவற்றையும் விளக்கியுள்ளார். *(28–29)*

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமா
முனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
நிதானஸ்தானத்தில் இரத்தபித்த நிதானம் என்னும்
இரண்டாவது அத்தியாயம் முற்றும்.

## மூன்றாவது அத்தியாயம்

## *குன்மநிதானம்

'குன்ம நிதானம்' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். (1–2)

### 1. குன்மத்தின் வகை

வாத குன்மம், பித்த குன்மம், கப குன்மம், வாதம்-பித்தம்-கபம் இம்மூன்று சேர்க்கையால் ஏற்படும் நிசய குன்மம், இரத்த குன்மம் என குன்மம் ஐவகைப்படும். (3)

இவ்விதம் கூறிய ஆத்ரேய மாமுனிவரைப் பார்த்து ஆசிரியரே ! இந்த ஐந்து வகையான குன்மத்தின் சிறப்பை நாங்கள் எவ்விதம் அறிந்து கொள்வது ? மருந்தைப் பற்றி நன்கு அறிந்த மருத்துவரும் நோயின் சிறப்பைப் பற்றி அறியாமல் எப்படி சிகிச்சை செய்வதில் திறமையுடையவராக ஆவார் என்று கேட்டார். (4)

### ஆத்ரேயர், அக்னிவேசர் உரைகள்

அந்தக் குன்மத்தின் சிறப்பைக் காரணம் [1]பூர்வரூபம், [2]லிங்கம் [3]வேதனை [4]உபசயம் என்பனவற்றால் அறிந்து கொள்ளலாம். மற்ற நோய்களையும் இவ்வாறே அறிந்துகொள்வது சுலபம்.

மேலும் குன்ம நோயின் சிறப்பைப் பற்றி கவனத்துடன் கேள். (5)

---

*குன்மநிதானம் — வயிறு முதலிய உறுப்புகளின் உட்பாகம் வறண்டு போவதால் உண்டாகும் ஒருவிதக் கட்டி நோய், அதைப்பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

(1) பூர்வரூபம் — முற்குறிகள்

(2) லிங்கம் — இலக்கணம்

(3) வேதனை — சொல்ல இயலாத வலி

(4) உபசயம் — ஒல்வுதல் - அதன்மூலம் நோயின் மிகுதி குறைவு இவற்றை அறிதல்.

## 2. வாதம் சீற்றமடையக் காரணம்

வாதம் மிகுதியாக உள்ளவன் காய்ச்சல், வாந்தி பேதிக்கு எடுத்துக் கொள்ளுதல், பேதியாகுதல் இவற்றுள் ஏதாவது ஒன்றினால் இளைத்துவிடுகிறான். அவ்வாறே வாதத்தை வளர்க்கும் பொருட்களை அதிகம் பயன்படுத்துகிறவன், குளிர்ச்சியான பொருட்களை அளவுக்கு மீறி உண்பவன், எண்ணெய் சிகிச்சை செய்து கொள்ளாமல் வாந்தி பேதிக்கு மருந்து எடுத்துக் கொள்பவன், வாந்தியைத் தானாகவே வரவழைப்பவன், தானாக வருகிற கீழ்நோக்கிச் செல்லும் வாயு, (அபான வாயு) சிறுநீர், மலம் இவற்றின் வேகத்தை அடக்குபவன், நன்கு உண்டபின் புது வெள்ளம் அல்லது மழை நீரை அதிகம் பருகுபவன், உடலுக்கு அதிகத் துன்பம் தரும் வாகனத்தில் செல்லுபவன், அளவின்றி புணர்பவன், அதிகம் உடற்பயிற்சி செய்பவன், மிதமிஞ்சிக் கள் குடிப்பவன், உடலை மிக்க வருத்துகிறவன், அடிபட்டவன், தகுதியற்ற உணவு, படுக்கை, இருக்கை இவற்றையுடையவன், அதிகம் அலைபவன், உடற்பயிற்சி போன்ற தகாத வேலைகளில் அதிகம் ஈடுபடுபவன் ஆகிய இவர்களுடைய உடலில் மேற்கண்ட பத்தியமில்லாப் பொருட்களைப் பயன்படுத்துவதால் வாதம் சீற்றமடைகிறது. (6)

## 3. வாத குன்மத்தின் இலக்கணம்

சீற்றமடைந்த வாதம் உணவு செரிக்கும் ஆமபக்வாசயம் என்னும் பெருங்குழாயில் நுழைந்து வறட்சியால் கெட்டியாகிப் பரவி இதயம், சிறுநீர்ப்பை, இருவிலாப்பக்கங்கள், தொப்புள் இவற்றின் அருகில் உருண்டை உருவம் பெறுகிறது. அந்தஉருண்டையான குன்மம் வலியை உண்டுபண்ணுகிறது. மேலும் அது பலவிதமான உருண்டை உருவங்களில் முடிச்சுகளைப் போன்று சிறு வீக்கங்களைத் தோற்றுவிக்கின்றது. தானும் உருண்டை வடிவமாக இருக்கிறது.

இந்த வாதம் சிறிய புதர்போன்ற உருண்டை வடிவமாயிருப்பதால் [1]குன்மம் எனக் காரணப் பெயர் பெறுகிறது.

---

1. குன்மம் – புதர்போல் சூழ்ந்து கொண்டிருப்பது. வயிற்றில் உருண்டு தோன்றும் வீக்கம்.

வாத வடிவமான குன்மம், வாதம், அசைந்து உழலும் தன்மையுடையதால் சிலசமயம் வளர்ச்சி பெறுகிறது. சிலசமயம் வளராமலும் இருக்கிறது. குறிப்பிட முடியாமல் சில சமயம் வேதனையை அதிகரிக்கவும், சிலசமயம் வேதனையைக் குறைக்கவும் செய்கிறது.

அடிக்கடி உடல் உறுப்புகளில் எறும்புகள் ஊறுவது போன்ற உணர்ச்சி ஏற்படும்.

குத்தல், உடைத்தல், துடித்தல், நீளுதல், சுருங்குதல், உணர்ச்சியற்றுப் போதல், மயிர்க்கூச்சல் இவை முதல் நிமிடத்தில் தோன்றி அடுத்த நிமிடத்தில் மறையும்.

அப்பொழுது குன்ம நோயாளி தன்னை ஊசி, அல்லது [1]அங்குசம் என்னும் கூர்மையான ஆயுதம் இவற்றால் குத்துவது போன்ற உணர்வைப் பெறுகிறான்.

மாலையிலும் உணவு சீரணத்த பின்பும் தோன்றி நோயாளியின் வாய் உலர்ந்தும் மேல்மூச்சுத் தடைபட்டும் போகிறது. வேதனை ஏற்படும்பொழுது மயிர் கூச்சல் எடுக்கிறது.

மண்ணீரலில் நோய் உண்டாகிறது. வயிற்றில் ''குடுகுடு'' என்ற ஒலி, பெருங்குடலில் ஒருவித இரைச்சல், சீரணமின்மை, வயிற்று உப்புசம், வாயு மேல்நோக்கிச் செல்லுதல், உடல் வலி, நெஞ்சுவலி, தலையில் வலி, பொட்டில் வலி, தொடை இடுக்குகளில் வீக்கம் இவை ஏற்பட்டு அவை குன்ம நோயாளியைத் துன்புறுத்துகின்றன.

நோயாளியின் உடல் தோல், நகங்கள், கண்கள், முகம், சிறுநீர், மலம் இவை கருநிறமாகவும் செந்நிறமாகவும் சொர சொரப்புள்ளதாகவும் இருக்கும்.

வாத குன்ம நிதானத்தில் கூறப்பட்ட யாவும் இந்த வாத குன்ம நோயாளிக்குப் பொருந்தாது. இதற்கு எதிரிடையானவை பொருந்தும். இதுதான் வாதகுன்மம் எனப்படுகிறது. (7)

## 4. பித்த குன்மம்

முன்கூறிய காய்ச்சல், வாந்தி, கழிச்சல் போன்றவற்றால் உடல் இளைத்தவன் புளிப்பு, உப்பு, கார்ப்பு, க்ஷாரம் (கார்ப்பும், உப்பும் மிகுதியாக உள்ள உடலைக் செல்லும் சக்தி வாய்ந்த பொருள்) உஷ்ணம், தீக்ஷ்ணம் உள்ள பொருட்கள், காடி, கெட்டுப்போன கள், ஹரீதகம் எனும் கீரை, புளிப்புச் சுவையுள்ள பழங்கள், பித்தத்தைத் தூண்டிவிடும் கீரைவகை, தானியங்கள், மாமிசங்கள் ஆகிய இவற்றைப் புசித்தவன்,

1. அங்குசம் – யானையை அடக்கும் ஓர் கூர்மையான ஆயுதம்.

அசீரணம், காலமில்லாக் காலத்தில் உண்ட உணவு செரிக்கும் முன் அதிகம் அல்லது குறைவாக உண்பவன் இவர்களுக்கு இரைப்பை வறட்சியடைகிறது.

வாந்தி, பேதிக்கு மருந்து அதிகம் கொடுத்தல், மலம், சிறுநீர், இவற்றை அடக்குதல், காற்று வெயிலில் அதிகம் அலைதல் இவற்றால் பித்தம் வாதத்துடன் சேர்ந்து சீற்றமடைகின்றன. (8)

## 5. பித்த குன்மத்தின் தோற்றமும் அறிகுறிகளும்

சீற்றமடைந்த பித்தத்தை வாயு இரைப்பையில் ஓரிடத்தில் சேர்த்து வாத குன்மத்தில் கூறப்பட்ட வேதனை முதலியவற்றையும் நோயாளியின் வயிறு, மார்பு, இதயம், தொண்டை இவ்விடங்களில் எரிச்சலையும் உண்டாக்குகிறது. புகைச்சலுடன்கூடிய ஏப்பம், புளிப்புக் கலந்த வாந்தி இவை ஏற்படுகின்றன.

குன்மம் தோன்றிய இடத்தில் எரிச்சல், வேதனை, புகை, ஆவி தோன்றுவது போன்ற உணர்ச்சி இவை ஏற்படும்.

மேலும் அதே இடத்தில் வியர்வை, நனைத்தல், தளர்தல் போன்ற தோற்றம் ஏற்படும். அப்பகுதியை தொட முடியாது. சிறிதளவு மயிர் கூச்சல் ஏற்படும். காய்ச்சல், தலைச்சுற்றல், மதம், இதயத்துடிப்பு, தாகம், தொண்டை கன்னம் வாய் உலர்தல், மயக்கம், கழிச்சல் இவை பித்த குன்மத்தினால் ஏற்படும் துன்பங்களாம். தோல், நகங்கள், கண்கள், முகம், சிறுநீர், மலம் ஆகியவை மஞ்சள் கலந்த பசுமை நிறமாக இருக்கும்.

பித்த குன்மத்தில் சொல்லப்பட்ட காரணங்கள் ஒவ்வாது. அதற்கு எதிரிடையான காரணங்கள் ஒத்துக் கொள்ளும். நோய் குறைந்து நலம் ஏற்படும்.

இது பித்த குன்மம் என்று கூறப்படுகிறது. (9)

## 6. கப குன்மத்தின் தோற்றமும் அறிகுறிகளும்

குன்ம நிதானத்தில் முன்பு கூறிய இளைக்கச் செய்யும் சிகிச்சை செய்தும் பொருட்களைக் கொடுத்து இளைத்தவனுக்கு அதிக உணவு உண்ணுதல், அதிக எண்ணெய்ப் பசையுள்ள பொருள், எளிதில் சீரணமாகாத பொருள், இனிப்புச் சுவையுள்ள குளிர்ந்த உணவு, மாவு வகைகள், கரும்பு, பால், எள்ளு, உளுந்து, வெல்லம் இவற்றால் செய்யப்பட்ட பண்டங்கள், உறையாத தயிர், கள் இவற்றை அதிகம் பயன்படுத்துதல், பசலைக்கீரை போன்ற கீரை வகைகளை அதிகம் உபயோகித்தல், நீர் நிறைந்துள்ள

இடங்களில் வாழும் பிராணிகள், கிராமங்களில் வாழும் பிராணி கள், இவற்றின் புலாலை அதிகம் உண்ணல், சிறுநீர், மலம் இவற் றின் வேகத்தை அடக்குதல், பசியுள்ளபோது அதிகம் நீர் அருந்து தல், உடலை அலட்டிக்கொள்ளுதல் ஆகியவற்றால் உடலில் உள்ள கபம் வாதத்துடன் சேர்ந்து சீற்றமடைகிறது. (10)

சீற்றமடைந்த கபத்தை இரைப்பையில் ஒரு ப கு தி யி ல் குவித்து வாதகுன்மத்தில் கூறிய துன்பங்களையே வாயு தோற்று விக்கிறது.

இந்நோய் உள்ளவனுக்கு குளிர், காய்ச்சல், சுவையின்மை, அசீர்ணம், உடல்வலி, மயிர்கூச்சல், மார்பு வலி, வாந்தி அதிகத் தூக்கம், சோம்பல், உடல் திமிர்தல், தலைக் கொதிப்பு இவை ஏற்படுகின்றன.

மேலும் குன்மம் தான் உள்ள இடத்தில் அசையாமை, பளு, கெட்டி, உள்ளடங்கியிருத்தல், உணர்ச்சியின்மை இவற்றை உண் டாக்குகிறது.

இருமல், சுவாசம், ஜலதோஷம், எலும்புருக்கி நோய் இவை குன்மம் அதிகரித்தவனுக்குத் தோன்றுகின்றன. உடல், தோல், நகங்கள், கண்கள், முகம், சிறுநீர், மலம் இவற்றில் வெண் ணிறத்தை இது உண்டாக்குகிறது. கபகுன்ம நிதானத்தில் கூறி யவை கபகுன்மம் உள்ளவனுக்கு ஒத்துக்கொள்ளாது. அதற்கு எதிரிடையானவை ஒத்துக் கொள்ளும். நோய் குறைந்து நலமேற் படும். (11)

வாதம், பித்தம், கபம் இம்மூன்று தோஷங்களுக்கான கார ணங்கள் இலக்கணங்கள் ஒன்று சேர்ந்திருந்தால் ஸன்னிபாத குன்மம் என அதற்குப் பெயர்.

மூவகை தோஷங்களில் தோன்றும் ஸன்னிபாத குன்மம், ஒன்றுக்கொன்று எதிரிடையான மருத்துவத்தைக் கொண்டிருப்ப தால் அது சிகிச்சைக்குக் கட்டுப்படாதது. (12)

## 7. இரத்த குன்மத்தின் தோற்றமும் அறிகுறிகளும்

பெண்களுக்கு கர்ப்பப்பையில் இரத்த குன்மம் ஏற்டுகிறது இது ஆண்களுக்கன்று. பெண்களுக்கு மாதவிடாய் தடைப்படுவது போன்ற மாறுதல்களினாலும் பிறரை அண்டியிருத்தல், திறமை யின்மை, பிறருக்குப் பணிவிடை செய்வதிலேயே ஈடுபடுவது அதனால் இயற்கையாக வெளிப்படுகிற சிறுநீர், மலம் முதலிய வேகங்களை அடக்குதல், குறைபிரசவம், பிரசவித்தவுடன் அல்லது மாதவிடாய் காலத்தில் வாதத்தை சீற்றமடையச் செய் யும் பொருட்களைப் பயன்படுத்தல் ஆகியவற்றால் உடனே வாதம் சீற்றலைப் பெறுகிறது. (13)

சீற்றம் பெற்ற வாதம் கருப்பையின் முகதுவாரத்தை அடைந்து மாதாமாதம் வெளிப்படுகிற மாதவிடாயை அடைத்து வயிற்றைப் பெருக்கச் செய்கிறது.

அதனால் வயிற்றில் வலி, இருமல், பேதி, வாந்தி, சுவையின்மை, அசீர்ணம், உடல்வலி, தூக்கம், சோம்பல், உடல் திமிர்த்தல், கபத்துடன் கூடிய உமிழ்நீர் கசிதல் ஆகிய இவை உண்டாகும்.

இரு மார்பகங்களிலும் பால் பெருகும். உதடுகள், மார்பகங்களின் காம்பு இவற்றில் கரு நிறம் தோன்றும். கண்களில் மிக்கச் சோர்வு காணப்படும்.

மயக்கம், மனப்பிரட்டல், மயக்கை, கால்களில் வீக்கம், சிறிதளவு நிறம் மாறிய ரேகைகள் ஆகியவை ஏற்படும். பெண்குறி விரிதல், அதனுள் கெட்ட நாற்றம், கெட்ட நீர் வடிதல் இவை ஏற்படும்.

இவர்களுக்கு ஏற்படும் இரத்த குன்மம் உருண்டையாக இருந்து துடிக்கும். கருத்தரிக்காத பொழுது உருண்டையைக் கண்டு கருதரித்திருப்பதாக அறிவில்லாதவர்கள் கூறுகின்றனர். (14)

3. ஐந்து குன்மங்களின் முற்குறிகள்

உணவில் அவாவின்மை, சுவையின்மை, சீரணமின்மை, சடராக்னியின் மாறுபாடுகள், உண்டவுடன் எரிச்சல், சீரணமாகும் தருணத்தில் காரணமின்றி வாந்தி, ஏப்பம் இவை உண்டாகும்.

கீழ்நோக்கிச் செல்லும் வாயு, சிறுநீர் மலம் இவற்றில் வேகம் ஏற்படுகிறது. அப்பொழுது மலம் வெளிவராது. சிறிதளவே வெளிவரும்.

கீழ்நோக்கிச் செல்லும் வாயு தடைபடுதல், உடலில் வலி, பொருமல், இரைச்சல், மயிர்கூச்சல், மலம் இறுகிப்போதல் இவை ஏற்படும்.

மேலும் பசியின்மை, வலிவுக்குறைவு, இன்பத்தில் விருப்பமின்மை இவை யாவும் பொதுவாக எல்லா குன்மங்களின் முற்குறிகளாகும். (15)

வாத தோஷமில்லாமல் ஒருவித குன்மமும் ஏற்படுவதில்லை.

ஐந்து வகைக் குன்மங்களில் ஸன்னிபாத குன்மம் என்பது மூன்று தோஷங்களின் சேர்க்கையினால் உண்டாகும். சிகிச்சைக்குக் கட்டுப்பாதது. அதற்குச் சிகிச்சை செய்ய முயல வேண்டாம்.

ஒரு தோஷத்தினால் உண்டாகும் குன்மத்திற்கு அதன் காரணம், குறிகள் இவற்றை அறிந்து மருத்துவம் செய்யவும்.

இரண்டு இரண்டு தோஷங்கள் சேர்ந்துஏற்படுகின்ற குன்மங்களுக்கு அந்தந்த தோஷங்களுக்கு ஏற்ற பொதுவான மருத்துவம் செய்ய வேண்டும்.

மற்ற ஸன்னிபாத குன்மமும் மருத்துவத்திற்குத் தகுதியுள்ளதாகில் தொல்லைகளின் கடுமை, எளிமை இவற்றைப் பிரித்து அறிந்து மருத்துவம் செய்ய வேண்டும். கடுமையான தொல்லை தரும் குன்ம நோய்க்கு உடன் மருத்துவம் செய்ய வேண்டும். எளிமையான தொல்லை தரும் குன்மநோயைப் பொறுத்துப் பார்த்து சிகிச்சை செய்யலாம். எல்லா வகையான குன்மங்களுக்கும் வாதம் காரணமாகையால் அந்தந்தவகை குன்மத்தைத் தணிக்கும் தனி மருத்துவம் இல்லையெனில் வாத குன்மத்தின் சிகிச்சையை விரைவாகச் செய்ய வேண்டும்.

வாதத்தைத் தணிக்கும் தன்மையுள்ள பொருட்களினால் தயாரிக்கப்பட்ட எண்ணெய் சிகிச்சையும், வியர்வை சிகிச்சையும், எண்ணெய் கலந்த மிருதுவான மலம் கழிக்கச் செய்யும் சிகிச்சையும் வஸ்தி சிகிச்சையும் செய்ய வேண்டும். புளிப்பு, உப்பு, இனிப்புச் சுவையுள்ள பொருட்களைத் தகுந்தவாறு பயன்படுத்த வேண்டும். குன்மங்களில் வாத தோஷத்தைத் தணித்துவிட்டால் மற்ற தோஷங்களை எளிதில் தணிக்கமுடியும். (16)

### இதைப்பற்றிய செய்யுள்

எல்லா வகை குன்மங்களிலும் எக்காலத்திலும் வாதத்தைத் தணிக்கும் முறைகளை முறைப்படி கடைபிடிக்க வேண்டும். வாதத்தை வென்று விட்டால் மற்ற சீற்றமடைந்த தோஷங்களை சிறு முயற்சியினாலும் போக்கடித்துவிடலாம். (17)

### முடிவுரை

இங்கு குன்ம நிதானத்தில் குன்மங்களின் எண்ணிக்கை, காரணம், குறிகள், முற்குறிகள் மருத்துவம் ஓரளவு சொல்லப்பட்டன. (18)

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு
சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
நிதானஸ்தானத்தில் குன்ம நிதானம் எனும்
மூன்றாவது அத்தியாயம் முற்றும்

## நான்காம் அத்தியாயம்

# *ப்ரமேஹநிதானம்

ப்ரமேஹநிதானம் எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனி வர் கூறியபடி விளக்குவோம். (1–2)

மூன்று தோஷங்களுடைய சீற்றத்தால் இருபது வகையான ப்ரமேஹங்கள் (நீரிழிவு) ஏற்படுகின்றன.

மூன்று தோஷங்களின் சீற்றத்தால் ஏற்படக்கூடிய மற்ற நோய்கள் எண்ணற்றவை.

அதில் மூன்று தோஷங்களின் சீற்றத்தால் ஏற்படும் நீரிழிவை மட்டும் விளக்குவோம். (3)

இந்த உடலில் வாதம் பித்தம் கபம் என்ற [1]தோஷங்கள், [2]தூஷ்யங்கள் இவற்றின் கோளாறுகள்தான் நோய்கள் உண்டாவதற்கும் உண்டாகாமலிருப்பதற்கும் காரணமாகின்றன.

இந்த நிதானம், தோஷங்கள், தூஷ்யங்கள், என்ற இம்மூன்றும் ஒன்றுக்கொன்று சேராமையாலோ அல்லது தாமதித்துச் சேருவதாலோ அல்லது தோஷங்கள் குறைந்த அளவில் சேர்வதாலோ நோய்கள் தோன்றுவதில்லை.

அல்லது

வெகுநாட்களுக்குப் பின் நோய்கள் உண்டாகின்றன.

அல்லது

குறைந்த அளவில் நோய்கள் பலமில்லாமல் உண்டாகின்றன.

அல்லது

நோய்களுக்கான எல்லாக் குறிகளும் தென்படாமல் சில குறிகளினாலேயே நோய்கள் தோன்றுகின்றன.

இவற்றிற்கு எதிரிடையான காரணம் தோஷ தூஷ்யங்கள் சேர்ந்து நோய்கள் உண்டாகின்றன.

---

*ப்ரமேஹநிதானம் – நீரிழிவு நோய் ஏற்படுவதற்கான காரணத்தை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

1. தோஷங்கள் – வாத, பித்த, கபம்.
2. தூஷ்யங்கள் – ரசம், இரத்தம், மாமிசம், கொழுப்பு, எலும்பு, மஜ்ஜை, விந்து இவைகள்.

இவ்வாறு எல்லா நோய்கள் தோன்றுவதற்கும் தோன்றா மலிருப்பதற்கும் காரணங்கள் பல கூறப்பட்டன. (4)

### 1. கபத்தினால் தோன்றும் நீரிழிவு

நிதானம் தோஷம் தூஷ்யங்கள் இம்மூன்றும், தம் சிறப்புத் தன்மையினால் கபத்தினால் தோன்றும் நீரிழிவு நோய்களை விரைவில் தோற்றுவிக்கின்றன.

சாலி எனும் தானியம், யவதானியம், கடலை, உத்தாலகம் எனும் தானியம், நைஷதம், இத்கடகம், முகுந்தகம், மகாவ்ரிஹி, ப்ரமோதகம், சுகந்தகம் எனும் புதிய தானிய வகைகள் இவற்றை பெருமளவில் உபயோகிப்பதாலும் ஹரேணுகம் எனும் தானியம், உளுந்து, பருப்பு வகை இவற்றாலான கஞ்சிவகைகள், இவற்றை அதிக அளவில் நெய்யுடன் கலந்து உண்பதாலும், கிராமத்தில் நீரில் வாழும் பிராணிகளின் மாமிசத்தை அதிக அளவில் பயன்படுத்துவதாலும்,கீரைவகை, எள்ளு, எள்ளுப்பிண்ணாக்கு, மாவுப்பண்டங்கள், பாயசம், அரிசி, பயறு, உளுந்து, எள் இவற்றில் ஏதாவது ஒன்றினால் தயார் செய்யப்பட்ட கஞ்சி, மேற்கூறிய பொருட்களால் ஆக்கப்பட்ட கெட்டியான கஞ்சி, கரும்பினால் செய்யப்பட்ட வெல்லம், சர்க்கரை கற்கண்டு போன்ற பொருட்கள், இவற்றை அதிகம் பயன்படுத்துவதாலும்,

பால், புதுகள், உறையாத தயிர், தயிர், நீர் நிறைந்த பொருட்கள், இனிப்புப் பொருட்கள், முற்றாத பொருட்கள், இவற்றை அதிகம் பயன்படுத்துவதாலும்,

சுத்தமின்மை, உடற்பயிற்சியின்மை, அதிகநேரம் தூங்குதல், படுத்திருத்தல், அமர்ந்திருத்தல், ஆகியவற்றாலும்,

கபம் கொழுப்பு சிறுநீர் இவற்றைத் தோற்றுவிக்கும் உணவு வகை, நடவடிக்கை இவற்றை அதிக அளவில் பயன்படுத்துவதாலும் கபத்தினால் தோன்றும் நீரிழிவு நோய் உண்டாகிறது. (5)

நீரிழிவில் மிகவும் இளகலான கபம்தான் முக்கியமான தோஷம் ஆகும். (6)

அதிக அளவுடன் மிகவும் கெட்டியாகாத கொழுப்பு, மாமிசம், உடலில் உண்டான ஈரத்தன்மை, விந்து, இரத்தம், நிணநீர், எலும்புக்குள் இருக்கும் சோறு, ஊன்நீர், ஓஜஸ் எனும் தாது இவை (1) தூஷ்யங்கள் எனப்படும். (7)

(1) தூஷ்யங்கள் — ரசம், இரத்தம், மாமிசம், கொழுப்பு, எலும்பு மஜ்ஜை, விந் இவைகள்.

நிதானம் தோஷம் தூஷ்யங்கள் இம்மூன்றும் ஒன்று சேரும் பொழுது முதலில் கபம் அதிகமாகி விரைவில் சீற்றமடைகிறது.

சீற்றமடைந்த அந்த கபம் உடலின் தளர்ச்சியினால் விரைவில் உடல் முழுவதும் பரவுகிறது. கொழுப்பு அளவில் அதிகமாக தளர்ச்சி பெற்று இருப்பதாலும் கொழுப்பின் குணத்திற்கு ஒத்த குணங்களை கபம் பெற்றிருப்பதாலும் உடல் முழுவதும் அது பரவி கொழுப்புடன் கூடி தான் கேடடைந்திருப்பதால் அந்தக் கொழுப்பையும் கேடடையச் செய்கிறது.

கெட்டுப்போன கபம், கொழுப்பு மாமிசம் இவை அதிகம் வளர்ந்து இருப்பதால், கேடடைந்த கொழுப்புடன் கூடி அதன் வழியாக உடலின் ஈரத்தன்மை, மாமிசம் இவற்றுடன் சேர்ந்து விடுகிறது.

கேடடைந்த அந்தக் கபம் கேடடைந்த மாமிசத்தில் அகல் போன்றதும் ஆமை போன்றதுமான கட்டிகளை உண்டுபண்ணுகிறது. உடலில் உள்ள ஈரத்தன்மையைக் கெடுத்து சிறுநீராக மாற்றிவிடுகிறது.

தொடை இடுக்கு சிறுநீர்ப்பை இவற்றிலிருந்து தோன்றுகிற சிறுநீரை எடுத்துச் செல்லும் துவாரங்களில் உள்ள கொழுப்பு, ஈரத்தன்மை இவற்றால் நிரம்பியும் கனமாயுமுள்ள முகத்தை அடைந்து தடுத்துவிடுகிறது.

பிறகு கபம் தன் இயற்கைக் குணங்களை இழந்து கேடடைந்து இருப்பதால் நீரிழிவு நோயையும், அதன் நீண்டநாள் நிலைத்திருக்கும் கெட்டித்தன்மை அல்லது சிகிச்சைக்குக் கட்டுப்படாத நிலையையும் உண்டு பண்ணுகிறது. *(8)*

## 2. கபத்தினால் தோன்றும் நீரிழிவின் வகை

கபம் கொழுப்பு இவற்றுடன் கலந்த உடலில் உள்ள பிசுபிசுக்கும் தன்மை, சிறுநீர்ப்பையை அடைந்து சிறுநீராக மாறிக் கோளாறடைந்த கபத்தில் பத்துமடங்கில் சேர்ந்துவிடுகிறது.

வெளுப்பு, குளிர்ச்சி, கெட்டித்தன்மை, பிசுபிசுப்பு, அழுக்கற்ற தன்மை, நைப்பு, பளுத்தன்மை, இனிப்பு, நெருக்கம், தெளிவு, மெள்ள வெளிப்படும் தன்மை இவை கபத்தின் குணங்களாகும்.

இக்குணங்களில் ஒன்று அல்லது பல குணங்களுடன் சேர்ந்து அதே குணத்திற்கு ஏற்றவாறு பெயரையோ அல்லது குணச் சேர்க்கையின் பெயரையோ அடைகிறது. *(9)*

உதகமேஹம், இக்ஷுவாலிகா ரஸமேஹம், ஸாந்த்ரமேஹம், ஸாந்த்ர ப்ரஸாத மேஹம், சுக்லமேஹம், சுக்ரமேஹம், சீத மேஹம், ஸிகதாமேஹம், சனைர் மேஹம், ஆலாலமேஹம் என நீரிழிவு நோய் பத்து வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. *(10)*

கபத்தால் உண்டாகும் பத்து வகை நீரழிவுகள் கபத்திற்கு ஒத்த குணமுள்ள கொழுப்பை இருப்பிடமாகக் கொண்டிருப்ப தாலும், அதில் கபம் முக்கியப்பங்கு வகிப்பதாலும் தோஷங்கள் தூஷ்யங்கள் இவற்றிற்கு சிகிச்சை ஒரேவிதமாக இருப்பதாலும் அவை சிகிச்சைக்குக் கட்டுப்பட்டவை. *(11)*

கபத்தினால் தோன்றும் பத்துவித நீரழிவுகளின் பிரிவுகளை அறிந்துகொள்வதற்கான இலக்சணச் செய்யுட்கள். *(12)*

**(அ) உதகமேஹம் - (நீர்போன்ற சிறுநீர்கழிதல்) (உதகம் - நீர்)**

கபம் சீற்றமடைந்த மனிதன் தெளிவாகவும், அதிகமாகவும், வெண்ணிறமாகவும், குளிர்ந்தும், மணமற்றும், நீரைப்போன்றது மான சிறுநீரை கழிக்கிறான். *(13)*

**(ஆ) இக்ஷுவாலிகா ரஸமேஹம் (அடிக்கரும்புத் தண்டின் சாறு போல் சிறுநீர் கழிதல்) (இக்ஷு - கரும்புத்தண்டு)**

கபம் சீற்றமடைந்த மனிதன் அதிக அளவு இனிப்பாகவும், குளுமை ஆகவும், சிறிதளவு பிசுபிசுப்பாகவும், கலங்கலாகவும் கரும்பின் சாறுபோலவும் உள்ள சிறுநீரைக் கழிப்பான். *(14)*

**(இ) ஸாந்த்ரமேஹம் (தடிப்பாயுள்ள சிறுநீர் கழிதல்) (ஸாந்தரம்- இறுகுதல்)**

கபம் சீற்றமடைந்த எந்த மனிதனுடைய சிறுநீர் பாத்திரத் தில் வைப்பதால் இறுகிப்போகிறதோ அவன் ஸாந்த்ரமேஹம் எனும் நோயுள்ளவன் என அறிய வேண்டும். *(15)*

**(ஈ) ஸாந்த்ரப்ரஸாத மேஹம் (இறுகலாகவும், தெளிவாகவும் சிறு நீர் கழிதல்)**

கபம் சீற்றமடைந்த எந்த நோயாளியின் சிறுநீரை பாத்திரத் தில் வைப்பதால் தடிப்பாகவும் இறுகியும் அதன்மேல் சிறிதளவு தெளிவாகவும் அழுக்கற்றதாகவும் ஆகிறதோ அவன் மேற்கண்ட ஸாந்த்ரப்ரஸாத நீரிழிவு உடையவன் என அறிந்துகொள்ள வேண்டும். *(16)*

**(உ) சுக்லமேஹம் (வெண்ணிறமாக சிறுநீர் கழிதல்): (சுக்லம் - வெண்ணிறம்)**

கபத்தின் சீற்றத்தினால் கரைத்த அரிசிமாவு போல் வெண்ணிறமாக அடிக்கடி சிறுநீர் கழிப்பவன் மேற்காணும் நோய்க்கு உரியவனாகிறான். (17)

**(ஊ) சுக்ரமேஹம் (விந்து கலந்த சிறுநீர் கழிதல்) (சுக்ரம் விந்து)**

கபத்தின் சீற்றத்தினால் சுக்ரதாதுவும், சீரழிந்து இரத்தத்துடன் கலந்து விந்துவைப் போல் அல்லது விந்துவுடன் கலந்து அடிக்கடி சிறுநீர் கழிப்பவனை சுக்ரமேஹி என்கிறோம். (18)

**(எ) சீதமேஹம் (குளிர்ந்த சிறுநீர்க்கழிதல்) (சீதம் – குளிர்ந்தது)**

கபத்தின் சீற்றத்தினால் மிக்க இனிப்பாகவும் குளிர்ந்தும் அதிகமாகவும் சிறுநீர் கழிப்பவன் சீத மேஹம் எனும் பிணியாளி ஆவான். (19)

**(ஏ) ஸிகதாமேஹம் (மணற்போன்று சிறுநீர் கழிதல்) (ஸிகதா– மணல்)**

கபம் சீற்றமடைந்து சிறுநீர்ப் பையை அடைந்த அணுக்கள் நிறைந்து தோஷங்கள், மிக நுட்பமான, மணற்போன்ற கெட்டியான சிறுநீரை வெளியேற்றுகிறதோ அந்த நோய் ஸிகதா மேகம் என அழைக்கப்படுகிறது. (20)

**(ஐ) சனைர்மேஹம் (சொட்டுச் சொட்டாக சிறுநீர் கழிதல் (சனை- மெள்ள)**

கபத்தின் சீற்றத்தினால் மெள்ள மெள்ள வேகமில்லாமல் துன்பப்பட்டு அடிக்கடி சிறுநீர் கழிக்கும் நோய் சனைர்மேஹம் எனப்படுகிறது. (21)

**(ஒ) ஆலாலமேஹம் (நூல்போல சிறுநீர் கழிதல்) (ஆலால - நூல்)**

கபம் சீற்றமடைவதின் காரணமாக நூல்போன்று அணுக்களுடன் இடைவிடாமலும் வழவழப்பாகவும் உள்ள சிறுநீரை கழிப்பவன் மேற்கண்ட நோயுடையவனாகக்கருதப்படுகிறான். (22)

இவ்வாறு கபத்தினால் தோன்றும் பத்துவகை நீரழிவுகள் கூறப்பட்டன. (23)

**3. பித்தத்தினால் தோன்றும் நீரிழிவு வகை**

உஷ்ண வீர்யம் புளிப்பு உப்பு க்ஷாரம் இச்சுவையுள்ள பொருட்களைப் பயன்படுத்துவதாலும், சீரணம் ஆகாத

பொருட்களைப் பயன்படுத்துவதாலும், அசீர்ண நிலையில் மேலும் உண்பதாலும், மிகக் கடினமான வெயிலில் அலைவதாலும், தீயின் சூட்டினாலும், களைப்பு சினம் தகாத காலத்தில் புசிப்பது இவற்றாலும் பித்தம் அதிகமாகி விரைவில் சீற்றலைப் பெறுகிறது.

சீற்றமடைந்த பித்தம் (கபதோஷத்தில்) முன்புகூறிய முறைப்படிஆறு வகையான நீரிழிவு நோய்களை வெகுவிரைவில் தோற்றுவிக்கிறது. (24)

பித்தகுணத்தின் வேறுபாட்டினால் நோயகளின் பெயர்களும் பிரிக்கப்படுகின்றன. அவை 1. க்ஷாரமேஹம் 2. காலமேஹம் 3. நீலமேஹம் 4. லோஹித மேஹம் 5. மாஞ்சிஷ்டிமேஹம் 6. ஹாரித்ரமேஹம் என்பன (25)

க்ஷாரம் புளிப்பு உப்பு கார்ப்பு செட்ட நாற்றம் உஷ்ணம் என்ற ஆறுவகை பித்த குணங்களைக் கொண்டு முன்போல் நோய்கள் ஆறு விதமாகக் கூறப்பட்டுள்ளன. (26)

கபம் பித்தம் இரண்டின் கூட்டு கொழுப்பை இருப்பிடமாகக் கொண்டிருப்பதாலும் இங்கு ஒன்றுக்கொன்று எதிரிடையான சிகிச்சையைப் பயன்படுத்த வேண்டியிருப்பதாலும் பித்தத்தினால் உண்டாகும் ஆறுவகை நீரிழிவுகள் மருத்துவத்தாலும் கட்டுப்பாட்டினாலும் காலம் கடத்தக்கூடியவை. (27)

**பித்தத்தினால் தோன்றும் நீரிழிவின் பிரிவுகளை அறிவதற்கான செய்யுட்கள்**

**(அ) *க்ஷாரமேஹம் (க்ஷாரப்பொருட்கள் கரைத்த நீர்போல் சிறுநீர் கழிதல்)**

பித்தத்தின் சீற்றத்தினால் க்ஷாரமேஹம் எனும் நீரிழிவு நோயுள்ளவன், மணம் நிறம் உருவம் தொடு உணர்ச்சி இவற்றில் க்ஷாரப் பொருட்களைப் போன்று சிறுநீர் கழிப்பான். (29)

**(ஆ) காலமேஹம் (மசியின் நிறம் போன்று சிறுநீர் கழிதல்) (காலம்–கருப்பு)**

பித்தத்தின் சீற்றத்தினால் எப்பொழுதும் மசியைப் போல் கருநிறமாகவும் உஷ்ணமாகவும் சிறுநீர் கழிப்பவன் மேற்கண்ட காலமேஹம் எனும் நீரிழிவு நோயுடையவனாகிறான். (30)

---

[1] க்ஷாரம் – உவர்ப்பும், உப்பும் மிகுதியாக உள்ளதும் உடலைக் கெல்லும் வலிவுடைய பொருள்.

**(இ) நீல மேஹம் (நீல நிறமாக சிறு நீர்கழிதல்) (நீலம் - நிலநிறம்)**

பித்தத்தின் சீற்றத்தினால் மயில் தோகையின் நிறம் போன்றும் புளிப்பாகவும் சிறுநீர் கழித்தால் அதற்கு நீலமேஹம் எனப் பெயர். *(31)*

**இரத்த மேஹம் (இரத்தம் கலந்த சிறுநீர் கழித்தல்)**

பித்தம் சீற்றமடைவதால் கெட்ட நாற்றம் உப்பு உஷ்ணம் இரத்தம் இவற்றுடன் கலந்த சிறுநீர் கழிப்பவன் இரத்த மேஹம் என்னும் நோயுடையவன். *(32)*

**(உ) மாஞ்சிஷ்டமேஹம் (மஞ்சி ்டை எனும் மூலிகைப் பொருளால் தயாரிக்கப்பட்ட கஷாயம் போல் சிறுநீர் கழிதல்)**

பித்தத்தின் சீற்றத்தால் மஜ்சிஷ்டை எனும் மூலிகை கஷாயம் போல் செந்நிறமாகவும் அதிகமான கெட்ட நாற்றத்துடனும் சிறுநீர் இறங்குவதற்கு மாஞ்சிஷ்ட மேஹ நீரழிவு எனப் பெயர். *(33)*

**(ஊ) ஹாரித்ரமேஹம் (மஞ்சள் கரைத்த நீர்போல் சிறுநீர் வெளிப் படுதல்) (ஹாரித்ரா - மஞ்சள்)**

பித்தத்தின் கோபத்தினால் மஞ்சள் நிறமாகவும், கார்ப்பாகவும் சிறுநீர் கழிப்பவனை ஹாரித்ரமேஹமுள்ளவன் எனக் கூறுகிறோம். *(34)*

இவ்வாறு பித்தத்தின் சீற்றத்தின் காரணமாகத் தோன்றிய ஆறுவகை நீரிழிவு நோய்கள் விளக்கப்பட்டன. *(35)*

**(4) வாதத்தின் சீற்றத்தினால் தோன்றும் நீரிழிவு வகை**

துவர்ப்பு காரம் கைப்பு வறட்சி லகுகுணம் சீதவீர்யம் உள்ள பொருட்களைப் பயன்படுத்துவதாலும், அதிகமான பெண் சேர்க்கையினாலும், அதிக உடற்பயிற்சி வாந்தி பேதி கஷாய வஸ்தி சிரோவிரேசனம் இவற்றை மிதமிஞ்சிப் பயன்படுத்துவதாலும், சிறுநீர் மலம் முதலியவற்றின் வேகங்களை அடக்குவதாலும், புசியாமலிருப்பதாலும், அடிபடுதல் வெயிலில் சுற்றுதல் எழுச்சி, வருத்தம் இவற்றாலும், அதிக இரத்தப் போக்கினாலும், அதிக நேரம் கண்விழிப்பதாலும், உடலைத் தாறுமாறாகப் பயன்படுத்துவது முதலிய காரணங்களாலும் தளர்வடைந்த மனிதனுக்கு வாதம் விரைவில் சீற்றம் பெறுகிறது. *(36)*

சீற்றமடைந்த வாதம், அந்த மனிதனுடைய உடலில் பரவும் பொழுது மேற்கூறிய காரணங்களாலேயே கேடடைந்த வஸ எனும் கொழுப்பு நிணநீரை எடுத்து நீருடன் கலந்து, சிறுநீரைப்

பிரித்து எடுத்துச் செல்லும் துவாரங்களில் பரவி வெளியாகும் போது வஸாமேகம் எனும் நீரழிவு நோயை உண்டுபண்ணுகிறது.

சீற்றமடைந்த வாதம் சிறுநீர்ப்பையில் எலும்புக்குள் உள்ள சோற்றை (மஜ்ஜை) கொண்டு சேர்த்து சிறுநீர்ப்பையினுள் சிறு நீருடன் கலந்து சிறுநீர் வெளிப்படும் நாளங்கள் வழியாக வெளிப் படுதல் [1]மஜ்ஜாமேஹம் எனப் பெயர் பெறுகிறது.

வாதம் தோலுக்கும் மாம்சத்திற்கும் இடையில் உள்ள நீர் பொருளை [2]லஸிகா எனும் சிறுநீர்ப்பையில் கொண்டு சேர்த்து சிறுநீரைத் தொடர்ச்சியாக வெளிப்படுத்துகிறது. தோலுக்கும் மாமிசத்திற்கும் இடையில் உள்ள நீர்ப்பொருள் அதிகமாக இருப் பதாலும், வாதத்திற்கு குழப்பும் தன்மை இருப்பதாலும் அதிக மாக சிறுநீரைக் கழிக்கச்செய்கிறது. அல்லது தடைப்படுத்துகிறது.

அப்பொழுது யானை சிறுநீர்கழிப்பதுபோல் சிறுநீரைத் தொடர்ந்து அடிக்கடி மெள்ள மெள்ள சிறுநீர் கழிப் பது [3]ஹஸ்திமேஹம் எனப்பெயர் பெறுகிறது.

வறட்சித் தன்மையுடைய வாதம் இனிப்புச்சுவையுள்ள [4]ஓஜஸ் எனும் தாதுவை அதிகத் துவர்ப்புச் சுவையுடன் கலந்து சிறுநீர பையை வந்தடையச் செய்கிறது. அப்பொழுது ஏற்படும் நீரிழிவு மதுமேஹம் எனப் பெயர் பெறுகிறது. (மதுமேஹம்— சர்க்கரை நீரிழிவு) (37)

இவ்வாறு வாதத்தின் சீற்றத்தினால் உண்டான வஸாமேஹம் மஜ்ஜாமேஹம், ஹஸ்திமேஹம், மதுமேஹம், என்ற நான்கு வகை நீரிழிவு நோய்களும் பெரும் துன்பத்தை விளைவிக்கக் கூடிய னவாகவும், இங்குள்ள தோஷங்கள் தூஷ்யங்கள் இவற்றிற்கு ஒன்றுக்கொன்றுஎதிரிடையான சிகிச்சை செய்ய வேண்டியிருப்ப தாலும் மருத்துவத்திற்குக் கட்டுப்படாதவை என்டது மருத்துவர் களின் கூற்று. (38)

---

(1) மஜ்ஜை — எலும்புக்குள் உள்ள சோறு

(2) லஸிகா — தோலுக்கும் மாமிசத்திற்கும் இடையில் உள்ள நீர்ப் பொருள்.

(3) ஹஸ்திமேஹம் — மதமடைந்த யானை சிறுநீர் கழிப்பது போல் அடிக்கடி மெள்ளமெள்ள சிறுநீர் கழிப்பது.

(4) ஓஜஸ் — இதயத்திலும், உடல் முழுவதும் பரவி யிருக்கும் எல்லா தாதுக்களின் சாரம்.

இவற்றிற்கும் முன் கூறியதுபோல் இவற்றிற்குரிய குண மாறு பாட்டினால் வஸாமேஹம், மஜ்ஜாமேஹம், ஹஸ்திமேஹம், மது மேஹம் எனப் பெயர் வேறுபாடுகள் ஏற்படுகின்றன. *(39)*

வாதத்தின் சீற்றத்தினால் தோன்றும் நீரழிவுகளைப் பற்றி அறிந்துகொள்வதற்கான செய்யுட்கள் *(40)*

**(அ) வஸாமேஹம் (வஸா - நிணநீர்)**

வாதத்தின் சீற்றத்தினால் வசையுடன் கலந்தோ அல்லது வசை நீரைப் போலவோ அடிக்கடி சிறுநீர் கழிப்பவன் வஸாமேஹம் எனும் நீரழிவு நோயுள்ளவன். இந்நோய் சிகிச்சைக்குக் கட்டுப் படாதது. *(41)*

**(ஆ) மஜ்ஜாமேஹம் (மஜ்ஜை - எலும்புக்குள் இருக்கும் சோறு)**

வாதம் சீற்றமடைவதனால் எலும்புக்குள் இருக்கும் மஜ்ஜை சிறுநீருடன் கலந்து அடிக்கடி சிறுநீர் கழிப்பவனை மஜ்ஜா மேஹம் எனும் நோயுடையவன் எனக் கருதுகிறார்கள். இந்த நோயும் சிகிச்சைக்கு அடங்காதது. *(42)*

**ஹஸ்திமேஹம் (ஹஸ்தி - யானை)**

வாதத்தின் சீற்றத்தினால் மதம் பிடித்த யானை சிறுநீர் கழிப்பதுபோல் அதிகமாக அடிக்கடி சிறுநீர் கழிப்பவனை ஹஸ்தி மேஹம் என்னும் பிணியாளி என்பர். இந்த நோயும் சிகிச்சையைக் கடந்தது. *(43)*

**மதுஹேகம் (மது - இனிப்பு)**

வாதத்தின் கோபத்தினால் துவர்ப்பாகவும் இனிப்பு கலந்த வெண்ணிறமாகவும் வறட்சியாகவும் சிறுநீர் கழிப்ப வனை மதுமேஹம் எனும் நீரிழிவு நோயுடையவன் என அறிய லாம். இந்த நோயும் சிகிச்சைக்கு அடங்காதது. *(44)*

இவ்வாறு வாதத்தின் சீற்றத்தினால் தோன்றும் நான்குவித நீரழிவு நோய்கள் விளக்கப்பட்டுள்ளன. *(45)*

இவ்விதம் மூன்று தோஷங்களின் சீற்றத்தின் காரணங்களால் இருபதுவகையான நீரிழிவு நோய்கள் விளக்கப்பட்டன. *(46)*

**5. நீரிழிவுநோயின் முற்குறிகள்**

தலைமயிரில் சடைவிழுதல், வாயின் இனிப்பு, கைகால்களில் உணர்வின்மை, எரிச்சல், வாய், தாடை, தொண்டை இவை உலர்ந்துபோதல், தாகம், சோம்பல், உடலில் அதிக அழுக்கு சேருதல், உடலில் உள்ள துவாரங்களில் அழுக்கு சேருதல், உடல்

முழுவதும் எரிச்சல், உடல் உறுப்புக்களின் உணர்வின்மை, வண்டுகள் எறும்புகள் உடலிலும் சிறுநீரிலும் மொய்த்தல், சிறுநீரில் மற்ற தோஷங்கள் வந்து சேருதல், உடலில் கெட்டவாடை, அதிக உறக்கம், எக்காலத்திலும் சுறுசுறுப்பின்மை, என இவை யாவும் மூன்று தோஷங்களின் சீற்றத்தால் தோன்றும் நீரிழிவு நோய்களின் முற்குறிகளாகும். (47)

### 6. நீரிழிவினால் ஏற்படும் தொல்லைகள்

நாவறட்சி, கழிச்சல், காய்ச்சல், எரிச்சல், வலுவின்மை, சுவையின்மை, சீரணமாகாமை, இவை நீரிழிவு நோய்களால் ஏற்படும் தொந்தரவுகளாம். மாமிசம் அழுகிப்போதல், சிறுகட்டிகள், பெருங்கட்டிகள், சிலந்திக்கட்டிகள், சீழ்க்கட்டிகள் போன்றவை அந்நோயின் காரணங்களாகத் தோன்றுகின்றன. (48)

சிகிச்சைக்குக் கட்டுப்பட்ட நீரழிவு நோய்களை நோய் – நோயாளியின் உடல்நிலைக்குத் தக்கவாறு பேதிக்கும் வாந்திக்கும் மருந்து கொடுத்து உடலைச் சுத்தம் செய்து நோய்களைத் தணிக்கும் மருந்துகளைக் கொடுத்து மருத்துவம் செய்ய வேண்டும். (49)

### இதைப்பற்றிய செய்யுள்

“பறவை தான் கூடு கட்டியுள்ள மரத்தை வந்தடைவதுபோல் நீரிழிவுநோய் உண்பதில் பேராசையுள்ளவன் நீராடுதல் வெளியில் சுற்றுதல் இவற்றில் வெறுப்புள்ளவன் இவர்களை வந்தடைகிறது.” (50)

“உற்சாகம் குன்றியவன், மிகப் பருத்தவன், மிக்க நைப்புள்ளவன், பெருமளவில் உணவு உண்பவன் இவர்களை மரணம் நீரிழிவு எனும் நோயின் உருவத்தில் விரைவில் எடுத்துச் செல்கிறது.” (51)

“உடலில் உள்ள தாதுக்களுக்கு ஒத்துப்போகும் உணவு வகைகளை உண்பவன், உழைப்பவன், பலவித உடற்பயிற்சி செய்கிறவன் என இவர்கள் ஆரோக்கியத்துடன் இன்பவாழ்வு வாழ்கின்றனர்.” (52)

### முடிவுரை

நோயின் காரணம் நோய் இவற்றின் சிறப்புத் தன்மை, தோஷங்கள் தாதுக்கள் இவற்றின் சேர்க்கை, பலவிதக் குறிகள், கபத்தின் சீற்றத்தினால் தோன்றும் பத்துவகை நீரிழிவு நோய்கள் பித்தத்தின் சீற்றத்தினால் உண்டாகும் ஆறுவகை நீரிழிவு நோய்கள் வாதத்தின் சீற்றத்தினால் ஏற்படும் நால்வகை நீரிழிவு

நோய்கள், சிகிச்சைக்குக் கட்டுப்பட்டவை, கட்டுப்படாதவை முற்குறிகள், தொல்லைகள் அவற்றிற்குச் சுருக்கமான சிகிச்சை முறைகள் இந்தப் பிரமேஹ நிதானம் எனும் அத்தியாயத்தில் விளக்கப்பட்டன. *(53–55)*

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு
சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
நிதானஸ்தானத்தில் பிரமேஹ நிதானம் எனும்
நான்காம் அத்தியாயம் முற்றும்.

## ஐந்தாவது அத்தியாயம்

# *குஷ்டநிதானம்

குஷ்ட நிதானம் எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். *(1–2)*

சீற்றமடைந்த மூன்று தோஷங்கள் நான்கு தூஷ்யங்கள் என ஏழு பொருட்கள் குஷ்ட நோய்கள் உண்டாவதற்குக் காரணமாகின்றன.

அதாவது குஷ்ட நோய் உண்டாவதற்கான காரணங்களால் சீற்றமடைந்த வாதம் பித்தம் கபம் எனும் மூன்று தோஷங்கள் இவற்றினால் கோளாறடைந்த உடலில் உள்ள தாதுக்களான தோல், மாமிசம், இரத்தம், லஸிகா எனச் சொல்லப்படும் மாமிசத்திற்கும் தோலுக்கும் நடுவில் உள்ள நீர் என இந்நான்கு தூஷ்யங்களான இவ்வேழு பொருட்கள் ஏழுவகையான குஷ்டங்களுக்குக் காரணமாகின்றன.

இக்காரணங்களால் தோன்றிய குஷ்ட நோய்கள் உடல் முழுவதும் பரவி உடலைத் துன்புறுத்துகின்றன. *(3)*

### 1. எல்லாவிதக் குஷ்ட நோய்களும் மூன்று தோஷங்களால் ஏற்பட்டவை

ஒரே தோஷம் சீற்றமடைந்து எவ்விதக் குஷ்ட நோயையும் உண்டுபண்ணுவதில்லை. ஏழு வகையான குஷ்டங்களும், சமானமான ஒரே காரணத்தால் உண்டான போதிலும், தோஷங்களுடைய சிறிய பிரிவுகள், சீற்றத்தின் அளவுவேறுபாடுகளால் நோயுண்டாகும் இடம், நோயின் துன்பநிலை, நிறம், உருவம் பெயர் இவற்றின் தனித்தன்மையால் அது வெவ்வேறுபெயர்களைப் பெறுகிறது. அவற்றின் தனித்தனிச் சிகிச்சையும் மாறுபடுகிறது. அந்தக் குஷ்ட நோய் ஏழு வகையாகவோ பதினெட்டு வகையாகவோ எண்ணற்ற வகையாகவோ ஆகிறது. தோஷங்களின் சிறுசிறு வேறுபாட்டைக் கொண்டு நோய்களும் பிரிக்கப்படுமாயின் நோய்கள் கணக்கற்றவைகளாக ஆகின்றன. நோயின் தீர்க்கமுடியாத நிலைக்கு இத்தகைய வேறுபாடுகள் கிடையா.

---

*குஷ்ட நிதானம் – குஷ்டநோய் தோன்றுவதற்கான காரணங்களை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

இவ்வாறு தோஷங்களின் பிரிவுகளைக் கொண்டு நோய்களைப் பிரித்து, பலவிதமாகக் கூறுவது என்றால் மிகவும் விரிவாகிவிடும். ஆதலால் குஷ்ட நோயை ஏழுவிதமாகக் கருதி விளக்குவோம். (4)

## 2. குஷ்டத்தின் பிரிவுகளும் அவற்றின் காரணங்களும்

சீற்றமடைந்த வாதம் பித்தம் கபம் என்ற மூன்று தோஷங்கள், தோல் இரத்தம் மாமிசம் தோலுக்கும் மாமிசத்திற்கும் இடையில் உள்ள நீர் இந்நான்கையும் கெடுக்கின்றன.

வாததோஷம் அதிக அளவில் உள்ள குஷ்டத்திற்கு கபால குஷ்டம் என்று பெயர்.

பித்ததோஷம் அதிகமாயிருந்தால் ஔதும்பரம் என்ற குஷ்டத்தை அது தோற்றுவிக்கிறது.

கப தோஷம் அதிகரிப்பதனால் மண்டலம் எனும் குஷ்டநோய் ஏற்படுகிறது.

வாதம் பித்தம் என்ற இரண்டு தோஷங்கள் அதிக அளவிலிருந்தால் ரிஷ்ய ஜிஹ்வம் என்ற குஷ்டநோய் தோன்றுகிறது.

பித்தம் கபம் என்ற இரு தோஷங்கள் அதிகமிருந்தால் புண்டரீகம் எனும் குஷ்டம் உண்டாகும்.

கபம் வாதம் என்ற இரண்டு தோஷங்களின் அதிக அளவினால் வித்மம் எனும் குஷ்டம் தோன்றும்.

மூன்று தோஷங்களும் அதிகமிருக்குமேயாகில் அது காகணகம் எனும் குஷ்டத்தைத் தோற்றுவிக்கும்.

இவ்வாறு ஏழுவகைக் குஷ்டங்கள் உள்ளன. இந்த ஏழுவகை குஷ்ட நோய்களும் அவற்றைத் தோற்றுவிக்கின்ற காரணங்களின் குறைவு அதிகம் இவற்றின் பிரிவுகளால் எண்ணற்றவைகளாகின்றன. (5)

## 3. எல்லா வகைக் குஷ்டங்களுக்கும் சுருக்கமான காரணங்கள்

இங்கு எல்லா வகையான குஷ்டங்கள் தோன்றுவதற்கான காரணங்களைச் சுருக்கமாகக் கூறுவோம்.

குளிர்ச்சியான பொருட்கள் உஷ்ணமான பொருட்கள் இவற்றை மாறி மாறிப் பயன்படுத்தல், உடலைப் பருக்கச் செய்யும் சிகிச்சை இளைக்கச் செய்யும் சிகிச்சை இவற்றை மாறி மாறிச் செய்து கொளல், தேன் கருப்பஞ்சாறு மீன் எலுமிச்சம் பழம் முள்ளங்கி மணத்தக்காளி இவற்றை அதிக அளவில் எப்பொழுதும் பயன்படுத்துதல், அசீரண நிலையில் மேலும் உண்பது, சிலீசிமம் என்ற மீனைப் பாலுடன் கலந்து உண்பது, ஓராண்டில்

விளையும் நெல் (ஹாயனகம்) யவம் எனும் தானியம் தினை காட்டுக் கேழ்வரகு கேழ்வரகு இவற்றால் தயாரிக்கப்பட்ட சோற்றை பால் தயிர் மோர் புள்ப்பு இலந்தை கொள்ளு உளுந்து ஆளிவிதை இவற்றை செந்துருக்க எண்ணெயுடன் கலந்து உபயோகித்தல், இதே உணவை அதிகம் பயன்படுத்தல், புணர்ச்சி உடற்பயிற்சி கடும் வெயிலில் அலைதல் இவற்றை அதிக அளவில் செய்தல் ஆகியவற்றால் குஷ்டநோய்கள் தோன்றுகின்றன.

பயம், உழைப்பு, வெயிலில் அலைந்தபின் உடனே குளிர்ந்த நீரில் நீராடுபவன், பித்தத்தினால் உண்டான அசீரணத்தை வாந்தி எடுக்காமல் மேலும் அசீரணப் பொருட்களை உண்பவன், தானாக வரும் வாந்தியை அடக்குபவன், எண்ணெய்ப் பொருட்களை அதிகம் பயன்படுத்துபவன் என இவர்களுக்கு ஒரே சமயத்தில் மூன்று தோஷங்களும் சீற்றமடைகின்றன. தோல் இரத்தம் மாமிசம் லஸிகா என்ற நான்கு தாதுக்களையும் தளர்ச்சியடையச் செய்கின்றன. தளர்ச்சியடைந்த தாதுக்களில் சீற்றமடைந்த தோஷங்கள் இடம் பெற்று அங்கிருந்துகொண்டே அதே தாதுக்களைக் கேடடையச் செய்து குஷ்ட நோய்களைத் தோற்றுவிக்கின்றன. (6)

## 4. குஷ்ட நோயின் முற்குறிகள்

வியர்வை வெளிவராதிருத்தல் அல்லது அதிகம் வியர்வை வெளிப்படுதல் குஷ்டம் தோன்றிய இடத்தில் சொரசொரப்பு அதிக மழமழப்பு நிறமாற்றம் அரிப்பு குத்தல் வலி உணர்வின்மை சுற்றிலும் எரிச்சல் நமநமப்பு மயிர் கூச்சல் தோலில் வறட்சி சூடாகத் தோன்றுதல் பளு, வீக்கம் ஏற்பட்டு உடலில் பரவும் துவாரங்களில் அழுக்கு சேருதல் இவை நோயின் அடையாளங்கள்.

மேலும் உடலில் கொப்புளம் ஏற்பட்டு பழுத்தல், நெருப்புச் சுடுதல், ஏதாவது பிராணிகள் கடித்தல், உறுப்புகள் முறிந்து போதல், காயம்படுதல், கீழே விழுதல் இவை ஏற்பட்டால் அதிக வேதனை ஏற்படும். சிறுபுண் உண்டானாலும் கெட்டுப்போய் விரைவில் குணமடைவதில்லை. (7)

**(அ) 1. கபால குஷ்டத்தின் இலக்கணம் (மண்ணாலான மடக்கைப் போன்ற உருவமும் நிறமும் உடையது.)**

குஷ்டத்திற்கான முற்குறிகள் தோன்றியபின் நோய்கள் வெளிப்படுகின்றன.

அவற்றின் வேதனை நிறம் உருவம் சக்தி பெயர் இவற்றைக் கீழ்கண்டவற்றால் அறியலாம். வறட்சி, செந்நிறம், கடினத் தன்மை, ஏற்றத்தாழ்வுடன் பரவுதல், சொரசொரப்பான வரம்புகள், வெளிப்புற வரம்பு மெல்லியதாகவும் தூக்கியுமிருத்தல், தூங்குவது போன்ற உணர்ச்சி, மயிர்க்கூச்சல், ஊசி குத்துவது போன்ற அதிக வேதனை, சிறிதளவு அரிப்பு, எரிச்சல், சீழ்வெளிப் படுதல், கெட்ட நீர் வடிதல் ஆகியவை ஏற்படும்.

இந்த குஷ்ட நோய் விரைவில் பரவும் தன்மையுடையது. ஊடுருவிச் செல்லக்கூடியது, பிளவு உண்டுபண்ணக்கூடியது. கிருமிகள் உள்ள கருப்பு சிவப்பு மண் ஓட்டின் நிறம் கொண்டது. இப்படிப்பட்ட குஷ்டநோய் [1]'கபால குஷ்டம்' எனப்பெயர் பெறுகிறது.

**(ஆ) [2]உதும்பர குஷ்டத்தின் இலக்கணம் (அத்திப்பழத்தைப் போன்ற நிறமுடையது)**

இக்குஷ்டம் தாமிரம் போன்ற செந்நிறத்துடன் அதே நிறமுள்ள ரோம வரிசைகளால் சூழ்ந்திருக்கும். மிக ஆழமானது. சீழ் இரத்தம் நிணநீர் இவை நிரம்பியிருக்கும். அரிப்பு பிசு பிசுப்பு அழுகுதல் எரிச்சல் பழுத்தல் இவற்றையுடையது. விரைவில் ஊடுருவிச் சென்று பரவும் தன்மையுடையது. பிளவை உடையது. சூடுள்ளது. கிருமிகள் நிரம்பியது. பழுத்த அத்திப் பழத்தின் நிறத்தைக் கொண்டது. இப்படிப்பட்ட குஷ்டம் 'உதும்பர குஷ்டம்' எனப்படும்.

**(இ) [3]மண்டல குஷ்டத்தின் இலக்கணம் (வட்ட வடிவமாகத் தோன்றும் குஷ்டம்)**

நைப்புள்ளது, கடினமானது, வரம்புள்ளது, வழவழப்புள்ளது, கெட்டித் தன்மையுடையது, பொன்னிறமான வரம்புகளை உடையது, வெளுப்பு நிறமும் இரத்த நிறமும் கொண்டது. வெண்மையான ரோமங்கள் சூழ்ந்திருக்கும். அதிக ஆழமுள்ளது. வெண்ணிறமான பிசுபிசுப்புடன் கூடிய நீர் நிரம்பியது. அதிக ஈரமானது. அரிப்புள்ளது. கிருமிகள் நிரம்பியிருப்பது. மெள்ள மெள்ள தோன்றி ஊடுருவிச் சென்று பிளக்கக்கூடியது. வட்ட வடிவமான உருவமுடையது. இப்படிப்பட்ட குஷ்டம் 'மண்டல குஷ்டம்' எனப்படுகிறது.

---

1. கபாலம் – மண்ணாலான மடக்கு
2. உதும்பரம் – அத்திப் பழம்
3. மண்டலம் – வட்ட வடிவம்.

**(ஈ) [1]ரிஷ்யஜிஹ்வ குஷ்டத்தின் இலக்கணம் (மானின் நாக்கு போன்ற உருவமுடைய குஷ்டம்)**

சொரசொரப்புள்ளது. செந்நிறமானது. வெளிப்புறமும் உட்புறமும் கருநிறமுள்ளது. நீலம் மஞ்சள் தாமிரத்தைப் போன்ற செந்நிறம் இவற்றால் ஒளி வீசுவது, விரைவில் ஊடுருவும் தன்மையுடையது. சிறிதளவு அரிப்பு கொசகொசப்பு உள்ளது. கிருமிகள் நிரம்பியது. மிக்க எரிச்சல் பிளப்பது போன்ற வலி குத்தல்களைத் தோற்றுவிப்பது. அழுகும் தன்மை உடையது. ஊகுமுள் குத்துவது போன்ற வலி, நடுவில் உயர்ந்திருப்பது. வரம்புகள் மெலிந்திருக்கும். சொரசொரப்பான சிறுகட்டிகள் பரவியிருக்கும். நீள்வடிவமாகவும், வட்ட வடிவமாகவும் தோற்றமளிக்கும். மான் நாக்கிலுள்ள முட்கள் போன்ற மேடுபள்ள உருவமுடையது.

இவ்வாறு தோற்றமளிக்கக்கூடிய குஷ்டம் 'ரிஷ்யஜிஹ்வ குஷ்டம்' எனக் கூறப்படுகிறது.

**(உ) [2]புண்டரீக குஷ்டத்தின் இலக்கணம் (செந்தாமரை இதழ் போன்ற உருவமும் நிறமும் கொண்டது)**

வெண்மையும் சிகப்பும் கலந்த ஒளி கொண்டது. வரம்புகள் செந்நிறமாயிருக்கும். இரத்த நிறமுள்ள கோடுகளும் நரம்புகளும் ப்ரவியிருக்கும். புடைத்திருக்கும். ஆழமானது. இரத்தம், சீழ் கெட்ட நீர் இவை அதிகமாகப் பெருகும். அரிப்பு தோன்றும். கிருமிகள் நிரம்பியிருக்கும். எரிச்சல் தோன்றும். அழுகியிருக்கும். விரைவில் தோன்றி ஊடுருவிப் பரவி பிளக்கும் தன்மையுடையது.

செந்தாமரை மலரின் இதழின் நிறம் போலும் கலியாண முருங்கை மலரின் நிறம் போன்றுமிருப்பதால் இதைப் 'புண்டரீக குஷ்டம்' என்கிறோம். (8)

**(ஊ) [3]ஸித்ம குஷ்டத்தின் இலக்கணம் (சுரக்காய் பூவின் நிறம் போன்றிருக்கும்)**

வெளி வரம்புகள் சொர சொரப்பாகவும் செந்நிறமாகவும் சிறியனவாகவும் மெல்லியனவாகவும் நடுவில் மிக்க நைப்பு உள்ளனவாகவும் இருக்கும்.

வெளுப்பும் சிவப்பும் கலந்த ஒளி உடையது. அதிகமாகவோ அல்லது குறைவாகவோ வேதனையளிக்கும். சிறிதளவு அரிப்பு

---

1. ரிஷ்ய ஜிஹ்வம் — மானின் நாக்கு
2. புண்டரீகம் — செந்தாமரை
3. ஸித்மம் — சுரக்காய்ப் பூ

எரிச்சல் சீழ் நிணநீர் இவை உண்டாகும். சிறு காரணங்களால் உண்டாகக்கூடியது. சிறியசிறிய பிளவுகளை உடையது. கிருமிகள் நிரம்பித் தோன்றாதது. சுரக்காய்ப் பூவின் நிறம் போன்றிருப்பதால் இந்தக் குஷ்ட நோயை 'ஸித்ம குஷ்டம்' என்கிறோம். (9)

**(எ) [1]காகணக குஷ்டத்தின் இலக்கணம் (பலவகை நிறமுடைய குஷ்டம்)**

தொடக்கத்தில் குன்றிமணி போல் நடுவில் கறுத்தும் சுற்றுப் புறம் சிவந்த நிறமுள்ளதாகவும் இருக்கும். பிறகு மற்ற எல்லாக் குஷ்டங்களின் குறிகளும் சேர்ந்திருக்கும். பாவச் செயல்களின் விளைவால் ஏற்படுவதாலும் எல்லாக் குஷ்டங்களின் குறிகள் தோன்றுவதாலும், பலவகை நிறங்களைக் கொண்டிருப்பதாலும் இக்குஷ்டநோய்க்குக் 'காகணககுஷ்டம்' எனப்பெயர் வந்தது. இந்த நோய் சிகிச்சைக்குக் கட்டுப்படாது. மற்ற குஷ்ட நோய்கள் மருத்துவத்திற்குக் கட்டுப்படும். (10)

## 5. சிகிச்சைக்குக் கட்டுப்பட்டதும் கட்டுப்படாததும்

சிகிச்சைக்குக் கட்டுப்படாத குஷ்ட நோய் கடைசிவரை கட்டுப்படாததாகவே ஆகிவிடும்.

சிகிச்சைக்குக் கட்டுப்படக்கூடிய குஷ்ட நோயும் சில சமயங்களில் முறையாகச் சிகிச்சை செய்யாமையால் கட்டுப்படாமல் போகலாம்.

காகணக குஷ்டத்தைத் தவிர மற்ற ஆறு குஷ்டங்களும் சிகிச்சைக்குக் கட்டுப்படக் கூடியவை. அக்குஷ்ட நோய்களும் உரிய காலத்தில் சிகிச்சை செய்யாமை, அபத்யமான முறைகளைக் கையாளுதல், தோஷங்கள் நிறைந்து நோய்கள் முற்றிப்போதல் போன்ற காரணங்களால் சிகிச்சைக்குக் கட்டுப்படாதவைகளாக ஆகின்றன. (11)

## 6. தோஷங்களினால் தோன்றும் குஷ்டத்தின் இலக்கணம்

சிகிச்சைக்குக் கட்டுப்படும் குஷ்ட நோய்களுக்கு விரைவில் மருத்துவம் செய்யாவிடில் தோல் மாமிசம் இரத்தம் நிணநீர் இவற்றை அது அழுகச் செய்கிறது. ஈரம் வியர்வை இவற்றால் கிருமிகள் உண்டாகின்றன. அவை தோல் மாமிசம் இரத்தம் நிணநீர் இவற்றைத் தின்றுவிடுகின்றன. அதனால் தோஷங்கள் மறுபடியும் கேடடைகின்றன. கெட்டுப்போன தோஷங்கள் தனித் தனியாகத் தொல்லைகளை உண்டாக்குகின்றன.

---

[1]காகணகம் — பலவகை நிறம்.

### (அ) வாததோஷம்

அவற்றில் குஷ்டம் தோன்றிய இடத்தில் கருட்பு சிவப்பு சொரசொரப்பு வறட்சி வலி உலர்த்துதல் குத்துவலி நடுக்கம் மயிர் கூச்சல் தோலில் சுருக்கம் உழைப்பில்லாமலே களைப்பு திமிர்த்தல் உணர்ச்சியின்மை உடைப்பது போன்ற வலி முறிவு இவற்றை வாததோஷம் உண்டாக்குகின்றது.

### (ஆ) பித்த தோஷம்

குஷ்டம் தோன்றிய இடத்தில் எரிச்சல் வியர்வை அதிகம் தோன்றுதல் கொச கொசப்பு அழுகுதல் கெட்ட நீர் வடிதல் பழுத்தல் நிற மாற்றம் இவற்றைப் பித்த தோஷம் தோற்றுவிக்கின்றது.

### (இ) கப தோஷம்

குஷ்டம் தோன்றிய இடத்தில் வெண்மை குளிர்ச்சி அரிப்பு கெட்டித்தன்மை பளு புடைத்தல் பிசுபிசுப்பு மேல் பூச்சுப் பூசியிருப்பது போன்ற உணர்வு இவற்றை கபதோஷம் உண்டாக்குகின்றது.

கிருமிகள், தோல் மாமிசம் இரத்தம் லஸிகா இந்த நான்கு தாதுக்களையும் தின்றபின் மெள்ள மெள்ள நரம்புகள் தசை நார் குருத்து எலும்புகள் இவற்றையும் தின்றுவிடுகின்றன. *(12)*

இந்நிலையில் குஷ்ட நோயாளிக்கு சீழ் ஒழுகுதல் உறுப்புகள் முறிதல் உறுப்புகள் அழுகிப்போய் கீழே விழுதல் தாகம் காய்ச்சல் கழிச்சல் எரிச்சல் வலிவிழத்தல் சுவையின்மை சீரணமின்மை இவை தோன்றித் துன்புறுத்துகின்றன. இவ்விதமான குஷ்ட நோயை சிகிச்சைக்குக் கட்டுப்படாதது என அறிந்து கொள்ள வேண்டும். *(13)*

### இதைப்பற்றிய செய்யுளின் கருத்து

சிகிச்சைக்குக் கட்டுப்பட்ட குஷ்ட நோய்க்குச் சிகிச்சை செய்யாமல் உதாசீனம் செய்கிறவன் சிறிது காலம் வாழ்ந்திருந்தாலும் இறந்தவனாகவே அறியப்படுகிறான். *(14)*

நோய் வருமுன் நோயின் தொடக்க நிலையில் மருந்துகள் மூலமாகத் தகுந்த சிகிச்சை பெறுகிறவன் வெகுகாலம் இன்ப வாழ்வு வாழ்கிறான். *(15)*

இளம் மரம் மிகுந்த சிரமமின்றி வெட்டப்படுகிறது. ஆனால் அதே முதிர்ந்துவிட்டால் மிக்க கஷ்டப்பட்டு வெட்ட வேண்டியிருப்பதுபோல் நோய் கண்டவுடன் சிகிச்சை செய்து கொண்டால்

சரியாகி விடுகிறது. தோஷங்கள் வளர்ந்துவிட்டால் கஷ்டப்பட்டு குணப்படுத்த வேண்டியுள்ளது. அல்லது சிகிச்சைக்குக் கட்டுப் படாமல் போய்விடும்.

**முடிவுரை**

இந்தக் குஷ்ட நிதானத்தில் குஷ்டங்களின் எண்ணிக்கை, பொருட்கள், தோஷங்கள், காரணங்கள், முற்குறிகள், இலக் கணம், துன்பங்கள் இவை தனித்தனியாகக் கூறப்பட்டன. (16)

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையின்
நிதானஸ்தானத்தில் குஷ்டநிதானம் எனும்
ஐந்தாம் அத்தியாயம் முற்றும்.

## ஆறாவது அத்தியாயம்

## *சோஷ நிதானம்

இனி சோஷ நிதானம் எனும் உடலுருக்கி நோயைப் பற்றி ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். (1–2)

உடல் உருக்கும் நோய் தோன்ற ஸாஹஸம் (சக்திக்கு மீறிய மிதமிஞ்சிய உழைப்பு) ஸந்தாரணம் (சிறுநீர், மலம் இவற்றின் வேகத்தை அடக்குதல்) க்ஷயம் (தாதுக்கள் அழிந்து விடுதல்) விஷமாசனம் (முறை தவறிய உணவு உண்பது) என்ற நான்கும் காரணமாகின்றன. (3)

### 1. ஸாஹஸம்

உடலுருக்கும் நோய்க்குக் காரணங்களில் ஒன்றான ஸாஹஸத்தைப் பற்றி விளக்குவோம்.

வலிவற்றவன் வலிவுள்ளவனுடன் சண்டையிடுதல், மிகப் பெரிய வில்லைப் பயன்படுத்துதல், அதிகமாகப் பேசுதல், அதிகப் பளு சுமத்தல், நீரில் அதிக தூரம் நீந்துதல், கால்களினால் உதைப்பது அல்லது தேய்த்துக்கொள்வது, வெகுதொலைவு வேகமாக ஓடுதல், உடலில் அதிகம் காயம்படுதல், மற்ற தாறுமாறான உடற்பயிற்சிகளைச் செய்தல் ஆகியவைகளால் மார்பில் காயம் ஏற்படுகிறது.

காயமுள்ள மார்பில் வாதம் சேர்ந்து துன்புறுத்துகிறது. அது அங்குள்ள கபத்தைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டு பித்தத்தைக் கோளாறடையச் செய்து உடலில் மேலும் கீழும் குறுக்காகவும் பரவுகிறது.

வாதத்தின் எந்தப் பகுதி உடலின் பூட்டுகளில் பரவுகிறதோ அந்தப் பகுதியினால் கொட்டாவி, உடல் வலி, காய்ச்சல் இவை உண்டாகின்றன.

---

*சோஷ நிதானம் – சோஷம் என்றால் நீர்வற்றி உலர்தல். உடலில் தாபத்தினால் கபம் எண்ணெய்ப் பசை குறைந்து தாதுக்கள் வறண்டுபோதல் உடல்உருக்கி நோய் தோன்றக் காரணம், இவற்றைப்பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

வாதத்தின் பகுதி இரைப்பையை அடைவதால் மார்பில் நோய்களும், சுவையின்மையும் தோன்றுகின்றன.

வாதத்தின் மற்றொரு பகுதி தொண்டையை வந்தடையும் பொழுது தொண்டை கெடுவதுடன் குரல் கம்மலும் ஏற்படுகிறது. வாதத்தின் வேறு பகுதி உயிரைத் தாங்கும் துவாரங்களை வந்தடைந்தால் சுவாசம், ஜலதோஷம் இவை ஏற்படுகின்றன.

வாதத்தின் இன்னுமொரு பகுதி தலையை வந்தடைந்தால் தலைவலி ஏற்படுகிறது. பிறகு மார்பு தகைந்து போவதாலும் வாதத்தின் சீர்கேட்டாலும் தொண்டையைக் கெடுப்பதாலும் நோயாளிக்கு இருமல் எப்பொழுதும் தோன்றுகிறது. இடைவிடாமல் இருமுவதால் மார்பில் இரணம் உண்டாகி அவன் இரத்தத்துடன் துப்புகிறான். இரத்தம் வெளிவருவதால் உடலுக்கு வலிவுக் குறைவு ஏற்படுகிறது.

இவ்வாறு ஸாஹஸத்தினால் உண்டாகும் துன்பங்கள் அவனை துன்புறுத்துகின்றன.

உடலை வருத்துகிற இந்தத் துன்பங்களால் துன்புறுத்தப்பட்டு மெள்ள மெள்ள உலர்ந்து போகிறான். அறிவாளி தன் வலிவை அறிந்து அதற்கு ஏற்றவாறு உடல் உழைப்பைச் செய்ய வேண்டும்.

பலத்திற்கு இடம் உடல். உடலுக்கு இருப்பிடம் புருஷன். புருஷன் உடலை ஆதாரமாகக் கொண்டு வாழ்கிறான். (4)

ஆகையினால் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பும் மனிதன் உடலை வருத்தும் செயல்களைத் துணிச்சலாக செய்யக் கூடாது. உயிரோடு வாழ்கிற மனிதனால்தானே தான் செய்யும் செயல்களின் பயனை அனுபவிக்க முடியும்? (5)

## 2. ஸந்தாரணம்

மலம் சிறுநீர் இவற்றை அடக்குவதால் தோன்றும் உடலுருக்கி நோயைப் பற்றி விளக்குவோம்.

அரசனுக்கு அருகில் செல்லும்போதும் எஜமானனுடைய பக்கத்தில் செல்லும்போதும் குருவை நாடும்போதும் சூதாட்டக் குழு அல்லது நல்லோர்களின் குழு இவற்றிலும் மாதர்களின் நடுவிலும் மிக உயர்ந்த வாகனங்களில் செல்லும்போதும் பயத்திலும் சொற்பொழிவாற்றும்போதும் வெட்கம் அல்லது அருவருப்பு இச்சமயங்களிலும் தானாக வருகிற வாதம் சிறுநீர் இவற்றின் வேகத்தை அடக்குவதால் வாதம் சீற்றலை அடைகிறது.

சீற்றமடைந்த வாதம் பித்தத்தையும் கபத்தையும் தூண்டி மேலும் கீழும் குறுக்கு நெடுக்காகவும் உடல் முழுவதும் பரவிச் சுழல்கிறது.

பிறகு சிறிது சிறிதாக முன்போல் உடலின் தனித்தனி உறுப்புக் களில் நுழைந்து வலியைத் தோற்றுவிக்கிறது. மலத்தை வெளிப் படுத்துகிறது. அல்லது உலர்த்திவிடுகிறது. அப்போது இரு விலாப் பக்கங்களிலும் அதிகவலி ஏற்படும்.

தோள்பட்டைகளில் பிசைவது போன்ற வேதனை உண்டா கிறது. தொண்டையையும் மார்பையும் அமுக்கிவிடுகிறது. தலை வலி உண்டாகிறது. இருமல், சுவாசம், காய்ச்சல், குரல் மாற்றம், [1]ஜலதோஷம் இவற்றைத் தோற்றுவிக்கிறது. பிறகு இது உடலை வற்றச் செய்யும். இந்தத் துன்பங்களால் துன்புறுத்தி மெள்ள மெள்ள உடலை வருத்துகிறது.

ஆகையினால் அறிவாளி தன் நல்வாழ்வுக்கான செயல்களைச் சிறந்த முறையில் செய்ய முனைய வேண்டும்.

மனிதனுக்கு உடல்தான் உறுதுணை. உடலை ஆதாரமாகக் கொண்டே மனிதன் வாழ்கிறான். (6)

## இதைப் பற்றிய செய்யுளின் கருத்து

மற்ற எல்லா உலகச் செயல்களையும் துறந்து உடலையே கவனமாகப் பேண வேண்டும். மனிதர்களுக்கு மற்றப் பொருட் களிருந்தும் உடல் இல்லாவிடில் அவற்றால் பயனில்லை. (7)

## 3. தாதுக்களின் அழிவு

உடலுருக்கி நோய் தோன்ற தாதுக்களின் அழிவும் காரணம். இதைப் பற்றி விளக்குவோம்.

பெருமளவில் வருத்தம் கவலை இவற்றால் சூழ்ந்த இதய முடையவன் பொறாமை அவா பயம் சினம் இவற்றால் சூழப் பட்டிருக்கிறவன்.

அல்லது

உடல் மெலிந்து வறட்சியான உணவு நீர் இவற்றை இடை விடாமல் உண்பவன், இயற்கையிலேயே வலிவற்றவன், புசிக்காம லிருப்பவன், அல்லது சிறிதளவு புசிப்பவன் இவர்களுக்கு இத யத்தில் உள்ள ரசம் எனும் தாது அழிந்து இரத்தம் முதலிய தாதுக்களும் குறைந்துவிடுகின்றன. அவற்றின் அழிவினால்நோயை அடைகிறான். அதற்குத் தகுதியான மருத்துவம் செய்யாவிடில்

(1) ஜலதோஷம் — மூக்கு, தொண்டைகளில் கபம், நீர் சுரத்தல்.

அவனை இனி கூறப்போகும் இலக்சணங்களைக்கொண்ட நோய் பின் தொடர்கிறது. (8)

மிக்க சந்தோஷத்துடன் மாதர்களிடத்தில் புணர்ச்சியில் ஈடு பாடு உள்ளவனுக்கு விந்து குறைந்துவிடுகிறது. விந்து குறைவு அடைந்து இருந்தும் பெண்களிடத்தில் புணரும் அவா அவனுக்கு நீங்குவதில்லை. விந்து மிக்க குறைவாக இருப்பதால் மாதர்களின் சேர்க்கையில் முனைந்து இருப்பவனுக்கு விந்து வெளிப்படுவ தில்லை. இவ்வாறான உடலை உடையவனுக்கு வாதம் இரத்தக் குழாய் முதலிய எல்லாக் குழாய்களிலும் நுழைந்து அவற்றி லிருந்து இரத்தத்தை வெளிப்படுத்துகிறது. விந்து அதிகக் குறை வாக இருப்பதால் புணர்ச்சியின்போது விந்து வரும் வழியாக வாதக் குறிகள் உள்ள அந்த இரத்தம் வெளியில் வருகிறது.

அவனுக்கு விந்து குறைந்திருப்பதாலும் இரத்தம் அதிகமாக வெளிப்படுவதாலும் பூட்டுகள் தளர்ந்து விடுகின்றன. வறட்சியும் மறுபடியும் உடலில் வலிவுக் குறைவும் உண்டாகின்றன. வாதம் சீற்றலைப் பெறுகிறது. சீற்றம் அடைந்த அந்த வாதம் வலிவை இழந்த உடல் முழுவதும் சுற்றுகிறது. கபத்தையும் பித்தத்தை யும் சீற்றம் அடையச் செய்கிறது. உடலை உருக்குகிறது. மாமி சத்தையும் இரத்தத்தையும் உலர்த்துகிறது. கபத்தையும், பித்தத் தையும் வெளிப்படுத்துகிறது. இரண்டு விலாப் பக்கங்களிலும் வலியை உண்டாக்குகிறது. தோள்பட்டைகளில் பிடித்து விடுவது போன்ற வேதனை ஏற்படுகிறது, தொண்டையை அடைக் கிறது, கபத்தைச் சீற்றம் அடையச் செய்து தலையில் கபத்தை நிரப்புகிறது. பூட்டுக்களில் வேதனையைத் தோற்று விக்கிறது. உடல் வலி, ருசியின்மை, சீர்ணமின்மை இவற்றை உண்டாக்குகிறது. வாதம், பித்தத்தையும் கபத்தையும் சீற்றம் அடையச் செய்திருப்பதாலும், எதிர்நோக்கிச் செல்வதாலும், காய்ச்சல், இருமல்சுவாசம், குரல்மாற்றம், ஜலதோஷம், இவற்றை தோற்றுவிக்கிறது. இதனால் இடைவிடாத இருமலால் மார் பில் இரணம் உண்டாகி இரத்தத்தைத் துப்புகிறான். அவனுக்கு இரத்தம் வெளிச் செல்லுவதால் வலிவுக்குறைவு ஏற்படுகிறது.

பிறகு அவன் உடலை வருத்துகிற துன்பங்களால் துன்புறுத்தப் பட்டு மெள்ள மெள்ள வாடுகிறான்.

ஆகையால் அறிவாளியான மானிடன் தன்னுடைய உடலைக் காப்பாற்றுவதுடன் விந்துவையும் காக்க வேண்டும். விந்து தான் எல்லா உணவுவகைளின் மேன்மையான சத்து.

### இதைப் பற்றிய செய்யுளின் கருத்து

எல்லா உணவினாலுமுண்டாகும் மிகச் சிறந்த சத்து விந்து இது அழிவதனால் பல வகையான நோய்கள் தோன்றும் அல்லது மரணம் உண்டாகும். *(9)*

**4. விஷமாசனம்** *(சத்து அற்ற உணவு உண்பது, முறைகேடான அல்லது விரோதமான உணவு உண்பது)*

முறைகேடான வகையில் உணவை உண்பதினால் உண்டாகும் உடல் உருக்கி நோயைப் பற்றி விளக்குவோம்.

குடிநீர் வகை, உணவு, தின்பண்டங்கள், மைய அரைத்த விழுது போன்ற நக்கி அருந்த வேண்டிய பொருட்கள் இப்படி உண்ணக்கூடிய பொருள்களைத் தவறான முறையில் பயன் படுத்துவது.

இயற்கை, செய்முறை, சேர்க்கை, அளவு, இடம், காலம், உண்ணும் முறை, உபசயம் (உடலுக்கு நலமளிப்பது) உணவு முதலியவற்றை முறைகேடான வகையில் பயன்படுத்துவது.

இவ்வாறு உண்பவனுக்கு அவைகளால் வாதம், பித்தம், கபம் இவை கோளாறு அடைகின்றன.

கோளாறு அடைந்த வாத—பித்த—கபங்கள் உடல் முழுவதும் பரவி உடலிலுள்ள உணவு சீரணித்துப் பரவும் துவாரங்களின் நுழைவழியைத் தடுத்து நிற்கின்றன.

அந்நிலையில் அந்த உணவின்பெரும்பாகம் சிறுநீர், மலம் இவையாகவே மாறிவிடுகிறது. உடலிலுள்ள தாதுக்கள் வளர்ச்சியை அடைகிறதில்லை. மலத்தின் பலத்தினால்தான் உயிர் வாழ்கிறான்.

ஆகையால் உடல் உருக்கி நோய் உள்ளவன் குறிப்பாக மலத்தை அதிகம் கழிக்கச் செய்யாமல் காக்கவேண்டும். அவ்வாறே மிக்க மெலிந்தவன், வலிவு குறைந்தவன் இவர்களையும் காக்க வேண்டும்.

முறைகேடான உணவு வகைகளை உண்பதினால் வளர்ச்சி அடைந்த தோஷங்கள் உடலில் உள்ள தாதுக்கள் வளர்ச்சி பெறாத மனிதனுக்குத் தனித்தனியாகத் துன்பங்களைத் தோற்றுவித்து மறுபடியும் உடலை உருக்குகின்றன.

**வாதம்**

அதில் வாதம், குத்தல் வலி உடல் உறுப்புகளில் வேதனை, தொண்டையில் கரகரப்பு இரண்டு விலாப் பக்கங்களிலும் வலி

தோள்பட்டைகளில் பிசைவது போன்ற வேதனை, குரல் மாற்றம், ஜலதோஷம் இவற்றைத் தோற்றுவிக்கிறது.

**பித்தம்**

பித்தம், காய்ச்சல் கழிச்சல் உடலுக்குள் எரிச்சல் இவற்றை உண்டாக்குகிறது.

**கபம்**

கபம், ஜலதோஷம் தலையில் பளு ருசியின்மை இருமல் இவற்றை ஏற்படுத்துகிறது.

அவன் இடைவிடாமல் இருமுவதனால் மார்பில் இரணம் உண்டாகி இரத்தத்தைத் துப்புகிறான். இரத்தம் வெளிப்படுவதினால் வலிவின்மை ஏற்படுகிறது.

இவ்வாறு உணவு மாறுபாட்டினால் வளர்ச்சி பெற்ற மூன்று தோஷங்கள் [1]ராஜயக்ஷ்மா எனும் உடல் உருக்கி நோயைத் தோற்றுவிக்கின்றன. உடலை உருக்குகின்ற தொல்லைகளால் துன்புறுத்தப்பட்டு அவன் சிறுகச்சிறுக உலர்ந்து போகிறான். ஆகையால் அறிவாளியான மானிடன் உணவு உண்ணும் வகையில் இயற்கை, செய்முறை, சேர்க்கை, அளவு, இடம், காலம், பயன்படுத்தும் வகை, உபசாந்தி எனும் நல்ல முறைகளைக் கையாள வேண்டும். *(10)*

## இதைப் பற்றிய செய்யுளின் கருத்து

முறைகேடான உணவை உண்பதினால் தோன்றும் நோய்களையும் துன்பங்களையும் கவனித்து புலன்களை வென்ற அறிவாளியான மனிதன், இன்பத்தைத் தரக்கூடிய அளவுடன் கூடிய உணவை உரித்த காலத்தில் உண்பவனாக இருக்க வேண்டும். *(11)*

உடல் உருக்கி நோய்க்குக் காரணமான நான்கு செயல்களையும் பயன்படுத்துவதால் வாத-பித்த-கபங்கள் சீற்றமடைகின்றன. சீற்றமடைந்த இந்த தோஷங்கள் பலவிதத் தொல்லைகளால் உடலைத் துன்புறுத்தி வற்றச் செய்கின்றன. இந்த உடல் உருக்கு நோய் மற்ற நோய்களைக் காட்டிலும் அதிகத் துன்பத்தை

---

1. ராஜயக்ஷ்மா — நோய்களுக்கு அரசன் போன்றது. அரசர்களுக்கு ஏற்படக்கூடிய நோயாகையாலும் இவ்வாறு வழங்கப்படுகிறது.

விளைவிப்பதனால் மருத்துவர்கள் இந்நோயை ராஜயக்ஷ்மா எனக் கூறுகின்றனர்.

அல்லது

விண்மீன்களுக்கு அரசனான சந்திரனுக்கு இந்நோய் முன்பு ஏற்பட்டதால் இதற்கு ராஜயக்ஷ்மா எனப் பெயர் ஏற்பட்டது எனக் கூறுவாரும் உண்டு. (12)

## 5. ராஜயக்ஷ்மாவின் முற்குறிகள்

ஜலதோஷம் அடிக்கடி தும்மல் கபம் பெருகுதல் வாயில் இனிப்பு உணவில் விருப்பமின்மை உணவு உண்ணும்போது களைப்பு உணவுள்ள பாத்திரம் குடிநீர் சோறு பருப்பு வகை தின்பண்டங்கள் ஊறுகாய்கள் மற்ற காய்கறிகள் இவை கெட்டுப் போகாமலிருந்தும் அல்லது சிறிதளவு கெட்டுப் போயிருந்தும் அவற்றில் குற்றமிருப்பதாகக் காண்பது உணவு உண்டவுடன் மனப்பிரட்டல் உண்பதற்கிடையில் வாந்தி உணர்ச்சி முகத்திலும் கால்களிலும் வீக்கம், கைகளை அடிக்கடி பார்த்துக்கொள்ளுதல், கண்களில் அதிக வெண்ணிறத் தோற்றம், கைகளின் நீளத்தை அறிந்து கொள்ளும் அவா, மாதர்களை அதிகம் விரும்புதல், வெட்கமின்மை, உடலில் அருவறுக்கத்தக்க உருவத்தைக் காணுதல், கனவில் நீருள்ள இடத்தை நீரில்லாமலும் கிராமம், நகரம் கடைத்தெரு பெருநகரம் இவற்றில் மனித நடமாட்டம் இல்லாத தோற்றமும், காடுகளை உலர்ந்தோ எரிந்தோ உள்ளதாகவும் காண்பது.

நண்டு, மயில், குரங்கு, கிளி, பாம்பு, காகம், கோட்டான் இவை தொடுவது போன்ற எண்ணம். நாய், ஒட்டகம், கழுதை, பன்றி, இவற்றின்மேல் ஏறிச் செல்வது போன்ற எண்ணம், மயிர், எலும்பு, சாம்பல், உமி, நெருப்பு இவற்றில் ஏறுவது போன்று தோன்றுதல் என இக்குறிகள் யாவும் உடல் உருக்கி நோயின் முற்குறிகள் ஆகும். (13)

## 6. உடல் உருக்கி நோயின் பதினொரு குறிகள்

தலைபளு, இருமல், சுவாசம், குரல் மாற்றம், கபவாந்தி இரத்தம் துப்புதல், இரு விலாப்பக்கங்களிலும் வேதனை, தோள் பட்டைகளில் பிசைவதுபோல் வேதனை, காய்ச்சல், கழிச்சல், சுவையின்மை, என்ற பதினொன்றும் உடல் உருக்கி நோயின் முற்குறிகளாம். (14)

வலிவு, மாமிசம், இரத்தம் இவை குறையாமல் வலிவுபெற்று மரணக்குறி அற்ற நோயாளி உடலுருக்கி நோய்க்கான முழுக்குறி

களால் துன்புறுத்தப்பட்டபோதிலும் அந்நோய் சிகிச்சைக்குக் கட்டுப்பட்டதென அறியவும்.

வலிவுள்ளவனும், மாமிசம் போன்றவை குன்றாதவனும், நோயையும் மருந்தின் வீர்யத்தையும் பொறுத்துக்கொள்ளத் தகுதியுள்ளவன். ஆகையால் இந்நோய்க்கான எல்லாக் குறிகளும் இருந்தபோதிலும் எளிதில் குணமாகக் கூடியதாகக் கருத வேண்டும். (15)

வலிவிழந்தவன், வலிவு மாமிசம் இரத்தம் இவை மிகக் குறைவாக உள்ளவன், குறைந்த குறிகள் உள்ளவனாயினும் மரணக்குறி தென்படாதவன் என இவர்களை மிக்க குறிகள் கொண்டவராகவும், மரணக்குறி தோன்றியவராகவும் அறிந்து கொள்ள வேண்டும். அவரால் நோயையும் மருந்தின் வீர்யத்தையும் பொறுத்துக்கொள்ள முடிவதில்லை. ஆகையினால் அப்படிப்பட்ட நோயாளிக்கு சிகிச்சை செய்யக்கூடாது. அவனுக்கு ஒரு நொடியில் மரணக்குறிகள் தோன்றும். காரணமின்றியே அவை தோன்றும். (16)

### முடிவுரை

உடலுருக்கி நோய்க்குக் காரணம், குறிகள், முற்குறிகள் இவற்றைத் தகுந்த முறையில் அறிந்த மருத்துவனே அரசனுக்குச் சிகிச்சை செய்யத் தகுதி பெறுகிறான்.

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு
சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட
சரகஸம்ஹிதையில் நிதானஸ்தானத்தில் சோஷ
நிதானம் என்ற ஆறாவது அத்தியாயம் முற்றும்.

## ஏழாவது அத்தியாயம்

## *உன்மாத நிதானம்

'உன்மாத நிதானம்' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். (1—2)

வாதத்தினாலும், பித்தத்தினாலும், கபத்தினாலும், இம்மூன்றின் சேர்க்கையினாலும், எதிர்பாராதவிதமாக ஏற்படும் உடல் மன நலிவுகளாலும் என இவ்வைந்து காரணங்களால் மனநிலை மாற்றமாகிய பைத்தியம் என்ற நோய் தோன்றுவதாகக் கூறுகின்றார்கள். (3)

### 1. பைத்தியம் பிடிக்கக் காரணம் *(மன நிலை மாற்றம்)*

தோஷங்களினால் ஏற்படக்கூடிய நான்கு வகையான பைத்தியங்கள் கீழ்க்கண்டவாறுள்ள மனிதர்களுக்கு விரைவில் தோன்றுகின்றன.

பயந்தவன், மனவருத்தமுள்ளவன், அதிகமாக வளர்ந்த தோஷங்களைப் பெற்றவுன், கெட்டுப்போனதும் ஒத்துக்கொள்ளாததும் தகுதியற்றதுமான பலவிதமான உணவு வகைகளைப் பயன்படுத்துபவன், மருத்துவ நூலில் சொல்லப்பட்ட முறைகளுக்குக்கட்டுப்படாமல் உண்பவன், நடைமுறைகளுக்கு எதிரான உடற் செயல்களைச் செய்பவன், இவற்றால் மிகவும் மெலிந்த உடலுடையவன், நோயின் காரணமாக மனக்கலக்கமடைந்தவன், அல்லது காமம் கோபம் பேராசை மகிழ்ச்சி பயம் மோகம் துன்பம் வருத்தம் கவலை மன எழுச்சி இவற்றினால் அடிக்கடி மனமுறிவு உடையவன், மூளையில் அடிபடுவதனால் தாக்குண்ட மனமும் அறிவும் உடையவன் ஆகிய இவர்களுக்கு தோஷங்கள் சீற்றமடைந்து இதயத்திற்குச் சென்று மனத்தை இயக்கும் நரம்புத் துவாரங்களைச் சூழ்ந்துகொண்டு நோயைத் தோற்றுவிக்கின்றன. (4)

### 2. பைத்தியத்தின் இலக்கணம்

மனம், அறிவு, உணர்வு, நினைவாற்றல், விருப்பு, ஒழுக்கம், நடவடிக்கை, செயல் இவற்றின் மாறுபாட்டை பைத்தியம் என அறிந்துகொள்ள வேண்டும். (5)

---

*உன்மாதம் — ஒருவித மனநோய். மனநிலை மாற்றம் அடைவது. அதாவது பைத்தியம் பிடித்தல். அதை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

### 3. பைத்தியத்தின் முற்குறிகள்

தலையில் ஒன்றுமில்லாதது போன்ற எண்ணம், கண்கள் கலங்குதல், செவிகளில் இறைச்சல், அதிகமான மேல்மூச்சு, வாயி லிருந்து உப்புநீர் ஒழுகுதல், உணவில் விருப்பமின்மை, சுவை யின்மை, சீரணமின்மை, இதயத்துடிப்பு, மனத்தில் ஒன்றை நினைத்தல், களைப்பு மோகம் மன எழுச்சி இவை காரணமில்லா மல் தோன்றுவது, எப்பொழுதும் மயிர்க்கூச்சல், அடிக்கடி காய்ச் சல், பித்துப் பிடித்தது போன்ற மனநிலை, உடலில் குளிர்ச்சியான தழும்புகள், முகத்தில் தோன்றும் பக்கவாத நோயைப் போன்ற தோற்றம், கனவில் பயமுறுத்துவது போன்ற தோற்றம், அலை தல், நிலையற்றிருக்கும் கெட்ட உருவங்களைக் கனவில் அடிக்கடி காண்பது, செக்கில் சவாரி செய்வது புயலில் சிக்கிச் சுழல்வது அழுக்கடைந்த நீரில் உள்ள சுழலில் மூழ்குதல் கண்கள் சுழல்வது. இவற்றைக் கனவில் காண்பது போன்ற இவை தோஷங்களினால் உண்டாகும் பைத்தியத்தின் முற்குறிகளாகும்.

(6)

### 4. வாத தோஷத்தினால் தோன்றும் பைத்தியத்தின் இலக்கணம்

முற்குறிகள் தோன்றியபின் பைத்திய நோய் வெளிப்படு கிறது.

இடைவிடாமல் அலைதல், கண்கள் புருவங்கள் உதடுகள் தோள்பட்டைகள் கன்னம் கையின் முன்பகுதி கால்கள் உறுப்புகள் இவற்றைத் தேவையின்றி அசைவித்தல், இடை விடாமல் காரணமின்றி பிதற்றுதல், வாயிலிருந்து நுரை வெளி வருதல், புன்சிரிப்பு சிரிப்பு நடனம் பாட்டுப் பாடுதல் வாத்தி யம் வாசித்தல் இவற்றை இடமறியாமல் செய்வது, வீணை புல் லாங்குழல் சங்கம் இவற்றை வாசித்தல், இடக் கையாலும் வலக் கையாலும் வாத்தியங்கள் வாசித்தல், இவற்றின் ஒலி களைப் போல் ஒலி எழுப்புதல், வாகனமில்லாமல் வாகனத்தில் செல்வதுபோல் நடித்தல், அலங்காரப் பொருட்களில்லாமலேயே தன்னை அலங்கரித்துக் கொள்ளுதல், கிடைக்காத திண்பண்டங் களை அதிகம் தின்னவேண்டும் என்ற பேராசை, கிடைத்த பொருட்களைப்புறக்கணித்தல், தீவிரமானபொறாமை, இளைப்பு, கரகரப்பு, கண்கள் பிதுங்கியும் செந்நிறமாகவும் தோன்றுதல், வாதத்தைத் தணிக்கும் உணவு பழக்கவழக்கங்கள் இவற்றிற்கு எதிரிடையானவை ஒத்துக் கொள்ளாமை ஆகிய இவை வாதத்தி னால் தோன்றும் பைத்தியத்தின் இலக்கணங்களாகும்.

### 5. பித்தத்தினால் தோன்றும் பைத்தியத்தின் இலக்கணம்

பொறுமையின்மை, சினம், தகாத இடத்தில் பரபரப்பு, தன்னையும் மற்றவர்களையும் ஆயுதம் கல் சாட்டை கட்டை முஷ்டி இவற்றால் அடிப்பது, திடீரென ஓடுவது, நிழல் குளிர்ந்த நீர் சோறு இவற்றில் விருப்பம், உடலில் அடிக்கடி சூடு ஏற்படு தல், கண்களில் சிவப்பு பச்சை மஞ்சள் இந்நிறங்கள் தோன்று வதுடன் கலங்கியுமிருத்தல், பித்தத்தைத் தணிக்கும் பொருட் களுக்கு எதிரிடையான பொருட்கள் ஒத்துக் கொள்ளாமை ஆகிய இவை பித்தத்தினால் ஏற்படும் பைத்தியத்தின் இலக்கணங் களாகும்.

### 6. கபத்தினால் ஏற்படும் பைத்தியத்தின் இலக்கணம்

ஒரே இடத்தில் அமர்ந்திருப்பது, பிறருடன் பேசாமலிருத்தல், சிறிதளவு அலைதல், வாயிலிருந்து உமிழ் நீரும் மூக்கிலிருந்து சளியும் ஒழுகுதல், உணவில் விருப்பமின்மை, தனிமையில் விருப் பம், விகாரமான தோற்றம், தூய்மையில் வெறுப்பு, எந் நேரமும் உறக்கம், முகத்தில் வீக்கம், கண்களில் வெளுப்பு, அசைவற்ற தன்மை, கண்களில் புளிச்சை தோன்றுதல், கபத் திற்கு நன்மை பயக்கும் பொருட்களுக்கு எதிரிடையான பொருட்கள் ஒத்துக்கொள்ளாமை, இவை யாவும் கபத்தினால்ஏற் படும் பைத்தியத்தின் இலக்கணங்களாகும். மூன்று தோஷங்களின் இலக்கணம் ஒன்று சேர்ந்திருத்தலை [1]ஸன்னிபாத பைத்தியம் என அறிய வேண்டும். சிகிச்சைக்குக் கட்டுப்படாததென இதை அறிஞர்கள் கருதுகின்றனர். (7)

### 7. தோஷங்களினால் தோன்றும் பைத்திய நோய்க்கான மருத்துவம்; அதைப் பற்றிய செய்யுளின் கருத்து.

எண்ணெய்ச் சிகிச்சை, வியர்வைச் சிகிச்சை, வாந்தி எடுக்கும் சிகிச்சை, பேதிக்குக் கொடுக்கும் சிகிச்சை, கஷாய வஸ்தி, எண்ணெய் வஸ்தி, நோயைத் தணிக்கச் செய்ய மூக்கில் மருந் திடுவது, புகை பிடித்தல், புகையிடுதல், மையிடுதல், திரவப் பொருட்களை மூக்கில் செலுத்துதல், மருந்துத் தூளை மூக்கில் செலுத்துதல், எண்ணெய் குளித்தல், மேற்பூச்சு, தலைக்குத் தாரையாக நீர் ஊற்றுதல், மெல்லிய உடற்பூச்சு, அடித்தல், கட்டுதல், இருட்டறையில் பூட்டி வைத்தல், பயமுறுத்தல், ஆச்சரியத்தைத் தோற்றுவித்தல், நினைவிழக்கச் செய்தல், பட்டினி போடுதல், இரத்தத்தை வெளிப்படுத்துதல், முறைப்படி

1. ஸன்னிபாதம் — வாதம், பித்தம், கபம் இம்மூன்றின் கூட்டு.

உணவை உண்பித்தல், பைத்திய நோய் உண்டாவதற்குக் காரண மானவற்றிற்கு எதிரிடையான மருந்துகளையும் யுக்திக்குத் தக்க வாறு பயன்படுத்தல் ஆகியவை அதன் மருத்துவமாகும். (8)

### அதைப்பற்றிய செய்யுளின் கருத்து

சிகிச்சைக்குக் கட்டுப்பட்டதும் தோஷங்களினால் உண்டானது மான பைத்திய நோய்க்குச் சிகிச்சையை மேற்கூறியபடி சிறந்த மருத்துவர் செய்ய வேண்டும். (9)

## 8. எதிர்பாராது புறக் காரணங்களால் வரும் பைத்திய நோய்

தோஷங்களினால் தோன்றும் பைத்திய நோய்க்குக் காரணம் முற்குறிகள் இலக்கணம் வேதனை உபசாந்தி இவற்றிற்கு மாறு பட்ட காரணங்களின் சேர்க்கையினால் ஏற்படும் பைத்திய நோய், எதிர்பாராது புறக்காரணங்களால் வரும் பைத்திய நோயாகும்.

சில ஆசிரியர்கள், முன்பிறவியில் செய்த தீய செயல்களின் பயனாக இந்நோய் வருவதாகக் கருதுகின்றனர். மதிப்பிற்குரிய ஆத்ரேய புனர்வசு மாமுனிவர் மதியிழப்பினால் ஏற்படும் தீய செயல்களே இந்நோய்க்குக் காரணம் என்கிறார்.

தேவதைகள் முனிவர்கள் முன்னோர்கள் கந்தர்வர்கள் யக்ஷர்கள் ராக்ஷசர்கள் பிசாசுகள் ஆசிரியர்கள் முதியோர் கள் சித்த புருடர்கள் ஆசாரியர்கள் மதிக்கத் தகுந்தவர்கள் ஆகிய இவர்களை அவமதித்து அவர்களுக்கு எதிரிடையான செயல்களை மனிதன் செய்கிறான். அல்லது நிந்திக்கத் தகுந்த செயல்களில் ஈடுபடுகிறான்.

தேவதைகள் இவ்வாறு மதியிழந்தவனிடத்தில் கோபமுற்று தம் செயல்களாலே அவனுடலில் புகுந்து பைத்திய நோயை உண்டாக்குகின்றனர். (10)

## 9. எதிர்பாராது தோன்றும் பைத்தியத்தின் முற்குறிகள்

தேவதைகள் போன்றவர்களின் கோபத்தினால் எதிர்பாராத காரணத்தினால் ஏற்படும் பைத்திய நோய்க்குக் கீழ்க்கண்ட முற்குறிகள் தோன்றுகின்றன.

தேவதைகள் பசுக்கள் அந்தணர்கள் தவசிகள் இவர்களைத் துன்புறுத்துவதில் விருப்பம் வெறுப்பு கோபம் பிறருக்குத் துன்பம் விளைவிப்பதில் ஈடுபாடு எதிலும் விருப்பமின்மை உடலி லுள்ள எல்லா தாதுக்களின் சத்தான ஓஜஸ் நிறம் ஒளி வலிவு இவைகளை உடலில் இழத்தல், கனவில் தேவதைகளால்

விரட்டப்படல், தகாத வார்த்தைகள் சொல்லுதல் ஆகிய இவை முதலில் தோன்றும். பிறகு பித்து நோய் தோன்றும். (11)

எதிர்பாராத பைத்திய நோயைத் தோற்றுவிக்கிற தேவதை போன்றவர்கள் கீழ்க்கண்ட விதங்களில் நோயைத் தோற்றுவிக்கின்றனர். தேவதைகள் பார்வையினாலும், ஆசிரியர்கள் முதியவர்கள் வித்தகர்கள் மாமுனிவர்கள் ஆகியவர்கள் சாபமிடுவதாலும், பித்ருக்கள் (முன்னோர்கள்) தர்சனமளிப்பதாலும், கந்தர்வர்கள் தொடுவதனாலும், யக்ஷர்கள் உடலில் நுழைவதாலும், ராக்ஷசர்கள் கெட்ட நாற்றத்தை முகரச் செய்வதாலும், பிசாசுகள் உடலில் ஏறி அமர்வதாலும் இந்நோயை முறையே உண்டு பண்ணுகின்றனர். (12)

## 10. எதிர்பாராத புறக்காரணங்களால் தோன்றும் பைத்திய நோயின் இலக்கணம்

வலிவுக்கு மீறிய பலம் வீர்யம் பிடிவாதம் பராக்கிரமம் பிடித்தல் தரித்தல் நினைவாற்றல் அறிவு சொல் நுண்ணறிவு ஆகிய இவை செயலில் தோன்றும். இந்நோய் குறிப்பிட்ட காலத்தில்தான் தோன்றும் என்று கூற முடியாது. (13)

## 11. தேவதைகள் போன்றவை மனிதனைப்பிடிக்கும் இடமும் காலமும்

பைத்திய நோயைத் தோற்றுவிக்கும் தேவதைகள் முனிவர்கள் பித்ருக்கள் கந்தர்வர்கள் யக்ஷர்கள் ராக்ஷசர்கள் பிசாசுகள் ஆசான் முதியவர் ஸித்தர்கள் ஆகிய இவர்கள் கீழ்க்கண்ட நேரங்களில் மனிதர்களைப் பற்றிக் கொள்கின்றனர்.

பாவச் செயல்களைச் செய்யும் தொடக்கம் முன்பிறவிகளில் செய்த கர்ம வினைகளின் முடிவு தனிமை பழக்கமில்லாத வீடு நாற்சந்தி போன்ற இடங்களில் இவைகள் சூழ்ந்து கொள்ளும்,

மாலை நேரம், புலனடக்கமில்லாத வேளை, அமாவாசை, பௌர்ணமி போன்றவிசேட நாட்கள், புணர்ச்சி வேளை, மாதவிடாய் காலத்தில் மாதர்களுடன் சேரும் வேளை ஸ்வரமில்லாமல் வேதம் ஓதும் வேளை, தகாத முறையில் பலி மங்களச் சடங்கு ஹோமம் இவற்றைச் செய்யும் நேரம், நியமம் விரதம் பிரும்மசரியம் இவற்றிற்கு இடையூறு ஏற்படும் காலம் பெரும் போரில் தேசம் குலம் நகரம் இவை அழியும் காலம் சந்திர சூரிய கிரகண காலம் பிரசவ காலம் தொடக்கூடாத பலவிதமான பிராணிகளைத் தொடும் நேரம் தூய்மையில்லாப் பொருட்களைத் தொடும்பொழுது வாந்தி பேதி இரத்தப் பெருக்கு ஏற்படும் நேரம் தூய்மையற்றும் கவனக் குறைவுடனும் நாற்

சந்தி கோவில் தேவதைகள் வாழ்கின்ற மரங்கள் ஆகிய இடங்களுக்குச் செல்லும் நேரம் புசித்தபின் மீதியுள்ள புலால் தேன் எள்ளு வெல்லம் கள் இவற்றை மறுமுறை புசிக்கும்போது, ஆடையற்ற நிலை இரவு வேளை நகரம் கடைத்தெரு நாற்சந்தி தோட்டம் இடுகாடு கொலைக்களம் இவ்விடங்களுக்குத் தனியாகச் செல்லும் நேரம் அந்தணர்கள் ஆசிரியர்கள் தேவதைகள் முனிவர்கள் மதிக்கத் தக்கவர்கள் இவர்களை அவமதிக்கும் நேரம் தர்மச் செயல்களைத் தகாத முறையில் செய்யும்போது மற்ற தூய்மையற்ற செயல்களில் ஈடுபடும்போது எனும் இச்சமயங்களில் தேவதைகள் போன்றவை மனிதனைச் சூழ்ந்து கொள்ளும்.

இவ்வாறு தேவதை போன்றவர்கள் சூழ்ந்து கொள்ளும் விஷயம் விளக்கப்பட்டதாக ஆகின்றது. *(14)*

தேவதைகள் போன்றவை, ஹிம்சை (கொல்லுதல்), ரதி (புணர்ச்சி), அப்யர்ச்சனம் (பூஜிப்பது) என மூன்று பயன்களைக் கருதி எதிர்பாராத பைத்திய நோயைத் தோற்றுவிக்கின்றனர். இந்தப் பயனைப் பைத்தியம் பிடித்தவர்களின் நடவடிக்கைகளைக் கொண்டு அறிந்து கொள்ளலாம்.

தேவர்களின் துன்புறுத்துவதால் பைத்திய நோய் பிடித்தவன் எரிந்து கொண்டிருக்கும் தீயில் பாய்வான், நீரில் மூழ்குவான் மேலிருந்து பள்ளத்தில் குதிப்பான். ஆயுதம் சாட்டை தடி கல் முஷ்டி இவற்றால் தன் உடலைத் தாக்கிக்கொள்வான். உயிரை மாய்க்கும் மற்ற செயல்களிலும் ஈடுபடுவான். இவ்வகைப் பைத்திய நோய்களைத் தீர்க்க இயலாது.

புணர்ச்சியையோ, பூசனையையோ விரும்பிய தைவங்களால் உண்டுபண்ணப்பட்ட பைத்திய நோய் சிகிச்சைக்குக் கட்டுப்பட்டது. *(15)*

புணர்ச்சிக்காகவும் கொல்லும் விருப்பத்துடனும் பைத்திய நோயைத் தோற்றுவித்த கிரகங்களைப் போக்க மந்திரம் மருந்து மணிகளைப் பயன்படுத்தல், மங்களச் சடங்குகள், பலியிடுதல், காணிக்கை செலுத்துதல், ஹோமம், கட்டுப்பாடு, விரதம், பாபத்தைப் போக்குவதற்காகக் குறிப்பிடப்பட்ட செயல்கள், பட்டினி கிடத்தல், மங்களச் சொற்களைக் கூறுதல், வணக்கம் செலுத்தல் அல்லது இருக்குமிடத்தை விட்டு வேறு இடம் செல்லுதல் ஆகியஇவற்றைக் கடைபிடித்தல் வேண்டும்.

இவ்விதம் ஐவகையான பைத்திய நோய்கள் விளக்கப்பட்டுள்ளன. *(16-17)*

நிஜம் ஆகந்துகம் என்ற பிரிவினாலும், அல்லது சிகிச்சைக்குக் கட்டுப்பட்டது சிகிச்சைக்குக் கட்டுப்படாதது என்ற பிரிவினாலும் பைத்திய நோயை மேலும் இருவகையாகப் பிரிக்கலாம்.

நிஜம், ஆகந்துகம் என்ற இரண்டும் மேற்கண்ட காரணங்களுடன் சேரும்போது தங்களுக்குள் சேர்க்கையை அடைகின்றன. இவற்றின் முற்குறிகளும் இலக்கணமும் ஒன்றாகவே இருக்கும்.

சிகிச்சைக்குக் கட்டுப்படாத பைத்திய நோய்கள் பல ஒன்று சேர்ந்தாலும், ஒரே சமயத்தில் சிகிச்சைக்குக் கட்டுப்பட்டதும் சிகிச்சைக்குக் கட்டுப்படாததுமான இரண்டும் ஒன்று சேர்ந்தாலும் அந்த நோய்கள் சிகிச்சைக்குக் கட்டுப்படாதவை என்றே அறிய வேண்டும். அப்பொழுது இருவித பைத்திய நோய்க்கான சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். *(18)*

மனிதனுடைய முன்வினையினாலேயே ஆகந்துகமென்ற பைத்திய நோய் தோன்றுகிறது.

துன்பப்படுவதற்குக் காரணமான முன்வினையைச் செய்யாத மனிதனுக்குத் தேவதைகள், கந்தர்வர்கள், பிசாசுகள், ராக்ஷசர்கள், மற்றவர்கள் யாரும் துன்பத்தை உண்டாக்கமாட்டார்கள். அதாவது தேவதை போன்றவர்கள் மனிதர்களுக்குத் தாமாகக் கஷ்டத்தைக் கொடுப்பதில்லை. முன்வினைதான் மனிதனைத் தண்டிக்கும் !

ஆனால் எல்லாத் துன்பங்களும் தேவதைகளால் உண்டாகின்றன என்று சொல்லப்படுகிறதே என்ற வினா எழுப்பலாம். மனிதனுடைய முன்வினையால் தூண்டப்பட்ட தேவதைகள்தாம் அவனைத் துன்புறுத்துகின்றன. தேவதைகள் துன்புறுத்துவதாக நாம் எண்ணுகிறோம் என்பதுதான் அதற்கு விடை. ஆகவே மனிதனுடைய முன்வினையே ஆகந்துக பைத்திய நோய் ஏற்படக் காரணம். தேவதைகள் போன்றவர்கள் அல்லர். *(19–20)*

தன் முன்வினையின் பயனாக மேலும் மதியிழப்பினால் நோய்கள் தோன்றுகிறபொழுது தேவதைகள், பித்ருக்கள், ராக்ஷசர்கள் என இவர்களைக் காரணமாக அறிஞன் கூறமாட்டான். *(21)*

இன்பத்திற்கும் துன்பத்திற்கும் தன்னையே கர்த்தாவாகக் கருத வேண்டும். ஆகையினால் மனிதன் தனக்கு நன்மை பயப்பனவற்றையே பற்ற வேண்டும். தேவர்களுக்கு அஞ்ச வேண்டாம். மேலும், தேவதைகள் போன்றவர்களைப் பூசிப்பதும், நன்மை பயக்கும் செயல்களைச் செய்வதும் தேவதைகள் போன்றவர்

களுக்கு எதிரிடையான கெட்ட செயல்களைச் செய்வதும் தனக்கு வசப்பட்டவையே.

**முடிவுரை**

இவ்வாறு பைத்திய நோயின் எண்ணிக்கை, காரணம், முற் குறிகள், இலக்கணம், சிகிச்சைக்குக் கட்டுப்பட்டது, கட்டுப்படா தது, சுருக்கமான சிகிச்சை முறை ஆகியவை இந்த உன்மாத நிதான அத்தியாயத்தில் விளக்கப்பட்டன. (22–24)

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் நிதான
ஸ்தானத்தில் உன்மாத நிதானம் எனும்
ஏழாம் அத்தியாயம்
முற்றும்.

## எட்டாம் அத்தியாயம்

# *அபஸ்மார நிதானம்

'அபஸ்மார நிதானம்' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். (1–2)

### 1. காக்கை வலி தோன்றக் காரணம்

வாதம் பித்தம் கபம் இம்மூன்றின் சேர்க்கை என்ற நான்கு காரணங்களால் காக்கை வலி நான்கு வகையாகப் பிரிக்கப்படு கின்றது. (3)

ரஜஸ் தமஸ் என்ற குணங்களால் கேடடைந்த மன முடையவர்கள், மேல்நோக்கிச் செல்லும் வாத-பித்த-கப தோஷங் களை உடையவர்கள், தாறுமாறாகச் செல்பவர்கள், தோஷம் மிகுதியாயுள்ளவர்கள், கெட்டுப்போன அழுக்கடைந்த பொருட் களுடன் கூடிய தூய்மையற்ற உணவு வகைகளை முறை தவறிப் பயன்படுத்துகிறவர்கள், மருத்துவ நூலில் கூறிய முறைகளைச் சரியாகக் கடைபிடிக்காதவர்கள், உடல் உறுப்புகளைத் தாறு மாறாகப் பயன்படுத்துகிறவர்கள், வலிமைக் குறைவினால் சீற்ற மடைந்த தோஷங்களை உடையவர்கள், ரஜஸ் தமஸ் என்ற குணங்களால் கேடடைந்த மனமுடையவர்கள் என இவ்வனைவர் களுடைய அவரவர்களின் அந்தராத்மாவிற்கு இருப்பிடமான மிக்க மேலானதுமான இதயத்திலும் புலன்களிலும் தோஷங்கள் தங்கி நிற்கின்றன.

அவை அங்கு தங்கி காமம் கோபம் பயம் பேராசை, மோகம் மகிழ்ச்சி வருத்தம் கவலை மன எழுச்சி இவற்றால் தூண்டப்பட்டு இதயத்தையும், புலன்களின் இருப்பிடங்களையும் திடீரென்று நிரப்பி விடுகின்றன. அப்பொழுது மனிதர்களுக்கு நினைவு தவறி காக்கை வலி என்ற நோய் ஏற்படுகிறது. (4)

நினைவு சக்தி அறிவு மனம் இவற்றின் குழப்பத்தினால், பயங்கரமான சேஷ்டையுடன் இருளில் மூழ்கியது போல அறி விழத்தலையும் காக்கை வலி என்கிறோம். (5)

### 2. காக்கை வலியின் முற்குறிகள்

இடைவிடாமல் புருவங்களின் துடிப்பு, அடிக்கடி கண்களின் நிலையற்ற ஓட்டம், ஓசையில்லாமலே செவிகளில் ஒலி கேட்பது,

---

*அபஸ்மாரம் - கால்கைவலி (காக்காவலி) என்னும் நோயை விளக்குவதால் இப்பெயராயிற்று.

தொடர்ச்சியாக வாயிலிருந்து நீரும் மூக்கிலிருந்து சளியும் ஒழுகுதல், உணவில் அவாவின்மை, சுவையின்மை, சீரணமின்மை, இதயத்துடிப்பு, வயிற்றில் ஒருவித ஓசை, வலிவுக்குறைவு, எலும்பில் உடைந்தது போன்ற வலி, உடலைப் பிடித்துவிடுவது போன்ற உணர்வு, அறிவிழத்தல், கண் இருட்டடைதல், மூர்ச்சை மயக்கம் இவை அடிக்கடி தோன்றுதல், கனவில் மகிழ்தல், நடனமாடுதல், குத்துதல், துன்பப்படுதல், நடுங்குதல், விழுதல், போன்ற காட்சிகளைக் காணுதல் இவை காக்கைவலியின் முற்குறிகளாகும். (6)

முற்குறிகள் தோன்றிய பின் காக்கை வலி நோய் உண்டாகிறது. (7)

### 3. வாதத்தினால் தோன்றும் காக்கை வலியின் இலக்கணம்

அடிக்கடி நினைவு இழப்பு ஏற்பட்டு மறுநிமிடத்தில் நினைவு வருதல், கண்கள் நிலைகுத்திப் போதல், உரக்க உளறுதல், வாயிலிருந்து மிகுதியாக நுரை வெளிவருதல், கழுத்து அதிகம் புடைத்தல், தலை கோணுதல், கை விரல்கள் முடங்கிப் போதல், கை கால்களை உதைத்துக் கொள்ளுதல், நகங்கள் கண்கள் முகம் தோல் இவை செந்நிறமாகவும் சொரசொரப்பாகவும் கருநிறமாகவும் மாறுதல், முடிவில்லாத சஞ்சலமான வறட்சியான கடினமான உருவங்கள் காணப்படுதல், வாத தோஷத்தைத் தோற்றுவிக்கும் உணவு வகை பழக்க வழக்கங்கள் இவற்றால் நோயின் வளர்ச்சி, வாதத்தை அழிக்கும் பொருட்களால் நோயின் தணிவு ஏற்படுதல் ஆகிய இவ்வடையாளங்கள் வாதத்தினால் தோன்றும் காக்கை வலிப்பு நோயின் இலக்கணங்களாகும்.

### 4. பித்தத்தினால் தோன்றும் காக்கை வலிப்பின் இலக்கணம்

அடிக்கடி வலிப்பு, மறுநிமிடத்தில் நினைவுபெறுதல், உரக்கக் கூச்சலிடுதல், தரையில் கைகால்களை அடித்துக் கொள்ளுதல், நகங்கள் கண்கள் முகம் தோல் இவை பச்சை மஞ்சள் தாமிரத்தைப் போன்ற செந்நிறம் பெறுதல், இரத்தம்கலந்த கொடூரமான ஜ்வாலையுடன் கூடிய உருவங்களைக் காணுதல், பித்தத்தைத் தோற்றுவிக்கும் உணவு வகை நடைமுறை இவற்றால் நோய் அதிகரித்தல், பித்தத்தைத் தணிக்கும் பொருட்களால் நன்மை உண்டாகுதல் ஆகிய குறிகள் பித்த காக்கை வலியின் இலக்கணங்களாகும்.

## 5. கபத்தினால் ஏற்படும் கால்கை வலிப்பின் இலக்கணம்

தாமதமாக வலிப்பு, நேரங்கழித்து நினைவு, கீழே விழுதல், படுத்துக்கிடத்தல், சேஷ்டைகள் அதிகமில்லாமை, வாய்நீர் ஒழுகுதல், நகங்கள் கண்கள் முகம் தோல் இவற்றில் வெண்ணிறத் தோற்றம், வெண்ணிறமும் பளுவும் நைப்பும் உள்ள உருவங்களைக் காணுதல், கபத்தைத் தோற்றுவிக்கும் பொருட்கள் ஒத்துக்கொள்ளாமை, அதற்கு எதிரிடையான பொருட்கள் ஒத்துக் கொள்ளுதல் ஆகிய செயல்கள் கபத்தினால் ஏற்படும் காக்கை வலியின் இலக்கணங்களாகும்.

## 6. வாதம்,பித்தம், கபம் இவற்றின் சேர்க்கையினால் உண்டாகும் காக்கை வலியின் இலக்கணம்

மூன்று தோஷங்களின் குறிகள் கலந்திருந்தால் (ஸன்னிபாதம்) மூன்று தோஷங்களின் கூட்டுச் சேர்க்கையினால் ஏற்பட்ட காக்கை வலி என அதை அறியவும். இந்நோய் சிகிச்சைக்குக் கட்டுப் படாததெனக் கருதுகின்றனர்.

இவ்வாறாக நான்கு வகையான காக்கை வலி நோய்கள் விளக்கப்பட்டுள்ளன. (8)

இந்நான்கு காக்கைவலி நோய்களுடன் எதிர்பாராத காரணத் தினால் தோன்றும் காக்கை வலி சில சமயம் சேரலாம். அதைப் பற்றி பிறகு சிகிச்சை ஸ்தானத்தில் விளக்குவோம்.

அதனுடைய நிலைமை முற்கூறிய காக்கை வலியின் இலக் கணங்களைக் காட்டிலும் அதிகமாகவோ சிறிது மாறுபட்டோ இருப்பதைக் கொண்டு அறிந்துகொள்ளலாம். (9)

## 7. காக்கைவலிக்குச் சுருக்கமான மருத்துவம்

காக்கைவலி நோய் உள்ளவர்களுக்கு நன்மையளிக்கக் கூடிய கடினமான வாந்தி பேதி போன்ற உடலைச் சுத்தம் செய்யக் கூடிய மருத்துவத்தையும் நோயைத் தணியச் செய்யும் முறை களையும் கையாள வேண்டும்.

எதிர்பாராத காரணங்களால் ஏற்படும் காக்கைவலி நோய்க்கு மந்திரம் பலி பூசை முதலியவை நன்மை பயப்பவை. (10)

## 8. நிதானஸ்தானத்தில் கூறப்பட்ட எண்வகை நோய்கள் தோன்றும் முறை

முற்காலத்தில் புகழ்பெற்ற தக்ஷனின் யாகத்தை சிவபெரு மான் அழித்த சமயத்தில் பிராணிகள் பல திசைகளில் ஓடி

அலைந்து நீரில் நீந்தி குதித்து ஓடி தாண்டி உடலை அழிக்கக் கூடிய செயல்களைப் புரிந்ததால் குன்ம நோய் தோன்றியது.

அதிக அளவில் வேள்வி நெய்யைப் பருகியதால் நீரழிவும் குஷ்ட நோயும் தோன்றின. பயம் விரட்டுதல் வருத்தம் இவற்றால் பைத்திய நோயும் தோன்றியது.

பலவகைப் பிராணிகள் தூய்மையற்ற பொருட்களைதொட்டதினால் காக்கை வலி தோன்றியது. சிவபெருமானின் நெற்றிக் கண்ணின் தீயிலிருந்து காய்ச்சல் உண்டாயிற்று. அந்தக்காய்ச்சலின் கொதிப்பினால் இரத்த பித்தம் எனும்நோய் உண்டாயிற்று. விண்மீன்களின் அரசனான சந்திரனுக்கு மித மிஞ்சிய புணர்ச்சியினால் (ராஜயக்ஷ்மா) எனும் எலும்புருக்கி நோய் தோன்றியது. (11)

## அதைப் பற்றிய செய்யுட்களின் கருத்து

வாதம் பித்தம் கபம் இம்மூன்றின் சேர்க்கை என இந்நான்கு காரணங்களால் நால்வகை காக்கைவலி நோய்கள் தோன்றுகின்றன. அவற்றில் மூன்று தோஷங்களின் சேர்க்கையினால் தோன்றும் காக்கைவலி நோய் மருத்துவத்திற்கு அப்பாற்பட்டது. (12)

சிறந்த மருத்துவர்கள், கவனமாக சிகிச்சைக்குக் கட்டுப்பட்ட காக்கை வலி நோயைத் தோஷங்களுக்கு ஏற்றவாறு தீக்ஷ்ணமான வாந்தி பேதி போன்ற உடலைச் சுத்தம் செய்யும் சிகிச்சையாலும் நோயைத் தணியச் செய்யும் மருந்துகளாலும் நீக்குகின்றனர். (13)

தோஷங்களினால் தோன்றும் காக்கை வலி நோயைத்தொடர்ந்தும் எதிர்பாராத காரணத்தாலும் வரும் காக்கை வலி நோய்கள் இரண்டிற்கும் பொதுவான மருத்துவம் செய்ய வேண்டும் என்று மருத்துவர் கூறுகின்றனர். (14)

எல்லா நோய்களையும் அவற்றின் பிரிவுகளையும் நன்கு அறிந்தவரும் எல்லா மூலிகைகளின் அறிவைப் பெற்றவருமான மருத்துவர்கள் எல்லாப் பிணிகளையும் நீக்குகிறார்கள். சிகிச்சையில் மதியிழப்பதில்லை. (15)

இவ்விதம் இந்த சிறந்த நிதானஸ்தானம் முழுமையாகக் கூறப்பட்டது. ஒரு நோய் மற்றொரு நோயின் தோற்றத்திற்குக் காரணமாகின்றது. (16)

உதாரணமாகக் காய்ச்சலின் கொதிப்பினால் இரத்த பித்தம் தோன்றுகிறது. இரத்த பித்தம் காய்ச்சல் தோன்றுவதற்குக்

காரணமாகின்றது. இரத்த பித்தம் காய்ச்சல் இரண்டும் உடல் உருக்கி நோயைத் தோற்றுவிக்கின்றன. (17)

மண்ணீரலின் பெருக்கினால் மகோதரம் எனும் பிணி தோன்றுகிறது. மகோதரத்தினால் வீக்கம் உண்டாகிறது. மூல நோய் வகைகளால் வயிறு வீக்கமும் குன்மமும் உண்டாகின்றன. (18)

ஜலதோஷத்தினால் இருமலும் இருமல் முற்றி தாது க்ஷயம் எனும் பிணியும் உண்டாகின்றன. அந்த க்ஷயம் உடலுருக்கி நோய்க்குக் காரணமாகின்றது. (19)

மேற்கூறிய சில நோய்கள் முதலில் சுதந்திரமான நோய்களாகத் தோன்றுகின்றன. பிறகு அவையே மற்றொரு நோய் தோன்றுவதற்குக் காரணமாகித் தாம் மறைந்து விடுகின்றன. சில நோய்கள் தொடர்ந்த நோய்களாகவும் மற்றொரு நோயை உண்டுபண்ணுவனவாகவும் இருக்கின்றன.

சில நோய்கள் குறிப்பிட்ட நோயைத் தோற்றுவிக்க ஒரு காரணமாக ஆகின்றன. (20)

ஒரு நோய் மற்றொரு நோய் தோன்றுவதற்குக் காரணமாவதுடன் தான் தணிந்துவிடுகிறது.

ஒரு நோய் மற்றொரு நோய்க்குக் காரணமாவதுடன் தானும் தணிவதில்லை. (21)

இவ்விதமாக மனிதர்களிடத்தில் (உடலில்) நோய்களின் கலப்பு ஏற்படுவதாலும் சிகிச்சை நன்கு நிறைவேறினாலும், ஒரு நோய் மற்றொரு நோயைத் தோற்றுவிப்பதாக ஆகும் காரணத்தினாலும் அதிகம் துன்பத்தை அளிப்பனவாகின்றன. (22)

## 9. நன்கு நிறைவேறிய சிகிச்சை. நிறைவேறாத சிகிச்சை ஆகிய இவற்றின் இலக்கணம்.

ஒரு நோயைத் தணித்து வெவ்வேறு பிணிகளைத் தோற்றுவிக்கிற சிகிச்சை நன்கு நிறைவேறிய சிகிச்சை அன்று என அறியலாம். ஒரு நோயைத் தணித்து மற்ற தோஷங்களைச் சீற்றமடையச் செய்யாததே நன்கு நிறைவேறிய சிகிச்சை என அறிக. (23)

பல நோய்களுககு ஒன்றே காரணமாகின்றது. ஒரு நோய்க்கு ஒரே இலக்கணம் காரணமகிறது. ஒரு நோய்க்குப் பல காரணங்களும் பல நோய்களுக்குப் பல காரணங்களும் இருக்கின்றன. உதாரணமாக வறட்சியான பொருட்

களால் காய்ச்சல் தலைச்சுற்றல் உளறுதல் போன்ற பல நோய்கள் உண்டாகின்றன.

ஒரு வறட்சிப் பொருளின் காரணமாக ஒரேவிதக் காய்ச்சல் தோன்றுகிறது. வறட்சிப் பொருட்கள் போன்ற பல காரணங்களால் காய்ச்சல் தலைச்சுற்றல் போன்ற பல நோய்கள் உண்டாகின்றன. (24—26)

பல நோய்களில் ஒரு குறி தோன்றலாம். ஒரு நோய்க்கு ஒரே குறியும் தோன்றலாம். ஒரு நோய்க்குப் பல குறிகள் தென்படும். பல நோய்களுக்குப் பல குறிகளும் தென்படும். (27)

மாறி மாறி வரும் கொதிப்பு சுரத்திற்கு ஒரு குறியாகும். கொதிப்பு ஒன்றே சுரத்திற்குக் குறியாகின்றது. பல காரணங்களால் மாறி மாறித் தோன்றும் கொதிப்புக் குறியினால் காய்ச்சல் அறியப்படுகிறது. காய்ச்சல் சுவாசம் விக்கல் போன்ற நோய்களும் இதே இலக்கணங்களுடன் கூடியிருக்கின்றன. (28—29)

பல நோய்கள் ஒரே விதமான சிகிச்சையால் குணமடைகின்றன. ஒரு நோய் ஒரே விதமான சிகிச்சையால் குணமடைகிறது.

அதேபோல் ஒரே நோய்க்குப் பலவித சிகிச்சை முறைகளும், பல நோய்களுக்குப் பலவித சிகிச்சை முறைகளும் உண்டு. எடுத்துக்காட்டாக:

இரைப்பையில் தோன்றும் பலவிதப் பிணிகளுக்கு லங்கனம் (பட்டினி கிடத்தல்) என்ற ஒரே சிகிச்சையினால் தணிவு ஏற்படுகிறது. காய்ச்சல் என்ற ஒரு நோய்க்கும் லங்கனம் என்ற சிகிச்சை பயன்படுகிறது.

காய்ச்சல் என்ற ஒரே நோய்க்குக் குறைவான உணவு போன்ற பல சிகிச்சைகள் உள்ளன. அதே குறைவான உணவு போன்ற பல சிகிச்சைகள், காய்ச்சல் சுவாசம் விக்கல் போன்ற பலவித நோய்களையும் தணியச் செய்கின்றன. (30—32)

எளிய முறையில் குறுகிய காலத்தில் குணமடையக் கூடிய நோய் ஸுக ஸாத்யம் (எளிதில் குணமடையக் கூடியது) எனப்படும்.

மிகுந்த உழைப்பினால் பல நாட்களில் குணமடைவிக்கக் கூடிய நோய் க்ருச்ர ஸாத்யம் (கஷ்டப்பட்டு சிகிச்சை செய்வதாம் குணமடைவிக்கக் கூடியது) எனப்படும்.

சிகிச்சை செய்தும் முழுமையாகக் குணமடையாமல் இருக்கும் அஸாத்ய நோய் யாப்ய அஸாத்யம் (காலம் கடத்தியும் தணி யாதது) எனப்படுகிறது.

எந்தவிதமான சிகிச்சைக்கும் கட்டுப்படாத நோய் அஸாத்யம் (குணமடையாதது) எனப்படும்.

சிகிச்சைக்குக் கட்டுப்படாத நோய்கள் எப்பொழுதும் சிகிச் சைக்குக் கட்டுப்படாதவைகளாகவே ஆகின்றன. சிகிச்சைக்குக் கட்டுப்பட்டவை சிலசமயம் கட்டுப்படாதவைகளாகவும் ஆக லாம்.

நோய்கள் சிகிச்சைக்குக் கட்டுப்படாமைக்கு மருத்துவன், மருந்து, உதவியாள், பிணியாளன் என்ற நான்கில் ஏதாவது ஒன்றின் குறைவோ தெய்வக் குற்றமோ காரணமாக இருக்கலாம். (33—35)

பிணிகளின் வளர்ச்சி நோய் தோன்றிய இடம் நோயின் குறைவு இவற்றைச் சிறந்த மருத்துவர் நுட்பமாக நன்கு அறிந்து கொள்ள வேண்டும். பிண்யாளியின் உடல்நிலை சடராக்னியின் நிலை உடல் வலிவு மனநிலை இவற்றை நுட்பமாக அறிந்து அரசன் சிகிச்சைக்கு இணங்க வேண்டும். (36)

நோய்களின் பிரிவுகளை நன்கு பரிசோதித்துக் கவனத்துடன் அந்தந்த நிலைக்கு ஏற்றவாறு மருத்துவம் செய்யும் மருத்துவர் கள் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்குவித நன்மை களையும் அடைகிறார்கள். (37)

பெரும்பாலும் குறுக்காகச் சென்ற தோஷங்கள் பல நாட்கள் வரை பிண்யாளனுக்குத் துன்பத்தைத் தருகின்றன. உடல் சட ராக்னி பிணியாளியின் வலிவு இவற்றை நன்கு அறிந்த மருத்து வர் இந்நோய்களுக்கு விரைவில் சிகிச்சை செய்யக்கூடாது. (38)

அந்நோய்களைச் சிகிச்சையினால் தணியச் செய்ய வேண்டும். அல்லது எளிய முறையில் மலக்குடலுக்கோ இரைப்பைக்கோ மெள்ள மெள்ள தோஷங்களைக்கொண்டு வரச்செய்ய வேண்டும். இவ்விடங்களுக்கு வந்தடைந்த தோஷங்களை அறிந்துவாந்திக்கோ அல்லது பேதிக்கோ மருந்து கொடுத்து அந்த தோஷங்களை அறிவாளியான மருத்துவர் வெளிக் கொணர வேண்டும். (39)

இந்த நிதானஸ்தானத்தில் நோய்களை நன்கு அறிந்து கொள்வதற்காகக் கூறப்பட்ட சுவையின்மை போன்ற இலக் கணங்கள் தனிமையாகத் தோன்றியிருந்தால் நோய் என்று கூறப்பட வேண்டும். ஆனால் காய்ச்சல் போன்ற நோய்

களை முன்னிட்டு ஏற்பட்டால் அப்பொழுது அவற்றை நோயின் இலக்கணம் என்று அறிந்து கொள்ள வேண்டும். அவை நோய்கள் ஆகா. (40)

சுருக்கமாக உலகில் விகாரம் (நோய்) பிரகிருதி (ஆரோக்ய நிலை) என இரண்டே உள்ளன. அவ்விரண்டும் காரணங்களைத் தழுவியுள்ளன. அக்காரணங்கள் இல்லையெனில் அவைகளும் தோன்றுவனவல்ல. (41)

**முடிவுரை**

நிதானஸ்தானத்தில் நோய் தோன்றக் காரணங்கள், முற்குறிகள், இலக்கணங்கள், நோய்களைத் தணிக்கும் முறைகள், நோய் பரவும் விதம், தோற்றம், சிகிச்சை முறை இவை சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

காய்ச்சல் போன்ற எண்வகை நோய்கள், சிகிச்சைக்குக்கட்டுப் பட்டவை, கட்டுப்படாதவை எனப் பிரித்துக் காண்பிக்கப்பட்டுள்ளன.

காரணம், இலக்கணம், தணிக்கும் முறை இவற்றிற்குத் தனித் தனியாக விளக்கம் தரப்பட்டுள்ளது. இவற்றின் காரணம், மாற்றுப் பெயர்கள், நோய்களின் இலக்கணம் இவை விளக்கப் பட்டுள்ளன. (42—44)

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் நிதானஸ்தானத்தில்
அபஸ்மார நிதானம் எனும் எட்டாவது அத்தியாயம்
முற்றும்.

நிதானஸ்தானம் முற்றிற்று.

# விமானஸ்தானம்

## முதல் அத்தியாயம்

## *ரஸ விமானம்

சரகஸம்ஹிதையில் விமான ஸ்தானம் எனும் பகுதியில் ரஸ விமானம் என்பதைப்பற்றி ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

நோய்களுக்குக் காரணம் முற்குறி குறி உபசயம் (நோய் நீங்குதல்) எண்ணிக்கை முதன்மை விதி பிரிவு பலம் காலம் இவற்றைக் குறித்தும் தோஷங்கள் மருந்து இடம் காலம் பலம் உடலமைப்பு உணவு ஸாத்மியம் (அநுகூலமானது) ஸத்வம் (குணம்) இயற்கை வயது சிறப்பு இவற்றைக் குறித்தும் மருத்துவர் தகுந்தவாறு நன்கு அறிந்துகொள்ள வேண்டும்.

சிகிச்சைக்குத் தோஷம் போன்றவற்றின் சிறந்த அறிவுதான் காரணமாகிறது. இவற்றை அறிந்து கொள்ளாத மருத்துவர் நோய்களை நீக்குவதில் திறமையற்றவ ராவர்.

ஆகையால் அக்னிவேசரே ! தோஷம் போன்றவற்றின் சிறப்புத் தன்மைகளைப் பற்றி அறிந்துகொள்ள விமானஸ்தானத்தை விளக்குவோம். (3)

முதலில் சுவை பொருட்கள் தோஷங்கள் இவற்றின் மாறுபாடு சிறப்பு இவற்றை விளக்குவோம்.

இனிப்பு புளிப்பு உப்பு கார்ப்பு துவர்ப்பு கைப்பு என சுவைகள் ஆறு வகைப்படும். இவற்றை நன்முறையில் பயன்படுத்துவதால் இவை உடலை நன்னிலையில் வைக்கின்றன. தவறான முறையில் பயன்படுத்தினால் இவை தோஷங்கள் சீற்றமடையக் காரணங்களாகின்றன. 4

---

விமானஸ்தானம் — ரசங்கள், தோஷங்கள், மருந்துகள் இவற்றைப்புற்றி நன்கு அறிவிப்பது. இவற்றை விளக்குவதால் இது இப்பெயர் பெறுகிறது.

*ரஸ விமானம் — சுவையின் சிறப்புகளின் விளக்கம்.

வாதம் பித்தம் கபம் என தோஷங்கள் மூவகைப்படும். இயற்கை நிலையில் இருந்தால் அந்த தோஷங்கள் உடலுக்கு நன்மை பயக்கின்றன.

இயற்கைக்கு மாறாக ஏற்றத் தாழ்வுகளடைந்த தோஷங்கள் பலவகை நோய்களைத் தோற்றுவித்து உடலுக்கு ஊறு விளை விக்கின்றன. 5

ஆறு வகைச் சுவைகளில் மும்மூன்று சுவைகள் ஒவ்வொரு தோஷத்தைத் தோற்றுவிக்கவும், தணிக்கவும் செய்கின்றன. முறையே கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு இச்சுவைகள் வாததோஷத் தைத் தோற்றுவிக்கின்றன. இனிப்பு, புளிப்ப, உப்பு, இம்மூன்று சுவைகளும் வாத தோஷத்தைத் தணிக்கின்றன.

கார்ப்பு, புளிப்பு, உப்பு இச்சுவைகள் பித்தத்தை உண்டு பண்ணுகின்றன. இனிப்பு, கைப்பு, துவர்ப்பு இவை பித்தத்தைத் தணிக்கின்றன.

இனிப்பு, புளிப்பு, உப்பு இம்மூன்றும் கபத்தை ஏற்படுத்து கின்றன. கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு இவை கபத்தைத் தணியச் செய்கின்றன.

தோஷங்களின் சேர்க்கையினால் சுவைகள் எந்தெந்த தோஷங் களுக்குச் சமமான குணங்களுடையனவாக அல்லது அதிக குணங்களை உடையனவாக இருக்கின்றனவோ அவற்றைப் பயன் படுத்துவதால் அந்தந்த தோஷங்கள் வளர்ச்சி பெறுகின்றன.

தோஷங்களுக்கு எதிரிடையான குணங்கள் உள்ள சுவைகளை, அல்லது எதிரிடையான அதிக குணங்கள் உள்ள சுவைகளைப் பயன்படுத்துவதனால் தோஷங்கள் தணிவடைகின்றன.

இம்முறைகளைக் கொண்டு சுவைகள் தனிப்பட்ட முறையில் ஆறாகவும் அதேபோல தோஷங்கள் மூன்றாகவும் பிரிக்கப்பட் டிருக்கின்றன. 7

அந்தச் சுவைகளும் தோஷங்களும் ஒன்றோடொன்று சேர்க்கையினால் மிகுதி மிக்க மிகுதி என உட்பிரிவுகளால் எண் ணற்றவைகளாகின்றன. 8

பல சுவைகள் உள்ள பொருட்களிலும் பல தோஷங்களினால் உண்டான நோய்களிலும் சுவை, தோஷம் இவற்றின் சிறப்புத் தன்மைகளைத் தனித்தனியாக ஆராய்ந்து பொருட்கள் நோய்கள் இவற்றின் சிறப்புத் தன்மைகளை முடிவு செய்ய வேண்டும். 9

ஆனால் இம்முறை எல்லா இடங்களிலும் பொருந்தாது. வேற்றுமையாலும் எதிரிடையான குணங்களின் சேர்க்கையாலும் இயற்கையாகவே ஒன்றையொன்று அழிக்கும் தன்மை கொண்டிருப்பதாலும் பல பொருட்களின் சேர்க்கையின் சிறப்புத் தன்மையை ஊகிக்க முடியாது. 10

எனவே பொருட்களின் சேர்க்கையினால் உண்டான கூட்டுச் சிறப்புத் தன்மையை அறிய வேண்டும்.

அதன் மூலம் சுவை பொருள் நோய் இவற்றின் சிறப்புத் தன்மையைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

சுவை பொருள் தோஷம் நோய் இவற்றின் தனிச் சிறப்புகளைப் பற்றி இனி விளக்குவோம். 11–42

சுவையின் சிறப்புத் தன்மையைப் பற்றி இதுவரை கூறப்பட்டது. இனிப் பொருளின் சிறப்புத் தன்மை குறித்துக் கூறுவோம்.

எண்ணெய் நெய் தேன் இம்மூன்றும் முறையே வாதம், பித்தம், கபம் இவற்றைத் தணிக்கும் பொருட்களாகும். 13

### 1. எண்ணெய்

இம் மூவகைப் பொருட்களுள் எண்ணெயில் நைப்புத் தன்மை உஷ்ண வீர்யம் குருகுணம் இவை இருப்பதால் இதை விடாமல் பயன்படுத்துவதனால் இது வாதத்தை வெற்றி கொள்கிறது.

வாதம், எண்ணெய்க்கு எதிரிடையான வறட்சி சீதவீர்யம் லகுகுணம் இவற்றைப் பெற்றிருக்கிறது. எதிரிடையான குணங்களுடைய பொருள்களின் சேர்க்கையில் அதிக அளவில் உள்ளது, குறைந்த அளவில் உள்ளதை வெல்லுகிறது. இடைவிடாமல் பயன்படுத்தப்படும் எண்ணெய் வாதத்தை நீக்குகிறது.

### 2. நெய்

இது இனிப்புச் சுவை சீத்வீர்யம் மந்த குணம் இவற்றைப் பெற்றிருப்பதால் தனக்கு எதிரிடையானதும் இனிப்புச் சுவையற்றதும் உஷ்ண வீர்யம் தீக்ஷ்ண குணம் இவற்றையுடையதுமான பித்தத்தை இது வெற்றி கொள்கிறது.

### 3. தேன்

இது வறட்சி தீக்ஷ்ண குணம் துவர்ப்புச் சுவை இவற்றைப் பெற்றிருப்பதால் இவற்றிற்கு எதிரிடையான நைப்பு மந்த குணம் இனிப்புச்சுவையுடன் கூடிய கபத்தை நீக்குகிறது.

இதேபோல் வாதம் பித்தம் கபம் இவற்றிற்கு எதிரிடையான குணங்களைப் பெற்றிருக்கும் மற்ற பொருட்களைப் பயன் படுத்துவதால் தோஷங்கள் தணிகின்றன. 14

அரிசித் திப்பிலி க்ஷாரப் பொருள் உப்பு இம்மூன்றையும் மற்ற பொருட்களைவிட அதிக அளவில் பயன்படுத்தக்கூடாது. 15

## 4. திப்பிலிகள்

இயல்பாகக் கார்ப்புச் சுவை உடைய இவை முடிவில் இனிப்புச் சுவையைப் பெறுகின்றன. குருகுணம் உள்ளவை. மிக்க எண்ணெய்ப் பசையும், உஷ்ண குணமும் அற்றவை. ஈரத்தன்மையை உண்டாக்குபவை. மருந்துப் பொருட்களாகவும் கருதப்படுகின்றன. விரைவில் நன்மையையோ, தீமையையோ அளிக்கக் கூடியவை. அதாவது அளவோடு பயன்படுத்தினால் நன்மையையும், அளவில் உபயோகித்தால் தீமையையும் விளைவிப்பவை.

முறையுடனும் அளவுடனும் சிறிது காலம் வரை பயன் படுத்தினால் சிறிதளவு நன்மை கிடைக்கும்.

அதிக அளவில்பயன்படுத்தினால்அவை தோஷங்களைக் குவித்து வைக்கின்றன. குரு குணமும், ஈரத்தன்மையும் பெற்றிருக்கும். இவற்றைப் பெருமளவில் பயன்படுத்துவதால் கபம் அதிகமாகி விடுகிறது. இவை உஷ்ண குணமுள்ளமையால் பித்தத்தை வளர்க்கின்றன. குறைந்த அளவில் நைப்புத் தன்மையும் உஷ்ண குணமும் உள்ளனவாகையால் வாதத்தைத் தணிக்கும் சக்தி அற்றவை. திப்பிலிகள் [1]யோகவாஹி என்ற குணத்தைப் பெற்றிருக்கின்றன. ஆகையினால் திப்பிலிகளை அதிகமாகப் பயன்படுத்தக் கூடாது. 16

## 5. க்ஷாரம்

இது உஷ்ணம் தீக்ஷ்ணம் இலகு இக்குணங்களைஉடையது. முதலில் பிசுபிசுப்புத் தன்மையை உண்டாக்கி பிறகுஉலர்த்து கிறது. இது பழுக்கவும் எரிக்கவும் உடைக்கவும் பயன்படுத்தப் படுகிறது. இதைப் பெருமளவில் பயன்படுத்துவதால் தலை மயிர் கண்கள் இதயம் ஆண்மை இவற்றிற்கு அழிவு உண்டாகும்.

---

1. யோகவாஹி – ஒரு பொருள் மற்ற பல பொருட்களுடன் தனித்தனியே சேரும்போது அந்தந்த பொருட்களின் குணங்களுக்கு ஏற்ற தன்மைகளைப் பெறுவது.

கிராமம் நகரம் கடைவீதி நாடு இவ்விடங்களில் வாழும் மக்கள் இதை எப்பொழுதும் பயன்படுத்துகின்றனர். அதனால் அவர்கள் குருடர்களாகவும் ஆண்மையற்றவர்களாகவும் சொட்டைத் தலை உடையவர்களாகவும் நரைத்த தலை மயிர் உள்ளவர்களாகவும் இருக்கின்றனர். கீழ்த் திசையில் (அஸாம், வங்காளம்), வசிப்பவர்களும் சீன நாட்டில் வாழ்பவர்களும், பெரும்பாலும் இவ்வாறு இருப்பார்கள்.

ஆகையால் [1]க்ஷாரத்தை அதிக அளவில் பயன்படுத்தக்கூடாது. 17

## 6. உப்பு

இது உஷ்ணம் தீக்ஷ்ணம் என்ற குணமுடையது. மிக்க குரு குணம் எண்ணெய்ப்பசை அற்றது. அழுகச் செய்யவும், இளகச் செய்யவும் உணவுக்குச் சுவை கூட்டவும் வல்லது. முறையுடனும், அளவுடனும் பயன்படுத்துவதனால் நலனை அளிக்கும். அதிக அளவில்உபயோகப்படுத்தினால் தோஷங்களைக் குவிக்கும்.

இது சுவை கூட்டவும் சீரணமாவதற்கும், பிசுபிசுப்பை உண்டாக்குவதற்கும் இளகச் செய்வதற்கும் பயன்படுத்தப்படுகிறது.

அதிக அளவில் பயன்படுத்துவதனால் இது வாட்டம் தளர்ச்சி வலிவுக்குறைவு இவற்றை உடலுக்குத் தோற்றுவிக்கிறது.

இதைக் கிராமம் நகரம் கடைவீதி நாடு இவற்றில் வாழும் மக்கள் அதிகமாகப் பயன்படுத்துகிறார்கள். அதனால் அவர்கள் பெரும்பாலும் வலிவிழந்தவர்களாகவும் தளர்ச்சியடைந்த ஊன், இரத்தம் இவற்றை உடையவர்களாகவும் உழைக்கச் சக்தியற்றவர்களாகவும் ஆகின்றனர்.

பாஹ்லீகம், ஸௌராஷ்டிரம் (குஜராத்) ஸிந்து, ஸௌவீரம் என்ற இடங்களில் வாழும் மக்கள் பாலுடன் உப்பைச் சேர்த்துப் பருகுகின்றனர். உப்படர்ந்த நிலங்களில் மூலிகைகள், கொடிகள், மரங்கள் கீரை வகை பயிராவதில்லை.

பயிராயினும் குறைந்த சக்தியுள்ளவைகளாக அவை காணப்படுகின்றன. இதற்குக் காரணம் உப்புக் கலப்பு தான். ஆகையால் உப்பை அதிக அளவில் பயன்படுத்தக்கூடாது. உப்பை அதிகஅளவில்

---

1. க்ஷாரம் — உவர்ப்பும், உப்பும் மிகுதியாக உள்ளதும் உடலைக் கெல்லும் சக்தி உடையதுமான பொருள்.

பயன்படுத்திப் பழக்கப்படுத்திக் கொண்டவர்களுக்கு சொட்டை, நரை சுருக்கம் இவை காலமில்லாக் காலத்தில் ஏற்படுகின்றன. 18

அவ்வாறு பழக்கப்படுத்திக் கொண்டவர்கள் அதைச்சிறிது சிறிதாகக் குறைத்துக்கொண்டு வருவது நலனை அளிக்கும்.

பழக்கத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொள்வதால் உடலுக்குத் தீங்கு ஏற்படுகிறதில்லை. ஏற்படினும் குறைந்த அளவில்தான் ஏற்படும். 19

**[1]ஸாத்ம்யம்**

உடலுடன் ஒத்துப் போவதற்கு ஸாத்ம்யம் எனப்பெயர். ஸாத்ம்யத்திற்கு உபசயம் என்ற பெயரும் உண்டு. இந்த ஸாத்ம்யம் என்பது உயர்வு, தாழ்வு, நடுத்தரம் என மூவகைப்படும்.

இது ஒவ்வொரு சுவையையும் தனித்தனியாகப் பயன்படுத்துவதாலும் ஆறு சுவைகளையும் ஒன்றாகப் பயன்படுத்துவதாலும் ஏழு வகையாக ஆகிறது. இவற்றில் எல்லாச் சுவைகளையும் பழக்கப்படுத்துவது உயர்ந்தது, ஒவ்வொரு சுவையையும் தனித் தனியாகப் பழக்கப்படுத்துவது தாழ்ந்தது.

உயர்ந்ததற்கும் தாழ்ந்ததற்கும் இடைப்பட்டது நடுத்தரமானது.

பழக்கத்திலுள்ள தாழ்ந்ததையும் நடுத்தரமானதையும் சிறிது சிறிதாக விலக்கிக் கொஞ்சம் கொஞ்சமாக ஸாத்ம்யத்தை மிகுதியாகப் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும்.

## 7. எண் வகை உணவு முறை

எல்லாச் சுவைகளையும் பழக்கத்தில் கொண்டு வந்தவன் ''இயற்கை முதல் பயன்படுத்துபவன்'' வரை இனி கூறப் போகும் எண்வகை உணவு வகை முறைகளை நன்கு ஆராய்ந்து நன்மை பயக்கும் பொருட்களையே பயன்படுத்த வேண்டும். 22

ப்ரகிருதி (இயற்கை நிலை) கரணம் (செய்முறை) ஸம்யோகம் (சேர்க்கை), ராசி (அளவு) தேசம் (பழக்க வழக்கம்) காலம் (நேரம்) உபயோக ஸம்ஸ்தா (பயன்படுத்தும் முறை) உபயோக்தா (பயன்படுத்துபவன்) இந்த எட்டும் சிறப்பான உணவு முறைகள். 21

1. ஸாத்மியம் – உடலுக்கு ஒத்துக்கொள்ளக்கூடியவை.

### (அ) ப்ரகிருதி

இயற்கை நிலையில் உள்ளதைப் ப்ரகிருதி என்கிறோம். இயற்கை நிலையில் உள்ள உணவும், மருந்தும், பொருட்களில் உள்ள இயற்கையான குரு இலகு போன்ற குணங்களின் சேர்க்கையாகும். உதாரணமாக உளுந்தும் பயறும், பன்றி மான் இவற்றின் மாமிசமும்.

### (ஆ) கரணம்

இயற்கையான குணங்களுடன் கூடிய பொருட்களில் அபிஸம்ஸ்காரம் (மாறுபாடு) ஏற்படுவதைக் கரணம் என்கிறோம்.

### (இ) ஸம்யோகம்

மற்ற பொருட்களின் குணங்களைத் தன்னிடம் உண்டாக்கிக் கொள்வதாகும். அந்தக் குணங்கள் நீர் நெருப்பின் சேர்க்கை சுத்தம் கடைதல் இடம் காலம் மணம் பாவனை (ஊற வைத்தல்) இவற்றின் மூலமாகவும், நாள் கடத்துவதாலும், பலவகைப் பாத்திரங்களில் வைப்பதாலும் ஏற்படுகின்றன.

### (ஈ) ஸம்யோகம்

இரண்டு அல்லது மூன்று பொருட்களின் சேர்க்கையாகும். இந்த ஸம்யோகம் ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்யக் கூடியது. இந்தச் சேர்க்கையில் உள்ள தனித்தனிப் பொருட்கள் ஒரு தீமையையும் செய்யாது.

உதாரணமாக : தேனும் நெய்யும் தனித்தனியாகக் கொல்லும் தன்மையுடையன வல்ல அதேபோல் தேன் மீன் பால் இவையும் கெடுதலைத் தோற்றுவிக்கா. ஆனால் தேனும் நெய்யும் சேர்ந்தாலோ தேன் மீன் பால் மூன்றும் சேர்ந்தாலோ தீமை உண்டாகும்.

### (உ) ராசி - என்பது அளவு

அது ஸர்வக்ரஹம் பரிக்ரஹம் என இருவகைப்படும். இவை இரண்டும் அளவு அளவின்மை இவற்றைப் பிரிக்கின்றன. எல்லா உணவுப் பொருட்களையும் ஒன்று சேர்த்து அளத்தல் ஸர்வக்ரகமாகும். உணவுப் பொருட்களைத் தனித்தனியாக அளத்தல் பரிக்ரஹம் எனப்படும்.

அதாவது எல்லாவற்றையும் கூட்டு சேர்த்து ஒரே அளவாகக் கணக்கிடுதல் ஸர்வக்ரகம். எல்லாவற்றையும் தனித்தனியாகப் பிரித்துக் கணக்கிடுதல் பரிக்ரகம்.

**(ஊ) தேசம்** என்பது பொருள் உற்பத்தியாகுமிடமும், செல்லும் இடமுமாகும். ஒரு இடத்தில் தோன்றிய பொருட்கள் அந்த இடத்தில் வாழும் மக்களுக்கு ஒத்துக் கொள்தல் தேச ஸாத்ம்யம் எனப்படும்.

**(எ) காலம்**

இது நித்யகம் ஆவஸ்திகம் என இருவகைப்படும். நித்யகம் என்பது பொதுவான காலத்தைக் குறிப்பதாகும். ஆவஸ்திகம் என்பது நோயின் நிலையை அறிந்து அதற்கேற்றவாறு செயல்படுவது. ஆவஸ்திகம் நோயின் நிலையைப் பொறுத்தது. நித்யகம் பர்வங்களின் நிலையைப் பொறுத்தது.

**(ஏ) உபயோக ஸம்ஸ்தா**

உணவு உண்ணும் முறை. அது சீரண நிலையைப் பொறுத்தது.

**(ஐ) உபயோக்தா**

பயன்படுத்துபவன் என இதன் பொருள். பயன்படுத்துபவனுக்கு ஒத்துக்கொள்வது ஒக ஸாத்ம்யம் எனப்படும். இவ்வாறு எட்டு வகையான உணவுமுறைகள் சிறப்பாக விளக்கப்பட்டன. 22

மேற்கண்ட எண்வகை உணவுமுறைகள் நன்மையையும், தீமையையும் தோற்றுவிக்கின்றன. அதாவது முறைப்படி பயன்படுத்தினால் நன்மையையும் முறைதவறி உடயோகித்தால் தீமையையும் தோற்றுவிக்கின்றன.

இவை ஒன்றுக்கொன்று உதவி செய்யக்கூடியவை. இவற்றை நன்கு அறிந்துகொள்ள விருப்பம் கொள்ள வேண்டும். நன்றாக அறிந்து நலம்தரும் செயல்களிலேயே ஈடுபட வேண்டும். மோகத்தினால் அல்லது மதியிழப்பினால் தனக்குப் பிடித்ததாயிருந்தாலும் கெடுதலை விளைவிக்கக்கூடியவையும், சீரண காலத்தில் துன்பத்தைத் தருபவையுமான உணவு வகைகளையும், அத்தகைய மற்ற மருந்து முதலியவற்றையும் பயன்படுத்தக்கூடாது.

இந்த உணவு முறை ஆரோக்கிய நிலையில் உள்ளவர்களுக்கும் பிணியாளர்களுக்கும் சிறந்ததாகும். குறித்த நேரத்தில் இயற்கையாகவே நன்மை பயக்கக்கூடிய உணவை உண்பவர்களுக்கும் இம்முறை மேலானது.

**8. உணவு உண்ணும் முறை**

உஷ்ணமாகவும், நைப்புள்ளதாகவும், அளவுடனும், சீரணத்தில் வீர்யத்திற்கு எதிரிடையற்றதுமான உணவைத்

தனக்குப் பிடித்தமான இடத்தில் தனக்குப் பிடித்தமான பொருட்களுடன் அவசரப்படாமலும் தாமதிக்காமலும் பேசாமலும் சிரிக்காமலும் அதிலேயே மனதைச் செலுத்தியவனாயிருந்து கொண்டு தன் நிலை, உண்வின் நிலை இவற்றை உணர்ந்து உட்கொள்ள வேண்டும். 24

## 9. சூடான உணவினால் ஏற்படும் நன்மை

சூடு உணவுக்குச் சுவையூட்டுகிறது. சடராக்னியைத் தூண்டி விடுகிறது. விரைவில் சீரணமாகிறது. வாதத்தை நேர்முகமாகச் செலுத்துகிறது. கபத்தைத் தணிக்கிறது. ஆகையினால் சூடான உணவு உண்ண வேண்டும்.

## 10. நைப்புள்ள உணவு உண்பதின் பயன்

நைப்புள்ள உணவு சுவையூட்டுகிறது. தணிந்துள்ள சடராக்னியைத் தூண்டிவிடுகிறது. விரைவில் சீரணமாகிறது. வாதத்தை நேர்முகமாகச் செலுத்துகிறது. உடலை வளர்க்கிறது. புலன்களுக்கு வலிவு உண்டாக்குகிறது. பலத்தை வளர்க்கிறது. நிறத்தைத் தெளிவாக்குகிறது. ஆகையால் நைப்புள்ள உணவுப் பொருட்களை உண்ண வேண்டும்.

## 11. அளவோடு உண்ணுதல்

அளவோடு உண்ட உணவு வாதம் பித்தம் கபம் இவற்றைத் துன்புறுத்தாமல் ஆயுளை முழுமையாக வளர்க்கிறது. மலத்துவாரத்தை எளிதில் அடைகிறது. சீரண வலிமையைத் தணிக்காது. துன்புறுத்தாமல் சீரணமடைகிறது. ஆகையால் அளவுடன் உணவு உண்ணவேண்டும்.

## 12. சீரணமான பின் புசித்தல்

அசிரண நிலையில் உண்டவனுடைய உணவு வகை, முன் உண்ட உணவின் சீரணமாகாத உணவு ரசத்துடன் கலந்து எல்லா தோஷங்களையும் விரைவில் சீற்றமடையச் செய்கிறது.

சீரணமானபின் உண்ட உணவு, தோஷங்களை அவற்றின் இடத்தில் இயற்கை நிலையில் இருக்கச் செய்கிறது. சடராக்னியைத் தூண்டி விடுகிறது. பசியைத் தோற்றுவிக்கிறது. உடலில் உள்ள துவாரங்களைச் சுத்தம் செய்கிறது. சுத்தமான ஏப்பத்தை ஏற்படுத்துகிறது. இதயத்தைத் தெளிவாக்குகிறது. வாதத்தை நேர்முகமாகச் செலுத்துகிறது. தவிர கீழ்நோக்கிச் செல்லும் வாதம், சிறுநீர் இவற்றைக் கழித்த பின்பு உண்ட உணவு, உடலில்

உள்ள எல்லா தாதுக்களையும் கெடுக்காமல் ஆயுளை வளர்க்கிறது. ஆகையினால் முன்பு உண்ட உணவு சீரணித்த பின் தான் மறுமுறை உண்ண வேண்டும்.

## 13. வீரியத்திற்கு விரோதமில்லாத உணவு

எதிர்டையான வீர்யமுள்ள உணவை உண்பதினால் தோன்றும் நோய்கள், முரண்படாத உணவை உண்பவனுக்கு தோன்றா.

## 14. பிடித்தமான இடத்தில் அமர்ந்து உண்பது

மனதிற்குப் பிடித்தமான இடத்தில் அமர்ந்து பிடித்தமான பொருட்களுடன் உணவு உண்ண வேண்டும். அதனால் மனதிற்குத் துன்பமளிக்கும் நிலைகளும் மனக் குழப்பமும் ஏற்படா. ஆகையால் மேற்கூறியபடி பிடித்தமான இடத்தில் மனதிற்கேற்ற பொருட்கள் நிறைந்த உணவை உண்ண வேண்டும்.

## 15. வேகமாக உண்பதால் தோன்றும் தீமைகள்

வேகமாக உண்ணக்கூடாது. அவ்வாறு உண்பவனுக்கு உண்ட உணவு மேல்நோக்கிச் சென்று ஒன்று சேராமல் தகர்ந்துவிடுகிறது. மேலும் அது இரைப்பையில் நேரிடையாகச் செல்வதில்லை. உணவு அருந்துவதனால் ஏற்படும் நன்மைகள் கிட்டுவதில்லை. மிக வேகமாக உணவு உண்ண லாகாது.

## 16. தாமதமாக உண்பதால் தோன்றும் தீமைகள்

மிகத் தாமதமாக உணவு உண்ணக்கூடாது. அதனால் மனதிற்கு போதுமென்ற எண்ணம் ஏற்படுவதில்லை. உணவை அதிகம் உண்டுவிடுகிறான். உணவுப் பொருட்கள் குளிர்ந்து குறித்த காலத்தில் சீரணமாகா. ஆகையால் மிகத் தாமதமாக உணவு அருந்தலாகாது.

## 17. ஒரே மனதுடன் உண்பதனால் ஏற்படும் நன்மை

பேசாமல் சிரிக்காமல் உணவில் மனதைச் செலுத்தி உணவு உட்கொள்ள வேண்டும். பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் அல்லது வேறு நினைவுடனும் உண்பதனால் மிக விரைவில்உண்பதால் உண்டாகும் கெடுதல்களே தோன்றுகின்றன. ஆகையால் பேசாமலும் சிரிக்காமலும் அதே நினைவுடனும் உணவு உட்கொள்ள வேண்டும்.

### 18. சக்திக்கேற்ற உணவின் பயன்

தன் உடற்சக்தியை நன்கு அறிந்துகொண்டு உணவு உட்கொள்ள வேண்டும். இந்த உணவுப் பொருட்கள் தனக்கு மிகவும் நல்லவை இந்தப் பொருட்கள் தீமை தரக்கூடியவை என்பதையும் தனக்கு ஒத்துக்கொள்ளக்கூடியவை என்பதையும் தன் சக்தியைக் கொண்டு அறிந்து கொள்ளலாம். ஆகையால் தன் சக்தியை நன்கு அறிந்துகொண்டு அதற்கேற்ற உணவு உட்கொள்ள வேண்டும்.

சுவை பொருள் தோஷம் நோய்கள் இடம் காலம் உடல் நிலை இவற்றை நன்கு அறிந்தவரே நம் கருத்தில் சிறந்த மருத்துவராவார். 26

### முடிவுரை

விமான ஸ்தானத்தில் பயன் சுவை பொருள் தோஷம் நோய் இவற்றைப் பற்றிய சிறப்பு வர்ணனை, எந்த எந்தப் பொருட்களை அதிகம் பயன்படுத்தக்கூடாது என்ற கருத்து, ஒத்துக்கொள்ளக் கூடிய பொருட்களில் உயர்ந்தவை நடுத்தரமானவை தாழ்ந்தவை என்ற பாகுபாடு, எண்விதமான உணவு முறைகள் முறையுடன் உணவு உட்கொள்வதனால் ஏற்படும் நன்மை இவை எல்லாம் இந்த ரஸவிமானம் எனும் அத்யாயத்தில் விளக்கப்பட்டுள்ளன. 27–28

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் விமான
ஸ்தானத்தில் ரஸ விமானம் எனும் முதல்
அத்தியாயம் முற்றும்.

## இரண்டாவது அத்தியாயம்

## *த்ரிவித குக்ஷீயவிமானம்

''த்ரிவித குக்ஷீய விமானம்'' என்பதைப் பற்றி ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

### 1. வயிற்றில் மூவகை இட ஒதுக்கீடு

உணவை அருந்துபவன் வயிற்றில் உணவு தங்குவதற்காக மூவிதமாக இட ஒதுக்கீடு செய்ய வேண்டும். கெட்டியான உணவுப் பொருட்கள் தங்குவதற்காக ஒரு பகுதியும், திரவப் பொருட்கள் தங்குவதற்காக ஒரு பகுதியும், வாதம் பித்தம் கபம் என்ற தோஷங்கள் சஞ்சரிப்பதற்காக ஒரு பகுதியும் என இதை மூவிதமாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு பிரித்து அளவுடன் உண்பவனுக்கு மிதமிஞ்சி உண்பதனால் உண்டாகும் தீமைகள் ஒரு பொழுதும் தோன்றுவதில்லை. 3

முன் அத்தியாயத்தில் உள்ள எண்விதமான ப்ரகிருதி முதலான உணவுமுறைக்குத் தனித்தனி பயன் கூறப்பட்டிருப்பதனால் அளவுடன் உணவு உண்பதனால் மாத்திரம் முழுப்பயனும் கிட்டாது. 4

முன்கூறிய எண்வகை உணவு முறைகளைப் பின்பற்றி உண்பது அளவுடன் உண்பதாகும். அம்முறைகளைப் பின்பற்றாமல் உண்பது அளவில்லாமல் உண்பதாகும். அளவுடன் உண்பது தான் முறை. அளவில்லாமல் உண்பது முறையற்றதாகும். ஆகையால் இதைக் கவனித்து உண்ணவேண்டும். இதுதான் உண்ணும் முறையாகும். 5

### 2. அளவுடன் உண்பதின் இலக்கணம்

வயிற்றில் மூன்று இட ஒதுக்கீட்டை ஒட்டி அளவுடன் உண்ண வேண்டிய முறை மேலே கூறப்பட்டுள்ளது. அதைப் பற்றிமறுபடியும் விரிவாக விளக்குவோம். உணவினால் வயிற்றில் துன்பம் ஏற்படாதிருத்தல், இதயத் துடிப்பு தடைபடாதிருத்தல், விலாப்

---

*த்ரிவித குக்ஷீயவிமானம்—வயிற்றில் உணவு வகைகளுக்கு மூவித இடஒதுக்கீடு செய்வதைப் பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப் பெயர் பெறுகிறது.

பக்கங்களில் வெடிப்பது போன்ற வலிதோன்றாமை, வயிற்றில் பளுவின்மை, புலன்களுக்கு மகிழ்ச்சியூட்டுதல், பசிதாகம் அடங்குதல், நிற்றல், அமருதல், படுத்தல், செல்லுதல், மூச்சை உள்ளும் புறமும் இழுத்து வெளிவிடுதல், சிரித்தல், நற்கதைகளைக் கேட்டல் ஆகியவை இனிது நடைபெறுவது காலை மாலை உண்ட உணவு எளிதில் சீரணமாதல், வலிவு நிறம் வளர்ச்சி என்பன, அளவுடன் உணவு உண்பதின் இலக்கணமாகும். 6

## 3. குறைந்த அளவில் உண்பதினால் ஏற்படும் தீமைகள்

அளவின்மை என்பது குறைவு மிகுதி என இருவகைப்படும். குறைந்த அளவு உண்ணும் உணவு வகை வலிவு நிறம் வளர்ச்சி இவற்றைக் குறைக்கும். போதுமென்ற எண்ணம் உண்டாகாது. வயிற்றில் உப்புசத்தைத் தோற்றுவிக்கும். ஆயுளைக் குறைக்கும். ஆண்மையைக் குறைக்கும். ஓஜஸ் எனும் தாதுவைத் தோற்றுவிக்காது. உடல் மனம் அறிவு புலன்கள் இவற்றை அழிக்கும். தோல் முதலிய எண்வகை தாதுக்களின் ஸாரத்தைப் போக்கும். உற்சாகமின்மை தரித்திரத்தன்மை இவற்றை ஏற்படுத்தும். எண்பது வகையான வாதநோய்களுக்கும் காரணமாகும் எனக் கருதுகின்றனர். அதிக அளவில் உண்பதால் எல்லா தோஷங்களும் சீற்றமடைகின்றன எனத் திறமையுள்ள மருத்துவர்கள் கூறுகின்றனர்.

கெட்டியான உணவு வகைகளை வயிறு நிறைய உண்டபின் மறுபடியும் திரவப் பொருட்களைக் கொண்டு வயிற்றை நிரப்புகிறவனுக்கு இரைப்பையில் உள்ள வாத—பித்த தோஷங்கள் ஒரே சமயத்தில் சீற்றமடைகின்றன. சீற்றமடைந்த தோஷங்கள் சீரணமாகாத உணவை இரைப்பையின் ஒரு பகுதியில் குவித்துவிடுகின்றன. அப்பொழுது அவை தடைபட்டு உடனே வாய் வழியாகவும் மலம் கழிக்கும் துவாரத்தின் மூலமாகவும் வெளிப்படுத்தப்படுகின்றன.

அப்பொழுது அந்த தோஷங்கள் அதிக உணவு உட்கொண்டவனுடைய உடலில் தனித்தனியாக நோய்களைத் தோற்றுவிக்கின்றன.

**வாதம்,** வயிற்று வலி உப்புசம் உடல் வலி வாய் உலர்தல் மூர்ச்சை மயக்கம் சடராக்னிமாறுபாடு விலாப்பக்கம் பின்பக்கம் இடுப்பு இவற்றில் பிடிப்பு நரம்பு சுருங்குதல் அசைவற்றுப்போதல் இவற்றை தோற்றுவிக்கிறது.

**பித்தம்,** காய்ச்சல் கழிச்சல் உடலுக்குள் எரிச்சல் நாவறட்சி மதம் தலைச்சுற்றல் பிதற்றல் இவற்றை உண்டாக்கு கின்றது.

**கபம்,** வாந்தி சுவையின்மை சீரணமின்மை குளிர் காய்ச்சல் சோம்பல் உடல்பளு இவற்றைத் தோற்றுவிக் கின்ற.து. 7

## 4. ஆமம் ஏற்பட மற்ற காரணங்கள்

உணவு வகைகளை மிகுதியாக உண்பதால் தோஷங்கள் சீற்றமடைகின்றன என்பது மட்டுமல்ல. குருகுணம் வறட்சி உலர்ந்தவை, மனதிற்குப் பிடித்தமில்லாதவை தோஷங்களைக் கூட்டக்கூடியவை, எரிச்சலுடன் கூடிய அசீரணத்தைத் தோற்று விப்பவை, எதிரிடையான உணவு தகாத நேரத்தில் உண்பது, நீர் போன்றவற்றைப் பருகுதல் காமம் சினம் பேராசை மோகம் பொறாமை வெட்கம் வருத்தம் அகங்காரம் மன யெழுச்சி பயம் துன்பத்தினால் ஏற்படும் மனக்கொதிப்பு என் பன கொண்டிருத்தல் எனும் இந்நிலையில் உண்ட உணவு வகை களும் தோஷங்களைச் சீற்றமடையச் செய்கின்றன. 8

### இதைப் பற்றிய செய்யுளின் கருத்து

கவலை வருத்தம் பயம் சினம் உறங்குதல் கண் விழித்தல், என்ற இந்நிலையில் பத்தியத்துடனும், அளவுடனும் உண்ட உணவும் சீரணமடைகிறதில்லை. 9

சீற்றலை அடைந்த ஆமதோஷத்தை விஷூசிகா, (காலரா) அலஸகம் என இருவகையாக மருத்துவர்கள் பிரித்துக் கூறுகின்ற னர். 10

## 5. விஷூசிகையின் இலக்கணம்

மேல்நோக்கி வாய் வழியாகவும் கீழ்நோக்கி மலத்துவாரத் தின் வழியாகவும் சீரணமாகாத உணவை வெளியில் செலுத்து கிற காலராவின் குறிகள் முன்பு கூறப்பட்டுள்ளன. அவற்றால் அதை அறிந்து கொள்ளலாம். 11

## 6. [1]அலஸகத்தின் இலக்கணம்

வலிவு குறைந்தவன், குறைந்த சடராக்னியுள்ளவன், அதிக அளவில் கபம் உள்ளவன், வாதம் மலம் சிறுநீர் இவற்றை அடக்கு

1. அலஸகம் — தோஷம் ஓரிடத்தில் தங்கிவிடுவது. உணவு மேல் நோக்கியும் செல்லாமல் கீழ்நோக்கியும் செல் லாமல் இரைப்பையில் தங்கிவிடுவது.

பவன், கெட்டியான குரு குணமுள்ள அளவில் அதிகமான வறண்ட குளிர்ந்த உலர்ந்த உணவை உண்பவன் என இவர்களுக்கு உணவும் திரவமும் வாதத்தினால் துன்புறுத்தப்பட்டு கபத்துடன் சேர்ந்து துவாரங்களை அடைத்துவிடுகின்றன; இவ்வாறு கேடடைந்த உணவு, துவாரங்களில் ஒட்டிக்கொண்டு விடுவதால் வெளியில் வருவதில்லை. பிறகு வாந்தி கழிச்சல் இவற்றை தோற்றுவிக்காமல் சீரணமாகாத நிலையில் ஏற்படும் குறிகளை பெருமளவில் காண்பிக்கும். இதை அலஸகம் என்பர்.

## 7. தண்டாலஸகம் (தடி போன்று அசையாமலிருக்கும் நிலை)

அதிக அளவில் கேடடைந்த தோஷங்கள் சீரணமாகாத தோஷங்கள் இவை துவாரங்களை அடைத்துக்கொண்டு உடலுக்குள் குறுக்காகச் சென்று சில சமயங்களில் உடலைக் கட்டையைப் போல் அசையாமல் நிற்கச் செய்கின்றன. அந்த நோயை தண்டாலஸகம் எனக் கூறுகின்றனர். இது மருத்துவத்திற்குக் கட்டுப்படாதது.

## 8. ஆம விஷத்தின் இலக்கணம்

உடலுக்கு ஒத்துக்கொள்ளாத உணவு உண்டவுடனே மறுபடியும் உண்ணும் உணவு அசீரண நிலையில் உண்ணும் உணவு ஆகிய இவை கேடடையும் நிலையை ஆமதோஷம் என்கிறோம். அந்த தோஷம் நஞ்சுக்கு ஒப்பான குறிகளைத் தோற்றுவிப்பதனால் அதை ஆம விஷம் என்றும் கூறுகின்றனர். அது விரைவில் மரணத்தைத் தோற்றுவிப்பதாலும் எதிரிடையான சிகிச்சை செய்ய வேண்டியிருப்பதாலும் சிகிச்சைக்கு மிகவும் கட்டுப்படாதது. 12

## 9. அலஸகம், [1]விஷூசிகை, ஆம தோஷம் இவற்றின் சிகிச்சை

கேடடைந்ததும் துவாரங்களில் பூசிக் கொண்டிருப்பதும், சிகிச்சைக்குக் கட்டுப்படாததுமான ஆமதோஷத்தைப் போக்க முதலில் இந்துப்பு கலந்த சுடுநீரைப் பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும்.

பிறகு வியர்வையை உண்டாக்கி மலத்துவாரத்தில் வர்த்தியைச் செலுத்த வேண்டும். இந்நோயாளியைப் பட்டினி இருக்கச் செய்ய வேண்டும்.

---

1. விஷூசிகா– வாந்தியும், பேதியும் ஒரே சமயத்தில் தோன்றும் நோய்.

காலராவில் முதலில் பட்டினி கிடக்கச் செய்ய வேண்டும். பிறகு மலங்கழிக்கக் கொடுக்கும் சிகிச்சையில் கூறப்பட்ட கட்டுப் பாடு முறைகளைப் பின்பற்றச் செய்ய வேண்டும்.

**ஆம தோஷங்களில்** முதலில் பட்டினி இருக்கச் செய்து உணவு சீரணமானபின் மேலும் செயலாற்றாத குடல் உணவில் அவா வின்மை இவற்றால் தோஷம் இரைப்பையில் பூசிக் கொண்டிருப் பதை அறிந்துகொண்டு அவனுக்கு மீதியுள்ள தோஷங்கள் சீரண மடைவதற்காகவும் சடராக்னியைத் தூண்டிவிடுவதற்காகவும் மருந்து கொடுக்க வேண்டும். ஆனால் ஆமமான அசீரணத்தில் சீரணமளிக்கக்கூடிய மருந்தைக் கொடுக்கக்கூடாது. சீரண சக்தி யற்ற சடராக்னிக்கு ஒரே சமயத்தில் ஆமமான அசீரணத்தையும், சீரணத்திற்காகக் கொடுக்கப்பட்ட மருந்தையும் சீரணம் செய்ய சக்தி கிடையாது.

மேலும் ஆமமான அசீரணம் தோஷம் உணவு மருந்து இவை மிக்க வலிவுள்ளவையாக இருப்பதால் சடராக்னி குறைந்து, பலம் குன்றியுள்ள பிணியாளியை மாய்த்துவிடும்.

ஆமமான அசீரண தோஷத்தினால் தோன்றுகிற பிணிகளுக்குப் பட்டினி கிடத்தல் என்ற சிகிச்சையினால்தான் தணிவு ஏற்படு கிறது.

அப்படிச் செய்தும் நோய் பின்தொடருமாகில் அதற்கு எதிரிடையான சிகிச்சையை விட்டுவிட்டு, நோய்க்கு எதிரிடை யான சிகிச்சையைத் தக்க முறையில் செய்ய வேண்டும்.

பொதுவாக எல்லா நோய்களைத் தீர்ப்பதற்கும் காரணத் திற்கு எதிரிடையான சிகிச்சை, நோய்க்கு எதிரிடையான சிகிச்சை, காரணம் நோய் இவை இரண்டிற்கும் எதிரிடையான சிகிச்சை, அல்லது அந்நோய்களையே தோற்றுவிக்கக்கூடிய சிகிச்சை ஆகிய முறைகளைப் பயன்படுத்த வேண்டும்.

ஆமதோஷத்திலிருந்து விடுபட்டபின் தோஷங்கள் பக்குவ மடைந்தபின் சடராக்னி வளர்ச்சி பெற்றபின் தோஷம் மருந்து இடம் காலம் வலிவு உடல் நிலை உணவு ஒப்புதல் பலம் உடலில் இயற்கை நிலை வயது நோயின் நிலை இவற்றை நன்கு கவனித்து எண்ணெய்க் குளியல் கஷாய வஸ்தி எண்ணெய் வஸ்தி எண்ணெய் குடித்தல் இவற்றைத் தகுந்தவாறு பயன் படுத்த வேண்டும்.

13

எண்வகை உணவு முறைகளைத் தகுந்தபடி சோதனை செய்து தனக்கு நன்மை பயக்கக்கூடியவற்றைப்

பயன்படுத்த வேண்டும். மேலும் இந்நூலில் கூறப்பட்ட நன்மை யளிக்கும் வழிமுறைகளைக் கடைபிடிக்க வேண்டும். 14

''விழுங்குவது, பற்களால் கடித்து உண்பது, குடிப்பது, நக்கித் தின்பது இவை எந்த இடத்தில் சீரணமடைகின்றன ? அதை நாங்கள் அறிய விரும்புகிறோம்'' என அக்னிவேசர் போன்ற சீடர்கள் அறிஞரான ஆத்ரேய முனிவரை வினவினர். 15

இவ்வாறு அக்னிவேசர் போன்ற சீடர்கள் கேட்க, ஆத்ரேய முனிவர் உணவு சீரணமாகும் இடத்தைப் பற்றி விளக்கினார். 16

மனிதர்களின் உடலில் தொப்புளுக்கும் இரு மார்பகங்களுக்கும் இடையே இரைப்பை உள்ளது. விழுங்குவது, பற்களால் கடித்து உண்பது, குடிப்பது, நக்கித் தின்பது போன்றவை அங்கு சீரணமடைகின்றன. 17

இரைப்பையை அடைந்த உணவு, முழுவதும் சீரணமடைந்து அந்த உணவின் ரசம் நாடிகள் வழியாக உடல் முழுவதும் பரவுகிறது. 18

**முடிவுரை**

இவ்வத்தியாயத்தில் அளவுடன்கூடிய உணவின் இலக்கணம், அதன் பயன் இவ்விரண்டும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. அதேபோல் அளவில்லாத உணவின் இலக்கணம், அதனால் ஏற்படும் விளைவுகள் இவையும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. 19

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் விமான
ஸ்தானத்தில் த்ரிவித குக்ஷீய விமானம் எனும்
இரண்டாவது அத்தியாயம் முற்றும்

## மூன்றாவது அத்தியாயம்

# *ஜனபதோத்வம்ஸனீய விமானம்

''ஜனபதோத்வம்ஸனீயம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

மக்கள் அதிகம் சூழ்ந்திருக்கும் அந்தண சமூகத்தால் விளங்கும் பஞ்சாப் மாகாணத்தைச் சேர்ந்த காம்பில்யம் என்ற தலை நகரில் ஆடி மாதத்தில் கங்கையாற்றின் கரையில் காடுகளில் திரிந்துகொண்டிருக்கும் சீடர்களின் கூட்டத்தால் சூழப்பட்டிருக்கும் பகவான் புனர்வசு, தன் சிஷ்யனான அக்னிவேசரிடம் கீழ்க் கண்டவாறு கூறினார். 3

நல்லவனே ! விண்மீன்கள் கிரகங்கள் சந்திரன் சூரியன் காற்று நெருப்பு திசைகள் இவை இயற்கைக்கு மாறுதலாகக் காண்கின்றன. பருவங்களும் இயற்கைக்கு மாறாகத் தென்படுகின்றன. ஆகையினால் மிக விரைவில் பூமியும் மூலிகைகளில் சுவை வீர்யம் விபாகம் சிறப்புத்தன்மை இவற்றைத் தோற்றுவிக்காது. அதனால் நோய்கள் தோன்றுவது திண்ணம். எனவே, இந்த அழிவு ஏற்படுவதற்கும் பூமி சாரமற்றதாவதற்கும் மூலிகைகளில் சுவை வீர்யம் போன்றவை அற்றுப் போவதற்கும் முன்பே மூலிகைகளைச் சேகரித்து வைத்துக் கொள்.

நம்மை நாடிவரும் மக்களுக்கும் நாம் விரும்பும் மக்களுக்கும் இந்த மூலிகைகளின் சுவை வீர்யம் விபாகம் சிறப்புத் தன்மை இவற்றை நாம் பயன்படுத்துவோம்.

மூலிகைகளை முறைப்படி தோண்டி எடுத்தபின் அவற்றைக் கொண்டு மருந்தை நன்கு தயாரித்து, மூலிகைகளின் சுவை வீர்யம் விபாகம் சிறப்புத்தன்மை இவற்றை நன்கு யோசித்துப் பயன்படுத்தினால் மக்கள் தொகையைப் பூண்டோடு அழிக்கும் நோய்களுக்குச் சிகிச்சை செய்வதில் வருத்தம் ஏற்படாது. 4

இவ்வாறு கூறிய மதிப்பிற்குரிய ஆத்ரேய முனிவரைக் குறித்து அக்னிவேசர் வினவினார்.

ஸ்வாமி ! மூலிகைகள் தோண்டி எடுக்கப்பட்டன. மருந்துகள் நன்கு தயாரிக்கப்பட்டு தங்கள் கருத்துப்படி பயன்படுத்தவும் பட்டன.

---

*ஜனபத உத்வம்ஸனம் – ஒரு நாட்டை அடியோடு அழித்தல். இதை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

ஆனால் வெவ்வேறான இயற்கையியல்பு உணவு உடல் வலிவு ஒப்புதல் மனம் வயது இவற்றையுடைய மக்களுக்கு ஒரே வியாதியினால் ஒரே சமயத்தில் பூண்டோடு அழிவு உண்டாவது எவ்விதம் பொருந்தும்? 5

அக்னிவேசரைப் பார்த்து ஆத்ரேயர் கூறுவதாவது :- அக்னிவேசரே! இயற்கை உணவு போன்றவை மனிதர்களிடையே வேறுபட்டு இருந்தபோதிலும் நாடுகளில் மற்ற பொதுவான குணங்கள் காற்று நீர் தேசம் காலம் இவை கெடுவதனால், ஒரே சமயத்தில் ஒரே இலக்கணமுள்ள நோய்கள் தோன்றி நாட்டில் அனைவரையும் அழிக்கின்றன. 6

## 1. கேடடைந்த காற்றின் இலக்கணம்

பருவங்களுக்கு மாறுபட்டு வீசுவதாகவும், அசைவற்றதாகவும், மிகவும் வேகமாக வீசுவதாகவும், மிகக் கடினமானதாகவும், மிகக்குளிர்ச்சியானதாகவும், மிகுந்த உஷ்ணமுள்ளதாகவும், மிக்க வறட்சித்தன்மை பொருந்தியதாகவும், ஈரப்பசையுள்ளதாகவும், பயங்கரமான ஓசையுடையதாகவும், ஒன்றுக்கொன்று மோதிக் கொள்வதாகவும், சுழல்களுடன் கூடியதாகவும், மனதிற்கு ஒவ்வாத மணம் நீர்த்திவிலைகள் மணல் தூசி புகை இவற்றால் கேடடைந்ததாகவும் இருக்கும் காற்று உடலுக்குத் தீமையை விளைவிக்கிறது. அந்தக் காற்று உடல் ஆரோக்கியத்திற்கு ஏற்றதல்ல.

## 2. கேடடைந்த நீரின் இலக்கணம்

மிக்கக் கேடடைந்த மணம் நிறம் சுவை தொடு உணர்ச்சியும் அதிகச் சேறு உள்ளதுமான நீர், கெட்ட நீர் என அறிந்து கொள்ள வேண்டும். எந்த நீர் நிலையிலிருந்து நீர் வாழும் முதலை மீன் பறவைகள் போன்றவை வெளிக்கிளம்பிச் செல்கின்றனவோ, எந்த நீர் நிலையில் வறண்டு சிறிதளவே நீர் தங்கியுள்ளதோ, எந்த நீர் நிலையின் நீர் பருகும்சுவையற்றதோ, அருந்துவதற்கும் தகாததோ அந்த நீர்நிலையின் நீர் கெட்ட நீர் என அறிய வேண்டும்.

## 3. கேடடைந்த நாட்டின் இலக்கணம்

ஒரு நாட்டில் இயற்கை நிறம் ரசம் மணம் தொடுஉணர்ச்சி இவை மாறுபட்டிருந்தாலும் நிலம் எங்கும் சேராகக் காணப்பட்டாலும் பாம்புகள், கொடிய பிராணிகள் ஈக்கள் வெட்டுப் பூச்சிகள் கொசுக்கள் எலிகள் கோட்டான்கள் கழுகு

கள் நரிகள் முதலியவற்றால் சூழ்ந்திருந்தாலும், சிறு சிறு தோட்டங்களில் புற்பூண்டுகள் மண்டிக்கிடந்தாலும், கொடிகள் பரவிக் கிடக்கும் புதர்கள் நிறைந்திருந்தாலும், இதற்கு முன்னால் ஏற்படாதபடி பயிர்கள் சாய்ந்தும் உலர்ந்தும் அழிந்தும் காணப் பட்டாலும், புகை கலந்த காற்று வீசினாலும், இடைவிடாமல் சத்தமிடும் புள்ளினங்கள் இங்குமங்கும் வட்டமிட்டாலும், நாய்கள் ஊளையிட்டாலும், பலவிதப் பிராணிகள் பறவைகள் நடுங்கி துன்பப்பட்டு இங்குமங்கும் திரிந்தாலும், அறம் உண்மை வெட்கம் பழக்கவழக்கங்கள் நடத்தை குணம் இவை அழி வடைந்திருந்தாலும், நீர் நிலைகள் கலங்கியும் கொந்தளிப்புட னும் காணப்பட்டாலும், வால்நக்ஷத்திரம் அடிக்கடி தோன்றினா லும், இடி விழுந்தாலும், நில நடுக்கம் ஏற்பட்டாலும் பயங் கரமான ஒலியுடன் புயற்காற்று வீசினாலும், கதிரவன் சந்திரன் நக்ஷத்திரங்கள் இவை வறட்சி தாமிரத்தைப் போன்ற செந்நிறம் வெண்மை கொண்ட மேகங்களினால் சூழப்பட் டிருந்தாலும், மக்களிடையே பரபரப்பு துன்பம் நடுக்கம் அழுகை இவை காணப்பட்டாலும், எப்பொழுதும் இருள் சூழ்ந் திருப்பதுபோல் தோற்றமளித்தாலும், பூத பிரேதங்கள் சுற்று வது கூக்குரலிடுவது போல் காணப்பட்டாலும், அந்த நாடு கேடடைந்த நாடு என அறிந்துகொள்ள வேண்டும்.

## 4. கேடடைந்த காலத்தின் இலக்கணம்

பருவ காலங்களில் இயற்கைக்கு எதிரிடையான அதிகமான குறைந்த குறிகள் தோன்றினால் அது கேடடைந்த காலம் என அறிய வேண்டும்.

கேடடைந்த காற்று நீர் நிலம் காலம் இந்நான்கின் மாறு பாடுதான் ஒரு நாடு அழிவடைவதற்குக் காரணம் எனச் சிறந்த மருத்துவர்கள் கருதுகின்றனர். இயற்கையான நிலைமையிலுள்ள காற்று நீர் நிலம் காலம் இவை நாட்டிற்கு நன்மை பயப் பவை என அறிஞர்கள் கருதுகின்றனர். 7

கேடடைந்த காற்று நீர் நிலம் காலம் இவற்றால் நாட்டை அழிக்கக்கூடிய நோய்கள் தோன்றிடின், முறைப்படி சேகரித்து வைத்திருக்கும் மூலிகைகளைப் பயன்படுத்தினால் நோய்களின் பயம் ஏற்படாது. 8

நாடு காலம் காற்று நீர் இவை கேடடைவது நோய்கள் தோன்றுவதற்கு முக்கிய காரணமாகக் கருதப்படுகின்றது. 9

இயற்கையைத் தடுக்க முடியாதபொழுது காற்றிலும் நீர், நீரினும் நாடு, நாட்டிலும் காலம் முக்கியமானது என உண்மை யறிந்த சிறந்த மருத்துவர் கருதுகின்றனர். 10

காற்று நீர் நிலம் காலம் இந்நான்கின் தொடர்பான தோஷங்களினால் தோன்றும் நோய்களை எளிதில் நீக்கும் முறைகளைச் சிறந்த மருத்துவர் நன்கு அறிந்துகொள்ள வேண்டும். 11

## 5. பொதுவான சிகிச்சை

காற்று நீர் நிலம் காலம் இந்நான்கும் கேடடைந்திருந்த நிலையிலும் தகுந்த மருந்துகளை அளித்துச் சிகிச்சை செய்தால் மக்கள் நோயால் துன்புறமாட்டார்கள். 12

முழுமையான ஆயுள் உடையவர்களுக்கும், நஞ்சு இடுதல் போன்ற சொல்லக்கூடிய செயல்களின் தொடர்பில்லாதவர்களுக்கும், பிணிகளைத் தீர்க்க வாந்தி, பேதி, கஷாய வஸ்தி, எண்ணெய் வஸ்தி, சிரோவிரேசனம் என்ற ஐந்துவகை செயல்கள் சிறந்த சிகிச்சை முறைகளாகக் கருதப்படுகின்றன. 13

நாட்டை அழிக்கக்கூடிய குறிகள் காணும்போது சிறந்த [1]ரசாயன முறைகளைப் பயன்படுத்துவது சிறந்தது. அதே போல் முன்பு சேகரித்து வைக்கப்பட்டிருக்கும் மருந்துகளாலும் ஒத்துக்கொள்ளக்கூடிய உணவு போன்றவற்றினாலும் உடலைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

உண்மை பேசுதல், எல்லாப் பிராணிகளிடத்தும் அன்பு காட்டுதல், கொடை, பலியிடுதல், தேவதைகளைப் பூசித்தல், நல்வழி முறைகளைப் பின்பற்றுதல், அமைதியைப் பெற்றிருத்தல், தன்னைக் காத்துக் கொள்ளல், தனக்கு நலம் தரும் நாட்டில் வசித்தல், புலனடக்கத்துடனிருத்தல், புலனடக்கமுள்ளவர்களை வழிபடுதல், நீதி நூல்களில் கூறியவற்றைக் கேட்டல், புலனடக்கமுள்ள மாமுனிவர்களுக்குப் பணிவிடை செய்தல், ஸத்துவ குணமுள்ளவர்கள் தர்ம சிந்தனையுள்ளவர்கள் முதியோர்கள் இவர்களால் புகழப்பட்ட மனிதர்களுடன் வசித்தல், போன்றவை நாட்டிற்கும் நாட்டு மக்களுக்கும் பயங்கரமான அழிவு ஏற்படும் சூழ்நிலையில், ஆயுளைக் காப்பாற்றும் சிறந்த மருந்துகளாகச் சொல்லப்பட்டுள்ளன. அகால மரணம் ஏற்படுகிறவர்களுக்கும் மேற்கண்டவை சிறந்த மருந்துகளாகக் கருதப்படுகின்றன. 14–18

நாட்டிற்கு அழிவு ஏற்படுத்தும் காரணங்களைக் கேட்டறிந்த அக்னிவேசர் மதிப்பிற்குரிய ஆத்ரேயரிடம் மறுபடியும் கேட்டார்.

---

1. ரசாயனம் – முதுமையையும், நோய்களையும் நீக்கி உடலுக்கு வலிவை அளிக்கக்கூடிய மருந்து.

ஐயன்மீர் ! நாட்டை அழிக்கக்கூடிய காற்று முதலியவை கேடு அடையக் காரணம் என்ன ? எதனால் மாறுபாடடைந்து அவை நாட்டை அழிக்கின்றன? 19

அவரைப் பார்த்து மதிப்பிற்குரிய ஆத்ரேயர் கூறியதாவது :- அக்னிவேசா ! காற்று முதலியவை கேடு அடைவதற்கு அடிப் படைக்காரணம் அதர்மச் செயல்கள். அதற்குக் காரணம் முன் பிறவியில் செய்த தகாத செயல்கள். இவ்விரண்டிற்கும் மதி யிழப்புதான் காரணமாகும்.

நாடு நகரம் வியாபாரகேந்திரம் பெருநகரம் இவற்றின் தலைவர்களான அரசர்கள், அறத்தைக் கடந்து மறச் செயல்களில் தாங்கள் ஈடுபடுவதுடன் தன்னைச் சார்ந்த மக்களை யும் ஈடுபடுத்துகிறார்கள்.

அரசர்களை அண்டிப் பிழைப்பவர்களும், இவர்களை அண்டிப் பிழைப்பவர்களும், நகரங்கள் பெரு நகரங்கள் இவற்றில் வசிப்பவ களும், தொழில் செய்து பிழைப்பவர்களும், அந்த அறமில்லாச் செயல்களை நாடெங்கும் பரப்புகின்றனர்.

அறமில்லாச் செயல்கள் அறத்தை ஆறவே அழித்து விடுகின் றன. நாட்டு மக்கள் அறத்தை விட்டு அதர்மச் செயல்களில் ஈடுபட்டிருப்பதை அறிந்த தேவதைகள் அந்த நாட்டைக்கைவிட்டு விடுகின்றனர். அறம் ஒழிந்து மறம் ஓங்கி தேவதைகளால் கைவிடப்பட்ட நாடுகளில் பருவங்கள் மாறுபாடு அடைகின்றன. அதனால் மழைக்கரசனான இந்திரன் மழையைக் குறித்த காலத் தில் பொழியவிப்பதில்லை. அல்லது முற்றிலும் மழையைப் பொழி விப்பதேயில்லை. அல்லது காலம் தவறி முன்போ பின்போ மழையைப் பொழியச் செய்கிறான். காற்றும் சுகமாக நன்கு வீசுவ தில்லை. நிலம் கேடடைகிறது. நீர்நிலைகள் வற்றிப் போகின்றன. மூலிகைகள் தம் இயற்கை நிலையை இழந்து மாறுபாடு அடை கின்றன.

இவ்வாறு எல்லாம் மாறுபாடு அடைவதினால் மனிதர்களிடத் தில் பிணிகள் தோன்றுகின்றன. பிணியாளிகள் மற்றவர்களைத் தொடுவதினாலும் கேடடைந்த உணவு நீர் இவற்றைக் கொள் வதாலும் பிணிகள் தோன்றி நாடு முழுவதும் பரவி மக்கள் எல்லோரையும் அழித்துவிடுகின்றன. 20

ஆயுதங்களினால் ஏற்படும் நாடின் அழிவிற்கும் அறமின்மை தான் காரணமாகும்.

மக்களிடையே பேராசை, சினம், மோகம், அகங்காரம் இவை அதிகம் தோன்றும்போது வலிவுள்ளவர்கள், வலிவற்றவர்களை அவமதிக்கின்றனர். மேலும் அவர்கள் தம்மைச் சேர்ந்தவர்கள், பிறர் என்று பாராமல் ஒருவருக்கு ஒருவர் ஆயுதங்களினால் அடித்துக்கொண்டு கொல்ல முற்படுகின்றனர். மற்றவர்களையும் தாக்குகின்றனர். மற்றவர்களாலும் தாக்கப்படுகின்றனர். 21

இந்நிலையில் பலவகை ராக்ஷசர்கள், பூதபிரேத, பிசாசுகள் ஆகிய இவர்களால் அதர்மத்தைப் பின்பற்றுகிறவர்கள் அழிக்கப் படுகின்றனர். 22

அவ்வாறே சாபத்தினால் உண்டாகும் அழிவிற்கும் அறமற்ற செயல்களே காரணமாகின்றன.

அறத்தைக் கைவிட்டவர்களும், அறம் செய்வதிலிருந்து நழுவியவர்களும், ஆசான் முதியோர்கள் சித்தர்கள், முனிவர் பூசனைக்குரியவர்கள் இவர்களை அவமதித்துக் கெடுதல்களைச் செய்கின்றனர். அப்பொழுது ஆசான் போன்றவர்களின் சாபத்தால் மக்கள் சாம்பலாகி விடுகின்றனர்.

இப்படி ஆசான் முதலியவர்களின் சாபத்தால் முன் யுகங்களில் பல வமிசங்கள் அழிந்துள்ளன. பூரண ஆயுள் உள்ளவர்கள் பலர் முழு ஆயுளையும் இன்பத்துடன் கழிக்கின்றனர். மற்றும் பூர்ண ஆயுளற்ற பலர் முன்பே இறக்கின்றனர். 23

## 6. நோய்கள் முதன்முதலில் தோன்றிய விதம்

முற்காலத்தில் அதர்மத்தைத் தவிர வேறு காரணங்களால் துன்பங்களோ, நோய்களோ ஏற்படவில்லை. கிருதயுகத்தில் வாழ்ந்த மனிதர்கள், தேவதைகள் போன்ற வலிவுள்ளவர்கள், தூய்மையுள்ளவர்கள், சிறந்த சக்தி பெற்றவர்கள், தேவர்கள், தேவரிஷிகள், இவர்களை நேரில் கண்டவர்கள், தர்மம் வேள்வி இவற்றை முறைப்படி கடைபிடிப்பவர்கள், மலை போன்றதிரண்ட உறுதியான உடல் அமைப்புடையவர்கள், தெளிவான நிறமும் புலன்களையும் உடையவர்கள், காற்றைப் போன்ற வலிவு வேகம் பராக்ரமம் படைத்தவர்கள், அழகான பின்பாகமுள்ளவர்கள், கவர்ச்சிகரமான உருவம் உடல் அமைப்பு உடையவர்கள், தெளிவும் வளர்ச்சியும் பெற்றவர்கள் உண்மை நன்னடத்தை இரக்கம் கொடை அடக்கம் முறைதவறாதிருத்தல் தவம் உபவாசம் புலனடக்கம் கடவுள் வழிபாடு இவற்றை நன்கு கடைபிடிப்பவர்கள்.

அச்சம் ஆசை விரோதம் மோகம் பேராசை சினம் வருத்தம் அகங்காரம் நோய் தூக்கம் சோம்பேறித்தனம் களைப்பு ஓய்ச்சல் சோர்வு பிறர் பொருளை விரும்புதல் இவை அற்றவர்கள். என இவர்கள் நீண்ட ஆயுள் உடையவர்களாகத் திகழ்ந்தனர்.

இவர்களுடைய தாராள மனப்பான்மை ஸத்வகுணம் போன்றவற்றால் சுவை வீர்யம் விபாகம் சிறப்புத்தன்மை இவற்றுடன் கூடியதாக நிலம் திகழ்ந்தது. அதன் காரணமாகப் பயிர்கள் செழித்தோங்கின. இவ்வாறு கிருதயுகத் தொடக்கமிருந்தது.

கிருத யுகத்தில் சில காலம் சென்றபின் சில செல்வந்தர்கள் மிகவும் அதிகமாக உண்ணத் தொடங்கினர். அதனால் அவர்களின் உடலில் பளு ஏற்பட்டது. அதனால் களைப்பு தோன்றியது. களைப்பினால் சோம்பல் உண்டாயிற்று. சோம்பலினால் செல்வம் சேமிக்கும் ஆசை ஏற்பட்டது. அதனால் பேராசை வளர்ந்தது.

பிறகு திரேதா யுகத்தில் பேராசையினால் பிறரை வஞ்சிக்கும் எண்ணம் ஏற்பட்டது. பொய் பேசுதல் தேவைப்பட்டது. காமம் சினம் அகங்காரம் விரோதம் கடுஞ்சொல் பிறரைத் துன்புறுத்தல் அச்சம் மனத்தாங்கல் வருத்தம் கவலை எழுச்சி இவை தோன்றின. அவற்றால் திரேதாயுகத்தில் தர்மத்தின் நான்கு கால்களில் ஒருகால் முடமாயிற்று. ஆகையால் கிருதயுகத்தில் உள்ளவர்களின் ஆயுளில் நான்கில் ஒரு பங்கு குறைந்தது.

அதேபோல் நிலம் போன்ற ஐம்பெரும் பூதங்களிலும் குணங்களில் நான்கில் ஒரு பகுதி அழிந்தது. அதனால் பயிர்களில் நைப்புத்தன்மை தூய்மை சுவை வீர்யம் விபாகம் பிரபாவம் குணம் இவற்றின் நான்கில் ஒரு பங்கு குறைவுபட்டது. இவ்வித குறைபாடுகள் உள்ள உணவு வகைகளை உண்டதினால் முன் காலத்தைப் போலில்லாமல் மனிதர்களுடைய உடலில் வாதம் சடராக்னி இவற்றின் குறைவு ஏற்பட்டது. அதன் காரணமாகக் காய்ச்சல் போன்ற நோய்கள் தோன்றின. ஆகவே மக்களுடைய ஆயுளும் முறையாகக் குறைவுபடத் தொடங்கியது. 24

இவ்வாறு ஒவ்வொரு யுகத்திலும் அறத்தின் நான்கில் ஒரு பகுதி குறைவுபட்டு ஐம்பெரும் பூதங்களிலும் ஒவ்வொரு பகுதி குறையத் தொடங்கியது. இவ்விதம் ஒவ்வொன்றின் ஒவ்வொரு பகுதியும் குறைபாடு அடைந்து உலகம் அழிகிறது. 25

இவ்வாறு யுகத்திற்குள்ள கால அளவான ஆண்டுகளில் நூறில் ஒரு பகுதி சென்றதும் மனித ஆயுள் அளவில் ஓராண்டு வீதம் குறைந்துகொண்டே வரும்.

நோய்கள் முதன் முதலில் தோன்றுவதற்குக் காரணங்கள் கூறப்பட்டன. 26–28

இவ்விதம் கூறிய ஆத்ரேயரைக் குறித்து சீடரான அக்னி வேசர், பெரியீர் ! எல்லாப் பிராணிகளுடைய ஆயுள் குறிப்பிட்ட காலம்வரை உள்ளதா ? இல்லையா ? என்பதைத் தெரிவிக்கவேண்டும் என வினவினார்.

அதற்கு ஆத்ரேயர் பதில் கூறினார்: அக்னிவேசனே ! பிராணிகள் குறிப்பிட்ட ஆயுள்வரை இருப்பதும் இல்லாததும் தைவம் மனித முயற்சி இவ்விரண்டையும் சார்ந்திருக்கின்றது. பிராணிகளின் ஆயுள் அதிகமாவதோ குறைவதோ தைவம், மனித முயற்சி இவற்றின் வலிவையும், வலிவின்மையையும் பொறுத்திருக்கின்றது. 29

முன்பிறவியில் தன்னால் செய்யப்பட்ட வினைகளே தைவம் என அறிந்துகொள். இப்பிறவியில் செய்யும் வினைகள் புருஷகாரம் (மனிதமுயற்சி) எனப்படும். 30

தைவம் (முன்வினை), புருஷகாரம் (மனித முயற்சி) இவ்விரண்டிலும் சில சமயங்களில் முன்வினை வலிவுள்ளதாகவும், சில சமயங்களில் மனித முயற்சி வலிவுள்ளதாகவும், சில சமயங்களில் இவ்விரண்டும் வலிவுள்ளனவாகவும் காண்கின்றன. முன்வினை மனித முயற்சி இவ்விரண்டும் குறைவு, நடுத்தரம், உயர்ந்தது என மூவகைகளாகக் காணப்படுகின்றன. 31

## 7. செயலுக்கு ஏற்றவாறு ஆயுள்

முன்வினை மனிதமுயற்சி இவ்விரு செயல்களின் உயர் நிலை இன்பமாக வாழ்வதற்கும் பூரண ஆயுளுடன் வாழ்வதற்கும் காரணமாகின்றது. இரண்டு செயல்களின் குறைவு நிலை குறைந்த ஆயுளுக்கும், துன்பத்திற்கும் காரணமாகின்றது. தைவம் மனித முயற்சி நடுத்தரமுள்ளனவாயின் அவை ஓரளவு குறைந்துள்ள ஆயுளுக்கும் இன்பத்திற்கும் காரணங்களாகும். மேலும் குறிப்பிட்ட ஆயுள், குறைவான ஆயுள் இவ்விரண்டிற்கும் மற்றொரு காரணமும் உண்டு என அறிந்து கொள். வலிவற்ற வினைகளை வலிவுள்ள மனித முயற்சி அழித்துவிடுகிறது. அதேபோல் வலிவற்ற மனித முயற்சியை வலிவுள்ள முன்வினைகள் அழித்துவிடுகின்றன. இதைக் கொண்டே சிலர் ஆயுளின் குறிப்பிட்ட அளவைத் தீர்மானிக்கின்றனர். 32–34

மற்றும் சிலர் ஆயுளின் அளவு செயல்களைப் பொறுத்தது என்றும் உயர்ந்த செயல்களில் பயன்படும் நேரமே ஆயுளின் அளவாகும் என்றும் கூறுகின்றனர். ஆயுளுக்குக் குறிப்பிட்ட அளவு என்பது கிடையாது. ஒருவன் ஒரு நேரத்தில் இறக்கிறான். மற்றவன் மற்றொரு நேரத்தில் இறக்கிறான். ஆகையால் உயர்ந்த செயல்களின் பயன்படும்

நேரமே ஆயுளின் அளவு எனக் கூறமுடியாது என மற்றும் சிலர் கூறுகின்றனர். 35

## 8. மனிதனுடைய ஆயுளுக்கு குறிப்பிட்ட வரம்பு கிடையாது

வலிவற்ற முன் வினைகள் மனித முயற்சியினாலும் வலிவற்ற மனிதமுயற்சி முன்வினைகளாலும் அழிவதைக் காண்கிறோம். இவ்வாறு இரண்டு உதாரணங்கள் கிடைப்பதனால் குறிப்பிட்ட காலத்தில்தான் இறக்கிறான் என்று கூறுவது சரியன்று.

அதற்குக் கீழ்க்கண்ட உதாரணங்களைக் காணலாம். எல்லாப் பிராணிகளுக்கும் குறிப்பிட்ட காலம்வரை ஆயுள் உண்டு எனக் கூறினால் நீண்ட ஆயுளை விரும்பி மந்திரம் மருந்து மணி என்பனவற்றைப் பயன்படுத்தல், நற்சடங்குகள், பலியிடுதல், காணிக்கை கொடுத்தல், வேள்வி விரதம் போன்ற கட்டுப்பாடு, பாவத்தைக் கழிக்கும் செயல், பட்டினி கிடத்தல், மங்களச் சொற்கள், பெரியோர்களின் ஆசி பெறுதல், புனிதத் தலங்களுக்குச் செல்லுதல் போன்றவற்றை எவரும் செய்யமாட்டார்கள் அல்லவா! கடுஞ்சினமுற்ற எருது யானை ஒட்டகம் கழுதை குதிரை எருமை இவைகளிடமிருந்தும் புயல் நெருப்பு போன்றவைகளிடமிருந்தும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சி செய்ய வேண்டிய தேவை இல்லை. அதேபோல் மலை போன்றவற்றிலிருந்து கீழே விழுதல், தகாத இடங்களுக்குச் செல்லுதல், வேகமாகப் பெருகும் ஆற்றில் குதித்தல் இவற்றிலிருந்து அச்சம் தோன்றாதல்லவா?

குடிவெறி உள்ளவன், பைத்தியம் பிடித்தவன், வெறி பிடித்தவன், கடும் சினமுள்ளவன், சஞ்சல புத்தியுடையவன், மோகம் பேராசை இவற்றால் குழம்பிய அறிவுள்ளவன் ஆகிய இவர்களிடம் எதிரிகள் பயப்படத் தேவையில்லையல்லவா?

கொழுந்து விட்டெறியும் தீ, நஞ்சுள்ள பொருட்கள், நஞ்சுள்ள பாம்பு, தேள் போன்றவைகளிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய தேவையில்லையல்லவா?

தன் வலிமைக்கு மீறிய செயல்களைச் செய்தல், இடம் நேரம் இவற்றிற்கு எதிரிடையான செயல்களில் துணிச்சலாக ஈடுபடுதல் இவற்றிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள வேண்டாமல்லவா?

அதேபோல் அரசனுடைய சினத்திற்கு அஞ்சவேண்டாமல்லவா? பிராணிகளில் ஒவ்வொன்றிற்கும் குறித்த ஆயுள் உண்டு என்று கருதினால் மேற்கண்ட செயல்கள் எல்லாம் வீணே.

சாவிலிருந்து மீளுவதற்கான உபாயங்களைச் செய்து பழக்கமில்லாத பிராணிகளுள் ஒரு பிராணிக்கும் குறிப்பிட்ட கால

மில்லாக் காலத்தில் மரணம் ஏற்படாவிடில், அகால மரணத்தி லிருந்து பயப்படவேண்டியதில்லையல்லவா !

ரசாயன அதிகாரத்தில் முனிவர்களால் கூறப்பட்ட ஆயுள் வளர்ச்சிக்கான முறைகள் வீணாகவும், பொய்யாகவும் ஆகிவிடும்.

குறிப்பிட்ட ஆயுள் உடையவனை வஜ்ராயுதத்தினால் இந்திர னாலும் கொல்ல முடியாது. தேவர்களின் மருத்துவர்களான அச்வினி குமாரர்களும் பிணியாளர்களுக்கு மருந்துகளினால் சிகிச்சை செய்ய முற்படமாட்டார்கள். மாமுனிவர்கள் தவம் செய்து தங்கள் ஆயுளை விருப்பப்படி நீடித்துக்கொள்ள முடியாது.

முக்காலமுணர்ந்த மாமுனிவர்களும் இந்திரனும் ஆயுளை வளர்க்கக்கூடியதும் நன்மை பயக்கக் கூடியதுமான ஆயுர்வேத முறைகளைப் பிறருக்கு எடுத்துக்கூறமாட்டார்கள். தாங்களும் வேள்வி போன்றவற்றைச் செய்யமாட்டார்கள்.

முக்காலமுணர்ந்த மாமுனிவர்களையும், தீவிரஞானம் படைத்த இந்திரனைப் பற்றியும் கூறுவானேன் !

போரில் கலந்து கொள்கிறவன் போரில் கலந்து கொள்ளா தவன் இவர்களுடைய ஆயுளில் ஒற்றுமையில்லை. அதாவது போரில் ஈடுபடுபவன் விரைவில் இறக்கிறான். கலந்து கொள்ளா தவன் இறப்பதில்லை.

பிறவியிலிருந்தே மருந்து போன்றவற்றால் தன்னைக் காப் பாற்றிக்கொள்பவன் காப்பாற்றிக் கொள்ளாதவன் இவர்களு டைய ஆயுளிலும் ஒற்றுமை கிடையாது.

உயிரைக் குடிக்கும் நஞ்சை உண்டவன் அதை உண்ணாதவன் இவர்களுடைய ஆயுளிலும் ஒற்றுமை காணப்படவில்லை.

பழக்கத்திலுள்ள மண் குடத்திற்கும், சித்திரத்திலுள்ள மண் குடத்திற்கும் ஆயுளில் ஒற்றுமை இல்லை. அதாவது பழக்கத்தில் உள்ள மண் குடம் தேய்ந்து உடைந்துவிடுகிறது. சித்திரத்தில் தீட்டிய குடம் உடையாமல் அழியாமல் அப்படியே உள்ளது.

ஆகையினால் மனிதனுடைய வாழ்வு, சிறந்த உணவு வகை நற்பழக்கவழக்கங்கள் இவற்றைப் பொறுத்திருக்கிறது.

கெட்ட உணவு வகை கெட்ட நடைமுறைகள் இவற்றால் சாவு ஏற்படுகிறது.

இடம் காலம் ஒத்துக் கொள்ளுதல் இவற்றிற்கு எதிரிடை யான செயல்களையும், உணவு வகை நடை முறைகளையும் கொள்பவனின் ஆயுள், காலமில்லாத காலத்தில் முடிவடை

கிறது. முறைப்படிப் பயன்படுத்தியவன் நீண்ட காலம் வாழ்கிறான். 35

எல்லாவற்றிலும் எல்லா வகையிலும் அளவுக்குமீறிப் பயன்படுத்தல், பயன்படுத்தாமலே இருத்தல், முறை தவறி தாறுமாறாகப் பயன்படுத்தல் இவற்றை விட்டுவிட வேண்டும். சிறுநீர் மலம் கழிப்பது போன்ற இயற்கை வேகங்களை அதிகமாகக் கழிக்கச் செய்யக்கூடாது. தானாக வரும் இவற்றை அடக்கவும் கூடாது. துணிச்சலான செயல்களைச் செய்யக்கூடாது. ஆரோக்கிய வாழ்விற்கு மேற்கண்டவை காரணங்களாக அமைவதை நாம் அறிகிறோம் ; பிறருக்கு எடுத்தும் கூறுகிறோம் ; பார்க்கவும் செய்கிறோம். 36

## 9. முழு ஆயுள், அற்ப ஆயுள் இவற்றின் விளக்கம்

தீர்மானிக்கப்படாத ஆயுள் உள்ள மனிதனுக்கு காலத்தில் மரணமும் காலமில்லாக் காலத்தில் மரணமும் எப்படி ஏற்படுகிறது என அக்னிவேசர் ஆத்ரேயரிடம் வினவினார். 37

வண்டியில் பொருந்தியிருக்கும் அச்சு, இயற்கையாகவே முறைப்படி அமைந்து தன் குணங்களுடன் கூடியிருந்து அதிகம் சென்று நாளடைவில் தேய்ந்துபோய் அழிந்துவிடும். அதேபோல் உடலுடன் தொடர்பு கொண்டு இயற்கையாகவே பலமுள்ள ஆயுள், முறைப்படி பகலில் செய்ய வேண்டியதும் இரவில் செய்ய வேண்டியதும் பருவங்களில் கடைபிடிக்க வேண்டியதுமான காரியத்தைச் செய்வதாலும், நன்மை தரும் பொருட்களையே பயன்படுத்துவதாலும் மெள்ள மெள்ள தன் நிலைமையிலிருந்து அழிவடைவதைக் கால மரணம் என்கிறோம்.

சிறந்த அச்சு பொருந்திய வண்டியில் அதிகச் சுமை ஏற்றுவதாலும், வண்டி மேடு பள்ளங்களில் செல்வதனாலும், வழியை விட்டுச் செல்வதினாலும், வண்டி செல்லும் சமயத்தில் அச்சும் வண்டிக்குடமும் தனியாகப் போவதினாலும், வண்டிக்காரனின் கவனக்குறைவாலும், வண்டி இழுக்கும் காளைகளின் முரட்டுத்தனத்தாலும், அச்சாணி வெளிக்கிளம்புவதினாலும், எண்ணெய் போன்ற பசையுள்ள பொருட்கள் இல்லாததினாலும், குடை சாய்ந்து விழுவதனாலும் செல்ல வேண்டிய இடம் வரையில் செல்லாமல் நடுவிலே அழிந்து விடுவதுபோல, உடலில் உள்ள ஆயுளும் வலிவு, சக்தி இவற்றிற்கு மீறிய தகுதியற்ற துணிச்சலான செயல்களைத் தொடங்குவதனாலும், சடராக்னியின் வலிவைத் தெரிந்து கொள்ளாமையாலும் அதிக உணவு உண்பதனாலும், கெட்ட உணவை உண்பதனாலும், தன் உடலை கெட்ட

முறையில் பயன்படுத்துவதனாலும், தாறுமாறான உடற்பயிற்சியினாலும், அதிகப் புணர்ச்சியினாலும், கெட்டவர்களின் சேர்க்கையினாலும், தானாக வரும் சிறுநீர் மலம் இவற்றை அடக்குவதனாலும், அடக்க வேண்டிய காமம் சினம் போன்றவற்றின் வேகங்களை அடக்காததனாலும், பிணம் நஞ்சு கெட்டகாற்று நெருப்பு இவற்றின் தாபத்தினாலும், காயம்படுவதனாலும், உணவினால் தோன்றிய பிணிக்கு மருத்துவம் செய்யாததினாலும் இறந்து போவதைக் காலமில்லா மரணம் என்கிறோம். காய்ச்சல் போன்ற நோயின் சக்தியினால் தோன்றிய நோய்களுக்கு உயர்ந்த முறையில் சிகிச்சை செய்யாததனாலும், காலமில்லாக் காலத்தில் ஆயுள் குறைந்து மரணம் ஏற்படுகிறது. இதைக் கண்கூடாகப் பார்க்கிறோம் என அக்னிவேசரைப் பார்த்து ஆத்ரேய மாமுனிவர் பதில் உரைத்தார். 38

## 10. காய்ச்சலில் சுடுநீரைப் பருகச் செய்வது ஏன் ?

காய்ச்சல் தோன்றுவதற்கு முக்கிய காரணமான பித்தம் குளிர் நீரினால் தணிவதால் காய்ச்சலில் பிணியாளனுக்குக் குளிர்ந்த நீரைக் கொடுக்க வேண்டியிருக்கச் சுடுநீரை ஏன் மருத்துவர்கள் கொடுக்கின்றனர் ? என வினவினார் அக்னிவேசர். 39

காய்ச்சல் கொண்டவனுடைய உடல், காய்ச்சல் தோன்றக் காரணம் இடம் காலம் இவற்றை நன்கு கவனித்து தோஷங்கள் தணிவதற்காக மருத்துவர்கள் சுடுநீரைப் பருகச் செய்கின்றனர். காய்ச்சல் இரைப்பையிலிருந்து தோன்றுகிறது. பெரும்பாலும் இரைப்பையிலிருந்து தோன்றும் நோய்களைப் போக்க சீரணமடைய வாந்தி எடுக்கக் கொடுக்கும் மருந்துகளும் பட்டினி கிடத்தலும் தகுந்தவை. ஆகையால் தோஷங்களைத் தணியச் செய்வதற்காக மருத்துவர்கள் காய்ச்சலினால் வருந்துகிறவர்களுக்குச் சுடுநீரை அதிக அளவில் கொடுக்கின்றனர்.

காய்ச்சல் உள்ளவன் குடித்த சுடுநீர் வாததோஷத்தை நேராகச் செலுத்துகிறது. சடராக்னியைத் தூண்டிவிடுகிறது. விரைவில் சீரணத்தை உண்டாக்குகிறது. கபத்தை உலர்த்துகிறது. சிறிதளவு பருகினாலும் தாகத்தைத் தணிக்கிறது. சுடுநீர் இவ்வளவு சிறப்புக்கள் பெற்றிருந்தாலும் இதை அதிகமான பித்தக் காய்ச்சல், அல்லது எரிச்சல், தலைச்சுற்றல், பிதற்றல், கழிச்சல் இவை உள்ள நோயாளிக்குக் கொடுக்கக்கூடாது. கொடுத்தால் எரிச்சல், தலைச்சுற்றல், பிதற்றல், கழிச்சல் இவை மேலும் அதிகரிக்கும். குளிர்ந்த நீரினால் அவை தணிந்து விடுகின்றன. 40

ஆயுர்வேத நூலறிந்த சிறந்த மருத்துவர்கள், உஷ்ணப்பொருட்களைப் பயன்படுத்துவதால் தோன்றும் நோய்களை குளிர்ச்சிப் பொருட்களாலும், குளிர்ச்சிப் பொருட்களால் ஏற்படும் நோய்களை உஷ்ணமுள்ள பொருட்களாலும் சிகிச்சை செய்து குணப்படுத்துகின்றனர். 41

இவ்வாறு மற்ற நோய்களுக்கும் நோய்களின் காரணங்களுக்கும் எதிரிடையான சிகிச்சைகளைச்செய்கின்றனர். உதாரணமாக [1]லங்கனத்தினால் தோன்றும் பிணிகளுக்கு [2]பிரும்மண சிகிச்சையும், பிரும்மணத்தினால் தோன்றுகின்ற நோய்களுக்குலங்கனச் சிகிச்சையும் தவிர வேறு சிகிச்சை கிடையாது. 42

## 11. லங்கண சிகிச்சையின் பிரிவுகள்

லங்கனம், லங்கனபாசனம், தோஷாவஸேசனம் என லங்கனம் மூவகைப்படும். 43

லங்கனம் என்பது – குறைந்த தோஷமுள்ளவர்களுக்குச் செய்யப்படும் சிகிச்சை. இந்தச் சிகிச்சையினால் சடராக்னி வாதம் இவ்விரண்டும் வளர்ச்சியடைகின்றன. காற்று வெயில் இவற்றின் கடுமையினால் சிறிதளவே நீருள்ள நீர்நிலை வற்றிப் போவதுபோல் வளர்ச்சியடைந்த சடராக்னி வாதம் இவற்றால் குறைவான தோஷங்கள் உலர்ந்து விடுகின்றன.

தோஷங்கள் நடுத்தரமாக உள்ளவர்களுக்கு [3]லங்கனபாசனம் என்ற சிகிச்சை செய்யப்படுகிறது.

கதிரவனின் ஒளி வளர்ந்த காற்று இவற்றுடன் தூசிகளும் மணலும் சேர்ந்து நடுத்தர நீர் உள்ள நீர்நிலையை வற்றச் செய்வதுபோல லங்கன பாசன சிகிச்சை நடுத்தர தோஷங்களை அழித்து விடுகின்றது. தோஷம் மிகுந்தவர்களுக்கு [4]**தோஷாவஸேசனம்** என்னும் சிகிச்சையைச் செய்ய வேண்டும்.

அதிக நீர் நிறைந்த வயலின் கரை உடைந்து அங்கு தங்கியுள்ள நீர் வெளிச்சென்று விடுவதுபோல தோஷாவஸேசனம் என்ற சிகிச்சை முறையினால் அதிக தோஷங்கள் வெளிச்சென்று விடுகின்றன. 44

---

1. லங்கனம் – பட்டினி கிடத்தல்.
2. பிரும்மணம் – வலிவை அளிக்கக்கூடிய சிகிச்சை.
3. லங்கனபாசனம் - பட்டினிக் கிடக்க செய்வதுடன், சீரணிக்கவும் மருந்து கொடுத்தல்.
4. தோஷாவஸேசனம் - தோஷங்களை வெளிப்படுத்தச்செய்யும் சிகிச்சை.

### 12. சிகிச்சைக்குத் தகாதவர்கள்

மிகத்தேவை ஏற்பட்டாலும் கீழ்க்கண்டவர்களுக்கு தோஷா வஸேசனம் என்ற சிகிச்சையையும் மற்ற மருந்துகளையும் பயன் படுத்தக் கூடாது. நன்மை பயக்கும் சொற்கேளாதவன், வறிய வன், பணியாள் அற்றவன், தன்னை மருத்துவனாகக் கருது பவன், கடுஞ்சினமுள்ளவன், பிறரைப் பழிப்பவன், அதர்மச் செயல்களில் மிகவும் ஈடுபட்டவன், மிகக் குறைந்த வலிவு மாமி சம் சோணிதம் இவை உடையவன், சிகிச்சைக்குக் கட்டுப்படாத நோயுள்ளவன், மரணக்குறிகள் முழுமையாகத் தோன்றியவன் இவர்களுக்கு மருத்துவர் சிகிச்சை செய்யக்கூடாது. செய்வதினால் மருத்துவருக்கு பாவம் ஏற்படுவதுடன் புகழழிந்து பழி ஏற்படும். 45

### 13. மருத்துவரின் கடமை

சிகிச்சை செய்யும் பொழுதோ அல்லது வருங்காலத்திலோ கெட்ட பயனை அளிக்கக்கூடிய செயல்களை ஒருகாலும் மருத்து வர் செய்யக்கூடாது என்பது அறிவாளிகளின் கருத்தாகும். 46

### 14. இடத்தின் பிரிவுகள்

இடங்கள் ஜாங்கலம், அநூபம், சாதாரணம் என மூவகை யாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

குறைவுள்ள நீர், குறைவான மரங்கள், அதிகக் காற்று, அதிகமான வெயில், குறைந்த நோய் இவை உள்ள இடம் ''ஜாங் கலம்'' எனப்பெயர் பெறுகிறது.

அதிக நீர், அதிக மரங்கள், குறைந்த காற்று, குறைந்த வெயில், அதிகமான நோய்கள் உள்ள இடம் ''அநூபம்'' என அழைக்கப்படுகிறது.

மேற்கண்ட இரண்டு குறிகளும் சேர்ந்த இடம் ''சாதாரணம்' எனப் பெயர் பெறுகிறது. 47–48

### முடிவுரை

இவ்வத்தியாயத்தில் நாடு அழிவதற்கான முற்குறிகள், பொதுக் காரணங்கள், அவற்றின் இலக்கணம், மருத்துவம், நாடு அழிவதற்குக் காரணமான காற்று நீர் இடம் காலம் இவற் றிற்கு மூலகாரணம், முதன் முதலில் நோயின் தோற்றம், ஆயுளைப் பற்றிய கருத்துரை, ஆயுளின் வளர்ச்சி-குறைவு, பிராணிகளுக்கு ஏற்படும் கால மரணம், காலமில்லாக்காலத்தில் ஏற்படும் மரணம் இவற்றைப் பற்றிய முடிவு, அகாலமரணம் ஏற்படக் காரணம்,

மருந்து பயன்படுத்துவதால் ஏற்படும் பயன், மருந்து யாருக்குப் பயனை அளிக்கிறது, யாருக்கு எந்தக் காரணத்தினால் சிகிச்சை செய்யக்கூடாது என்பன யாவும் கூறப்பட்டுள்ளன. 49-52

இவை யாவற்றையும் அக்னிவேசருக்காக ஆத்ரேய மாமுனிவர் இவ்வத்தியாயத்தில் எடுத்துரைத்தார்.

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட விமானஸ்தானத்தில்
ஜனபதோத்வம்ஸனீயம் எனும் மூன்றாவது
அத்தியாயம் முற்றும்

## நான்காம் அத்தியாயம்

# *த்ரிவித ரோக விசேஷ விக்ஞானீயம்

''த்ரிவித ரோக விசேஷ விக்ஞானீயம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

### 1. நோய்களைக் கண்டுபிடிக்கும் மூன்று முறைகள்

ஆப்தோபதேசம், ப்ரத்யக்ஷம், அனுமானம் என நோய்களைக் கண்டுபிடிக்க மூன்று முறைகள் உள்ளன. 3

### 2. சான்றோர் வாக்கின் இலக்கணம்

ஆப்தோபதேசம் என்பது சான்றோர்களின் வாக்கு. ஐயமற்றவரும், நினைவாற்றல் பெற்றவரும், ஆராயும் திறமையுள்ளவரும், விருப்புவெறுப்பற்றவரும், ஒரு பக்கமும் சேராதவருமான பெரியோர் சான்றோர் எனக் கருதப்படுகின்றனர். அவர்களுடைய சொல் சான்றோர் வாக்கு. இது நோயைக் கண்டுபிடிக்கும் மூவகைகளில் ஒன்றாகும். (பிரமாணம்) ஏற்கத் தகுந்ததுமாம்.

மதம் கொண்டவன் பைத்தியம் பிடித்தவன் பிடிவாதமுள்ளவன் ஒரு பக்கம் சேருகிறவன் தூய்மையற்ற மனநிலையுடையவன் என இவர்கள் நல்லவர்களாகவோ, கெட்டவர்களாகவோ இருந்தாலும் அவர்களுடைய சொல் ஏற்கத்தகாதது. (அப்ரமாணம்)

### 3. ப்ரத்யக்ஷத்தின் (கண்கூடாகப் பார்த்தல்) இலக்கணம்

புலன்களாலும், மனத்தினாலும் அறியக் கூடியதை ப்ரத்யக்ஷம் என்கிறோம்.

### 4. அனுமானத்தின் இலக்கணம் (ஊகித்தறிதல்)

காரணங்களால் ஊகித்தறிந்து கொள்ளுதல் அனுமானம் எனப்படும். 4

---

*த்ரிவித ரோக விசேஷ விக்ஞானீயம் — நோய்களைக் கண்டுபிடித்துத் தீர்மானிக்கும் மூன்றுவித முறைகளைப் பற்றிக் கூறுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

இம்மூன்று முறைகளால் முதலில் எல்லா நோய்களையும் எப்பொழுதும் ஆராய்ந்துவிட்டால் பின்பு சிகிச்சை செய்வதில் தவறு ஏற்படாது. மூன்று முறைகளாலும் கண்டறிய வேண்டிய நோயை ஒரு முறையால் கண்டறிவது தகாது.

நோயை ஆராய்வதற்கான மும்முறைகளில் சான்றோர் வாக்கு முதன்மையானது. அடுத்தபடியாக உள்ளவை ப்ரத்யக்ஷமும் அனுமானமுமாகும்.

நோயைக் கண்டுபிடிப்பதற்கு சான்றோர் வாக்கு கிடைக்காவிடில் பிரத்யக்ஷம் அனுமானம் என்ற இரண்டு முறைகளைக் கொண்டு அறிவாளியான மருத்துவர் அதை அறிந்துகொள்ளலாம். ஆகையால் நோயை அறிந்துகொள்ள பிரத்யக்ஷம் அனுமானம் என இரண்டு முறைகளுடன் சான்றோர் வாக்கையும் சேர்த்தால் மூவகை முறைகளாகும். 5

## 5. சான்றோர் வாக்கினால் அறியக்கூடியவை

ஒவ்வொரு பிணியிலும் தோஷங்கள் எவ்வாறு சீற்றமடைகின்றன? உடல்நிலை எத்தகையது? நோய் உண்டாகக் காரணம் யாது? நோயின் இலக்கணம் எப்படிப்பட்டது? நோய் உண்டாயிருக்கும் இடம் எப்படிப்பட்டது? எத்தகைய துன்பத்தைத் தருகிறது? நோயின் அறிகுறிகள் எத்தகையவை? ஒலி தொடு உணர்ச்சி உருவம் சுவை மணம் இவை எப்படிப்பட்டவை? எவ்விதத் துன்பத்தை அளிக்கக்கூடியவை? நோயின் வளர்ச்சி நடுநிலை குறைவு நோயின் வருங்காலம் நோயின் முடிவு பெயர் தோஷங்களின் சேர்க்கை ஆகிய இவை எத்தகையவை? இவை போன்றவற்றை அறிவாளியான மருத்துவர் ஆராய்ந்து அறிந்துகொள்ள வேண்டும்.

நோயைத் தீர்க்க இவ்வித சிகிச்சை செய்யலாமா? செய்யக்கூடாதா? என்பதையும் சான்றோர் வாக்கிலிருந்து அறிய வேண்டும் என்று அறிவாளிகள் உபதேசிக்கின்றனர். 6

## 6. கண்ணால் பார்க்கக் கூடிய பரிசோதனை

நோயின் நிலையை அறிய விரும்பும் மருத்துவர் எல்லாப் புலன்களாலும் சுவையறிவைத்தவிர, மற்ற நோயாளியின் உடலிலுள்ள புலன்களின் விஷயங்களை ஆராய்ந்து அறிய வேண்டும்.

## 7. காது வழியாக அறியக் கூடியவை

குடலில் ஏற்படும் ஓசை, பூட்டுகள் விரல்களின் சணுக்கள் இவற்றில் உண்டாகும் ஒலி (சொடுக்கு) குரல் மாற்றம் மேலும் உடலில் ஏற்படும் மற்ற ஓசைகளையும் காதுகளால் அறிந்துகொள்ள வேண்டும்.

**8. கண்களால் அறியக்கூடியவை**

நிறம், உருவம், அளவு, நிழல், நோயாளியின் உடலில் தோன்றும் இயற்கை நிலை மாறுபாடுகள் முதலிய கண்களுக்குப் புலனாகக்கூடிய எல்லாவற்றையும் நன்றாகக் கண்டு அறிந்து கொள்ள வேண்டும்.

**9. நாக்கினால் அறியக் கூடியவை (ஊகித்தறிய வேண்டியவை)**

நோயாளியின்' உடலில் உள்ள சுவையறியும் புலனான நாக்கின் சுவையை ஊகத்தினால் அறிந்துகொள்ள வேண்டும். இதைக் கண்ணால் பார்த்து அறிய முடியாதல்லவா? ஆகையினால் நோயாளியிடமிருந்து அவனுடைய நாக்கின் சுவையைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும்.

நோயாளியின் உடலில் பேன் போன்றவை ஊர்வதால் சுவை மாறுபட்டிருக்கிறது என அறிந்துகொள்ள வேண்டும். உடலில் ஈக்கள் மொய்த்தால் உடலின் சுவை இனிப்பாக மாறியிருக்கிறது என்பது பொருள்.

ரத்தபித்த நோயாளியின் உடலிலுள்ளது சுத்த இரத்தமா இரத்த பித்தத்தின் இரத்தமா எனக் கண்டுபிடிப்பதற்கு அவனுடைய இரத்தத்தைச் சோற்றில் கலந்து நாய் அல்லது காக்கைக்குப் போட்டு அவை தின்றால் சுத்த இரத்தம் எனவும், தின்னாவிட்டால் இரத்த பித்தரத்தம் எனவும் அறியவேண்டும்.

இவ்வாறு நோயாளியின் உடலின் மற்ற சுவைகளையும் ஊகத்தினால் அறிந்துகொள்ள வேண்டும். 7

**10. மூக்கினால் அறியக் கூடியவை**

நோயாளியின் உடல் முழுவதும் பரவியுள்ள மணம் இயற்கையானதா மாறுபாடு அடைந்ததா என மூக்கினால் அறிந்து கொள்ள வேண்டும்.

**11. தொடு உணர்ச்சியினால் அறியக் கூடியவை**

நோயாளியின் உடலின் இயற்கை நிலை மாறுதல்கள் சூடு குளுமை நாடிகளின் துடிப்பு இவற்றைக் கையினால் தொட்டுப் பார்த்து அறிந்துகொள்ள வேண்டும்.

இவ்வாறு புலன்களாலும், ஊகத்தினாலும், சான்றோர் வாக்கினாலும் நோயாளியைப் பரிசோதிக்கும் முறைகள் கூறப்பட்டன. 7

**12. ஊகத்தினால் அறியக் கூடியவை**

மேலும் சீரண சக்தியினால் சடராக்னியையும், உடற்பயிற்சியினால் வலிவையும், ஓசை முதலியவற்றைச் சரியாகக் கேட்பதி

னால் காது போன்ற புலன்களின் திறமையையும், செயல்களை ஆராயும் தன்மையினால் மனநிலையையும், உழைப்பினால் நுண் ணறிவையும், பற்றுதலினால் ரஜோ குணத்தையும், அறியாமை யினால் மோகத்தையும், கொடூரச் செயல்களினால் சோபத்தை யும், எளிமையினால் வருத்தத்தையும், மனத்தெளிவினால் மகிழ்ச் சியையும், மகிழ்ச்சியினால் அன்பையும், வருத்தத்தினால் அச்சத் தையும், வருத்தமின்மையினால் தைரியத்தையும், உற்சாகத்தி னால் வீர்யத்தையும், கலக்கமற்றிருப்பதனால் உறுதியையும், ஒரு பொருளின் விருப்பத்தினால் நம்பிக்கையையும், அறிந்து கொள்வதினால் அறிவையும், புரிந்து கொள்வதினால் ஞாபக சக்தியையும், முன் சொன்னதை நினைவுக்குக் கொண்டு வருத லால் நினைவாற்றலையும், நடுக்கத்தினால் வெட்கத்தையும், நன் முறையில் நடந்து கொள்வதால் நடத்தையையும், தடுப்பதினால் வெறுப்பையும், குற்றம் சாட்டுவதினால் கபடத் தன்மையையும், பேராசையின்மையால் உறுதிப்பாட்டையும், கட்டளையை மதிப் பதனால் கட்டுப்படுதலையும், வயது அன்பு ஒப்புதல் நோய் நோய்க்குக் காரணம் இவற்றைக் காலம் இடம் ஒத்துக் கொள்ளு தல் இலக்கணம் துன்பம் என்பனவற்றால் ஊகித்துக் கொள்ள வேண்டும்.

ஏற்றுக்கொள்ளுதல், ஏற்றுக்கொள்ளாமை என இவற்றால் உள்ளடங்கியிருக்கும் நோயின் இலக்கணங்களை ஊகித்தறிய வேண்டும். தோஷங்களின் ஏற்றத் தாழ்வை பிழைகளினால் ஊகித்தறிய வேண்டும்.

மரணக்குறிகளால் ஆயுட்குறைவைக் கண்டுகொள்ள வேண் டும். நல்வழியில் செல்வதையும் நல்வழியைக் கடைபிடிப்பதை யும் கொண்டு மனதின் தூய்மையை அறிந்துகொள்ள வேண்டும். க்ரஹிணீ என்ற நோயின் எளிமை கடினத்தன்மை கெட்ட கனவு காணுதல் விஷயத்தில் விருப்பு வெறுப்பு இன்ப-துன்பம் இவற்றை நோயாளியிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். 8

அறிவாளியான மருத்துவர் சான்றோர் வாக்கு புலன் களால் அறிதல், ஊகித்தல் இவற்றால் நோய்களை நன்கு ஆராய்ந்து அறிய வேண்டும். 9

நூல்களை நன்கு அறிந்த மருத்துவன் எல்லாவற்றையும் எப் பொழுதும் முடிந்தவரை யோசித்து நோயைத் தீர்மானிப்பதி லும், பிறகு சிகிச்சை செய்வதிலும் அறிவைச் செலுத்த வேண் டும். 10

செயலை நன்கறிந்தவன் ஒரு விஷயத்தைத் முடிவு செய்வதில் தோல்வி யடையமாட்டான்.

அறிஞனான மருத்துவன் மதியிழப்பினால் ஏற்படும் விளைவை அடையமாட்டான். 11

தத்துவமறிந்த மருத்துவன் நுண்ணறிவு என்ற விளக்கினால் நோயாளியின் உடலிலும் மனதிலும் புகுந்து உண்மையை அறியாவிட்டால் அவன் சிகிச்சை செய்வதில் வெற்றிபெற மாட்டான். 12

**முடிவுரை**

எல்லா நோய்களையும் நன்கு அறிந்துகொள்ள சான்றோர் வாக்கு, புலன்களால் காணுதல், ஊகித்தறிதல் என்ற மூவகை அறிய வேண்டிய முறைகளைக் குறித்து, பரந்த மனப்பான்மை யுடைய ஆத்ரேய மாமுனிவர் த்ரிரோக விக்ஞானம் எனும் அத்தியாயத்தில் கூறியுள்ளார். 13–14

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை விமானஸ்தானத்தில்
த்ரிவித ரோக விக்ஞானீய விமானம் எனும்
நான்காவது அத்தியாயம் முற்றும்.

143281

LB

N85·1

## ஐந்தாம் அத்தியாயம்

# *ஸ்ரோதோவிமானம்

''ஸ்ரோதோவிமானம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1—2

ஸ்ரோதஸ்கள் மனிதனுடலில் உள்ள உணவு ரசம், இரத்தம் முதலிய தாதுக்களின் மறுஉருவங்களே யாகும். ஸ்ரோதஸ்கள் இன்றி தாதுக்கள் வளர்வதுமில்லை. குறைவதுமில்லை. ஸ்ரோதஸ்கள்தான் பக்குவமடைந்த தாதுக்களை வேறு இடத்திற்கு எடுத்துச் செல்கின்றன. அதாவது அதற்குரிய இடத்தில் சேர்த்து விடுகின்றன. 3

உடல் எங்கும் தான் பரவியிருப்பதனாலும், தோஷங்களைச் சீற்றமடையச் செய்து தணியவும் செய்து உணவு வகைகளை உடல் முழுவதும் பரவச் செய்வதனாலும் ஸ்ரோதஸ்களின் கூட்டமே மனிதன் ஆகிறான் எனச் சிலர் கருதுகின்றனர்.

ஸ்ரோதஸ்கள் ரசம் முதலியவற்றை எடுத்துச் செல்கின்றன. அவற்றை வளர்க்கின்றன. மாமிசம் முதலானவற்றில் தங்கியிருக்கின்றன. இவை யாவும் ஸ்ரோதஸ்களைக் காட்டிலும் வேறானவை. ஆதலால் ஸ்ரோதஸ்களின் கூட்டமே புருஷன் எனக் கூறுவது சரியன்று என்று மற்றும் சிலர் கூறுகின்றனர். 4

ஸ்ரோதஸ்கள் அதிகமாக இருப்பதால் கணக்கற்றவை என்று சிலரும், மற்றவர்கள் கணக்கிடக்கூடியவை என்றும் கருதுகின்றனர். 5

மேலெழுந்தவாரியாக இதன் சில பிரிவுகளையும் அடிப்படைத் தத்துவங்களைக் கொண்டு சீற்றமடைந்த இலக்கணங்களைக் கொண்டு ; சில பிரிவுகளையும் விளக்குவோம். இவ்விளக்கம்

---

*ஸ்ரோதோவிமானம் — ஸ்ரோதஸ்கள் என்றால் உணவு ரசத்தையும் இரத்தத்தையும் எடுத்துச் செல்லும் குழாய்கள். அதைப் பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

அறிவாளியான மருத்துவன் கூறாத ஸ்ரோதஸ் தொடர்பான மற்றவைகளையும் அறிந்துகொள்ளப் போதுமானது. அறிவு குறைந்த மருத்துவனுக்கும் இவ்விளக்கம் போதுமானது.

உயிர் நீர் உணவு ரசம் இரத்தம் மாமிசம் கொழுப்பு எலும்பு மஜ்ஜை விந்து சிறுநீர் மலம் வியர்வை இவற்றை ஸ்ரோதஸ்கள் சுமக்கின்றன.

உடல் முழுவதும் பரவியுள்ள வாதம் பித்தம் கபம் இவை எல்லா ஸ்ரோதஸ்களின் வாயிலாகச் செல்கின்றன.

ஸ்ரோதஸ்கள் கண்களுக்குப் புலப்படா. இவை மனம் உயிருடன் கூடிய உடல் இவற்றிற்குத் தங்குமிடமாகவும், செல்லும் வழி களாகவும் அமைந்துள்ளன. இவை இயற்கை நிலையில் இருந்தால் ஒருவித நோயும் உடலில் தோன்றுவதில்லை. 6

### 1. உயிரைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள்

அவற்றுள் உயிரைத் (பிராணனை) தாங்கும் ஸ்ரோதஸ்களுக்கு இதயமும் [1]மகாஸ்ரோதஸும் இருப்பிடமாகும். இவை கேட டைந்தால் கீழ்க்கண்ட அறிகுறிகள் தென்படும்.

பெருமூச்சு வாங்குதல், மூச்சு தடைபடுதல், மூச்சுத்திணறல், சிறிது சிறிதாக அல்லது ஒரேயடியாய் ஓசையுடனும் குத்தல் வலியுடனும் மூச்சுவிடுதல் ஏற்படும். இவற்றைக்கொண்டு உயி ரைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்திருக்கின்றன என அறிந்துகொள்ள வேண்டும். 7

### 2. நீரைத்தாங்கும் ஸ்ரோதஸ்கள்

இவற்றிற்குத் தாடையும் நீர்ப்பையும் (க்லோம) இருப்பிடங் களாகும். இவை கேடடைந்தால் நாக்கு உதடுகள் தொண்டை நீர்ப்பைக் குழாய் ஆகியவை உலர்ந்துவிடும். அதிகமாகத் தாகம் ஏற்படும். இவற்றைக் கண்டு நீர் தங்கியிருக்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்துள்ளன என அறிய வேண்டும்.

### 3. உணவு தங்கும் ஸ்ரோதஸ்கள்

இவற்றிற்கு இரைப்பை, உடலின் இடப்பக்கம் இரண்டும் இருப்பிடம். இவை கேடடைந்தால் உணவில் அவாவின்மை

---

1. மகாஸ்ரோதஸ் — ஸ்ரோதஸ் என்றால் குழாய் போன்ற உறுப்பு. உடலில் இருக்கும் குழாய்களுள் குடலே பெரிதாகையால் குடல் மஹாஸ் ரோதஸ் எனப்படுகிறது.

சுவையின்மை சீரணமின்மை வாந்தி இவை ஏற்படும். இவற்றைக் கொண்டு இந்த ஸ்ரோதஸ்கள் கேடடைந்திருக்கின்றன என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

**4. ரசம், இரத்தம் போன்ற தாதுக்களைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் (குழாய்கள்)**

இவற்றிற்கு இதயமும், பத்து இரத்தக் குழாய்களும் இருப்பிடங்களாகும்.

(அ) இரத்தத்தை தாங்கும் ஸ்ரோதஸ்களுக்கு கல்லீரல், மண்ணீரல் இரண்டும் இருப்பிடங்களாகும்.

(ஆ) மாமிசத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்களுக்கு நரம்பு தோல் இரண்டும் இருப்பிடங்கள்.

(இ) கொழுப்பைத் தாங்கும் ஸ்ரோதஸ்களுக்கு மூத்திரக்குண்டிக் காய், நிணநீர் இரண்டும் இருப்பிடங்கள்.

(ஈ) எலும்பைத் தாங்கும் ஸ்ரோதஸ்களுக்கு கொழுப்புப் பின் பாகமும் இருப்பிடம்.

(உ) மஜ்ஜை (எலும்புக்குள் இருக்கும் சோறு)யைத் தாங்கும் ஸ்ரோதஸ்களுக்கு எலும்புகளும் மூட்டுகளும் இருப்பிடங்கள்.

(ஊ) விந்துவைத் தாங்கக்கூடிய ஸ்ரோதஸ்களுக்கு விதையும், ஆண்குறியும் இருப்பிடங்களாகும்.

ரசம் முதலான தாதுக்களைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்தால் உண்டாகும் அறிகுறிகள் ஸூத்ரஸ்தானத்தில் உள்ள 'விவிதாசித பீதீயம்' எனும் அத்தியாயத்தில் (அத்தியாயம் 28) விளக்கப்பட்டுள்ளன. தாதுக்கள் கேடடைவதற்கான அறிகுறிகளே ஸ்ரோதஸ்கள் கேடடைவதற்கும் அறிகுறிகள் என அறிந்துகொள்ள வேண்டும்.

**5. சிறுநீரைத்தாங்கும் ஸ்ரோதஸ்கள்**

இவற்றிற்குச் சிறுநீர் தங்கும் பை, தொடை இடுக்குகள் இவை இருப்பிடங்கள். இவை கேடடைந்தால் சிறுநீர் அதிகம் கழிதல், சிறுநீர் அடைத்துப்போதல், சிறுநீர் கேடடைதல், சிறிது சிறிதாகவோ அல்லது அதிகமாகவோ குத்தல் வலியுடன் சிறுநீர் இறங்குதல் ஆகியவை ஏற்படும், இவற்றைக்கொண்டு இந்த ஸ்ரோதஸ்கள் கேடடைந்திருக்கின்றன என அறிந்துகொள்ள வேண்டும்.

## 6. மலம் தங்குமிடமான ஸ்ரோதஸ்கள்

மலத்தைத் தங்குமிடமாகக் கொண்ட ஸ்ரோதஸ்களுக்கு சீரணப்பையும், பெருங்குடலும் தங்குமிடங்களாகும். அவை கேடடைந்தால், சிறிது சிறிதாகவும், ஓசையுடனும், வலியுடனும், அதிக திரவமாகவும், கரடு முரடாகவும், மிகுதியாகவும், கஷ்டத்துடனும் மலக்கழிப்பு ஏற்படும், இக்குறிகளைக் கொண்டு மலம் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்திருக்கின்றன என அறிந்து கொள்ள வேண்டும்.

## 7. வியர்வையைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள்

இந்த ஸ்ரோதஸ்களின் தங்குமிடம் கொழுப்பும், மயிர்க்கால்களின் துவாரங்களுமாகும். இவை கேடடைந்தால் வியர்வை வெளிவராமை அல்லது அதிகம் வியர்வை வெளிவருதல் உடலில் சொரசொரப்பு மிகவும் வழவழப்பு தோலில் எரிச்சல் மயிர்க் கூச்சல் இவை ஏற்படும். இவற்றைக்கொண்டு வியர்வையைத்தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்துள்ளன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். 8

## 8. ஸ்ரோதஸ்களின் மாற்றுப்பெயர்கள்

[1]ஸ்ரோதஸ்கள், [2]ஸிரைகள், [3]தமனிகள், [4]ரசாயனிகள், [5]ரசவாகினிகள், [6]நாடிகள், [7]பந்தானம், [8]மார்க்கங்கள், உடலில் உள்ள துவாரங்கள்.

[9]ஸம்விருதங்கள், [10]அஸம்விருதங்கள், [11]ஸ்தானங்கள், [12]ஆசயம் [13]நிகேதம் இவை தெரிந்தும் தெரியாமலும் உடலில் உள்ள தாதுக்களின் துவாரங்களின் மறுபெயர்களாகும்.

---

1. ஸ்ரோதஸ்கள் — உணவு ரசத்தையும், இரத்தத்தையும் எடுத்துச்செல்லும் குழாய்கள்.
2. ஸிரைகள் — நரம்புகள்
3. தமனிகள் — இரத்தக்குழாய்கள்
4. ரசாயனிகள் — நீரை எடுத்துச் செல்லும் குழாய்கள்
5. ரசவாகினிகள் — சிறு துவாரமுள்ள நரம்புகள்
6. நாடிகள் — குழல்கள்
7. பந்தானம் — செல்லும் வழி
8. மார்க்கங்கள் — வரம்பு கட்டின பாதைகள்
9. ஸம்விருதங்கள் — மூடிய விசை நரம்புகள்
10. அஸம்விருதம் — திறந்த விசை நரம்புகள்
11. ஸ்தானங்கள் — நீர்ப்பைகள்
12. ஆசயம் — உணவு முதலியவை தங்குவதற்கு ஆதாரமாயுள்ள பாகங்கள்.
13. நிகேதம் — கூடுமிடம்.

இவை சீற்றமடைந்தால் தன்னிடத்தில் உள்ள அல்லது வழியில் செல்லுகின்ற உடலின் மற்ற தாதுக்களும் சீற்றமடைகின்றன. மேலும் ஒரு தாது சீற்றமடைந்து தன்னைச் சார்ந்த ஸ்ரோதஸைக் கெடுக்கிறது. மற்ற தாதுக்களையும் ஸ்ரோதஸ்களையும் கேடடையச் செய்கிறது. கேடடைந்த ஸ்ரோதஸ்கள் மற்ற ஸ்ரோதஸ்களையும் கெடுக்கின்றன. அதேபோல் கேடடைந்த தாதுக்கள் மற்ற தாதுக்களையும் கெடுக்கின்றன.

இந்த எல்லா ஸ்ரோதஸ்களும் தாதுக்களும் கேடடைவதற்கு கேடடைந்த வாத-பித்த-கபங்களே காரணமாகின்றன. ஏனென்றால் கேடடையச் செய்வது தானும் கெடுவதுதான் வாத பித்கபங்களின் இயற்கை இயல்பாகும். 9

## 9. உயிரைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்

தாதுக்களின் அழிவினாலும், மலம் சிறுநீர் இவற்றை அடக்குவதாலும், வறண்ட உணவுப் பொருட்களைப் பயன்படுத்துவதாலும், அதிக உடற்பயிற்சியினாலும், மிக்கப் பசியினாலும், உடலை வருத்தும் மற்ற கடுமையான செயல்களாலும் உயிரைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. 10

## 10. நீரைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்

மிக உஷ்ணமான உணவு உண்பதாலும், அசீரணத்தாலும், அச்சத்தினாலும், கள் போன்றவற்றைப் பருகுவதனாலும், மிக்க உலர்ந்த உணவுப் பொருட்களைப் புசிப்பதாலும், அதிக தாகத்தை அடக்குவதனாலும் நீரைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடு அடைகின்றன. 11

## 11. உணவைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்

மிதமிஞ்சி உண்பதனாலும், காலமற்ற காலத்தில் உண்பதனாலும், நன்மை பயக்காத உணவை உண்பதனாலும், சடராக்னி கேடடைவதனாலும், உணவைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடு அடைகின்றன. 12

## 12. ரசத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்

எளிதில் சீரணமாகாததும் மிக்கக் குளிர்ச்சியுள்ளதும் மிக்க எண்ணெய்ப் பசையுள்ளதுமான உணவை உண்பதினாலும், அளவுக்கு மீறி உண்பதனாலும், யோசிக்கவேண்டியதைப் பற்றி தீவிரமாக யோசிப்பதாலும், ரசத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. 13

**13. இரத்தத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்**

எரிச்சலைத் தோற்றுவிக்கக்கூடியதும் நைப்புத் தன்மை உஷ்ண வீர்யம் இவை உள்ளதுமான உணவை உண்பதனாலும், திரவப் பொருட்களை அதிகம் பயன்படுத்துவதாலும், வெயில் காற்று இவற்றில் அதிகம் அலைவதாலும் இரத்தத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. *14*

**14. மாமிசத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்**

கொழுப்பை மிகுதியாகத் தோற்றுவிக்கும் பொருட்களைப் பயன்படுத்துவதாலும், கடினமான எளிதில் சீரணமாகாத உணவை உண்பதனாலும், உண்டவுடன் பகலில் உறங்குவதாலும், மாமிசத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. *15*

**15. கொழுப்பைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்**

உடற்பயிற்சி செய்யாததினாலும், பகலில் உறங்குவதாலும், கொழுப்பை வளர்க்கும் உணவு வகைகளை மிகுதியாக உண்பதாலும், கள் அதிகமாக அருந்துவதாலும் கொழுப்பைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. *16*

**16. எலும்பைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்**

உடற்பயிற்சி செய்வதாலும், உடல் உறுப்புக்களை வருத்தக் கூடிய செயலைச் செய்வதாலும், எலும்புகளில் உராய்வு ஏற்படுவதினாலும், அடிபடுவதாலும், வாதத்தை வளர்க்கக்கூடிய உணவு வகைகளை உண்பதாலும், எலும்பைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. *17*

**17. எலும்புக்குள்ளிருக்கும் சோற்றை (மஜ்ஜை) தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்**

நசுங்கிப் போவதாலும், கபம் மிகுதியாவதாலும், அடிபடுவதாலும், உடலை வருத்துவதாலும், பொருந்தாத பொருட்களைப் பயன்படுத்துவதனாலும், மஜ்ஜையைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. *18*

**18. விந்துவைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்**

தகாத காலத்தில் புணர்வதாலும், மனித இனமற்றவைகளிடம் புணர்வதாலும், விந்துவை அடக்குவதாலும், அதிகப் புணர்ச்சியினாலும், ஆயுதம் க்ஷாரப்பொருட்கள் நெருப்பு இவற்றால் தாக்கப்படுவதாலும், விந்துவைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. *19*

## 19. சிறு நீரைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்

தானாக வெளிவரும் சிறுநீரை அடக்கிக்கொண்டு நீர் பருகுவதாலும், உணவு உண்பதாலும், புணர்ச்சி செய்வதாலும், சிறுநீரை அடக்குவதாலும், உடல் மெலிவாலும், வலிவின்மையாலும், சிறுநீரைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. 20

## 20. மலத்தைத் தாக்கும் ஸரோதஸ்கள் கேடடையக் காரணம்

மலப் போக்கை அடக்குவதாலும், அதிக உணவு உண்பதாலும், அசீரணத்தாலும், உண்டவுடன் மறுபடியும் உண்பதாலும், சடராக்னிக் குறைவாலும், உடல் மெலிவாலும் மலத்தைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. 21

## 21. வியர்வையைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடையக் காரணம்

அதிக உழைப்பாலும், வெயிலில் அதிகம் அலைவதாலும், குளிர்ச்சியும் உஷ்ணமும் உள்ள உணவுப்பொருட்களை முறை கேடாக உண்பதாலும், சினம் வருத்தம் அச்சம் இவற்றாலும் வியர்வையைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. 22

## 22. ஸ்ரோதஸ்கள் கேடடையப் பொதுக் காரணங்கள்

வாதம் பித்தம் கபம் என்ற தோஷங்களுக்கு சமகுணமுள்ள உணவுவகை, பழக்க வழக்கங்கள், தாதுக்களுக்கு எதிரிடையான உணவு வகை இவைகளை கடைபிடிப்பதனாலும் பொதுவாக ஸ்ரோதஸ்கள் கேடடைகின்றன. 23

## 23. ஸ்ரோதஸ்கள் கேடடைவதன் இலக்கணம்

சிறுநீர் மலம் போன்றவை அதிகம் வெளிப்படுதல், அல்லது முற்றிலும் தடைபடுதல், நரம்புகளில் முடிச்சுகள் தோன்றுதல், மலம் போன்றவை நேர்வழிச் செல்லாமை இவை ஸ்ரோதஸ்கள் கேடடைவதின் இலக்கணமாகும். 24

## 24. ஸ்ரோதஸ்களின் உருவம்

எல்லா ஸ்ரோதஸ்களும் அந்தந்த தாதுக்களுக்கு ஏற்றவாறு நிறம் உருண்டை வடிவம் பருமன், நுண்ணிய உருவம் இவை உடையதாகவும், கொடிபோல் நீண்டதாகவும் இருக்கும். 25

## 25. கேடடைந்த ஸ்ரோதஸ்களுக்கு சுருக்கமான சிகிச்சை

உயிரைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்து நோயுண்டானால் சுவாச நோய்க்குள்ளான சிகிச்சையையும், நீர் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்தால், தாகத்தைத் தணியச் செய்யும் சிகிச்சையையும் உணவு தங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்தால்

அசீர்ணத்தைப் போக்கும் சிகிச்சையையும் கையாள வேண்டும். 26

ரசம் போன்ற ஸ்ரோதஸ்கள் கேடடைந்தால் விவிதாசித பீதீயம் எனும் 28வது அத்தியாயத்தில் கூறப்பட்ட சிகிச்சையை அததற்குத் தக்கவாறு கையாள வேண்டும். 27

சிறுநீர் மலம் வியர்வை இவற்றைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்தால் முறையே சொட்டு நீர்நோயைப் போக்கும் சிகிச்சையையும், மலம் அதிகரிப்பதில் தோன்றும் நோய்க்கான சிகிச்சையையும், வியர்வையைத் தாங்கும் ஸ்ரோதஸ்கள் கேடடைந்தால் காய்ச்சலுக்குக் கூறிய சிகிச்சையையும் செய்ய வேண்டும். 28

**முடிவுரை**

பதிமூன்றுவிதமான ஸ்ரோதஸ்களின் தங்குமிடங்கள், அவை கேடடைவதின் இலக்கணம், பொதுவாக ஸ்ரோதஸ்களின் மாற்றுப் பெயர்கள், அவை ஒன்றுக்கொன்று சீற்றமடையக் காரணம், தோஷங்கள் தனித்தனியாக சீற்றமடைவதற்குக் காரணம், சுருக்கமாகக் கேடடைந்த ஸ்ரோதஸ்களுக்கான சிகிச்சை இவ்வத்தியாயத்தின் தொடக்கத்தில் மனிதன் ஸ்ரோதஸ்களின் கூட்டம் என்பதைப் பற்றிய கருத்துரை போன்றவை இந்த ஸ்ரோதோ விமான அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. 29-30

உடலைப் பற்றியும், உடலில் தோன்றும் எல்லா நோய்களைப்பற்றியும் அறிந்த மருத்துவன் சிகிச்சையில் ஒருகாலும் மதியிழக்கமாட்டான். 31

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் விமான
ஸ்தானத்தில் ஸ்ரோதோ விமானம்
எனும் ஐந்தாவது அத்தியாயம்
முற்றும்.

## ஆறாம் அத்தியாயம்

# *ரோகாநீக விமானம்

*ரோகாநீகம் எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1—2

### 1. நோய்களின் பிரிவுகள்

**பிரபாவத்தை** (சிறப்புத்தன்மை) முன்னிட்டு சிகிச்சைக்குக் கட்டுப்பட்டவை கட்டுப்படாதவை என எல்லாப் பிணிகளும் இருவகையாகப் பிரிக்கப்படுகின்றன.

**வலிவை** முன்னிட்டும் எளியவை கடினமானவை என எல்லா நோய்களும் இருவகையாகப் பிரிக்கப்படுகின்றன.

**இருப்பிடத்தைக் கொண்டும்** மனதைச் சார்ந்தவை, உடலைச் சார்ந்தவை என எல்லா வியாதிகளும் இருவகையாகப் பிரிக்கப்படுகின்றன.

**காரணத்தை முன்னிட்டும்** தாதுக்கள் கோளாறடைவதனால் தோன்றுபவை, எதிர்பாராத காரணத்தால் தோன்றுபவை என இரண்டு வகையாக நோய்கள் பிரிக்கப்படுகின்றன.

**உறைவிடத்தைக் கொண்டும்** இரைப்பையில் தோன்றியவை, சிரணப்பையில் தோன்றியவை என நோய்கள் இரு கூறுகளாகப் பிரிக்கப்படுகின்றன.

இவ்வாறு பிரபாவம் வலிமை இருப்பிடம் காரணம் உறைவிடம் இவற்றைக் கொண்டு நோய்கள் இரண்டு இரண்டு வகையாகப் பிரிக்கப்பட்ட போதிலும் வேறு காரணங்களால் நோய்கள் பலவகையாகவும் எல்லாக் காரணங்களையும் ஒன்று சேர்ப்பதால் ஒன்றாகவும் நோய்கள் கருதப்படுகின்றன.

துன்பத்தைத் தரக்கூடியது என்ற ஒரே காரணத்தினால் நோய்கள் யாவும் ஒன்றே. ஆனால் பிரபாவம் போன்ற காரணங்களால் நோய்கள் பத்து வகைகளாகின்றன. அதுவும் பலவகை, பலவகையும் கணக்கிடக்கூடியவை கணக்கிட முடியாதவை.

---

***ரோக-ஆநீகம் — ரோகாநீகம் —** நோய்களின் கூட்டம் என்பது பொருள். இதைப் பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

இவற்றில் கணக்கிடக்கூடிய நோய்களைப் பற்றி **அஷ்டோ தரீயம்** எனும் ஸூத்ரஸ்தானம் 19வது அத்தியாயத்தில் விளக்கப் பட்டுள்ளது.

கணக்கிட இயலாத நோய்களைப் பற்றி **மகாரோகாத்யாயம்** எனும் ஸூத்ரஸ்தானம் 20ம் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள் ளது. *3*

## 2. பலவகைப் பிரிவுகளுக்குக் காரணம்

வேதனை, நிறம், காரணம் இவை கணக்கற்றவைகளாக இருப்பதனால் நோய்களும் கணக்கற்றவைகளாகின்றன.

நோய்களைக் கணக்கிடக்கூடாதவை கணக்கிடக்கூடியவை என்று கூறுவது ஒன்றுக்கொன்று முரணான வார்த்தை அல்ல. நோய்களின் எண்ணிக்கை எக்காரணங்களால் தீர்மானிக்கப்பட் டுள்ளனவோ அதே காரணங்களால் நோய்கள் கணக்கிட முடியா தவை எனக் கூறவில்லை.

இங்கு பிரபாவம் வலிவு இருப்பிடம் காரணம் உறைவிடம் என்ற இவற்றின் பிரிவினால் இரண்டு இரண்டாக நோய்கள் பிரிக்கப்படுகின்றன. அவை எல்லாம் சேர்ந்து பத்துப் பிரிவுகளா கின்றன.

ஆனால் ஒரே இடத்தில் இவைகளைச் சொல்ல முடியாது. ஏனென்றால் எந்த நோய் பிரபாவத்தின் பிரிவினால் சிகிச்சைக்குக் கட்டுப்பட்டது கட்டுப்படாதது என இருவகையாக ஆகின்றதோ அதே வியாதி வலிமையின் பிரிவினால் மிருதுவாகவும் கடினமாக வும் ஆக முடியும். அல்லது இருப்பிடத்தின் பிரிவினால் உடலைச் சார்ந்தது, மனதைச் சார்ந்தது எனப் பிரிக்க முடியும். ஆகையால் மேலே கூறப்பட்ட ஐந்து காரணங்களைக் கொண்டு நோய்கள் பத்துவகை எனக் கூறுவது சரியல்ல.

உதாரணமாக ஒருவனிடம் நோய்கள் எத்தனை வகை எனக் கேட்டால் அவன் உடலைச் சார்ந்தது மனதைச் சார்ந்தது என இரண்டு வகைப்படும் எனக்கூறுவான்.

மற்றொருவனிடம் கேட்டால் தோஷங்களால் ஏற்படக்கூடி யது எதிர்பாராத காரணத்தால் ஏற்படக் கூடியது என இரு வகைப்படும் என்று கூறுவான்.

மூன்றாமவன், தோஷங்களால் ஏற்படுவது செயல்களால் ஏற் படுவது தோஷம், செயல் இரண்டினாலும் ஏற்படக்கூடியது என மூவகைப்படும் என்று கூறுவான்.

நான்காமவன், உடலைச் சார்ந்தது மனதைச் சார்ந்தது தோஷங்களால் ஏற்படக்கூடியது, எதிர்பாராத காரணங்களால் ஏற்படக்கூடியது என நான்கு வகைப்படும் எனக் கூறுவான்.

இந்த நான்கு பேர்களுடைய கருத்துகளிலும் விரோதம் கிடையாது. ஏனென்றால் சொல்லுகிறவன் சுதந்திரமுள்ளவன். அவன் எந்தக் காரணங்களைக் கொண்டு நோய்களைப் பிரிக்கிறானோ எந்தக் காரணங்களைக்கொண்டு இரண்டு எனக் கூறுகிறானோ அதே காரணங்களால் நோய் ஒன்று எனக் கூறினாலும், எந்தக் காரணங்களால் நோய்கள் மூன்று என்று கூறுகிறானோ அதே காரணங்களால் இரண்டு என்று கூறினாலும் விரோதமாகலாம். இங்கு வெவ்வேறு காரணங்களால் நோய்கள் இரண்டு வகை எனக் கூறப்பட்டன. அதனால் விரோதமில்லை. மேலும் ஒரே சொல்லிற்கு பல அர்த்தங்கள் உண்டு. அதேபோல் பல சொற்களுக்கு ஒரே அர்த்தமும் உண்டு. தோஷம் வியாதி இரண்டிலும் ரோகம் என்ற ஒரே சொல் ஒரேவிதமாகக் கூறப்படுகிறது.

தோஷம் என்ற சொல்லும் ரோகம் ஆதங்கம் யக்ஷ்மா தோஷப்ரவிருத்தி விகாரம் என்ற பெயர்களை அடைகின்றது. இதேபோல் தோஷங்களிலும் வியாதிகளிலும் ரோகம் என்ற சொல்ஒன்றாகஉள்ளது. மற்றஅர்த்தங்களில் அதுவேறு படுகிறது. 4

## 3. மனதைச் சார்ந்ததும் உடலைச் சார்ந்ததுமான தோஷங்கள்

நோய் தோஷம் இவற்றுள் மிக அதிகமாக இருப்பதை வைத்து நோய்கள் கணக்கிட முடியாதவை. மிக அதிகமாக இல்லாமையை வைத்து தோஷங்கள் கணக்கிடக் கூடியவை. எனவே உதாரணத்திற்காக நோய்களையும் தோஷங்களையும் பற்றி விளக்கமாக விவரிப்போம்.

ரஜோகுணம், தமோகுணம் என இவ்விரண்டும் மனதில் ஏற்படக்கூடிய தோஷங்கள் இவற்றால் தோன்றும் நோய்கள் காமம் சினம் பேராசை அறிவிழத்தல் பொறாமை அகங்காரம் மதம் வருத்தம் கவலை மன எழுச்சி பயம் மகிழ்ச்சி போன்றவை.

வாதம் பித்தம் கபம் இம்மூன்றும் உடலைச் சார்ந்த தோஷங்கள். இவற்றால் தோன்றும் நோய்கள் காய்ச்சல் கழிச்சல் வீக்கம் உடல்உருக்கி சுவாசம் நீரழிவு குஷ்டம் போன்றவை.

இவ்விதமாக தோஷங்கள் முழுமையாக விளக்கப்பட்டுள்ளன. நோய்களைப்பற்றி சிறிதளவே கூறப்பட்டுள்ளது. 5

உடலைச் சார்ந்தவையும் மனதைச் சார்ந்தவையுமான தோஷங்கள் சீற்றமடையக் காரணங்கள் மூன்று. அவை [1]**அஸாத்ம்யேந்திரியார்த்த ஸம்யோகம்**, [2]**பிரக்ஞாபராதம்**, [3]**பரிணாமம்** என்பவை. 6

தோஷங்களின் கணக்கிலடங்கும் தன்மையை வைத்து நோய்களும் கணக்கிடக்கூடியவையாக இருக்க வேண்டுமே என்ற வாதம் சரியல்ல. ஏனெனில் சீற்றமடையச் செய்கிற பலவிதக் காரணங்களாலும், ரசம் இரத்தம் மாமிசம் போன்ற தூஷ்யங்களின் வேறுபாட்டினாலும் சீற்றமடைந்த தோஷங்கள் கணக்கற்ற நோய்களைத் தோற்றுவிக்கின்றன. ஆகையினால் நோய்கள் கணக்கற்றறவை. 7

காய்ச்சல் போன்ற உடலைச் சார்ந்த நோய்களும் காமம் கோபம் போன்ற மனதைச் சார்ந்த நோய்களும் ஒன்றுக்கொன்று தொடர்ந்து சில சமயத்தில் ஒன்று சேருகின்றன. 8

ரஜோகுணமில்லாமல் தமோகுணம் ஏற்படாதாகையால் ரஜோ குணமும் தமோகுணமும் இடைவிடாமல் சேர்ந்திருக்கின்றன. பெரும்பாலும் ஒரே இடத்தில் தங்குகின்ற உடலின் தோஷங்களான வாத பித்த கபங்கள் சமான குணங்களைப் பெற்றிருப்பதால் மூன்றின் சேர்க்கையோ அல்லது இரண்டின் சேர்க்கையோ ஏற்படுகிறது. ஏனெனில் அவற்றில் தோஷங்களைக் கெடுக்கும் பொது குணங்கள் உள்ளன. 9–10

**அநுபந்த்யம்** என்றால் முக்கியமானது. **அநுபந்தம்** என்றால் சேர்க்கை.

**ஸன்னிபாதம்** (*மூன்று தோஷங்களின் சேர்க்கை.*) **ஸம்ஸர்கம்** (இரண்டு தோஷங்களின் சேர்க்கை) இவற்றால் தோன்றும் நோய்களில் அநுபந்த்யம், அநுபந்தம் என்ற இரண்டு வேறுபாடுகள் உள்ளன.

சுதந்திரமாகவும் வெளிப்படையாகவும் தோன்றும் இலக்கணங்களை உடையவையும் தோஷங்களையும் நோய்களையும் தோற்றுவிக்கக் கூடியவையுமான எத்தனை காரணங்கள் ஆயுர்வேத நூலில் கூறப்பட்டுள்ளனவோ, அக்காரணங்களால் தோன்றி அந்த தோஷங்கள் அல்லது நோய்களைத் தணியச் செய்யக்கூறப்பட்டுள்ள வழிமுறைகளால் தணிவது அநுபந்த்யம் எனப்படும். இதற்கு எதிரிடையான இலக்கணங்கள் உடையதை அநுபந்தம் என்கிறோம். இவற்றில் தோஷங்கள் அநுபந்த்ய

---

1. **அஸாத்ம்யேந்திரியார்த்த ஸம்யோகம்** – புலன்களைத் தகாத இடத்தில் செலுத்துதல்.
2. **பிரக்ஞாபராதம்** – மதியிழத்தல்.
3. **பரிணாமம்** – காலமாறுபாடு.

இலக்கணங்களுடன் கூடியிருந்தால் அவற்றை மூன்று தோஷங்களின் சேர்க்கையிலான ஸன்னிபாதம் என்றும் இரண்டு தோஷங்களின் சேர்க்கையிலானால் ஸம்ஸர்கம் எனவும் கூறலாம். 11

அநுபந்த்யம் அநுபந்தம் இவற்றின் பிரிவுகளால் தோஷங்களின் பிரிவுகளும் பலவிதங்களாகின்றன.

இவ்வாறு தோஷங்கள் நோய்கள் இவற்றில் பல காரணங்கள், தோஷங்களின் பிரிவினால் தோன்றும் நோய்கள், தோஷங்களின் கூட்டம் இவற்றை மருத்துவர்களுக்குப் பெயர்கள் மூலமாக அறிவிக்கப்படுகிறது.

## 4. சடராக்னியின் பிரிவுகள்

மனிதர்களின் உடலில் உள்ள சடராக்னி பலத்தின் பிரிவினால் நான்குவிதமாகப் பிரிக்கப்படுகிறது. அவை **தீக்ஷ்ணம்** (கடுமையானது) **மந்தம்** (வலிவு குறைந்தது) **ஸமம்** (நடுநிலையில் உள்ளது) **விஷமம்** (நடுநிலையற்றது).

இவற்றில் **தீக்ஷ்ணமான சடராக்னி** கட்டுப்பாடற்ற எல்லா உணவு வகைகளையும் சீரணிக்கச் செய்கிறது.

**மந்தம்** என்ற சடராக்னி இதற்கு எதிரிடையான இலக்கணங்களை உடையது. அதாவது கட்டுப்பாடற்ற உணவு வகைகளைச் சிறிதளவும்கூட சீரணிக்கச் செய்யாது.

**ஸமம் என்ற சடராக்னி** தகாத உணவு வகைகளை உண்பதினால் கேடடைகிறது. தகுந்த உணவு வகைகளை உண்பதினால் தன் இயற்கை நிலையைப் பெறுகிறது.

**விஷமம் என்ற சடராக்னி** ஸமம் என்ற சடராக்னியின் எதிரிடையான இலக்கணங்களை உடையது.

அவ்வாறு நான்கு வகையான சடராக்னியை உடையவர்கள் மனிதர்கள். அதாவது மனிதனிடத்தில் நால்வகையான சடராக்னிகளில் ஏதாவது ஒரு அக்னி இருக்கும்.

சமமான வாத பித்த கப தோஷங்கள் இயற்கை நிலையில் உள்ளவர்களிடம் **சமம் என்ற சடராக்னி** காணப்படும்.

வாதம் அதிகமாகவுள்ள மனிதர்களிடம் சடராக்னி வாதத்தினால் சூழப்பட்டிருந்தால் அது **விஷம சடராக்னி** ஆகும்.

பித்தம் அதிகமாயுள்ள மனிதர்களிடம் சடராக்னி பித்தத்தினால் சூழப்பட்டிருந்தால் அது **தீக்ஷ்ணம்** என்ற சடராக்னி ஆகும்.

கபம் அதிகமாயுள்ள மனிதர்களிடம் சடராக்னி பித்தத்தினால் சூழப்பட்டிருந்தால் அது **மந்த சடராக்னி** ஆகும்.

மனிதர்கள் பலவகையான வெவ்வேறு உணவுகளை உண்கின்றனர். அதனால் சிலர் வாதம் உள்ளவர்களாகவும் சிலர்

பித்தம் உள்ளவர்களாகவும், கபம் உள்ளவராகச் சிலரும் காண்கின்றனர். எனவே மனிதர்கள் சமமான வாத பித்த கபங்களை உடையவர்கள் எனச் சிலர் கூறுவது சரியல்ல. 12

இயற்கை நிலையே ஆரோக்யம் என்பதால் சமமான வாத பித்த கபம் உள்ளவர்களை மருத்துவர்கள் நோயற்றவர்கள் எனக் கருதுகின்றனர். ஏனென்றால் ஆரோக்யமாக இருப்பதற்காகத் தான் மருந்துகள் அளிக்கப்படுகின்றன. எனவே சமமான வாத பித்த கபம் உடையவர்கள் உள்ளனர். வாதப்ரகிருதி, பித்த ப்ரகிருதி, கபப்ரகிருதி என ஒன்றை மட்டும் கொண்டவன் ஒருவனும் இருக்க முடியாது.

குறிப்பிட்ட தோஷம் மிகுந்திருப்பதைக் கொண்டு அந்த தோஷப்ருகிருதி (உடலின் இயல்பு) எனக் கூறப்படுகிறது. தோஷங்கள் தீமையை அடைந்திருந்தால் ப்ரகிருதி உள்ளவன் எனக் கூற முடியாது. சித்தாந்தத்தில் இவர்களை ப்ரகிருதி என ஒப்புக் கொள்வதில்லை. ஆனால் வாதம் பித்தம் கபம் உள்ள மனிதர்கள் உள்ளனர். அவர்களை ப்ரகிருதியற்றவர்கள் என அறிந்து கொள்ள வேண்டும். 13

மேலும் சமதோஷ உடல் இயல்புடையவன் வாததோஷ உடல் இயல்புடையவன் பித்த தோஷ உடல் இயல்புடையவன் கபதோஷ உடல் இயல்புடையவன் என நான்கு வகையான முறைகளைக் கடைபிடிப்பது நன்மை பயக்கக் கூடியது. அவற்றில் வாதம் பித்தம் கபம் இம்மூன்றும் சம நிலையில் உள்ளவர்கள், மேற்கண்டவற்றிற்கு சமமாக உள்ள உணவு வகைகள் பழக்க வழக்கங்கள் இவற்றைக் கைக்கொள்ள வேண்டும்.

வாதம் பித்தம் கபம் என்ற மூன்று தோஷங்களும் அதிகமுள்ளவர்களின் அந்தந்த தோஷங்களின் அதிகத்தைக் கண்டறிந்து மூன்று தோஷங்களுக்கு எதிரிடையான உணவு வகைகளையும் பழக்க வழக்கங்களையும் சடராக்னி சமமான நிலையை அடையும் வரை கடைப்பிடிப்பது நன்மை பயக்கக்கூடியது. சடராக்னி சம நிலையிலிருந்தால் சமமான உணவு வகைகளைப் பயன்படுத்த வேண்டும்.

இவ்விதமாக மற்ற உடலின் செயல் மருந்து போன்றவற்றை கவனித்து தோஷங்களுக்குத் தக்கவாறு செயல்படுத்த வேண்டும்.

இதைப் பற்றி விளக்கமாகக் கூறுவோம். 14

மூன்று வகையான மனிதர்கள் எப்பொழுதும் நோயுள்ளவர்களாகக் கருதப்படுகின்றனர். அவர்கள் வாதம் மிகுந்தவர் பித்தம் மிகுந்தவர் கபம் மிகுந்தவர்.

மற்ற ஆயுர்வேத நூல்களை அறிந்த மருத்துவர்கள் இவர்களை நோயாளிகளாகக் கருதுவதில்லை.

மூன்று வகை நோயாளிகளின் இலக்சணமாவது வாதம் மிகுந்தவனுக்கு வாதத்தின் காரணத்தினால் நோய் தோன்றும். பித்தம் மிகுந்தவனுக்கு பித்தத்தின் காரணத்தால் பிணி தோன்றும். கபம் மிகுந்துள்ளவனுக்கு கபத்தின் காரணத்தால் நோய் தோன்றும். இவர்களின் நோய்கள் பெரும்பாலும் கடுமையானவை. 15

## 5. வாதம் மிகுந்தவனுக்குத் தோன்றும் நோயும் அதற்கான கிசிச்சையும்

**வாதம் மிகுந்தவன் :** வாதத்தைச் சீற்றமடையச் செய்யும் பொருட்களைப் பயன்படுத்துவதனால் அது விரைவில் சீற்றமடைகிறது. மற்ற பித்தம் கபம் இரண்டும் அவ்வளவு விரைவில் சீற்றமடைவதில்லை.

அந்தச் சீற்றமடைந்த வாதம், வாதம் மிகுந்தவனுடைய உடலில் வலிவு நிறம் இன்பம் ஆயுள் இவற்றை அழிக்கிறது. அது வாதத்தினால் உண்டாகும் பலவித நோய்களைத் தோற்றுவித்து உடலையும் வருத்துகிறது.

**அதற்கான சிகிச்சைகளாவன:** எண்ணெய்ச் சிகிச்சை வியர்வை உண்டாக்கும் சிகிச்சை இவற்றைச் முறைப்படி செய்தல் மேலும் நைப்புத்தன்மை உஷ்ணம் போன்ற குணங்களுடன் கூடிய உணவு வகை எண்ணெய் தேய்த்துக் குளித்தல் ஒத்தடம் கொடுத்தல் கட்டுப்போடுதல் பிடித்து விடுதல் சூடான கஷாயத்தை மேலிருந்து உடல் மேல் ஊற்றுதல் கஷாயத்தில் அமிழ்ந்திருக்கச் செய்தல் மெள்ளப் பிடித்துவிடுதல் அழுத்துதல் அச்சம் விளைவித்தல் திகைப்பு தோற்றுவித்தல் மறக்கச் செய்தல் கள் ஆஸவம் போன்ற மயக்கத்தைத் தோற்றுவிக்கும் பொருட்களைப் பருகச் செய்தல் சடராக்னியைத் தூண்டக் கூடியதும் சீரணத்தை உண்டாக்கக் கூடியதும் வாதத்தை நீக்கக் கூடியதும் பேதி ஆகக் கூடியதுமான பலவித மருந்துப் பொருட்களால் தயாரித்த எண்ணெய் வகைகளைப் பயன்படுத்துதல் முதலியனவும் செய்ய வேண்டும்.

மேலும் வாதத்தை நீக்கும் பொருட்களால் நூறு முறை அல்லது ஆயிரம் முறை பாகம் செய்து தயாரித்த எண்ணெய் வகையை எல்லாமுறைகளிலும் பயன்படுத்த வேண்டும். வஸ்தி சிகிச்சை செய்து அச்சிகிச்சைக்குக் கூறிய கட்டுப்பாடுகளையும் செய்வித்து நோயாளியை இளைப்பாறச் செய்ய வேண்டும். 16

## 6. பித்தம் மிகுந்தவனுக்குத் தோன்றும் நோயும் அதற்கான சிகிச்சையும்

பித்தம் இயற்கையில் மிகுந்தவன் : பித்தத்தைச் சீற்றமடையச் செய்யும் பொருட்களைப் பயன்படுத்துவதால் பித்தம் விரைவில் சீற்றமடைகிறது. மற்ற வாதம் கபம் இரண்டும் அவனிடம் அவ்வளவு விரைவில் சீற்றமடைவனவல்ல.

அந்த சீற்றமடைந்த பித்தம், பித்தம் மிகுந்தவனுடைய உடலில் வலிவு நிறம் இன்பம் ஆயுள் இவற்றை அழிப்பதுமன்றி பித்தத்தினால் தோன்றும் பலவித நோய்களை உண்டாக்கி உடலை வருத்துகிறது.

### அதற்கான சிகிச்சை

நெய் பருகுதல் நெய்யினால் உடலில் நைப்புத்தன்மை உண்டாக்குதல் மலத்துவாரத்தின் வழியாக மலம் கழிக்கச் செய்து தோஷங்களை வெளிப்படுத்துதல் இனிப்பு கைப்பு துவர்ப்பு இச்சுவையுள்ளவைகளையும் குளுமை தரும் மருந்து உணவு வகை போன்றவற்றையும் பயன்படுத்துதல். மேலும் மிருது, இனிமை நறுமணம் குளிர்ச்சி மனதிற்குப் பிடித்தது இவ்வாறான நறுமணப் பொருட்களை உபயோகப்படுத்துதல்.

மிக்கக் குளிர்ந்த நீரில் அமரச்செய்து முத்துமாலை மணி மாலை இவற்றை மார்பில் அணியச் செய்தல்.

அடிக்கடி சந்தனம் ஞாழல் வெண்சந்தனம் தாமரைத் தண்டு இவற்றை நன்கு அரைத்து மார்பில் அல்லது எந்த உறுப்பில் பித்தம் சீற்றமடைந்திருக்கிறதோ அந்த உறுப்பில் பூசதல் குளிர்ந்த காற்றுடன் கலந்த நீரினால் மார்பில் தெளித்தல் வாசனையுள்ள நீலத்தாமரை அல்லி செந்தாமரை மணம் வீசும் தாமரை சிறுதாமரை இவற்றை குளிர்ந்த நீரில் போட்டுக் குளிர்ச்சியாகச் செய்து அந்த நீரினால் உடலைக் கழுவுதல் அல்லது துணியில் நனைத்து உடலைத் துடைத்தல் எனும் சிசிச்சை முறைகளைக் கையாள வேண்டும்.

காதிற்கு இனிமை தரும் மிருதுவான இனிமையான மனதிற்குகந்த பாட்டு வாத்தியம் இவற்றைக் கேட்கச் செய்ய வேண்டும். சான்றோர் வாக்கைக் கேட்கச் செய்யவேண்டும்.

நண்பர்களுடன் கூடியிருத்தல் குளிர்ந்த பொருள்கள் நிறைந்த ஆடை ஆபரணங்கள் அணிந்துள்ள மனதிற்குகந்த பெண்களின் சேர்க்கை சந்திர கிரணங்களால் குளிர்ந்த கீழ்த்திசைக் காற்று வீசும் உப்பரிக்கையில் வசிப்பது மலைக்குகை மணற்திட்டு

குளிர்ந்த வீடு குளிர்ந்த ஆடை குளிர்ந்த காற்று வீசும் விசிறி இவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

இனிமை தருவதும் குளிர்ச்சியும் மணமும் பொருந்தியதும் சுகமாகக் காற்று வீசுவதுமான அழகான உத்யான வனத்தில் உலவச் செய்ய வேண்டும்.

நீலத்தாமரை தாமரை செந்தாமரை அல்லி மணம் வீசும் தாமரை வெண்டாமரை ரோஜா இம்மலர்களால் செண்டுகட்டி கையில் வைத்துக் கொள்ள வேண்டும்.

மகிழ்ச்சி தரும் எல்லாச் செயல்களிலும் ஈடுபடுத்த வேண்டும். இப்படிச் செய்வதால் பித்தம் தணிகிறது. 17

**7, கபம் மிகுந்தவனுக்கு ஏற்படும் நோயும் அதற்கான சிகிச்சையும்**

**கபம் மிகுந்தவன்** : கபத்தை சீற்றமடையச் செய்யும் பொருட்களைப் பயன்படுத்துவதால் கபம் விரைவில் சீற்றமடைகிறது. மற்ற வாதம் பித்தம் இரண்டும் அவ்வளவு விரைவில் சீற்றமடைவனவல்ல.

அந்தச் சீற்றமடைந்த கபம், கபம் மிகுந்தவனுடைய உடலில் வலிவு நிறம் இன்பம் ஆயுள் இவற்றை அழிப்பதோடு கபத்தினால் தோன்றும் பலவித நோய்களையும் ஏற்படுத்துகின்றது.

**அதற்கான சிகிச்சை**

அவனுக்குச சிச்கிசை முறைகள் : முறைப்படி கடினமாயும் உஷ்ணமாயும் உள்ள பொருட்களால் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும்.

உவர்ப்பு கைப்பு துவர்ப்பு இச்சுவையுள்ளவையும், பெரும்பாலும் வறட்சித்தன்மையை ஏற்படுத்தக்கூடியவையுமான உணவு வகைகளை உண்ணச் செய்ய வேண்டும்.

ஓடுதல் குதித்தல் நீந்துதல் அலைதல் கண் விழித்தல் குத்துச்சண்டையிடுதல் புணர்ச்சி உடற்பயிற்சி பிடித்துவிடுதல் நீராடுதல் அமுக்குதல் இவற்றைச் செய்ய வேண்டும்.

குறிப்பாக தீக்ஷ்ணமானவையும் பழமையானவையுமான கள் வகைகளை அருந்தச் செய்ய வேண்டும். புகைபிடிக்கச் செய்ய வேண்டும். முழுப் பட்டினி இருக்கச் செய்ய வேண்டும். உஷ்ணமான இடத்தில் வசிக்கச் செய்ய வேண்டும். அல்லது உஷ்ணம் தரும் ஆடை அணியச் செய்ய வேண்டும்.

நன்மை பெறுவதற்காகச் சோம்பலைப் போக்கும் பொருட்களைப் பயன்படுத்த வேண்டும். 18

எல்லா நோய்களின் மர்மங்களை அறிந்தவனும் எல்லாவகையான சிகிச்சையிலும் கைதேர்ந்தவனும் அனைத்து மூலிகைகளின் சிறப்பை அறிந்தவனுமான சிறந்த மருத்துவனே அரசனுக்கு உயிர் காப்பாளனாவான். 19

**முடிவுரை**

காரணத்தினால் பிரிவைக் கொண்டு நோய்க் கூட்டத்தைப் பற்றிய விளக்கம் நோய்களுள் ஒன்றுக்கொன்று பகைமையின்மை நோய்களுக்கும் தோஷங்களுக்கும் உள்ள பொதுத்தன்மை தோஷங்களின் எண்ணிக்கை நோய்களின் ஒரு பகுதி தோஷங்கள் சீற்றமடையக் காரணம் சடராக்னியைப் பற்றிய விளக்கம் உடலில் உள்ள சடராக்னியைக் காக்கும் வழி வாதம் பித்தம் கபம் மிகுந்துள்ள மனிதர்களுக்கு மருந்துவகை இவை யாவும் இந்த ரோகாநீகம் எனும் அத்தியாயத்தில் ஆத்ரேய மாமுனிவரால் விளக்கப்பட்டுள்ளன. 20–22

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் விமான
ஸ்தானத்தில் ரோகாநீகம் எனும் ஆறாம்
அத்தியாயம் முற்றும்.

## ஏழாவது அத்தியாயம்

# *வியாதிதரூபீய விமானம்

''வியாதிதரூபீயம்'' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1—2

### 1. இருவகை நோயாளிகள்

மனிதர்களிடையே தீவிரமான (குரு) நோயுள்ளவன் குறைவான (லகு) நோயுள்ளவன் என இருவகை நோயாளிகள் உள்ளனர். அதாவது ஒரே வகையான நோயினால் துன்பப்படுகிற இருவித மனிதர்கள் உள்ளனர். அவர்களில் ஒருவன் தீவிரமான நோயினால் துன்பப்பட்டாலும் மனஉறுதி வலிவு நல்ல உடல் நிலை இவற்றைக் கொண்டிருப்பதால் குறைவான நோயுள்ளவன் போல் காணப்படுகிறான். மற்றவன் குறைவான நோயினால் துன்பப்பட்டாலும் மன உறுதி வலிவு நல்ல உடல் நிலை இவை சரியாக இல்லாததினால் தீவிரமான நோயுள்ளவன்போல் காணப்படுகிறான்.

இந்த இருவகை நோயாளிகளைக் கண்களால் மட்டும் பார்த்து நோய் தீவிரமானது குறைவானது எனத் தீர்மானிப்பதில் திறமையற்ற மருத்துவர்கள் ஏமாந்துவிடுகிறார்கள். 3

நோயை நிதானஸ்தானத்தில் கூறப்பட்டுள்ள காரணம் முற்குறி குறிகள் ஒப்புதல் நோய் தோன்றும் விதம் என இவ்வைந்து காரணங்களாலும் சான்றோர் வாக்கு கண்ணால் காண்பது ஊகம் என்ற மற்ற மூன்றாலும் கண்டுகொள்ள வேண்டும்.

அப்படியிருக்கக் கண்ணால் பார்ப்பது என்ற ஒரே காரணத்தால் நோயைத் தீர்மானிப்பது சரியல்ல. அப்படித் தீர்மானித்து விட்டால் சிகிச்சை செய்வதிலும் தவறுதல் ஏற்பட்டுவிடும். அதனால் தீவிரமான நோயைக் குறைவான நோய் எனவும் குறைவான நோயைத் தீவிரமான நோய் எனவும் தீர்மானித்து விடுகின்றனர். அப்பொழுது நோயின் உண்மையான அறிவு இல்லாததினால் தீவிரமான நோய்க்குச் செய்ய வேண்டிய வாந்தி பேதி இவற்றிற்குப் பதிலாகக் குறைந்த நோய் உள்ளவனுக்குக்கொடுக்க

---

*வியாதிதரூபீயம் — இரண்டு வகையான நோயாளிகளைப் பற்றி விவரிக்கப்படுவதால் இவ்வத்தியாயம் இப் பெயர் பெறுகிறது.

வேண்டிய வாந்தி-பேதி முறைகளைக் கையாண்டு விடுகின்றனர். அதனால் மேலும் தோஷங்கள் அதிகரித்துவிடுகின்றன.

அதேபோல் குறைவான நோய்க்குச் செய்ய வேண்டிய வாந்தி பேதி இவற்றிற்குப் பதிலாகத் தீவிரமான நோய் உள்ளவனுக்குக் கொடுக்க வேண்டிய வாந்தி—பேதி முறைகளைக் கையாண்டு விடுகின்றனர். இவ்வாறு தவறாகக் கையாளும் முறை, தோஷங் களை வெளிப்படுத்தாமல் உடலை வருத்துகிறது.

நோயை அறிய ஒரு காரணத்தை மட்டும் பயன்படுத்தித் தம்மை அறிவாளிகளாக நினைக்கும் மருத்துவர்கள் சிகிச்சை யில் தவறி விடுகிறார்கள்.

அறிய வேண்டியதை நன்கு அறிந்த மருத்துவர்கள் எல்லா வற்றையும் எப்பொழுதும் எவ்விதத்திலும் முடிந்தவரை பரி சோதிக்க வேண்டியவற்றை ஆராய்வதால் சிகிச்சையில் ஒரு பொழுதும் ஏமாற்றமடைவதில்லை. தாம் விரும்பும் பயனையும் அடைகிறார்கள். 4

### அதைப்பற்றிய செய்யுட்கள்

திறமையற்ற மருத்துவர்கள் நோயாளியின் மனம் உடல் வலிவு இவற்றின் மாறுபாட்டினால் நோயின் நிலையைக் கண்டு நோயின் கடுமை எளிமை கண்டு கொள்வதில் ஏமாற்றமடை கின்றனர். அவர்கள் அறிவின்மையினால் மதியிழந்து தவறான மருந்தைக் கொடுத்து விடுகிறார்கள். அந்த மருந்து நோயா ளிக்குத் துன்பத்தையும் அழிவையும் ஏற்படுத்துகிறது. 5—6

அறிவாளிகளான மருத்துவர்கள் சோதிக்க வேண்டிய எல்லா வற்றையும் எல்லா வகையிலும் நன்கு சோதித்து மருந்தைப் பயன் படுத்துவதில் ஒருபொழுதும் தவறபாட்டார்கள். 7

## 2. இருபது வகை கிருமிகளால் தோன்றும் நோய்கள்

இவ்விதம் **வியாதிதரூபீய அதிகாரத்தில்** தீவிரமானது (குரு) குறைவானது (லகு) என்ற இருவகை நோய்கள் அவற்றால் தோன்றக்கூடியவை நோயாளியாவதற்குக் காரணம் அவற்றை மருத்துவர்கள் அறிந்துகொள்ளாமைக்குக் காரணம் தவறாக அறிந்துகொள்ளும் காரணம் சிகிச்சையில் ஏமாற்றமடை வதற்குக் காரணம் தவறில்லாமல் சிகிச்சை செய்யும் முறைகள் எல்லாவற்றையும் கேட்டறிந்த அக்னிவேசர் ஆத்ரேயரிடம் அடி பணிந்து மலத்தில் பலவகையான கிருமிகள் தோன்றுவதற்குக் காரணம் இடம் உருவம் நிறம் பெயர் அவற்றின் சிறப்புத் தன்மை சிகிச்சை ஆகியவற்றைக் குறித்து வினவினார். 8

இவ்விதம் கேட்ட அக்னிவேசரைக் குறித்து மதிப்பிற்குரிய ஆத்ரேயர் கூறியதாவது :- இயற்கையாகவே உடலில் உள்ள கிருமிகளைத் தவிர மற்ற பலவகைப் பிரிவுகளையுடைய இருபது வகையான கிருமிகளைப் பற்றி ஸூத்ர ஸ்தானத்தில் **'அஷ்டோ தரீயம்'** எனும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன. அந்தக் கிருமிகள் காரணங்களுக்கு ஏற்றவாறு பிரிக்கப்பட்டு மலத்தில் தோன்றுபவை கபத்தில் தோன்றுபவை இரத்தத்தில் தோன்றுபவை உடல் அழுக்கில் தோன்றுபவை என நால்வகையாகப் பிரிக்கப்படுகின்றன. 9

### 3. வெளியிலும் உள்ளும் தோன்றும் கிருமிகள்

வெளிப்புறம் தோன்றுவது உட்புறம் தோன்றுவது என மலம் இருவகைப்படும். அவற்றில் வெளிப்புறம் தோன்றும் மலத்தில் உண்டாகும் கிருமிகளைப் பற்றி விளக்குவோம்.

தூய்மையற்றிருத்தல் இந்தக் கிருமிகள் உண்டாவதற்குக் காரணமாகிறது. தலைமயிர் மீசை மயிர்க்கால்கள் இமைகள் கந்தல் ஆடை இவை இக்கிருமிகள் தங்குமிடமாகும்.

இவற்றின் உருவம் மிகச்சிறியதாகவும் எள்போன்றும் இருக்கும். இவற்றிற்குப் பல கால்கள் உண்டு.

கருப்பு வெளுப்பு இவற்றின் நிறமாகும்.

பேன்கள் (யூகா:) ஈறுகள் (பிபீலிகா): இவற்றின் பெயர்கள்.

அரிப்பு உண்டாக்குதலும் கொப்புளம் சிறுகட்டிகள் இவற்றைத் தோற்றுவித்தலும் இவற்றின் செயல்கள்.

இவற்றை வெளி எடுத்தல் உடல் அழுக்கை நீக்குதல் அழுக்கு ஏற்படுத்தும் செயல்களை விட்டுவிடுதல் ஆகியவை இவற்றிற்கான சிகிச்சைகளாகும். 10

### 4. இரத்தத்தில் தோன்றும் கிருமிகள்

குஷ்டத்தைத் தோற்றுவிக்கும் கிருமிகள் உண்டாவதற்குக் காரணமானதாலேயே இரத்தத்தில் கிருமிகள் தோன்றுகின்றன.

இரத்தத்தைத் தாங்கும் குழாய்கள் அந்தக் கிருமிகளுக்கு இருப்பிடமாகும். அக்கிருமிகளின் உருவம் நுட்பமாகவும் உருண்டையாகவும் கால்கள் அற்றும் அமைந்திருக்கும்.

அந்தக் கிருமிகள் மிக நுட்பமாக இருப்பதால் கண்களுக்குட் புலப்படாதவை எனச் சிலர் கருதுகின்றனர். தாமிரத்தைட்

போன்ற செந்நிறமுடையவை அவை, [1]**கேசாதம்** [2]**லோமாதம்** [3]**லோம த்வீபம் ஸௌரஸம், ஐந்த்ரு மாத்ரு** என அக்கிருமி களின் பெயர்களாகும். புண்ணில் இந்தக் கிருமிகள் தங்கியிருந் தால் மயிர்க்கூச்சல் அரிப்பு குத்தல் வலி ஊறுவது போன்ற உணர்ச்சி இவை ஏற்படும். அதிகம் வளர்ச்சி பெற்ற இக்கிருமிகள் தோல் நரம்பு தசை நார்கள் மாமிசம் குருத்துஎலும்புகள் இவற்றைத் தின்றுவிடுகின்றன.

குஷ்ட நோய்க்குச் செய்ய வேண்டிய சிகிச்சை முறையையே இந்நோய்க்கும் பயன்படுத்த வேண்டும். இதைப்பற்றி குஷ்ட ரோகச்சிகிச்சை கூறுமிடத்தில் விளக்குவோம். 11

## 5. கபத்தில் தோன்றும் கிருமிகள்

பால் வெல்லம் எள்ளு மீன் நீர் வாழும் பிராணிகளின் இறைச்சி மாவினால் செய்த தின்பண்டங்கள் பாயசம் குஸூம் பம் என்ற எண்ணெய் அசீர்ணமான உணவு அழுகியது பிசுபிசுப் புள்ளது மண் கல் அழுக்கு இவை கலந்துள்ள உணவு உடலைக் கெடுக்கக் கூடியதும் ஒத்துக் கொள்ளாததுமான உணவு ஆகி யவை கபத்தில் தோன்றும் கிருமிகளுக்குக் காரணங்களாகின்றன.

அந்தக் கிருமிகளுக்கு இரைப்பை இருப்பிடமாகும். அந்தக் கிருமிகள் வளர்ந்து இரைப்பையின் மேலேயும் கீழேயும் இரு பக்கங்களிலும் சஞ்சரிக்கின்றன.

அந்தக் கிருமிகளில் சில வெண்ணிறமாகவும் உருண்டையாக வும் தடிமனாகவும் கொடி போன்றும் இருக்கும். மற்றும் சில உருண்டையாகவும் அகலமாகவும் மண் புழு போன்றும், வெண்மையாகவும் தாமிரத்தைப் போன்ற செந்நிறங்கொண் டும் இருக்கும்.

சில கிருமிகள் நுட்பமாகவும் நீளமாகவும் மெல்லியவை யாகவும் வெண்ணிறங்கொண்டும் இருக்கும்.

இம்மூன்று வகையான கபத்தில் தோன்றும் கிருமிகள், அந்த் ராதம் (பெருங்குடலில் உள்ளவை) உதராதம் (வயிற்றுக்குள் உள்ளவை) ஹ்ருதயசரம் (இதயத்தில் சஞ்சரிப்பவை) சுரு தர்ப புஷ்பம் (நாணற்பூ) ஸௌகந்திகம் மகாகுதம் என்ற பெயர்கள் உடையவை.

---

1. கேசாதம் — தலைமயிரை உதிரச் செய்வது.
2. லோமாதம் — தலைமயிரை அழிப்பது.
3. லோமத்வீபம் — மயிர்க்கால்களில் புகுந்திருப்பது.

இவற்றால் மனப்பிரட்டல் வாயிலிருந்து உமிழ்நீர் ஒழுகுதல் சுவையின்மை சீரணமின்மை காய்ச்சல் மூர்ச்சை கொட்டாவி தும்மல் மலம் சிறுநீர்கட்டு உடல் உறுப்புகளில் பிசைவது போன்ற வலி வாந்தி இளைப்பு சொரசொரப்பு இவை உண்டாகும். 12

## 6. மலத்தில் தோன்றும் கிருமிகள்

கபத்தில் தோன்றும் கிருமிகளின் காரணங்களே இவற்றிற்கும் காரணங்களாகும். அவற்றின் தங்குமிடம் சீரணப்பை. வளர்ச்சியடைந்த அவை கீழ்பாகத்தில் ஊறுகின்றன. இக்கிருமிகள் இரைப்பையை அடையும்பொழுது ஏப்பமும் மூச்சும் மலத்தைப் போன்ற நாற்றமுமுண்டாகும்.

இவற்றில் சில கிருமிகள் நுட்பமாகவும் தடித்து பருமனாகவும் வெளுப்பாகவும் நீண்டவையாகவும் ஆட்டுரோமத்தை போன்று கருநிறங்கொண்டும் இருக்கும்.

மற்றும் சில கிருமிகள் பருமனாகவும் உருண்டையாகவும் அகலமாகவும் கருநீலம் நீலம் பச்சை மஞ்சள் எனும் நிறங்கள் உடையனவாகவுமிருக்கும். இவற்றின் பெயர்களாவன **ககேருகம் மகேருகம் லேலிஹம் சூலகம் ஸௌஸுராதம்** என்பவை.

மலத்தை நெகிழச் செய்தல் இளைப்பு சொரசொரப்பு மயிர்க்கூச்சல் இவற்றை உண்டாக்குதல் இக்கிருமிகளின் செயல்களாகும். இவை நோயாளியின் மலத்துவாரத்தை அடையும் பொழுது அங்கு ஊசி குத்துவது போன்ற வலியையும் அரிப்பையும் உண்டாக்கி அங்கேயே பரவி நிற்கின்றன. அவை மலத்துவாரத்திலிருந்து வெளிவரும்போது மிகவும் நமைச்சலை உண்டாக்குகின்றன.

இவ்வாறு கபத்திலும் மலத்திலும் தோன்றும் கிருமிகளின் உருவம் காரணம் போன்றவை விளக்கப்பட்டுள்ளன. 13

## 7. சுருக்கமாகக் கிருமிகளுக்குச் சிகிச்சை

இந்தக் கிருமி நோய்களின் சிகிச்சையை இங்கு சுருக்கமாகக் கூறி விரிவாகப் பின்பு சிகிச்சைஸ்தானத்தில் விளக்குவோம்.

எல்லாக் கிருமிகளையும் முதலில் வெளியேற்ற வேண்டும். பிறகு அவை தோன்றுவதற்கான காரணங்களை அழிக்க வேண்டும். பிறகு அக்காரணங்கள் உண்டாவதற்கான செயல்களை விட்டுவிட வேண்டும். 14

## 8. கிருமிகளை நீக்கும் முறை

கிருமிகளைக் கருவியாலோ அல்லது கையினாலோ மருத்துவர் கவனமாக வெளிப்படுத்த வேண்டும். இரைப்பையில் தங்கியிருக்கும் கிருமிகளை மருந்து கொடுப்பதின் மூலமாக வெளிப்படுத்தலாம். அந்த மருந்துகள், சிரோவிரேசனம் வாந்திக்குக் கொடுத்தல் மலம் கழிக்கச் செய்தல் கஷாய வஸ்தி செய்தல் என்று நான்கு வகைகளாகும்.

இந்தக் கிருமிகள் தோன்றுவதற்கான காரணங்களை உவர்ப்பு கைப்பு துவர்ப்புச் சுவையுள்ள பொருட்கள் க்ஷாரப் பொருட்கள் உஷ்ண வீர்யம் உள்ள பொருட்கள் இவற்றைப் பயன்படுத்துவதால் அழித்துவிடலாம். மேலும் கபத்திற்கும் மலத்திற்கும் எதிரிடையான குணங்களை உடைய மற்ற பொருட்களாலும் கிருமிகள் தோன்றுவதற்கான காரணங்களை அழித்துவிட வேண்டும். நிதானவிதியில் கூறப்பட்ட கிருமிகள் தோன்றுவதற்கான பொருட்களைப் பயன்படுத்தக்கூடாது. நிதானவிதியில் கூறப்படாவிடினும் கிருமிகளைத் தோற்றுவிக்கக் கூடிய மற்ற பொருட்களையும் உபயோகிக்கக் கூடாது.

இவ்வாறு இங்கு சுருக்கமாகச் சிகிச்சை கூறப்பட்டது. இதையே மறுபடியும் விளக்கமாகக் கூறுவோம். 15

இரைப்பை அல்லது சீரணப்பையில் கிருமிகள் உள்ள நோயாளிக்கு முதலில் ஆறு அல்லது ஏழு நாட்கள் எண்ணெய்ச் சிகிச்சை வியர்வைச் சிகிச்சையைப் பயன்படுத்த வேண்டும். மறுநாள் காலை கஷாய வஸ்தி வாந்தி—பேதி மருந்து இவற்றைக் கொடுப்பதற்காக முதல் நாள் காலையிலும் மாலையிலும் நோயாளிக்குப் பால் வெல்லம் தயிர் எள்ளு மீன் நீர் வாழும் பிராணிகளின் மாமிசம் மாவுப் பண்டம் பாயசம் குசும்ப எண்ணெய் இவற்றை உணவுடன் கலந்து கொடுக்க வேண்டும். அவ்வாறு கொடுப்பதனால் குடலுக்குள் இங்குமங்கும் சுற்றிக் கொண்டிருக்கும் கிருமிகள் இரைப்பைக்கும் சீரணப்பைக்கும் வந்து சேருகின்றன.

அன்று இரவு நன்கு சுகமாகத் தூங்கியபின் உண்ட உணவு சீரணமானதை அறிந்து மறுநாள் காலை கஷாய வஸ்தியையும் வாந்தியாக பேதியாக மருந்தையும் கொடுக்க வேண்டும். அதற்கு முன் நோயாளியின் உடல் நிலை மனநிலை இவற்றை அறிந்து அவன் சிகிச்சைக்குத் தகுந்தவனா என்பதையும் மருத்துவர் சோதனை செய்ய வேண்டும் 16

முள்ளங்கி கடுகு பூண்டு புங்கம் விதை முருங்கை விதை ஓமம் ஃவளைச்செடி நிலப்புல் கருந்துளசி துளசி காட்டுத் துளசி சிறுகீரை சிவதை கரும்புல் பெரும்பயறு கற்பூரதுளசி இவை எல்லாவற்றையுமோ அல்வது கிடைத்த பொருளையோ எடுத்துவரச் சொல்ல வேண்டும்.

கொண்டுவந்த இம்மூலிகைகளைச் சோதித்து துண்டு துண் டாக வெட்டி நீரில் கழுவி நன்கு கழுவிய பாண்டத்தில் இட்டு சம அளவில் பசுவின் சிறுநீரையும் சுத்தமான நீரையும் கலந்து முறைப்படி அடுப்பிலிட்டு காய்ச்ச வேண்டும். கஷாயத்தைத் துடுப்பினால் துலாவ வேண்டும். நீர் அதிக அளவு சுண்டியபின் மூலிகைகளின் ரசம் இறங்கியபின் பாண்டத்தைக் கீழே இறக்கி சுத்தமான துணியினால் வடிகட்டி இளஞ்சூடாக இருக்கும் பொழுது அதில் மலக்காரக்காய் அரிசித்திப்பிலி வாய்விடங்கம் இவற்றைக் விழுதாகச் செய்து கலந்து நல்லெண்ணெய் சேர்த்து ஸர்ஜக்ஷாரம் இந்துப்பு இவற்றையும் சேர்த்து வஸ்தி (தோல் பை)யில் இட்டு முறைப்படி நோயாளிக்கு மலத்துவாரத்தின் வழியாக உள் செலுத்த வேண்டும்.

இதேபோல் சிவப்பு எருக்கு வெள்ளெருக்கு வெட்பாலை துவரை கோஷ்டம் மலக்காரக்காய் இவற்றினால் செய்த கஷா யத்தையோ அவ்வாறே முருங்கை உவகைச் செடி தனியா கடுகுரோகிணி கடுகு இவற்றால் தயார் செய்த கஷாயத்தையோ அதேபோல் நெல்லிக்காய் சுக்கு மரமஞ்சள் ‘வேப்பம்பட்டை இவற்றால் செய்த கஷாயத்தையோ மவக்காரக்காயை கலந்து மூன்று அல்லது ஏழு நாட்கள் வஸ்தி சிகிச்சையில் பயன்படுதத வேண்டும். 17

கடைசி முறையாகக் கொடுக்கப்பட்ட வஸ்தி வெளிவந்தபின் நோயாளியை இளைப்பாறச்செய்து அன்றே மேல் கீழ் இரண்டு வழியாகவும் தோஷங்களை வெளிப்படுத்துவதற்காக வாந்திக் கும் பேதிக்கும் மருந்து தக்கவாறு கொடுக்க வேண்டும். அதன் முறை கூறப்படுகிறது.

மலக்காரக்காய் அரிசித்திப்பிலி இரண்டினாலும் தயார் செய்த இரண்டுபலம் (எட்டுத்தோலா) அளவுள்ள கஷாயத்தில் ஒரு தோலா சிவதைச் சூர்ணத்தை விழுதாகச் செய்து கலந்து நோயாளிக்குப் பருகக் கொடுக்க வேண்டும்.

அந்தக் கஷாயம் நோயாளியின் உடலிலிருந்து தோஷங்களை நன்றாக வாயின் வழியாக வாந்தியாகவும் மலத்துவாரத்தின் வழியாக மலமாகவும் வெளிப்படுத்துகிறது.

இதேவிதமாக கல்பஸ்தானத்தில் தனித்தனியாகக் கூறப்பட்ட வாந்தி—பேதிக்குக் கொடுக்கத்தக்க மருந்துகளை ஒன்று சேர்த்து அறிவினால் முறைகள் எல்லாவற்றையும் கவனித்து மருத்துவன் நோயாளியைக் குடிக்கச் செய்ய வேண்டும். 18

நோயாளிக்கு வாந்தி—பேதி மூலமாக தோஷங்கள் நன்றாக வெளிப்பட்டதை அறிந்து நாயுருவியினால் தயார் செய்த கஷாயத்தினால் இளஞ்சூடான நீரில் குளிக்கச் செய்ய வேண்டும்.

அதே கஷாயத்தை உள்ளுக்கும் புறத்திற்கும் தண்ணீருக்குப் பதிலாக அடிக்கடி பயன்படுத்த வேண்டும். நாயுருவி கிடைக்காவிடில் உவர்ப்பு கைப்புச் சுவையுள்ள பொருட்களால் செய்யப்பட்ட கஷாயத்தையோ அல்லது பசுவின் சிறுநீர் க்ஷாரப் பொருட்கள் கவந்த இளஞ்சூடான நீரையோ உள்ளுக்கும் புறத்திற்கும் பயன்படுத்த வேண்டும்.

நீராடச் செய்தபின் நோயாளியை அதிகம் காற்றுப் புகாத வீட்டில் தங்கச் செய்து அரிசித்திப்பிலி கண்டந்திப்பிலி செவியன் கொடுவேலி சுக்கு இப்பொருட்களால் தயாரித்த கஞ்சியைப் பருகச் செய்ய வேண்டும்.

மேலும் கஞ்சி வகைகளைப் பருகச் ,செய்தபின் வாயுவிடங்கத்தினால் தயார் செய்த தைலத்தினால் ஒன்றுவிட்ட ஒரு நாள் என்ற முறையில் இரண்டு அல்லது மூன்று முறை எண்ணெய் வஸ்தி கொடுக்க வேண்டும். 19

இவ்வாறு செய்தும்நோயாளியின் தலைமுடியை அழிக்கக்கூடிய கிருமிகள் மிகவும் வளர்ச்சி பெற்று தலையில் ஊறுவது சிலசமயம் நேரிடலாம். அவன் தலைக்கு எண்ணெய்ச் சிகிச்சையும் வியர்வைச் சிகிச்சையும் செய்து ஸூத்ர ஸ்தானத்தில் இரண்டாவது அத்தியாயத்தில் கூறப்பட்ட சிரோவிரேசனீயப் பொருட்களால் சிரோவிரேசனம் செய்ய வேண்டும். 20

**9. கிருமிகள் தோன்றுவதற்கான காரணங்களை அழிக்கும் முறை :**

கிருமிகள் தோன்றும் காரணங்களை அழிக்கும் பொருட்டு தேவையான உணவு முறைகளைப்பற்றி விளக்குவோம்.

எலிச்செவி எனும் மூலிகையை வேறுடன் (வேர் பட்டை இலை பூ பழம்) கொண்டுவந்து சிறுசிறு துண்டுகளாக வெட்டி உரலில் இட்டு நன்கு இடித்து கைகளால் பிழிந்து சாறு எடுத்துக் கொள்ள வேண்டும். அந்தச் சாற்றில் சிகப்பு அரிசியின் மாவைக் கலந்து ரொட்டிபோல் செய்து புகையில்லா அடுப்பில் வாட்டி வாய்விடங்கத்தின் எண்ணெய் இந்துப்பு இவற்றுடன் சேர்த்து

இரைப்பை சீரணப்பை இவற்றில் கிருமிகள் உள்ள நோயாளிக்கு உண்ணக் கொடுக்க வேண்டும்.

பிறகு புளிப்புக்காடி அல்லது மோர்த்தெளிவு இவற்றில் அரிசித்திப்பிலி கண்டந்திப்பிலி செவியம் கொடிவேலி சுக்கு இவற்றின் தூளும் உப்புடன் கலந்து பருகச் செய்ய வேண்டும். அவ்வாறே கரிசலாங்கண்ணி (கரிசாலை) எருக்கு மஞ்சள் நிறப்பூவுள்ளகுறிஞ்சி கடம்பமரம் கருநொச்சி வெண் துளசி துளசி காட்டுத்துளசி சதுரக்கள்ளி கருந்துளசி கரும் புல் பெரும்பயறு கற்பூர துளசி கடுகுரோகிணி வெட்பாலை அம்மாம்பச்சரிசி, சிறுதுளசி இவற்றில் ஏதாவது ஒன்றின் சாற்றில் சிகப்பு அரிசிமாவைக் கலந்து ரொட்டிபோல் செய்து புகையில்லாத நெருப்பில் வாட்டி வாயுவிடங்களண்ணெய் உப்பு இவற்றுடன் சேர்த்து சீரணப்பை இரைப்பை இவற்றில் கிருமிகள் உள்ள நோயாளிக்கு உண்ணக் கொடுக்க வேண்டும்.

பிறகு புளிப்புக்காடியில் அல்லது மோர்த்தெளிவில் திப்பிலி கண்டந்திப்பிலி செவியம் கொடிவேலி சுக்கு இவற்றின் தூளையும் உப்பு கலந்து பருகச் செய்ய வேண்டும்.

அதேபோல் நாயுருவி நிலவேம்பு கருநொச்சி கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் இவற்றைத் துண்டுகளாகச் செய்து உரலில் இட்டு நன்கு இடித்து கைகளால் சாறு பிழிந்து அந்தச் சாற்றில் சிகப்பு அரிசிமாவைக் கலந்து ரொட்டிபோல் செய்து புகையில்லா நெருப்பில் வாட்டி வாயு விடங்க எண்ணெய் உப்பு இவற்றுடன் சேர்த்துக்குடலில் கிருமி நோய் உள்ளவனுக்குக் கொடுக்க வேண்டும். அல்லது மேற்கூறிய மூலிகைகளனைத்தின் சாற்றிலோ ஒன்று அல்லது இரண்டு மூலிகைகளின் சாற்றிலோ சிகப்பு அரிசி மாவைக் கலந்து ரொட்டிபோல் செய்து புகையில்லாத நெருப்பில் வாட்டி தேனில் நனைத்துக் குடலில் கிருமி நோய் உள்ளவனுக்குக் காலையில் வயிற்றில் உண்ணச் செய்ய வேண்டும். 21

மேலும் குதிரையின் சாணத்தை ஒரு பெரிய பாயில் பரப்பி வெயிலில் உலர வைத்துக் காய்ந்தபின் உரலிலிட்டு இடித்து அம்மியில் வைத்து நன்கு தூள் செய்து வாய்விடங் கத்தில் அல்லது கடுக்காய் நெல்லிக்காய் தான்றிக்காய் மூன் றின் கஷாயத்தில் ஊறவைத்து அதை மறுபடியும் காய வைக்க வேண்டும். இவ்வாறு எட்டு அல்லது பத்துத்தடவை ஊற வைத்துக் காயவைக்க வேண்டும். அதை மறுபடியும் கல்வத்தில் இட்டு நன்கு தூள் செய்து வஸ்திரகாயம் செய்து புதிய பாண்டத்

தில் காற்றுபுகாமல் அதன் வாயை மூடிக் கவனமாகப் பாது காத்து வைக்க வேண்டும்.

அந்தச் சூரணத்தை ஒரு தோலா அளவு அல்லது நோயாளியின் குடல்நிலைக்குத் தேவையான அளவு தேனில் குழைத்து குடலில் கிருமிகள் உள்ள நோயாளிக்குக் கொடுக்கவேண்டும். 22

மேலும், 1024 தோலா எடையுள்ள சேராங்கொட்டையை எண்ணெய் தடவி பதப்படுத்திய உறுதியாயுள்ள பானையில் இட வேண்டும். அந்தப்பானையின் அடிப்பக்கத்தில் பல சிறு துவாரங் கள் செய்திருக்க வேண்டும். அந்தப் பானையின் வாயை மூடி ஈரமண்ணால் பூசவேண்டும். பானையின் வெளிப் பகுதியில் களிமண்ணைப் பூசிக் காயவைக்க வேண்டும்.

எண்ணெயினால் பதப்படுத்தப்பட்ட உறுதியான மற் றொரு பானையைக் கழுத்து வரையிலும் தரையில் புதைத்து அதன்மேல் மேற்கூறப்பட்ட பானையை வைத்துக் களிமண்ணால் இரண்டையும் இணைத்துப் பூசவேண்டும். மேல்பானையில் உள்ள துவாரங்கள் கீழே புதைக்கப்பட்டிருக்கும் பானையின் வாய்க்கு நேராக வரும்படி அமைந்திருக்க வேண்டும்.

பிறகு மேலே உள்ள பானையைச் சுற்றிலும் வரட்டியை அடுக்கி எரியவிடவேண்டும். வரட்டிகள் நன்றாக எரிந்தபின் மேல் பானையில் உள்ள சேராங்கொட்டையின் எண்ணெய் முழுவதும் கீழ்பானையில் இறங்கிவிட்டதை அறிந்தபின் மேல் பானையை எடுத்துவிடவேண்டும். பிறகு அடிப்பானையில் இறங்கியிருக்கும் எண்ணெயை எடுத்து எண்ணெய்க்குப் பாதியளவு வாயுவிடங்க விதையின் பொடியைக் கலந்து வெயிலில் ஒருநாள் முழுவதும் காயவைக்க வேண்டும்.

குடலில் கிருமிகள் உள்ள நோயாளிக்குக் காயவைத்த எண் ணெயைத் தக்க அளவில் பருகக் கொடுக்க வேண்டும். அதனால் மலக்கழிச்சல் நன்கு ஏற்படும். அதன்பின் கஞ்சி முறைகளையும் வாந்தி-பேதி சிகிச்சையில் கூறிய கட்டுப்பாடு முறைகளையும் தக்க வாறு கடைபிடிக்கச் செய்ய வேண்டும்.

இவ்வாறே தேவதாரு வெண்சிவதை இவற்றின் கட்டை களைப் பொடி செய்து சேராங்கொட்டையைப் பானையிலிட்டு எண்ணெய் எடுத்தது போலவே எண்ணெய் எடுத்து நோயாளிக் குப் பருகக் கொடுக்கவேண்டும். இதையே எண்ணெய் வஸ்திக் குப் பயன்படுத்தலாம். 23–24

பிறகு சரத்ருதுவில் (ஐப்பசி, கார்த்திகை) பயிரான புதிய எள்ளை நன்கு சுத்தம் செய்து உள்ள தோஷங்கள் நீங்கும்வரை அதில் கழுவிச் சூடானவாயுவிடங்களைக் கஷாயத்தில் ஊறவைக்க வேண்டும்.

தோஷங்கள் நீங்கியதை அறிந்து அந்த எள்ளைக் கையினாற் பிசைந்து தோல்களை நீக்கி மறுபடியும் கழுவிச் சுத்தம் செய்து இருபத்தொரு முறை வாயுவிடங்கக் கஷாயத்தில் ஊறவைத்து வெயிலில் காயவைத்துக் காய்ந்தபின் உரலில் இட்டு இடித்துக் கல்வத்தில் போட்டு நன்கு பொடியாக்கிப் பொடியை ஒரு பெரிய இரும்பு வாணலியிலிட்டு வாயுவிடங்க கஷாயத்தை அடிக்கடி ஊற்றிக் கையினால் நன்கு பிசைந்து அதிலிருந்து வருகிற எண்ணெயைக் கையால் எடுத்துச் சுத்த மாயும், உறுதியாயும் உள்ள பதப்படுத்திய பானையில் வைத்து மூடி நன்கு பாதுகாக்க வேண்டும். 25

மேலும் பாச்சோத்தி நருவிலி மரம் இவற்றில் ஒவ்வொன்றின் வேர்பட்டைகள் நான்கு தோலா வீதம் எடுத்து வாயுவிடங்கக் கஷாயத்தினுடன் தனித்தனியாக மைய அரைத்து இரண்டு உருண்டைகளாகச் செய்து வைத்துக் கொள்ள வேண்டும்.

பாதி அளவு (இரண்டு தோலா) கருஞ்சிவதை வெண்சிவதை அவற்றைத் தனியாக வாயுவிடங்கக் கஷாயத்தை விட்டு மைய அரைத்து இரண்டு உருண்டைகளாகச் செய்து வைத்துக் கொள்ள வேண்டும்.

அதில் பாதி அளவு அதாவது (ஒரு தோலா) தந்தி நாகதந்தி (ஒருவகை மரம்) இவற்றின் வேர் பட்டைகளை வாயுவிடங்கக் கஷாயத்தை விட்டு நன்கு மைய அரைத்து இரண்டு உருண்டைகள் தயார் செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

அதில் பாதி அளவு (அரைத் தோலா) செவியம் கொடிவேலி இவற்றை தனித்தனியாக வாயுவிடங்கக் கஷாயத்தைவிட்டு மைய அரைத்து இரண்டு உருண்டைகளாகத் தயார் செய்து வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த எல்லா உருண்டைகளையும், 128 தோலா அளவுள்ள வாயுவிடங்கக் கஷாயத்தில் கலக்கி 64 தோலா அளவுள்ள எள் எண்ணெயில் கலந்து பெரிய கடாகத்தில் (இரும்புப்பாத்திரம்) இட்டு நெருப்பில் வைத்துக் காய்ச்சவும்.

அருகில் அமர்ந்து அடிக்கடி எண்ணெயைக் கவனித்துத் துடிப்பினால் நன்கு கிளறிவிட வேண்டும். தீ அதிகமாக இருக்கக்

கூடாது. ஓசையும், நுரையும் அடங்கியபின் எண்ணெய் தெளிவடைகிறது. மூலிகைகளுக்குத் தக்கவாறு அந்த எண்ணெயில் மணம் நிறம் ரசம் இவை ஏற்படுகின்றன.

எண்ணெயில் உள்ள கல்கத்தை விரல்களால் உருட்டினால் அதிக மிருதுவில்லாமலும் அதிகக் கடினமாக இல்லாமலும் விரல்களில் ஒட்டிக்கொள்ளாமலுமிருக்கும்போது அடுப்பிலிருந்து அந்த எண்ணெய் கடாகத்தை இறக்கிவிட வேண்டும். இறக்கியபின் குளிர்ந்த பிறகு தூய புதிய துணியினால் வடிகட்டி உறுதியான சுத்தமுள்ள பாண்டத்தில் வைத்து மூடித் தூய வெள்ளைத் துணியினால் சுற்றிக் கட்டிப் பாதுகாக்க வேண்டும்.

இதைக் கிருமியுள்ள நோயாளிக்கு அளவுடன் குடிக்கக் கொடுக்க வேண்டும். இதனால் நன்கு மலம் கழியும். தோஷங்கள் நன்கு நீங்கியபின் உணவுக் கட்டுபாடு முறைகளை முன் கூறியபடி கடைபிடிக்கச் செய்ய வேண்டும். பிறகு தகுதியை அறிந்து எண்ணெய் வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும்.

மேற்கண்ட முறைப்படி கடுகு ஆளிவிதை புங்கவிதை நாயுருவி இவற்றின் தைலத்தைக் காய்ச்சிக் கிருமிகள் உள்ள நோயாளியை நன்கு பரிசோதித்துப் பருகக் கொடுக்கவேண்டும். அதனால் நோயாளி நோயிலிருந்து விடுபடுகிறான். 26

இவ்விதம் கபத்திலும் மலத்திலும் கிருமிகள் உண்டாவதற்குக் காரணம் அவை தங்குமிடம் அவற்றின் உருவம் நிறம் பெயர் பிரபாவம் சிகிச்சை இவை பொதுவாக விளக்கப்பட்டுள்ளன.

குறிப்பாசு மேலே கூறப்பட்ட கிருமிகளை அழிக்கும் மருந்துகளில் ஒன்றைக் கொண்டு குறைந்த அளவில் கஷாய வஸ்தி, எண்ணெய் வஸ்தி, பேதியாகச் செய்தல் இம்முறைகளைப் பயன்படுத்தச் செய்து மலத்தில் தோன்றும் கிருமிகளுக்குச் சிகிச்சை செய்ய வேண்டும்.

கபத்தில் தோன்றும் கிருமிகளை அழிக்க அதிக அளவில் சிரோவிரேசனம், வாந்தி எடுக்கச் செய்தல், நோய் தணிவதற்கான மருந்துகள் இவற்றைப் பயன்படுத்திச் சிகிச்சை செய்ய வேண்டும். இவ்விதம் கிருமிகளை அழிக்கும் மருந்து முறைகள் கூறப்பட்டுள்ளன. இவ்வாறு மேற்கண்ட சிகிச்சை முறைகளைக் கடைபிடித்தும் அந்தந்தக் கிருமிகள் ஏற்படுவதற்கான காரணங்களையும் விட்டுவிடச் செய்ய வேண்டும். இவ்விதம்

முறையாகக் கபம் மலம் இவற்றில் தோன்றும் கிருமிகளுக்குச் சிகிச்சை முறை விளக்கப்பட்டுள்ளது. 27

**முடிவுரை**

முதலில் கிருமிகளை வெளிப்படுத்துவதுதான் சிறந்த மருத்துவமாகும். கிருமிகள் தோன்றுவதைத் தடுப்பது அவை தோன்றுவதற்கான காரணங்களை விலக்குவது போன்றவை இரண்டாந்தரமானவை.

கிருமிகளை அழிக்கக் கூறப்பட்ட மூன்று விதங்களான முறைகள் எல்லா நோய்களையும் அழிக்கக் கூடியவை. அந்த மூன்று முறைகளாவன:- ஸம்சோதனம் — (வாந்திக்கும், பேதிக்கும் கொடுத்துக் குடலைச் சுத்தம் செய்வது) ஸம்சமனம்—(நோய்களைத் தணியச் செய்யும் சிகிச்சை) நிதானவர்ஜனம்—(நோய் தோன்றும் காரணங்களை விலக்குதல்)

மருத்துவன் ஒவ்வொரு நோயிலும் இம்மூன்று முறைகளைத் தக்கவாறு பயன்படுத்த வேண்டும். 28—30

இருவகை நோயாளிகள் சிறந்த மருத்துவன் அல்லாதவன், இருவகை மருத்துவர்களின் செயல்கள், அவற்றால் ஏற்படும் பயன் இருபது வகை கிருமிகள் அவை தோன்றக் காரணங்கள் போன்றவையும் காரணம் தங்குமிடம் உருவம் நிறம் பெயர் பிரபாவம் சிகிச்சை இவையும் மாமுனிவரான ஆத்ரேயரால் சீடர்கள் அறிந்து கொள்வதற்காகவும் பிணிகளைத் தணிப்பதற்காகவும் இந்த அத்தியாயத்தில் விமானஸ்தானத்தில் விளக்கப்பட்டுள்ளன. 31—32

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை விமானஸ்தானத்தில் வியாதிதரூபீய விமானம் எனும் ஏழாம் அத்தியாயம் முற்றும்

## எட்டாவது அத்தியாயம்

## *ரோகபிஷக்ஜிதீய விமானம்

'ரோகபிஷக்ஜிதீயம்' எனும் அத்தியாயத்தை ஆத்ரேய மாமுனிவர் கூறியபடி விளக்குவோம். 1–2

### 1. ஆயுர்வேத நூலின் தேர்வு

மருத்துவராக விரும்பும் மனிதன், முதலில் தான் செய்ய வேண்டிய செயலின் கடுமை எளிமை விளைவு இவற்றையும் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கில் ஏதாவது ஒன்று கிட்டுமா என்பதையும்

இந்நூலைக் கற்பதனால் நன்மை விளையுமா அல்லது தீமை ஏற்படுமா என்பதையும் ஆராய்ந்து இடம் காலம் இவற்றையும் நன்கு அறிந்து முன்பின் யோசித்து மருத்துவ நூலை நன்கு ஆராய வேண்டும்.

மருத்துவ நூல்கள் உலகில் பல பழக்கத்தில் உள்ளன. அவற்றில் மிக்கப் புகழ் பெற்றதும், அறிவாளிகள் கற்றறிந்ததும், கருத்துக்கள் அடங்கியதும், சான்றோர்களால் பரிசீலிக்கப்பட்டதும், உயர்ந்த தாழ்ந்த நடுநிலையிலுள்ள மாணாக்கர்களுக்கு விளங்கக்கூடியதும், கூறியதைத் திரும்பக் கூறுதல் என்ற குற்றமற்றதும், மாமுனிவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டதும், நன்கு இயற்றப்பட்ட ஸூத்ரம் பாஷ்யம் (விளக்கவுரை) ஸங்க்ரஹம் (சுருக்கம்) இம்மூன்றையும் பெற்றிருப்பதும், பிற நூலின் உதவியின்றி அறிந்துகொள்ளக்கூடியதும், கொச்சை மொழிகளும் அறிவுக்கு விளங்காச் சொற்களுமற்றதும், கருத்துக்கள் பல நிரம்பியதும், சொல்லிற்கு எளிமையானதும், முறைப்படி கருத்தை விளக்குவதும், உண்மையான **பொருள் செறிந்ததும்**, கருத்துக்கள் யாவும் உள்ளடங்கியதும், முன்பின் முரணற்றதும், எளிதில் கருத்தை அறிவிக்கக்கூடியதும், இலக்கணம், உவமை இவற்றுடன் கூடியதுமான நூலைக் கற்கத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

---

ரோகபிஷக்ஜிதீயம் – நோய்களின் சிகிச்சையைக் குறித்து விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறும்.

இத்தகைய மருத்துவ நூல், கதிரவனின் ஒளி இருள் விலக்கிப் பொருட்களைக் கண்களுக்குப் புலப்படுத்துவது போல அறியாமை எனும் இருளை அகற்றி அறிவைத் தெளிவாக்குகிறது. 3

## 2. ஆசானைத் தேர்ந்தெடுத்தல்

நூலைத் தேர்ந்தெடுத்தபின் ஆசானை ஆராய வேண்டும். ஆயுர்வேத நூலை நன்கு கற்றுக் கேட்டுத் தெளிந்தவரும், சிகிச்சை முறைகளைப் பல வகைகளில் கண்கூடாகக் கண்டறிந்தவரும், தகுந்த ஆசானிடத்தில் கற்றறிந்தவரும், சிகிச்சையில் கை தேர்ந்தவரும், தூய உள்ளம் படைத்தவரும், கைராசி உள்ளவரும், சிகிச்சைக்குப் பயன்படும் எல்லாக் கருவிகளையும் உடையவரும், ஊனமற்றவரும், பிறர் கருத்தை அறியக் கூடியவரும், சமயோசித அறிவுள்ளவரும், கடமை உணர்ந்தவரும், தான் என்ற எண்ணமற்றவரும், பொறாமையற்றவரும், சினமற்றவரும், உடலுழைப்பால் வரும் துன்பத்தைப் பொருட்படுத்ாதவரும், மாணாக்கர்களிடத்தில் அன்பு பாராட்டுபவரும், நினைவாற்றல் பெற்றவருமான சிறந்த ஆசானைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

இக்குணங்களுடன் கூடிய ஆசான், பருவமழை நன்னிலத்தில் விதைக்கப்பட்ட பயிர்களைச் செழிக்கச் செய்வதுபோல மாணாக்கர்களை மருத்துவருக்கு உரிய குணங்களுடன் கூடியவர்களாக உருவாக்குகிறார். 4

## 3. ஆயுர்வேத நூலைக் கற்கும் முறை

மருத்துவனாக விரும்பும் மாணாக்கன் மேற்கண்ட குணங்களையுடைய ஆசானையடைந்து கவனத்துடன் நெருப்பைப் போலும், தேவதையைப் போலும், அரசனைப் போலவும், தந்தையைப் போலவும், எஜமானனைப் போலவும் நினைத்து அவருக்குப் பணிவிடை செய்ய வேண்டும். பிறகு ஆசானின் அருளால் அவரிடமிருந்து ஆயுர்வேத நூலை முழுமையாகக் கற்றுணர்ந்து அதில் திறமை ஏற்படவும் பிறருக்கு நன்முறையில் எடுத்துரைப்பதற்கான திறமையைப் பெறவும் நூல்களில் கூறப்பட்ட கருத்துக்களை நன்கு அறிந்து கொள்ளவும் அடிக்கடி முயற்சி செய்ய வேண்டும். 5

## 4. சிறந்த மருத்துவனாவதற்கான வழிகள்

மருத்துவத்தில் வல்லுவனாக விரும்பும் மாணாக்கன் கற்றல் கற்பித்தல் கற்றவருடன் உரையாடுதல் எனும் மூன்று வழிகளைப் பின்பற்ற வேண்டும். 6

## 5. கல்வி கற்கும் முறை

ஆயுர்வேத நூலைக் கற்க ஆர்வமும் ஆரோக்யமும் உள்ள மாணாக்கன் விடியற்காலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்து நீராடி அன்றாடக் கடமைகளைச் செய்து தெய்வம் முனிவர் பசு அந்தணர் ஆசான் முதியவர் சித்தர்கள் ஆசாரியர்கள் ஆகிய இவர்களைப் பணிந்து தூய்மையுள்ள நேர்மையான இடத்தில் வசதியாக அமர்ந்து ஒரே மனதுடன் தன்னிடமுள்ள குற்றங்களைக் களையவும், பிறரிடமுள்ள குற்றங்களை அறியவும் திறமை பெற ஆயுர்வேத நூலை அடிக்கடிக் கூறி கற்றுணர வேண்டும். இவ்வாறே நேரத்தை வீணாக்காமல் நடுப்பகல் மாலை இரவு இந்நேரங்களில் கற்க வேண்டும். இதுதான் கற்கும் முறையாகும். 7

## 6. கற்பிக்கும் முறை

ஆயுர்வேத நூலைக் கற்பிக்க விரும்பும் ஆசான் முதலிலேயே மாணாக்கனைப் பரிசோதிக்க வேண்டும்.

அமைதியுள்ளவன், உயர்ந்த குணமுள்ளவன், சிறந்த செயலைச் செய்கிறவன், கண்கள் முகம் மூக்கு இவை நேராக அமைந்தவன், மெல்லியதாயும் சிவந்தும் தெளிவுமுள்ள நாவுடையவன், விகாரமற்ற பற்களும் உதடுகளும் உடையவன், திக்கித் திக்கிப் பேசாதவன், நினைவாற்றல் பெற்றவன், தான் என்ற எண்ணமற்றவன், அறிவாளி, ஆராயும் திறமையுள்ளவன், பரந்த மனப்பான்மையுள்ளவன், மருத்துவர் குலத்தில் தோன்றியவன் அல்லது மருத்துவத்தைக் கற்க ஆர்வமுள்ளவன் ஆயுர்வேத நூல்களின் கருத்துக்களை அறிய ஆவல் உடையவன், ஊனமற்றவன், புலன்கள் பழுதுபடாதவன், நம்பிக்கைக்குரியவன், கர்வமற்றவன், நூலின் கருத்துக்களை அறியும் ஆற்றல் உடையவன், சினமற்றவன், வருத்தமற்றவன், நன்னடத்தையுள்ளவன், நற்பழக்கமுள்ளவன், நூல்களைக் கற்பதில் தீவிர எண்ணங்கொண்டவன், திறமை வாய்ந்தவன், திறமையாகச் செயல்புரிபவன், கல்வி கற்பதிலேயே மனதை ஈடுபடுத்தியவன், ஆயுர்வேத நூல்களில் கூறிய கருத்துக்களை அறிவதிலும் சிகிச்சை முறைகளை நேரில் கண்டறிவதிலும் விருப்பமுள்ளவன், மற்ற செயல்களில் ஈடுபடாதவன், பேராசையற்றவன், சோம்பலற்றவன், எல்லா உயிர்களிடத்தும் அன்பு பாராட்டுபவன், ஆசானின் கட்டளையையும் அருள்மொழிகளையும் மதிப்பவன், ஆசிரியரிடம் அன்பு பாராட்டுபவன் என மேற்கண்ட குணங்களை உடைய மாணாக்கனைக் கற்பிப்பதற்காகத்

தேர்ந்தெடுத்து அத்தகைய மாணாக்கனுக்குத்தான் ஆயுர் வேத நூலைக் கற்பிக்க வேண்டும். 8

### 7. கல்வியின் தொடக்கம்

மேற்கண்ட குணமுள்ள மாணாக்கன் மருத்துவம் பயில விரும்பி ஆசானை அணுகினால் அவர் மாணாக்கனிடம் கீழ்க் கண்ட பொருட்களை எடுத்துவரும்படி கட்டளையிட வேண்டும்:

உத்தராயணத்தில் (தை முதல் ஆனி வரை) வளர்பிறையில் நன்னாளில் பூசம் அஸ்தம் திருவோணம் அசுவனி இவற்றில் ஏதாவது ஒரு நக்ஷத்திரத்தில் நன்மை பயக்கும் சந்திரன் கூடியிருக் கும் நாளில் நல்ல கரணத்தில் நல்ல லக்னத்தில் முகூர்த்த நாளில் பட்டினியிருக்கச் செய்து தலையை மொட்டையடித்துக்கொண்டு நீராடி கஷாய உடை உடுத்தி கையில் வாசனைப் பொருட்கள் சமித்து (அரசமரக்குச்சி) நெருப்பு நெய் சாணம் நீர்க்குடம் பூமாலை மணிமாலை விளக்கு பொன்னாலாக்கப்பட்ட அணி கலன் வெள்ளி மணி முத்து பவழம் பட்டாடை தர்ப்பைப் புல் நெல்பொரி கடுகு அக்ஷதை (அரிசி) வெண்ணிறப் பூக்க ளால் கட்டிய மாலை அறிவை வளர்க்கும் தின்பண்டங்கள், அரைத்த சந்தனம் அரைக்காத சந்தனம் குங்குமப் பூ போன்ற வாசனைப் பொருட்களை எடுத்துவரும்படிக் கட்டளையிட வேண் டும். அம்மாணாக்கனும் அவ்வாறு செய்ய வேண்டும். 9—10

மேற்கண்ட பொருட்களை மாணாக்கன் கொண்டு வந்தபின் சமமான தரையில் புனிதமான இடத்தில் கிழக்கு அல்லது வடக்குப் பக்கமாக நான்கு கை நீளம் அகலம் உள்ள வேதி (ஹோமம் செய்யும் நெருப்பை வைக்கும் சிறுமேடை) அமைத்து சாணத்தி னாலும் நீரினாலும் அந்த மேடையை மெழுகி தர்ப்பையைப் பரப்பி நாற்புறங்களிலும் பரிதி அமைத்துச் சந்தனம் பூசிய நீர் குடத்தை பட்டுத்துணி பொன்மயமான அணிகலன்கள் வெள்ளி மணிமாலை முத்து பவழம் இவற்றால் அலங்கரித்து அறிவை வளர்க்கும் தின்பண்டங்கள் சந்தனம் வெண்ணிறப் பூக்கள் நெல் பொரி கடுகு அக்ஷதை இவற்றால் அலங்கரிக்கப்பட்ட புரசு புங்கன், அத்தி இலுப்பை இவற்றில் ஏதாவது ஒரு குச்சியால் நெருப்பை மூட்டி கிழக்கு முகமாக இருந்து பரிசுத்தமான கற்பிக் கும் முறைப்படி பிரும்மதேவன் நெருப்பு தன்வந்திரி என்ற ஆயுர்வேத ஆசாரியன் பிரஜாபதி அச்வினி குமாரர்கள் இந் திரன் முனிவர்கள் ஸூத்ரகாரர் ஆகிய இவர்களைக் குறித்து ஆசீர்வாதத்துடன் கூடிய மந்திரங்களால்முதலில் ஸ்வாஹா என்று

சொல்லித் தேன் நெய் இவற்றால் மும்மூன்று முறை ஹோமம் செய்ய வேண்டும். 11

பிறகு தொடர்ந்து சீடன் ஹோமம் செய்ய வேண்டும். ஹோமம் செய்தபின் அக்னியை (நெருப்பை) வலம்வர வேண் டும். அந்தணர்களைக் கொண்டு நற்சொற்கள் கூறச் செய்து மருத்துவரைப் பூசிக்க வேண்டும். 12

பிறகு நெருப்பு அந்தணர் மருத்துவர் இவர்கள் முன்னிலை யில் கீழ்க்கண்டபடி மாணாக்கனைப் பார்த்து கட்டளையிட வேண்டும். கட்டளையின் விவரம் வருமாறு :

''பிரும்மசர்ய விரதத்தைக் கைக்கொள்ள வேண்டும். மீசை தாடி இவற்றை வளர்க்க வேண்டும். உண்மை பேச வேண்டும். மாமிசத்தைப் புசிக்கக்கூடாது. அறிவை வளர்க்கக்கூடிய உணவு வகைகளையே உண்ண வேண்டும். பிறருடைய வளர்ச்சியைக்கண்டு வருத்தப்படக்கூடாது. கத்தி போன்ற ஆயுதங்களைத் தரிக்கக் கூடாது.

நான் கூறும் வார்த்தைகளை அவசியம் மதிக்க வேண்டும். அரசனுக்கு விரோதமான செயல் உனக்குக் கெடுதல் ஏற்படும் செயல், அதர்மச்செயல், கெடுதலை விளைவிக்கக் கூடிய வார்த்தை இவற்றை கடைபிடிக்கக்கூடாது.

எல்லாவற்றையும் என்னிடம் ஒப்படைத்து என்னையே முக்கியமாகக் கொண்டு எனக்கு வசப்பட்டு எனக்கு விருப்பமான, நன்மைபயக்கக்கூடிய செயல்களை எப்பொழுதும் செய்துகொண்டு தநயன் தந்தைக்குப் பணிபுரிவதுபோல் எஜமானனுக்கு ஊழியன் ஊழியம் செய்வதுபோல் செல்வத்தை விரும்புபவன் செல்வத் திற்காகச் செல்வந்தனை மரியாதை செய்வதுபோல் எனக்கு நாள்தோறும் பணிவிடை செய்ய வேண்டும்.

கற்பதிலேயே எப்பொழுதும் ஊக்கம் கொண்டிருக்க வேண் டும். என் வேலையிலேயே எப்பொழுதும் கவனமாயிருக்க வேண்டும். கவனமும் ஒன்றிய மனைநிலையும் கொண்டிருக்க வேண்டும். வணக்கத்துடனிருக்க வேண்டும். ஒவ்வொரு செயலை யும் யோசித்துச் செய்ய வேண்டும். பொறாமையற்றவனாயிருக்க வேண்டும். என் கட்டளையின்றி எங்கும் அலைந்து திரியக்கூடாது. என் கட்டளைப்படி சென்று எனக்கு விருப்பமான பொருட்களை முடிந்தவரை சேகரிக்க முயற்சிக்க வேண்டும். சிகிச்சையிலும் அறம் பொருள் இன்பம் புகழ் இவற்றை அடைவதிலும் ஊக்க முள்ளவனாயிருத்தல் வேண்டும். சுவர்கத்தில் ஆசைவைத்து மருத்

துவனாகிய நீ பசு அந்தணர்களுடையவும் பொதுவாக எல்லாப் பிராணிகளுடையவும் நன்மையை ஒவ்வொரு நாளும் எழுந்திருக்கும்போதும் அமரும்போதும் கருத்தில் கொள்ள வேண்டும். எவ்விதத்திலும் நோயாளியை நோயிலிருந்து விடுபடச் செய்ய முயற்சி செய்ய வேண்டும்.

தன் வாழ்க்கைக்காக ஒருபொழுதும் நோயாளிக்குத் துரோகம் செய்யக்கூடாது.

மனதினாலும் பிற பெண்டிரை விரும்பக்கூடாது. பிறர் பொருளுக்கும் ஆசைப்படக்கூடாது. உன் நடையுடை பாவனைகள் பிறர் மனதைக் கவரும்படியாகவும் அவர்கள் உன்னிடம் நம்பிக்கை வைக்கக் கூடியமுறையிலுமிருக்க வேண்டும்.

மதுவை விலக்க வேண்டும். பாவத்திலிருந்தும் பாவம் செய்பவர்களிடமிருந்தும் துஷ்டர்களிடமிருந்தும் விலகியிருக்க வேண்டும். எனவே இனிமையாகவும், குற்றமற்றதாகவும், தர்மத்துடன் கூடியதாகவும், புகழத்தக்கதாகவும், உண்மையானதும், நன்மை பயப்பதுமான வார்த்தைகளைக் குறைவாகப் பயன்படுத்தி உரையாட வேண்டும். இடம் காலம் இவற்றை நன்கு யோசித்து நினைவை ஒருமுகப்படுத்தித் தேவையான கருவிகள் நிறைந்தவனாய் தினந்தோறும் அதிலேயே முயற்சியுள்ளவனாக இருக்க வேண்டும். கீழ்க்கண்டவர்களுக்கு நீ ஒருபொழுதும் மருத்துவம் செய்யக்கூடாது. அரசனால் வெறுக்கப்படுகிறவன், அரசனிடம் பகைமை பாராட்டுபவன், அரசனால் அல்லது பொதுமக்களால் வெறுக்கப்படுகிறவன், பொது மக்களை வெறுப்பவன் ஆகிய இவர்களுக்கு மருத்துவம் செய்யக்கூடாது.

சிகிச்சையில் நோயாளிக்குரிய முறையைக் கடைபிடிக்காதவன், செல்வமில்லாததால் தன் வாழ்க்கையைக் கஷ்டப்பட்டு நடத்துபவன், சிகிச்சை பெறும்போது ஏற்படும் இடையூறுகளை விலக்கிக் கொள்ளத் திறமையில்லாதவன், சாவதில் விருப்பமுள்ளவன், கணவன் அருகில் இல்லாத மாது, தலைவனில்லாத பெண்டிர் இவர்களுக்கு மருத்துவம் செய்யக் கூடாது.

கணவன் அல்லது தன்னைக் காப்பாற்றுகிறவன் இவர்களுடைய உத்தரவின்றி பெண்களாலே அளிக்கப்பட்ட மாமிசம் அல்லது வேறு உணவுப்பொருள் இவற்றை உண்ணக்கூடாது.

(நோயாளியின் வீட்டிற்குச் செல்லும்போது நோயாளியைப் பற்றி நன்கு அறிந்த) வீட்டு யஜமானனிடம் உத்தரவு பெற்ற மனிதனுடன் செல்லவேண்டும்.

தூய உடையினால் உடலை மறைத்துக் கொண்டு, தலை குனிந்தபடி நினைவை ஒருமுகப்படுத்தி உறுதியான மனதினால் எல்லா விஷயங்களையும் அடிக்கடி நன்கு யோசித்துத் தன் புகழ் குன்றாத வகையில் நடந்துகொண்டு நோயாளியின் வீட்டில் நுழைய வேண்டும். நுழைந்தபின் சொல் மனம் அறிவு புலன்கள் இவற்றை, நோயாளிக்கு நன்மை பயக்கக் கூடிய விஷயங்களைத் தவிர மற்ற விஷயங்களில் செலுத்தக்கூடாது.

நோயாளியின் குடும்பச் சூழ்நிலை மனை போன்ற பொருட்களைப்பற்றி சிந்திக்கக்கூடாது. நோயாளியின் வீட்டு நிலை சூழ்நிலை இவற்றைப்பற்றி பிறரிடம் கூறக்கூடாது.

நோயாளியின் ஆயுளின் முடிவு உனக்குத் தெரிந்திருந்தபோதிலும் அதை வெளிப்படுத்துவதினால் நோயாளிக்கோ அல்லது அவனது நலனை விரும்புகிறவர்களுக்கோ மரணம் ஏற்படக் கூடுமானதால் அதைக் கூறக்கூடாது. நீ அறிவாளியாயிருந்தும் தன் அறிவைப் புகழ்ந்துகொள்ளக்கூடாது. ஏனென்றால் தன்னைத் தானே புகழ்ந்துகொள்பவர்கள் நம்பிக்கைக்கு உரியவர்களிடமிருந்துகூட பயப்படுகிறார்கள். 13

## 8. எல்லை காணமுடியாத ஆயுர்வேதம்

ஆயுர்வேத சாத்திரத்திற்கு எல்லை கிடையாது. ஆகையினால் கவனமாக இந்த சாத்திர நூல்களைக் கற்பதில் எப்பொழுதும் முயற்சியுடையவனாயிருக்க வேண்டும். பிறரை நிந்தனை செய்யக்கூடாது. பிறர் மீது குற்றம் சாட்டக்கூடாது. பிறரிடமிருந்து நீ அறியவேண்டியவற்றை நன்கு அறிந்துகொள்ள வேண்டும். ஏனென்றால் அறிவாளியான சிந்தனையாளனுக்கு உலகம் முழுவதும் ஆசிரியர். அறிவிலிகளுக்கு அது எதிரி. ஆகையால் அறிவாளி எல்லா விஷயங்களையும் நன்கு அறிந்துகொண்டு செயலில் உற்சாகத்துடன் புகழை அளிக்கக்கூடியனவயும், வாழ்க்கைக்கு நன்மை பயப்பவையும், வலிமையளிப்பவையும், உலக வாழ்க்கைக்கு உதவக்கூடியவையுமான உபதேசங்களை எதிரிகளிடமிருந்தும் தெரிந்துகொண்டு அவற்றை நடைமுறையில் கொண்டு வர வேண்டும்.

பிறகு ஆசிரியர் மாணாக்கனிடம், 'தேவதை நெருப்பு அந்தணர் ஆசிரியர் முதியவர் ஸித்தர் ஆசாரியர் இவர்களிடத்தில் நீ நன்கு நடந்துகொள்ள வேண்டும். இவ்விதம் நடந்துகொள்வதால் இந்த நெருப்புப்புகை நிறைமணமும் சுவையும் உள்ளதாயும் ரத்னம், பயிர், மேற்கண்ட தேவதைகள் உனக்கு நன்மை பயப்பவர்களாகவும் ஆவார்கள். அப்படி நடந்துகொள்ளாவிடில் கெடு

தலைத் தோற்றுவிப்பவர்களாவார்கள்'' எனக் கூற வேண்டும். ஆசிரியர் இவ்வாறு சொன்னதைக் கேட்ட மாணாக்கன் 'சரி' என்று பதில் சொல்ல வேண்டும்.

இவ்வாறு ஆசிரியர் தன் கட்டளைப்படி நடக்கும் மாணாக்கனுக்கு ஆயுர்வேத நூலைக் கற்பிக்க வேண்டும். கட்டளைப்படி நடக்காதவனுக்குக் கற்பிக்கக் கூடாது.

தகுதியுள்ள மாணாக்கனுக்குக் கற்பிக்கும் ஆசிரியர் கற்பிப்பதனால் ஏற்படும் பயன் முழுவதையும் அடைகிறார். இங்கு கூறப்படாத நன்மை பயக்கக்கூடிய குணங்களைத் தான் பெறுவதுடன் மாணாக்கனையும் பெறச் செய்கிறார்.

இவ்வாறு கற்பிக்கும் முறை விளக்கப்பட்டுள்ளது. 14

## 9. அறிவாளி அறிவாளியுடன் உரையாடுதல்

இதன்பின் உரையாடுதல் பற்றி விளக்குவோம். மருத்துவன் மருத்துவனோடு உரையாட வேண்டும். அப்படி உரையாடுவதால் ஆயுர்வேத நூலில் திறமை மகிழ்ச்சி அறிவுத் தெளிவு பேசும் திறமை ஆகிய இவை உண்டாகின்றன. அது புகழை அளிக்கிறது. முன்பு கற்றுணர்ந்த நூல்களில் தோன்றும் ஐயங்களை நீக்கித் தெளிவுபடுத்துகிறது. ஐயமின்றி அறிந்ததை உறுதிப்படுத்துகிறது. கற்றுணராத பொருள்களையும்தெரியப்படுத்துகிறது. பணிவிடை செய்யும் மாணாக்கனுக்கு ஆசிரியர் மகிழ்ச்சியுடன் முறைப்படி ரகசியமாகக் கூறிய விஷயங்களும் உரையாடுவதனால் வெளிப்படுகின்றன." ஒருவரை ஒருவர் வெல்லும் முயற்சியில் ரகசியமான விஷயங்கள் வெளிவருகின்றன. ஆகையால் அறிவாளிகளிடையே உரையாடுவதை அறிஞர்கள் புகழ்கின்றனர். 15

## 10. உரையாடலின் வகை

உரையாடல் இரண்டு வகைப்படும். ஒன்று ஸந்தாய ஸம்பாஷா. இரண்டு விகிருஹ்ய ஸம்பாஷா. 16

## 11. ஸந்தாய ஸம்பாஷா (நட்புடன் உரையாடுதல்)

அறிவு பகுத்தறிவு கேள்வி பதில் இவற்றில் திறமையுள்ளவனும், சினமற்றவனும், பல நூல்களைக் கற்றறிந்தவனும்' பொறாமையற்றவனும், வணக்கத்துடன் கூடியவனும், மற்றவர்களைத் தன்பால் ஈர்த்துக் கொள்ளக்கூடியவனும், துன்பங்களைப் பொறுத்துக் கொள்பவனும், அன்புடன் பேசுகிறவனுமான அறிஞனுடன் மேற்கண்ட குணங்களுடன் கூடிய அறிஞன் உரையாடுதலே முதல் வகையைச் சேர்ந்தது. இப்படி உரையாடும்போது

நம்பிக்கையுடன் உரையாடவேண்டும். நம்பிக்கையுடன் கேட்க வேண்டும். எதிராளியின் கேள்விக்குத் தெளிவாகப் பதில் கூற வேண்டும். இவன் நம்மைத் தோற்கடித்துவிடுவானோ என்று அஞ்சக்கூடாது. எதிராளி மற்றவனைத் தோற்கடித்துவிட்டோம் எனவும் மகிழக்கூடாது. தோற்கடித்துவிட்டதாகப் பிறரிடம் கூற வும் கூடாது. தான் கூறுவதே சரி என மோகத்தினால் பிடிவாதம் செய்யக்கூடாது. தனக்குத் தெரியாததைப் பற்றிப் பேசக்கூடாது. முறைப்படி வணக்கத்துடன் தன் வாதத்தை எதிராளி ஒப்புக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும். உரையாடுவதில் கவனமா யிருக்கவேண்டும். இவ்வாறு உரையாடுதலை ஸந்தாய ஸம்பாஷா என்கிறோம். 17

## 12. விகிருஹ்ய ஸம்பாஷா (பகைமை கொண்ட உரையாடல்)

தன் நலனை முன்னிட்டு எதிராளியை வெல்ல வேண்டுமென்ற அவா கொண்டு செய்யும் உரையாடல் விகிருஹ்ய ஸம்பாஷா எனப்படும். உரையாடுவதற்கு முன்னால் கல்வி அறிவு இவற்றில் தான் உயர்ந்தவனா எதிராளி உயர்ந்தவனா என்பதை நன்கு அறிந்துகொள்ள வேண்டும். அதனால் எதிராளியின் குணதோஷங் கள் வெளிப்படும். அதன்பின் அவையில் உள்ள மற்ற அறிஞர்கள் தம்மைச்சேர்ந்தவர்களா எதிராளியைச் சேர்ந்தவர்களா என் பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அந்த அவை அறிஞர்களு டையதா அறிவிலிகளுடையதா என்பதையும் தெரிந்துகொள்ள வேண்டும். அதை அறிந்து கொள்வதால் இப்பொழுது தொடங் கும் உரையாடல் நன்கு பயனளிக்குமா அல்லது கெடுதலை விளைவிக்குமா என்பது தெரியவரும். அதனால்தான் அறிஞர்கள் பரீக்ஷை செய்வதைப் புகழ்கிறார்கள்.

இவ்வாறு பரிசோதனை செய்தபின் தனக்கும் எதிராளிக்கும் உள்ள ஆயுர்வேத சாஸ்திரத்தின் அறிவு வேறுபாட்டையும் வாதம் செய்பவனின் குணங்களையும் தனக்கும் எதிராளிக்கும் நன்மை பயக்கும் விஷயங்களையும் தன்னிடமும் எதிராளியிடமும் உள்ள குறைபாடுகளையும் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஆயுர்வேத சாத்திரத்தில் நல்ல புலமை, குறிப்பாக சாத்திர ஸித்தாந்தங்களிலும் செயலிலும் திறமை, உரையாடும்போது கூறப்படும் பொருள்களை நன்கு நினைவு வைத்துக் கொள்ளுதல், சமயோசித அறிவு, தன் கருத்தை நன்கு வெளிப்படுத்தும் திறமை என இவையனைத்தும் வாதம் செய்பவனிடமிருந்தால் அவை உயர்ந்தகுணங்களாகக் கருதப்படுகின்றன.

சினங்கொளல் திறமையில்லாமை அச்சம் பொருள்களை நினைவிற்கொள்ளாமை கவனமின்மை இவை குற்றங்களாகக் கருதப்படுகின்றன.

இவ்விதமான குண தோஷங்களைத் தன்னிடத்திலும் எதிராளியிடமும் சோதித்துப் பார்க்க வேண்டும். இந்த நற்குணங்கள் தன்னிடம் எத்தனை உள்ளன எதிராளியிடம் எத்தனை உள்ளன என்பதை ஒப்பிட்டுப் பார்த்து பிறகு உரையாடுதலைத்தொடங்க வேண்டும். 18

தன்னைக் காட்டிலும் உயர்ந்த குணமுள்ளவன், தன்னைவிடக் குறைவான குணங்கள் உள்ளவன், தனக்குச் சமமான குணங்களையுடையவன் என எதிராளிகள் மூவகைப்படுவர். இந்த வேறுபாடு குணத்திற்கு ஏற்றவாறு கொள்ளப்படும். குலம் சுபாவம் தர்மம் போன்ற எல்லா விஷயங்களுக்கும் ஏற்றவாறல்ல. 19

அறிவாளிகள் நிறைந்த அவை அறிவிலிகள் நிறைந்த அவை என அவை இருவகையாகப் பிரிக்கப்படுகின்றது. இந்த இரண்டு பிரிவுகளும் கீழ்க்கண்ட காரணங்களைக் கொண்டு மூவகையாகப் பிரிக்கப்படுகின்றன.

1. நண்பர்களின் அவை, 2. எதிலும் ஈடுபடாதவர்களின் அவை, 3. எதிரிகள் கூடியிருக்கும் அவை என,

பரிஷத் (அவை-1)

ஞானவதீ—அறிவாளிகளின் அவை

| நண்பர்கள் அவை | எதிலும் ஈடுபடாதவர்கள் அவை | எதிரிகளின் அவை |
|---|---|---|

பரிஷத் (அவை-2)

மூடா—அறிவிலிகளின் அவை

| நண்பர்கள் அவை | எதிலும் ஈடுபடாதவர்கள் அவை | எதிரிகளின் அவை |
|---|---|---|

இவ்விதம் இக்காரணத்திற்கு ஏற்றவாறு அவை ஆறுவகை ஆயிற்று. அறிவாளிகளான நண்பர்கள் அவை. அறிவாளிகளான எதிலும் ஈடுபடாதவர்கள் அவை, அறிவாளிகளான எதிரிகளின் அவை, அறிவிலிகளான நண்பர்கள் அவை, அறிவிலிகளான எதிலும் ஈடுபடாதவர்கள் அவை, அறிவிலிகளான எதிரிகளின் அவை என இவற்றில் அவையிலுள்ளவர்கள் நண்பர்களாயிருந்தால் அதை நண்பர்கள் அவை என்கிறோம். அவையில் உள்ளவர்கள் நண்பர்

களும் அல்லாமல் எதிரிகளாகவுமில்லாமலுமிருந்தால் உதாஸீன பரிஷத் அதாவது எதிலும் ஈடுபடாதவர்கள் அவை என்கிறோம். அவையில் உள்ளவர்கள் எதிரிகளாக இருந்தால் எதிரிகளின் அவை என்கிறோம்.

அவையில் உள்ளவர்கள் அறிவாளிகளாக இருந்தால் அவை ஞானவதீ (அறிவாளிகளின்) அவை என்றும் அறிவிலிகளாயிருந் தால் மூடா (அறிவிலிகளின் அவை) என்றும் கூறுகிறோம்.

அறிவு பகுத்தறிவு உள்ளவர்களும் கேள்வி கேட்கவும் பதில் கூறவும் திறமை வாய்ந்தவர்களும் உள்ள அறிவாளிகளான எதிரி களின் அவையிலும், அறிவிலிகளான எதிரிகளின் அவையிலும் யாரிடமும் ஒருபொழுதும் வாத விவாதம் செய்யக் கூடாது.

அறிவிலிகளான நண்பர்கள் அவையிலும் உதாசீன அவை யிலும் தான் அறிவு பகுத்தறிவு இல்லாதவனாகவும் கேள்வி கேட்கவும் பதில் கூறவும் திறமையற்றவனாகவுமிருந்தாலும் எதி ராளிகள் புகழ் பெறாதவர்களாகவும் அறிவாளிகளான பொது மக்களால் வெறுக்கப்பட்டவர்களாகவுமிருந்தாலும் அங்கு வாத விவாதம் செய்யலாம்.

அப்படிப்பட்ட எதிராளிகளுடன் வாத விவாதம் செய்கையில் புரிந்துகொள்ள முடியாததும், சிக்கல் நிறைந்ததுமான நீண்ட வாக்கியங்களைப் பயன்படுத்த வேண்டும்.

மிக்க மகிழ்ச்சியுடன் அடிக்கடி எதிராளியை ஏளனம் செய்து கொண்டு அவையோர்களை அழைத்து ''நீங்கள் எல்லோரும் பாருங் கள் இவன் ஒன்றும் பேசுவதில்லை. இவனுக்கு நூலறிவே கிடை யாது'' என்று சொல்லியபடி அவனுக்குப் பேசுவதற்கு சந்தர்ப்பம் அளிக்கக்கூடாது. மேலும் கடினமான சொற்களைச் சொல்லிக் கொண்டு அல்லது ''நீ எந்த விஷயத்தை உறுதிப்படுத்த விரும்பு கிறாயோ அதைச் செய்யாததால் நீ தோற்றுவிட்டாய்'' என்று கூற வேண்டும்.

மறுபடியும் வாதத்திற்கு எதிராளி அழைப்பானாகில் ''மேலும் ஓராண்டு கற்றுவா. நீ முறையாக ஆசிரியருக்குப் பணிவிடை செய்து கல்வியைப் பெறவில்லை'' என்று கூற வேண்டும். அல்லது இதுவரை நடந்த வாத விவாதமே உனக்குப் போதுமானது என்று கூற வேண்டும்.

எதிராளி ஒருமுறை தோல்வியுற்றானாகில் அவனை எப்பொழுதும் தோல்வியடைந்தவனாகவே அறிஞர்கள் கருதுகின்றனர். அவனை மறுபடியும் விவாதத்தில் ஒருபொழுதும் சேர்த்துக் கொள்ளக்கூடாது. எதிரிகள் நிறைந்த அவையிலும் தன்னைக் காட்டிலும் சிறந்த அறிவாளிகளிடம் மேற்கண்ட விதமாகவே நடந்துகொள்ள வேண்டும் என்பது சிலருடைய கருத்து. ஆனால் தன்னைவிடச் சிறந்த அறிஞர்களிடம் அப்படி நடந்து கொள்வது சரியல்ல என்கின்றனர் சிறந்த அறிவாளிகள். 20

தன்னைக் காட்டிலும் குணங்களில் குறைந்தவனாகவோ அல்லது சமான குணமுள்ளவனாகவோ சிறந்த குணமுள்ளவனாகவோ எண்ணி அறிவிலிகள் நிறைந்த நண்பர்களின் சபையில் பகைமையுடன் விவாதம் செய்யவேண்டும். சபையின் ஒவ்வொரு செயலையும் ஒவ்வொரு வார்த்தையையும் கவனித்தும் கேட்கிறவன் அறிவு பகுத்தறிவு கேட்டவற்றை நினைவில் வைத்துக் கொள்ளும்சக்தியுடையவன் சொல்லாற்றல் உடையவன் என இவர்கள் கூடிய உதாசீன சபையில் விவாதம் செய்யும்பொழுது கவனத்துடன் எதிராளியின் குண தோஷங்களின் பலத்தைப் பரிசோதிக்க வேண்டும். அதன்பின் எதிராளி எந்த விஷயத்தில் திறமையுள்ளவனாக உள்ளானோ அந்த விஷயத்தில் விவாதம் செய்யக்கூடாது.

எந்த விஷயத்தில் எதிராளி குறைபாடு உள்ளவனாக இருக்கிறானோ அந்த விஷயத்தில் விவாதத்தைத் தொடங்கி அவனைத் தோற்கடிக்கவேண்டும்.

எதிராளி தன்னைக் காட்டிலும் குறைந்த அறிவுள்ளவனாக இருந்தால் அவனைக் கீழ்க்கண்ட முறைகளால் தோற்கடிக்க வேண்டும். உதாரணமாக

(அ) எதிராளி சாத்திர அறிவு பெறாதவனாயிருந்தால் நீண்டவையான நூல்களின் வாக்கியங்களைக் கூறிஅவனை வெல்லவேண்டும்.

(ஆ) எதிராளி பகுத்தறிவு இல்லாதவனாயிருந்தால் புரிந்து கொள்ள முடியாத சொற்களினால் தோற்கடிக்க வேண்டும்.

(இ) கூறிய விஷயத்தை நினைவு வைத்துக் கொள்ள எதிராளி திறமையற்றவனாயிருந்தால் ஒரே விஷயத்தின் தொடர்பாக நீண்ட சூத்திரங்கள் உள்ள குழப்பமான மிகப் பெரிய வாக்கியங்களைப் பயன்படுத்தித் தோற்கடிக்க வேண்டும்.

(ஈ) எதிராளி சமயோசித அறிவு இல்லாதவனாகயிருந்தால் பல வகையாகப் பொருள்களைக் குறிக்கக்கூடிய ஒரேவிதமான சொற்களைப் பயன்படுத்தித் தோற்கடிக்க வேண்டும்.

(உ) எதிராளி, பேசும் திறமையற்றவனாயிருப்பின் மறுக்காமல் முழு அறிவும் ஏற்படாத அரைகுறையான வாக்கியத்தைப் பயன்படுத்தித் தோற்கடிக்க வேண்டும்.

(ஊ) எதிராளி, சபையில் பேசிப் பழக்கமில்லாதவனாயும் எந்த இடத்தில் எந்தச் சொற்களைப் பயன்படுத்த வேண்டும் என்பதை அறியாதவனாயுமிருப்பின் அவனை அவமானப் படுத்தித் தோற்கடிக்க வேண்டும்.

(எ) எதிராளி சினமுள்ளவனாயிருப்பின் மேலும் அவனுக்குச் சின மூட்டக்கூடிய சொற்களைத் தட்டுத் தடங்கலில்லாமல் கூறித் தோற்கடிக்க வேண்டும்.

(ஏ) எதிராளி பயந்தவனாயிருப்பின் அவனை மேலும் பய முறுத்தித் தோற்கடிக்க வேண்டும்.

(ஐ) எதிராளி வாதத்தின் முறைகளில் பழக்கப்படாதவனாகவோ அவற்றைக் கடைபிடிக்காதவனாகவோ இருப்பின் அவனை முறைப்படி வெல்லவேண்டும். அதாவது ''நீ முறைக்கு எதிரிடையாக நடப்பாயாகில் தோல்வியுற்றவனாகக் கருதப் படுவாய்'' என்று அடிக்கடி கூறி அவனைத் தோற்கடிக்க வேண்டும்.

இம்மாதிரியான உபாயங்களைக் கையாண்டு பலமற்ற எதிராளியைத் தோற்கடிக்க வேண்டும். 21

**அதைப் பற்றிய செய்யுளின் கருத்து**

எதிராளிகள் நிரம்பிய சபையில் எல்லா விஷயங்களையும் தக்க ஆதாரத்துடன் பேசவேண்டும். எதிராளி ஆதாரத்துடன் ஒன்றைக் கூறினால் அதை எதிர்க்கக்கூடாது. சில எதிராளிகளுடைய பேச்சு மிகவும் சினத்தைத் தோற்றுவிக்கக்கூடும். சினமுள்ளவனுக்கு உலகில் செய்யத் தக்கது செய்யத்தகாதது கூறத்தகுந்தது கூறத்தகாதது என்ற முறையில்லை. ஆகையினால் திறமையுள்ள அறிவாளி நல்லோர்களின் சபையில் சச்சரவை விரும்புவதில்லை. 22—23

விவாதம் ஏற்பட்டால் மேற்கண்ட முறையைக் கையாள வேண்டும். 24

**13. எதிராளியைத் தோற்கடிக்க வழி முறைகள்**

சபை தொடங்குமுன் அங்குள்ளவர்களைத் தன் வசப்படுத்திக் கொண்டு தனக்கு நன்கு பழக்கப்பட்ட விஷயத்தை வாதத்திற்குத்

தேர்ந்தெடுக்க வேண்டும். அல்லது எதிராளிக்கு மிகவும் கடினமான விஷயத்தைச் சபையிலுள்ளவர்கள் மூலமாகத் தேர்ந்தெடுக்கச் செய்ய வேண்டும். அல்லது சபையில் உள்ளவர்கள் அனைவரும் எதிராளிக்கு விரோதிகளாக ஆகும்படியான முறையைக் கையாள வேண்டும். சபையில் உள்ளவர்கள் தனக்கு வசமானபின் எதிராளியிடம், ''வாதம் எந்த விஷயத்தைப் பற்றி நடைபெறும் என்பதை நான் இப்பொழுது கூற முடியாது. இந்தச் சபை தன் விருப்பப்படி திறமைக்கு ஏற்றவாறு வாதம் நடக்கும்போது கடைபிடிக்க வேண்டிய முறைகள் எல்லாவற்றையும் தீர்மானிக்கும்'' என்று கூறிப் பேசாமல் அமரவேண்டும். 25

''இந்தச் சபையில் இதைக் கூற வேண்டும் இதைக் கூறக் கூடாது என்றும் அப்படிக் கூறினால் நீ தோற்கடிக்கப்பட்டவனாவாய் என்றும்'' எதிராளியிடம் கூற வேண்டும். இது வாத முறையின் இலக்கணமாகும். 26

ஆயுர்வேத நூல்பற்றி வாத-விவாதம் தொடங்குமுன் மருத்துவர்கள் வாத-விவாத வழிகளை அறிந்துகொள்ள கீழ்க்கண்ட சொற்களை நன்கு நினைவில் கொள்ள வேண்டும். அவையாவன : 1. வாதம், 2. திரவியம், 3. குணம், 4. கர்மா, 5. ஸாமான்யம், 6. விசேஷம், 7. ஸமவாயம், 8. பிரதிக்ஞா, 9. ஸ்தாபனா, 10. ப்ரதிஷ்டாபனா, 11. ஹேது, 12. திருஷ்டாந்தம், 13. உபநயம், 14. நிகமனம், 15. உத்தரம், 16. ஸித்தாந்தம், 17. சப்தம், 18. ப்ரத்யக்ஷம், 19. அநுமானம், 20. ஐதிஹ்யம், 21. ஔபம்யம், 22. ஸம்சயம், 23. பிரயோசனம், 24. ஸவ்யபிசாரம், 25. ஜிக்ஞாஸா, 26. வ்யவஸாயம், 27. அர்த்தப் பிராப்தி, 28. ஸம்பவம், 29. அநுயோஜ்யம், 30. அநநுயோஜ்யம், 31. அநுயோகம், 32. பிரத்யனுயோகம், 33. வாக்ய தோஷம், 34. வாக்ப்ரசம்ஸா, 35. சலம், 36. அஹேது, 37. அதீத காலம், 38. உபாலம்பம், 39. பரிகாரம், 40. பிரதிக்ஞாஹானி : 41. அப்யநுக்ஞா, 42. ஹேத்வந்தரம், 43. அர்த்தாந்தரம், 44. நிக்ரகஸ்தானம். 27

### (1) வாதம்

நூலில் கூறிய முறையைப் பின்பற்றி தன் தன் கருத்தை நிலைநாட்டுவதற்காக எதிராளிகளுடன் உரையாடுதல் வாதம் எனப்படும். அது சுருக்கமாக ஜல்பம், விதண்டா என இருவகைப்படும்.

தன் தன் கருத்தை ஆதாரத்துடன் எடுத்துரைப்பது ஜல்பம். அதற்கு எதிரிடையானது விதண்டா என்பது. உதாரணமாக ஒரு

வனுடைய வாதம் மறுபிறவி உண்டு என்பது, மற்றொருவன் மறு பிறவி இல்லை என்று அதை மறுக்கிறான்.

இவர்களிருவரும் ஆதாரம் சான்று இவற்றுடன் தங்கள் தங்கள் கருத்தைப் பலப்படுத்துவதும் எதிராளியின் தரப்பில் உள்ளதைக் குற்றமுள்ளதாகக் கூறுவதும் ஜல்பமாகும். ஜல்பத்திற்கு எதிரிடையானது விதண்டா என்பது. அதாவது தன் கொள்கையை வெளிப்படுத்தாமல் எதிராளியின் தரப்பில் உள்ள குற்றங்களை மட்டும் வெளிப்படுத்துவது. 28

## (2-7) திரவியம் முதலியன

**திரவியம், குணம், கர்ம, ஸாமான்யம், விசேஷம், ஸமவாயம்** இவற்றின் விளக்கம் ஸூத்திரஸ்தானத்தில் தீர்க்கஞ்ஜீவிதீயம் எனும் அத்தியாயத்தில் இலக்கணங்களுடன் விளக்கப்பட்டுள்ளது. 29

## (8) பிரதிக்ஞா

எந்தக் கொள்கையை உறுதிப்படுத்துகிறோமோ அதைவெளிப் படுத்தும் சொல் பிரதிக்ஞை. உதாரணமாக புருஷன் அழிவற்றவன். 30

## (9) ஸ்தாபனா

தன்னால் செய்யப்பட்ட சூளுரை ஹேது திருஷ்டாந்தம் உபநயம் நிகமனம் இவற்றால் உறுதிப்படுத்துவதை ஸ்தாபனா என்கிறோம். முதலில் பிரதிக்ஞை ஏற்படுகிறது. பிறகு ஸ்தாபனம். முதலில் ஒன்றை பிரதிக்ஞை செய்யாவிடில் எதை உறுதிப்படுத்துவது?

உதாரணமாக ஒருவன "புருஷன் அழிவற்றவன்" என்கிறான். இது அவனுடைய பிரதிக்ஞை. அதற்கு ஹேது (காரணம்) ஒருவராலும் செய்யப்படாதது என்பது. திருஷ்டாந்தம் ஆகாயம் ஒருவராலும் செய்யப்படாததால் அழிவற்றது.

**(அ) உபநயம்:** எப்படி ஆகாயத்தைப் படைப்பவன் ஒருவனுமில்லையோ அப்படி புருஷனைப் படைப்பவனும் ஒருவனுமிலன்.

**(ஆ) நிகமனம்:** ஆகையால் புருஷன் அழிவற்றவன். இம்மாதிரி தன் உறுதிப்பாட்டை உறுதிப்படுத்துவது ஸ்தாபனா என்பதாகும்.

### (10) பிரதிஷ்டாபனா

எதிராளியின் கொள்கைக்கு எதிரிடையாகத் தன் கொள் கையை உறுதிப்படுத்துவது பிரதிஷ்டாபனா எனப்படும்.

உதாரணமாக முதலில் புருஷன் அழிவற்றவன் என்று உறுதிப் படுத்துகிறான். அந்த உறுதிப்பாட்டிற்கு எதிரிடையாகக் கூறுவது புருஷன் அழிவுள்ளவன் என்பதாகும். அதற்குக் காரணம் புலன் களால் பார்க்கப்படுவதால் என்பதாகும். திருஷ்டாந்தம் (உதார ணம்) மண்குடம்.

மண்ணால் ஆக்கப்பட்ட குடம் கண்ணாலே பார்க்கப்படு கிறது. அது அழிவுள்ளது. அதேபோல் புருஷனும் கண்களுக்குப் புலப்படுவதால் அழிவுள்ளவன்.

நிகமனம்: அதனால் புருஷன் அழிவுள்ளவன். 31—32

### (11) ஹேது

அறிவிற்குச் சாதனமான காரணத்தை ஹேது என்கிறோம். அந்த ஹேது என்பது ப்ரத்யக்ஷம் அநுமானம் ஐதிஹ்யம் (நல் லோர் வார்த்தை) ஔபம்யம் (உவமை) என்ற நான்கு காரணங் (பிரமாணம்) களால் எது அறியப்படுகிறதோ அதாவது உறுதிப் படுத்தப்படுகிறதோ அது உண்மையான அறிவாகும். 33

### (12) திருஷ்டாந்தம்

அறிவாளிகளும் அறிவிலிகளும் ஒரேவிதமாக அறிந்துகொள் ளும்படி கூறவேண்டியதை எதைக் காட்டி உறுதிப்படுத்துகிறோ மோ அது திருஷ்டாந்தமாகும்.

உதாரணமாக நெருப்பு சூடானது. நீர் திரவமானது. நிலம் அசைவற்றது. கதிரவன் ஒளிவீசுபவன். அதாவது கதிரவன் உலகில் உள்ள எல்லாப் பொருட்களையும் புலப்படுத்துவதுபோல் சான்றோர் சொல்லும் புலப்படுத்துகிறது. 34

### (13-14) உபநயம்-நிகமனம்

உபநயம், நிகமனம் இரண்டும் ஸ்தாபனா ப்ரதிஷ்டா பனா இவற்றை விளக்குமிடத்துக் கூறப்பட்டுள்ளன. 35

### (15) உத்தரம்

காரணத்தில் உள்ள ஒரு பொதுவான குணத்தைக் கூறும் பொழுது அதற்கு எதிரிடையான மற்றொரு பொதுவான குணத்

தைக் கூறுதல் அல்லது காரணத்தில் உள்ள எதிரிடையான ஒரு குணத்தைக் கூறுதல் அல்லது காரணத்தில் உள்ள எதிரிடையான ஒரு குணத்தைக் கூறும்பொழுது மற்றொரு பொதுவான குணத்தைக் கூறுதல் உத்தரம் எனப்படும்.

உதாரணமாக வாத நோய்க்குக் காரணம் குளிர்ந்த காற்று. வாத நோயிலும் குளிர்ச்சி என்ற குணம் உள்ளது. அதே குளிர்ச்சி என்ற குணம் குளிர்ந்த காற்றிலும் உள்ளது என்று ஒருவன் கூறுவானாகில் அதற்கு இவ்விதம் பதில் கூற வேண்டும்.

வாத நோய் தோன்றிய உடலுறுப்புக்களில் எரிச்சல் சூடு அழுகுதல் போன்ற குணங்கள் உள்ளன. அவை குளிர்ச்சிக்கு எதிரிடையானவை. அவை வாத நோய்க்குக் காரணமான குளிர்ந்த காற்றில் இல்லை. ஆதலால் நோயிலும் நோய்க்குக் காரணமானவற்றிலும் ஒரே குணம் இல்லை. இவ்விதம் கூறுவது எதிரிடையான பதில்.

### (16) ஸித்தாந்தம்

ஆராய்ச்சிக்கு உரிய விஷயங்களை ஆராய்ச்சியாளர் மூலமாக பலமுறை நன்கு ஆராய்ந்து காரணங்களைக் கொண்டு முடிவு செய்தல் ஸித்தாந்தம் எனப்படும். இந்த ஸித்தாந்தம் (அ) ஸர்வ தந்த்ர ஸித்தர்ந்தம் (ஆ) ப்ரதிதந்த்ர ஸித்தாந்தம் (இ) அதிகரண ஸித்தாந்தம் (ஈ) அப்யுபகம ஸித்தாந்தம் என நால்வகைப்படும்.

### (அ) ஸர்வதந்த்ர ஸித்தாந்தம்

எல்லா நூல்களிலும் ஒப்புக்கொள்ளக்கூடிய சித்தாந்தம் ஸர்வ தந்த்ர ஸித்தாந்தம் எனப்படும். உதாரணம்: நோய்க்குக்காரணம், நோய்கள் நீங்கக்கூடிய நோய்களுக்குச் சிகிச்சை இவை எல்லா நூல்களிலும் ஒரேவிதமாகக் கூறப்பட்டுள்ளன. இதை எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

### (ஆ) ப்ரதிதந்திர ஸித்தாந்தம்

ஒவ்வொரு நூலிலும் தனித்தனியாக புகழ்பெற்ற ஸித்தாந்தம் ப்ரதிதந்த்ர ஸித்தாந்தம் எனப்படும். அந்த ஸித்தாந்தத்தை அந்த நூலாசிரியர்தான் ஒப்புக்கொள்கிறார். உதாரணமாக தாமார்கவதந்த்ரத்தில் இனிப்பு, புளிப்பு, உப்பு, உவர்ப்பு, கைப்பு, துவர்ப்பு, [1]க்ஷாரம் [2]அவ்யக்தம் எனச் சுவைகள் எட்டு வகை

---

1. க்ஷாரம் – உவர்ப்பும் உப்பும் மிகுதியாக உள்ளதும் உடலைக் கெல்லும் சக்தியுடையதுமான ஒரு பொருள்.

2. அவ்யக்தம்– தெளிவற்றது.

யாகப் பிரிக்கப்பட்டுள்ளன. சரகஸம்ஹிதையில் க்ஷாரம் அவ்யக்தம் இவை நீங்கலாக ஆறு சுவைகள் கூறப்பட்டுள்ளன.

மேலும் சரகஸம்ஹிதையில் [1]ஞானேந்திரியங்கள் ஐந்து எனக் கூறப்படுகின்றன. மற்ற நூல்களில் மனதையும் சேர்த்து ஞானேந்திரியங்கள் ஆறு எனப் பேசப்படுகின்றன. சரகஸம்ஹிதையில் வாதம், பித்தம், கபம் இம்மூன்று தோஷங்களினால்தான் நோய்கள் தோன்றுகின்றன எனக் கூறப்பட்டுள்ளது.

மற்ற நூல்களில் வாதம், பித்தம், கபம், ஜீவாணு அல்லது பூதம் இவற்றால் எல்லா நோய்களும் தோன்றுவதாகக் கூறப்பட்டுள்ளது.

**(இ) அதிகரண ஸித்தாந்தம்**

ஒரு நூலில் ஒரு பொருளைப் பற்றிக் குறிப்பிடும்போது அத்துடன் தொடர்புள்ள நூல்களில் உள்ள ஸித்தாந்தங்களைக் குறிப்பிடுவது அதிகரண ஸித்தாந்தமாகும். உதாரணமாக முக்தி பெற்றவர்கள் நல்ல தீய பயன்களை அளிக்கக்கூடிய செயல்களைச் செய்வதில்லை. ஏனென்றால் அவர்கள் ஆசையற்றவர்கள். அவர்களுக்கு இம்மை மறுமை பயனைப்பற்றி அறிந்துகொள்ளும் விருப்பமில்லை. அதனால் அவர்கள் பற்றற்றவர்கள்.

என்பதனாலேயே கர்மாவுக்குப் பயன் உண்டு. மோக்ஷம் உண்டு. புருஷன் இருக்கிறான். மரணத்திற்குப் பிறகு மறுபிறப்பு உண்டு என்று தெரிய வருகிறது.

**(ஈ) அப்யுபகமஸித்தாந்தம்**

மருத்துவர்கள் நூலில் கூறிய விஷயங்களைப்பற்றி விவாதம் செய்யும்போது பிரசித்தமற்றதும் ஆராயப்படாததும் சான்றோர்களால் உபதேசிக்கப்படாததும் காரணமற்றதுமான விஷயங்களை ஒப்புக்கொள்வது அப்யுபகம ஸித்தாந்தம் எனப்படும்.

உதாரணம்—திரவியத்தை முக்கியமாகக் கொண்டு கூறுவோம். குணத்தை முக்கியமாகக் கொண்டு கூறுவோம் என்பது இம்மாதிரி நான்குவிதஸித்தாந்தங்கள் உள்ளன. 36–37

**(17) சப்தம்**

சப்தம் என்பது எழுத்துக்களின் கூட்டமாகும். அது திருஷ்டார்த்தம் அதிர்ஷ்டார்த்தம் ஸத்யம் அந்ருதம் என நால் வகைப்படும்.

---

1. ஞானேந்திரியங்கள் — கண், காது, மூக்கு, நாக்கு, தோல்.

## (அ) திருஷ்டார்த்தம்

காதால் கேட்கக்கூடியதும் தெளிவானதுமான சப்தம் திருஷ்டார்த்தமாகும். உதாரணமாகத் தகாதசெயல்களில்புலன்களைச் செலுத்துதல், மதியிழத்தல், பருவங்களின் மாறுபாடு என்ற மூன்று காரணங்களினால் தோஷங்கள் சீற்றமடைகின்றன.

[1]லங்கனம், [2]பிரும்ஹணம், [3]ஸ்நேகனம், [4]ரூக்ஷணம், [5]ஸ்வேதனம், [6]ஸ்தம்பனம் என்ற ஆறுவகைச் சிகிச்சையினால் தோஷங்கள் சாந்தமடைகின்றன.

காது கண் போன்ற உறுப்புக்கள் நன்றாக இருப்பதனால் தான் சப்தம் போன்றவற்றைக் அறிய முடிகிறது.

## (ஆ) அதிர்ஷ்டார்த்தம்

புலன்களுக்குப் புலப்படாதது அதிர்ஷ்டார்த்தமாகும். உதாரணமாக — இறந்தபின் மறுபடியும் பிறப்பு ஏற்படுகிறது. மோக்ஷமும் ஏற்படுகிறது என்ற இந்த வரிகளுக்குப் பொருள் ஒரு புலனாலும் காணமுடிவதில்லை. சாத்திர அறிவைக் கொண்டு தான் இதை அறிந்துகொள்ள முடிகிறது. அதனால் இதை அதிர்ஷ்டார்த்தம் எனக் கூறுகிறோம்.

## (இ) ஸத்யம் (உண்மை)

ஸத்யம் என்பது உண்மையாக இருக்கக்கூடியது. உதாரணமாக ஆயுர்வேத உபதேசம் நீக்கக்கூடிய நோய்களுக்கு சிகிச்சை செய்யும் வழிமுறைகள் தொடங்கும் செயலால் உடன் பயன் ஏற்படுகிறதா என்ற இந்த வரிகள் உண்மையான பொருளைக் கூறுவதனால் ஸத்யம் எனப்படும்.

## (ஈ) அந்ருதம்

உண்மைக்குப் புறம்பானதை அந்ருதம் என்கிறோம். 38

1. லங்கனம் — பட்டினி இருத்தல் (இளைக்கச் செய்தல்)
2. பிரும்ஹணம்— பருக்கச் செய்தல் (வலிவூட்டுதல்)
3. ஸ்நேகனம் — நைப்புத்தன்மை உண்டாக்குதல்
4. ரூக்ஷணம் — வறட்சித்தன்மை உண்டாக்குதல்
5. ஸ்வேதனம் — வியர்வை உண்டாக்குதல்
6. ஸ்தம்பனம் — கட்டுதல்

### (18) ப்ரத்யக்ஷம் (புலன்களால் காணுதல்)

மனம் ஐந்து புலன்கள் இவற்றால் அறியப்படுவதை ப்ரத்யக்ஷம் என்கிறோம்.

இன்பம்-துன்பம் விருப்பு-வெறுப்பு முயற்சி போன்றவை மனதில் அறியக்கூடியவை. ஒலி தொட்டுணர்ச்சி உருவம் சுவை மணம் இவை புலன்களால் அறியக்கூடியவை. 39

### (19) அநுமானம் - (ஊகித்தறிதல்)

யுக்தியுடன் ஊகித்து அறிந்துகொள்ளுதல் அநுமானம் எனப்படும். உதாரணமாக சீரண சக்தியைக் கொண்டு சடராக்னியையும், உடற்பயிற்சியைக் கொண்டு வலிவையும், ஒலி தொட்டுணர்ச்சி என்ற விஷயங்களைத் தகுந்த முறையில் கேட்பதைக் கொண்டு புலன்களின் திறமையையும் ஊகித்து அறிகிறோம். 40

### (20) ஐதிஹ்யம் - (சான்றோர் வாக்கு)

சான்றோர் வாக்கு ஐதிஹ்யம் எனப்படும். உதாரணமாக வேதம் தர்ம சாத்திர நூல் ஸ்மிருதி புராணம் போன்றவைகளைச் சான்றோர் வாக்கைக் கொண்டு அறிகிறோம். 41

### (21) ஔபம்யம்

ஒன்றை மற்றொன்றுடன் ஒப்பிட்டுத் தெளிவுபடுத்துதல் ஔபம்யம்ஆகும். உதாரணமாகத் தண்டத்(தடி)தைக் காண்பித்து தண்டகம் என்ற நோயையும், வில்லைக் காண்பித்து தனுஸ்தம்பம் (உடல் வில் போன்று வளைந்திருக்கும் நோய்) என்ற நோயையும் அம்புகள் வைக்கும் உறையைக் கொண்டு ஆரோக்யம் அளிக்கும் மருத்துவனையும் தெரியப்படுத்துதல். 42

### (22) ஸம்சயம்

சந்தேகத்திற்குரிய இலக்கணங்களைக்கொண்டு சந்தேகமான விஷயங்களை முடிவு செய்யாமலிருத்தல் ஸம்சயம் எனப்படுகிறது. உதாரணமாக ஒரு நோயாளி முழு ஆயுள் காலம் வாழ்வதற்கான இலக்கணங்களைப் பெற்றிருந்தும் விரைவில் இறந்துவிடுகிறான். மற்றவன் நீண்ட நாள் வாழ்வதற்கான இலக்கணங்களுடன் கூடியிராவிட்டாலும் நீண்ட நாள் வாழ்கிறான். ஒருவன் நன்கு சிகிச்சை பெற்று விரைவில் அழிகிறான். நன்கு சிகிச்சை செய்யப்பெறாத மற்றொருவன் நீண்டகாலம் வாழ்கிறான். எனவே மனிதனுக்கு எதிர்பாராத இறப்பு உண்டா இல்லையா ? என்ற ஐயம் ஏற்படுகிறது. 43

## (23) பிரயோசனம்

ஒரு செயல் எதைக் குறித்துத் தொடங்கப்படுகிறதோ அது பிரயோசனமாகும். உதாரணமாக எனக்கு எதிர்பாரா மரணம் ஒரு வேளை ஏற்படவிருந்தால் நான் என் ஆயுளை வளர்த்துக் கொள்வதற்காக நன்மை தரும் உணவு வகை நடைமுறைகள் இவற்றைக் கடைபிடிப்பேன். ஆயுளுக்குக் கெடுதல் விளைவிக்கும் உணவு வகை, நடைமுறைகள் இவற்றை விடுவேன் எவ்வாறு எனக்கு அகால மரணம் நேரும் என்று செயல்படுவது பிரயோசனமாகும். 44

## (24) ஸவ்யபிரசாரம்

நிலையற்ற அறிவு ஸவ்யபிசாரம் எனப்படும். உதாரணமாக ஒரு மருந்தைக் குறிப்பிட்ட நோய்க்குப் பயன் படுத்தினால் நன்மையா? தீமையா? என்பதை உறுதிப் படுத்திக் கொள்ளாதிருத்தல். 45

## (25) ஜிக்ஞாஸா

சோதித்துப் பார்த்தல் ஜிக்ஞாஸா எனப்படும். மருந்தைப் பற்றிய பரிசோதனை பின்பு கூறப்படும். 46

## (26) வ்யவஸாயம்

தீர்மானித்தல் வியவஸாயம் எனப்படும். உதாரணமாகக் குறிப்பிட்ட நோய், வாத தோஷத்தினால்தான் ஏற்பட்டது. இதற்கு இதுதான் மருந்து என்று தீர்மானிப்பது. 47

## (27) அர்த்த பிராப்தி

ஒரு விஷயத்தைக் கூறியபின் அதனால் மற்றொன்றைக் கூறாமலேயே தானாகவே பொருள் விளங்குவது அர்த்த பிராப்தி எனப்படும்.

உதாரணம்: இளைக்கச் செய்வதால் இந்நோய் நீங்கக் கூடியதல்ல என்று கூறியபின் மேல்வாக்கியம் கூறாமல் அர்த்த பிராப்தியினால் உடலைப் பருக்கச் செய்வதனால் நீங்கிவிடும் என்பது புலப்படுகிறது. அதேபோல் இவன் பகலில் உண்ணக்கூடாது. என்று கூறினால் அர்த்த பிராப்தியினால் இரவில் உண்ண வேண்டும் என்று தெரியவருகிறது. 48

(28) ஸம்பவம்

எது எங்கிருந்து தோன்றுகிறதோ அக்காரணம் அதற்குச் ஸம்பவம் எனப்படும்.

உதாரணம் : ஐந்து பெரும் பூதங்கள் ஆன்மா என்ற ஆறு தாதுக் களிலிருந்து கர்ப்பம் தோன்றுகிறது.

தீமை விளைவிக்கும் பொருளைப் பயன்படுத்துவதால் நோய் ஏற்படும். நன்மை விளைவிக்கும் பொருளைப் பயன்படுத்துவ தால் ஆரோக்யம் ஏற்படும். 49

(29) அநுயோஜ்யம்

கூறப்படும் வாக்கியம் குற்றமுள்ளதாயிருத்தல். பொதுவாகக் கூறப்பட்ட அர்த்தத்தில் விசேஷமான விதத்தில் பொருள் விளங்கு வதற்காக மற்றொரு வாக்கியத்தைப் பயன்படுத்தினால் அதையும் அநுயோஜ்யம் என்கிறோம்.

உதாரணமாக: இந்நோய் ஸம்சோதனம் எனும் சிகிச்சையினால் தணிக்கக்கூடியது என்று கூறினால் இது வாந்திக்குக் கொடுத்து தணிக்கச் செய்வதா அல்லது பேதிக்குக் கொடுத்துத் தணிக்கச் செய்வதா எனும் ஐயம் தோன்றும். எனவே அப்படிக் கூறுவது அநுயோஜ்யம். 50

(30) அநநுயோஜ்யம்

அநுயோஜ்யத்திற்கு நேர் எதிரிடையான வாக்யம் அநநு யோஜ்யம் எனப்படும்.

உதாரணம் : இந்த நோய் சிகிச்சைக்குக் கட்டுப்படாதது. 51

(31) அநுயோகம்

ஒரு சாத்திரத்தை நன்கு அறிந்த அறிவாளி, அதே சாத் திரத்தை அறிந்த மற்றொரு அறிவாளியுடன் அறிவு பகுத்தறிவு கேள்வி பதில் இவற்றைச் சோதிப்பதற்காக அந்தச் சாத்திரத் திலோ அதன் தொடர்பான ஒரு பகுதியிலோ கேள்வி கேட்பது அனுயோகம் எனப்படும். அதாவது புருஷன் அழிவற்றவன் என்று கூறினால் மற்ற அறிவாளி அதற்குக் காரணம் என்ன? என்று கேட்பது அநுயோகம். 52

(32) ப்ரத்யநுயோகம்

அனுயோகத்திற்குப் பிறகு மறுபடியும் அனுயோகம் செய் தால் ப்ரத்யனுயோகம் எனப்படும்.

உதாரணம் : முன் கூறிய அநுயோகத்திற்கு மேலும் என்ன காரணம்? என்று கேட்பது ப்ரத்யனுயோகமெனப்படும். 53

## (33) வாக்யதோஷம்

பொருளில் குறைவோ மிகுதியோ வேறு பொருளைக் கொடுக்கக்கூடியதாகவோ, சம்பந்தமில்லாப் பொருளைத் தரக் கூடியதாகவோ அல்லது எதிரிடையான பொருளைத் தரக் கூடியதாகவோ இருந்தால் அவ்வித தோஷங்களுடன் கூடிய வாக்யத்தை வாக்யதோஷம் என்கிறோம்.

இந்தக் குறைவு போன்ற தோஷங்கள் இல்லாவிடில், வாக்யத்தின் இயற்கை அர்த்தம் குலையாது.

### (1) ந்யூனம் (குறைவு)

ஒரு வாக்யத்தில் பிரதிக்ஞை ஹேது உதாஹரணம் உபநயம் நிகமனம் இவற்றில் ஏதாவது ஒன்று குறைவுபடுவது அல்லது பல காரணங்களைக் கூறி தீர்மானித்ததில் ஒரே காரணத்தை உறுதிப்படுத்துவது இவற்றை ந்யூன வாக்ய தோஷம் என்கிறோம்.

### (2) அதிகம்

ஒருகாரணத்தினால் முடிவு செய்யப்படுவதற்குப் பலகாரணங்களைக் கூறுவது அதிகமாகும். அல்லது ஆயுர்வேதத்தைப் பற்றிப் பேச வேண்டிய இடத்தில் அதற்கு சம்மந்தமில்லாத பார்ஹஸ்பத்யா, ஔசனர் இவர்களுடைய சாத்திரம் அல்லது வேறு ஒரு சாத்திரம் பற்றிப் பேசுவதும் அல்லது ஆயுர்வேத சம்பந்தப்பட்ட விஷயத்தையே இருமுறை திருப்பிக் கூறுவதும் அதிக வாக்யதோஷம் எனப்படும்.

இந்த திருப்பிக் கூறுதல் என்பது பொருளைத் திருப்பிக் கூறுதல் சொல்லைத் திருப்பிக் கூறுதல் என இருவகைப்படும்.

அர்த்தத்தைத் திருப்பிக் கூறுதல் பேஷஜம் ஔஷதம், ஸாதனம் என்ற இம்மூன்று சொற்களை ஒரே வார்க்யத்தில் பயன் படுத்துவதாகும்.

சொல்லைத் திருப்பிக் கூறுதல் பேஷஜம், பேஷஜம் (மருந்து) என்று ஒரே வாக்யத்தில் கூறுவது.

### (3) அனர்த்தகம்

எழுத்துக்களின் சேர்க்கை மட்டுமிருந்தால் அதை அனர்த்தகம் என்கிறோம். உதாரணம், க,ச,ட,த,ப இந்த எழுத்துக்களின்

சேர்க்கையினால் ஒரு கருத்தும் விளங்குவதில்லை. ஆகையினால் இது அனர்த்தகம் எனப்படும்.

**(4) அபார்த்தகம்**

கருத்துள்ள சொற்களால் ஒன்றுக்கொன்று சம்மந்தமில்லாமல் இணைக்கப்பட்டுள்ள வாச்யம் அபார்த்தகம் எனப்படும். உதாரணமாக சக்ரம் (உருளை), தக்ரம் (மோர்), வம்சம் (குலம்), வஜ்ரம் (ஆயுதம்), நிசாகரன் (சந்திரன்), கொண்ட வாக்கியத்தில் சொற்கள் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதவை.

**(5) விருத்தம்**

திருஷ்டாந்தம், ஸித்தாந்தம், சமயம் இவற்றிற்கு எதிரிடையானது விருத்தம் எனப்படும். திருஷ்டாந்தம், ஸித்தாந்தம் இவற்றைப்பற்றி இவ்வத்தியாயத்தில் முன்பு கூறப்பட்டுள்ளது.

**(6) ஸமயம்**

ஒவ்வொரு சாஸ்திரத்திற்கும் மரபுச் சொற்கள் உண்டு. ஒரு சாத்திரத்தின் பொருளை மற்றொரு சாத்திரத்தின் சொல்லுக்குப் பயன்படுத்தக் கூடாது. ஸமயம் என்பது ஆயுர் வேதிக ஸமயம், யாச்ஞிக ஸமயம், மோக்ஷ சாஸ்திரிக ஸமயம் என மூவகைப்படும்.

---

மருத்துவன், நோயாளி, பணியாள், மருந்து என நான்கு பிரிவுகளுடன் கூடிய சதுஷ்பாதம் என்பது ஆயுர்வேதிகஸமயம்,

யாச்ஞிக ஸமயம் யாகம் செய்யும் தலைவர்கள் மூலமாக யாகத்தில் உள்ள ஆடுகளைக் கொல்ல வேண்டும் என்பதாகும்.

எல்லா உயிரினங்களிடத்திலும் அன்பு பாராட்ட வேண்டும் என்பது மோக்ஷ சாஸ்திரிக ஸமயம். (தன் சமயத்திற்கு மாறான பொருள் கூறுவது சமயவிருத்தமெனப்படும்). இத்துடன் வாச்ய தோஷம் முடிந்தது. 54

**(34) வாக்கியப்ரசம்ஸா**

எந்த வாச்யம் தோஷமற்று இருக்கிறதோ அதாவது ந்யூனம், அதிகம், அனர்த்தகம், அபார்த்தகம், விருத்தம் இவை இல்லாமலிருக்கிறதோ பதத்தின் உண்மையான பொருளை விளக்குகிறதோ அந்த வாக்கியம் அநநுயோஜ்யம் என்று புகழப்படுகிறது. ஆகையால் இது வாச்யப்ரசம்ஸா எனப்படும். 55

## (35) சலம் (ஏமாற்றுதல்)

வாத சமயத்தில் ஒருவன் கூறிய வாக்யத்திற்கு அவனை ஏமாற்றுவதற்காகத் தவறான பொருளைக் கற்பித்துக் கூறுவது, அவன் கருத்திற்கு மாறானதைக் கூறுவது சலம் எனப்படும், அது வாக்சலம்' ஸாமான்ய சலம் என இருவகைப்படும்.

ஒருவன் மற்றவனைப் பார்த்து இந்த மருத்துவன் நவதந் திரன் (புதிதாகக் கற்றவன்) என்று கூறினான். அதற்கு மருத்து வன் நான் நவதந்திரன் அல்லன் (ஒன்பது வகையான நூல்களைக் கற்றவனல்லன்) ஏகதந்தரன் (ஒரே நூலை மட்டும் கற்றவன்)என்று கூறினான். முதல்வன் மருத்துவனைப்பார்த்து நான் உன்னை நவ தந்திரன் எனக் கூறவில்லை. (ஒன்பது வகையான நூல்களைப் படித்தவன் எனக் கூறவில்லை) நவதந்திரன் (புதிதாகக் கற்றறிந் தவன்) என்றல்லவா கூறினேன் என்றான். நவம் என்ற சொல் லுக்கு ஒன்பது புதியது என்ற இரு பொருள்கள் உண்டு. அதற்கு மருத்துவன் கூறினான். ''நான் புதிதாகப் படிக்கவில்லை. பலதடவை படித்திருக்கிறேன்.'' இவ்வாறு கூறும் வாக்கியம் வாக்சலம் என்பதாகும்.

### ஸாமான்ய சலம்

ஒரு மருத்துவன் நோயைத் தணிக்கக்கூடியது மருந்து எனக் கூறினான். அதைக் கேட்ட மற்றவன் ''ஸத்-ஸத்தைத் தணிக் கிறது என்று கூறுகிறாயா!? ஸத்—என்றால் இருக்கும் பொருள் என்று அர்த்தம். நோயும் ஸத்துப்பொருள், மருந்தும் ஸத்துப்பொருள். ஆகையினால் ஒரு இருக்கும் பொருள் மற்றொரு இருக்கும் பொருளை அழிப்பதாக அல்லவா பொருள்படும். அப்படி யானால் இருமல் ஸத் ஆகும். உடல் உருக்கி நோய் ஸத் ஆகும். ஸத் பொதுவாக இருப்பதால் இருமல் உடல் உருக்கி நோயைத் தணிக்கட்டுமே என்று உன் வாக்யத்தின் கருத்து'' எனக்கூறினான். இது சாமான்யசலம் எனப்படும். 56

## (36) அஹேது

அஹேது என்பது ப்ரகரணஸமம், ஸம்சயஸமம், வர்ண்ய ஸமம் என மூவகைப்படும்.

### (அ) ப்ரகரணஸமம் என்ற அஹேது

ஒருவன் உடலைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மா அழிவற் றது என்று சொன்னான். அதற்குமற்றவன் ''எந்தக் காரணத்தி

னால் உடலிலிருந்து ஆத்மா வேறுபட்டது என்று கூறுகிறாயோ அதே காரணத்தினால் ஆத்மா அழிவற்றது. ஏனென்றால் உடல் அழிவுள்ளது. இதனால் உடல் ஆத்மாவைக் காட்டிலும் வேறானதாக ஆகவேண்டும்" என்கிறான்.

இது இந்த இடத்தில் அஹேதுவாகும். ஏனென்றால் எது பக்ஷமாக ஆகிறதோ அதே ஹேதுவாக ஆக முடியாது. இங்கு ஆத்மா அழிவற்றது என்று கூறுவது பக்ஷம். அதை ஆத்மா உடலிலிருந்து வேறுபட்டது என்ற ஹேதுவைக் கொண்டு சாதிப்பது அஹேதுவாகும்.

தன்னுடைய அழியாத் தன்மையைச் சாதிப்பதற்குத் தன்னையே காரணமாக ஒப்புக்கொள்வது தகாது.

### (ஆ) ஸம்சய ஸமம்

எது சந்தேகத்திற்குக் காரணமாக உள்ளதோ, அதே சந்தேகத்தைப் போக்கக் கூடியதெனக் கூறப்படுமானால் அது ஸம்சயஸமம் என்ற அஹேதுவாகும்.

உதாரணம் : ''இவன் ஆயுர்வேதத்தின் ஒரு பிரிவைக் கூறுகிறான். அதனால் இவன் மருத்துவனா அல்லனா என்ற சந்தேகம் ஏற்படுகிறது'' என்று ஒருவன் சொல்லுகிறான்.

அதற்கு மற்றவன், ''இவன் ஆயுர்வேதத்தின் ஒரு பகுதியைக் கூறுவதனாலேயே மருத்துவன்தான்'' என்கிறான்.

இங்கு ஆயுர்வேதத்தின் ஒரு பிரிவை அறிந்தவன் என்றதாலேயே சந்தேகம் ஏற்பட்டது. அந்த ஆயுர்வேதத்தின் ஒரு பிரிவை அறிந்தவன் என்ற சந்தேகத்தை விலக்குகிறது. ஆகையால் இதை ஸம்சயஸம அஹேதுகம் என்கிறோம்.

இங்கு சந்தேகத்திற்கான காரணத்தில் ஒரு சிறப்பும் கூறப்படவில்லை. இது அஹேது. எது சந்தேகத்திற்குக் காரணமாக ஆகிறதோ அது சந்தேகத்தைப் போக்கக் காரணமாக ஆகாது.

### (இ) வர்ண்யஸம அஹேது

எந்தக்காரணம் வர்ணிக்கத் தகுந்த சிறப்புடன் இல்லையோ அதை வர்ண்யஸம அஹேது என்கிறோம்.

உதாரணமாக : ஒருவன் ''அறிவு தொடுவதற்கு முடியாததால் சப்தத்தைப்போல அழிவுள்ளது'' என்கிறான். இங்கு சப்தம் வர்ணிக்கத் தகுந்தது. அறிவும் சப்தமும் வர்ணிக்கத் தகுந்தவை.

அதனால் ஒன்றுக்கொன்று ஸமானமானவை. ஆகையால் இந்தக் காரணம் வர்ண்யஸம அஹேதுவாகும். 57

## (37) அதீத காலம்

முதலில் சொல்ல வேண்டியது பின்பு காலம் கடந்துசொல்லப் படுமானால் அதை காலாதீதம் (காலம் கடந்தது) என்கிறோம். இந்தக் காலாதீதம் தோஷத்துடன் கூடியிருப்பதால் ஏற்கத்தக்கதன்று.

வாக்வாதத்தில் தடுக்க வேண்டிய இடத்தில் வந்ததைத் தடுக்காமல் பிறகு அவன் மற்றொரு வாதத்தை எடுத்துக்கொண்டு சாஸ்திர விசாரம் செய்கிறான் என்பதை அறிந்து அல்லது தடுக்க வேண்டும் என்று அவனை முன் சொன்ன வார்த்தையைக் கொண்டு தடுப்பது காலம் கடந்து விட்டபடியால் திறமையற்றதாக ஆகிறது. 58

## (38) உபாலம்பம்

காரணத்தில் குற்றத்தை எடுத்துக் காட்டி கூறுவது உபாலம்பம் எனப்படுகிறது. இதை [1]ஹேத்வாபாஸா என்றும் கூறுவர். இது அஹேது என்ற இடத்தில் விளக்கப்பட்டுள்ளது. 59

## (39) பரிஹாரம்

எதிராளியின் குற்றமுள்ள வாக்கியத்தை மறுப்பதன் மூலம் உண்மையை நிலைநாட்டுவது பரிஹாரம் எனப்படும். ஆத்மா என்பது உடலில் இருக்கும்பொழுது ஜீவனுக்குள்ள இன்பம் துன்பம் விருப்பம் வெறுப்பு தர்மம் அதர்மம் இவை எப்பொழுதும் காணப்படுகின்றன. ஆதலால் உடலே ஆத்மா என்பது எதிராளியின் வாதம்.

அந்த ஆத்மா உடலிலிருந்து வெளிக்கிளம்பியவுடன் ஜீவனுக்குள்ள இலக்கணங்கள் காணப்படாததால் ஆத்மா என்பது உடலைக் காட்டிலும் வேறானது. அது அழிவற்றது. என்பது அதன் மறுப்பு. இது பரிஹாரமாகும். 60

---

1 ஹேத்வாபாஸம்— காரணத்தில் குற்றத்தை எடுத்துக் காட்டுவது. இதற்கே உபாலம்பம் என்ற மறுபெயர் உண்டு.

### (40) பிரதிக்ஞாஹானி

முன்னால் உறுதி செய்யப்பட்டு தோல்வியடைந்தபின் கைவிடப்படுவது அல்லது முன்னால் உறுதி செய்யப்பட்டு தீர்மானிக்க முடியாதது பிதிக்ஞாஹானி எனப்படும்.

உதாரணம்: முன்னால் உறுதி செய்யப்பட்டது புருஷன் அழி வற்றவன் என்பதாகும். அந்த வாதம் தோல்வியடைந்ததும் புருஷன் அழிவுள்ளவன் என்று ஒப்புக்கொள்வது பிரதிக்ஞா ஹானி. 61

### (41) அப்யநுக்ஞா

தனக்கு விருப்பமுள்ள, விருப்பமில்லாத எதிராளியின் வாக்யங்களை ஏற்றுக்கொள்வது அப்யநுக்ஞா எனப்படும். 62

### (42) ஹேத்வந்தரம்

ஒரு விஷயத்தைத் தீர்மானிப்பதற்காக எந்த ஹேதுவை (காரணத்தைச்) சொல்ல வேண்டுமோ அதற்குப் பதிலாக தகாத வேறு ஒரு ஹேதுவை கூறுவது ஹேத்வந்தரம் எனப்படும். 63

### (43) அர்த்தாந்தரம்

ஒரு கருத்தைக் கூறவேண்டிய இடத்தில் வேறு ஒரு கருத்தைக் கூறுவது அர்த்தாந்தரமாகும். உதாரணமாக காய்ச்சலுக்கு இலக் கணம் கூற வேண்டிய இடத்தில் நீரிழிவுக்கான இலக்கணம் கூறு தல் அர்த்தாந்தரமாகும். 64

### (44) நிக்ரஹஸ்தானம்

தோல்வியை ஒப்புக் கொள்ளுதல் நிக்ரஹஸ்தானம் எனப் படும். அது மூவகைப்படும். ஒன்று அறிவாளிகளின் சபையில் மும்முறை கூறியபோதிலும் வாக்கியத்தின் பொருளை அறிந்து கொள்ளாதிருத்தல். இரண்டு குற்றமில்லாத வாக்கியத்தைக் குற்றமாகக் கருதுதல். குற்றமுள்ள வாக்கியத்தைக் குற்ற மில்லாததாகக் கருதுதல். மூன்று பிரதிக்ஞாஹானி, அப்யனுக்ஞா, காலாதீத வசனம், அஹேது, நியூனம், அதிகம், வியர்த்தம், அனர்த்தகம், புனருக்தம், விருத்தம், ஹேத்வந்தரம், அர்த்தாந்தரம் இவையும் (நிக்ரஸ்தானம்) தோல்விக்குக் காரணங் களாகும். பிரதிக்ஞாஹானி முதல் அர்த்தாந்தரம் வரை விளக்கம் ஆங்காங்கு கூறப்படடுள்ளது. 65

இவ்வாறு வாதம் புரிவதற்குத் தேவையான பதங்களின் விளக்கம் நூலில் கூறியபடி கொடுக்கப்பட்டுள்ளது. 66

## 14. வாதம் செய்ய வேண்டிய முறை

மருத்துவர்கள் விவாதம் செய்யத் தொடங்கினால் ஆயுர்வேத சாத்திரத்தைப் பற்றியே தொடங்க வேண்டும். மற்ற சாத்திரங்களைப்பற்றி தொடங்கக்கூடாது. இங்கு ஆயுர்வேதத்தின் எல்லா விஷயங்களைப் பற்றியும் வாக்கியம் பதில் வாக்கியம் இவை விரிவாகவும் முழுமையாகவும் தக்க யுக்திகளுடனும் விளக்கப் பட்டுள்ளன. அந்த யுக்திகளை நன்கு தீர்மானமாக அறிந்து கொண்டு வாக்கியங்களைக் கூறவேண்டும். ஆனால் சம்பந்தமில்லாத, ஆயுர்வேத நூலறிவு இல்லாத, சோதிக்காத, காரணமில்லாத, அறிவுக்கு மயக்கத்தைத் தரக்கூடிய, பொருளற்ற வாக்கியத்தைப் பயன்படுத்தக்கூடாது. எதைக் கூறினாலும் காரணத்துடன் கூறவேண்டும்.

காரணங்களுடன் கூடிய எந்தவிதமான வாதமும் – சொற்போரும் குற்றமற்றவைகளாயிருக்கும். அவை சிகிச்சைசாத்திரத்தில் வெற்றி பெறக் காரணங்களாகின்றன. ஏனென்றால் அவை அறிவை நன்கு வளர்க்கக் கூடியவை. தூய்மையான நல்ல அறிவு எல்லாச் செயல்களிலும் வெற்றி தரக்கூடியது. 67

## 15. மருத்துவர்கள் அறிந்து கொள்ள வேண்டியவை

மருத்துவர்களின் அறிவு வளர்ச்சிக்காகச் சில பிரிவுகள் இங்கு கூறப்படுகின்றன. திறமையுள்ள மருத்துவர்கள் அறிவுடன் செயல் படுவதால் புகழப்படுகின்றனர். காரணம் கரணம் கார்யயோநி காரியம் கார்யபலன் அநுபந்தம் தேசம் காலம் ப்ரவிருத்தி உபாயம் இவற்றை நன்கு அறிந்து செயல்படுபவன் சிறுமுயற்சியினாலேயே செயலில் வெற்றியும், மனதிற்குப் பிடித்தமான பயனையும் அடைகிறான். 68

### (அ) காரணம்

செயலைச் செய்விப்பதைக் காரணம் என்கிறோம். அதற்கு ஹேது, கர்த்தா என்ற மறுபெயர்கள் உண்டு. 69

### (ஆ) கரணம்

ஒரு செயலை நிறைவேற்ற அதில் ஈடுபடுவனுக்குக் கருவியாக இருப்பது கரணம் எனப்படும். 70

(இ) கார்யயோனி

செயலால், மாறுபாடு அடைந்து உருவமாக மாறுவதைக் காரியயோனி என்கிறோம். 71

(ஈ) காரியம்

செயல்படுபவன் எதைக் குறிப்பிட்டுச் செயலில் ஈடுபடுகிறானோ அது காரியம் எனப்படும். 72

(உ) காரியப்பயன்

எந்தப் பயனை முன்னிட்டு செயல் தொடங்கப்படுகிறதோ அந்தப் பயனை காரியப்பயன் என்கிறோம். 73

(ஊ) அநுபந்தம்

செயல் முடிந்தவுடன் அந்தச் செயல் மூலமாக அவசியம் ஏற்படக்கூடிய நன்மை அல்லது தீமை விளைவிக்கும் பயனை அநுபந்தம் என்கிறோம். 74

(எ) தேசம்

நோய் அல்லது மூலிகைகளுக்கு இருப்பிடம் தேசமாகும். 75

(ஏ) காலம்

பருவங்களின் மாறுபாடு காலம் எனக் கூறப்படுகிறது. 76

(ஐ) ப்ரவிருத்தி

ஒரு செயலைச் செய்வதற்கு செயல்படுபவனுடைய முயற்சி ப்ரவிருத்தி எனப்படுகிறது. இதற்கு கிரியாகர்மம் யத்னம் காரிய ஸமாரம்பம் என்ற மறு பெயர்களும் உண்டு. 77

(ஒ) உபாயம்

காரணம் கரணம் கார்யயோனி இம்மூன்றும் செயலுக்கு ஏற்றவாறு ஆவது, செயலைத் தோற்றுவிப்பதற்கான நிலை இவை நன்னிலையில் இருப்பதை உபாயம் என்கிறோம்.

காரியம் காரியபலன் அநுபந்தம் இவற்றைத் தவிர கரணம் காரணம் கார்யயோநி இவை செயலைத் தோற்றுவிப்பனவாக ஆவது உபாயமாகும். ஏனென்றால் காரணம் கரணம் காரியயோநி இம்மூன்றும் செயலுக்கு ஏற்றவாறு ஆவது, செயலைத்

தோற்றுவிப்பதற்கான நிலை இவ்விரண்டும் செயலைத் தோற்றுவிப்பவை. ஆதலால் இம்மூன்றும் உபாயமார்கும்.

செயல் முடிந்தபின் உபாயத்திற்கு ஒரு பயனுமில்லை. செயலுக்கு முன்பு உபாயத்திற்குத் தேவையில்லை. செயல் முடிந்தபின் அதன் பயன் ஏற்படுகிறது. பயன் ஏற்பட்டவுடன் அநுபந்தம் ஏற்படுகிறது. ஆகையினால் காரணம் கரணம் காரியயோநி இம்மூன்றையும் நல்ல முறையில் தேடுவதுதான் உபாயம் எனக் கருதப்படுகிறது. 78

காரணம் போன்ற பத்து வகைகளான உபாயங்களை நன்கு ஆராய்ந்தபின் விருப்பமுள்ள செயலில் ஈடுபடவேண்டும். ஆகையினால் சிகிச்சை செய்ய விருப்பமுள்ள மருத்துவன் சிகிச்சை செய்யத் தொடங்குமுன் கண்ணால் பார்த்தல், ஊகித்தல், சான்றோர் வாக்கு இவற்றால் ஆராய வேண்டியவைகளை நன்கு ஆராய்ந்தபின் செயலில் ஈடுபட வேண்டும். 79

## 16. மருத்துவன் திறமையை அறியும் முறை

மருத்துவனோ அல்லது மருத்துவனல்லாதவனோ அல்லது பொது மனிதனோ மருத்துவனிடம் கீழ்க்கண்டவிதம் வினாவை எழுப்ப வேண்டும். வாந்திக்குக் கொடுப்பது மலம் கழிக்கக் கொடுப்பது கஷாய வஸ்தி எண்ணெய் வஸ்தி சிரோவிரேசனம் (தலையில் உள்ள தோஷங்களை நீக்குவது) இவற்றைப் பயன்படுத்த விரும்பும் மருத்துவன் 1. எத்தனை வகையான சோதனைகளால் எத்தனை வகையான சோதனைகள் செய்ய வேண்டும் ? 2. சோதனை முறைகள் எத்தனை வகை ? 3. எவ்வாறு பரிசோதிக்க வேண்டும் ? 4. பரிசோதனையின் பயன் என்ன ? 5. எவ்விடத்தில் வாந்தி போன்ற ஐவகை சிகிச்சை செய்ய வேண்டும் 6. எவ்விடத்தில் செய்யக் கூடாது ? 7. சிகிச்சை நன்கு நிறைவேறியது நிறைவேறாதது இவற்றின் இலக்கணங்கள் தெரிந்தவுடன் என்ன செய்ய வேண்டும் ? 8. எந்த எந்த மருந்துப் பொருட்கள் பயன்படுத்தப்படும் ? 80

இம்மாதிரி ஒருவன் மருத்துவரிடம் கேட்பானாகில் அவனைத் தோற்கடிக்க அல்லது குழப்பமடையச் செய்ய விரும்பி கீழ்க்கண்ட கேள்விகளை அவனிடம் திருப்பிக் கேட்க வேண்டும்.

சோதனை பலவகைப்பட்டது. சோதனை செய்ய வேண்டிய விஷயங்களும் பல உள்ளன. நீங்கள் எந்தச் சோதனையின் பிரிவுகளைப் பற்றி கேட்க விரும்புகிறீர்கள் ?

சோதனை, சோதனை செய்ய வேண்டிய விஷயங்கள் இவற்றின் எந்தெந்தப் பிரிவுகளைப் பற்றி அறிய விரும்புகிறீர்கள்?

என்று கேட்க வேண்டும். ''நான் அப்படிக் கேட்பதற்குக்காரணம் நீங்கள் எந்த விஷயத்தைப் பற்றி எந்த விதத்தில் அறிய விரும்பு கிறீர்களோ அந்த முறைப்படிக் கூறாமல் வேறு விதமாகக் கூறி னால் உங்கள் விருப்பம் நிறைவேறாது'' என்று கூறவேண்டும். 81

எதிராளி அதற்குக் கூறிய பதிலை நன்கு யோசித்து மருத்து வன் பதிலளிக்க வேண்டும்.

எதிராளி மருத்துவனைத் தோற்கடிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் பதில் கூறினால் முன் கூறிய முறைகளைக் கையாண்டு அவனைத் தக்க பதில் கூறாமல் செய்ய வேண்டும்.

உண்மையில் விஷயங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்ற விருப்பத்துடன் பதில் கூறினால் அவனுக்குக் குழப்பத்தை உண் டாக்காமல் நூலில் கூறியபடி தக்க சான்றுடன் விஷயங்களை விளக்கிக் கூற வேண்டும். 82

அறிவாளிகளுக்கு சோதனை இரு வகைப்படும். ஒன்று கண் கூடாகப் பார்ப்பது. இரண்டு ஊகித்தறிதல், சான்றோர் வாக் குடன் சேர்ந்தால் இவை மூன்றாகும். ஆக சோதனை இருவகை அல்லது மூவகைப்படும். 83

## 17. சிகிச்சை முறைக்குத்தேவையான பத்துவகை சோதனைகள்

சோதனைக்குரிய விஷயங்கள் பத்து வகை. காரணம் போன்ற அந்தப் பத்து விஷயங்களைப் பற்றி முன்பு கூறப்பட்டுள்ளது. அவற்றையே விளக்கமாக மருத்துவர் மருந்து ஆகியவற்றில் வைத்து விளக்கிக் காட்டுவோம்.

**காரணம் —**

மருத்துவ நூலில் மருத்துவம் என்ற செயலுக்குக் காரணமா யிருப்பவன் மருத்துவன் காரணம். மருந்து கரணமாகும்.

காரியம் – நோய். அதற்குக் காரணம் தாதுக்களின் மாறு பாடு.

காரிய யோனி– கேடடைந்த தாதுக்களால் தோன்றிய நோய் களில் தாதுக்களைச் சம நிலைக்குக் கொண்டு வந்து நோயைப் போக்குவது காரியமாகும்.

காரியபலன் – சிகிச்சையினால் நோயாளிக்கு இன்பம் கிட்டுவது. அதனால் மருத்துவனுக்கு பொருள், புகழ் இரண்டும் கிடைப்பது. ஆகையால் புகழுடன் கூட இன்பம் கிட்டுதல் காரியபலனாகும்.

அநுபந்தம் — காரிய பலனுக்குப் பிறகு ஆயுள் நன்றாக இருப்பது அநுபந்தமாகும்.

தேசம் — பூமியும், நோயாளியும் தேசமாகும்.

காலம் — வருஷமும், நோயாளியின் பருவமும் காலமாகும்.

ப்ரவிருத்தி — நோயாளிகளின் மருத்துவத்திற்காகத் தொடங்கப்படும் செயல் ப்ரவிருத்தியாகும்.

உபாயம் — மருத்துவன், மருந்து, கார்யயோநி இம்மூன்றிலும் நன்றாக வேலைசெய்யும்திறமைஏற்படுதல் உபாயமாகும். பத்துவகைகளான உபாயங்கள் விளக்கப்பட்டுள்ளன. இந்தப் பத்து உபாயங்கள் மருத்துவன் முதலியவர்களிடத்தில் ஒப்பிட்டு விளக்கப்பட்டன. 84

அந்தப் பத்துவகைகளான சோதனைக்குரிய உபாயம்போன்ற பத்து விஷயங்களை எப்படிச் சோதிக்க வேண்டும் என்பது விளக்கப்படுகிறது. 85

**(அ) காரணம்—**

சிகிச்சையில் மருத்துவன் காரணம் என்பது முன்பு கூறப்பட்டுள்ளது. சிகிச்சை மூலமாக நோயை நீக்குபவனும், ஆயுர்வேத நூல்களின் பொருளை நன்கு அறிந்தவனும், அதைப் பயன்படுத்துவதில் திறமைசாலியும், எல்லாவகையிலும் நோயாளியின் ஆயுளை அறிந்தவனுமான மருத்துவன் எல்லா தாதுக்களையும் ஒரே நிலையில் வைக்கும் விருப்பத்தால் தன் ஆத்மாவையே முதலில் சோதனை செய்துகொள்ள வேண்டும்.

நான் இந்தக் காரியத்தைத் தோற்றுவிக்கத் திறமையுடையவனா ? அதாவது இந்த நோய்க்கான சிகிச்சையை என்னால் செய்ய முடியுமா ? முடியாதா என்ற சிறந்த மருத்துவர்க்கு இருக்க வேண்டிய குணங்கள் தன்னிடம் இருக்கின்றனவா என்று ஆராய்ந்து தீர்மானிக்க வேண்டும்.

கீழ்க்கண்ட குணங்களைக் கொண்டிருக்கும் மருத்துவர்கள் தாதுக்களைச் சமநிலையில் வைத்திருக்கும் திறமை பெற்றிருப்பார்கள்.

1. தெளிவான ஆயுர்வேத நூலறிவு.
2. ஒவ்வொரு செயலையும் அநுபவபூர்வமாகச் செய்தறிதல்.
3. சிகிச்சை செய்வதில் திறமைசாலியாக இருத்தல்.

4. தூய்மையுடனிருத்தல்.

5. கை ராசியுள்ளவனாக இருத்தல்.

6. மருத்துவத்திற்குத் தேவையான எல்லாப் பொருட்களும் நிறைந்திருத்தல்.

7. எல்லாப் புலன்களும் நல்ல நிலையில் உடையவனாயிருத்தல்.

8. இயற்கை இயல்பை அறிந்தவனாயிருத்தல்.

9. யுக்தியுடன் (சமயோசித அறிவு) கூடியவனாதல். 86

## (ஆ) கரணம்

கரணம் என்பது மருந்து. உடல் நிலையைச் சரியானநிலைக்குக் கொண்டு வருவதற்கு முயற்சிக்கும் மருத்துவனுக்குக் குறிப்பாக காரியயோநி, ப்ரவிருத்தி, தேசம், காலம், உபாயம் வரை கூறப் பட்ட சாதனங்களாகப் பயன்படுபவை மருந்து எனப்படும்.

அந்த மருந்து, தெய்வத்தைச் சார்ந்தது மருத்துவனின் அறிவைச் சார்ந்தது என இருவகைப்படும்.

### (i) தெய்வத்தைச் சார்ந்தது

மந்திரம், மூலிகை, மணி அணிதல், நல்வார்த்தை கூறுதல், பலியிடுதல், காணிக்கை செலுத்தல், வேள்வி, கட்டுப்பாடு, பாவத்தைக் கழிக்கும் செயல், பட்டினியிருத்தல், ஆசி கூறுதல், தேவதைகளை வணங்குதல், புனிதமான இடங்களுக்குச் சென்று நீராடுதல் போன்றவை.

### (ii) மருத்துவனின் அறிவைச் சார்ந்தது

சம்சோதனம்—அதாவது வாந்தி பேதி கஷாய வஸ்தி மூக்கி லிடும் மருந்து போன்ற சிகிச்சையினால் உடலில் உள்ள தோஷங் களை வெளிப்படுத்துதல்.

உபசமனம் – உடலில் உள்ள தோஷங்களைத் தணிக்கச் செய் வதும், கண்கூடாகப் பார்க்கப்படுகின்ற பயன்களை அளிக்கும் எல்லாச் செயல்களுமாகும்.

இது, மருந்துபொருளைச் சார்ந்தது பொருளைச்சாராதது என இருவகைப்படும்.

**உபாயங்கள் வழியாகச் செய்யப்படும் சிகிச்சை பொருளைச் சாராத மருந்து.**

உபாயம் என்றால் பயமுறுத்தல், மறக்கடித்தல், அலட்டுதல் மகிழச் செய்தல், மிரட்டுதல், அடித்தல், கட்டுதல், தூங்கச் செய்தல், சுமக்கச் செய்தல் போன்றவைகளாகும்.

வாந்தி, பேதி போன்ற சிகிச்சைகளுக்குப் பயன்படுத்தப்படும் மூலிகைகளின் சேர்க்கை பொருளைச் சார்ந்த மருந்தாகும்.

### (iii) பொருளைச் சார்ந்த மூலிகைகளின் சோதனை முறை

இந்த மூலிகைகள் இயல்பு இத்தகையது. குணம் இத்தகையது. சிறப்புத் தன்மை இத்தகையது, குறிப்பிட்ட இடத்தில் தோன்றியது. குறிப்பிட்ட பருவத்தில் உண்டானது. குறிப்பிட்ட நேரத்தில் எடுக்கப்பட்டது. குறிப்பிட்ட சமயத்தில் வைக்கப்பட்டது. இவ்வாறு பக்குவப்படுத்தப்பட்டது. குறிப்பிட்ட அளவில் சேர்க்கப்பட்டது. குறிப்பிட்ட நோயில் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட நோயாளிக்கு குறிப்பிட்ட தோஷங்களை நீக்குவதற்கும் தணிப்பதற்கும் இது பயன்படுத்தப்படுகிறது என்ற வகையில் ஆராய்வது.

இதேபோல் இங்கு கூறப்படாத மற்ற மூலிகைகளையும் சோதித்துப் பார்த்துச் சிகிச்சையில் பயன்படுத்த வேண்டும். 87

### (இ) காரியயோநியின் பரிசோதனை

உடலில் உள்ள தாதுக்களின் மாறுபாடு காரியயோநி எனப்படும். நோய்கள் தோன்றுவது அதன் இலக்கணமாகும். பிணிகளுக்குக் காரணமான வாதம் பித்தம் கபம் இவற்றின் ஏற்றத் தாழ்வு நோய் சிகிச்சைக்குக் கட்டுப்படுதல் கட்டுப்படாமை நோயின் எளிமை கடுமை ஆகிய இவற்றின் பிரிவின் இலக்கணங்களைக் கவனத்துடன் ஆராய்வது இதன் பரிசோதனையாகும். 88

### (ஈ) காரியத்தின் சோதனை

மாறுபாடடைந்த தாதுக்களை சமநிலையில் கொண்டுவருதல் மருத்துவரின் காரியமாகும் (செயல்). நோய் தணிவது அதன் இலக்கணம்.

துன்பம் தணிதல், குரல் நிறம் இவை சரியான நிலையில் இருத்தல், உடல் வளர்ச்சி, வலிமை அதிகரித்தல், தின்பண்டங்களில் அவா, உணவருந்தும் நேரத்தில் சுவை தோன்றுதல், உரிய காலத்தில் உண்ட உணவு உரிய காலத்தில் நன்கு சீரணமடைதல், குறித்த நேரத்தில் உறக்கம், கெட்ட கனவுகள் காணாதிருத்தல், இன்பமாகத் தூங்கி எழுதல், வாதம் சிறுநீர் மலம் விந்து இவை எளிதில் வெளிப்படுதல், மனம் அறிவு புலன்கள் ஒருவகை

யிலும் கேடடையாமை, என இவை காரியத்தின் பரிசோதனைகளாகும். 89

### (உ) காரியத்தின் பயன்

சிகிச்சை எனும் காரியத்தின் பயன் நோயாளி ஆரோக்ய நிலையை அடைதல். மனம் அறிவு புலன்கள் உடல் இவை மகிழ்வுடனிருத்தல் ஆகியவை இதன் இலக்கணங்களாகும். 90

### (ஊ) அநுபந்தம்

நீண்ட ஆயுள் அநுபந்தம் எனப்படும். மனம் அறிவு உடல் இவை உயிருடன் சேர்ந்திருத்தல் இதன் இலக்கணமாகும். 91

### (எ) தேசம்

நிலம், நோயாளியின் உடல் இரண்டும் தேசமாகும். 92

### (ஏ) பூமியின் சோதனை

நோயாளியைப் பற்றி நன்கு அறிந்து கொள்ளுதல் அல்லது மூலிகைகளைப் பற்றி நன்கு அறிந்து கொள்ளுதல் பூமி சோதனையாகும்: அவற்றில் நோயாளியைப் பற்றி அறிந்து கொள்ளக் கீழ்க்கண்ட சோதனைகள் நடத்த வேண்டும். நோயாளி பிறந்த நாடு, வளர்ந்த இடம், நோய், நோயாளி பிறந்து வளர்ந்து நோயுற்ற இடத்தில் உள்ள மக்களின் உணவு வகை, பழக்கவழக்கம், நடத்தை, அவர்களின் வலிமை, அவர்களின் மனம், அங்குள்ளவர்களுக்கு ஒத்துக் கொள்ளுதல், ஒத்துக் கொள்ளாமை, வாதம் போன்ற தோஷங்களின் வளர்ச்சி, உகந்த உணவுப் பொருட்கள், நோயின் தன்மை, அதன் நன்மை தீமைகள் ஆகிய இவற்றைப் பரிசோதனை செய்வது பூமி சோதனையாகும். மூலிகைகளைப் பற்றிய சோதனையை கல்பஸ்தானத்தில் கூறுவோம். 93

### (ஐ) நோயாளியின் உடல் சோதனை

சிகிச்சை எனும் செயலுக்கு இடம் நோயாளியின் உடலாகும். நோயாளியின் ஆயுள் அளவை அறிந்துகொள்ளவும் நோயாளியின் வலிவு தோஷம் இவற்றின் 'அளவை அறிந்து கொள்ளவும் நோயாளியின் உடல் பரிசோதிக்கப்படுகிறது. இவற்றில் நோயாளியின் வலிவு தோஷம் இவற்றின் அளவை அறிந்து கொள்ளக் கீழ்க்கண்ட முறைப்படி சோதனை நடத்தப்படுகிறது. தோஷங்களின் அளவுக்கு ஏற்றவாறு மருந்தின் அளவு நிர்ணயிக்கப்பட்டு

நோயாளியின் வலிவு நோயின் வலிவு இவற்றிற்கேற்றவாறும் மருந்தின் அளவு தீர்மானிக்கப்படுகிறது.

நோயாளியை நன்கு பரிசோதிக்காமல் வலிவு குறைந்த நோயாளிக்குக் கடின வீர்யமுள்ள அல்லது அளவில் அதிகம் உள்ள மருந்து கொடுக்கப்பட்டால் உடனே அது நோயாளியை மாய்த்து விடுகிறது. இதேபோல் வலிவிழந்த நோயாளிக்கு அதிக தீக்ஷ்ண மானதும் மிகவும் குளிர்ந்ததும் வாதகுணம் அதிகமாக நிறைந் ததுமான மருந்தைக் கொடுத்தாலும், சூடு போடுதல் அறுவை சிகிச்சை க்ஷாரகுணமுள்ள பொருட்களைப் பயன்படுத்துதல் போன்றவற்றைச் செய்தாலும் அவன் அவற்றைத் தாங்குவதற்கு சக்தியற்றவனாகிறான். முடிவில் அந்த மருந்து நோயாளியின் உயிரை உடன் அழிப்பதாகிறது.

இக்காரணங்களை நன்கு ஆராய்ந்த மருத்துவக் குழு, வலிவு குறைந்த நோயாளிக்குத் துன்பம் விளைவிக்காததும் எளிதான தும் மேன்மேலும் குருகுணம் உள்ளதும் மதியிழக்கச் செய்யா ததும் ஆபத்துக்களற்றதுமான மருந்தைப் பயன்படுத்தச் செய் கிறது.

குறிப்பாக பெண் நோயாளிகளுக்கு மேற்கண்ட வகையில் மருந்து கொடுக்க வேண்டும். ஏனென்றால் பெண்களின் இதயம் உறுதியற்றது. மிருதுவானது. இளகும் தன்மையுடையது. பெண் கள் பயந்த குணமுடையவர்கள். பலமற்றவர்கள். பிறரை அண்டி வாழ்பவர்கள். பொறுக்கும் தன்மையற்றவர்கள்.

அதேபோல் சோதிக்காமல், பலசாலியான நோயாளிக்கும் வலிவுள்ள நோய்க்கும் குறைந்த சக்தியுள்ள மருந்தைக் கொடுப் பது பலனை அளிக்காது.

ஆகையினால் நோயாளியின் வலிவின் நிலையை [1]ப்ரகிருதி, [2]விக்ருதி, [3]ஸாரம், [4]ஸம்ஹனனம், [5]ப்ரமாணம், [6]ஸாத்ம்யம், [7]ஸத்வம், ஆஹார சக்தி, [8]வியாயாம சக்தி, வயது இவற்றைக் கொண்டு நன்கு அறிந்துகொள்ள வேண்டும். 94

ப்ரகிருதி போன்றவற்றை முறையே விளக்குவோம்.

---

1. ப்ரக்ருதி — இயற்கை
2. விக்ருதி — நோய்
3. ஸாரம் — சத்து
4. ஸம்ஹனனம்— உடற்கட்டு
5. ப்ரமாணம் அளவு
6. ஸாத்ம்யம்— ஒத்துக் கொள்ளுதல்
7. ஸத்வம் — மனது
8. வியாயாமம்— உடற்பயிற்சி

## 18. ப்ரகிருதி (உடலின் இயற்கை அமைப்பு) பரீக்ஷா

தாயின் கருப்பையில் உள்ள கருவுக்கு ஆண் விந்து பெண் விந்து தோன்றும் நேரம், கருப்பையின் நிலை, தாயின் உணவுப் பழக்க வழக்கங்கள், ஐம்பெரும் பூதங்கள் இவற்றின் இயற்கை இயல்பு தேவைப்படுகிறது. இந்த இயல்பு குறிப்பிட்ட தோஷங்களின் அதிகத் தன்மையினால் அதாவது ஒரு தோஷம் அல்லது இரண்டு தோஷங்கள் அல்லது பல தோஷங்களின் அதிகத்தன்மை ஏற்படும்போது அந்தக் குறிப்பிட்ட தோஷத்தின் அதிக அளவு கருவுடன் தொடர்பு கொள்கிறது. பிறகு கருத் தோன்றும் பொழுது எந்தத் தோஷத்தின் தொடர்பு அதிகமுள்ளதோ அந்தத் தோஷம் உள்ளவனாக அந்தக் கருவியிலிருந்து தோன்றும் மனிதன் காணப்படுகின்றான். ஆகையினால்தான் இயற்கையாகச் சிலர் கபதோஷம் அதிகமுள்ளவர்களாகவும், சிலர் பித்த தோஷம் அதிகமுள்ளவர்களாகவும், மற்றும் சிலர் வாததோஷம் அதிகமுள்ளவர்களாகவும் சிலர் இரண்டு இரண்டு தோஷங்கள் அதிகமுள்ளவர்களாகவும் சிலர் சமதாது நிலையுள்ளவர்களாகவும் இருக்கின்றனர். அவர்களுடைய இலக்கணங்களை விளக்குவோம். 95

## 19. கபத்தின் இலக்கணம்

நைப்புத்தன்மை, வழவழப்பு, மிருது, இனிப்பு, த்ருடத் தன்மை, நெருக்கம், மெதுவாகநகரும் தன்மை, சுறுசுறுப்பின்மை, உறுதி, குளிர்ச்சி, பிசுபிசுப்பு, தெளிவு இவை கபத்தின் இலக்கணங்களாகும்.

இயற்கையாகக் கபதோஷம் அதிகம் உள்ள உடலமைப்புள்ளவர்கள் கபத்தின் நைப்புத்தன்மையினால் எண்ணெய்ப் பசை உள்ளவர்களாகக் காணப்படுகிறார்கள்.

கபம் வழவழப்புத் தன்மையைப் பெற்றிருப்பதால் உடல் மழமழப்பும் கபத்தின் மிருதுத் தன்மையினால் மிருதுவான உடல் அமைப்பும் கொண்டு பார்வைக்கு அழகாகவும் மஞ்சள் நிறம் உடையவர்களாகவும் காணப்படுவார்கள்.

கபத்தின் இனிப்புத் தன்மையினால் விந்து அதிக அளவில் பெற்றிருப்பார்கள். புணர்ச்சியில் அதிக ஈடுபாடு காணப்படும். பல குழந்தைகளைப் பெறுவார்கள்.

கபம் த்ருடத்தன்மை உடையதாயிருப்பதால் த்ருடமாகவும், உறுதியாகவும், நெருக்கமான தன்மையுடையவர்களாகவும்

இருப்பார்கள். அவர்களுடைய உறுப்புக்கள் எல்லாம் குறைவற்றும் வலிவுள்ளதாகவும் இருக்கும்.

மந்த குணம் பெற்றிருப்பதால் செயல்கள், உணவு, பழக்க வழக்கங்கள் இவற்றில் மந்தமான நிலை காணப்படும்.

கபம் இயற்கையில் அசைவற்றிருப்பதால் கபம் அதிகமாக உள்ளவர்கள் எந்தச் செயலையும் விரைவில் செய்யமாட்டார்கள். அவர்கள் மனதில் கலக்கமும் குழப்பமும் தோன்றாது.

கபம் பளுத்தன்மையுடையதால் அவர்களுடைய நடை உறுதியாக அமைந்திருக்கும். குளிர்ச்சியாக இருப்பதால் பசி தாகம் சூடு வியர்வை தோஷம் இவை சிறிதளவு உள்ளவர்களாகவும் இருப்பார்கள். கபம் பிசுபிசுப்புத் தன்மையுடையதால் மூட்டுக்கள் ஒன்று சேர்ந்து பலசாலிகளாகத் திகழ்வார்கள். கபம் தெளிவாக இருப்பதால் கபம் அதிகமுடையவர்கள் தெளிந்த பார்வை மலர்ந்த முகம் உடையவர்களாகவும், தெளிந்த நிறம் குரல் இவை உள்ளவர்களாகவும், இனிமையாகவும் காணப்படுவர்.

மேற்கூறிய இயற்கையான குணங்களைக் கொண்ட கப தோஷம் அதிகம் உள்ளவர்கள் வலிவு பெற்றவர்களாகவும், கல்வியில் தேர்ச்சி பெற்றவர்களாகவும், ஒளிவீசுபவர்களாகவும், பொறுமை உள்ளவர்களாகவும், நீண்ட ஆயுளை உடையவர்களாகவும் இருப்பார்கள். 96

## 20. பித்தத்தின் இலக்கணம்

உஷ்ண வீர்யம் கடின குணம் திரவம் கெட்ட நாற்றம் புளிப்புச்சுவை உவர்ப்புச்சுவை இக்குணங்களை இயற்கையாகப் பித்தம் பெற்றிருக்கிறது.

இயற்கையாகப் பித்தம் மிகுந்த உடல் அமைந்தவர்கள் பித்தத்தின் உஷ்ணகுணத்தினால் சூட்டைப் பொறுத்துக் கொள்ளும் தன்மையின்மை சூடான முகம் இளமையான உடலமைப்பு வெள்ளை கலந்த மஞ்சள் நிறம் இவைகள் உடையவர்களாகக் காணப்படுவார்கள்.

அவர்களுடைய உடலில் சிறுசிறு மடிப்புகள் வியங்கம் (முகத்தில் தோன்றும் கரு நிறப் புள்ளிகள்), எள்ளு போன்ற மிகச் சிறிய தழும்புகள் அதிகமாயிருக்கும். அதிகப் பசி, தாகம், விரைவில் உடலில் மடிப்புகள், நரை, சொட்டை இவைகள் ஏற்படும். தாடி மீசை, மயிர்க்கால்கள், தலைமயிர் இவை மிருதுவாகவும் அளவில் சிறியவையாகவும், பொன் நிறம் பெற்றும் இருக்கும்.

பித்தத்தின் தீக்ஷ்ண குணத்தினால் கபம் அதிகம் உள்ளவர்கள் கொடூரமான வீரத்தன்மையுடையவர்களாகவும், கடுமையான சடராக்னி உடையவர்களாகவும் உணவு நீர் இவற்றை அதிக அளவில் பயன்படுத்துபவர்களாகவும், துன்பங்களைப் பொறுக்கும் தன்மையற்றவர்களாகவும் அடிக்கடி உண்பதில் பேராசை உடையவர்களாகவும் இருப்பர்.

பித்தம் திரவமாக இருப்பதால் பித்தம் அதிகமுள்ளவர்களின் மூட்டுகள், தசை நார்கள் இவை தளர்ந்தும் மிருதுவாகவும் இருக்கும்.

வியர்வை அதிக அளவில் தோன்றும். சிறுநீர் மலம் இவற்றைப் பெருமளவில் கழிப்பார்கள்.

பித்தம் கெட்ட நாற்றமுடையதாதலால் பித்தம் அதிகமுள்ளவர்களின் அக்குள் வாய் தலை உடல் இவற்றில் அதிகமான சீழ் நாற்றம் வீசும்.

பித்தம் உவர்ப்பு புளிப்பு இச்சுவைகளைப் பெற்றிருப்பதால் விந்து புணர்ச்சி குழந்தை இவை மிகக்குறைந்தவர்களாக இருப்பார்கள்.

மேற்கூறிய இலக்கணங்களைப் பித்தம் இயற்கையாகப் பெற்றிருப்பதால் பித்ததோஷம் அதிகமுள்ளவர்கள் நடுத்தரமான வலிவு ஆயுள் அறிவு பகுத்தறிவு செல்வம் கருவிகள் இவற்றைப் பெற்றிருப்பார்கள். 97

## 21. வாதத்தின் இலக்கணம்

வறட்சித்தன்மை இலகுகுணம் அசைவு அதிகவேகம் குளிர்ச்சி சொரசொரப்பு தெளிவு இவை வாதத்திற்கு இயற்கை இயல்புகளாம்.

இயற்கையாக வாததோஷம் அதிகம் உள்ள உடல் அமைப்புக் கொண்டவர்கள் வாதத்தின் வறட்சித்தன்மையினால் வறட்சி, வளர்ச்சியின்மை, சிறிய உருவம் இவற்றையுடையவர்களாக இருப்பார்கள்.

குரலில் அடிக்கடி வறட்சி கம்மல் தடங்கல் மாற்றம் திக்குதல் இவை ஏற்படும். உறக்கமற்றவர்களாக இருப்பார்கள்.

வாதம் இலகுகுணம் பெற்றிருப்பதால் வாததோஷம் அதிகம் உள்ளவர்கள் நடை செயல் உணவு பழக்க வழக்கங்கள் இவற்றில் மெதுவாகவும் நிலையற்றவர்களாகவும் இருப்பார்கள்.

வாதம் அசையும் தன்மையைப் பெற்றிருப்பதால் அவர்களுடைய எலும்பு மூட்டுக்கள் கண்கள் புருவங்கள் தாடைகள் உதடுகள் நாக்கு தலை தோள்பட்டைகள் கைகள் கால்கள் இவை அசைந்துக்கொண்டிருக்கும்.

வாதத்தில் பல குணங்கள் இருப்பதால், வாதம் மிகுதியாயுள்ள உடல் அமைப்புக் கொண்டவர்கள் அதிகம் பேசுகிறவர்களாகவும், உடல் முழுவதும் பரவியுள்ள நரம்பு, நாடிகளை உடையவர்களாகவும் இருப்பார்கள்.

வாதத்தில் வேகத்தன்மை இருப்பதால் வெகுவிரைவில் செயல்களைத் தொடங்குகின்றனர். அவர்கள் மனதில் துன்பம் கலக்கம் இவை விரைவில் உண்டாகின்றன. நடுக்கம் பிணி வைராக்யம் இவைகளும் விரைவில் உண்டாகின்றன. விரைவில் அறிந்துகொள்ளும் தன்மையையும், மறக்கும் தன்மையையும் பெற்றிருப்பார்கள்.

வாதம் குளுமையாக இருப்பதால் குளிர்ச்சியைப் பொறுக்காதவர்களாகவும், அடிக்கடி உடலில் குளிர்ச்சி நடுக்கம் ஜடத்தன்மை இவை தோன்றக் கூடியவர்களாகவும் இருப்பார்கள்.

வாதம் சொரசொரப்புத்தன்மை உடையதாயிருப்பதால் அவர்களின் தலைமயிர் மீசை தாடி மயிர்க்கால்கள் நகங்கள், பற்கள் முகம் கைகள் கால்கள் இவைகளில் சொரசொரப்புத் தன்மை காணப்படும்.

வாதம் தெளிவுத்தன்மை உடையதாதலால் உடல் உறுப்புகளில் வெடிப்பு உள்ளவர்களாகவும், மூட்டுக்களில் அடிக்கடி ஒலி தோன்றக்கூடியவர்களாகவும் அவர்கள் இருப்பார்கள்.

இயற்கையிலேயே மேற்கூறிய குணங்களை உடைய வாத தோஷம் அதிகமுள்ளவர்கள் வலிவு ஆயுள் மகப்பேரு கருவிகள் செல்வம் இவற்றைக் குறைவாகப் பெற்றிருப்பார்கள். 98

இயற்கையில் இரண்டு தோஷங்கள் சேர்ந்த உடல் அமைப்புள்ளவர்கள் அந்த இரண்டு தோஷங்களின் கலப்பு இலக்கணம் உடையவர்களாக இருப்பார்கள். 99

இயற்கையில் ஏற்றத்தாழ்வு இல்லாமல் மூன்று தோஷங்களின் சம இலக்கணங்களுடன் கூடிய உடல் அமைப்புள்ளவர்கள் சம தாது உடல் இயல்பு உடையவர் எனப்படுவர்.

இங்ஙனம் உடல் அமைப்பைப் பற்றிப் பரிசோதிக்க வேண்டும். 100

## 22. விகிருதியினால் உடல் பரிசோதனை

விக்ருதி என்றால் நோய். காரணம், வாத—பித்த—கபம் என்ற தோஷங்கள் ரசம் மாமிசம் இரத்தம் கொழுப்பு எலும்பு எலும்புக்குள் உள்ள சோறு விந்து என்ற தூஷ்யங்கள் இயற்கையான உடல் இயல்பு உடல் நிலம் காலம் வலிவு இவற்றின் பிரிவுகளாலும், இலக்கணங்களாலும் அந்த நோயைச் சோதித்துப் பார்க்க வேண்டும். ஏனென்றால் காரணம் போன்றவற்றின் வலிவை அறியாமல் நோயின் வலிவைக் கண்டுகொள்ள முடியாது.

தோஷங்கள் தூஷ்யங்கள் உடல் அமைப்பு உடல் காலம் பலம் இவை சமமாக உள்ள போது அவற்றின் இலக்கணங்கள் வலிவு பெற்றிருக்கின்ற போது தோன்றும் நோய் வலிவு பெற்றது எனத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இதற்கு எதிரிடையாகக் குறைந்த வலிவுள்ள காரணம்போன்ற வற்றின் இலக்கணங்களை உடைய நோயைக் குறைந்த வலிவுள்ள தாகக் கருத வேண்டும். நோயின் தோஷங்கள், தூஷ்யங்கள் போன்றவைகளில் சில, நோய்க்குச் சமானமாகவும், சில சமமில் லாதனவாகவும், காரணம் போன்றவற்றின் இலக்கணங்கள் நடுத் தரமாகவும் இருந்தால் அந்த நோய் நடுத்தர வலிவுள்ள நோய் எனக் கண்டறிதல் வேண்டும். 101

## 23. வலிவின் சோதனை

மனிதர்களின் பலத்தை அறிந்துகொள்ளத் தோல் இரத்தம் மாமிசம் கொழுப்பு எலும்பு எலும்புக்குள் உள்ள சோறு விந்து மனம் என்ற எட்டுப் பொருள்களின் பலத்தைப் பரிசோதிக்க வேண்டும். 102

## 24. தோல் வலிவுள்ள மனிதனின் இலக்கணம்

வலிவுள்ளதாயின் மனிதனின் தோல், நைப்புத்தன்மை மழ மழப்பு மிருது தெளிவு நுட்பம் சுருக்கமின்மை அழகான அமைப்பு அடர்ந்த மயிர்க்கால்கள் பளபளப்பு இவற்றை உடைய தாயிருக்கும்.

இந்தத் தோல் வலிவுள்ள மனிதன், சுகவாழ்வு வாழ்பவ னாகவும், அதிர்ஷ்டசாலியாகவும், செல்வம் நிரம்பியவனாகவும், இன்பம் அனுபவிப்பவனாகவும், அறிவு கல்வி நல்ல உடல்நிலை மகிழ்ச்சி நீண்ட ஆயுள் இவற்றைப் பெற்றவனாகவும் இருப் பான். 103

## 25. இரத்த வலிவுள்ள மனிதனின் இலக்கணம்

இரத்த வலிவு பெற்ற மனிதனுடைய காதுகள் கண்கள் முகம் நாக்கு மூக்கு உதடுகள் உள்ளங்கால்கள் உள்ளங் கைகள் நகங்கள் நெற்றி ஆண்குறி இவை நைப்புத்தன்மை வுடையனவாகவும், செந்நிறமுள்ளவையாகவும், அழகாகவும், மினுமினுப்பாகவும் அமைந்திருக்கும்.

இரத்த வலிவுள்ள மனிதன் இன்ப வாழ்வு வாழ்வான். பிற ருக்கு அடங்கி நடக்கமாட்டான். நினைவாற்றல் உள்ளவனா வான். நல்ல மனமுடையவன், உடலழகன், சாதாரண வலிவுள்ள வன், துன்பத்தைப் பொறுக்காதவன், உஷ்ணத்தைப் பொறுக்க முடியாதவனுமாவான். 104

## 26. மாமிச வலிவுள்ள மனிதனின் இலக்கணம்

மாமிச வலிவுள்ள மனிதனுடைய பொட்டுகள் நெற்றி கழுத் தின் பின்பாகம் கண் கோளம் தாடை கழுத்து தோள்கள் வயிறு அக்கிள் மார்பு கைகால் மூட்டுகள் இவை உறுதியாக வும் பளுவாகவும் அழகாகவும் இருக்கும். அவன் அடர்த்தியான மாமிசத்தைப் பெற்றிருப்பான். அப்படிப்பட்ட மனிதன் பொறுமை தைரியம் பேராசையின்மை செல்வம் கல்வி இன்பம் எளிமை உடல்நலம் பலம் நீண்ட ஆயுள் ஆகிய இவற்றைப் பெற்றிருப்பான். 105

## 27. கொழுப்புள்ள வலுவான மனிதனின் இலக்கணம்

வலுவான கொழுப்புள்ளவர்களின் குரல் கண்கள் தலை மயிர் ரோமங்கள் நகங்கள் பற்கள் உதடுகள் சிறுநீர் மலம் இவை குறிப்பாக நைப்புத்தன்மை கொண்டிருக்கும். இப்படிப் பட்டவர்கள் செல்வம் பதவி இன்பம் சுகவாழ்க்கை கொடை யுள்ளம் நேர்மை அழகான உடல் பிறருக்கு உதவி செய்யும் மனப்பான்மை ஆகியவைகளுடன் விளங்குவார்கள். 106

## 28. எலும்பில் வலிமை பெற்றவர்களின் இலக்கணம்

எலும்பில் வலிமை பெற்றவர்களின் குதிகால்கள் கணுக் கால்கள் முழங்கால்கள் முன்கைகள் கழுத்து முகவாய்க்கட்டை தலை கணுக்கள் எலும்புகள் நகங்கள் பற்கள் இவை பருத் திருக்கும். இப்படிப்பட்டவர்கள் மிகுந்த உற்சாகம் பேராற்றல், துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளும் தன்மை உறுதியான உடல் அமைப்பு நீண்ட ஆயுள் இவைகளைப் பெற்றவர்களாகத் திகழ்வார்கள். 107

## 29. எலும்பில் உள்ள சோறு வலிவு பெற்றவர்களின் இலக்கணம்

எலும்பில் உள்ள சோற்றால் வலிவு பெற்றவர்களின் உறுப்புக்கள் மெல்லியவை. அவர்கள் பலம் மிகுந்தவர்கள். அவர்களுடைய உடலின் நிறம் அழகாகவும் குரல் இனிமையாகவும் அமைந்திருக்கும். அவர்களுடைய மூட்டுக்கள் பருத்தும் நீண்டும், உருண்டும் இருக்கும்.

இவர்கள் நீண்ட ஆயுளுடன் கூடியவர்கள். வலிவு பெற்றவர்கள். சாத்திர அறிவு படைத்தவர்கள். செல்வம் பகுத்தறிவு மக்கட்பேறு இவற்றையுடையவர்கள். மரியாதைக்கு உரியவர்கள். *108*

## 30. விந்து வலிவு பெற்றவர்களின் இலக்கணம்

விந்து வலிவு பெற்ற மனிதர்கள் அழகான உடல் அமைப்புக் கொண்டவர்கள். தெளிவான பார்வையுடையவர்கள். அவர்களுடைய கண்கள் பால் நிரம்பியிருப்பது போல் வெண்மையாக, கருணை ததும்புவதுபோல் காட்சியளிக்கும். அவர்கள் மகிழ்ச்சி துள்ளும் மனம் உடையவர்கள். அவர்களுடைய பற்கள் வழவழப்பாகவும், உருண்டையாகவும், உறுதியாகவும், ஒரே அளவில் சேர்ந்தும், இடைவெளியற்றும் அமைந்திருக்கும்.

அவர்களுடைய உடல் நிறம் பார்ப்பதற்கு அழகாகவும், குரல் கேட்பதற்கு இனிமையாகவும் அமைந்திருக்கும். அவர்கள் மினுமினுப்பான உடல் அமைப்புக் கொண்டு விளங்குவார்கள். அவர்களுடைய பின்தட்டுகள் அகன்றும் பெரியவையாகவும் இருக்கும். அப்படிப்பட்ட மனிதர்கள் பெண்களை மயக்கக் கூடியவர்களாக இருப்பார்கள். அல்லது அவர்கள் மாதர்களை மிகவும் நேசிப்பவர்களாக இருப்பார்கள். அவர்கள் உலகில் உள்ள மயக்கும் பொருட்களில் மிகவும் ஆசை கொண்டவர்கள். மிகுந்த வலிவுள்ளவர்கள்.

மேலும் அவர்கள் இன்பவாழ்வு வாழ்பவர்களாகவும் உயர் பதவி வகிப்பவர்களாகவும் உடல் ஆரோக்கியம் பெற்றவர்களாகவும் செல்வம் நிறைந்தவர்களாகவும் மதிப்பிற்குரியவர்களாகவும் மக்கட் செல்வம் படைத்தவர்களாகவும் இருப்பார்கள். *109*

## 31. மன வலிவு பெற்றவர்களின் இலக்கணம்

மன வலிவு பெற்றவர்கள் நல்ல நினைவாற்றல் பெற்றவர்கள். தெய்வ நம்பிக்கை உடையவர்கள். நன்றி மறவாதவர்கள். அறிவில் சிறந்தவர்கள். தூய்மையானவர்கள். மிக்க மகிழ்ச்சியுடையவர்கள். திறமைசாலிகள். துணிச்சல் மிகுந்தவர்கள், போரில்

சாகசச் செயல்கள் புரிபவர்கள். மனக்கவலையற்றவர்கள் நிமிர்ந்த நடையுடையவர்கள். நுண்ணறிவு பெற்றவர்கள். பிறர் போற்றும் செயல்கள் உடையவர்கள். நற்செயல்களிலேயே மனதையும் அறிவையும் செலுத்துகிறவர்கள். இவ்வாறு எண் வகையான தோல் போன்றவற்றில் வலிவு பெற்றவர்களின் இலக் கணங்கள் குணங்கள் விளக்கப்பட்டன. 110

## 32. எண்வகை ஸாரங்களால் வலிவு பெற்ற மனிதர்களின் இலக்கணம்

இவர்கள் மிகுந்த வலிவு பெற்றவர்களாகத் திகழ்வார்கள். இன்பவாழ்வு வாழ்வார்கள். துன்பங்களைப் பொறுக்கக்கூடியவர் கள். செய்யும் தம் செயல்கள் எல்லாவற்றிலும் முழு நம்பிக்கை கொண்டவர்கள். நற்செயல்களிலேயே தன்னுடைய மனம் அறிவு இவற்றைச் செலுத்துபவர்கள். உறுதியான உடற்கட்டுடையவர் கள். அழகான நடையுடையவர்கள்.

அவர்களுடைய குரல் எதிரொலியுடன் கூடியும், இனிமை யாகவும், கம்பீரமாகவும், உரத்தும் அமைந்திருக்கும். அவர்கள் இன்பம் துய்ப்பவர்களாகவும், உயர்பதவி வகிப்பவர்களாகவும், செல்வத்தை அனுபவிப்பவர்களாகவும், மற்றவர்களின் மதிப் பிற்குரியவர்களாகவும் இருப்பார்கள். விரைவில் முதுமை அடை யாதவர்கள். குறைந்த நோயுடையவர்கள்.

பெரும்பாலும் தன்னையொத்த குணங்களைப் பெற்று நீண்டகாலம் வாழக்கூடிய பல மக்களுடன் கூடியவர்களாக விளங்குவார்கள். 111

## 33. எண்வகை வலிவுகளைச் சோதிப்பதனால் ஏற்படும் பயன்

மேற்கூறியவற்றில் ஒரு வகை வலிவும் அற்றவர்கள் அவர்களுக்கு எதிரிடையானவர்கள், நடுநிலை வலிவு பெற்றவர்கள் மேற்கூறிய குணங்களில் சிலவற்றை மட்டும் பெற்றிருப் பார்கள். 112-113

மேற்கண்ட எண் வகை வலிவுகளும் மனிதர்களின் பலத்தின் அளவுகளைக் குறிப்பாக அறிந்துகொள்ள உபதேசிக்கப்பட்டன. 114

மருத்துவன் நோயாளியின் உடலை மட்டும் பார்த்து நோயைப்பற்றி ஒருவித முடிவிற்கும் வரக்கூடாது.

நோயாளியின் உடல் மாமிசத்தால் நிரம்பியும் உறுதி யாகவும் இருப்பதாயின் அவன் பலசாலியாக இருக்கக் கூடும்.

நோயாளியின் உடல் மெலிந்து காணப்படுமாயின் பலமற்றவனாக இருக்கக்கூடும்.

நோயாளியின் உடல் மிகவும் பெரிதாக உள்ளதாயின் மிகுந்த பலசாலியாக இருப்பான்.

பிணியாளியின் உடல் சிறிதாயிருக்குமாயின் பலம் குறைந்தவனாக இருக்கலாம் என இவ்வாறு முடிவு செய்து மருத்துவர்கள் ஏமாற்றமடைகின்றனர். அப்படி ஏமாற்றமடையக்கூடாது.

ஏனென்றால் சிறியதும் மெலிந்ததுமான உடலைப் பெற்றிருப்பவன் பலசாலியாக இருக்கலாம். எறும்பு சுமையை எடுத்துச்செல்வது உதாரணமாகக் காட்டப்படுகிறது.

எறும்பு சிறிய மெல்லியதான உடலை உடையதாயினும் தன்னைக்காட்டிலும் பன்மடங்கு சுமையுள்ள பொருட்களை எடுத்துச் செல்கிறது.

அதேபோல் இளைத்தவர்களும் சிறுஉடலைக் கொண்டிருப்பவர்களும் அதிகம் வலிவைப் பெற்றிருக்கிறார்கள். அதேபோல் பருத்து பெரிய உடலை உடையவர்கள் பலமற்றவர்களாக இருக்கிறார்கள். ஆகையால்எண்வகை வலிவுகளைக்கொண்டுதான் நோயாளியைப் பரிசோதனை செய்ய வேண்டும். 115

## 34. உடற்கட்டின் சோதனை (ஸம்ஹனனம் - இறுக்கம்)

ஸம்ஹனனம் ஸம்ஹதி ஸம்யோஜனம் இம்மூன்றும் ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள்.

உடல் எலும்புகள் சமமாகவும் தனித்தனியாகவும் முறைப்படி பிரிந்தும், மூட்டுக்கள் உறுதியாக அமைந்தும் மாமிசம், இரத்தம் இரண்டும் நன்கு தம்தம் இடங்களிலும் இருந்தால் அவ்வுடல் கட்டுள்ள உடல் எனக் கூறப்படுகிறது.

உடற்கட்டுள்ள மனிதர்கள் வலிவுள்ளவர்களாகவும் உடற்கட்டு இல்லாதவர்கள் குறைந்த வலிவுள்ளவர்களாகவும் நடுநிலையான உடற்கட்டுள்ளவர்கள் நடுத்தர வலிவுடையவர்களாகவும் உள்ளனர். 116

## 35. உடல் உறுப்புகளின் மூலம் உடல்சோதனை

அவரவர்களுடைய விரல்களின் அங்குல அளவைக் கொண்டு உடலின் உயரம் அகலம் நீளம் இவை முறையே கூறப்படுகின்றன.

அவரவர்களுடைய கைவிரலின் அங்குல அளவால் 4 அங்குல உயரமாகவும், 6 அங்குலம் அகலமாகவும், 14 அலகுலம்நீளமாயும் பாதம்அமைந்திருக்கும்.

முழங்காலுக்குக் கீழே கணுக்காலுக்கு மேல் உள்ள பாகம் 18 அங்குலம் நீளமும் 16 அங்குலம் சுற்றளவும் உள்ளதாக யிருக்கும்.

முழங்கால் 4 அங்குல நீளமும் 16 அங்குலம் சுற்றளவும் கொண்டிருக்கும்.

தொடை 30 அங்குலம் சுற்றளவும், 18 அங்குல நீளமும் கொண்டதாக இருக்கும்.

இரண்டு விதைகளும், 6 அங்குலம் நீளமும், 8 அங்குலம் சுற்றளவும் கொண்டதாக இருக்கும்.

ஆண்குறி 6 அங்குலம் நீளமும், 5 அங்குலம் சுற்றளவு உள்ளதாக இருக்கும்.

பெண்குறி 12 அங்குலம் ஆழமுள்ளதாக இருக்கும்.

இடுப்பு 16 அங்குலம் அகலமுள்ளதாக இருக்கும்.

சிறுநீர்ப் பையின் முனை 10 அங்குலம் அகலமுள்ளதாயிருக்கிறது.

வயிறு 12 அங்குலம் நீளமும், 10 அங்குலம் அகலமும் உள்ளதாயிருக்கும்.

விலாப்பக்கம் 10 அங்குலம் அகலமும், 12 அங்குலம் நீளமும் கொண்டிருக்கும்.

இரண்டு மார்பகத்திற்கிடையே உள்ள நீளம் 12 அங்குலமும், மார்புக் காம்பின் சுற்றளவு இரண்டு அங்குலமும் கொண்டதாக அமைந்திருக்கும்.

மார்பின் அகலம் 24 அங்குலம், உயரம் 12 அங்குலம், உள்ளதாக அமைந்திருக்கும்.

இதயத்தின் சுற்றளவு இரண்டு அங்குலம்.

தோளின் சுற்றளவு எட்டு அங்குலம்.

தோள்பட்டையின் சுற்றளவு ஆறு அங்குலம் உள்ளதாக இருக்கும்.

கையின் மேற்பகுதி 16 அங்குலம் சுற்றளவு உள்ளதாயிருக்கும்.

முழங்கைக்குக்கீழே மணிக்கட்டிற்குமேலே உள்ள பகுதியின் நீளம் 15, அங்குலம்.

கை நீளம் 12 அங்குலம் அங்குளின் சுற்றளவு 8 அங்குலம்.

முதுகின் கீழ்ப்பகுதியின் உயரம் 12 அங்குலமும், இடுப்புக்குக் கீழேயுள்ள பகுதி, 18 அங்குல உயரமும் அமைந்திருக்கும்.

கழுத்து உயரம் 4 அங்குலம், சுற்றளவு 22 அங்குலம்.

முகம் 12 அங்குல உயரமும், 24 அங்குலம் சுற்றவும் கொண்டதாக இருக்கும்.

வாயின் சுற்றளவு 5 அங்குலம் அமைந்திருக்கும். முகவாய்க் கட்டை, உதடுகள் இரண்டு காதுகள், கண்களுக்கு இடையே உள்ள பகுதி, மூக்கு, நெற்றி இவை 4 அங்குலம் சுற்றளவு உள்ளவைகளாக அமைந்திருக்கும்.

தலை 16 அங்குலம் உயரமுள்ளதாகவும் 32 அங்குலம் சுற்றளவு உள்ளதாக அமைந்திருக்கும்.

இவ்வாறு தனித்தனியாக உறுப்புக்களின் அளவுகள் கூறப்பட்டுள்ளன.

உடலின் உயரம் 84 அங்குலமாம். அகலமும், நீளமும் உடலின் உயரத்திற்குச் சமமாக இருந்தால் ஸமசரீரம் என்கிறோம்.

ஸமசரீரம் உடையவர்கள் ஆயுள் வலிவு ஓஜஸ் இன்பம் பதவி செல்வம் மற்ற தனக்குப் பிடித்தமான பொருள்கள் அமைந்தவர்களாகத் திகழ்வார்கள்.

மேற்கண்ட அளவுகளுக்குக் குறைவாகவோ, அதிகமாகவோ உள்ளவர் கள் மேற்கூறியவர்களுக்கு மாறுபட்டிருப்பார்கள். 117

## 36. ஸாத்ம்யத்தின் மூலம் உடல் பரிசோதனை

இடைவிடாமல் பயன்படுத்துவதில் உடலுக்கு ஒத்துக்கொள்ளும் பொருளை ஸாத்ம்யம் என்கிறோம்.

நெய் பால் எண்ணெய் மாமிசரசம் இவற்றை உடலுக்கு ஏற்றதாகப் பழக்கப்படுத்திக் கொண்டவர்களும், எல்லாச் சுவை களையும் பழக்கப்படுத்திக் கொண்டவர்களும், வலிமை பொருந்தி

யவர்களாகவும், துன்பங்களைப் பொறுத்துக்கொள்ளக் கூடியவர்களாகவும், நீண்டநாட்கள் வாழ்பவர்களாகவும் திகழ்கின்றனர்.

வறட்சித் தன்மையுள்ள பொருட்களைப் பழக்கிக் கொண்டவர்களும் ஒரே சுவையைப் பழக்கப்படுத்திக் கொண்டவர்களும் பெரும்பாலும் வலிவற்றவர்களாகவும் சிறிதளவே துன்பத்தைப் பொருத்துக் கொள்பவர்களாகவும் குறைந்த ஆயுள் உடையவர்களாகவும் குறைவான உபகரணங்களுடன் கூடியவர்களாகவும் இருப்பார்கள்.

இரண்டு மூன்று சுவைகளை மட்டும் பழக்கப்படுத்திக் கொண்டவர்கள் நடுத்தர வலிவுள்ளவர்களாக இருப்பார்கள். 118

## 37. ஸத்வத்தின் (மனம்) மூலம் உடல் பரிசோதனை

ஸத்வம் என்றால் மனம். அந்த மனம் ஆத்மாவுடன் சேர்ந்து உடலை இயக்குகிறது. அது வலிவின் பிரிவினால் உயர்ந்தது நடுத்தரமானது தாழ்ந்தது என மூவகைப்படும். ஆகையினால் மூவகை மனமுடைய மனிதர்களும் மூவகையாகின்றனர். அவர்களில் உயர்ந்த மனவலிவு பெற்றவர்கள் பற்றி எண்வகை ஸாரம் என்பதை விளக்கிய இடத்தில் கூறப்பட்டுள்ளது.

அவர்கள் சிறு உடலைப் பெற்றிருந்தாலும் ஸத்வ குணம் மிகுந்திருப்பதனால் வாத பித்த கபதோஷங்களினாலும் எதிர்பாராத காரணங்களாலும் உண்டாகிற பெரும் விபத்துக்களிலும் நோய்களிலும் வருந்துவதில்லை.

நடுத்தர மனவலிவுள்ளவர்கள், மற்றவர்களை உதாரணமாக வைத்துத் தமக்கு நேர்ந்த துன்பங்களைப் பொறுத்துக் கொள்கிறார்கள். அல்லது மற்றவர்களின் உதவியின் மூலம் தம் கஷ்டத்தைப் பொறுத்துக் கொள்கிறார்கள்.

தாழ்ந்த மனவலிவுள்ளவர்கள், தமக்கு நேர்ந்த துன்பங்களைத் தாமும் பொறுத்துக்கொள்ளமாட்டார்கள் மற்றவர்கள் உதவி புரிந்தாலும் தைரியத்துடன் துன்பத்தைப் பொறுத்துக்கொள்ள மாட்டார்கள்.

அவர்கள் உடல் பருத்தவர்களாயிருந்தாலும் சிறுசிறு ஆபத்துக்களையும் பொறுத்துக்கொள்ள முடியாதவர்களாவார்கள். அவர்களிடம் எப்பொழுதும் பயம் வருத்தம் பேராசை மோகம் அகங்காரம் இவை குடிகொண்டிருக்கின்றன.

கொடூரமானதும் பயங்கரமானதும் பிரியமற்றதும் அருவருக்கத்தக்கதுமான விகாரமான கதைகளைக் கேட்டும் பிராணி அல்லது மனிதர்களின் மாமிசம் இரத்தம் இவற்றைக் கண்டும் வருத்தம் நிறமாற்றம் மூர்ச்சை பைத்தியம் தலைச்சுற்றல் கீழேவிழுதல் போன்றவைகளில் ஒன்றை அடைகின்றனர். அல்லது இவற்றில் ஏதாவது ஒன்றினால் மரணம் எய்துகின்றனர். 119

## 38. உணவின் வலிவு மூலமாக உடற்சோதனை

உணவின் வலிமையைக் கொண்டும் அல்லது சீரணமாகும் சக்தியைக் கொண்டும் உணவின் சக்தியைப் பரிசோதிக்கவேண்டும்.

பலமும் ஆயுளும் உணவைச் சார்ந்தன. 120

## 39. உடற்பயிற்சியால் உடல் பரிசோதனை

வேலை செய்யும் திறனைக் கொண்டு உடற்பயிற்சி செய்யும் திறமையை அறிந்து கொள்ளலாம். வேலை செய்யும் திறனால் வலிமை உடலில் அதிகம் நடுத்தரம் குறைவு என்று இம் மூன்றிலும் ஒருவகையைச் சார்ந்து இருக்கிறது என்பதை ஊகித்தறியலாம். அதிகம் வேலைசெய்யும் ஒருவனை அதிகவலிவு உள்ளவனாகவும், நடுத்தரமான செய்கையைக் கொண்டு நடுத்தரமான வலிவுள்ளவனாகவும், குறைவாக வேலை செய்வதைக் கொண்டு குறைந்த வலிவுள்ளவனாகவும் ஊகித்தறிந்து கொள்ளலாம். 121

## 40. வயதின் மூலம் உடல் பரிசோதனை

கால அளவைக் கொண்டு ஏற்படுகிற உடல் நிலை வயது எனப்படுகிறது. அந்த வயது மேலெழுந்தவாரியாக இளமை நடுத்தரம் முதுமை என மூவகைப்படும்.

உடலில் உள்ள தாதுக்கள் யாவும் முதிர்ச்சியடையாமல், மீசை முதலிய அடையாளங்கள் தோன்றாமல், உடல் அமைப்பு மிருதுவாகி துன்பங்களைப் பொறுக்காத, முழு வலிவு பெறாத பெரும்பாலும் கப தாது அதிகமாகவுள்ள, 16 வயதிற்குட்பட்ட நிலை இளமைப் பருவம் எனப்படும்.

தாதுக்கள் வளர்ச்சிபெற்று தங்கள் வேலையில் ஈடுபட்டு சஞ்சலமானமனநிலைகொண்டு முப்பதுவயதிற்குட்பட்டுள்ளநிலை இளமைப்பருவம் எனப்படும். அதாவது இளமைப்பருவம் இரு வகைப்படும். ஒருவயது முதல் பதினாறு வயது வரையிலும் ஒரு வகை, அந்நிலையில் கபம் அதிகமாகயிருக்கும். தாதுக்கள்

வளர்ச்சி பெற்று மனம் சஞ்சலம் அடைந்து 17 வயதுக்கு மேல் 30 வயதிற்குள் உள்ளநிலை வளர்ச்சி பெற்ற இளமைப் பருவம் எனப்படும்.

**நடுநிலை**

வலிவு வீர்யம் திறமை பராக்கிரமம் புரிந்துகொள்ளுதல் புரிந்துகொண்டதை மனதில் தக்க வைத்தல் அதை நினைவுக்குக் கொண்டு வரும் ஆற்றல் பேசும் திறன் பகுத்தறிவு இவற்றைக் கொண்டதும் தாதுக்கள் முழுமையாக வளர்ச்சி பெற்றதும் உடல் வலிவும் மனவலிவும் பெற்றதும் தாதுக்களின் குணங் களை இழக்காததும் பித்த தாதுவை முக்கியமாகக் கொண்ட தும் ஆன அறுபது வயதிற்குட்பட்ட நிலை நடுநிலை எனப் படும்.

**முதுமைநிலை**

பிறகு உடலில் உள்ள தாதுக்கள் புலன்கள் வலிவு வீர்யம் திறமை பராக்கிரமம் புரிந்துகொள்ளுதல் புரிந்து கொண்டதை மனதில் வைத்துக்கொள்ளுதல் அதை நினைவுக்குக் கொண்டு வருதல் பேச்சுத்திறன் பகுத்தறிவு இவற்றின் ஆற்றலும் குறையத் தொடங்குகின்றன. தாதுக்களின் குணங்களும் குறையத் தொடங்குகின்றன. வாத தாதுவின் குணம் அதிகரிக்கிறது. இவ் வாறு நூறு ஆண்டு வரை சிறிது சிறிதாக மேற்கண்ட குணங் கள் குறைந்துகொண்டே வருகின்றன.

இந்நிலையை முதுமை நிலை என்கிறோம். இந்தக் காலத்தில் மனித ஆயுளின் அளவு நூறு ஆண்டுகள் என்று கணக்கிடப்படு கிறது. ஆனால் சிலர் நூறு வயதிற்கு மேற்பட்டும் வாழ்கிறார் கள். சிலர் நூறு வயதிற்குள் இறந்து விடுகிறார்கள் என்பதைக் காண்கிறோம்.

அவர்கள் விஷயத்தில் விகிருதியைத் தவிர ப்ரகிருதி போன்ற வற்றின் வலிவின் பிரிவைச் சோதித்து ஆயுளைத் தீர்மானிக்க வேண்டும். அதாவது அவர்களுடைய ஆயுளை மூவகையாகப் பிரித்து இளமை நடுநிலை முதுமை என்பனவற்றை அறிந்து கொள்ள வேண்டும். 122

## 41. வலிவை அறிந்து மருந்து கொடுத்தல்

விக்ருதியைத் தவிர ப்ரகிருதி முதலான பத்துவிதச் சோதனை களினால் நோயாளியின் வலிவை உயர்ந்தது நடுத்தர மானது தாழ்ந்தது என்ற பிரிவைக்கொண்டு அறிந்துகொள்ள வேண்டும்.

விக்ருதியைக் கொண்டு தோஷங்களின் வலிவை கடுமையானது நடுத்தரமானது தாழ்ந்தது என்ற வகையில் ஊஹித்தறிய வேண்டும்.

மருந்தை தீக்ஷ்ணம் நடுத்தரம் மிருது என்று மூவகைகளாக பிரித்து தோஷத்திற்கு ஏற்றவாறு நோய் கடுமையாயிருந்தால் தீக்ஷ்ணமான மருந்தையும், நடுத்தரமாயிருந்தால் நடுத்தரமான மருந்தையும், தாழ்ந்ததாயிருந்தால் மிருதுவான மருந்தையும் கொடுக்க வேண்டும். 123

வயதின் அளவை அறிந்துகொள்ளுவதற்கான இலக்கணத்தை இந்நூலில் இந்திரிய ஸ்தானத்தில் ஜாதிஸூத்ரீயம் என்ற எட்டாம் அத்தியாயத்தில் கூறுவோம். 124

## 42. பர்வங்களின் பிரிவினால் காலப்பிரிவு

காலம் என்பது வருடத்தையும் நோயாளியின் நிலையையும் குறிக்கும். வருடம் என்பது தனித்தனி இயற்கை நிலைகளைக் கொண்டு இரண்டு மூன்று ஆறு பன்னிரண்டு எனப் பிரிக்கப் படுகின்றது.

இங்கு காலம் என்ற வருடம் ஆறு வகையாகப் பிரிக்கப்பட்டு அதன் செயல்கள் கூறப்படுகின்றன. 1. ஹேமந்தம் (பனிக்காலம்) 2. கிரீஷ்மம் (கோடை), 3. வர்ஷா (மழைக்காலம்) என மூவகையாகப் பிரிக்கப்படுகிறது.

ஹேமந்தம் என்ற பருவத்தில் பனி அதிகமாகவும் கிரீஷ்மம் என்ற பருவத்தில் வெப்பம் அதிகமாகவும், வர்ஷா என்ற பருவத்தில் மழை அதிகமாகவும் இருக்கும்.

மேற்கண்ட ஹேமந்தம் வர்ஷா கிரீஷ்மம் என்ற மூன்று பருவங்களும் முறையே ப்ராவிருட், சரத், வஸந்தம் என மறுபடியும் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

ப்ராவிருட் என்ற பருவத்தில் கிருஷ்மம், வர்ஷா என்ற பர்வங்களின் பொது இலக்கணங்கள் தென்படும்.

சரத் என்ற பருவத்தில் வர்ஷா, ஹேமந்தம் என்ற பர்வங்களின் பொது இலக்கணங்கள் தென்படும்.

வஸந்த என்ற பருவத்தில் ஹேமந்தம், கிரீஷ்மம் என்ற பருவங்களின் பொது இலக்கணங்கள் தென்படும்.

மலம் கழிக்கச் செய்வதின் மூலமாகவோ, வாந்திக்குக்கொடுப்பதின் மூலமாகவோ உடலில் உள்ள தோஷங்களை வெளிப்படுத்துவதற்காக இவ்வாறு ஆறு பருவங்கள் பிரிக்கப்பட்டுள்ளன. 125

மேற்கண்ட சாதாரணப் பருவங்களான ப்ராவிருட் சரத் வஸந்தம் என்ற பருவங்களில் மலம் கழிக்கச் செய்யவும், வாந்தி எடுக்கச்செய்யவும்மருந்துகொடுக்கலாம்என்றும், மற்றவைகளான ஹேமந்தம் கிரீஷ்மம் வர்ஷா என்ற பருவங்களில் மலம் கழிக்கச் செய்யவோ வாந்தி எடுக்கச்செய்யவோ மருந்து கொடுக்கக் கூடாது என்றும் கூறப்பட்டுள்ளது.

குளிர்ச்சி வெப்பம் மழை இவை குறைந்துள்ள சாதாரணமான இலக்கணங்களையுடைய ப்ராவிருட், சரத், வஸந்தம் என்ற பருவங்களில் மலம் கழிக்கவும், வாந்தி எடுக்கச்செய்யவும், உடலுக்குக் கொடுக்கப்படும் மருந்து எளிதில் பயனை அளிக்கக் கூடியதாகவும் தீமையற்றதாகவும் ஆகிறது.

மற்ற பருவங்களான மிக்க குளிர்ச்சி மிகுந்த வெப்பம் அதிக மழை உள்ள ஹேமந்தம் கிரீஷ்மம் வர்ஷா என்ற பருவங்களில் மலம் கழிக்கவும் வாந்தி எடுக்கவும் உடலுக்குக் கொடுக்கப்படும் மருந்து எளிதில் குணத்தை அளிக்காது தீமையையும் விளைவிக்கும். 126

ஹேமந்தம் என்ற பருவத்தில் மிகுந்த குளிரினால் உடல் நிலை சரியாக அமைவதில்லை. மிகுந்த குளிர்காற்றினால் உடல் நிலை பாதிக்கப்படுகிறது. உடலில் உள்ள தோஷங்கள் மிகக் கடுமையாகவும் உள்ளடங்கியும் இருக்கின்றன.

இந்நிலையில் உள்ள உடலுக்கு மலம் கழிக்கவோ வாந்தி எடுக்கவோ கொடுக்கப்படும் உஷ்ண வீர்யமுள்ள மருந்து மிகக் குளிர்ச்சியினால் பாதிக்கப்பட்டு குறைந்த வீர்யம் உடையதாகி விடுகிறது.

ஆகையினால் இந்நிலையில் மிகக் குளிரினால் பாதிக்கப்பட்ட உடல் மிக்க குளிரினால் குறைந்த வீர்யமுள்ள மருந்து இரண்டும் சேர்ந்தால் சிகிச்சை நன்கு நிறைவேறுகிறதில்லை. மேலும் இந்நிலையில் கொடுக்கப்பட்ட மருந்து உடலில் வாத தோஷத்தைத் தோற்றுவித்துத் துன்பத்தை விளைவிக்கிறது.

கிரீஷ்ம (சித்திரை, வைகாசி மாதங்கள்) பருவத்தில் வெப்பத்தினால் தாக்கப்பட்ட உடல் நல்ல நிலையில் இருக்காது. மிகுந்த வெப்பமடைந்த காற்று வெயில் இவை நிறைந்திருப்பதால் உடல் மிகவும் தளர்ச்சியடைகிறது. உடலில் தோஷங்களும் உறைந்து விடுகின்றன.

உஷ்ண வீர்யமுள்ள காலத்தின் உஷ்ணத்துடன் சேர்ந்த மலத்தைக் கழிக்கவும் வாந்தி எடுக்கவும் கொடுக்கப்படும் மருந்து

மிகக் கடுமையாகிறது. ஆகையால் மருந்தின் உஷ்ணமும் உடலின் உஷ்ணமும் சேரும் பொழுது, அளவுக்கு மீறி மருந்து கொடுப்பதனால் உண்டாகும் தீமைகள் உண்டாகின்றன. உடலும் வறட்சியினால் பாதிக்கப் பட்டுத் துன்பமடைகிறது.

மழைக்காலத்தில் ஆகாயம் மேகங்களால் சூழப்பட்டு கதிரவன் சந்திரன் விண்மீன்களும் மறைந்து ஆகாயமண்டலம் மழைத் துளிகளால் நிரம்பி விடுகிறது. நிலம், சேறு முதலியவற்றால் பரவியிருக்கிறது. அதனால் மனித உடலும் மிகவும் குளிர்ந்து விடுகிறது. அப்பொழுது ஐம்பெரும்பூதங்கள் தம் இயற்கைத் தன்மையை இழந்துவிடுகின்றன. நிலம் போன்றவை குளிர்ந்து நீர் மேகம் இவற்றால் பாதிக்கப்பட்ட காற்று வீசுவதால் மூலிகைகளின் இயற்கை குணங்களும் அழிந்துவிடுகின்றன. இந்நிலையில் மலம் கழிக்கவும் வாந்தி எடுக்கச் செய்ய கொடுக்கப்படும்மருந்து குருகுண முள்ளதாகி உடலும் குருகுணம் பெற்று விடுகிறது.

மருந்துகளை இப்பருவத்தில் பயன்படுத்தினால் அவை சரியாக வேலை செய்வதில்லை. தோஷங்களையும் சரியாக வெளிப் படுத்துவதில்லை.

வெயில் குளிர் மழை இக்காலங்களில் மலம் கழிக்கவும் வாந்தி எடுக்கவும் மருந்து கொடுக்கக் கூடாது எனத் தடை செய்யப்பட்டுள்ளது.

அவசியம் தேவைப்பட்டால் இம்மருந்தைப் பயன்படுத்தலாம். பயன்படுத்தும்பொழுதும் பருவங்களுக்கு எதிரிடையான குணங் களைச் செயற்கை முறையில் நோயாளிக்குத் தோற்றுவித்துச் சேர்க்கை பக்குவம் அளவு என்ற முறைகளைப் பருவங்களுக்கு ஏற்றவாறு மருந்தில் வீர்யத்தை ஏற்படுத்திக் கவனத்துடன் மருத்துவன் உபயோகப்படுத்தலாம். 127

## 43. மருந்து கொடுக்கத் தகுந்த, தகாத காலங்கள்

சிகிச்சை செய்யத் தகுதி வாய்ந்தது தகுதியற்றது என்பதைக் கொண்டு காலம் அகாலம் என இரண்டு வகையாக நோயாளியின் நிலை பிரிக்கப்படுகிறது. அதாவது இந்த மருந்து கொடுப்பதற்கு இது ஏற்ற காலம், இது ஏற்ற காலம் அல்ல என்பது அதன் பொருள். நோயின் நிலைக்குத் தக்கவாறு மருந்தைப் பயன்படுத்துவதற்காக நோயாளியை எல்லா வகையிலும் அடிக்கடி பரிசோதனை செய்ய வேண்டும்.

காலம் தவறி அதாவது காலத்திற்கு முன்போ பின்போ கொடுக்கப்படும் மருந்து பயனளிக்காது. காலத்தில் அளிக்கப்படும் மருந்துதான் பயன் தருகிறது. 128

### 44. ப்ரவிருத்தி

ஒவ்வொரு சிகிச்சையின்தொடக்கமும் ப்ரவிருத்தி எனப்படும். அதாவது மருத்துவன் மருந்து நோயாளி பணியாளன் இவர்கள் முறையாகத் தங்கள்வேலையில் ஈடுபடுதல் என்பது அதன் பொருள். 129

### 45. உபாயம்

மருத்துவன் மருந்து நோயாளி பணியாளன் இந்நால்வரும் தங்கள் செய்கையில் கருத்துடன் பணியாற்றுதல் உபாயம் எனப் படும். அதாவது நால்வரும் தங்களுக்கு ஏற்ற குணங்களுடன் கூடி யிருந்து ஸித்திக்குக் காரணமாயிருக்கின்ற தேசம் காலம் அளவு ஒவ்வுதல் செயல் என்றவற்றினால் முறையாகச் செய்யப்பட்ட மருந்தைப் பயன்படுத்துவதாகும். 130

இவ்வாறு பத்து வகை சோதனை முறைகளைக் கொண்டு தனித்தனியாக ஆராய வேண்டியவற்றை ஆராய வேண்டும். 131

### 46. சோதனையின் பயன்

சிகிச்சை முறையை நன்கு அறிந்துகொள்ளுதல் ஆராய்ச்சியின் பயனாகும். ஆயுர்வேத நூலில் எந்த நோய்க்கு எவ்விதத் தோற் றம் இலக்கணம் போன்றவை கூறப்பட்டுள்ளனவோ அவற்றை நன்கு அறிந்துகொண்டு அதற்கேற்றவாறு சிகிச்சை முறையைக் கையாளுவதுதான் அறிந்துகொள்ளுதல் எனப்படும். 132

நோயாளிக்கு எந்தக் காலத்தில் வாந்தியாகக் கொடுப்பது மலம் கழிக்கக் கொடுப்பது போன்ற சிகிச்சையைச் செய்ய வேண்டும் செய்யக்கூடாது என்பதைப்பற்றி ஸித்திஸ்தானத்தில் விளக்கமாகக் கூறுவோம். 133

ஒரு நோயில் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் என்பனவற்றைக் கையாள வேண்டும் அல்லது தவிர்க்க வேண்டும் என்ற நிலைகளிரண்டும் சேர்ந்துள்ள போது எந்த முறையைப் பயன்படுத்தினால் நோயின் கடுமை குறையுமோ அதைக் கையாள வேண்டும். விதி, நிஷேதம் (கொடுக்கக்கூடாது

என்ற தடுப்பு) என்ற முறையிலும் நோய்களுக்குச் சிகிச்சைமுறை கூறப்பட்டுள்ளது.

ஆகையினால் நோயின் கடுமை, எளிமை இவற்றை நன்கறிந்து செயல் படவேண்டும். *134*

## 47. வாந்தி போன்றவற்றிற்குத் தேவையான மூலிகைகள்

வாந்தி எடுக்கச் செய்தல் போன்றவற்றிற்குப் பயன்படும் மூலிகைகளை விளக்குவோம்.

மரக்காரக்காய் தேவதாளி பேய்சசுரை நாயுருவி வெட்பாலை காட்டுப்பீர்க்கு இவற்றின் பழங்கள் இலைகள் புஷ்பங்கள் இவை வாந்தியை உண்டுபண்ணக்கூடியவை.

சரக்கொன்றை குடஜப்பாலை மரக்காரக்காய் சிறிய நெரிஞ்சல் வட்டத்திருப்பி பாதிரி குன்றுமணி பெருங்குரும்பை ஏழிலம்பாளை புங்கு வேம்பு பாகல் பேய்ப்புடல் சீந்திற்கொடி இவற்றால் தயார் செய்த கஷாயம்.

அதிமதுரம் இலுப்பை வெண்நொச்சி கருநொச்சி கடம்பம் நீர்வஞ்சி கோவை கிலுகிலுப்பை செந்நிறமுள்ளஎருக்கு நாயுருவி இவற்றின் கஷாயம்

சிறிய ஏலக்காய் அரேணுகம் ஞாழல் பேரேலம் தனியா தகரவிதை வெட்டிவேர் குருவேர் தாளிசபத்திரி விலாமிச்சம் வேர் இவற்றால் செய்த கஷாயம்.

கரும்பு நாணல் தர்ப்பைப்புல் குருவிக்கரும்பு காஞ்சோறி இவற்றின் கஷாயம்.

ஜாதிக்காய் ஜாதிப்பத்திரி மஞ்சள் மரமஞ்சள் சாரடை சிவப்புச்சாரடை உளுந்து பயறு இவற்றின் கஷாயம்.

இலவமரம் செம்மரம் முதியார்கூந்தல் சித்தரத்தை பசலைக்கீரை நறுவிலி தனுகுமரம் பலாசமரம் ஆமணக்கு நன்னாரி சிருங்காடகம் இவற்றின் கஷாயம்.

அரிசித்திப்பிலி கண்டந்திப்பிலி செவியம் கொடிவேலி சுக்கு கடுகு தேன்பாகு பால் க்ஷாரம் உப்பு நீர் இவற்றைக் கிடைத்தவரை சேகரித்து எவ்வாறு பயன்படுத்தினால் நன்மையளிக்குமோ அவ்வாறு பயன்படுத்திச் செய்த கஷாயம்.

மேற்கண்ட பொருட்களை வர்த்தியாகவோ பொடியாகவோ லேகியமாகவோ எண்ணெயாகவோ கஷாயமாகவோ செய்து மாமிச ரசத்திலோ அரிசிக்குருணையால் செய்த கஞ்சி (யூஷம்) காம்பளிகம் என்ற கஞ்சியிலோ அல்லது பாலிலோ கலந்து வாந்தி எடுக்கக் கொடுக்க வேண்டும்.

முகரக்கூடிய பொருட்களிலோ குழக்கட்டை போன்ற தின் பண்டங்களிலோ முறைப்படி கலந்து வாந்திக்குக் கொடுக்க வேண்டும். இவ்வாறு வாந்தியாகக் கொடுக்கக்கூடிய பொருட்களின் சுருக்கம் கூறப்பட்டது. கல்பஸ்தானத்தில் இதைப் பற்றிய விளக்கங்களை விரிவாகக் கூறுவோம். 135

## 48. மலம் கழிக்கச்செய்யப் பயன்படும் பொருட்கள்

கருஞ்சிவதை சிவதை காட்டுக்கொன்னை வெள்ளலொத்தி தெங்குமரம் ஊகைமரம் பாதிரி செங்கன் குப்பி நேபாளம் எலிச்செவி இவற்றின் பால் வேர் தோல் பூ இலை பழம் இவற்றில் ஏதாவது ஒன்றை மலம்கழிக்கத் தேவையுள்ளவர் களுக்குக் கொடுக்கலாம். அல்லது மேற்கண்ட பொருட்களில் ஒன்றோ இரண்டோ அல்லது எல்லாப் பொருட்களின் பால், வேர், தோல், இலை, பூ, பழம் இவற்றையோ கொண்டு கஷாயம் செய்து மலம் கழிக்கப் பயன் படுத்த வேண்டும்.

ஓமம் அமுக்கராக்கிழங்கு ஆடுதீண்டாப்பாளை பால்சுரை அவுரி அதிமதுரம் இவை எல்லாவற்றையும் கஷாயம் செய்து மலம் கழிக்கப் பயன்படுத்தலாம்.

மணிபுங்கு புங்கு கருஞ்சிவதை கம்பிப்பாலை வாயுவிடங்கம் சாகோடமரம் இவை எல்லாவற்றையும் கஷாயம் செய்தும் மலம் கழிக்கப் பயன்படுத்தலாம்.

உவகைச்செடி முரளஞ்செடி திராக்ஷை குமிழ் பேரீச்சை இலந்தை மாதுளை நெல்லிக்கனி கடுக்காய் தானிக்காய் வெள்ளைச்சாரடை சிகப்புச்சாரடை பால்முதுக்கங்கிழங்கு இவை எல்லாவற்றையும் கஷாயம் செய்து மலம்கழிக்கக் கொடுக்கலாம்.

ஸீது ஸுரா ஸௌவீரகம் துஷோதகம் மைரேயம் மேதகம் மதிரா மது மதூலகம் தானியாம்லம் என்ற காடியின் பிரிவுகள், இலந்தை பேரீச்சை காட்டு இலந்தை தயிர் தெளிவு மோர் தெளிவு இவை மலம்கழிக்கப் பயன்படும் பொருட்களாகும்.

பசு எருமை ஆடு செம்மறியாடு இவற்றின் பால் சிறுநீர் இவைகளும் மலம் கழிக்கப் பயன்படும் பொருட்களாகும்.

மேற்கண்ட பொருள்களில் எந்தப் பொருள் கிடைக்கிறதோ அந்தப் பொருளைத் தகுந்தவாறு வர்த்தி சூர்ணம் ஆஸவம் அவலேஹம் ஸ்நேகம் கஷாயம் மாமிசரசம் கஞ்சி (யூஷம்) காம்பில்லகம், கஞ்சி (யவாகு) பால் குழக்கட்டை தின்பண்டங்கள் இவற்றில் ஏதாவது ஒன்றில் கலந்து மலம்கழிக்கக் கொடுக்கலாம்.

இவ்வாறு மலம் கழிக்கக் கொடுக்கும் பொருட்கள் சுருக்கமாக விளக்கப்பட்டன. விவரமாக கல்பஸ்தானத்தில் பிறகு விளக்கு வோம்.

136

## 49. கஷாய வஸ்திக்கான பொருட்கள்

நோயாளியின் நோய்க்குத் தகுந்தவாறு கஷாய வஸ்திக்கான பொருள்கள் பல உள்ளன. அவை எல்லாவற்றையும் விவரமாகக் குறிப்பிட்டால் கணக்கற்றவையாகிவிடும். ஆயுர்வேத நூலில் இவற்றைப்பற்றி மிக்க விரிவாகவோ சுருக்கமாகவோ கூறுவது சரியல்ல. அந்த எல்லாப் பொருள்களையும் அறிந்துகொள்ள வேண்டியிருப்பதால் அவற்றை அறிந்துகொள்ளச் சுவையைக் கொண்டு விளக்குவோம்.

சுவைகளுடைய சேர்க்கை பிரிவு இவற்றைத் தனித்தனியாக குறிப்பிட்டால் அவை கணக்கற்றவைகளாகின்றன. ஏனென்றால் அவற்றின் உட்பிரிவுகள் பலவகையாக இருப்பதே அதற்குக் காரணம். எனவே சுவைகளைப் பொதுவாக ஆறு வகையாகப் பிரித்து ஒவ்வொன்றின் பெயர் இலக்கணம் இவற்றை விளக்கு வதன் மூலம் ஆறுவகையான கஷாய வஸ்தி தொகுதிகளைப் பிரித்து விளக்குகின்றோம்.

137

## 50. இனிப்பு போன்ற ஆறு சுவைகளின் தொகுப்பு

கஷாய வஸ்தித் தொகுதிகள் ஆறு வகையெனக் கூறப்பட்டுள்ளன. பொருட்கள் ஒரே சுவையினால் ஆக்கப்படாமையாலும், பொருட்கள் பல சுவைகளைக் கொண்டிருப்பதாலும் அவற்றை மருத்துவர்கள் முறைப்படி அறிந்து கொள்ள முடியாது. பெரும்பாலும் இனிப்புச் சுவையுள்ளவை, விபாகத்தில் இனிப்புச் சுவையுள்ளவை, பிரபாவத்தில் இனிப்புச் சுவையுள்ளவை என இனிப்புச் சுவைஉள்ளவைகளே இனிப்புச் சுவையுள்ள பொருட்

களின் தொகுதியில் விளக்கப்படுகின்றன. அவ்வாறே மற்ற பொருட்களின் சுவைகளையும் அறிந்துகொள்ளவேண்டும். 138

## 51. இனிப்புச் சுவையுள்ள கஷாயவஸ்தி பொருட்களின் தொகுதி

ஜீவகம் ரிஷபகம் கீரைப்பாலை தண்ணீர்முட்டாங்கிழங்கு கீழாநெல்லி காகோலி க்ஷீரகாகோலி பயறு உளுந்து ஓரிலை மூவிலை வேங்கை கும்பளம்கிழங்கு மேதா காமேதா கற்கடகசிருங்கி சிருங்காடிகா எனும் கிழங்கு சீந்திற்கொடி தனியா சோம்பு சிராவணி மகாச்ராவணி ஸகதேவா சிகப்புஅல்லி சர்க்கரை வெளுத்தஇரளி சிற்றாமுட்டி பேராமுட்டி முதுக்கன் கிழங்கு நிலப்பனங்கிழங்கு காட்டுப் பயறு காட்டு உளுந்து ரிஷ்யகந்தா அமுக்கராக்கிழங்கு சாரடை வெள்ளைச்சாரடை முள்ளங்கத்திரி கண்டங்கத்திரி வெள்ளா மணக்கு சிகப்பாமணக்கு நெரிஞ்சில் இத்தி தண்ணீர்முட்டாங் கிழங்கு சதகுப்பை இலுப்பைப்பூ அதிமதுரம் பெருங்குரும்பை திராட்சை பேரீச்சை சிற்றீச்சை பூனைக்காலி தாமரைவிதை கொட்டிக்கிழங்கு காட்டுக்கோரக்கிழங்கு பாலமரம் தேத்தாங் கொட்டை குமிழம் வெண்நொச்சி கருநொச்சி.

பனை பேரீச்சம்பழத்தின்சதை கரும்பு குருவிக்கரும்பு நாணல் தர்ப்பை காசம் என்ற ஒருவகைப்புல் சம்பாஅரிசி ஞாழல் இத்கடகம், முஞ்சிப்புல் ராஜக்ஷவகம் பெரிய தண்ணீர் முட்டாங்கிழங்கு த்வாரதா காட்டுப்பருத்தி காட்டு வெள்ளரி, அபீருபத்ரி சிறுபுள்ளடி கொரட்டைமரம் காட்டுக்குருவி பால்முதுக்கங்கிழங்கு கபோலவல்லி சிற்றேலம் ஸோமலதா நன்னாரி ஒருவகை அதிமதுரம் போன்ற மற்ற இனிப்புச் சுவை யுள்ள தொகுப்பு மருந்துப் பொருட்களுள் வெட்ட வேண்டிய வற்றைத் துண்டு துண்டாக வெட்டி பிளக்க வேண்டியவற்றைச் சிறிது சிறிதாகப் பிளந்து, நீரில் நன்றாகக் கழுவிச் சுத்தம் செய்த பாத்திரத்தில் இடவேண்டும். அத்துடன் தண்ணீர் கலந்து தண்ணீரின் பாதியளவு பால் சேர்த்துப் பக்குவம் செய்ய வேண் டும். அடிக்கடி துடுப்பினால் துலாவித் தண்ணீரின் பெரும்பகுதி சுண்டியபின் மூலிகைகளின் ரசம் இறங்கிய பாலுள்ள பாத்திரத்தை அடுப்பிலிருந்து கீழே இறக்கிச் சூடு ஆறியபின் வடிகட்ட வேண் டும். அதில் நெய் எண்ணெய் மாம்சரசம் எலும்புக்குள் உள்ள சோறு உப்பு தேன்பாகு இவற்றைக் கலந்து வஸ்தி முறையை அறிந்த மருத்துவன் முறைப்படி வாதநோய் உள்ளவர்களுக்குப் பொருத்துக்கொள்ளக்கூடிய சூட்டில் வஸ்திசிகிச்சையில் பயன் படுத்த வேண்டும்.

பித்த நோய் உள்ளவர்களுக்கு மேற்கூறிய பக்குவம் செய்யப் பட்ட பாலை சூடு நன்கு குறைந்தபிறகு தேனும், நெய்யும் கலந்து முறைப்படி வஸ்தி சிகிச்சையில் பயன்படுத்த வேண்டும்.

இவ்விதம் இனிப்புச் சுவையுள்ள பொருட்களின் தொகுப்பு விளக்கப்பட்டது. 139

## 52. கஷாய வஸ்திக்கான புளிப்புச் சுவையுள்ள பொருட்கள்

மாமரம் புளிப்புமாமரம் எலுமிச்சை பெருங்கிளாக்காய் மரப்புளி புளிவஞ்சி காட்டு இலந்தை இலந்தை மாதுளை குறிஞ்சி புளியாரை நெல்லிக்காய் நந்தீதகம் சீதகம் புளி நாரத்தைச்செடி கடாரங்காய் காட்டுமாமரம் தனுகுமரம் இவற்றின் பழங்களும் இலைகளும்,

புளிப்பு மாமரம் அச்மந்தகம் புளியாரை இவற்றின் இலை கள் நான்கு வகையான புளிய மரத்தின் இலைகள் இரண்டுவகை இலந்தைகளின் பச்சை அல்லது உலர்ந்த இலைகள் காட்டுப்புளி நாட்டுப்புளி இவற்றின் பச்சையான அல்லது உலர்ந்த இலைகள் காடு நாடுஇவற்றில்உள்ள[1] ஆஸவத்திற்குத் தேவையானபொருட் கள் ஸுரா ஸௌவீரகம் துஷோதகம் மைரேயம் மேதகம் மதிரா மதுசுக்தம் ஸீது முதலிய காடி வகைகள் தயிர் தயிர்வண்டல் மோர் தானியங்களினால் செய்யப்பட்ட ஒருவகைக் காடி மற்ற புளிப்புச்சுவையுள்ள பொருட்கள் ஆகியவற்றுள் வெட்ட வேண்டியவற்றைச் சிறு துண்டுகளாக வெட்டிச் பிளக்க வேண்டியவற்றை மிகச்சிறிய துண்டுகளாகப் பிளந்து அவற்றை நீரில் இட்டுச் சுத்தம் செய்து பாத்திரத்தில் போட்டு தண்ணீர்விட்டுக் கொதிக்கவைக்க வேண்டும். முறைப்படிகொதித்த அந்தக் கஷாயத்தில் எண்ணெய் வசை எலும்புக்குள் உள்ள சோறு (மஜ்ஜை) உப்பு தேன்பாகு இவற்றைக் கலந்து பொருக் கும்படியான சூட்டில் வாதநோய் உள்ளவனுக்கு வஸ்தி கொடுக்கும் முறை அறிந்த மருத்துவன் முறைப்படி பயன்படுத்த வேண்டும். இத்துடன் புளிப்புப் பொருட்களின் தொகுதி முற்றும். 140

## 53. உப்புச்சுவையுள்ள கஷாய வஸ்திப் பொருட்கள்

இந்துப்பு வளையல் உப்பு கரியுப்பு அட்டுப்பு வெடியுப்பு உவர் உப்பு சவுட்டுப்பு பூநீறு என்ற உப்பு ஏலமௌலகம்

---

1. ஆஸவம் – மருந்துச் சரக்குகளைத் திரவ பதார்த்தங்களில் சில நாட்கள் ஊறவைத்து வீரியத்தைக் கூட்டித் தயார் செய்த திரவப் பொருள்.

என்ற உப்பு கடல் உப்பு ரோமகம் என்ற ஒரு வகை உப்பு பொட்டில் உப்பு உவர்மண் உப்பு பாடேயகம் என்ற உப்பு உழவு மண் உப்பு போன்ற மற்ற உப்புத் தொகுதியில் கூறப்பட்டுள்ள உப்புக்களைப் புளிப்புச்சுவையுள்ள மருந்துப்பொருட்களிலோ சுடுநீரிலோ கலந்து நெய் எண்ணெய் போன்ற பொருட்களைச் சேர்த்து வஸ்திமுறை அறிந்த மருத்துவர் வாத நோய் உள்ளவனுக்கு பொருக்கும் சூடாக முறைப்படி வஸ்தி சிகிச்சையில் பயன்படுத்த வேண்டும்.

இத்துடன் உப்புத்தொகுதி முற்றும். 141

## 54. கார்ப்புச் சுவையுள்ள கஷாய வஸ்திப் பொருட்கள்

அரிசிதிப்பிலி கண்டந்திப்பிலி ஆனைத்திப்பிலி செவியம் கொடிவேலி சுக்கு மிளகு ஓமம் இஞ்சி வாயுவிடங்கம் நேபாள தேசத்தில் உண்டான தனியா அக்ரோட் வாலுளுவை சிற்றேலம் கோஷ்டம் சேராங்கொட்டை பெருங்காயம் பிசின் தேவதாரு முள்ளங்கி கடுகு பூண்டு புங்கு முருங்கை முள் முருங்கை கற்பூரதுளசி வாசனைப்புல் துளசி காட்டுத்துளசி கருந்துளசி வெள்ளைத் துளசி காஞ்சான்தோரை கருத்த சிறு துளசி கரும்புல் பெரிய கடலாடி கற்பூரவல்லி க்ஷாரப்பொருட்கள் பசுவின் சிறுநீர் பசுவின் பித்தம் போன்ற மற்ற சார்ப்புச் சுவைத் தொகுதியில் கூறப்பட்ட மருந்துப் பொருட்களுள் வெட்ட வேண்டியவைகளைத் துண்டு துண்டாக வெட்டி பிளக்கக் கூடியதைச் சிறிது சிறிதாகப் பிளந்து பசுவின் சிறுநீருடன் கலந்து முறைப்படி தண்ணீர் கலந்து கஷாயமாகச் செய்து இறக்கிவைத்துக் கொண்டு அதில் தகுந்தவாறு தேன் எண்ணெய் உப்பு இவற்றைக் கலந்து பொருக்கும்படியான சூட்டில் வஸ்தி முறையை நன்கு அறிந்த மருத்துவன் கபநோயாளிக்கு முறைப்படி வஸ்தி சிகிச்சையில் பயன்படுத்த வேண்டும். இத்துடன் உவர்ப்புச் சுவைப் பொருட்கள் முற்றும். 142

## 55. கைப்புச் சுவையுள்ள கஷாய வஸ்திப் பொருட்கள்

சந்தனம் குருவேர் கொன்னை புங்கு வேம்பு நேபாளத் தேசத்தில் விளையும் தனியா வெட்பாலை மஞ்சள் மரமஞ்சள் கோரைக்கிழங்கு பெருங்குரும்பை பேய்ப்புடல் நிலவேம்பு கடுகுரோகிணி சிறுபாகல் அலரி கேபுகம் பெரும்பாகல் ஆடாதொடை வல்லாரை காட்டுப்பாகல் கத்தரிக்காய் தகரவிதை மணத்தக்காளி தும்மட்டி சுஞ்சேரகம் அதிவிடயம் புடல் கருந்

தும்பை வட்டத்திருப்பி சீந்தில்கொடி மூங்கில்குறுத்து நொச்சி விகங்கதம் மகிழமரம் வெண்கருங்காலி ஏழிலம் பாலை ஊமத்தை எருக்கு கார்போக அரிசி வசம்பு தகர விதை அகில் வெட்டிவேர் இவை போன்ற மற்ற கைப்புச்சுவை யுள்ள மருந்துப் பொருட்களுள் வெட்ட வேண்டியதைத் துண்டு துண்டாக வெட்டி பிளக்கவேண்டியதைப் பிளந்து நீரில் கழுவி நீரில் ஊறப்போட்டு முறைப்படி கஷாயமாக்கித் தகுந்த அளவு தேன் எண்ணெய் உப்பு இவற்றைக் கலந்து கஷாய வஸ்தி முறையை அறிந்த மருத்துவர் கபநோய் உள்ளவனுக்கு வெது வெதுப்பாக வஸ்திசிகிச்சையில் பயன்படுத்த வேண்டும். சூடு ஆறிய கஷாயத்தில் தேன் நெய் இவற்றைக் கலந்து பித்த நோய் உள்ளவனுக்கு கஷாய வஸ்திச்சிகிச்சையில் பயன் படுத்த வேண்டும். 143

## 56. துவர்ப்புச் சுவையுள்ள கஷாய வஸ்திப் பொருட்கள்

ஞாழல் பெரும்புல் மாங்கொட்டைப்பருப்பு புளியாரை பெருவாகை பாச்சோத்தி இலவமரம் தொட்டால்சுருங்கி காட்டாத்திப்பூ தாமரைப்பூவிதழ் நாவல் மாமரம் உதியன் ஆலமரம் எரிமாமரம் அத்திமரம் அரசமரம் சேராங் கொட்டை மலையீகத்தி வாகை சிம்சுபாமரம் வெண்கருங் காலி தும்பைச்செடி முரளஞ்செடி இலந்தை கருங்காலி ஏழிலம்பாலை பெருமருது தினிசமரம் மருதமரம் வேங்கை கருவேலம் முசுமுசுக்கைச்செடி கோரக்கிழங்கு கடம்பமரம் ஆனை வணங்கி கறுத்த இலவம் ஞாழல் நீர்கோரைக்கிழங்கு பெருங் கோரைக்கிழங்கு குமிழ் மூங்கில் பத்மகாஷ்டம் அசோகம் தேக்கு வெண்தேக்கு ஆச்சாமரம் பூவரசு கிலுகிலுப்பை மரம் காட்டுக்கருந்துளசி குக்குலு வன்னிமரம் தேவதாரு கருங்குருவைநெல் சிறுநாகப்பூ அஜகர்ணம் ஸ்பூர்ஜகம் தான்றிக்காய் பாதிரி தாமரைவிதை தாமரைத்தண்டு பனை ஈச்சை ஆமணக்கு ஆளிவிதை போன்ற மற்ற துவர்ப்புச் சுவை யுள்ள பொருட்களுள் வெட்ட வேண்டியவற்றை துண்டு துண் டாக வெட்டிப் பிளக்க வேண்டியவற்றைச் சிறிது சிறிதாகப் பிளந்து நீரில் சுத்தம் செய்து தண்ணீரிலிட்டு முறைப்படி கஷாயம் தயார் செய்து தகுந்தவாறு தேன் எண்ணெய் உப்பு இவற்றைக் கலந்து கஷாய வஸ்தியை நன்கு அறிந்த மருத்துவன் கபம் உள்ள பிணியாளிக்கு வெதுவெதுப்பாக முறைப்படி வஸ்தி சிகிச்சை யில் பயன்படுத்த வேண்டும்.

சூடு தணிந்த அதே கஷாயத்தில் தேனும் நெய்யும் கலந்து பித்தநோயாளிக்கு வஸ்திசிகிச்சையில் பயன்படுத்த வேண் டும். 144

கஷாய வஸ்தியினால் நீக்கக்கூடிய எல்லா நோய்களுக்கும் பயன்படக்கூடிய சுவையைக் குறித்து ஆறு வகையான மருந்துப் பொருட்களின் தொகுப்புகள் கூறப்பட்டன. கஷாய வஸ்தியைப் பயன்படுத்தும் முறையை அறிந்த மருத்துவன் கஷாய வஸ்தியால் நன்மை பயக்கக்கூடியவர்களுக்கு மேற்கண்ட எல்லா மருந்துப் பொருட்களையோ பாதிப் பொருட்களையோ அல்லது கிடைக்கக்கூடிய பொருட்களையோ கொண்டு கஷாயம் தயாரித்துச் செய்யும் கஷாய வஸ்தி எல்லா நோய்களையும் போக்குகிறது. 145–146

கஷாய வஸ்திக்குக் கூறப்பட்ட மருந்துப் பொருட்களின் தொகுதியில் அடங்காத பொருட்களைப் பயன்படுத்துவதால் தோஷங்கள் சீற்றமடைகின்றன. இவ்வாறு சுவைகளைக் குறித்து ஆறு வகையான கஷாய வஸ்திக்கான மருந்துப் பொருட்களின் தொகுதிகள் விளக்கப்பட்டுள்ளன. 147–148

மேற்கூறிய சுவைப் பொருட்களின் தொகுதியில் உள்ள சில பொருட்கள் நோயைப் போக்கத் தகுதியற்றவை என்று மருத்துவருக்குப் புலப்பட்டால் அந்தப் பொருட்களை நீக்கி விடலாம். இவற்றில் கூறப்படாத சில பொருட்கள் நோயைப் போக்கத் தேவை என்று தோன்றினால் அவற்றைச் சேர்த்துக் கொள்ளலாம். மருத்துவரின் அறிவுக்குத் தக்கவாறு ஒரு தொகுதிப் பொருட்களை மற்ற தொகுதிப் பொருட்களோடும் சேர்க்கலாம் அல்லது ஒரு தொகுதியில் உள்ள ஒரு பொருளையாவது அல்லது பல பொருட்களையாவது மற்ற தொகுதிப் பொருட்களுடன் சேர்க்கலாம். பிச்சை எடுப்பவனுக்கு உழைப்புக்கு ஏற்றவாறு பிச்சை கிடைப்பது போலவும், ஒரு விதையினால் குடியானவன் அதிக விளைச்சலை அடைவது போலவும், பொருட்களைச்சேர்க்க வேண்டிய முறைகளை நன்கு அறிந்த மருத்துவனுக்கு ஆயுர்வேத நூலில் கூறப்பட்ட ஸூத்ரங்கள் சிறியவையாயினும், அறிவை வளர்க்கக்கூடியவையே.

குறைந்த அறிவுள்ள மருத்துவன் ஆயுர்வேத நூலில் கூறப்பட்ட முறைகளையே பின்பற்றுவது நன்மையளிக்கவல்லது. மிக விரிவாகவும் மிகச் சுருக்கமாகவும் அல்லாதவாறு இங்கு கூறப்பட்ட பொருட்களைப் பயன்படுத்துவதாலேயே அறிவாளியான மருத்துவன் சிகிச்சையில் வெற்றியடைகிறான். 149

## 57. எண்ணெய் வஸ்திக்குத் தேவையான பொருட்கள்

எண்ணெய் வஸ்தியில் பயன்படுத்தப்படும் மருந்துப் பொருட்களைப்பற்றி விளக்குவோம். எண்ணெயே அனுவாஸன வஸ்தி

எனப்படும். அந்த எண்ணெய் தாவரம் ஜங்கமம் என இருவகைப் படும். தாவரங்களிலிருந்து கிடைக்கும் பொருட்களில் எண் ணெய் உள்ளது. எள் எண்ணெய் (எள்ளின் + நெய்) அற்றவை கடுகு முதலியவை என இருவகைப்படும். இரண்டிலும் எண் ணெய் உள்ள பொருளே முக்கியமானதால் அவ்விரண்டையும் எண்ணெய்ப் பொருளாகவே கருதி விளக்குவோம்.

ஜங்கமம் (பிராணிகளிடமிருந்து கிடைப்பது) வஸை, மஜ்ஜை நெய் போன்றவை. வாதம் கபம் இவற்றால் தோன்றும் நோய் களுக்கு எண்ணெய் வஸ்தி கொடுக்கும்பொழுது நெய்யைக்காட்டி லும் மஜ்ஜை மஜ்ஜையைக் காட்டிலும் வஸை வஸையைக் காட்டிலும் எண்ணெய் சிறந்தது. பித்த நோய்களில் வஸ்தி கொடுக்கும் பொழுது எண்ணெயைக் காட்டிலும் வஸை வஸையைக் காட்டிலும் மஜ்ஜை மஜ்ஜையைக் காட்டிலும் நெய் சிறந்தது. பக்குவமுறையால் எல்லா நோய்களுக்கும் எண்ணெய் வஸை மஜ்ஜை நெய் என்ற எல்லாப் பொருட்களையும் பயன்படுத்தலாம். 150

## 58. *சிரோவிரேசனத்திற்குப் பயன்படும் மருந்துப்பொருட்கள்

நாயுருவி அரிசிதிப்பிலி மிளகு வாயுவிடங்கம் முருங்கை வாகை தனியா வில்வப்பழம் கருஞ்சீரகம் ஓமம் கண்டங் கத்திரி பெருஞ்சீரகம் ஏலரிசி அரேணுகம் இவற்றின் விதை கள் கருத்தகாட்டுத்துளசி துளசி சிறுதுளசி சிறுகீரை புதினா வெண்துளசி கற்பூரதுளசி பெரும்பயறு மஞ்சள் சுக்கு முள் ளங்கி பூண்டு தழுதாழை கடுகு இவற்றின் இலைகள், எருக்கு அலரி கோஷ்டம் காட்டுவெள்ளரி வசம்பு நாயுருவி மலைய மொக்கி வாலுளுவை பேய்தும்மட்டி சதுரக்கள்ளி காட்டு சதகுப்பை நாகதுண்டி கடுக்காய் அதிவிடயம் இவற்றின் வேர்கள்,

மஞ்சள் சுக்கு முள்ளங்கி பூண்டு இவற்றின் கிழங்குகள், பாச்சோத்தி மருக்காரை ஏழிலம்பாலை வேம்பு எருக்கு இவற் றின் மலர்கள்,

தேவதாரு அகில் ஸரளமரம் ஈந்தில்மரம் கறுத்தஇலவம் வேங்கை பெருங்காயமரம் இவற்றின் பிசின் வாலுளுவைமரம் லவங்கப்பட்டை முருங்கை முள்ளங்கத்திரி கண்டங்கத்திரி இவற்றின் பட்டைகள் என இங்கு கூறிய இவை யாவும் சிரோவி

---

* சிரோவிரேசனம் — மருந்துப் பொருள்கள் மூலம் தலையில் உள்ள தோஷங்களை வெளியேற்றும் சிகிச்சை.

ரேசனப் பொருட்களாகக் கருதப்படும். இவ்வாறு விதை இலை வேர் கிழங்கு பூ பிசின் பட்டை என சிரோவிரேசனப் பொருட்கள் ஏழு வகைப்படும்.

இவற்றைத்தவிர உப்பு கார்ப்பு கைப்பு துவர்ப்பு இச் சுவையுள்ள பொருட்களும், உடல் உறுப்புகளுக்கு ஒத்துக் கொள்ளக் கூடியவைகளும், இங்கு கூறப்படாத மற்ற ஏற்றப் பொருட்களும் சிரோவிரேசனத்திற்குப் பயன்படும் என்பது ஆயுர் வேத நூல்களின் கருத்து. 151

**முடிவுரை**

ஆசிரியர் மாணாக்கன் இவர்களின் இலக்கணம், பரிசோதனை காரணம் படித்தல் கற்பித்தல் இவற்றின் முறை, உரையாடும் முறை, எதிராளியை வெல்லக்கூடிய நாற்பத்து நான்கு வகையான சந்கேதச்சொற்கள், காரணம் கரணம் போன்ற பத்து வகையான சொற்கள், பத்து வகையான சோதனைமுறைகள், வாந்தி எடுக்கச் செய்தல், முதலானவற்றில் ஒன்பதுவகையான சோதனைகள் இவை யாவும் ரோக பிஷக்ஜிதீயம் எனும் இந்த விமானஸ்தானத்தின் எட்டாவது அத்தியாயத்தில் விளக்கப் பட்டன. 152–154

பல வகையான பொருட்கள் அடங்கியதும், பலவகைப் பொருட்களைக் கொண்ட வாக்கியங்களின் அமைப்புள்ளதும், அழகான சொற்கள் கொண்டதும், எதிராளிகளை வெல்வதற்கான பேச்சு முறைகள் அடங்கியதுமான முறைகள் இவ்வத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன.

எதிராளியை வெல்வதற்கான மேற்கூறப்பட்ட விஷயங்களை நன்கு அறிந்துகொண்ட மருத்துவர் எதிராளியைத் தோல்வியடையச் செய்வதில் ஒருபொழுதும் பின்வாங்கமாட்டார். தனது கொள்கையை மறுக்க ஒருபொழுதும் இடமளிக்கவும் மாட்டார். 155–156

இவ்வாறு விமானஸ்தானத்தில் இந்த எட்டாம் அத்தியாயத்தில் வாத பித்த கபம் என்ற மூவகை தோஷங்கள் அவற்றின் செயல்கள் அவற்றின் அளவுகள் யாவும் தனித்தனியாகப் பிரித்து முழுமையாக விளக்கப்பட்டுள்ளன. 157

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை விமானஸ்தானத்தில் ரோகபிஷக்ஜிதீய விமானம் எனும் எட்டாம் அத்தியாயம் முற்றும்

விமான ஸ்தானம் முற்றும்.

# சாரீரஸ்தானம்

## முதல் அத்தியாயம்

## *கதிதாபுருஷீயம்

இனி 'கதிதாபுருஷீயம்' என்னும் சாரீரஸ்தானத்தை ஆத்ரேயபகவான் கூறிய வகையில் விளக்குவோம். (1–2)

### 1. [1]அக்னிவேசரின் இருபத்து மூன்று கேள்விகள்

(1) ஆன்மா எனப்படும் புருஷன் [2]தாதுக்களின் பிரிவுகளை யொட்டி எத்தனை பிரிவுகளைக் கொண்டிருக்கிறான் ?

(2) புருஷன் எக்காரணத்தினால் பிறவிச் சூழலுக்கு முக்கியக் காரணமாகின்றான் ?

(3) புருஷனைப் படைக்கும் காரணம் எது ?

(4) புருஷன் அறிவுபடைத்தவனா ? அறிவு படைக்காதவனா?

(5) அவன் நிலையானவனா ? நிலையற்றவனா ?

(6) புருஷனுக்குப் பிரகிருதி (மூலப்பொருள்) எது ?

(7) விகாரங்கள் (மாறுபாடுகள்) எவை ?

(8) புருஷனின் இலக்கணங்கள் எவை ?

(9) ஆன்மா — செயலற்றது, சுதந்திரமானது, தன் விருப்பப் படி செயல்படுவது, அசையும் பொருட்கள் அசையாப் பொருட் கள் இவை அனைத்திலும் பரவியுள்ளது, எங்கும் பரந்திருக்கும் தன்மையது, உடல் இன்னதென அறியும் 'க்ஷேத்திரக்ஞன்' என்றும் சாட்சியாக உள்ளதெனவும் ஆன்ம உண்மையை அறிந் தவர் கூறுவர். இவ்வாறு வினையே (செயலே) இல்லாத ஆன்மா வுக்கு வினைத்தொடர்பு எவ்வாறு ஏற்படும் ?

---

*கதிதாபுருஷீயம் — புருஷன் எத்தனை வகையானவன் ? என்ற கேள்வியுடன் தொடங்குவதால் இந்த அத்தி யாயம் இப்பெயர் பெறுகிறது.

1. அக்நிவேசர் — ஆத்ரேயரின் சீடர்.

2. தாதுக்கள் — உடலைத் தோற்றுவித்து உயிருள்ளவரை அதைத்தாங்கியிருக்கும் மூலப்பொருள்கள் (விண், காற்று, தீ, நீர், நிலம், ஆன்மா.)

(10) ஆன்மா சுதந்திரமானதாகில், தனக்கொவ்வாத பிறவிகளை ஏன் எடுக்கவேண்டும் ?

(11) தன் விருப்பப்படி செயல்படுவதாகில், இன்பமளிக்காதவைகளால் ஏன் பலவந்தமாக அவற்றின்பால் ஈர்க்கப்படவேண்டும் ?

(12) இந்த ஆன்மா எங்கும் பரவியிருப்பதாகில், துன்ப வேதனைகள் அனைத்தையும் ஏன் அறிந்துகொள்வதில்லை ?

(13) தடையின்றி எங்கும் பரவும் இயல்புள்ள (விபுவான) தாகில் மலைகள், சுவர்கள் முதலியவற்றின் மறைவிலுள்ள விஷயங்களை ஏன் நோக்க முடியவில்லை ?

(14) ஆன்மா (க்ஷேத்ரக்ஞன்), உடல் (க்ஷேத்திரம்) இவ்விரண்டில் எது முந்தியது? என்பதில் ஐயம் தோன்றுகிறது. அறிதற்குரியது உடல் ; அறிபவன் ஆன்மா. அறிதற்குரிய உடலானது அறிபவனுக்கு முந்தியே இல்லாவிடில், அவனை 'க்ஷேத்ரக்ஞன்' எனப் பெயரிட்டழைப்பது பொருந்தாது. எனவே ஆன்மாவுக்கு முந்தியே உடல் இருந்ததெனக் கூற வேண்டும். அவ்வாறு கூறினால் ஆன்மா நிலையானதாக முடியாது. அவ்வாறாயின் புருஷனை 'க்ஷேத்திரக்ஞன்' என்பது எவ்வாறு பொருந்தும் ?

(15) 'சாட்சியானவன்' என்பதற்கு வேறொருவர் செயல் புரிவதைக் காண்பவன் என்று பொருள். வேறொரு கர்த்தா (செய்பவன்) இல்லாதபொழுது, புருஷன் எதற்குச்சாட்சியாவான்?

(16) எவ்வித மாறுபாட்டுணர்ச்சியும் இல்லாத ஆன்மாவுக்கு (மகன் பிறத்தல் முதலானவைகளை அறிவதால்) மகிழ்ச்சி முதலிய உணர்ச்சி மாறுபாடு எங்ஙனம் தோன்றும் ?

(17) மருத்துவன் நோயாளிக்குக் கடந்துபோன நோய்க்காக மருத்துவம் செய்வானா ?

(18) அல்லது வரப்போகும் நோய்க்குச் செய்வானா ?

(19) அல்லது அப்பொழுதே தோன்றும் நோய்க்கு மருத்துவம் செய்வானா ?

வரப்போகும் நோயும் கடந்தகால நோயும் தற்காலத்தில் நிகழாமையால் மருத்துவம் செய்ய இயலாது. தற்காலத்தில் நிகழ்ந்த நோய் கணத்தில் அழியும் இயல்புடையது. ஆகையால் சிகிச்சை பயனற்றுப்போய்விடும். எனவே இம்மூன்றில் எதற்கு மருத்துவன் சிகிச்சை புரிய வேண்டும் ? என்பது கேள்வி.

(20) அத்தகைய வேதனைகளுக்குக் காரணம் யாது ?

(21) அவை தோன்றுமிடம் எது ?

(22) வேதனைகள் அனைத்தும் எப்பொழுது எந்நிலையில் நீங்கி விடும் ?

(23) எல்லாமறிந்தவனும் எல்லாவற்றையும் துறந்தவனும் பற்றற்றவனும் ஒரே விதமானவனும் அமைதியானவனும் — [1]பூதாத்மாவாகவும் உள்ள புருஷனை எந்த அறிகுறிகளைக் கொண்டு அறியலாம் ?

இவ்வாறு புருஷனைப்பற்றி அக்நிவேசர் இருபத்து மூன்று வகையான வினாக்களைக் கேட்க, அமைதியான உள்ளம்கொண்ட புனர்வசு என்னும் ஆத்ரேயர் மேற்கூறிய வினாக்களுக்கேற்ற விடைகளை வரிசையாக இனி கூறப்போகும் முறையில் விவரிக்கத் தொடங்கினார். (3–15)

## 2. பலவித தாதுக்களைப் பற்றி பலவித புருஷர்கள் எனப்படுகின்றனர் (முதல் வினாவுக்கு விடை)

விண், காற்று, தீ, நீர், நிலம் என்னும் ஐந்து மகா பூதங்களுடன் சேதநா தாது சேர ஆறுதாதுக்களின் கூட்டு புருஷன் எனப்படுகிறான். சேதனா என்பதனால் மனத்துடன் சேர்ந்த ஆன்மா கொள்ளப்படுகிறது. 16

## 3. சாங்கியம் என்னும் மதத்தின்படி புருஷன்

அறுவகைத் தாதுக்களின் உருவமான புருஷன் என்பவன் மூலப் பிரகிருதியின் தாதுக்களின் பிரிவையொட்டி இருபத்து நான்கு பிரிவுகளைத் தன்னுள் கொண்டிருப்பான். அதாவது தோல், கண், செவி, நாக்கு, மூக்கு என்னும் ஐந்து அறிவுப்புலன்கள் (ஞானேந்திரியங்கள்) வாக்கு, கை, பாதம், மலத்துவாரம், சிறுநீர்த்துவாரம் என்னும் ஐந்து செயற் புலன்கள் (கர்மேந்திரியங்கள்) ஓசை, தொடுதல், நிறம், சுவை, மணம் எனும் புலன்களின் ஐவகைப் பொருட்கள் எட்டுத் தாதுக்கள் மனம் என இந்த இருபத்து நான்கு தத்துவங்களின் கூட்டே 'புருஷன்' எனப்படுவான். (17)

---

1. பூதாத்மா — ஐவகை மகாபூதங்களை உடலாகக்கொண்ட ஆன்மா.

[2]மூலப்பிரகிருதி என்னும் இயற்கை எட்டு தாதுக்களைக் கொண்டது.

## 4. மனத்தின் இலக்கணமும் குணமும்

அறியாமையும் அறிவதும் மனத்தின் இலக்கணமாகும். ஆன்மா, ஓசை முதலான புலப் பொருட்களுடன் நெருங்கியுள்ளபோது புலப்பொருள்களுடன் மனம் தொடர்பு கொள்ளாவிடில் அறிவு தோன்றுவதில்லை. மனம் புலப்பொருட்களுடன் தொடர்பு கொண்டால் அப்பொருட்களைப் பற்றிய அறிவு ஆன்மாவில் தோன்றும். அணுத்தன்மை ஒருமை என இவையிரண்டும் மனத்தின் குணங்களாகும். 18–19

## 5. மனத்தினால் அறியப்படும் பொருள்கள்

*(1)* சிந்த்யம் (இது செய்யத்தக்கதா, செய்யத்தகாததா என்று ஆலோசித்தல்) *(2)* விசார்யம் (அதற்கான சாதகபாதகங்களைச் சீர்தூக்கிப் பார்த்தல்) *(3)* ஊஹ்யம் (இது இப்படி நடக்கும் என யூகித்தல்) *(4)* த்யேயம் (மனதுக்குள்ளே நினைத்துப் பார்த்தல்) *(5)* ஸங்கல்ப்யம் (குணமுள்ளதாகவோ, குற்றமுள்ளதாகவோ முடிவு செய்தற்குரியது) எனும் இந்த ஐவகைப்பொருட்களும் அவ்வாறே மற்ற புலன்களின் உதவியின்றியே உணரப்படும் இன்பதுன்பங்கள் என இவை யாவும் மனத்தினால் அறியப்படுபவையாகும். 20

## 6. மனத்துடன் தொடர்புள்ள செயல்கள்

*(1)* கண் செவி முதலிய புலன்களைத் தன் வசத்தில் வைத்துக் கொண்டும் அவற்றைத் தூண்டுவதாகவும் இருத்தல், *(2)* விருப்பமில்லாதவைகளின் மீது செல்ல விடாமல் தன்னைத் தானே அடக்கியாளுதல் *(3)* ''இது தவிர்க்கத்தக்கது'', ''இது தவிர்க்கதகாதது'' எனும் விகற்பமின்றி அனைத்துப் பொருட்களைப் பற்றியும் ஆலோசித்தலாகிய யூகம், *(4)* மேற்கூறிய வகையில் விகற்பத்தைக் கற்பித்தலென்னும் 'விசாரம்' என இவை நான்கும் மனத்தைச் சார்ந்த செயல்கள். மனத்தின் இத்தகைய செயல்கள் நடந்த பிறகே அறிவு செயல்படத் தொடங்கும். 21

---

2. மூலப்பிரகிருதியின்
எட்டுதாதுக்கள் — நீர் நிலம் தீ காற்று விண் (என்னும் ஐந்து சூக்ஷ்மபூதங்கள்) மனம், புத்தி, அகங்காரம் என்னும் இவை எட்டு தாதுக்கள்.

மனத்துடன் கூடிய கண் முதலிய புலன்களாலேதான் அப் புலன்களின் பொருட்கள் அறியப்படுகின்றன. பிறகு அப்பொருட் களில் ஏற்க வேண்டிய குணங்களையோ தவிர்க்க வேண்டிய குற்றங்களையோ மனமே கற்பனை செய்யும். மனம் கற்பித்தவை களைப் பற்றிய உறுதிப்பாடே 'அறிவு' எனப்படும். அந்த அறிவு முடிவு செய்த வகையிலேயே கூறுவதற்கும் செய்வதற்கும் மனிதன் முற்படுகிறான். 22–23

## 7. புலன்களைப்பற்றிய விளக்கம் (அறிவுப் புலன்கள்)

காது, தோல், கண், நாக்கு, மூக்கு இந்த ஐவகைப் புலன்கள் ஒவ்வொன்றும் விண், காற்று, நீர், தீ, நிலம் என்னும் ஐந்து மகாபூதங்களில் ஒவ்வொரு பூதத்தின் பகுதியையும் அதிகமாகக் கொண்டவை. இப்புலன்களனைத்தும் ஐந்து மகா பூதங்களின் பகுதிகளையும் கொண்டு தோன்றியபோதிலும் காது முதலிய புலன்கள் விண் முதலிய பூதப் பகுதியை அதிகமாகக் கொண்டிருப் பவை. இவைகளில் எதில் அறிவு ஈடுபடுகிறதோ அது அந்த பூதப் பகுதியை அதிகமாகக் கொண்டதென அறிதல் வேண்டும். 24

## 8. செயற்பாட்டு புலன்களும் *(கர்மேந்திரியம்)* அவற்றின் செயல் களும்

கைகள், கால்கள், மலத்துவாரம், பால்குறிகள், வாக்கு இவை ஐந்தும் செயற்பாட்டுப் புலன்கள் ஆகும். இவற்றில் கால்கள் நடக்கும் செயலுக்கும் ஆசன வாயும் பால்குறியும் முறையே மலம் சிறுநீர் கழித்தலுக்கும் கைகள் பொருள்களை எடுப்பதற் கும் தாங்குவதற்கும் வாக்கு என்னும் புலன் பேசுவதற்கும் பயன் படுபவை. உண்மையான வாக்கு இம்மை மறுமை இரண்டையும் விளங்கச் செய்வதால் அது சோதி உருவம் கொண்டது. பொய் யான சொல் ஈருலகத்திற்கும் தீமை செய்வதாதல்பற்றி இரு ளுருவம் கொண்டதாகும். 25–26

## 9. ஐந்து மகாபூதங்களும், அவற்றின் இயற்கைக் குணங்களும்

விண், காற்று, தேயு, நீர், நிலம் என்பவை ஐந்தும் மகா பூதங்கள். ஒலி, தொடுதலுணர்ச்சி, நிறம், சுவை, மணம் இவ்வைந் தும் முறையே அவற்றின் இயற்கைக் குணங்கள், இவற்றில் விண் ணிற்கு ஒலியென்னும் ஒரே குணம்தான் உண்டு. மற்ற காற்று முதலானவைகளுக்கு மேற்கண்ட ஒவ்வொரு குணம் அதிகமாகும். ஆயினும் குறிப்பிட்ட பூதத்திற்கெனக் கூறிய குணம் அதற்கு முக்கியக் குணமாகக் கருதப்படும். 27–28

## 10. மகாபூதங்களின் தனிப்பட்ட இலக்கணம்

மகாபூதங்களில் நிலம், நீர், வாயு, தேயு இவை நான்கிற்கும் முறையே கடினத்தன்மை, திரவத்தன்மை, அசைவு. குரு இவை நான்கும் தனிப்பட்ட இலக்கணங்கள். விண்ணிற்குத் தடையில்லாமை எங்கும் பரவியுள்ளமையும் இலக்கணம். இந்த இலக்கணங்கள் எல்லாம் தொட்டுணர்ச்சிப் புலனால் அறியவேண்டியவை. கடினத்தன்மையில்லாமையும் அப்புலனாலேயே அறியப்படுகிறது. (29)

## 11. உடலில் உள்ள நுண்ணிய பூதங்களின் இலக்கணம்

மனிதனின் உடலிலுள்ள விண் முதலான நுண்ணிய பூதங்களுக்குக் குறிப்பிட்ட பூதங்களுக்கென அமைந்துள்ள ஒலி முதலான குணங்களே இலக்கணங்களாகும்.

ஆகாயம் முதலான ஐந்து மகாபூதங்களின் ஒலி முதலான குணங்களை ஐவகைப் புலன்களுக்குப் பொருள்களெனவும், விஷயங்களெனவும் அறிய வேண்டும். (30–31)

## 12. அறிவின் இயக்கங்களையொட்டிய அறிவு வகைகள்

குறிப்பிட்டப் புலனைப் பற்றிக்கொண்டு வரும் அறிவு, அந்தப் புலனால் தோன்றியது என அழைக்கப்படும். எடுத்துக் காட்டாக செவி வழியாகப் பரவும் அறிவு 'செவியறிவு' எனப்படும். மற்றும் மனமென்னும் புலன் மூலமாக வரும் அறிவு 'மானசீக அறிவு' எனப்படும்.

அதேபோல் இன்பதுன்பங்களென்னும் காரியங்களுக்கும் ஒலி முதலான புலப்பொருள்களுக்கும் பல உட்பிரிவுகள் இருப்பதை ஒட்டி அறிவுகளும் பலவகைகளாகப் பிரிகின்றன.

மற்றும் ஆன்மா, மனம், புலப்பொருட்கள் இவற்றின் சேர்க்கையால் தோன்றும் அறிவு ஒரே வகையாக இருக்கும். உதாரணமாக—கட்டைவிரல், நடுவிரல் இவற்றின் சேர்க்கையால் உண்டாகும் ஒலி (சிட்டிகையொலி)யும், வீணையின் தந்தி, நகம் இவற்றின் சேர்க்கையால் தோன்றும் ஒலியும் ஒரே விதமாக இருக்கலாம். அதேபோல் ஆன்மா புலன் மனம் பொருள் இவற்றின் சேர்க்கையால் தோன்றும் அறிவும், அமைப்பின் மாறுதலால் பலவகையாக இருப்பினும் ஒரு வகையைச் சேர்ந்ததாகையால் ஒரே உருவாக இருக்கும் என்பது கருத்து. (32-34)

## 13. உருவற்ற நிலை, இருபத்து நான்கு தத்துவங்களோடு சேர்ந்து உருவான புருஷன்

அறிவு, புலன்கள், மனம், புலப்பொருட்கள் என இவ்வனைத்தும் ஒன்று சேர்ந்து உருவாகிய உருவற்ற நிலையே 'பரம்' எனப்படும்.

மனம், புலன்கள் பத்து, புலன்களின் பொருட்கள், எண் வகைத் தாதுக்களுடன் கூடிய மூல பிரக்ருதி என்னும் இந்த இருபத்து நான்கு தத்துவங்களின் கூட்டுருவமே புருஷன் எனப் பேசப்படுகிறது. 35

## 14. இருபத்து நான்கு தத்துவங்களால் உருவான புருஷனின் பிறவிக்கும் முக்திக்கும் காரணம்.

புருஷனுக்கு ரஜஸ் தமஸ் என்னும் குணங்களுடன் தொடர்பு உண்டாகும்பொழுது முன்கூறிய இருபத்து நான்கு தத்துவங்கள் தொடர்பு உண்டாகிறது. அது முடிவில்லாதது.

ரஜஸ் தமஸ் என்னும் இரண்டு குணங்களுடன் கூடியபுருஷனுக்கு மேற்கண்ட இருபத்து நான்கு தத்துவங்களுடன் தொடர்பு ஏற்படுகிறது. அத்தொடர்பே முடிவில்லாத சம்சாரமென்னும் பிறவியாகின்றது. அவையிரண்டும் நீங்கிய பிறகு சத்துவம் என்னும் குணம் வளர்ந்து பிறவிச் சூழலிலிருந்து விடுபட்டு வீடுபேறு பெறுகிறான் புருஷன். 36

## 15. இருபத்து நான்கு தத்துவ உருவாகிய புருஷனின் வினைப்பயன் முதலியவை.

இருபத்து நான்கு தத்துவங்களின் கூட்டாகிய புருஷனில் முன்வினை வினைப்பயன் அறிவு மோக மயக்கம் இன்பம் துன்பம் வாழ்க்கை இறப்பு இறுமாப்பு இவையனைத்தும் இருக்கும். இந்நிலையறிபவன் ஊழிக்காலத்தையும் உலகத் தோற்றத்தையும் அறிந்தவனாவான்.

உழலும் சக்கரம் போல் மாறி மாறி வருகின்ற உடல்களின் தொடர்ச்சியையும் அத்தொடர்ச்சியால் உண்டாகும் துன்பத்தை நீக்குவதற்காகச் செய்யும் ஆன்மிகச் சிகிச்சையையும் அவன் அறிவான். 37–38

## 16. ஆன்மா (புருஷன்) பிறவிச் சுழலுக்கும் காரணமாதல் (இரண்டாவது வினாவுக்கு விடை)

ஆன்மா என்னும் புருஷன் இல்லாவிடில், அறிவுத் திறன் மோகமயக்கம், உண்மை, பொய், வேதங்கள், நன்மை தீமை

யாகிய செயல்கள் இவையனைத்தும் இரா. செய்பவன் (கர்த்தா) அறிபவன் என்ற பாகுபாடும் இருக்காது. 39

அதேபோல் அவ்வான்மாவுக்குச் சார்பிடமான உடல்இன்பம், துன்பம் செல்கை வருகை வாக்கு சாத்திரம் சாத்திர அறிவு பிறத்தல் இறத்தல் பிறவிச் சூழல் மோட்சம் என ஒன்றும் தேவைப்படாது. இவ்விதக் காரணங்களால் இவையனைத்திற்கும் காரணமானவன் புருஷனே என அறிஞர்கள் பகர்ந்துள்ளனர். 40–41

புருஷன் இல்லையேல் அறிவுத் திறன் முதலியவைகள் காரணமில்லாதவைகளாகிவிடும். அறிவைக் காரணமாகக் கொண்ட அறிவுத் திறன் முதலியவைகளும் தோன்றா. அவற்றால் பயனும் இருக்காது. 42

## 17. ஆன்மாவின் இன்றியமையாமை

''களிமண், சக்கரம் சுற்றும் தடி, சக்கரம் என்னும் காரணப் பொருட்களாலேயே மண்பாண்டம் உருவாகி விடுகின்றது. அதற்குக் குயவன் தேவையில்லை. அதேபோல் வீடுகட்டும் தொழிலாளி இல்லாமலே மண், புல், மரம் முதலிய சாதனப் பொருட்களாலேயே வீடு கட்டி முடிந்து விடும்,'' என்று கூறும் சாகசக்காரனே, உலகை ஆக்குபவனான ஆன்மாவின் சம்பந்தமில்லாமல் சாதனப் பொருள்கள் மட்டுமே ஒன்றுகூடி உடலைப்படைக்கின்றன என்று அறிவில்லாமற் கூறுவான். அக்கூற்று யுக்திக்கும் சாத்திரத்திற்கும் ஒவ்வாதது. 43–44

எந்தப் பிரமாணங்களால் பொருட்களனைத்தும் கண்கூடாக அறியப்படுகின்றனவோ, அதே பிரமாணங்களாலேயேயும் காரணமான 'ஆன்மா' எனும் புருஷனும் அறியப்படுகிறான். 45

## 18. 'ஆன்மா இல்லை' என்போர் மதமும், அதன் குற்றமும்

சிலர் (பௌத்தர்கள்) ''ஆன்மா என்பது ஒன்றில்லை, உடல் மட்டுமே உளது. கணநேரம் இருக்கக்கூடியதும் தொடர்ச்சியாக தோன்றுவதுமான அறிவுச் சந்தத்தியின் கூட்டே உடல். அவ்வாறு சாஸ்திரங்களினின்றும் தொடர்ந்து தோன்றுபவை ஒவ்வொன்றும் வெவ்வேறானவையே. முன்பு அனுபவித்தவைகளே இவை எனத் தோன்றக் காரணம் அவை ஒரே வகுப்பைச் சேர்ந்தவைகளாக இருப்பதுதான். இவ்வாறு கணநேரத்தில் அழியக்கூடிய நுண்பொருட்களின் கூட்டே பிராணி (உயிரினம்) எனக் கூறப்படுகிறது. அது செய்பவன் (கர்த்தா) அனுபவிப்பவன்

(போக்தா) புருஷன் (ஆன்மா) என்றெல்லாம் கூறப்படமாட்டாது'' என்பர். 46–47

இவ்வாறு கூறி, ஆன்மாவைத் தனிப்பட்டதாக ஒப்புக்கொள்ளாவிடில் வேறொரு பொருளால் செய்யப்பட்ட செயலால் ஏற்படும் பயனை அச் செயலைச் செய்தவனைக் காட்டிலும் வேறுபட்ட அப்பொருளுக்குச் சமமான மற்றொரு பொருளே அனுபவிக்கும் என்று ஏற்படும். அது பொருந்தாது. ''நான் செய்ததின் பயனை நான் அனுபவிப்பேன்'' என்ற ஆசையாலன்றோ ஒவ்வொருவனும் செயல் புரிகின்றான். 48

## 19. ஆன்மாவை ஒப்புக்கொள்வதால் ஏற்படும் பயன்

ஒரு செயலைச் செய்பவனுக்கு (கர்த்தாவுக்கு) வெவ்வேறு சாதனங்கள் இருப்பது அனைவரும் அறிந்ததே. செய்பவனோ ஒருவன்தான். அவன் பற்பல சாதனங்களைக் கொண்டு பற்பல செயல்களைச் செய்து பலவற்றிற்குக் காரணமாகின்றான். 49

உடல் முதலானவைகளனைத்தும் அழியும் இயல்புடையவைகளாதல் பற்றி அவை கணநேரம் இருக்கக் கூடியவை. அழிந்தவையோ மறுபடியும் தோன்றா. எனவே அத்தகைய அழியும் உடலைச் சாதனமாகக் கொண்டு ஒருவன் செய்த செயலின் பயன் வேறொருவரை அடைய முடியாது. இது உண்மை அறிந்த அறிஞர்களின் முடிவு. இது உலகானுபவம்.

அதேபோல் முற்பிறவியில் ஒருவன் செய்த வினையின் பயனை அடுத்த பிறவியில் அனுபவிப்பவன் அவனாகவே இருத்தல் வேண்டும். அவ்வாறு தான் செய்த செயல் அழிந்தாலும் தான்மாத்திரம் தொடர்ந்து அழிவின்றி என்றென்றும் நிலையாக உள்ளவனே புருஷன் அல்லது ஆன்மா எனப்படுவான். 50–51

அகங்காரம் வினைப்பயன் வினை மறுபிறவி அனுபவித்தவைகளை நினைத்தறியும் சக்தி (ஸ்மிருதி) இவையனைத்தும் உயிரினங்களுக்குக் காரணமான 'ஆன்மா' என்பதொன்று இருந்தால்தான் ஏற்படும். 52

## 20. புருஷனின் தோற்றக் காரணம் (3-வது வினாவின் விடை)

என்றென்றும் இருக்கும் இறைவனுக்குத் தோற்றமென்பதே இல்லாமையால் தோன்றக் காரணமும் கிடையாது. தாதுக்களின் கூட்டுருவான புருஷன் மட்டும் மோகமயக்கத்திலுண்டானவிருப்பு வெறுப்புக்களின் பயனாக ஐவகைப் பூதங்களின் தொடர்பு கொண்டு தோற்றமளிப்பான். 53

## 21. புருஷன் அறிவற்றவனா ? (4-வது வினாவின் விடை)

ஆன்மா எனப்படும் புருஷன் எப்பொழுதும் அறிவுடன் கூடியவன். ஆன்மாவுக்கு மனம் முதலிய புலன்களுடன் தொடர்பு ஏற்பட்டபொழுது நிறம் சுவை முதலியவைகளை அந்த அறிவு அறிய முற்படுகிறது.

அப்புலன்கள் அழுக்குற்றபோதும் அப்புலன்களுடன் ஆன்மாவுக்குத் தொடர்பில்லாத பொழுதும் அறிவென்பது தோன்றாது.

உதாரணமாக - அழுக்குற்ற கண்ணாடியிலும் கலங்கிய தண்ணீரிலும் முகம் காணப்படாது. ஒரு வேளை காணப்பட்டாலும் உண்மையான தெளிவான உருவம் தெரியாது. அதே போன்று மனம் புலன்களைவிட்டொதுங்கியபோது உண்மையறிவு ஏற்படாமல் அறிவுக்கலக்கமே உண்டாகும். 54—55

மனம் புத்தி அறிவுப் புலன்கள் செயற்புலன்கள் என்பவை ஆன்மாவிற்கு சாதனங்கள். செயல்கள் அறிவு தெளிவு(புத்தி) என்ற மூன்றும் இச்சாதனங்களுடன் ஆன்மாவுக்குத் தொடர்பைத் தோற்றுவிக்கின்றன.

இத்தகைய சாதனங்களற்ற பரமாத்மா எதையும் செய்ய முற்படுவதுமில்லை ; எப்பலனையும் அனுபவிப்பதுமில்லை. சாதனங்களுடன் தொடர்பிருந்தால்தான் எதுவும் ஏற்படும். தொடர்பின்றி எதுவும் ஏற்படாது என்பது முறை. 56—57

## 22. துணைக்காரணங்களின் தேவை

துணைக்காரணங்களின்றி தனியாகத் தானொன்று மட்டுமே எதுவும் ஒரு செயலைப் புரிவதில்லை. துணைக்காரணமின்றி எக்காரியமும் நிறைவேறுவதுமில்லை. அதாவது முக்கியகாரணமான ஆன்மா துணைக்காரணங்களான மனம் முதலிய சாதனங்களின்றி செயற்படுவதில்லை. அவையின்றி காரியமும் தோன்றுவதில்லை. ஆனால் 'அபாவம்' என்று சொல்லப்படும் இல்லாமைப் பொருளுக்கு மட்டுமே காரணம் தேவைப்படுகிறதென அறிய வேண்டும். 58

## 23. ஆன்மா நிலையானதா ? நிலையற்றதா ? (5 - வது வினாவுக்கு விடை

தோற்றமென்பதே இல்லாத ஆன்மா என்னும் புருஷன் நிலையானவன். இதற்கு எதிரிடையானதும் அறுவகைத் தாதுக்களின் உருவமானதுமான புருஷன் எனக்கூறப்படுவது காரணங்களால் தோன்றுவதாகையால் அது நிலையற்றது. உருவமுள்ளதான ஸத்

என்பது காரணத்தால் தோன்றுவதில்லை. எனவே அது நிலையானது. காரணங்களால் தோன்றிய 'பானை' முதலியவை 'அஸத்' உருவமானவை. எனவே நிலையற்றவை எனச் சாத்திரங்கள் கூறுகின்றன. 59

## 24. நிலையான தன்மையின் இலக்கணம்

தோன்றும் தன்மையுள்ள பாவப்பொருளால் அறியப்படாததே நிலையான தன்மையாகும். அந்த நிலையான பொருள் உருவற்றதும் அறியமுடியாததும் ஆகும்.

உருவப்பொருள் இதற்கு நேர்மாறானது. அதாவது தோன்றும் இயல்புள்ள மனம் புத்தி புலன்கள் முதலியவற்றால் அறியத் தக்கது உருவப் பொருள் எனப்படும்.

நிலையான பொருளானது உருவற்றது. ஆன்மா க்ஷேத்ரக்ஞன், நிலையானவன், எங்கும் பரவியவன், வேறு உருவமாக மாறாதவன் என்னும் தனக்குரிய இலக்கணங்களால் விரிவாகக் கூறப்படுகிறான்.

உருவப்பொருள், உருவில்லாப்பொருள் இவைகளைப் பற்றி வேறொரு விதமாகவும் கூறலாம்.

கண் முதலிய புலன்களால் அறியப்படுவது உருவப்பொருள். புலன்களால் அறியப்படாமல் அனுமானம் என்னும் யூகத்தினால் அறியப்படுவது உருவில்லாப் பொருள். 60—62

## 25. இயற்கை ([1]ப்ரக்ருதி) என்பது என்ன? மாறுபாடுகள் ([2]விகாரங்கள்) எவை? (6-வது 7-வது வினாக்களுக்கு விடை)

விண் வாயு தேயு நீர் நிலம் என்னும் ஐவகைப் பூதங்கள் புத்தி அவ்யக்தம் என்னும் மூலப்பிரகிருதி அகங்காரம் இவை எட்டும் சேர்ந்தது பூதப்பிரகிருதி எனப்பெயர் பெறுகிறது. (உலகிற்கு மூலக்காரணம் இதுதான்.''( இது முதல் வினாவிற்கு விடையாகும்) ஞானேந்திரியங்கள் ஐந்து, அவற்றிற்கு இலக்காகும் ஐந்து பொருள்கள் ஐந்து செயற்பாட்டுப் புலன்கள் மனம் என இவை பதினாறும் 'விகாரங்கள்' எனப்படுகின்றன. (இது இரண்டாவது வினாவிற்கு விடை) 63—64

மேற்கண்ட பிரகிருதி [2]விகிருதிகளைவிட மூன்றாவதான அவ்யக்தம் (ஆன்மா) இது ஒன்றைத் தவிர்த்து மற்றவை

---

1 ப்ரகிருதி — இயற்கை
2 விகருதி — மாற்றம்

அனைத்தின் கூட்டே க்ஷேத்திரம் (உடல்) என்றும், அவ்யக்தம் (ஆன்மா) க்ஷேத்திரஜ்ஞன் என்றும் முனிவர்கள் முடிவு செய் துள்ளனர். 65

படைப்பின் தொடக்கத்தில் அழிவில்லாத மூலப்பிரகிருதியி லிருந்து புத்தி உண்டாகிறது. அந்தப் புத்தியைக் கொண்டு 'நான்' என்று தன்னைப் புருஷன் புரிந்து கொள்கிறான். இவ்வாறு அறிதலே அகங்காரமெனப்படுகிறது.

அகங்காரத்தினால் விண் முதலான ஐந்து நுண்ணிய மகா பூதங்களும் முறையே உண்டாகின்றன. அந்த நுண்ணிய ஐவகை மகாபூதங்களால் முறையே பேருருக் கொண்ட மகாபூதங்கள் முதலானவை தோன்றி முழு உருவில் தோன்றியவை அவை யெனக் கூறப்படுகின்றன.

பிரளயமென்னும் ஊழிக்காலத்தில் புருஷன் தனக்கு விருப்ப மான புத்தி முதலான பொருட்களால் விடப்படுகிறான். 66-67

பிறகு படைப்பின் தொடக்கத்தில் (உருவற்ற) புத்தி முதலா னவை, தெளிவில்லாத நிலையிலிருந்து தெளிவான நிலையை அடைகின்றன.

மறுபடியும் மகாப்பிரளயகாலத்தில் அவை தெளிவான நிலை யிலிருந்து தெளிவற்ற நிலையை அடைகின்றன.

ரஜஸ், தமஸ் என்னும் குணங்களின் சேர்க்கையையொட்டி புருஷன் மறைவதையும் புலனாவதையும் பெற்று, ஓடும் வண்டிச் சக்கரம்போல் இவ்வாறு சுற்றி வருகிறான். ரஜஸ் தமோ குணங் களின் மீது மிக்கப்பற்றுள்ளவர்களையும் 'இது நான், என்னுடை யது இது' என்று அகங்காரம் கொள்பவர்களையும் அவை விடுவ தில்லை. மேற்கண்ட குணங்களும் அகங்காரமும் இல்லாதவர்கள் தோற்றமும் மறைவுமின்றி முக்தியடைவார்கள். 68–69

## 26. ஆன்மா என்னும் புருஷனின் இலக்கணம் (8-வது வினாவுக்கு விடை)

உள்ளே இழுக்கும் காற்றான பிராணவாயு, வெளியில் விடும் காற்றான அபானவாயு, கண்திறத்தல், கண்மூடுதல், பிழைத்திருத் தல், மனத்தால் வேறு இடம் செல்லுதல், மனம்தான் தொடர்பு கொண்டுள்ள கண்போன்ற ஒரு புலனை விட்டுச் செவி போன்ற மற்றொரு புலனுடன் தொடர்பு கொள்ளல், மனம் ஒன்றைத் தூண்டுதல், ஒரு பொருளைத் தாங்குதல், வேறு இடம் சென்ற தாகக் கனவு காணுதல், இறப்பைப் பற்றி அறிதல், வலது கண் ணால் கண்டதையே இடது கண்ணால் காணுதல், விருப்பு,

வெறுப்பு, இன்பம், துன்பம், இயக்கம். நிலை நிறுத்துதல், அறிவு, ஞாபகசக்தி, அகங்காரம், இவையனைத்தும் பரமாத்மா வினால் அறியப்படுகின்றன. அறியவரும் அந்த மூச்சுக் காற்று முதலானவையனைத்தும் பரமாத்மா இருக்கிறான் என்பதற்கு இலக்கணங்களாகும். 70–72

இவ்விலக்கணங்கள் அனைத்தும் பிழைத்திருக்கும் ஜீவன் என்னும் மனிதனுக்கு (ஐவகை பூதங்களைக் காட்டிலும் வேறு பட்ட ஜீவாத்மா ஐவகைப் பூதங்களாலான உடலில் இருக்கும் பொழுது) அந்த ஜீவனாலேயே காணப்படுகின்றன.

உயிரில்லாத உடலில் ஆன்மாவுக்குரிய இலக்கணங்கள் காணப் படுவனவல்ல. ஜீவன் உடலை விட்டுச் சென்றபின் ஆளில்லாத இல்லம் போல் அவ்வுடல் உணர்வற்றுக் காலியாகிக் காணப்படும்.

ஆறாவது தாதுவான ஜீவன் இல்லாதபோது [1]பஞ்சத் துவத்தை (அதாவது மரணத்தை) அடைந்தது என்று கூறப்படு வது பொருத்தம் தான். 73–74

## 27. செயலற்ற ஆன்மாவுக்குச் செயல் இருப்பது எப்படி (9-வது வினாவிற்கு விடை)

மனம் உணர்ச்சியற்றது, செயலுடன் கூடியது. அத்தகைய மனத்தைச் செயலில் தூண்டுகிறது ஆன்மா. மனம் ஆன்மாவின் வசத்திலிருந்து செயல்படும் பொழுது மனத்திலுள்ள அச் செயல் கள் எல்லாம் ஆன்மாவைச் சேர்ந்தவையென உபசாரமாகக் (ஏற்றிவைத்து) கூறப்படுகின்றன. 75

சேதனை (உணர்வு) உள்ளவனாதல் பற்றிச் செய்பவனும் (கர்த்தா) ஆன்மாவே எனக் கூறப்படுகிறது. மனம் செயலுடன் கூடி உணர்வற்றிருப்பதால் (கர்த்தா) (செயல்படுபவன்) எனப் படுவதில்லை. 76

## 28. சுதந்திரமான ஆன்மா தனக்கொவ்வாத பிறவி எடுப்பதற்குக் காரணம்( 10-வது வினாவின் விடை)

ஜீவன் தான் செய்த நல்வினை தீவினைகளுக்கேற்ற பிறவி களில் (உடல்களில்) உயிரைத் தானே புகுத்துகிறான். வினைகளுக் கேற்பத் தானே அச்செயலையும் புரிகின்றான். மற்றொருவர் அதைச் செய்ய முன்வருவதில்லை. தீவினைகளைப் புரிவதில் சுதந்திரமுள்ளவன் அவற்றிற்கான தீய பிறவிகளையும் தனக்குப் பிடிக்காவிடினும் தானே ஏற்கின்றான். தான் செய்த வினைப் பயனைத் தான்தான் அனுபவிக்க வேண்டும். 77

---

1. பஞ்சத்வம் — மரணம்.

**29. தன்னடக்கம் கொண்டவன் தீயபலனை ஏன் அனுபவிக்க வேண்டும்? (11-வது வினாவின் விடை)**

தன்னடக்கமுள்ள ஆன்மா தான் அனுபவிக்க வேண்டிய பயன்களுக்கு ஏற்ற நன்மை தீமைகளைச் செய்கிறான். அவற்றின் பயன்களையும் அனுபவிக்கின்றான். அவனே மற்றொரு சமயம் தன்னடக்கத்தினால் மனதைச் சமாதானப்படுத்தி தீயச் செயல்களிலிருந்து அதைத் திருப்புகிறான். அதே தன்னடக்கத்தால் (மோட்சத்தை விரும்பி) மற்ற செயல்களனைத்தையுமே துறந்து விடுவான். 78

**30. எல்லா உடல்களிலும் பரவிய ஆன்மா எல்லாத் துன்பங்களையும் அறியாத காரணம் யாது? (12-வது வினாவின் விடை)**

இவ்வுடலிலுள்ள ஆன்மாவே பிறவுடல்களிலும் பரவியுள்ளது. அப்படியிருக்கத் தன்னுடைய துன்பங்களைப் போல் பிறர் துன்பங்களையும் அறியத்தானே வேண்டும். இது நடப்பதில்லை. ஏனெனில் இந்த ஆன்மா தன் வினையின் காரணமாகத் தனக்கு அமைந்துள்ள புலன்களுடன் மாத்திரம் தொடர்பு கொண்டுள்ளான். பிற உடல்களில் தன் வினைகளுக்கேற்ற புலன்களோ அவற்றின் தொடர்போ ஏற்படுவதில்லை. இதுதான் பிறர் துன்பத்தை அறியாததற்குக் காரணம். 79

மற்றும் தன் உடலிலேயே உள்ள தலைமயிர் நகம் போன்றவைகளில் ஸ்பரிசனேந்திரியம் (தொட்டுணர்வுப்புலன்) இல்லாமையால் அங்கு ஆன்மா பரவுவதில்லை. அதனால் வேதனை அறிவும் உண்டாவதில்லை. 80

**31. எங்கும் பரவிய ஆன்மா மறைவிலுள்ள பொருள்களை அறியாத காரணம் (13 - வது வினாவின் விடை)**

ஆன்மா சிறிதளவும் இடைவெளியின்றி எங்கும் பரவியிருப்பதால் அது [1]விபு என்று கூறப்படுகிறது. மலை சுவர் முதலியவற்றால் மறைந்துள்ள பொருள்களையும் கண்கூடாகக் கண்டறிவதற்கு ஒருமுகப்பட்ட மனநிலையின் துணை வேண்டும். இது யோகிகளுக்கு மட்டுமே கிட்டும்.

ஒரு உடலை எடுப்பதற்கான வினையைத் தொடர்ந்து வந்த மனம், அவ்வுடலில் மட்டுமே இருந்து எங்கும் பரவியிருக்கும் தன்மையை இழப்பதால் மறைவிலுள்ள பொருள்களைப் பார்க்கும் திறமை அதற்கில்லை. 81

---

(1) விபு – எங்கும் பரவியிருத்தல்.

### 32. உடல் முந்தியதா ? ஆன்மா முந்தியதா ? (14-வது வினாவிற்கு விடை)

ஆன்மா பிறப்பற்றது. அதேபோல் மற்ற இருபத்து மூன்று தத்துவ உருவான க்ஷேத்திரமென்னும் உடலின் தொடர்ச்சியும் ஆதியில்லாதது. இரண்டும் ஆதியற்றதால் எது முந்தியது, எது பிந்தியது என முடிவு செய்ய இயலாது. 82

### 33. ஆன்மா சாட்சியாகும் நிலை (15-வது வினாவின் விடை)

அறிவுள்ளவனே சாட்சியாகக் கருதப்படுவான், அறிவில்லாதவனல்லன். அறிவே உருவான ஆன்மாவே சாட்சியாகும். ஐவகை பூதங்களால் ஆன பொருள்களனைத்தும் ஆன்மாவையே சாட்சியாகக் கொண்டுள்ளன. 83

### 34. எவ்விதமாறுபாடும் இல்லாத ஆன்மாவுக்கு மகிழ்ச்சி, வருத்தம் தோன்றக் காரணம் (16 - வது வினாவின் விடை)

ஐந்து பூதங்களின் தொடர்பின்றி தனித்திருக்கும் ஆன்மா (பரமாத்மா) ஒன்றிற்கு மட்டுமே இன்ப-துன்ப உணர்ச்சிகள் ஒரு பொழுதும் உண்டாகா.

ஐவகைப் பூதங்களுக்குச் சார்பிடமான ஆன்மா (ஜீவன்) ஒன்று மாத்திரம் அந்தப் பூதங்களின் தொடர்பில்லாதபோது தனக்குரிய இலக்கணங்களால் அறியப்படுவதில்லை. 84

அறிவு முதலான இருபத்து நான்கு தத்துவங்களின் கூட்டுருவமான ஆன்மா முன்கூறிய இலக்கணங்களால் அறியப்படும். அந்தக் கூட்டுருவப் புருஷனிடமே இன்ப துன்ப உணர்ச்சிகளையெல்லாம் காணமுடியும். மாறுபாடுகளெல்லாம் அத்தகைய கூட்டுருவமான புருஷனைச் சார்ந்தவையே, பரமாத்மாவைச் சேர்ந்தவையல்ல. (ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களின் மாறுதல்களால் ஏற்படும் இன்ப துன்பங்களான இலக்கணங்கள் புலன்களுடன் கூடிய புருஷனுடன் இணைந்து இயங்கும் ஆன்மாவின் அறிவினாலேயே உணரப்படுவதால் ஆன்மாவே இந்த இன்ப துன்பங்களை அடைகிறான் என்று கூறப்படுகிறது.) 85

### 35. கடந்து போன நோய்க்கு மருத்துவன் செய்யும் சிகிச்சை (17-வது வினாவின் விடை)

''முன்பு வந்த தலைவலியே மறுபடியும் வந்துள்ளது'', ''அந்த காய்ச்சலே மறுபடியும் பரவியுள்ளது'', ''முன்பிருந்த இருமலே மறுபடியும் வலிவாகியுள்ளது'', ''அதே வாந்தி மறுபடியும் வந்துள்ளது'' என ஒரு நோய் திரும்பவும் வந்தபோது உலகத்தார் பேசுவதுண்டு. (கடந்து போனது மறுபடியும் வருவது)

உலகில் காணப்படுகிறது. கடந்து போன இந்த நோய்க்காகச் செய்யப்படும் மருத்துவம் கடந்த காலத்திய நோய்க்கான சிகிச்சையேயாகும்.

முன்பு பயிர் வைத்தபோது கெட்ட தண்ணீரைப் பாய்ச்சியதால் பயிர்கள் அழிந்து போனதால் மறுபடியும் பயிர் பண்ணும் போது அந்தக் கெட்ட நீர் பாயாமல் இருக்க உயரமான வரப்பு (மேடு) கட்டி அப்பயிரைக் காப்பது போல், கடந்த காலத்தில் வந்த நோய் மறுபடியும் வராமல் முன்னெச்சரிக்கையாகச் சிகிச்சை செய்வதே கடந்தகால நோய்க்குச் சரியான சிகிச்சையாகும். 86–90

### 36. வரப்போகும் நோய்க்குச் செய்யப்படும் சிகிச்சை (18-வது வினாவிற்கான விடை)

இனி வரப்போகும் நோய்களின் முற்குறிகளைக் கவனித்து அதற்கு முன்கூட்டியே செய்யப்படும் சிகிச்சை வரப்போகும் நோயை வராமல் தடுத்துவிடும். இச்சிகிச்சை வருங்காலத்திய நோய்க்காகச் செய்யப்படும் சிகிச்சையாகும். 91

### 37. நிகழ்காலத்திய நோய்க்குச் செய்யப்படும் சிகிச்சை (19-வது வினாவிற்கு விடை)

தொடர்ந்து வரும் துன்பங்கள், இன்பம் ஏற்படுவதற்கான சிகிச்சையால் நீங்குகிறது. மேலும் அதனால் உடல் நலமாகிய இன்பமும் வரத்தொடங்குகிறது. சமநிலையிலுள்ள ரசம் முதலான தாதுக்கள் தாமாகவே ஏற்றத் தாழ்வான நிலையை அடைவதில்லை. அதேபோல் ஏற்றத்தாழ்வான நிலையிலுள்ள தாதுக்களும் சம நிலையை அடைவதில்லை. உடலிலுள்ள தாதுக்கள் ஏற்றத்தாழ்வு பெறுவதற்கான காரணமிருக்கும் போது ஏற்றத்தாழ்வையும், சமநிலைக்கான காரணமுள்ளபோது சமநிலையையும் பெறுகின்றன. 92–93

இந்த யுக்தியை மனத்தில் கொண்டு மருத்துவன் முக்காலத்திய நோய்களுக்கும் சிகிச்சை புரிந்து அவற்றை நீக்குகிறான் என்பது முடிவு. 94

### 38. பிறப்பு எனும் துன்பம் நிலையாக நீங்க வழி

துன்பமனைத்தும் அறவே ஒழிவதற்கான சிகிச்சை ஆசைகளைத் துறப்பது ஒன்றுதான். ஆசை துன்பத்தையும் துன்பத்திற்குச் சார்பிடமான உடலையும் தோற்றுவிக்கும். ஆசையை அறவே ஒழித்தல், எல்லாத் துன்பங்களையும் அவற்றின் முக்கிய சார்பான உடலையும் வராமல் தடுத்து நிறுத்தும். 95

சிலந்திப் பூச்சி தனக்குத் துன்பத்தை விளைவிக்கும் நூல்களைத் தன் உடலிலிருந்து தானே வெளிக்கிளப்பி அதைக் கொண்டு கூடு கட்டும். அதேபோல் அறிவில்லாதவன் எல்லாப் பொருட்களின் மீதும் ஆசை வைத்து அதனால் என்றென்றும் உலகத் துன்பங்களால் பற்றப்படுவான். 96

பொருள்களை தீயைப் போல் கருதி அவற்றிலிருந்து விலகியிருக்கும் அறிவாளி, எதையும் செய்யாமல் ஒரு வேளை செய்யத் தொடங்கினால் அவற்றின் மீது ஆசை கொள்ளாமல் இருந்தால் துன்பங்களையும் அவற்றின் இருப்பிடமான உடலையும் அவன் பெறாமல் மோட்சத்தையே பெறுவான். 97

## 39. துன்பங்களுக்குக் காரணம் (20 - வது வினாவிற்கு விடை)

(அ) அறிவின் தடுமாற்றம்

(ஆ) ஒரு பொருளை முடிவு செய்யும் அறிவின் செயல் (தகுதி) தளர்தல்,

(இ) ஞாபகசக்தி தளர்ந்து போதல்.

(ஈ) காலத்தின் தொடர்பு

(உ) நல்வினைத் தீவினைகளின் தொடர்பு

(ஊ) ஒவ்வாத புலன்கள் புலப்பொருள்கள் இவற்றின் சேர்க்கை ஆகிய இவை துன்பங்களுக்குக் காரணங்களாகும். 98

## 40. அறிவு, அறிவின் செயல், நினைவுகூர்தல் இவற்றின் தடுமாற்றம்

(அ) உள்ளதை உள்ளபடி அறிவதே அறிவின் இயல்பு. நிலையானதை நிலையற்றதென்றும் நிலையற்றதை நிலையானதென்றும் நன்மை விளைவிப்பதைத் தீமை விளைவிப்பதென்றும் தீமை விளைவிப்பதை நன்மை விளைவிப்பதென்றும் அறிதல் அறிவுத் தடுமாற்றமெனப்படும். 99

(ஆ) பொருள்களின் மீது பரவக்கூடிய மனத்தைத் திருப்பி நிறுத்தலே 'திருதி' (அறிவின் செயல்) எனப்படும். இந்தத் திருதி தடுமாற்றமடைந்தால் நன்மை பயக்காத பொருள்களின் மீது மனத்தைத் திருப்பவே முடியாது. இந்நிலையே அறிவுச் செயலின் 'த்ருதி' தடுமாற்றமெனப்படும். 100

(இ) நினைவு கூரத்தகுந்த விஷயத்தை நினைவு கூர்வதே நினைவு கூர்தல் (ஸ்மிருதி) என்பதின் இயல்பு. ரஜோ குணம் தமோகுணம் இவ்விரண்டினாலும் கவரப்பட்ட மனிதனுக்கு

உண்மை அறிவிலிருந்து நினைவு கூர்தலின் ஒதுங்கலே நினைவு கூர்தலின் தடுமாற்றம் எனப்படும். 101

## 41. *பிரக்ஞாபராதம் என்பதன் இலக்கணம்.

அறிவு அறிவின் செயல் நினைவுகூர்தல் இம்மூன்றும் தடு மாறியவன் செய்யும் தீயச்செயலே பிரஜ்ஞாபராதமெனப்படும். இதனால் வாத பித்த கபமென்னும் உடலின் தோஷங்களும் ரஜஸ் தமஸ் என்னும் உள்ளத்தின் தோஷங்களும் சீற்றமடை கின்றன.

தாமாக வெளிவரக்கூடிய (சிறுநீர், மலம், காற்று முதலான) வைகள் வெளிவராதபோது அவைகளைப் பலாத்காரமாக வெளிப் படுத்துதல், அவை வெளியாகும்போது தடுத்து நிறுத்துதல், வலிவு வுள்ளவனுடன் சண்டை செய்யும் சாகசச்செயல், அளவுமீறிப் பெண்களைப் புணருதல், நோய்களுக்கு உரிய நேரத்தில் தக்க சிகிச்சை புரியாமை, ஐவகைக் கருமங்களை முறைப்படி செய் யாமை, பணிவையும் ஆசாரத்தையும் துறத்தல், ஆசான்கள், குருமார்கள் முதலிய பூசித்தற்குரியவர்களைப் புறக்கணித்தல், தனக்கு நன்மை பயக்காதவை எனத் தெரிந்திருந்தும் அவைகளைச் செய்தல், மனக்கலக்கம் தோற்றுவிக்கும் செயல்களை அதிகமாகச் செய்தல், எதிரிடையான காலதேசங்களில் சுற்றி வருதல், மிக பாபச் செயல்களைப் புரிபவரிடம் நட்பு கொள்ளுதல், 'இத்திரி யோபச்ரமணீயம்' என்னும் அத்தியாயத்தில் கூறிய நற்செயல் களைப் புரியாமல் சும்மாயிருத்தல், பொறாமை செருக்கு அச்சம் கோபம் பேராசை மோகம் மதம் அறிவு மயக்கம் என்னும் மனமாறாட்டங்கள் கொண்டிருத்தல், பொறாமை முதலியவற்றுடன் கூடிய பாவச்செயல்களைச் செய்தல் என ரஜஸ் தமஸ் என்பவைகளால் தோன்றும் இவைகளையே நல்லோர்கள் 'ப்ரஜ்ஞாபராதம்' என்பர். இதுவே நோய்க்குக் காரணமாகும். 102–108

## 42. பிரஜ்ஞாபராதத்தின் முடிவான இலக்கணம்

தன் அறிவைக் கொண்டு தகாத விஷயங்களை அறிதல், அவ்வறிவினால் தகாதவைகளைச் செய்தல் இவைகளை 'பிரஜ்ஞா பராதம்' என அறியவேண்டும். அது மனம் ஒன்றிற்கு மட்டுமே விளங்கும். 109

## 43. உரிய காலத்தில் தோன்றும் நோய்கள்

வாதம் பித்தம் கபம் என்னும் தோஷங்களின் வளர்ச்சி, சீற்றம் தாழ்ச்சி என்ற நிலை, பருவங்களின் மாறுபாட்டை

---

*பிரக்ஞாபராதம் — அறிவுத்தடுமாற்றத்தால் செய்யும் செயல்.

யொட்டி ஏற்படும் என்ற செய்தி (கியப்த:சிரஸீய:) எனும் சூத்திரஸ்த்தானம் 17-வது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. அதுவே நோய்களுக்குரிய காலத்தின் தொடர்பாகும்.

தவறு அதிகம் குறைச்சல் என்னும் அறிகுறிகளுடன் கூடி மழைப் பருவத்துடன் முடிவதான மற்றப் பருவங்கள் உணவு சீரணித்தகாலம் புசித்த காலம் சீரணிக்கத் தொடங்கும் காலம் வாலிபம் இளமை முதுமை எனும் மூன்று பருவங்கள் முற்பகல் நடுப்பகல் பிற்பகலென்னும் மூவகைப் பகற்காலங்கள் முன் னிரவு நள்ளிரவு பின்னிரவு என்னும் மூன்று இரவு நேரங்கள் ஆகிய இக்காலப் பகுதிகளனைத்தும் பித்தம் முதலான தோஷங் களின் வளர்ச்சி சீற்றம் தணிதல் என்பவைகளுக்கு இன்றியமை யாத காரணங்களாகின்றன.

இத்தகைய காலங்களிலேயே நோய்கள் தவறாமல் தோன்றுவ தால் இவை 'காலஜங்கள்' (காலத்தால் தோன்றுபவை) எனப்படு கின்றன. 110–112

## 44. முறைக்காய்ச்சல்களும் காலத்தால் தோன்றுபவை

ஒவ்வொரு நாளும் சிறிது நேரம் குறிப்பிட்ட நேரத்தில் பரவும் 'அந்யேத்யுஷ்கம்' என்னும் காய்ச்சல், 'த்வ்யஹக்ராஹி' என்னும் காய்ச்சல் அதாவது இரண்டு நாட்கள் தொடர்ந்து பரவும் காய்ச்ச லுக்குப் பிறகு அதற்கு அடுத்த நாளும், இருநாட் காய்ச்சல் பரவு வதற்கு முந்தைய தினமும் இல்லாத 'சதுர்த்தக விபர்யயம்' என்னும் பெயர் கொண்ட விஷமக் காய்ச்சல்.

ஒரு நாள் விட்டு மறுநாள் பரவும் 'த்ருதீயக'மெனும் காய்ச் சல்.

காய்ச்சல் விட்ட நாளுக்கு நான்காவது நாள் மறுபடியும் பரவும் 'சதுர்த்தகம்' எனும் காய்ச்சல் ஆகியவைகள் அவ்வவற்றிக் கான குறிப்பிட்ட காலத்தில் பரவும் இயல்புடையவை. குறிப் பிட்ட காலத்தில்தான் அவற்றிற்கு வலிவும் அதிகமாக இருக்கும். எனவே இவ்வகைக் காய்ச்சல்களும் 'காலஜங்க'ளெனப்படு கின்றன. 113

## 45. காலத்தால் தோன்றும் நோய்களுக்குச் சிகிச்சை முறை

இவைகளும் இவைகளைப் போன்ற நோய்களும் தோன்று வதற்கு முன்பாகவே இவற்றின் வலிவையும் இவை தோன்றக் கூடிய காலங்களையும் அறிந்து இவைகள் வராமல் முன்கூட்டி தடுப்பதற்கான சிகிச்சைகளைச் செய்ய வேண்டும். 114

**46. இயற்கையான முதுமை முதலிய நோய்கள் காலத்தால் தோன்றியவைகளில் அடங்கும்.**

முதுமை இறப்பு முதலியவைகளைக் காரணமாகக் கொண்டு தோன்றும் இயற்கையான நோய்கள் காலத்தின் மாறுபாட்டினாலேயே தோன்றுகின்றன. அவை இயற்கையாகவே பிராணிகளுக்குத் தோன்றுபவையாதலால் 'இயற்கையானவை' எனப்படுகின்றன. இயற்கையாகத் தோன்றுபவைகட்கு சாதாரணச் சிகிச்சை செய்ய முடியாது. 115

**47. முன்வினைப்பயனான நோய்களுக்கும் காலம் காரணம்**

'தைவம்' என்னும் சொல்லால் குறிக்கப்படுகின்ற முற்பிறவியைச் சேர்ந்த வினையும், குறிப்பிட்ட காலத்தினால்தான் நோய்களுக்குக் காரணமாகின்றது. 116

**48. வினைப்பயனான நோய்களை அனுபவித்தே தீரவேண்டும்**

முற்பிறவியில் செய்த வினை சிறிதானாலும் பெரிதானாலும் அதன் பயனை அனுபவித்தே தீரவேண்டும். எனவே அத்தகைய வினையால் தோன்றும் நோய்களுக்குச் சிகிச்சை செய்யவே முடியாது. வினைப்பயனாக அந்த நோய்களை அனுபவித்த பிறகு வினைகள் குறைந்து தாமாகவே அந்நோய்கள் நீங்கும். 117

**49. பலன்களுக்குப் பொருள்களுடன் குறைந்த, தவறான, அதிகமான தொடர்புகள்.**

**(அ) செவிப்புலன்**

கொடிய பேரொலியைக் கேட்டும் எந்த ஒலியையும் கேட்காமலும் மிகவும் மெதுவான ஒலியைக் கேட்டும் செவிப்புலன்கள் கெட்டுச் செவிடராகின்றனர். மற்றும் கடினமான அச்சமூட்டுகின்ற தாழ்வான வெறுக்கத்தக்க ஒலியுடன் செவிப்புலனுக்குத் தொடர்புண்டாவது 'மித்தியா யோகம்' எனப்படும்.
118–119

**(ஆ) தொட்டுணர்வுப் புலனுக்கு**

தொடத்தக்கவை எனச் சாத்திரத்தில் ஒப்புக்கொள்ளப்பட்ட எண்ணெய்க்குளியல் நலங்கு இடுதல் முதலிய செயல்கள் முற்றிலும் இல்லாமை சிறிதளவே உள்ளமை அல்லது அதிகமாக இருத்தல் என்ற மூன்றும் தொட்டுணர்வுப்புலனைக் கெடுத்து அத்துடன் தொடர்புள்ள நோய்களைத் தோற்றுவிக்கும்.

மற்றும் பூதங்கள் தொடுதல் நஞ்சு கலந்த காற்று கூடாத காலத்தில் எண்ணெய் குளிர்ச்சி சூடு இவை தீண்டுதலும் 'மித்தியாயோகம்' எனப்படும். 120—121

**(இ). கட்புலனுக்கு**

அதிக ஒளியுள்ள உருவங்களைக் காணுதல், உருவங்களை வெகுநேரம் உற்று நோக்குதல், மிக்க நுண்ணிய உருவங்களைக் காணுதல், எந்த உருவத்தையும் முற்றிலும் காணாதிருத்தல் என இவற்றினால் கண்பார்வை போய்விடும். 122

தனக்குப் பகையான பொருட்களைப் பார்த்தல் அச்சமூட்டும் உருவங்களைக் காணுதல் அருவருக்கத்தக்கவைகளைப் பார்த்தல் மிகவும் அருகிலுள்ள உருவத்தைப் பார்த்தல் இருட்டிலுள்ள உருவத்தைக் காணுதல் என்பவை 'மித்யாஸம்யோகம்' (பொருத்தமற்ற சேர்க்கை) எனப்படும். 123

**(ஈ) ரஸனேந்திரியம் என்னும் நாப்புலனுக்கு**

இனிப்புச்சுவை முதலான அறு சுவைகளை அளவு கடந்து சுவைத்தல் அச்சுவைகளை அடியோடு சுவைக்காமை பழக்கமாகாத உடலுக்கு ஒவ்வாத சுவைகளைச் சுவைத்தல் அல்லது சிறிதளவே சுவைத்தல் என இவையனைத்தும் நாவைக் கெடுப்பவை. 124

**(உ) நாசிப்புலனுக்கு**

மிகவும் மெல்லிய அல்லது மிகவும் தீவிரமான மணத்தை நுகர்வதும் மணத்தை முற்றிலும் நுகராமலிருப்பதும் நாசிப் புலனை அழித்துவிடும். இவை முறையே நாசிப் புலனின் [1]அதியோகமும் [2]அயோகமுமாகும்.

மற்றும் துர்நாற்றத்தை நுகர்தல் நஞ்சு கலந்த வாசனையை நுகர்தல் மனதிற்குப் பகையான மணத்தை நுகர்தல் பருவங்களுக்கு எதிரிடையான மணங்களை நுகர்தல் என இவையனைத்தும் நாசிப்புலனுக்கு [3]'மித்தியாயோகமாகும்.' 125—126

**50. புலன் பொருள் இவற்றின் மூவகைச் சேர்க்கைகளின் மாறு பெயர்.**

தொடர்பின்மை, மிக்கத் தொடர்பு, தவறான தொடர்பு என்பவை 'அஸாத்மியார்த்த ஸம்யோகம்' என்றும் அழைக்கப்

---

1. அதியோகம் — அளவு மீறிய தொடர்பு
2. அயோகம் — சிறிதும் தொடர்பின்மை
3. மித்தியாயோகம் — பொருத்தமற்ற தொடர்பு

படும். இந்தத் தொடர்புகள் வாதம் முதலான தோஷங்களைத் தோற்றுவிப்பவை.

எதைப் பயன்படுத்தினால் உடலின் இயற்கை நிலை கெட்டு மாறுபாட்டை அடையுமோ அது அஸாத்மியமெனப்படும். (அஸாத்மியம்-உடல் நிலையுடன் ஒன்றுபடாதது) 127

## 51. புலன் பொருள் சேர்க்கையால் ஏற்படும் நோய்கள் புலன்களைச் சேர்ந்தவையே

மேற்கண்ட தொடர்பின்மை அதிகத் தொடர்பு தவறான தொடர்பு இவற்றால் தோன்றும் நோய்கள் அனைத்தும் புலன்களைச் சேர்ந்தவைகளாகவே கருதப்படுகின்றன. 128

## 52. இன்ப துன்ப உணர்ச்சிகளுக்குக் காரணம்

அமைதியில்லாத (துன்பமாகிய) உணர்ச்சிகளுக்குக் காரணங்கள் இதுவரை கூறப்பட்டன. இன்ப உருவான உணர்ச்சிக்குப் புலன்கள் பொருட்கள் இவற்றின் [1]சமயோகம் ஒன்றே காரணமாகின்றது. அத்தகைய சமயோகம் உண்டாவது அரிது. 129

## 53. இன்பதுன்பங்களுக்கு நால்வகைக் காரணங்கள்

புலன்களோ, அவற்றிற்கு இலக்காகும் பொருட்களோ தனியாக இன்ப துன்பங்களுக்குக் காரணமாகா. இவ்விரண்டின் தொடர்பே காரணமாகின்றது. அத்தொடர்பு நான்கு வகையாகும். 130

புலன்கள் பொருட்கள் இவற்றிற்குத் தொடர்பில்லையாகில் துன்பம் அல்லது இன்பம் உண்டாவதில்லை. புலன்கள் பொருட்கள் இவற்றின் தொடர்பே அவற்றிற்குக் காரணமாகின்றது. அந்தத் தொடர்பும் நான்கு வகையானதே. 131

## 54. இன்பதுன்பங்களுக்கு ஆன்மா புலன் முதலியவை காரணங்கள்

ஆன்மா புலன்கள் மனம் புத்தி இவற்றிற்கு இலக்காகும் பொருட்கள் அதிருஷ்டம் எனப்படும் புண்ணிய பாபங்கள் இவையனைத்துமில்லாமல் இன்பமோ துன்பமோ உண்டாவதில்லை. இந்த இன்ப துன்ப காரணங்களை அறியவேண்டிய முறையைப் பற்றி விரிவாகக் கூறுகிறோம். 132

---

1. சமயோகம் – குறைவாகவோ, அதிகமாகவோ, தாறுமாறாகவோ இல்லாத சமமான தொடர்பு.

## 55. இன்ப துன்பங்களைத் தூண்டுவது

தொடும் இயல்புள்ள (கண் முதலான) புலன்கள் தம் தம் பொருட்களுடன் கொள்ளும் தொடர்பு சிந்திக்க வேண்டிய பொருட்களுடன் மனத்தின் தொடர்பு இவையிரண்டும் இன்ப துன்பமெனும் உணர்வுகளுக்குத் தூண்டுகோல்களாகின்றன. *133*

## 56. இன்ப துன்பங்கள் உண்டாகும் முறை

இன்பதுன்பங்களைக் காரணமாகக் கொண்டு விருப்பு, வெறுப்பு எனும் ஈருருவாக ஆர்வம் (த்ருஷ்ணா) என்பது செயல்படும். ஈருருவான ஆர்வம், உணர்வுகளின் சார்பான காலம், புத்தி, புலன்கள் முதலியவற்றின் தொடர்பின்மை, அதிகத் தொடர்பு முதலானவற்றை உணரும். எனவே இன்பதுன்பங்களுக்கு ஆர்வமே காரணமாகும். சார்பிடமில்லாதபோது தொடர்பென்பது உண்டாகாது. தொடுதல் இல்லாவிடில் அவ்வுணர்ச்சிகளை ஆர்வம் (த்ருஷ்ணை) அறிய முடியாது. *134–135*

## 57. உணர்வுகளின் இருப்பிடம் (21 - வது வினாவின் விடை)

உணர்வுகளின் இருப்பிடம் மனமும் கண் முதலிய புலன்களுடன் கூடிய உடலுமாகும். தலைமுடி, மற்ற உரோமங்கள், நகங்களின் நுனிப்பகுதிகள், உணவின் மலம், திரவ உருவான சிறுநீர், ஒலி முதலிய குணங்கள் இவைகளைத் தவிர உடற்பகுதியனைத்தும் உணர்வின் இருப்பிடங்களாகும். *136*

## 58. உணர்வுகளனைத்தும் நீங்கும் நிலை (22-வது வினாவின் விடை)

மனத்தின் செயலைத் தடுத்து நிறுத்தலாகிய யோகநிலையிலும், மோட்சநிலையிலும் இன்பதுன்ப உணர்வுகளனைத்தும் நீங்கும். அவற்றிலும் யோகநிலையில் எல்லா உணர்வுகளும் முற்றிலும் நீங்கிவிடும். அந்த யோகமே மோட்சத்தைத் தோற்றுவிக்கும். *137*

## 59. இன்ப துன்ப உணர்வில்லாத யோகத்தின் இலக்கணம்

ஆன்மா மற்றும் கண் செவி முதலிய புலன்கள் மனம் புலப்பொருட்கள் இவற்றின் தொடர்பினால் இன்பம், துன்பம் இரண்டும் உண்டாகின்றன. புலன்களின் செயல்களிலிருந்து திரும்பி மனம் ஆன்மாவிலேயே நிலையாகச் செயலற்று நின்றிருக்கும் பொழுது இன்ப துன்பங்கள் நீங்கிவிடுகின்றன. மற்றும் ஆன்ம மனச் சேர்க்கையினால் (உடலுடன் கூடியுள்ள போதே)

வசித்வம்' என்னும் சிறப்பும் உண்டாகிறது. யோக நிலையை நன்கறிந்த முனிவர்கள் இதையே 'யோகம்' எனக்கூறுவார்கள். *138–139*

## 60. அஷ்டைசுவரியம் என்னும் எண்வகைச் செல்வங்கள்

(1) ஆவேசம் (வேறுடலில் புகுதல்) (2) பிறர் மனத்திலுள்ளவைகளை அறிதல் (3) தன் இஷ்டப்படி வேலைகளைச் செய்தல் (4) கண்களுக்கு காணப்படாதவைகளை அறிதல் (5) புலன்களுக்கு எட்டாத ஒலிகளைக் கேட்டல் (6) முற்பிறவியில் நடந்தவைகளை நினைவுகூர்தல் (7) மனித இனத்திற்கில்லாத ஒலியுடன் கூடியிருத்தல் (8) தன் விருப்பப்படி பிறருக்கு காணப்படாதிருத்தல் என்னும் எண்வகைச் செல்வங்களை (ரஜஸ், தமஸ் என்னும் குணங்களின் கலப்பில்லாத) சுத்தமான சத்துவமென்னும் குணத்தை ஆன்மாவுடன் இணைப்பதால் யோகிகள் பெறுகின்றனர். *140–141*

## 61. மோட்சத்தின் இலக்கணம்

ரஜஸ், தமஸ் என்னும் குணங்கள் நீங்கி வலிவுள்ள வினைகள் அழியும் நிலையை மோட்சமென்கிறோம். உடல், அறிவு, அகங்காரம் முதலியவற்றின் தொடர்பில்லாமலும் மறுபடியும் பிறவி எடுக்காமலும் ஆன்மா தன் நிலையிலேயே இருப்பது மோட்சமெனப்படும். *142*

## 62. மோட்ச்த்திற்கு உபாயங்கள்

நல்லோர்களை அண்டியிருத்தல், தீயோர்களைக் கண்டு ஒதுங்கியிருத்தல், விரதங்களை ஏற்று நடத்துதல், உபவாசமிருத்தல், பலவகையான நியமங்களை ஏற்றல், தருமச் சாத்திரங்களை நன்கு அறிந்திருத்தல், தனிமையில் ஈடுபாடு, உலக இன்பங்களில் பற்றின்மை, மோட்சத்திற்கான முயற்சி, மனத்தை அதிக அளவில் கட்டுப்படுத்துதல், அறச் செயல்களையும் மறச்செயல்களையும் செய்யாதிருத்தல், முன் செய்த வினைகள் அழிதல், வினைகளின் தொடர்பின்மை, 'இது என்னுடையது', 'இது நான் செய்கிறேன்' என்னும் அகங்காரம் நீங்கியிருத்தல், ஆன்மாவுக்கு மறுபிறவித் தொடர்பு தொடருமோ என அச்சமுறுதல், மனத்தையும் அறிவையும் ஆன்மாவுக்கு வசமாக்குதல், பொருட்களின் உண்மையை ஆராய்தல், அவ்வாறு ஆராய்ந்து அறிந்ததை நினைவில் இருத்துதல் என இவை யனைத்தும் மோட்சவழிக்கான சாதனங்கள். *143-146*

## 63. நினைவு கூர்தல்—துன்பங்களை நீக்கும் உபாயம்

'நற்காரியங்களைச் செய்ய முற்படுதல்' முதற்கொண்டு 'த்ருதி (அறிவின் செயல்)' வரையிலுள்ள உபாயங்களால் நினைவுகூர்தலுண்டாகும். அத்தகைய நினைவுகூர்தலென்னும் அறிவினால் பொருட்களின் இயல்பை அறிந்து மனத்தைச் அப்பொருட்களின் மீது செலுத்தாமல் ஆன்மாவுக்கு வசமாக்கி துன்பங்களிலிருந்து விடுதலை பெற வேண்டும். 147

## 64. நினைவுகூர்தலுக்கான காரணங்கள்

நினைப்புண்டாவதற்கு எண்வகைக் காரணங்கள் உண்டு. அவையாவன (1) ஒரு பொருளின் காரணத்தை அறிதலால் காரியத்தின் நினைவு வருதல் (2) ஓர் உருவத்தைக் காண்பதால் மற்றோர் உருவம் நினைவுக்கு வருதல் (3) குணத்திலும் உருவத்திலும் சமமான ஒன்றைக் கண்டு அதுபோன்ற மற்றொன்றை நினைத்தல் (4) ஒருருவைக் கண்டு அதற்கு எதிரிடையான உருவை நினைவுகூர்தல் (5) மனத்தின் ஒரு நிலைப்பாட்டினால் நினைக்க வேண்டியது நினைவுக்கு வருதல் (6) பலமுறை பழக்கத்தால் நினைக்க வேண்டியவை நினைவுக்கு வருதல் (7) உண்மையறிவின் வலிவால் எல்லாப் பொருட்களின் நினைவு வருதல் (8) ஒரு காலத்தில் செவியுற்றிருந்து காலம் கடந்து போனதால் மறந்ததை வேறொரு காலத்தில் செவியுறுவதால் நினைத்தல் கண்டதையும் கேட்டதையும் அனுபவித்ததையும் நினைவுகூர்வதே ஸ்மிருதி (நினைப்பு) எனப்படுகிறது. 148–149

## 65. உண்மையை நினைவு கூர்தலே மோட்சத்தை அளிக்கும்

மேற்கூறியபடி உண்மையை நினைவுகூர்தலின் வலிவே மோட்சத்திற்குக் காரணமென ஜீவன் முக்தியடைந்த பெரியோர் அறிவித்தனர். இவ்வழியைப் பின்பற்றுபவர்களுக்கு மறுபிறவி கிடையாது, உண்மையறிவே யோகத்திற்கு முக்கியக் காரணமென யோகிகள் பகர்ந்தனர். 'சங்கியா' எனும் ஞானத்தினால் ஜீவன் முக்தர்களான சாங்கியர்களும் உண்மையறிவே மோட்சத்திற்கு முக்கியச் சாதனமென்பர். 150–151

காரணத்துடன் கூடிய காரிய உருவெடுக்கும் அறிவு அகங்காரம் உடல் என்பவை அனைத்தும் துன்பத்திற்குக் காரணமாகவும் நிலையற்றனவாகவும் ஆகின்றன. இவையனைத்தும் ஆன்மாவால் செய்யப்படுபவையல்ல. அவை தனக்குச் சொந்தமானவை என்ற எண்ணமும் உண்டாவதில்லை. ''இது நானல்ல'' இது

என்னைச் சேர்ந்ததல்ல'' என்ற எண்ணம் தோன்றிய பிறகு அவன் அவற்றையெல்லாம் கடந்தவனாகிறான். 152—153

### 66. துன்பங்கள் அனைத்தும் நீங்கும் நிலை (22-வது வினாவின் விடை)

மேற்கூறிய வினைகள் செயல்களனைத்தையும் துறந்த பிறகு துன்பங்களனைத்தும் அவற்றின் காரணங்களுடன் நீங்கிவிடுகின்றன. அத்துன்பங்கள் ஸவிகல்ப—நிர்விகல்ப—ஞான—விஞ்ஞானங்களென்னும் பிரிவுகளனைத்துமின்றி முற்றிலும் நீங்கிவிடுகின்றன. 154

### 67. மோட்சமடைந்த ஆன்மாவின் இலக்கணம் (23-வது வினாவின் விடை)

மேற்கண்டவாறு எல்லாவற்றையும் துறந்து பிரம்ம நிலையை அடைந்தபின் பூதாத்மா என்பது காணப்படுவதில்லை. பூதங்களனைத்தையும் துறந்து வெளியேறிய அவனுக்கு அடையாளமென்பது ஒன்றுமே இல்லையன்றோ. எனவே எவ்வாறு அவனைக் கண்டுகொள்ள முடியும்? பிரம்மஞானிகளின் அறிவால் மட்டுமே அந்தப் பரமாத்மாவை அறியமுடியும், அஞ்ஞானியால் அறிய இயலாது. 155

### 68. இந்த அத்தியாயத்தின் பொருட்சுருக்கம்

''கதிதாபுருஷீயம்'' என்னும் இந்த அத்தியாயத்தில் புருஷன் எனப்படும் ஆன்மாவைப் பற்றிய மிகச் சிறந்த இருபத்து மூன்று வினாக்களும் அவற்றின் விடைகளும் விரிவாகக் கூறப்பட்டன. 156

அக்னிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
சாரீரஸ்தானத்தில் 'கதிதா புருஷீயம்' என்னும்
முதல் அத்தியாயம் முற்றும்.

## இரண்டாவது அத்தியாயம்

# *அதுல்யகோத்ரீயம்

பகவான் ஆத்ரேயமுனிவர் விவரித்தபடி 'அதுல்யகோத்ரீயம் சாரீரம்' எனும் அத்தியாயத்தை விவரிப்போம். 1–2

### 1. விந்துவைப் பற்றிய சீடனின் வினா

தன் கோத்திரத்தைக்காட்டிலும் வேறுபட்ட கோத்திரத்தில் பிறந்த பெண்ணுக்கு மாதவிடாய் நீங்கியபொழுது ஆடவன் அவளுடன் தனிமையில் புணர்ச்சி செய்யும் காலத்தில் மகிழ்ச்சிப் பெருக்கினால் கருப்பையில் விடப்பட்டு வாயு தேயு நிலம் நீர் என்னும் நான்கு மகாபூதங்களையும் இனிப்பு முதலான அறுசுவைகளையும் கொண்டதும் அப்பெண்ணின் கருப்பையில் கருவுருவம் பெறுவதுமான பொருள் யாது? 3

### 2. கருவுக்குக் காரணமான விந்துவும் அதன் தோற்றக் காரணமும்

பெண்ணின் கருப்பையில் விடப்படும் பொருள், கரு தோன்றுவதற்கு முக்கியக் காரணமான, 'சுக்ரம்' (விந்து) எனப்படுகிறது. அவ்விந்து வாயு தேயு நிலம் நீர் என்னும் நான்கு மகாபூதங்களின் சமப்பகுதிகளாலும் உண்ட உணவின் அறுசுவைகளாலும் உருவாகின்றது. 4

### 3. கருவைப் பற்றிய ஐந்து வினாக்கள்

(அ) கரு முழு உடலாக உருவாவதெங்ஙனம்?

(ஆ) தக்க காலத்தில் கரு ஏற்படுவதெப்படி?

(இ) கஷ்டமில்லாமல் சுகமாக ஈன்றெடுப்பதெவ்வாறு?

(ஈ) மக்கட் செல்வத் தகுதி பெற்றும் ஏன் நீண்ட நாட்களுக்குப் பிறகு கருத்தரிக்கிறாள்?

(உ) கரு தோன்றியும் அது ஏன் அழிந்துவிடுகிறது? 5

---

*அதுல்ய கோத்ரீயம்– ஒரே கோத்திரத்தில் பிறவாத ஆண்பெண்களின் உடலுறவைப் பற்றி விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

## 4. முதல் மூன்று வினாக்களின் விடை

ஆடவனின் விந்து பெண்ணின் விந்து ஆன்மா கருப்பை காலம் என்பவையனைத்தும் சிறிதும் சீர்குலையாமல் அவற்றிற்குரிய நிலை நன்கிருந்து உடலுக்கு ஊட்டமளிக்கும் உணவும் உபசாரமும் நன்கமைந்தால் கருவுண்டாகி உரிய நேரத்தில் முழு உருப்பெற்றுப் பிறவியெடுக்கும். 6

## 5. நீண்ட நாட்களுக்குப் பிறகு கருதரிக்கக் காரணம்

கருப்பையில் குற்றம் உள்ளத்தில் கலக்கம் ஆண் பெண் விந்துக்களிலும் உணவு உலாவுதல்களிலும் சீர்கேடு [1]ருதுகாலமல்லாத காலங்களில் புணர்தல் உடல் வலிவுக் குறைவு என்னும் காரணங்களால் கருத்தரிப்பதற்குத் தகுதியுள்ள பெண்ணும் தாமதமாகக் கரு தரிப்பாள். 7

## 6 கருதோன்றி அழிவதற்குக் காரணம்

பெண்ணின் விந்து, கெட்டவாதத்தினால் தடுக்கப்பட்டு கருப்பையிலேயே தங்கி கருவின் உருவிலிருக்கும். அது வெளிப்படாமல் வளர்ந்து கொண்டே கருப்பையில் தங்கிக் கருவின் அறிகுறிகளைக் கொண்டிருக்கும்.

இதைக்கண்டு சில அறிவிலிகள் கருத்தரித்திருப்பதாகத் தவறாக நினைப்பார்கள்.

அந்தக் கருவுருவம் தீ வெயில் இவற்றின் சூட்டாலும், களைப்பு வருத்தம் நோய் இவற்றாலும், சூடான அன்னபானங்களை அருந்துவதாலும் வெளிப்படும். கருவெனக் கூறத் தகுதியற்ற இவ்வாறு வெளிப்படும் உதிரத்தைக் கண்டு சிலர் பேய் பிசாசுகள் கருவைச் சீர்குலைத்து விட்டதாகக் கூறுவார்கள். அது தவறு ; உடலிலுள்ள எண்வகை விந்துக்களின் உருவான 'ஓஜஸ்' என்னும் சாரமான பொருளைப் பிசாசுகள் அருந்துமேயன்றி, உடலை மட்டுமல்ல. அவை கருவைத் தாக்குமானால், தாயின் உடலிலுள்ள சாரமான 'ஓஜஸ்' என்னும் பகுதியை விட்டு வைக்குமா ? (எனவே பேய் பிசாசுகள் கருவைச் அழித்துவிட்டதாகக் கூறுவது அறிவீனம்.) 8–10

---

1. ருதுகாலம்—மாதவிடாய் நான்கு தினங்களுக்கடுத்த எட்டுநாட்கள் அல்லது பன்னிரண்டு நாட்கள் ருதுகாலம் எனப்படும்.

**7. ஆண், பெண் மகவு தோன்றக்காரணம் யாது ?**

மேற்கண்டவாறு தரிக்கப்பட்ட கருவிலிருந்து

(அ) பெண் பிறவி தோன்றக் காரணம் யாது ?

(ஆ) ஆண் சிசு பிறப்பதேன் ?

(இ) ஒரே கருவில் இரு குழவிகள் பிறக்க காரணம் யாது ?

(ஈ) அவ்விரண்டும் ஆணாகப் பிறப்பதேன் ?

(உ) அல்லது இரண்டும் பெண்ணாவதேன் ?

(ஊ) ஒரே கருவிலிருந்து பல குழவிகள் தோன்றுவதேன் ?

(எ) பிரசவகாலம் கடந்து தாமதமாகப் பிரசவிப்பதேன்?

(ஏ) பிறந்த இரட்டைக் குழந்தைகளில் ஒன்று மட்டும் நன்கு வளர்ந்து, மற்றொன்று வளராமலிருப்பதேன் ?

எனும் எண்வகை வினாக்களுக்கு விடைகளை இனிக் காண் போம். 11

**8. ஆண், பெண், இரட்டை முதலியவை உண்டாகக் காரணங்கள்**

(அ) ஆண், பெண் புணர்ச்சிக் காலத்தில் வெளிப்பட்டு ஒன்று கூடும் விந்துக்களில் சோணிதம் என்னும் பெண் விந்துவை விட ஆண்விந்து அதிகமாகப் பலம் பெற்றிருந்தால் ஆண் பிறவியுண்டாகும். பெண் விந்து அதிக பலம் பெற்றிருந் தால் பெண் பிறவியுண்டாகும்.

(ஆ) ஆண் விந்து அதிகமாக இருந்தால் ஆண் பிறவி உண்டா கும்.

(இ) ஆண் பெண் விந்துக்கள் கலந்த பிறகு இரண்டாகப் பிரிந்து கருப்பையில் சேர்ந்தால் ஒரே கருவிலிருந்து இரட்டைக் குழவிகள் பிறக்கும். அவ்விரண்டு பகுதிகளில் பெண் விந்து அதிகமாக இருந்தால் பெண் குழந்தையாகவும், ஆண்விந்து அதிகமாக இருந்தால் ஆண் குழந்தையாகவும் ஆகி இவை இரட்டைகளாகப் பிறக்கும்.

(ஈ) ஆண், பெண் விந்துக்கள் இரண்டும் கலந்து, இரு கூறாகப் பிரிந்து, அவ்வாறு பிரிந்த இரு பகுதிகளிலும் ஆண் விந்து அதிகமாக இருந்தால் இரண்டு ஆண் குழந்தைகள் பிறக் கும்.

(உ) பெண் விந்து அதிகமாக இருந்தால் இரண்டும் பெண் குழந்தைகளாகும்.

(ஊ) அதிகமாக வளர்ந்த வாதம் ஆண் பெண் விந்துக்களைப் பல பகுதிகளாகப் பிரிக்குமானால் அது எத்தனையாகப் பிரிக்குமோ அத்தனை குழந்தைகளாகும். அவ்வாறு பிறக்கும் குழந்தைகள் முன்வினைகளின் பயனாகப் பிறவி எடுக்கின்றனவே அன்றித் தாய் தந்தையர்களுக்கு வசமாகிப் பிறப்பனவல்ல.

தாய் புசிக்கும் ஆகாரத்தின் ரசம் கருப்பையிலுள்ள சிசுவுக்குச் செல்லாமலிருந்தால் அச்சிசு வளர்ச்சியடையாமல் இளைத்து விடும். அல்லது கருச்சிதைவு ஏற்படும்.

(எ) கருச்சிதைவு ஏற்படாதிருந்தால் அச்சிசு கருப்பையிலேயே பல ஆண்டுகளிலிருந்து தான் முழு உருப்பெற்ற பிறகே (தாமதமாகப்) பிறக்கும்.

(ஏ) பல குழவிகள் ஒரே கருவில் ஏற்படும் காலத்தில் முன் வினைப்பயனாக ஆண் பெண் விந்துக்கள் பலவாறாகப் பிரியும்போது ஏற்றக்குறைவை வைத்து ஒரு குழவி பெரிய உருவிலும் மற்றொன்று சிறிய உருவிலும் வளர்ச்சி பெறும். 12–16

### 9. அலிகள் எண்வகையானவர் என்பது எவ்வாறு ?

(அ) த்விரேதஸ்கன்

(ஆ) பவநேந்திரியன்

(இ) ஸம்ஸ்காரவாஹன்

(ஈ) நரஷண்டன்

(உ) நாரீஷண்டன்

(ஊ) வக்ரீ

(எ) ஈர்ஷ்யாபிரதன்

(ஏ) வாதிகஷண்டன்

என அலிகள் எண்வகையாகக் கூறப்படுகின்றனர்.

### 10. அலிகள் எண்வகையாவதற்குக் காரணம்

#### (அ) த்விரேதஸ்கன் என்னும் அலி

ஆண், பெண் இருவரின் விந்துகளும் சம அளவாக இருந்து சூடாகவும் இருக்குமாகில் ஆண் பெண் இருவருக்கும் பொதுவான கண், காது, மூக்கு முதலிய உறுப்புகள் மட்டும் கொண்ட சிசு பிறக்கும். அதற்கு 'த்விரேதஸ்கன்' எனப்பெயர். 17

### (ஆ) 'பவநேந்திரியன்' என்னும் அலி

வாதம் கெட்டு கருவிலுள்ள விந்துவின் இடத்தைச் சீர் குலைத்து விந்துவுக்குப் பதிலாகக் கெட்ட வாதமே சேரும். அந்தச் சிசு வாதத்தையே புலனாகக் கொண்டிருக்குமாகையால் 'பவநேந்திரிய நபும்சகன்' (அலி) என அழைக்கப்படுகிறது. 18

### (இ) ஸம்ஸ்காரவாஹி என்னும் அலி

கெட்டுப்போன வாதம் கருப்பையிலிருக்கும் சிசுவின் விந்து நிலையின் வழியைச் சீர்குலைத்து [1]'ஸம்ஸ்காரவாஹி' எனும் அலியை உண்டாக்கும்.

### (ஈ) ஆண் அலி (உ) பெண் அலி தோன்றக் காரணம்

வேகம் குறைந்து சிறிதளவே உள்ள விந்துக்களுடன் கூடி இயற்கையான வலிவும், புணர்ச்சியுணர்ச்சி சிறிதளவும் இல்லாத தாய்தந்தையர்களுக்கு ஆண் அலியும் பெண் அலியும் தோன்றுவர். மேற்கண்ட இலக்கணங்கள் ஆணுக்கு இருந்தால் பிறப்பது ஆண் அலியாகவும், பெண்ணுக்கு இருந்தால் பெண் அலியாகவும் இருக்கும். 19

### (ஊ) வக்ரி (எ) ஈர்ஷ்யகன் என்னும் அலிகள்

விந்து வலிவில்லாத ஆண்மீது பெண் அமர்ந்து ஆண்போல் எதிரிடைப் புணர்ச்சி செய்து அதனால் தோன்றுபவன் [2]'வக்ரி' அலி எனப்படுவான்.

வலிவிழந்த ஆணும் பெண்ணும் வலிவுள்ள வேறு ஆண் பெண் இருவர் புணர்வதைக்கண்டு மனம் பொறாமல் தாற்காலிகமாகப் புணர்ச்சி உணர்ச்சி கொண்டு அச்செயலில் ஈடுபட்டு அதனால் தோன்றுபவன் [3] 'ஈர்ஷ்யாரதி அலி' எனப்படுவான். 20

---

1. ஸம்ஸ்காரவாஹி – விந்து வெளிவராத நிலையில் வாஜீகரணம் வஸ்தி சிகிச்சை முதலிய செயல்களால் ஆண்குறியை எழச்செய்து புணர்ச்சி வேகம் பெறுகின்ற அலி இப்பெயர் பெறுவான்.

2. வக்ரி – பெண் செய்யும் புணர்ச்சியால் தோன்றுபவன் இப்பெயர் பெறுகிறான்.

3. ஈர்ஷ்யகன் – பொறாமையோடு பிறர் செய்யும் புணர்ச்சியைக் காண்பதனால் பிறக்கும் புணர்ச்சி உணர்வு பெறும் அலி இப்பெயர் பெறுகிறான்.

### (ஏ) வாதிகஷண்டகன் என்னும் அலி

வாதம் பித்தம் இரண்டும் கோளாறடைந்து கருவில் உள்ள குழவியின் விதைகளைச் சென்றடைந்தால் அவ்விதைகள் இரண்டும் அழிந்துவிடும். அழித்த விதையுடையவன் 'வாதிக அலி' எனப் படுவான்.

மேற்கண்ட எண்வகை அலிகளும் முன்வினையின் காரண மாகவே தோன்றுபவர். 21

## 11. அப்பொழுதே ஏற்பட்ட கருவைப்பற்றிய ஐந்து வினாக்கள்

(அ) பெண் வயிற்றில் அப்பொழுதே ஏற்பட்ட கருவின் அறிகுறி யாது?

(ஆ) கருவில் உள்ளது ஆணா?

(இ) கருவில் உள்ளது பெண்ணா?

(ஈ) அலியா என்பதற்கு அறிகுகள் யாவை?

(உ) பிறக்கும் குழவி வேறொரு பிராணியின் உருவம்கொண்டிருப்பதற்குக் காரணம் யாது?

(இவ்வைந்து வினாக்களுக்கு முறையே விடைகளைக் காண்போம்.) 22

(அ) வாயிலிருந்து உமிழ் நீர் வெளிவருதல் உடல்பளு இளைப்பு சோர்வு சோம்பல் மயிர்க்கூச்சம் இதயநோய் மனநிறைவு ஆண் பெண் விந்துக்கள் கருப்பையிலேயே தங்குதல் இவையனைத்தும் கருத் தரித்தவுடன் பெண்ணுக்கு உண்டாகும் அறிகுறிகள். 23

(ஆ) கருத்தரித்த பெண் தன்னுடைய இடது பக்கமுள்ள உடல் உறுப்புகளால் வேலை செய்தல் புணர்ச்சியை விரும்புதல் பெண்களைப்பற்றிய கனவுகள் பானம் உணவு நடத்தை செயல் இவைகளைக் கொண்டிருத்தல், கரு இடதுபுறமாக இருத்தல் இடதுபுற மார்பகத்தில் முதன்முதலாக அதிகமாகப் பால் வடிதல் என்னும் அறிகுறிகள் கொண்டவள் பெண் குழந்தையையே பெறுவாள். 24

(இ) மேற்கண்டவற்றிற்கு எதிரிடையான அறிகுறிகளைக் கொண்டவள் ஆண் மகவைப் பெற்றெடுப்பாள்.

(ஈ) மேற்கூறிய இருவகை அறிகுறிகளுடன் கூடிய பெண் அலியைப் பெறுவாள்.

(உ) கருதோன்றும் பொழுது பெண்ணின் மனம் எந்தப் பிராணியின் மீது செல்லுமோ அத்தகைய பிராணியின் உருவம் கொண்ட பிறவியையே அவள் ஈன்றெடுப்பாள். 25

## 12. குழவி வேறுருவம் கொள்வதற்கு மற்றும் சில காரணங்கள்

கருவுக்குக் காரணமான வாயு முதலான நான்கு பூதங்களும் தாயால் தோன்றியவை, தந்தையால் தோன்றியவை, உணவால் தோன்றியவை, தன்னால் (வினைப் பயனாகத்) தோன்றியவை என நான்குவிதமாகக் கருவுடலில் தொடர்பு கொண்டிருக்கும். அந்நால்வகைப் பூதங்களில் எந்தப் பூதத்தின் பகுதி அதிகமாக இருக்குமோ அப்பூதத்தின் குணம் கருவிலுள்ள சிசுவுக்கு இருக்கும். எனவே குழவியின் உருவ அமைப்புக்கும் இவை காரணமாகின்றன. மற்றும் முற்பிறவியில் சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களில் எந்தக் குணத்தை மனம் அதிகமாகக் கொண்டிருக்குமோ அதுவே இப்பிறவியிலும் தொடர்ந்து வரும். 26—27

## 13, கருவிலுள்ள குழவிக்கு மாறுபட்ட உருவம் ஏன் ஏற்படுகிறது ?

(அ) கருவுற்ற ஒரு பெண்ணுக்கு உடலுறுப்புகள் குறைந்த அல்லது அதிகமான அல்லது விகாரமான கண் செவி முதலான புலன்களுடன் கூடிய குழவிகள் தோன்றக் காரணம் யாது?

(ஆ) ஆன்மா ஓர் உடலை விட்டு மற்றோர் உடலை எவ்வாறு சென்றடையும்?

(இ) ஆன்மா எவற்றுடன் எப்பொழுதும் தொடர்பு கொண்டிருக்கும்? (என்னும் வினாக்கள் மூன்றுக்கும் விடையை இனித் தொடர்ந்து காண்போம்). 28

### (அ) கருவுக்கு விகார உருவம் தோன்றக் காரணம்

மழைக்காலத்தில் மரத்துண்டு கல் மேகம் நீர் என்பவைகளின் வேகங்கள் நதிக்கரை மீது நிற்கும் மரத்திற்கு உருக்குறைவைத் தருவதுபோல் ஆண் பெண் விந்துக்களின் உருவான விதைகள் முன்வினைகள் கருப்பை பருவக்காலம் என்பவைகளின் குற்றங்களாலும் கருவுற்றவள் செய்யும் உணவு—உலாவுதல்களின் குற்றங்களாலும் வாதம் முதலான தோஷங்கள் கோளாறடைந்து கருவிலுள்ள குழவியின் உருவத்தையும் நிறத்தையும் கண் முதலான புலன்களையும் குறைவுள்ளனவாக்குகின்றன.
29—30

### (ஆ) ஆன்மா வேறுடலைச் சென்றடையும் வகை

ஆன்மா நுண்ணிய உருவம் கொண்ட வாயு தேயு நீர் நிலமென்னும் நால்வகைப் பூதப்பகுதிகளுடன் உலடலைவிட்டு மற்றோருடலைச் சென்றடைகிறது.

அத்தகைய ஆன்மாவை தெய்வீகப் பார்வை பெற்ற யோகிகள் காண முடியுமேயன்றி மற்றவர் எவரும் காணமுடியாது. 31

ஆன்மா எங்கும் பரவும் இயல்புடையது, பலவகையான உடல்களைத் தாங்கக் கூடியது. பலவிதச் செயல்களைச் செய்யும் திறமைபெற்றது. எல்லாவகையான உருவத்தையும் எடுக்கவல்லது, அறிவே உருவானது, புலன்களுக்கெட்டாதது, அது புத்தி முதலானவற்றுடன் நிலையாகத் தொடர்பு கொண்டிருக்கும்; விருப்பம் முதலானவைகளுடன் கூடியதுமாகும். 32

**ஆன்மா வேறுடலைச் சேருதல் (ஆ. தொடர்ச்சி)**

சுவை ஆன்மா தாய் தந்தை என்னுமிவற்றால் உடலில் தோன்றுகின்ற வாயு தேயு நீர் நிலம் என்னும் நான்கு பூதங்களும் பதினாறு வகைகளாகின்றன. வேறுடலை அடையவிரும்புகின்ற ஆன்மா நால்வகைப் பூதங்களைச் சார்ந்திருக்கும். அதே பூதங்களும் ஆன்மாவைச் சார்ந்திருக்கின்றன.

(அதாவது ஆன்மா ஒருடலைவிட்டு மற்றோர் உடலைச் சென்றடைவதற்கு நால்வகைப் பூதங்களாலான பேருருக் கொண்ட உடலில்லாவிடில் நுண்ணிய பூதங்களாலான நுண்ணிய உடலையாவது கொண்டிருக்க வேண்டும். அப்பொழுதே ஆன்மா ஒருடலிலிருந்து மற்றொரு உடலைச் சென்றடைய முடியுமென்பது கருத்து). 33–34

**தாய், தந்தையர்களால் தோன்றும் பூதங்கள் (ஆ. தொடர்ச்சி)**

தாய் தந்தையரின் விந்துகளைச் சார்ந்திருக்கும் பூதங்கள் நான்கும், தாய் தந்தையர்களால் தோன்றியவைகளே.

ஆண் பெண் விந்துக்களின் உருவான கரு எந்தப் பூதங்களால் வளர்க்கப்படுமோ அந்தப் பூதங்கள் தாயின் உணவுச் சுவையால் தோன்றியவை.

ஆன்மாவுடன் ஒன்றிப்போய் கருவுக்குள் புகுகின்ற நால்வகைப் பூதங்களும் வினைப்பயனாகத் தோன்றுபவையே. அந்தப் பூதங்கள் விதையில் நிலையைப் பெற்று மனத்தில் தங்கியுள்ள ஆன்மாவில் மறைந்திருந்து வினைப்பயனையொட்டி தேவர் முதலான உயர்ந்த உடல்களையோ புழு பூச்சி முதலான தாழ்ந்த உடல்களையோ பெறுகின்றன. 35

**அன்னிய உடலால் மற்றொரு உடல் தோன்றும் வகை (ஆ-தொடர்ச்சி)**

சிறிய உருவமும் நிறமும் உள்ள பொருளால் பெரிய உருவமும் நிறமும் உள்ள மற்றொரு பொருள் தோன்றுவது உலக இயல்பு.

புலன்களுக்கு எட்டாத நால்வகைப் பூதங்களின் உருவான (ஆதிவாஹிக சரீரம் என்றும்) நுண்ணிய உடலால், புலன்களுக்கு இலக்காகும் பெரியதோர் உருவம் உண்டாவதும் இயற்கையே.

அதேபோல் ஆன்மாவுக்குள் வித்தின் நிலையிலுள்ள மனத்தினால் மற்றோர் உடலைச் சேர்ந்த மனமும் தோன்றுகிறது.

நுண்ணிய பூதங்களின் உருவான நுண்ணிய உடல்கள் ஒரே வகையாக இருந்தாலும் ரஜஸ் தமஸ் என்னும் குணங்கள், முன்வினைகள் என்பனவற்றின் மாறுபாட்டையொட்டி அத்தகைய மனத்தின் தொடர்பாலுண்டான பூதவுடல்களும் பல வகையாக இருக்கும். (இவ்வாறு இரண்டாவது வினா விரிவாக விளக்கப்பட்டது.) 36

## (இ) ஆன்மாவுடன் எப்பொழுதும் சேர்ந்திருப்பவை

புலன்களுக்கெட்டாமல் வித்தின் நிலையில் மிகவும் நுண்ணிய உருவிலுள்ள நுண்ணிய பூதங்கள் முன்வினைகள் மனம் அறிவு அகங்காரம் ரஜஸ் தமஸ் எனும் மனத்தின் குற்றங்கள் இவையனைத்தையும் உணர்வின் உருவான ஆன்மா ஒருபோதும் விட்டுப் பிரிந்திருப்பதில்லை.

ரஜஸ், தமஸ் என்னும் குணங்களுடன் மனம் எப்பொழுதும் தொடர்பு கொண்டிருப்பதால், உண்மையறிவு ஏற்படும் வரை அவ்விரண்டும் மனத்தை விட்டு அகலா. அக்குற்றங்களுடன் கூடிய மனமும் வலிவான வினையுமே ஆன்மா இவ்வுடலை விட்டகன்று வேறுடலைப் பெறுவதற்குக் காரணங்களாகின்றன. 37–38

## 14. நோய் தோன்றக் காரணங்கள் பற்றிய ஐந்து விளாக்கள்

(அ) நோய்கள் ஏன் தோன்றுகின்றன?

(ஆ) நோய்கள் நீங்கக் காரணம் யாது?

(இ) மகிழ்ச்சி எதனாலுண்டாகும்?

(ஈ) துன்பம் எதனாலுண்டாகும்?

(உ) உடல், உள்ளங்களில் தோன்றும் நோய்கள் தணிந்தபின் மறுபடியும் தோன்றக் காரணம் யாது?

(எனும் ஐந்து வினாக்களுக்கும் முறையே விடைகள் கூறுவோம். 39

**(அ) நோய்கள் தோன்றக் காரணமும் (ஆ) நோய்கள் நீங்கக் காரணமும்**

அறிவிழந்து செய்யும் தவறுகள் புலன்கள் பொருட்களுடன் பொருந்தாமை காலத்தின் மாறுபாடு இவை மூன்றும் நோய்களனைத்திற்கும் காரணங்களாகின்றன.

அறிவு புலன்கள் பொருட்கள் காலத்தின் மாறுபாடு இவை (குறைவாகவோ அதிகமாகவோ இல்லாமல்) சம தொடர்பு கொண்டிருப்பது நோய் நீங்கக் காரணமாகும். 40

**(இ) மகிழ்ச்சிக்குக் காரணம் (ஈ) துன்பத்திற்கு காரணம் (உ) உடல் உள்ளங்களில் தோன்றும் நோய்கள் மறுபடி தோன்றாமைக்கு உபாயம்**

அறவழியில் செய்யப்படும் செயல்கள் மகிழ்ச்சியை உண்டாக்குகின்றன. அவ்வாறின்றி அறம் நீங்கிய செய்கைகள் துன்பத்திற்குக் காரணங்களாகின்றன. உடலிலும் உள்ளத்திலும் தோன்றி மறைந்த நோய்கள் உண்மையறிவு வளர்ந்து ஆன்மஞானம் உண்டானபோது மறுபடியும் தோன்றுவதில்லை. 41

## 15. உடல்-உள்ளங்களின் தொடர்ச்சிகள் நீங்க வழி

உடல் உள்ளம் இவற்றின் தொடர்ச்சி எப்பொழுது தோன்றியது என்று சாத்திரங்களில் கூறப்படவில்லை. சிறந்த நிலையான அறிவு நினைவாற்றல் இவற்றாலும் உயர்ந்த உண்மையறிவினாலும் அந்த அலாதியான உடலுள்ளங்களின் தொடர்ச்சிக்கு முடிவு உண்டாகும். 42

## 16. நோய் தோன்றாமைக்கு உபாயம்

உடலைப் பற்றிய நோயும் உள்ளத்தைப் பற்றிய நோயும் தோன்றுவதற்கு முன்பாகவே நோய் தோன்றாமைக்குக் காரணமான சிகிச்சையைச் செய்து கொள்ள வேண்டும். புலன்களை வென்றவனை நோய்கள் வந்து துன்புறுத்தா. முன்வினைகளால் சில நோய்கள் வந்து அவனையும் துன்புறுத்தலாம். வினையில்லாதபோது எந்நோயும் வராது. 43

## 17. முன்வினை முயற்சி இவற்றின் செயல்கள்

முற்பிறவியில் செய்த வினைகள் (தெய்வம்) முன்வினை எனப்படும். இப்பிறவியில் செய்யும் தீயச் செயல்களே மனித முயற்சி எனப்படும். இவ்விரண்டும் நோய்கள் தோன்றக் காரணங்களா

கின்றன. இவ்விரண்டும் சம (தரும)நிலையிலிருந்தால் அவை மோட்சத்திகுக் காரணங்களாகின்றன. 44

## 18. பருவங்களில் தோன்றும் நோய் நீங்கும் வழி

பனிக்காலத்தில் வளர்ந்த தோஷத்தை (வசந்த காலத்திலும்) சித்திரை மாதத்திலும் வெயிற்காலத்தில் சேர்த்து வைத்த தோஷத்தை (மாரிக் காலத்லும்) ஆவணி மாதத்திலும் மழைக் காலத்தில் தோன்றிய நோய்களை (சரத் காலத்திலும்) ஐப்பசி மாதத்திலும் வாந்தி, பேதி, வஸ்தி என்னும் சிகிச்சைகளால் வெளிப்படுத்துபவன் ஒருபோதும் பருவ கால நோயால் துன்பப் படமாட்டான். 45

## 19. நோய்கள் இல்லாமல் செய்துகொள்ளும் வழி

இதமான உணவு மற்ற செயல்கள் நன்மை தீமைகளை ஆலோசித்துச் செய்தல் புலன்களால் ஏற்படும் சுகங்களில் பற்றில்லாமை ஈகை குணம் எல்லாப் பிராணிகளிடமும் சமநோக்கு உண்மையான நடைமுறை பொறுமை பெரியோர்களை வணங்குதல் இவைகளையெல்லாம் தன்னிடம் கொண்டவன் நோயற்று இன்பமாக வாழ்வான். 46

மனம் வாக்கு செயல் இம்மூன்றும் தொடர்ந்து வரக்கூடிய இன்பத்திற்கேற்றபடியிருத்தல் மனக் கட்டுப்பாடு தெளிவான அறிவு ஆன்மாவைப் பற்றிய உண்மை அறிவு தவத்தில் ஈடுபாடு யோகப்பயிற்சி இவையனைத்துடனும் கூடியவனின் உடலுள்ளங்களை எப்பொழுதும் நோய்கள் துன்புறுத்தா. 47

## 20. இவ்வத்தியாயத்தின் பொருளடக்கம்]

'அதுல்யகோத்ரீயம்' என்னும் இவ்வத்தியாயத்தில் அக்நிவேசரால் வினவப்பட்டவையும் மிக்கப் பொருட்செறிந்தவையுமான முப்பத்தாறு வினாக்களுக்கு அறிவு வளர்ச்சிக்காக முறையே விடைகளை பகவான் ஆத்திரேயர் விவரித்துரைத்தார். 48

அக்நிவேசரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை சாரீரஸ்தானத்தில்
'அதுல்ய கோத்ரீயம்' எனும் இரண்டாவது
அத்தியாயம் முற்றும்

## மூன்றாம் அத்தியாயம்

## *குட்டிகா கர்ப்பாவக்ராந்தி

'குட்டிகாகர்ப்பாவக்ராந்தி' சாரீரம் எனும் அத்தியாயத்தைப் பகவான் ஆத்ரேயர் விவரித்தது போல் விளக்குவோம். *1—2*

### 1. கருதோன்றுதல், வளர்தல், சுகமாகப் பிரசவித்தல் இவற்றிற்குக் காரணங்கள் யாவை ?

குற்றமற்ற விந்துவுடன் கூடிய ஆணுக்கும் குற்றமற்ற பெண் குறி விந்து கருப்பை இவற்றுடன் கூடிய பெண்ணுக்கும் ருது காலத்தில் புணர்ச்சி ஏற்படும்பொழுது அவ்விருவரின் விந்துக்களும் ஒன்றோடொன்று கலந்து கருப்பையில் சேர சுத்தமான இருவர் விந்துக்களின் அச்சேர்க்கையில் மனத்தால் தூண்டப்பட்ட ஜீவன் நுழைகிறான். அப்பொழுது கருவுண்டாகிறது.

கருவின் வளர்ச்சிக்கு ஏற்ற தாயின் உணவினின்றும் தோன்றிய ரஸம் முதலிய தாதுக்களின் சேர்க்கையால் கரு நோயின்றி நன்கு வளருகிறது. தவிர அவ்வப்பொழுது செய்ய வேண்டிய பலவிதப் பணிவிடைகளால் கருவின் உறுப்புக்கள் புலன்கள் தோன்றி அனைத்தும் நிறைவுற்ற உடலுடன் வலிமை நிறம் வனப்பு மனம் இவைகளோடு பெற்றோர் ஆன்மா ஸாத்ம்யம் ரஸம் இவற்றின் சேர்க்கையால் நன்கு உருவாக்கப்பட்டு மகப்பேறு எளிதாக அமைகிறது. எனவே தாய் தந்தை வளர்ச்சிக்குரிய பலவிதப் பொருள் இவைகளினின்றும் தாய் உண்ணும் உணவுப்பொருள் சீரணமாகி அதனின்று உருவாகும் ரஸம் முதலிய தாதுக்களின் சேர்க்கையால் கரு நன்கு வளர்ச்சி அடைகிறது. இதற்கு மனம் என்னும் ஆன்மாவின் உள்ளுணர்வும் உடனிருந்து உதவுகிறது. இவ்வாறு ஆத்ரேய புனர்வசு கூறினார். *3*

### 2. பரத்துவாச முனிவரின் மறுப்பு

இக்கருத்து சரியல்ல என்றார் பரத்துவாசர். என்ன காரணம் ? (அ) தாய்தந்தையரோ (ஆ) ஆன்மாவோ (இ) ஸாத்

---

* குட்டிகா — சிறிதளவு
அவக்ராந்தி— தோற்றம், கருவின் தோற்றத்தைப் பற்றிச் சிறிதளவே விளக்கும் அத்யாயமாகையால் இப்பெயர் பெறுகிறது.

மியமோ (உடலுக்கு ஒத்துக்கொள்ளும் பொருட்கள்( (ஈ) அவர்கள் பயன்படுத்தும் பானம் உணவு வகைகளோடு கருவைத் தோற்று விப்பதில்லை. (உ) ஜீவன் வேறு உலகிலிருந்து வந்து கருவில் நுழைந்து ஆன்மாவைத் தோற்றுவிப்பதாகக் கூறுவதும் சரியல்ல. (இதை முறையே விவரிப்போம்.)

(அ) தாய் தந்தையர்களே கருவைத் தோற்றுவிப்பவர்களாக இருப்பின் பெண்களும் ஆண்களும் பிள்ளை பிறப்பதையே குறிக்கோளாகக் கொண்டு புணர்ச்சிச் செயலில் ஈடுபட்டு பிள்ளை களையே பெற்றிடுவார்கள். அல்லது பெண் குழந்தைகளையே விரும்புபவர்கள் பெண்களையே பெறுவார்கள். சில பெண்களோ சில ஆண்களோ குழந்தை பிறக்காமல் (மலடிகளாக) இருக்கமாட் டார்கள். குழந்தைகள் இல்லையே என்று புலம்பவும் மாட் டார்கள்.

(ஆ) ஆன்மாவே ஆன்மாவைத் தோற்றுவிக்கிறதெனக் கூற முடியாது. அவ்வாறாகில் இதுவரையில் தோன்றியுள்ள ஆன்மாவே ஆத்மாவை தோற்றுவிக்கிறதா ? இதுவரை தோன்றாத ஆன்மா தோற்றுவிக்கிறதா ? எனும் இருவகைக் கேள்விகள் எழும். தான் பிறந்தபின் தானே தன் பிறவிக்குக் காரணமாக முடியாது. பிறவாமலிருந்தால் தன் பிறவிக்குக் காரணமாகாது. எனவே தான் தோன்றியிருந்தாலும் தோன்றா மலிருந்தாலும் ஆன்மா தன் பிறவிக்குக் காரணமாக இயலாது.

இது ஒருபுறமிருக்கட்டும். ஆன்மா ஆன்மாவைத் தோற்று விக்கும் திறன் படைத்திருப்பின் தான் விரும்புகின்ற கருப்பையி லேயே ஏன் பிறக்கக்கூடாது ? அல்லது தன் விருப்பப்படி சுதந்திர மாகத் தடையில்லாமலிருந்தால் விரும்பிய உருவெடுத்து நிறம் வலிவு வேகம் அறிவு உறுப்புகளின் அமைப்பு இவையனைத் துடன் தன்னை உருவாக்கிக் கொண்டு ஏன் பிறவி எடுக்கக்கூடாது? இக்குணங்களுடனோ இதற்கும் மேற்பட்ட குணங்களுடனோ அல்லவா ஆன்மா தன்னை அமைத்துக் கொள்ள விரும்புகிறது.

(இ) மற்றும் உடலுடன் ஒன்றிப்போகும் பொருட்களைக் கொண்டிருத்தலாகிய ஸாத்மியத்தாலும் கரு தோன்றுவதில்லை. ஸாத்மியங்களால் மட்டுமே கரு தோன்றுமானால் ஸாத்மியமில் லாத உணவுப் பொருட்களைப் பயன்படுத்துபவர்களெல்லாம் குழந்தைகளே இல்லாதவர்களாகி விடுவார்கள். ஆனால் நடை முறையில் இவ்வாறில்லை. ஸாத்மியம், அஸாத்மியம் இரண்டை யும் பயன்படுத்தும் இரு தரத்தாருக்குமே குழந்தைகள் பிறக்கின் றன. (எனவே ஸாத்மிய உணவுவகைகளைப் புசித்தலே கரு வுக்குக் காரணமென்றுரைப்பது பொருந்தாது).

### ரசத்தினால் கரு தோன்றாது

(ஈ) உணவின்ரசத்தினால் கரு தோன்றுவதில்லை. அவ்வாறெனில் ஆண்பெண்களில் குழந்தையில்லாதவர்களே இருப்பதற்கில்லை (அனைவரும் உணவு ரசத்தைப் பருகுகிறார்கள் அல்லவா).

உயர்ந்த உணவுப் பொருட்களின் ரசத்தைப் பருகுகிறவர்களுக்கே கருவுண்டாகிறது என்றால் ஆடு மான் மயில் இவற்றின் இறைச்சி ரசங்களையும் பசும்பால் தயிர் நெய் இவற்றையும் தேன் எண்ணெய் சைந்தவலவணம் (கடலுப்பு) கரும்புச்சாறு பச்சைப்பயிறு சம்பாஅரிசி இவைகளையும் பயன்படுத்துபவர்களுக்கே கரு தோன்ற வேண்டும்.

தாழ்ந்த வகை உணவுப் பொருள்களான கம்பு வரகு சோளம் கிழங்குகள் வேர்கள் இவற்றைப் புசிப்பவர்களுக்குத் குழந்தைகள் தோன்றவே கூடாது. ஆனால் இரண்டும் அனுபவத்தில் காண்பது அரிது. (அதாவது உயர்வகை ரசங்களைப் பருகும் வழக்கத்தோர் சிலருக்கு குழந்தையில்லாமையும் தாழ்ந்த வகை ரசங்களைப் பயன்படுத்துபவரிடம் குழந்தைச் செல்வமும் காணகபடுகிறது என்பது கருத்து.)

(உ) மனத்துடன் கூடிய ஆன்மா (ஸத்துவம்) வேறு உலகிலிருந்து வந்து கருவைத் தோற்றுவிக்கிறது என்றும் கூற முடியாது. அவ்வாறாகில் முற்பிறவியில் தான் அறிந்த செவியுற்ற கண்டவைகள் இப்பிறவியில் நினைவுக்கு வரவேண்டும். அவ்வாறு நடக்கவில்லை. எனவே முற்பிறவியைச் சேர்ந்த மனமும் ஆன்மாவும் வந்து கருவைத் தோற்றுவிப்பதாகக் கூறுவதும் பொருந்தாது.

### பரத்வாஜரின் முடிவுரை

எனவே நாம் இவ்வாறு கூறுகிறோம் – மேற்கண்ட காரணங்களால் கரு தாயிடமிருந்தும் தோன்றுவதில்லை. தந்தையிடமிருந்தும் தோன்றுவதில்லை. ஆன்மாவிடமிருந்தும் தோன்றுவதில்லை. ஸாத்மியத்தாலும் தோன்றுவதில்லை. உணவு ரசத்தினாலும் தோன்றுவதில்லை. அதேபோல் ஆன்மா கருவைத் தோற்றுவிப்பதில் மனமும் உதவியாக இருப்பதில்லை என்று பரத்துவாசர் கூறி முடித்தார். 4

### 3. பரத்துவாஜரின் கருத்து தவறானது என ஆத்திரேயர் நிரூபிக்கிறார்

மேற்கூறிய ஆண் பெண் விந்துக்கள் ஆன்மா உடலுடனொன்றி விடும் பொருட்கள் மனம் இவையனைத்தின் கூட்டமே

கருவுண்டாகக் காரணமாகின்றது. (இவற்றில் எதையும் கருவுக்குக் காரணமல்ல என மறுக்க முடியாது) அதை முறையே காண்போம். 5

## 4. கரு தாயினால் தோன்றக் கூடியது

கரு தாயினால் தோன்றுகிறது :- தாயில்லாமல் கருவென்பதே தோன்றாதல்லவா ! குறிப்பாக [1]ஜராயுஜம் எனப்படும் மனிதப்பிறவி தாயினால்தான் தோன்ற வேண்டும். எனவே தாய் கருவுக்குக் காரணமாவாள்.

கருவின் எப்பகுதிகள் தாயினால் தோன்றக் கூடியவைகளோ மற்றும் தாயினால் தோன்றிய (விந்துவென்னும்) பொருளால் தோன்றுபவைகளோ அவைகளை விளக்குவோம்.

தோல் இரத்தம் மாமிசம் கொழுப்பு தொப்புள் இதயம் [2]குலோமா கல்லீரல் மண்ணீரல் விருக்கம் என்னும் மூத்திரக் குண்டிக்காய் வஸ்தி எனும் சிறுநீர்ப்பை மலப்பை இரைப்பை சீரணப்பை மேல் மலக்குடல் கீழ் மலக்குடல் சிறுகுடல் பெருகுடல் வபை என்னும் வயிற்றின் நிணம் வபாவஹனம் என்னும் எண்ணெய் வர்த்தி இவையனைத்தும் கருவுக்குக் காரணமான தாயின் விந்துவினால் தோன்றுபவை. 6

## 5. தந்தையினாலும் கருவின் சில பகுதிகள் தோன்றுகின்றன

கரு தந்தையினால் தோன்றுகிறது. தந்தையின்றி கருத் தோன்றாதல்லவா ! குறிப்பாக 'ஜராயுஜ'மென்னும் மனிதப் பிறவிக்குத் தந்தையே காரணம்.

தந்தையால் தோன்றும் கருவின் பகுதி எவையோ மறுபிறவியில் தோன்றுபவை எவையோ அவற்றை விரிவாகக் கீழே விளக்குவோம்.

தலைமயிர் மீசை நகங்கள் உரோமங்கள் பற்கள் எலும்புகள் தசைநார்கள் இரத்தக் குழாய்கள் விந்து இவைகளனைத்தும் தந்தையால் தோன்றுகின்றன. 7

---

1. ஜராயுஜம் — கருவின் மீது கவிந்துள்ள ஒரு பொறைஜராயு. அதிலிருந்து வெளிப்படும் பிறவி 'ஜராயுஜம்' எனப்படும்.
2. குலோமா — பித்த நீரில் ஒரு பகுதியைச் சுரப்பிக்கும் நீண்டதோர் நரம்புமுடிச்சு. (கிரந்தி)

### 6. கரு ஆன்மாவினால் தோன்றும் வகை

ஆன்மாவினால் கரு தோன்றும். கருவிலுள்ள உயிரே 'அந்த ராத்மா' என்றும் 'ஜீவன்' என்றும் அழைக்கப்படுகிறது.

ஜீவன் என்றென்றும் நிலையானவன், துன்பமில்லாதவன், மூப்பும் இறப்புமில்லாதவன், அழியும் இயல்பில்லாதவன், பிளக்க முடியாதவன், அறுக்க முடியாதவன், குழப்பமேற்படுத்த முடியா தவன், அசைகின்ற அசையாத பல உருவங்களுடன் கூடியவன், பலவகைச் செயல்களுள்ளவன், விளங்காதவன், ஆதியும் அந்த மும் இல்லாதவன், மாறுதலடையாதவன்.

இத்தகைய அந்தராத்மா கருப்பையில் சேர்ந்து ஆண் பெண் விந்துக்களுடன் கலந்து தன்னைத்தானே கருவாக்கிக் கொண்டும் அந்தக் கருவைத் தோற்றுவித்துக் கொண்டும் அதில் பரவியுள்ள தனக்கு ஆன்மா (ஜீவாத்மா) என்னும் பெயரையும் பெறும்.

அந்த ஆன்மா அலாதியானதால் அதற்கு முற்பிறவியொன்று இருந்ததெனக் கூற இயலாது. எனவே தான் பிறக்காமலே கருவை அது தோற்றுவிக்கும். அதே கரு நாளடைவில் இளமை வாலி பம் முதுமை என்னும் பருவங்களை அடைகிறது. அது எந்த எந்த நிலையில் இருக்கிறதோ அந்த அந்த நிலையில் அது பிறந்த தாகக் கூறப்படுகிறது. வருங்காலத்தில் என்ன என்ன நிலை வரப் போகிறதோ அந்த நிலையில் பிறக்கப் போவதாகவும் கூறப்படும்.

எனவே தற்போது தனக்கிருக்கும் நிலையையொட்டிப் பிறந்த தாகவும் வரப்போகும் நிலையையொட்டிப் பிறவியில்லாததாக வும் ஓர் ஆன்மாவே ஒரே சமயத்தில் கூறப்படும்.

அத்தகைய பிறத்தல் பிறவாதிருத்தல் என இருநிலைகளைக் கொண்ட ஆன்மா தற்போதுள்ள நிலையையொட்டி பிறந்ததாக வும் வரப்போகும் நிலையையொட்டி பிறக்காததாகவும் ஆகிறது.

அந்நிலையிலிருக்கும் ஆன்மா தான் பிறந்து வரப்போகும் நிலையில் தன்னைத்தான் தோற்றுவித்துக் கொள்ளும். மற்றும் கரு அந்த அந்த நிலைகள் தோன்றுவதற்கு முன்பாக தான் பிறக்காமலே இருந்து தன்னைப் பிறப்பித்துக் கொள் ளும்.

எல்லாக் காலங்களிலும் ஸத்ரூபமாக (உண்மையுருவாக) இருக் கும் ஆன்மாவுக்கு தற்போதுள்ள நிலையை விட்டு வேறொரு நிலையை அடைவதே பிறவியெனக் கூறப்படும்.

'ஸத்' ரூபமாக இருக்கும் ஆண் பெண் விந்துக்களுக்கு அவை ஒன்று சேருவதற்கு முன்பில்லாத 'கரு' என்னும் பெயர் இவ்விரு

விந்துக்கள் ஆன்மா என இம்மூன்றும் ஒன்று சேர்ந்து கருப்பையை அடைந்தபோது எவ்வாறு உண்டாகுமோ மற்றும் ஓர் ஆணுக்கு மகப்பேறு உண்டாவதற்கு முன்னில்லாத 'தந்தை' எனும் பெயர் மகப்பேறு உண்டான பிறகு எவ்வாறுண்டாகுமோ அவ்வாறே தற்போது இருக்கும் கருவின் அந்த அந்த வாலிபம் முதலிய பருவங் களில் பிறவியும் பிறவியில்லாமையும் கூறப்படும் என்பது கருத்து. 8

## 7. கருவைத் தோற்றுவிப்பதில் ஆன்மாவின் சுதந்திரம்

கருவைத் தோற்றுவிக்கும் விஷயங்களனைத்திலும் தாய் தந்தையருக்கோ ஆன்மாவுக்கோ தன் விருப்பப்படி செய்து கொள்வதற்கு நிலையான முழுச் சுதந்திரம் கிடையாது. சில வற்றைச் சுதந்திரமாகவும் சிலவற்றை முன் வினைப்படியும் சிலவற்றைச் செய்யும் திறமையையொட்டியும் செய்வார்கள். சில இடங்களில் செய்யும் திறன் இராது.

எந்த இடத்தில் ஸத்துவம் முதலானவையும் செய்திறனும் உள்ளனவோ அங்கு தன் வலிவுக்கேற்றபடி விரும்பிய செயலைப் புரிவர். அவ்வாறில்லையேல் செய்ய முடியாது.

செய்யும் சாதனப்பொருட்களில் குற்றமிருந்தால் ஆன்மா கருவைத் தோற்றுவிப்பதில் திறனற்றுப் போகும் என்பதற்கில்லை.

செயற்பாடு விருப்பமான பிறவி அணிமா முதலிய செல்வச் சிறப்பு மோட்சம் என்பவையனைத்தும் ஆன்மாவைச் சார்ந் தவையே என்பதை ஆன்ம ஞானிகள் கண்டறிந்துள்ளார்கள்.

இன்பதுன்பங்கள் இரண்டிற்கும் கர்த்தா ஆன்மாவைக் காட் டிலும் மற்றொன்றில்லை. ஆன்மா தவிர மற்றொன்றினால் கரு தோன்றுவதில்லை. விதையில்லாமல் முளையுண்டாவதில்லையே! 9

## 8. கருவில் ஆன்மாவினால் தோன்றுபவை

ஆன்மாவினால் தோன்றுபவைகளையும் ஆன்மா கருவுடன் ஒன்றியிருப்பதனால் தோன்றுபவைகளையும் விளக்குவோம்.

அந்த அந்த கருப்பையில் பிறத்தல் ஆயுள் ஆன்ம அறிவு மனம் புலன்கள் பிராணம் அபானம் முதலிய உடற்காற்றுகள் புலன்களைத் தூண்டுதல் அவற்றைத் தாங்குதல் உருவம் குரல் நிறம் என்பவற்றின் சிறப்பு இன்பம் துன்பம் விருப்பு வெறுப்பு உணர்வு தாங்கும் திறன் அறிவு நினைப்பு அகங்காரம் (செருக்கு) முயற்சி என்பவையனைத்தும் ஆன்மாவினால் தோன்று பவை. 10

## 9. ஸாத்மியத்தினால் கருவுண்டாகிறது.

ஸாத்மியத்தினால் அதாவது உடலுடன் ஒன்றிப்போகும் உணவுப் பொருட்களால் கருவுண்டாகிறது. உடலுடன் ஒன்றாத பொருட்களைப் பயன்படுத்தினாலன்றி ஆண் பெண்களுக்கு மலட்டுத்தன்மை தோன்றுவதில்லை. மற்றும் கருவில் உடலூனம் போன்ற தீமைகளும் தோன்றுவதில்லை.

அஸாத்மிய (உடலுடன் ஒன்றாத) பொருட்களைப் பயன் படுத்துகின்ற ஆண் பெண்களுக்கு மூன்று தோஷங்களும் கோளா றடைந்து உடலெங்கும் பரவினாலும் அவை ஆண் பெண் விந்துக் களையும் கருப்பையையும் அழிக்காதவரையில் கருவைத் தோற்று விக்கும் திறமை கொண்டிருக்கும்.

## 10. ஸாத்மியப் பொருட்களால் தோன்றுபவை

உடலுடன் ஒன்றிப்போகும் ஸாத்மியப் பொருட்களைப் பயன் படுத்துபவர்களும் கெட்டுப்போகாத விந்து, கருப்பைகளை உடை யவர்களுமான ஆண் பெண்கள் ருதுகாலத்தில் புணர்ந்தாலும் ஜீவன் நுழையாவிடில் அவர்களுக்குக் கரு தோன்றுவதில்லை. பல வகைக் கூட்டுப் பொருட்களால் தோன்றும் கரு, ஸாத்மியப் பொருளால் மட்டும் தோன்றாதல்லவா !

ஸாத்மியங்களால் தோன்றிய கருவுக்கு ஸாத்மியப் பொருட் களைப் பயன்படுத்துவதால் ஏற்படும் சிறப்புகளை விவரிப்போம். உடல் நலம் சோம்பலின்மை புலன்களின் செயல்களில் உறுதிப் பாடு புலன்களின் தெளிவு குரல் நிறம் விந்துக்கள் இவற்றின் செழிப்பு மகிழ்ச்சிப் பெருக்கு இவையனைத்தும் ஸாத்மியப் பொருட்களைப் பயன்படுத்துவதால் ஏற்படுகின்றன. 11

## 11. கரு சுவைகளால் தோன்றுகிறது

கரு சுவைகளாலும் தோன்றுகின்றது. சுவையுள்ள உண வில்லையேல் தாய் உயிர் வாழவும் முடியாது. இவ்வாறிருக்க கரு எவ்வாறு தோன்றும்? இந்தச்சுவைகளை முறைப்படி பயன்படுத்தா விடில் கரு தோன்றாது. அவ்வாறு முறைப்படி அவற்றைப் பயன் படுத்துவதொன்றினால் மட்டுமே கருத் தோன்றும் எனச் சொல்ல வும் முடியாது. கூட்டுப் பொருட்களே கரு தோன்றக் காரணம் ஆகும்.

## 12. சுவைகளால் கருவில் தோன்றுபவை

கருவுக்கும் அதனால் தோன்றியதற்கும் சுவைகளால் உண் டாகும் சிலவற்றை விவரிப்போம். அவையாவன, உடலைச்

சேர்ந்த உறுப்புகளும் துணையுறுப்புக்களும் விளக்கமாகத் தெரிதல் அவற்றின் வளர்ச்சி வலிவு கொள்ளுதல் மனநிறைவு உறுப்புக்களில்புஷ்டி உற்சாகம் என்பவையனைத்தும் சுவைப் பொருட்களைப் பயன்படுத்துவதால் தோன்றுகின்றன. 12

## 13. மனம் ஜீவனை வேறொரு உடலுடன் சேர்ப்பிக்கும்

'ஸத்துவம்' எனப்படும் மனம் 'ஔபபாதகம்' (ஆத்மாவுடன் வேறுடலைச் சேர்ப்பிப்பது) எனப்படும். எது நுண்ணிய உடலுடன் கூடிய ஆன்மாவுடன் இடைவிடாமல் தொடர்பு கொண்டு அவ்வான்மாவை வேறொரு உடலுடன் தொடர்பு கொள்ளச் செய்கின்றதோ,

எது வேறுடலை நோக்கிச் செல்லத் தொடங்கும்போது தனது இயற்கைகுணம் மாறப் பெற்றிருக்குமோ, எதன் விருப்பம் மாறுபட்டிருக்குமோ,

கண் முதலிய புலன்களனைத்தும் வெம்மை கொள்ளுமோ வலிவு குறையுமோ, நோய்கள் வளருமோ,

எது இல்லாத போது உடலைவிட்டு உயிர் நீங்கிவிடுமோ எது புலன்களுக்கு அவ்வவற்றிற்குரிய பொருட்களை அறியும் திறனைத் தோற்றுவிக்குமோ அதுவே அத்தகைய இலக்கணங்கள் அமையப் பெற்றதே 'மனம்' எனக் கூறப்படும்.

அம்மனம் சாத்துவிகம் ராஜஸம் தாமஸம் என மூவகைப்படும்.

முற்பிறவியில் உடலுடன் தொடர்புகொண்ட மனம் முன் கூறிய சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களில் எந்த குணத்தை இறுதிக்காலத்தில் அதிகமாகக் கொண்டிருக்குமோ அந்தக் குணம் நிரம்பிய மனமே இரண்டாவது பிறவியிலும் தொடர்ந்து வரும்.

முற்பிறவியின் இறுதியில் மனம் சத்துவமென்னும் குணம் நிரம்பியதாக இருந்து இரண்டாவது பிறவியைத் தொடர்ந்து வந்தால் முற்பிறவியைச் சேர்ந்த செய்திகளனத்தையும் நினைவு கொள்ளும் திறமை பெற்றிருக்கும். அதற்குக் காரணம் அந்த ஆத்மா சத்துவ குணம் பொருந்திய மனத்துடன் சேர்ந்திருப்பதுதான், அத்தகைய மனத்தொடர்பினால் முற்பிறவியறிவு கொண்டிருப்பதாலேதான் மனிதன் 'ஜாதிஸ்மரன்' அதாவது முற்பிறவியறிவு பெற்றவன் எனக் கூறப்படுகிறான்.

### 14. மனத்தினால் தோன்றுபவை

சத்துவமென்னும் மனத்தினால் தோன்றிய கருவுக்கு அதனால் என்னென்ன சிறப்புகள் உண்டாகுமோ அவைகளை விளக்குவோம். அதெவ்வாறெனில் விருப்பம் நன்னடத்தை தூய்மை பகையுணர்ச்சி நினைப்பு மயக்கம் தியாகம் பொறாமை சூரத்தனம் அச்சம் சினம் சோம்பல் உற்சாகம் கடுமை மென்மை கம்பீரத்தன்மை நிலையில்லாமை இவை முதலானவைகளனைத்தும் மனத்தினால் தோன்றுபவை.

அந்த மனத்தின் மாறுதல்களைப் பற்றி மேலே விளக்குவோம்: சத்துவமென்பது பலவகையானது. அவையனைத்தும் ஒரே மனிதனிடம் இருக்கும். ஆனால் ஒரே சமயத்தில் அல்ல. அவனுடைய அவ்வப்போதைய நினைப்புக்குத் தக்கபடி இம்மூன்று நிலைகளும் மாறி மாறி இருக்கும். 13

### 15. கூட்டமைப்பினாலேயே கரு தோன்றும்

பலப்பொருட்களின் சேர்க்கையாலே யன்றோ 'கூடாரம்' என்பது உருவாகிறது. பல பொருட்களின் கூட்டத்தால்தான் அன்றோ தேர் உருவாகிறது. அதேபோல் கருவுக்குக் காரணங்களான பலவகைப் பொருட்களின் கூட்டினாலேதான் கரு தோன்றுகிறது. எனவே நாம் கூறுவோம்—தாய் தந்தை ஆன்மா சுவை இவையனைத்தின் சேர்க்கைனாலும் கரு தோன்றுகிறதென்றும் சத்துவமென்னும் மனமே ஆன்மாவை வேறுடலுக்குச் செலுத்துவதென்றும் பகவான் ஆத்ரேயர் கூறி முடித்தார். 14

### 16. பல பொருட்களின் கூட்டினால் கரு தோன்றுகிறது என்பதற்கு பரத்துவாசரின் மறுப்பு

(அ) கருவைத் தோற்றுவிக்கும் திறன் பெற்ற பலவற்றின் கூட்டினால் கரு தோன்றுகிறது என்று கூறப்பட்டது. அவ்வாறாகில் எவ்வகையில் அவையனைத்தும் ஒன்றுகூடிக் கருவை உருவாக்குகின்றன ?

(ஆ) ஏதோ ஒரு வகையில் அவை கலந்திடினும் அக்கூட்டினால் தோன்றிய கரு ஏன் மனித உருவாகப் பிறக்க வேண்டும் ?

'பசுவினால் பசு பிறக்கிறது. குதிரையினால் பிறப்பது குதிரையே. அதேபோல் மனிதனால் மனிதன்தானே பிறக்க வேண்டும்' என்றால் பலவற்றின் கூட்டினால் கரு தோன்றுகிறது என்று முன்பு கூறியது எவ்வாறு பொருந்தும் ? குதிரை, பசு, மனிதன்

மூன்றும் கலந்த ஓர் உருவமன்றோ தோன்ற வேண்டும். மனித னால் மனிதன்தான் தோன்றுவான் என்பதை ஒப்புக்கொண் டாலும் மந்தன் குருடன் கூனன் ஊமை குள்ளன் மூக்கால் பேசுபவன் உடலூனமுள்ளவன் பைத்தியம் குஷ்டரோகி படை ரோகமுள்ளவன் என்ற பலவகையான குறைகளும் நோய்களு முள்ள தாய் தந்தையருக்குப் பிறப்பவன் அதே குறைகளுடனும் நோயுடனும் ஏன் பிறப்பதில்லை ?

இதற்குச் சமாதானமாக இவ்வாறு கூறலாம். அதாவது ''ஒரு கருவுடன் இணைந்துள்ள ஜீவன், தான் முற்பிறவியில் ஈட்டிய வினைகளுக்கேற்ப தனக்குத் தோன்றிய கட்புலனாலேயே நிறத் தையும், செவிப்புலனால் ஒலியையும், மூக்கென்னும் புலனால் மணத்தையும், நாவினால் சுவைகளையும், தொடுப்புலனால் தொட்டுணர்ச்சியையும் அறிவான். மற்றும் அத்தகைய முன் வினைப்படி அமைந்த புத்தியாலேயே அறிய வேண்டியவைகளை அறிவான். முன்வினைப்படியே புலன்களும் அறிவும் தோன்று கின்றன என்ற காரணத்தினால்தான் குருடர் முதலான தாய் தந்தையர்களின் குருட்டுத்தனம் முதலியவை கருவுக்கு ஏற்படுவ தில்லை.''

இந்தச் சமாதானமும் பொருந்தாது. ஏனென்றால் முன்பு ''ஆன்மா ஞான உருவானதென்றும் எவ்வித மாறுதலையும் அடையாத''தென்றும் கூறி அறுதியிட்டதற்குக் குறை ஏற்படும்.

புலன்களுள்ளபோது அவற்றின் மூலம் ஆத்மாவுக்கு அந்த அந்தப் புலன்க்ளின் பொருட்களைப் பற்றிய அறிவு உண்டாகு மென்றும் புலன்கள் இல்லாதபோது உண்டாகாதென்றும் கூறி னால் ஆன்மாவுக்கு அறிவு அறிவில்லாமை என்ற இந்நிலை ஏற்பட்டு மாறுபாடுள்ளது ஆன்மா என்றாகிவிடும். அப்பொழுது அறிவில்லாத நிலையில் ஆன்மா பிறவிக்குக் காரணமாகாது. காரணமாகாமையால் அது ஆன்மா என்ற பெயரையும் பெறாது. அதாவது ஆன்மா தன்னுடைய கண் முதலான புலன்களாலே நிறம் முதலியவைகளை அறிகிறது என்பது வெறும் பேச்சேயன்றி பயனுள்ள பேச்சல்ல'' என்று கூறி முடித்தார் பரத்துவாசர். 15

## 17. ஆத்திரேயர் கூறுகிறார்

ஆன்மாவுடன் கூடிய மரம் 'ஆதிவாஹிக சரீரம்' எனப்படும். நுண்ணிய உடலைச் சாதனமாகக் கொண்டு அனுபவச் சாதன மான வேறுடலுக்கு ஆன்மாவை சேர்ப்பிக்கும் என்று நாம் முன்பே அறுதியிட்டுக் கூறியுள்ளோம்.

கூட்டுப் பொருட்களால் தோன்றும் கரு மனித உடலால் தோன்றுவதால் மனிதன் மனிதனால் தோன்றுகிறான் என்று கூறப்படுகிறது. அதையே விளக்குவோம். [1]ஜராயு [2]அண்டம் [3]ஸ்வேதம் [4]உத்பித் என உயிரினங்களுக்கு நான்கு தோன்றுமிடங்கள் (யோநிகள்) உள்ளன.

பிராணிகளின் உருவங்கள் எண்ணற்றவைகளாக இருப்பதால் இந்நால்வகை யோனிகளில் ஒவ்வொன்றும் எண்ணற்றவைகளாக இருக்கும்.

மனிதன் பறவை என்ற உயிரினங்களுக்குக் கருவைத் தோற்றுவிக்கின்ற பொருட்கள் எந்தக் கருப்பையைச் சென்றடைகின்றனவோ அந்தக் கருப்பையில் அந்தப் பிராணிக்குரிய உருவம் கொண்டிருக்கின்றன.

பொன் வெள்ளி செப்பு தகரம் ஈயம் என்னும் உலோகங்களை ஒன்றாகச் சேர்த்து உருக்கி மனிதன் முதலான உருவங்களைத் தேன்மெழுகினால் அமைக்கப்பட்ட மண்மூசாவில் வார்த்தால் அந்த அந்த மனிதன் முதலான உருவங்கள் அந்த உலோகங்களின் கூட்டினால் தோன்றும். அதேபோல் கருவுக்குக் காரணமான ஆண் பெண் விந்து முதலிய கூட்டுப் பொருட்கள் மனிதக் கருப்பையை அடைந்தபோது மனித உருவிலும் மிருகங்கள் முதலியவற்றின் கருப்பைகளில் சேர்ந்தபோது பசு முதலான உருவங்களுடனும் ஏற்படும் என்பது கருத்து.

எனவே ஆண், பெண் விந்துக்கள் முதலானவற்றின் கூட்டான கரு, மனிதக் கருப்பையை அடைந்தால் மனித உருவுண்டாகும். மனிதனால் தோன்றுவதால் மனிதன் என்றும் மனிதப்பிறவி என்றும் கூறப்படுகிறான். 16

## 18. மந்தகுணமுள்ள தாய் தந்தையருக்குப் பிறந்தவர்க்கு அக்குறை இல்லாத காரணம்

மனிதனால் மனிதன் தோன்றுகிறான் என்றால் மந்த குணமுள்ள தாய் தந்தையர்களுக்குப் பிறந்தவர் அவர்களைப் போல்

---

(1) ஜராயு – கருவில் சிசுவைக் கவிந்திருப்பது. 'மாயை'யென்றும் கூறுவர்.

(2) அண்டம் – முட்டை, பறவை முதலானவைகளைக் கவிந்திருப்பது.

(3) ஸ்வேதம் – வேர்வை, பேன் முதலியவை தோன்றக் காரணமானது.

(4) உத்பித் – நிலத்தைப் பிளந்து வெளிவருவது. செடி, கொடி முதலியவை.

ஏன் இருப்பதில்லை என்னும் ஆட்சேபத்திற்குப் பதிலுரைப் போம்.

கருவின் தோற்றக் காரணமான ஆண் பெண் விந்துக்களாகிய விதையில் எந்தப் பகுதி வாதம் முதலிய தோஷங்களால் கெட்டு விடுமோ அந்த விதைப்பகுதியால் தோன்றிய உடலுறுப்பில் குறைபாடு உண்டாகும். அவ்விதை கெடாமலிருந்தால் குறை பாடு இராது.

எல்லோருக்கும் புலன்கள் ஆன்மாவினால் உண்டாகின்றன. (அதாவது ஆன்மாவைச் சேர்ந்த நல்வினை தீவினைகளை யொட்டிப் புலன்கள் உண்டாகின்றன என்பது கருத்து).

கண் செவி முதலிய புலன்கள் இருப்பதற்கும் இல்லாமற் போவதற்கும் முன்வினைகளே காரணங்களாகும். எனவே மந்த குணமுள்ள தாய் தந்தையருக்குப் பிறந்தவர்கள் தாய் தந்தை யருக்குள்ள உடலூனத்தையே கொண்டிருக்க வேண்டுமென்று அறுதியிட்டுக் கூறமுடியாது என்று அறிக. 17

## 19. ஆன்மா அறிவுடையது எனச் சாதித்தல்

புலன்களுள்ளபோது ஆன்ம அறிவுள்ளதென்றும் அவையில் லாதபோது ஆன்மா அறிவில்லாததென்றும் கூறமுடியாது. ஏனெ னில் மனத்துடன் தொடர்பில்லாமல் கண நேரமும் ஆன்மா இருப்பதில்லை. மனத்தின் சிறப்பினாலேயே அறிவின் சிறப்புண் டாகிறது.

கர்த்தாவான (செய்பவனான) ஆன்மாவிற்குப் புலன்களால் சாதிக்க வேண்டிய பொருட்களைப் பற்றிய அறிவு, புலன்களின் தொடர்பில்லாமல் உண்டாகாது.

பானைகளைப் படைக்க வேண்டிய குயவனுக்குப் பானை களுக்கு முக்கியக் காரணமான களிமண் இல்லாதபோது அவை களைப் படைக்க முடியாது. அதனால் மட்டுமே குயவன் பானை களைப் படைக்கும் அறிவில்லாதவன் என்று கூறமுடியுமா ?

(அதேபோல் புலன்களின் தொடர்பு ஒரு சமயம் இல்லாத போது அறிவு தோன்றாததை வைத்து ஆன்மா ஞானமற்றதென் பது தகாது.) 18

## 20. ஆன்ம அறிவின் வலிவு

பரத்துவாசர் : ஆன்மாவைப் பற்றிய அறிவு 'ஆன்மஞானம்' எனப்படும். அந்த ஆன்மவலிவு மிகச் சிறந்தது. அதைப்பற்றி உரைக்கிறேன் கேள். புலன்களை அவற்றின் பொருட்களின் மீது

செல்லவொட்டாமல் தடுத்து நிறுத்தி மனத்தின் வசத்தில் வைத்து சஞ்சலமான மனத்தைக்கட்டுப்படுத்தி ஆன்மாவின் மீது நிறுத்தி ஆன்ம அறிவு ஒன்றின் மீது மட்டுமே நிலைத் திருந்தால் அத்தகையவன் ஆன்மஞானமொன்று மட்டுமே உள்ள வனாவான். அவன் சமாதி நிலையின் வலிவினால் எல்லாவற்றின் மீதும் பரவியுள்ள அறிவைக் கொண்டு அனைத்தையும் அறியும் திறமை கொண்டிருப்பான். *19–20*

## 21. ஆன்ம அறிவு எல்லா அறிவுகட்கும் காரணம்

பரத்துவாசா ! மற்றொரு முடிவைக் கூறுகிறேன். தெரிந்து கொள்வாயாக. புலன்கள் வாக்கு உடல் இவற்றின் செயல்கள் நீங்கப்பெற்று இன்பமாக உறங்கி கனவு நிலையைப் பெற்ற போது வெளிப்புன்லகளுக்கு இலக்காகின்ற 'ஒலி' முதலியவை களையும் உட்புலன்களுக்கு இலக்காகும் இன்ப துன்பங்களையும் நன்கறிவான். அப்பொழுது புலன்கள்செயல்படாமை காரணமாக ஆன்மா அறிவற்றவன் ஆகாதன்றோ !

மற்றும், ஆன்ம அறிவில்லாவிடில் மற்ற எந்த அறிவும் உண் டாகாது. தோன்றும் இயல்புடையது (பாவம்) அனைத்தும் அதைத் தோற்றுவிப்பவன் (கர்த்தா) உதவியின்றித் தானே தோன்றாது. அத்தகைய தோற்றுவிப்பவனுக்கும் துணைப் பொருட்களின் உதவியில்லையேல் எதையும் தோற்றுவிக்க முடி யாது.

## 22. இவ்வத்தியாயத்தின் பொருட்சுருக்கம்.

மேற்கூறிய காரணங்களால் ஆன்மா அறிவின் உருவானது இயற்கை உருவானது, அனைத்தையும் காண்பது (த்ரஷ்டா) காரணமும் ஆவது என்பது உறுதி செய்யப்பட்டது.

எனவே பரத்துவாசா ! உன் மனத்தில் தோன்றிய ஐயப் பாடனைத்தையும் துறந்துவிடு. *21–25*

## 23. முடிவுரை

கரு தோன்றுவதற்கும் அது வளர்வதற்கும் பிறப்பதற்கும் காரணங்களைக் கூறும் விஷயத்தில் புனர்வசு என்னும் ஆத்ரேய ரின் மதம் பரத்துவாசரின் மதம் ஆத்திரேயரின் சித்தாந்தத்தின் மீது பரத்துவாசரின் மறுப்புகள் ஆன்ம அறிவை முடிவு செய்ததின் வாயிலாக ஆத்திரேயர் அறுதியிட்ட 'ஆன்மா ஞான

முள்ளதே' என்னும் முடிவு இவையனைத்தும் 'குட்டீகா கர்ப்பா வக்ராந்தி' என்னும் இவ்வத்தியாயத்தில் விவரிக்கப்பட்டன. 26–27

அக்நிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை சாரீரஸ்தானத்தில் 'குட்டீகாகர்பாவக்ராந்தி சாரீரம்' என்னும் மூன்றாவது அத்தியாயம் முற்றும்

## நான்காவது அத்தியாயம்

# *மஹாதீகர்ப்பாவக்ராந்தி

'மஹாதீகர்ப்பாவக்ராந்தி சாரீர'மென்னும் அத்தியாயத்தை விளக்குவோம். 1-2

### 1. எட்டு விதமான வினாக்கள்

(அ) எதிலிருந்து கரு தோன்றுகிறது ?

(ஆ) கரு என்று எதற்குப் பெயர் ?

(இ) கரு எத்தகைய பொருள்களின் மாறுதலினால் உருவாகிறது ?

(ஈ) கருப்பையில் கருவின் உறுப்புகள் எந்த வரிசையில் ஏற்படும்?

(உ) கருவை வளர்க்கும் காரணங்கள் யாவை ?

(ஊ) கரு எதனால் உண்டாவதில்லை ?

(எ) வயிற்றில் தோன்றிய கரு எக்காரணத்தால் அழியும் ?

(ஏ) கரு முழுவதும் அழியாமல் எக்காரணத்தால் மாறுபாடடையும் ? என எண்வகை வினாக்களுக்கு முறையே இனி விடை தருவோம் 3

### (அ) கருவைத் தோற்றுவிப்பவை

தாய் தந்தை ஆன்மா ஸாத்மியம் சுவை சத்துவம் எனும் மனம் இவை ஒன்றுகூடுவதால் கரு தோன்றுகிறது. கருவின் எந்த உறுப்பு எவற்றால் தோன்றுகிறதோ அதனையும் தாய் தந்தையர்களால் தோன்றுபவைகளையும் பற்றி தனித்தனியாக முன் அத்தியாயத்திலேயே கூறப்பட்டது. 4

### (ஆ) கரு என்ற பெயர் எதற்கு

தாய் தந்தையர்களின் விந்துக்களும் ஜீவனும் ஒன்று சேர்ந்து கருப்பையை அடைந்தபோது அது 'கரு' என்னும் பெயர் பெறுகிறது. 5

---

*மஹாதீகர்ப்பாவக்ராந்தி — முன் அத்தியாயத்தில் கரு தோன்றுவதற்கான காரணங்கள் சுருக்கமாகக் கூறப்பட்டன. அவற்றை விரிவாகக் கூறும் அத்தியாயம் இது என்பதை இவ்வத்தியாயப் பெயர் குறிக்கும்.

## (இ) கரு ஐவகைப் பூதங்களின் உருவானது

'கரு' என்பது விண் வாயு தேயு நீர் நிலம் என்னும் ஐந்து பூதங்களின் உருவமாய், சேதனை (உணர்வின்) உருவான ஆன்மாவுக்கு உறைவிடமாய் இருக்கும். எனவே கரு மேற்கூறிய யுக்தியினால் ஐவகை மகாபூதங்களின் உருக்கொண்டு, சேதனை என்னும் தாதுவுக்கு உறைவிடமாயிருக்கும். ஆன்மா கருவுக்கு ஆறாவது தாதுவாக இருக்கும். 6

## (ஈ) கருப்பையில் கரு தோன்றும் வரிசை

கருப்பையில் எந்த வரிசையில் கருவின் உறுப்புகள் தோன்றுமோ அதை விளக்குவோம். மாதவிடாய் காலம் கழிந்து விட்டதால் விஞ்சியுள்ள பழைய இரத்தம் வெளியாகி புதிய இரத்தம் வெளியாகாமல் தங்கியிருக்கும் பொழுது நீராடி பெண்குறி மாதவிடாய் இரத்தம், கருப்பை இம்மூன்றும் எவ்விதக் குற்றமுமில்லாமல் தூயவளாக இருக்கும் பெண், 'ருதுமதி' (பூப்புடையவள்) எனப்படுவாள்.

அவ்வாறுள்ள பெண்ணைக் குற்றமற்ற விந்துவுடன் கூடிய ஆண் புணரும்போது ஆணின் எல்லா தாதுக்களின் சாரமாயும், தூயதாகவுமுள்ள விந்து அக்காலத்தில் தோன்றிய மகிழ்ச்சிப் பெருக்கினால் தூண்டப்பட்டு ஒவ்வொரு உடலுருப்பினின்றும் வெளியாகும். வெளிவரும் அதுவே தாதுக்களின் சாரமான விந்து எனப்படும்.

அத்தகைய மகிழ்ச்சிப் பெருக்குடன் கூடிய ஆன்மாவினால் தூண்டப்பட்ட தூயதான விந்து ஆண் மகனின் உடலிலிருந்து வெளிப்பட்டுத் தக்கதொரு வழியின் வாயிலாகப் பெண்ணினுடைய கருப்பையைச் சேர்ந்து அவளுடைய விந்துவுடன் கலந்து (ஜீவதாது) விடும். இதுவே கரு தோன்றும் முறையாகும். 7

உணர்வென்னும் தாதுவின் உருவான ஆன்மாவாகி (ஜீவதாது) செயற்பாட்டுடன் கூடிய மனத்தைச் சாதனமாகக் கொண்டு ஒலி தொட்டுணர்ச்சி நிறம் சுவை மணம் என்னும் குணங்களுடன் கூடிய விண் முதலான ஐவகைப் பூதங்களை முதன் முதலாக அறியப் புகுகிறது.

(1) ஹேது(தோற்றக் காரணம்), (2) காரணம் (மூலக்காரணம்) (3) நிமித்தம் (பிறவிக்குக் காரணமான நன்மை தீமை செயல்களுக்குக் காரணம்), (4) அக்ஷரம் (அழிவற்றது), (5) கர்த்தா (கரு தோன்றச் செய்யும் சுதந்திரம் பெற்றது), (6) மந்தா (மனத்தைச் சாதனமாக்கிக் கொண்டு சிந்தனை புரியும் இயல்புடையது,)

(7) வேதிதா (எல்லாவற்றையும் அறியக் காரணமாவது), (8) போத்தா (எல்லாவற்றையும் அறிவது), (9) த்ரஷ்டா (எல்லாவற்றையும் அறிவதாகையால் அவையனைத்துக்கும் சாட்சியானது) (10) தாதா (அனைத்தையும் தன்னுள் அடக்கியுள்ளது), (11) பிரும்மா (அனைத்திலும் நிறைந்துள்ளமையால் சிறந்தது, (12) விச்வகர்மா (வினைகளனைத்திற்கும் ஆதாரமானது), (13) விச்வரூபம் (உலக உருவானது), (14) புருஷன் (உடலென்னும் பட்டணத்தில் வசிப்பது), (15) ப்ரபவம் (மனம், புலன்கள் முதலியவைகளின் செயல்களின் தோற்றக்காரணம்),(16)அவ்யயம் (தானாக மாற்றுருவம் மாறுபாடு இவைகளையடையாதது), (17) நித்யம் (தோற்றமும் மறைவுமில்லாதது), (18) குணி (ஐவகைப் பூதங்களின் குணங்களுடன் கூடியது), (19) க்ரஹணம் (பூதங்களைத் தன்பால் ஈர்ப்பது, (20) ப்ரதாநம் (சுதந்திரமானது), (21) அவ்யக்தம் (புலன்களுக்கு இலக்காகாதது), (22) ஜீவன் (உயிருக்கு ஆதாரமானது), (23) க்ஞன் (நினைவுருவானது, (24) புத்கலம் (ஜைனமதக் கோட்பாட்டின்படி பரமாணுவுருவான ஜீவன்), (25) சேதநாவான் (உணர்வுள்ளவன்), (26) விபு (காரணங்களைக் கொண்டு பல உருவாகப் பிறப்பது), (27) பூதாத்மா, (28) இந்திரியாத்மா, (29) அந்தராத்மா எனப் பொருளுக்கேற்ப பல பெயர்களால் இந்த ஆத்மா குறிப்பிடப்படுகிறது.

இத்தகைய ஆன்மா ஐவகைப் பூதங்களின் குணங்களை அறியும்போது வாயு முதலியவற்றின் குணங்களை அறிவதற்கு முன்பாக விண்ணுடைய குணத்தை அறிகிறது. அதெவ்வாறெனில் மகாப் பிரளயமென்னும் ஊழிக் காலம் கழிந்து படைப்புக் காலத்தின் தொடக்கத்தில் மகாபூதங்களைப் படைக்க விரும்பும் பரமாத்மா ஸத்துவம் என்னும் மனத்தைக் காரணமாக்கி முதலாவதான ஆகாயத்தைப் படைக்கிறார். பிறகு முறையே விளக்கமான குணங்களைக் கொண்ட வாயு முதலான நான்கு தாதுக்களை வரிசையாகப் படைக்கிறார்.

அதேபோல் ஆன்மா உடலைத் தாங்கத் தொடங்கும்போது முதன் முதலாக ஆகாயமென்னும் பூதத்துடன் தொடர்பு கொள்கிறது. பிறகு முறையே விளக்கமான (வ்யக்த) குணங்களைக் கொண்ட வாயு முதலான நான்கு தாதுக்களுடன் சேருகிறது. ஆன்மா இவ்வாறு ஐந்து மகாபூதங்களுடன் தொடர்பு கொள்வது கணநேரத்தில் நிகழ்ந்து விடுகிறது. 8

## கரு தோன்றிய முதல் மாதத்தில் அதனுருவம் (ஈ தொடர்ச்சி)

விண் முதலிய ஐவகைப் பூதங்களுடைய குணங்களுடன் கூடிய ஆன்மா கருவுருவெடுத்து முதல் மாதத்தில் விளக்கமற்ற சுவை முதலிய தாதுக்களால் கலக்கப்பட்டு கபம் அல்லது நீர் கொப்பளம் போன்ற உருவம் பெறுகிறது. தெரிந்தும் தெரியாததுமான உடலுறுப்புகளைக் கொண்டமையால் அதனுருவம் இத்தகையதென நன்கு விளங்கா நிலையில் இருக்கும். 9

## இரண்டாவது மாதத்தில் கருவினுருவம் (ஈ தொடர்ச்சி)

முதல் மாதத்தில் கொப்பளம் போலிருந்த கரு இரண்டாவது மாதத்தில் கெட்டியாகி விடுகிறது. அது ஒருசமயம் முடிச்சுப் போலிருக்கும். மற்றொரு சமயம் பையைப் போல் நீண்டதாகவும் உருண்டையாகவும் இருக்கும். முடிச்சுப் போல் கெட்டியாக இருந்தால் ஆண் என்றும் பை போலிருந்தால் பெண் என்றும் உருண்டையாக இருந்தால் அலி என்றும் அறிய வேண்டும். 10

## மூன்றாவது மாதத்தில் கருவினுருவம் (ஈ தொடர்ச்சி)

மூன்றாவது மாதத்தில் கண் முதலிய எல்லாப் புலன்களும் தலை முதலிய உடற்பகுதிகளும் விரல்கள் முதலிய துணையுறுப்புக்களும் ஒரே சமயத்தில் தோன்றிவிடும். 11

## தாய் தந்தையரால் தோன்றும் உறுப்புக்கள் ஐவகைப் பூதங்களின் மாற்றுருவங்களே (ஈ தொடர்ச்சி)

கருவுக்குத் தோன்றும் உடலுறுப்புகளிலும் துணையுறுப்புக்களிலும் அன்னையினால் தோன்றியவை சில தந்தையால் தோன்றியவை எனப் பிரித்து மூன்றாவது அத்தியாயத்தில் கூறப்பட்டன.

இனி அவ்வுடலுறுப்புக்களில் சில துணையுறுப்புகள் இங்கு கூறப்படுகின்றன. அவைகளும் மகாபூதங்களின் மாற்றுருவங்களே.

அவற்றில் ஒலி செவி இலேசான தன்மை நுண்மை உறுப்புக்களின் பிரிவு இவை ஆகாயத்தின் மாறுதலாக இருக்கும்.

தொட்டுணர்ச்சி தொடுப்புலன் பிசுக்கு தூண்டும் சக்தி தாதுக்களை ஒன்று சேர்த்துத் தாங்குதல் உடலுறுப்புக்களைச் சேர்ந்த பலவகை அசைவுகள் இவையனைத்தும் வாயுவின் மாறுபாடுகள்.

நிறங்கள், அந்நிறங்களை அறியும் சக்தி ஒளி சமைக்கும் சக்தி, சூடு இவை தேயு என்னும் பூதத்தின் மாறுபாடுகள்.

சுவைகள் நாப்புலன் குளிர்ச்சி மென்மை எண்ணெய்ப்பசை ஈரம் என்பவை நீரின் மாறுபாடுகள்.

வாசனை நுகர்ப்புலன் பளு நிலையான தன்மை கடினத் தன்மை இவை நிலத்தின் மாறுபாடுகள். 12

### புருஷன் (ஆன்மா) உலகிற்கிணையானவன் (ஈ தொடர்ச்சி)

மேற்கூறியபடி புருஷன் உடலுடன் கூடிய ஆன்மா ஐவகைப் பூதங்களின் மாற்றுருவமானதால் ஐவகைப் பூதவுருவான வெளியுலகுக்கொப்பானவன்.

அதாவது உலகில் எத்தனை வகையான ஐம்பூதங்களின் குணங்கள் முதலியவை உளவோ அத்தனையும் புருஷனில் இருக்கின்றன. அதேபோல் புருஷனிடமுள்ளவை அத்தனையும் உலகில் உள்ளன. எனவே புருஷன் உலகிற்குச் சமமானவன்.

13

### பிரசவத்திற்குப் பிறகு தோன்றும் உறுப்புகள் (ஈ தொடர்ச்சி)

இவ்வாறு கருவுக்குப் புலன்களும் உடலுறுப்புக்களும் ஒரே சமயத்தில் தோன்றுகின்றன. பிற்காலத்தில், அதாவது குழந்தை பிறந்த பிறகு தோன்றும் சில உறுப்புக்கள் எவை எனில் பற்கள் மார்பகம், மீசை முதலியன. விந்துக்கள் அறிவு முதலியவைகளும் வெவ்வேறு நேரத்தில் தோன்றுபவை.

இவ்வாறு வெவ்வேறு காலத்தில் தோன்றுவது இயற்கை. அவ்வாறின்றி கருவிலேயே பற்கள் முளைப்பது போன்றது இயற்கைக்கு மாறானதாகும். கருவில் தோன்றும் சில உறுப்புக்கள் நிலையானவை, சில நிலையற்றவை.

### கரு, ஆண், பெண், அலியாகத் தோன்றக் காரணம் (ஈ தொடர்ச்சி)

கருவின் எந்த உடலுறுப்புக்கள் பிறந்தது முதல் இறுதிவரை நிலையாக இருக்கின்றனவோ, அவைகள் பெண்பால், ஆண்பால், அலித்தன்மை என்பவற்றின் சின்னங்களைக் கொண்டிருக்கும்.

மற்றும் ஆண் பெண் அலி என்னும் மூவகைப் பிறவிகளுக்கும் காரணமான ஆண் பெண் விந்துக்கள் சமமாக இருந்தால் அலியாகவும் பெண்மைக்குரிய குணங்கள் அதிகமாக இருந்தால் பெண்ணாகவும் ஆண்மைக்குரிய குணங்கள் அதிகமாக இருந்தால் ஆணாகவும் பிறவியுண்டாகும்.

அதெவ்வாறெனில் கோழைத்தனம் அச்சம் திறமையின்மை (மோகம்) உறுதியின்மை உடலின் அடிப்பகுதியில் பளு பொறுமையின்மை தளர்ந்துபோதல் மென்மை கரு தோன்றும் பெண்

விதைப் பகுதியும், மற்றவைகளும் அதிக அளவிலிருத்தல் என்பவையனைத்தும் பெண் பிறவியைத் தோற்றுவிக்கும். இதற்கு எதிரிடையான குணங்களை உடைய ஆண் விந்து ஆண் பிறவியை உண்டாக்கும். ஆண், பெண் இருவரின் உடற்பகுதிகளைச் சமமாகக் கொண்டிருந்தால் அது அலித்தன்மையைத் தோற்றுவிக்கும். 14

**புலன்கள் தோன்றும்போதே இன்ப துன்பங்களின் அறிவுத் தோற்றமும், இரு மன விருப்பமும் (ஈ தொடர்ச்சி)**

கருவுக்கு எக்காலத்தில் புலன்கள் உருவாகுமோ அக்காலத்திலேயே கரு உருவத்திலுள்ள சிசுவின் இதயத்தில் இன்பதுன்பங்களின் அறிவும், அவற்றுடன் தொடர்பும் ஏற்படும்.

அப்பொழுது அது முதல் கரு துடிக்கத் தொடங்கும். மற்றும் முற்பிறவியில் அனுபவித்தவை வேண்டுமெனக் கோரும். இது இரட்டை மனப்பான்மையென அறிவு முதிர்ந்தவர் கூறுவர்.

தாயின் விந்துவினால் தோன்றிய கருவின் இதயம் தாயின் இதயத்துடன் பிணைக்கப்பட்டிருக்கும்.

எனவே கருவுக்கும் தாய்க்கும் இடையே செல்லும் நாடிகளின் வாயிலாகக் கருவின் விருப்பம் தாயின் இதயத்தைச் சென்றடையும். அதனால் தாய் அப்பொருட்களைப் பற்றிய விருப்பத்தை வெளியிடுவாள். சில சமயங்களில் தாயின் இதயத்தில் தோன்றும் விருப்பம் கருவின் இதயத்திற்குச் செல்லும். எனவே இதற்கு (த்வைஹ்ருதயம்) இரு மன விருப்பம் எனப்பெயர்.

இக்காரணத்தினால்தான், கருவுற்ற காலத்தில் தாய்க்குண்டாகும் விருப்பத்தை நிறைவேற்ற அறிவாளிகள் விரும்புவார்கள். 15

**சூலுற்றவளின் கோரிக்கையை நிறைவேற்றாவிடில் தோன்றும் நிலைகள் (3-வது மாதக்கரு)**

அந்நேரத்தில் சில விஷயங்களில் தாயின் எண்ணமும் கருவின் எண்ணமும் ஒன்றாகவே இருக்கும். இன்ப துன்பங்களை விரும்புவதிலே தாயின் எண்ணமும் கருவின் எண்ணமும் ஒத்திருக்கும். இருவர் உள்ளமும் இணைந்திருப்பதால் தாயின் கோரிக்கையை நிறைவேற்றாவிடில் தனது கோரிக்கையையும் நிறைவேறாத காரணத்தால் கரு அழிந்துவிடும். அல்லது அதன் சில உறுப்புகளில் குறையாவது ஏற்படும்.

எனவே கருவுற்றவளுக்கு ஏற்படும் கோரிக்கையையே கருவின் கோரிக்கையாக ஏற்று அன்பும் இதமுமான செயல்களை தாய்க்கு புரியவேண்டுமென மருத்துவ வல்லுநர் குறிப்பாகக் கூறுவர்.

### சூலுற்றவளின் அறிகுறிகள் (3-வது மாதம் கருநிலை)

கருத் தொடங்கியதையும் கருவுக்கும் அதைத் தாங்கும் பெண்ணுக்கும் உள்ள கருத்தொருமைப்பாட்டை அறிவதற்கான சில அறிகுறிகளைச் சுருக்கமாகப் பேசுவோம். கருவின் அறிகுறிகளும் மனக்கருத்தொருமைப்பாட்டின் அறிகுறிகளும் தெரிந்தாலன்றி இவ்விரண்டிற்கும் ஏற்பப் பணிவிடை செய்ய முடியாது. இவ்விரண்டையும் பற்றிய அறிவு இவற்றின் அறிகுறிகளைக் கொண்டு தோன்றும். எனவே இவற்றின் அறிகுறிகளைப் பற்றி பேச வேண்டும்.

அதெவ்வாறெனில் மாதவிடாய் வெளிப்படாமலிருத்தல் வாயில் உமிழ்நீர் வெளிப்படுதல் உணவின்மீது விருப்பமின்மை வாந்தியெடுத்தல் இருமல் வாயில் சுவை மாற்றம் புளிப்பான பொருட்களின் மீது விருப்பம் குறிப்பாக உயர்ந்த பொருள் தாழ்ந்த பொருள் எனப் பாகுபாடில்லாமல் எல்லாவற்றின்மீதும் அக்கறை காட்டுதல் உடல் பளுவாயிருத்தல் கண் பஞ்சடைதல் தனங்களில் பால் சுரத்தல் உதடுகளிலும் தனங்களின் காம்புகளிலும் மிக்க கரு நிறம் காணுதல் பாதங்களில் சிறிது வீக்கம் மார்பில் உரோம வரிசையின் தோற்றம், பெண்குறி விரிவடைதல் என இவையனைத்தும் கரு தோன்றியிருப்பதற்கு அறிகுறிகளாகும். 16

### கருவுக்குக் தீமை விளைவிப்பவை (3-வது மாதக்கரு தொடர்ச்சி)

மேற்கண்ட அறிகுறிகளனைத்தையும் கவனித்து கருவுற்றவள் விரும்புபவைகளை அவளுக்குத் தவறாமல் தரவேண்டும். ஆனால் கருவுக்குத் தீங்கு விளைவிப்பவைகளை மட்டும் தரக்கூடாது. 17

கருவுக்குத் தீமை விளைவிப்பவைகளாவன — மிக்க குருகுணமும் சூடும் கடுமையும் உள்ள பொருட்களனைத்தும் மிக்க கடுமையான செயல்களும், கருவுக்குத் தீமை விளைவிப்பவை.

சிவப்புத் துணிகளை அணிந்தால் தேவதைகளும் அரக்கர்களும் அவர்களின் பணியாட்களும் இவளுடலில் புகுந்து துன்புறுத்துவார்கள். எனவே இவர்களின் துன்புறுத்தலைத் தவிர்ப்பதற்காகச் சிவப்புத் துணிகளை அணியலாகாது.

மதிமயக்கத்தைத் தோற்றுவிக்கும் மது முதலானவற்றை அருந்தலாகாது. குதிரை முதலிய வாகனங்களின் மீது ஏறலாகாது. மாமிசத்தைப் புசிக்கக்கூடாது. புலன்களனைத்துக்கும் தீமை விளைவிக்கின்றவையனைத்தையும் தொலைவிலேயே

ஒதுக்கிவிட வேண்டும். இவை தவிர தமது அனுபவத்தையொட்டி கருவுக்குத் தீமை விளைவிப்பவை என வயது முதிர்ந்த பெண் கள் கூறுகின்றவைகளையும் துறந்துவிட வேண்டும். 18

## சூலுற்றவளின் விருப்பத்தைத் தடுப்பதால் ஏற்படும் தீங்கும் அவற்றின் பரிகாரமும் (3-வது மாதக் கருநிலை தொடர்ச்சி)

அவள் விரும்பிய பொருளின் மீது விருப்பம் அளவு மீறி யிருந்து அது தீமை அளிப்பதாக இருப்பினும் அதை மற்றொரு நன்மை பயக்கும் பொருளுடன் கலந்தோ அல்லது அதிலுள்ள தீமைகளை நீக்கியோ கொடுத்து எப்படியாவது அவளுடைய விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்.

விருப்பத்தை நிறைவேற்றாமல் தடுத்தால் அதன் மூலம் வாதம் சீற்றமடைந்து உடலுக்குள் பரவி அப்பொழுதே மூன்றா வது மாதத்திலேயே கரு அழிந்துவிடும். அல்லது கரு உருமாற் றத்தை அடையும். 19

## நான்காவது மாதத்தில் கருவின் நிலை

நான்காவது மாதத்தில் கரு கெட்டியாகிப் பெரிதாகும். அத னால் கருவுற்றவளின் உடல் மிக்க பளுவாக ஆகிவிடும். 20

## ஐந்தாவது மாதத்தில் கருவின் நிலை

ஐந்தாவது மாதத்தில் கடந்த மற்ற மாதங்களில் இருந்ததைக் காட்டிலும் கருவின் மாமிசமும், இரத்தமும் மிகவும் வளர்ந்திருக் கும். அதனால் கருவுற்றவள் அப்பொழுது மிகவும் இளைத்துக் காணப்படுவாள். 21

## ஆறாவது மாதத்தில் கருவின் நிலை

ஆறாவது மாதத்தில் கருவின் வலிவு, நிறம் இவையிரண்டும் கடந்த மாதங்களைக் காட்டிலும் மிகவும் அதிகமாக வளர்ந்திருக் கும். அதனால் தாயின் வலிவும் நிறமும் மிகக் குறைந்திருக்கும். 22

## ஏழாவது மாதத்தில் கருவின் நிலை

ஏழாவது மாதத்தில் தாயின் ரஸம், இரத்தம் முதலிய தாதுக் களைப் போஷிக்கின்றவையனைத்தினாலும் கருவின் தாதுக்கள் ஒரேயடியாக ஊட்டம் பெற்றிருக்கும். அதனால் கருவுற்றவள் ஏழாவது மாதத்தில் வலிவு குன்றி வாட்டம் கொண்டிருப்பாள். 23

### எட்டாவது மாதத்தில் கருவின் நிலை

எட்டாவது மாதத்தில் கரு நிறைவு பெறாமலிருப்பதால், எல்லா தாதுக்களின் சாரமானதும், உயிர்வாழ இன்றியமையாதது மான 'ஓஜஸ்' என்னும் உடற்சக்தி தாயிடமிருந்து கருவுக்கும், கருவிலிருந்து தாய்க்கும் ரஸங்களை எடுத்துச் செல்லும் நாடிகளின் மூலம் மாறி மாறி அடிக்கடிச் சென்று கொண்டிருக்கும்.

அதனால் எட்டாவது மாதத்தில் பிரசவம் ஏற்பட்டால் கரு வுக்கு ஆபத்து ஏற்படும். இவையனைத்தையும் கவனத்தில் கொண்டு எட்டாவது மாதத்தை சூலுற்றவளறிய எண்ணக்கூடாது என்று அறிவாளிகள் கூறுவர். 24

### பிரசவ காலத்தை முடிவு செய்தல் (ஈ தொடர்ச்சி)

எட்டாவது மாதம் நிறைந்து ஒரு நாள் கழிந்தாலும் ஒன்ப தாவது மாதமாகக் கணக்கிட்டு அதைப் பிரசவ காலமென்பர்.

ஒன்பதாவது மாதம் தொடங்கி பத்தாவது மாதம் முடியும் வரையான காலம் பிரசவத்திற்குச் சிறந்த காலமாக இருக்கும். அதற்குமேல் வயிற்றில் தங்கும் கரு குற்றத்துடன் கூடியதெனக் கருத வேண்டும்.

மேற்கண்ட வரிசையில் கரு உருவாகிறதென அறிய வேண்டும். 25–26

### (உ) கரு வளர்வதற்குக் காரணம்

கரு தோன்றக் காரணமான தாய் தந்தை ஆன்மா ஸாத் மியம் ரஸம் ஸத்துவம் என்னும் இவ்வாறு வகைப் பொருட் களின் செழுமைச் சிறப்பு தாயின் சீரான நடவடிக்கை நாடி மூலம் கருவைச் சென்றடைகின்ற தாயின் ஆகார ரசம் தாய் மூலம் பரவுகின்ற உடற்சூடு மாதந்தோறும் ஏற்படுகின்ற மாற்றங்கள் வினைப்பயனாகத் தோன்றிய இயற்கை வளம் என்ற இவைகளால் வயிற்றில் நாளுக்கு நாள் கரு வளர்ச்சியடையும். 27

### (ஊ) கரு தோற்றாமைக்குக் காரணம்

கருவைத் தோற்றுவிக்கும் மேற்கூறிய அறுவகைக் காரணங் களுக்கும் குற்றம் குறைபாடுகள் ஏற்பட்டால் கரு தோன்றாது. 28

### (எ) தோன்றிய கரு வயிற்றிலேயே அழியக் காரணம்

முன்கூறிய கரு வளர்ச்சிக்கான காரணங்கள் குற்றமுற்றால் கரு வயிற்றிலேயே அழிந்துவிடும். அல்லது பிரசவ காலமெனக்

குறிக்கப்பட்டுள்ள காலத்திற்கு முன்பே வயிற்றிலிருந்து வெளிப் பட்டு விடும். 29

**(ஏ) கருவுக்கு விதை முதலிய குற்றங்களால் தோன்றும் மாறு பாடுகள்**

கரு முழுவதும் அழியாமல் மாற்றத்தை மட்டும் அடையக் காரணம் யாதென விளக்குவோம் :

ஒரு பெண் வாதம் முதலான தோஷங்களை மிகவும் சீற்ற மடையச் செய்கின்ற உணவு வகைகளை உபயோகித்தால்தோஷங் கள் சீற்றமடைந்து அவை உடலெங்கும் பரவி பெண்ணின் விந்துவை யும், கருப்பையையும் சென்றடைகின்றன. எனினும் அவற்றை முற்றி லும் அவை கெடுப்பதில்லை. அப்பொழுது அந்தப் பெண் கருத் தரிக்கிறாள் என உணர வேண்டும். அச்சமயம் அந்தக் கருவில் தாயினால் தோன்றிய உடலுறுப்புகளில் ஒன்றோ, பலவோ ஊன மடைகின்றன. அதாவது எந்த உடலுறுப்பைச் சேர்ந்த விதையில் விந்து அல்லது அதன் பகுதியில் தோஷங்கள் சீற்றமடைகின் றனவோ அந்த உறுப்பு ஊனமடைகின்றது.

எப்பொழுது தாயின் விந்துவில் கருப்பையின் விதைப்பகுதி குற்றமடைகிறதோ அப்பொழுது அந்தச் சிசு (பெண் பிறவி) மலடியாகப் பிறக்கும்.

கருப்பையின் விதைப்பகுதியின் ஓர் பகுதி வாதம் முதலியவற் றால் குற்றமுற்றால், அந்தக் குழந்தைக்கு கருப்பையும் விந்துவும் மட்டும் தோன்றுமேயன்றி (அச்சிசு பெரிதானபோது) இறந்த குழந்தைகளைப் பெறும்.

பெண் விந்துவில் கருப்பையையும், விதையையும் தோற்று விக்கும் பகுதிகளும், பெண் குழந்தையைத் தோற்றுவிக்கும் பகுதி களில் ஏதாவதொரு பகுதியும் குற்றமுற்றால் அந்தச் சிசு பெண் ணுருவையும் செயல்களையும் கொண்ட ஆனால் பெண்ணும் ஆணும் அல்லாத 'வார்த்தை' என்ற பெயர் கொண்ட அலி யுருவத்துடன் பிறக்கும். இது பெண் விந்துவில் உண்டான தோஷத்தினால் ஏற்பட்ட தீமை என்றறிய வேண்டும். 30

(இத்துடன் எட்டு கேள்விகளுக்கு முறையே விடைகளளிக்கப் பட்டன)

**2. ஆணின் விந்துவுக்குத் தோன்றும் தீமைகள்**

இதேபோல், ஆணுடைய விதையின் ஒரு பகுதியில் (விந்து வில்) குற்றமேற்படும்போது பிறக்கும் சிசு மக்கட்பேற்று வாய்ப்பு இல்லாததாகப் பிறக்கும்.

ஆணின் விந்துவில் விதைப்பகுதியின் ஓருறுப்பு குற்றமுற்றால் அவனுக்கு இறந்த குழந்தை (பூதிப்பிரஜை) பிறக்கும்.

ஆணின் விதையில் (விந்துவில்) விதைப்பாகத்தின் உறுப்பும், ஆணைத் தோற்றுவிக்கும் விதைப்பகுதியில் ஒரு பகுதியும் கெட்டு விட்டால், ஆணுருவமும் இலக்கணங்களும் மட்டுமே கொண்டு ஆணல்லாத குழவி தோன்றும். அதை 'த்ருணபுத்ரிகா' என்ற பெயரால் அழைப்பர். இது ஆண் விந்துவிற்கேற்படும் தீமை எனக் கூறுவர். 31

### 3. ஸாத்மியம் முதலியவற்றால் தோன்றிய உறுப்புகளில் ஊனம் ஏற்படக் காரணங்கள்

தாய் தந்தையரின் காரணமாக உறுப்புக்களில் ஊனம் ஏற்படும் முறையைப் போலவே, ஸாத்மியம், ரஸம், ஸத்துவம் இவற்றால் ஏற்படும் உறுப்புக்களுக்குத் தோன்றும் ஊனத்தைப் பற்றியும் கூறியதாகக் கருத வேண்டும். 32

### 4. ஆன்மா மாறுபாடு இல்லாதது

ஆன்மா என்பது எவ்வித மாறுபாடும் இல்லாதது. அது மனம் உடல் முதலானவைகளின் கூட்டைக் காட்டிலும் வேறுபட்டது. எல்லாப் பிராணிகளிடமும் சமமாகப் பரவி, பட்சபாதம் இல்லாமலிருப்பது. அந்த ஆன்மாவுக்கு இன்ப துன்பங்கள் முதலானவற்றின் தொடர்பே இல்லாவிடினும் உடல் மனம் என்பனவற்றின் அதிகத் தொடர்பையொட்டி இன்பதுன்பங்கள் ஏற்படும். 33

### 5. உடல், மனம் இவற்றில் துன்பமென்னும் மாற்றமேற்படக் காரணம்

வாதம், பித்தம், கபம் என்பவை உடலைக் கெடுக்கும் மூன்று தோஷங்கள்.

ரஜஸ், தமஸ் என்பவை மனத்தைச்சேர்ந்த இருவகை அழுக்காறுகள். இவையிரண்டும் மனத்தைக் கெடுத்துவிடுகின்றன. இவ்வாறு உடலுக்கும் மனதுக்கும் தொடர்புள்ளதான தோஷங்களால் உடலும் மனமும் கெட்டு அவற்றிற்கு ஊனமுண்டாகிறது. இவை கெடாமலிருந்தால் ஊனமுண்டாவதில்லை. 34

### 6. உடல் நான்கு வகையானது

அது தன் வகுப்பையொட்டி உடல், ஜராயுஜம்-அண்டஜம்-ஸ்வேதஜம்-உத்பிஜ்ஜம் என நான்கு வகைப்படும் என்று முன்பு மூன்றாவது அத்தியாயத்தில் கூறப்பட்டது. 35

### 7. மூவகைச் சத்துவத்தின் பிரிவுகள்

சத்துவமென்பது சுத்தம், ராஜசம், தாமசமென மூவகை யானது.

அவற்றில் சத்துவமென்னும் குணம் அதிகமாக இருப்பது சுத்த மெனப்படும். அது அறிவைத் தோற்றுவிப்பதாதல் பற்றி நன்மை யாக இருக்கும். ராஜசமென்பது ரோஷத்தின் பகுதியைக் கொண் டிருக்கும் (இது பாவச் செயலுக்குக் காரணமாவதால்) குற்ற முற்றதாகும்.

தாமசமும் மோகத்தின் பகுதியாதலால் குற்றத்துடன் கூடி யிருக்கும்.

### 8. சத்துவத்தின் பிரிவுகள்

மேற்கண்ட மூவகைச் சத்துவ குணங்களில் ஒவ்வொன்றும் உட் பிரிவுகள் சற்று அதிகமானது, மிக்க அதிகமானது என்று ஏற்றக் குறைவையொட்டி எண்ணற்றவை.

மற்றும் அத்தகைய குணத்தின் ஏற்றக்குறைவுகளையொட்டி யும் தேவர் மனிதர் மிருகங்கள் எனப் பலவகைப் பிறவிகளை யொட்டியும் சத்துவத்தின் பிரிவுகள் எண்ணற்றவை.

உடலும் சத்துவத்தின் பிரிவையொட்டியே உண்டாகும். எனவே உடல் சத்துவம் என இவையிரண்டும் ஒன்றுடனொன்று தொடர்பு கொண்டிருக்கும். ஆகவே உடலின் பிரிவையொட்டி யும் சத்துவம் எண்ணற்ற பிரிவுள்ளதாக இருக்கும். அவற்றில் சிலவற்றை எடுத்துக்காட்டாக விளக்குவோம். 36

### 9. எவ்வகைச் சுத்த சத்துவங்களில்

தாய்மை உண்மைப்பற்று தன்னடக்கம் விவேகம் ஞான விஞ்ஞானங்கள் பேச்சுத்திறன் பதில் கூறும் திறமை நினைவு கொள்ளும் வலிமை இவையனைத்துடன் கூடி காமம் குரோதம் உலோபம் தன்மானம் மோகம் (மயக்கம்) பொறாமை கோபம் இவைகளின்றி பிராணிகளனைத்திடமும் சமநோக்குக் கொண் டிருப்பவனை பிரம்ம சத்துவமுள்ளவனென்றறிக.

## 10. ரிஷீ சத்துவத்தின் இலக்கணம்

வேள்வி செய்தல் வேதமோதுதல் விரதங்களை ஏற்று நடத்தல் ஓமம் பிரம்மசரியம் என்பவற்றில் பற்று, விருந்தோம்பல் இவற்றுடன் கூடியவனும் வீராப்பு செருக்கு விருப்பு வெறுப்புக்கள், மதிமயக்கம், பேராசை, உள்ளக்கலக்கம் என்பவையனைத்தையும் துறந்தவனும் மேன்மேலும் புத்தம் புதியதாகத் தோன்றும் அறிவுத்திறன் பேச்சுத்திறமை சாத்திர அறிவு பலசங்கதிகளை ஒரே சமயத்தில் தாங்கும் அறிவுத்திறன் என்பவைகளைக் கொண்டவனுமானவனை ரிஷிச் சத்துவமுள்ளவனாகக் கருத வேண்டும்.

## 11. ஐந்திரசத்துவமுள்ளவன் இலக்கணம்

பெருமை செல்வாக்கு வேள்வி சூரத்தன்மை உடல் பளபளப்பு தெளிவு தீயச்செயல்கள் புரியாமை ஆய்ந்தோய்ந்து செயல் புரிதல் அறம் பொருள் இன்பம் என்பவைகளில் பற்று இவையனைத்தும் இந்திரனைச் சார்ந்த சத்துவமுள்ளவனின் இலக்கணமாகும்.

## 12. யாம்ய (யமனைச்சேர்ந்த) சத்துவமுள்ளவன்

தவிர்க்க முடியாத ஆணை பிறப்பித்தல் காலத்திற்கேற்றபடி தக்க செயலைப்புரிதல் பிறரால் தடுக்க முடியாமை விழிப்புடைமை அறிவுத் திறனுடைமை செல்வச்சிறப்பு என இவற்றுடன் கூடியவனும் விருப்பு வெறுப்பு பொறாமை மதிமயக்கம் இவையில்லாதவனுமான ஒருவன் யாம்ய சத்துவமுள்ளவனெனப்படுவான்.

## 13. வாருண சத்துவமுள்ளவன்

சூரன் தீரன் தூயவன் அழுக்காற்றை வெறுப்பவன் வேள்வியாளன் நீர்விளையாட்டுப் பற்றுள்ளவன் புண்ணியச் செயலன் சமயத்திற்கேற்றபடி சினத்தையும் அருளையும் காட்டுபவன் என இத்தகைய குணமுள்ளவன் வாருண (மழைக்கடவுளுக்குரிய) சத்துவமுள்ளவனென அறிதல் வேண்டும்.

## 14. குபேர (குபேரனுக்குரிய) சத்துவன் இலக்கணம்

தன்மானம் போகம் சுற்றம் என்னுமிவை தேவையான சமயங்களில் கொண்டிருத்தல் செல்வம் அறம் பொருள் இன்பமென்பவைகளை முறையாகப் பயன்படுத்துதல் தூய்மை,இன்பத்தின் அனுபவம் சினமும் அருளும் சிறப்பாகக் கொண்டிருத்தல்

என இவையனைத்தும் வாய்க்கப் பெற்றவன் 'கௌபேரசத்து வன்' எனப்படுவான்.

## 15. காந்தருவ சத்துவன் இலக்கணம்

நடனம் இசை பக்க வாத்தியங்கள் என்பவற்றில் அதிகப் பற்று செய்யுள் கதை சரித்திரம் புராணம் இவைகளைப் படிப்பதில் திறமை நறுமணப்பொருட்கள் பூமாலை சந்தனப் பூச்சு பெண்களுடன் கூடிக்குலாவுதல் காமம் என்பனவற்றில் மிக்கப் பற்றுக் கொண்டு பயன்படுத்துபவனும் பொறாமையற்ற வனுமான ஒருவன் காந்தருவ (கந்தருவர்க்குரிய) சத்துவமுள்ளவ னாவான்.

## 16. சுத்தசத்துவப் பிரிவுகளில் பிராம்மம் மிக்கத் தூய்மையானது

மேற்கண்டவாறு சுத்தசத்துவமென்பது நற்பகுதிகளையுள் ளிட்டமையால், ஏழுவிதமான பிரிவுகளைக் கொண்டதென அறிய வேண்டும்.

பிராம்மசத்துவத்தில் அந்த நற்பகுதி நன்கமைந்திருப்பதால் 37
அது மிகத்தூய்மையானதென அறிக.

## 17. அறுவகை ராஜச சத்துவங்கள்

### (அ) அசுர சத்துவம்

சூரன் மிக்கக் கோபக்காரன் பொறாமைக்காரன் செல்வந் தன் கபடமானவன் வயிறு நிரப்புவதையே குறிக்கோளாகக் கொண்டவன் படாடோபக்காரன் கருணையில்லாதவன் தற் புகழ்ச்சியாளன் என்றெல்லாம் அழைக்கப்படுபவன் அசுர சத்துவ குணமுள்ளவனாவான்.

### (ஆ) ராக்ஷஸ சத்துவம்

பிறரைக்கண்டு பொறுக்காமை இடைவிடாத கோபம் சமய மறிந்து தாக்குதல் கொடிய சுபாவம் உணவின் மீது அதிகப் பற்று மாமிசத்தின்மீது ஆசை அதிகத்தூக்கம் மிக்க களைப்பை யுண்டாக்கும் சாகசச் செயல் புரிதல் என இவையனைத்தும் கொண்டவன் ராக்ஷஸர்க்குரிய சத்துவமுள்ளவனென்றறிய வேண் டும்.

### (இ) பைசாச சத்துவத்தின் இலக்கணம்

அளவு மீறிப் புசித்தல் பெண் சுபாவம் பெண்களுடன் தனிமையில் இருக்க விரும்புதல் தூய்மையின்மை தூய்மையான

வர்களைக் கண்டு வெறுப்பு அச்சம் பிறரை அச்சமூட்டுதல் விகாரமான ஆகார நடத்தைகள் இவையனைத்தும் கொண்ட மனிதன் பிசாசுகளுக்குள்ள சத்துவமுள்ளவனென்றறிக.

**(ஈ) சர்ப்பசத்துவத்தின் இலக்கணம்**

சினம் வந்தபோது சீறுதல் சினமில்லாதபோது அச்சமுறுதல் செயலில் கடுமை ஓய்ச்சலுண்டாகும்படி செயல் புரிதல் அச்ச முள்ள இடத்தில் உலாவி வருதல் ஆகார விகாரங்களில் பற்று இவையனைத்துமுள்ளவன் அரவங்களைச் சார்ந்த சத்துவகுண முள்ளவன்.

**(உ) பிரேதசத்துவத்தின் இலக்கணம்**

உணவில் அதிக விருப்பம். அதிகத் துன்பத்தை விளைவிக் கின்ற நடவடிக்கையும் நடத்தை பணிபுரிதலும் பொறாமையும் விவேகமின்மை பேராவல் கடமையுணர்ச்சியின்மை என்றிவை யனைத்தும் கொண்டவன் பிரேத (சவத்தின் சத்துவமுள்ள வனெனப்படுவான்.

**(ஊ) சாகுன சத்துவத்தின் இலக்கணம்**

இடைவிடாமல் காமத்தில் விருப்பம் எப்பொழுதும் ஆகார விகாரங்களில் பற்றுடைமை நிலையில்லாமை பொறுமையின்மை செல்வமீட்டாமை என இக்குணங்களுள்ளவன் சாகுன (பறவை யினத்திற்குரிய) சத்துவமுள்ளவனாவான்.

இவ்வாறு ராஜச சத்துவம் ரோஷத்தின் பகுதியானமையால் அறுவகையாகப் பிரிக்கப்படடது. 38

**18. தாமச சத்துவத்தின் மூன்று பிரிவுகள்**

**பாசவ-சத்துவம்**

தன்னை அலங்கரித்துக் கொள்வதில் விருப்பமின்மை அறிவின்மை, வெறுப்புண்டாக்கும் ஆகார—விகாரங்களைப் பயன் படுத்தல் எப்பொழுதும் புணர்வதில் பற்று உறக்கம் இவை யுள்ளவன் பாசவ (மிருகங்களுக்குரிய) சத்துவமுள்ளவனாவான்.

**19. மாத்ஸ்ய சத்துவத்தின் இலக்கணம்**

பயந்த சுபாவம்,அறிவீனம் உணவில் விருப்பம் நிலையில்லாமல் உலவுதல் எப்பொழுதும் காமக் குரோதங்களில் ஈடுபாடு தொடர்ந்து சுற்றிவருவதில் விருப்பம் என்ற குணங்கள் கொண்ட

வன் மாத்ஸ்ய (மீன்களுக்குரிய) சத்துவமுள்ளவனென அறிதல் வேண்டும்.

## 20. வானஸ்பத்திய (மரங்களுக்குரிய) சத்துவம்

தாமதச்சுபாவம் உணவொன்றிலேயே குறிக்கோள் அறிவின் செயற் பகுதிகளனைத்துமின்மை என்பவைகளைக் கொண்டுள்ள வன் வானஸ்பத்திய (மரங்களுக்குரிய) சத்துவமுடையோன்.

மேற்கண்ட மூன்று பகுதிகளும் மதிமயக்கத்துடன் தொடர்பு கொண்டுள்ளமையால் தாமச சத்துவங்களென்றறிக. 39

## 21. மூவகைச் சத்துவங்களைப் பற்றிய முடிவுரை

இவ்வாறு சுத்தம், ராஜசம், தாமசம் என்பவைகளின் பிரிவு களில் சில மட்டும் விரிவாகக் கூறப்படடன.

அவற்றில் சுத்த சத்துவம் பிரம்ம ரிஷி இந்திர-யம-வருண-குபேர-கந்தருவர்களைச் சார்ந்த குணங்களையொட்டி ஏழுவகை யாகச் சுருக்கிக் கூறப்படடது.

ராஜச சத்துவமென்பது—தைத்ய—பிசாச—ராக்ஷஸ—ஸர்ப்ப—பிரேத பட்சி இவற்றைப் பின்பற்றிய குணங்களின் பிரிவை யொட்டி ஆறுவிதமாக விவரிக்கப்பட்டது. தாமஸ சத்துவம் — பிராணி—மீன்—மரம் என்பவைகளைப் போன்ற குணங்களைக் கொண்டிருப்பதால், மூவகையாகப் பிரித்துக் கூறப்பட்டது. 40

## 22. இவ்வத்தியாய விஷயங்களை அறிவதன் பயன்

இவ்வாறு 'கர்ப்பாவக்ராந்தி' என்ற பெயருடன் தொடங்கப் பட்ட இவ்வத்தியாயத்தில் கருவைப் பற்றிய விஷயங்களனைத் தும் விவரிக்கப்பட்டன. இவையனைத்தையும் அறிவதற்கு கரு தோன்றுவதற்கான செயல்களைத் தக்கபடி செய்வதும் கருவுக்கு இடையூறு விளைவிக்கும் பொருட்களை விடுவதும் பயனென அறிதல் வேண்டும். 41

## 23. அத்தியாய விஷயச் சுருக்கம்

கரு தோன்றக் காரணம் கருவின் உருவம் கருவின் மூலப் பொருள் கரு வயிற்றிலேயே உருவாதல் கரு உருவாவதற்குக் காரணங்கள், இந்த ஐந்து விஷயங்களும் நன்மை பயப்பவை.

கரு தோன்றாமலிருக்கக் காரணம் தோன்றிய கருகெட்டு அழியக் காரணம் கரு மாற்றமும் ஊனமுடையக் காரணம் என இம்மூன்றும் தீமை பயப்பவை.

இவ்வாறு எண்வகையான நன்மை தீமைகளை நன்கறிந்த மருத்துவன் அரசர்களால் பெருமதிப்பைப் பெறுவான்.

எனவே கருத் தோன்றுவதற்கான ஐந்து விஷயங்களையும் கரு தோன்றாமலிருக்கக் காரணமான மூன்று விஷயங்களையும் மருத்துவன் நன்கறிந்திருக்க வேண்டும். 42–45

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு
சரகமா முனிவரால் பரிசோதிக்கப்பட்ட
சரகஸம்ஹிதை ''மஹதீகர்ப்பவக்ராந்தி''
எனும் நான்காவது அத்தியாயம்
முற்றும்

## ஐந்தாவது அத்தியாயம்

# *புருஷ விசயம்

'புருஷ விசயம்' என்னும் சாரீரத்தைப் பகவான் ஆத்திரேயர் விவரித்தபடி விளக்குவோம். 1–2

### 1. **புருஷன் உலகுக்கொப்பானவன் என்பதை விளக்குதல்

புருஷன் என்பவன் ஓர் உலகத்திற்கே ஸமானமானவன். உலகத்தின் எண்ணிக்கையுள்ளவன் என்றார் புனர்வசு என்னும் ஆத்திரேயர்.

அதாவது ''உலகில், உருவம் கொண்ட எத்தனை பொருட்களுள்ளனவோ, அத்தனை பொருட்களும் புருஷனிடமும் உள்ளன. எத்தனை பொருட்கள் புருஷனிடமுள்ளனவோ, அத்தனையே உலகிலும் உண்டு'' என்று கூறுகின்ற பகவான் ஆத்திரேயரை நோக்கி அக்னிவேசர் :-

''தாங்கள் கூறிய இந்த வாக்கியமொன்றினால் மட்டும் அதன் பொருளை அறிவேன்.

எனவே தாங்கள் நன்கு ஆலோசித்து, புருஷ விசய விஷயத்தைப்பற்றி விவரிக்க அதைக் கேட்க விரும்புகிறேன்'' என வினவினார். 3

### 2. ஆத்திரேயரின் பதிலுரை

அக்நிவேசரை நோக்கிப் பகவான் ஆத்திரேயர் கூறியதாவது — உலகின் உறுப்புகள் (புல், பூண்டு, பசு முதலியவைகள்) எண்ணிற் கடங்காதவை. அதேபோல் புருஷனிலுள்ள (நரம்புகள், சதைகள், தமனிகள் முதலான) உறுப்புகளும் எண்ணிற்கடங்காதவை.

எனவே உலகிற்கும் புருஷனுக்கும் உள்ள உறுப்புகள் சில வற்றை அவற்றின் தன்மையையொட்டி விவரிக்கின்றேன். அவைகளை அமைதியுடன் அக்னிவேசனே ! கேட்டறிவாய்.

---

*புருஷ விசயம் — புருஷனைப் பற்றிய ஆராய்ச்சியில் இங்கு உலகத்துடன் ஒப்பிட்டுப் பார்ப்பதை 'புருஷ விசயம்' என்பர்.

**புருஷன் — உடலுடன் இணைந்த ஆன்மா 'புருஷனெனப் படுவான்.'

ஒன்று சேர்ந்த ஆறு தாதுக்கள் புருஷன் எனப் பெயர் பெறும். அதாவது நிலம், நீர், தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐம்பூதங்களும் புலன்களுக்கெட்டாத பிரும்மம் (சேதனை) என இவ்வாறும் தாதுக்கள் எனப்படுகின்றன.

இந்த ஆறு தாதுக்களின் சேர்க்கையே 'புருஷன்' எனப்பெயர் பெறும். 4

## 3. புருஷன் உலகுக்கொப்பானவன் என்பதை விவரித்தல்

புருஷனுடைய உருவம் – நிலமென்னும் பூதம் (வேர்வை முதலான உடலிலுள்ள திரவம் (நீர்), உடற்சூடு தேயு உயிர் வாயு, (மூக்கு, செவி போன்ற) இடைவெளிகள் ஆகாயம், அந்தராத்மா என்னும் உள்ளுணர்வே பிரும்மம் எனக் கருத வேண்டும்.

உலகைப் படைக்கத் தொடங்கிய பிரும்மதேவனுக்கு பலவித உருவங்களாக இருத்தலை (பிராம்மீவிபூதியை)ப் போல், புருஷனிலும் பல உருவங்களாக இருத்தல் (அந்தராத்ம விபூதி) உண்டு.

உலகில் தக்ஷப்பிரஜாபதியென்பவர் பிரும்ம தேவனைச் சார்ந்த பல உருவமாக இருக்கிறார். அதேபோல் புருஷனில் சத்துவம் (முக்குண உருவான மனம்) என்பது பல உருவில் காணப்படும்.

உலகிலுள்ள இந்திரன் புருஷனில் அகங்காரமென்னும் உருவிலும்,

உலகில் ஒளியுருவாயுள்ள பன்னிரு பகலோர்கள் (ஆதித்யா) புருஷனில் பற்றிக்கொள்ளும் (கிரகண) சக்தியுருவிலுமிருப்பர்.

அதேபோல் ருத்திரன் கோபமாகவும், சந்திரன் சாந்தமாகவும், வசுதேவர்கள் இன்ப உருவாகவும், அசுவினீ தேவர்கள் ஒளியுருவாகவும், வாயுதேவன் உற்சாக உருவாகவும், விசுவேதேவர் என்போர் புலன்கள், புலன்களின் இலக்குப் பொருட்களாகவும் இருள் மோகமயக்க உருவாகவும், வெளிச்சம் அறிவினுருவாகவும் இருக்கும்.

உலகிற்குப் படைப்புத் தொடக்கத்தைப் போல் புருஷனுக்கும், புணர்ச்சித் தொடக்கம் (கர்ப்பாதானம்) என்றறிய வேண்டும். கிருதயுகம் போல் வாலிபம், திரேதாயுகம்போல் யௌவனம், துவாபரயுகம் போல் மூப்பு, கலியுகம் போல் நோய்கள், யுகங்களின் முடிவுபோல் மரணம் என்றிவ்வாறறிய வேண்டும்.

அக்னிவேசா ! இதுவரை கூறியதுபோல் உலகிற்கும் புருஷனுக்கும் உள்ள மற்றும் சில ஒப்புவமைகளை யூகித்தறிவாயாக. 5

## 4. புருஷனையும் உலகையும் ஒப்பிட்டுப் பேசுவதின் பயன் யாது?

இவ்வாறுரைத்த ஆத்திரேயரை அக்நிவேசர் வினவுகிறார் — தாங்கள் கூறிய உலகம், புருஷர் இவ்விரண்டின் ஒப்புவமை குற்றமின்றியும் உண்மையாகவும் இருக்கின்றது. ஆனால் இந்த ஆயுர் வேதத்தில் இதற்குப் பயன் என்ன? என்று நான் அறியலாமோ. 6

**ஆத்திரேயரின் விடை :-**

ஆத்திரேயபகவான் பதிலுரைக்கிறார் :-

''அக்நிவேசா ! சொல்கிறேன் கேள்''

உலகமனைத்தும் தன்னிலும் (ஆன்மாவிலும்), தன்னை உலகெங்கிலும் காண்கிறவனுக்கு உண்மையறிவு உண்டாகின்றது. உலகம் முழுவதையும் தனில் காண்பவனுக்கு இன்ப துன்பங்கள் இரண்டிற்கும் தானே கர்த்தா (செய்பவன்) என்றும் தன்னை காட்டிலும் மற்றொரு கர்த்தா இல்லையென்றும் அறிவுண்டாகும்.

வினையின் வசத்திலிருப்பதால் மேலே கூறப்போகும் காரணம் முதலியவைகள் ஐந்துடன் கூடிய உலகனைத்தும் நானே என்றறிந்தவன் உண்மையறிவைப் பெற்று முக்தி பெறுகிறான்.

உலகமெனும் சொல் அறுவகைத் தாதுக்களின் கூட்டுருவான புருஷனையே பேசும். உலகம் முழுவதும் பொதுவாக அறுவகைத் தாதுக்களின் கூட்டுருவாக இருக்கும். 7

## 5. காரணம் முதலிய ஐந்தின் விவரம்

அந்த உலகுடன் ஹேது (காரணம்) உற்பத்தி வ்ருத்தி உபப்லவம் வியோகம் என்ற ஐந்தும் தொடர்பு கொண்டிருக்கும்.

அவற்றில் தோற்றக்காரணம் 'ஏது' என்றும், பிறவி உற்பத்தி என்றும், 'வளர்ச்சி' வ்ருத்தி என்றும் துன்பமுண்டாதல் உபப்லவமென்னும் ஆறுதாதுக்களும் பிரிந்து போதல் 'வியோகம்' என்றும் கூறப்படும்.

அதுவே ஜீவாபகமம் பிராணநிரோதம் பங்கம் லோகஸ்வபாவம் என்னும் சொற்களாலும் வழங்கப்படும்.

அந்த ஜீவாபகமத்திற்கு (உயிர் நீக்கத்திற்குப்) பலவகையான துன்பங்களை உண்டாக்குவனவற்றில் ஈடுபடுதலே காரணமாகும்.

அத்தகைய துன்ப விஷயங்களில் வெறுப்புண்டாகி, அவற்றைத் துறந்திருப்பதே 'நிவிருத்தி' எனப்படும். ஈடுபாடு துன்பத்திற்குக்

காரணம், துறவு இன்பத்திற்குக் காரணம் என்ற அறிவே 'உண்மையறிவு' எனப்படும்.

அத்தகைய உண்மையறிவு தோன்றுவதற்கு உயிரினங்களனைத்துக்கும் புருஷனுக்குமிடையே உண்டாகும் பொது அறிவே காரணமாகும். அந்த அறிவு உண்டாவதற்கே உலக புருஷங்களுக்கிடையே உள்ள தன்மையைப் பற்றி உபதேசிக்கப்பட்டது. 8

## 6. ஈடுபாட்டின் இலக்கணமும், அதன் காரணமும்

அக்நிவேசர் வினவுகிறார் – பகவானே! ஒன்றில் ஈடுபாடு (பிரவிருத்தி) எதனால் உண்டாகிறது? வெறுப்பு (நிவிருத்தி) ஏற்படக் காரணமென்ன?

### பகவான் கூறுகிறார்

நல்லறிவின்மை விருப்பு வெறுப்பு செயல் இவைகளை முன்னிட்டுப் பொருள்மீது ஈடுபாடு உண்டாகிறது.

அவற்றால் 1. அகங்காரம், 2. ஸங்கம், 3. ஸம்சயம், 4. அபிஸம்ப்லவம், 5. அப்யவபாதம், 6. விப்ரத்யயம், 7. அவிசேஷம், 8. அநுபாயம் என்ற எட்டும் தோன்றுகின்றன.

ஒருதோட்டத்தில் நல்ல பக்குவ நிலையிலுள்ள ஒரு செடியை நீண்ட கிளைகளைக் கொண்ட மரங்கள் கவிந்து கொண்டு காணப்படாமற் செய்துவிடுவதுபோல் இவ்வெட்டும் அறுவகை தாதுக்களின் கூட்டுருவான புருஷனைத் கவிந்து சூழ்ந்திருக்கும். அகங்காரம் முதலான எண்வகைப் பொருட்களால் பரவப்பட்ட புருஷன் பிறப்பிறப்பென்னும் பிரவிருத்தியை (ஈடுபாட்டை)க் கடந்திருக்கமாட்டான். இனி அகங்காரம் முதலியவற்றின் இலக்கணங்களைக் கீழே காண்க.

### அ. அகங்காரம் என்பதன் விளக்கம்

''சாதி, அழகு, செல்வம், வரலாறு, அறிவு, நடத்தை, கல்வி, குலம், வாலிபம், வலிவு, பெருமை இவையனைத்திலும் நான் உயர்ந்தவன்'' என்று நினைப்பது அகங்காரமெனப்படும். (இது செருக்கு என்றும் பெயர் பெறும்.) 9–10

### ஆ. ஸங்கம்

மனம், வாக்கு உடல் என்ற (மூன்று புலன்களென்னும்) மூவகைச் சாதனங்களால் செய்யப்படும் செயல்கள் மோட்சத்திற்கு வழி கோலாமலிருந்தால் அது 'ஸங்கமெ'னப்படும்.

### இ. ஸம்சயம்

புண்ணியம்—பாவமென்ற செயல்களின் பலன்கள் மோட்சம் இவற்றை அனுபவிக்கும் புருஷன் மரணம் முதலியவை உள்ளனவா? இல்லையா ? என்று நினைப்பது ஸம்சயம் எனப்பெயர் பெறும்.

### ஈ. அபிஸம்ப்லவம்

''உடலைச் சார்ந்த எல்லா நிலைகளிலும் நான் வேறுபட்டவனல்லன். படைப்பவன் நானே. இயற்கையாகவே உள்ளவன் நான். உடல் புலன்கள் அறிவு என்பனவற்றின் கூட்டே நான்'' என்றெல்லாம் நினைப்பது 'அபிஸம்ப்லவம்' எனப்படும்.

### உ. அப்யவபாதம்

தாய் தந்தை சகோதரர் மனைவி குழந்தைகள் சுற்றத்தார் நண்பர் பணியாளர் முதலியவர் என்னைச் சேர்ந்தவரென்றும் நான் இவர்களைச் சேர்ந்தவன் என்றும் ஒருவருக்கொருவர் தொடர்பை ஏற்படுத்திக் கொள்வதால் உண்டாகும் அறிவு 'அப்யவபாதம்' எனப்படும்.

### ஊ, விப்பிரத்தியயம்

செய்யத்தக்கதை செய்யத்தகாததென்றும், நன்மையளிப்பதை நன்மை அளிக்காததென்றும் தூய்மையானதைத் தூய்மையற்றதென்றும் கருதும் எதிரிடையான அறிவு 'விப்பிரத்யயம்' எனப் பெயர்பெறும்.

### எ. அவிசேஷம்

அறிவாளியையும் அறிவற்றவனையும் இயற்கைப்பொருளையும் மாற்றுப் பொருளையும் விருப்பையும் வெறுப்பையும் ஒன்றே போல் கருதுவது 'அவிசேஷம்' (இவற்றிற்குள்ள வேறுபாட்டை அறியாமை) எனப்படும்.

### ஏ. [1]அநுபாயம்

புரோக்ஷணம் (மந்திரம் கூறி நீரைத் தலைமீது தெளித்தல்) அநசனம் (உண்ணாவிரதம்) அக்நிஹோத்ரம் (காலை மாலை முறைப்படி தீவளர்த்தல்) திரிஷவணம் (மூன்று வேளைகளிலும் நீராடுதல்) அப்யுக்ஷணம் (ஒருவகைப் புரோக்ஷணம்) ஆவாகனம் (தேவதைகளை வரவேற்றல்) வேள்வி பிறரைக் கொண்டு செய்

1. அனுபாயம் – சரியான முயற்சியல்லாதது.

வித்தல் - தானே வேள்வி செய்தல் இரத்தல் நீரிலோ நெருப்பிலோ புகுதல் முதலிய செயல்களைச் செய்ய முயற்சி செய்தல் 'அனுபாய'மெனப்படும்.

## 7. சம்சாரமெனும் ஈடுபாட்டுக்கும் அகங்காரம் முதலியவற்றிற்கும் உள்ளதொடர்பு

முன்பு கூறிய வகையில் அறிவு அதைத்தாங்கும் சக்தி நினைவு கூர்தல் இவை மூன்றுமின்றி அகங்காரம் கொண்டுபற்றுதலுடன் கூடிய வினைப்பயன்களில் ஐயப்பாட்டுடன் ஆன்மாவைப் பற்றியவைகளை உடல் முதலானவை மீது ஏறிட்டுத் தாய் தந்தையர் முதலானவர் மீது இல்லாத பற்றுதலைக் கற்பித்துக் கொண்டு செய்யத்தக்கவை செய்யத்தகாதவைகளில் மாறான எண்ணம் கொண்டு அறிவு அறிவில்லாமை என்பவற்றிற்கிடையே அதிகப் பாகுபாடு பாராட்டாமல் மோட்சத்திற்குச் சாதனமான ஞானமார்க்கத்தைவிட்டு வேறொரு வழியைப் பின் பற்றி மனம் உடல் இவற்றைச் சார்ந்த குற்றங்களுக்கு அடிப்படைக் காரணமான துன்பங்களுக்கெல்லாம் (பட்சிகளுக்கு மரம் போல்) உறைவிடமாக இருப்பான் மனிதன். 10

இவ்வாறு அகங்காரம் முதலிய குற்றங்களால் சுழற்றப்பட்டு பிரவிருத்தி (பிறப்பிறப்பு) என்னும் வழியைக் கடக்கமுடியாமல் துன்புறுவான். அத்தகைய பிருவிருத்தி (பற்று) பிறவித் துன்பத்திற்குக் காரணமான பாவத்திற்கு மூலகாரணமாகின்றது.

நிவ்ருத்தி (பற்றின்மை) துன்பங்களனத்தையும் துறந்திருக்கும் நிலை அதாவது அபவர்கம் எனப்படும். இது பரம் (அனைத்திலும் சிறந்தது) அமைதியானது, அழிவற்றது. பிரும்மம் மோட்சம் என்னும் பல சொற்களால் அழைக்கப்படும். 11

## 8. மோட்ச வழி

மோட்சம் பெற விருப்பம் கொண்டவர்களுக்கு அதற்கான வழி முறைகளை விவரிப்போம்.

உலக வாழ்க்கையில் குற்றம் அறிந்து (அதில் வெறுப்புற்று) மோட்சமடைய விரும்புகிறவன் முதன்முதலாக (மோட்சத்திற்கான சாத்திரத்தை)க் கற்பிக்கக்கூடிய குருநாதனை அணுகவேண்டும். பிறகு அவர் உபதேசித்த வழியைப் பின்பற்றி நடக்க வேண்டும். அக்னிக்குப் பணிவிடை புரியவேண்டும்.

தரும சாத்திரங்களைப் படித்து, அவற்றின் பொருளை நன்குணர்ந்து, நம்பிக்கையுடன் அந்நெறிகளைப் பின்பற்றி நடக்க வேண்டும்.

நல்லோர்களைப் பேணி, தீயோர் சேர்க்கையை வெறுக்க வேண்டும். அவர்களுடன் பழகாமலிருத்தல் வேண்டும்.

உண்மையான உயிரினங்களனைத்துக்கும் நன்மையான கடினமல்லாதபேச்சுக்களை காலம்கடக்காமல் ஆலோசித்துப்பேச வேண்டும்.

உயிரினங்களனைத்தையும் தன்னைப் போல் கருத வேண்டும்.

பெண்களைப் பற்றி நினையாமை சங்கற்பம் (மன உறுதி) அத்தகைய மனத்தாலும் ஒருபொழுதும் நினையாதிருத்தல் அவர்களின் நட்பைக் கோராமை அவர்களுடன் பேசாமை என்னும் விரதத்தை மேற்கொள்ள வேண்டும்.

பற்றுதலனைத்தையும் விட்டுவிட வேண்டும். இரகசிய உறுப்பை மறைக்கக் கோவணம் (சிறுகந்தல்) துணி உடலை மறைக்கக் காஷாயத்துணி கந்தலைத் தைக்க ஊசி அதை பத்திரப் படுத்துவதற்காகப் பாத்திரம் உடல் கால் கழுவுவதற்காகத் தண்ணீர் பாத்திரம் இவைகளை மட்டுமே வைத்திருக்க வேண்டும்.

கையில் தண்டம் (தடி) ஏந்தி (பிச்சையெப்பதற்குப்) பிட்சா பாத்திரம் மட்டும் வைத்திருக்க வேண்டும்.

உயிரைத் தாங்குவதற்காக நிந்திக்கத்தகாத ஆகாரத்தை மட்டும் தினம் ஒரு தரம் மட்டுமே புசித்தல் வேண்டும்.

களைப்பு நீங்கப் படுத்துறங்குவதற்காக மரங்களிலிருந்து உதிர்ந்த சருகு இலைகள் புற்கள் இவைகளைப் படுக்கையாகவும் தலையணையாகவும் பயன்படுத்த வேண்டும்.

தியானம் செய்வதற்காக யோகபட்டமென்னும் கயிற்றால் உடலைப் பிணைத்துகொண்டு காட்டிலோ வீடு முதலிய தங்கும் வசதியில்லாத ஓரிடத்திலோ தங்க வேண்டும்.

சோம்பல் தூக்கம் தாமதம் முநலிய செயல்களைத் தவிர்க்க வேண்டும்.

புலப்பொருட்களின் மீது விருப்பு வெறுப்புகளைத் துறத்தல் வேண்டும்.

உறங்குதல் நிற்றல் நடத்தல் பார்த்தல் புசித்தல் உலாவு தல் உடலை அசைத்தல் முதலிய செயல்களைச் செய்யும்போது "நாம் யார்? எதற்காக இந்தச் செயலைப் புரிய வேண்டும்?" என்று கடந்த நிலையை நினைத்தவாறே செயலாற்ற வேண்டும்.

பாராட்டுதல் துதி செய்தல் இவைகளால் மகிழ்ச்சியடையாமலும் நிந்தனைக்கும் அவமானத்திற்கும் சினம் காட்டாமலும் பொறுமை காட்ட வேண்டும்.

பசி தாகம் அசதி களைப்பு குளிர்ச்சி சூடு காற்று மழை இன்பம் துன்பம் இவைகள் நேர்ந்தபோது அவைகளைச் சகித்துக் கொள்ள வேண்டும்.

வருத்தம் ஏழ்மை செருக்கு உணர்ச்சி வேகம் மதம் பேராசை ஆசை பொறாமை அச்சம் சினம் முதலானவை தோன்றுவதற்கான காரணம் காணப்பட்டபோது மனம் சலிக்காமல் உறுதியாக இருக்க வேண்டும்.

மேற்கூறிய அகங்காரம் முதலானவை எட்டும் தீமையை விளைவிப்பன என அறிதல் வேண்டும்.

உலகிற்கும் புருஷனுக்கும் பொதுவெனக் கூறிய படைப்பு (ஸர்கம்) முதலிய ஒற்றுமையை நினைத்துப் பார்க்க வேண்டும்.

மோட்சத்தைப் பெறுவதற்கான செயல்களைப் புரிவதற்குக் காலம் கடந்துவிடுமோ என்ற அச்சம் கொள்ள வேண்டும்.

யோகத்தைப் பயிலத் தொடங்கும்போது எப்பொழுதும் வெறுப்பும் வருத்தமும் கொள்ளாமலிருக்க வேண்டும். மனத்தில் உற்சாகம் கொண்டிருக்கவேண்டும்.

மோட்சத்தைச் சாதிப்பதற்காக அறிவிற்கும் துணிவிற்கும் நினைவுகொள்வதற்கும் வலிவை ஏற்படுத்த வேண்டும்.

புலன்களை மனத்திலும், மனத்தை ஆன்மாவிலும், ஆன்மாவை ஆன்மாவிலேயும் தடுத்து நிறுத்த வேண்டும்.

இரசம் இரத்தம் முதலிய தாதுக்களால் உடலும் அதனுறுப்புகளும் உண்டாகியுள்ளனவென்று அடிக்கடி மனதில் நினைத்துக் கொள்ள வேண்டும்.

ஆன்மா ஒன்றைத்தவிர மற்ற உலகனைத்தும் தோற்றக் காரணத்துடன் கூடியனவெனவும் ஆன்மாவைச் சார்ந்தவையல்லவென்றும் நிலையில்லாதவை என்றும் துன்பக் காரணங்

களெனவும் முடிவு செய்ய வேண்டும். பற்றுடன் செயல்படுதல் பாவத்திற்கும் துன்பத்திற்கும் காரணம் என்றும் நினைக்க வேண்டும். பற்றுகள் அனைத்தையும் துறத்தல் அழியா இன்பத்தை அளிக்கும் என்ற நம்பிக்கை உண்டாக வேண்டும். இதுவே மோட்சத்திற்கானவழியாகும். இதற்கு மாறாக நடந்தால் அவன் பிறவிக்குக் கட்டுப்படுவான். 12

## 9. சுத்தசத்துவத்தின் இலக்கணம்

எண்ணெய்த்துணி தலைமயிர் முதலிய துடைக்கும் பொருள்களாலே கண்ணாடி துடைக்கப்பட்டு தூய்மையடைவது போல் சத்துவம் எனப்படும் மனதானது நிவிருத்தி (பற்றைத்துறக்கும்) வழியால் விருப்பு வெறுப்புகளைத் துறந்து தூயதாகின்றது. 13

அவ்வாறு தூய்மை பெற்ற மனம் ராகு மேகம் தூசி புகை பனி என்பனவற்றால் மூடப்படாத சூரிய மண்டலம்போல் சுத்தமாக ஒளிவீசும். 14

## 10. உண்மையறிவுடையவனின் இலக்கணம்

அத்தகைய சுத்தசத்துவம் (மனம்) ஐம்புலன்களின் செயல்களிலிருந்து திருப்பப்பட்டு புலன்களிடம் செல்லாமல் தடுக்கப்பட்ட ஆன்மாவிடமே நிலையாக நிறுத்தப்படுமானால் காற்று முதலியவை இல்லாத அறையில் பிறையில் வைக்கப்பட்ட விளக்கு அசையாமல் தூய ஒளியைப் பரப்புவது போல் ஆன்மாவிலேயே ஒன்றி ஒளிவீசும். 15

தூய மனமுள்ளவனுக்கு உண்மையறிவு உண்டாகிறது. அதைச் சாதனமாகக் கொண்டு மிக்க வலிவுள்ள மோக மயக்கமாகிய இருளை அவன் அகற்றிவிடுகிறான். 16

அந்த உண்மையறிவினாலேயே உலகிலுள்ள எல்லாப்பொருட்களின் உருவங்களையும் நன்கறிந்து விருப்பத்தை விட்டு யோகத்தைச்சாதித்து 'ஸாங்கியன்' எனப்படும் உண்மையறிவாளனாகிறான். 17

அவ்வுண்மையறிவாலேயே அகங்காரத்தை அருகில் வரவிடாமல் (இன்பதுன்பக்) காரணங்களையணுகாமல் தொடர்பனைத்தையும் துறந்து எதன் மீதும் கருத்துக் கொள்ளாமல் நிலையானதும் அழிவற்றதும் அமைதியானதும் மாறுதலற்றதுமான பிரம்மத்தின் உருவான மோட்சத்தை அடைவான். 18

---

*இவையனைத்தும் அறிவின் பிரிவுகள்

*கல்வி சித்தி மதி மேதை பிரஜ்ஞை ஞானம் இவையனைத்தும் அத்தகைய உண்மையறிவின் உருவாகவே இருக்கும்.

உலகமெங்கும் தான் பரவியிருப்பதாகவும் உலகமனைத்தும் தன்னுள்ளடங்கி உள்ளதாகவும் நினைத்து பரம் எனப்படும் ஆன்மாவையும், அபரம் எனப்படும் ஆன்மாவைத்தவிர மற்றவைகளையும் கவனித்து அறிபவனுக்கு உண்மைக்கு மூலமான அமைதி ஏற்படும். அது என்றென்றும் அழியாது. 19–20

## 11. ஜீவன்முக்தனுக்கு இன்ப-துன்பத் தொடர்பில்லாமை

பிரம்மத்தின் நிலையை அடைந்த ஜீவன்முக்தன் எக்காலத்திலும் எந்நிலையிலும் உலகப் பொருட்களனைத்தையும் கண்களால் பார்த்துக்கொண்டு இருந்தாலும் அத்தகைய தூயமனத்தோனுக்கும் அப்பொருட்களுக்கும் தொடர்புள்ள இன்பதுன்பங்களுக்கும் தொடர்பு உண்டாவதில்லை. 21

## 12. முக்தி பெற்றுள்ளவனின் இலக்கணம்

புலன்கள் முதலிய்வற்றை ஆன்மாவுக்கு வசமாக்கி முற்றும் துறந்தவனென்னும் முக்தாத்மாவுக்கு புலன்கள் முதலிய சாதனங்களுடன் தொடர்பு இல்லாமையால் சொந்தமாக எந்த இலக்கணமும் காணப்படாது. 22

அந்த ஆன்மா புலன்கள் முதலியசாதனங்களால் விடப்பட்டவனாதல் பற்றி முக்தன் (விடுபட்டவன்) எனப்பெயர் பெறுகிறான். 23

## 13. முக்தி மோட்சம் என்பதன் மாறுபெயர்கள்

(1) விபாபம்—பாவமில்லாதது (2) விரஜம்—விருப்பு வெறுப்பில்லாதது (3) சாந்தம் – (அமைதியானது) (4) பரம்—சிறந்தது (5) அக்ஷரம் – அழிவில்லாதது (6) அவ்யயம் – வேறுருவம் பெறாதது (7) அம்ருதம் – மரணமற்றது (8) ப்ரும்மம் – எங்கும் பரவியது (9) நிர்வாணம் – எல்லா துன்பங்களினின்றும் விடுபட்டு அழிவற்ற இன்பவுருவானது எனப் பொருளுக்குப்பொருத்தமான இந்தச் சொற்களால் அழைக்கப்படுவது அமைதியே உருவான மோட்சமென்பதாகும்.

அத்தகைய அறிவுக்குக் காரணமான மோட்சத்தின் உருவையும் விஞ்ஞானமென்னும் அறிவையும் பற்றி முனிவர்கள் அறிந்து ஐயப்பாட்டை முற்றிலும் துறந்து மோகத்தையும் பற்றுதலையும் விட்டு அமைதிபெற்றனர். 24

## 14. இவ்வத்தியாய விஷயச் சுருக்கம்

உலகிற்கும் புருஷனுக்கும் உள்ள ஒற்றுமை அதனால் ஏற்படும் பயன் ஈடுபாட்டிற்கான காரணம் வெறுப்புகொள்ளும் வழி தூயமனத்தின் இலக்கணம் மோட்சத்திற்குச் சாதனமான உண்மையறிவின் இலக்கணம் மோட்சத்தின் இலக்கணம் என இவையனைத்தும் ''புருஷ விசயம்'' என்னும் இவ்வத்தியாயத்தில் சரக முனிவரால் விளக்கப்பட்டன. 25–26

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
சாரீரஸ்தானத்தில் 'புருஷவிசயசாரீரம்' என்னும்
ஐந்தாவது அத்தியாயம் முற்றும்

## ஆறாவது அத்தியாயம்

## *சரீரவிசயம்

ஆத்திரேயபகவான் கூறிய வகையில் ''சரீரவிசயம்'' என்னும் சாரீராத்தியத்தை விளக்குவோம். 1—2

### 1. உடலுறுப்புக்களைப்பற்றி அறிவதன் பயன்

உடற்கூறுகளைப் பற்றிய அறிவு உடலுக்கு உதவியளிக்கும். உடல் தத்துவத்தை நன்கறிந்தால் உடலுக்கு உதவி செய்பவை களைப் பற்றிய அறிவு நன்கேற்படும்.

எனவே உடற் பகுதிகளைப் பற்றிய அறிவை அறிவாளிகள் சிறப்பாகக் கொண்டாடுவர். 3

### 2. உடலமைப்பும், தாதுக்களும்

உடலென்பது சேதனை எனும் உணர்வுக்கு இருப்பிட மானது. ஐவகை மகாபூதங்களுடையதான இரசம் இரத்தம் முதலிய மாற்றுருவங்களின் கூட்டுருவானது. சமயோகவாஹி அதாவது தாதுக்கள் அவைகளுக்குள்ள சமஅளவில் இருப்பதால் நோயில்லாமலிருப்பது.

இவ்வுடலில் உள்ள தாதுக்கள் எப்பொழுது தம் நிலையில் ஏற்றத்தாழ்வை அடைகின்றனவோ அப்பொது இவ்வுடல் துன் பத்தையோ அழிவையோ அடைகின்றது.

மற்றும் இரசம் இரத்தம் முதலிய தாதுக்கள் தமக்குரிய அள்வைக்காட்டிலும் அதிகமாகவோ குறைவாகவோ அவற்றின் பகுதிகளில் சிலவற்றிலாவது, முழுவதிலுமாவது இருந்தால் அந் நிலை 'வைஷ்ம்யகமனம்' எனப்படும். 4

### 3. மருந்தினால் தாதுக்களுக்கு ஒரே சமயம் ஏற்றமும் குறைவும்

ஒன்றுக்கொன்று எதிரிடையான தாதுக்களில் (மருந்துகளைப் பயன்படுத்தும்போது)ஒரே சமயத்தில் ஒன்று வளர்க்கின்றது. மற் றொன்று குறைகின்றது. அதாவது எந்த மருந்து எந்தத் தாதுவை

---

*சரீரவிசயம் — உடலைச் சேர்ந்த உறுப்புக்களைப்பற்றி விரிவாக அறிவிக்கும் அத்தியாயம் இது.

வளர்க்கக் கூடியதோ, அதே மருந்து அந்தத் தாதுவுக்கு எதிரிடையான குணமுள்ள மற்றொரு தாதுவைக் குறைத்துவிடும்.

இவ்வாறு தாதுக்கள் ஒன்றுக்கொன்று ஏற்றக்குறைவாக இருக்கும்பொழுது மருந்தைத் தக்க அளவில் யுக்தியுடன் பயன்படுத்தினால் அம்மருந்து அதிக அளவில் உள்ள தாதுவைக் குறைத்தும் குறைந்துள்ள தாதுவை அதிகமாக்கியும் தாதுக்களனைத்திற்கும் அவற்றிற்குரிய அளவிற்குச் சமநிலையை உண்டாக்கும். 5–6

மருந்துகளைப் பயன்படுத்துவதற்கும் [1]ஸ்வஸ்த்தவிருத்தம் என்னும் முறையைப் பின்பற்றுவதற்கும் தாதுக்கள் சமநிலையைப் பெறுவதே பயனாகும்.

## 4. [1]ஸ்வஸ்த்தவிருத்தமுறைக்கு தாதுச்சமநிலையே பயன்

உடல் நிலை நன்குள்ள அறிவாளிகள் இனிப்பு முதலிய சுவைகளையும், குரு லகு என்னும் குணங்களையும், ஆகார வகைகளையும், தாதுக்களின் சமநிலை கெடாமலிருப்பதற்காக முறையே தேவைக்கேற்றவாறு ஒன்றன்பின் ஒன்றாகப் பயன்படுத்துவார்கள்.

அவ்வாறு பயன்படுத்தும்போது உடலுக்கு ஒத்துக்கொள்பவைகளையே (ஸாத்மியப் பொருட்களையே) முறைப்படி பயன்படுத்துவார்கள்.

## 5. ஒரே சுவையைப் பயன்படுத்துபவர் செய்ய வேண்டியது

இனிப்பு முதலிய ஏதாவதொரு சுவை அதிகமாக உள்ள பொருளைப் பயன்படுத்துபவர்கள் அதற்கு எதிரிடையான குணத்தைத் தோற்றுவிக்கும் (தேகப் பயிற்சி முதலிய) செயல்களைப் புரிந்து அவற்றால் தாதுகளைச் சமநிலையில் வைக்க வேண்டும். 7

## 6. ஸ்வஸ்த்தவிருத்தன் கடைபிடிக்க வேண்டிய நடைமுறைகள்

இடம் காலம் உடல் இவற்றின் இயல்புகளுக்கு ஏற்றவாறு தேவையான எதிரிடையான செயல்களை முறைப்படி செய்தல்,

---

(1) ஸ்வஸ்த்தவ்ருத்தம் — நோயில்லா உடல் நிலை படைத்தவன் முன்எச்சரிக்கையாக ரசாயனம் முதலிய முறைகளைப் பயன்படுத்தி தாதுக்கள் கோளாறடையாமல் பார்த்துக் கொள்வது. மற்றவன் தாதுக்கள் கோளாறடைந்தபின் மருந்தைப் பயன்படுத்தி அவற்றைச் சமநிலைக்குக் கொண்டு வருபவன்.

உணவு வகைகளைப் பயன்படுத்தல் பல விஷயங்களுக்குச் சம்பந்தப்பட்ட [1]அதியோகத்தைத் தாங்குதல் அவைகளை வெளிப்படுத்துதல் வெளிப்படுவதையே இயல்பாகக் கொண்டவைகளின் வேகத்தைத் தடுக்காமல் வெளிப்படுத்தல் சாகசச் செயல்களைத் துறத்தல் என இவையனைத்தும் நோயின்றி உடல் நலத்துடனுள்ளவர்களுக்குச் சம நிலையிலுள்ள தாதுக்களின் சமநிலையைக் காப்பதற்காக உபதேசிக்கப்பட்டன. இவைகளே ஸ்வஸ்த்த விருத்தங்களாகும். 8

## 7. தாதுக்களின் வளர்ச்சிக்கும் குறைவுக்குமான உணவுகள்

உடலிலுள்ள இரசம் இரத்தம் முதலிய தாதுக்களுக்கு முழுவதும் சமமான குணமுள்ள உணவுப் பொருள்களையோ, பெருமளவில் சமகுணமுள்ள உணவுப்பொருட்களையோ பல தடவைப் பயன்படுத்திப் பழக்கப்படுத்திக் கொண்டால் அந்தப் பழக்கத்தினால் அந்தத் தாதுக்கள் வளர்ச்சியடையும்.

தாதுக்களுக்கு எதிரிடையான குணங்களையோ அல்லது மிக்க எதிரிடையான குணங்களையோ கொண்ட உணவுப்பொருட்களைப் பலமுறைப் பயன்படுத்துவதால் தாதுக்கள் குறைந்து மெலிந்துவிடும். 9

## 8. உடலிலுள்ள தாதுக்களின் குணங்கள்

உடலிலுள்ள ரசம் ரத்தம் முதலிய தாதுக்களின் 20 குணங்களாவன :

1. குரு—(பாரமானது)
2. லகு—(லேசானது)
3. சீதம்—(குளிர்ச்சியானது)
4. உஷ்ணம்—(சூடானது)
5. ஸ்நிக்தம்—(பசையுள்ளது)
6. ரூக்ஷம்—(வரட்சியுள்ளது)
7. மந்தம்—(மெதுவானது)
8. தீஷ்ணம்-(கூர்மையானது)
9. ஸ்த்திரம்—(நிலையானது)
10. ஸரம்—(இளகும் தன்மையது)
11. மிருது-(மெத்தென்றிருப்பது)
12. கடினம்—(கடினமானது)
13. விசதம்—(தெளிவானது)
14. பிச்சிலம்—(பிசுபிசுப்பானது)
15. ச்லக்ஷணம்-(மழமழப்பானது)
16. கரம்—(முறமுறப்பானது)
17. ஸூக்ஷ்மம்—(நுண்ணியது)
18. ஸ்த்தூலம்—(பருமனானது)
19. ஸாந்த்ரம்—(கெட்டியானது)
20. திரவம்—பெருகியோடக் கூடியது)

---

(1) அதியோகம் — அளவுக்கு மீறிய சேர்க்கை.

## 9. குரு முதலிய குணங்கள் திரவியத்துடன் தொடர்புகொண்டு செய்யும் செயல்கள்

மேற்கண்ட இரசம் முதலிய தாதுக்களில் எது குருகுணம் கொண்டிருக்குமோ அது குருகுணமுள்ள உணவு வகைகளைப் புசித்துப் பழக்கம் செய்வதால் வளர்ச்சிபெறும்.

லகு குணமுள்ள உணவுப் பொருட்களைப் பயன்படுத்தினால் அந்தத் தாதுக்கள் குறைந்துவிடும்.

அதேபோல் லகுகுணமுள்ள தாதுக்கள் லகு குணமுள்ள உணவுப் பொருட்களையுண்டு பழக்கம் செய்வதால் அவற்றிலுள்ள லகு குணம் வளர்ச்சி பெறும். குரு குணமுள்ள தாதுக்கள் குறைந்துவிடும்.

இதேபோல் தர்துக்களிலுள்ள குணத்திற்கொப்பான குண முள்ள பொருட்களின் சேர்க்கையால் அவை வளர்ச்சி பெறும். எதிரிடையான குணமுள்ளவைகளால் குறைந்துவிடும்.

எனவே மாமிச தாது மற்ற தாதுக்களைக் காட்டிலும் மாமிசத்தால் அதிக வளர்ச்சி பெறும். அதேபோல் இரத்தம் இரத்தத்தாலும் மேதஸ் (கொழுப்பு) மேதஸினாலும் வசை (நிணநீர்) வசையினாலும் எலும்பு எலும்பினாலும் மஜ்ஜை (எலும்புச்சோறு) மஜ்ஜையினாலும் விந்து விந்துவினாலும் அந் தந்த சம குணங்களால் மற்ற தாதுக்களைக் காட்டிலும் அந்தந்த சமான சாதியைச் சேர்ந்த தாது வளர்ச்சி பெறும்.

மற்றும் முட்டை முதலிய உருக்கொண்ட ஆமக்கருவினால் கருவிலிருக்கும் சிசுவும் வளர்ச்சியடையும். 10

## 10. சமமான குணங்கள் மிக்க வேறு சாதிப்பொருட்களால் தாதுக்களின் வளர்ச்சியும் தேய்வும்

மேற்கூறிய வகையில் உடலிலுள்ள மாமிசம் முதலிய தாதுக்கள் குறைவானபோது அதே இனமும் குணமுமுள்ள மாமிசம் முதலானவை கிடைக்காமையாலோ கிடைத்தாலும் பிராணி இம்சை என்ற கருணையாலோ வேறு காரணத்தாலோ அதைப் பயன் படுத்துவது தவறு என்ற நினைப்பாலோ பயன்படுத்தாதபொழுது தாதுக்களை வளர்ப்பது மட்டும் தேவைப்பட்டால் அந்த மாமிசத் திற்கொப்பான குணங்கள் மிக்க வேறு சாதிப் பொருட்களான உணவுகளைப் பயன்படுத்த வேண்டும்.

அதெவ்வாறெனில் சுக்ரம் என்னும் ஆண் விந்து குறை வுள்ளபோது மேற்கூறிய காரணங்களால் வேறொரு ஆண் விந்து

வைப் பயன்படுத்தக்கூடாத நிலையில் பாலையும் நெய்யையும் பயன்படுத்த வேண்டும்.

அதேபோல் இனிப்புச்சுவை எண்ணெய்ப்பசை குளிர்ச்சி எனும் குணங்களுள்ள பொருட்களையும் மற்ற பொருட்களையும் விந்து வளர்ச்சிக்காகப் பயன்படுத்தலாம்.

சிறுநீர் குறைவுள்ளபோது (அதே வகையைச் சேர்ந்த சிறு நீரைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக) கரும்புச்சாறு தெளிவான மது திரவப்பொருட்கள் இனிப்பு புளிப்பு கரிப்புச் சுவையுள்ள பொருட்கள் மற்றும் ஈரமூட்டும் பொருட்கள் இவைகளைப் பயன்படுத்த வேண்டும்.

மலம் குறைந்தபோது கொள்ளு உளுந்து வெள்ளைப்பூசனி அஜமத்யம் (ஆட்டின் வயிற்றிலுள்ள மாமிசம் யவம் என்னும் தானியத்தின் கீரை புளிப்புக் கஞ்சி இவைகளைப் பயன்படுத்த வேண்டும்.

வாதம் குறைந்தபோது காரம் உவர்ப்பு கசப்புச் சுவை களையும் வரட்சி லகு குளிர்ச்சி இக்குணங்களையும் கொண்ட பொருட்களைப் பயன்படுத்த வேண்டும்.

பித்தம் குறைந்தபோது புளிப்பு கரிப்பு காரம் (க்ஷாரம்) சூடு தீட்சண்யம் எனும் குணங்களுள்ள பொருட்களைப் பயன்படுத்த வேண்டும்.

கபம் குறைந்தபோது எண்ணெய்ப்பசை குரு இனிப்பு நெருக்கம் பிசுபிசுப்பு எனும் குணங்களைக் கொண்ட பொருட் களைப் பயன்படுத்த வேண்டும்.

மற்றும் தாதுக்கள் குறைந்தபோது அந்த அந்த தாதுக்களை வளர்க்கக்கூடிய செயல்களான உட்காருதல் சிந்தித்தல் முதலி யவைகளைச் செய்ய வேண்டும்.

இதேபோல் மற்ற உடல் தாதுக்கள் குறைவுள்ளபோது சம மான குணமுள்ள பொருட்களைப் பயன்படுத்துவதையும் செயல் படுவதையும் யூகித்தறிய வேண்டும்.

அவ்வாறு பயன்படுத்தி அந்த அந்த தாதுக்களுக்கு வளர்ச்சி யையோ குறைவையோ ஏற்படுத்தலாம்.

இம்மாதிரி தாதுக்களில் சிலவற்றிற்கு வெவ்வேறாகவும் சில வற்றிற்கு (அதிதேசம்) பதிலுருவாவும் வளர்ச்சியும் குறை பாடும் விவரிக்கப்பட்டன.

## 11. உடல் முழுவதையும் வளர்ப்பவை

காலயோகம் (வாலிபப் பருவத்தில் வயதின் சிறப்பினாலேயே உடல் வளர்ச்சி) ஸ்வபாவஸம்ஸித்தி (முற்பிறவியில் ஈட்டிய புண்யத்தால் உடல் வளர்ச்சி) ஆஹாரஸௌஷ்டவம் (சிறந்த உணவு) அவிகாதம் (மிதமீறிய புணர்ச்சி முதலிய உடல் வளர்ச்சிக்கு இடையூறு செய்யும் தடைகள் இல்லாமை) என்பவை நான்கும் உடலை முற்றிலும் வளர்ப்பவையாகும். 12

## 12. வலிவின் வளர்ச்சிக்கானவை

வலிவுள்ள மக்களுள்ள நாட்டிலும் வலிவுள்ள ஆண்களைக் கொண்ட காலத்திலும் பிறந்தால் அத்தகைய தேசகாலங்கள் ஆண்களின் வலிவை வளர்ச்சியடையச் செய்யும்.

மற்றும் இன்பமான காலத்தின் தொடர்பு ஆண் விந்துவெனும் விதை கருப்பையெனும் நிலம் இவை குற்றம் குறையின்றி வலிவுடனிருத்தல் நல்ல உணவு நல்ல உடல் தூயமனம் உடலுடன் ஒன்றிய உணவு செயல் தூய்மை இயல்பு முன்வினை அனுகூலமாயிருத்தல் உடற்பயிற்சி வாலிபம் மகிழ்ச்சி இவையனைத்தும் உடல் வலிவை வளர்ப்பவை. 13

## 13. ஆகாரத்தைப் பக்குவப்படுத்துபவை

வெப்பம் காற்று திரவம் எண்ணெய் காலம் சமயோகம் (ஆகாரத்தின் சிறப்பான எண்வகை முறைகளின் சேர்க்கை) என்பவை ஆகாரத்தைப் பக்குவப்படுத்துபவையாகும். 14

## 14. வெப்பம் முதலியவை செய்யும் செயல்கள்

ஆகாரத்தைப் பக்குவம் செய்யும் ஊஷ்மா என்னும் பெயருள்ள சடராக்னியின் வெப்பம் முதலியவைகளின் செயல்களாவன

ஊஷ்மா (சடராக்னியின் வெப்பம்) உணவுப் பொருட்களைப் பக்குவம் செய்யும். ஸமான வாயு என்பது புசித்த உணவை சடராக்னியருகில் சேர்ப்பிக்கும்.

கிலேதம் (திரவப்பொருள்) கடினமாக உருண்டையாக உள்ள உணவை இளக வைக்கும்.

ஸ்நேகம் (எண்ணெய்) கடினமாக உள்ள உணவை மெத்தென்றாகும்படிச் செய்யும்.

காலம் — பக்குவமாவதற்கென குறிப்பிட்ட காலம் முழுதாகப் பக்குவம் செய்யும்.

சமயோகம் — உணவுப் பொருட்கள் இயற்கை முதலானவற்றுடைய சமச்சேர்க்கை உணவை நன்கு பக்குவப்படுத்தி தாதுக்களின் சமநிலையை உண்டாக்கும். 15

## 15. சீரணித்த உணவு தாதுக்களைச் சமநிலைப்படுத்தும் முறை

சீரணித்த உணவின் குணங்கள் உடலின் குணங்களுக்கு ஒத்திருந்தால் உடலின் குணங்களுடன் கலந்து விடும்.

உணவின் குணங்கள் உடற் குணங்களுக்கு எதிரிடையானவையாகில் உடலின் குணங்களை அழித்து விடும். உடலின் குணங்களும் உணவிலுள்ள எதிரிடையான குணங்களால் குறைக்கப்பட்டு உடலை முற்றிலும் அழித்துவிடும். 16

## 16. உடலிலுள்ள தாதுக்களின் பிரிவுகள்

உடலைச் சேர்ந்த தாதுக்கள் சுருக்கமாக மலதாதுக்களென்றும் பிரஸாத (ஆதாரமான) தாதுக்களென்றும் இரு வகையாகும்.

உடலுக்குத் தீங்கு விளைவிப்பவை மலதாதுக்கள். அதெவ்வாறெனில்

உடலில் மூக்கு முதலிய துவாரங்களின் வாயிலாக வெளிப்படுகின்றவைகளும் பக்குவ நிலைபெற்ற இரத்தம் அதாவது சீழ் முதலானவைகளும் கோளாறடைந்த வாத-பித்த-கப தோஷங்களும் மலம் எனப்படுகின்றன. மற்ற அசீரணம் முதலானவைகளும் மலம் எனப்படும்.

அவ்வாறின்றி உணவு கழிவு மலம் போன்றவை குறிப்பிட்ட அளவிலேயே இருந்தால் அவை உடலுக்கு ஆதாரமாக பிரஸாத (ஆதார) தாதுக்கள் ஆகின்றன.

மற்றும் குருத்துவம் (பளு) முதலாக திரவத்தன்மை வரையிலான இருபது குணங்கள்—குணவகையினாலும் இரசம் முதல் விந்து வரையிலான தாதுக்கள் திரவிய வகையினாலும் இதற்கு முன்பே விவரிக்கப்பட்டுள்ளன. 17

## 17. மலம் முதலியவற்றிற்குத் தோஷம் தோன்றக் காரணம்

வாத—பித்த—கபங்களென்னும் தோஷங்கள் மற்றவைகளைக் கெடுக்கும் இயல்புடையவைகளாதல் பற்றி இவை சீற்றமடையும் போது உடற்கழிவு மலம் இரசம் முதலான தாதுக்கள் இவையனைத்தையும் கெடுக்கின்றன.

ரசம் முதலான வேறு தாதுக்களுடன் சேர்ந்தபொழுதும் மற்ற சமயங்களிலும் கெட்டு விடுகின்ற வாதம் முதலானதோஷங் களின் இலக்கணங்கள் சூத்திரஸ்தானம் (28-வது அத்தியாயம்) 'விவிதாசிதபீதியம்' என்னும் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள் ளன.

வாதம் முதலான தோஷங்கள் கோளாறடைந்தால் அவை உடலிலுள்ள தாதுக்களில் தொட்டுணர்வுப் புலன் பரவும் வரை யில்தான் பரவும்.

கோளாறடையாமல் சமநிலையிலுள்ள வாதம் முதலானவற் றிற்குத் தாதுச் சமநிலையெனும் உடல்நலன்தான் பயன். எனவே வாதம் முதலானவை கோளாறடையாமல் சமநிலையிலிருப்பதற் காக அறிவாளிகள் ஊக்கத்துடன் எல்லா முயற்சிகளையும் செய் தல் வேண்டும். 18

## 18. சாரீரமென்னும் உடற்கூறனைத்தின் அறிவின் பயன்

உடலிலிருக்கும் தாது முதலிய பிரிவுகளையொட்டி உடற் கூறனைத்தையும் எந்த மருத்துவன் எக்காலத்திலும் அறிவானோ அவன் உலகனைத்துக்கும் இன்பமளிக்கக்கூடிய ஆயுர்வேதத்தை முழுதும் அறிந்தவனாவான். 19

## 19. கருவைப்பற்றி அக்னிவேசரின் வினாக்கள்

மேற்கண்டவாறு கூறுகின்ற ஆத்திரேய முனிவரை நோக்கி அக்னிவேசர் வினவியதாவது : ''உடலைப் பற்றிய சரீராதிகார மென்னும் இப்பகுதியில் தாங்கள் விளக்கிய விஷயங்கள் அனைத் தையும் செவியுற்றேன்''. (எனக்கேற்பட்ட கீழ்க்கண்ட ஐயப்பாடு கள் சிலவற்றைத் தீர்க்க வேண்டுகிறேன்.)

(அ) வயிற்றிற்குள்ளிருக்கும் கருவுக்கு முதலில் எந்த உறுப்பு உண்டாகும் ?

(ஆ) கரு எந்தப் புறமாக முகத்தை வைத்துக்கொண்டு எவ்வாறு உள்ளே அடங்கி இருக்கும் ?

(இ) எந்த உணவினால் பிழைத்து எவ்வாறு வெளியே வரும் ?

(ஈ) பிறந்த குழவி எந்த உணவு உபகரணங்களால் உடனே இறக் கும் ?

(உ) பிறந்த பிறகு எவற்றினால் நோயின்றி வளரும் ?

(ஊ) தேவதைகள் முதலியவர்களின் கோபத்தால் தோன்றும் நோய்கள் கருவிலுள்ள சிசுவுக்கு உண்டாகுமா ? உண்டா காவா ?

(எ) குறிப்பிட்ட நேரத்திலும் எதிர்பாராத நேரத்திலும் (கால -அகால) மரணமென்பது உண்டு, இல்லை என்பதைத் தாங்கள் எவ்வாறு முடிவு செய்கிறீர்கள் ?

(ஏ) இதற்கு அதிகப்பட்சமான ஆயுள் எது ?

(ஐ) அதிகபட்சமான ஆயுளுக்குக் காரணங்கள் யாவை ?

என ஒன்பது வகையான கேள்விகளை அக்னிவேசர் கேட்டார். (மேற்கண்ட கேள்விகளுக்கு ஆத்திரேயர் அளித்த பதிலை முறையே காண்போம்.) 20

### 20. ஆத்திரேயரின் விடைகள்

இவ்வாறு கூறிய அக்னிவேசரை நோக்கி புனர்வசு என்னும் பகவான் ஆத்திரேயர் பதிலுரைக்கிறார்.

இதற்குமுன், ''கர்ப்பாவக்ராந்தி சாரீர''மென்னும் (4-வது. அத்தியாயத்தில் வயிற்றில் கரு தோன்றும் வகை எக்காலத்தில் எந்த உடலுறுப்புண்டாகும் என்பதைப்பற்றி விளக்கியுள்ளோம்)

இந்த உடலுறுப்புக்கள் தோன்றும் விஷயத்தைப் பற்றி சூத்திரக்காரர்களான ரிஷிகளனைவருக்குமிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. அவைகளனைத்தையும் மேலே விவரிப்போம். அவற்றைத் தெரிந்து கொள்வாயாக.

### (அ) உடலுறுப்புத் தோற்றம் (முதற்கேள்வியின் பதில்)

புலன்களனைத்துக்கும் தலை ஆதாரமாக இருப்பதால் கருவுக்கு முதலில் தலைதான் தோன்றும் என 'குமாரசிரசு' எனும் பரத்துவாசர் கூறினார்.

சேதனை (உணர்வு) எனும் தாதுவுக்கு இருப்பிடமாவதால் இதயம் முதலில் உண்டாகுமென்று பாஹ்லீகமெனும் நாட்டில் வசிப்பவரான 'காங்காயனர்' என்பவர் உரைத்தார்.

உணவு தொப்புள் கொடி வழியாக வருவதால் தொப்புள் கொடிதான் முதலில் தோன்றுமென ''பத்திரகாப்பியர்'' என்பவர் சொன்னார்.

பக்குவாசயமென்னும் சீரணப்பை குதஸ்த்தானமென்னும் ஆசனவாய் இவையிரண்டும் வாதமென்னும் வாயுவுக்கு நிலையாவதால் முதலில் அவை இரண்டுமே தோன்றுமென 'பத்திரசௌனகர்' என்பவர் உரைத்தார்.

மனிதப் பிறவியில் எல்லாச் செயல்களுக்கும் கைகால்கள் இன்றியமையாதவை. எனவே முதலில் கைகால்கள் தோன்று கின்றன என்று 'படிசர்' என்பவர் பறைந்தார்.

பலவகையான உணர்வுகளைத் தோற்றுவிக்கும் அறிவுக்குப் புலன்கள் இருப்பிடமானவை. எனவே புலன்களே முதலில் தோன்றுகின்றன என்று விதேகநாட்டரசரான 'ஜனகர்' உரைத் தார்.

கண்களுக்குப் புலனாகாமல் கரு மறைந்திருப்பதாலும் உற்பத்தி காலத்தில் உறுப்புக்களின் நுண்மை காரணமாக உறுப்பு களை இது முதலில் தோன்றியது இது பிறகு தோன்றியது என யூகித்தறியமுடியாது என மரீசியின் மகனான 'கசியபர்' கூறி னார்.

உடலுறுப்புகளும் துணையுறுப்புக்களும் ஒரே காலத்தில் ஒன்றுகூடித் தோன்றுகின்றன என்று 'தன்வந்திரி' உரைத்தார்.

இதயம் முதலான உறுப்புக்களனைத்தும் ஒரே நேரத்தில் தோன்றுகின்றன என்னும் தன்வந்திரியின் கூற்றே மிக்கயுக்தியுடன் கூடியதாகவும் பொருந்துவதாகவும் உள்ளது.

இதயம் உடலுறுப்புகளனைத்திற்கும், மூலமாகவும், உட லொளி (ஓஜஸ்) முதலிய சிலவற்றிற்கு ஆதாரமாகவும் இருக்கும்.

இதயம் தோன்றுவதற்கு முன் மற்ற உறுப்புகள் தோன்றா. எனவே எல்லாவற்றிற்கும் ஆதாரமான இதயமும் தலை முதலிய உறுப்புகளனைத்தும் ஒரே நேரத்தில் தோன்றுகின்றன எனக் கூறுவதே மிகப் பொருத்தமானது.

உறுப்புக்களனைத்தும் ஒன்றோடொன்று தொடர்பு கொண் டிருப்பதால் ஒன்றைவிட்டு மற்றொன்று தோன்றாது. ஆகவே உறுப்புக்களனைத்தும் ஒரே முறையாகத் தோன்றுகின்றன என யாம் கூறியதே எல்லோருக்கும் இயைந்ததென 'பரத்துவாசர்' தன் முடிவை வலியுறுத்திக் கூறினார். 21

### (ஆ) வயிற்றில் கரு இருக்கும் நிலை

கரு தாயின் முதுகுப்புறத்தை நோக்கி மேல்நோக்கிய நிலை யில் தலையை வைத்துக்கொண்டும் உடலுறுப்புக்களனைத்தை யும் சுருக்கிக்கொண்டும் தாயின் வயிற்றுக்குள் தங்கியிருக்கும். 22

### (இ) கரு உயிர் வாழும் வகை

கருப்பைக்குள் உள்ள கரு நுண்ணியதாக இருப்பதால் அது இருக்கிறதா, இல்லையா? என்று ஐயப்படும் வகையில்

நுண்ணிய உறுப்புகளைக் கொண்டிருக்கும்போது பசி தாகமற்றிருக்கும்.

அந்நிலையில் அது தன் வாழ்வுக்காகப் பிறரை அண்டி அதாவது தாயைச் சார்ந்து தாயுண்ணும் உணவிலுள்ள எண்ணெய்ப் பசை ஈரப்பசைகளால் தன் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்து கொண்டு உயிர் வாழும்.

ஏரியில் நீர் நிறைந்திருக்கும்போது அதையொட்டியுள்ள நிலத்தில் நிறைய நீர் பாயாமலிருந்தாலும் நீர்க்கசிவினால் மட்டுமே பயிர் உயிர்த்திருப்பதைப் போல் கருவிலுள்ள சிசுவும் உயிர்த்திருக்குமென்றறிக.

பிறகு தாய் புசித்த உணவு ரசத்தின் எண்ணெய்ப்பசை சிறிதளவு மயிர்த் துவாரங்களின் வழியாகவும் சிறிதளவு தொப்புட்குழாய் வழியாகவும் பரவிக் கருவைப் போஷிக்கும்.

கருவின் தொப்புட்பகுதியில் ஒரு நாடி இணைந்து அந்நாடியுடன் மற்றொரு நாடி பிணைக்கப்பட்டு அந்நாடி தாயின் இதயத்தை அடைந்திருக்கும். தாயின் இதயம் இரசம் முதலியவைகளைப் பாயச் செய்கின்ற நாடிகளுடன் தொடர்பு கொண்டிருக்கும். அந்த இரசம் அதற்கு வலிவையும் நிறத்தையும் தோற்றுவிக்கும். அந்த உணவு எல்லாச் சுவைகளையும் கொண்டிருக்கும்.

கருவுற்றவள் புசித்த உணவில் இனிப்பு முதலான சுவைகள் மூவகையாகப் பிரிந்து உடலில் பரவுகின்றன. அவற்றில் ஒரு பகுதி தாயின் உடலைப் போஷிக்கும். இரண்டாவது பகுதி தாய்ப் பாலை வளர்க்கும். மூன்றாவது பகுதி கருவை வளர்க்கும். இவ்வாறு நேரிடையாக உணவைப் புசிக்காமல் தாயையண்டியே கரு வாழ்ந்து வரும். 23

**கரு வெளிப்படும் வகை (இ. தொடர்ச்சி)**

மகப்பேறு நேரத்தில் தோன்றும் வாதத்தின் தொடர்பினால் கரு தலைகீழாகத் திருப்பப்பட்டு தலையைக் கீழ்நோக்காக வைத்துக்கொண்டு மகப்பேறு உண்டாகும் வழியாக வெளிப்படும். இந்த நிலைக்கு இயற்கை மகப்பேறு (பிரசவம்) எனப்பெயர்.

இதற்கு எதிர்மாறாகத் தலை முதலியவைகளை வைத்துக் கொண்டு மகப்பேறுண்டானால் அது 'முரணான மகப்பேறு' எனப் பெயர் பெறும்.

கருவிலுள்ள சிசு வெளிப்பட்ட பிறகு தாய்ப்பால் முதலிய உணவைச் சுதந்திரமாக உண்ணும் திறன் பெற்றிருக்கும். 24

### (ஈ) சிசு வளரக்காரணம்

இந்த சாரீரஸ்தானம் ''ஜாதிஸூத்ரீயம்'' என்னும் எட்டாவது அத்தியாயத்தில் கூறப்படும் உணவும் உபசாரமும் கருவை வளர்ப்பவை, மாற்றத்தை ஏற்படுத்தாதவை என்றறிக. 25

### (உ) சிசுமரிக்கக் காரணம்

தாய் கருவுற்றபோது முரணான பணிவிடைகளைச் செய்தால் சிறிது காலத்திற்கு முன் நடப்பட்டு நன்றாக வேரூன்றாத மரம் காற்றாலும் வெயிலாலும் அழிவது போல் சிசுவும் பிறந்தவுடன் அழிந்துவிடும். 26

### (ஊ) தேவதைகளின் சீற்றத்தினால் தோன்றும் நோய்கள்

குமாரதந்திரம் முதலிய நூல்களில் மேலோர்கள் கூறியபடி இந்நோயாளிகளிடம் காணப்படும் மனிதசக்தியைக் கடந்த பலம் வலிமை ஒளி அறிவு முதலிய சிறப்பு குணங்களாலும் வாதம் முதலான தோஷங்களுக்குரிய இலக்கணங்களின்றி இந்நோய்களில் காணப்படும் சிறப்புக்குறிகளாலும் தனிச் சிகிச்சை முறைகள் என்பனவற்றால் தேவதைகளின் சினத்தினாலும் நோய்கள் தோன்றுகின்றன என்பது இங்கு விளங்குகின்றது. 27

### (எ) கால-அகால மரணங்களைப் பற்றிய முடிவு

உரிய நேரத்தில் மரிப்பது, நேரமற்ற நேரத்தில் மரிப்பது என இருவகை மரணங்கள் உள்ளனவா ? இல்லையா ? என்னும் கால-அகால மரணங்களைப் பற்றிய கேள்விக்கு இதுதான் பதில்.

''உலகில் எவன் மரித்தாலும் அதற்குரிய காலத்தில் தான் மரிப்பான். காலம் என்பது நிலையானது. அதற்கு ஓய்வென்பதே கிடையாது காலத்தொடர்பின்றி மரிப்பதும் இயலாது. எனவே அகால மரணம் என்பதே பொருந்தாது அனைவரும் காலத்தால் மரணம் அடைகின்றனர்'' எனச் சிலர் கூறுவர்.

இது சரியல்ல. இயற்கையாக உள்ள இலக்கணத்தையொட்டி இடைவெளியுள்ளது என்றும், இடைவெளியற்றது என்றும் காலத்தை இருகூறாகப் பிரித்துக்கூற முடியாது.

சிலர் எவன் எக்காலத்தில் மரிக்கிறானோ அது அவனுக்காக ஏற்பட்ட உரிய கால மரணமாகும். அத்தகைய உரிய மரணகாலம் உயிரினங்களனைத்துக்கும் செயல்புரிவதாகையால் உண்மையானது என்று கூறி மரணத்திற்குரிய காலத்தை முடிவு செய்வார்கள்.

இதுவும் பொருள் விளங்காமற் கூறும் கூற்று. மரணம் என்பது எல்லோர்க்கும் உறுதியாக நிகழக்கூடியது. எனவே ஒருதலைப் பாடின்றி காலம் அனைவருக்கும் சமமானது எனக் கூறுதல் பொருந்தாது.

ஆயுளின் அளவையொட்டி காலத்தின் பிரிவு ஆயுர்வேத நூல்களில் கூறப்படுகிறது. குறிப்பிட்ட காலத்தில் உண்டாகும் மரணம் உரிய கால மரணம் என்றும் அதற்குள் உண்டாகும் மரணம் அகால மரணம் என்றும் ஆயுர்வேதத்தின் முடிவு.

மற்றும் ''எவன் எக்காலத்தில் மரிக்கிறானோ அதுவே அவ னுக்கு உரியகால மரணம்'' என முடிவு செய்பவரின் மதத்தில் மரணத்தைக் காட்டிலும் வேறுபட்ட உணவு உரையாடல் செயல்கள் இவையனைத்தும் உரிய காலத்திலேயே நிகழ்கின்றன எனக் கூறல் வேண்டும்.

அவ்வாறாகில் நேரமல்லாத நேரத்தில் செய்த புசித்தல், உரையாடல் போன்ற செயல்கள் தீமையளிப்பதும், தக்க நேரத்தில் உண்ட உணவு, உரையாடல் செயல்கள் நன்மையளிப்பதும் அனுபவத்திலுள்ளனவே.

என்றால் அனைத்தும் உரிய நேரத்தையொட்டி இருப்பவையே யன்றி நேரமல்லா நேரத்தில் அல்ல எனக் கூறுவோமாகில் இந்த கால—அகாலப் பாகுபாட்டையொட்டி உணவு முதலியவைகளால் ஏற்படும் நன்மை தீமைகள் உண்டாகா.

மற்றும் உடல் முதலியவற்றைச் சார்ந்த அந்தந்த நிலைகளில் உணவு நோய் முதலியவைகளைக் கவனித்துக் கால அகாலப் பாகுபாட்டை எடுத்துரைப்பது அனுபவத்தில் கண்ட உண்மை யாகும். அதாவது ''இந்த நோய் வருவதற்கு இது காலம்'' ''இது அகாலம்'' என்று (நோயின் நிலையையொட்டி) ஏற்படும்.

இதேபோல் உணவு மருந்து மருத்துவம் நோய்நீக்கம் இவற் றிற்கெல்லாம் இது உரிய நேரமென்றும் அல்லவென்றும் அவற் றின் நிலையையொட்டி கால-அகாலங்களின் பாகுபாட்டறிவு அனுபவத்திற்கு வரும்.

இந்த கால அகாலங்களைப்பற்றிய பேச்சு சாத்திரத்தில் மட்டு மல்ல உலக நடவடிக்கையிலும் உள்ளதே. அதெவ்வாறெனில் ''ஆண்டவன் உரிய நேரத்தில் மழை பொழிகிறான் நேரமல்லா நேரத்தில் மழை பொழிகிறான். தக்க நேரத்தில் குளிர், நேர மல்லா நேரத்தில் குளிர் சூரியன் காலத்தில் காயச் செய்கிறான்,

காலமல்லாக் காலத்தில் காயும் சூரியன், தக்கநேரத்தில் பூவும் பழமும் தோன்றுகின்றன. நேரமல்லா நேரத்தில் பூவும் பழமும் தோன்றின என்பன போன்றவை உலக வழக்கிலும் உள்ளன.

எனவே உரிய நேரத்தில் மரணம் அகாலத்தில் மரணம் என இவ்விரண்டுமே இருப்பதால் இவற்றில் ஒன்றே உளது எனக் கூறமுடியாது.

மற்றும் அகால மரணம் என்பது இல்லாவிட்டால் மக்கள் எல்லோரும் குறிப்பிட்ட ஆயுளான நூறாண்டுகள் வாழ்ந்தே தீர வேண்டிவரும். அவ்வாறாகில் அகால மரணத்தைத் தவிர்ப்பதற்காக உபதேசிக்கப்பட்ட நன்மைதீமைகளைப் பற்றிய அறிவுரை வீணாகிவிடும்.

மற்றும் பொருள்களை அறியும் வழிகளில் ஆயுள், ஆயுளின்மை இவைகளை முடிவு செய்வதற்காகச் சாத்திரங்களில் கூறிய [1]பிரத்தியட்சம் [2]அநுமானம் [3]ஆப்தோபதேசம் என்னும் அறிவின் அளவைகள் (பிரமாணங்கள்) அனைத்தும் பயனற்றவையாகிவிடும்.

எனவே இருவகையான மரணங்களும் உள்ளன எனக்கூறுவதே எனக்குச் சம்மதமென ஆத்திரேயர் கூறினார்.

உலகில் அகாலமரணமென்பதில்லை எனப் பொதுவாகக் கூறுவது வீண்வாதம் மட்டுமேயன்றி உண்மையானதல்ல. 28

(இதுவரை ஏழாவது வினாவிற்கு விடையாகும்)

### மனிதர்களின் முழு ஆயுள் அளவு

இந்தக் கலியுகத்தின் ஆயுளளவு நூறாண்டுகள். 29

(இது 8வது கேள்விக்கு விடை)

### நீண்ட ஆயுளை அளிக்கும் காரணங்கள்

இயற்கைக்கு (தாய், தந்தையர் முதலிய சாதனங்களுக்கு)ச் கூறியுள்ள குணங்களின் சிறப்பும் ஆன்மாவைச் சேர்ந்த நீண்ட ஆயுளை அளிக்கவல்ல தருமமாகிய கருமத்தின் தொடர்பும் உட

---

(1) பிரத்தியட்சம் – புலன்களால் அறிந்து கொள்ளுதல்.

(2) அநுமானம் – கருதல் அளவை.

(3) ஆப்தோபதேசம் – சான்றோர் வாக்கு.

லுடன் ஒன்றிவிடும் உணவைப் பயன்படுத்துவதும் நீண்ட ஆயுளுக்கு காரணங்களாகின்றன. 30

(இது 9-வது கேள்விக்குப் பதில்)

**இவ்வத்தியாய விஷயச் சுருக்கம்**

உடலின் இலக்கணம் நோய்களால் துன்புறும்போதுள்ளஅதன் நிலை அது துன்பத்தையாவது அழிவையாவது அடைவதற்குக் காரணங்கள், உடலிலுள்ள தாதுக்கள் அவற்றிற்கு வளர்ச்சியும் குறைவும் ஏற்படும் வகை நலிந்த தாதுவுக்கான மருந்து உடல் வளர்ச்சிக்கான பொருட்கள் வலிவேற்படுவதற்கான பொருட்கள் உணவை சீரணிக்கச் செய்யும் சாதனங்கள் அவற்றின் வெவ்வேறு செயல்கள் மலங்கள் தூயவைகள் எனப் பாகுபாடுள்ள தாதுக்கள்' ஒன்பது வகையான வினாக்கள் அவ்வினாக்களுக்கான விடைகள் இவையனைத்தும் சரீரவிசய சாரீரம் என்னும் இவ்வத்தியாயத்தில் மாமுனிவரான உண்மையை முடிவு செய்த அக்நிவேசரால் கூறப்பட்டன. 31–34

அக்நிவேசமுனிவரால் இயற்றப்பட்டு
சரக மாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
சாரீரஸ்தானத்தில் 'சரீரவிசய சாரீரம்' என்னும்
ஆறாவது அத்தியாயம் முற்றும்

## ஏழாவது அத்தியாயம்

## *சரீரஸங்க்யா சாரீரம்

பகவான் ஆத்திரேயர் விவரித்தவகையில் ''சரீரஸங்க்யா சாரீரம்'' என்னும் அத்தியாயத்தை விளக்குவோம். 1–2

### 1. உடலுறுப்புகளின் எண்ணிக்கை பற்றிய அக்நிவேசரின் வினா

''உடல் முழுவதிலுமுள்ள உறுப்புகளின் எண்ணிக்கையளவை அறிவதற்காக உடல் முழுவதையும் உறுப்புகளாகப் பிரித்து அவற்றின் எண்ணிக்கைகளைக் கூறியருள வேண்டும்'' என அக்நிவேசர் ஆத்திரேயரை வேண்டினார். 3

### 2. அறுவகைச் சருமங்களின் விளக்கம்

அக்நிவேசரின் வினாவுக்கு ஆத்திரேயர் இவ்வாறு விடை கூறினார் :- அக்நிவேசா ! உடலைப் பற்றிய உன் கேள்விக்கு நான் அளிக்கும் பதிலை சாவதானமாக முறைப்படி கேட்பாயாக.

உடலிலுள்ள சருமங்கள் அறுவகைப்படும். அவற்றில் நீரைத் தாங்கும் சருமம் உதகதரம் எனப்படும். இது உடலின்மீது உடல் முழுவதையும் மூடிப் பரவியுள்ளது. இது முதலாவது சருமம். இதற்கு உட்புறமுள்ள சருமம் இரண்டாவது. இது இரத்தத்தைத் தாங்கியிருக்கும். எனவே இது ''ரக்ததரம்'' எனப்படும்.

மூன்றாவது பொரையான தோல் சின்னஞ்சிறு குஷ்டவகைகளான சித்துமம், கிலாஸம் என்னும் நோய்களைத் தோற்றுவிக்கும் தோஷங்களுக்கு ஆதாரமாக இருக்கும்.

நான்காவது வகையான தோல் 'தத்ருகுஷ்டம்' எனும் நோயைத் தோற்றுவிக்கும் தோஷத்திற்கு இருப்பிடமானது.

ஐந்தாவது சருமம் அலஜி வித்ரதி என்னும் பிரமேகச்சிரங்குகளைத் தோற்றுவிக்கும் தோஷத்திற்கு ஆதாரமாக இருக்கும்.

---

*சரீரஸங்க்யா சாரீரம்— உடலிலுள்ள உறுப்புகளின் எண்ணிக்கையையொட்டி உடற்கூறுகள் கூறப்படுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறும்.

ஆறாவது சருமம் பிளவுபட்டால் மிக்க துன்பத்தை யடைந்து கண்களை இழந்தவன்போலும் இருளில் இருப்பவன் போலும் மனிதன் மயக்கமுறுவான்.

அந்த சருமத்தைச் சார்ந்த உடலிலுள்ள மூட்டு (கீல்)களில் கருநிறமும், சிவப்பு நிறமும் கலந்த, தடிப்பான ரணங்கள் தோன்றும். அவை சிகிச்சைக்கு மிகவும் அடங்காதவைகளாக இருக்கும்.

மேற்கூறிய உடல்மீது பரவியுள்ள சருமங்களின் பொரைகள் ஆறும் இனி விவரிக்கப்படும் அறுவகை உறுப்புக்களுடன் கூடிய உடலெங்கும் பரவி கவிந்துகொண்டிருக்கும். 4

## 3. அறுவகையான உடலுறுப்புகளின் பிரிவுகள்

இரண்டு கைகள், இரண்டு தொடைகள், தலையுடன் கூடிய கழுத்து அந்தராதி எனும் உடலின் நடுப்பகுதி என ஆறு உறுப்புக்களைக் கொண்டது உடல். 5

## 4. முந்நூற்று அறுபது உடலுறுப்புகளின் விவரம் (360)

பற்கள் அவற்றின் வேர்கள் (உலுகங்கள்), நகங்கள் இவற்றுடன் சேர்ந்து உடலிலுள்ள எலும்புகள் முன்னூற்று அறுபது அவைகளின் விவரம் வருமாறு :

| உடலுறுப்புகளின் பெயர்கள் | எண்ணிக்கை |
|---|---|
| 1. பற்கள் | 32 |
| 2. பற்களின் காப்புகள் (உலுகலங்கள்) | 32 |
| 3. நகங்கள் (கைகால்கள் அனைத்திலும் சேர்ந்து) | 20 |
| 4. கை-கால் கணுவெலும்புகள் மொத்தம் | 60 |
| 5. விரல்கள் தொடங்கி மணிக்கட்டுவரை முடியும் குச்சிபோன்ற எலும்புகள் (சலாகாஸ்திகள்) | 20 |
| 6. சலாகாஸ்திகளுக்கு ஆதாரமாக கை, கால்கள் இரண்டிலுமுள்ள எலும்புகள் | 4 |
| 7. பாதத்தின் அடிப்பகுதியிலுள்ள எலும்புகள்(பார்ஷ்ணி) | 2 |
| 8. கணுக்கால் எலும்புகள் | 4 |
| 9. மணிக்கட்டு எலும்புகள் | 2 |
| 10. முன்னங்கை எலும்புகள் (கட்டைவிரல் தவிர மற்றவை) (அரத்நி) | 4 |
| | 180 |
| | 180 |

| | | |
|---|---|---|
| 11. | முட்டியின் எலும்புகள் | 2 |
| 12. | முழங்கால் எலும்புகள் | 4 |
| 13. | கணுக்கால் மூட்டுகள் | 2 |
| 14. | தொடைஎலும்புகள் | 2 |
| 15. | புய எலும்புகள் | 2 |
| 16. | தோள் எலும்புகள் | 2 |
| 17. | தோலின் பலகை எலும்புகள் | 2 |
| 18. | அக்ஷகம் | 2 |
| 19. | ஜத்ரு | 2 |
| 20. | தாலு | 1 |
| 21. | பின்தட்டெலும்புகள் | 2 |
| 22. | குறிஎலும்பு | 1 |
| 23. | முதுகெலும்புகள் | 45 |
| 24. | கழுத்தெலும்புகள் | 15 |
| 25. | மார்பு எலும்புகள் | 14 |
| 26. | விலா எலும்புகள் | 24 |
| 27. | விலா பக்க எலும்புகள் | 24 |
| 28. | விலாச்சார்பெலும்புகள் | 24 |
| 29. | தாடை (உள்) எலும்பு | 1 |
| 30. | உள்தாடை பூட்டெலும்பு | 2 |
| 31. | மூக்கு, தவடை, நெற்றிக்கூட்டெலும்பு | 1 |
| 32. | கன்னத்தெலும்புகள் | 2 |
| 33. | மண்டையோட்டெலும்புகள் | 4 |
| | | 360 |

இவ்வாறு பற்கள் அவற்றின் ஈறுகள் நகங்கள் இவற்றுடன் சேர்த்து உடலிலுள்ள எலும்புகள் கணக்கிடப்பட்டுள்ளன. 6

**5. அறிவுப்புலன்களின் இருப்பிடங்கள்**

தோல் நாக்கு மூக்கு கண்கள் செவிகள் என ஞானேந்திரியங்கள் (அறிவுப்புலன்களின்) இருப்பிடங்கள் ஐவகையானவை.

**6. புலனேந்திரியங்கள் (அறிவுப்புலன்கள்)**

தொடுஉணர்ச்சி சுவைத்தல் நுகர்தல் காட்சி கேட்டல் என அறிவுப்புலன்களின் பொருட்கள் ஐவகையாகும்.

**7. கர்மேந்திரியங்கள் ஐந்து**

இருகைகள், இருகால்கள், ஆசனவாய், பால்குறி, நாக்கு என இவ்வைந்தும் கர்மேந்திரியங்கள் எனப்படுகின்றன. 7

உயிர் நிலையான இதயம் ஒன்று 8

## 8. உயிர் நிலைகள் பத்து

தலை கழுத்து இதயம் தொப்புள் ஆசனவாய் வஸ்தி எனும் சிறுநீர்ப்பை [1]ஓஜஸ் விந்து இரத்தம் மாமிசம் எனும் இப்பத்தும் உயிர்நிலைகள். இவற்றில் முதல் ஆறும் மர்ம ஸ்தானங்கள் அதாவது உயிர்நிலைகள். 9

## 9. [2]கோஷ்ட்டத்துடன் தொடர்புள்ள உறுப்புகள்

தொப்புள் இதயம் குலோமம் (தாகமெடுக்கும் உறுப்பு) யகிருத்து (கல்லீரல்) ப்லீஹம் (மண்ணீரல்) விருக்கம் (மூத்திரக் குண்டிக்காய்) வஸ்தி (சிறுநீர்ப்பை) மலப்பை, ஆமாசயம்(உணவுப் பை) பக்வாசயம் (சீரணப்பை), உத்தரகுதம் என்னும் மலம் தங்குமிடம், அதரகுதம் என்னும் மலத்தை வெளிப்படுத்துமிடம், க்ஷுத்ராந்த்ரம் (சிறுகுடல்) ஸ்தூலாந்த்ரம் (பெருகுடல்) வபா வஹனம் (வபை என்னும் உறுப்பைத் தாங்குமிடம்) கொழுப்புப் பொரை என இவை கோஷ்டத்தைச் சேர்ந்த உறுப்புகள். 10

## 10. ஐம்பத்தாறு இணையுறுப்புகள்

கை முதலிய ஆறு உடலுறுப்புகளுடன் தொடர்பு கொண்டுள்ள இணையுறுப்புகள் ஐம்பத்தாறு. முன்பு உடலுறுப்புகளைக் கணக்கிடும்போது இவை குறிப்பிடப்படவில்லை. அதே பொருள் தரும் வேறு சொற்களால் அவை இங்கு விவரித்துக் கூறப்படுகின்றன. அவையாவன :-

| | | |
|---|---|---|
| 1. | முழங்கால்—ஆட்டுச்சதைகள் | 2 |
| 2. | தொடை — ஆடு சதைகள் | 2 |
| 3. | புட்டங்கள் | 2 |
| 4. | விருஷணம் (விதைகள்) | 2 |
| 5. | ஆண்குறி | 1 |
| 6. | அக்குள்களின் பள்ளங்கள் (உகம்) | 2 |
| 7. | தொடை இடுக்குகள் (வங்க்ஷணம்) | 2 |
| 8. | முதுகு எலும்புக்கு இருபுறங்களிலும் புட்டத்திற்குச் சேர்ந்தவாறுள்ள பள்ளங்கள் (குகுந்தரம்) | 2 |
| 9. | வஸ்திசீர்ஷம்(சிறுநீர்ப்பையின் முனை) | 1 |
| 10. | வயிறு | 1 |
| 11. | தனங்கள் (மார்பகங்கள்) | 2 |

1. ஓஜஸ் — உடலுக்கு வலிவை அளிக்கும் ஒரு தாது.
2. கோஷ்ட்டம் — கழுத்துக்கு கீழே தொடங்கி வயிற்றின் அடிவரையுள்ள பை போன்ற உடலின் ஒரு பகுதி.

| | | |
|---|---|---|
| 12. | தோள்கள் | 2 |
| 13. | கைகளிலுள்ள பிண்டிகைகள் | 2 |
| 14. | மோவாய் | 1 |
| 15. | உதடுகள் | 2 |
| 16. | உதடுகளின் இறுதிப்பகுதிகள் | 2 |
| 17. | பற்களைக் கவிந்திருக்கும் பகுதிகள் | 2 |
| 18. | தாலு (தாடை) பகுதி | |
| 19. | களசுண்டிகை எனும் (தாடைக்குலி ஒருவகை உறுப்பு) | 1 |
| 20. | உள்நாக்குகள் (மேலும் கீழும் சேர்ந்து) | 2 |
| 21. | நாக்கு (பேசப் பயன்படுவது) | 1 |
| 22. | கன்னம் (இருபுறமும் சேர்ந்து) | 2 |
| 23. | காதுக்குள் வளையங்கள் | 2 |
| 24. | கர்ணபுத்ரகமெனும் காதுப்பகுதிகள் | 2 |
| 25. | கண்விழிகள் | 2 |
| 26. | கண் இரைப்பைகள் | 4 |
| 27. | கண்பாப்பாக்கள் | 2 |
| 28. | புருவங்கள் | 2 |
| 29. | அவடுப்பிரதேசம் (பிடரி) | 1 |
| 30. | உள்ளங்கால், உள்ளங்கைகளின் நடுவிலுள்ள குழிகள் | 4 |
| | ஆக மொத்தம் | 56 |

இவை ஐம்பத்தாறும் சேர்ந்து துணையுருப்புகள் எனப்படும். 11

## 11. உடலிலுள்ள துளைகள்

உடலில் ஒன்பது பெருந்துளைகள் (ஓட்டைகள்) உள்ளன. அவற்றில் தலையில் இருப்பவை ஏழு. இரண்டு கீழ்ப் பகுதியில் உள்ளன. (அதாவது, புட்டத்திலும் பாலுருப்புகளிலும் உள்ளவை) இவையனைத்தும் காணத்தக்கவை, எடுத்துக்கூற இயல்பவை. 12–13

## 12. ஸ்நாயு, ஸிரா முதலியவற்றின் எண்ணிக்கை

இனி கூறப்படுபவை யூகிக்கத்தக்கவைகளேயன்றி எடுத்துக் காட்டத்தக்கவையல்ல. அவையாவன :

| | | |
|---|---|---|
| 1. | ஸ்நாயுக்கள்[1] .. | 900 |
| 2. | ஸிரைகள்[2] .. .. | 700 |

1. ஸ்நாயுக்கள் — நரம்புகள்.
2. ஸிரைகள் — தாதுதோஷங்கள் வெளிப்படும் குழாய்கள்

3. [1]தமனிகள் .. .. 200
4. [2]பேசிகள் .. .. 400
5. [3]மர்மங்கள் .. .. 107
6. [4]சந்திகள் .. .. 200

மேற்கூறிய ஸிரை, தமனிகளில் மிக்க சூஷ்மமாக உள்ளவைகளின் முக்கியமான கூறுகளைப்(எண்களை) பிரித்துக் கணக்கிட்டால் அவற்றின் எண்ணிக்கை 29,956 ஆகும்.

உடலிலுள்ள தலைமயிர்கள், மீசைகள், உரோமங்கள் முதலியவை (அதாவது 29,956 எண்ணிக்கையுள்ளவை) ஆகும்.

இவ்வாறு காணத்தக்கவையான தோல் (த்வக்) முதலானவைகளுக்கு பிறகு யூகிக்கத் தக்கவைகளான ஸிரை, தமனி முதலானவைகளுக்கும் எண்ணிக்கைகள் முடிவு செய்து விவரிக்கப்பட்டன. இந்த எண்ணிக்கைகள் உடலில் மாறுபாடு ஏற்படாதபோது ஏற்றக்குறைவு இல்லாமல் இருக்கும் என்று அறிக. 14

## 13. (அஞ்ஜலி) கைகுவித்தலளவில் எண்ணத்தக்கவை

[5]அஞ்ஜலி என்னும் கை குவித்தலளவையால் அளவிடப்படும் பொருட்களை(திரவமாக உள்ள நீர் முதலியவைகளின்) அளவைப் பற்றி இங்கு கூறுகிறோம். அந்த அந்த அளவைகள் அவ்வற்றின் உயர்ந்த அளவைகள் என்றறிய வேண்டும்.

அவைகளில் ஏற்றத்தாழ்வுகள் உண்டாவதை யூகித்து அறிய வேண்டும்.

## 14. உடலிலுள்ள நீர் முதலானவற்றின் அளவு

உடலில் உள்ள திரவம், அவரவர் கைகுவியல் (அஞ்ஜலி) அளவில் பத்து கைக் குவியலளவு இருக்கும்.

அந்த நீர் மலப்போக்கின் (விரேசனம்) அதியோகத்தால் உடலிலிருந்து மலம் வெளியாவதென்னும் செயலை யொட்டியும்.

---

1. தமனிகள் — சுத்த ரத்தம் ஓடும் ரத்தக் குழாய்கள்
2. பேசிகள் — தசைநார்கள்.
3. மர்மங்கள் — உயிர்நிலைகள்.
4. சந்திகள் — மூட்டுகள்.
5. அஞ்ஜலி — இருகைகளையும் சேர்த்துப் பள்ளமாகத் தண்ணீர் முதலியவைகளைத் தாங்கும்படி வைத்துக்கொள்ளும் நிலை.

அம்மாதிரியே சிறுநீர், இரத்தம், மற்ற சரீரதாதுக்களை யொட்டியும், அதேபோல், உடலில் சருமத்தின் மேல்பாகத்தில் இருக்கும பொறையால் தாங்கப்படும் திரவத்தையொட்டியும்,

சருமங்களின் நடுவே லஸீகா எனும் பெயர்கொண்ட விரணத்திலுள்ள திரவத்தையும் ஒட்டியும் உடலில் தோன்றும் ஆவியினால் உரோமத் துவாரங்களிலிருந்து வேர்வையாக வெளிப்பட்டு திரவமாகவும் இருக்கும்.

சீரணித்த உணவு திரவ உருவத்தில் ரஸமென்னும் தாதுவாக (அதாவது ஆகாரத்தின் சாரமான முதல் தாது) பத்து கைக்குவித்தலளவு (அஞ்ஜலி) கொண்டிருக்கும்.

இரத்தம் எட்டு கைகுவித்தலளவும்,
மலம் ஏழு கைகுவித்தலளவும்,
கபம் ஆறு கைகுவித்தலளவும்,
பித்தம் ஐந்து கைகுவித்தலளவும்,
சிறுநீர் நான்கு கைகுவித்தலளவும்,
வசைநீர் மூன்று கைகுவித்தலளவும்,
[1]மேதஸ் இரண்டு கைகுவித்தலளவும்,
[2]மஜ்ஜை ஒரு கைகுவித்தலளவும்,
மஸ்திஷ்கம் அரை கைகுவித்தலளவும்,
சுக்ரம் அரை கைகுவித்தலளவும்,

இவை உடலில் தவறாமல் இருக்கும். மற்றும் கப உருவான ஓஜஸ் அரை கைகுவித்தலளவே இருக்கும். இவ்வாறு உடலின் தத்துவம் கூறப்பட்டது. 15

## 15. பார்த்திவ (நிலசம்பந்தமான) உறுப்புகள்

மேற்கூறிய உறுப்புகளில் மிகப்பெரியதும், நிலையானதும் உருவுள்ளதும் பளுவுள்ளதும் கடினமானதுமான உறுப்புகள் அதாவது நகங்கள் பற்கள் மாமிசம் மலம் தலைமயிர் தாடி உரோமங்கள் முதலானவை அனைத்தும் ‘பாரத்திவம்’ (நிலத்தாது சம்பந்தமானவை) எனப்படும். மணமும் நாசியும் கூட அத்தகையவையே.

---

1. மேதஸ் – கொழுப்பு
2. மஜ்ஜை – எலும்புக்குள் இருக்கும் சோறு.

**16. நீர்சம்பந்தமான (அப்யமான) உறுப்புகள்**

திரவம், ஸரம் (சிறிதளவு நகரும் சுபாவமுள்ளது) மந்தம் (வேலையைத் தாமதமாகச் செய்வது) ஸ்நிக்தம் (பிசுக்குள்ளது) மிருது (மெத்தென்றிருப்பது) பிச்சிலம் (ஒட்டும் தன்மையுள்ளது) என்ற இயல்பு கொண்ட-ரஸம், ரத்தம், பசை (மாமிசப்பசை), கபம், பித்தம், மூத்திரம், வேர்வை முதலியவையனைத்தும் நீரைச்சேர்ந்த உறுப்புக்கள். மற்றும் சுவை (ரஸம்) ரஸனா என்னும் சுவைப்புலனும் நீரைச் சேர்ந்ததே.

**17. ஆக்நேய )நெருப்பு சம்பந்தமான) உறுப்புகள்**

உடலிலுள்ள பித்தம், சூடு, பளபளப்பு இவற்றைச் சேர்ந்தவைகளும், நீலம் மஞ்சள் முதலிய வர்ணங்களும், கட்புலன் இவையனைத்தும் அக்னி எனும் பூதத்தைச் சேர்ந்தவை.

**18. வாயு (காற்று) சம்பந்தமான உறுப்புகள்**

மூச்சுக்காற்றுகள், திறத்தல், மூடுதல், சுருக்குதல், விரித்தல், செல்லுதல், தூண்டுதல், தரித்தல் முதலானவைகளும் தொடுதலும், தொடுபுலனும் காற்றெனும் பூதத்தைச் சேர்ந்தவை.

**19. ஆகாய சம்பந்தமான உறுப்புகள்**

வெவ்வேறாகப் பிரிந்துள்ள பெரியதும் மிகச் சிறியதுமான இடைவெளிகள், நாசி துவாரங்கள் சிறிதளவுகொண்ட உரோமங்களின் சந்துகள் ஓசைகள் செவிப்புலன் இவையனைத்தும் ஆகாயத்தைச் சேர்ந்தவை.

**20. பிரதானம் (ஆத்மா)**

உடலைத் தூண்டுகிற உணர்வு அறிவு மனம் என இவை பிரதானம் முக்கியமானது ஆத்மா எனும் சொல்லால் குறிக்கப்படுகின்றன.

இவ்வாறு சரீரத்தின் உறுப்புகளின் எண்ணிக்கை பருமன் முதலிய பேதத்தையொட்டி விவரிக்கப்பட்டன. 16

**21. பரமாணு உருவான உறுப்புக்கள் எண்ணில் அடங்காதவை**

உடலுறுப்புக்கள் மிகவும் சூக்குமமான பரமாணுக்களைக் கொண்டவை. அவ்வணுக்கள் எண்ணற்றவைகளாகவும் மிக்க நுண்ணியவைகளாகவும், புலன்களுக்கு இலக்காகாதவைகளாகவும் இருக்கின்றன.

அத்தகைய பரமாணுக்களின் சேர்க்கைக்கும் பிரிவிற்கும் வாயுவே காரணமாகின்றது. மற்றும் கருமஸ்வபாவமும் காரண மாகின்றது. 17

## 22. உடலுறுப்புகளின் எண்ணிக்கையை அறிவதன் பயன்

இவ்வாறு பல உறுப்புக்களைக் கொண்ட உடலை, ஒன்றா கவே கருதினால் அதன்மீது பற்று உண்டாகும். அவ்வாறன்றி உடலுறுப்புகளின் வேற்றுமைகளையொட்டி வெவ்வேறாகக் கருதி னால் மோட்சமுண்டாகும். உடலானது நிலம் நீர் முதலிய பூதங்களுடன் தொடர்பு கொண்டமையையொட்டி உறுப்புகளின் வேறுபாட்டை அறிந்தவனுக்கு உடலுக்கும் தனக்கும் (ஆன்மா வுக்கும்) தொடர்பு இல்லை என்னும் எண்ணம் தோன்றும். அதனால் உடல்மீது பற்றின்றி அதன் செயல்களில் ஈடுபாடு இன்றியிருப்பதால் முக்தி ஏற்படுமென்பது கருத்து.

## 23. உடலின் எண்ணிக்கையை அறிவதால் மருத்துவனுக்குப் பயன்

உடலுறுப்புக்களின் எண்ணிக்கையை விரிவாக அறியும் மருத் துவன், அதனை அறியாமையால் ஏற்படும் தடுமாற்றத்தை அடையமாட்டான்.

மற்றும் உலகில் பொதுவாக மக்களுக்குத் தோன்றும் மோக மயக்கங்களின் தோஷங்களாலும் அவன் பாதிக்கப்படுவதில்லை.

எனவே அவன் குற்றமற்றவனாய் பற்றின்றி புலன்களை வென்று, அமைதிகொண்டு பிறப்பற்றவனாகிறான். (18–20)

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
சாரீரஸ்தானத்தில் ''சரீரஸங்க்யாசாரீரம்'' என்னும்
ஏழாம் அத்தியாயம் மூற்றும்

# எட்டாம் அத்தியாயம்

## *ஜாதிஸூத்ரீயம்

பகவான் ஆத்ரேயர் கூறிய வகையில் ''ஜாதிஸூத்ரீய சாரீரம்'' எனும் அத்தியாயத்தை விவரிப்போம். 1–2

### 1. ஆண், பெண்களுக்கு சந்ததி உண்டாகும் வகை

குற்றமற்ற சுக்ரமெனும் ஆண் விந்தும், சோனிதமென்னும் பெண் விந்தும் அவை சேர்ந்துள்ள கருப்பையும் கொண்டு நற்குணமுள்ள ஆண்பெண்சந்ததியைக்கோரும் தம்பதியருக்கு அவர்களுக்கு விருப்பமான சந்ததியுண்டாகி எண்ணம் நிறைவேறுவதற்கான செயல் முறைகளை இனி உபதேசிப்போம். 3

### 2. சந்ததி உண்டாவதற்கான செயல்முறைகள்

நற்குணமுள்ள மகப்பேற்றைக் கோரும் ஆண் பெண்களுக்கு முதலில் [1]ஸ்நேஹ ஸ்வேத விதிகளை முறைப்படி செய்வித்துப் பிறகு [2]வமன [3]விரேசன முறைகளால் குடலைச் சுத்தம் செய்வித்து ஆரோக்கியம் உண்டாகும்படி செய்தல் வேண்டும். பிறகு அவர்கள் தூய்மையானவர்களெனத் தெரிந்த பின் [4]ஆஸ்தாபன அநுவாஸன வஸ்தி முறைகளால் உபசரிக்க வேண்டும்.

பிறகு மிக்க இனிப்பான மருந்துகளால் பக்குவம் செய்யப் பட்ட நெய் பால்களால் ஆணையும், எண்ணெய் உளுந்துகளால் பெண்ணையும் மகிழ்விக்க வேண்டும். 4

---

*ஜாதிஸூத்ரீயம் — ஜாதி என்றால் பிறவி. ஸூத்ரம் என்றால் உபாயம். பிறவிக்கான உபாயத்தை கூறுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெறுகிறது.

1. ஸ்நேஹவிதி — எண்ணெய் குளித்தல் முறை
   ஸ்வேத விதி — உடலில் வியர்வை உண்டாக்கச் செய்தல்
2. வமனம் — வாந்தி எடுக்கச் செய்தல்
3, விரேசனம் — மலம் கழிக்கச் செய்தல்
4. ஆஸ்தாபனம் — கஷாயவஸ்தி
5. அநுவாஸனம் எண்ணெய் வஸ்தி
   வஸ்தி பீச்சாங்குழலால் ஆசனவாயில் செலுத்துவது.

### 3. மாதவிடாய் காலத்தில் கடைபிடிக்க வேண்டிய முறைகள்

இவ்வாறு உபசாரங்களைப் பெற்றபின் மாதவிடாய் கொண்ட தினம் தொடங்கி மூன்று இரவுகள் கழியும்வரை (புணர்ச்சியில்லாமல்) உடையாத கெட்டியான பாத்திரத்தைக் கையில் ஏந்தி அதில் வைக்கப்பட்டிருக்கும் அன்னத்தைப் புசிப்பவளாய் மூன்று இரவுகள் தரைமீது படுத்திருக்கவேண்டும். அப்பொழுது ஸ்நானம் முதலியவைகளைச் செய்யலாகாது.

### 4. குளிக்கும் நாளன்று ஆண் பெண்களின் செயல்முறைகள்

நான்காவது நாள் மாதவிடாய் கொண்டுள்ள அந்தப் பெண்ணின் உடலுக்கு அழகாக நலங்கிட்டு தலை முழுக்காட்டி, தூய வெள்ளைத் துணியையணியச் செய்யவேண்டும். ஆணுக்கும் அன்று நலங்கிட்டு தலைமுழுக்காட்ட வேண்டும்.

அவர்கள் இருவரும் வெள்ளைத் துணியுடுத்தி பூமாலை அணிந்து தூயமனத்தவராய் ஒருவர் மீதொருவர் காதல்கொண்டு ஸ்நானம் செய்தது முதல் சம்போகத்திற்காக ஓரிடத்தில் இருக்க வேண்டும்.

### 5. புணர்ச்சிக்கான விதிமுறைகள்

அதிலும் ஆண் மகவை விரும்புகிறவர்கள் 4,6 முதலான இரட்டைப்படை நாட்களிலும் பெண் மகவை விரும்புகிறவர்கள் 5,7 முதலான ஒற்றைப்படையான நாட்களிலும் புணர்ச்சியி லீடுபட வேண்டும். 5

பெண்ணைக் கவிழ்ந்து படுத்திருக்கச் செய்தோ பக்கவாட்டில் படுக்கவைத்தோ புணர்ச்சி செய்யலாகாது. பெண் கவிழ்ந்து கீழ் நோக்கிப் படுத்திருந்தால் வாதம் அதிகமாகி யோனிக்குத் துன்பத்தை யுண்டாக்கும். வலப் பக்கவாட்டில் படுத்தால் அப்பக்கமுள்ள கபம் தன்னிடமிருந்து நழுவி கரு நிலைத்துவாரத்தை மூடிவிடும். இடப் பக்கமாகச் சாய்ந்து படுத்தால், அப்பக்கத்திலுள்ள பித்தம் தாக்கப்பட்டு இரத்தத்தையும் சுக்கிரத்தையும் எரிக்கச்செய்யும். எனவே முன்கூறிய மூன்று வகையாகப் படுத்திருக்கும் பெண்ணைப் புணரலாகாது.

பெண் மேல்நோக்கி மல்லாந்து படுத்துப் புணர்ச்சி செய்து வீர்யத்தை ஏற்க வேண்டும். அவ்வாறு படுத்தால் வாத-பித்த-கப தோஷங்கள் தம்தம் இருப்பிடத்தில் இருக்கும். புணர்ச்சி முடிந்தபின் பெண்ணைக் குளிர்ந்த நீரில் குளிக்கச் செய்ய வேண்டும்.

## 6. கருதரிக்கத் தகுதியில்லாத நிலைகள்

அதிகமாக உணவு கொள்வது பசி தாகம் அச்சம் கொண்டிருப்பது புணர்ச்சியில் மனம் செல்லாமை மனம் துன்புற்றிருத்தல் சினம் கொண்டுள்ள நிலை பிறபுருஷனை மனத்தில் விரும்புதல் புணர்ச்சியில் மிதமீறிய விருப்பம் என இந்நிலைகளில் உள்ள பெண் கருத்தரிக்கமாட்டாள். ஒருவேளை கருதரித்தாலும் குணமற்று (குஷ்டம் முதலான) நோயுள்ள மகவைப் பெறுவாள்.

## 7. புணர்ச்சி செய்யத் தகாத ஆண் பெண்கள்

மிகச்சிறு வயதினள், மிக்க வயதானவர்கள் (குஷ்டம் முதலிய தீராத) நீண்டநோயுற்றவள் மற்றும் பிரமேகம் முதலான நோயுற்றவள் என்ற இத்தகைய பெண்களைப் புணராமல் தவிர்க்க வேண்டும்.

இந்த நோய்களுள்ள ஆண்களையும் புணரலாகாது. எனவே எவ்வித தோஷங்களும் இல்லாத ஆண் பெண்களே புணருவதற்கான தகுதி பெற்றவர்கள். 6

## 8. புணரும்போது ஆணும் பெண்ணும் இருக்க வேண்டிய முறை

புணரும்பொழுது காமவேகம் கொண்டவர்களும் ஒருவருக்கொருவர் அனுகூலமாக இருப்பவர்களுமான ஆணும் பெண்ணும் மனதிற்கினிய நறுமணம் கொண்ட விரிப்பு முதலானவையினால் விரிக்கப்பட்ட இன்பமளிக்கும் படுக்கையொன்றை அமைத்துக்கொண்டு மனத்திற்கும் உடலுக்கும் இதமளிக்கும் உணவை மிதமாகப் புசித்து ஆண் வலப் பாதத்தையும் பெண் இடப் பாதத்தையும் படுக்கைமீது வைத்து ஏறவேண்டும். 7

## 9. புணரும் போது ஜபிக்க வேண்டிய மந்திரம்

படுக்கை மீது ஏறி அமர்ந்து கீழ்க்கண்ட கருத்துள்ள மந்திரத்தை உச்சரிக்க வேண்டும் :

''பிரஹ்மா, பிருஹஸ்பதி, விஷ்ணு, ஸோமன், சூரியன், அசுவினி தேவர்கள், பகன், மித்ராவருணர் என இவ்வனைவரும் எனக்கு வீரனான மகனை அளிப்பார்களாக'' என்று கூறி புணர்ச்சியிலீடுபட வேண்டும். 8

## 10. விரும்பிய மகவு ஏற்படுவதற்கான சில கட்டுப்பாடுகள்

உயர்வு தூய்மை சிங்கத்திற்கொப்பான வீரம் ஒளி நன்னடத்தை சத்துவகுணம் ஆகியவைகள் நிரம்பிய மகன் தனக்குப் பிறக்க வேண்டும் என்று கோரினால் அதற்காக மாதவிடாய்

ஸ்நானம் செய்தது முதல் சுத்தமான சத்துமாவைத் தேன் நெய் இவைகளுடன் கலந்து அதை வெள்ளைக்கன்றுடன் கூடிய வெள்ளைப்பசுவின் பாலுடன் கலந்து வெள்ளிப்பாத்திரத்திலோ வெண்கலப் பாத்திரத்திலோ வைத்து ஒரு நாளைக்கு இருமுறை வீதம் ஏழு நாட்கள் அருந்தச் செய்ய வேண்டும்.

மற்றும் காலை வேளையில் சம்பா அரிசி யவதானியம் இவற்றால் பக்குவம் செய்த அன்னத்தைத் தயிர் தேன் நெய் இவற்றில் ஏதாவதொன்றுடன் கலந்து புசிக்கவேண்டும். மாலை வேளையில் சுத்தமான வீட்டில், உட்காரத் தகுந்த பலகை முதலானவைகளைக் கொண்ட தூய படுக்கை மீதமர்ந்து சுத்தமான சிறந்த பானங்கள் துணிமணிகள் நகைகள் இவற்றுடன் கூடியவளாக இருத்தல் வேண்டும்.

பெரிய வெள்ளை எருது நற்குலத்தில் தோன்றிய வெள்ளைக் குதிரை வெள்ளைச்சந்தனம் தோள் வளைகள் இவைகளைக் காலை மாலை இருவேளைகளிலும் பலமுறை அவள் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும்.

மற்றும் அப்பெண்ணுக்குப் பிடித்தமான நல்ல கதைகளைக் கூறி அவளை உபசரிக்க வேண்டும்.

பணிவு பேச்சு பணிவிடை முதலிய செயல்கள் கொண்ட வேறுபெண்களையோ, ஆண்களையோ வெவ்வேறு நிறம் முதலிய காட்சிப் பொருட்களையோ அவள் பார்க்கவேண்டும்.

தோழிகள் இவளுக்குப் பிடித்தமானவைகளும் நன்மையளிப்பவைகளுமான பணிவிடைகள் செய்து எப்பொழுதும் உபசரிக்க வேண்டும். கணவனும் மேற்கூறிய கட்டு திட்டங்களுக்கு உட்பட்டிருக்க வேண்டும். இந்தத் தம்பதிகள் இக்காலங்களில் புணர்ச்சியில் ஈடுபடக்கூடாது.

இத்தகைய கட்டு திட்டங்களுடன் ஏழு இரவுகளைக் கழித்து 8-வது நாள் கணவனுடன் நீரில் தலைமூழ்கி தூய துணிமணிகளை உடுத்து தெள்ளிய பூமாலைகளையும் அணிகலன்களையும் அணிய வேண்டும். 9

**11. தாம் விரும்பிய மகவைப் பெற *புத்ரகாமேஷ்டி எனும் வேள்வி முறை**

மேற்கண்டவாறு தம்பதிகள் விரதங்களைச் செய்து முடித்த பின் ஓமம் முதலியவைகளை நடத்திவைக்கும் ருத்துவிக்குகள் எனும் ஆசிரியர்கள் வீட்டின் வடகிழக்குத் திசைப் பகுதியில்

*புத்ரகாமேஷ்டி — மகன் பிறக்க வேண்டும் என்ற விருப்பத்துடன் செய்யும் வேள்வி.

கிழக்கு முகமாகவோ வடக்கு முகமாகவோ சாய்வாக உள்ள ஓரிடத்தைப் பசுஞ்சாணத்தாலும் தண்ணீராலும் நன்கு மெழுகி ஓமம் செய்யச் சற்று உயரமான ஓரிடத்தை அமைத்து அதன்மீது தண்ணீர் தெளித்து மேடைபோல் அமைக்க வேண்டும்.

பிறகு ஓமத்தைச் செய்விக்கும் ஆசிரியர், மேடைக்கு மேற்புறத்தில் அமர்ந்து அந்தணத்தம்பதிக்கானால் புதிய துணி வெள்ளைக் காளை எருதுத்தோல் இவற்றில் ஒன்றின்மீது அமர்ந்தும்,

க்ஷத்திரியர் எனும் அரசகுலத்தோர்க்காகில் புலித்தோல் எருதின் தோல் இவற்றில் ஒன்றன் மீது அமர்ந்தும்,

வைசியர்க்காகில் மான்தோல் ஆட்டுத்தோல் இவற்றில் அமர்ந்தும் மகவைப் பெறச் செய்யும் வேள்வியைச் செய்ய வேண்டும்.

முருக்கன் புங்கன் அத்தி இலுப்பை என்னும் மரக்குச்சிகளைக் கொண்டு தீமூட்டி தருப்பைப்புற்களால் [1]'பரிஸ்தரணம்' எனும் வரம்பை அமைத்து அதற்கு மூன்று பக்கங்களிலும் மரக்குச்சிகளை எல்லை (பரிதி) வைத்து வெள்ளைப் பொரிகளையும் மணம் கமழும் பூக்களையும் மேடை முழுவதும் தெளிக்க வேண்டும்.

பிறகு 'பிரணீதா' எனும் பாத்திரத்தைத் தர்ப்பையினால் அக்னியின் அருகில் சேர்த்து ஓமத்திற்கான நெய்யை பவித்திரத்தினால் முறைப்படி துடைத்து தூயதாக்கி 18-வது ஸூத்தத்தில் கூறிய ''ஸாயம் ப்ராதஸ்ச கஸ்சித் ச்வேதம்....பச்யேத்'' என்ற வகையில் வெளுப்பான நல்ல சாதிக்குதிரை எருது முதலியவைகளை அக்னியின் அருகில் இருக்கச் செய்ய வேண்டும். 10

## 12. ஓமம் செய்யும் முறை

ஆண் மகவு பிறக்க வேண்டுமென விரும்பும் இல்லாள் அக்னிக்கு மேற்குப்புறமாகவும் 'ருத்துவிக்' எனும் ஓமம் செய்பவருக்குத் தென்புறமாகவும் அமர்ந்து தனக்கு விருப்பமுள்ள ஓர் மகனைக் கோரியவளாய்த் தன் கணவருடன் ஓம விதிகளைப் பின்பற்றி இருக்க வேண்டும்.

பிறகு மகனை விரும்பும் அப்பெண்ணின் கோரிக்கை நிறைவேறுவதற்காக கார்ஹபத்தியம் என்னும் அக்னியில் அவ்வந்தணன் பிரஜாபதி தேவதையைக் குறித்து புத்திரகாமேஷ்டி (மகவை பெறச்செய்யும் ஒருவித வேள்வி) எனும் வேள்வியை

(1) பரிஸ்தரணம் — சுற்றிலும் பரப்பும் குச்சிகள்

''விஷ்ணுர் யோநிம் கல்பயது''....ததாது தே'' எனும் வேத மந்திரத்தை ஓதிச்செய்ய வேண்டும்.

ஸ்த்தாலீ எனும் பாத்திரத்தில் முறைப்படி நெய்யைக் கொண்டு சமைக்கப்பட்ட கஞ்சி போன்ற அவிஸ்ஸில் சிறிது நெய் ஊற்றி வேதத்தில் கூறியமுறையில் மூன்று தரம் ஓமம் செய்ய வேண்டும்.

மந்திரங்களால் புனிதமாக்கிய ''ப்ரணீதா'' எனும் நீர்ப் பாத்திரத்தை அந்தப் பெண்ணிடம் கொடுத்து ''நீரைக்கொண்டு செய்ய வேண்டியவைகளை இந்த நீரால் செய்வாயாக'' எனக் கூறவேண்டும்.

ஓமம் செய்து முடித்தபின் அந்தப் பெண் தன் கணவனுடன் வலக்காலை முன்வைத்து அக்னியை வலம் வரவேண்டும்.

அந்தணர்களைக் கொண்டு ''ஸ்வஸ்திவாசனம்'' எனும் ஆசிச் சடங்கைச் செய்தபின் ஓமம் செய்து மிகுந்த நெய்யை முதலில் கணவனும் பிறகு தானுமாக முறையாக எஞ்சாமல் அருந்த வேண்டும்.

கணவன் மனைவியர் எட்டு இரவுகள் ஒன்றுகூடிப் புணர வேண்டும். அந்த எட்டு நாட்களிலும் ஓம காலத்தில் உடுத்திய வகையில் வெள்ளைத் துணிகளையும் மலர்மாலைகளையும் அணிந்துகொள்ள வேண்டும். இந்த முறையைப் பின்பற்றினால் மனமுவந்த மக்களைப் பெறுவர். *11*

## 13. தன் விருப்பப்படி மகன் பெறும் வழி முறைகள்

கருநிறம் சிவந்த கண்கள் விரிந்த மார்பு உயர்ந்த புருவம் இவைகளைக் கொண்ட மகனையும் கருநிறம் கருத்து மெத்தென்ற மேனியும் நீண்ட தலைமுடி வெளுத்த கண்கள் பற்கள், உயர்ந்த உடல்வண்ணம் சக்தி வாய்ந்த மகனைக் கோரும் பெண் முன்கூறிய ஓமத்தையே செய்ய வேண்டும். எனினும் முன்கூறிய (அதாவது வெண்ணிறமுள்ள துணிமணிகள் மலர் மாலைகள் இவைகளை அணிவதனை விட்டு தான் கோரும் மகனின் வண்ணத்திற்குச் சமமான துணிமணிகளையும் மலர் மாலை முதலியவைகளையும் அணிய வேண்டும்.) *12*

## 14. நான்காம் வருணத்தவருக்கொரு எளிய முறை

தனக்கும் மேலாக உயர்ந்ததொரு மகன் வேண்டுமென எண்ணம் கொள்ளும் நான்காம் வருணத்துப் பெண்மணி ஓமம்

முதலிய தனிச்சடங்கு ஏதுமில்லாமல் தேவதைகள் அக்கினி அந்தணர் குருமார் தவசிகள் சித்தர்கள் என இவர்களை வணங்கினால் மட்டுமே போதுமானது. தான் விரும்பிய வகையில் மகனைப் பெற்றுப் பயனடையலாம். *13*

## 15. அவரவர்கள் விருப்பத்திற்கேற்ப, மகனைப் பெற வழி.

மற்றும் எந்தப் பெண் எத்தகைய மகன் வேண்டுமென விரும்புவாளோ அவளுடைய அந்த விருப்பத்தைப் புரிந்துகொண்டு அந்தப்பெண்ணை அவள் விருப்பத்திற்குத் தக்கபடி உருவமும் குணம் முதலானவைகளும் கொண்டவர்கள் இருக்கும் பகுதிகளை மனத்தால் நினைக்கும்படி செய்ய வேண்டும்.

எந்த மனிதர்களுக்குத் தக்க உருவம் கொண்ட மகனைப் பெண் விரும்புவாளோ அந்த அந்த கிராமத்திலுள்ள அத்தகைய மக்களின் ஆகாரம் நடைமுறை பணிவிடை உடைகள் முதலானவற்றை அந்தப்பெண் வழக்கத்திற் கொள்ள வேண்டுமெனக் கூறவேண்டும். இவ்வாறு தான் விரும்பும் மகனைப் பெறும் வழி முறைகள் இதுவரை கூறப்பட்டன. *14*

## 16. கருவுக்கு குறிப்பிட்ட வண்ணத்தை அமைக்கும் பிற காரணங்கள்

கருவுக்குக் குறிப்பிட்ட நிறத்தைத் தோற்றுவிப்பதற்கு இது மட்டும் காரணமன்று.

நிலம் முதலிய ஐவகைப் பூதங்களில் நீர் ஆகாயம் எனும் தாதுக்களை அதிகமாகக் கொண்ட தேயு என்னும் தாது கருவில் வெளுப்பு நிறத்தையும்,

நிலம் வாயு எனும் தாதுக்களை அதிகமாகக் கொண்ட தேயு எனும் தாது கறுப்பு நிறத்தையும்,

ஐவகைப் பூதங்களும் சமமாக இருந்தால் ச்யாமமென்னும் கருநிறத்தையும் தோற்றுவிக்கும். *15*

## 17. [1]சத்துவ விசேஷத்தை அளிப்பவை

மனிதர்களுக்குள்ள சத்துவமென்னும் குறிப்பிட்ட் மனநிலை தம்தம் தாய்தந்தையரின் சத்துவத்தை வெகுவாகப் பின்பற்றியே அமையும்.

மற்றும் கருதரித்துள்ள பெண் சங்கீதம் வேதம் வேதாந்தம் முதலிய குறிப்பிட்ட ஒலிகளை செவியுற்றால், அந்த அந்த ஒலிக்குத் தக்கவாறு சத்துவமும் (மனநிலை) உண்டாகும். *16*

---

1. சத்துவம் — குறிப்பிட்ட மனநிலையைக் குறிக்கும்.

தான் முற்பிறவிகளில் செய்த குறிப்பிட்ட செயல்களும் பயின்ற குறிப்பிட்ட சத்துவமும் (மனநிலையும்) இப்பிறவியில் சத்துவம் உண்டாவதற்குக் காரணமாகின்றன.

## 18. கரு உருவாகும் முறை

முற்கூறிய முறையில் தூய உடலுடன் ஆணும் பெண்ணும் புணர்ச்சியில் ஈடுபடும்போது ஆண்விந்து பெண் விந்துவுடன் கலந்துகொள்ளும்.

அப்பொழுது குற்றமற்ற ஆண்விந்து குற்றமில்லாத பெண் விந்துவுடன் கலந்து, நோய் முதலியவற்றால் தாக்கப்படாத யோனி வழியாக வர்தம் முதலான தோஷங்களால் தானும் தாக்கப்படாமல் கருப்பையில் நுழைந்து கருவாக மாறுவது உறுதி.

தூய்மையான ஆடையில் சிறந்த வர்ணத்தை ஏற்றுவதால் அதில் நிறம் நன்கு படிவதுபோலவும் தயிரினால் புரை குற்றப் பட்டு தூயதான பால் அத்தயிருடன் கலந்து தன் உருவத்தை இழந்து தயிரின் உருவத்தை அடைவது போலவும் பெண் விந்து டன் கூடிய ஆண் விந்து தன் உருவை இழந்து கருவுருவாக மாறி விடும் என்பது கருத்து. 17

## 19. கருவில் ஆண்பெண் பேதம் உண்டாகக் காரணம்

இவ்வாறு தயாராகும் கரு ஆண் பெண் பேதத்தைக் கொண் டிருப்பதற்குக் காரணம் ஏற்கெனவே ''ரக்தேந கந்யாம் அதிகேந புத்ரம் சுக்ரேண'' என்று சாரீரஸ்தானத்தில் இரண்டாவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

பண்பட்ட நிலத்தில் விதைத்த குற்றமற்ற சம்பா நெல் சம்பா நெல்லாகவே விளையும். வயலில் விதைத்த யவமெனும் விதை யவதானியத்தையே தோற்றுவிக்கும்.

அதேபோல் ஆண் நாட்டிய விதை அவன் இயற்கையான உருவத்தைத் துறக்காது. அவ்வாறே ஆண் பெண்களின் விதை (விந்து) குற்றமற்றதாக இருந்தால், அவை தம் தம் இயற்கை யான முதல் உருவத்தை விடாது.

(அதாவது இரத்தம் அதிகமானால் பெண் உருவத்தையும், விந்து அதிகமானால் ஆணுருவையும் பெறுமென்பது கருத்து.) 18

## 20. ஆண்மகவு தோன்ற மற்றோர் உபாயம்

ஆண், பெண் வேற்றுமைக்காக ஆயுர்வேதத்தில் கூறிய (பும்ஸவனம் எனும் ஆணைப் பெறுவதற்கான) சடங்கை கரு

உருவாவதற்கு முன் முறைப்படி செய்தால் கருவில் மாற்ற முண்டாகும்.

இடத்திற்கும் காலத்திற்கும் தக்கவாறு செய்யப்படும் கருமம் (செயல்) தான் விரும்பிய பயனைத் தவறாமல் அளிக்கும். அவ்வாறில்லையேல் விருப்பத்திற்கு எதிரிடையாகும் என்பது தெளிவு.

ஆகவே கருதரித்த பெண்ணுக்கு அந்தக் கரு உருப்பெறு வதற்கு முன்னதாகவே கருவுக்கு ஆண்மை (பும்ஸவனம்) உண் டாக்கும் சடங்கை எட்டாவது மாதத்தில் செய்ய வேண்டும்.

## 21. பும்ஸவனம் (ஆண் மகவுக்கான) சடங்கு முறை

பசுக்கள் வழக்கமாக நிற்கும் இடத்தில் தோன்றிய ஆலமரத் தின் கிழக்குத் திசையிலும் வடக்குத் திசையிலும் பரவியுள்ள கிளையினின்றும் இறங்கி புழுப் பூச்சிகளால் கெடாமலிருக்கும் விழுதுகள் இரண்டை எடுத்து இரண்டு உளுந்து தானியங்கள் இரண்டு வெள்ளைக் கடுகுகள் இவற்றோடு சேர்த்து தயிருடன் கலந்து பூசநட்சத்திரத்தன்று பெண் குடிக்க வேண்டும்.

அதேபோல் கருவுற்ற பெண் ஜீவகம் ரிஷபகம் நாயுருவி மருதாணி இவையனைத்தையும் ஒன்று சேர்த்தோ அல்லது தனித்தனியாகவோ, அல்லது கிடைத்தவரையில் இரண்டுமூன்றை யாவதோ கல்கமாகச் செய்து முன்கூறியபடி பாலுடன் கலந்து பூச நட்சத்திரத்தில் அருந்த வேண்டும்.

மற்றும் பொன் வெள்ளி இரும்பு இவற்றுள் ஏதாவது ஒன்றி னாலான மிகச் சிறிய அணுவளவுள்ள ஆண் பிரதிமைகளைச் செய்து நெருப்புக்குச்சமமான வர்ணமுள்ளதாகக் காய்ச்சி அவற்றை கையளவுள்ள தயிர் பால் தண்ணீர் இவற்றில் ஒன் றுடன் சேர்த்து அதை மீதமில்லாமல் பிரதிமையுடன் புருஷன் அருந்த வேண்டும்.

தவிர பூச நட்சத்திரத்தன்று சம்பா அரிசிமாவைக் கொதிக்க வைத்து அதை (கொதிக்கும்போதே) முகந்து அந்த மாவு ஜலத் தில் மேற்கூறிய ஆலம் விழுதின் ரசத்தைக் கலந்து, கருதரித் தவளை வாசல் மரப்படி மீது அமரச் செய்து அவளது வலது மூக்குத் துளையில் மேற்கூறிய ரசத்தைப் பஞ்சினால் புருஷன் தானே விட வேண்டும். இதைத்தான் பும்ஸவனம் என்கிறோம்.

மேற்கூறிய வழிகளை ஒட்டி நன்மை கோரும் பிராம்மணர் களும் பெண்களும் உபதேசிக்கும் (ஆண்குழந்தை பிறப்பதற்கான) பும்ஸவனோபாயங்களைச் செய்ய வேண்டும். இவைகளும் ஆண் மகனை ஈன்றெடுப்பதற்கான உபாயங்களே.

## 22. கருவை அழியாமல் காக்க வழி

தீங்கு விளைவிக்கக் கூடியவைகளை நீக்கி கருவைக் காக்கும் முறைகளை இனி விளக்குவோம்.

கசப்பு வெள்ளரிக்காய் பிராம்மீ எனும் வல்லாரை இலை கருஅருகு சதவீர்யா ஸஹஸ்ரவீர்யா (வெள்ளருகு) எனும் இரு வகைப் புற்கள் பாதிரிச் செடி (சீந்தில்) கடுக்காய் கடுகரோகிணி மஞ்சள் பூவுள்ள சிற்றாமுட்டி விஷ்வக்ஸேநகாந்தா எனும் ஞாழல் என இப்பச்சிலைகளைத் தலைமீதும் வலதுகையிலும் வைத்திருப்பது; இந்த மருந்துப் பொருள்களைச் சேர்த்துத் தயாரித்த பாலையோ நெய்யையோ அருந்துதல், இந்த மருந்துகளையே சேர்த்துக் காய்ச்சப்பட்ட நீரால் ஒவ்வொரு பூச நட்சத்திர தினத்தன்றும் ஸ்நானம் செய்தல் எப்பொழுதும் அவற்றைத் தொட்டுக் கொண்டிருத்தல் என இவைகளைக் கடைபிடிக்க வேண்டும்.

அவ்வாறே ஜீவனீய கணத்தில் கூறிய பச்சிலைகளை அவற்றின் உபயோக முறைகளைப் பின்பற்றி உபயோகித்தல் வேண்டும்.

## 23. கருவுக்குத் தடையுண்டாக்குபவை

இனி கூறப்போகும் விஷயங்கள் கருவுக்குத் தீங்கு விளைவிப்பவை.

மிகவும் உயரமான இடம் மேடுபள்ளங்களுள்ள தரை முரடான பலகையுடன் கூடிய ஆசனம் இவற்றில் அமர்ந்திருக்கும் பெண்ணுக்கும்,

வாதம் சிறுநீர் மலம் இவைகள் வெளிவராமல் அவற்றின் வேகத்தைத் தடுக்கும் பெண்ணுக்கும்,

மிகக்கொடியதும் தகாததுமான உடற்பயிற்சியைச் செய்யும் பெண்ணுக்கும் மிகக் குறைவாக உணவருந்தும் பெண்ணுக்கும் வயிற்றுக்குள்ளேயே கரு சிதைந்து இக்காரணங்களால் காலமில்லாக்காலத்தில் அது நழுவி வீழ்ந்துவிடும். அல்லது உலர்ந்து விடும்.

தாக்குதலாலும் கசக்குதலாலும் சுரங்கம் கிணறு மலைச்சரிவு உயர்ந்த இடம் என்பனவற்றை அதிகமாகப் பார்த்தலாலும் கருவானது தாயின் வயிற்றிலிருந்து நழுவி வீழ்ந்துவிடும்.

தவிர, மிகவும் ஆட்டம் கொடுக்கும் வண்டி முதலானவைகளின் மீதேறி சவாரி செய்தாலும் மிகப் பயங்கரமான வேண்

டாத பேச்சுக்களை அதிக அளவில் கேட்டாலும் கரு அகாலத்தில் நழுவி வீழ்ந்துவிடும்.

**24. கரு கலைவதற்கு மற்றும் சில காரணங்கள்**

எப்பொழுதும் மல்லாந்து படுக்கும் சுபாவமுள்ள பெண்ணின் தொப்புளையொட்டியுள்ள கருவின் தொப்புள்கொடி சிசுவின் கழுத்தைச் சுற்றிக் கொண்டிருக்கும்.

கருவுற்றவள் திறந்த வெளியில் படுத்தாலும் இரவு நேரத்தில் சுற்றி வந்தாலும் பைத்தியம் பிடித்த மகன் பிறப்பான்.

வாயால் உடலால் சண்டைபோடும் இயல்புள்ள பெண் அபஸ்மாரம் (காக்கை வலி) எனும் நோயுள்ள குழவியைப் பெறுவாள்.

சூலுற்றவள் மிகுதியாகப் புணர்ச்சியிலீடுபட்டால் கெட்ட உடலமைப்புள்ள வெட்கமில்லாத பெண் சுபாவ சேஷ்டைகளையுடைய இளைத்த உடலுடன் கூடிய மகளையோ அற்பாயுள் உள்ளவளையோ பெறுவாள்.

துரோக எண்ணமுள்ளவள், பிறரைத் துன்புறுத்துபவனையோ பிறர் முன்னேற்றத்தைப் பொறுக்காதவனையோ பெண் சுபாவமுள்ளவனையோ மகனாகப் பெறுவாள்.

திருட்டுச் சுபாவம் கொண்டவள், மிக்க அதிகமான உடல் அலுப்புள்ளவனையோ துரோகமுள்ளவனையோ வேலை செய்யமுடியாதவனையோ மகனாகப் பெறுவாள்.

கோபச்சுபாவம் கொண்ட தாய், தன் சுபாவம் உள்ளவனையோ முரட்டுச் சுபாவம் உள்ளவனையோ பொறாமை குணம் உள்ளவனையோ மகனாகப் பெறுவாள்.

கருவுற்றவள் மிகுதியாகத் தூங்கினால் தூங்கிவிழுதல் மந்த புத்தி மந்தமான சடராக்னி என இவற்றில் ஏதாவது ஒரு குறையுள்ள மகனைப் பெறுவாள்.

மதுவருந்தும் பழக்கமுள்ள பெண்ணுக்குத் தாகமுள்ளவனும் குறைந்த நினைவாற்றல் படைத்தவனும் நிலையற்றவனும் அலைபாயும் உள்ளம் கொண்டவனுமான மகன் தோன்றுவான்.

உடும்பு மாமிசத்தை அதிகமாகப் புசிப்பவள் சர்க்கரை (மேக) நோய் உள்ளவனையோ, அச்மரியெனும் கல் அடைப்பு நோய் உள்ளவனையோ [1]சநைர் மேகமென்னும் சிறுநீர் நோயுள்ளவனையோ பெறுவாள்.

---

(1) சநைர்மேகம் — மிகச் சிறிய அளவில் சிறுநீர் அடிக்கடி வெளியாகும் நோய்.

பன்றி மாமிசத்தை மிகுதியாகப் புசிப்பவள் சிவந்த கண்ணுள்ளவனையோ மிகுந்த உள்மூச்சு—வெளிமூச்சுள்ளவனையோ பருமனான உரோமங்கள் கொண்டவனையோ ஈன்றெடுப்பாள்.

மீன் மாமிசத்தை மிகுதியாகப் புசிப்பவள் வெகு நாட்கள் வரை புருவம் துடிப்பவனையோ மிகவும் பருமனாக இருப்பவனையோ பெறுவாள்.

இனிப்புப் பண்டங்கள் மிகுதியாகத் தின்பவள் [1]பிரமேகம் என்னும் ஒருவகை நோய் கொண்டவனையோ ஊமையையோ மிகப்பருமன் உள்ளவனையோ மகனாகப் பெறுவாள்.

புளிப்பு ரசத்தைப் பருகுபவளுக்கு இரத்த பித்தம் சரும நோய்கள் கண்நோய்கள் கொண்ட பிள்ளை பிறக்கும்.

உப்புச்சுவை பொருட்களை மிகுதியாகத் தின்பவளுக்கு நரைத்த தலைமுடி உள்ளவனோ வழுக்கைத் தலையுள்ளவனோ பிறப்பான்.

காரப்பொருட்களை மிகுதியாகத் தின்கிறவள் பலமற்ற, மிகக் குறைவான ஆண்விந்து கொண்ட சந்ததியற்ற மகனைப் பெற்றெடுப்பாள்.

கசப்புச் சுவையை மிகுதியாகப் பயன்படுத்துகிறவள் உடல் இளைத்து வலிமையின்றி வளர்ச்சி பெறாத மகனைப் பெறுவாள்.

துவர்ப்புச் சுவையை மிகுதியாகப் பயன்படுத்துபவளுக்கு கருநிறம் வயிற்று உப்புசம் (ஆநாஹ [2]உதாவர்த்தம்) என்னும் நோய்களுடன் கூடிய மகன் பிறப்பான்.

குறிப்பிட்ட உணவுப் பழக்கங்கள் பொருட்களை ஏற்பதால் தோன்றும் நோய்களை தவிர்த்து அதனால் சிசுவிற்கு உண்டாகும் நோய்களை வராமல் கருவுற்றவள் தடுத்து நிறுத்தவேண்டும். 20

## 25. தந்தையின் விந்து தோஷத்தால் கருவுக்குத் தீங்கு

இங்கு தாயின் கொடிய செயலினாலே சிசுவுக்கு ஏற்படும் தோஷங்களைப்போல் ஆணின் தீச் செயலினாலும் சிசுவுக்கு அதே போன்று தீமைகள் ஏற்படும் எனக் கருத வேண்டும்.

---

(1) பிரமேகம் —அளவுகடந்து சிறுநீர் வெளிப்படும் நோய்.

(2) உதாவர்த்தம்—குடல் இயற்கையாக நெளியும் தன்மை, ஆவர்த்தம். அவ்வாறின்றி அதுமேல் நோக்கி அசைதல் உதாவர்த்தமெனப்படும்.

## 26. கருவுற்றவள் தீயவைகளை அகற்றுவதும், இதமானவைகளை ஏற்பதும்

மக்கட் செல்வத்தைக்கோரும் பெண் குறிப்பாக தீமையை விளைவிக்கும் உணவுகளையும் மற்றவைகளையும் துறக்க வேண்டும்.

இதமான உணவு பழக்க வழக்கங்களால் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும் 21

## 27. கருவுற்றவளுக்குச் செய்யும் சிகிச்சை முறை

கருவுற்றிருக்கும் பெண்ணுக்குக் காய்ச்சல் முதலிய நோய்கள் தோன்றினால் மிருதுத்தன்மை இனிப்பு சீதவீர்யங்கள் கொண்டும் உடலுக்குத் துன்பம் விளைவிக்காமல் இன்பத்தை அளிப்பவையும், தீக்ஷ்ணமில்லாதவையுமான மென்மையான மருந்துகளாலும், ஆகாரத்தினாலும் பணிவிடைகளாலும் சேவை செய்ய வேண்டும்.

கருவுற்றவளுக்கு வாந்தி, பேதி, சிரோவிரேசனம் போன்ற உடலைத் தூய்மையாக்கும் முறைகளைப் பயன்படுத்தலாகாது.

ரக்தமோக்ஷணம் எனும் கெட்ட இரத்தத்தை வெளிப்படுத்தும் செயலைக் கையாளலாகாது.

வேறு சிகிச்சைகளால் போக்கமுடியாத நோய் தோன்றாத காலங்களில் [1]ஆஸ்தாபனம் [2]அநுவாஸனம் எனும் [3]வஸ்தி சிகிச்சை முறைகளைப் பின்பற்றலாகாது.

## 28. எட்டாவது மாதம் முதல் [4]விரேசனம் முதலியன செய்தல்

கருவுற்ற எட்டாவது மாதம் தொடங்கி மகப்பேறு காலத்திற்குள்ளாக கருவுற்ற பெண்ணுக்கு நோய்கள் தோன்றி, அது நீங்க வாந்தி, பேதி சிரோவிரேசனம் முதலியன செய்யவேண்டிய கட்டாயம் ஏற்பட்டால் மிருதுவான விரேசனம் முதலான சிகிச்சையைத் துன்பம் இன்றிக் கொடுத்துப் பிணியைப் போக்க வேண்டும்.

---

1, ஆஸ்தாபனம் — கஷாயவஸ்தியின் மற்றொரு பெயர். கோளாறு அடைந்த தோஷங்களையும் தாதுக்களையும் அதற்குரிய இடத்தில் நிறுத்தல்.

2, அநுவாஸனம் — ஸ்நேஹவஸ்தி

3, வஸ்தி — ஆசனத்துவாரம் மூலம் மருந்தைச் செலுத்திக் குடலைச் சுத்தம் செய்தல்.

4, விரேசனம் — பேதிக்குக் கொடுத்தல்

அல்லது விரேசனம் முதலிய சிகிச்சைகளைச் செய்யாமல் அத்தகைய செயல்களைச் செய்யவல்ல வேறுமுறைகளைச் செய்து பிணியை அகற்றலாம்.

மற்றும் எண்ணெய் நிறைந்துள்ள பாத்திரத்தைத் தளும்ப விடாமல் அக்கரையோடு பார்ப்பதுபோல் கருவுற்ற பெண்ணை மிகவும் விழிப்புடன் கவனிக்க வேண்டும். 22

## 29. இரண்டு மூன்று மாதங்களுக்குள் பெண் இரத்தத்தைக் காணில் கருவுக்குத் தீமை

கருவுற்ற பெண் [5]அபசாரத்தினால் (தவறான நடத்தையால்) இரண்டாவது மாதத்திலோ மூன்றாவது மாதத்திலோ இரத்தத்தைக் கண்டால் கரு நிலையாதென அறிய வேண்டும். அந்த நிலையில் கரு வலுவுடன் இராது. 23

## 30. [6]ரஜஸ் (இரத்தம்) காணும் பொழுது கருவை நிறுத்தும் முறை

கருவுற்றவள் நான்காவது மாதம் தொடங்கி மற்ற மாதங்களில் சினம் வருத்தம் பொறாமை அச்சம் கலவி உடற்பயிற்சி குழப்பம் மனத்திற்கும் உடலுக்கும் உவகை உண்டாக்கும் செயல்கள் மலமூத்திரங்களின் வேகத்தைத் தடுத்து நிறுத்தல், வேளைதவறியுண்ணுதல் படுத்திருத்தல் நின்றிருத்தல் இவற்றாலும் தாகம் என்பவையாலும் பசி முதலியவற்றின் அதியோகத்தாலும் வெறுக்கத்தக்க உணவைப் புசிப்பதாலும் மாதவிடாய் தோன்றினால் அத்தகைய வேளையில் கருவை நிறுத்துவதற்குப் பயன்படுத்தத்தக்க முறைகளை இனிக் கூறுவோம்.

ருதுவைக் கண்டவுடனே அப்பெண்ணை நோக்கி ''பெண்ணே! மெத்தென உடலுக்கு இன்பமளிக்கும் குளிர்ந்த விரிப்பு முதலியவைகளால் மூடிக்கொண்டு தலைப்பக்கம் சிறிது தாழ்வாக இருக்கும் படுக்கைமீது படுப்பாயாக'' எனக் கூற வேண்டும்.

## 31. சூலுற்றவளுக்கு விந்து காணும்பொழுது கரு நிலைத்திருக்கச் செய்யும் இரகசிய சிகிச்சை

படுக்கைமீது படுத்த பிறகு அதிமதுரத்துடன் கலந்த மிகவும் குளிர்ந்த நீரில் வைத்த நெய்யில் பஞ்சை நனைத்து பெண்குறியருகில் வைக்க வேண்டும்.

---

5. அபசாரம் — முறை தவறி நடத்தல்
6. ரஜஸ் — பெண்களுக்கு மாதவிலக்கின் போது தோன்றும் ஒருவிதக் கெட்ட இரத்தம்.

பிறகு சததௌதம், ஸஹஸ்ரதௌதம் எனும் கிருதத்தை (நெய்யை) தொப்புளுக்கு கீழ்ப்பகுதியில் முழுவதும் பூசவேண்டும்.

அல்லது பசும்பால், அதிமதுரம் கலந்த குளிர்ந்த தண்ணீர் இவற்றுள் ஒன்றால் பெண்ணின் தொப்புளுக்குக் கீழ்ப்பகுதியை நனைக்க வேண்டும்.

## 32. கருவை கலையாமல் நிறுத்த பருக - உண்ண வேண்டிய பொருட்கள்

அல்லது ந்யக்ரோதாதி கணத்தைச் சேர்ந்த பொருட்களை ஒன்றாகச் சேர்த்து காய்ச்சப்பட்ட கஷாயத்தால் தொப்புளுக்குக் கீழ்ப்பகுதியை நனைக்கலாம்.

துவர்ப்புச் சுவையுள்ள பால் மரங்களான ஆலமரம் முதலியவற்றின்சொரசத்தில் ஊரவைத்த துணியையாவது பெண்குறிமீது வைத்து அந்தத் திரவம் பெண் குறிக்குள் நுழையும்படி செலுத்தலாம்.

ஆல் முதலியவற்றின் விழுதுகளின் சாற்றினால் பக்குவமான பால் அல்லது நெய் இவற்றில் பஞ்சை நனைத்து பெண்குறிமீது வைக்கலாம்.

ஆலமரத்தில் தோன்றிய நெய்யை அக்ஷபரிமாணம் என்ற அளவில் பருகச் செய்ய வேண்டும்.

அல்லது பாலிலிருந்து எடுக்கப்பட்ட வெண்ணெய் காய்ச்சிய நெய்யையாவது பருகச் செய்யலாம்.

தாமரை வண்ண நெய்தல் வெள்ளை நெய்தல் இவைகளின் பூக்களிலுள்ள மகரந்தத்தூளை தேன் சர்க்கரையுடன் கலந்து லேகியமாகச் செய்து சாப்பிடச் செய்யலாம். நெற்பயிர் கிழங்கு (கொட்டிக் கிழங்கு) இவற்றைப் புசிக்கச் செய்யலாம்.

வாசனைக் கொட்டிக்கிழங்கு கருநெய்தல் கிழங்கு அத்திக்காய் ஆலம் விழுது இவற்றை அரைத்து வெள்ளாட்டுப்பாலில் கலந்து கருவுற்றவளுக்குத் தரலாம்.

சிவப்பு அரிசிச் சாதத்தை மெத்தென்று வடித்து மணமுண்டாக்கி அதனை சிற்றாமுட்டி பேராமுட்டி தானியங்களின் வேர்கள் அறுபதாங்குறுவைச் சம்பா வேர்கள் கரும்பு வேர்கள் காகோலி இவைகளோடு கலந்து காய்ச்சிய பாலுடன் சாப்பிடலாம்.

மற்றும் லாவகம் கபிஞ்ஜலம் என்னும் பறவைகள் பெண்மான் சிவப்பு மான், சம்பரம் என்னும் மான், முயல், ஏணமெனும்

கருப்பு மான் என இந்தப் பிராணிகளின் மாமிசரசம் நெய் நீர் இவைகளுடன் தயார் செய்த பாலில் மேற்கூறிய சிகப்பு அரிசியிலான அன்னத்தைக் கலந்து சுகமாகக் குளிர்காற்று வீசும் இடத்திலிருக்கும் கருவுற்றவளைப் புசிக்கச் செய்ய வேண்டும்.

கோபம் ஆயாசம் புணர்ச்சி உடற்பயிற்சி எனும் செயல்களைச் செய்யவிடாமல் கருவுற்றவளைக் காக்க வேண்டும்.

மனதிற்கு இனிய கேட்க இன்பமான மனதிற்கு அனுகூலமாயுள்ள விதவிதமான கதைகளை அவளிடம் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். இவ்வாறு செய்தால் கரு கெடாமல் நிலைத்து நிற்கும். 24

## 33. [1]ஆமதோஷத்தால் சூலுற்றவலுக்கு ரஜஸ் ஏற்பட்டு கரு சிதைந்து போதல்

ஆமதோஷத்தால் ரஜஸ் (விந்து) கண்டால் அது அனேகமாக கருவைக் கெடுத்துவிடும். அந்த நிலையில் சிகிச்சையளித்தல் நேர் மாறான விளைவைத் தோற்றுவிக்கும். எனவே கருவை நிறுத்த முயற்சி செய்யலாகாது. 25

## 34. [1]உபவிஷ்டகமெனும் கருவுக்கு காரணமும், இலக்கணமும்

கருவுற்றவள் உஷ்ணவீர்யம் தீக்ஷ்ணகுணம் உள்ள ஆகாரம் முதலியவைகளை அதிகமாகப் பயன்படுத்தி கரு சாரமும் சிறப்பும்கொண்டு இருந்தபொழுதும் ரஜஸோ வேறு திரவப்பொருளோ பெண்குறியிலிருந்து பெருகினால் அப்பெண்ணின் கரு வளர்ச்சி பெறாது. கருப்பையிலேயே பிரசவகாலத்திற்குமேல் அதிககாலம் தங்கிவிடும். அந்நிலையே [2]உபவிஷ்டம் எனப்படும்.

## 35. 'நாகோதர' க்கருவின் இலக்கணம்

உண்ணாநோன்பில் அதிக வேலை செய்வதாலும் பத்தியம் அல்லாத உணவுகளைப் புசிப்பதாலும் எண்ணெய்ப்பசைப் பொருட்களின் மீது வெறுப்பால் நெய் முதலியவைகளைப் பயன் படுத்தாமல் இருப்பதாலும் வாத நோயைத் தூண்டிவிடும் பொருட்களைப் பயன்படுத்துவதாலும் வாதம் வளர்ந்து கருவை

---

1. ஆமதோஷம் – உண்ட உணவு செரிக்காமல் வயிற்றுக் கோளாறுகளால் ஏற்படும் நோய்.

2. உபவிஷ்டகம் – மகப்பேறு ஏற்படும் காலத்திற்கு மேலும் கரு வெளிவராமல் வயிற்றிலே தங்கிவிடுதல்.

உலரச் செய்வதால் கரு வளர்ச்சியடையும். அத்தகைய கரு சிறிது சலனம் கொண்டு வெகுகாலம்வரை வயிற்றிலேயே நின்றுவிடும். இந்நிலையே நாகோதரம் எனப்படும். 26

## 36. [1]நாகோதர - உபவிஷ்ட கருச்சிகிச்சை

சூலுற்றவர்களுக்கு மேற்கண்ட இருவகைச் சிகிச்சை செய்யும் வகையைக் கூறுவோம்.

பௌதிகங்கள் — (அதாவது பூதங்களை நீக்கக்கூடிய வசம்பு குங்குலியம் முதலானவை) 'ப்ரும்மணீய' குணப்பொருட்கள் இனிப்புச் சுவைப் பொருட்கள் வாதத்தை நீக்கும் பொருட்கள் இவைகளை வேர்களுடன் முடிந்தவரை எடுத்து அத்துடன் சேர்த்துப் பக்குவம் செய்யப்பட்ட நெய் பால் (கோழி முட்டை முதலிய) ஆமகர்ப்பப்பொருட்கள் இவைகளைப் பயன்படுத்துவதால் கரு வளர்ச்சிபெறும்.

மற்றும் அவர்களுக்குப் பசி அதிகமானால் மேற்கூறிய பொருட்களைச் சேர்த்துத் தயாரித்த க்ருதக்ஷாரங்கள் கலந்த உணவைப் புசிக்கச் செய்ய வேண்டும்.

வண்டி வாகனங்கள் மீது சவாரி செய்தல் நலுங்கு வைத்துக் கொண்டு தலைக்குக் குளித்தல் உடலை முறித்தல் என இவை நன்மையை உண்டாக்கும். 27

## 37. [2]'லீனம்' எனும் கருவுக்குச் சிகிச்சை

கரு எப்பொழுதும் அசையாமல் தூங்கிக்கொண்டிருந்தால் பருந்து மீன்கள் கவயமிருகம் மயில் கோழி தித்திரி என்னும் பறவை இவைகளில் ஏதாவது ஒன்றின் மாமிசரசத்துடன் நெய்யைக் கலந்தோ அல்லது முள்ளங்கித் துகையலையோ மெத்தன இருகிய குளிர்ந்த சிவப்பு அரிசி அன்னத்துடன் கலந்தோ கற்பிணிக்கு அளிக்க வேண்டும்.

அந்தப் பெண்ணின் வயிறு அடிவயிறு தொடைகள் இடுப்பு அதன் இருபுறங்கள் முதுகு எனும் இப்பகுதிகளில் எண்ணெயைப் பலமுறை தேய்த்து சிறிது சூடான நீரை ஊற்றிப் பிடித்துவிட்டுக் கொண்டே இருக்க வேண்டும். 28

---

(1) நாகோதரம் — கரு வாதத்தால் வளர்ந்து நீண்டநாள் வயிற்றிலேயே தங்கிவிடுதல்.

(2) லீனம் — கரு அசையாமலிருத்தல்.

## 38. உதாவர்த்த நோய்ச் சிகிச்சை

சூலுற்றவளுக்கு எட்டாவது மாதத்தில் கருவானது [1]உதாவர்த்த (காற்று) நோயால் கட்டுப்பட்டிருக்கும். அப்போது அதை [2]அநுவாசனம் எனும் வஸ்தியினால் கட்டுப்படுத்த முடியாது. அத்தகைய நோய் நீங்குவதற்காக தக்கப் பொருட்களைச் சேர்த்துந் தயாரித்த [3]நிரூஹவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும்.

உதாவர்த்தமெனும் நோய்க்குச் சிகிச்சை புரியாவிடில் அந்த நோய் கருவையும் கருவுற்றவளையும் கலந்தோ அல்லது தனித் தனியாகவோ அழித்துவிடும்.

## 39. உதாவர்த்தத்திற்கு நிரூஹவஸ்திச் சிகிச்சை

விலாமிச்சைவேர் நெற்பயிரின் வேர்கள் அறுபதாங்குருவை நெற்பயிர்வேர்கள் குசம் காசம் என்னும் இருவகை தர்ப்பைப் புல்களின் வேர்கள் நாணல் வேர்கள் நாணல் கரும்பு வேர்கள் நிலவேம்பு நன்னாரிவேர் குமிழம் பேரீச்சை அதிமதுரம் சிறு திராட்சை இவையனைத்தையும் ஒன்று சேர்த்து இதில் பாதி பாலையும், பாதி நீரையும் கலந்து கஷாயமாகக் காய்ச்சி அத்துடன் சாரப்பருப்பு, தானிக்காய் பருப்பு எண்ணெய் கலந்து அரைத்து அதில் சிறிதளவு இந்துப்புச் சேர்த்து சிறிது சூடாக்கி அந்தக் கஷாயத்தைக் கொண்டு நிரூஹவஸ்தி செய்விக்க வேண்டும்.

## 40. நிரூஹத்திற்குப்பின் அனுவாசன முறை

வயிற்றுப் பிடிப்பு நீங்கியபின் சூலுற்றவளை ''வெதவெத'' என்றிருக்கும் நீரில் நீராட்டி ஒரு நிலைப்பாட்டையுண்டாக்கி சூட்டையூட்டுகின்ற உணவைப்புசிக்கச் செய்து அதிமதுரத்தைக் கொண்டு தயாரித்த எண்ணெயினால் மாலை வேளையில் அனுவாசனம் எனும் வஸ்தி சிகிச்சை செய்ய வேண்டும். 29

---

(1) உதாவர்த்தம் — உடலுக்குள்ளே மேல்நோக்கிப் பரவும் காற்று.

(2) அநுவாசனம் — எண்ணெயைக் கொண்டு செய்யப்படும் ஒருவகை வஸ்திச் சிகிச்சை முறை.

(3) நிரூஹவஸ்தி — கஷாயத்தைக் கொண்டு செய்யப்படும் வஸ்தி சிகிச்சை முறை

## 41. கரு அழியும் காரணங்களும், அறிகுறிகளும்

கருவுற்றவளுக்குத் தோஷங்கள் மிகவும் வளர்ந்திருப்பதாலும் தீக்ஷ்ணியமாகவும் சூடாகவும் உள்ள பொருட்களை அதிக அளவில் பயன்படுத்துவதாலும், வாதம் சிறுநீர் மலம் இவற்றின் வேகத்தைத் தடுத்து நிறுத்துவதாலும் மேடும் பள்ளமுமான இடத்திலிருத்தல் அல்லது படுத்தல் நிற்றல் உராய்தல் தாக்குதல் எனும் இக்காரணங்களாலும் கோபம் வருத்தம் பொறாமை அச்சம் விரட்டல் முதலிய காரணங்களாலும் மற்ற சாகசச் செயல்களாலும் வயிற்றிலேயே கரு மரித்துவிடும். அந்நிலையில் அப்பெண்ணின் வயிறு அசைவற்று உணர்வற்றுப் பரவலாக இருக்கும்.

வயிறு குளிர்ச்சியடைந்து உள்ளே கல் இருப்பதுபோல் பளுவாக இருந்து கரு அசையாமலிருக்கும். மிக்க அதிகமாகக் குத்தல் நோயுண்டாகும். ஆனால் பிரசவநோய் இராது.

பெண் குறியினின்றும் திரவம் பெருகியோடாது. கண்கள் நழுவி விழுந்தவைபோலிருக்கும். அந்தப் பெண் மயக்கமுறுவாள், வேதனைப்படுவாள், பித்துப் பிடித்தவள் போலாவாள், பெருமூச்சு விடுவாள், எதிலும் பற்றில்லாமலிருப்பாள், இந்த இலக்கணங்களுள்ள சூலுற்றவளைக் கவனித்து குழவி வயிற்றுக்குள்ளேயே மரித்து விட்டதென்றறிய வேண்டும். 30

## 42. கரு சல்லியங்களை நீக்கும் உபாயம்

மேற்கண்ட காரணங்களால் வயிற்றிலேயே இறந்த 'சல்லிய' உருப்பெற்ற, அந்த கரு வெளிவருவதற்கும், மாயை வெளிவருவதற்குமாக இனி கூறப்போகும் முறையைப் பின்பற்ற வேண்டுமெனச் சிலர் கூறுவர்.

அதர்வணமெனும் வேதத்தில் கூறிய மந்திரம் முதலிய முறைகளைப் பின்பற்ற வேண்டுமெனக் கூறுவர் சிலர்.

''சல்லிய தந்திரம்'' எனும் சிகிச்சை முறையில் தேர்ச்சி அனுபவஞானமும் பெற்ற ஆயுதச் சிகிச்சையாளன் முயற்சி செய்து சல்லியத்தை விடுவித்தல் தகும் என்பர் மற்றும் சிலர்.

## 43. பிறகு செய்ய வேண்டியவை

கருவெனும் சல்லியத்தை வெளிக்கொணர்ந்த பிறகு அந்தக் கருவாகிய சல்லியம் ஆழமாக அதாவது பக்குவம் அடையாததாக இருந்தால் சுரா என்னும் மதுவையும் சீது எனும் கள் வகையையும் அரிஷ்டம் எனும் ஒருவகைப் பானம் தேன் மதிரை

என்னும் ஒருவகை மது இவைகளில் ஏதாவதொன்றை அப் பெண்ணின் கரு தங்குமிடம் தூய்மையடைவதற்கும் வலி தெரியா மலிருப்பதற்கும் மகிழ்ச்சியுண்டாவதற்கும் அவளுடைய உடல் நிலையைக் கவனித்து தக்க அளவில் பருகச் செய்ய வேண்டும்.

பிறகு உடலுக்கு வலிவூட்டவல்ல உடல் வலிவைக் காக் கின்ற எண்ணெய்ப்பசையுள்ள பொருட்களைக் கலக்காமல் தயா ரித்த 'கஞ்சி' முதலிய அக்காலத்திற்கேற்ற திரவமான உணவு களால் தோஷங்கள் தாதுக்கள் வேர்வை முதலானவை வற்றிப் போகும்வரை உபசரிக்க வேண்டும். *31*

## 44. சூலுற்றவளின் முதல் மாத ஆகார முறை

சிறிதும் மாற்றமின்றி நல்ல நிலையில் வளர்கின்ற கருவுக்கு அந்த அந்த மாதங்களில் செய்ய வேண்டிய பணிவிடை முறையை முறையே கூறுவோம்.

'கரு தங்கியுள்ளது' என ஐயம் தோன்றிய உடன் முதல் மாதத்தில் எதையும் கலக்காமல் தூயதாக உள்ள பாலைக் காய்ச்சிக் குளிரச்செய்து தக்க அளவில் அவ்வப்பொழுது சூலுற்ற வள் அருந்திவர வேண்டும்.

உடலுக்கு ஒத்துவரும் உணவை மாலையிலும் காலையிலும் புசித்துவர வேண்டும்.

## 45. இரண்டாவதிலிருந்து 5-வது மாதம் வரை பணிவிடை

இரண்டாவது மாதத்தில் இனிப்பான மருந்து மூலிகைகளைக் கலந்து தயாரிக்கப்பட்ட பாலை மட்டுமே அருந்திவர வேண்டும்.

மூன்றாவது மாதத்தில் தேனையும் நெய்யையும் கலந்து தயா ரித்த பாலை அருந்தி வரவேண்டும்.

நான்காவது மாதத்தில் பாலிலிருந்து எடுத்த (அக்ஷம் எனும்) வெண்ணெயை ஒரு கவள அளவு புசிக்க வேண்டும்.

ஐந்தாவது மாதத்தில் பாலிலிருந்து எடுத்த வெண்ணெயைக் காய்ச்சி அந்த நெய்யை அருந்த வேண்டும்.

ஆறாவது மாதத்தில் பாலிலிருந்து எடுத்த வெண்ணெயில் தயாரான நெய்யை இனிப்பு மருந்துகளுடன் கலந்து பக்குவம் செய்து அந்த நெய்யைப் பருக வேண்டும்.

ஏழாவது மாதத்தில் அதே நெய்யைப் பருக வேண்டும்.

## 46. எட்டாவது மாதத்திய பணிவிடை

எட்டாவது மாதத்தில் கருவிற்குத் தலைமயிர் முளைக்கு மாகையால் அவ்வமயம் தாய்க்கு உடல் எரிச்சலுண்டாகுமென்று பெண்கள் கூறுவர். அது சரியல்ல என ஆத்திரேயர் கூறுவார்.

ஏழாவது மாதத்தில் கரு பெரியதாகி தாயின் மார்புப்பகுதியில் உரைதலால் வாத பித்த கபங்கள் என்னும் தோஷங்கள் மூன்றும் சீற்றமடைந்து ஒன்றுகூடி எரிச்சலைத் தோற்றுவிக்கும். அதனால் தினவு உண்டாகும். அதன் காரணமாக தோல்கள் பிளக்கக்கூடிய 'கிக்கிஸம்' எனும் சதைநோய் தோன்றும்.

## 47. எட்டாவது மாதத்தில் அருந்த வேண்டிய பானம், உணவு முதலியன

உடல்மீது தினவு தோன்றியபோது இனிப்பான மருந்துப் பொருட்களைக் கலந்து தயாரித்த இலந்தைக் காய் நீரின் அநு பானத்துடன் (உள்ளங்கை) அளவு தக்க காலத்தில் உணவை அருந்தச் செய்ய வேண்டும்.

சந்தனம் தாமரைத் தண்டு இவற்றின் [1]கல்கத்தினால் (மைய அரைத்த பூச்சினால்) தனங்கள் மீதும் வயிற்றின் மீதும் தேய்க்க வேண்டும்.

மற்றும் காட்டுவாகைப்பூ காட்டாத்திப்பூ கடுகு அதி மதுரம் என்பவற்றின் சூரணத்தையோ,

வெட்பாலை அர்ஜகமெனும் நிலத்துளசி விதை கோரைக் கிழங்கு மஞ்சள் இவற்றின் கல்கத்தையோ

வேம்பு இலந்தை துளசி மஞ்சோஷ்டி என இவற்றின் கல்கத்தாலோ மான் புள்ளிமான் முயல் என்பனவற்றின் ரத்தத் துடன் சேர்த்து அரைத்த [2]த்ரிபலா கல்கத்தையோ

அப்பெண்ணின் தனங்களின் மீதும் வயிற்று மீதும் பூசித் தேய்க்க வேண்டும். மற்றும் [3]கரவீரம் என்னும் அலரியின் ரசத்தி னால் தயாரித்த தைலத்தால் தேய்த்துக் குளிப்பாட்ட வேண்டும்.

ஜாதிக்காயையும் அதிமதுரத்தையும் கலந்து காய்ச்சிய நீரால் நனைக்க வேண்டும்.

---

1. கல்கம் – ஒருபொருளைக் கல்வம் என்னும் கற்பாண்டத்தில் நீர் இட்டு மைய அரைத்து எடுத்தலே கல்கமெனப் படும்.
2. த்ரிபலா – கடுக்காய் தான்றிக்காய் நெல்லிக்காய் இம்மூன் றின் கூட்டு த்ரிபலா எனப்படும்.
3. கரவீரம் – அலரி.

தவிர தினவு ஏற்பட்டபோது நகத்தால் சொறிந்தால் தோல் பிளந்து மாற்றம் ஏற்படும். எனவே நகத்தால் சொறிவதைத் தவிர்க்க வேண்டும்.

தினவு அதிகமாகி பொறுக்க முடியாத நிலை ஏற்பட்டால் கையால் அழுத்தித் தேய்த்து தினவைத் தணியச் செய்ய வேண்டும், சொறியக்கூடாது.

வாதத்தை நீக்குவதும் எண்ணெய்ப்பசை உப்புச் சுவை சிறிதளவே கொண்டதும் இனிப்புச் சுவையை முக்கியமாகக் கொண்டதுமான உணவைப் புசிக்க வேண்டும். அப்பொழுது சிறிதளவு நீரையும் பருகலாம்.

## 48. எட்டாவது மாதத்தில் கஞ்சி யருந்தும் முறை

பால் கலந்து பக்குவம் செய்த கஞ்சியில் நெய்யை அதிக அளவில் கலந்து அவ்வப்பொழுது அருந்த வேண்டும். அது கூடாதென பத்திரகாப்பியரென்பவர் பகர்ந்தார். அதனால் கண்கள் மஞ்சள் நிறமாகிவிடும். எனவே அதனை அருந்தலாகாதென்பது பத்திரகாப்பியரின் கருத்தாகும்.

கண்களுக்கு மஞ்சள் நிறமுண்டானாலும் 'பால்கஞ்சி' அருந்துவது அவசியம் என்பது புனர்வசுவின் கருத்து.*

அத்தகைய பால் கஞ்சியை அருந்தினால் உடல் நலம் உடல் வலிவு நிறம் குரல் நல்ல உடலமைப்பு இவையனைத்துமுண்டாகி சுற்றத்தாரனைவரிலும் சிறப்பான நற்குணங்கள் மேலிட்ட மகன் பிறப்பானாகையால் அவசியம் பால் கஞ்சியை அருந்த வேண்டுமென்பது அவர் உள்நோக்கம்.

## 49. ஒன்பதாவது மாதத்தில் அனுபான முறை

சூலுற்றவளுக்கு ஒன்பதாவது மாதத்தில் இனிய மருந்து வகைகளை ஒன்று சேர்த்துத் தயாரித்த எண்ணெயைக் கொண்டு [1]அனுவாஸன வஸ்தியைச் செய்ய வேண்டும்.

மற்றும் அந்த எண்ணெயில் பஞ்சை நனைத்து சூலுற்றவளின் அல்குலுக்குள் நுழைக்க வேண்டும். அவ்வாறு செய்தால் கருநிலையும் பிரசவ வழியும் பெண் உறுப்பும் வழவழப்புள்ளதாக இருக்கும்.

---

1. அனுவாஸனவஸ்தி — எண்ணெயை ஆசனத்துவாரத்தின் மூலம் குடலுக்குள் புகுத்திச் செய்யும் சிகிச்சை.

## 50. கடமைகளை முறைப்படி செய்வதன் பயன்

சூலுற்றவள் முதல் மாதம் தொடங்கி ஒன்பதாவது மாதம் வரை பின்பற்ற வேண்டிய ஆகாராதி முறைகளை முறைப்படி பின்பற்றினால் கருவைத்தாங்கும் வயிற்றுப்பகுதி பின்தட்டுகள் பக்கங்கள் முதுகு இவையனைத்தும் மெத்தென்றாகும். வாதம் கீழ்நோக்கிப் பரவும், சிறுநீரும் மலமும் மாற்றமடையாமல் சுகமாகத் தம் வழிகளில் இருக்கும். சருமமும், நகங்களும் மெத்தென்றிருக்கும். உடல் வலிவும் நிறமும் வளரும். செல்வத்துடன் இன்பங்களை அனுபவிக்கக்கூடிய தனக்கு விருப்பமான மகனையோ மகளையோ சுகமாக ஈன்றெடுப்பாள். 32

## 51. ஈன்றெடுக்கும் இடம்

சூலுற்றவளுக்கு ஒன்பதாவது மாதம் தொடங்குவதற்கு முன்பே பிரசவிக்கும் இடத்தை எலும்புகளும் சுண்ணாம்புக்கற்களும் இல்லாத இடமாக அமைக்க வேண்டும். நல்ல வண்ணம் சுவை மணம் இவையுள்ள நிலத்தில் கிழக்கு நோக்கிய வாயிலோ வடக்கு வாயிலோ கொண்டிருக்க வேண்டும்.

அந்த வீட்டை வில்வம் தும்மட்டி புங்கன் சேராங்கொட்டை மரம் மாவிலங்கை கருங்காலி என்ற மரங்களைக் கொண்டு அமைக்க வேண்டும்.

அதர்வவேதம் கற்றுணர்ந்த அந்தணர்கள் கூறியபடி மற்ற மரங்களின் பகுதிகளைக் கொண்டே அவ்வீட்டை அமைக்கலாம்.

அவ்வீட்டில் அலங்காரத் துணிகள் பூச்சுக்கள் கவிப்புகள் கதவுகள் இவையனைத்தும் இருக்க வேண்டும்.

வாஸ்து சாத்திரம் எனும் கட்டடக் கலையை நன்கறிந்தவர்களின் திறமையால் அமைந்த வீடு தீ நீர் உரல் இவற்றிற்கான குறிப்பிட்ட இடங்களையும் மல மூத்திர கழிப்பறைகளையும் குளியலறைகளையும் கொண்டிருக்க வேண்டும்.

மற்றும் அந்தப் பிரசவ இல்லம் பருவங்களுக்கேற்றவாறு குளிர்காற்று நிலைகள் சுகமாக அமையச் சாளரங்கள் முதலியவை பொருத்தப்பெற்றிருக்க வேண்டும். 33

## 52. அவ்வில்லத்தில் தொகுத்து வைக்க வேண்டியவை

அந்தப் பிரசவ இல்லத்தில் நெய் எண்ணெய் தேன் சைந்தவலவணம் சௌவர்ச்சலமென்னும் உப்பு கருநிற உப்பு 'பிடா' எனும் ஒருவகை உப்பு வாயுவிடங்கம் செங்கல்வகோஷ்ட்டம் தேவதாரு மரப்பட்டை சுக்கு திப்பிலிவேர் (மோடி) யானைத்

திப்பிலி வல்லாரை இலை ஏலக்காய் 'லாங்கலி' எனும் ஒருவகைக் கிழங்கு வசம்பு செவியம் சித்திரமூலம் மயிலடிச்செடி பெருங்காயம் கடுகு வெள்ளைப்பூண்டு கோதுமை முதலிய தானியங்களின் நொய் கடப்பை மரம் வல்வஜம் எனும் ஒருவகைப்புல் பூர்ஜ பத்திரம் எனும் ஒருவகை இலை கொள்மைரேயம் என்னும் ஒருவகைக் கள் சுரை எனும் கள்வகை ஆஸவம் எனும் ஒருவகைக் கள் இவையனைத்தையும் தொகுத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

அதேபோல் இரண்டு கற்பாறைகள் பருத்த இரண்டு உலக்கைகள் ஒரு கழுதை ஒரு எருது தங்கம் அல்லது வெள்ளியினால் செய்யப்பட்டு கூராக உள்ள இரண்டு ஊசிகள் எஃகினால் செய்யப்பட்ட இரண்டு சஸ்திரங்கள், வில்வமரத்தால் செய்த இரண்டு கட்டில்கள் நெருப்பைப் பற்றவைப்பதற்கான தும்மட்டி புங்கன் செடி இவற்றின் கட்டைகள் இவையனைத்தையும் பிரசவ இல்லத்தில் தயாராக வைத்திருக்க வேண்டும்.

பலமுறை மகப்பேற்றைப் பெற்றுவரும் நல்மனம் படைத்தவரும் அன்புகொண்டவரும் உயர்ந்த நல்லொழுக்கம் வாய்க்கப் பெற்றவரும் சமயத்திற்கேற்றபடி யூகிக்கும் சக்தியுள்ளவரும் இயற்கையான நட்பு மனப்பான்மையுள்ளவரும் மனத்தில் வருத்த மற்றவரும் துன்பத்தைப் பொறுப்பவருமான பெண்கள் அம்மகப்பேற்றில்லத்தில் கூடியிருக்க வேண்டும். 34

## 53. சூலுற்றவளை மகப்பேறில்லத்தில் சேர்க்கும் வகை

சூலுற்றவளுக்கு ஒன்பதாவது மாதம் பிறந்தவுடன் ஒரு நன்னாளில் சிறந்த நட்சத்திரம் யோகம் கூடிய சந்திரன் சுபனாக இருக்கும் நல்லதொரு கரணத்தில் மித்திரனை தேவதையாகக் கொண்ட சுபமுகூர்த்தத்தில் 'வாஸ்து சாந்திஹோமம்' எனும் சடங்கைச் செய்வித்து பசு அந்தணர் அக்கினி நீர் நிரம்பிய பாத்திரம் இவைகளை மகப்பேற்றில்லத்தில் ஏற்பாடு செய்து பசுக்களுக்குப் புல் நீர் தேன் பொரி இவைகளை கொடுத்து அந்தணர்களுக்கு அட்சதை பூக்கள் 'நாந்தீமுகம்' எனும் சடங்கில் பயன்படுத்தும் 'கர்ஜூரம்' முதலிய பழங்களை அளித்து அவர்களுக்கு 'அர்க்கியம்' முதலிய உபசாரம் செய்து உயர்ந்தோர் இருக்கையில் இருத்தி வணங்கி மற்றொரு முறை ஆசமனம் செய்து அந்தணர்களின் ஆசிகளைப் பெறவேண்டும்.

பிறகு சூலுற்றவள் மங்கல வாத்திய ஒலிகளுடன் பசுக்களையும் அந்தணர்களையும் வலம் வந்து மகப்பேற்றில்லத்தை

அடைந்து அந்த மகப் பேற்றறையிலேயே தங்கியிருந்து மகப் பேற்றுக் காலத்தை எதிர்நோக்கிக் காத்திருக்கவேண்டும். 35

## 54. மகப்பேறு நெருங்கியதன் அறிகுறிகள்

கருவுற்ற பெண்மணிக்கு மகப்பேறு காலம் நெருங்கியபோது இனி கூறப்போகும் அறிகுறிகள் காணப்படும்.

உடலுறுப்புக்களனைத்தும் ஓய்ச்சலாகவும் முகம் வாடியும் கண்கள் தெறித்துப்போவது போலும் மார்பு பிடியிலிருந்து விடுபட்டது போலும் வயிறு கீழே தொங்கி நழுவியது போலவும் வயிற்றில் கீழ்ப்பகுதி பளுவாகவும் தொடை எலும்பு அடிவயிறு (வஸ்தி) இடுப்பு வயிறு இரு பக்கங்கள் முதுகு எனும் இப்பகுதி களில் குத்தல் வலியும் உண்டாகும்.

பெண்ணுறுப்பிலிருந்து திரவம் பெருகும். ஆகாரத்தின் மீது விருப்பமிராது. இக்குறிகள் காணப்பட்டபின் பிரசவவேதனை யுண்டாகும். கருவுடன் தொடர்புகொண்ட நீர் வழிந்தோடும். 36

## 55. பிரசவ வலி தோன்றிய பின் செய்ய வேண்டியவை

மகப்பேற்றிற்கான வலி தொடங்கிய உடன் தரைமீது மெத் தென இருக்கும் மெத்தை முதலியவைகளைப் பரப்பி படுக்கையை அமைத்து சூலுற்றவளை படுக்கைமீது அமர்த்தி அவளைச் சுற்றி லுமுள்ள முற்கூறிய குணமுள்ளப் பெண்கள் சூலுற்றவளுக்கினிய தான சமாதான வார்த்தைகளால் அவளை உற்சாகப்படுத்திக் கொண்டு சூழ்ந்திருக்க வேண்டும். 37

## 56. வலியுண்டாகி பிரசவமாகாதிருப்பின் செய்ய வேண்டியது ?

சூலுற்றவள் முன் கூறியபடி நோயால் துன்புற்று, மகப் பேற்றை அடையாமலிருந்தபோது அந்தப் பெண்ணிடம் இவ்வாறு கூறவேண்டும். ''பெண்ணே ! எழுந்திரு. இந்த உலக்கையைக் கையிலெடுத்துக்கொண்டு தானியம் நிரம்பியுள்ள இந்த உரலில் குத்து. உன் உடலை இப்படியும் அப்படியும் அதிகமாக ஒடித்து திருப்புவாயாக, நாற்றிசையும் மெள்ள மெள்ள நடப்பாயாக எனக் கூறவேண்டு''மென சில ஆசிரியர்கள் பணிப்பார்கள். அது தக்கதல்லவென முக்காலமுமறிந்த ஆத்திரேய முனிவர் பகர்ந் தார்.

சூலுற்றவளுக்குச் சுகப் பிரசவமாகும் வரை அவள் எத் தகைய கடினமான தேகப்பயிற்சியும் செய்யலாகாது. பிரசவ காலத்தில் தாதுக்களனைத்தும் தோஷங்கள் அனைத்தும் தத்தம் இடத்திலேயே நின்று அசைந்துகொண்டிருக்கும். அந்நிலையில்

இயற்கையிலேயே மெல்லியளான அச்சூலுற்றவளுக்கு உலக்கைப் பயிற்சியினால் வாதம் மிகவும் சீற்றமடைந்து தனக்கு வாய்ப்பு கிடைத்தவுடனேயே அது அவளுடைய உயிரைத் துன்புறுத்தும். அவ்வமயம் சூலுற்றவள் தக்க சிகிச்சை செய்துகொள்ளத்தகாத நிலையிலிருப்பாள். ஆகவே பிரசவ சமயத்தில் சூலுற்றவள் உலக்கையால் இடித்தல் அபாயகரமானது. அத்தகைய உடற் பயிற்சியும் செய்யலாகாது என்பது முனிவரின் உட்கருத்து. உடலை முறித்தலும் சுற்றிவருதலும் மட்டுமே செய்யலாம் என ஆத்திரேயருக்குச் சம்மதம்.

## 57. பிரசவத்திற்கனுகூலமான செயல்கள்

அவ்வமயம் செங்கல்வகோஷ்டம் ஏலக்காய் தேங்காய் வசம்பு சித்திரமூலம் புங்கன் விதை இவைகளைப் பொடிசெய்து அதை சூலுற்றவள் மூக்கால் உறிவதற்கு கொடுத்து அப்பொடியை அடிக்கடி முகரச் செய்ய வேண்டும்.

அவ்வப்பொழுது அவளுடைய பின்தட்டுப் பகுதிகள் இரு பக்கங்கள் தொடைகள் இவைகளைச் சிறிது வெதவெத என்றிருக்கும் தைலத்தால் தேய்த்து உடலுக்கு இன்பமளிக்கும் வகையில் பிடித்துவிட வேண்டும். அதனால் கரு கீழ்முகமாக நகரும். 38

## 58. கரு கீழ் நோக்கியபின் செய்ய வேண்டியது

கரு பெண்ணின் இதயத்தருகில் தனக்குள்ள பிடிப்பை விட்டு வயிற்றில் சேர்ந்து வஸ்தி தலைக்கு எதிர்முகமாகச் சென்றுள்ளதெனத் தெரிந்தபின் பிரசவவலி அதிகமாக உள்ளதென்றும் கருவிலுள்ள சிசு பிரசவ வழியை நோக்கியவாறுள்ளதென்றும்தெரிந்தபின் அவளைக் கட்டில்மீது உட்காரவைத்து முக்க முயற்சி செய்விக்க வேண்டும்.

## 59. எளிதில் ஈன்றெடுக்கச் செய்யும் மந்திரங்கள்

அச்சமயம் அவளுக்கு மிகவும் அனுகூலமான பெண்ணொருத்தி சூலுற்றவளின் செவியில் கீழ்க்கண்ட மந்திரத்தை ஓத வேண்டும். அதாவது :

''க்ஷிதிர்ஜலம் வியத் தேஜோ
வாயுர் விஷ்ணு : ப்ரஜாபதி :
ஸகர்ப்பாம் த்வாம் ஸதாபாந்து
வைசல்யம் ச திசந்து தே

ப்ரஸ்ஷ்வத்வமவிக்லிஷ்டம்
அவிக் லிஷ்டா சுபாநநே
கார்த்திகேயத்யுதிம் புத்ரம்
கார்த்திகேயாபிரக்ஷிதம்''

(கருத்து : ''நிலம் நீர் விண் தேயு வாயு எனும் இந்த ஐம் பூதங்களும் விஷ்ணு பிரமன் எனும் தேவர்களும் கருவென்னும் சல்லியத்தை வெளிப்படுத்தி உன்னை எப்போதும் காப்பாராக!''

நீ துன்பமற்றவளாய் கார்த்திகேயன் என்னும் முருகனுக்கு ஒப்பான ஒளிமிக்கோனும் முருகனால் காக்கப்பட்டவனுமான மகனை துன்பம் துளியுமின்றி பெற்றெடுப்பாயாக'' என்பதாம்.)
39

## 60. பிரசவ நேரத்தில் சூலுற்றவளுக்கு நல்வார்த்தைகள்

அதன்பிறகு மேற்கூறிய நற்குணங்கள் பொருந்திய கருவறையிலுள்ள பெண்கள் அச்சூலுற்றவளுக்கு வலியில்லாதபோது முக்குதல் கூடாதென்றும் (வலி தொடர்ந்துவரும்போது முக்குதல் வேண்டுமென்றும்) கட்டுப்பாடு விதிக்க வேண்டும்.

பிரசவ வலி தோன்றாதிருக்கும்போது முக்கினால் (சிசு பிறக்காமல்) அது வீணாகும். சிசு பிறந்தாலும் அது மாற்றத்தையடையும்.

பிறந்த அச்சிசு சுவாஸ - காசங்கள் சோஷ-ப்லீஹ வளர்ச்சி எனும் இந்நோய்களால் துன்புறும்.

மற்றும் தும்மல் ஏப்பம் கீழ்நோக்கிச் செல்லும் காற்று சிறுநீர் மலம் இவை வெளிப்பட முற்படாதபோது பலாத்காரமாக வெளிப்படுத்த முயற்சித்தால் அவை வெளியாகா.

வெளியானாலும் மிகவும் துன்பத்தை தந்து வெளியாகும். அதேபோல் கருவை வெளிப்படுத்துவதற்குக் காரணங்களான பிரசவ வேதனைகளின் வேகம் இல்லாதபோது முக்குவதால் கரு வெளியாகாது. ஒரு வேளை வெளியானாலும் முற்கூறிய வகையில் துன்பத்தையே அளிக்கும்.

தவிர மேற்கூறிய தும்மல் ஏப்பம் முதலியவை வெளியாகும் போது வெளிவராமல் தடுத்தால் வாதச் சீற்றமுண்டாகி அதனால் உடலுக்குத் துன்பத்தைத் தோற்றுவிக்கும்.

அவ்வாறே பிரசவத்திற்கு அனுகூலமான வலியும் வேகமும் தோன்றியபோது முக்காமல் அவற்றின் வேகத்தைத் தடுத்தால் துன்பமுண்டாகும்.

எனவே வலியின் வேகம் தோன்றியபோதெல்லாம் முக்க வேண்டுமென்றும் வலியில்லாதபோது முக்குதல் கூடாதென்றும் அங்குள்ள பெண்கள் கருவுற்றவளுக்கு ஆணையிட வேண்டுமென்பது கருத்து.

கருவுற்றவளும் அவர்கள் கூறியவாறு செய்து முதலில் மெள்ள மெள்ள முக்கி அவ்வப்பொழுது பலமாகவும் முக்க வேண்டும். அப்பொழுது அங்குள்ள பெண்கள் ''மிக்க குணமுள்ள மகனை இதோ பெற்றுக்கொண்டிருக்கிறாள்'' என உரக்க அவள் கேட்கும்படி கூறவேண்டும். அவ்வாறு கூறுவதால் அவளுக்கு மகிழ்ச்சி பொங்கி, உயிருக்கு உரமுண்டாகும். 40

## 61. பிரசவத்திற்குப் பின் செய்ய வேண்டியவை

கருவுற்றவள் பிரசவித்தவுடன் அங்குள்ள பெண்களில் ஒருத்தி கருவிலிருந்து வெளிவந்த சிசுவைக் கவிந்துகொண்டிருக்கும் மாயை என்னும் மெல்லிய போர்வை வெளியாயிற்றா என்று கூர்ந்து பார்க்க வேண்டும்.

அது வெளிவராவிடில் பெண்களில் ஒருத்தி வலது கையால் பிரசவித்த பெண்ணின் தொப்புளுக்கு மேல்பகுதியில் பலமாக அழுத்திப் பிசைந்து இடதுகையில் இடுப்பைப் பற்றி நன்கு பிசைந்துவிட்டு கால்முட்டிகளால் பின்தட்டுகளை அழுத்திப் பிடித்து பிறகு தலைப்பின்னலால் அவளுடைய கழுத்தையும் தவடைகளையும் நன்கு துடைக்க வேண்டும். போஜபத்திரம் என்ற இலை கருகுமணி பாம்புச் சட்டை இம்மூன்றையும் ஒன்று சேர்த்து அவளுடைய யோனிக்குள் புகையைச் செலுத்த வேண்டும்.

## 62. மாயை வெளியாவதற்கு கல்கம், பானம் முதலியன

செங்கல்வ கோஷ்டம் தாளிசபத்திரி இவ்விரண்டையும் அரைத்துக் பல்பஜம் எனும் ஒருவகைப் புல்லால் செய்த கஷாயம் மைரேயம் என்னும் ஒருவகைக்கள் விறுவிறுப்பான கள்ளின் தெளிவு, கொள்ளினால் காய்ச்சிய கஞ்சி மஞ்சேஷ்டி திப்பிலி இரண்டையும் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட கஷாயம் இவற்றுள் ஏதாவது ஒன்றுடன் அவளுக்குக் கொடுத்துப் பருகச் செய்ய வேண்டும்.

## 63. மாயை வெளியாக நுட்பமான ஒரு வழி

சிற்றேலம் தேவதாரு செங்கல்வகோஷ்டம் சுக்கு வாயு விடங்கம் கிருஷ்ணகருசெவியம் திப்பிலி சித்திரமூலம் சீரகம்

என்பவற்றின் கல்கம் உயிருடனிருக்கும் கழுதை எருது இவற்றின் செவியை நன்கு வெட்டி பாறைமீது வைத்து நன்றாக அரைத்துச் செய்த பல்பஜகஷாயம் என இவற்றை ஒன்றுடன் கலந்து ஒரு முகூர்த்தகாலம் வைத்திருந்து வடிகட்டி எடுத்த தெளிந்த கஷாயத்தை அவளுக்குக் கொடுக்க வேண்டும்.

## 64. மற்றோர் முறை (மாயை வெளிப்பட)

சதகுப்பி, செங்கல்வ கோஷ்டம் மலக்காரக்காய் பெருங்காயம் இவற்றை ஒன்று சேர்த்துத் தயாரித்த எண்ணெயில் பஞ்சை நனைத்து பெண்குறி துவாரத்தில் இருத்தி அந்த தைலத்தாலேயே அனுவாஸன வஸ்தியைச் செய்ய வேண்டும்.

தவிர மலக்காரக்காய் தேவதாளி கசப்புச்சுரை கசப்புப் பீர்க்கை வெட்பாலைப்பட்டை வெட்பாலை அரிசி யானைத் திப்பிலி இவற்றை மைய அரைத்து கல்கம் செய்து, மேலே கூறிய பல்பஜமென்னும் புற்களால் ஆன கஷாயத்துடன் சேர்த்து ஆஸ்தாபன வஸ்தியைச் செய்தால் அது அந்த மாயை வாதம் சிறுநீர் மலம் இம்மூன்றையும் வெளியில் கொண்டு வரும். வாதம் சிறுநீர் மலம் என்பவையும் வெளியேறக்கூடிய மற்றவையும் மாயையைச் சேர்ந்து அதைக் கட்டுப்படுத்தும். ஆஸ்தாபன வஸ்தியானது இயல்புள்ள மற்றவைகளையும் மாயையும் கட்டுப்படுத்தும். எனவே வாதத்தின் கீழ்நோக்கிச் செலுத்தும் இயல்பு கொண்ட மற்றவற்றையும் மாயையும் கீழ்நோக்கி வெளியேறச் செய்யும். 41

## 65. பிரசவம் ஆகியவுடன் குழவிக்குச் செய்ய வேண்டியவை

மேற்கண்டவாறு மாயை வெளிப்படுவதற்கான செயல்களைச் செய்துகொண்டிருக்கும்போதே பிறந்த குழவிக்கு உடனே செய்ய வேண்டிய சில பணிகள் எவையெனில் —

குழவியின் காதருகில் இரண்டு கற்களை ஒன்றோடொன்று தட்டி ஓசை எழுப்ப வேண்டும்;

குளிர் நீரையோ, சுடு நீரையோ சிசுவின் முகத்தின்மீது தெளிக்க வேண்டும்; அவ்வாறு செய்தால் பிரசவ சமயத்தில் அல்குல் வலியின் துன்பத்தால் தாக்கப்பட்ட உயிர் மறுபடியும் தன்னிலைக்கு வந்து சேரும்;

மற்றும் சிசு கால்கைகளை அசைக்காமல் இருந்தால் கருநிறமுள்ள மூங்கில் பத்தை முதலியவைகளால் செய்த கருப்பான முறத்தினால் அந்த சிசுவிற்கு மெதுவாக மறுபடி உயிர் வரும் வரை வீசுதல் வேண்டும். இவ்வகையில் மேற்கண்ட பணிவிடை

களை உயிர் சமநிலையை அடையும்வரை செய்ய வேண்டும்; அவ்வாறு உயிர் சமநிலையை அடைந்தபிறகு நீரால் மலத்தின் வழிகளை சுத்தப்படுத்தி வெதவெதப்பான வெந்நீரினால் நீராட்ட வேண்டும்; 42

## 66. சிசுவைத் தூய்மைப்படுத்தல்

பிறகு அந்தக் குழவிக்கு தாள்கள் உதடுகள் கழுத்து நாக்கு எனும் இவற்றைச் சுத்தப்படுத்த வேண்டும். தன் கை விரல் நகங்களை நீக்கிவிட்டு, தண்ணீரில் நனைத்த பஞ்சை விரலுக்குச் சுற்றிக்கொண்டு சிசுவின் தாள்கள் முதலிய பகுதிகளைத் துடைக்க வேண்டும். அவ்வாறு துடைத்தபின் பஞ்சை எண்ணெயில் நனைத்து சிசுவின் தலையையும் தாள்களையும் மூடிப் பிறகு சைந்தவலவணம் கலந்த நெய்யினால் வாந்தியெடுக்கச் செய்ய வேண்டும். 43

## 67. சிசுவின் தொப்புள் கொடியை அறுக்கும் முறை

தொப்புள் கொடியை அறுத்து தொப்புள் அமைக்கும் முறையைப் பற்றிக் கூறுவோம் :-

தொப்புட் பகுதியின்மேல் எட்டு அங்குலம்வரை விட்டு அங்கு ஒரு குறியிட்டு வெட்டத்தக்க பகுதியில் இரு பக்கமும் கையால் மெதுவாகப் பிடித்துக்கொண்டு பொன் வெள்ளி எஃகு இவற்றில் ஒன்றினால் செய்யப்பட்டுக் கூர்மையாக உள்ள [1]அர்த்ததாரம் எனும் கத்தியால் துண்டிக்க வேண்டும். கொடியின் நுனியை நூலால் கட்டி, அந்த நூலின் மற்றொரு நுனியைச் சிசுவின் கழுத்தில் தளர்ச்சியாகக் கட்ட வேண்டும்;

தொப்புட்கொடியைத் துண்டித்தபிறகு சிசுவின் தொப்புள் புண்ணானால் லோத்ரம் (பாச்சோத்திப் பட்டை) அதிமதுரம் தேவதாருபட்டை, மஞ்சள் இவற்றை அரைத்து அதைக் காய்ச்சிய தைலத்தினால் நனைத்து, அந்த மருந்துப் பொருட்களின் பொடியைத் தொப்புள்மீது தெளிக்க வேண்டும். [2]நாடீகல்பவிதி என்பது நன்கு உரைக்கப்பட்டது. 44

## 68. தொப்புட்கொடியைத் தவறாகத் துண்டிப்பதால் வரும் தீங்கும் சிகிச்சையும்

சொல்லிய வகையில் தொப்புட் கொடியைத் துண்டிக்காமல் மாற்றித் துண்டித்தால் நீளமாகவும் அகலமாகவும் உயரமாக

---

1. அர்த்தாரம் — ஒரு புறம் கூர்மையானது.
2. நாடீகல்பவிதி — தொப்புளமைக்கும் முறை

வும் தொப்புள் இருந்துவிடும். அல்லது வளையமாகவோ, அல்லது சுற்றிலும் உயர்ந்து நடுவில் பள்ளமாகவோ இருப்பதோடு அது நாளுக்கு நாள் வளர்ச்சி பெரும். அவ்வாறாகில் தோஷங்களின் ஏற்றக் குறைகளைக் கவனித்து, உலர்த்தும் வாத பித்தங்களைத் தணிப்பவையுமான மருந்துப் பொருட்களால் சிகிச்சை புரிய வேண்டும். 45

## 69. ஜாதகர்ம மெனும் சடங்கு

பிறகு ஆண்குழவிக்கு ஜாதகருமம் எனும் சடங்கைச் செய்ய வேண்டும். தேனையும், நெய்யையும் அவரவர்களின் குலப்பிரிவுக்குரிய மந்திரங்களால் மந்திரித்து முதலில் அந்தக் குழந்தையை நக்கும்படி செய்து பிறகு வலது மார்பகத்தை மந்திரித்து குழந்தையைக் குடிக்கச் செய்து அந்தக் குழந்தையின் தலைப்பக்கம் நீர்பாத்திரத்தை மந்திரித்து வைக்கவேண்டும். 46

## 70. காப்பு முறை

பிறகு குழவிக்குக் கீழ்க்கண்ட வகையில் காப்பு செய்தல் வேண்டும் :-

கசப்புப் பீர்க்கன் கருங்காலி இலந்தை மலக்காச்சீர்க்கு சிற்றீச்சன் எனும் இச்செடிகளின் மட்டைகளைப் பிரசவ வீட்டின் நாற்புறமும் வைத்து,

கடுகு அகத்தி விதை அரிசி இவற்றின் நொய்களைப் பிரசவ இல்லத்தைச் சுற்றிலும் இரைத்து

பத்தாவது நாள் பெயரிடுதல் சடங்கு செய்யும் வரை காலை, மாலை இரண்டு வேளைகளிலும் அரிசியைக் கொண்டு பலி ஓமம் என்னும் சடங்கைச் செய்து வாயிற்படிப்பகுதியில் மரவாயிற் படியைச் சேர்ந்தாப்போல் ஒரு உலக்கையை வாயிற்படிக்குக் குறுக்காக வைக்க வேண்டும்.

செங்கல் கோஷ்டம் கச்சோரம் பெருங்காயம் கடுகு அகத்தி விதை பூண்டு அரிசிநொய் கோதுமை நொய் மற்றும் அரக்கர் துன்புறுத்தலை நீக்கும் மற்ற மருந்துப் பொருட்கள் இவற்றைப் பொட்டலமாக மூட்டை கட்டி பிரசவவீட்டு வாயிற்படி மேற் புறமுள்ள லக்ஷ்மீ பட்டயத்தில் தொங்கவிட வேண்டும்.

மற்றும் இந்தப் பொட்டலத்தை இளங்குழந்தைக்காரியின் கழுத்திலும், குழந்தையின் கழுத்திலும், சாப்பாட்டுக்கலயங்கள், தண்ணீர்கலயங்கள் கட்டில் இவற்றிற்கும் வாயிற்படியில் இரு புறமும் கட்ட வேண்டும்.

## 71. மற்றும் சில * காப்புமுறைகள்

மற்றும் பிரசவ வீட்டின் நடுவே தும்பைச் செடி, புளியங் கட்டையின் தீயையும் இடைவிடாமல் மூட்ட வேண்டும். குண முள்ள பெண்களும் தோழிகளும் மகப்பேறு பெற்றவளை மிக்க வும் இரவு நேரத்தில் விழித்திருந்து காக்க வேண்டும். இவ்வாறு பத்து நாட்கள் அல்லது பன்னிரண்டு நாட்கள் கவனத்துடன் இருக்க வேண்டும்.

மற்றும் அந்தப் பிரசவ இல்லத்தில் இடைவிடாமல் மங்களா சீர்வாதங்கள் துதிப்பாடல்கள் வாத்தியங்கள் தூயதான அன்ன பானங்கள் அன்பு கொண்டு மகிழ்ச்சியுடன் கூடிய மக்களின் ஆரவாரம் இவைகள் காணப்படவேண்டும்.

அதர்வ வேதத்தை நன்கு கற்றறிந்த அந்தணன் இரு வேளை களிலும் சாந்திஹோமத்தை குழவிக்கும் தாய்க்கும் நன்மைக்காக செய்து வரவேண்டும். இதுவே [1]காப்பு முறையாகும். 47

### இளங்குழந்தைக்காரியின் பசி தீர்க்கும் முறை

இளங்குழந்தைக்காரிக்கு பசி அதிகமாக எடுத்தபோது நெய் எண்ணெய் [2]வசை, [3]மஜ்ஜை என்னும் எண்ணெய்ப்பசைப் பொருட்களில் அவள் உடலுக்கு ஒத்துக்கொள்ளும் வகையில் சக்திக்கேற்றவாறு தேர்ந்தெடுத்து அதில் திப்பிலி மோடி செவி யம் சித்திரமூலம் சுக்கு இவற்றின் பொடிகளுடன் தக்க அளவில் கூட்டி பாலுடன் இவையனைத்தையும் கலந்து குடிக்கச் செய்ய வேண்டும்.

### எண்ணெய்ப்பசையுள்ளவற்றை அருந்திய பின் செய்ய வேண்டியது

முற்கூறியபடி அருந்தச் செய்தபின் இளங்குழந்தைக்காரியின் வயிற்றின் மீது நெய்யைப் பூசி துல்லியமான துணியால் சுற்ற வேண்டும். அவ்வாறு சுற்றுவதால் வாதத்திற்கு வாய்ப்பின்றி அவள் வயிற்றில் எந்தக் கோளாறும் தோன்றாது.

### பிரசவித்தவளைக் கஞ்சி குடிப்பிக்கும் முறை

பருகிய எண்ணெய் சீரணித்தபின் மேற்கூறிய திப்பிலி திப்பிலிமூலம் செவியம் சித்திரமூலம் சுக்கு இவற்றின் பொடி

---

1. காப்பு — அரக்கர், பிசாசுகள் முதலியவற்றின் துன்புறுத்தல் இல்லாமற் செய்வதற்காக செய்யப்படும் உபாயம் ரக்ஷை அல்லது காப்பு எனப்படும்.
2. வசை — மாமிசத்திலுள்ள திரவம்
3. மஜ்ஜை— எலும்புக்குள்ளிருக்கும் சோறு

களை ஒன்றுகூட்டி அத்துடன் பக்குவம் செய்யப்பட்ட கஞ்சியை யும் எண்ணெயையும் கலந்து சடராக்னியின் அளவுக்குத் தக்க அளவில் அருந்தச் செய்ய வேண்டும்.

எண்ணெய் கஞ்சி இவற்றைக் குடிப்பதற்கு முன் இரண்டு காலங்களிலும் சுத்தமான வெந்நீரைத் தெளித்து ஐந்து இரவுகள் வரையிலோ ஏழு இரவுகள் வரையிலோ உணவு கட்டுப்பாட்டை பின்பற்றி படிப்படியாக வலிவு ஏற்படும்படி செய்ய வேண்டும். நோய் முதலான துன்பம் இல்லாமலிருக்கும்போது பிரசவித்த பெண்ணுக்குச் செய்ய வேண்டிய முறை இது. 48

**இளங்குழந்தையின் தாய்க்கு நோய் நீக்கும் பணிவிடைகள்**

இளங்குழந்தையின் தாய்க்குக் கருவைத் தாங்கியிருந்தபோது கரு வளர்ச்சியால் உடல் இளைத்து தாதுக்களனைத்தும் தளர்ச்சி பெற்றிருக்கும். மேலும் பிரசவிக்கும்போது முக்குதல் பிரசவ வேதனை, கருவின் திரவமும், ரத்தமும் ஒழுகுதல் எனும் இக்கார ணங்களால் அதிக அளவில் உடல் தாதுக்கள் தளர்ந்து மிக்க வலுவற்றவளாக இருப்பாள்.

இந்த இரண்டு காரணங்களால் மிகவும் தளர்ந்த இளங் குழந்தையின் தாய்க்கு எந்த நோயுண்டானாலும் அது மிகவும் கஷ்டப்பட்டு தவிர்க்கக்கூடியோ (ருச்சாத்தியம்) தவிர்க்க முடி யாததோ (அஸாத்யம்) ஆகிவிடும். எனவே மிக விழிப்புடன் இளங்குழந்தைக்காரிக்குப் பணிவிடை செய்ய வேண்டும்.

மற்றும் பிரசவமான பெண்கள் அதிகமாக உடலிளைத்து பலஹீனத்துடன் இருப்பார்கள். அவர்களுக்கு [1]பூதஹரம் [2]ஜீவநீயம் [3]ப்ரும்ஹணீயம் என்ற கணத்தில் கூறப்பட்டவையும் இனிப்புச் சுவையை முக்கியமாகக் கொண்டவையும் வாதத்தைப் போக்கவல்லனவுமான மருந்துகளை ஒன்று சேர்த்துப் பக்குவம் செய்யப்பட்ட தைலங்களால் தேய்த்துக் குளிப்பாட்டல் உடலுக்கு நலங்கு வைத்தல் நீர் ஊற்றுதல் தலைக்குளிப்பாட்டுதல் பூசித்தல் நீர்அருந்துதல் என்ற செயல்களால் நன்கு உபசரிக்க வேண்டும். 49

---

1. பூதஹரம் – பேய்பிசாசு முதலிய துன்பங்களைப் போக்குவது.
2. ஜீவநீயம் – வலிவைக் கொடுக்கும் மருந்துகள்( ஜீவநீய கணப்பகுதியில் கூறியவை)
3. ப்ரும்ஹணீயம் – உடலுக்கு வலிவூட்டும் ப்ரும்ஹணீய கணத்தில் சொன்னவை.

இளங்குழந்தைக்காரிகளுக்கு நோய் வந்தால் அது எளிதில் போக்க முடியாததாக (சிகிச்சைக்கு அடங்காததாக) ஆகிவிடும். எனவே நோய் வருவதற்கு இடமளிக்கலாகாது என்பது கருத்து.

**சிசுவுக்குப் பெயர் வைக்கும் முறை**

பத்தாவது இரவு கழிந்தபின் இளம்பிள்ளைக்காரியையும் குழந்தையையும் பலவகை வாசனைப் பொருட்களாலும் வெள்ளைக் கடுகைக் கொண்டும் சுத்தமாக ஸ்நானம் செய்வித்து லேசாகவும் தூயதாகவுமுள்ள துணிகளை அணிவித்துச்சுத்தமாகவும் மனதுக்கு உகந்ததவையாகவும் பார்ப்பதற்கு விசித்திரமாகவும் உள்ள ஆபரணங்களை அணியச் செய்து மங்களகரமான பொருட் களைத் தொட்டுத் தன் குலத்துக்கு ஏற்ற வழக்கமாகத் தொழும் தெய்வத்தைப் பூசை செய்து, தலை முடியுடன் வெளுப்பான துணி களை அணிந்த உடலூனமற்ற அந்தணர்களால் ஸ்வஸ்தி வாசன மென்னும் மங்களச் சடங்குகளைச் செய்வித்துக் சுத்தமானதும் அழுக்கற்றதுமான துணிகளை மெத்தென விரித்துக் குழந்தையை அதன்மீது கிழக்கில் அல்லது வடக்கில் தலையை வைத்துப் படுக்க வைத்து முதலில் தேவதைகளுக்கும் பிறகு அந்தணர்களுக்கும் இந்தச் சிறுவன் வணங்குகிறான் என்று சிசுவின் தந்தை கூறிய பிறகு நட்சத்திரத்தின் பெயரையோ தனக்கு விருப்பமான பெயரையோ அக்குழவிக்கு வைக்க வேண்டும்.

அவைகளில் விவகாரப்பெயர் [1]கோஷம் எனப்படுகின்ற வடமொழி வரிசை எழுத்துக்களில் நான்காவது பெயரின் முதல் எழுத்தாகவும் "அந்தஸ்தம்" எனும் (யரலவ) இவைகளில் ஒன்று அல்லது 'ஊஷ்மம்' எனப்படும் (ச, ஷ, ஸ, ஹ) இவைகளில் ஒன்று கடைசி எழுத்தாகவும் இருந்து மூன்று தலைமுறையாகப் பெரி யோர்கள் ஒப்புக் கொண்டதாகவும் வழக்கத்தில் இருப்பதாகவும் புதிதாகக் கற்பனை செய்யாததாகவும் இருத்தல் வேண்டும்.

நட்சத்திரப்பெயரிடுவதானால் நட்சத்திரத்தின் தேவதையைக் குறிப்பிடுவதாகவும் இரண்டு அல்லது நான்கு எழுத்துகளுடைய தாகவே அது அமைந்திருக்க வேண்டும். 50

---

(1) கோஷம்—வடமொழியில் க, ச, ட, த, ப இவ்வெழுத்துக்கள் ஒவ்வொன்றும் நான்கு நான்கு எழுத்துக்கள்கொண் டிருக்கும். அவைகள் வர்க்கம் எனப்படும். ஒவ் வொரு வர்க்கத்திலும் நான்காவது எழுத்து கோஷ மெனப்படும்.

## குழந்தையின் ஆயுட்கால அறிகுறிகளும் அவற்றைப் பரீட்சித்தலும்

பெயரிடுதல் சடங்கு முடிந்தபின் குழந்தையின் ஆயுளைத் தெரிந்துகொள்வதற்காகப் பரீட்சிக்க முற்படவேண்டும். நீண்ட ஆயுளுள்ள சிறுவர்களின் இலக்கணங்கள் யாவை எனில் -

தலைமயிர்கள் பல ஒரே காலில் முளைக்காமல் வேறுவேறாக முளைத்து அவை மிருதுவாகவும் மெல்லியனவாகவும் சொர சொரப்பாக இல்லாமல் வழவழப்புடன், கெட்டியான அடிப்பகுதி கொண்டு கருப்பாகவும் இருத்தல் வேண்டும்.

சருமம் (உடற்றோல்) இயற்கையாகவே கெட்டியாய் பருமனாயிருத்தல் சிறந்தது. தலை இயற்கையாக அதற்குரிய அளவைக்காட்டிலும் சிறிது அதிக அளவு கொண்டு உடலளவுக் கொப்ப குடைபோல் உருவம் கொண்டிருத்தல் சாலச் சிறந்ததாகும்.

நெற்றி விசாலமாய் கெட்டியாய் சமமாய் கன்னங்களின் அமைப்புகள் நன்கு கலந்து புஷ்டியும் வலிவும் கொண்டு பாதி சந்திரன்போல் நெற்றியின் உருவம் அமைந்திருக்கவேண்டும்.

காதுகள் வலிவுள்ளனவாய் விசாலமாய் இருக்க வேண்டும். இரு செவிகளும் சமஅளவு கொண்ட பீடத்துடன் கீழ்பாகம் பெரியதாய் பின்புறம் வளைந்து நன்கு இணைந்த சதை கொண்டு விசாலமான பொத்தல்களைக் கொண்டிருத்தல் நலம்.

புருவங்கள் சிறிது வளைந்து ஒன்றோடொன்று கலவாமல் சமஅளவு கொண்டு படிமானமாயுள்ள மயிர்களையுடைனவாய் பெரியவையாய் அமைய வேண்டும்.

கண்கள் இரண்டும் சம அளவோடு சமமான பார்வையும் வெளுப்பு கருப்புப் பகுதிகள் நன்கு அமைந்த உறுப்புகளைக் கொண்டும் இருக்க வேண்டும்.

மூக்கு வளைவில்லாமல் மூச்சுக்காற்று தாராளமாய் உட்புகுந்து வெளியாகும்படியும் நுனிப்பகுதி சிறிதளவு வளைந்தும் இருக்க வேண்டும்.

வாய் பெரியதாய் வளைவில்லாமல் பற்களின் அடிப்பகுதி நன்கு சேர்ந்தார்போல் அமைந்திருக்க வேண்டும்.

நாக்கு அகலமும் நீளமும் கொண்டு வழவழப்பாய் லேசாய் இயற்கையான நிறம் கொண்டிருக்க வேண்டும்.

தவடைப்பகுதி வழவழப்பாய் பருத்து சூடு கொண்டு சிவந்திருக்கவேண்டும்.

குரல் எடுப்பாய் ஈனமில்லாமல் பிடிப்பாய் எதிரொலியை எழுப்புவதாய் கம்பீரமாக வெளியாவதாய் தீரத்தன்மையை வெளியிடுவதாய் அமைய வேண்டும். உதடுகள் மிக்க பருமனாக வும் இளைப்பாகவும் இல்லாமல் சமநிலையிலிருந்து வாயைக் கவிழ்ந்துகொண்டு சிவப்பாக இருக்க வேண்டும்.

மோவாய் பெரிதாக இருக்க வேண்டும்.

கழுத்து மிகவும் நீளமாக இல்லாமல் வட்டமாக இருக்க வேண்டும்.

மார்பு விசாலமாய் பருத்திருக்க வேண்டும்.

தோள் எலும்பு காணப்படாமல் மறைந்திருக்க வேண்டும்.

தனங்கள் இரண்டிற்கும் இடையே பரப்பாக இருத்தல் வேண்டும். இருபக்கமும் வலுவான எலும்புகள் தெரியாமல் இருக்க வேண்டும்.

தோள்களும் தொடைகளும் விரல்களும் வட்டமாய் மிக்க நீண்ட அளவிலிருக்க வேண்டும்.

கைகளும் கால்களும் விசாலமாய் பருத்திருக்க வேண்டும்.

நகங்கள் கடினமாய் உருண்டையாய் வழவழப்பாய் செப்பு வண்ணம் கொண்டு உயரமாய் ஆமை போன்று உருவம் கொண்டிருக்க வேண்டும்.

தொப்புள் உயரமாய் வலமாகச் சுற்றி வந்திருக்க வேண்டும்.

இடுப்பு மார்பைக் காட்டிலும் மூன்று பங்கு குறைவான சுற்றளவைக் கொண்டு சமமாக வலிவான மாமிசத்தைக் கொண்டிருக்க வேண்டும்.

பின்தட்டுகள் வட்டமாய் வலிவாய் பருத்து மாமிசங்களைக் கொண்டு மிக்க உயரமும் நீளமும் இல்லாமல் சமநிலையில் இருக்க வேண்டும்.

தொடைகள் வரிசையாய் வட்டமாய் வலிவாய் இருக்கவேண்டும்.

சிறுதொடைகள் மிகவும் பருமனாகவோ இளைத்தோ இராமல் மான்களின் கால்கள்போல் மறைந்த எலும்புகளில் கூட்டு தென்படாமல் இருக்க வேண்டும்.

முழங்கால் முட்டிகள் மிகப்பருமனாகவோ இளைத்தோ இல்லாமல் சமநிலையில் இருக்க வேண்டும்.

பாதங்கள் மேற்கூறிய அறிகுறிகள் கொண்டு ஆமை போன்ற உருவமும் உயரமும் கொண்டிருக்க வேண்டும்.

காற்று சிறுநீர் மலம் இவைகளும் மறைவிடமும் தூக்கம் விழிப்பு களைப்பு சிரிப்பு அழுகை பாலருந்தத் தனங்களைப் பற்றியிருத்தல் இவையனைத்தும் ஏற்றக்குறையில்லாமல் சமநிலையிலிருக்க வேண்டும்.

மேற்கூறியவை தவிர மற்ற கூறப்படாத பகுதிகள் அனைத்தும் இயற்கையானவை ஆனால் நலமாக இருக்கும். வேறுவிதமாக இருப்பின் அவை தீங்கை விளைவிப்பவை ஆகும்.

மேற்கூறியவை அனைத்தும் நிலைகள் மாறாமல் இருத்தல் நீண்ட ஆயுளின் லட்சணங்களாகும். 51

## செவிலித்தாய்க்கு இருக்க வேண்டிய குணங்கள்

செவிலித்தாயைப் பரீட்சிக்கும் முறை கூறப்படுகிறது. சமமான சாதியிற் பிறப்பு பருவம் வயது பணிவு நோய்களில்லாமை உடலூனமின்மை கெட்ட பழக்கங்கள் இல்லாமை குரூபமின்மை மனதிற்கு அருவருப்பைச் செய்யாமை ஒரே நாட்டில் பிறப்பு கொடிய செயல்கள் புரியாமை நற்குலத்தில் பிறப்பு குட்டம் முதலிய தீராத நோயில்லாமை, பிழைத்திருக்கும் குழந்தையின் தாயாகியிருத்தல் ஆண் மகவு பாக்கியம் பால் கொடுக்கும் பழக்கம் மட்டமான புத்தியில்லாமை மந்த புத்தியில்லாமை குரட்டை விடாமல் படுத்து மிதமாகத் தூங்கும் பழக்கம் கடைநிலைக் குலத்தில் பிறப்பின்மை பணிவிடை செய்யும் திறமை தூய்மை அசுத்தநிலையில்லாமை ஸ்தனங்களுக்கும் தாய்ப்பாலுக்கும் சொல்லப்படும் குணங்களுடைமை என இத்தகுதிகள் அனைத்தும் பொருந்தியவளை குழந்தைக்கு தாய்ப்பால்கொடுக்க அழைக்க வேண்டும். 52

## தாய்பாலுக்கு இருக்க வேண்டிய நற்குணங்கள்

சிறந்த குணமுள்ள தாய்ப்பால் யாதெனில் அது தனக்குக் காரணமான ஐவகைப் பூதங்களுடைய இயற்கையான நிறம் மணம் சுவை தொடுஉணர்வு இவற்றைக் கொண்டிருக்க வேண்டும்.

நீருள்ள பாத்திரத்தில் கறக்கும் முலைப்பால் தன் இயற்கை நீராகையால் அது நீருடன் பேதமில்லாமல் கலந்துவிடும். அத்தகைய குணமுள்ள தாய்ப்பால் குழந்தைகளுக்கு வலுவையும் உடல் நலத்தையும் அளிக்கும். இதுவே தாய்ப்பாலுக்கு இருக்க வேண்டிய சிறப்புக் குணமாகும். 53–54

## தாய்ப்பால் தோஷங்கள் - வாத தோஷத்தால் கெட்ட தாய்ப்பால்

முன்கூறியவாறில்லாமல் மாறுபட்டிருக்கும் பால் கெட்ட குற்றமுள்ள தாய்ப்பால் என்றறிய வேண்டும். கருப்பு சிவப்பு நிறம் துவர்ப்புச் சுவை வெளுப்பு நிறம் மணமின்மை விறு விறுப்பு மிகவும் திரவத்தன்மை நுரை லேசான தன்மை உவகை ஊட்டாத தன்மை உடலை இளைக்கச் செய்யும் தன்மை மற்ற வாத நோய்களைத் தோற்றுவித்தல் என்னும் இத்தகைய இயல்புள்ள தாய்ப்பால் வாதத்தினால் குற்றமடைந்தது என்றறிய வேண்டும்.

## பித்தத்தினால் கெட்ட தாய்ப்பாலின் இலக்கணம்

கருமை நீலம் மஞ்சள், சிவப்பு இந்நிறங்களில் ஏதாவ தொன்றைக் கொண்டிருத்தல் துவர்ப்பு புளிப்பு காரம் கசப்பு இச்சுவைகளின் ஒன்றைத் தொடர்ச்சியாக கொண்டிருத்தல் பிண நாற்றம் அல்லது இரத்தமணம் கொண்டு மிகவும் சூடாகவும் உள்ள பித்த நோய்களைத் தோற்றுவிக்கும் தாய்ப்பாலாகும். அது பித்தத்தினால் கெட்டதென அறிக.

## கபத்தினால் கெட்ட தாய்ப்பாலின் இலக்கணம்

மிக்க வெண்ணிறம் மிக்க இனிப்புச்சுவை உப்பை உடன் சுவையாகக் கொண்டு நெய் எண்ணெய் வசை (மாமிசத்தின் திரவம்) மஜ்ஜை எனும் கொழுப்பு என இவற்றில் ஒன்றின் வாசனை பிசுக்குக் கொண்டு கொடிபோலிருத்தல் நீர்க்கலயத்தில் வைத்தால் நீரில் மூழ்கிப் போதல் கபநோயைத் தோற்றுவித்தல் என இந்த இயல்புடைய தாய்ப்பாலை கபத்தினால் கெட்டதென 55
அறிய வேண்டும்.

## வாதம் முதலியவைகளால் கெட்ட தாய்ப்பாலுக்குச் சிகிச்சை

மூவகை தோஷங்களையும் அதற்குரிய சார்புக் குற்றங்களையும் நன்கு கவனித்து வாந்தி பேதி ஆஸ்தாபனம் அநுவாஸனம் என்னும் இந்த நான்கு வகையான தூய்மைச் செயல்களை முறைப்படி செய்தால் தோஷங்கள் தணியும்.

இயற்கை தோஷங்களையும் பாலின் குறிப்பிட்ட தோஷத்தையும் நன்கு பலமுறை கவனித்து யவம் கோதுமை சம்பா அறுபதாங்குறுவை நெல் பயறு பெருங்கடலை கொள்ளு சுரை எனும் கள் சௌவீரக்கள் மைரேயமென்னும் கள் மேதகம் என்னும் கள் வெள்ளைப் பூண்டு புங்கன் இலைகளை குறிப்பிட்ட தோஷத்திற்குத் தக்கபடி இயற்கைக்கேற்றபடி கெட்ட தாய்ப்பாலை கொண்ட செவிலித்தாய்க்குக் கொடுக்க வேண்டும்.

### பாலைச் சோதித்தல்

வட்டத்திருப்பி சுக்கு தேவதாரு கோரைக்கிழங்கு குரும்பை சீந்தில்கொடி அவரைச் செடி நிலவேம்பு கடுகரோகிணி நன்னாரி இவையனைத்தையுமோ அல்லது சிலவற்றையோ தோஷங்களின் வலிவையொட்டி சேர்த்துக்க்கஷாயம் வைத்துப் பருகுவது சாலச்சிறந்ததாகும்.

அந்த அந்த தோஷங்களின் வலிவையொட்டி பாலின் குற்றங்களையும் நன்கு கவனித்து அவ்வாறே மற்ற கசப்பு துவர்ப்பு காரம் இனிப்புச் சுவை அதிகமாக உள்ள பொருள்களையும் தனித்தனியாகவோ ,ஒன்று சேர்த்தோ கஷாயம் வைத்து, கஷாயத்தைக் காலத்திற்கேற்றவாறு தக்க அளவில் பருகச்செய்ததாகும். இவை தாய்ப் பாலைச் சுத்தப்படுத்தும் முறைகள். 56

### தாய்ப்பாலுண்டாக்கும் வழிகள்

சீது எனும் ஒருவகை கள் தவிர மற்ற மதுக்கள் கிராமத்தில் தோன்றியவை நீர்ப்பாங்கான இடத்தில் பிறந்தவையும் நீரில் தோன்றியவையுமான கரிாய்கள் தானியங்கள் மாமிசங்கள் திரவப் பொருள்கள் இனிப்பு புளிப்பு கார்ப்புச் சுவை அதிகமாக உள்ள உணவுகள் பாலுள்ள மூலிகை வகைகள், பால்பானங்கள் இவை அனைத்தும் தாய்ப்பாலை வளரச்செய்பவை. ஆயாசமூட்டும் பணிகளைச் செய்யாமலிருத்தல் நலம்.

மற்றும் விலாமிச்சப்புல் அறுபதாங்குருவை சம்பாநெல் சிறு கரும்பு தருப்பை குசமென்னும் தருப்பைப்புல் காசமெனும் தருப்பை கோரைக்கிழங்கு இத்கடமெனும் ஒருவகை தானியம் இவைகளின் வேர்களைக் கிடைத்த வரையில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி அருந்தினாலும் தாய்ப்பால் வளரும். 57

### செவிலித்தாய் குழந்தைக்குப் பால் கொடுக்கும் முறை

இனிப்பாகி குற்றமின்றி அதிகமாகப் பால் சுரக்கும்போது தூய்மையாகக் குளித்து சந்தனம் பூசி வெள்ளைச் சேலைஅணிந்து செவிலித்தாய் குழந்தைக்குப் பாலூட்ட வேண்டும்.

மற்றும் அப்போது கசப்பு வெள்ளரிக்காய் வல்லாரை அருகம் புல், ஹஸ்வீரியா எனும் புல் கடுக்காய் கடுகரோகிணி சிற்றாமுட்டி பிரோங்கணம் விஷ்ணுக்ராந்தி எனும் இந்த மருந்துப் பொருள்களில் ஒன்றைக் கையில் தாங்கி குழந்தையை கிழக்கு நோக்கி வைத்துக் கொண்டு முதலில் வலது பக்கமுள்ள மார்பகத்தில் பால்குடிக்கச் செய்ய வேண்டும். இதுவே செவிலித்தாயின் சிறந்த செயல். 58

## குழந்தை இருக்க தகுந்த வீட்டின் அமைப்பு

குழந்தை வசிக்கத் தகுந்த வீட்டை அமைக்கும் வகையாதெனில்

அவ்வில்லம் உயர்ந்து மனதுக்கு உகந்ததாய் இருட்டில்லாமல் வெளிச்சமாயிருக்க வேண்டும். காற்று அதிகமாக இராமல் ஒரு பக்கம் காற்று வீசுவதாயிருக்க வேண்டும். ஓநாய்கள் பசுக்கள் கோரைப்பற்கள் உள்ள கொடிய மிருகங்கள் எலிகள் வண்டு முதலானவை இல்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். தண்ணீர் இருக்குமிடம் சிறுநீர் மலம் கழிக்கும் இடம் குளியலறை சமையலறை தனித்தனியாகத் தக்க இடங்களில் பிரித்துக் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். வசந்தம் முதலிய பருவங்களுக்கும் சீதோஷ்ணநிலைக்கும் தக்கபடி படுக்கை இருக்கை மெத்தை விரிப்புகளைக் கொண்டிருக்க வேண்டும்.

மற்றும் அவ்வில்லம் பிசாசுகள் கிரஹங்கள் முதலியவை சேராமலிருப்பதற்குக் காப்பாக பலிகள் மங்கலச் செயல்கள் ஓமம் பிராயச்சித்தம் முதலிய சடங்குகளைக் கொண்டதாய் சுத்தமானவர் முதியோர் மருத்துவர் அன்பு கொண்டவர் ஆகியவர்கள் நிறைந்திருக்க வேண்டும். 59

## படுக்கை விரிப்பு முதலியவைகளின் தூய்மை

குழந்தைக்குப் பயன்படுத்தத்தக்க படுக்கைகள் இருக்கைகள் பக்கத்துணிகள் மூடும் துணிகள் இவையனைத்தும் மெல்லிய லேசானவையாய் சுத்தமானவையாய் நறுமணம் பூசியவையாய் இருத்தல் வேண்டும்.

வேர்வை அழுக்கு எறும்பு முதலிய கிருமிகள் உடையவைகளையும் சிறுநீர் மலம்இவற்றுடன் கூடியவைகளையும் ஒதுக்கிவிட வேண்டும். மற்றவை தனிப்பட்டவைகளாயில்லாமல் அவைகளை நன்கு தண்ணீர் விட்டுக் கழுவி அகரு முதலிய புகைகளைக் காட்டித் தூயவையாக்கி வெயிலில் உலர்த்தி அவைகளையே பயன் படுத்தலாம். 60

## படுக்கை முதலியவைகட்கு புகை போடும் பொருட்கள்

கறிகு யவம் அகத்தி விதை காயம் குக்கிலம் வசை கசோரம் வல்லாரைஇலை அருகம்புல் ஜடாமாம்சி நெரிஞ்சில் அசோகம் கடுகரோகிணி பாம்புச்சட்டை என இவைகளில் கிடைத்ததை ஒன்றை எடுத்து நெய் சேர்த்துத் துணிகளுக்கும் படுக்கை விரிப்புத் துணிகளுக்கும் புகைகாட்டப் பயன்படுத்த வேண்டும். 61

## குழந்தையை மணி மருந்து இவைகளை தரிக்கச் செய்தல்

முத்து பவழம் முதலிய மணிகளையும் மற்றும் கட்கமிருகம் குரு எனும் மான் கவயம் என்னும் மிருகம் எருது எனும் உயி ருள்ள மிருகங்களின் வலதுபக்கக் கொம்பின் நுனியையும் எடுத்து குழந்தையை அணியச் செய்ய வேண்டும்.

மற்றும் மேலே 140வது சூத்திரத்தில் கூறிய ஐந்திரி ப்ராஹ்மி முதலிய பத்து மருந்துகளையும் ஜீவகம் ரிஷபகம் என்பவை களையும் இவையின்றி அதர்வவேதமறிந்த அந்தணர்கள் கூறி யவைகளையும் பயன்படுத்தி குழந்தையை அணியச் செய்தல் மிக்க நலமாகும். 62

## குழந்தை விளையாடுவதற்கான பொருட்கள் இருக்க வேண்டிய முறை

பார்ப்பதற்கு விசித்திரமாகவும் ஒலி செய்பவனவும் அழ கானவையும் லேசாக இருப்பனவாகவும் கூறில்லாத நுனியுள்ள வையும் வாய்க்குள் நுழைக்க முடியாதவையும், உயிரைத் துன்புறுத் தாதவையும் அச்சமூட்டாதவையுமான விளையாட்டுப் பொருட் களை குழந்தைக்குக் கொடுக்க வேண்டும். 63

## குழந்தையை அச்சமூட்டுவது தகாது

குழந்தையை ஒருபொழுதும் அச்சுறுத்தக் கூடாது. குழந்தை அழுதாலும் புசிக்காவிடினும் மற்ற செயல்களில் சொன்ன படி கேட்காவிடினும் அச்சமயங்களில் அரக்கர்கள் பிசாசுகள் பூதனாதி கிரகங்கள் முதலியவற்றின் பெயர்களைச் சொல்லி அழைத்து அச்சுறுத்த லாகாது. 64

## குழந்தைக்குப் பால சிகிச்சை முறை

அந்தச் சிறுவனுக்குச் சுரம் முதலிய நோய்கள் ஏற்பட்டால் நோய்களையும் அந்தச் சிறுவன் வாதம் முதலான இயற்கை யமைப்பில் எந்த வகையுடலமைப்பைக் கொண்டவன் என்பதை யும் நோய்வரக் காரணம் என்ன என்பதையும் உடல் நிறத்தையும் அறிகுறிகளையும் உபசயத்தையும் (நோயைப் போக்கும் முறை) நன்கறிந்து நோய் மருந்து இடம் சமயம் இரைப்பை முதலிய வற்றின் சிறப்பனைத்தையும் நன்கு கவனித்து இனிப்பான மெத்தென லகுவான நறுமணத்துடன் கூடிய சீதவீரியமுள்ள சுகமளிக்கவல்ல உணவு மருந்து முதலியவைகளால் அவனை நன்கு கவனித்துக் கொள்ள ேண்வடும்.

மேற்கூறிய மிருதுத் தன்மையும் இனிப்புச் சுவையும் சிறுவர்களின் உடலுடன் ஒன்றுவதாக அமைந்திருக்கும்.

எனவே இவ்வகையில் அவர்களுக்குப் பணிவிடை புரிந்தால் சிறுவர்கள் கூடிய விரைவில் நலம் பெறுவார்கள்.

## மகனுடைய உடல் நலத்தைக் காக்கும் முறை

குழந்தை எவ்வித நோயுமில்லாமல் நலமாக இருந்தால் [1]ஸ்வஸ்த்தவ்ருத்தம் என்னும் முறையைப் பின்பற்ற வேண்டும்.

அந்த ஸ்வஸ்த்தவ்ருத்தம் என்பதை தேசம் காலம் உடல்களுக்குச் சம்பந்தப்பட்ட குணங்களுக்கு ஒவ்வாத குணங்களுள்ள மருந்து உணவு தேகப்பயிற்சி இவைகளைப் பழக்கம் செய்தல் தகும்.

மற்றும் தேச காலங்களுக்கு ஒவ்வாதவை பழக்கத்திலிருந்தால் அவற்றைச் சிறிது சிறிதாக முறையே அகற்றி ஒன்றிக் கொள்வனவனைத்தையும் முறையே பழக்கப்படுத்திக் கொண்டுவர வேண்டும். அவ்வாறு செய்தால் உடல் வலிவு நிறம் உடல் ஆயுள் இவையனைத்தும் நிறைவுபெறும். 65

## சிறுவனைக்காக்கும் கால வரையறை

மேற்கூறிய வகையில் சிறுவனுக்கு இளமை வந்து அறம், பொருள் இவற்றில் திறமை ஏற்படும்வரை மிக்க விழிப்புடன் காக்க வேண்டும். 66

## இவ்வாறு செய்வதற்குப் பயன்

இவ்வாறு மகனை விரும்புபவர்களின் விருப்பம் நிறைவேறச் செயல்முறைகள் விளக்கப்பட்டன. இம்முறைகளை மேலே கூறிய வரிசையில் பின்பற்றிப் பொறாமையின்றி புத்திரகாமேஷ்டி முதலிய பூஜை, ஹோமம் முதலியவைகளைச் செய்தால் எண்ணம் முழுவதும் நிறைவேறப் பெறுவான் என்பது கருத்து. 67

## இவ்வத்தியாயத்தின் பொருட் சுருக்கம்

மகனைக் கோருபவர்களின் கோரிக்கை நிறைவாக நிறைவேறுவதற்குத் தக்க முறைகள் மிக்கச் சிறப்பான பொருட்கள் சுருக்கமாக இவ்வத்தியாயத்தில் விவரிக்கப்பட்டன. அறிவாளி அந்த அந்த முறைகளைச் சிறிதும் குறைபாடில்லாமல் நிறை

---

1. ஸ்வஸ்த்தவ்ருத்தம் —இயற்கையாக உடல் நலமுள்ளவர்களிடம் நடக்க வேண்டிய முறை.

வேற்றினால் தனக்கு இஷ்டமான சந்ததி இல்லையெனும் குறை பாடின்றி விரும்பின மகவைப் பெற்று மக்கள் நடுவில் மதிப்பைப் பெறுவான். 68

**சாரீரஸ்தானச் சுருக்கம்**

இந்த ஸ்தானத்தில் தெய்வ சம்பந்தம் மனித சம்பந்தம், எல்லாவிதமான தத்துவம் ஆகியவைகளை வைத்து சாரீரத்தைப் பற்றிய ஆராய்ச்சி செய்யப்பட்டது. அதனால் இது 'சாரீரஸ் தானம்' எனக் கூறப்படும். 69

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால் பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை சாரீரஸ்தானத்தில் ''ஜாதிஸூத்ரீயம்'' என்னும் எட்டாம் அத்தியாயம் முற்றும்

— சாரீரஸ்தானம் முற்றிற்று —

# இந்திரியஸ்தானம்

## முதல் அத்தியாயம்

## *வர்ணஸ்வரீயம் இந்திரியம்

### I. நிறம்

நிறம் குரல் இவைகளைப் பற்றியதான இந்திரியத்தை (மரண அடையாளங்களை) ஆத்ரேயர் கூறியபடி விளக்கிக் கூறுவோம். 1–2

### 1. மருத்துவர் ஆய்வு செய்யவேண்டியவை

நிறம் குரல் மணம் சுவை தொடுஉணர்வு கட்புலன் செவிப்புலன் நுகர்ப்புலன் நாப்புலன் தோற்புலன் மனம் விருப்பம் தூய்மை இயல்பான நடவடிக்கை கல்வியறிவால் தோன்றிய அறிவு நினைவு தோற்றம் மாற்றம்(விக்ருதி) வாட்டம் அறிவாற்றல் மகிழ்ச்சி வறட்சி எண்ணெய்ப்பசை சோம்பல் நோயின் தொடக்கம் குருவான தன்மை லேசான தன்மை (மென்மை) பண்புகள் உணவு உடற்பயிற்சி உணவு மாற்றம் நோயின் சேர்க்கை (உபாயம்) நோயின் விலக்கம் (அபாயம்) நோய் நோயின் முன்னிலை துன்பம் உபத்ரவம் (தொல்லை) உடல்காந்தி (பௌதிகமான சாயை) உடல் சாயை மாற்றம் கனவுகாணுதல் அனுப்பப்பட்ட தூதுவர்கள் வழியில்

---

* நிறம் குரல் இவைகளைப் பற்றிய தான மரண அறிகுறிகளை விளக்குவதால் இவ்வத்யாயம் இப்பெயர் பெற்றது.

** சிகிச்சை செய்ய வேண்டிய இடமான உடலைச் சரீரஸ்தானத்தில் விளக்கிவிட்டு உடனே சிகிச்சை முறைகளைக் கூறுவது முறை. ஆனால் சிகிச்சை என்பது நோய்களுக்கேயாகும். நோய் தீர்க்கக் கூடியது தீர்க்க இயலாதது என இருவகைப்படும். சில அடையாளங்களைக் கண்டுதான் நோய் தீர்க்கவல்லது தீர்க்க இயலாதது என முடிவுசெய்யமுடியும். இந்திரம் என்றால் பிராணன் (உயிர்) அதற்கு அழிவேற்படுவதைக் குறிப்பது இந்திரியம். இந்திரியம் அல்லது ரிஷ்டம் அரிஷ்டம் அதாவது மரண அறிகுறி எனப்படும். அதைப்பற்றி விளக்கும் பகுதி இந்திரியஸ்தானம் என வழங்கப்பட்டது.

உண்டான சகுனங்கள் மற்றும் நோயாளியின் இருப்பிடத்திலுள்ள நிலைமாற்றங்கள் மருத்துவரின் முயற்சி மருத்துவர் அளித்த மருந்து செயலாற்றாமை ஆகியவற்றை நோயாளியின் ஆயுளை அறிய விரும்பும் மருத்துவர் காட்சி அளவையைக் கொண்டும் அநுமான அளவையைக் கொண்டும், பெரியோரின் நல்லுரை களாகிய சொல்லளவையைக் கொண்டும் நன்கு ஆய்வு செய்ய வேண்டும். 3

### 2, மரண அறிகுறிகளின் தன்மைகளும் ஆய்வு செய்யும் வகையும்

மேலே கூறப்பட்ட ஆய்வு செய்ய வேண்டிய ரிஷ்டங்களில் (மரண அறிகுறிகளில்) சில நோயாளியிடம் இல்லாதவை, வேறு சில நோயாளியிடம் உள்ளவை.

நோயுற்றவரிடம் காணப்படாத மரண அறிகுறிகளைச் சான்றோர்களின் நல்லுரைப்படியும் பகுத்தறிவுகொண்டும் மருத்துவர் ஆய்வு செய்ய வேண்டும்.

நோயுற்றவரிடம் காணப்படும் ரிஷ்டங்களை (மரண அறிகுறிகளை) ப்ரக்ருதி (இயல்பு) விக்ருதி(மாற்றம்) ஆகிய இரண்டையும் காட்சி அளவையும் கொண்டும் மருத்துவர் ஆய்வு செய்ய வேண்டும். 4

### 3. இயல்பான மரண அறிகுறிகளின் பிரிவுகள்

இயல்பான மரண அறிகுறி சாதி பிறந்தகுலம் நாடு காலம் வயது ஆன்மா என இவைகளால் அறுவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவ்வாறாகப் பிரிக்கப்பட்ட பிரகிருதி குறிப்பிட்ட மனிதர்களிடம் தூய்மை தூய்மையின்மை போன்ற பண்புகளாக ஆகின்றன.

### 4. செயற்கை மரண அறிகுறிகளின் பிரிவுகள்

செயற்கையாகிய மரணஅறிகுறி இலட்சணத்தைப் பற்றியது, இலட்சியத்தைப் பற்றியது காரணத்தைப் பின்பற்றியது என மூன்றுவகைகளாகப் பிரிக்கப்படும்.

### 5. இலட்சணத்தைப் பற்றியது

இலட்சணத்தைப்பற்றிய விக்ருதி மனிதர்களின் உடலில் வினைப்பயன் ஆக (இலட்சணமாக) அமைந்து சில மாற்றங்களுக்குக் காரணமாகின்றது. உடலில் பொருந்தியுள்ள இலட்சணங்கள் அவ்வப்போது நிலையான தன்மையை அடைந்து

சில தீமைகளை விளைவிக்கும் மாற்றங்களை (விக்ருதிகளை) உண்டாக்குகின்றன.

## 6. இலட்சியத்தைப் பற்றிய விக்ருதி (இலக்கு)

இலட்சியத்தைப்பற்றிய விக்ருதிகள் நிதானஸ்தானத்தில் கூறியபடி மனிதனின் உடலில் சில மாற்றங்களுக்குக் காரணங்களாகின்றன. அதாவது க்ஷாரங்களைப்(காரப்பொருட்கள்) பருகுவதால் வாதத்தின் சீற்றம் ஏற்படுகிறது என்பது போன்றவை, இலட்சியத்தைப் பற்றிய விக்ருதிக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

## 7. நிமித்தாநுகாரிணி என்னும் விக்ருதி (காரணத்தை பின் பற்றியது)

காரணத்தை அநுசரிப்பது அதாவது தான் காரணமாகாவிடினும் காரணத்தைப்போல் அமைவது என்பதாம். மருத்துவர்கள் சில நிமித்தங்களை அவை ஆயுளுக்குக் காரணமாகாவிடினும் அவற்றைக் காரணம்போல் கருதி ஆயுளின் அளவையைக் கணிக்கின்றனர். மேலும் அந்த விக்ருதியை ஆயுள் குறைவுக்குக் காரணம் என்றும் சவத்தின் குறி என்றும் கருதுகின்றனர். அறிஞர்கள் அத்தகைய விக்ருதியை நோயாளியின் ஆயுள் அளவையை அறியப் பயன்படுத்துகின்றனர்.

சாவின் வாயில் உள்ள மனிதர்களை அடைந்து இலட்சணங்களாக உள்ள அந்த விக்ருதிகளைப்பற்றி பின்பு விரிவாகவிவரித்துக் கூறுவோம். 5–7

## 8. உடலின் இயற்கை நிறங்கள்

முதலில் நிறத்தைப் பற்றிக் கூறுவோம். கருமை மாநிறம் கருமை கலந்த வெண்மை வெண்மை என்பன உடலின் இயற்கை நிறங்கள். நிறங்களின் மாற்றம் சாதி வசிக்குமிடம் ஆகியவற்றை உணர்ந்த அறிஞர்கள் உடலில் உள்ள மற்ற நிறங்களை அருகில் சென்று ஊன்றிக் கவனித்து ஒப்புநோக்கி உடலின் இயற்கை நிறங்களைக் கணிக்க வேண்டும். 8

## 9. உடலின் செயற்கை நிறங்கள்

நீலம் கருமை செம்மை பசுமை வெண்மை ஆகியவை உடலின் செயற்கையான நிறங்களாகும். அறிஞர் அங்கு காணப் படும் பிற நிறங்களையும் உற்று நோக்கி ஒப்புமையுடன் கவனித்து

---

ஃநிமித்தாநுகாரிணி – காரணத்தை அநுகரிப்பது.

முன்பு இல்லாதவை இப்போது இவை தோன்றின என்றுஆராய்ந்து உடலின் இயற்கை செயற்கை நிறங்களை அறிய வேண்டும். 9

## 10. மரண அறிகுறியான நிறங்கள்

இயற்கை நிறங்கள் பாதி உடலிலும் மாறுபட்ட நிறங்கள் பாதி உடலிலும் இவ்விரு இயற்கை செயற்கை நிறங்கள் பிரிக்க முடியாத நிலையிலும் இதுபோல இந்நிறங்கள் இடப்பக்கமும் வலப்பக்கமும் கிழக்கு மேற்காகவும் மேற்பகுதி கீழ்ப்பகுதிகளிலும் உட்பகுதியிலும் வெளிப்பகுதியிலும் நோயுற்றவனின் சரீரத்தில் காணப்படின் அது மரணத்தின் அறிகுறி என அறிய வேண்டும்.

இதுபோல் நிறமாற்றம் முகத்திலும் வேறு இடங்களிலும் இருந்தாலும் அது நோயாளியின் மரணத்தை அறிவிக்கும் அடையாளமாகும்.

நிறமாற்றம் போன்றே வாட்டம் மகிழ்ச்சி கடினத்தன்மை எண்ணெய்ப்பசை ஆகியவற்றின் மாற்றங்களும் நோயாளியின் மரண அடையாளங்களே ஆகும். 10

அப்படியே நோயுற்றவனின் முகத்தில் மறு வங்கு சிறிய மச்சம் சிறுகட்டி ஆகியவற்றில் ஏதேனும் ஒன்று தோன்றினாலும் அது அவனுக்கு நன்மையை அளிக்காது என்பதனை அறிய வேண்டும். 11

நகம் கண் முகம் சிறுநீர் மலம் கை கால் உதடு இவற்றுள் ஒன்றில் செயற்கையாகத் தோன்றிய நிறமாற்றம் அம்மனிதனின் ஆயுள் குறைவுக்கு அடையாளமாகும். 12

மேலும் முன்பு இல்லாமல் திடீரெனக் காரணமின்றித் தோன்றிய நிறபேதம் அம்மனிதனின் மரண அறிகுறி என்பதாக மருத்துவர் அறிய வேண்டும். இவ்வாறு நிறம் குரல் இவைகளைப்பற்றிய மரணக்குறிகள் இறக்கப்போகின்றவனுடைய உடலில் தோன்றுவதை அறிந்துகொள்வதற்காக முறைப்படி கூறப்பட்டன. 13

வர்ணாதிகாரம் முற்றும்

## II. குரல்

### இயற்கைக்குரல்

அன்னம் கிரௌஞ்சம் தேர்ச்சக்கரம் பேரிவாத்தியம் கலவிங்கம் என்னும் பறவை காக்கை புறா ஜர்ஜரம் என்னும் இசைக்கருவி ஆகிய் இவற்றின் ஒலியைப் போன்றது மனிதனின் இயற்கைக் குரல் ஆகும்.

அறிஞர்கள் இவை போன்று வேறானவற்றையும் ஊன்றிக் கவனித்து ஒப்புநோக்கி இயற்கைக் குரலை அறிந்துகொள்ள வேண்டும். இங்கு விவரிக்கப்படாதது இயற்கையினின்று மாறுபட்டிருந்தாலும் திடீரென்று தோன்றினாலும் இது மரணக்குறி என்று அறியவேண்டும். நோயாளியின் குரல் செம்மறிஆட்டின் குரல் போலவும் நெருக்கப்படுவதுபோலவும் வெளிவந்தாலும் விட்டு விட்டு வருவதுபோல் ஒலி செய்தாலும் அவை இயற்கையினின்றும் மாறுபட்டனவெனவும் மரணக்குறி எனவும் அறியவும்.

இயற்கை செயற்கை குரல்கள் விரைவில் மாறுவதும் பல குரல்கள் ஒன்றாக ஆவதும் ஒன்று பலவாக மாறுவதும் சிறப்புடையவையல்ல. 14–15

நோயாளியின் உடலில் செயற்கை நிறம் பாதி உடலிலோ முழு உடலிலோ எத்தகைய காரணமுமின்றித் தோன்றுவதும் நோயுற்றவனின் முகத்தில் நீலம் தாமிரநிறம் கருமை சிவப்பு ஆகியவை தோன்றி முகத்தின் ஒரு பாதி ஒரு நிறமாகவும் மற்ற பகுதி வேறு நிறமாகவும் காணப்படுவதும் நோயுற்றவனுக்கு நல்லதல்ல. இவ்வாறு நிறம் குரல் இவைகளைப்பற்றிய மரணக் குறிகள் இறக்கப்போகிறவன் உடலில் தோன்றுவதை நன்கு அறிந்துகொள்வதற்காகக் கூறப்பட்டன. 16–18

முகத்தின் ஒரு பாதியில் எண்ணெய்ப்பசை நன்கமைந்து வேறு பாதியில் கடினத்தன்மை தோன்றினாலும்

முகத்தின் ஒரு பாதியில் வாட்டமும் மற்றொரு பாதியில் மகிழ்ச்சியும் தோன்றினாலும் அவை மரண அறிகுறிகளாகும். 19

மச்சங்கள் மறு வங்குகள் பலவிதமான வரிசை வரிசையான கோடுகள் ஆகியவை உயிர் விடப்போகும் மனிதனுக்குத் தோன்றுவனவாகும். 20

நகம் பற்களில் பூவிழுதல் (வெண்புள்ளி தோன்றுதல்) அதிகமான அழுக்கு (ஊற்றை) பற்களில் சேர்தல் பற்களில் உடைப்பு ஏற்படுதல் ஆகியவை மரண அறிகுறிகள். 21

வலிமைகுன்றிய நோயாளியின் உதடு கால் கை கண் சிறு நீர் மலம் நகம் ஆகிய இடங்களில் ஏற்படும் நிறமாற்றம் மரணத்தை முன்னறிவிக்கும் அடையாளம். 22

நோயாளியின் இரண்டு உதடுகளும் நாவற்பழம் போன்று கறுத்துக் காணப்படின் அவன் ஆயுள் முடிந்து இறந்துவிடுவான் என்பதை அறிஞனாகிய மருத்துவன் அறிய வேண்டும். 23

செயற்கையாக எத்தகைய காரணமும் இன்றி ஒரு குரலோ பலகுரல்களோ தோன்றுமாயின் ஒருவனுக்கு விரைவில் மரணம் ஏற்படும் என்பதனையும் அறிக. 24

இதுபோல் வலிமையும் மாமிசமும் இழந்து மெலிந்துள்ள நோயாளிக்குக் குரல் நிறம் ஆகியவை மாறினால் அந்தநோயாளி விரைவில் மரித்துவிடுவான் என்பதனை அறிய வேண்டும். 25

ஸ்வராதிகாரம் முற்றும்

**முடிவுரை**

இவ்வாறு நிறம் குரல் பற்றிய மரண அறிகுறிகளை விளக்கினோம். இவற்றை நன்றாக அறிந்தவனுக்கு நோயாளிகளின் ஆயுளை அறிவதில் எத்தகைய தடங்கலும் ஏற்படாது.

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை
இந்திரியஸ்தானத்தில் ''வர்ணஸ்வரீயம் இந்திரியம்''
எனும் முதல் அத்தியாயம் முற்றும்

## இரண்டாவது அத்தியாயம்

## *புஷ்பிதகம் இந்திரியம்

''புஷ்பிதகம் இந்திரியம்'' என்பது பற்றி ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி விவரித்துக் கூறுவோம். 1–2

### 1. மரணக்குறியும் மலரும்

தோன்றப்போகும் பழத்திற்கு மலர் முதல் நிலையாக இருந்து முன்னறிவிப்பது போன்று மரணமடையப்போகிறவனுக்கு மரண அறிகுறிகள் முதல் நிலையாக இருந்து அவன் மரணத்தைத் தெரிவிக்கும். 3

### I. மணம்

### 2. மரண அறிகுறிக்கும் மரணத்துக்கும் உள்ள தொடர்பு

மல்லிகை முதலிய தாவரங்கள் பூத்தாலும் காய்க்காதவை; அதுபோல அத்தி ஆல் அரசு போன்றவை காய்த்தாலும் பூக்காதவை. இவ்வுடலில் தோன்றும் மரண அறிகுறிகள் (ரிஷ்டம்) மரணமின்றி அழிவதில்லை. அதாவது மரண அறிகுறி இன்றி ஒருவனுக்குச் சாவு என்பது ஏற்படாது. 4–5

### 3. மருத்துவர் குற்றம்

உண்மையாக மரணக்குறியல்லாதவற்றையும் சில ஒப்புமைகளைக் கண்டு மரண அறிகுறி என்று மருத்துவர் மயங்கினாலும் அல்லது நோயாளி இறந்தும் மருத்துவனுக்கு மரணக்குறிகளைப் பற்றிய உண்மையறிவு உண்டாகவில்லை என்றாலும் இரண்டுக்கும் மருத்துவரின் அறிவின்மையே காரணமாகும். 6

மரணத்திற்கு முன்பாக மனிதனின் உடலில் தோன்றும் பற்பல மரணக்குறிகளை நன்கு அறிந்துகொள்வதற்காக மணமாகிய அறிகுறிகள் பற்றிப் பலவாறு இனி விவரித்துக் கூறுவோம். 7

---

*புஷ்பிதகம்இந்தரியம் –புஷ்பம் என்றால் மலர். அம்மலரிலிருந்து தோன்றும் மணம் புஷ்பிதம். அம்மணமாகிய மரண அறிகுறியை விளக்கும் அதிகாரமானதால் இவ்வத்தியாயம் இப் பெயர் பெற்றது.

பலவகையான மரங்கள் செடிகள் கொடிகள் நிறைந்துள்ள காட்டில் பலவகையான மலர்களின் மணம் கமழ்வது போல

இரவும் பகலும் ஒருவனுடைய உடலில் பலவகையான மரண அறிகுறியாகிய மணம் வீசுமாயின் அவன் ஓராண்டுக்குள்ளாக இவ்வுடலை விட்டுவிடுவான் (இறந்துவிடுவான்) என்பது உறுதி. 8–9

இவ்வாறு ஒருவரது உடலில் தோன்றி வீசும் மணம் தனித் தனியாக மலர்ந்துள்ள பல மலர்களின் மணத்துடன் ஒத்திருக்கு மாயின் அம்மணம் நறுமணமாயினும் கெட்ட மணமாயினும் அம் மனிதனை புஷ்பிதன் அதாவது மணமாகிய மரணக்குறி உடைய வன் என்பதையும்

நோயாளியின் உடலில் ஒரு மொத்தமாகவோ தனித்தனி யாகவோ கெட்ட மணம் வீசுவதை உணர்ந்து அவன் மணமாகிய மரணக்குறி உடையவன் என்பதையும் அம்மருத்துவன் அறிய வேண்டும். 10–11

குளித்தாலும் குளிக்காவிடினும் நோயாளி யின் உடலில் தக்க காரணமின்றி நறுமணமும் கெட்ட மணமும் மாறிமாறி வீசுமாயின் அந்நோயாளி புஷ்பிதன் (மரணக்குறி யுடையவன்) ஆவான். 12

உதாரணமாக சந்தனம் கோஷ்டம் க்ரந்திதகரம் அகில் தேன் மாலை இவைகளின் மணம் நறுமணமாகும். சிறுநீர் மலம் இறந்த பிராணிகளின் சடலங்கள் மனிதனின் உடல் ஆகியவற்றின் மணம் கெட்டமணமாகும். 13

மற்றும் பலவிதமான மணங்கள் பல காரணங்களைக்கொண் டவை. அத்தகைய மணங்களையும் அனுமானத்தால் மரணக்குறி களாக அறிய வேண்டும். 14

மணத்தைப் பற்றி வேறு சில லட்சணங்களையும் கூறுவோம். பொதுப்படையாக அக்குறிகளை மருத்துவர்கள் நன்கு உணர்ந்து நோயாளிக்கு வரப்போகும் மரணத்தைப்பற்றி கூறவேண்டும். 15

எத்தகைய காரணமுமின்றி நிலையான நோயாளியின் உடலில் நல்லவையும் கெட்டவையுமான மணங்கள் வீசத் தொடங்கு மாயின் அவன் ஓராண்டுக்குள் இறந்துவிடுவான். 16

மணத்தைப்பற்றிய விளக்கம் முற்றும்

## II. சுவை

இதுவரை மணமாகிய மரணக்குறியைப் பற்றிக் கூறினோம். இனி நோயுற்றவனின் உடலில் தோன்றும் சுவையாகிய மரண அறிகுறியை (ரிஷ்டம்) பற்றி முறைப்படி விளக்குவோம். 17

நல்ல நிலையில் உள்ள மனிதர்களின் உடலில் உள்ள சுவை அவர்களின் இறுதிக்காலத்தில் இரண்டுவிதமான மாற்றத்தை அடைகிறது. 18

மனித உடலில் உள்ள சுவைகளில் சில மிகவும் கெட்டவைகளாகவும் வேறுசில சுவைகள் மிகவும் நன்மையுடையவைகளாகவும் ஆகின்றன. 19

ஒரு மனிதனுடைய உடலில் உள்ள சுவையை மருத்துவர் எவ்வாறு உணரமுடியும்? சுவை என்பது நாப்புலனால் உணரக்கூடியது. நோயாளியின் உடலை மருத்துவர் நாவினால் சுவைக்க இயலாது. ஆதலின் அச்சுவையை அநுமானத்தால் மாற்றமடைந்ததாக அறிந்துகொள்ள வேண்டும். 20

மரணமடையப்போகும் மனிதனின் உடலிலிருந்து வரும் கெட்ட சுவையால் ஈக்கள் பேன்கள் புழுக்கள் கொசுக்கள் ஆகியவை விலகிச் சென்றுவிடும். 21

காலத்தால் பக்குவமானதும் நீராட்டப்பட்டு மணப்பொருள்களால் பூசப்பட்ட நற்சுவையுள்ள நோயாளியின் உடலில் ஈக்கள் ஈர்க்கப்பட்டு மொய்க்கின்றன. 22

சுவையைப்பற்றிய விளக்கம் முற்றும்

### முடிவுரை

பொதுவாக மணம் சுவை பற்றிய மரண அறிகுறிகளை விளக்கினோம். மருத்துவர் இவற்றை நன்கு கவனித்து நோயுற்றவனின் மரணத்தைக் கவனிக்க வேண்டும். 23

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை இந்திரிய
ஸ்தானத்தில் 'புஷ்பிதகம் இந்திரியம்' எனும்
இரண்டாவது அத்தியாயம் முற்றும்

## மூன்றாவது அத்தியாயம்

# *பரிமர்சனீயம் இந்திரியம்

''பரிமர்சனீயம் இந்திரியம்'' என்னும் மரணக்குறியைப்பற்றி ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி விவரித்துக் கூறுவோம். 1–2

நிறம் குரல் மணம் சுவை ஆகியவைபற்றிய மரணக்குறிகளை தனித்தனியாக விளக்கிக் கூறினோம். இனி தொடுஉணர்வு (ஸ்பரிசம்) ஆகிய மரணக்குறி பற்றி விளக்குவோம். 3

### 1. தொடுஉணர்வால் மரணத்தைப்பற்றி அறிதல்

தொடு உணர்வால் நோயாளியின் ஆயுளை அறிய விரும்புபவர் இயற்கையான நிலையில் உள்ள தம் கையாலோ அல்லது மற்றவரைக் கொண்டோ நோயாளியின் உடல் முழுவதையும் தொட்டுப்பார்க்கவேண்டும். அவ்வாறு தொடு உணர்வால்சோதிக்கும்பொழுது நோயாளியின் உடலில் மேலே கூறப்படும் தன்மைகளை கவனித்துப் பாரீக்கவேண்டும்.

1. எப்போதும் துடித்துக் கொண்டுள்ள உடலில் சில உறுப்புகள் துடிக்காமல் இருத்தல்.
2. எப்போதும் சூடாக உள்ள சில உறுப்புகள் குளிர்ச்சியடைதல்.
3. மென்மையானவை கடினமாகுதல்.
4. வழவழப்பானவை சொரசொரப்பாகுதல்.
5. நோயாளியின் விதைகள் (ஆண்குறி) தொடு உணர்வுச் சோதனையின்போது இல்லாதவை போன்று தோற்றமளித்தல்.
6. பூட்டுகள் நழுவுதல் விலகுதல் உருவம் மாறுதல்.
7. மாமிசம் இரத்தம் இவை சுண்டி விடுதல்.
8. வியர்வை இல்லாமை அதிகம் உண்டாவது அல்லது கடினத்தன்மை.
9. உடல் அசையாமை.

---

*பரீமர்சனீயம்— பரிமர்சம் என்பது தொடுஉணர்வு. தொடுவுணர்வால் அறியப்படும் மரணக்குறியைப் பற்றிக் கூறுவதால் இவ்வத்தியாயம் இப்பெயர்பெற்றது.

இவை போன்ற மாற்றங்கள் காரணமின்றி ஏற்படுமாயின் அவை தொடு உணர்வால் அறியப்படும் பொதுவான மரணக்குறி களாகும். 4

## 2. விரைவில் இறப்பவனுக்கு தோன்றும் அறிகுறிகள்

தனித்தனியாக சோதித்துப் பார்க்கும்போது உள்ளங்கால் முழங்கால் தொடை இடை வயிறு விலாப்பக்கம் புட்டம் கை கழுத்து தாள்கள் உதடுகள் நெற்றி ஆகிய இடங்களில் வியர்த்தும் குளிர்ச்சியாகவும் அசைவற்றும் கடினமாகவும் மாமிசம் இரத்தம் இழந்தும் உணரப்படின் அத்தகைய நோயாளி விரைவிலேயே இறந்துவிடுவான் என அறியவேண்டும். 5

அவ்வாறு மருத்துவர் சோதிக்கும்போது நோயுற்றவனின் கணுக்கால் முழங்கால் தொடை ஆஸனவாய் விதைகள் ஆண் குறி தொப்புள் தோள் மார்பகம் மணிக்கட்டு விலாப்பக்கம் தாடை மூக்கு காது கண் புருவம் நெற்றிப்பொட்டு ஆகியவை நழுவியும் விலகியும் நகர்ந்தும் இருக்குமாயின் அந்த நோயாளி விரைவிலேயே இறந்துவிடுவான் என அறியவேண்டும் 6

அவ்வாறே மருத்துவர் அவனுடைய மூச்சு கழுத்துப்பக்க முள்ள இரண்டு தமனிகள் (இரத்தக்குழாய்கள்) பற்கள் இரப்பைகள் கண் தலைமுடி உடலிலுள்ள மயிர்கள் வயிறு நகங்கள் விரல்கள் ஆகியவற்றையும் சோதித்துப் பார்க்கவேண்டும். 7

அவனுடைய மூச்சு மிக்க நீண்டோ மிகக்குறுகியோ இருக்குமாயின் அவன் விரைவில் இறந்துவிடுவான் என அறிக. 8

அவனுடைய கழுத்துப்பக்கமுள்ள இரு தமனிகளும் தொட்டுப் பார்க்கும்போது துடிக்காமல் இருந்தாலும் அவனுடைய பற்கள் அழுக்கடைந்தவைகளாகவும் வெண்மையாகவும் பிசுபிசுப்பு உடையவைகளாகவும் காணப்பட்டாலும் அவன் விரைவிலேயே உயிர் துறப்பான் எனத் தெரிந்துகொள்க. 9–10

## 3. கண்களில் காணப்படும் மரணக்குறிகள்

ஒருவனுடைய இரைப்பைகள் சடைகட்டியிருக்குமாயினும் அவன் விரைவில் இறப்பான். 11

ஒருவனுடைய கண்கள் இயற்கையான தன்மையிலிருந்து விலகி மாற்றமடைந்து அதிகமாக உள்ளடங்கியும் மிகுதியாக வெளி வந்தும் அதிகம் சுருங்கியும் ஒன்று விரிந்தும் மற்றொன்று

சுருங்கியும் மிகவும் கட்டு அவிழ்ந்தும் அதிகமாகக் கண்மூடித் திறந்தும் எப்போதும் மூடிக்கொண்டே இருந்தும் எப்போதும் திறந்துகொண்டே இருந்தும் அதிகமாக கண்சிமிட்டியும் மயக்கப் பார்வையும் விபரீதப்பார்வையும் பார்வைக்குறைவும் [1]கீரிக் குருடு [2]புறாக்குருடு தணலைக் கருமை மஞ்சள் நீலம் மாநிறம் தாம்ரநிறம் பசுமை மஞ்சள் கலந்த வெண்மை ஆகிய நிறங் களாகவும் காணப்பட்டால் அக்குறிகளை உடையவன் விரை வில் இறப்பான் என்று அறிய வேண்டும். 12

நோயாளியின் தலை முடிகளையும் உடலில் உள்ள உரோமங் களையும் பற்றி இழுக்கும்பொழுது சுலபமாக வந்தாலும் அவ் வாறு களையும்போது நோயாளிக்குச் சற்றும் வலி ஏற்படாதிருந் தாலும் திடீரென்று வெண்நிறம் அடைந்தாலும் இத்தகைய குறி உள்ளவன் விரைவில் இறந்துவிடுவான் என அறிய வேண்டும். 13

நோயாளியின் வயிற்றில் கருமை தாமிரநிறம் நீலம் மஞ்சள் வெண்மை ஆகிய நிறமுள்ள நரம்புகள் காணப்படுமாயின் அவன் விரைவில் இறந்துவிடுவான் என உணரவேண்டும். 14

நோயாளியின் நகங்கள் மாமிசம் இரத்தம் இவை இழந்தும், பழுத்த நாவற்பழநிறத்துடனும் இருந்தால் அவன் சீக்கிரமே அழிந்துவிடுவான் என அறிய வேண்டும். 15

நோயாளியின் விரல்களைப் பரீட்சித்துப்பார்க்கும் மருத்துவர் விரல்களை இழுத்துப் பார்க்கும்போது சொடுக்கு ஏற்படாவிட் டால் அவன் உயிர்துறப்பான் என்று அறிந்துகொள்ள வேண்டும். 16

## 4. முடிவுரை

இவ்வாறு தொடு உணர்வால் அறியப்படும் பலவற்றையும் மருத்துவர் நோயாளியைத் தொட்டுப்பார்த்து நன்றாக உணர வேண்டும். அப்போது நோயாளியின் ஆயுளைப் பற்றிய அறிவில் மருத்துவருக்கு எத்தகைய மயக்கமும் ஏற்படாது.

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை இந்திரிய
ஸ்தானத்தில் 'பரிமர்சநீயம் இந்திரியம்' எனும்
மூன்றாவது அத்தியாயம்முற்றும்.

---

(1) கீரிக்குருடு – கீரிக்குப் பகல் நேரத்தில் எல்லா நிறங்களும் வெண்மையாகப் புலப்படும்.
(2) புறாக்குருடு – புறாவிற்குப் பகலில் எல்லாநிறங்களும் கருமை யாகத் தெரியும்.

## நான்காம் அத்தியாயம்

# *இந்திரியாநீகம் இந்திரியம்

'இந்திரியாநீகம் இந்திரியம்' என்னும் மரணக்குறி பற்றி ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி விவரித்து உரைப்போம். 1–2

மனித உடற்கூறுகளை நன்கு உணர்ந்த மருத்துவர் நோயுற்ற மனிதர்களின் ஆயுள் அளவை அறிய விரும்பினால் மனிதர்களின் புலன்களைச் சோதித்துப் பார்க்க வேண்டும். அதைப்பற்றி இனி கூறுவோம். 3

உண்மையை உணரவேண்டுமானால் கட்புலன் முதலியவற்றை அனுமான அளவையைக் கொண்டு சோதிக்க வேண்டும். அப்போதுதான் உண்மையான அறிவு ஏற்படும். புலன்கள் என்பவை புலன்களுக்குப் புலப்படாதவை. ஆகவே [1]அனுமான அளவையால்தான் அவற்றைச் சோதிக்க வேண்டும். 4

நன்னிலையில் உள்ளவனின் (கண் காது மூக்கு நாக்கு தோல் எனும்) வெளிப்புலன்களிலிருந்து தோன்றிய அறிவு எத்தகைய காரணமுமின்றி விகாரமடைந்தால் அது மரணக்குறியாகும். 5

புலன்களிலிருந்து தோன்றும் அறிவு மாற்றத்தை அடைதலாகிய மரணக்குறி பொதுவானது. அதைப்பற்றி இனி விவரித்துக் கூறுவோம். 6

---

*இந்திரியாநீகம் இந்திரியம் – இந்திரியங்கள் என்பன அறிவுப் புலன்களைக் குறிக்கும். அநீகம் என்றால் கூட்டம். வெளிப்புலன்களாகிய கண் காது மூக்கு நாக்கு தோல் ஆகியவற்றில் தோன்றும் மரணக்குறிகளை விளக்கும் அத்தியாயமாதலின் இப்பெயர் பெற்றது.

1. அனுமான அளவை – காரணத்தைக் கொண்டு ஒன்றை ஊகித்து அறிதல்.

## 1. கட்புலனில் அறியத்தக்க மரணக்குறி

ஆகாசத்தைக் கடினமான நிலத்தைப் போன்றும் நிலத்தை ஆகாயத்தைப்போன்றும் விபரீதமாகத் தலைகீழாக நேர்மாறாகக் காணும் நோயாளி மரணத்தை அடைவான். 7

ஆகாயத்தில் வீசிக்கொண்டிருக்கும் உருவமற்ற காற்று நோயாளியின் கண்ணுக்குப் பொருளாகி உருவமாகக் காணப்படினும் எரிந்து கொண்டுள்ள நெருப்பு கண்களுக்குப் புலப்படாமற் போனாலும் அவன் இறந்துவிடுவான். 8

நோயாளி சிறிதும் கலங்காத தெளிவான நீரில் அது தேங்கியிருந்தாலும் பெருகிக் கொண்டிருந்தாலும் வலையேதும் உண்மையில் இல்லாதபொழுது வலை உள்ளது போல் காண்பானாயின் அவன் விரைவில் இறப்பான். 9

விழித்துக்கொண்டுள்ள போதே பிணங்களையும் அரக்கர்களையும் அத்தகைய வேறுவேறான பலவகை அற்புதங்களையும் காண்பவன் பிழைத்திருக்க மாட்டான். 10

இயற்கையாக உள்ள நெருப்பை நீல நிறமுள்ளதாகவும் ஒளியற்றதாகவும் கருமை நிறமுள்ளதாகவும் அல்லது வெண்மை நிறமுடையதாகவும் காண்பானாயின் அவன் அவ்வாறு கண்ட எட்டாம் நாளில் இறப்பான். 11

ஆகாயத்தில் மேகங்கள் இல்லாதபோது உள்ளனவாகவோ மின்னல்கள் உள்ளனவாகவோ காண்பவன் மரணத்தை அடைவான். 12

வானத்தில் விளங்கும் தூய்மையான சூரிய சந்திரர்கள் கருப்பான ஆடைகளால் சுற்றப்பட்டவர் போன்றும் மண்பாண்டங்கள் போன்றும் நோயுற்றவனுக்குப் புலப்படுவராயின் அவன் மரணமடைவான். 13

பௌர்ணமி அமாவாசையல்லாத நாட்களில் சந்திரசூரியர்களின் கிரணங்களைக் கண்ட நோயுற்றவன் நோயில்லாமல் நன்னிலையில் உள்ளவன் எனும் இருவரும் இறந்து போவர். 14

இரவில் சூரியனையும் பகலில் சந்திரனையும் நெருப்பின்றிப் புகையையும் இரவில் ஒளியில்லா நெருப்பையும் காண்பவன் இறப்பான். 15

ஒளிறும் பொருள்களை ஒளியற்றவைகளாகவும் ஒளியற்றவைகளை ஒளிறும் பொருள்களாகவும் இது போன்று மற்ற பொருள்களிலும் மாற்றங்களைக் காண்பவன் விரைவில் உயிரைத் துறப்பான். 16

ஆயுள் முடியும் தருவாயிலுள்ள மக்கள் தாம் காணும் பொருள் களைப் பல உருவமைப்புகள் கொண்டவைகளாகவும் முரணான நிறமுடையனவாகவும் முரண்பட்ட எண்ணிக்கை கொண்டன வாகவும் எத்தகைய தக்க காரணமின்றியே காண்பர். 17

கட்புலனால் உருவமற்றவகைகளைக் காண்பவரும், உருவ முள்ளவைகளைக் காண இயலாதவரும் நிச்சயமாக விரைவிலேயே யமனுலகு செல்வர். 18

## 2. செவிப்புலனில் உணரத்தக்க மரணக்குறி

ஒலி அல்லாததை ஒலியாகச் செவியால் உணர்பவனும் ஒலி யைச்செவிப்புலனால் உணராதவனும் பிணத்தைப் போன்றவ னாவான் என்றே அறிய வேண்டும். 19

தன் விரல்களினால் காதுகளை மூடிக்கொண்டபிறகு 'ஒய்', 'ஒய்', என்று கேட்க வேண்டிய ஒலியைக் கேட்க முடியாத நோயாளி விரைவில் மரணமடைவான். ஆகவே மருத்துவர் அவனைக் கைவிட்டுவிட வேண்டும். 20

## 3. நுகர்ப்புலனான மூக்கிலிருந்து அறியப்படும் மரணக்குறி

நறுமணத்தைக் கெட்ட மணமாகவும் கெட்ட மணத்தை நறுமணமாகவுமுணர்ந்தாலும் அல்லது மணத்தை நுகர்ந்தும் ஒன்றும் அறியப்படாமல் இருந்தாலும் அவன் இறந்து விடுவான் என அறிய வேண்டும்.

## 4. சுவைப்புலனான நாக்கிலிருந்து அறியப்படும் மரணக்குறி

பித்தம் முதலிய தோஷங்கள் இன்றியே இனிப்பு கார்ப்பு உவர்ப்பு துவர்ப்பு கைப்பு புளிப்பு ஆகிய சுவைகளை உள்ளது உள்ளவாறு உணர முடியாமலும் அல்லது முற்றிலும் சுவையை உணரமுடியாமலும் உள்ளவனைச் சாவின் வாயிலில் நிற்பவனாக அறிய வேண்டும்.

## 5. தோற்புலனிலிருந்து உணரப்படும் மரணக்குறி (அ) தொடு உணற்புலனிலிருந்து உணரப்படும் மரணக்குறி

சூடு குளிர்ச்சி சொரசொரப்பு வழவழப்பு கடினத்தன்மை உள்ள பொருள்களைத் தொட்டுப்பார்த்தும் உள்ளவாறு சரியாக உணராமல் சூட்டைக் குளிர்ச்சியாகவும் குளிர்ச்சியைச் சூடாக வும் சொரசொரப்பானதை வழவழப்பானதாகவும் இ வ் வா று முரணாக உணர்பவன் விரைவில் இறப்பான் என்று அறிக. 21–23

## 6. எல்லாப் புலன்களாலும் அறியப்படும் மரணக்குறிகள்

கடுமையான தவமியற்றாமலும் முறைப்படியோக சாதனைகள் புரியாமலும் புலன்களுக்குப் புலனாகாதவற்றை அறிய முயல்பவன் அல்லது புலன்களினாலேயே பார்க்க முயல்பவன் விரைவில் இறந்துவிடுவான். 24

புலன்களின் இயல்பான உணர்தலாகிய ஆற்றலின்றியும் வாதம் பித்தம் முதலிய எத்தகைய தோஷங்கள் இல்லாமலேயும் புலன்களினால் உணர இயலாத பொருள்களை உணர்பவன் நீண்டநாள் பிழைத்திருக்கமாட்டான். 25

அறிவின் மாற்றத்தினால் புலன்களின் பொருள்களை முரணாகக் காணும் நல்ல நிலையில் உள்ளவர்களும் அதாவது நல்லவர்களைக் கெட்டவராகவும் உள்ளனவற்றை இல்லாதவை போலவும் இல்லாதனவற்றை இருப்பன போலவும் கெட்டவர்கள் நல்லவர்களாகவும் கண்டவர் விரைவில் மரணமடைவர். 26

## 7. முடிவுரை

மருத்துவர் இந்த மரணக்குறிகளின் அறிவை உள்ளது உள்ளவாறு அறிய வேண்டும். அவர்கள் நோயாளியின் மரணத்தையும் ஆயுளின் அளவையும் நன்றாகக் கணித்துக் கூற முடியும். 27

அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை இந்திரிய
ஸ்தானத்தில் ''இந்திரியாநீகம் இந்திரியம்''
எனும் நான்காவது அத்தியாயம் முற்றும்

## ஐந்தாம் அத்தியாயம்

# *பூர்வரூபீயம் இத்திரியம்

இனி ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி 'பூர்வரூபியம் இந்திரியம்' எனும் மரணக்குறியை விவரித்துக் கூறுவோம். 1–2

மருத்துவர்களின் அறிவு வளர்ச்சிக்காகத் தீர்க்க முடியாத நோய்களின் மாற்றங்களைத் தனித்தனியாகக் கூறுவோம். 3

காய்ச்சலுக்குக் கூறப்பட்ட விகாரங்கள் (பூர்வரூபம்) பேரளவு காய்ச்சல் நோயுள்ளவனுக்கு ஏற்படுமாயின் அவன் ஜ்வரத்தினால் மரணமடைவான். 4

வேறு நோய்களிலும் அந்தந்த நோய்களின் பூர்வரூபமாகிய குறிபலமாக அமைந்து அந்நோயாளியின் உடலில் இடம்பெறுமாயின் அவன் கட்டாயம் இறந்துவிடுவான். 5

வேறுநோய்களிலும் கடினமான முன்னிலையாகிய மரணக்குறி ஏற்படுவதால் நோயாளிக்கு மரணம் உண்டாகிறது. அத்தகைய மரணக்குறிகளை விவரிப்போம். 6

பெண்கள் சேர்க்கையில் பேராவல் கொண்டு அதில்ஈடுபட்டுள்ளவன் வலிமை குன்றியும் கடுமையான ஜலதோஷத்தால் துன்புற்றும் இறுதியில் உடலுருக்கி நோய் தோன்றி இறந்துவிடுவான். 7

நாய் ஒட்டகம் கழுதை ஆகியவற்றின் மீது அமர்ந்து தெற்குத் திசை நோக்கிச் செல்வதாகக் கனவு கண்டவன் உருக்கி நோயால் தாக்கப்பட்டும் 8

பிணங்களுடன் அமர்ந்து சிறுநீர் (கள்) குடிப்பது போன்றோ நாய்களினால் இழுத்துச் செல்லப்படுவது போன்றோ கனவு கண்டால் அவன் கடுமையான காய்ச்சல் கண்டும் உயிர் துறப்பான். 9

அரக்கு போன்ற சிவந்த ஆடையைப் போன்ற ஒளிபொருந்தியதாக ஆகாயத்தைத் தன்னருகில் காண்பவனும் 10

---

* பூர்வரூபியம் இந்திரியம்— நோயின் முன்னிலை பூர்வரூபம். அந்த முன்னிலையாகிய மரணக் குறியை விளக்குவதால் இவ்வத்தியாயம் இப்பெயர் பெற்றது.

சிவந்த பூமாலை பூண்டு சிவந்த ஆடை உடுத்தி இரத்தத்தை உடலெங்கும் பூசிக்கொண்டு அடிக்கடி சிரித்துக்கொண்டு ஒரு பெண்ணால் இழுத்துச் செல்லப்படுவதுபோன்று கனவு காண்பவனும் இரத்தபித்தநோயால் மரணமடைவான். 11

சூலநோய் வயிற்றில் வாதநோய்த் தொல்லை அதனால் இரைச்சல் அதிகமாக வலிமை குன்றிவிடுதல் நகங்களின் நிறம் மாறுதல் ஆகிய இவை தோன்றினால் குன்மநோயால் அவன் இறப்பான். 12

முட்களுடன் கூடிய மிகக்கடினமான கொடி கழுத்துப் பகுதியில் சுற்றிக்கொண்டு இருதயத்தில் உண்டாவதுபோல் கனவு காண்பவன் கொடிய குன்ம நோயால் துன்புற்று மரணமடைவான். 13

உடலை மிகவும் மெதுவாகத் தொட்டவுடனேயே பிளவு தோன்றி ரணம் உண்டாகி அந்த ரணமும் விரைவில் ஆறாத நிலையில் உள்ளவன் குஷ்டநோயால் மரணம் அடைவான். 14

உடலில் ஆடையின்றி நெய் பூசிக்கொண்டு சுவாலை இல்லாத நெருப்பில் ஆகுதி செய்வது போன்றும் தன்மார்பில் தாமரை தோன்றுவது போன்றும் கனவு காண்பவன் குஷ்டநோயினால் இறந்துபோவான். 15

நன்றாக நீராடிச் சந்தனம் முதலிய நறுமணப் பூச்சுகளைப் பூசிய உடலிலும் ஈக்கள் மிகுதியாக வந்து மொய்க்குமானால் அவன் சர்க்கரை நோயினால் தாக்குண்டு இறப்பான். 16

நெய் எண்ணெய் போன்றவற்றைப் பல சண்டாளர்களுடன் கூடி ஒன்றாக அமர்ந்து பருகுவது போன்று கனவு காண்பானாயின் அவன் சர்க்கரை நோயினால் அல்லலுற்று மரண மடைவான். 17

மனஒருமைப்பாடு சோர்வு அமைதியின்மை தகாத இடங்களில் மயக்கம் வலிமைகுறை எதிலும் விருப்பமின்மை ஆகிய இவை தேவைப்படாத காலத்தில் தோன்றுமாயின் அவன் உன்மாதம் என்னும் பைத்தியம் பிடித்து கடைசியில் இறப்பான். 18

உணவை வெறுப்பவன் மனஅமைதி இழந்தவன் மேல்நோக்கிச் செல்லும் வாதத்தால் துன்புறுபவன் என இவர்கள் 'உன்மாதம்' என்னும் பைத்தியநோயினால் துன்புற்று இறப்பார்கள் என்று நல்ல அறிவாளியான மருத்துவர் அறியவேண்டும். 19

---

1. உன்மாதம் – சித்தப்ரமம் – பைத்தியம்.

மிகுதியான கோபம் மிக்க பயம் அவ்வப்போது நகைச்சுவை யுடன் கூடிய முகம் அடிக்கடி மயக்கம் மிகுதியான நீர்வேட்கை இவை கொண்ட மனிதன் உன்மாதநோயினால் உயிர்துறப்பான் என உணர்க. 20

அரக்கர்களுடன் நடனமாடியவாறு தண்ணீரில் மூழ்குவது போன்று கனவில் கண்டவன் பைத்தியம் பிடித்துப்பிறகு மரணமடைவான். 21

விழித்துக்கொண்டிருக்கும்போதே இல்லாத இருளை காணல் இல்லாத பலவிதமான ஒலிகளைக் கேட்டல் ஆகிய குறிகளை உடையவனும் 22

மதுவைக் குடித்துவிட்டு ஆடிக்கொண்டிருப்பவனைப் பிணம் வந்து எடுத்துச் செல்வதாகக் கனவு காண்பவனும் [1]அபஸ்மாரம் எனும் காக்காய் வலிப்பு நோயால் துன்புற்றுக் காலனால் கவரப் படுவான். 23

விழித்துக் கொண்டிருக்கும்போதே தாடை கழுத்துப் பக்கங் களிலுள்ள இரண்டு இரத்தக்குழாய்கள் இரண்டு கண்கள் ஆகி யவை அசைவற்றுப் போகிறவனுக்கு [2]பஹிராயாமம் என்னும் நோய் வந்து மரணம் நிச்சயம் ஏற்படும். 24

முறுக்கு அப்பம் வடை போன்ற தின்பண்டங்களைத் தின்பதுபோல் கனவு காண்பவன் கண்விழித்ததும் வாந்தியெடுத்து மரணமடைவான். 25

இத்தகைய நோய்களுக்கு முன் தோன்றும் மரணக்குறிகளை நன்முறையில் நன்கு உணரும் மருத்துவன் இக்குறிகளின் தொடர் பையும் அவற்றின் பயன்களையும் அறிந்து நோயுற்றவரின் ஆயுளைக் கூற முடியும். 26

இத்தகைய கெட்ட கனவுகளை நோயுற்றவன் கண்டால் அவன் மரணம் அடைவான். நன்னிலையில் உள்ளவர்கள் கண்டால் அவர்களுக்குப் பெருந்துன்பங்கள் உண்டாகும். 27

தலையில் மூங்கில் புதர் கொடிகள் தோன்றி அதனுள் பறவைகள் மறைந்துகொள்வது போன்றும் தலைநன்கு மொட்டை யடிக்கப்பட்டது போன்றதாகவும் 28

கழுகு ஆந்தை நாய் காக்கை அரக்கர் பிணம் பிசாசு பெண்கள் சண்டாளர்கள் திராவிடர்கள் ஆந்திரர்கள் இவர் களால் சூழப்பட்டிருப்பது போன்றும் 29

---

1 அபஸ்மாரம் – காக்காய் வலிப்பு என்னும் நரம்பு நோய்
2 பஹிராயாமம் – ஒருவகையான வாதநோய்.

மூங்கில் பிரம்பு கொடி கயிறுகள் புற்கள் முட்கள் ஆகிய வற்றில் சிக்கிக்கொண்டு மூர்ச்சையடைந்து கீழே வீழ்வதாகவும் 30

தூசிகள் நிறைந்த நிலம் புற்று சாம்பல் சுடுகாட்டுப் பள்ளம் இவற்றில் விழுந்துவிடுவதாகவும் 31

கலங்கிய நீரின் சேறு இருள் சூழ்ந்த கிணறு இவற்றில் மூழ்கு வதாகக் கனவு காண்பவனும் ஆற்றுவெள்ளத்தால் கவர்ந்து செல்லப்படுவதாகவும் 32

எண்ணெய் குடித்தல் எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல் வாந்தியெடுத்தல் பேதியாதல் தங்கத்தை அடைதல் கட்டுப் படுதல் சண்டையிடுதல் தோல்வி காணுதல் போன்றும் 33

இரண்டு காலணிகளும் காணாமற் போதல் புழுதி தோல் இவற்றில் மழை பொழிதல் பெருமகிழ்ச்சி கோபங்கொண்ட தென் புலத்தவரான பித்ருக்களின் சினத்திற்கிலக்காகுதல் போன் றும் 34

பல் சந்திரன் சூரியன் விண்மீன்கள் தேவதைகள் விளக்கு கண்கள் கீழே விழுவது அல்லது அழிவது மலைகள் பிளப்பன போன்றும் 35

சிவப்பு மலர்கள் மலிந்த காடு பாவச்செயல்கள் நடைபெறும் இடம் பிணங்களை எரிக்கும் சிதை இருள் சூழ்ந்த குகை ஆகிய இடங்களில் நுழைவது போன்றும் 36

எத்தகைய ஆடையும் அணியாமல் நிர்வாணமாகச் சிவப்பு மாலையை அணிந்து அட்டகாசமாகச் சிரித்துக்கொண்டே தெற்கு நோக்கிச் செல்வதாகவும் குரங்குக் கூட்டங்களுடன் கொடிய காட் டில் செல்வது போன்றும் 37

காஷாயவஸ்திரமணிந்தவன் நிர்வாணமாகித் தண்டத்தைக் கையில் பிடித்துக்கொண்டுள்ள விகாரமானவன், கருமை நிற முடையவன் சிவந்த கண்கள் உடையவன் ஆகியவர்களையும் கனவில் காண்பது போன்றும் காட்சியை காண்பவனுக்கு நன்மை ஏற்படாது. 38

கருமைநிறம் கொண்டவள் பாவச்செயல்புரிபவள் நீண்ட தலைமுடி நீண்ட நகங்கள் பருத்த மார்பகங்கள் வாடிய மாலை ஆடை இவற்றுடன் கூடியவள் யமனின் இரவு போன்றவள் ஆகிய வர்களை 39

கனவில் நோயுற்றவன் கண்டால் மரணத்தை அடைவான். நல்லநிலையில் உள்ளவர் கண்டால் பெருந்துன்பங்களை அடைவார்கள். 40

வாதம் பித்தம் கபம் ஆகிய மூன்று தோஷங்களும் சீற்றமடைந்து மனத்தைச் சுமக்கும் நாடிகளில் வந்து சேரும்பொழுது மனிதன் நல்லவையும் கெட்டவையுமான கனவுகளைக் காண்கிறான். 41

ஒருவன் அதிக தூக்கத்தில் இல்லாதபோது புலன்களுக்குத் தலைவனான மனத்தின் வழியாகப் பலவிதக் கனவுகளைக் காண்கிறவன். அக்கனவுகளில் சில பயனுள்ளவை வேறுசில பயனற்றவை. 42

**கனவின் பிரிவுகள்**

கனவை ஏழுவகையாகப் பிரிக்கின்றனர். அவை வருமாறு

கண்டது கேட்டது அநுபவித்தது விரும்பியது கற்பனை செய்தது வரப்போகும் நன்மை தீமைகளை அறிவிப்பது வாத பித்த கப தோஷங்களினால் ஏற்பட்டது என ஏழுவகைப்படும். 43

ஏழுவகைக் கனவுகளில் முதல் ஐந்துவகையான கனவுகள் பயனற்றவை என்று பலன்களைப்பற்றி மருத்துவர் கூறவேண்டும். மிகச்சிறியவை மிகமிகப் பெரியவையுமான பகற்கனவுகள் பயனற்றவையே என அறிவாளி முடிவு செய்ய வேண்டும். 44

இரவின் முதற்பகுதியில் காணப்பட்ட கனவு குறைந்தபலன் அளிக்கக்கூடியது. நல்ல கனவு கண்டபின் ஒருவன் மீண்டும் உறங்காமலிருந்தால் பெரும் பயனை அடையலாம். 45

முதலில் கெட்ட கனவையும் மறுபடி நல்ல கனவையும் கண்டால் பலன் நல்லதாக அமையும். 46

நோயின் முன்னிலையாகிய மரண அறிகுறிகளையும் தீயவையான பலவகை கனவுகளையும் நன்முறையில் உணரும் மருத்துவன் அந்த ஞானத்தினால் தீராத நோய்களுக்குச் சிகிச்சை செய்ய முன்வரமாட்டான். 47

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை இந்திரிய
ஸ்தானத்தில் 'பூர்வரூபீயம் இந்திரியம்' என்னும்
ஐந்தாம் அத்தியாயம் முற்றும்

## ஆறாம் அத்தியாயம்

# *கதமாநி சரீரீயம் இந்திரியம்

''கதமாநிசரீரீயம் இந்திரியம்'' எனும் அத்தியாயத்தை ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி விவரித்துக் கூறுவோம். 1—2

### 1. அக்னிவேசரின் வினா

நோயுற்றவனின் உடல் எத்தனை வகையான நோய்களை உடையது மருத்துவர் எத்தகைய நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்யாமல் விட்டுவிட வேண்டும்? சிகிச்சை செய்தாலும் பயன் அளிக்காத பிணிகள் எவை? 3

### 2. ஆத்திரயேரின் மறுமொழி

அக்னிவேசர் இவ்வாறு மிகவும் கடினமான கேள்விகளைக் கேட்டவுடன் ஆத்திரேயர் கூறிய மறுமொழிகளைக் கேளுங்கள். 4

### 3. கைவிடத்தக்க நோய்களின் இலக்கணங்கள்

உரையாடும்போது மார்பின் மேற்புறத்தில் பொறுக்கமுடியாத வலி உணவு உண்டவுடன் உணவுப்பொருட்கள் வயிற்றுள் தங்காது வெளிவருதல் வயிற்றினுள் உள்ள உணவும் செரிமானமில்லாமை நாள்தோறும் உடல்வலிமை குன்றுதல், நீர்வேட்கை மிகுதியாதல் இருதயத்தில் சூலையாகிய குத்தல்வலி தோன்றுதல் ஆகிய அறிகுறிகள் (இலக்கணங்கள்) உடைய நோயாளிகளைச் சிகிச்சை செய்யாமல் மருத்துவர் கைவிட வேண்டும். 5—6

தொப்புளிலிருந்து தோன்றும் விக்கல் மிகுதியான இரத்தப் போக்கு உடையவர்களுக்கு ஆத்திரேயரின் கட்டளைப்படி மருத்துவர் சிகிச்சை செய்யக்கூடாது. 7

வயிற்று உப்புசம் இரத்தக் கழிச்சல் ஆகிய நோய்கள் வலிமை குன்றிய நோயாளிக்குத் தோன்றினால் அவன் உயிர் பிழைப்பதரிதாகும். 8

---

*கதமாநி சரீரீயம் இந்திரியம் — பலநோய்கள் உள்ள நோயாளிகளின் சரீரங்களில் தோன்றும் மரண அறிகுறிகளை விளக்கும் அத்தியாயமானதால் இதற்கு இவ்வாறு பெயர் வந்தது.

வலிமை குறைந்த மனிதனுக்கு வயிற்று உப்புசமும் நீர் வேட்கையும் ஏற்பட்டால் அவன் உயிர் உடலில் நீண்டநாள் நிலைத்து நிற்காது. விரைவிலேயே அவன் மரணமடைவான். 9

காலையில் ஒருவனுக்குக் காய்ச்சல் தோன்றி கடினமான வறட்சி இருமலும் ஏற்பட்டால் அவனுடைய வலிமை குன்றும், மாமிசம் குறையும். அவன் பிணம் போலாவான். விரைவில் இறந்தும் போவான். 10

பெருவயிறு நோயுற்றவனுக்குச் சிறுநீர் மலம் இவை சேர்ந்து கெட்டியாக வெளிப்படுதல் உடலில் சூடு இல்லாமை வயிற்று நோய் சுவாஸம் ஆகியவை தோன்றினால் அவன் பிழைக்கமாட்டான். 11

வயிற்றில் முதலில் தோன்றிய வீக்கம் கை கால்களிலும் பரவி நோயாளியின் உறவினர்களுக்கு மனக்கஷ்டத்தை உண்டாக்கி அவனை அழித்துவிடும். 12

கால்களில் வீக்கம் தோன்றி மூட்டுகள் விலகி முழங்கால்கள் அசைக்க முடியாத நிலையை அடைந்த நோயாளியை மருத்துவர் கைவிட்டுவிட வேண்டும். 13

கைகால்கள் உலர்ந்து வீக்கமுற்றும் அதுபோல மர்மஸ்தானங்கள் வயிறு இவை உலர்ந்து வீக்கம் கண்டும் வருந்தும் நோயாளி, வலிமைகுன்றி உணவு வெறுத்து மருத்துவர் கொடுக்கும் மருந்து பயன்படாமல் மரணமடைவான். 14

எச்சில் துப்பும்போது மார்பிலிருந்து சளி கருமையாகவும் மஞ்சளாகவும் இரத்தம் கலந்தும் மிகுதியாக வெளிப்படும் நோயாளியின் அருகில் செல்லாமல் தொலைவில் கண்டவுடனேயே மருத்துவர் விட்டுவிட வேண்டும். 15

உடலில் உள்ள மயிர்கள் அரும்புதலுடன் குத்திட்டு நின்று சிறுநீர் தடிப்பாகி உடல்முழுவதும் வீங்கி இருமல் காய்ச்சலினால் துன்புற்று மாமிசம் குன்றித் துன்புறும் நோயாளி அறிவாளியான மருத்துவரால் தொலைவிலேயே விலக்கி வைக்கப்பட வேண்டியவன். 16

உடல் மெலிந்து வலிமை குன்றியுள்ள நோயாளியின் உடலில் உட்புறத்தில் வாதம் பித்தம் கபம் ஆகிய மூன்று தோஷங்களின் சீற்றம் ஏற்படுமாயின் அவனுக்கு மருத்துவம் இல்லை. 17

காய்ச்சல் கழிச்சல் இவற்றிற்குப் பிறகு உடலில் வீக்கம் கண்டு அதற்குப் பிறகு மறுபடியும் காய்ச்சல் கழிச்சல் ஏற்படுமாயின் அவன் வலிமை குன்றி இறந்துவிடுவான். 18

இரத்தசோகையினால் மிகவும் உடல்மெலிந்து மிகுதியான நீர்வேட்கையால் தாக்கப்பட்டு இரண்டு கண்களும் பஞ்சடைந்து மேல்மூச்சு வாங்கும் நிலையிலுள்ள நோயாளியை மருத்துவர் கைவிடவேண்டும். 19

தாடையும் கழுத்துப்பக்கமுள்ள இரண்டு ரத்தக் குழாய்களும் அசைவின்றி நீர்வேட்கை மிகுந்து வலிமை மிகவும் குறைந்து உயிர் மட்டும் மார்பில் ஊசலாடும் நோயாளியை மருத்துவர் விட்டுவிடவேண்டும். 20

சிறிய நிகழ்ச்சியினாலும் கலக்கமடைந்து சிறிதளவும் அமைதி கிடைக்காமல் அறிவு மங்கிப்போய் வலிமை மாமிசம் உணவு இவை அனைத்தும் குறைந்து வருந்தும் நோயாளி விரைவிலேயே மரணமடைவான். 21

ஒன்றுக்கொன்று முரணான காரணங்களால் தோன்றிய நோய்களுக்கு ஒன்றுக்கொன்று முரணான மருத்துவத்தைச் செய்வதனால் நோய் விரைவிலேயே மிகுந்து நோயாளியை விரைவாகக் கொன்றுவிடும். 22

வலிமை அறிவு ஆரோக்யம் செரிமானம் மாமிசம் இரத்தம் ஆகியவை குறைந்த நிலையில் உள்ளவன் விரைவில் மரணமடைவான். 23

ஆரோக்கியம் குறைவதினால் மனிதனுடைய இயற்கையான பண்புகள் போய்விடுகின்றன. இயமனும் அவன் உயிரை விரைவில் பறித்துக்கொள்வான். 24

**முடிவுரை**

இத்தகைய நோய்களை உடைய உடலுக்கு மருத்துவர் சிகிச்சை செய்யக்கூடாது. அவ்வாறு செய்தாலும் அவருக்கு அதில் வெற்றி கிடைக்காது. 25

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில்
இந்திரியஸ்தானத்தில் ''கதமாநிசரீரீயம் இந்திரியம்''
என்னும் ஆறாம் அத்தியாயம் முற்றும்.

## ஏழாம் அத்தியாயம்

## *பந்நரூபீயம் இந்திரியம்

ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி 'பந்நரூபீயம் இந்திரியம்' என்னும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுவோம். 1–2

நோயாளியின் நிழல் மாற்றமடைந்து அவனது கண்களுக்குப் புலப்பட்டாலோ அவன் கண்களுக்குப் புலனாகாமலோ இருந்தாலோ தன்நிழல் தன் கண்களுக்குப் புலனாகாமற் போனாலோ பிறர் நிழலைப் பார்க்க முடியாமல் போனாலோ அவனுக்கு மருத்துவர் சிகிச்சை செய்யவேண்டாம். மருத்துவருக்கு அவன் கைவிடத்தக்கவன். 3

நிலவு வெயில் விளக்கொளி தண்ணீர் கண்ணாடி இவற்றில் தன் பிரதிபிம்பம் (நிழல்) மாற்றமடைந்த உறுப்புகளுடன் கூடியுள்ளதாகக் கண்டவன் விரைவில் இறப்பான். 4

நிழல் சிதறி பிளந்து கலங்கி குறைந்து மிகுதியாகக் கேடடைந்து இரண்டிரண்டாகியோ தலையின்றி உடல் மட்டும் காணப்பட்டாலோ இவை போன்று மேலும் பழிக்கத்தக்க வகையில், எத்தகைய காரணமும் இன்றிக் காணப்பட்டாலோ அவனுக்கு மரணம் விரைவில் ஏற்படும் என்பதனை மருத்துவர் உணர வேண்டும். 5–6

உருவ அமைப்பு நிறம் அளவு ஒளி ஆகியவற்றால் நிழல் மாற்றமடைந்ததாகக் கண்களுக்குப் புலப்பட்டால் நல்ல ஆரோக்யமுடையவனும் பிணத்திற்கொப்பாவான். 7

### 1. நிழலின் பிரிவுகள்

ஸம்ஸ்தானமெனும் உருவ அமைப்பு மனிதனுடைய தோற்றமாகும். அது அழகு வாய்ந்தது அழகு அற்றது என இருவகையாகப் பிரிக்கப்படும். மனிதர்களின் அளவு சிறியது நடுத்தரமானது பெரியது என்று மூன்று வகையாகப் பிரிக்கப்படும். 8

*பந்நரூபியம் – கேடடைந்த கண்ணின் கருவிழிகள். கண்புலன் காணும் ஆற்றல் இழந்து தம்நிழல் (சாயை) பிறர்நிழல்(பிரதிசாயை) இவற்றைமாற்றமடைந்ததாகக் காணல். அல்லது பார்வை இழந்து அதனால் உண்டாகும் மரணக்குறிகளை விளக்கும். அத்தியாயமாதலால் இவ்வாறு பெயர் பெற்றது.

மனிதனின் தோற்றம் அளவு இவற்றிற்கேற்ப நீர் கண்ணாடி வெயில் ஆகியவற்றில் காணப்படும் பிரதிபிம்பம் [1]நிழல் அல்லது சாயை என்று கூறப்படும். அந்த நிழலில் நிறம் ஒளி ஆகியவை இருக்குமாயின் அவை [2]பிறநிழல் அல்லது பிரதிச் சாயை என வழங்கப்படும். 9

## 2. ஐம்பெரும் [3]பூதங்களைச் சார்ந்த நிழலின் இலக்கணம்

ஆகாயம் முதலிய ஐம்பெரும் பூதங்களைச் சார்ந்த நிழல்கள் பல இலக்கணங்களைக் கொண்டுள்ளன. அவற்றுள் நீலநிறம், அழுக்கற்ற (நிர்மலம்) தன்மை வழவழப்பு ஒளியுடைமை ஆகிய இலக்கணங்களைக் கொண்டது ஆகாயத்தைச் சார்ந்த நிழலாகும். 10

## 3. காற்று, நெருப்பு இவற்றைச் சார்ந்த நிழல்கள்

வறட்சி கருமை சிவப்பு ஒளியின்மை ஆகிய இலக்கணங் களுடன் கூடியது காற்றைச் சார்ந்த நிழல். தூய்மை சிவப்பு மனத்திற்குகந்த தன்மை ஆகிய இலக்கணங்களுடன் கூடியது நெருப்பைச் சார்ந்த நிழல் ஆகும். 11

## 4. நீர், நிலம் அகியவற்றைச் சார்ந்த நிழல்கள்

தூய்மை வைடூரியமணிபோன்று அழுக்கின்றி ஒளிர்தல் வழ வழப்பு ஆகிய இலக்கணங்களுடன் கூடியது நீரைச்சார்ந்த நிழல் ஆகும். நிலையானதன்மை வழவழப்பு எண்ணெய்ப்பசை யுடைமை கருமை வெண்மை நிறங்களுடைமை இத்தகைய இலக்கணங்களைக் கொண்டது நிலத்தைச் சார்ந்தநிழல் ஆகும். 12

## 5. நல்லவையும், கெட்டவையுமான நிழல்கள்

இந்து ஐந்து வகையான நிழல்களில் காற்றைச் சார்ந்த நிழல் பழிக்கத்தக்கது. ஏனைய நான்கும் நன்மையை அளிக்கக்கூடியவை. காற்றைச் சார்ந்த நிழல் மரணத்தை உண்டாக்கும். பெருந் துன்பங்களைக் கொடுக்கும். 13

---

(1) நிழல் சாயை — நிறம் ஒளியில்லாத பிரதிபிம்பம்.

(2) பிறநிழல் (பிரதிசாயை) நிறம் ஒளி இவற்றுடன் கூடிய பிரதி பிம்பம்.

(3) ஐம்பெரும்பூதங்கள் — நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம் என்பன.

### 6. ஒளியின் தன்மைகள் - பிரிவுகள்

எல்லா ஒளிகளும் நெருப்பைச் சார்ந்தவையே. ஒளியை ஏழு வகையாகப் பிரித்துள்ளனர். அவையாவன : சிவப்பு மஞ்சள் தூயவெண்மை நீலம் பசுமை வெண்மை கருமை என்பன. 14

### 7. நன்மை, தீமை தரவல்ல ஒளிகள்

மேலே கூறப்பட்ட ஒளிகளில் மலர்ச்சி வழவழப்பு பரவி யிருத்தல் ஆகிய மூன்றுவிதமான ஒளிகளும் நன்மையைத் தர வல்லவை. வறட்சி கலக்கம் சுருங்கியிருத்தல் ஆகிய மூன்றுவித மான ஒளிகளும் துன்பத்தை யளிக்கவல்லவை யாகும். 15

### 8. நிழல் — ஒளி வேறுபாடுகள்

நிழல் நிறத்தை மறைத்துவிடும். ஒளி நிறத்தை வெளிப்படுத்தி விளக்கமடையச் செய்யும். நிழல் அண்மையில் மனிதர்களால் காணப்படுகிறது. ஒளி தொலைவிலும் காணப்படுகிறது. நிறமற்ற பிரதிபிம்பம் நிழல் அல்லது சாயை என்றும், நிறம் காந்தி இவை களுடன் கூடிய பிரதிபிம்பம் ஒளி அல்லது பிரபா என்றும் கூறப் படுகின்றது.

மனிதர்களின் நிழல் ஒளி இவற்றில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏதும் ஏற்படாவிட்டாலும் மனிதர்களுக்கு நன்மை தீமைகள் உண்டாகும்போது நிழல் ஒளி ஆகியவற்றில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டே தீரும். 16–17

### 9. மருத்துவரால் கைவிடத்தக்கவர்

இரண்டு கண்களும் [1]காமாலை நோயால் மஞ்சளாக மாறி முகம் பருத்து இருபொட்டுகளிலும் மாமிசம் குறைந்து பருத்து உடல் நடுக்கமுற்று உடலெங்கும் சூடு பரவியுள்ள நோயாளியை மருத்துவர் கைவிட்டுவிட வேண்டும். 18

### 10. ஏழுநாட்களில் இறப்பவரின் அறிகுறிகள்

படுக்கையிலிருந்து எழுந்தவுடன் மூர்ச்சை அடைபவன் அடிக் கடி மயக்கங்கொள்பவன் வாயில் வந்தபடி பிதற்றுபவன் ஏழு நாட்களில் இறப்பான். 19

---

1, காமாலை —ஈரல் கேடடைவதால் தோன்றும் கொடிய நோய்.

## 11. பதினைந்து நாட்களில் இறப்பவளின் அறிகுறிகள்

[1]ஏறுமுக நோய்களும் [2]இறங்குமுக நோய்களும் ஒரே நேரத்தில் தோன்றித் துன்புறுத்த [3]கிரஹணீ எனும் நோயும் கூடுமானால் அவன் பதினைந்து நாட்களில் இறந்து போவான். 20

நோயினால் தாக்கப்பட்டு உடல் மெலிந்து உணவுகுறைந்து சிறுநீர் மலம் மிகுதியாகக் கழிப்பவனுக்கு மருத்துவர் சிகிச்சை செய்யாமல் கைவிடவேண்டும்.

வலிமை குறைந்து நோயுற்ற நிலையிலும் அளவுக்கு அதிகமாக உணவை உட்கொண்டு சிறுநீர் மலம் குறைவாகக் கழிப்பவன் சவத்திற்குச் சமமாவான்; விரைவில் மரணமடைவான். 21–22

மனத்திற்குப் பிடித்தமான உடலை வளர்க்கத்தக்க உணவை உட்கொண்டும் நாளுக்கு நாள் வலிமை குறைந்து நிறம்கெட்டு வருந்துபவன் பிழைக்கமாட்டான். 23

தொண்டையில் 'கர்' 'கர்' என ஒலித்தல் மிகுதியாக மேல் சுவாசம் வாங்குதல் உடல் தளர்ந்து போதல் அதிசாரபேதியால் வருந்துதல் வலிமை குறைதல் நீர்வேட்கை மிகுதல் வாய் உலர்ந்துபோதல் ஆகிய குறிகளை உடையவன் பிழைக்கமாட்டான். 24

சுவாசம் குறைந்தும் முறை தவறியும் இருத்தல், உடல் கோணலாக அசைதல், வலிப்பு வந்தது போன்று உடலுறுப்புகள் துடித்தல் ஆகிய குறிகள் உடையவனை புனர்வசுவென்னும் ஆத்திரேய மாமுனிவர் இறந்தவன் என்றே கூறியுள்ளார். (25)

மேல்மூச்சு வேகமாக விடுதல், கபதோஷத்தால் துன்புறுதல், நிறம் வலிமை உணவு ஆகியவை குறைதல் ஆகிய குறிகளை உடையவன் நீண்ட நாள் உயிருடன் இருக்கமாட்டான். 26

கண்களின் கருவிழிகள் மேல்நோக்கிச் செருகுதல் கழுத்தின் இரு பக்கங்களிலும் உள்ள இரத்தக் குழாய்கள் தளர்ந்து நடுங்கு

---

(1) ஏறுமுகநோய் —பிரதிலோமமான நோய்
(2) இறங்குமுகநோய்—அநுலோமமான நோய்
(3) கிரஹணீ —ஒருவகை அசீர்ண நோய்.

தல், வலிமை குறைதல், நீர்வேட்கை மிகுதல், வாய் உலர்ந்து போதல் ஆகிய குறிகளை உடையவன் பிழைத்திருக்கமாட்டான். 27

இரண்டு கன்னங்கள் வீக்கம் கண்டு கொடிய காய்ச்சல் இருமல் இவற்றால் தாக்கப்பட்டு மார்பில் குத்தல் வலி தோன்றி உணவு வெறுத்து இருப்பவனிடம் மருத்துவனின் சிகிச்சை வெற்றியடையாது. 28

தலையும், நாக்கும் திரும்பி, கண் புருவங்கள் தளர்ந்து நாக்கில் முள் போன்ற வடுக்கள் ஏற்பட்டு வருந்துபவன் சவமேயாவான் அதாவது விரைவில் இறப்பான். 29

ஆண்குறி சுருங்கியும், விதைகள் வெளிப்பட்டுத் தொங்கியும், ஆண்குறி மடங்கித் தொங்கி விதைகள் சுருங்கியும் இருப்பின் இவை சாவிற்கு அறிகுறிகளாகும். 30

மாமிசம் குன்றி உடல் எலும்பும் தோலுமாகக் காட்சியளித்து இளைத்திருக்க உணவு வெறுத்துப் போகுபவன் ஒரு திங்களே பிழைத்திருப்பான். 31

**முடிவுரை**

மேலே கூறப்பட்ட மரணக்குறிகளை நன்முறையில் அறியும் மருத்துவரை ஆயுர்வேத வல்லுநர் என்று அனைவரும் போற்றுவர். 32

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் இந்திரிய
ஸ்தானத்தில் 'பந்நரூபீயம் இந்திரியம்' எனும்
ஏழாம் அத்தியாயம் முற்றும்.

## எட்டாம் அத்தியாயம்

## *அவாக்சிரஸீயம் இந்திரீயம்

ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி ''அவாக்சிரஸீயம் இந்திரியம்'' எனும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுவோம். 1—2

தன் நிழலில் கால் மேலும் தலைகீழுமாகக் கண்டாலும் கோணலாகத் தலையைக் கண்டாலும் அல்லது தலை இல்லாமல் முண்டமான நிழலை மட்டும் கண்டாலும் அம்மனிதன் மருத்துவர் சிகிச்சைக்கு ஏற்றவ னல்லன். 3

இரைப்பைகள் சடைகட்டிக்கொண்டும், கண்பார்வை கேடுற்றும் போகிறவனுக்கு அறிஞனாகிய மருத்துவன் சிகிச்சை செய்யக் கூடாது. 4

இரைப்பைகள் வீக்கமுற்று இரண்டு இரைப்பைகளும் ஒன்று சேர இயலாமல் கண்ணில் பொறுக்க முடியாத எரிச்சல் தோன்றி பிசுபிசுப்பு மிகுந்திருக்கும் நோயாளி பிணமாகவே கருதப்படுவான். 5

எத்தகைய காரணமுமின்றி இரண்டு புருவங்களிலும் தலையிலும் முன்பு காணப்படாத பல கோடுகள் தோன்றிப் பிறர் கண்களுக்குப் புலப்படும் நிலையில் உள்ளவன் இறந்து போவான் என்று கூறிவிடலாம். 6

---

*அவாக்சிரஸீயம் — தலைகீழும், கால்மேலுமாக நிழல் கண்களுக்குப் புலப்படுதலாகிய மரண அறிகுறியை விளக்குவதால் இவ்வத்தியாயம் இவ்வாறு பெயர் பெற்றது. முன் அத்தியாயத்தில் நிழலாகிய மரணக் குறிகளை விளக்கிவிட்டு, மீண்டும் இங்கு ஏன் விளக்க வேண்டும் எனும் ஐயம் எழலாம். ஆயினும் முன் அத்தியாயத்தில் ஏழு நாட்களுக்குப் பிறகு மரணம் தோன்றும் குறிகள் விளக்கப்பட்டன. இரண்டு மூன்று நாட்களிலும் ஆறு நாட்களிலும் ஏற்படும் மரணத்தின் குறிகள் இங்கு விளக்கப்படுகின்றன என அறிக.

மேலே கூறப்போகும் அறிகுறிகள் நோயாளியிடம் தோன்றினால் அவன் மூன்று நாட்களில் இறப்பான். நன்னிலையில் உள்ளவரிடம் தோன்றினால் ஆறுநாட்களில் இறப்பான் எனவும் அறிக. 7

தலை மயிர்களை இழுக்கும்பொழுது எத்தகைய வலியையும் அறியாமல் இருப்பவன் நோயுற்ற நிலையில் இருந்தால் மூன்று நாட்களிலும் நோயில்லாத நிலையில் இருப்பவன் ஆறு நாட்களிலும் இறப்பான். 8

எண்ணெய் பூசப்படாத தலைமயிர்கள் பூசப்பட்டவை போல் காட்சிதரும் நோயாளியின் ஆயுள் முடிந்துவிட்டது என அறிந்து மருத்துவர் அவனுக்குச் சிகிச்சை செய்யக்கூடாது. 9

மூக்கு நுனி மிகப்பெரியதாகப் பருத்து வீங்காத உடல் வீக்கமுற்றது போல் காணப்பட்டு வலிமை குறைந்த நோயாளிக்கு மருத்துவர் சிகிச்சை செய்யக்கூடாது. 10

நாக்கு வெளியே மிகவும் நீண்டு அல்லது உள்ளே இழுத்துக் கொண்டு மூக்கு உலர்ந்தும் உள்ள நோயாளி நோயிலிருந்து மீள மாட்டான். 11

முகம் காதுகள் உதடுகள் ஆகியவை வெண்மை கருமை மிக்க சிவப்பு ஆகிய நிறங்களுள்ளவையாக மாறியோ அல்லது நீலநிறமாக மாறியோ காணப்பட்டால் நோயாளி நோயிலிருந்து மீளமாட்டான். 12

எலும்பைப் போன்ற வெண்மையான பற்கள் அவற்றில் மலர் போன்ற வெண்புள்ளிகள் ஊற்றை மிகுதியாகப் படிதல் ஆகிய கூறுகளைக் கொண்ட நோயாளி நோயிலிருந்து மீண்டு நன்னிலையை அடையமாட்டான். 13

அசைவற்று உணர்விழந்து வெளியே மிகவும் நீண்டு முள் போன்ற வடுக்கள் மலிந்து கருமைநிறம் பூண்டு உலர்ந்து வீக்கமுற்றும் காணப்படும் நாவையுடைய நோயாளி மரணம் அடைவது உறுதி. 14

நீண்ட பெருமூச்சுக்கள் ஏற்பட்டு அவை முறையாகக் குறைந்துகொண்டே வந்து பிறகு (மூர்ச்சை) மயக்கமடையும் நோயாளியின் ஆயுள் முடிந்துவிட்டது என அறிந்து மருத்துவர் அவனுக்கு மருத்துவம் செய்யக்கூடாது.

கை கால் மந்யா எனும் கழுத்துப் பக்கமுள்ள இரண்டு இரத்தக் குழாய்கள் தாள் ஆகியவை மிகவும் தளர்ந்தோ கடினமாகவோ மிகவும் மென்மையாகவோ மாறும் நோயாளியின்

ஆயுள் முடியும் தருணத்திலுள்ளது என மருத்துவர் உணரவேண்டும். 15–16

ஒருகாலின் முட்டி மற்றொரு காலின் முட்டியோடு உராய்ந்தும் பாதங்களைத் தூக்கித் தூக்கி தரையின்மீது வேகமாக வைத்தும் முகத்தை அடிக்கடி அசைத்துத் தோற்றமளிக்கும் நோயாளி பிழைக்கமாட்டான். 17

பற்களால் நகங்களைக் கடித்தும் நகங்களினால் தலை மயிர்களைப் பிய்த்துக் கொண்டும் குச்சிகளால் நிலத்தைக் கீறிக்கொண்டும் உள்ள நோயாளி நோயிலிருந்து மீளவே மாட்டான். 18

விழித்திருக்கும்போது பற்களை 'நற' 'நற' என்று கடித்துக் கொண்டும் வாய்விட்டு உரக்க அழுதுகொண்டும் உடனே அட்டஹாஸமாகச் சிரித்தும் தன் உடலில் தோன்றும் வலியைச் சற்றும் உணராமலும் உள்ள நோயாளி நோயிலிருந்து விடுபடமாட்டான். 19

அடிக்கடி சிரித்தும் அடிக்கடி கூச்சலிட்டும் கால்களால் தன் படுக்கையை உதைத்தும் தன் கைகளால் காது மூக்கு இவற்றை திருகியும் கண்களைக் கசக்கிக் கொண்டுமிருக்கும் நோயாளி பிழைக்கமாட்டான். 20

நோய்வாய்ப்படுவதற்கு முன் எவை எவை தனக்குப் பெருமகிழ்ச்சியை அளித்தனவோ நோய்வாய்ப்பட்ட பிறகு அவையே தீமை பயப்பனவாகவும் மனத்திற்குப் பிடிக்காதவை ஆகவும் தோன்றினால் அது மரணத்தின் அறிகுறியாகும். 21

தலையின் பாரத்தை சுமக்க இயலாத கழுத்து உடலின் சுமையைச் சுமக்க இயலாத இடை முகத்தின் பளுவைச் சுமக்க இயலாத தாடை இவைகளையுடைய நோயாளி நிச்சயமாக இறந்துபோவான் என அறியவேண்டும். 22

திடீரெனக் காய்ச்சல் தோன்றி உடலெங்கும் எரிச்சல் ஏற்பட்டு நீர்வேட்கை மிகுந்து வலிமை குறைந்து மூட்டுக்கள் கட்டவிழ்ந்து போகும் நோயாளி விரைவில் இறந்துவிடுவான். 23

குளிர்ச்சியும் கபமும் கலந்த காய்ச்சலினால் துன்புறுகிறவனுக்கு விடியற்காலை நேரத்தில் முகத்திலிருந்து வியர்வை மிகுதியாக வெளிப்படுமாயின் அந்நோயாளி பிழைத்திருப்பது அரிதாகும். 24

நாக்கு உள்ளே இழுத்துக்கொண்டு போதல் வலிமை குன்றுதல் தொண்டைக்குக் கீழே உணவு இறங்காமல் தடைபடுதல் ஆகியவை வரவிருக்கும் சாவின் அறிகுறிகள். 25

தலையை மிகவும் கஷ்டத்துடன் இருகைகளாலும் பிடித்துக் கொண்டுதான் தலையை அசைக்கக்கூடிய நிலை தோன்றித் தலையை அசைக்கும்போது வியர்வை மிகுதியாக வெளி வந்து உடல் பெரிதும் தளர்ச்சியடையும் நோயாளி இறப்பான். 26

**முடிவுரை**

நோயாளிகளிடம் இத்தகைய அறிகுறிகளைக் கண்டு அறிஞனான மருத்துவன் தன் அநுபவத்தை மிகக் கவனத்துடன் வளர்த்துக்கொள்ள வேண்டும். இந்த அறிகுறிகளில் சில சிலபோது நின்று பிறகு மறைந்துவிடுவன. ஆனால் தோன்றிய அறிகுறிகள் தமக்குரிய பலன்களைக் கட்டாயம் அளித்தே தீரும். ஆதலின் மருத்துவர் அறிகுறிகளைக்கூர்ந்து கவனித்து தமதறிவைப் பயன்படுத்திப் பலன்களைக் கூறவேண்டும். 27

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையின் இந்திரியஸ்தானத்தில்
'அவாக்சிரஸீயம் இந்திரியம்' எனும் எட்டாவது
அத்தியாயம் முற்றும்

## ஒன்பதாம் அத்தியாயம்

## *யஸ்யச்யாவநிமித்தீயம் இந்திரியம்

ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி 'யஸ்யச்யாவ நிமித்தீயம்' இந்திரியம் எனும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுவோம். 1–2

கண்கள் கருமையாதல் அல்லது பசுமையாக மாறுதல் அல்லது பார்வையையே இழத்தல் ஆகிய அறிகுறிகள் உள்ளவனுக்குத் தோன்றியுள்ள நோய் அவனுக்குச் சாவையே உண்டாக்கும் என்பதை அறிஞனான மருத்துவன் அறியவேண்டும். 3

நினைவிழந்து வாய் உலர்ந்து நோய்களினால் தாக்கப்பட்டு துன்புறும் நிலையிலுள்ளவனின் ஆயுள் முடியும் தருவாயில் உள்ளது என உணர்ந்து மருத்துவர் அவனுக்குச் சிகிச்சை செய்யாமல் விட்டுவிட வேண்டும். 4

நரம்புகள் பசுமையாகி மயிர்த்துவாரங்கள் அடைபட்டு புளிப்புச்சுவையில் பேராவல் மிகுந்துள்ளவன் பித்தநோய் தோன்றி இறப்பான். 5

உடலின் உறுப்புகள் வீக்கமுற்றவை போல் தோற்றமளித்து உடல் எல்லாம் உலர்ந்து வலிமை குன்றியவனான மனிதன் எலும்புருக்கி நோயாளியாகி மரணமடைவான். 6

உடலுருக்கி நோயுற்றவனுக்குத் தோள்பட்டைகளில் எரிச்சல் அல்லது வலிதோன்றி விக்கல் இரத்த வாந்தி வயிற்று உப்புசம் பக்கசூலை ஆகியவை ஏற்பட்டால் அவனுக்கு மரணம் தவிர்க்க முடியாததாகும். 7

வாதநோய்கள் வயிற்று நோய்கள் காக்காய்வலிப்பு தொழுநோய் வீக்கம் குன்மம் நீரிழிவு எலும்புருக்கி ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றிருந்தாலும் நோயுற்றவனின் மாமிசமும் வலிமையும் குறைந்துவிடும். அவை குன்றினால் நோய் மருத்துவன் மருந்

---

*யஸ்யச்யாவநிமித்தீயம் – ச்யாவம் என்றால் கருமை. ஒருவருடைய கண்களில் கருமை நிறம் தோன்றுவதால் உண்டாகும் மரண அறிகுறிகளை விளக்குவதால் இவ்வத்தியாயத்திற்கு இவ்வாறு பெயர் வந்தது.

துக்குக் கட்டுப்படாது. இத்தகைய நோயாளிக்கு அறிஞனான மருத்துவன் சிகிச்சை செய்யாமல் கைவிட வேண்டும். 8–9

பேதியாவதற்கு மருந்து உட்கொண்டு வயிற்று உப்புசம் நீங்கியபிறகு நீர்வேட்கை மிகுதியாகி மருந்து உட்கொண்டு பேதி யான பிறகு வயிற்று உப்புசம் மீண்டும் தோன்றி துன்புறும் நோயாளி கட்டாயம் சாவிற்குள்ளாவான். 10

தொண்டை வாய் மார்பு ஆகியவை தடைபட்டு மிகவும் உலர்ந்துபோய் இலேசான பானங்களையும் குடிக்க இயலாத நோயாளி இறந்துபோவான். 11

குரல் மாறுபட்டு, நிறம் திரிந்து, வலிமை குன்றி நோய் வளர்ச்சியடைந்த நிலையில் உள்ள நோயாளி மரணமடைவான். 12

மேல்மூச்சு வாங்க உடலில் சூடு குறைந்து குளிர்ச்சி பரவி தொடை இடுக்குகளில் மிகுந்த வலிதோன்றி அமைதி இழந்து துன்புறும் நோயாளியை மருத்துவர் கைவிட்டுவிட வேண்டும். 13

பிறரிடம் தனக்கு ஏற்படவிருக்கும் மரணத்தைப் பற்றி மாறிய குரலில் பேசுபவனையும் அத்தகைய அமங்கலச் சொற்களைக் கேட்பவனையும் மருத்துவர் தொலைவிலேயே விட்டுவிலக வேண்டும். அருகில் சென்று அளவளாவுவதோ சிகிச்சை செய்வதோ கூடாது. 14

நோயினால் தாக்கப்பட்டு மிகவும் துன்புறுகின்றவனைத் திடீரென அந்நோய் விலகிச்சென்று விடுமாயின் வலிமை குன்றிய அவன் உயிர் ஐயத்திற்கிடமானதே என ஆத்திரேய மாமுனிவர் கருதுகிறார். 15

அவனுடைய உறவினர்கள் மருத்துவரைப் பணிந்து அவனுக்கு சிகிச்சை செய்யுமாறு வேண்டிக்கொள்ள வேண்டும். மருத்துவரும் அந்நோயாளியை மாமிசரசம் முறைப்படி தயார் செய்யப்பட்ட யவம் அல்லது பார்லி கஞ்சியையும் பருகச் செய்ய வேண்டும். இந் நிலையில் நோயாளிக்கு பேதியாக மருந்து கொடுக்கக்கூடாது. இவ்வாறு மாமிசரசம் முதலிய பல பானங்களைத் தந்தும் ஒரு மாதத்திற்குள் அவனுக்கு எத்தகைய முன்னேற்றம் ஏற்படவில்லை எனில் அந்நோயாளி உயிர் பிழைப்பது அரிதாகும். 16–17

நோயாளியின் துப்பிய எச்சில் மலம் விந்து ஆகியவை நீரில் மூழ்கிவிடுமாயின் அவன் ஆயுள் முடிந்தது என உணரவேண்டும். 18

உமிழ்ந்த எச்சிலில் பல நிறங்கள் தனித்தனியாகக் காணப்படினும் அந்த எச்சில் நீரில் மூழ்கியும் விடுமாயின் அந்நோயாளி மரணமடைவான். 19

பித்தம் சூட்டுடன் கலந்து நெற்றிப் பொட்டுக்களில் சேர்ந்து மூர்ச்சை (மயக்கம்) அடையும் நோயாளி மூன்று இரவுக்குள் இறப்பான். 20

வாயிலிருந்து நுரையுடன் இரத்தம் அடிக்கடி வெளிப்பட்டு வயிற்றில் பொறுக்கமுடியாத வலி தோன்றி துன்புறும் நோயாளி மருத்துவரால் கைவிடத்தக்கவன் ஆவான். 21

வலிமையும் மாமிசமும் குன்றி, நோய் வளர்ந்து (அருசி) உணவில் வெறுப்பு கொண்ட நோயாளி மூன்று நாட்களில் இறந்து போவான். 22

மரணம் வரும்போது நோயாளியிடம் பல அறிகுறிகள் தோன்றும். மருத்துவர் அவற்றைச் சாத்திர மரபுப்படி நன்கு கூர்ந்து கவனிக்க வேண்டும். எல்லா அறிகுறிகளும் ஒருவரிடம் தோன்றுவன அல்ல. ஆதலின் பலமனிதர்கள் இறக்கும் நேரத்தில் அவர்களிடம் தோன்றும் அறிகுறிகளைக் கவனித்து தாம் சிந்தித்து செயல்பட்டு ஆயுளின் அளவைக் கூறவேண்டும். 23–24

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையின் இந்திரியஸ்தானத்தில்
''யஸ்யச்யாவநிமித்தீயம் இந்திரியம்'' எனும்
ஒன்பதாவது அத்தியாயம் முற்றும்

## பத்தாம் அத்தியாயம்

# *ஸத்யோமரணீயம் இந்திரியம்

ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி 'ஸத்யோமரணீயம் இந்திரியம்' எனும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுவோம். 1–2

### 1. உடன் மரணத்தை உண்டாக்கும் அறிகுறிகள்

தொட்டவுடனேயே மரணத்தை உண்டாக்கும் அறிகுறிகளைத் தனித்தனியாக விளக்குவதைக் கேட்பாயாக என ஆத்திரேயர் அக்னிவேசனிடம் கூறினார். 3

வாதத்தின் சீற்றத்தால் அடிவயிற்றில் [1]'அஷ்டீலா' எனும் கட்டி தோன்றி வளர்ந்து மார்புப் பக்கம் ஏறி அதனால் இருதயத்தில் பொறுக்கமுடியாத வலி தோன்றி மிகுதியாக நீர்வேட்கை கொண்ட நோயாளியின் உயிர் உடனே உடலைவிட்டு நீங்கும். 4

ஆடுசதைகள் தளர்ந்து மூக்கு கோணலாக மாறி உடல் எங்கும் வாதம் சுழன்று துன்புறும் நோயாளி உடனே உயிர் துறப்பான். 5

புருவங்கள் தம்மிடத்திலிருந்து நழுவி உடலின் உள்ளே கடும் எரிச்சல் தோன்றி விக்கல் ஏற்பட்டு வருந்தும் நோயாளி உடனே இறந்துவிடுவான். 6

மாமிசமும் இரத்தமும் குறைந்து வாதம் மேல்நோக்கிச் சென்று 'மன்ய' எனும் கழுத்துப்பக்கமுள்ள இரத்தக் குழாய்களில் ஒரே சீராகச் சமமாகத் துடிப்பும் உள்ள நோயுற்றவன் உடனே மரணமடைவான். 7

---

*ஸத்யோமரணீயம்
இந்திரியம் — உடனே மரணம் உண்டாக்கும் மரண அறிகுறிகளை விளக்கும் அத்தியாயமாதலின் இவ்வாறு பெயர்பெற்றது.

1. அஷ்டீலா — ஒருவகைக் கட்டி. அடிவயிற்றில் குழவிக் கல்லைப் போன்ற அமைப்புடையது. சிறுநீர் மலத்தைக் கட்டுப்படுத்தி மேலே ஏறி மூச்சடைபட்டு மரணத்தை உண்டாக்குவது.

வலிமை குன்றிய உடலில் வாயு ஆசனவாய் (குதம்) எனும் இடத்திலிருந்து தொப்புள் வரை சென்று இரு தொடையிடுக்கு எலும்புகளும் இழுத்துக்கொண்டு வருந்தும் நோயாளி உடனே இறப்பான். 8

வாயு இரண்டு பக்க விலா எலும்புகளின் நுனிகளில் பரவி மார்பிலும் சூழ்ந்து பெருவலி தோன்றி உடல் அசைவின்றி கண்கள் திறந்த நிலையிலுள்ள நோயாளி உடனே இறப்பான். 9

வலிமை குன்றிய உடலில் வலிமையான வாயு இருதயம் ஆசனவாய் இரண்டையும் பற்றி மிகுந்த வலியைத் தந்து துன் புற்றபொழுது அதனால் வருந்தும் நோயாளி உடனே உயிர் துறப் பான். 10

வலிமையான வாயு இரண்டு தொடை இடுக்கு எலும்பு களையும் மேல் குதத்தையும் (ஆசனவாய்) பற்றித் தகைத்து கீழ் குதத்தைத் தடுத்து அதில் பெருவலியை உண்டாக்கி மேல் மூச்சைத் தோற்றுவித்துத் துன்புறும் நோயாளி உடனே மரண மடைவான். 11

தொப்புள் சிறுநீர்ப்பை தலை சிறுநீர் மலம் இவற்றை வலிமையான வாயு தகைத்துத் தடுத்து பெருவலி தோன்றி வருத்தும்பொழுது நோயாளி உடனே மரணமடைவான். 12

வாதத்தின் சீற்றத்தால் இரண்டு தொடை இடுக்கு எலும்பு களும் மூட்டிலிருந்து விலகிப் பெருவலி தோன்றி பேதியும் நீர் வேட்கையும் மிகுந்து துன்புற்றுள்ள நோயாளி உடனே இறப் பான். 13

வாயுவின் சீற்றத்தால் உடல் முழுவதும் வியர்வை தோன்றிப் பெருகிப் பேதியும் மிக்க நீர்வேட்கையும் தோன்றிய நோயாளி உடனே உயிர் துறப்பான். 14

வாதத்தினால் உடல்வீங்கி பேதியும் நீர் வேட்கையும் மிகுந் துள்ள நோயாளி உடனே இறப்பான். 15

உணவுப்பையில் கத்தியால் வெட்டுவது போன்ற வலியும் நீர் வேட்கையும் தோன்றித் துன்புறும் நோயாளி உடனே உயிர் துறப்பான். 16

வலிமையான வாயு சீரணப்பையில் தங்கி நினைவை இழக்கச் செய்து மயக்கம் தோற்றுவித்து தொண்டையில் 'கொர்' எனும் ஒலியை உண்டாக்கி நோயாளியை அழித்துவிடும். 17

பற்களில் ஊற்றைபடிதல் சுண்ணாம்பு போன்ற தூய வெண்மையாதல் முகம் வெளுத்தல் உடலில் வியர்வை தோன்று தல் உடல் தளர்தல் ஆகியவை உடன் உண்டாகும் சாவின் அறி குறிகள். *18–19*

நீர்வேட்கை மூச்சு தலையில்வலி மயக்கம் வலிமைக் குறைவு தொண்டையில் கொர் என ஒலித்தல் இவையனைத்தும் ஒரே நேரத்தில் உண்டாகும் நோயாளி உடனே இறப்பான். *20*

**முடிவுரை**

இத்தகைய அறிகுறிகளை நன்கு உணரும் மருத்துவன் மக்க ளின் வாழ்வையும் சாவையும் நன்கு உணர்ந்தவன் ஆவான். *21*

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை இந்திரியஸ்தானத்தில்
'ஸத்யோமரணீயம் இந்திரியம்' எனும்
பத்தாவது அத்தியாயம் முற்றும்

## பதினொன்றாம் அத்தியாயம்

# *அணுஜ்யோதீயம் இந்திரியம்

ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி ''அணுஜ்யோதீயம் இந்திரியம்'' எனும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுவோம். 1–2

### 1. ஓராண்டில் இறப்பவன் அறிகுறிகள்

உடலின் ஒளி குறைந்து அல்லது உடலிலுள்ள நெருப்பாகிய சடராக்னி வலிமைகுன்றி மனம் கலங்கி உடலின் ஒளி திரிந்து மனம்கெட்டு எல்லாப் பொருள்களையும் வெறுத்தும் இத்தகைய நிலையிலுள்ளவன் ஓராண்டிற்குள் இறப்பான். 3

இட்ட பலியைக் காக்கை நாய் போன்றவை உண்ணாவிடின் இட்டவன் ஓராண்டிற்குள் இறந்து மறு உலகம் சென்று அப் பிண்டத்தைத் தானே எடுத்துக் கொள்வான். அதாவது அவன் ஓராண்டில் இறந்துவிடுவான். 4

துலாலக்னத்தில் தோன்றும் ஸப்திரிஷிகளாகிய ஏழு விண் மீன்களின் அண்மையில் தோன்றும் அருந்ததி எனும் விண்மீனைக் காண இயலாதவன் ஓராண்டுக்குள் யமனுலகைக் காண்பான். 5

ஒலி இயல்பு பொருள் ஆகியவை எத்தகைய காரணமுமின்றித் தன் இயல்பைத் துறந்து மாற்றத்தையடையும் நிலையைப்பெற்ற மனிதன் ஓராண்டுக்குள் மரணம் அடைவான். 6

### 2. ஆறு மாதங்களில் இறப்பவன் அறிகுறிகள்

விருப்பம் ஒழுக்கம் நினைவாற்றல் தியாக உள்ளம் அறிவு வலிமை ஆகியவை காரணம் ஏதுமின்றி மாற்றத்தை அடையும் நிலையில் ஆறுமாதங்களில் சாவிற்குள்ளாவான். 7

இதற்குமுன் காணப்படாத மிகவும் எழில்வாய்ந்த வலை போன்ற நரம்புகளை உடலில் காண்பவன் ஆறுமாதங்களில் இறப்பான். 8

---

*அணுஜ்யோதீயம் – சடராக்னிக் குறைதல் அல்லது ஒளி குன்றுதல் போன்ற மரணக் குறிகளை விளக்கும் அத்தியாயமாதலின் ''அணுஜ்யோதீயம் இந்திரியம்'' எனும் பெயர் இவ்வத்தியாயத்திற்கு வந்தது.

தலையில் பிறைச்சந்திரனைப் போன்ற கோடு ஒன்றைச் செங்குத்தாகக் கண்களால் காண்பவன் ஆறுமாதங்களில் இறந்துவிடுவான். 9

### 3. ஒரு மாதத்தில் இறப்பவன் அறிகுறிகள்

உடல் நடுக்கம், மயக்கம் நடையும் பேச்சும் கேடடைதல் ஆகிய கூறுகள் உடையவன் ஒரு மாதத்திற்குமேல் பிழைத்திருக்க மாட்டான். 10

விந்து சிறுநீர் மலம் ஆகியவை நீரில் மூழ்குமாயின் தம் நண்பர்களையும் பகைத்துக்கொள்ளும் அவன் காலனால் கவரப்படுவான். 11

கை கால் முகம் ஆகியவை உலர்ந்தோ வீங்கியோ இருந்து உடலில் மட்டும் வீக்கம் காணாதவன் ஒரு மாதத்தில் இறந்து போவான். 12

நெற்றி தலை சிறுநீர்ப்பை ஆகிய இடங்களில் பிறைச் சந்திரன் போன்றும் நீலநிறமானதும் கோணலானதுமான ரேகையைக் காண்பவன் பிழைக்கத் தகுதியற்றவன். 13

உடலில் பவழமொட்டுப் போன்ற பயறம்மை தோன்றி உடனே மறைந்து போகின்ற நோயாளி விரைவில் இறந்துவிடுவான். 14

கழுத்தில் பொறுக்கமுடியாத பெருவலி நாக்கில் வீக்கம் தொண்டை வாய் தொடை இடுக்கு ஆகியவற்றில் கட்டி இத்தகைய நிலையிலுள்ளவன் விரைவில் இறந்துவிடுவான். 15

மிகுதியான மயக்கம் பிதற்றல் மிகக் கடுமையான எலும்பு முறிதல் ஆகிய மூன்று குறிகள் உடையவன் யமபாசத்தால் கட்டப்பட்டவன் ஆவான். 16

மூர்ச்சையடைந்து நினைவில்லாமலே தன் தலைமுடிகளை மிகுதியாகப் பிய்த்துக் கொண்டும் நல்லநிலையில் உள்ளவன் போல மிகுதியாக உணவை உட்கொண்டும் வலிமை இழந்து போய் வாடுபவன் இயமனால் இழுக்கப்பட்டு மரணத்திற்குள்ளாவான். 17

தன் கைகளின் விரல்களை கண்களுக்கு அருகில் வைத்துக் கொண்டே அவற்றைத் தேடுபவன் வியப்படைந்தவன் போன்று கண்களை மேலே செலுத்தி ஏதோ அற்புதமான நிகழ்ச்சியை காண்பவன் இமைக்காத கண்களை உடையவன் படுக்கை உடல் கட்டைச்சுவர் முதலியவற்றில் இழந்துபோன பொருளைத் தேடு

பவன் இம்மாதிரி அடிக்கடி செய்து மூர்ச்சை அடையும் நிலையிலுள்ள நோயாளி என இவர்கள் விரைவில் மரணமடைவர். 18–19

காரணமின்றிச் சிரிப்பு மயக்கம் தன் பற்களையும் உதடுகளையும் நாக்கினால் நக்கியும் கைகால்கள் குளிர்ந்து போதல் நீண்ட மூச்சு வாங்கும் எனும் இந்நிலையில் உள்ள நோயாளி பிழைக்கமாட்டான். 20

தன் அருகில் அமர்ந்துள்ள உறவினர்களையும் இவன் எங்குள்ளான் அவன் எங்குள்ளான் என்று வினவி மனத்தில் பெருமயக்கம் கொண்டு அருகில் உள்ளவரைக் கண்டும் காணஇயலாத நிலையில் உள்ளவன் மரணத்தின் வாயில் கால் வைத்தவன் என அறிய வேண்டும். 21

நோயாளியின் உடலில் ஐம்பெரும் பூதங்களைச் சார்ந்த பொருள்கள் குறைவாகவோ மிகுதியாகவோ காணப்படின் அவனுக்கு மருத்துவர் மருந்து அளிக்கக்கூடாது. 22

நோய்கள் மிகவும் வளர்ந்து மனமும் வலிமை குன்றி விடுமாயின் ஆன்மா உடலாகிய வீட்டைத்துறந்து விரைவில் வெளியேறி விடும். 23

நிறம் குரல் செரிமானம் உடல் வலிமை பேச்சு புலன்கள் மனம் இவற்றின் ஆற்றல் குறைந்து மிகுதியாகத் தூங்கிக் கொண்டோ அல்லது மிகுதியாக விழித்துக்கொண்டோ இருப்பவன் விரைவில் மரணமடைவான். 24

மருத்துவர் மருந்து உணவு நீர் தாய் தந்தை முதலிய பெரியோர்கள் நண்பர்கள் ஆகியோரிடம் பகைமை பாராட்டுபவன் ஓராண்டுக்குள் மரணமடைவான். 25

மேலே கூறப்பட்ட நோய் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே வரும். அவர்களுக்கு கொடுக்கப்பட்ட மருந்தும் செயலிழந்து நன்மை அளிக்காது. இவர்கள் அளிக்கும் உணவையோ நீரையோ கையினாலும் தொடக்கூடாது. 26

மருந்து மருத்துவர் ஏவலர் நோயாளி ஆகிய சிகிச்சையின் நான்கு பகுதிகள் ஒன்றாகச் சேர்ந்து நல்லநிலையில் இருந்தும் ஆயுள் இல்லாத நோயாளிக்கு மருத்துவம் செய்வது வீணே ஆகும். மருந்தின்றி நோய் குணமடையாது. ஆயுள் இல்லாதபோது சிகிச்சையும் பயன்படாது. 27

மருத்துவர் நோயாளி நோயுற்றவர் ஆகியோரின் ஆயுளை நன்றாகச் சோதித்துப் பார்த்த பிறகுதான் சிகிச்சை செய்ய

வேண்டும். ஆயுர்வேதத்தின் பயன் ஆயுளை அறிவது. ஆயுளோ உடலைச் சார்ந்துள்ளது. ஆதலின் நோயாளியின் உடல் ஆயுள் ஆகியவற்றைச் சோதித்துப் பிறகுதான் மருத்துவர் சிகிச்சையைத் தொடங்க வேண்டும். 28

வாத பித்த கபம் என்னும் தோஷங்களின் செயல்களை மீறி உடலை அடைந்துள்ள குறிகள் மரண அறிகுறிகள் அதாவது மரணத்தைத் தோற்றுவிக்கும் குறிகள் மரணக்குறிகள் அல்லது ரிஷ்டம் அல்லது அரிஷ்டம் என்றும் கூறப்படுகின்றன. 29

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதை இந்திரியஸ்தானத்தில்
'அணுஜ்யோதீயம் இந்திரியம்' எனும் பதினொன்றாம்
அத்தியாயம் முற்றும்

ல

பன்னிரண்டாம் அத்தியாயம்

## *கோமயசூர்ணீயம் இந்திரியம்

ஆத்திரேய மாமுனிவர் கூறியபடி கோமயசூர்ணீயம் இந்திரியம் எனும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுவோம். 1–2

### 1. தவிர்க்கமுடியாத மரணத்தை உணர்த்தும் அறிகுறிகள்

தலையில் உலர்ந்த பசுஞ்சாணத்தின் பொடியைப் போன்ற ஒரு வழவழப்பான பொடி (பொடுகு) தோன்றி உதிருமானால் அத்தகைய நோயாளி ஒரு மாதத்தில் உயிர் துறப்பான். 3

கால்கள் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டும், ஓடும்போது தோள்பட்டைகள் நழுவியனபோல் தோன்றியும் உள்ள நோயாளி இம்மனித உலகில் நீண்டநாள் வாழமாட்டான். 4

நன்றாக நீராடிச் சந்தனம் போன்ற நறுமணப் பூச்சுகளைப் பூசியபிறகு உடல் முழுவதும் வியர்வையால் நனைந்து மார்பு பகுதி மட்டும் உலர்ந்துள்ள நோயாளி பதினைந்து நாளுக்கு மேல் பிழைத்திருக்கமாட்டான். 5

மருத்துவர் நோயாளிக்குப் பலவிதமான மருந்துகளைக் கொடுத்து, சிகிச்சைகளை செய்து பலவிதமாக முயன்றும் அவை பயனற்றுப் போகுமாயின் அத்தகைய நோயாளி பிழைத்திருப்பது அரிதாகும். 6

மருந்துகளை நோயுற்றவர்களுக்குக் கொடுத்த நல்லபட்டறிவால் கிடைத்த ஆற்றலினால் மருந்துகளைக் குறிப்பிட்ட நோய்வாய்பட்டவனுக்குக் கொடுத்து அதனால் எத்தகைய பயனும் ஏற்படவில்லை எனில் அந்நோயாளிக்குச் சிகிச்சை செய்வதில் பலனில்லை. 7

மருத்துவ நூல்களில் கூறப்பட்ட உடலுக்கு நன்மைபயக்கத் தக்க உணவு வகைகளைக் கொடுத்தும் பயனின்றி முரணான

---

*கோமயம் — பசுஞ்சாணம்

சூர்ணம் — பொடி. தலையில் பசுஞ்சாணப் பொடி போன்ற பொருள் தோன்றுவதாகிய மரண அறிகுறிகளை விளக்கும் அத்தியாயமானதால் இதற்கு இவ்வாறு பெயர் வந்தது. அப்பொடி பொடுகு என வழங்கப்படும்.

விளைவே ஏற்படுமாகில் அந்த நோயாளி உயிர் பிழைப்பது அரிது என அறியவேண்டும். 8

## 2. தூதுவர்களைச் சார்ந்த மரண அறிகுறிகள் (தூதாதிகாரம்)

மருத்துவரிடத்திற்கு அனுப்பப்படும் தூதுவர்களிடம் காணும் சில குறிகளைக் கண்டே நல்ல அறிஞனான மருத்துவன் நோயாளியைச் சிகிச்சைக்குத் தகாதவன் எனக் கைவிட்டுவிடுவான். 9

மருத்துவரில்லத்திற்குத் தலைமயிரை விரித்துக்கொண்டு உடலில் ஆடையின்றி அழுதுகொண்டே தூய்மையற்றவராகத் தூதுவர் வருவதைக் கண்டே நோயாளி இறந்துவிடுவான் என மருத்துவர் உணர வேண்டும். 10

தூதன் மருத்துவரில்லத்திற்கு வரும்போது மருத்துவர் தூங்கிக்கொண்டிருந்தாலும் ஏதாவது பொருளை அறுத்துக் கொண்டோ, பிளந்துகொண்டோ இருந்தாலும் தூதனுடன் மருத்துவர் நோயாளியின் சிகிச்சைக்காக செல்லக்கூடாது. 11

நெருப்பைமூட்டி ஹோமம் செய்யும்போதும் இறந்த தம் முன்னோர்க்குப் பிண்டம் அல்லது தர்ப்பணம் செய்து கொண்டிருக்கும்போதும் நோயாளியால் அனுப்பப்பட்ட தூதுவன் வந்தால் நோயாளி பிழைக்கமாட்டான் என மருத்துவன் அறிய வேண்டும். 12

அசுபமான சொற்களைக் கூறும்பொழுதும், ஏதேனும் சிந்தனையில் மூழ்கியுள்ள போதும் நோயாளியிடமிருந்து வரும் தூதுவன் நோயாளியின் மரணத்திற்கு முன் அறிவிப்பாளன் என அறியவேண்டும். 13

இறந்த கொளுத்தப்பட்ட, கேடடைந்த பொருள்களைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்கும்போதும் அவற்றைப் பற்றி பேசிக் கொண்டுள்ளபோதும் பழிக்கத்தக்க செயல்களைப் பற்றி சிந்தித்தோ பேசியோ உள்ளபொழுதும் மருத்துவரிடம் தூதன் வருவது நோயாளி இறந்து போவதற்கு அறிகுறியாகும். 14

நோய்க்கு ஒத்த பண்புகள் கொண்ட நாட்டில் நேரத்தில் (அதாவது எத்தகைய நோய் வந்துள்ளதோ அந்த நோயை வளர்க்கும் இயற்கைக் கூறு கொண்ட நாடு, நேரம்) தூதுவன் வந்தால் தூதுவன் கூறும் நோயாளிக்கு மருத்துவர் மருத்துவம் செய்யக் கூடாது. 15

மிக்க வறுமையிலுள்ள அழுக்குப்படிந்த பயத்தால் வருந்திய நடத்தை கெட்ட மாதவிலக்கு நிலையிலுள்ள பெண்ணோ ஒன்

றாகச் சேர்ந்தோ மூன்று பெண்களோ மிக விரைவாக ஓடிவரும் பெண்ணோ மருத்துவரை அழைக்க வந்தபொழுதும் மூன்று தூது வர்கள் மருத்துவரை அழைக்க ஒன்றாகச் சேர்ந்து வந்தபொழு தும், உடலுறுப்பு ஊனமுற்றவர், அலி இவர்கள் தூதராக மருத்துவரை அழைக்க வந்தபொழுதும் அதை வைத்து நோயாளி இறப்பான் என்பதை மருத்துவர் அறிந்துகொள்ள வேண்டும். 16

உடலுறுப்பு ஊனமுற்றவன், துறவுச் சின்னம் பூண்டவன் ஆகியவர் தூதராக வந்துள்ளதைக் கண்ட மருத்துவர் நோயா ளிக்கு மருத்துவம் செய்யச் செல்லக்கூடாது. 17

கழுதை ஒட்டகம் முதலியவை பூட்டப்பட்ட ஊர்தியில் தன்னை அழைக்கவரும் தூதுவரைக் கண்டு நோயாளியின் மரணம் நிச்சயம் ஏற்படும் என மருத்துவர் அறிய வேண்டும். 18

தூதர்கள் மருத்துவரை அழைக்க வரும்பொழுது வைக்கோல் உமி மாமிசம் எலும்பு தலைமயிர் உடல் மயிர் நகம் பல் துடைப்பம் உலக்கை முறம் காலணி புள் கட்டை உமிக்கரி சாம்பல் ஆகியவற்றைத் தொட்டோ அவற்றில் பணிபுரிந்து அப்படியே வருவாராயின் அந்நோயாளி விரைவில் இறந்துவிடு வான் என மருத்துவர் அறியவேண்டும். 19–20

தூதுவர் மருத்துவரிடம் நோயாளியைப்பற்றி உரையாடும் போது தீய அறிகுறிகள் தோன்றினால் அந்தத் தூதனுடன் நோயாளியின் சிகிச்சைக்கு மருத்துவர் செல்லக்கூடாது. 21

மருத்துவனை அழைக்க வந்த தூதன் அவரிடம் நோயாளி யைப் பற்றி முதன்முதலாகப் பேசும்பொழுது துன்பச் செய்தி, பிணத்தைப்பற்றிய பேச்சு, பிணத்துக்கு செய்யப்படட ஒப்பனை பேச்சு அறுக்கப்பட்ட, எரிக்கப்பட்ட, கெட்டுப்போன பொருள் களைப்பற்றிய பேச்சு கார்ப்பு, விறுவிறுப்பு சுவை, பிணநாற்றம், கொடிய பொருள்களின் தொடுஉணர்வு ஆகியவை மற்றும் சில அமங்கலமான நிகழ்ச்சிகள், பாம்பு தேள், முதலிய விஷப்பிராணி கள் கண்களுக்குப் புலப்படல், கெட்ட நிமித்தங்கள் என இத் தகைய நிகழ்ச்சிகள் தூதனைக் காண்பதற்கு முன்போ அல்லது மருத்துவரிடம் பேசும்போதோ, அல்லது தூதன் பேசியபிறகோ ஏற்படின் அறிஞனான மருத்துவன் நோயாளி கட்டாயம் இறந்து விடுவான் என்று அறியவேண்டும். 22–24

இவ்வாறு தூதாதிகாரம் என்னும் மரண அறிகுறி முழுமை யாக விளக்கப்பட்டது. இனி நோயாளியின் பிணியை அறிவதற் காகச் செல்லும்போது வழியில் நிகழும் அறிகுறிகள் நோயுற்றவர்

இல்லத்தில் தோன்றும் மரணக்குறிகள் இவற்றை விளக்கு வோம். 25

### 3. வழியில் தோன்றும் மரண அறிகுறிகள்

மருத்துவர் நோயாளியைப் பரிசோதிக்க அவன் வீடு நோக்கிச் செல்லும் வழியில் எதிரிலிருந்து தும்மல், அமங்கலச்சொற்கள், கால் தடுக்குதல், அடிபட்டுக் கீழே வீழ்தல், பழிப்புச் சொற்களைக் கேட்டல், காயம் படுதல், பிறரால் தடுக்கப்படுதல், முன்பாக வந்து அடித்தல், படுக்கைப் பொருட்கள், ஆடை, தலைப்பாகை, போர்வை, குடை, காலணி முதலியவற்றை எடுத்து வருபவரைச் சந்தித்தல், இவற்றில் ஏதேனும் ஒன்றை எடுத்து வருபவரைச் சந்தித்தல், துன்பக்காட்சிகள், இறந்தவனைப் பற்றிய அழுகைக் குரல், பிணத்தைக் காணல் என இவை போன்ற நிகழ்ச்சிகளைக் கண்டால் மருத்துவர் நோயுற்றவரைக் காணச் செல்லக்கூடாது. 26—27

மருத்துவர் நோயாளியைக் காணச் செல்லும்போது நிகழும் புத்தவிகாரம் கொடிமரம் கொடித்துணி தூசி இவைகள் கீழே விழுதல் இறப்பு அமங்கலச் செய்தி ஆகியவை கேட்டல், சாம்பல், தூசுகள் கிளம்பி வீசுதலைக்காணல் செல்லும் வழியில் பூனை நாய் பாம்பு ஆகியவை எதிரே குறுக்காகச் செல்லுதல் கொடிய பிராணிகள் பறவைகள் கதிரவனை நோக்கி ஓலம் இடல் படுக்கை இருக்கை ஊர்தி ஆகியவை எதிராகக் கிடப்பதைக் காணல் போன்ற இத்தகைய அறிகுறிகள் தீயபயன்களைத் தரவல்லன. 28—30

மருத்துவர் இத்தகைய தீய நிமித்தங்களைக் கண்டும் அமங்கலச் செய்திகளைக் கேட்டும் நோயாளியின் வீட்டிற்குச் செல்லக் கூடாது. 31

இவ்வாறு மருத்துவர் நோயாளியின் வீட்டிற்குச் செல்லும் வழியில் உண்டாகும் தீய அறிகுறிகளை விளக்கினோம். இனி நோயாளியின் வீட்டில் காணப்படும் மரணக் குறிகளை விளக்கு வோம். 32

### 4. நோயுற்றவர் இல்லத்தில் நிகழும் மரண அறிகுறிகள்

மருத்துவர் நோயாளியின் இல்லத்தில் நுழைகின்றபோது நீர் நிறைந்த குடம் நெருப்பு மண் விதை பழம் நெய் காளை அந்தணர் இரத்தினங்கள் கடவுள் உருவங்கள் இவை வெளியே செல்வது அவ்வில்லத்திலுள்ள பாத்திரங்களை நெருப்பினால் நிரப் பப்பட்டவை உடைந்து கழுத்தின்றி இருப்பவைகளைக் காணுவது

போன்ற நிகழ்ச்சிகள் நடந்தால் நோயாளி இறந்துவிடுவான் என்பதனை நுழைந்தவுடனேயே அறிந்துகொள்ளலாம். 33–34

நோயாளியின் வீட்டிலுள்ள ஜனங்கள் இங்குமங்கும் சிதறி எரிந்து உடைந்துபோய் அழுக்குபடிந்து வலிமை குன்றி கந்தல் ஆடைகள் அணிந்து காணல் அமங்கலமான சொற்களைப் பேசுதல் இவற்றை மருத்துவர் கண்டால் அந்நோயாளி விரைவில் இறந்துவிடுவான் என்பதை அறிய வேண்டும். 35

நோயாளிக்குப் படுக்கையை விரிக்கும்போது ஆடை அணிவிக்கும்போது அவன் ஊர்தியில் செல்லும்போது உண்ணும்போது அமங்கலமான அழுகையொலி கேட்குமாயின் அந்நோயாளிக்கு சிகிச்சையே கிடையாது என அறிக. 36

நோய்வாய்ப்பட்டவனின் நண்பர்கள் நோயாளிக்குப் படுக்கை விரித்தல் ஆடை அணிவித்தல் ஊர்தியில் ஏற்றுதல் இவை போன்ற பிற செயல்களைச் சவத்திற்குச் செய்வதைப்போல செய்வித்தால் அந்நோயாளியைச் சவமாகவே கருதுக. அதாவது விரைவில் அவன் இறந்துவிடுவான். 37

நோயாளிக்காக உணவு சமைக்கும்போது காரணமின்றி ஏதேனும் இடையூறு ஏற்படினும் காரணமின்றி மூட்டிய நெருப்பு அணைந்து போயினும் அல்லது காரணமின்றி விளக்கு அணைந்து போனாலும் அந்நோயாளிக்குச் சிகிச்சை செய்யக்கூடாது. 38

மருத்துவர் நோயாளியின் வீட்டில் நுழையும்போது திடீரென பாத்திரங்கள் உடைந்து கீழே விழுந்து காணப்படினும் மண் கல் முதலியன காரணமின்றி வீசி மழைபோல் பொழிந்தாலும் நோயாளி உயிர் பிழைத்தல் அரிது. 39

காலனின் பாசக்கயிற்றில் சிக்கிய மனிதர்களின் மரண அறிகுறிகள் இந்தப் பன்னிரண்டு அத்தியாயங்களால் மிகவும் விரிவாக விளக்கப்பட்டன. அவற்றையே சுருக்கமாகச் சில மாறுதல்களுடன் விவரிப்போம். மீண்டும் அவ்வாறு கூறுவதால் படிப்பவர்களுக்கு இப்பொருளின் அறிவு தெள்ளிதின் விளங்கும். 40–41

பன்னிரண்டு அத்தியாயங்களால் விளக்கிக் கூறப்பட்ட பொருள்களையே மீண்டும் விவரித்துரைப்போம். 42

உடலில் வாழும் ஆன்மா இறுதிக்காலத்தில் உடலை விட்டு நீங்கும்போது உடலில் சில கடுமையான மாற்றங்களை தோற்றுவிக்கும். உடலாகிய இயந்திரம் கோளாறடைந்தால் உயிர் எனும் ஆன்மா உடலாகிய இல்லத்தை விட்டுப் புறப்படுகிறது. தான்

விரும்பும் உடலைக் கைவிட்டு, காலத்தின் பாசக்கயிற்றில் சிக்கி, உயிரைத்துறந்து உடலைப்பற்றிய, புலன்களைப்பற்றிய மற்றும் வேறான உடற்கூறு சாஸ்திரங்களில் கூறப்பட்ட உடலின் நாசத்திற்காகத் தோன்றிய மாற்றங்கள் அனைத்தையும் விளக்குவோம். 43–45

## 5. நோயாளியிடம் காணும் தீய அறிகுறிகள்

அவை பின்வருமாறு :

1. முக்கிய மூச்சு (பிராணன்) தடைபடுதல்
2. அறிவு அழிந்து போதல்
3. உடல் வலிமை குறைதல்
4. நடமாட்டம் ஒய்தல்
5. புலன்கள் செயலிழத்தல்
6. நினைவு தடுமாறுதல்
7. மன அமைதி அழிதல்
8. மனத்தில் பயம் தோன்றுதல்
9. நினைவு அறிவாற்றல் ஒளி உடல்காந்தி ஆகியவை அழிதல்
10. பாவச்செயல் முற்றி நோய் வளர்தல்
11. ஓஜஸ் எனும் உடல் காந்தியும் பேராற்றலாகிய தேஜஸும் இழந்துபோதல்
12. ஒழுக்கத்தில் திடீர் மாறுதல்
13. விருப்பத்தில் மாற்றம்
14. தன் நிழலும் பிறர் நிழலும் மாற்றத்துடன் காணப்படுதல்
15. விந்து தன் இயற்கையான இடத்திலிருந்து நழுவுதல்
16. வாயு மேல்நோக்கிச் செல்லுதல்
17. மாமிசம் இரத்தம் குறைதல்
18. சூடு குறைந்துபோதல்
19. மூட்டு விலகிவிடுதல்
20. உடலின் மனம் மாறுபடுதல்
21. நிறமும் குரலும் மாறிப்போதல்
22. உடலின் இயற்கை நிறம் மாறிவிடுதல்
23. உடலில் உள்ள துவாரங்கள் வறட்சியடைதல்
24. தலையில் புகை தோன்றுதல்

25. பசுஞ்சாணப்பொடி போன்ற தூள் பொடுகு தலையில் தோன்றுதல்

26. உடலில் உள்ள நாடித்துடிப்புகள் இதயத்துடிப்புகள் மாறிப் போதல் அல்லது உடலின் பல உறுப்புகள் செயலிழந்து போதல்

27. உடலின் பல உறுப்புகளில் தம்தம் சூடு தண்மை மென்மை கடினத்தன்மை ஆகியவை மாறிப்போதல்

28. நகங்களில் வெண்மையான புள்ளி விழுதல் பற்களில் ஊற்றை சேருதல்

29. கண் இரப்பைகளில் சடைகள் தோன்றுதல் தலையில் காரணமின்றி புதிய கோடு தோன்றுதல்

30. நோயாளிக்குத் தேவையான மருந்து கிடைத்தல் அரிதாதல் கிடைத்துக் கொடுக்கப்பட்ட மருந்தும் பயனற்றுப் போதல் தவிர மருந்து கொடுத்து அதனால் முரணான முடிவுகள் மாற்றங்கள் தோன்றுதல்;

31. தொடு உணர்வு ஒலி சுவை உருவம் மணம் செயல்கள் இவை தம்தம் முறையில் மாற்றமடைந்து வளர்ந்து நோயாளி யின் வலிமை காந்தி இவை அழிதல்.

32. கொடிய கெட்ட கனவுகள் வருதல் நோயாளி பலரையும் பகைத்துக் கொள்ளுதல்

33. வேலைக்காரர்கள் துரோகிகளாதல் நோயாளியின் உருவம் சவக்களையுடன் காணப்படுதல்

34. உடல் இயல்பு மாற்றமடைதல்

35. பலவகையான அமங்கலமான நிமித்தங்கள் எத்தகைய காரணமுமின்றித் திடீரெனத் தோன்றுதல். மேற்கூறப்பட்ட அறிகுறிகள் அனைத்தும் இறக்கப்போகும் மனிதர்களிடம் தோன்றுபவையாகும். 46–62

நல்ல மருத்துவன் இந்த அறிகுறிகளைச் சாத்திரமுறைப்படி ஆராய்ந்து பார்த்துப் பிறகு பிறர் கேட்காதபொழுதும் கேட்ட பொழுதும் சூழ்நிலையைக் கணித்து நோயாளிக்கோ அவன் உற வினர்களுக்கோ தீமைகள் நேரிடுமாயின் மரணத்தைப்பற்றி கூறா மல் இருப்பதே நலனாகும். மரணக்குறி பெற்றுள்ள நோயாளி யைக் கண்டு ''அவனுக்குச் சிகிச்சை செய்ய முடியாது, இவன் இறந்துவிடுவான்'' என்று மருத்துவன் ஒருபோதும் கூறக்கூடாது. மரணம் என்பது நிலையில்லாதது. கடவுளருளால் மரணக்குறி

பெற்ற நோயாளி பிழைத்துவிட்டால் மருத்துவருக்குப் பெருந் தீங்கு உண்டாகும். அதனால் அறிவாளியான மருத்துவன் நோயாளியிடமோ அவன் உறவினரிடமோ நோயாளியின் மரணப் பேச்சை துவக்கக்கூடாது. 63–64

### 6. தீர்க்கக்கூடிய நோயுள்ளவனின் அறிகுறிகள்

மரணக்குறிகளினின்றும் மாறுபடட நல்ல அறிகுறிகள் நோயாளியிடம் காணப்படின் தூதுவர் தொடர்பான வழியில் தோன்றிய அறிகுறிகள் வீட்டில் தோன்றிய எத்தகைய அறிகுறி களும் இன்றி நோயாளியின் இயல்பு ஒழுக்கம் புலன்கள் உடல் வலிமை ஆகியவை நன்முறையில் இருந்தால் அவன் விரைவில் நோயிலிருந்து விடுபட்டு நலம் அடைவான் என்பதை மருத்துவன் கூறவேண்டும். 65–66

### 7. நல்ல தூதுவரின் இலட்சணம்

தூய்மையான நல்லொழுக்கம் புன்முறுவல் உடல் ஊன மின்மை புகழ் வெண்மையான ஆடை தலையை மழித்துக் கொள்ளாமை ஜடைமுடியின்மை தன் சாதிக்கேற்ற உருவம் செயல் ஆகியவற்றைக்கொண்டு கழுதை ஒட்டகம் முதலிய ஊர்திகளின் மீதும் சந்தி நேரங்களிலும் அல்லது கொடிய அமங்கலமான வேளைகளிலும் கேட்டை மூலம் முதலிய கெட்ட நட்சத்திரங்களிலும் உத்திராடம் உத்திரட்டாதி முதலிய நட் சத்திரங்களின் உதயத்திலும் கெட்ட நட்சத்திரங்களிலும் சதுர்த்தி நவமி சதுர்தசி ஆகிய *ரிக்ததிதிகளிலும் நடுப்பகலி லும் நள்ளிரவிலும் நிலநடுக்கம் ஏற்பட்டபோதும் கிரகண காலத்திலும் வராமல் நல்ல வேளைகளில் மருத்துவனை அழைத்து செல்லும் தூதுவன் நன்மை பயப்பவன் ஆவான். 67–69

நேரமில்லா நேரம் பழிக்கத்தக்க இடம் இவைகளைத் தவிர்த்து விலக்கத்தக்க பொருள்களைத் தொடாமல் அமங்கல மான நிமித்தங்கள் ஏதுமின்றி நன்னேரத்தில் நல்லிடத்தில் நன்

---

*ரிக்த திதி - சூனிய திதி

ரிக்ததிதிகளிலும் பூராடம்திருவாதிரை கேட்டை ஆயில்யம் பூரம் பூரட்டாதி, மகம், ஆகிய நட்சத்திரங்கள் நன்மையல்லாதவை. உத்தரம், உத்தரட்டாதி, உத்திராடம் ரோகிணி ஆகிய நட்சத் திரங்கள் நல்லவை. சுக்லபக்ஷத்தின் (4,9,14) திதிகள் சதுர்த்தி நவமி, சதுர்தசி ஆகிய திதிகள் ரிக்த திதி அதாவது சூன்ய மானது. அந்த நாட்களில் செய்யும் செயல்கள் நல்ல பயனை அளிக்கா. (பிரஹத்சம்ஹிதை 98)

மனத்துடன் மருத்துவனை அழைக்க வரும் தூதுவன் உத்தமன் ஆவான். 70

## 8. நோயாளியின் வீட்டில் காணும் நன்னிமித்தங்கள்

மருத்துவன் நோயாளியின் இல்லத்திற்குச் செல்லும்போது தயிர் மங்கல அரிசி அந்தணர் காளை அரசன் இரத்தினம் நீர்நிறைந்த குடம் வெண்குதிரை வானவில் கொடிமரம் கொடித்துணி கலப்பை பிச்சைக்காரன் வளர்ந்துள்ள கன்னிப் பெண் கட்டுண்ட பசு தோண்டப்பட்ட நிலம் சுவாலையுடன் கூடிய நெருப்பு கொழுக்கட்டை வெண்ணிறமலர் வெண் சந்தனம் மனத்திற்குப்பிடித்த உணவுவகை பானங்கள் மக்கள் நிறைந்துள்ள வண்டி கன்றுடன் கூடிய பசுவின் முன்பாகச் செல் லும் மக்கள் குட்டியுடன் கூடிய குதிரை குழந்தையை மடியில் வைத்துக் கொண்டுள்ள பெண் ஆகியவரைச் சந்தித்தால் நோயுற் றவன் நோய் நீங்கி நன்னிலை அடைவான். 71–74

கீரைப்பாலை, ஜீவகம் கடுகு ஸாரஸம் சகோரம் சக்ர வாகம் அன்னம் காடை குயில் மயில், மீன் வெள்ளாடு வெண்ணாடை அணிந்த அந்தணர் சங்கு ஞாழல் நெய் உப்பு கண்ணாடி வெண்கடுகு கோரோசனம் என இவற்றை நோயாளி யின் இல்லத்தில் கண்டால் நோயாளி நோய் நீங்கி ஆரோக்கியம் அடைவான். 75–76

நறுமணப் பொருள்கள் இனிய நிறப்பொருள்கள் வெண்மை யான பொருள்கள் இனிப்புச் சுவை பிராணி பறவை மனிதர் இவர்களின் மங்கலமான நல்வாக்குகள் மேல்நோக்கி உயர்ந்த குடை கொடி கொடித்துணி நல்ல கடவுள் வழிபாட்டு பாடல் கள் முரசு மிருதங்கம் சங்கு இவற்றின் இனிய ஒலிகள், வேத ஒலி இதமளிக்கும் இனிய மெல்லியகாற்று வலமாக வீசுதல் இவற்றை மருத்துவர் வழியிலோ நோயுற்றவனின் இல்லத்தில் நுழையும்போதோ காணில் நோயுற்றவன் நோய் நீங்கி நன்னிலை அடைவான் என்பதனை இவை அறிவிக்கும். 77–79

மங்கலமான பேச்சு நடவடிக்கை நற்பணிகளில் ஆர்வம் இதமான எண்ணமும் பெரும்பொருள் ஈட்டும் ஆற்றல் பொருள் தலைமை சுகம் இவற்றைப் பெற்று எளிதாக விரும்பி யதை அடையச்செய்யும் செயல்வன்மை இவற்றைப் பெற்ற மக்கள் மலிந்துள்ள நோயாளியின் இல்லத்தில் நோயாளிக்கு தக்க சிகிச்சை முறை கையாண்டால் நோயாளி நோய் நீங்கி ஆரோக் கியமடைவான். 80–81

வீடு மாளிகை மலை யானை காளை குதிரை நல்லோர் இவர்களின் மீது ஏறுவதாகவும் சந்திரன், கதிரவன்

நெருப்பு, அந்தணர் பால்கறக்கும் நன்மனிதர் கடல் கடத்தல் பெருந்துன்பம் நீங்குதல் உடல்நிலைசீர்ப்படுதல் கடவுளர் இறந்த முன்னோர் இவர்களுடன் உரையாடல் வெண்ணிற ஆடை தெளிந்தமனம் இவற்றைக் கனவில் கண்டால்நோயாளி ஆரோக்யமடைவான். 82–84

மாமிசம் மீன் நஞ்சு தூய்மையில்லாத பொருள் குடை கண்ணாடி வெண்ணிற மலர்கள் இவற்றை ஏற்றுக்கொள்வ தாகக் கனவில் காணும் நோயாளி ஆரோக்கியம் அடைவான்.

குதிரை எருது தேர் ஆகிய ஊர்திகளின் மீது இருந்து கிழக்கு அல்லது வடக்கு திசைநோக்கிச் செல்லுதல் அழுதல் விழுந்து எழுதல் பகைவர்களை நசுக்குதல் போன்ற செயல் களைக் கனவில் காணுதல் நன்மையைப் பயக்கும். 85–86

## 9. நோய் நீங்கியவனின் இலட்சணம்

மனத்தெளிவு மருத்துவர் அந்தணர் இவர்களிடம் பக்தி நோய் நீங்கிவிட்டது என்ற எண்ணம் துன்பத்தை பொருட் படுத்தாமை என இவை நோய் நீங்கியவனின் இலட்சணங்களா கும். 87

ஆரோக்கியத்தினால் வலிமை ஆயுள் பெருஞ்சுகம் விரும் பிய பல பொருட்கள் ஆகியவற்றை நன்னிலையிலுள்ள மனிதனால் அடைய முடியும். 88

## 10. முடிவுரை

கோமயசூர்ணீயம் எனும் அத்தியாயத்தில் மரண அறிகுறிகள் ஆரோக்ய அறிகுறிகள் தூதன் இலக்கணம் கனவுகளின் பலன் நோயாளிக்குத் தோன்றும் அறிகுறி மருத்துவர் சிகிச்சையின் வெற்றி முறை ஆகியவை கூறப்பட்டன. 89

இந்திரியஸ்தானத்தில் கூறிய எல்லாவற்றையும் கூறியபடி மருத்துவர் நன்றாகக் கூர்ந்து கவனித்து உண்மை உணர்ந்து அறி குறிகளைக் கண்டு அறிவாற்றலுடன் செயல்பட்டால் அவர் சிகிச் சையில் வெற்றி பெற்று நிலையான புகழுடன் பெருஞ் செல் வத்தைப் பெறுவார். 90

அக்னிவேசமுனிவரால் இயற்றப்பட்டு சரகமாமுனிவரால்
பரிசோதிக்கப்பட்ட சரகஸம்ஹிதையில் இந்திரியஸ்தானத்தில்
கோமயசூர்ணீயம் இந்திரியம் எனும் பன்னிரண்டாம்
அத்தியாயம் முற்றும்.

இந்திரியஸ்தானம் முற்றும்.

**சரகஸம்ஹிதை முதல் பாகம் முற்றிற்று.**

# அருஞ்சொற்கள்

---

14328

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 17 | 27 | அடைகிறுன் | அடைகின்றனர் |
| 21 | 21 | தோஷத்தினரால் | தோஷத்தினுல் |
| 35 | 18 | விளக்கப்பட்டன | விளக்கப்பட்டது |
| 52 | 5 | அளவுக்கு மீறிப் | அளவுக்கு மீறியும் |
| 68 | 30 | ஆடைகளை | ஆடையை |
| 100 | 16 | கற்பனையின் | கற்பவரின் |
| 102 | 19 | மருத்துவரால் | மருத்துவர் |
| 122 | 13 | பொருட்களின் | பொருளின் |
| 123 | 8 | மைவாயம் | ஸமவாயம் |
| 128 | 28 | மருத்துவர்களை | மருத்துவர்கள் |
| 136 | 2 | கொடியதாக | கொடியவையாக |
| 142 | 4 | உடற்பயிற்சிக்கு | உடற்பயிற்சிக்கும் |
| 143 | 1 | அதிகமுள்ளவனுல் | அதிகமுள்ளவன் |
| 182 | 33 | செய்யப்படுகின்றன | செய்யப்படுகிறது |
| 197 | 23 | அறிஞனை | அறிஞர்களான |
| ,, | 27 | அவற்றை | அவற்றைப்போக்க |
| 199 | 9 | தணிதல் | தணிதலும் |
| ,, | 11 | சீற்றம் | சீற்றமும் |
| 202 | 16 | செய்யாததால் | செய்யாததாலும் |
| 209 | 13 | தோற்றுவிக்கின்றன | தோற்றுவிக்கின்றது |
| 230 | 35 | வேணடியதாக | வேண்டியவைகளாக |
| 243 | 11 | விளக்கப்பட்டது | விளக்கப்பட்டன |
| 249 | 2 | இவைகளைப்பற்றிய | இவைகளைப்பற்றி |
| 251 | 22 | இதைப் | இவற்றைப் |
| 254 | 20 | எனும் | எனும் மருந்து |
| 265 | 29 | என்பவர் கூறியதும் இல்லை | என்பது சரியல்ல |
| 266 | 33 | இருத்துளதும் | இருத்துவனவும் |
| ,, | 34 | செய்வதுமான | செய்வனவான |
| 267 | 33 | நன்மைனளிப்பவையாக | நன்மையளிப்பனவாக |
| 268 | 7 | மீனும் | மீன் |
| ,, | 8 | நெய்யும் | நெய் |
| ,, | 10 | வசையும் | வசை |

LB
N85·1

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ,, | 12 | வசையும் | வசை |
| ,, | 15 | திராக்ஷையும் | திராக்ஷை |
| ,, | ,, | இஞ்சியும் | இஞ்சி |
| ,, | 30 | வசையும் | வசை |
| ,, | 31 | கொழுப்பும் | கொழுப்பு |
| 269 | 1 | பயப்பதும் | பயப்பனவும் |
| ,, | 37 | சிவதைவேர் | சிவதைவேரும் |
| 270 | 25 | கேசரங்கள் | கேசரங்களும் |
| 271 | 1 | கடுப்பு | கழிப்பது |
| ,, | 3 | தூண்டல் | தூண்டி |
| ,, | 15 | உண்ணுதல் | உண்ணுதலும் |
| ,, | 20 | வெட்டிவேர் | வெட்டிவேரும் |
| 272 | 1 | உட்கொள்ளுதல் | உட்கொள்ளுதலும் |
| ,, | 10 | காணுதல் | காணுதலும் |
| ,, | 11 | இருத்தல் | இருத்தலும் |
| ,, | 12 | உட்கொள்ளாமை | உட்கொள்ளாமையும் |
| ,, | 13 | உட்கொள்ளல் | உட்கொள்ளலும் |
| ,, | 14 | புசித்தல் | புசித்தலும் |
| ,, | 17 | புசித்தல் | புசித்தலும் |
| ,, | 38 | பெண் | பெண்ணும் |
| 273 | 1 | இருத்தல் | இருத்தலும் |
| ,, | 2 | சன்னிபாதம் | சன்னிபாதமும் |
| ,, | 14 | கேளா திருத்தல் | கேளா திருத்தலும் |
| ,, | 15 | தன்மை | தன்மையும் |
| ,, | 16 | கையாளுதல் | கையாளுதலும் |
| ,, | 25 | புரிதல் | புரிதலும் |
| 289 | 5 | ஆகிறது | ஆகின்றன |
| 309 | 4 | யாவும் | யாவையும் |
| 321 | 30 | அடைத்து | அடைந்து |
| 325 | 22 | போக்குகிறது | போக்குகின்றன |
| 353 | 15 | பலசாலியாகவும் | பலசாலிகளாகவும் |
| 361 | 26 | பொருட்கள் | பொருட்களை |
| ,, | 27 | கொண்டதாகவும் | கொண்டவைகளாவும் |
| ,, | 29 | குணமுள்ளதாகவும் | குணமுள்ளவைகளாகவும் |
| 362 | 27 | இருந்தாலன்று | இருந்தாலன்றி |
| ,, | 35 | லகம் | உலகம் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 365 | 9 | பெயருள்ளவை | பெயருள்ளது |
| ,, | 10 | பெயருள்ளவை | பெயருள்ளது |
| 376 | 29 | தூதுவனுக | தூதுவர்களாக |
| 415 | 6 | சீற்றமடைகின்றன | சீற்றமடைகிறது |
| 399 | 2 | சுவையுள்ளதும் | சுவையுள்ளவையும் |
| ,, | 2 | குளிர்ந்ததும் | குளிர்ந்தவையும் |
| 403 | 35 | ஏற்றதான | ஏற்றவையான |
| 404 | 14 | உடையதாக | உடையனவாக |
| 468 | 13 | அளவில் | அளவன்றி |
| 502 | 9 | அதற்குரிய | அவற்றிற்குரிய |
| 543 | 19 | முடியாததும் | முடியாதவையும் |
| ,, | 19 | நிறைந்ததும் | நிறைந்தவையும் |

